உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சேக்கிழார்நாயனாரருளிச்செய்த

திருத்தொண்டர்புராணமென்னும்

# பெரியபுராணம்.

உமாபதிசிவாசாரியாரருளிச்செய்த

திருத்தொண்டர்புராணவரலாறு

திருமுறைகண்டபுராணம்.

திருத்தொண்டர்புராணசாரம்.

திருப்பதிகக்கோவை. திருப்பதிக்கோவை

நம்பியாண்டார்நம்பியருளிச்செய்த

கலித்துறைத்திருவந்தாதி.

திருநாமக்கோவை. திருநக்ஷத்திரம். குருபூசை

உண்மைநாயன்மார்மகிமையென்னு மிவ்வங்கங்களுடன்

யாவரும் எளிதினுணரும்பொருட்டு

செய்யுளுக்குஇயைந்தவசனமும் ஒருங்குசேர்த்து.

சிதம்பரம் உபாத்தியாயர்

பேரம்பலபிள்ளையவர்கள்

குமாரர்

இராமலிங்கபிள்ளை

அவர்களால்

சென்னை

மநோன்மணிவிலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பிரமாதி௵ — தைமீ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டர்புராணமென்னும்

# பெரியபுராணத்தின்

# அட்டவணை.

## பெரியபுராணத்தின் அட்டவணை

முற்றிற்று.

உ

சிவமயம்.

# விளம்பரம்.

ஸ்ரீ கற்றோரும் மற்றோரும் எளிதில் அறியும்பொருட்டு சேக்கிழார்நாயனுர் அருளிச்செய்த பெரியபுராணச்செய்யுளும் அதற்கு இயைந்த வசனமும் அச்சிடப்பட்டன.

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னை பெத்துநாயகன் பேட்டை சிரங்கபட்டணம் சுப்பிரமணியமுதலியார் தெருவில், உஅ - வது நெம்பர் வீட்டில் மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்தில், கொ. மாணிக்கமுதலியாரிடத்திலும், சிதம்பரத்தில் வடக்குவீதியில், கரு - வது நெம்பர் வீட்டில் உபாத்தியாயர் பே. இராமலிங்கபிள்ளையிடத்திலும், பிறையாற்றில் இரத்தினவியாபாரம், நாகலிங்கசெட்டியாரவர்களிடத்திலும், காரைக்காலில் சௌளிக்கடை குருபாதபிள்ளையவர்களிடத்திலும் வாங்கிக்கொள்ளலாம்.

முன்னச்சிட்ட பிரதிகளோடு ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு சோதிக்கையில் கண்ணப்பநாயனுர் புராணத்தில் (கருஅ) வது செய்யுள் முதல் விடுபட்டிருந்த (ரு) செய்யுள்களையும் காரைக்காலம்மையார் புராணத்தில் விடுபட்டிருந்த (உ) வதுசெய்யுளையும் இந்தப்பிரதியில் அச்சிட்டிருக்கின்றன - திருமயிலை - சுப்பராயஞானியார் அச்சிட்டிருக்கிற பிரதியில் ஏயர்கோன் கலிக்காமநாயனுர் புராணத்தில் ஆண்டநம்பியுடன்வந்தஎன்கிற (நூச) வதுசெய்யுள் விடுபட்டிருக்கிறது.

இப் பெரியபுராணம்.

திக்கு கடிதத்திலச்சிட்ட புத்தகம் ஒன்றுக்கு விலை ரூபா - ச ஆகவும் தின்னுகடிதத்தி லச்சிட்ட புத்தகம் ஒன்றுக்கு விலை ரூபா ௩௨ - ஆகவும் விற்கப்படும். மொத்தமாய் பதினொருபுத்தகம் வாங்குபவர்களுக்கு ஒருபுத்தகம் கமீஷன் கொடுக்கப்படும்.




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

# திருத்தொண்டர்புராண வரலாறு

என்னும்

## சேக்கிழார்நாயனார் புராணம்.

---

## பாயிரம்.

---

### காப்பு.

வெண்பா.

திருமருவுங் குன்றத்தூர்ச் சேக்கிழார் செல்வ
வருண்மொழித்தே வன்புரா ணஞ்சீர்—வருவதற்கு
மைம்மா மழைபோன் மதத்தான் றிரண்டபுழைக்
கைம்மா வதனத்தான் காப்பு.

### விநாயகர் துதி.

விருத்தம்.

வானுலகு மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத வைந்துகர மூன்றுவிழி நால்வா
யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் கிற்பாம். (க)

### சபாநாதர் துதி.

வேறு.

சீராருஞ் சதுர்மறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
வேராரு மணிமன்று ளெடுத்ததிரு வடிபோற்றி. (உ)

### சிவகாமசுந்தரி துதி.

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
வரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி. (ங)

## கற்பகவிநாயகர் துதி.

மலரயனுந் திருமாலுங் காணாமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயி
லில்வியகற் பகக்கன்றி னிரைமலர்த்தா ளிணைபோற்றி. (௪)

## சுப்பிரமணியசுவாமிகள் துதி.

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத
மாறுமுகந் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் றிருவடித்தா மரையிணைக ளவைபோற்றி. (௫)

## சைவசமயாசாரிகள் துதி.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
யாழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
யூழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி. (௬)

## திருத்தொண்டர்கள் சேக்கிழார்சுவாமிகள் துதி.

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
யொல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி. (௭)

## நூற்பெயர்.

தாய்மலர்ந்த முகத்தினளாய்த் தழுவிமுலை தரவந்த
நோய்மலர்ந்த பிறவிதொறு நுழையாம லுலகுய்யத்
தீமலர்ந்த சடைக்கூத்தர் திருவருளாற் சேக்கிழார்
வாய்மலர்ந்த புராணத்தின் வரலாறு விரித்துரைப்பாம். (அ)

## அவையடக்கம்.

ஊர்க்கடலை யிவனெனவந் துதித்தநா னேங்குதமிழ்
* நூற்கடலைக் கரைகண்டு நுவலநினைக் கும்துதிருப்
பாற்கடலைச் சிற்றெறும்பு பருகநினைப் பதுபோலு
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்கநினைக் குமதொக்கும். (௯)

தேவுடனே கூடியசொற் செழுந்தமிழோர் தெரிந்துரைத்த
பாவுடனே கூடியவென் பருப்பொருளும் விழுப்பொருளாங்
கோவுடனே கூடிவருங் குருட்டாவு மூர்புகுதும்
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமால். (௧௦)

பாயிர முற்றிற்று.

---

* ஈண்டுத் தமிழ்நூலென்றது பெரிய புராணமெனக்கொள்க.

## நூல்.

—:0:—

பாலாறு வளஞ்சுரந்து நல்கமல்கும் பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலைதோறுங், காலாறு கோலியிசை பாடநீடு களிமயிலின் றுடியியற் றொண்டைநாட்டு, ஞாலாறு கோட்டத்துப் புலியூர்க்கோட்ட நன்றிபுனை குன்றைவள நாட்டுமிக்க, சேலாறு கின்றவயற் குன்றத்தூரிற் சேக்கிழார் திருமரபு சிறந்ததன்றே. (க)

நாடெங்குஞ் சோழன்முனந் தெரிந்தேயேற்று நற்குடிநாற் பத்தெண்ணா யிரத்துவந்த, கூடல்கிழான் புரிசைகிழான் குலவுசீர்வெண் குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்துழான்முன், றேடுபுக ழாரிவருஞ் சிறந்துவாழச் சேக்கிழார் குடியிலிந்தத் தேசமுய்யப், பாடல்புரி யருண்மொழித்தே வரும்பினந்தம் பாலரு வாயரும்வந் துதித்துவாழ்ந்தார்.(உ)

இமயமலை யரையன்மக டழுவக்கச்சி யேகம்பர் திருமேனி குழைந்தஞான்று, சமயமவை யாறினுக்குந் தலைவிக்கீசர் தந்தபடி யெட்டிழக்கீ ராழிநெல்லு, முமைதிருச்சூ டகக்கையாற் கொடுக்கவாங்கி யுழவுதொழிலாற்பெருக்கி யுலகமெல்லாந், தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும்வேளாண் டலைவர்பெரும் புகழுலகிற் றழைத்ததன்றே. (ங)

விளைகழனி பூலோக முழுதுமேரி விரிதிரைநீர்க் கடல்வருணன் கம்புகட்டி, கிளர்கலப்பை தருசுமையாள் சுவேதராமன் கிடாமறலி வசத்தீசன் வசத்தானென்றிங், களவறிந்தா ண்டாண்டுதொறும் விதைதப்பாமலளக்குமவள் கச்சியறம் வளர்த்தமாதா, வொளிபெருகு கொழுமிகுதியெறும்பிறுன வுயிரனைத்துந் தேவருமுண் டுவப்பதன்றே. (ச)

மாறுகொடு பழையனூர் நீலிசெய்த வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத்தாங்கள், கூறியசொல் பிழையாது துணிந்துசெந்தீக் குழியிலெழுபதுபேரு முழுகிக்கங்கை, யாறணிசெஞ் சடைத்திருவா லங்காட்டப்பரண்டமுற நிமிர்ந்தாடு மடியின்கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர் பெருமையெம்மாற் பிறித்தளவிட் டிவளவெனப் பேசலாமோ. (ரு)

காராள ரணிவயலி லுழுதுதங்கள் கையார நட்டமுடி திருந்திலிந்தப், பாராளுந் திறலரசர் கவித்தவெற்றிப் பசும்பொன்மணி முடிதிருந்துந் கலப்பைபூண்ட, வேராலெண் டிசைவளர்க்கும் புகழ்வேளாளரோரடிக்குஞ் சிறுகோலாற் றரணியாளச், சீராரு முடியரசிருந்துசெங்கோல் செலுத்துவர்வே ளாளர்புகழ் செப்பலாமோ. (சா)

வாயிலார் சத்தியார் விறல்சேர்மிண்டர் வாக்கனாயர் சாக்கியர்கோட்புலிகஞ்சாறர், ஏயர்கோன் கலிக்காமர் முனைவித்தாக்கு மிளையான்றன்

குடிமாறர் மூர்க்கர்செங்கைத், தாயனுர் செருத்துணையார் செருவில்வெம்போர் சாதித்த முனையடுவா ராகநம்பி, பாயிரஞ்சே ரறுபதுபேர் தனிப்பேர்தம்மிற் பதின்மூவர் வேளாளர் பகருங்காலே. (எ)

அத்தகைய புகழ்வேளாண் மரபிற்சேக்கி ழார்குடியில் வந்தவருண் மொழித்தேவர்க்குத், தத்துபரி வளவனுந்தன் செங்கோலோச்சுந் தலைமையளித் தவர்தமக்குத் தனதுபேரு, முத்தமச்சோ ழப்பல்ல வன்றுனென்று முயர்பட்டங் கொடுத்திடவாங் கவர்நீர்நாட்டு, நித்தனுறை திருநாகே சுரத்திலன்பு நிறைதலினுன் மறவாத நிலைமைமிக்கார். (அ)

தம்பதிகுன் றத்தூரின் மடவளாகந் தானுக்கித் திருக்கோயி ருபித்தங்கண், செம்பியர்கோன் திருநாகே சுரம்போலீதுந் திருநாகே சுரமெனவே திருப்பேர்சாற்றி, யம்புவியி லங்காங்க வைபவங்கட் கானபரி கலந்திருநாள் பூசைகற்பித், திம்பர்புகழ் வளவனர சுரிமைச்செங்கோ லிமசேது பரியந்த மியற்றுநாளில். (கூ)

கலகமிடு மமண்முரட்டுக் கையர்பொய்யே கட்டிநட்டத் தியசிந்தாமணியைமெய்யென், றுலகிலுளோர் சிலர்கற்று நெற்குத்துண்ணு துமிகுத்திக் கைவருந்திக் கறவைநிற்க, மலடுகறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ்சோலை வழியிருக்கக் குழியில்விழுந் தளறுபாய்ந்து, விலைதருமென் கரும்பிருக்க விரும்பைமென்று விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்துநொந்தார்.

வளவனுங்குண் டமண்புரட்டுத் திருட்டுச்சிந்தா மணிக்கதையை மெய்யென்று வரிசைகூர, வுளமகிழ்ந்து பலபடப்பா ராட்டிக்கேட்கவுபயகுல மணிவிளக்காஞ் சேக்கிழார்கண், டுளவரசன் றனைநோக்கிச் சமணர்பொய்ந்நூ லிதுமறுமைக் காகாதிம் மைக்குமற்றே, வளமருவுகின்றசிவ கதையிம்மைக்கு மறுமைக்கு முறுதியென வளவன்கேட்டு.()

அவகதையாய்ப் பயனற்ற கதையீதாகி லம்மையுமிம் மையுமுறுதி பயக்கத்தக்க, சிவகதையே ததுகற்ற திறமைப்போரார் சீவகசிந் தாமணிபோ லிடையில்வந்த, நவகதையோ புராதனமோ முன்னூலுண்டோ நானிலத்துச் சொன்னவரார் கேட்டபேரார், தவகதையோ தவம்பண்ணிப் பேறுபெற்ற தனிக்கதையோ வடைவுபடச் சாற்றுமென்றுன்.(கஉ)

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக்கேட்கச் சேக்கிழார் குரிசிலுணைசெய்வார்ஞாலத், தம்பலவர் திருத்தொண்டர் பெருமையாரு ரடிகண்முதலடியெடுத்துக் கொடுக்காவ, னம்பிபதி ஞெருதிருப்பாட் டாகச்செய்த நலமலிதொண் டத்தொகைக்கு நாரையூரிற், றும்பிமுகன் பொருளுணர்க்க நம்பியாண்டார் சுருதிமொழிக் கலித்துறையந் தாதிசெய்தார். (கந)

ஆயுமறை மொழிநம்பி யாண்டார்நம்பி யருள்செய்த கலித்துறையந் தாதிதன்னைச், சேயதிரு முறைகண்ட ராசராச தேவர்சிவா லயதேவர் முதலாயுள்ள, ஏயகருங் கடல்புடைசூ ழுலகமெல்லா மெடுத்தினிது

பாராட்டிற் றென்னவந்தத், தூயகதை யடைவுபடச் சொல்வீரென்று சோழனுரை செயக்சேட்டுக் குன்றைவேந்தர். (கச)

தில்லைவா ழந்தணரே முதற்பண்பாடு திருநீல கண்டத்துப் பாண ரீறுச், சொல்லியதொண் டத்தொகைநூல் வகையந்தாதித் தொடர்ச்சி யினை விரித்துரைக்க வளவன்கேட்டு, மெல்லியலாள் பங்கர்திரு வருளை நோக்கி வியந்தடிமைத் தொண்டுசெய்து பேறுபெற்ற, செல்கதியை நினை ந்துருகி வளவர்கோமான் சேவையர்கா வலனைமுக நோக்கிச்சொல்வான்.

அவரவர்க ளுடவர்க ளிருந்தவூர்வந் தவதரித்த திருமரபு திருப் பேர்செய்த, சிவசமயத் திருத்தொண்டு முற்பிற்பாடு சிவனடிக்கீ ழுயர் பரம முத்திபெற்றோர், எவருமறி யச்சிவன் முத்தராயிங் கிருப்பவர்க ளினிமேலும் பிறப்போர்மண்மேல், அவர்களைச்சேர்ந் தருள்பெற்றோர் பகைத்துப்பெற்றே ரவர்கள்பகை யாய்நரகி லடைந்தபேர்கள். (கரு)

இல்லறத்தி லிருந்துநனி முத்திபெற்றே ரில்லறத்திற் சிற்றின்ப வியல்பைநீக்கி, நல்லறமாந் துறவறத்தி னின்றுபெற்றோர் நற்பிரம சாரி களா யருள்பெற்றுய்ந்தோர், செல்கதிசற் குருவருளாற் சென்றுசேர்ந் தோர் சிவபூசை செய்துபர முத்திபெற்றோர், புல்லறிவு தவிர்ந்துதிரு வேடமேமெய்ப் பொருளெனக்கொண் டரனடிக்கீழ்ப் பொருந்தப்புக் கோர். (கள)

இப்படியே யடைவுபடப் பிரித்துக்கேட்டால் யாவருக்கு மேதரிக் கச் செவிநாநீட்ட, வொப்பரிய பொருடெரிந்து விளங்கித்தோன்ற வுவ மையுடைத் தாயகதை கற்கநிற்கத், தப்பில்பெருங் காவியமா விரித்துச் செய்து தருவீரென் றவர்க்குவிடை கொடுத்துவேண்டுஞ், செப்பரிய திர வியமுங் கொடுக்கவாங்கிச் சேக்கிழார் குரிசிறிருத் தில்லைசேர்ந்தார். (கஅ)

வேறு.

தில்லையெல்லையில் வந்துவந்தெதிர் தெண்டனாக விழுந்தெழுந்
தல்லிசேர்கம லத்தடத்தினின் மூழ்கியம்பல வாணர்முன்
ஒல்லைசென்று பணிந்துகைத்தல முச்சிவைத்துள முருகிநைந்
தெல்லைகாணரி தாயபேரொளி யின்பவாரியின் மூழ்கியே. (கசு)

அடையலார்புர நீறெழத்திரு நகைசெய்தன்றொரு மூவரைப்
படியின்மேலடி மைக்கொளும்பத பங்கயங்கள் பணிந்துநின்
றடிகளேயுன தடியர்சீரடி யேனுரைத்திட வடியெடுத்
திடீர்கெடத்தரு வாயெனத்திரு வருளையெண்ணி யிறைஞ்சினர். (உ0)

அலைபுனற்பகி ரதிநதிச்சடை யாட்வாட ர வாடநின்
றிலகுமன்றினி லாடுவார்திரு வருளினாலச ரீரிவாக்
குலகெலாமென வடியெடுத்துரை செய்தபேரொலி யோசைமிக்
கிலகுசீரடி யார்செவிப்புலத் தெங்குமாகி நிறைந்ததால். (உக)

தில்லைமாநகர் வாழவாழ்தவ சிந்தையந்தண ராறைஞ்ஞூ
றல்லதும்பல மடபதித்தவ ராசரிக்கையி லுள்ளபேர்
எல்லையில்லவ ரியாவருங்களி கொளவிளங்க சரீரிவாக்
கொல்லைவந்தெழ வனைவருங்கர முச்சிவைத்துள் முருகினார். (உஉ)

உள்ளலார்புர நீறெழக்கணை யொன்றுதொட்டியர் மன்றில்வாழ்
வள்ளலார்திரு மாலையுந்திரு நீறுமெய்ப்பரி வட்டமும்
எள்ளலாரல ரென்றுசேவையர் காவலர்க்கிவை யினிதளித்
தள்ளலார்வய னீடுதில்லையி லனைவருங்களி கொண்டபின். (உ௩)

சேவைகாவலர் தொண்டர்சீருரை செய்வதற்குயர் செய்யுண்முன்
மூவரோதிய திருநெறித்தமி ழாதலால்வரன் முறைமையால்
யாவரும்புகழ் திருநெறித்தலை வரைவணங்கி யிணங்கிமெய்த்
தாவருஞ்சிவ சாதனங்க டரித்துநீறு பரித்தரோ. (உ௪)

வந்துசூழ நிரைத்தவைபிரு நூறுகான்மணி மண்டபத்
தெந்தையார்திரு வருளையுன்னி யிருந்துசேவையர் காவலர்
செந்தமிழ்த்தொடை யால்விளங்கிய திருவிருத்த நிருத்தனார்
தந்தசொன்முத லாவெடுத்தனர் தாணுவான புராணநூல். (உ௫)

வேறு.

§ திருமறையோர் புராணமவை பதின்மூன்று சிவவே தியரரனை வழி பட்ட புராணமீ ரிரண்டு, குனைகழன்மா மாத்திரரொன் றுவர்முடி மன் னர் குறுநிலமன் னவரைவர் வணிகர்குலத் தைவ, ரிருமைநெறி வேளா ளர் பதின்மூவ ரிடைய ரிருவர்சா லியர்குயவர் தயிலவினை யாளர், பரத வர்சான் றார்வண்ணார் சிலைமறவர் நீசர் பாணரிவ ரோரொருவ ராம்பக ருங் காலே. (உ௬)

§ அறுதிபெறத் திருமரபு குறித்துரையாப் புராண மவைகளொரு பதின்மூன்று திருக்கூட்டந் தன்னின், மறுவிலவர் பதியறிந்த கதையிர ண்டு வந்த மரபறிந்த கதையிரண்டு பேரறிந்த கதையொன், றுமரபு தெரியாப்பு ராணமவை யோரே மூரறியாக் கதையேழு பேரறியாக் கதை யெட், டிறுதியிலக் கங்கண்ட திருக்கூட்ட மொன்றெண் ணித்தனையென் றறியாத திருக்கூட்ட மெட்டே. (உ௭)

§ தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார் சிறப்புலியார் கண நாதர் பூசலைசண் டேசர், கல்விமிறை சோமாசி மாறர்நமி நந்தி கவுணியனா ரப்பூதி நீலநக்க ராகர், செல்வமறை யோர்காதை பதின்மூன்று சிவவே

§ இந்த அடையாளமுள்ள திருவிருத்தங்களில் அடியார்களது சாதிமுறை தொகைக்கும் வகைக்கும் பேதமா யிருக்கின்றன. அநுபூதிமான்கள் திருவாக்காதலால் திருத்தாது அப்படியே அச்சிடப்பட்டது. வசனத்தில் மாத்திரம் திருத்தியிருக்கின்றது.

தியர்காதை யிரண்டுபுகழ்த் துணையார்முப் போதும், வல்லபடி சிவனைய ருச் சிப்பார்கண் மாமாத் திரர்மரபிற் சிறுத்தொண்ட ரொருவர்முடி மன்னர். (உஅ)

அறுவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழ ரருண்மானி யிடங் கழியார் நெடுமாறர் சேரர், குறுநிலமன் னவரைவர் நரசிங்க முனையர் கூற்றுவனார் கழற்சிங்கர் மெய்ப்பொருளை யடிகண், முறைமைவணி கரி லைவர் காரைக்கா லம்மை மூர்த்திகலிக் கம்பரமர் நீநியர் பகையார், திற மைபுரி வேளாளர் பதின்மூவர் மூர்க்கர் செருத்துணையார் வாயிலார் கோ ட்புலியார் சத்தி. (உகூ)

தாயனா ரிளையான்றன் குடிமாற ரரசு சாக்கியர்கஞ் சாறர்விறன் மிண்டர்முனை யடுவா, ரேயர்கோன் கலிக்காமர் கோபாலர் மரபி லிருவர் திரு மூலனா ரானயர் குயவர், சேயபுகழ்த் திருநீல கண்டனார் பாணர் திருமரபிற் றிருநீல கண்டத்துப் பாணர், மேயதிற லதிபத்தர் பரதவர் கண்ணப்பர் வேடர்மர பினிற்சான்ற ரேனாதிநாதர். (௩0)

நேசனார் சாலியரிற் றிருநாளைப் போவார் நீசர்மர பினிலெங்க டிருக் குறிப்புத் தொண்டர், தூசொலிக்கு மேகாலி மரபுதில தயிலத் தொழி ன்மரபிற் கலியனார் மரப்குறித் துரையாக், காசில்கதை பதின்மூன்று குலச்சிறையார் தண்டி கணம்புல்ல ரெறிபத்தர் காரியார் குறும்பர், தே சுடைய பத்தர்பர மனைப்பாடு வார்கள் சித்தத்தைச் சிவன்பால்வைத் தாரரூர்ப் பிறந்தார். (௩க)

செப்பரிய பொய்யடிமை யில்லாதார் மெய்யிற் றிருநீறு பூசுமுனி வர்களுலகு தன்னி, லப்பாலு மடிச்சார்ந்தா ரிவர்கடமிற் சிலபே ராய்ந்த தமிழ்ப் பேர்சிலபேர் மலையாளர் சிலபேர், தப்பாத தெலுங்கர்சிலர் மற் றுளதே சத்தோர் தவஞ்செய்து பரகதியை யடைந்தவர்கள் சிலபே, ரிப் போது மிருந்தரனை வழிபடுவோர் சிலபே ரினிமேலுந் திருமேனி கொடு வருவோர் சிலரே. (௩உ)

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரையர் திருமூலர் நெடுமாறர் மங் கையருக் கரசி, கரைசேருங் குலச்சிறையார் யாழ்ப்பாணர் குறும்பர் கணநாத ரப்பூதி சோமாசி மாற, ருரைசேரு மிவர்கள்பதி னொருவர் குரு வருளா லுயர்முத்தி யடைந்தவர்க ளெறிபத்தர் கலயர், முருகனார் கண் ணப்ப ரானயர் தாயர் மூர்த்தியார் சண்டேசர் திருநாளைப் போவார். ()

சேரனார் சாக்கியனார் கூற்றுவனார் தண்டி சிறப்புலியார் பசுபதியார் கலிக்காமர் கலியர், காரியா ரதிபத்தர் நீலநக்கர் பூசல் கணம்புல்லர் கோ ட்புலியார் நமிநந்தி யடிகள், சீருடைய கழற்சிங்கர் வாயிலார் தூய செரு த்துணையார் புகழ்த்துணையார் காடவரை யடிகண், மூரிநெடு வேற்செங் கட் சோழனா ராக முப்பதுபேர் சிவலிங்கத் தான்முத்தி யடைந்தோர்.()

திருநீல கண்டனு ரியற்பகையார் மூர்க்கர் சிறுத்தொண்டர் திருக்குறிப்புத் தொண்டர்விறன் மிண்டனருள்சேரு மிடங்கழியார் முனையடுவார் சத்தி யமர்நீதி மெய்ப்பொருளா ரேனாதி நாதர், கனைசேரும் புகழ்ச்சோழர் கஞ்சாறர் மாறர் காரைக்கா லம்மைநர சிங்கர்கலிக் கம்பர், வருநேச ராகவொரு பத்தொன்ப தடியார் மணிவேடத் தாலைவழி பட்டரனை யடைந்தோர். (௩௫)

கவுணியர்நா வுக்கரசர் பேயாரிம் மூவர் கற்குமிய லிசைவல்லோ ரிசைத்தமிழ்நூல் வல்லோர், பவமஞ்சுகாத் திருநாளைப் போவாரா னுயர்பாணர்பர மனைப்பாடு வாராக நால்வர், புவனிபுக ழையடிக டிருமூலர்காரி பொய்யடிமை யில்லாத தமிழ்ப்புலவர் சேரர், நவமுடைய விவரைவ ரியல்வல்லோர் நின்ற நாயன்மார் தவம்புரிந்து நற்கதியை யடைந்தோர். (௩௬)

இல்லறத்தி னின்றவர்க டிருநீல கண்ட ரியற்பகையா ருள்ளிட்டார் மூர்த்தியா ரப்பர், நல்லதுற வறம்பிரம சாரிகள்சண் டேசர் நானிலத்திலரனடியார் தங்களுடன் சேர்ந்து, செல்கதிபெற் றவர்ஞான சம்பந்தருடனே திருமணத்தி லொருமணமாய்ச் சேர்ந்தவர்க ளனேகர், பல்வளஞ்சே ராரூரா ருடன்சேரர் கையிற் பரியுகைக்க வுடன்சென்ற பரிசனமெண் ணிறந்தோர். (௩௭)

சிவனடியா ருடன்பகையாய் முத்தியடைந் தவர்கள் சேய்ஞலூர்ச் சண்டேசர் பிதாவெச்ச தத்தன், கவர்புகழ்சேர் கோட்புலியா ருனைத்த திரு விளையாக் கலிபிழைத்த கிளைபகைத்து நரகினைச்சென் றடைந்தோர், தவரான மூர்த்தியா ரிறைவனுக்குச் சாத்துஞ் சந்தனக்காப் பினைவிலக்கி யமண்சமயச் சார்வாய்ப், புவிபுரந்த கருநடமன் னவன்முத லனேகர் புராணகதை யினைப்பிரித்துப் புகலவெளி தலவே. (௩௮)

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்த நாளி லடித்தொண்டு செய்தொண்டர் சிலரவர்க்கு முன்னே, பேரூர்மெய்த் தொண்டுசெய்த, பேர்சிலபே ரவர்க்குப் பிறகுதிருத் தொண்டுசெயும் பேர்சிலபே ராகச் சீரூருந் திருத்தொண்டர் புராணத்திற் சேர்த்துச் சேவையர்கோன் சேர்வைசெயுந் தொண்டரள விறந்தோர், காரூரு மணிகண்டர்க் கவரவர்கள் செய்த கைத்தொண்டி னிலகைகண் டுரைக்கவெளி தலவே. (௩௯)

ஒருலகோ வொருதிசையோ வொருபதியோ தம்மி லொருமரபோ வொருபெயரோ வொருகாலந் தானோ, பேருலகி லொருமைநெறி தருங்கதையோ பன்மைப் பெருங்கதையோ பேரொன்றோ வல்லவே யிதனை, யேருலகெ லாமுணர்ந்தோ தற்கரிய வன்னென் றிறைவன்முத லடியெடுத்துக் கொடுத்தருளக் கொண்டு, பாருலகி னுமகணின் றெடுத்துக்கை நீட்டப் பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார். (௪0)

கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது முந்நீர்க் கடற்கரையி னொ ய்மணலை யெண்ணியள விடலாம், பெருங்கடன்மேல் வருந்திரையை யொன்றிரண்டென் றெண்ணிப் பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்து விட லாகுந், தருங்கடலின் மீனையள விடலாகும் வானத் தாரகையை யளவிடலாஞ் சங்கரன்று டமது, சிரங்கொடிருத் தொண்டர்புரா ணத் தையள விடநஞ் சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கு மரிதே. (சக)

அறுபதுபேர் தனித்திருப்பேர் திருக்கூட்ட மொன்ப தாகவறு பத் தொன்ப தரனடியார் கதையை, மறுவிறிரு நாவலூர்ச் சிவமறையோர் குலத்து வருசடைய னார்மனைவி யிசைஞானி வயிற்றி, லுறுதிபெற வவ தரித்த வாரூரர் முன்னு ளுரைசெய்த திருத்தொண்டத் தொகைப்பதிகத் தடைவே, நறைமலிபூம் பொழில்புடைசூழ் திருநாரை யூரி னம்பியாண் டார்திருவந் தாதிகடைப் பிடித்து. (சஉ)

காண்டமிரண் டாவகுத்துக் கதைப்பரப்பைத் தொகுத்துக் கருத ரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட், டீண்டுரைத்த புராணத்திற் றிரு விருத்த நாலா யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக வமைத்துச், சேண் டகைய திருத்தொண்டர் புராணமெனப் புராணத் திருமுறைக்குத் திரு நாமஞ் சேர்மைபெற வமைத்திட், டாண்டகைமை பெறவெழுதி மைக்காப் புச் சாத்தி யழகுபெறக் கவளிகையு மமைத்ததில்வைத் ததன்பின். (சங)

வேறு.

சேவைகாவலர் புராணகாதைதொகை செயநினைந்தெமை யகன்றபின்
னியாவர்தாமரு கிருந்தபேர்கள்கதை சென்றதெவ்வள விருந்ததெங்
காவதென்னிவைக ளறியவேண்டுமெ தறிந்துவாருமென வளவர்கோ
னேவினுனுரிய தூதர்தூதறி யாமலொற்றரையு மேவினுன். (சச)

வென்றிவேல்வளவ னளவறிந்துவர விட்டகாளையர் புராணநூ
லொன்றுபாதிகதை சென்றதென்றுசில ரோடினர்சில ருவந்துசென்
றின்றுநாளைமுடி யும்புராணமினி யென்றுரைத்திட விறைஞ்சினன்
சென்றுநற்கதை முடிந்ததென்றுசிலர் செம்பியற்குறுதி செப்பினர். (சரு)

வந்துசொன்னவர்க ளனைவருக்குநவ மணிகளுந்துகிலு மம்பொனுஞ்
சிந்தியள்ளியு முவந்துவீசியுயர் செம்பொனம்பல மருங்கில்வா
ழுந்திவண்ணர்நட மும்பணிந்துமுத லடியெடுத்தவர்கொ டுத்திடப்
புந்திசெய்துமகிழ் சேவைகாவலர் புராணமுந்தொழுவ னெனு. (சசு)

வீதிவீதிக டொறுந்தொறும்பயண மென்றுவென்றிமணி முரசறைந்
தோதிவேதியர்க ளெண்ணியிட்டவுயர் நாளுமோரையு முகூர்த்தமும்
போதநாடிவளை புரைகடக்களிறு புரவிதேர்கருவி யாடரச்
சாதுரங்கமுட னேசெலப்பிளிறு தந்திமேல்கொடு நடந்தனன். (சஎ)

தேர்முழக்கொலி மழைக்கடக்கரட சிந்துரக்களிறு பிளிறுசீ
ரார்முழக்கொலி பரிச்செருக்கொலி பதாதிவந்தெதி ரடர்ந்தெழும்
போர்முழக்கொலி சழக்கிலாதுயர் படைக்கலன்புளரு மோசையேழ்
கார்முழக்கொலியி னெட்டிரட்டிநிறை கடன்முழக்கென முழக்கெழ. (சஅ)

வளவர்கோன்வர வறிந்துதில்லைமறை யோரும்வண்மைமட பதிகளும்
பிளவுகொண்டமதி நுதன்மடந்தையரு மற்றுமுள்ளபெரி யோர்களுங்
களவிலாதமொழி கொடுபுராணகதை செய்தகங்கைகுல திலகருந்
துளவமாலையப யனையெதிர்ந்தினிய சாரவாசிபல சாற்றினார். (சகூ)

முண்டமானதிரு முடியுமிட்டதிரு முண்டமுங்கவச முந்துணைக்
குண்டலங்களு மிரண்டுகாதினும் வடிந்தலைந்தகுழை யுந்திருக்
கண்டமாலைகர மாலையுஞ்சிரசு மாலையுங்கவின் விளங்கவே
தொண்டர்சீரபரவு வானணைந்தசுப சரிதைசோழனெதிர் கண்டனன். ()

கண்டபோதுள மகிழ்ந்துதன்னையறி யாதுகைகடலை மீதுறக்
கொண்டவேடமர னடியர்வேடமிது குறைவிலாததவ வேடமென்
றண்டவாணர்திருவருளையுன்னியவ ரடிமைகொண்டபெரு மையைநினைந்
தெண்டயங்கரச ரேறுசேவையர் குலாதிபாதுகை யிறைஞ்சினான். (ருக)

இறைஞ்சியம்பலவர் பாததாமரை யிறைஞ்சவெண்ணிவரன் முறைமையா
லறஞ்சிறந்தமுனி சேவைகாவலரு மாறைஞ்ஞூறுமறை யோர்களுந்
துறஞ்சிறந்தமட பதிகளுந்தொடர வந்துமன்னனரி பிரமர்பான்
மறைஞ்சுநின்றபொருள் வெளிப்படக்கனக மன்றினின்றபடி கண்டனன்.

கண்டகண்ணருவி தாரைகொள்ளவிரு கைகளஞ்சலி கொளக்கசிந்
தெண்டரும்புளக ரோமகூபமெழ வின்பவாரிகரை புரளவாய்
விண்டதூமொழிகள் குழறவன்பினொடு விம்மிவிம்மியருண் மேலிடத்
தெண்டனாகமுன் விழுந்தெழுந்துநனி செம்பியன்பரவ வெம்பிரான். ()

சேக்கிழானமது தொண்டர்சீர்பரவ நாமகிழ்ந்துலக மென்றுநம்
வாக்கினாலடி யெடுத்துரைத்திட வரைந்துநூல்செய்து முடித்தனன்
காக்கும்வேல்வள்வ னீயிதைக்கடிது கேளெனக்கனக வெளியிலே
யூக்கமானதிரு வாக்கெழுந்தது திருச்சிலம்பொலியு முடனெழ. (ருச)

மன்றுளாடிதிரு வாய்மலர்ந்தமொழி யுஞ்சிலம்பொலியு மன்றிலே
நின்றமானிடர் செவிப்புலன்புக நிறைந்ததன்றியு நிலத்தின்மே
லொன்றிநின்றுயர் சராசரங்களடை யக்கசிந்துருகி யோலிடக்
குன்றிலங்குதிர டோணரேந்திரபதி குதுகுதுத்துள மகிழ்ந்தனன். (ருரு)

தொண்டர்தொண்டுசெய் புராணகாண்தமதி சூடுநாதர்திரு வருளினால்
விண்டநீதிபுனை சேக்கிழார்முனி விரித்துரைத்தகதை கேட்பதற்
கண்டவாணரடி யாரெலாங்கடுக வருகவென்றுதிசை திசைதொறு
மெண்டயங்கரச னேடெடுத்தெழுதி யாளுமோலைகளு மேவினான். (ருசு)

வேறு.

கவச மணிந்த சனங்களு மிங்கித முங்கசம்பித்
தவச முறுஞ்சிவ சிந்தையு மன்பக லாமென்மைத்
தவச ரிதத்தொழி லுஞ்சிவ சாதன முஞ்சாரச்
சிவச மயத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள். (௫௭)

வேதியர் வேத முழக்கொலி வேதத் தைத்தமிழா
லோதிய மூவர் திருப்பதி கத்தொலி யோவாமற்
பூதி யணிந்தர கரவென வன்பர் புகழ்ந்தோதுங்
காதியல் பேரொலி காரொலி போலொலி கைத்தேற. (௫௮)

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்று
ணேசிப் பவர்சிலர் பிறவா வரமரு ணிமலாவென்
றியாசிப் பவர்சிலர் திருமுறை யெழுதிக் கவிகூற
வாசிப் பவர்சில ராக விருந்து மகிழ்ந்தார்கள். (௫௯)

தெள்ளு திரைக்கடன் மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை யன்புசெ யன்பர் மடங்க டொறும்பாலர்
மெள்ள விருந்து மிழற்று புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடி யுரைப்பன கேட்பன மெய்ப்பூவை. (௬0)

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்டரு சீர்நாடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பெருத்தார்கள். (௬௧)

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாமின்
றூடினர் வானி லரம்பைய ரஞ்சலி யெஞ்சாமற்
சூடினர் மண்ணின் மடந்தைய ரெந்தை துணைப்பாதந்
தேடினர் மாலய னன்பர் நடந்தரி சித்தார்கள். (௬௨)

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வங்கிய காள மிடக்கை கடக்கை மணிக்காளம்
பொங்கிய பம்பை வலம்புரி கண்டை முதற்பொற்பார்
மங்கல தூரிய மெங்கு முழங்கி வனப்பெய்த. (௬௩)

வேதியர் வேள்வி நெடும்புகை யாலய மெங்கெங்குங்
காதிய குங்கிலி யப்புகை நீடு கருப்பாலைச்
சோதி நெடும்புகை தோரண வீதி தொறுந்தோறு
மாதர் புகைக்கு மகிற்புகை யெங்கும் வனப்பெய்த. (௬௪)

ஆடக நாடக சாலைகண் முத்தணி யத்தாணி
மேடை யரங்கு களங்க மிலாத வெளிக்கூட
மாட மதிட்கன மாளிகை சூளிகை யெங்கெங்குந்
தோடவிழ் மாலைகள் பொன்னரி மாலைகள் சூழ்வித்தார். (௬௫)

பழுதக லத்திரு வலகு விருப்பொடு பணிமாறிக்
குழைவு பெறத்திகழ் கோமய நீர்குளி ரச்செய்து
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சார்வித்
தழகு பெறத்திரு வீதி புதுக்கி யதன்பின்பு. (௬௬)

வேறு.

திருநெறித்தமிழ் வல்லபேர்கள் சிவாகமங்கள் படித்தபேர்
கருநெறிப்பகை ஞானநூல்பல கற்றபேர்மறை கற்றபேர்
குருநெறிக்குரி யோரிலக்கண விலக்கியங்கள் குறித்தபேர்
பெருநெறிப்பல காவியங்கதை பேசவல்லவ ரனைவரும். (௬௭)

வேறு.

வள்ளலார் திருநடஞ்செய் மன்றின் முன்றின் மறையவர்கோ மய சலத்தான் மெழுகித் தாபித், தெள்ளரும்வெண் சுதையொழுக்கி யறு காற் பீட மிட்டதன்மேற் பசும்பட்டு விரித்து மீதே, வெள்ளைமடித் திட் டுமது மலருந் தூவி விரைநறுந்தூ பங்கொடுத்தா தனங்கற் பித்துத், தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த திருமுறையை யதன்மேல் வைத் திறைஞ்சிப் போற்றி. (௬அ)

வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே வாசித்துப் பொருளரு ளிச் செய்வீ ரென்று, சோழர்பெரு மான்முதலா மடிய ரெல்லாஞ் சொ லக்கேட்டுக் குன்றைமுனி மன்று ளாடுந், தாழ்சடையா னடியெடுத்துத் தரத்தாஞ் செய்த சைவகதை யினைவிளங்க விரித்துச் சொல்லச், சூழவி ருந் தம்பலவ ரடியா ரெல்லாஞ் சுருதிமொழி யிதுவெனக்கை தொழுது கேட்டார். (௬௯)

தாளுடைய திருச்சிலம்பு புலம்பநட்டம் புரியுந் தன்மையர னுக்கி சைந்த பேர்வழியி னுளு, மாளுடைய பிள்ளையா ரவதரித்த நாளு மவர மூது திருஞான மமுதுசெய்த நாளுஞ், சூளுடையா திரைநாளாஞ் சித்தி ரையா திரைநாட் டொடங்கியெதி ராமாண்டு சித்திரையா திரையி, னுளு டைய கதைமுடிப்ப மெனக்குன்றை வேந்தர் நடத்தவனை வருமிருந்து கேட்டனர்நா டோறும். (எ0)

சிறப்புடைய மூவர்முத லிகடிருவாய் மலர்ந்த திருநெறிய தமிழ்மூ லர் திருமந்திர மாலை, யறப்பயனுங் காரைக்காற் பேயிரட்டை மாலை யந் தாதி மூத்தபதி கங்கழறிற் றறிவார், மறப்பரிய பொன்வண்ணத் தந் தாதி திருமும் மணிக்கோவை தெய்வவுலா வையடிகள் வெண்பா,வுறுப் பாகத் திருவிருத்த முடலாகப் பொருட்கோ ளுயிராக நாலடியா னடந் ததுல கெல்லாம். (எக)

அன்றுமுத லுடோறு நாடோறு மண்ண லடியரள விறந்தபெயர் வந்தவர்க ளெல்லாஞ், சென்றுறையத் திருமடங்க டிருமடங்க டோறுந் திருவிளக்கங் கவுர்சாத்து வுள்ளுடைமேற் போர்வை, துன்றியசெங் நெலி

னடிசில் கன்னனறுங் கனிக யேவறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பா றே, என்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுத மடைக்காய் நரபதியே வலி னமைச்சர் நாடோறு நடத்த. (எஉ)

நலமலியுந் திருத்தில்லை மன்றினினின் றாடு நடராசற் கன்றமுதன் மகபூசை நடத்தி, யலகில்புகழ்த் தில்லைவா ழந்தணர்க்கும் வெவ்வே றமு துபடி கறியமுது முதலான வெல்லா, நலமலிசெங் சோல்வளவன் றப் பாமே நாளு நடத்திவர வரனடியார் நிறைந்துபதஞ் சலியும், புலிமுனி யுந் தவஞ்செய்த பெரும்பற்றப் புலியூர் பூலோக சிவலோக மெனப்பொ லிந்து தோன்ற. (எங)

மருவுதிரு முறைசேர்ப்பா ரெழுதுவா ரிருந்து வாசிப்பார் பொரு ளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து, சிரமசைத்துக் கொண்டாடிக் குது குதுப்பார் சிரிப்பார் தேனிப்பார் குன்றைமுனிச் சேக்கிழார் செய்த, வரியதவத் தினைநினைப்பா ரம்பலவர் முன்னு ளடியெடுத்துக் கொடுக்க விவர் பாடினரென் றுரைப்பார், பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப் பிடிக்குமோ வினிச்சிந்தா மணிப்புரட்டென் றுரைப்பார். ()

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராண மிருந்தன்பர் பாராட்ட நடந்தெதிரா மாண்டு, சித்திரையா திரைநாளின் முடியவது கண்டு திருத்தொண்ட ரரவெனும்பே ரொலியெழுந்து பொங்கக், கத்து திரைக் கடலொலியை விழுங்கிமுழங் கோரேழ் கடலொலியைக் கீழ்ப்ப டுத்திப் பிரமாண்ட வெளியைப், பொத்தியிமை யவர்செவியை நிறைத்து யரப் பொங்கிப் பொன்னுலகுக் கப்பாலும் புகப்பொலிந்த தன்றே.(எ௫)

திருத்தொண்டர் புராணமெழு தியமுறையை மறையோர் சிவமூல மந்திரத்தா லருச்சனைசெய் திறைஞ்சி, யிருக்குமுதன் மறைநான்கி னின் றுமுத லாக விதுவுமொரு தமிழ்வேத மைந்தாவ தென்று, கருத்திருத்தி யமுதடைக்காய் நறுந்தூப தீபங் கவரிகுடை கண்ணாடி யாலத்தி நீறு, பரித்தளவு செயக்கண்டு வளவர்பிரான் முறையைப் பசும்பட்டி னற்சூ ழ்ந்து பொற்கலத்தி லிருத்தி. (எசு)

செறிமதயா னைச்சிரத்திற் பொற்கலத்தோ டெடுத்துத் திருமுறை யை யிருத்தியபின் சேவையர்கா வலனை, முறைமைபெற வேற்றியா சனுங்கூட வேறி முறைமையினு லிணைக்கவரி துணைக்கரத்தால் வீச' மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி மழைபொழியத் திருவீதி வலமாக வரும்போ, திறைவர்திரு வருளைநினைந் தடலரசர் கோமா னிது வன்றோ நான்செய்த தவப்பயனென் றிசைத்தான். (எஎ)

வாரணத்தி லிவாவரக் கண்டதிரு வீதி மறுகுதொறுந் தூய்மை செய்து வாழைகளு நாட்டிப், பூரணகும் பமுமமைத்துப் பொரியுமிகத் தூவிப் பொன்னரிமா லையுநறும்பூ மாலைகளுந் தூக்கித், தோ ரணங்க

ணிைத்துவிரை நறுந்தூப மேந்திச் சுடர்விளக்கு மேற்றியணி மணிவி
ளக்கு மேந்தி, யாரணங்கள் விரிந்தோதி மாமறையோ ரெதிர்கொண் டறு
கெடுப்ப வாழ்த்தெடுத்தா ரரம்பையர்க ளெல்லாம். (எஅ)

வேறு.

காவலனரிவர் தவரிவர்காவலர் கவரியிடத்தகு மோவென்பார்
சேவையர்காவல னார்சிவமான சிறப்பிதுநல்ல சிறப்பென்பார்
தேவருமெழுதவொ ணாமறையைத்தமிழ் செய்துதிருப்பதி கம்பாடு
மூவருமொருமுத லாயுலகத்து முளைத்தமுதற்பொரு டானென்பார். ()

மின்மழைபெய்தது மேகவொழுங்குகள் விண்ணவர்கற்பக விரைசேர்பூ
நன்மழைபெய்தனர் சேவையர்காவலர் நாவலரின்புற நாவாரச்
சொன்மழைபெய்தனரிரவலர்மிடிகெட வள்ளிமுகந்தெதிர்சோளேசன்[ன்
பொன்மழைபெய்தன னுருகியநெஞ்சொடு கண்மழையன்பர்பொழிந்தார்க

மதுரவிராமா யணகதையுரைசெய்த வான்மிகபகவனு மொப்பல்ல
விதிவழிபாரத முரைசெய்துகரைசெய்த வேதவியாதனு மொப்பல்ல
சிதைவறவாயிர நாவுடனறிவுள சேடவிசேடனு மொப்பல்ல
பொதியமலைக்குறுமுனிவனுமொப்பலபுகழ்புனைகுன்றைமுனிக்கென்பார்

மெய்யுளசிவசா தனமும்வெளிப்பட வெண்ணீறெழுதிய கண்ணேறுங்
கையுந்திகழ்மணி கண்டமுமொளிதரு கவளிகையும்புத் தகவேடு
மையுந்திருவுள மழியுந்தொறுமர கரவெனுநாமமு நாமெல்லா
முய்யும்படியருள் கருணையுமழகி தெனத்தொழுதனருல கவரெல்லாம்.()

பூவைமறந்தனள் வெண்டாமரைமயில் புகல்தருசங்கப் புலவோர்சொற்
பாவைமறந்தனள் தேசசுபாடித பயனைமறந்தனள் பதுமத்தோ
னவைமறந்தனள் பொதியமலைத்தலை நண்ணியபுண்ணிய முனிவனெனுங்
கோவைமறந்தனள் சேவையர்காவல னார்திருநாவிற் குடிகொண்டாள்.()

இப்படியிப்படி தன்னில்விதிப்படி யிம்பருமும்பரு மேனேரு
மப்படிசூழ வரத்திருவீதி வலஞ்செய்தணைந்தம் பலமுன்றிற்
றப்பறயானையி னின்றுமிழிந்தர சனுமுரைசெறிசே வையர்கோவு [தார்.
முப்புரிநூன்மறை யோரொடணைந்தெழு தியமுறையைத்திரு முன்வைத்

வேறு.

அண்டவாணரெதிர் தெண்டனுகவனை வரும்விழுந்துபி னெழுந்துசீர்
கொண்டசேவைகுல திலகருக்கவைவ ருங்குறித்தெதிர் கொடுத்தபேர்
தொண்டர்சீர்பரவு வாரெனப்பெயர் சுமத்தினானமுடி சூட்டிமுன்
மண்டபத்தினி லிருத்திமற்றவரை வளவர்பூபதி வணங்கினன். (அ௦)

மூவரோதுதிரு முறைகளேழுதிரு வாதவூரர்முறை யொன்றிசைப்
பாவரைந்தமுறை யொன்றுமூலர்முறை யொன்றுபாசுரம தாதியாக்
கோவைசெய்தமுறையொன்றுசேவையர் குலாதிநீதிமுறையொன்றுடன்
பாவைபாகர்திரு வருள்சிறந்தமுறை பன்னிரண்டென வகுத்தபின்.(அக)

தோடுசெய்ததிரு நெறியசெந்தமிழோ டொக்குமென்றுரை தொடர்ந்து
பேடுசெய்துநட ராசர்சந்நிதியி லேற்றினார்களிது பாலிசூழ் [செப்
நாடுசெய்ததவ நீடுகுன்றறவள நகரிசெய்ததவ நிகரிலாப்
பீடுசெய்தபகி ரதிகுலத்திலகர் சேக்கிழார்செய்த பெருந்தவம். (௮௭)

ஆயவேலையன பாயனிக்கிலைமை யாதலாலனுசர் பாலரூ
வாயரெங்குளரெ னப்பணிந்திரு மருங்குநின்றவர் விளம்புவார்
தூயகுன்றைநகர் மீதுதம்பெயர் துலங்கவோர்குள மமைத்தபி
னேயநாகைய ரார்திருப்பணியி யற்றியவ்விடை யிருந்தனர். (௮௮)

என்றுசொல்லவவர் தமையழைத்தரச னிவரமைச்சரிவர் பட்டமு
மன்றன்மாலைபுனை தொண்டைமானென வகுத்தபின்றமது மண்டல
மன்றுவற்பம்வர வந்தடைந்தவரை யாற்றல்செய்துதொண்டை மண்டல
நின்றுகாத்தபெரு மானெனத்தமது பெயரையெங்கணு நிறுத்தினர்.(௮௯)

தொண்டர்சீர்பரவு சேக்கிழார்குரிசி றூயதில்லைநகர் தன்னிலே
பண்டுமூவர்பதி கத்துவந்தவறு பத்துமூவர்கதை தனையுணர்ந்
தண்டவாணரடி யார்கடம்முட னருந்தவந்தனி லிருந்துபி
னிண்டைவைத்தசடை யம்பலத்தவ ரெடுத்தபாதநிழ லெய்தினர். (௯௦)

வாழிதில்லைமணி மன்றுளென்றுநட மாடுமெங்கணர் மலர்ப்பதம்
வாழிகாழிநகர் வாழவந்ததிரு நெறியராதிபதி வள்ளருள்
வாழியன்பர்திரு நீறுமிட்டதிரு முண்டமுந்துவய கவசமும்
வாழிகுன்றைமுனி சேவையாதிதிரு வாய்மலர்ந்தருள் புராணமே. (௯௧)

தேசிலங்குமுகில் குன்றையாதிபதி தொண்டர்சீர்பரவு சேக்கிழார்
வாசலன்றுமுத லின்றுகாறுமினி மேலும்வாழையடி வாழையா
வீசுதென்றன்மணி மண்டபத்தரசு வீற்றிருக்குமுடி மன்னருக்
கீசனன்பர்கள் புராணமுஞ்சொலி யமைச்சுமாகிநல மெய்துமால், (௯௨)

அண்டவாணர்தொழு தில்லையம்பலவ ரடியெடுத்துலகெ லாமெனத்
தொண்டர்சீர்பரவு சேக்கிழான்வரிசை துன்றுகுன்றைநக ராதிபன்
றண்டகாதிபதி திருநெறித்தலைமை தங்குசெங்கைமுகில் பைங்கழற்
புண்டரீகமலர் தெண்டனிட்டுவினை போக்குவார்பிறவி நீக்குவார். (௯௩)

ஆக்கியோன் பெயர்.

வேறு.

திருக்கிளருங் கயிலைமலைக் காவல்பூண்ட செல்வமலி திருநந்தி மரபில்வந்து, கருக்குழியி லெமைவீழா தெடுத்தாட் கொள்ளுங் கருணைமிகு மெய்கண்ட தேவர்தூய, மருக்கிளர்தாள் பரவுமரு ணந்திதேவர் மகிழு மறைஞானதே வருக்கன்பாகி, யிருக்குமுமா பதிதேவர் சேக்கிழார்தி மிசைப்புரா ணம்முரைத்தா ரென்பமாதோ.

ஆ திருவிருத்தம் - ௧௦௪.

திருச்சிற்றம்பலம்.

தொண்டைமண்டலத்திலே, குன்றத்தூரிலே, வேளாளவருணத்திலே, சேக்கிழார்மரபிலே, பரமசிவனது திருவருளினாலே, தமிழ்நாட்டில் உள்ளவர்கள் உய்யும்படி, அருண்மொழித்தேவர் பாலறுவாயர் என்னுஞ் சற்புத்திரர் இருவர் சகோதரராய்த் திருவவதாரஞ் செய்தார்கள். அவர்களுள்ளே மூத்தவராகிய அருண்மொழித்தேவர் தாம் உதிக்கப்பெற்ற சேக்கிழார் மரபை விளக்கினமையால், அவருக்குச் சேக்கிழாரென்னும் பெயர் உண்டாயிற்று. அவருடைய கல்வியறிவொழுக்கங்களை அநபாயசோழமகாராஜாவானவர் அறிந்து, அவரைத் தமக்கு முதன் மந்திரியாராக்கி, அவருக்கு உத்தம சோழப்பல்லவரென்னும் பெயரைக் கொடுத்தார். அவர் சோழநாட்டிலுள்ள திருநாகேச்சுரமென்னுஞ் சிவஸ்தலத்தினிடத்தே தமக்கு அன்பு மிகுதலால், தம்முடைய குன்றத்தூரிலே ஒரு திருக்கோயில் கட்டுவித்துப் பிரதிட்டைசெய்து, அதற்குத்திருநாகேச்சுரமெனப் பெயரிட்டு, அதிலே நித்தியநைமித்திகங்களை வழுவாது நடத்துவித்துக்கொண்டு, அநபாயசோழமகாராஜாவுடைய அரசுரிமைச் செங்கோலை ஒழுங்குபெறச் செலுத்திவந்தார்.

இப்படியொழுகு நாளிலே சைவசமயிகளிற் சிலர், பாற்கடலுட்பிறந்த மீன்கள் அப்பாலை உண்ணாது வேறு பலவற்றை உண்டல்போல, மெய்ந்நூல்களாகிய தங்கள் சைவநூல்களைக் கல்லாது, பரசமயங்களுள் ஒன்றாகிய ஆருகதத்தை அநுட்டிக்குஞ்சமணர்களுடைய காப்பியமாகிய சீவகசிந்தாமணியை மெய்யெனக் கருதிக்கற்று, தங்கள் வாணாளை வீணாளாக்கக் கழிப்பாராயினார்கள். அநபாயசோழமகாராஜாவும் அந்தச் சீவகசிந்தாமணிக்கதையை மெய்யென்று கருதி மனமகிழ்ந்து, பாராட்டிக் கேட்பாராயினார். அதுகண்ட அருண்மொழித்தேவர் இராஜாவைநோக்கி, "மகாராஜாவே, நீர் சைவசமயியாயிருந்தும், இம்மை மறுமை வீடென்னும் மூன்றும் பயக்குஞ் சத்தியமாகிய சிவசரித்திரத்தைக் கேளாமல், நமது மெய்க்கடவுளாகிய சிவபெருமானை நிந்திக்கும் புறச்சமயிகளாகிய சமணர்களுடைய பொய்க்கதையாகிய இந்தச் சீவகசிந்தாமணியை மெய்யெனக் கருதிப் பாராட்டிக் கேட்டு, உமது வாணாளை வீணாளாகக் கழிப்பது தகுதியன்று. இது அதிபாதகமென்றே நிச்சயித்து அறிந்துகொள்ளும்" என்று கண்டிக்க; இராஜாவானவர் மனமகிழ்ந்து, "இது அவகதையாய்ப் பயனற்ற கதையாயின், இம்மை மறுமை வீடு மூன்றும் பயக்கத் தக்க சிவசரித்திரம் யாது? அதன் வரலாறு யாது? ஐயந்திரிபறச் சொல்லும்" என்று கேட்டார். அதற்கு அருண்மொழித்தேவர் "திருவாரூரிலே சுத்தசாட்குண்ணிய பரிபூரணராகிய வன்மீகநாதர், தம்முடைய திருத்தொண்டர்களது அடிமைத்திறத்தை ஆன்மாக்கள் உய்யும்படி பாடும்பொருட்டு அநுஞ்ஞைசெய்து, "தில்லைவாழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று அடியெடுத்துக் கொடுக்க; பஞ்சபாசத்தடை நீங்கிய சமய

குரவருள் ஒருவராகிய சுந்தரமூர்த்திநாயனார் பதினொரு திருப்பாட்டினாலே திருத்தொண்டத்தொகை என்று பெயர் தந்து, ஒரு திருப்பதிகம் பாடியருளினார். அந்தத் திருத்தொண்டத்தொகைக்குத் திருநாரையூரில் எழுந்தருளியிருக்கும் பொல்லாப்பிள்ளையார் பொருள்சொல்ல, பாலிய தசையிலேயே வேதசிவாகமாதி சமஸ்தசாத்திரங்களையும் அவரிடத்திலே ஓதியுணர்ந்த ஆதிசைவராகிய நம்பியாண்டார் நம்பியானவர் அதனை வகுத்துக் கட்டளைக்கலித்துறையினால் ஒரு திருவந்தாதி செய்தருளினார். அதற்கு நம்பியாண்டார்நம்பியந்தாதி என்பது பெயர். அத்திருவந்தாதியைத் திருமுறைகண்டராஜராஜ அபயகுலசேகர சோழமஹாராஜா சிவாலயமுனிவர் முதலிய பெரியோர்களெல்லாரும் எடுத்து இனிது பாராட்டினார்கள்" என்றார். அது கேட்டு இராஜா "அத்திருவந்தாதியை ஓதிப் பொருள் சொல்லும்" என்று சொல்ல; அருண் மொழித்தேவர் அதனை ஓதி, பொருளை விரித்து உரைத்தார். இராஜா அதைக்கேட்டு, திருத்தொண்டர்களுடைய அடிமைத்திறத்தையும் அவர்களுக்கு அருளிய பரமசிவனது திருவருட்டிறத்தையும் நினைந்து உருகி, அருண்மொழித்தேவரைநோக்கி, "இந்தச்சரித்திரத்தை யாவருக்கும் தெளிவாய் விளங்கும்பொருட்டு, இலக்கணவிதிப்படி அமைந்த பெருங்காப்பியமாக விரித்துச் செய்து தாரும்" என்றார்.

அருண்மொழித்தேவர் அவ்வரசரிடத்தில் எண்ணிறந்த திரவியங்களையும் விடையையும் பெற்று, சிதம்பரதலத்தை அடைந்து, சிவானந்த வடிவாகிய சிவகங்கையிலே ஸ்நானம்பண்ணி, சந்தியாவந்தனமுஞ் சிவபூசையும் முடித்துக்கொண்டு, கனகசபைக்கு முன்சென்று, பஞ்சகிருத்தியகிருத்தஞ்செய்தருளுஞ் சபாநாயகரைத் தரிசித்து, அழலிடைப்பட்ட வெண்ணெய்போல மனங்கசிந்துருகி, இரண்டுகைகளும் சிரசின்மேல் ஏறிக் குவிய, ஆனந்தவருவி சொரிய, உரோமஞ்சிலிர்ப்ப, கரையற்ற இன்பக்கடலிலே அமிழ்ந்தி நின்று, "எம்பெருமானே, அடியேன் தேவரீருடைய திருத்தொண்டர்களது அடிமைத்திறத்தைப் பெருங்காப்பியமாக விரித்துப் பாடும்பொருட்டுத் தேவரீர் அடியெடுத்துத் தந்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்து வணங்கினார். உடனே சபாநாயகரது திருவருளினாலே, "உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்" என்று ஓர் அசரீரிவாக்கு எழுந்தது. அதனைத் தில்லைவாழந்தணர்களும் மாகேசுரர்களும் கேட்டு, மனமுருகி நமஸ்கரித்து, சபாநாயகருக்குச் சாத்தப்பட்ட திருமாலையையும் திருநீற்றையும் திருப்பரிவட்டத்தையும் அருண்மொழித்தேவருக்குச் சாத்திக் களிகொண்டார்கள். அருண்மொழித்தேவர் சைவத்திருநெறித் தலைவர்களாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருநாவுக்கரசுநாயனார் சுந்தரமூர்த்திநாயனார் என்னும் மூவரையும் நமஸ்கரித்து, விபூதி ருத்திராக்ஷங்களை விதிப்படிதரித்து, ஆயிரக்கான்மண்ட

பத்திற் சென்று, சபாநாயகரது திருவருளை நினைந்து இருந்துகொண்டு, அவர் எடுத்துத்தந்த திருவாக்கை முதலாகக்கொண்டு, புராணம் பாட ஆரம்பித்து, சிலகாலத்திலே புராணத்தைப் பாடி முடித்து, அதற்குத் திருத்தொண்டர்புராணமெனப் பெயர் தந்து, மைக்காப்புச்சாத்தி, கவளிகையில்வைத்தருளினர்.

அருண்மொழித்தேவர் புராணம் பாடுதற்குச் சிதம்பரத்தை அடைந்தபின், எத்துணைக்கதைகள் நிறைவேறின இன்னும் எத்துணைக்கதைகள் இருக்கின்றன என்று அறியும்பொருட்டுக் காலந்தோறும் அத்தியந்த ஆசையுடன் தூதர்களை அனுப்பிக்கொண்டிருந்த அநபாயசோழமகாராஜாவானவர் புராணம் முற்றுப்பெற்றமையைச் சிலதூதர் சொல்ல அறிந்து, மனமகிழ்ந்து, அவர்களுக்குக் கனகமாரி பொழிந்து, சபாநாயகரையுஞ் சேக்கிழார்நாயனர் அருளிச்செய்த திருத்தொண்டர்புராணத்தையும் வணங்க நினைந்து, சுபதினத்திலே சுபமுகூர்த்தத்திலே கச ரத துரக பதாதிகள் சூழ யானைமேற்கொண்டு சென்று, சிதம்பரத்துக்குச் சமீபித்தார். தில்லைவாழந்தணர்களும் மடபதிகளும் அருண்மொழித்தேவரும் மற்றைப் பெரியோர்களும் அரசருடைய வரவை அறிந்து, அவரை எதிர்கொண்டு, ஆசீர்வாதம் பண்ணினர்கள். அரசர் அருண்மொழித்தேவருடைய சிவவேடப்பொலிவைக் கண்டு மனமகிழ்ந்து, தம்மை அறியாது கைகள் சிரசின்மேல் ஏற, சபாநாயகர் அடிமைகொள்ளப்பெற்ற அவரது பெருமையை நினைந்து,அவருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்தார். பின்பு அவ்வருண்மொழித்தேவரோடும் தில்லைவாழந்தணர்களோடும் மடபதிகளோடும் சென்று, கனகசபையிலே திருநிருத்தஞ்செய்தருளுஞ் சபாநாயகரைத் தரிசித்து, ஆனந்தவருவி சொரிய, இரண்டு கைகளுஞ் சிரசின்மேல் ஏறிக் குவிய, மனங்கசிந்துருக, உரோமஞ்சிலிர்ப்ப, உரை தடுமாற, அன்பினேடு விம்மி விம்மித் தண்டாகாரமாக விழுந்து எழுந்து நின்று, ஸ்தோத்திரம் பண்ணினர். அப்பொழுது, "சோழனே, நாம் "உலகெலா முணர்ந் தோதற் கரியவன்" என்று அடியெடுத்துக் கொடுக்க, சேக்கிழான் நம்முடைய தொண்டர்களது அடிமைத்திறத்தை விரித்துப் புராணம் பாடி முடித்தான். நீ அதைக் கேள்" என்று ஓ ரசரீரி வாக்கும் திருச்சிலம்பொலியும் கனகசபையிலே சமஸ்தருங் கேட்க எழுந்தன.

அநபாயசோழமகாராஜாவானவர் அதைக் கேட்டு மனமகிழ்ந்து, திருத்தொண்டர்புராணத்தைக் கேட்க வரும்பொருட்டு, எங்குமுள்ள சிவனடியார்கள் சமஸ்தருக்கும் நிருபங்கள் அனுப்பினர். அரசரது ஏவலினல் ஏவலாளர்கள் ஆலயத்தையும் திருவீதிகளையும் மிக அலங்கரித்தார்கள். திருநெறித்தமிழாகிய தேவார திருவாசகங்களிலே வல்ல பெரியோர்களும், சிவாகமவிற்பன்னர்களும், வேதவேதாங்கபண்டிதர்களும், சிவாசாரியர்களும், இலக்கணவிலக்கிய வித்துவான்களும், காவியவிற்

பத்திமான்களும், பிறருமாகிய எல்லாரும் திருபங்கண்டு மனமகிழ்ந்து, விரைந்து புறப்பட்டு, சிதம்பரஸ்தலத்தை அடைந்தார்கள்.

தில்லைவாழந்தணருள் ஒருவர், சித்திரைமாசத்திலே திருவாதிரை நக்ஷத்திரத்திலே சபாநாயகர் சந்நிதானத்திலே மெழுகி, அறுகாற்பீடமிட்டு, அதன்மேற் பசும்பட்டு விரித்து, அதின்மேல் வெள்ளைப்பட்டை மடித்து இட்டு, புஷ்பங்களைத் தூவி, தூபங்கொடுத்து, ஆசனங்கற்பித்து, திருத்தொண்டர் புராணத்திருமுறையை அதன்மேல் வைத்து, அருச்சித்து, வணங்கித் துதித்தார். அதன்பின், சோழராஜா முதலாகிய அடியார்களெல்லாரும் சேக்கிழார்நாயனாரை வணங்கி, "சுவாமீ, இந்தத் திருத்தொண்டர்புராணத்தைத் தேவரீரே வாசித்துப் பொருள் அருளிச்செய்வீர்" என்று விண்ணப்பஞ்செய்ய; அவர் அப்புராணத்தின் பொருளை விளங்க விரித்து அருளிச்செய்ய; எல்லாரும் இருந்து கேட்பாராயினார்கள். சோழமகாராஜாவானவர் அன்றுமுதலாக நாடோறும் சபாநாயகருக்கு மகாபூசை நடத்திவந்தார். தில்லைவாழந்தணர்களுக்கும் மடபதிகளுக்கும் திருத்தொண்டர்புராணங்கேட்க வந்த எண்ணிறந்த அடியார்களுக்கும் போசனமுதலியவைகளெல்லாம் அவ்வரசரது செலவினாற்றானே நடந்தன. எல்லாரும் அத்தியந்த ஆசையோடு கேட்க அருண்மொழித்தேவர் தினந்தோறும் புராணம் வாசித்துப் பொருள் சொல்லி, மற்றவருஷத்திலே சித்திரைமாசத்திலே திருவாதிரைநக்ஷத்திரத்திலே முடித்தருளினார்.

புராணமுற்றுப்பெற்றவுடனே தில்லைவாழந்தணர் திருத்தொண்டர் புராணத்திருமுறையை விதிப்படி அருச்சனை செய்து வணங்கினார். அநபாயசோழமகாராஜா அந்தத்திருமுறையைப் பசும்பட்டினாலேசுற்றி, பொற்கலத்திலே வைத்து, அதனை எடுத்து யானையின் சிரசில் இருத்தி, சேக்கிழார்நாயனாரை அவ்யானைமேல் ஏற்றி, தாமுங்கூட ஏறி, இரண்டு கைகளினாலும் வெண்சாமரம் வீசுவாராகி, சபாநாயகருடைய திருவருளை நினைந்து, "இதுவன்றோ நான்செய்த தவப்பயன்" என்றார். சேக்கிழார் நாயனார், மங்கலவாத்தியங்கள் ஒலிக்க, பிராமணர்கள் வேதகோஷஞ்செய்ய, சிவனடியார்கள் ஹர ஹர என்று சொல்லும் பேரொலி தழைக்க, தில்லைவாழந்தணர்கள் வீதிகடோறுந் தூய்மைசெய்து வாழைகள் நாட்டித் தோரணங்கள் நிரைத்துப் பூமாலைகள் தூக்கிப் பூரணகும்பங்கள் வைத்துப் பொரி தூவித் திருவிளக்கேற்றி, வேதங்களை ஓதி எதிர்கொண்டு, அறுகு எடுக்க, அடியார்கள் தம்முடைய சிவவேடப்பொலிவையும் புத்தகக்கவளிகையையும் திருவுளம் அழியுந்தோறும் ஹர ஹர என்று சொல்லுதலையும் தமிழ்நாடு முழுதும் உய்யும்படி அருளிய பெருங்கருணையையும் கண்டு கண்ணீர் சொரிய மனம் நெக்குநெக்குருக வணங்கித் துதித்து ஆனந்தக்கூத்தாட, திருவீதிவலஞ் செய்து, திருமுன்றிலை அடைந்து, அரசரோடு யானையினின்றும் இறங்கி, கனகசபையிலே சென்று,

திருமுறையைத் திருமுன்னே வைத்தார். சோழராஜா அவ்வருண்மொழித்தேவருக்குத் "தொண்டர்சீர்பரவுவார்" என்னுந் திருநாமங்கொடுத்து, ஞானமுடி சூட்டி அவரை மண்டபத்திலே இருத்தி, அவருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்தார்.

பின்பு, முற்காலத்திலே இராஜராஜ அபயகுலசேகர சோழமகாராஜா கேட்டுக்கொண்டபடி நம்பியாண்டார் நம்பியால் வகுக்கப்பட்டனவாகிய பதினொரு திருமுறைகளுடனே, அந்தத்திருத்தொண்டர் பெரியபுராணம் ஒன்று கூட்டி,அதனைப் பன்னிரண்டாந் திருமுறையென வகுத்து, அதனைச்செப்பேடு செய்து, சந்நிதியில் ஏற்றுவித்தார்.

அதன்பின் "இந் நாயனாருடைய தம்பியாராகிய பாலறுவாயர் இப்பொழுது எங்கே உளர்" என்று வினவ; சமீபத்தில் நின்றவர்கள் சிலர் வணங்கிக்கொண்டு நின்று, "அவர் குன்றத்தூரிலே ஒரு திருக்குளம் அமைத்தபின், திருநாகேசுரருக்குத் திருப்பணிசெய்துகொண்டு, அவ்விடத்தில் இருக்கின்றனர்" என்றார்கள். அதுகேட்ட அரசர் அவரை அழைப்பித்து, அவருக்குத் தொண்டைமான் என்னும் பெயர் கொடுத்து, அவரைத் தமக்கு முதன்மந்திரியாராக்கினார். அருண்மொழித்தேவர் சிதம்பரத்திற்றானே சிலகாலம் எழுந்தருளியிருந்து, பின் அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபியாகிய சபாநாயகருடைய குஞ்சிதபாத நிழலை அடைந்தார்.

---

சைவசித்தாந்தசாத்திரோபதேசஞ் செய்தருளிய சந்தானசாரியர்களுள்ளே தலைவராவார் சிவபெருமானது அருள்பெற்ற திருநந்திதேவர்; அவர்மாணாக்கர் சனற்குமாரமகாமுனிவர்; அவர்மாணாக்கர் சத்தியஞான தரிசனிகள்; அவர்மாணாக்கர் பரஞ்சோதிமகாமுனிவர்; அவர் கிருபாவசத்தினாலே திருக்கைலாசகிரியினின்று நீங்கித் தமிழ்நாட்டிற்கு எழுந்தருளியபோது அவரிடத்திலே ஞானோபதேசம் பெற்ற மாணாக்கர் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருந்த வேளாளராகிய மெய்கண்டதேவர் என்னுங் காரணப்பெயரையுடைய சுவேதவனப்பெருமாள்; அவர் மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மருள்ளே தலைவர் திருத்துறையூரில் எழுந்தருளியிருந்த ஆதிசைவராகிய சகலாகமபண்டிதர் என்னுங் காரணப்பெயரையுடைய அருணந்திசிவாசாரியர்; அவர் மாணாக்கர் திருப்பெண்ணாகடத்திலே திருவவதாரஞ்செய்து சிதம்பரத்தைச்சார்ந்த திருக்களாஞ்சேரியில் எழுந்தருளியிருந்த மறைஞானசம்பந்தசிவாசாரியர்; அவர் மாணாக்கர் தில்லைவாழந்தணரில் ஒருவராய் அந்தத் திருப்பதியைச் சார்ந்த கொற்றவன்குடியில் எழுந்தருளியிருந்த உமாபதிசிவாசாரியர்; அவர் திருத்தொண்டர்புராணத்தைச் சுருக்கித் திருத்தொண்டர்புராணசாரம் எனப் பெயர்தந்து, எழுபத்தைந்து திருவிருத்தத்தால் அருளிச்செய்து, சேக்கிழார்புராணமும் பாடியருளினார்.

திருச்சிற்றம்பலம்.

## திருத்தொண்டர் வருணம்.

### தனியடியார்கள் அறுபத்திமூவர்.

ஆதிசைவர் நால்வர்:—சுந்தரமூர்த்திநாயனூர், புகழ்த்துணைநாயனூர், சடையநாயனூர், இசைஞானியார்.

பிராமணர் பன்னிருவர்:—குங்குலியக்கலயநாயனூர்,முருகநாயனூர், உருத்திரபசுபதிநாயனூர்,சண்டேசுரநாயனூர், அப்பூதியடிகளுயனூர்,திருநீலநக்கநாயனூர், நமிநந்தியடிகளுயனூர், திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர், சோமாசிமாறநாயனூர், சிறப்புலிநாயனூர், கணநாதநாயனூர், பூசலார்நாயனூர்.

மாமாத்திரப்பிராமணர்:—சிறுத்தொண்டநாயனூர்.

க்ஷத்திரியர் அறுவர்:—சேரமான்பெருமாளுயனூர், புகழ்ச்சோழநாயனூர், நெடுமாறநாயனூர்,இடங்கழிநாயனூர், மங்கையர்க்கரசியார்,கோச்செங்கட்சோழநாயனூர்.

குறுநிலமன்னர் ஐவர்:—மெய்ப்பொருளுயனூர், கூற்றுவநாயனூர், நரசிங்கமுனையரையநாயனூர், ஐயடிகள் காடவர்கோனுயனூர், கழற்சிங்கநாயனூர்.

வைசியர் ஐவர்:—இயற்பகைநாயனூர், அமர்நீதிநாயனூர், மூர்த்திநாயனூர், காரைக்காலம்மையார், கலிக்கம்பநாயனூர்.

வேளாளர் பதின்மூவர்:—இளையான்குடிமாறநாயனூர்,விறன்மிண்டநாயனூர், மானக்கஞ்சாறநாயனூர், அரிவாட்டாயநாயனூர், திருநாவுக்கரசுநாயனூர், ஏயர்கோன்கலிக்காமநாயனூர், மூர்க்கநாயனூர், சாக்கியநாயனூர், சத்திநாயனூர், வாயிலார்நாயனூர், முனையடுவார்நாயனூர், செருத்துணைநாயனூர், கோட்புலிநாயனூர்.

இடையர் இருவர்:—திருமூலநாயனூர், ஆனாயநாயனூர்.

குயவர் திருநீலகண்டநாயனூர்.

பாணர் திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனூர்.

பரதவர் அதிபத்தநாயனூர்.

வேடர் கண்ணப்பநாயனூர்.

சான்றூர் ஏனாதிநாதநாயனூர்.

சாலியர் நேசநாயனூர்.

செக்கார் கலியநாயனூர்.

ஏகாலியர் திருக்குறிப்புத்தொண்டநாயனூர்.

புலையர் திருநாளைப்போவார்நாயனூர்.

மரபறியாதவர் அறுவர்:—எறிபத்தநாயனூர், குலச்சிறைநாயனூர், பெருமிழலைக்குறும்பநாயனூர், தண்டியடிகளுயனூர், கணம்புல்லநாயனூர், காரிநாயனூர்.

### திருக்கூட்டத்தார் ஒன்பதின்மர்.

ஆதிசைவர் முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.
பிராமணர் தில்லைவாழந்தணர்.

மரபறியாதவர் எழுவர்:—பொய்யடிமையில்லாதபுலவர், பத்தராய்ப் பணிவார், பரமனையேபாடுவார், சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார், திருவாரூர்ப்பிறந்தார், முழுநீறுபூசியமுனிவர், அப்பாலுமடிச்சார்ந்தார்.

---

### குருலிங்கசங்கமங்களான் முத்தி பெற்றவர்.

குருவருளான் முத்தி பெற்றவர் பன்னிருவர்:—சுந்தரமூர்த்திநாயனர், திருநாவுக்கரசுநாயனர், குலச்சிறைநாயனர், பெருமிழலைக்குறும்பநாயனர், அப்பூதியடிகணாயனர், திருஞானசம்பந்தமூர்த்திநாயனர், திருமூலநாயனர், சோமாசிமாறநாயனர், கணநாதநாயனர், நெடுமாறநாயனர், மங்கையர்க்கரசியார், திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர்.

சிவலிங்கத்தான் முத்தி பெற்றவர் முப்பதின்மர்:—எறிபத்தநாயனர், கண்ணப்பநாயனர், குங்குலியக்கலயநாயனர், அரிவாட்டாயநாயனர், ஆனாயநாயனர், மூர்த்திநாயனர், முருகநாயனர், உருத்திரபசுபதிநாயனர், திருநாளைப்போவார்நாயனர், சண்டேசுரநாயனர், திருநீலநக்கநாயனர், நமிநந்தியடிகணாயனர், ஏயர்கோன்கலிக்காமநாயனர், தண்டியடிகணாயனர், சாக்கியநாயனர், சிறப்புலிநாயனர், சேரமான்பெருமாணாயனர், கூற்றுவநாயனர், அதிபத்தநாயனர், கலியநாயனர், ஐயடிகள்காடவர்கோனாயனர், கணம்புல்லநாயனர், காரிநாயனர், வாயிலார்நாயனர், கழற்சிங்கநாயனர், செருத்துணைநாயனர், புகழ்த்துணைநாயனர், கோட்புலிநாயனர், பூசலார்நாயனர், கோச்செங்கட்சோழநாயனர்.

சிவனடியாரை வழிபட்டு முத்தி பெற்றவர் பத்தொன்பதின்மர்:—திருநீலகண்டநாயனர், இயற்பகைநாயனர், இளையான்குடிமாறநாயனர், மெய்ப்பொருணாயனர், விறன்மிண்டநாயனர், அமர்நீதிநாயனர், ஏனாதிநாதநாயனர், மானக்கஞ்சாறநாயனர், திருக்குறிப்புத்தொண்டநாயனர், காரைக்காலம்மையார், மூர்க்கநாயனர், சிறுத்தொண்டநாயனர், புகழ்ச்சோழநாயனர், நரசிங்கமுனையரையநாயனர், கலிக்கம்பநாயனர், சத்திநாயனர், முனையடுவார்நாயனர், இடங்கழிநாயனர், நேசநாயனர்.

திருச்சிற்றம்பலம்.

சேக்கிழார்நாயனர்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

உமாபதிசிவாசாரியா ரருளிச்செய்த

# திருமுறைகண்ட புராணம்

என்னும்

## நம்பியாண்டார்நம்பி புராணம்.

### காப்பு.

விருத்தம்.

கருமுறை விண்டிட யவருயு மாறருள் கவுணியர் குலதீபந்
தருமிறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச் சிந்துர முகனற்றுள்
ஒருமுறை யிருமுறை மும்முறை வாழ்த்தி யுவந்தன் பொடுபணிவாம்.

வேறு.

உலகமகிழ் தருசைய மீதுதோன்றி யோவாது வருபொன்னி சூழ் சோணாட்டின்,றிலகமென விளங்குமணி மாடவாரூர்த் தியாகேசர் பதம் பணிந்து செங்கோலோச்சி, யலகில்புகழ் பெறுராச ராசமன்ன னபய குல சேகரன்பா லெய்துமன்ப, ரிலகுமொரு மூவரருள் பதிகமொன் றுென் றேயினிதி னுசைசெய்ய வன்பாற் கேட்டு. (க)

கையிரண்டு முச்சிமே லேறக்கண்ணீர் கரைந்தோட மெய்ம்முழு தும் புளகம்போர்ப்ப, வையன்மலர்ப் பதமுளத்தே கொண்டுபோற்றி யரியமுறை தேடவெங்கு மிலாமையாலே, கையுமனத் தினனுகி யிருக் குங்காலே நாரையூ ரினிலாதி சைவமறை யோன்பால், வையமெலா மீடே றச் சைவம்வாழ மாமணிபோ லொருசிறுவன் வந்துதோன்றி. (உ)

வளமொடுப நயனவிதிச் சடங்கும்பூண்டு மறை முதலாங் கலைப யின்று வருநாளீன்ற, கிளர்மறையோ னேரூர்க்குச் செல்லமைந்தன் கே டில்பிதா வுரைத்தமொழிப் படியேயந்தி, யிளமதிச்செஞ் சடைப்பொல் லாப் பிள்ளையாரை யேத்தியா ராதிப்பா னினிதினேகி, யுளமலியன் பொ டுதிருமஞ் சனமுன்னுகு முரியவெலாஞ் செய்துநிவே தனமுன் வைத்து.

எம்பெருமா னமுதுசெய வேண்டுமென்ன விறைஞ்சிட்வு மமுது செயா திருப்பக்கண்டு, வெம்பியுள மேதேனுந் தவறிங்குண்டோ வேழ முக னேயடியே னிவேதித்திட்ட, பம்பமுத முண்ணுத தென்னே யென்

னப் பரிந்துதலை தனைமோதப் புகுங்காலெம்மா, னம்பிபொறு வெனத் தடுத்தவ் வமுதமெல்லா னன்கருந்த வுவந்துநம்பி நவில்வதானுன். (௪)

எந்தையே யினியடியேன் பள்ளிக்கேகி லெங்கட்ட சிகனடிப்பா ஞதலாலே, சந்தமறை முதற்கலைக ணீயேயோதித் தரல்வேண்டு மெனவேழ முகத்தோன்ருனு, மந்தமற வோதுவிக்க வோதிநம்பி மகிழ்ந்தன னன் றதுபோல மற்றைநாளும், விந்தையொடு நிகழ்நம்பி யாண்டார் நம்பி மேவியிருந் திடுஞ்செய்தி வேந்தன்கேளா. (௫)

செல்வமிகு திருநாரை யூரின்மேவுஞ் சிவனளித்த மதகரிக்குச் சிந்தைகூர்ந்து, நல்லபுக ழுடையநம்பி யாண்டார்நம்பி நண்பினெடு நிவேதிப்பான் மதுரமிக்க, வெல்லையில்வா ழைக்கனிதே னவலோடப்ப மெள்ளுண்டை யிவ்வுலகோ ரெடுக்கவென்றே, மல்லன்மிகு சேனையுட னிராசராச மன்னவனு மந்நகரில் வந்துசேர்ந்தான். (௬)

ஆங்கதனுக் கந்நகரி லிடம்போதாம லயல்சூழப் பதின்காத வகலவெல்லை,மாங்கனிவா ழைக்கனிகள் வருக்கையாவும் வந்தனவவ் வெல்லையெல்லா மருவவைத்துப், பாங்கினுட னம்பிதாள் பணிந்து மன்னன் பலகனிகள் கொணர்ந்தவெலாம் பகர்ந்துபோற்றி, யீங்கிதனைப் பொல்லாத பிள்ளையாருக் கிப்பொழுதே நிவேதிக்க வென்றுசொன்னுன். (எ)

நம்பியர சன்சொன்ன வார்த்தைகேளா நன்றுனது பணியென்ன வருளாலுன்னித்,தும்பிமுக னடிபணிந்து மன்னனிங்குத் தொகுத்தனநீ யமுதுசெய வேண்டுமென்னக், கம்பமதக் களிற்றுமுகத் தானுமங்குக் கருத்தினுட னம்பியுரைக் கிசைந்துகாட்ட, விம்பரினில் வந்தனநாற் சுத்திசெய்தே யிருந்தவெலாம் படைக்கவவ னேற்றல்செய்தான். (அ)

புகர்முகக்கை புறப்படவே படைத்தவெல்லாம் புகுந்தவிட மறியாமற் போனபின்னை,யகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர்வார நம்பிகழ லன்பினு லரசன்போற்றி, மிகவுமொரு விண்ணப்ப மடியேற்குண்டு வேதியனே கேளென்று விளம்புவான்மெய்ப், புகழதுசேர் மூவர்தமிழ் தொண்டர்செய்தி பூதலத்தில் விளங்கவெனப் போற்றிநின்ருன். (கூ)

அந்தவுரை கேட்டலுமங் கரசன்றன்னை நம்பிமகிழ்ந் தருள்புரிவானருள்சேர்மூவர், செந்தமிழ்க ளிருந்தவிட மன்பருள்ளோர் செய்திக்கவ் விநாயகன்ருள் சிந்தித்தெந்தா, யந்தவகை யேதென்று கேட்டாலெந்தை மகிழ்ந்தருளு மந்நெறியை வழாதுனக்குத், தந்திடுவன் மன்னபொறு வென்றுசொல்லித் தந்திமுகன் சந்நிதியிற் ருழ்ந்துசென்ருன். (௧0)

சென்றுபணிந் திபமுகத்தோன் பாதப்போதைச் சென்னியில்வைத் தவன்ருளிற் றிளைத்துச்சிந்தை, யொன்றுமற வுருகிவிழி தாரைகொள்ள வுண்மையினுல் வந்தித்தங் குவாவோன்றன்னை, யின்றமிழ்சேர் மூவர்தமி

ழிருந்தவெல்லை யெல்லையில்சீர்த் திருத்தொண்ட ரியல்புமூர்த்தி, நன்றும ருள் செய்தருள வேண்டுமென்ன நாகமுக னம்பிக்கு நவிலலுற்றான்.()

வார்ந்தருட்க ணீர்சொரிய நம்பிகேட்ப வண்டமிழ்க ளிருந்தவிட மன் றுளாடுங், கூர்ந்தவிருட் கண்டர்புறக் கடையின்பாங்கர்க் கோலமலர்க் கைகளடை யாளமாகச், சார்ந்தனவென் றருள்செய்து தொண்டர்பே றுஞ் சாற்றுதலாற் சகதலத்தோ ரருளைச்சார, வார்ந்ததமி ழிருந்தவிட மன்பர்செய்தி யத்தனையு நம்பிமனத் தருளிற்கொண்டார். (கஉ)

கொண்டுகுல சேகரனுங் கோன்பால்வந்து குஞ்சரத்தோ னருள் செய்த கொள்கையெல்லா, மண்டுபெருங் காதலுடன் சொல்லியந்த வண்டமிழின் பெருமைதனை வகுத்துச்சொல்வார், கண்டபெரு மந்திர மே மூவர்பாடல் கைகாணு மந்திரங்கண் ணுதலோன்கூற, லெண்டிசை யுஞ் சிவனருளைப் பெறுதற்காக விம்மொழியின் பெருமையையா னியம் பக்கேணீ. (கங)

சேடர்மலி காழிநகர் வேந்தர்தாமுந் தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார்பங்கிற், பீடுடைய வுமைமுலைப்பா லருளாலுண்டு பிஞ்ஞகனைச் சினவிடைமேற் பெருகக்கண்டு, தோடுடைய செவியன்முதற் கல்லூரெ ன்னுந் தொடைமுடிவாப் பரசமயத் தொகைகண்மாளப், பாடினார் பதி கங்கள் பாவிலொன்றும் பதினாறு யிரமுளதாப் பகருமன்றே. (கச)

திருநாவுக் கரையரெனுஞ் செம்மையாளர் தீயமணர் சிறைநீங்க வதிகைமேவுங், குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச்சூலை கொடுங்கூற்றா யினவென்ன வெடுத்துக்கோதி, லொருமானைத் தரிக்குமொரு வரையுங் காறு மொருநாற்பத் தொன்பதினா யிரமதாகப், பெருநாமப் புகலூரிற் பதிகங்கூறிப் பிஞ்ஞகனா ரடியிணைகள் பெற்றுளாரோ. (கரு)

பின்புசில நாளின்க ணாரூர்நம்பி பிறங்குதிரு வெண்ணெய்நல்லூர்ப் பித்தாவென்று, மின்பமுதற் றிருப்பதிக மூழிதோறு மீராமுப் பத்தெ ண்ணா யிரமதாக, முன்புபுகன் றவர்நொடித்தான் மலையிற்சேர்ந்தார் முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர்தன்னி, லன்றவர்கை யிலச்சினை யால் வைத்தார்மன்ன வாராய்ந்து தருகவென வருளிச்செய்தார். (கசு)

அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத்தேடு மதுபோலன் றிதுவெ ன்று முளதாமுண்மைப், பரபதமுந் தற்பரமும் பரனேயன்றிப் பலரி ல்லை யென்றெழுதும் பனுவல்பாரி, னெரியினிடை வேவாதாற் றெதிரே யோடு மென்புக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ்சாற்றுங், கரியைவளை விக்கு ங்கன் மிதக்கப்பண்ணுங் கராமதலை கரையிலுறக் காற்றுங்காணே. (கஎ)

என்றென்று நம்பிக்குப் பரிவாலுண்மை யின்றமிழின் பெருமை தனை யியம்பக்கேட்டுக், குன்றொன்று பேருருவங் கொண்டாற்போலுங்

குஞ்சரத்தோ னருளினையுட் கொண்டுமன்னன், மன்றினிடஞ் சென்று மறையோர்கடொண்டர் வார்சடையோர் காவலுடை மரபோர்க்கெல்லா, நன்றெங்கள் கணபதிதன் சொல்லிதென்று நன்மையுடன் மன்னவனா நவிலுங்காலை. (கஅ)

அத்தகையோர் தமிழ்வைத்த மூவர்வந்தா லறைதிறக்கு மெனவு ரைக்க வரசன்றானு, மெய்த்தகுசீ ரம்பலவர்க் குற்றசெல்வ விழாவெடு த்து விளம்புதமிழ் மூவர்தம்மை, யுய்த்தணிவீ தியினிலுலா வருவித்தும் பர் நாயகன்றன் கோயில்வல மாக்கியுள்ளே, சித்தமெலா முருக்குதமி ழிருக்கைசேரச் சேர்த்தியவர் சேர்ந்ததெனச் செப்பிநின்றான். (கசூ)

ஐயர்நட மாடுமம் பலத்தின்மேல்பா லருள்பெற்ற மூவர்தம தருள் சேர்செய்ய, கையதுவே யிலச்சினையா யிருந்தகாப்பைக் கண்டவர்க ளதி சயிப்பக் கடைவாய்நீக்கிப், பொய்யுடையோ ரறிவுதனைப் புலன்கண்மூ டும் பொறப்பதுபோற் போதமிகும் பாடறன்னை, நொய்யசிறு வன்மீக மூடக்கண்டு நொடிப்பளவி னிற்சிந்தை நொந்தவேந்தன். (உ0)

பார்த்ததனைப் புறத்துய்ப்ப வுரைத்துமேலே படிந்திருந்த மண்ம லையைச் சேரத்தள்ளிச், சீர்த்ததில தயிலமலி கும்பங்கொண்டு செல்லு நனை யச்சொரிந்து திருவேடெல்லா, மார்த்தவரு ளதனாலே யெடுத்து நோக்க வலகிலா வேடுபழு தாகக்கண்டு, தீர்த்தமுடிக் கணிபரனே பா னேயென்னச் சிந்தைதளர்ந் திருகணீர் சோரநின்றான். (உக)

ஏந்துபுகழ் வளவனிவ்வா றன்பினாலே யிடர்க்கடலின் கரைகாணு தினையுங்காலைச்,சார்ந்தமலை மகள்கொழுந னருளால்வேதச் சைவநெறித் தலைவரெனு மூவர்பாடல், வேய்ந்தனபோன் மண்மூடச் செய்தேயீண்டு வேண்டுவன வைத்தோமென் றுலகிலுள்ள, மாந்தரொடு மன்னவனுங் கேட்குமாற்றால் வானகத்தி லோரோசை யெழுந்ததன்றே. (உஉ)

அந்தமொழி கேட்டலுமே மன்னன்றானு மாடினான் பாடினா னலக் கண்யாவுஞ், சிந்தினா னமுதமுண்டான் போலநெஞ்சந் தேறினா னம்பி திரு வடியிற்றாழ்ந்தான், பந்தமறு சிவனடியார் கொள்கவென்னப் பண் டாரந் திறந்துவிட்டான் பரிவுகூர்ந்தான்,இந்தவகைப் பெருங்களிகொண் டின்னன்றானு மெழின்முறையை முன்போல வகுக்கவெண்ணி. (உங)

மன்னுதமிழ் விரகரெங்கள் காழிவேந்தர் வகுத்தருளா லமைத் ததிரு முறையோர்மூன்றும், அன்னவகை வாகீசர் முறையோர்மூன் று மாரூ ருரைத்ததிரு முறையதொன்றும், துன்னவகை யேழாகத் தொகுத்துச்செய்தான் றூயமனு வெழுகோடி யென்பதுன்னித், தன் னிகரி றிருவருளான் மன்னன்றானுந் தாரணியோர் வீடுபெறுந் தன்மை சூழ்ந்தே. (உசு)

வேறு.

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்
றெண்பத்தி னன்கினு லிலங்குதிரு முறைமூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினல்
வண்பெற்ற முறையொன்று நூற்றினல் வன்றொண்டர். (உ௫)

ஆகவளர் திருமுறையே ழருட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமா முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள். (உ௬)

வைத்ததற்பி னம்பிகழன் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதரு மிறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலா
வுய்த்தபதி கங்களையு மொருமுறையாச் செய்கவெனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றுப் பண்ணினர். (உ௭)

மந்திரங்க ளெழுகோடி யாதலினுன் மன்னுமவ
ரிந்தவகை திருமுறைக ளேழாக வெடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்று மாதலினு
லந்தமுறை நான்கினொடு முறைபதினொன் ருக்கினர். (உ௮)

ஆக்கியபின் றிருத்தொண்டத் தொகையடைவை யருளாலே
நோக்கியபின் னுயன்மார் நுடங்கடைவுந் தொழிற்பேறும்
பாக்கியத்தா லிபமுகத்தோ னருள்செய்த பகுதியினல்
வாக்கியல்சே ரந்தாதி நம்பியடை வேவகுத்தார். (உ௯)

சீரருள்சே ரறுபத்து மூவர்தனி திருக்கூட்டஞ்
சாருமவ ரொன்பானுந் தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகையடைவு புவியினிடைப் பெருமையினுற்
சீருலவு திருவெருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார். (௩௰)

சென்னியரு ணம்பியிவ ரங்கரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்தரனே
யின்னிசைதந் தருளென்ன விரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோ னருள்செய்த கட்டுரைப்பாம். (௩௧)

நல்லிசையாழ்ப் பாணனூர் நன்மரபின் வழிவந்த
வல்லியொருத் திக்கிசைகள் வாய்ப்பவளித் தோமென்று
சொல்லவவ டனையழைத்துச் சுருதிவழிப் பண்டமுவு
நல்லிசையின் வழிகேட்டு நம்பியிறை யுண்மகிழ்ந்தார். (௩௨)

ஆங்கவளை யம்பலத்து ளாடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாட

லோங்கருளான் முறைபணித்தற் கொக்குமென வோரோசை
நீங்கரிய வானின்க ணிகழவர சன்கேட்டான். (௩௩)

மன்னனுக்கு நம்பிக்கு மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் குங்கேட்க
வின்னருண்முன் வியந்துரைத்த விவண்முதலா விசைத்தவிசை
தென்னிலமேன் மிகத்தோன்றத் திருவருளாற் றோன்றியதாம். (௩௪)

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையா
மின்னிசையாற் றருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதா
முன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார். (௩௫)

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழகுறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சி பாலிரண்டு
தேவுவந்த விந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் றன்மைதனக் கிரண்டமைத்தார். (௩௬)

காந்தார மாகியபி யந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக வன்னட்ட ராகத்தி
லேய்ந்தவகை யிரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கியிசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார். (௩௭)

கொல்லிக்கு நாலாகுங் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கிமிகு தூங்கிசைநேர் பஞ்சமத்திற்
கொல்லையினி லொன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாம்
புல்லுமிசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார். (௩௮)

அந்தாளிக் கொன்றாக்கி வாகீச ரருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றென்று மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்
டுந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார். (௩௯)

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட வையரு டெய்யமுறைக்
கிண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக வெடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார். (௪௦)

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்
கேறும்வகை யிரண்டாக்கி யின்னிசைதேர் தக்கேசிப்
பேறிசையா றாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். (௪௧)

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டா
னன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கிற்

குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
யொன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினர். (சஉ)

உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்திருதிக் கொன்றாக்கிக் கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கித் தூயவிசைப் பஞ்சமத்துக்
கற்றவிசை யொன்றாக்கி யரனருளால் விரித்தமைத்தார். (சந)

இந்தவகைச் சிவன்செவிப்பா லெக்கணனுந் தழைத்தோங்க
வந்தமிலா வறுபத்து மூவரரு ளம்புவிமே
னந்தியிட மும்மலமு நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தா னருட்சென்னி. (சச)

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனு
மேராரு மிறைவனையு மெழிலாரு நம்பியையு
மாராத வன்பினுட னடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதன்மிகுந் திருத்தொண்டர் பதந்துதிப்பாம். (சரு)

ஆகூ திருவிருத்தம் – கசக.

---

திருச்சிற்றம்பலம்.

புண்ணியபூமியாகிய பரதகண்டத்திலுள்ள பலநாடுகளுள், வடக்கின்கண் அகத்தியமகாமுனிவருக்குத் தமிழறிவுறுத்திய பரமாசாரியராகிய முருகக்கடவுளது வரைப்பாகிய திருவேங்கடமும், மற்றை மூன்று திசைக்கண்ணுங் கடலும் எல்லையாகவுடைய தமிழ்நாட்டின்கண்ணே சிறந்து விளங்காநின்ற சோழமண்டலத்திலே, பிறக்க முத்திதருந்தலமாகிய திருவாரூரிலே, கல்வியறிவொழுக்கங்களாலும் குரு லிங்க சங்கம பத்தியாலுஞ் சிறப்புற்றோங்கிய அபயகுலசேகர சோழமகாராஜாவானவர் பரமகருணாநிதியாகிய தியாகேசருடைய திருவருளினாலே வைதிகமார்க்கமுஞ் சைவமார்க்கமுந் தழைத்தோங்கச் செங்கோல் நடாத்தி அரசியற்றுவாராயினர்.

அவ்வரசர் தமதவைக்களத்துக்கு எழுந்தருளிவருஞ் சிவனடியார்கள் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருநாவுக்கரசுநாயனார் சுந்தரமூர்த்திநாயனார் என்னுஞ் சமய குரவர்கள் அருளிச்செய்த தேவாரத்திருப்பதிகங்களுள் ஒவ்வொன்று ஓதக்கேட்டு, கைகளிரண்டுஞ் சிரசின்மேலேறிக் குவிய, ஆனந்தவருவி சொரிய, மெய்ம்மயிர் சிலிர்ப்ப, நெஞ்சநெக்குருக ஆனந்தபரவசராயினர். அவ்வியல் படைந்த அரசர் தேவாரத்திருமுறையை எங்குந்தேடி, அகப்படாமையால் மனத்துயரங்கொண்டிருந்தனர். அது நிற்க.

திருநாரையூரென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் பொல்லாப்பிள்ளையாருக்குப் பூசைசெய்யும் ஆதிசைவரொருவருக்குச் சைவசமயம் வாழும்பொருட்டு ஒருசற்புத்திரர் திருவவதாரஞ்செய்தருளினர். அவர் உரிய பருவத்திலே உபநயனஞ்செய்யப்பெற்று வேதமுதலிய கலைகளை ஓதுநாளிலே, தந்தையார் ஓரூருக்குப் போய்விட, அவருடைய ஆஞ்ஞைப்படியே பொல்லாப் பிள்ளையாருக்குத் திருமஞ்சனமுதலியனவெல்லாஞ்செய்து, நைவேத்தியத்தை அவர் திருமுன் வைத்து, "எம்பெருமானே, திருவமுதுசெய்தருளும்" என்று பிரார்த்தித்தார். பொல்லாப்பிள்ளையார் திருவமுதுசெய்யாதிருப்பக்கண்டு, அப்புத்திரர் மனம்வெம்பி, "எம்பெருமானே, அடியேன் யாதாயினுந் தவறு செய்ததுண்டோ! அடியேன் நிவேதித்ததைத் திருவமுதுசெய்யாததென்னை" என்று சொல்லிக்கொண்டு, தமது தலையைக் கல்லிலே மோதப் புகுந்தார். உடனே பொல்லாப்பிள்ளையார் "நம்பி பொறு" என்று தடுத்து, அந்நைவேத்தியமுழுவதையுந் திருவமுது செய்தருளினர்.

அது கண்ட நம்பியாண்டார்நம்பி மனமகிழ்ந்து, "எம்பெருமானே, இனி அடியேன் பள்ளிக்கூடத்துக்குப் போனால் ஆசிரியர் அடிப்பார். ஆதலால் வேதமுதலிய கலைகளெல்லாவற்றையும் தேவரீரே ஓதுவித்தல் வேண்டும்" என்று பிரார்த்தித்தார். பொல்லாப்பிள்ளையார் திருவுளமிசைந்து ஓதுவிக்க, நம்பியாண்டார்நம்பி மனமகிழ்ந்து நாடோறும் ஓதுவாராகி, அப்பிள்ளையார்மேலே திருவிரட்டைமணிமாலை பாடியருளினர்.

இந்தச்சமாசாரமுழுதையும் அபயகுலசேகர சோழமகாராஜாவானவர் கேள்வியுற்று மனமகிழ்ந்து, பொல்லாப்பிள்ளையாருக்கு நிவேதிப்பிக்கும்பொருட்டுப் பழவர்க்கங்கள் தேன் அவல் எள்ளுண்டை முதலியவைகளெல்லாம் எடுப்பித்துக்கொண்டு, நால்வகைச் சேனைகளுஞ்சூழச் சென்று, திருநாரையூரையடைந்து, நம்பியாண்டார்நம்பியுடைய திருவடிகளைவணங்கி, "சுவாமீ, இவைகளெல்லாவற்றையும் பொல்லாப் பிள்ளையாருக்கு இப்பொழுதே நிவேதித்தல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார். நம்பியாண்டார்நம்பி பொல்லாப்பிள்ளையாரை வணங்கி, அவைகளெல்லாவற்றையும் நாற்சுத்தி செய்து படைக்க, பொல்லாப்பிள்ளையார் தமது துதிக்கையை நீட்டி, அவைகளெல்லாவற்றையுந் திருவமுது செய்தருளினர்.

அதுகண்ட சோழமகாராஜா மனமகிழ்ந்து நம்பியாண்டார்நம்பியை வணங்கி, "சுவாமீ, சமயகுரவர் மூவர்கள் அருளிச்செய்த தமிழ்வேதமாகிய தேவாரத்திருமுறையும் திருத்தொண்டர்களுடைய சரித்திரமும் பூவுலகத்தில் விளங்கல்வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்தார். அது கேட்டலும், நம்பியாண்டார்நம்பி திருவுளமகிழ்ந்து, திருக்கோயிலினுள்

ளே புகுந்து, பொல்லாப்பிள்ளையாரை வணங்கி, "எம்பெருமானே, தேவாரத்திருமுறைகள் இருக்குமிடத்தையும் திருத்தொண்டர்களுடைய சரித்திரத்தையும் அடியேனுக்கு அருளிச்செய்தல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார். பொல்லாப்பிள்ளையார் "நம்பீ, சிதம்பரத்திலே கனக சபைக்குப் புறக்கடையின் பக்கத்திலே சமயகுரவர்கள் மூவருடைய கைகளின் அடையாளத்தையுடைய அறையினுள்ளே தேவாரத்திருமுறைகள் இருக்கின்றன" என்று அருளிச்செய்து, பின்பு திருத்தொண்டர்களுடைய சரித்திரத்தையும் திருவாய்மலர்ந்தருளினர். நம்பியாண்டார் நம்பி சோழராஜாவிடத்துக்கு வந்து அவைகளைத் தெரிவித்தார்.

சோழராஜா அந்நம்பியாண்டார்நம்பியோடு சிதம்பரத்தை அடைந்து, சிவகங்கையிலே ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தனமும் சிவபூசையும் முடித்துக்கொண்டு, கனகசபையை அடைந்து, சபாநாயகரைத் தரிசித்து வணங்கினர். நம்பியாண்டார்நம்பி சபாநாயகர்மீது கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் பாடியருளினர்.

பின்பு சோழமகாராஜா தில்லைவாழந்தணர்களை நோக்கி, "பொல்லாப்பிள்ளையார் கனகசபைக்கு மேற்றிசையினுள்ள அறையிலே தேவாரத்திருமுறைகள் இருக்கின்றன என்று அருளிச்செய்தனர். அவைகளை எடுத்தல்வேண்டும்" என்றார். தில்லைவாழந்தணர்கள் "மகாராஜாவே, திருமுறைகளை வைத்தருளிய சைவத்திருநெறித் தலைவர்கள் மூவர்கள் எழுந்தருளிவந்தால் அறை திறக்கும்" என்றார்கள். சோழராஜா நடேசருக்கு விசேஷபூசை செய்வித்து, சமயகுரவர்மூவரைத் திருவீதியிலே திருவுலா வருவித்துக் கனகசபையை வலஞ்செய்வித்துத் திருமுறைகள் இருக்கும் அறையினெதிரே கொணர்வித்து நிறுத்திக்கொண்டு, தில்லைவாழந்தணர்களை நோக்கி, "சமயகுரவர்கள் மூவரும் எழுந்தருளிவந்துவிட்டார்கள். இனி அறை திறக்கலாமே" என்றார். தில்லைவாழந்தணர்கள் சோழராஜாவுடைய புத்தியை வியந்து, அறை திறக்க அநுமதிசெய்தார்கள்.

சோழமகாராஜா சமயகுரவர் மூவருடைய கையடையாளமுடைய திருக்கதவைத் திறந்து, திருமுறைகளை வன்மீக மூடியிருக்கக் கண்டு, மனநொந்து, அவைகளைப் புறத்திலே கொணர்வித்து, மேலே படிந்திருந்த மண்ணைத் தள்ளிவிட்டு, செல்லு நனையும்படி எண்ணெயைச் சொரிந்து, திருவேடுகளெல்லாவற்றையும் எடுத்துப் பார்க்க அளவில்லாத திருவேடுகள் பழுதாகக் கண்டு, கண்ணீர்வாரச் சோகித்து நின்றார். அப்பொழுது எல்லாருங்கேட்கச் சிவபெருமானது திருவருளினலே "தேவாரப்பதிகங்களிலே இக்காலத்துக்கு வேண்டுவனவற்றைமாத்திரம் வைத்துவிட்டு மற்றவைகளைச் செல்லுமண் மூடச் செய்தோம்" என்று ஓரசரீரிவாக்கு ஆகாயத்திலே தோன்றிற்று. அது கேட்டலும்,

சோழமகாராஜா மனக்கவலை தீர்ந்து, திருவருளை வியந்து ஆடிப் பாடி, நம்பியாண்டார்நம்பியை வணங்கி, "சுவாமீ, தேவாரமுதலிய அருட்பாக்களெல்லாவற்றையும் திருமுறைகளாக வகுத்தருளும்" என்று பிரார்த்தித்தார்.

நம்பியாண்டார்நம்பி அதற்குடன்பட்டு, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அருளிச்செய்த தேவாரத்திருப்பதிகங்களை மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசுநாயனார் அருளிச்செய்த தேவாரத்திருப்பதிகங்களை மூன்று திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்திநாயனார் அருளிச்செய்த தேவாரத்திருப்பதிகங்களை ஒரு திருமுறையாகவும் வகுத்தருளினார். இப்படித் தேவாரத்தை ஏழு திருமுறைகளாக வகுத்தபின்பு, மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம் திருக்கோவையார் என்னுமிரண்டையும் எட்டாந்திருமுறையாகவும், திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், நம்பிகாடவநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதர், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்னும் நாயன்மார் ஒன்பதின்மர் அருளிச்செய்த திருவிசைப்பாப்பதிகங்கள் இருபத்தெட்டும், அவர்களுள்ளே சேந்தனார் அருளிச்செய்த திருப்பல்லாண்டுப் பதிகம் ஒன்றுமாகிய இருபத்தொன்பது திருப்பதிகங்களையும் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரத்தைப் பத்தாந்திருமுறையாகவும், திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரமுதலிய திவ்வியப் பிரபந்தங்களைப் பதினோராந்திருமுறையாகவும் வகுத்தருளினார்.

இங்ஙனந் திருமுறைவகுப்பு முற்றியபின்பு, நம்பியாண்டார்நம்பி தமக்குப் பொல்லாப்பிள்ளையார் உபதேசித்தருளியபடியே திருத்தொண்டத்தொகையை முதனூலாகக் கொண்டு, அறுபத்துமூன்று தனியடியாரும், ஒன்பது திருக்கூட்டத்தாருமாகிய திருத்தொண்டர்களுடைய திருத்தொண்டையும் அதனால் அவர்கள் பெற்ற பேற்றையும் கலித்துறைத் திருவந்தாதியாக அருளிச்செய்தார். பின்பு திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்மீது திருவந்தாதி, திருச்சண்பைவிருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்னும் ஆறு பிரபந்தங்களும், திருநாவுக்கரசுநாயனார்மீது திருவேகாதசமாலையும் பாடியருளினார். தாம் அருளிச்செய்த பத்துத் திவ்வியப்பிரபந்தங்களையும் சோழமகாராஜாவுடைய வேண்டுகோளின்படி பதினோராந்திருமுறையிலே சேர்த்தருளினார்.

அதன்பின் நம்பியாண்டார்நம்பியும், சோழமகாராஜாவுந் தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு பெறுமையினாலே தில்லைவாழந்தணர்கள் மாகேசுரர்கண் முதலாயினாரோடும் திருவெருக்கத்தம்புலியூரை அடைந்து, திருக்கோயிலை வலஞ்செய்து சிவபெருமானை வணங்கி,

"எம்பெருமானே, தேவாரத்திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவை அருளிச்செய்தல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அப்பொழுது எல்லாருங்கேட்க ஆகாயத்தில் "அன்பர்களே, திருநீலகண்டப்பெரும்பாணன் மரபிலே பிறந்த பெண்ணொருத்திக்குப் பண்களை அருளிச்செய்தேம்" என்று ஓரசரீரிவாக்குத் தோன்றிற்று. உடனே நம்பியாண்டார் நம்பியும், சோழமகாராஜாவும், அவளை அழைத்து, அவளிடத்தே பண்களைக் கேட்டு மனமகிழ்ந்தார்கள். அதன்பின் "அன்பர்களே, இவளைக் கனகசபைக்கு முன் கொண்டுபோய்த் தேவாரப்பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுக்கக்கடவீர்கள்" என்று ஓரசரீரிவாக்கு எழுந்தது. அது கேட்டலும், நம்பியாண்டார்நம்பியும், சோழமகாராஜாவும் அவ்வாறே அவளை அழைத்துக்கொண்டு சிதம்பரத்தை அடைந்து, கனகசபைக்கு முன் சென்று, தேவாரத்திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுத்தார்கள்.

பண்ணடைவு வகுத்தபின், சபாநாயகரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, நம்பியாண்டார்நம்பி திருநாரையூரையும், சோழமகாராஜா திருவாரூரையும் அடைந்தார்கள். நம்பியாண்டார்நம்பி சிவாநுபூதிப் பெருஞ்செல்வராய்ச் சிலகாலம் எழுந்தருளியிருந்து சிவபதம் அடைந்தார்.

அபயகுலசேகர சோழமகாராஜாவானவர் பதினொரு திருமுறைகளையும் செப்பேடு செய்து தியாகேசர் சந்நிதியில் ஏற்றுவித்து, சைவத் திருநெறி தழைக்கும்படி நெடுங்காலம் அரசியற்றிக்கொண்டிருந்து, சிவபதமடைந்தார்.

நம்பியாண்டார்நம்பியினாலும், திருமுறைகண்ட இராஜராஜஅபயகுலசேகரசோழமகாராஜாவினாலும் சைவத்திருநெறித்தமிழ்த்திருமுறை பதினொன்றும் தமிழ்நாடெங்கும்பரந்தன. அதனால் உயர்வொப்பில்லாத சற்சமயமாகிய சைவசமயம் எங்குந் தழைத்தோங்கிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆதியில் உள்ள தேவாரத் திருப்பதிகத் தொகை.

| | |
|---|---|
| திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் ... ... ... | கசூ௬ |
| திருநாவுக்கரசுநாயனார் ... ... ... ... ... | சகூ௬ |
| சுந்தரமூர்த்திநாயனார் ... ... ... ... ... | ௩எ௬ |
| ஆ | க லக்ஷத்து ௨௬ |

இப்போது உள்ள தேவாரத்திருப்பதிகத் தொகை.

| | தலப்பதிகம். | பொதுப்பதிகம். | இரண்டின்றொகை. |
| --- | --- | --- | --- |
| திருஞான சம்பந்தர் | ௩௭௭ | ௭ | ௩௮௪ |
| திருநாவுக்கரசுநாயனார் | ௨௭௫ | ௩௭ | ௩௧௨ |
| சுந்தரமூர்த்திநாயனார் | ௯௭ | ௪ | ௧0௧ |
| | ௭௪௯ | ௪௮ | ௭௯௭ |

இத்தேவாரத் திருப்பதிகங்கள் எழுநூற்றுத்தொண்ணூற்றேழும் அடங்கிய திருமுறை அடங்கன்முறையெனப்படும்.

கல்வியறிவொழுக்கங்களாற் சிறப்புற்று விளங்கிய சிவாலயமுனிவர் அவ்வடங்கன்முறையினது மகிமையையும் அதனை நாடோறும் விதிப்படி சிரத்தையோடு பாராயணஞ்செய்யின் முத்தி சித்திக்குமென்பதனையும் அறிந்து தாம் அப்படிப் பாராயணஞ்செய்ய ஆசைகொண்டார். அது நிறைவேறுதல் கூடாமையால் வருத்தமுற்று, சிதம்பரத்தை அடைந்து, கனகசபையின்கண்ணே ஆனந்ததாண்டவஞ்செய்தருளும் சபாநாதரை வணங்கி, தமது கருத்துமுற்றும்பொருட்டு நெடுங்காலம் அருந்தவஞ்செய்தார். அப்பொழுது சபாநாதருடைய திருவருளினாலே, "சிவாலயமுனிவனே, நீ பொதியமலையிலிருக்கின்ற அகத்தியமுனிவனிடத்தே போவாயாயின் உன்கருத்து நிறைவேறும்" என்று ஓரசரீரிவாக்குத் தோன்றிற்று. அது கேட்ட சிவாலயமுனிவர் மனமகிழ்ந்து, சபாநாதரை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு சென்று, பொதியமலையை அடைந்து, அகத்தியமகாமுனிவரைச் சிந்தித்து, மூன்றுவருஷகாலம் அருந்தவஞ்செய்தார். அகத்தியமகாமுனிவர் அவருக்கு வெளிப்பட்டு, அடங்கன்முறை முழுதையும் அவருக்குபதேசித்து, அதினின்றும் இருபத்தைந்து திருப்பதிகங்களை எடுத்துத் திரட்டி, "இவைகளை நாடோறும் பாராயணஞ்செய்பவர்கள் அடங்கன்முறை முழுதையும் பாராயணஞ்செய்பவர்களாவர்கள்" என்று திருவாய்மலர்ந்து, மறைந்தருளினார். சிவாலயமுனிவர் அப்படியே அவ்விருபத்தைந்து திருப்பதிகங்களையும் நெடுங்காலம் பாராயணஞ்செய்து சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றார்.

திருச்சிற்றம்பலம்.

---

## பதினோராந்திருமுறைப் பிரபந்தங்கள்.

### ௧. திருவாலவாயுடையார்.

௧. சேரமான்பெருமாணாயனாருக்கு அருளிச்செய்த திருமுகப்பாசுரம்.

### ௨. காரைக்காலம்மையார்.

௧. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் இரண்டு.
௨. திருவிரட்டைமணிமாலை.
௩. அற்புதத்திருவந்தாதி.

### ௩. ஐயடிகள்காடவர்கோனாயனார்.

௧. திருவெண்பா.

### ௪. சேரமான்பெருமாணாயனார்.

௧. பொன்வண்ணத்தந்தாதி.
௨. திருவாரூர்மும்மணிக்கோவை.
௩. திருக்கைலாயஞானவுலா.

### ௫. நக்கீரதேவர்.

௧. கைலைபாதி காளத்திபாதியந்தாதி.
௨. திருவீங்கோய்மலையெழுபது.
௩. திருவலஞ்சுழிமும்மணிக்கோவை.
௪. திருவெழுகூற்றிருக்கை.
௫. பெருந்தேவபாணி.
௬. கோபப்பிரசாதம்.
௭. காரெட்டு.
௮. போற்றித்திருவகவல்.
௯. திருமுருகாற்றுப்படை.
௧0. திருக்கண்ணப்பதேவர் திருமறம்.

### ௬. கல்லாடனார்.

௧. திருக்கண்ணப்பதேவர் திருமறம்.

### ௭. கபிலதேவர்.

௧. மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை.
௨. சிவபெருமான் றிருவிரட்டைமணிமாலை.
௩. சிவபெருமான் றிருவந்தாதி.

### ௮. பரணதேவர்.

௧. சிவபெருமான் றிருவந்தாதி.

௯. இளம்பெருமானடிகள்.

௧. சிவபெருமான் றிருமும்மணிக்கோவை.

௧௦. அதிராவடிகள்.

௧. மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை.

௧௧. பட்டணத்துப்பிள்ளையார்.

௧. கோயினான்மணிமாலை.
௨. திருக்கழுமலமும்மணிக்கோவை.
௩. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.
௪. திருவேகம்பமுடையார் திருவந்தாதி.
௫. திருவொற்றியூர்த்தொகை.

௧௨. நம்பியாண்டார்நம்பி.

௧. திருநாரையூர்ப்பொல்லாப்பிள்ளையார் திருவிரட்டைமணிமாலை.
௨. கோயிற்பண்ணியர்திருவிருத்தம்.
௩. திருத்தொண்டர் திருவந்தாதி.
௪. ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி.
௫. ,, திருச்சண்பைவிருத்தம்.
௬. ,, திருமும்மணிக்கோவை.
௭. ,, திருவுலாமாலை.
௮. ,, திருக்கலம்பகம்.
௯. ,, திருத்தொகை.
௧௦. திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை.

ஆ பிரபந்தங்கள் - ௪௦.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பிபுராண முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

## கலித்துறைத் திருவந்தாதி.

### துதி கவி.

பொன்னி வடகரை சேர்நாரை யூரிற் புழைக்கைமுக
மன்னனறுபத்து மூவர் பதிதே மரபுசெயல்
பன்னவத் தொண்டத் தொகைவகை பல்குமந் தாதிதனைச்
சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத் துணைதுணையே.

### தில்லைவாழந்தணர்.

செப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியிற் செழுமறையோ
ரொப்பப் புவனங்கண் மூன்றினு முப்புரி னூரொரித்த
அப்பர்க் கமுதத் திருநடர்க் கந்திப் பிறையணிந்த
துப்பர்க் குரிமைத் தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே. (க)

### திருநீலகண்டநாயனார்.

சொல்லச் சிவன்றிரு வாணைதன் றூமொழி தோணகையா
லொல்லைத் துறந்துரு மூத்ததற் பின்னுமை கோனருளால்
வில்லைப் புரைநுத லாளோ டிளமைபெற் றின்பமிக்கான்
றில்லைத் திருநீல கண்டக் குயவனுஞ் செய்தவனே. (உ)

### இயற்பகைநாயனார்.

செய்தவர் வேண்டிய தியாதுங் கொடுப்பச் சிவன்றவனுய்க்
கைதவம் பேசிநின் காதலி யைத்தரு கென்றலுமே
மைதிகழ் கண்ணியை யீந்தவன் வாய்ந்த பெரும்புகழ்வந்
தெய்திய காவிரிப் பூம்பட் டினத்து ளியற்பகையே. (ங)

### இளையான்குடிமாறநாயனார்.

இயலா விடைச்சென்ற மாதவர்க் கின்னமு தாவிதைத்த
வயலார் முளைவித் துவாரி மனையலக் கால்வறுத்துச்
செயலார் பயிர்விழுத் தீங்கறி யாக்கு மவன்செழுநீர்க்
கயலா ரிளையான் குடியுடை மாறனெங் கற்பகமே. (ச)

மெய்ப்பொருணயனார்.

சுற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தாற்
செற்றவன் றன்னை யவனைச் செறப்புக லுந்திருவாய்
மற்றவன் றத்தா நமரே யெனச்சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொரு ளாமென்று பேசுவரே. (௫)

விறன்மிண்டநாயனார்.

பேசும் பெருமையவ் வாரூ ரனையும் பிரானவனு
மீசன் றனையும் புறகுதட் டென்றவ னீசனுக்கே
நேச னெனக்குப் பிரான்மனைக் கேபுக நீடுதென்றல்
வீசும் பொழிற்றிருச் செங்குன்ற மேய விறன்மிண்டனே. (௬)

அமர்நீதிநாயனார்.

மிண்டும் பொழிற்பழை யாறை யமர்நீதி வெண்பொடியின்
முண்டந் தரித்த பிரார்க்குநல் லூரின்முன் கோவணநேர்
கொண்டிங் கருளென்று தன்பெருஞ் செல்வமுந் தன்னையுந்தன்
றுண்ட மதிநுத லாளையு மீந்த தொழிலினனே. (௭)

---

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

தொழுதும் வணங்கிய மாலயன் றேடருஞ் சோதிசென்றுங்
கெழுதுந் தமிழ்ப்பழ வா வணங் காட்டி யெனக்குன்குடி
முழுது மடிமைவந் தாட்செ யெனப்பெற்ற வன்முரற்றே
னொழுகு மலரினற் றாரெம் பிரானம்பி யாரூரனே. (அ)

---

எறிபத்தநாயனார்.

ஊர்மதின் மூன்றட்ட வுந்தமர்க் கென்றே ருயர்தவத்தோன்
றார்மலர் கொய்யா வருபவன் றண்டின் மலர்பறித்த
* ஊர்மலை மேற்கொளும் பாகருட னுணி யாக்குமவ
னேர்மலி மாமதில் சூழ்கரு வூரி லெறிபத்தனே. (௯)

ஏனாதிநாதநாயனார்.

பத்தனை யேனாதி நாதனைப்பார்மீ 0 டெயினிதன்னு
ளத்தனைத் தன்னோ டமர்மலைந் தானெற்றி நீறுகண்டு
§ கைத்தனி வாள்வீ டொழிந்தவன் கண்டிப்ப நின்றருளு
நித்தனை யீழக் குலதீப னென்பரிந் நீணிலத்தே. (௧0)

---

* ஊர்மலை என்பது - யானை.

0 எயினி என்பது - எயினனூர்.

§ கைத்தனிவாள்வீடொழிந்து என்பது - தமது திருக்கரத்திலிருந்த ஒப்பற்ற வாளை விட்டுவிடாமல் பிடித்துக்கொண்டிருந்தார் என்பது பொருள். விடுதல் என்பது - வீடு என விகாரமாயிற்று.

### கண்ணப்பநாயனர்.

நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு * நெற்றியின்மே
னலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினன்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னுமென்று கூறுவரோ. (கக)

### குங்குலியக்கலயநாயனர்.

ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி யெழிற்பனந்தாட்
சாய்ந்த 0 சிவனிலைத் தானென்பர் காதலி தாலிகொடுத்
தாய்ந்தநற் குங்குலி யங்கொண்ட னற்புகை காலனைமுன்
காய்ந்த வரற்கிட்ட தென்கட வூரிற் கலயனையே. (கஉ)

### மானக்கஞ்சாறநாயனர்.

கலச முலைக்கன்னி காதற் புதல்வி கமழ்குழலை
நலசெய் தவத்தவன் ‡ பஞ்ச வடிக்கிவை நல்கெனலும்
அலசு மெனக்கரு தாதவள் கூந்த லரிந்தளித்தான்
மலைசெய் மதிற்கஞ்சை மானக்கஞ் சாற னெனும்வள்ளலே. (கங)

### அரிவாட்டாயநாயனர்.

வள்ளற் பிராற்கமு தேந்தி வருவோ னுகலுமிங்கே
வெள்ளச் சடையா யமுதுசெய் யாவிடி லென்றலையைத்
தள்ளத் தகுமென்று வாட்பூட் டியதடங் கையினன்கா
ணள்ளற் பழனக் கணமங் கலத்தரி வாட்டாயனே. (கச)

### ஆனயநாயனர்.

தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேற்றனித் திங்கள்வைத்த
தூயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவும்
வேயவன் மேன்மழ நாட்டு விரிபுனன் மங்கலக்கோன்
ஆயவ னானய னென்னையு வந்தாண் டருளினனே. (கரு)

---

### சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

அருட்டுறை யத்தர்க் கடிமைப்பட் டேனினி யல்லனென்னும்
பொருட்டுறை யாவதென் னேயென்ன வல்லவன் பூங்குவளை
யிருட்டுறை நீர்வய னுவற்பதிக் கும்பிரா னடைந்தோர்
மருட்டுறை நீக்கிநல் வான்வழி காட்டிட வல்லவனே. (கசு)

---

* நெற்றி என்பதற்கு - திருமுகமென்னப் பொருள்கொள்க.

0 சிவனிலைத்தான் என்பதற்குச் - சிவனை நேராகநிற்கச்செய்தான் என்பது பொருள்.

‡ பஞ்சவடி என்பது - மயிராற்செய்யப்பட்ட பூணநூல்.

மூர்த்திநாயனுர்.

அவந்திரி குண்டம ணுவதின் மாள்வனென் றன் ௦ ருலவாய்ச்
சிவன்றிரு மேனிக்குச் செஞ்சந் தனமாச் செழுமுழங்கை
யுவந்தொளிர் பாறையிற் றேய்த்துல காண்டவொண் மூர்த்திதன்னூர்
நிவந்தபொன் மாட மதுரா புரியென்னு நீள்பதியே. (கஎ)

முருகநாயனுர்.

பதிகந் திகழ்தரு பஞ்சாக் கரம்பயி ருவின்ன்சீர்
மதியஞ் சடையார்க் கலர்தொட் டணிபவன் யான்மகிழ்ந்து
‡ துதியுங் கழற்சண்பை நாதற்குத் தோழன்வன் றொண்டரம்பொன்
னதிகம் பெறும்புக லூர்முரு கன்னெனு மந்தணனே. (கஅ)

உருத்திரபசுபதிநாயனுர்.

அந்தாழ் புனறன்னி லல்லும் பகலுநின் றுதரத்தா
லுந்தாத வன்பொடு ருத்திரஞ் சொல்லிக் கருத்தமைந்த
பைந்தா ருருத்திர பசுபதி தன்னற் பதிவயற்கே
நந்தார் திருத்தலை யூரென் றுரைப்பரிந் நானிலத்தே. (கக)

திருநாளைப்போவார்நாயனுர்.

நாவார் புகழ்த்தில்லை யம்பலத் தானருள் பெற்றுநாளைப்
போவா னவனும் புறத்திருத் தொண்டன்றன் புன்புலைபோய்
மூவா யிரவர்கை கூப்ப முனியாய வன்பதிதான்
மாவார் பொழிறிக ழாதனூ ரென்பரிம் மண்டலத்தே. (உ௦)

திருக்குறிப்புத்தொண்டநாயனுர்.

மண்டும் புனற்சடை யான்றமர் தூசெற்றி வாட்டும்வகை
விண்டு மழைமுகில் வீடா தொழியின்யான் வீவனென்று
மிண்டும் படர்பாறை முட்டு மெழிலார் திருக்குறிப்புத்
தொண்டன் குலங்கச்சி யேகா லியர்தங்க டொல்குலமே. (உக)

தண்டீசநாயனுர்.

குலமே றியசேய்ஞ லூரிற் குரிசில் குரைகடல்சூழ்
தலமே றியவிறற் றண்டிகண் டீர்தந்தை தாளிரண்டும்
வலமே றியமழு வாலெறிந் தீசன் மணிமுடிமே
னலமே றியபால் சொரிந்தலர் சூட்டிய நன்னிதியே. (உஉ)

* ஆலவாய் என்பது - மதுரை.

௦ துதிக்கும் என்றது - துதியும் என்று குச்சாரியை குறைந்துநின்றது.

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

நிதியார் துருத்திதென் வேள்விக் குடியாய் நினைமறந்த
மதியேற் கறிகுறி வைத்துப் புகர்பின்னை மாற்றிடென்று
துதியா வருள்சொன்ன வாறறிவா ரிடைப் பெற்றவன்கா
ணதியார் புனல்வய லூவலர் கோனென்னு நற்றவனே, (௨௩)

திருநாவுக்கரசுநாயனார்.

நற்றவ னல்லூர்ச் சிவன்றிருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்கு
ளுற்றவ னுற்ற விடமடை யாரிட வொள்ளமுதாத்
துற்றவ னாமூரி லுவுக்கர செனுந் தூமணியே. (௨௪)

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியாற்
றிணியன நீள்கத வந்திறப் பித்தன தெண்கடலிற்
பிணியன வன்கன் மிதப்பித் தசைவப் பெருநெறிக்கே
யணியன நாவுக் கரையர்பி ரான்ற னருந்தமிழே. (௨௫)

குலச்சிறைநாயனார்.

அருந்தமி ழாகரன் வாதி லமணைக் கழுநுதிமே
லிருந்தமிழ் நாட்டிடை யேற்றுவித் தோனெழிற் சங்கம்வைத்த
பெருந்தமிழ் மீனவன் றன்னதிகாரி பிரசமல்கு
குருந்தவிழ் சாரன் மணமேற் குடிமன் குலச்சிறையே (௨௬)

பெருமிழலைக்குறும்பநாயனார்.

சிறைநன் புனற்றிரு நாவலூ ராளி செழுங்கைலைக்
கிறைநன் கழலுளை யெய்து மிவனருள் போற்றவின்றே
பிறைநன் முடிய னடியனை வேனென் றுடல்பிரிந்தா
னறைநன் மலர்த்தார் மிழலைக் குறும்ப னெனுநம்பியே. (௨௭)

காரைக்காலம்மையார்.

நம்பன் றிருமலை நான்மிதி யேனென்று தாளிரண்டு
மும்பர் மிசைத்தலை யானடந்தேற வுமைநகலுஞ்
செம்பொன் னுருவனென் னம்மை யெனப்பெற் றவள்செழுந்தேன்
கொம்பி னுகுகாரைக் காலினின் மேய குலதனமே. (௨௮)

அப்பூதியடிகணாயனார்.

தனமா வதுதிரு நாவுக்கரசின் சரணமென்னு
மனமார் புனற்பந்தர் வாழ்த்திவைத் தாங்கவன் வண்டமிழ்க்கே
யினமாத் தனது பெயரிடப் பெற்றவ னெங்கள்பிரா
னனமார் வயற்றிங்க ளூரினில் வேதிய னப்பூதியே. (௨௯)

திருநீலநக்கநாயனார்.

பூதிப் புயத்தர் புயத்திற் சிலந்தி புகலுமஞ்சி
யூதித் துமிந்த மனைவியை நீப்பவும் பாலவெல்லாம்
பேதித் தெழுந்தன காணென்று பின்னுகன் காட்டுமவ
னீதித் திகழ்சாத்த நீலநக்கன்னெனும் வேதியனே. (௩0)

நமிநந்தியடிகணாயனார்.

வேத மறிக்கரத் தாரூ ரார்க்கு விளக்குநெய்யைத்
தீது செறியமண் கையரட் டாவிடத் தெண்புனலா
லேத முறுக வருகவொன் றன்று விளக்கெரித்தா
னாத னெழிலேமப் பேறூரதிப னமிநந்தியே. (௩க)

---

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

நந்திக்கு நம்பெரு மாற்குநல் லாரூரி னயகற்குப்
பந்திப் பரியன செந்தமிழ் பாடப் படர்புனலிற்
சிந்திப் பரியன சேவடி பெற்றவன் சேவடியே
வந்திப் பவன்பெயர் வன்றொண்ட ரென்பரிவ் வையகத்தே. (௩உ)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

வைய மகிழயாம் வாழ வமணர் வலிதொலைய
வையன் பிரம புரத்தாற் கம்மென் குதலைச்செவ்வாய்
பைய மிழற்றும் பருவத் துப் பாடப் பருப்பதத்தின்
றைய லருள்பெற் றனனென்பர் ஞானசம் பந்தனையே. (௩௩)

பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகனல்ல
சந்தா ரகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தி லிட்டடி யேன்கொடுத்
வந்தாதி கொண்ட பிரானருட் காழியர் கொற்றவனே. (௩௪)

ஏயர்கோன்கலிக்காமநாயனார்.

கொற்றத் திறலெந்தை தந்தைதன் றந்தையெங் கூட்டமெல்லாந்
தெற்றச் சடையாய் நினதடி யேந்திகழ் வன்றொண்டனே
மற்றிப் பிணிதவிர்ப் பானென் றுடைவா ளுருவியந்நோய்
செற்றுத் தவிர்கலிக் காமன் குடியேயர் சீர்க்குடியே. (௩௫)

திருமூலநாயனார்.

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
யடிமன்ன வைத்த பிரான்மூல னாகின்ற வங்கணனே. (௩௬)

தண்டியடிகணாயனுர்.

கண்ணூர் மணியொன்று மின்றிக் கயிறு பிடித்தரற்குத்
தண்ணூர் புனற்றடந் தொட்டலுந் தன்னை நகுமமணர்
கண்ணுங் கிழப்ப வமணர் கலக்கங்கண் டம்மலர்க்கண்
விண்ணு யகனிடைப் பெற்றவ னூரூர் விறற்றண்டியே. (௩௭)

மூர்க்கநாயனுர்.

தண்டலை சூழ்திரு வேற்காட் டேர்மன்னன் றருகவற்றூற்
கொண்டவல் லாயம்வன் சூதனை வென்றுமுன் கொண்டபொருண்
முண்டநன் னீற்ற னடியவர்க் கீபவன் மூர்க்கனென்பர்
கண்டலை நீரொண் குடந்தையின் மேவுந்தற் சூதனையே. (௩௮)

சோமாசிமாறநாயனுர்.

சூதப் பொழிலம்ப ரந்தணன் சோமாசி மாறனென்பான்
வேதப் பொருளஞ் செழுத்தும் விளம்பியல் லான்மொழியா
னீதிப் பரன்மன்னு சித்த நியமன் பரவையென்னு
மாதுக்குக் காந்தன் வன்றொண்டன் றனக்கு மகிழ்துணையே. (௩௯)

---

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

துணையு மளவுமில் லாதவன் றன்னரு ளேதுணையாக்
கணையுங் கதிர்நெடு வேலுங் கறுத்த கயலிணையும்
பிணையு நிகர்த்தகட் சங்கிலி பேரமைத் தோளிரண்டு
மணையு மவன்றிரு வாரூர னாகின்ற வற்புதனே. (௪0)

சாக்கியநாயனுர்.

தகட்ன வாடையன் சாக்கியன் மாக்கற் றடவரையின்
மகள்தனந் தாக்கக் குழைந்ததிண் டோளர்வண் கம்பர்செம்பொன்
திகழ்தரு மேனியிற் செங்க லெறிந்து சிவபுரத்துப்
புகழ்தரப் புக்கவ னூர்சங்க மங்கை புவனியிலே. (௪௧)

சிறப்புலிநாயனுர்.

புவனியிற் பூதியுஞ் சாதன மும்பொலி வார்ந்துவந்த
தவநிய மர்க்குச் சிறப்புச்செய் தத்துவ காரணனு
மவனியிற் கீர்த்தித் தென்னாக்கூ ரதிப னருமறையோன்
சிவனிய மந்தலை நின்றதொல் சீர்நஞ் சிறப்புலியே. (௪௨)

சிறுத்தொண்டநாயனுர்.

புலியி னதளுடைப் புண்ணியற் கின்னமு தாத்தனதோ
ரொலியின் சதங்கைக் குதலைப் புதல்வ னுடறுணித்துக்
கலியின் வலிகெடுத் தோங்கும் புகழ்ச்சிறுத் தொண்டன்கண்டூர்
மலியும் பொழிலொண் செங்காட்டங் குடியவர் மன்னவனே. (௪௩)

சேரமான்பெருமாணயனர்.

மன்னர் பிரானெதிர் வண்ணா னுடலுவ ரூறியநீற்
றன்ன பிரான்றமர் போல வருதலுந் தான்வணங்க
வென்ன பிரானடி வண்ணா னெனவடிச் சேரனென்னுந்
தென்னர் பிரான்கழ றித்தறி வோனெனுஞ் சேரலனே. (சச)

சேரற்குத் தென்னா வலர்பெரு மாற்குச் சிவனளித்த
பாரக் கடகரி முன்புதன் பந்தி யிவுளிவைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ள நன்றுசெய் தாயின்று தொண்டுபட்டே. (சரு)

கணநாதநாயனர்.

தொண்டரை யாக்கி யவரவர்க் கேற்ற தொழில்கள்செய்வித்
தண்டர்தங் கோனக் கணத்துக்கு நாயகம் பெற்றவன்காண்
கொண்டல்கொண் டேறிய மின்னுக்குக் கோல மடல்கடொறுங்
கண்டல்வெண் சோறளிக் குங்கடற் காழிக் கணநாதனே. (சசா)

கூற்றுவநாயனர்.

நாதன் றிருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல்லா மொரு கோலின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே. (சஎ)

---

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

கூற்றுக் கெவனோ புகறிரு வாரூரன் பொன்முடிமே
லேற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக்
கோற்றொத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே. (சஅ)

பொய்யடிமையில்லாதபுலவர்.

தரணியிற் பொய்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர் நக்கீரர் முதலநாற்பத் தொன்பது பல்புலவோ
ரருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே. (சகூ)

புகழ்ச்சோழநாயனர்.

புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதன் குலமுதலோ
னலமன் னியபுகழ்ச் சோழன தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியவெறி பத்தனுக் கீந்ததொர் வண்புகழே. (ருo)

நரசிங்கமுனையரையர்நாயனுர்.

புகழும் படியெம் பரமே தவர்க்குநற் பொன்னிடுவோ
னிகழும் படியோர் தவன்மட வார்புனை கோலமெங்கு
நிகழும் படிகண் டவற்கன் றிரட்டிபொன் னிட்டவனி
திகழு முடிநர சிங்க முனையர சன்றிறமே. (ருக)

அதிபத்தநாயனுர்.

திறமமர் மீன்படுக் கும்பொழு தாங்கொரு மீன்சிவற்கென்
றுறவமர் மாகடற் கேவிடு வோனொரு நாட்கனக
நிறமமர் மீன்பட நின்மலற் கென்றுவிட் டோன்கமலம்
புறமமர் நாகை யதிபத்த னுகிய பொய்யிலியே. (ருஉ)

கலிக்கம்பநாயனுர்.

பொய்யைக் கடிந்துநம் புண்ணியர்க் காட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத் தானவன் றாள்கழுவ
வையத் தவர்முன்பு வெள்கிநீர் வாரா விடமனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணு கடத்துக் கலிக்கம்பனே. (ருஙு)

கலியநாயனுர்.

கம்பக் கரிக்குஞ் சிலந்திக்கு நல்கிய கண்ணுதலோ
னும்பர்க்கு நாதற் கொளிவிளக் கேற்றற் குடலிலனுய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக் குழன்றுங் கொள் கூலியினு
னம்பற் கெரித்த கலியொற்றி மாநகர்ச் சக்கிரியே. (ருச)

சத்திநாயனுர்.

கிரிவில் லவர்தம் மடியனைத் தன்முன்பு கீழ்மைசொன்ன
திருவில் லவனையந் நாவரி வோன்றிருந் தாளைவெல்லும்
வரிவில் லவன்வயற் செங்கழு நீரின் மருவுதென்ற
றெருவில் விரைகம ழுந்தென் வரிஞ்சைத் திகழ்சத்தியே. (ருரு)

ஐயடிகள்காடவர்கோனுயனுர்.

சத்தித் தடக்கைக் குமரனற் றுந்தைதன் றானமெல்லா
முத்திப் பதமரோர் வெண்பா மொழிந்து முடியரசா
மத்திற்கு மும்மைநன் றுலாற் காவைய மேற்றலென்னும்
பத்திக் கடலையடிகளா கின்றநம் பல்லவனே. (ருசு)

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

பல்லவை செங்கதி ரோனைப் பறித்தவன் பாதம்புகழ்
சொல்லவன் றென்புக ழூரரன் பாற்றுய்ய செம்பொன்கொள்ள
வல்லவ னுட்டியத் தான்குடி மாணிக்க வண்ணனுக்கு
நல்லவன் றன்பதி நாவலூ ராகின்ற நன்னகரே. (ருஎ)

### கணம்புல்லநாயனார்.

கன்னக ராய விருக்குவே ளூர்தனி னல்குரவாய்ப்
பொன்னக ராயநற் றில்லை புகுந்து * புலீச்சரத்து
மன்னவ ராய வரற்குநற் புல்லால் விளக்கெரித்தான்
கன்னவி றோளெந்தை தந்தை பிரானெங்க ணம்புல்லனே. (௫௮)

### காரிநாயனார்.

புல்லன வாகா வகையுல கத்துப் புணர்ந்தனவுஞ்
சொல்லின வுந்நய மாக்கிச் சுடர்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்குங் கைலைபுக் கானென்பராற்
கல்லின மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே. (௫௯)

### நெடுமாறநாயனார்.

கார்த்தண் முகிற்கைக் கடற்கா ழியர்பெரு மாற்கெதிரா
யார்த்த வமண ரழிந்தது கண்டுமற் றுங்கவனாக்
கூர்த்த கழுவி னுதிவைத்த பஞ்சவ னென்றுணாக்கும்
வார்த்தை யதுபண்டு நெல்வேலி யில்வென்ற மாறனுக்கே. (௬௦)

### வாயிலார்நாயனார்.

மாறு வருளரன் றன்னை மனவா லயத்திருத்தி
யாறு வறிவா மொளிவிளக் கேற்றி யகமலராம்
வீறு மலராளித் தன்பெனு மெய்யமிர் தங்கொடுத்தான்
வீறுர் மயிலையுள் வாயிலா னென்று விளம்புவரே. (௬௧)

### முனையடுவார்நாயனார்.

என்று விளம்புவர் நீடு ரதிபன் முனையடுவோ
னென்று மமரு ளழிந்தவர்க் காக்கூலி யேற்றெறிந்து
வென்ற பெருஞ்செல்வ மெல்லாங் கனகநன் மேருவென்னுங்
குன்றம் வளைத்த சிலையான் றமர்க்குக் கொடுத்தனனே. (௬௨)

---

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவியவி நாசியை வேடர்சுற்றம்
படுத்தான் திருமுரு கன்பூண் டியினிற் பராபரத்தேன்
மடுத்தா னவனென்பர் வன்றொண்ட னாகின்ற மாதவனே. (௬௩)

### கழற்சிங்கநாயனார்.

மாதவத் தோர்தங்கள் வைப்பினுக் காரூர் மணிக்குவைத்த
போதினைத் தான்மோந்த தேவிதன் மூக்கை யரியப்பொற்கை

---

* புலீச்சரமென்பது - சிதம்பரத்தில் வியாக்கிரபாதமுனிவர் பூசைசெய்த தலம். அதற்கு இப்பொழுது இளமையாக்கினார் கோயில் என்று வழங்கும்.

காதிவைத் தன்றோ வரிவதென் ருங்கவள் கைதடிந்தா
ஞதமொய்த் தார்வண்டு கிண்டுடைபங் கோதைக் கழற்சிங்கனே. (சுச)

இடங்கழிநாயனுர்.

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனக மணிந்தவா தித்தன் குலமுதலோன்
றிங்கட் சடையர் தமரதென் செல்வ மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவ னிருக்கு வேளூர்மன் னிடங்கழியே. (சுரு)

செருத்துணைநாயனுர்.

கழிநீள் கடனஞ்ச யின்றூர்க் கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்றன் றேவிமுன் மோத்தலுமே
யெழினீள் குமிழ்மலர் மூக்கரிந் தானென் றியம்புவராற்
செழுநீர் மருகனன் ஞட்டமர் தஞ்சைச் செருத்துணையே. (சுசு)

புகழ்த்துணைநாயனுர்.

செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத்தா
யுருவலி கெட்டுண வின்றி யுமைகோனை மஞ்சனஞ்செய்
தருவதோர் போதுகை சோர்ந்து கலசம் விழத்தரியா
தருவரா வில்லி யருளி னிதியது பெற்றனனே. (சுஎ)

கோட்புலிநாயனுர்.

பெற்ற முயர்த்தோன் விளையாக் கலிபிழைத் தோர்தமது
சுற்ற மறுக்குந் தொழிற்றிரு நாட்டியத் தான்குடிக்கோன்
குற்ற மறுக்குநங் கோட்புலி நாவற் குரிசிலருள்
பெற்ற வருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே. (சுஅ)

---

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

தருமகட் பேசினேன் வீயவே நூல்போன சங்கிலிபாற்
புகுமணக் காதலி ஞலொற்றி யூருறை புண்ணியன்றன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுலக
நகும்வழக் கேன்மை யாப்புணர்ந் தானுவ லூரரசே. (சுகு)

பத்தராய்ப்பணிவார்கள்.

அரசினை யாரு ரமரர் பிரானை யடிப்பணிந்திட்
டுரைசெய்த வாய்தடு மாறி யுரோம புளகம்வந்து
கரசர ணுதி யவயவங் கம்பித்துக் கண்ணருவி
சொரிதரு மங்கத்தி ஞேர்பத்த ரென்று தொகுத்தவரே. (எ0)

பரமனையேபாடுவார்.

தொகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே
மிகுத்த வியலிசை யவ்வகை யாலவ்விண் டோயுநெற்றி

வருத்த மதிற்றில்லை யம்பலத் தான்மலர்ப் பாதங்கண்மே
லுருத்த மனத்தொடும் பாடவல் லோரென்ப ருத்தமரே. (எக)

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

உத்தமத் தானத் தறம்பொரு ளின்ப மொடியெறிந்து
வித்தகத் தானத் தொருவழிக் கொண்டு விளங்கச்சென்னி
மத்தம்வைத் தான்றிருப் பாத கமல மலரடிக்கீழ்ச்
சித்தம்வைத் தாரென்பர் வீடுபே றெய்திய செல்வர்களே. (எஉ)

திருவாரூர்ப்பிறந்தார்.

செல்வந் திகழ்திரு வாரூர் மதில்வட்டத் துட்பிறந்தார்
செல்வன் றிருக்கணத் துள்ளவ ரேயத னூற்றிகழச்
செல்வம் பெருகுதென் னாரூர்ப் பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித் தாய செழுநெறியே. (எங)

முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.

நெறிவார் சடையனைத் தீண்டிமுப் போதுநீ டாகமத்தி
னறிவால் வணங்கியர்ச் சிப்பவர் நம்மையு மாண்டமரர்க்
கிறையாய்முக் கண்ணுமெண் டோளுந் தரித்தீறில் செல்வத்தொடு
முறைவார் சிவபெரு மாற்குறை வாய வுலகினிலே. (எச)

முழுநீறுபூசியமுனிவர்.

உலகங் கலங்கினு மூழி திரியினு முள்ளொருகால்
விலகுத லில்லா விதியது பெற்றநல் வித்தகர்கா
ணலகில் பெருங்குணத் தாரூ ரமர்ந்த வரனடிக்கீ
ழிலகுவெண் ணீறுதம் மேனிக் கணியு மிறைவர்களே. (எரு)

அப்பாலுமடிச்சார்ந்தார்.

வருக்க மடைத்துநன் னாவலூர் மன்னவன் வண்டமிழாற்
பெருக்க மதுரத் தொகைபிறை சூடிதன் பெய்கழற்கே
யொருக்கு மனத்தொடப் பாலடிச் சார்ந்தவ ரென்றுலகிற்
றெரிக்கு மவர்சிவன் பல்கணத் தோர்நஞ் செழுந்தவரே. (எசு)

---

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

செழுநீர் வயன்முது குன்றினிற் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கைய னீந்தபொன் னாங்குக்கொள் ளாதுவந்தப்
பொழினீ டருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங்கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூர னென்றுநாங் கேட்பதுவே. (எஎ)

பூசலார்நாயனார்.

பதுமநற் போதன்ன பாதத் தரற்கொரு கோயிலையான்
கதுமெனச் செய்குவ தென்று கொலாமென்று கண்டுயிலா

நதுமனத்தே யெல்லி தோறு நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணத் தென்ற லுலா * நின்ற வூர்தனிற் பூசலையே. (எஅ)

மங்கையர்க்கரசியார்.

பூச லயிற்றென்ன னூர்க்கன லாகப் பொறுமையினால்
வாச மலர்க்குழற் பாண்டி மாதேவியா மானிகண்டீர்
தேசம் விளங்கத் தமிழா கரர்க்கறி வித்தவரா
னூசம் விளைத்தா ளருகர் தருக்குத்தென் னாட்டகத்தே. (எகூ)

நேசநாயனார்.

நாட்டமிட் டன்றரி வந்திப்ப வெல்படை நல்கினர்தந்
தாட்டரிக் கப்பெற்ற வனென்பர் சைவத் தவராயிற்
0 கூட்டு மகப்படக் கோவண நெய்து கொடுத்துநன்மை
யீட்டுமக் காம்பீலிச் சாலிய நேசனை யிம்மையிலே. (அ0)

கோச்செங்கட்சோழநாயனார்.

மைவைத்த கண்ட னெறியன்றி மற்றோர் நெறிகருதாத்
தெய்வக் குடிச்சோழன் முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் துருவெய்தி வந்து தரணிநீ டாலயங்கள்
செய்வித் தவன்றிருக் கோச்செங் கணானெனுஞ் செம்பியனே. (அக)

செம்பொ னணிந்து சிற்றம் பலத்தைச் சிவலோகமெய்தி
நம்பன் கழற்கீ ழிருந்தோன் குலமுத லென்பர்நல்ல
வம்பு மலர்த்தில்லை யீசனைச் சூழ § மறைவளர்த்தா
னிம்பர் நறுந்தொங்கற் கோச்செங்க ணானெனு நித்தனையே. (அஉ)

திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்.

தனையொப் பருமெருக் கத்தம் புலியூர்த் தகும்புகழோ
னினையொப் பருந்திரு நீலகண்டப் பெரும் பாணனைநீள்
சினையொப் பலர்பொழிற் சண்பையர் கோன்செந் தமிழொடிசை
புனையப் பரனருள் பெற்றவ னென்பரிப் பூதலத்தே. (அங)

சடையநாயனார்.

தலம்விளங் குந்திரு நாவலூர் தன்னிற் சடையனென்னுங்
குலம்விளங் கும்புக ழோனை யுரைப்பர் குவலயத்தி
னலம் விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தின்
பலன்விளங் கும்படி யாரூ ரனைமுன் பயந்தமையே. (அச)

---

* திருநின்றவூர் என்றது - தின்னனூரென வழங்குகின்றது.

0 கூட்டு என்பது - கீள்.

§ மறைவளர்த்தான்என்பதற்கு-தில்லைவாழந்தணர்களுக்குத் திருமாளிகை முதலியவை செய்வித்துவந்தான் என்பது பொருள்.

## இசைஞானியார்.

பயந்தாள் கறுவுடைச் செங்கண்வெள்ளைப் பொள்ள னிள்பணைக்கைக்
கயந்தா னுகைத்த நற்காளையை யென்றுங் கபாலங்கைக்கொண்
* டயந்தான் புகுமர ஞரூர்ப் புனிதவ ரன்றிருத்தா
ணயந்தா டனதுள் ளத்தென்று முனைப்பது ஞானியையே. (அ௫)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

ஞான வவ்வா ரூரர சரையல் லதுநாமறியோ
மான வவ்வாக்கை யொடும்புக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலு மறிதற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயிற் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே (அ௬)

## திருத்தொண்டத்தொகையினுள்ள கூட்டவடியார்கள்தனியடியார்கள்.

கூட்டமொன் பானொ டறுபத்து மூன்று தனிப்பெயரா
விட்டும் பெருந்தவத் தோரெழு பத்திரண் டாம்வினையை
வாட்டுந் தவத்திருத் தொண்டத் தொகைபதி னொன்றின்வகைப்
பாட்டுந் திகழ்திரு நாவலூ ராளி பணித்தனனே, (அ௭)

## திருத்தொண்டத்தொகைப்பதிகத் தேவாரங்களின் முதற்குறிப்பு.

பணித்தநற் றொண்டத் தொகைமுதற் றில்லை யிலைமலிந்த
வணித்திகழ் மும்மைத் திருநின்ற வம்பறு வார்கொண்டதோ
ரிணைத்திகழ் பொய்யடி மைக்கறைக் கண்டன் கடல்சூழ்ந்தபின்
மணித்திகல் சொற்பத்தர் மன்னிய சீர்மறை நாவனொடே. (அ௮)

## பலனருள்கவி.

ஓடிடும் பஞ்சேந் திரிய மொடுக்கி யென் னுள்வினைகள்
வாடிடும் வண்ணநின் றெத்தவஞ் செய்தனன் வானினுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையினுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே. (அ௯)

திருச்சிற்றம்பலம்.

கலித்துறைத் திருவந்தாதி முற்றிற்று.

---

* ஐயம் - அயமெனப் போலியாயிற்று,

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உமாபதிசிவாசாரியா ரருளிச்செய்த

## திருத்தொண்டர்புராண சாரம்.

---

விருத்தம்.

மல்குபுகழ் வன்றொண்ட ரருளாலீந்தவளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை, நல்கும்வகை புல்கும்வகை நம்பியாண்டார் நம்பி திரு வந்தாதி நவின்றவாற்றாற், பல்குநெறித் தொண்டர்சீர் பரவவல்ல பான்மையா ரெமையாளும் பரிவால்வைத்த, செல்வமிகுந் திருத்தொண்டர் புராணமேவுந் திருந்துபய னடியேனுஞ் செப்பலுற்றேன்.

சுந்தரமூர்த்திநாயனார்.

தண்கயிலை யதுநீங்கி நாவலூர்வாழ் சைவனார் சடையனார் தநயனாராய், மண்புகழ வருட்டுறையா னோலைகாட்டி மணம்விலக்க வன்றொண்டா யதிகைசேர்ந்து, நண்பினுட னருள்புரிய வாரூர்மேவி நலங்கிளரும் பரவைதோ ணயந்துவைகித், திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண்டேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்பினாரே. (க)

செப்பலருங் குண்டையூர் நெல்லழைத்துத் திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச்செய்து, தப்பின்முது குன்றர்தரும் பொருளாற்றிட்டுத் தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்துநாத, னொப்பிறனித் தூதுவந்தா றூடுகேறி, யுறுமுதலை சிறுமதலை யுமிழநல்கி, மெய்ப்பெரிய களிறேறி யருளாற்சேர வேந்தருடன் வடகைலை மேவினாரே. (உ)

தில்லைவாழந்தணர்.

நல்லவா னவர்போற்றுந் தில்லைமன்று ளுடகஞ்செய் பெருமானுக்கணியார்நற்பொற், றொல்லைவான் பணியெடுத்தற் குரியார்வீடுந் துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன்பாடத், தில்லைவா ழந்தணரென் றெடுத்துநாதன், செப்புமரு ளுடையார்முத் தீயார்பத்திக், கெல்லைகாண் பரியாரொப் புலகிற்றமே யேய்ந்துளா ரெமையாள வாய்ந்துளாரே. (ங)

திருநீலகண்டநாயனார்.

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்தராகித் தீண்டிலெமைத்திருநீலகண்டமென்று, சொல்லுமனை யாடனையே யன்றிமற்றுந் துடியிடை பரிவை

யின்பந் துறந்து மூத்தங்,கெல்லையிலோ டிறைவைத்து மாற்றினாங்க ளொத்திலமென் றியம்புமென விழிந்து பொய்கை,மெல்லியிலா ளுடன்மூழ்கி யிளமையெய்தி விளங்குபுலீச் சரத்தரனை மேவினாரோ. (ச)

## இயற்பகைநாயனார்.

எழிலாருங் காவிரிப்பூம் பட்டினத்து ளியல்வணிக ரியற்பகையாரிருவர்தேட், வழலாய பிரான்றூர்த்த மறையோனாகி யாயிழையைத் தரவேண்டி யணையவவன், கழலாரப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக் காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால்வந்த, பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்துமீளப் பிஞ்ஞகனை ரழைத்தருளப் பெற்றுளாரோ. (ரு)

## இளையான்குடிமாறநாயனார்.

மன்னியவே ளாண்டொன்மை யிளசைமாறர் வறுமையா லுணவுமிக மறந்துவைகி, யுன்னருநள் ளிருண்மழையி லுண்டிவேண்டி யும்பர்பிரா னணையவய லுழுதுவித்துஞ், செந்நென்முளை யமுதுமனை யலக்காலாக்கிச் சிறுபயிரின் கறியமுது திருந்தச்செய்து, பன்னலரு முணவருந்தற் கெழுந்தசோதிப் பரலோக முழுதாண்ட பான்மையாரோ. (சா)

## மெய்ப்பொருணாயனார்.

சேதிபர்நற் கோவலூர் மலாடமன்னர் திருவேட மெய்ப்பொருளாந் தெளிந்தசிந்தை, நீதியினா ருடன்பொருது தோற்றமாற்றா னெடுஞ்சினமுங் கொடும்படையு நிகழாவண்ண, மாதவர்போ லொருமுறை கொண்டணுகிவாளால் வன்மைபுரிந் திடமருண்டு வந்ததத்தன், காதலுற நமர்தத்தா வென்றுநோக்கிக் கடிதகல்வித் திறைவனடி கைக்கொண்டாரோ.()

## விறன்மிண்டநாயனார்.

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் டொன்மைவிறன்மிண்டர் திருவாரூர் மேவுநாளில், வளங்குலவு தொண்டரடி வணங்காதேகும்வன் றொண்டன் புறகவனை வலியவாண்ட, துளங்குசடை முடியோனும் புறகென்றன்பாற் சொல்லுதலு மவர்தொண்டத் தொகைமுன்பாட, வுளங்குளிர வுளதென்று ரதனாலண்ண லுவகைதர வுயர்கணத்து ளோங்கினாரோ. (அ)

## அமர்நீதிநாயனார்.

பழையாறை வணிகரமர் நீதியாற்பாற் பரவுசிறு முனிவடிவாய்ப் புகிலுநல்லூர்க்,குழைகாதர் வந்தொருகோ வணத்தைவைத்துக்கொடுத்ததனை யெடுத் தொளித்துக்குளித்துவந்து,தொழிலாருமதுவேண்டி வெகுண்டுநேரித் துலையிலிடுங் கோவணநேர் தூக்குமென்ன, வெழிலாரும் பொன்மனைவி யிளஞ்சேயேற்றி யேறினர்வா னுலகுதொழ வேறினாரோ.

## எறிபத்தநாயனார்.

திருமருவு கருவூரா னிலேயார் சாத்துஞ் சிவகாமி யார்மலனாச் சிந்த யானே, யரனெறியோ றெறிபத்தர் பாகரோடு மறவெறிய வென்னுயிரு மகற்றீரென்று, புரவலனர் கொடுத்தபடை யன்பால்வாங்கிப் புரிந்தரி வான் புகவெழுந்த புனிதவாக்காற், கரியினுடன் விழுந்தாறு மெழுந்தார் தாமுங் கணநாத ரதுகாவல் கைக்கொண்டாரே. (க0)

## ஏனதிநாதநாயனர்.

ஈழக் குலச்சான்ரு ரெயினனூர்வா ழேனதி நாதனு ரிறைவனீற்றை த், தாழத் தொழுமரபார் படைகளாற்றுந் தன்மைபெரு வதிசூரன் சம ரிற்றோற்று, வாழத் திருநீறு சாத்தக்கண்டு மருண்டார் தெருண்டார்கை வாள்விடார் நேர், வீழக்களிப்பார்போ னின்றேயாக்கை விடுவித்தார் சிவ னருளே மேவினரே. (கக)

## கண்ணப்பநாயனர்.

வேடரதி பதியுடுப்பூர் வேந்தனுகன் விளங்கியசேய் திண்ணனர் க ன்னிவேட்டைக், காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதருமலருங் காய்ச்சி னமென் றிடுதசையுங் காளத்தியார்க்குத், தேடருமன் பினிலாறு தினத் தளவு மளிப்பச் சிறுசிவ கோசரியுந் தெளியவிழிப்புண்ணீ, ரேர்டவொரு கண்ணப்பி யொருகண்ணப்பவொழிகவெனுமருள்கொடருகுற்றநின்றுரே

## குங்குலியக்கலயநாயனர்.

சீலமலி திருக்கட வூர்க் கலயனராங் திகழ்மறையோர் பணிவறுமை சினதயாமுன்னே, தாலியைநெற் கொள வென்று வாங்கிக்கொண்டு சங் கையில் குங்குலியத்தாற் சார்ந்த செல்வர்,ஞாலநிகழ் திருப்பனந்தாளு தர்நேரே நரபதியுந் தொழக்கச்சா ணயந்துபோதப், பாலமுத முண்டா ரு மரசுமெய்திப் பரிந்தமுது செயவருள்சேர் பான்மையாரே. (கஉ)

## மானக்கஞ்சாறநாயனர்.

கஞ்சநகர் மானக்கஞ் சாறனர்சீர்க் காதன்மகள் வதுவைமணங் கா ணநாதன், வஞ்சமலி மாவிரதத் தலைவனுகி வந்துபுகுந் தவளளக மகிழ்ந் துநோக்கிப், பஞ்சவடிக் காமென்ன வரிந்துநீட்டும் பத்தரெதிர் மறைந் திறைவன் பணித்தவாக்கா,லெஞ்சலில்வண் குழல்பெற்ற பேதைமாதை யேயர்பிராற் குதவியரு ளெய்தினரே. (கங)

## அரிவாட்டாயநாயனர்.

தாவில்கண மங்கலத்துள் வேளாண்டொன்மைத் தாயனர்நாயனர் தமக்கேசெங்நெற், றூவரிசி யெனவிளைவ தவையேயாகத் துறந்துணவு வடுவரிசிதுளங்குகீரை, "ாவினினை ஙூடன்கொணர வோர்கமரிற்சிந்த

வழிந்தரிவாள் கொண்டூட்டி யரியாமுன்னே,மாவடுவி னொலியுமரன் கா ருங்தோன்றி வாள்விலக்கி யமரர்தொழ வைத்தவன்றே. (௧௫)

### ஆனாயநாயனார்

மங்கலமா மழநாட்டு மங்கலமாநகருண் மருவுபுக ழானாயர் வளரா மேய்ப்பார், கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்குசார்ந்து குழலிசையி னைந்தெழுத்துங் குழைப்பவைத்துத், தங்குசரா சரங்களெல்லா முருகாவி ற்பத் தம்பிரா னணைந்துசெவி தாழ்ந்துவாழ்ந்து,பொங்கியவான் கருணை புரிந் தென்றுமூதப் போதுகவென் றருளவுடன் போயினாரே, (௧௬)

### மூர்த்திநாயனார்,

வழங்குபுகழ் மதுராநகர் மூர்த்தியாரரம் வணிகர்திரு வாலவாய்மன் னர்சாத்தத்,தழங்குதிர முழங்கைதரத் தேய்த்தவூறுந் தவிர்ந்தமணர் வஞ் சனையுந் தவிரமன்ன, னிழந்தவுயி ரினாறுக ஞாலநல்க, வெழில்வேணி மு டியாக விலங்குவேட, முழங்குபுக ழணியாக விரைநீறாக மும்மையுல கா ண்டருளின் முன்னினாரே. (௧௭)

### முருகநாயனார்,

மன்னுதிருப் புகலூர்வாழ் முருகனாரா மறையவர்கோ வர்த்தமா னீ ச்சரத்தார், சென்னியினுக் கழகமரு மலர்கள் கொய்து திருமாலை புகழ் மாலை திகழச்சாத்திக், கன்னிமதிற் கழுமலநா டுடையநாதன் காதன்மிகு மணங்காணுங் களிப்பினாலே, யின்னல்கெட வுடன்சேவித் தருளான்மீ ளா திலங்குபெரு மணத்தரனை யெய்தினாரே. (௧௮)

### உருத்திரபசுபதிநாயனார்,

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர்வாழும் பசுபதியா ரெனும்மறை யோர் பணிந்து செந்தே, னங்கமல மடுவினிடை யல்லுமெல்லு மகலா தே யாகளமா யமர்ந்துநின்று திங்கள்வளர் சடைமுடியா னடிகள்போற் றித் திருவெழுத்து முருத்திரமுந் திகழவோதி, மங்கையிட முடையபிரா னருளான்மேலை வானவர்க டொழுமுலகின் மன்னினாரே, (௧௯)

### திருநாளைப்போவார்நாயனார்,

நன்மைதிகழ் மேற்கானாட் டாதனூர்வாழ் நந்தனார் புறத்தொண்டர் நாளைப் போகப்,பொன்மலிதென் புலியூர்க்கென் றுரைப்பார் புள்கூர்ப் பொய்கையமைத் தடலேறு பிரியநோக்கி, வன்மதில்சூழ் தில்லையிறை யி ருளால்வாய்ந்த வண்டழலி னிடைமூழ்கி மறையோர் போற்ற, மின்மலி செஞ் சடைமுனியாயெழுந்துநாதன் விளங்குநடந் தொழமன்றுண்மேவி னாரே, (௨௦)

### திருக்குறிப்புத்தொண்டநாயனார்,

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரேகாலிக் குலத்தலைவர் தவர்கு றிப்புக் குறித்துளார்பால், வந்திறைவர் நமக்கின்று தாரீராகின் ஒழுங்

துமுட் லெனவாங்கி மாசுநீத்த, கந்தைபுல ராதொழிய மழையுமாலைக் கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக்கன்மேற்,சிந்தமுடி புடைப்பளவிற் றிருவேகம்பர் திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தினரே. (உக)

தண்டீசநாயனார்,

வேதமலி சேய்ஞலூ ரெச்சதத்தன் விளங்கியசேய் மறைபயிலும் விசாரசன்மர்,கோதனமேய்ப் பவன்கொடுமை பொறாதுதாமே கொண்டு நிரை மண்ணியின்றென் கரையினீழற்,றுதகியின் மணலிலிங்கத் தான்பாலாட்டத் தாதைபொறு தவையிடறுந் தாள்கண் மாளக்,காதிமலர்த் தாமமுயர் நாமமுண்ட கலமகனும் பதமருளாற் கைக்கொண்டாரே. (உஉ)

திருநாவுக்கரசுநாயனார்.

போற்றுதிரு வாமூரில் வேளாண்டொன்மைப் பொருவில்கொறுக் கையரதிபர் புகழனார்பான், மாற்றருமன் பினிற்றிலத வதியாமாது வந்துதித்த பின்புமரு ணீக்கியாருந், தோற்றியமண் சமயமுறு துயரநீங்கத் துணைவரரு டரவந்த சூலைநோயாற், பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத்திரத்திற் பாழியொழித் தரனதிகைப் பதியில்வந்தார். (உ௩)

வந்துதமக் கையர்ருளா னீறுசாத்தி வண்டமிழா னோய்தீர்ந்து வாக்கின்மன்னாய், வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி வியன்சூலங் கொடியிடபம் விளங்கச்சாத்தி, யந்தமிலப் பூதிமக னரவுமாற்றி யருட்காசுபெற்றுமறை யடைப்புநீக்கிப், புந்திமகிழ்ந் தையாற்றிக் கைலைகண்டு பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தினரே.. (உ௪)

குலச்சிறைநாயனார்.

கோதில்புகழ் தருமணமேற் குடியார்கோவண் குலச்சிறையார் தென்னர்குல வமைச்சர்குன்று, மாதவர்க ளடிபரவு மரபார்பாண்டி மாதேவி யாரருள்வான் பயிர்க்குவேலி, காதன்மிகு கவுணியர்கோன் வாதிற்றோற்ற கையரைவை யைக்கரைசேர் கழுவிலேற்று, நீதியினு ராலவாய் நிமலர்ச்சேர்ந்த நின்மலனு ரென்மலங்க ணீக்கினரே. (உ௫)

பெருமிழலைக்குறும்பநாயனார்.

கொண்டல்பனி வளர்சோலை மிழலைநாட்டுக் கோதில்புகழ்ப் பெருமிழலைக் குறும்பனார்சீ, ரண்டர்பிரா னடியவருக் கடியாராகு மாதரவா லணுக்கவன் றொண்டர்க்காளாய்,மண்டொழுமெண் டருசித்தி வாய்ந்துளார்தாம் வன்றொண்டர் வடகைலை மருவுநாண்மு, னெண்டிகழு மறைமூல நெறியூடேகி யிலங்கொளிசேர் வடகைலை யெய்தினரே. (உ௬)

காரைக்காலம்மையார்.

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன்மிக்க தனதத்தன் றரும்புனித வதியார்மாவின், செங்கனிக டிருவருளா லழைப்பக்கண்டு திகழ்கணவ

னதிசயித்துத் தேசநீங்க, வங்கவுட லிழந்துமுடி நடையாலேறி யம்மை யே யெனாத னப்பாவென்று, பொங்குவட கைலைபணிந் தாலங்காட் டிற் புனிதனட மனவரதம் போற்றினரே. (உள)

## அப்பூதியடிகணாயனர்.

அந்தமினற் றிங்களூர் வருமப்பூதி யருமறையோர் திருநாவுக் கரசி னும், பந்தரிடை யெழுதக்கண் டரசுமெய்தப் பணிந்துபரி கலநேடிப் படப்பைசேர்ந்த, மைந்தனுயி ருயர்கதலி யிலைமேற்றுஞ்சும் வாளரவு கவரவுடன் மறைத்தல்கேட்டுச், சிந்தைமகிழ்ந் துயர்பதிக மருந்தாற்றீர் த்துத் திருவமுது செயவருளைச் சேர்ந்துளாரே. (உஅ)

## திருநீலநக்கநாயனர்.

நீதிதரு மறையோர்வாழ் சாத்தமங்கை நீலநக்கனாவந்தி நிமலர் மேனி, யூதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளைநீத்தார்க் குமியாத விடநாத னுறு நோய்காட்டக், காதன்மிகு மனைவியையு மகிழ்ந்துமேவிக் காழியர்கோ னமுதுசெயக் களித்துவாழ்ந்து, வேதிகையிற் பாணனர்க் கிடமுநல்கி விளங்குபெரு மணத்தரனை மேவினரே. (உகூ)

## நமிநந்தியடிகணாயனர்.

நண்ணுபுகழ் மறையோர்வா ழேமப்பேறூர் நமிநந்தி யடிகடிரு விள க்குநல்க, எண்ணெயம ணர்கள்விலக்க நீராலாரூ ரிலங்குமர நெறியா ருக் கேற்றுநாளிற். கண்ணமணர் கெடக்கண்பெற் றடிகள்வாழக் காவல னு னிமிந்தங்கள் கட்டுவித்தே, ய்ண்ணலருள் கண்டாரூ ரமர்ந்துதொ ண்டர்க் காணியெனு மரசினரு ளடைந்துளாரே. (௩0)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

காழிநகர்ச் சிவபாத விதயர்தந்த கவுணியர்கோ னழுதுமையாள் கரு தியூட்டு, மேழிசையி னமுதுண்டு தாளம்வாங்கி, யிலங்கியசித் திலச்சிவி கை யிசையவேறி, வாழுமுய லகனகற்றிப் பந்தரேய்ந்து வளர்கிழிபெற் றரவின்விட மருகற்றீர்த்து, வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம்பிணித்து மீனவன்மே னியின்வெப்பு விடுவித்தாரே. (௩க)

ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன்னேற்றி யாற்றிலிடு மேடெதிர் போ யணையவேற்றி, யோரமண ரொழியாமே கழுவிலேற்றி யோதுதிருப் பதிகத்தா லோடமேற்றிக், காருதவு மிடிபுத்தன் றலையிலேற்றிக் காயாத பனையின்முது கனிகளேற்றி, யீரமிலா வங்கமுயி ரெய்தவேற்றி யிலங்கு பெரு மணத்தரனை யெய்தினரே. (௩உ)

## ஏயர்கோன்கலிக்காமநாயனர்.

ஏதமில்வே ளாளர்பெரு மங்கலத்து ளேயர்கோன் கலிக்காம ரிறை யைநேரோ, தூதுகொளு மவனனுகி லென்னுமென்னுந் துணிவினர்பா

லிறைவனருஞ் சூலேயேவி, வேதனேவன் றெண்டன்வரி னீங்குமென்ன வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேயநாவற், போதகமு முடலிகழ வெழுந்துதாழ்ந்து போற்றியது விலக்கியருள் பொருந்தினரோ. (௬௩)

திருமூலநாயனார்.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற்சேர்வார் காவிரிசூழ் சாத்தனூர் கருதுமூலன், பயிலாநோ யுடன்வீயத் துயரநீடும் பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்துபோத, வயலாகப் பணடையுட லருளான்மேவி யாவடுதண் டுறையாண்டுக் கொருபாவாகக், குயிலாரு மரசடியி லிருந்துகூறிக் கோதிலாவடகைலை குறுகினரோ. (௬௪)

தண்டியடிகணாயனார்.

திருவாரூர் வருந்தண்டி யடிகள்காட்சி சேராதார் குளந்தொட்டற் கமணர்சீறிக், குருடாநீ முன்செவிடுங் கூடிற்றென்று குறித்தறியைப் பறித்தெறியக் கொதித்துத்தங்க, ணருளாலே விழித்தெவரு மந்தராக வமணர்கலக் கம்பலகண் டவர்கள்பாழிப், பருவான கற்பறித்தா விக்கணையுங்கட்டிப் பரனருளா லமருலகம் பற்றினரோ. (௬௫)

மூர்க்கநாயனார்.

தொண்டவள நாட்டுவளர் வேற்காட்டூர்வாழ் தொல்லுழவர் நற்சூதர் சூதுவென்று, கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுதளிக்குங் கொள்கையினர் திருக்குடந்தை குறுகியுள்ளார், விண்டிசைவு குழறுமொழி வீணர்மாள வெகுண்டிட லான் மூர்க்கரென விளம்புநாம,மெண்டிசையு மிகவுடையா ரண்டர்போற்று மேழுலகு முடனாளு மியல்பினரோ.

சோமாசிமாறநாயனார்.

அம்பர்நக ரந்தணர்சோ மாசிமாற ரன்பர்களாம் யாவர்க்கு மன்பினமுதளிப்பா, ரும்பர்கிகழ் வகையாகம் பலவுஞ்செய்யு முண்மையினைந்தெழுத்து மோவாநாவார், நம்பர்திகழ் திருவாரூர் நயந்துபோற்று நாவலர்கோ னடிபரவு நன்மையாலே,யிம்பர்தொழ வும்பர்பணிந் தேத்தமேலை யேழுலகு முடனாளு மியல்பினரோ. (௬௭)

சாக்கியநாயனார்.

சங்கமங்கை வரும்வேளாண் டலேவர்காஞ்சிச் சாக்கியரோ டியைந்தவர்தந் தவறுஞ்சைவத், துங்கமலி பொருளுமுணர்ந் தந்தவேடந் துறவாதே சிவலிங்கந் தொழுவோர்கண்டோ, ரங்கன்மலர் திருமேனி யழுந்தச்சாத்தி யமருநாண் மறந்தொருநா ளருந்தாதோடிச், செங்கலெறிந் திடுமெளவின் மகிழ்ந்தநாதன் றிருவருளா லம்ருலகஞ் சேர்ந்துளாரோ. (௬௮)

சிறப்புலிநாயனார்.

திருவாக்கூ ரருமறையோ ருலகமேத்துஞ் சிறப்புலியார் மறப்புலியா ரிருமேற்செங்க, ணரவார்த்தூர் தருமேற்றூர்க் கன்பரானூர்க் கமுதூ

ளிப்பா ரொளிவெண்ணீ றணிந்தமார்பர், பெருவாக்கான் மறைபரவி யா கம்போற்றும் பெற்றியினு ளாங்கெழுத்தும் பிறழாதோதிக், கருவாக்கா விறைவன்று ளிணைகள்சேர்ந்த கருத்தினு ரெனையாவுந் திருத்தினரே.

## சிறுத்தொண்டநாயனுர்.

பல்குமருத் துவரதிபர் செங்காட் டங்குடிவாழ் படைத்தலைவ ரமு தளிக்கும் பரஞ்சோதியார்மெய்ச், செல்வமிகு சிறுத்தொண்டர் காழிநா டன் றிருவருள்சேர்ந் தவர்வளருஞ் சீராளன்றன்னை, நல்குதிரு வெண் காட்டு நங்கை சமைத்திடப்பின் னன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட் டுதவப், புல்கவரும் வயிரவர்தா மகிழ்ந்துமகவருளப் போற்றியவர் சிவ னருளே பொருந்தினரே. (௪0)

## சேரமான்பெருமாணுயனுர்.

காவலர்ம கோதையார் கொடுங்கோளூர்க்கோக் கழறியவை யறிந்த கோச்சிலம் போசைக்கருத்தார், நாவலர்கோ னண்பரடிச் சேரனென் றே நவின்றுவரும் வண்ணுனை நயந்தகோநற், பாவலர்கோப் பாணபத் திரனல்வாய்ந்த பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோவெற்பின், மேவிய கோ வானைக்குக் குதிரைவைத்த வீரர்கோ வெனையாளுஞ் சேரர்கோவே.

## கணநாதநாயனுர்.

கந்தமலி வயற்காழி மறையோரேத்துங் கணநாதர் திருத்தோணிக் கடவுளார்க்கு,நந்தவனம் பலவமைத்து மலருங்கொய்து நற்றமஞ்சொற் றும நயந்துசாத்தி, வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள்பூட்டி வாது செய்த வாரணத்தை மகிழ்ந்துவாழ்த்திப், புந்திமகிழ்ந் தரனருளாற் கயி லைமேவிப் பொருவில்கணத் தவர்காவல் பொருந்தினரே. (௪௨)

## கூற்றுவநாயனுர்.

குன்றுத புகழாளர் களந்தைவேந்தர் கூற்றுவனர் மாற்றலர்மண் கொண்டுசூடப், பொன்றுமு முடிவேண்டப் புலியூர்வாழும் பூசுரர்கள் கொடாதகலப் புரிதனீந்த, மன்றுடுந் திருவடியே முடியாச்சூடி மாநிலங் காத் திறைவனுறை மாடக்கோயிற், சென்றுசை யுடன்வணங்கிப் பணி கள்செய்து திருவருளா லமருலகஞ் சேர்ந்துளாரே. (௪௩)

## பொய்யடிமையில்லாதபுலவர்.

பொய்யறியாக் கபிலரொடு பரணராதிப் புலவோர்பொற் பார்கலை கள் பொருந்தவோதிச், செய்யுளிடை வளராசு மதுரநல்ல சித்திரவித் தாரமெனத் தெரிக்குஞ்செம்மை, மெய்யுடைய தொடைகளெல்லா மன் றுளாடன் மேவியகோ னிருதாளில் விரவச்சாத்திக், கையுடையஞ் சலி யினரா யருளான்மேலைக் கருதரிய வமருலகங் கைக்கொண்டாரே. (௪௪)

## புகழ்ச்சோழநாயனார்.

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார்சோழர் போதகம்போ லெண்ணுயிரும் போக்குமென்றே, யழலவிர்வாள் கொடுத்தபிரா னதிகைமான் மேல்டர்ந்தபெரும் படையேவ வவர்கொண் டேய்ந்த, தழல்விழிகொடலைகாண்பார் கண்டதோர்பன் சடைத்தலையைமுடித்தலையாற் றாழ்ந்து வாங்கிக், கழல்பரவி யதுசிரத்தி னேந்திவாய்ந்த கனன்மூழ்கி யிறைவ னடி கைக்கொண்டாரே. (சரு)

## நரசிங்கமுனையரையநாயனார்.

நாடுபுகழ் முனைப்பாடி நாடுமேய நரசிங்க முனையர்புவி நயந்துமன்று, ளாடுமெவ ராதிரைநா ளடியார்க்கம்பொ னமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்து தூர்த்த, வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொனீந்துவிடுத்தழகா ராலயங்கள் விளங்கச்செய்து, தோடலர்தா ருடையபிரா னருளையாளத் தோன்றினு ரெனையருளி னூன்றினரே. (சசு)

## அதிபத்தநாயனார்.

அலையாருங் கடனுகை நகருள்வாழு மதிபத்தர் பரதவர்க ளதிபர் வேலை, வலைவாரி வருமீனிற் றலைமீனீசன் வார்கழற்கே யென்றுவிடு மரபார்பன்னுட்,டலையான தொருமீனே சாரநாளுந் தந்தொழிலால் விடுத்துமிடி சாரச்செம்பொ, னிலையாரு மணிநயந்த மீனென்றெய்த நீத்தருளா லிறைவனடி நேர்ந்துளாரே. (சஎ)

## கலிக்கம்பநாயனார்.

கடவுளருட் கண்ணூர்கள் பயிலுந்தொல்லைக் கடந்தைநகர் வணிகர் கலிக் கம்பரன்பர்க், கடிமையுற வமுதளிப்பா ரடியானீங்கி யருளுருவா யன்பருட னணையவேத்தி, யிடையிலவ ரடியிணையும் விளக்காதிற்ப வீகழ்மனைவி கரகமலி யிரண்டுகையும், படியில்விழ வெறிந்தவள்செய் பணியுந்தாமே பரிந்துபுரிந் தரனருளே பற்றினரே. (சஅ)

## கலியநாயனார்.

தடமதில்சூ ழொற்றியூர் நகருள்வாழுஞ் சக்கரப்பா டியர்குலமெய்த் தவமாயுள்ளார், படர்புகழார் கலியனுர் நலியுங்கூற்றைப் பாய்ந்தவர்க்கு விளக்கெரிக்கும் பரிவான்மற்றே,ருடலிலராய்ச் செக்குழல்வார்க்கதுவுநேரா துயர்மனைவி யைக்கொள்வா ருளருமின்றி, மிடறுதிர மகனிறைய வரியநாதன் வியன்கைகொடு பிடிப்பவருண் மேவினரே. (சகூ)

## சத்திநாயனார்.

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சியூர்வாழ் வேளாளர் சத்தியார் விமலர் பாதத், துரியவர்க ளடிபரவு மொருமையார்நா வோவாமே யைந்தெழுந்து முறைக்குரோ, ரிருளின்மிட னுடையபிரா னடியார்தம்மை யிகழ்வார்

கோத் தண்டாயத் திடுக்கிவாங்கி, யரியுமது திருத்தொழிலா வுடையர் மன்று ளாடியசே வடிநீழ லடைந்துளாரே. (ருo)

ஐயடிகள்காடவர்கோனாயனார்.

வையநிகழ் பல்லவர்தங் குலத்துவந்த மாமணிமா நிலமுழுது மகிழ்ந்துகாக்கு,மையடிகள் காடவர்கோ னருளானூல்க ளறிந்தரசு புரிந்திடுத லமையு மென்றே, பொய்யனைய வுடல்வாழ்வு கழியுமாறு பொருந்தியிடும் புகழ்வெண்பா புலியூர்மேவுஞ், செய்யதிரு வடிமுதலாப் பதிகடோறுஞ் செப்பினா ரென்வினைக டப்பினாரே. (ருக)

கணம்புல்லநாயனார்.

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால்வாழு மிருக்குவே ளூர்திபரெழிலார்சென்னிக், கலைநிலவா ரடிபரவுங் கணம்புல்லர் தில்லைக்கீகருது புலீச் சரத்தரற்குக் காதற்றீப, நிலைதரத்தா மிடமிடியா லொருநாட்புல்லா னீடுவிளக் கிடவதுவு நேராதாகத், தலைமயிரி னெரிகொளுவ மளவினாதன் றுவாதவாழ்வருளுந் தன்மையாரே. (ருஉ)

காரிநாயனார்.

திருக்கடவூர்வருமுரவோர் காரியாராந் திகழ்தொண்டர் வண்டமிழ்நூ லிருந்தவோதி, விருப்பொடுதம் பெயர்சற்பா விளம்பிமும்மை வேந்தரையு முறைமுறையே மேவியங்க, ணுரைத்தவுரை நயமாக்கி யவர்பாலேய்ந்த வொண்பொருளா லாலயங்க ளோங்கச்செய்து தரைக்குளருந் தவர்க்கேவ றகமுன்போற்றுந் தன்மையா லருள்சேர்ந்த நன்மையாரே.

நெடுமாறநாயனார்.

கன்னன்மலி நெல்வேலிக் கவினார்மாறர் கவ்ரியர்கோ னமணருறுகலக்கமெல்லாம், பொன்னெயில்சூழ் சிரபுரக்கோ னணையமாற்றிப் புகிதமிகு நீறணிந்து போற்றிசெய்து, மன்னுபுகழ் மங்கையருக் கரசியாராமலர்மாது மணிமார்ப மகிழ்ந்துமாற்றார், வெங்கிடுதல் கண்டரசு புரிந்துகாழி வேந்தருள் சேர்ந்தபெரு விறலினாரே. (ருச)

வாயிலார்நாயனார்.

ஞாயிலார் மதிற்றொண்டை நாட்டுமேன்மை நண்ணுமயிலாபுரியின் வேளாண் டொன்மை,வாயிலார் மலைவில்லா னடியேபோற்றி மறவாமை நிலைநின்ற மநமேசெம்பொற், கோயிலா வுயர்ஞானம் விளக்காநீராக் குலவியவா நந்தமன்பே யமுதாக்கொண்டு, தாயிலா னிருசரண நிகழவேத்துந் தன்மையா ரருள்சேர்ந்த நன்மையாரே. (ருரு)

முனையடுவார்நாயனார்.

பொன்னிவளந் தருநாட்டுப் புகழுநீடூர்ப் பொருவிறிரு மலிவேளாண் டொன்மை மிக்கார், முன்னியவர் முனையடுவா ரிகலார்போரின் முத

ணழிவார் தமக்காக மொழிந்தகூலி, மன்னுநிதி கொண்டுசெயங்கொடுத்து வந்த வளர்பொருளா லிறைவனடி வழுவாவன்பர்க்,கன்னமவர் நசையின் மிகமிசையநல்கு மன்பர்துன்ப மவையாவு மகன்றுளாரே. (ருசா)

## கழற்சிங்கநாயனுர்.

காடவர்தங் குலமுவந்த கழலார்சிங்கர் காதன்மிகு தேவியுடன்காவ லாரூ ராடவல பெருமானைப் பணிவாரங்கோ ரகன்றமலர் தனைமோந்த வரிவைமூக்கைச், சேடுடைய செருத்துணையா ரரியக்கேட்டுத் திறலரசர் மலரெடுத்த செங்கையென்றே, சூடகமுன் கைதடிந்து ஞாலங்காத்த தூய்மையா ரருள்சேர்ந்த வாய்மையாரே. (ருஎ)

## இடங்கழிநாயனுர்.

கோனாட்டுக் கொடும்பாளு ரிருக்கும்வேளிர் குலத்தலைவ ரிடங்கழி யார் கொங்கிற்செம்பொ, னானேற்றூர் மன்றின்முக டம்பொன் மேய்ந்த வாதித்தன் மரபோர்நெற் கவர்ந்தோரன்பர்,போனாப்ப ணிருளின்கட் கா வலாளர் புரவலர்முன் கொணரவவர் புகலக்கேட்டு, மானேற்று ரடியா ரே கொள்கவென்று வழங்கியர சாண்டருளின் மன்னினுரே. (ருஅ)

## செருத்துணைநாயனுர்.

இரைத்தணையார் புனற்பொன்னி மருதநன்னாட் டெழிலாருந் தஞ் சைநக ருழவரேத்துஞ். செருத்துணையார் திருவாரூர் சேர்ந்துவாழ்வார் செல்வமிகும் பல்லவர்கோன் றேவிவீழ்ந்த,மருத்துணையார் மலரெடுத்து மோப்பக்கண்டு வளமலிபூங் கத்தியா லவண்மூக்கீர்ந்த, கருத்துணையார் விறற்றிருத்தொண் டினையேசெய்து கருதலரு மமருலகங் கைக்கொண் டாரே. (ருகூ)

## புகழ்த்துணைநாயனுர்.

புண்ணியர்கள் புகழுழகார் திருப்புத்தூர்வாழ் புகழ்த்துணையா ரக த்தடிமைப் புரிதர்சின்னாண், மண்ணிகழ மழைபொழியா வற்காலத்தால் வருந்துடல நடுங்கிடவு மணிநீரேந்தி, யண்ணன்முடி பொழிகலச முடி மேலவீழ வயர்ந்தொருநாப் புலம்பவர னருளாலீந்த, நண்ணலரு மொ ருகாசுப் படியால்வாழ்ந்து நலமலிசி ரமருலக நண்ணினுரே. (சா0)

## கோட்புலிநாயனுர்.

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவேளாளர் கோட்புலியார் குவித் துயர்த்த செந்நெற்கூடு, நிலவணிவார்க் கமைத்தாணை நிறுத்தியொன்னார் னேர்மலைவார் திருவாணை நினையாதேநெற், சிலமிடியா லழித்தபடி யறிந் துவாளாற் சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதறவீசி, யிலகுமொரு குழவி யையு மெறிந்துநாத னெண்ணரிய கருணைசிழ லெய்தினுரே. (சாக)

பத்தராய்ப்பணிவார்கள்.

தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்தலழகார் துளங்கிய வர்ச் சனைபுரித ருெகுதி நியமங்கள். கொண்டபணி திருவடிக்கே கொடுத்தலீசன் குண்மருவு மருங்கதைபைக் குலவிக்கேட்டு.மண்டிவிழி துளும்பன்மயிர்சிலும்பலுன்னன் முருவுதிருப் பணிகாட்டி வருபவாங்கி,யுண்டிகொளா தொழிதலென விவையோரெட்டு முடையரவர் பத்தரென வுரைத்துளாரே. (சுஉ)

பரமனையேபாடுவார்.

அருந்தமிழால் வடகலையா லருளாலொன்று லறிவுநெறிமருவுமருங் கவிகள்யாவுந், திருந்தியவா னவர்பணிய மன்றுளாடுந் தேவர்பிரான் கழலிணையே சேரவோதி. விருந்திடுநா வுடையபயன் மேவினோர்தா மேலானே மெனமகிழ்ந்து விழிநீர்சோரப்,பரிந்தருளாற் பரமனையே பாடவல்ல பான்மையா ரெமையாளு மேன்மையாரே. (சுங)

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்

பாரணவும் புலனந்தக் கரணமொன்றும் படராமேநடுநாடி பயிலுநாதங்,காரணபங் கயன்முதலா மைவர்வாழ்வுங் கழியுநெறி வுழிபடவுங் கருதிமேலைப், பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவுநோக்கிப் புணர்ந்தணைந்த சிவாநுபவ போகமேவுஞ், சீரணவு மவரன்றே வெம்மையாளுஞ் சித்தத்தைச் சிவன்பாலே வைத்துளாரே. (சுச)

திருவாரூர்ப்பிறந்தார்.

பொங்கியமா தவமுடையார் வருணநான்கிற் பொருந்தினர்க ளல்லாத புகழினுள்ளார், சங்கையிலா வருந்தவமுன் புரிந்தாரிங்குச் சார்விலா ரிறைவனருள் சார்தலாலே, கங்கைவாழ் சடைமுடியா னருளானீங்காக் கணநாத ரெனவாழுங் கருத்தர்கன்னிச், செங்கண்வரால் வளர்வாவி திகழுமாரூர்ச் சிறந்துளா ரெமையாளப் பிறந்துளாரே. (சுரு)

முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.

செப்பலருந் தவமுடைய செம்மையாளர் சிறுகாலே மலர்வாவி திகழுமூழ்கி, யொப்பிறிரு நீறணிந்து நியதியாற்றி யோவாமே யைந்தெழுத்து முரைத்துமேன்மை,தப்பில்சிவா கமவிதியா லின்பாலன்பாந் தன்மையா னன்மையாந் தகையாரென்று முப்பொழுதுந் திருமேனி தீண்டவல்ல முறைமையார் பிறவிதெறுந் திறமையாரே. (சுசு)

முழுநீறுபூசியமுனிவர்.

கற்பமனு கற்பமுப கற்பமென்றிக் கடனணைந்த திருநீறுங் கணற்கணீறும், பொற்புடைய வரனுசா னங்கியாறு பொல்லாதபூமியெதிர் புனைதலாகா, வற்புதமாந் திரிபுண்ட மதியின்பாதி யகிலாங்கந் தீபமிகு மழகார்வட்ட, முற்பொலிய வுடலணியு முறையாரன்றே முழுநீறுபூசவல்ல முனிவர்தாமே. (சுஎ)

## அப்பாலுமடிச்சார்ந்தார்.

தாராரு மூவேந்தர் பயிலுந்தொல்லைத் தமிழ்நாட்டப் புறத்திறை வன் சரணஞ்சார்ந்த,சீராரு தொண்டர்களு மண்டரேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்புங்காலத்,தேராருந் தொடையிலுறு திப்பாலப்பா லெங்கைபிரா னடியடைந்த வியல்பினோரு,மாராத காதலுடையவர்களன்றோ வப்பாலுமடிச்சார்ந்த வடியார்தாமே. (சுஅ)

## பூசலார்நாயனார்.

பொருவருந்தண் டகநாட்டு நின்றவூர்வாழ் பூசுரர்கோப் பூசலார் புந்தியாலே, யிருநிதியந் தேடியா லயமுமாக்கி யெழுந்தருளப் பண்ணுவதா வெண்ணுங்காலை,யரனைத்தனைக் காடவர்கோற் கருளமன்ன னந்நகர மணைந்தவ்வா ற்றிந்துதாழ, விரவுமகக் கோயிலுற விருத்தியங்கண் வேண்டுவகொண் டிறைஞ்சியருண் மேவினாரே. (சுகூ)

## மங்கையர்க்கரசியார்.

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக்கொழுந்து மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவியார்மண், சங்கைகெட வமணசமயஞ் சாடவல்ல சைவசிகா மணிஞானத் தமிழிற்கோத்த,பொங்குதிரு வருளுடைய போதவல்லி பொருவினெடு மாறனார் புயமேல்வாழுஞ், செங்கலச முலையாட்னருளாலின்பஞ் சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்தவாறே. (எ௦)

## நேசநாயனார்.

சாலியர்கோக் காம்பிலித் தலைவர்மேன்மை தாவாத புகழ்நேசர் தஞ் சொலென்றுங், கோலியவைந் தெழுத்தோதிச் சிந்தையுன்னிக் கொண்டபொரு ளன்பர்கொளக் கொடுத்துவாழ்வார்,சீலமிகுந் திருத்தொண்டர்க் குடையுங்கீளுந் திருந்தியவெண் கோவணமுஞ் சேரவீந்து, பாலனைய வொளிநீற்றான் பாதமேத்திப் பரலோக முழுதாண்ட பான்மையாரே.()

## கோச்செங்கட்சோழநாயனார்.

வெண்ணாவ லிறைக்கொளிநூற் பந்தர்செய்த வியன்சிலம்பி யதுவழித்த வெள்ளானைக்கை, யுண்ணுடிக் கடித்தவுட லொழியச்சோழ னுயர் குலத்துச் சுபதேவன் கமலத்தோங்கும், பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச்செங்கட் பெருமானாய்த் தென்னவராய்ப் பெருங்கோவில்பலவுங், கண்ணார்வித் துயர்தில்லை மறையவர்க்குமுறையுள் கனகமய மாக்கியுருள் கைக்கொண்டாரே. (எஉ)

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்.

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும்பேரியாழ் பேணுதிரு நீலகண்டப் பெரும்பாணனார்சீர், நிறந்தருசெம் பொற்பலகை யாலவாயி னிமல

ன்பாற் பெற்றூர் சேர்ந்துசிவன்வாயி, றிறந்தருளும் வட்டிசையே சேர்ந்துபோற்றித் திருஞாந சம்பந்தர் திருத்தாள்வாழ்த்தி, யறந்திகழுந் திருப்பதிகம் யாழிலேற்றி யாசிறிருப் பெருமணஞ்சேர்ந் தருள்பெற்றூரே.()

சடையநாயனார்.

சங்கையிலா வரன்மறையோர் நாவலூர்வாழ் தவரதிபர் தம்பிரான் றோழராய, வெங்கள்பிரான் றவநெறிக்கோ ரிலக்குவாய்த்த விசைஞானி யார்தநய ரெண்ணூர்சிங்க, மங்கையர்க டொழும்பரவை மணவாளநம்பி வந்துதிக்க மாதவங்கள் வருந்திச்செய்தார், வெங்கணரா விளங்குமிளம் பிறைசேர்சென்னி விடையினு ரருள்சேர்ந்த சடையனூரே. (எச)

இசைஞாநியார்.

நாவற் றிருப்பதிக்கோர் செல்வச்சைவ நாயகமாஞ் சடையனூர் நயந்தவின்பப், பூவைக்கு லம்மடந்தை பொற்பார்கொம்பு புநிதமிகு நீறணிந்து போற்றிசெய்தே, யாவிற்றி கழுந்தலைவன் வலியவாண்ட வாரூரரவதரிக்க வருந்தவங்கள்புரிந்தார், யாவர்க்கு மெட்டாத விசைந்தவின்ப விசைஞாநி யெனஞாந மெளிதாமன்றே. (எரு)

ஆக்கியோன் பெயர்.

அத்தரடியவர்கூட்டத் தில்லைவாழு மந்தணர்பொய் யடிமையிலாப் புலவராகில்,பத்தர்முத லெழுவரோ டொன்பதின்மரேழொன் பதின்மர் தனிப் பேரெண்ணெண் பதின்மராய,வித்தொகையிற் றெண்டர்சீ ருரைத்தான்வைத்த வீரிரண்டா யிரத்திருநூற் றைம்பத்துமூன்று, முத்தமநல் விருத்தத்திற் பயனுஞ்செய்யு ளூலகெழூபத் தைந்தெனவின் றுணைக்குமன்றே.

செல்வமிகு திருத்தொண்டத் தொகையிலுள்ளார் சிறந்ததனிப் பெயராக வறுபதின்மேன்மூவர், மல்லன்மிகு கூட்டப்பே ரருள்சேர்ந்தார்கண் மாதவத்தோர் மும்மூன்று வகைபெற்றூர்க, ளில்லறத்துந் துறவறத்து மிருந்துவாழ்ந்தே யியல்பாகச் சிவபதநான் கிசைந்தார்தம்மை, யல்லலறுத் தெனையாண்ட சைவசிகாமணியா ரருட்புலியூ ருமாபதியா ரருள்செய்தாரே.

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டர்புராணசார முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௩௪௫.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருத்தொண்டர்

# திருநாமக்கோவை.

மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடவைங்
கையன் றிருவடியே காப்பு.

தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனா
ரில்லை யளித்த வியற்பகையார் தொல்லை
யிளையான் குடிமாறர் மெய்ப்பொருளா ரென்று
மிளையா விறன்மிண்ட ரின்ப மளவுமமர்
நீதி யெறிபத்தர் நீண்டபுக ழேனாதி
நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர் மேதகுசீர்
மானக்கஞ் சாற ரரிவாட்டாய ரானயர்
ஞானத் திருமூர்த்தி நாயனார் மேன்மை
முருகர் பசுபதியார் முன்னாளைப் போவார்
துரிசி றிருக்குறிப்புத் தொண்டர் மருவுமறைத்
தண்டீசர் வாகீசர் தக்க குலச்சிறையார்
கொண்ட மிழலைக் குறும்பனார் தொண்டுசெயு
நீள்காரைக் காலம்மை யப்பூதி நீலநக்கர்
மூளு நமிநந்தி முத்தமிழை யாளுந்
திருஞான சம்பந்தர் செய்ய கலிக்காம
ரருண்மூலர் தண்டி யடிகள் வருமூர்க்கர்
சோமாசி மாறனார் சாக்கியனார் சூழாக்கூர்
நாமார் சிறப்புலியார் நற்றெண்டி னேமச்
சிறுத்தொண்டர் சேரமான் செய்ய கணநாதர்
விறற்களந்தைக் கூற்றுவனார் விஞ்சைத் திறத்துமிகும்
பொய்யடிமை யில்லாப் புலவர் புகழ்ச்சோழர்
மெய்கொணர சிங்க முனையரைய ரையரதி
பத்தர் கலிக்கம்பர் கலியர் பகர்சத்தி
கைத்தபுலன் ஐயடிகள் காடவர்கோன் மெய்த்தகணம்
புல்லனார் காரிநெடு மாறர்புகழ் வாயிலார்
நல்ல முனையடுவார் நாயனார் மல்குகழற்

சிங்க ரிடங்கழியார் தஞ்சைச் செருத்துணையார்
கொங்கார் புகழ்த்துணையார் கோட்புலியா ரங்கணர்க்குப்
பத்தராய்த் தாழ்வார் பரமனையே பாடுவார்
சித்தத்தைச் சிவன்பாலே சேர்த்துள்ளார் சித்தமு
முத்தி நெறிகாட்டு முதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை யாரூர்ப் பிறந்தார்க ளத்தனையே
முப்பொழுதுந் தீண்டுவார் முழுநீறு பூசுவா
ரப்பாலு மீச னடிச்சார்ந்தார் மெய்ப்பூசல்
மானியார் நேசனார் வாழ்செங்கட் சோழனார்
பான்மையார் நீலகண்டப் பாணனார் மேன்மைச்
சடையரிசை ஞானியிவர் தம்மையெல்லாஞ் சேர்த்துத்
தொடையாகப் பாடிய வன்றொண்ட ரடியிணைகள்
சிந்தனைசெய் திந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு மயிர்சிலிர்த்து நைந்துருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங் கற்பனையு மையலுந்தீர்ந்
தத்து விதாநந்த வகண்டபரி பூரணத்தி
னித்தியமா வாழ்வார் நிசம்.

திருச்சிற்றம்பலம்.

திருநாமக்கோவை முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிகக்கோவை.

## வெண்பா.

ஒன்றுதி யோரெழுபத் தொன்றீறாய் மூவர்தமிழ்
சென்றார் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடக்குஞ் சரமுகனேர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சரமுகனே காப்பு.

பன்னுசிவ தலமொருநூற் றைம்பதிற்று மூன்று பதிகமொன்று நாற்பத்தொன் பதுபதிக மிரண்டா, முன்னுமிரு பதிற்றெட்டு நகர்பதிக மூன்று மொருபதினேர் தலம்பதிக மொருநான்கென் றுணர்க,மன்னுமிரு நான்குதல மோரைந்தே பதிக மற்றுமைந்து தலங்களுக்கு வருபதிக மாறும் பின்னுமைந்து வளநகர்க்குப் பெறும்பதிக மேழாம் பேசுமொரு நான்குதலம் பெறும்பதிக மெட்டே. (க)

பரவுமொரு நான்குதலம் பதினொன்றும்பதிகம் பன்னுமிரு தலம்ப திகம் பன்னிரண்டாப் பகரு, முறைசெயிரு தலம்பதிகம் பதினெட்டா மிப்பா லொருமூன்று தலங்களுக்கிங் குறுபதிக முறைக்கி, ளிரவிவரு ம றுநான்கு முப்பதிற்று நான்கு நீடெழுபத் தொன்றுமென நிரனிரையா மாகக், கருதுசிவ தலமிருநூற் றெழுபதிற்று நான்கு கடைகாப்போ ரெ ழுநூற்று நாற்பதிற் றுரென்பானே. (உ)

திருப்பழூவூர் சேய்ஞலூர் திருமுல்லை வாச றிருவைகா கொடிமா டச் செங்குன்றூர் வியலூர், கருக்குடிதெங் கூர்பனந்தாள் கலிக்காமூர் தலைச்சங் காடுமயேந் திரப்பள்ளி கச்சிநெறிக் காரைக்கா டோத்தூர், கருக்குடிதெங் கூர்பனந்தாள் ...

திருப்பழூவூர் சேய்ஞலூர் திருமுல்லை வாச றிருவைகா கொடிமா டச் செங்குன்றூர் வியலூர், கருக்குடிதெங் கூர்பனந்தாள் கலிக்காமூர் தலைச்சங் காடுமயேந் திரப்பள்ளி கச்சினங்கன் றுப்பூர், குரக்குக்கா பெ ரும்புலியூர் திருக்காட்டுப் பள்ளி * குடந்தைக்கீழ்க் கோட்டமொடு குட ந்தைக்கா ரோண, மெருக்கத்தம் புலியூர்வெண் டுறைகண்ணார் கோயி லிலம்பையங்கோட் டேர்சிக்க லிராமனதீச் சரமே. (ங)

பள்ளியின்முக் கூடறிரு விரும்பூளை யாலூர்ப் பசுபதீச் சரம்பாலைத் துறைபருதி நியமங், கள்ளில்குரங் கணின்முட்டந் திருமுருகன் பூண்டி கஞ்சனூர் கச்சிநெறிக் காரைக்கா டோத்தூர், புள்ளமங்கை நாட்டியத் தான் குடிகலைய நல்லூர் புக்கொளியூ ரவிநாசி பூவனூர் துறையூர், கொள் ளிக்கா டிடைச்சுரமச் சிறுபாக்கம் விளமர் கொட்டையூர் கொடுங்குன் றங் கூடலையாற் றூரே. (ச)

நெல்வேலி திருவழுந்தூர் தருமபுரம் பயற்றூர் நெடுங்களம்வக் கரையிரும்பை மாகாளம் வடுகூர், நெல்வெண்ணெய் வடகரைமாந் துறை திருவிற் கோல நீடூர்சக் கரப்பள்ளி யகத்தியான் பள்ளி, நெல்வாயில் பே ணுபெருந் துறைநாலூர் மயான நெல்லிக்கா விற்குடிவீ ரட்டமதி முற் றம், வல்லமறை யணிநல்லூர் தலையாலங் காடு வாட்போக்கி திருநாவ லூர்மயிலாப் பூரே. (ரு)

திருவாரூர்ப் பரவையுண்மண் டளிசாத்த மங்கை சிற்றேமங் தெளி ச்சேரி திருவுசாத் தானம், கரவீரந் திருவாலம் பொழில்வெண்ணெய் நல்லூர் கச்சியனே கதங்காவ தங்கோடிக் குழகு, ரரசிலிதென் குடித்தி ட்டை வடமுல்லை வாயி லம்பர்ப்பெருந் திருக்கோயில் வெண்பாக்கஞ் சுழியல், பெருமணமிந் திரநீலப் பருப்பதம்வேற் காடு பேரெயில்பாற் றுறைமூக்கீச் சரமுண்டீச் சரமே. (சு)

பழியனூர் வீரட்டங் காறூட்டுமுள்ளூர் பாதாளேச் சரமெதிர்கொள் பாடிவலி தாயஞ், சிறுகுடிகச் சூராலக் கோயில்கொள்ளம் பூதூர் திருப் புறவார் பனங்காட்டூர் விளநகர்தண் டலைநீ, ணெறியரதைப் பெரும் பாழி யூறல்கரு வூரா னிலையிடும்பா வனங்கடுவாய்க் கரைப்புத்தூர் கட

* குடந்தை என்பது - கும்பகோணம்.

ம்பந், துறைதிருவே ட்கந்திருவஞ் சைக்களமா டானை சோபுரங்கற் குடி வட் குரங்காடு துறையே. (எ)

திருமாணி குழிவேட்டக் குடிதிருவாப் பாடி திருந்துதே வன்குடி மா கறல்சத்தி முற்றந், திருவாப்ப னூர்மீயச் சூரவ்லூர் தன்னிற் றிகழுந் திரு விளங்கோயில் வெஞ்சமாக் கூடல், பெருநீலக் குடிமண்ணி படிக் கரைநன் னிலத்துப் பெருங்கோயி றிருநணு திருப்பட்டீச் சரமே, திரு வீங்கோய் மலைவன்பார்த் தான்பனங்காட் டூரோ திருப்புகலூர் வர்த்தமா னேச்சரம்பாம் புரமே. (அ)

கடைமுடியே யோணகாந் தன்றளிகோட் டூர்வை கன்மாடக் கோ யிலிடை யாறுபழை யாறை, வடதளிநற் றினைநகரங் * கோணமா மலை சீர் வன்னியூர் கருவிலிய னேகதங்கா வதநல், லிடமேவு கடிக்குளநற் றிருக்களரென் றிவைகட் கிரும்பதிக மொவ்வொன்றென் றிசைத்திடுக விப்பாற், குடவாயில் புனவாயி றூங்கானை மாடங் கோழம்ப மவளிவ ணல் லூர்கோலக் காவே. (கூ)

குருகாவூர் திருவேள்விக் குடிவிசய மங்கை குற்றாலங் குடமூக்கு கோட்டாறு பனையூர், கருகாவூர் குரங்காடு துறையோமாம் புலியூர் கண் டியூர் வேதிகுடி கானூர்கோ கரணங், திருவாரூ ரரனெறிபந் தணநல்லூர் நல்லங் திருக்கண்டீச் சரந்தேவூர் திருச்சிராப் பள்ளி, பெருவேளூர் கீழ் வேளூ ரெறும்பியூர் கானப் பேர்திருமங் கலக்குடியாக் கூர்கோவ லூரே

திருப்பரங்குன் றந்திருப்பா திரிப்புலியூர் கொறுக்கை திருப்புத்தூர் மணஞ்சேரி பாச்சிலாச் சிராமங், கருப்பறிய லூர்கேதீச் சரந்திருக்கே தாரங் கச்சிமேற் றளிமேலைத் திருக்காட்டுப் பள்ளி, யருத்தியுறு பட்டி னத்துப் பல்லவனீச் சரம்பே ரன்பிலா லந்துறைப ராய்த்துறைவேட் களமிங், குறைத்தசீ ரன்னியூ ரிவ்விரண்டாம் பதிக முள்ளதலங் கடலூர் மயானம்வாஞ் சியமே. (கக)

துருத்திதிரு நனிபள்ளி திருமருக றிருப்பூந் துருத்திபுறம் பயங்க டவூர் புள்ளிருக்கும்வேளூ, ரரத்துறைவாழ் கொள்ளிபுத்தூர் வான்மியூர் பாசூ ரம்பர்மா காளமயி லாடுதுறை வாய்மூர், திருக்கழுக்குன் றம்பா ண்டிக் கொடுமுடிரா மேச்சரஞ் செங்காட்டங் குடிவெண்ணி திருச்செ ம்பொன் பள்ளி, o பருப்பதம்புன் கூ § ரரிசொற் கரைப்புத்தூர் சேறை பைஞ்ஞீலி கற்குடிமா மலைபதிக மூன்றே. (கஉ)

* கோணமாமலை என்பது - திருக்கணமலையென வழங்குகின்றது.

o பருப்பதம் என்பது - ஸ்ரீசைலம். இதுவே மல்லிகார்ச்சுனம்.

§ அரிசொல் என்பது - ஒருநதி. விஷ்ணு சொல்லி வந்தகாரணத்தினால் அப்பெ யர்பெற்றது. கும்பகோணப் புராணத்திற்காண்க,

வலம்புரமா லங்காடு சிவபுரங்கா ளத்தி வலிவலஞ்சாய்க் காடுதிருக் கோடிகா நகரம், நலந்திகழும் பூவணங்கோ ளிலிநின்றி யூரு நறையூர்ச்சித் தீச்சரமு நான்காகும் பதிகம், வலஞ்சுழிநல் லூர்பழன மாமாத்தூ ரண்ணு மலைகடம்பூ ரின்னம்பர் நாரையூ ரைந்தா, நிலந்திகழ்நா கேச்சரமாற் பேறுமழ பாடி நெய்த்தானம் வெண்காடு நீள்பதிக மாறே. (கரு)

கயிலாய் மானைக்கா நள்ளாறு நாகைக் காரோணந் திருச்சோற்றுத் துறையேழு புகலூர், வயலாருங் கழிப்பாலை யொற்றியூர் திருவா வடுதுறையெட் டாந்தில்லை மறைக்காடு மதுரை, யியலாரு முதுகுன்றம் பதினொன்று கச்சி யேகம்ப மிடைமருதி ராறையா றதிகை, யயலீரோன் பான்விழி யாரூர்சீ காழி யறுநான்கு முப்பானுன் கெழுபத்தொன் றுமே.()

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிகக்கோவை முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிக்கோவை.

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

கோயிறிரு வேட்களநெல் வாயில்கழிப் பாலை குலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முல்லை, வாயில்கலிக் காழூர்சாய்க் காடுதிருப் பல்ல வனீச்சரம்வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி, தாயிலான் குருகாவூர் காழிகோ லக்கா தருக்கிளர் * புள் ளிருக்கும்வே ளூர்கண்ணார் கோயின்,ஞா யிலியற் கடைமுடியே நின்றியூர் புன்கூர் நாடியநீ டூரன்னி யூர்வேள்விக் குடியே. (க)

கருதெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக் கொறுக்கை கருப்பறியலூர்கதியே காட்டுகுரக் குக்கா, மருவும்வாழ் கொளிபுத்தூர் மண்ணிபடிக் கரையே வளருமோ மாம்புலியூர் கானாட்டு முள்ளூர், திருநாரை யூர்கடம்பூர் பந்தணநல் லூர்பொன் றிகழ்கஞ்ச னூர்கோடி காமங்கலக் குடியே, திருப்பனந்தா ளாப்பாடி சேய்ஞலூர் திருந்து தேவன்குடி திருவியலூர் திருக்கொட்டை யூரே. (உ)

இன்னம்பர் திருப்புறம்ப யம்விசய மங்கை யியல்வைகா வூர்நல்வட் குரங்காடு துறையே, பின்னமறு பழனமை யாறுநெய்த் தானம் பெரும்புலியூர் மழபாடி திருப்பழுவூர் கானூ, ரன்னவன்பி லாலந்துறை மாந்துறைபாற் றுறையே யானைக்கா பைஞ்ஞீலி பாச்சிலாச் சிராம, மன்னுமீங்

* புள்ளிருக்கும் வேளூர் என்பது - வைத்தீச்சுவரன்கோயில்,

கோய்மலேயி ஞேடறுபான் மூன்றே வடகரையிற் பதிதென்பால் * வாட்போக்கி யாமே. (௩.)

கடம்பந்துறை திருப்பராய்த்துறை கற்குடி 0மூக் கீச்சரங் கருதுதிருச் சிராப்பள்ளி திருவெறும்பி யூரே, நெடுங்களமே லேக்காட்டுப் பள்ளியாலம் பொழில்சிர் நிகழ்திருப்பூந் துருத்திகண்டி யூர்சோற்றுத் துறைமா, லடும்வேதி குடிதெள்குடித் திட்டைபுள்ள மங்கை யணியார்சக் கரப்பள்ளி யருங்கருகா வூரே, படர்பாலேத் துறைநல்லூர் திருவாவூ ரதனிற் பசுபதீச் சரஞ்சத்தி முற்றம்பட் டீச்சரமே. (௪)

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே † குடமூக் கதனிற்கீழ்க் கோட்டங்கா ரோணநா கேச்சரங்,கூறுமிடை மருதுகுரங் காடுதுறை நீலக் குடிவைகன் மாடக்கோயி னல்லங்கோ ழும்பஞ், சாறமரா வடுதுறைதண் டுருத்திதிரு வழுந்தூர் சகம்புகழ்மா யூரம்விள ஙகர்பறிய லூரே,வீறுசெம்பொன் பள்ளிநனி பள்ளிவலம் புரமே வியன்றலேச்சங்காடாக்கூர் விளங்கு கடவூரே. (௫)

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே தெளிச்சேரி தருமபுர நள்ளாறு கோட்டா, றுரைக்குமம்பர்ப் பெருந்திருக் கோயின்மாகாள முயர்மீயச் சூரிளங்கோ யிற்றிலதைப் பதிபூ,மருக்கமழ்பாம் புரநற்சிறு குடிவீழிமிழலே வன்னியூர் கருவிலிமன் பேணுபெருந் துறையென், கருத்துடைக்கு நறையூர்ச்சித் தீச்சரத்தோ டரிசொற் கரைப்புத்தூர் சிவபுரமுங் கலேயநல்லூர் காணே. (௬)

கருக்குடிவாஞ் சியந்திருநன் னிலத்துப்பெருங் கோயில் கவின்கொண்டீச் சரம்பனேயூர் விற்குடிதென் புகலூ, ரிருக்கும்வர்த்த மானேச்சரமிராமனதீச் சரமே யியல்பயற்றூர் செங்காட்டங் குடிமருக லிருளே, முருக்குதிருச் சாத்தமங்கை நாகைக்காரோண முன்றிருச்சிக் கற்றிருக்கீழ் வேளூர்தே வூரே, யரிக்கரியான் பள்ளியின்முக் கூடதிரு வாரூ ரனெறிமூ லட்டானம் பரவையுண்மண் டளியே. (எ)

மேலாகும் விளமர்கர வீரம்பெரு வேளூர் மிளிர்தலேயா லங்காடு குடவாயில் சேறை,நாலூர்ம யானங்கடு வாய்க்கரைப் புத்தூர் நவிலுமிரும் பூளேதிரு வரதைப் பெரும் பாழி, மாலூரு மவளிவணல் லூர்பருதி நியமம் வாழ்வெண்ணி பூவனூர் பாதாளேச் சரநேர்ச், சேலூருந் திருக்களர்சிற் றேமமுசாத் தானந் திருவிடும்பா வனத்தோடு சேர்ந்தகடிக் குளமே.

தண்டலேநீ ணெறிகோட்டூர் வெண்டுறையோ டழகே தருகொள்ளம் பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு, கண்டருதெங் கூர்நெல்லிக்கா நாட்டியத்தான் குடியே காறுயில் கன்றுப்பூர் வலிவலங்கச் சினத்தோ, டண்டர்பிரான் கோளிலிதென் றிருவாய்மூர் ‡ மறைக்கா டகத்தியான் பள்ளி

* வாட்போக்கி என்பது - ரததினகிரி, 0 மூக்கீச்சரம் என்பது - உறையூர்,
† குடமூக்கு என்பது - கும்பகோணம், ‡ மறைக்காடு என்பது-வேதாரணியம்,

கோடிக் குழகருந்தென் கரையி, லெண்டருநூற் றிருபத்தே ழிப்பாலீ ழத்தி லிசைகோண மாமலைகே தீச்சரமென் றிரண்டே. (கூ)

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டேகத்தோ டருங்கொடுங்குன் றந் திருப்புத் தூர்புனவா யிலினோ,டேலுமிரா மேச்சரமா டானை*கானப்பே ரெழிற்றிருப்பூ வணஞ்சுழிய லின்புறுகுற் றாலம், பாலலோ சனன்றிரு நெல் வேலியொடு பாண்டி பதினான்கு மலைநாட்டி லஞ்சைக்கள மொன் றே,சீலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி திருநணா 0 கொடிமாடச் செங் குன்றூர் தானே. (க0)

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின் மேவுமே ழரத்து றைவண் டேங்கானைமாட,மெஞ்சலில் கூடலையாற் றூரெருக்கத் தம்புலியூ ரிணையகலுந் தினைநகர்சோ புரமதிகை புகழே,விஞ்சுதிரு நாவலூர்† முது குன்றந் திருநெல் வெண்ணெய்திருக் கோவலூ ரறையணிநல் லூரே, மஞ்சுதிக ழிடையாறு வெண்ணெய்நல்லூர் துறையூர் வடுகூர்வீ டேயரு ளூந் திருமாணி குழியே. (கக)

தண்ணார்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச் சரம்புறவார் பனங் காட்டூர் திருவாமாத் தூரே, யெண்ணாரண் ணாமலையு நடுநாட்டி லிருபத் திரண்டாகு மிப்பாலே கம்பமேற் றளிவிண், கண்ணோங்கு மதிலோண காந்தன்றளி யனேக தங்காவ தங்கச்சி நெறிக்காரைக் காடே, யுண்ணாடு குரங்கணின்முட் டந்திருமா கறலோத் தூர்வன்பார்த் தான்பனங்காட் டூர்வல்ல மாற்பேறே. (கஉ)

‡ஊறலிலம்பையங்கோட் டூர்¶விற்கோல மாலங்கா டியர்பாசூர் வெ ண்பாக்கங் கள்ளில்கா ளத்தி, மாறிறிரு வொற்றியூர்*வலிதாயம் பாலிவ டமுல்லை வாயில்வேற் காடுதிருமயிலை, யீறிறிரு வான்மியூர் கச்சூரா லக் கோயி லிடைச்சுரங் கழுக்குன்ற மச்சிறுபாக் கம்மே,மாறிறிரு வக்கரை யே யரசிலிதொல் லிரும்பை மாகாளந் தொண்டை நன்னாட் டெண்ணி ன்முப்பா னிரண்டே. (கங)

கோகரணந் துளுவதே யத்திலொன்றே யிப்பாற் குலவுபருப் பத நீலப் பருப்பதமம் பிகைதன், பாகருறை யனேகதங்கா வதந்திருக்கே தாரம் பகர்0கொடித்தான் மலைவடக்கிற் பதியைந்தேயிவற்றோ,டாகவிரு நூற்றெழுபா னென்கென்பர் மூவ ரருட்பதிக மிருக்குமூ ரதிகமாம் வைப் பு, தாகமுட னினைப்போர்க்குந் துதிப்போர்க்கும் வினைகள் சாராவாம்பி றப்பகலுஞ் சத்தியமுத் தியுமே. (கச)

திருச்சிற்றம்பலம்.

---

* கானப்பேர் என்பது-காளையார்கோயில்,
0 கொடிமாடச் செங்குன்றூர் என்பது - திருச்செங்கோடு.
† முதுகுன்றம் என்பது - விருத்தாசலம். ‡ ஊறல் என்பது - தக்கோலம்,
¶ விற்கோலம் என்பது - கூவம், * வலிதாயம் என்பது - பாடி.
0 கொடித்தான்மலை என்பது - கைலை.

இப்போதுள்ள தேவாரத்திருப்பதிகங்களை உடையனவாயிருக்கின்ற சிவஸ்தலங்கள் இருநூற்றெழுபத்துநான்கு. அவை வருமாறு:—

சோழநாட்டிலே காவேரிக்கு வடகரையில் உள்ளதலங்கள்.

௧. கோயில். என்பது சிதம்பரம்.
௨. திருவேட்களம்.
௩. திருநெல்வாயில். எ-து. சிவபுரி.
௪. திருக்கழிப்பாலை.
௫. திருநல்லூர்ப் பெருமணம். எ-து. ஆச்சாபுரம்.
௬. திருமயேந்திரப்பள்ளி.
௭. திருமுல்லைவாயில்.
௮. திருக்கலிக்காமூர்.
௯. திருச்சாய்க்காடு.
௧0. காவிரிப்பூம் பட்டினத்துப் பல்லவனீச்சரம்.
௧௧. திருவெண்காடு.
௧௨. திருக்காட்டுப்பள்ளி.
௧௩. திருக்குருகாவூர்.
௧௪. சீர்காழி.
௧௫. திருக்கோலக்கா.
௧௬. புள்ளிருக்குவேளூர். எ-து. வைத்தீசுரன் கோயில்.
௧௭. திருக்கண்ணார்கோயில்.
௧௮. திருக்கடைமுடி.
௧௯. திருநின்றியூர்.
௨0. திருப்புன்கூர்.
௨௧. திருநீடூர்.
௨௨. அன்னியூர்.
௨௩. வேள்விக்குடி.
௨௪. எதிர்கொள்பாடி.
௨௫. திருமணஞ்சேரி.
௨௬. திருக்குறுக்கை.
௨௭. கருப்பறியலூர்.
௨௮. குரக்குக்கா.
௨௯. வாளொளிபுற்றூர்.
௩0. மண்ணிப்படிக்கரை.
௩௧. ஓமாம்புலியூர்.
௩௨. கானாட்டுமுள்ளூர்.
௩௩. திருநாரையூர்.
௩௪. கடம்பூர்.
௩௫. பந்தணைநல்லூர்.
௩௬. கஞ்சனூர்.
௩௭. திருக்கோடிகா.
௩௮. திருமங்கலக்குடி.
௩௯. திருப்பனந்தாள்.
௪0. திருவாப்பாடி.
௪௧. திருச்சேய்ஞலூர்.
௪௨. திருந்துதேவன்குடி.
௪௩. திருவியலூர்.
௪௪. கொட்டையூர்.
௪௫. திருவின்னம்பர்.
௪௬. திருப்புறம்பயம்.
௪௭. திருவிசயமங்கை.
௪௮. திருவைகாவூர்.
௪௯. வடகுரங்காடுதுறை.
௫0. திருப்பழனம்.
௫௧. திருவையாறு.
௫௨. திருநெய்த்தானம்.
௫௩. பெரும்புலியூர்.
௫௪. திருமழபாடி.
௫௫. திருப்பழுவூர்.
௫௬. திருக்கானூர்.
௫௭. அன்பிலாலந்துறை.
௫௮. திருமாந்துறை.
௫௯. திருப்பாற்றுறை.
௬0. திருவானைக்கா.
௬௧. திருப்பைஞ்ஞீலி.
௬௨. திருப்பாச்சிலாச் சிராமம்.
௬௩. ஈங்கோய்மலை.

---

காவேரிக்குத் தென்கரையிலுள்ள தலங்கள்.

௧. வாட்போக்கி. எ-து. இரத்தினகிரி.
௨. கடம்பந்துறை.
௩. திருப்பராய்த்துறை.
௪. கற்குடி.
௫. மூக்கீச்சரம், எ-து. உறையூர்.

சு. திருச்சிராப்பள்ளி.
எ. எறும்பியூர்.
அ. நெடுங்களம்.
கூ. மேலைக்காட்டுப்பள்ளி.
க0. ஆலம்பொழில்.
கக. திருப்பூந்துருத்தி.
கஉ. திருக்கண்டியூர்.
கந. சோற்றுத்துறை.
கச. திருவேதிகுடி
கரு. தென்குடித்திட்டை.
கசு. திருப்புள்ளமங்கை.
கஎ. சக்கரப்பள்ளி.
கஅ. திருக்கருகாவூர்.
ககூ. திருப்பாலைத்துறை.
உ0. திருநல்லூர்.
உக. திருவாவூர்ப்பசுபதீச்சரம்.
உஉ. திருச்சத்திமுற்றம்.
உந. திருப்பட்டீச்சரம்.
உச. திருப்பழையாறை.
உரு. வடதளி.
உசு. திருவலஞ்சுழி.
உஎ. குடமூக்கு. எ-து. கும்பகோணம்.
உஅ. திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம்.
உகூ. திருக்குடந்தைக் காரோணம்.
ந0. திருநாகேச்சுரம்.
நக. திருவிடைமருதூர்.
நஉ. தென்குரங்காடுதுறை.
நந. திருநீலக்குடி.
நச. வைகன்மாடக்கோயில்.
நரு. திருநல்லம்.
நசு. திருக்கோழம்பம்.
நஎ. திருவாவடுதுறை.
நஅ. திருத்துருத்தி. எ-து. குற்றாலம்.
நகூ. திருவழுந்தூர்.
ச0. திருமயிலாடுதுறை, எ-து. மாயூரம்.
சக. திருவிளநகர்.
சஉ. திருப்பறியலூர்
சந. திருச்செம்பொன்பள்ளி.
சச. திருநனிபள்ளி.
சரு. திருவலம்புரம்.
சசு. தலைச்சங்காடு.
சஎ. திருவாக்கூர்த் தான்றோன்றிமாடம்.
சஅ. திருக்கடவூர்.
சகூ. திருக்கடவூர்மயானம்.
ரு0. திருவேட்டக்குடி.
ருக. திருத்தெளிச்சேரி.
ருஉ. தருமபுரம்.
ருந. திருநள்ளாறு.
ருச. கோட்டாறு.
ருரு. திருவம்பர்ப்பெருந் திருக்கோயில்.
ருசு. திருவம்பர்மாகாளம்.
ருஎ. மீயச்சூரிளங்கோயில்.
ருஅ. திலதைப்பதி.
ருகூ. திருப்பாம்புரம்.
சு0. சிறுகுடி.
சுக. திருவீழிமிழலை.
சுஉ. வன்னியூர்,
சுந. கருவிலி.
சுச. பேணுபெருந்துறை.
சுரு. நறையூர்ச்சித்தீச்சரம்.
சுசு. அரிசிற்கரைப்புத்தூர்.
சுஎ. சிவபுரம்.
சுஅ. கலயநல்லூர்.
சுகூ. கருக்குடி.
எ0. திருவாஞ்சியம்.
எக. திருநன்னிலத்துப் பெருங்கோயில்.
எஉ. திருக்கொண்டீச்சரம்.
எந. திருப்பனையூர்.
எச. திருவிற்குடி.
எரு. திருப்புகலூர்.
எசு. திருப்புகலூர் வர்த்தமானீச்சரம்.
எஎ. இராமனதீச்சரம்.
எஅ. திருப்பயற்றூர்.
எகூ. திருச்செங்காட்டங்குடி.
அ0. திருமருகல்.
அக. திருச்சாத்தமங்கை.
அஉ. நாகைக்காரோணம்.
அந. சிக்கல்.
அச. கீழ்வேளூர்.

அடு. தேவூர்.
அசு. பள்ளியின்முக்கூடல்.
அஎ. திருவாரூர்.
அஅ. திருவாரூரரநெறி.
அகூ. திருவாரூர்ப் பரவையுண்மண்டளி.
கூ0. திருவிளமர்.
கூக. கரவீரம்.
கூஉ. பெருவேளூர்.
கூங. தலையாலங்காடு.
கூச. குடவாயில்.
கூடு. திருச்சேறை.
கூசு. நாலூர்மயானம்.
கூஎ. கடுவாய்க்கரைப்புத்தூர்.
கூஅ. இரும்பூளை.
கூகூ. அரதைப்பெரும்பாழி.
க00. அவளிவணல்லூர்.
க0க. பரிதிநியமம்.
க0உ. வெண்ணியூர்.
க0ங. பூவனூர்.
க0ச. பாதாளீச்சரம்.
க0டு. திருக்களர்.
க0சு. சிற்றேமம்.
க0எ. திருவுசாத்தானம்.
க0அ. இடும்பாவனம்.
க0கூ. கடிக்குளம்.
கக0. தண்டலைநீணெறி.
ககக. கோட்டூர்.
ககஉ. வெண்டுறை.
ககங. கொள்ளம்பூதூர்.
ககச. பேரெயில்.
ககடு. கொள்ளிக்காடு.
ககசு. தெங்கூர்.
ககஎ. நெல்லிக்கா.
ககஅ. நாட்டியத்தான்குடி
ககூ. காறுயல்.
கஉ0. கன்றுப்பூர்.
கஉக. வலிவலம்.
கஉஉ. கைச்சினம்.
கஉங. கோளிலி.
கஉச. திருவாய்மூர்.
கஉடு. திருமறைக்காடு. எ-து. வேதாரணியம்.
கஉசு. அகத்தியான்பள்ளி.
கஉஎ. கோடிக்குழகர்.

ஈழநாட்டிலுள்ள தலங்கள்.

க. திருக்கோணமலை.
உ. திருக்கேதீச்சரம்.

பாண்டி நாட்டிலுள்ள தலங்கள்.

க. திருவாலவாய். எ-து. மதுரை.
உ. திருவாப்பனூர்.
ங. திருப்பரங்குன்று.
ச. திருவேடகம்.
டு. கொடுங்குன்றம்.
சு. திருப்புத்தூர்.
எ. திருப்புனவாயில்.
அ. இராமேச்சுரம்.
கூ. திருவாடானை.
க0. திருக்கானப்பேர். எ-து. காளையார்கோயில்.
கக. திருப்பூவணம்.
கஉ. திருச்சுழியல்.
கங. திருக்குற்றாலம்.
கச. திருநெல்வேலி.

மலைநாட்டிலுள்ள தலம்.

க. திருவஞ்சைக்களம்.

கொங்குநாட்டிலுள்ள தலங்கள்.

க. அவிநாசி.
உ. திருமுருகன்பூண்டி.
ங. திருநணா. எ-து. பவானிகூடல்.
ச. கொடிமாடச்செங்குன்றூர். எ-து. திருச்செங்கோடு.
டு. வெஞ்சமாக்கூடல்.

௬. திருப்பாண்டிக் கொடுமுடி.
௭. கருவூரானிலை.

## நடுநாட்டிலுள்ள தலங்கள்.

௧. திருநெல்வாயிலரத்துறை,
௨. திருப்பெண்ணுகடம்— தூங்கானைமாடம்.
௩. கூடலையாற்றூர்,
௪. திருவெருக்கத்தம்புலியூர்.
௫. திருத்தினைநகர்,
௬. திருச்சோபுரம்,
௭. திருவதிகை,
௮ திருநாவலூர்,
௯. திருமுதுகுன்றம், எ-து, விருத்தாசலம்,
௧௦. திருநெல்வெண்ணெய்.
௧௧, திருக்கோவலூர்
௧௨, அறையணிநல்லூர்
௧௩, இடையாறு.
௧௪, திருவெண்ணெய்நல்லூர்,
௧௫, துறையூர்
௧௬, வடுகூர்,
௧௭, திருமாணிகுழி,
௧௮, திருப்பாதிரிப்புலியூர்.
௧௯, முண்டீச்சரம்
௨௦, புறவார்பனங்காட்டூர்,
௨௧, ஆமாத்தூர்.
௨௨. திருவண்ணாமலை.

## தொண்டைநாட்டிலுள்ள தலங்கள்.

௧, திருக்கச்சியேகம்பம்,
௨, திருக்கச்சிமேற்றளி,
௩, திருவோண காந்தன்றளி
௪, கச்சியனேக தங்காவதம்,
௫, கச்சிநெறிக்காரைக் காடு,
௬, குரங்கணின்முட்டம்,
௭, திருமாகறல்,
௮, திருவோத்தூர்,
௯, பனங்காட்டூர்,
௧௦, வல்லம்,
௧௧, திருமாற்பேறு,
௧௨, திருவூறல், எ-து, தக்கோலம்,
௧௩, இலம்பையங்கோட்டூர்,
௧௪, திருவிற்கோலம், எ-து, கூவம்,
௧௫, திருவாலங்காடு,
௧௬, திருப்பாசூர்,
௧௭, திருவெண்பாக்கம்,
௧௮, திருக்கள்ளில்,
௧௯, திருக்காளத்தி,
௨௦, திருவொற்றியூர்,
௨௧, வலிதாயம் எ-து, பாடி,
௨௨. திருமுல்லைவாயில்,
௨௩, திருவேற்காடு
௨௪, திருமயிலாப்பூர்,
௨௫, திருவான்மியூர்,
௨௬, திருக்கச்சூராலக்கோயில்,
௨௭, திருவிடைச்சுரம்,
௨௮, திருக்கழுக்குன்றம்.
௨௯, அச்சிறுபாக்கம்,
௩௦. திருவக்கரை,
௩௧- அரசிலி.
௩௨. இரும்பைமாகாளம்.

## துளுவநாட்டிலுள்ள தலம்.

௧. திருக்கோகர்ணம்.

## வடநாட்டிலுள்ள தலங்கள்.

௧, திருப்பருப்பதம், எ-து, ஸ்ரீசைலம் அல்லது மல்லிகார்ச்சுனம்,
௨, இந்திரநீலபருப்பதம்,
௩, அனேகதங்காவதம்,
௪, திருக்கேதாரம்,
௫, நொடித்தான்மலை, எ-து, ஸ்ரீகைலாசமலை,

அட்டவீரட்டம்.

பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழூவூர்
காமன் குறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியிற்
றேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே.

௧, திருக்கண்டியூர் - பிரமனது சிரங்கொய்த தலம்,
௨. திருக்கோவலூர் - அந்தகாசுரனைக் கொன்றதலம்.
௩, திருவதிகை - திருபுரத்தை யெரித்ததலம்.
௪. திருப்பறியலூர் - தக்கன்சிரசைத் தடிந்த தலம்.
௫, திருவிற்குடி - சலந்தரனைத் தலையரிந்த தலம்,
௬, திருவழூவூர் - யானையையுரித்த தலம்,
௭, திருக்குறுக்கை - மன்மதனை யெரித்த தலம்,
௮ திருக்கடவூர் - இயமனை யுதைத்த தலம்,

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிக்கோவை முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அறுபத்துமூன்று நாயன்மார்

# திருநக்ஷத்திரம்.

காப்பு.

நேரிசைவெண்பா.

ஒன்றகல வெட்டெட்டா மோதுமடி யாரன்பாற்
றுன்றுமதி நாளினிது சொல்லவே—வென்றிதரும்
பொன்னிதிவி னாயகனார் பூமுடிமே லாடுதிருச்
சன்னிதிவி நாயகனார் தாள்.

நிலமண்டில ஆசிரியப்பா.

தில்லைவாழந்தணர் திருவருளாலவர்
மல்குசீர்ப்பதத்தை மகிழ்வொடுவணங்கிக்
கடிதிருநீல கண்டர்தைவிசாகம்
வடிவியற்பகையார் மார்கழியுத்திரம்
வருமிளையான்குடி மாறராவணிமகங்
கருதுமெய்ப்பொருளார் கார்த்திகையுத்திரம்

விறன்மிண்டகண்டர் மேடமாதிரைநா
ளறனமர்நீதி யானிப்பூரம்
மாணெறிபத்தர் மாசியிலத்தங்
காணுமேனாதியார் கன்னியுத்திராட
மலர்கண்ணப்பர் மகரமான்றலையிற்
குலவுகுங்கிலியர் கோளரிமூலங்
தருமானக்கஞ் சாறர்விற்சுவாதி
யரிவாட்டாயர்தை யாதிரைநாளி
லானாயர்கார்த்திகை யத்தநாளிற்
கானமூர்த்தியார் கடகத்தாரன்
முருகரிடப மூலமதனி
லுருத்திரபசுபதி யுயர்கன்னிமூன்னாள்
பொருந்திருநாளைப் போவார்கன்னியிற்பார்
திருக்குறிப்படியார் சித்திரைச்சுவாதி
தண்டீசராமவர் தையுத்திரத்திற்
றண்டமிழப்பர் தகரிற்சதயங்
குலச்சிறைநாயனார் கோளரியனுட
மலகில்குறும்ப ராடியிற்சித்திரை
யருள்காரைக்கா லம்மைமீன்விளக்கா
மருகிலப்பூதிதை யதிற்சதயத்திற்
கமைநீலநக்கர் காளைமூலத்தி
னமிநந்தியடிக ளாள்விடைப்பூச
ஞானசம்பந்தர் நாள்விடைமூல
மானகலிக்காம ரானிரேவதியி
லருட்டிருமூல ரைப்பசிமுன்னாள்
வருதண்டியடிகள் வளர்மீன்சதயஞ்
சேமமாமூர்க்கர் தேண்மதிமூலஞ்
சோமாசிமாறர் தொழுவிடையாவிற்
சாக்கியநாயனார் தனுப்பூராடங்
தேக்கியசிறப்புலி தேட்பூராடஞ்
சேர்சிறுத்தொண்டர் சித்திரைப்பரணி
சேரமான்கடகஞ் சேர்ந்தசோதினியிற்
கணநாதர்மீனங் கலந்தவாதிரையிற்
குணமாங்கூற்றுவர் குளிர்மதியாதிரை
பொய்யடிமையில்லாப் புலவர்தாள்போற்றி
மெய்ப்புகழ்ச்சோழர் மினிர்குளிரா
னரசிங்கமுனையார் நற்கன்னிசதயந்
திரவதிப்த்தர் சிங்கவாயிலியங்
கலிக்கம்பர்மகரக் கடைநாளதனிற்

கலியராடியினிற் கலந்தவிந்திரனு
டியசிறசத்தியார் துலாப்பூசத்தி
லையர்காடவர்கோனைப்பசிமூலங்
கணம்புல்லநாயனுர் கார்த்திகையங்கி
கணஞ்சேர்காரியார் கடம்பூராடங்
தூய்நெடுமாறர் துலாமதிப்பரணியில்
வாயிலார்நாயனுர் மார்கழியிரேவதி
வெம்முனையடுவார் மீனப்பூசஞ்
செம்மையாநங்கழற் சிங்கர்சேப்பரணி
மருவிடங்கழியார் மதிதுலாவாரல்
செருத்துணைநாயனுர் சிங்கப்பூசஞ்
சேட்புகழ்த்துணையார் சிங்கவாயிலியங்
கோட்புலிநாயனுர் குளிர்மதிகேட்டை
பத்தராய்த்தாழ்வார் பரமனைப்பாடுவார்
சித்தத்தைச்சிவன் பாலேசேர்த்துளா
ரப்புறுசெய்த்திரு வாரூர்ப்பிறந்தார்
முப்பொழுதுந்திரு மேனிதீண்டுவார்
முப்புவிதொழுமுழு நீறுபூசுவா
ரப்பாலுமடிச் சார்ந்தாரைவணங்கிப்
பூசலாரைப்பசி புகுமனுடத்தின்
மாசிலாமானியார் மைம்மதியுரோகணி
மிகுசிவநேசர் மீனரோகணியிற்
றெகுபுகழ்ச்செங்கட் சோழர்குடக்குன்
றடுநீலகண்ட யாழ்ப்பாணர்சேமூலஞ்
சடையனுர்மார்கழி சார்ந்தவாதிரையி
லிசைஞானிமேடத் திசைந்தசித்திரையில்
வசையிலாவிம்மதி மருவுமிந்நாளிற்
பரகதியடைந்த பத்தரைப்பாடிக்
கருதுவன்றொண்டர் கடகச்சுவாதி
குருபூசைநாளிற் குறைவிலாதிவர்க்கு
வருபூசைதந்தோர் மாநிலத்தோங்கித்
தவப்பயனெய்திச் சதுர்மறைக்கிரியிற்
சிவகதியடைத றிண்ணமுண்மையதே.

திருச்சிற்றம்பலம்.

---

## சித்திரைமீ.

| | |
|---|---|
| பரணி | சிறுத்தொண்டநாயனுர் |
| உரோகிணி | மங்கையர்க்கரசியார் |

| | |
|---|---|
| திருவாதிரை | விறன்மிண்டநாயனூர் |
| அத்தம் | உமாபதிசிவாசாரியர் |
| சித்திரை | இசைஞானியார் |
| சுவாதி | திருக்குறிப்புத்தொண்டநாயனூர் |
| சதயம் | திருநாவுக்கரசுநாயனூர் |

## வைகாசிமீ.

| | |
|---|---|
| பரணி | கழற்சிங்கநாயனூர் |
| பூசம் | நமிநந்தியடிகணாயனூர் |
| ,, | சேக்கிழார்நாயனூர் |
| ஆயிலியம் | சோமாசிமாறநாயனூர் |
| மூலம் | திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர் |
| ,, | முருகநாயனூர் |
| ,, | திருநீலநக்கநாயனூர் |
| ,, | திருநீலகண்டயாழ்ப்பாணநாயனூர் |

## ஆனிமீ.

| | |
|---|---|
| மகம் | மாணிக்கவாசகசுவாமிகள் |
| பூரம் | அமர்நீதிநாயனூர் |
| இரேவதி | கலிக்காமநாயனூர் |

## ஆடிமீ.

| | |
|---|---|
| கார்த்திகை | மூர்த்திநாயனூர் |
| ,, | புகழ்ச்சோழநாயனூர் |
| திருவாதிரை | கூற்றுவநாயனூர் |
| சித்திரை | பெருமிழலைக்குறும்பநாயனூர் |
| சுவாதி | சுந்தரமூர்த்திநாயனூர் |
| ,, | சேரமான்பெருமாணாயனூர் |
| கேட்டை | கலியநாயனூர் |
| ,, | கோட்புலிநாயனூர் |

## ஆவணிமீ.

| | |
|---|---|
| பூசம் | செருத்துணைநாயனூர் |
| ஆயிலியம் | புகழ்த்துணைநாயனூர் |
| ,, | அதிபத்தநாயனூர் |
| மகம் | இளையான்குடிமாறநாயனூர் |
| உத்திரம் | மறைஞானசம்பந்தசிவாசாரியர் |
| அநுடம் | குலச்சிறைநாயனூர் |
| மூலம் | குங்குலியக்கலயநாயனூர் |

## புரட்டாசிமீ.

| | |
|---|---|
| அச்சுவினி | உருத்திரபசுபதிநாயனர் |
| உரோகிணி | திருநாளைப்போவார்நாயனர் |
| பூரம் | அருணந்திசிவாசாரியர் |
| சதயம் | நரசிங்கமுனையரையநாயனர் |
| உத்திராடம் | ஏனதிநாயனர் |

## ஐப்பசிமீ.

| | |
|---|---|
| அச்சுவினி | திருமூலநாயனர் |
| பரணி | நெடுமாறநாயனர் |
| கார்த்திகை | இடங்கழிநாயனர் |
| பூசம் | சத்திநாயனர் |
| சுவாதி | மெய்கண்டதேவர் |
| அநுடம் | பூசலார்நாயனர் |
| மூலம் | ஐயடிகள்காடவர்கோனயனர் |

## கார்த்திகைமீ.

| | |
|---|---|
| கார்த்திகை | கணம்புல்லநாயனர் |
| உத்திரம் | மெய்ப்பொருணயனர் |
| அத்தம் | ஆனயநாயனர் |
| மூலம் | மூர்க்கநாயனர் |
| பூராடம் | சிறப்புலிநாயனர் |

## மார்கழிமீ.

| | |
|---|---|
| திருவாதிரை | சடையநாயனர் |
| உத்திரம் | இயற்பகைநாயனர் |
| சுவாதி | மானக்கஞ்சாறநாயனர் |
| பூராடம் | சாக்கியநாயனர் |
| இரேவதி | வாயிலார்நாயனர் |

## தைமீ.

| | |
|---|---|
| மிருகசீரிடம் | கண்ணப்பநாயனர் |
| திருவாதிரை | அரிவாட்டாயநாயனர் |
| உத்திரம் | சண்டேசுரநாயனர் |
| விசாகம் | திருநீலகண்டநாயனர் |
| சதயம் | அப்பூதியடிகணயனர் |
| இரேவதி | கலிக்கம்பநாயனர் |

## மாசிமீ.

அத்தம் எறிபத்தநாயனார்
பூராடம் காரிநாயனார்
சதயம் கோச்செங்கட்சோழநாயனார்

## பங்குனிமீ.

உரோகிணி நேசநாயனார்
திருவாதிரை கணநாதநாயனார்
பூசம் முனையடுவார்நாயனார்
சுவாதி காரைக்காலம்மையார்
சதயம் தண்டியடிகணாயனார்.

---

## சமயாசாரியர் நால்வர் வயசு.

அப்பருக் கெண்பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டிற் றெய்வீக—மிப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

---

சித்திரைச் சதயமப்பர் சிறந்தவை காசிமூல
மத்தனைப் பணிசம்பந்த ராணிமா மகத்திலந்த
முத்தமிழ் வாதவூரர் முதியால் லாடிதன்னிற்
சுத்தமாஞ் சோதிநாளிற் சுந்தரர் கயிலைசேர்ந்தார்.

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய கிறைவன்றெண்டி
ராடியிற் சோதி திருவாத வூரர்நல் லாணிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கட்டனி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

திருச்சிற்றம்பலம்.

திருநக்ஷத்திர முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குருபூசை.

சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்றும், வேதமுஞ்சிவாகமமுமே அவர்அருளிச்செய்த முதனூல்கள் என்றும், அவற்றுள்வேதம் பொதுநூல் சிவாகமம் சிறப்புநூல் என்றும், விபூதி ருத்திராக்ஷங்களே சிவசின்னங்கள் என்றும், ஸ்ரீபஞ்சாக்ஷரமே சிவமூல மந்திரம் என்றும், சிவலிங்கோபாசனையே சிவபிரானுக்குச் செயப்படும் மிகமேலாகிய வழிபாடு என்றும், விபூதி ருத்திராக்ஷதாரணமும் ஸ்ரீபஞ்சாக்ஷரஜபமும் சிவலிங்கோபாசனையும் வேதத்தில் விதிக்கப்படினும் சிவாகமத்தில் விதித்தபடி சிவதீக்ஷை பெற்றுக்கொண்டு அநுட்டிக்கப்பட்டாலன்றி முத்திசித்தியாது என்றும், விசுவசித்து, அங்ஙனம் விசுவசித்தபடியே ஒழுகும் மார்க்கம் சைவசமய மெனப்படும்.

அறுபத்துமூன்று நாயன்மார்களாலும், மாணிக்கவாசக சுவாமிகளாலும், பெரியபுராணஞ்செய்தருளிய சேக்கிழார்நாயனாராலும், சைவசித்தாந்த சாத்திரோப தேசஞ்செய்தருளிய திருக்கைலாச பரம்பரைச் சந்தான குரவர்களாகிய மெய்கண்டதேவர், அருணந்திசிவாசாரியர், மறைஞானசம்பந்தசிவாசாரியர், உமாபதிசிவாசாரியர் என்னு நால்வர்களாலுமேதமிழ்நாடெங்கும் சைவசமயந் தழைத்தோங்கியது.

ஆதலினாலே, சைவசமயிகள் யாவரும் அவ்வுண்மை நாயன்மார்களுக்கு விதிப்படி சிரத்தையோடு குருபூசை நடத்தல்வேண்டும்.

அந்நாயன்மார்க ளெல்லாருக்கும் குருபூசை செய்யச் சத்தியில்லாதவர்கள், அவர்களுள்ளே திருஞான சம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசகசுவாமிகள் என்னுஞ் சமயகுரவர்கள் நால்வரும், சேக்கிழார்நாயனாரும், மெய்கண்டதேவர் முதலிய சந்தானகுரவர்கள் நால்வருமாகிய ஒன்பதின்மருக்கு மாத்திரமாயினும் குருபூசை செய்வது அத்தியாவசியகம்.

குருபூசை செய்தற்குப் பொருளில்லாதவர்கள் தங்களாலியன்ற பதார்த்தம் யாதாயினுங் கொண்டுபோய்க் குருபூசை நடக்குந்தானத்திற் சேர்த்தல்வேண்டும். அதுவுங்கூடாதாயிற் கறிதிருத்துதல் முதலிய கைத்தொண்டுகளேனுஞ் செய்தல்வேண்டும்.

இனிக் குருபூசைக் கிரமமாமாறு:—

அந்த அந்த நாயனுருக்கு, அவரவர் முத்தி பெற்ற திருநக்ஷத்திரத்திலே, திருக்கோயிலிலே விசேஷபூசையும் வேதபாராயண தேவாரபாராயணங்களோடு உற்சவமும் செய்வித்தல்வேண்டும், திருமடத்திலாயினும், தங்கள் தங்கள் வீடுகளிலாயினும், சமயதீக்ஷிதர், விசேஷதீக்ஷிதர், நிர்வாணதீக்ஷிதர், ஆசாரியர் என்னு நால்வகை மாகேசுரர்களையும் தூரத்தே கண்டவுடனே சிரசின்மீது அஞ்சலிசெய்து விரைந்தெதிர்கொண்டு அழைத்துவந்து, அவர்களுடைய திருவடிகளைத் தீர்த்தத்தினுல் விளக்கி அத்தீர்த்தத்தைச் சிரமேற்றெளித்து, அவர்களைப்பந்தியாக இருத்தி, ஓதுவார்கள் தேவாரம் ஓத, அன்னங் கறிமுதலியவற்றைப் படைத்து அவ்வடியார்களை அத்திருநக்ஷத்திரத்திலே முத்தி பெற்ற நாயனுராகப் பாவித்து, பத்திரபுஷ்பங்களால் அருச்சனைசெய்து, தூபதீபங்கொடுத்து, கர்ப்பூராராத்திரிகம் பணிமாறப்பண்ணி, மூன்றுதரமாயினும் ஐந்துதரமாயினும் நமஸ்கரித்து, திருவமுதுசெய்வித்தல் வேண்டும்.

குருபூசை செய்பவர்களும், செய்விப்பவர்களும், குருபூசையிலே அருச்சனையேற்று அமுது செய்யப்புகும் மாகேசுரர்களும், அத்தினத்திலே குருபூசைக்கு முன்னே யாதொன்றும் புசிக்கலாகாது, அன்றிரவிலே பசித்ததாயின், அன்னம் புசியாது, பால் பழமுதலியவற்றில் இயன்றது உட்கொண்டு, சுத்தர்களாகிச் சிவபெருமானையே சிந்தித்துக்கொண்டு நித்திரை செய்தல்வேண்டும்.

வைதிகப்பிர்ராமணர் ஆயிரம்பேருக்கு அன்னதானஞ் செய்தபலமும் சமயதீக்ஷிதர் ஒருவருக்கு அன்னதானஞ் செய்த பலமும் ஒக்கும். வைதிகப்பிராமணர் பதினுயிரம் பேருக்கு அன்னதானஞ்செய்தபலமும் விசேஷதீக்ஷிதர் ஒருவருக்கு அன்னதானஞ்செய்த பலமும் ஒக்கும். வைதிகப்பிராமணர் லக்ஷம்பேருக்கு அன்னதானஞ்செய்த பலமும் நிருவாணதீக்ஷிதர் ஒருவருக்கு அன்னதானஞ்செய்தபலமும் ஒக்கும். வைதிகப்பிராமணர் கோடிபேருக்கு அன்னதானஞ்செய்த பலமும், சைவாசாரியர் ஒருவருக்கு அன்னதானஞ்செய்த பலமும் ஒக்கும். வேதாந்த மகாவாக்கியத்தை அறிந்த கோடிவைதிகப்பிராமண சந்நியாசிகள் கூடினும், நிருவாண தீக்ஷைபெற்றுக்கொண்டு சைவசித்தாந்த நூல்களாகிய சிவஞான நூல்களை ஓதிப் பதிபசுபாசமென்னுந் திரிபதார்த்தங்களின் இலக்கணத்தை அறிந்த ஒரு சைவருக்குச் சமமாகார்கள். * இது சிவவாக்காகிய சிவாகமநூற்றுணிவு.

---

* சிவாகமத்தின் ஞானகாண்டத்தை அறிந்தவரே வேதாந்தமகாவாக்கியத்தின் உண்மைப்பொருளை அறிய வல்லவர். மற்றவர் அறியமாட்டாது மயங்கி வேறுபொருள் சொல்வர்.

வாயுசங்கிதை:—"சைவநூலிற் கூறப்பட்டதும் பாசமூன்றையுந் தவிர்ப்பதும் மேலானதுமாகிய தீக்ஷையைத் தவிர வேறு யாதொரு ஆச்சிரமமும் இவ்வுலகத்திலே மனிதருக்கு மேன்மையன்று; ஆதலால் தீக்ஷயினாற்றான் மோக்ஷம். ஆச்சிரமங்களினாலும் மற்றைக் கருமங்களினாலும் மோக்ஷமில்லை. அத்துவசுத்தியின்றி முத்தியை விரும்பும் மனிதர் கோலின்றி நடக்கத் தொடங்கிய குருடர்போல்வர்; தோணியின்றிக் கடலைக் கடக்க விரும்பினவர்போல்வர்."

காந்தம், பிருகுசாபப்பிரகரணம்:—"இங்கே முப்பாசத்தை அகற்றுவதும் மேலானதுஞ் சிவசம்பந்த முடையதுமாகிய தீக்ஷையாலன்றி ஆன்மாக்களுக்கு ஆச்சிரமத்தாற்செய்யப்பட்ட உயர்ச்சியொன்றுமில்லை. ஆதலிற்றீக்ஷையாலே முத்தி. ஆச்சிரமங்களாலும் பிறகருமங்களாலும் முத்தியில்லை.

இவ்வுண்மையைச் சிறிதும் நோக்காது சைவசமயிகளுள் அநேகர் ஆதிசைவர் முதலிய சைவர்களை அவமதித்துத் தள்ளிவிட்டு, அதீக்ஷிதர்களாய்ச் சிவாகமநிந்தகர்களாய்ச் சைவசமயதாபகநிந்தகர்களாய் தமிழ்வேதநிந்தகர்களாய் அன்னியமதத்தர்களாயுள்ள ஸ்மார்த்தப்பிராமணர்களையே சற்பாத்திரமென நன்குமதித்து அவர்களுக்கு அன்னதானமுதலியன செய்தலே புண்ணியமென்று மயங்குகின்றார்களே. ஐயையோ இஃதெவ்வளவு பெருங்கொடும்பாவம்!!!

திருச்சிற்றம்பலம்.

குருபூசை முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உண்மைநாயன்மார்மகிமை.

பெரியபுராணத்திலே சொல்லப்பட்ட அறுபத்து மூன்று நாயன்மார்கள் திருவவதாரஞ்செய்தற்கு முன்னரே அவர்களுடைய சரித்திரம் பரமேதிகாசமாகிய சிவரகசியத்திலே ஒன்பதாம் அமிசத்திலே சொல்லப்பட்டிருக்கின்றது. அங்ஙனஞ் சொல்லியருளினவர், எல்லாவறிவும் எல்லாமுதன்மையும் எல்லாவநுக்கிரகமு முடைய பரமபதியாகிய சிவபெருமானே. அதனைக் கேட்டவர் அவருடைய அருட்சத்தியும் உலகமாதாவுமாகிய பார்வதிதேவியாரே.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராய்த் திருவவதாரஞ் செய்து மற்ற நாயன்மாரைத் துதித்துத் திருத்தொண்டத்தொகை பாடியருளினவர், சிவபெருமானுடைய பிரதிவிம்பமாய்த் தோன்றினவரும், பிரமவிட்டுணுக்களாலும் அணுகலாற்றாத ஆலாகலவிஷத்தைத் தமதுஉள்ளங்கையிற்கொண்டவருமாகிய ஆலாலசுந்தரரே. அவருக்குத் திருத்தொண்டத்தொகை பாடும்பொருட்டுஅடியெடுத்துக்கொடுத்தருளினவர் வன்மீகநாதராகிய சிவபெருமானே.

அச்சுந்தரமூர்த்திநாயனார் சிவபெருமானால் அனுப்பியருளப்பட்ட வெள்ளையானைமேற்கொண்டு பிரமவிட்டுணுக்கண் முதலாயினோர் சேவிப்பத் திருக்கைலாசமலையை அடையும்பொழுது, அவரைத் தூரத்தே வணங்கி அவருடைய சரித்திரத்தையும் அவருடைய திருத்தொண்டத் தொகையிலே துதிக்கப்பட்ட மற்றை நாயன்மார்களுடைய சரித்திரத்தையும் இருடிகளுக்குச் சொல்லியருளினவர், சிவபெருமான் சிதம்பரத்திலே கனகசபையிலே எல்லாருக்கும் ஆனந்தநிருத்தந் தரிசிப்பதற்கு மூலகாரணராயுள்ள வியாக்கிரபாத மகாமுனிவருடைய திருக்குமாரரும் சிவபெருமானால் வருவித்தருளப்பட்ட திருப்பாற்கடலை உண்டவரும், கிருஷ்ணருக்குச் சிவதீக்ஷைசெய்து சிவபூசை யெழுந்தருளப் பண்ணிக்கொடுத்த சைவாசாரியருமாகிய உபமன்னியு மகாமுனிவரே.

அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய சரித்திரத்தைத் திருவந்தாதியாகப் பாடும்பொருட்டு நம்பியாண்டார் நம்பிக்குத் திருத்தொண்டத் தொகையின் பொருளை அருளிச்செய்தவர் திருநாரையூரில் எழுந்தருளியிருக்கும் விநாயகக்கடவுளே.

அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய சரித்திரத்தைப் பெரியபுராணமாகச் செய்யும்பொருட்டு, தில்லைவாழந்தணர் மூவாயிரவரும், எழுநூறு திருமடத்துமுதலிகளும், மாகேசுரர் நாற்பத்தெண்ணாயிரவரும், திருக்கோயிற் றிருத்தொண்டு செய்யுந் திருவடியார் ஏழாயிரத்துத் தொள்ளாயிரவருங் கேட்கும்படி, கனகசபையிலே சேக்கிழார்நாயனாருக்குஅடியெடுத்துக் கொடுத்தருளினவர் சபாநாயகரே. அப்பெரியபுராணத்தைக் கேட்கும்பொருட்டு அநபாயசோழ மகாராஜாவுக்கு எல்லாருங்கேட்க ஆஞ்ஞாபித்தருளினவரும் அச் சபாநாயகரே.

பெரியபுராணஞ் செய்தருளிய சேக்கிழார் நாயனார்மீது புராணஞ் செய்தருளினவரும், பெரியபுராணத்தைச் சுருக்கித் திருத்தொண்டர்பு

ராணசாரஞ் செய்தருளினவரும், தில்லைவாழந்தணர்களுள் ஒருவராயும் சபாநாயகர் விடுத்தருளிய "அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங் குடியாற் கெழுதியகைச் சீட்டுப் - படியின்மிசைப் — பெற்றான் சாம் பானுக்குப் பேதமறத் தீக்கை செய்து - முத்தி கொடுக்க முறை" என்னுந் திருமுகத்தைப் பெற்றுக்கொண்டு பெற்றான் சாம்பானுக்கு உடனே முத்தி கொடுத்தருளினவராயும், அப்பெற்றான் சாம்பானுடைய மனைவியும் அரசன் முதலாயினோருங்காண அதனுண்மையை வெளிப்படுத்தி அவர்களையத்தை ஒழித்தற்பொருட்டு முள்ளிச்செடிக்கு முத்திகொடுத்தருளினவராயும் உள்ள உமாபதி சிவாசாரியரே.

இவைகளெல்லாம் இப்படியிருக்க, இக்காலத்து ஸ்மார்த்தப் பிராமணருள்ளே பலர் அவ்வறுபத்துமூன்று நாயன்மாரை வழிபடக் கூசுகின்றார்கள்; அவர்களுடைய உற்சவங்களிலே வேதபாராயணஞ் செய்யாது மறுக்கின்றார்கள்; அவர்களுடைய அருமை பெருமைகளைச் சிறிதும் சிந்தியாது அவர்களை வேண்டியவாறே நிந்திக்கின்றார்கள். ஐயையோ இது எவ்வளவு அதிபாதகம்! அநபாயசோழமகாராஜா பெரியபுராணஞ் செய்தருளிய சேக்கிழார் நாயனாரை யானைமீதேற்றித் தாமே வெண்சாமரம் வீசி நகர்வலஞ்செய்வித்தபொழுது தில்லைவாழந்தணர்கள் வேதபாராயணஞ் செய்துகொண்டு வந்தார்கள் என்று உமாபதி சிவாசாரியர் சேக்கிழார்புராணத்திற் கூறியிருக்கின்றாரே. அங்ஙனமாகவும், அப் பெரியபுராணத்திற் கூறப்பட்ட அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய உற்சவங்களிலே வேதபாராயணஞ் செய்யலாகாதென்று சிறிதும் பழிபாவங்கட்கு அஞ்சாது பிதற்றுதல் எவ்வளவோரறியாமை!

மங்கலியத்தைத் தரித்துக்கொண்டு தங்கள் தங்கள் நாயகருக்குத் துரோகஞ்செய்து இல்லொழுக்கிறந்த பெண்டிர்கள்போல, விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டு அச்சின்னங்களுக்குரிய சிவபெருமானோடு பசுக்களைச் சமமெனக்கூறியும்சிவவாக்காகியசிவாகமங்களைநிந்தித்தும் அச்சிவபெருமானுக்குத் துரோகிகளாய் ஒழுகும் இவர்கள் மற்றை எப்பாதகந்தான் செய்யக் கூசுவார்கள்! ஐயையோ! இச்சிவத்துரோகிகளை நம்முடைய சைவசமயிகள் வணங்குதலும், இவர்களிடத்தே புசித்தலும், இவர்களை விவாகம் சிராத்தமுதலிய கருமங்களிலே தானபாத்திரமாகக் கொண்டு, தாம் வருந்தித்தேடிய பொருள்களைப் பாழுக்கிறைத்து எரிவாய் நரகத்துக்கு இரையாதலும் எவ்வளவு அறியாமை!

ஓ சைவசமயிகளே சைவசமயிகளே, உங்களெதிரே அறுபத்துமூன்று நாயன்மார்களை நிந்திக்கும் ஸ்மார்த்தர்களைக் காணுந்தோறும் இந்த ஐந்து வினாக்களைக் கேட்டு, அவர்களைத் தலைகுனிவித்து அவர்கள் வாயை அடக்குங்கள். அவ்வினாக்கள் இவை.

க. ஓ ஸ்மார்த்தர்களே, உங்கள் மததாபகராகிய ஆசாரியர் சங்கராசாரியரோ அன்றோ?

உ. சௌந்தரியலகரியும் சிவானந்தலகரியும் சிவபுசங்கமும் உங்கள் சங்கராசாரியர் செய்த கிரந்தங்களோ அன்றோ?

ந. அறுபத்துமூன்று நாயன்மார்களுள்ளே திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரைச் சௌந்தரியலகரியினும், கண்ணப்பநாயனாரைச் சிவா

ணந்தலகரியினும், இயற்பகைநாயனாரையும் சிறுத்தொண்டநாயனாரையும் சண்டேசுரநாயனாரையும் சிவபுசங்கத்தினும் உங்கள் சங்கராசாரியர் துதித்திருக்கின்றாரோ அன்றோ?

௬. உங்கள் குருவாகிய சங்கராசாரியராலே துதிக்கப்பட்ட நாயன்மார்களை நீங்கள் நிந்தித்தலினாலே, அச்சங்கராசாரியரிடத்திலே அறியாமையையேற்றிக் குருநிந்தகர்களானீர்களோ அன்றோ?

௭. அறுபத்துமூன்று நாயன்மார்களை வணங்கும் பிராமணர்கள் பதிதர்களாவரெனச் சொல்லும் நீங்கள் அவர்களைத் துதிக்கும் சங்கராசாரியரைப் பதிதரெனச் சொல்லாது சொல்லி, அவரை நீங்கள் வணங்குதலாற் பதிதரிற் பதிதர்களாயினீர்களோ அன்றோ?

சைவசமயிகளே, நீங்கள் பெறுஞ் சமயதீக்ஷை முதலிய தீக்ஷைகளையும் நீங்கள் அநுட்டிக்குஞ் சந்தியாவந்தனம் சிவபூசைமுதலிய கிரியைகளையும் உங்களுள் இறந்தவர்கள் பொருட்டுச் செயப்படும் அந்தியேட்டி முதலிய கிரியைகளையும் நீங்கள் சேவிக்குந் தேவாலயங்களிற் கிரியைகளாகிய கர்ஷணாதிப் பிரதிஷ்டாந்தம் பிரதிஷ்டாதியுற்சவாந்தம் உற்சவாதிப் பிராயச்சித்தாந்தம் என்னும் பரார்த்தக்கிரியைகளையும் விதித்த நூல்கள் சிவாகமங்களே. அச்சிவாகமங்களி னுயர்ச்சியும் அவைகளில் விதிக்கப்பட்ட சிவதீக்ஷைசைவாநுட்டான முதலியவைகளின் உயர்ச்சியும் ஸ்மார்த்தர்களாலே உண்மைநூல்களெனக் கொள்ளப்படும் புராண முதலிய நூல்களிலே பலவிடங்களினும் எடுத்துச் சொல்லப்பட் டிருக்கின்றன.

இவ்வுண்மையை அறியாமையினாலும், அறிந்தவழியும் தங்களுக்கு முனிவர்களாலே கிடைத்த சாபத்தினாலும், அச்சிவாகமங்களையும் சைவசமயதாபகர்களாய்ச் சிவமாந்தன்மைப் பெறும்பேறு பெற்ற உண்மைநாயன்மார்களையும்அவர்கள் உலகமுய்யும்பொருட்டு அருளிச்செய்த தமிழ்வேத முதலியவற்றையும் நிந்திக்கும் ஸ்மார்த்தர்களை, அச்சிவாகமங்கள் உண்மைநூல்களெனக் கொண்டு அவற்றின் வழி ஒழுகப் புகுந்த நீங்கள், யாவர்களாகக் கொண்டு ஒழுகல்வேண்டும். இதனை நன்றாக ஆராய்ந்து அறிந்துகொள்ளுங்கள்.

சாதியினுஞ் சமயமே அதிகம். சமயத்தினுஞ் சாதி அதிகமெனக் கொள்வது சுருதி யுத்தி அநுபவமூன்றுக்கும் முழுமையும் விரோதம் உலகத்துச் சாதிபேதம்போலச் சற்சமயமாகிய சைவசமயத்தினும் முதற்சாதி இரண்டாஞ்சாதி மூன்றாஞ்சாதி நாலாஞ்சாதி நீசசாதியெனச் சமயநடைபற்றி ஐந்துசாதி கொள்ளப்படும். சிவாகமத்தில் விதிக்கப்பட்ட நான்கு பாதமுறைப்படி வழுவற நடந்து சிவானந்தப் பெறும்பேறு பெற்ற சீவன்முத்தர் சிவமேயாவர். இனிச் சிவஞானிகள் முதற்சாதி; சிவயோகிகள் இரண்டாஞ்சாதி; சிவக்கிரியாவான்கள் மூன்றாஞ்சாதி; சிவசரியாவான்கள் நாலாஞ்சாதி; இந்நெறிகளில் வாராதவர்களும், இவர்களையும் இவர்கள் சாத்திரமுதலியவற்றையும் நிந்திப்பவர்களும், இந்நெறிகளிலே முறை பிறழ்ந்து நடக்கின்றவர்களும், இந்த நடைகளை விட்ட பதிதர்களும், சதாசூதகிகளாகிய பஞ்சமசாதி. சிவசரியைகிரியை முதலியவைகளினாலே பொருள்தேடி உடம்பை வளர்ப்பவர்களும், அப்பொருளைப்

பாசத்தாருக்குக் கொடுத்து இன்புறுவோர்களும், கோயிலதிகாரிகளாய்த் தேவத்திரவியத்தைப் புசிப்பவர்களும், விருத்திப்பொருட்டு ஆசாரியாபிஷேகமுதலியன செய்துடையோர்களும், விருத்திப்பொருட்டுச் சிவவேடந்தரித்தவர்களும், விருத்திப்பொருட்டுத் துறவறம்பூண்டோர்களும், சிவஞானநூல்களைச் சொல்லிப் பொருள்வாங்கி வயிறுவளர்ப்பவர்களும் பிறரும் பதிதர்களுள் அடங்குவர்கள்.

இங்கே சொல்லிய முறையன்றி, சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள்செய்யும்பொருட்டுத் தமக்குத் திருமேனியாகக் கொண்டருளிய குருலிங்க சங்கமமென்னும் மூன்றினிடத்தும் ஆசையும் பணியும் வழிபாடும் கொடையும் அடிமைத்திறமும் உரிமையுமுடையவர்கள் எந்தக் கருமஞ்செய்தாலும் முதற்சாதியெனக் கொள்ளப்படுவர்கள். அத்துவசுத்திசெய்யப்பட்டுச் சிவஞானநூல்களாகிய சைவசித்தாந்த சாத்திரங்களை ஓதி அவைகளின் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த உயிரிலே சிவாசனமூர்த்திமுதலியன நியசித்து அபிடேகம் பண்ணப்பட்டவரே சற்குரு, தேகாபிப் பிரபஞ்சத்தைவிடுத்துச் சிவசம்பந்தமுற்றவரே சங்கமம் சிவஞானிகள் பாவனையுற்றதே சிவலிங்கம்.

யாவரும் தமக்கு மேன்மேற் சமயிகளைத் தரிசித்து வணங்கிப்பணி செய்தலும், கீழ்க்கீழ்ச் சமயிகளை நோக்கி இவர்களிவ்வளவில் வந்தார்களே என்று இரங்கி விதித்தன சொல்லி விலக்கியன ஒழிவித்தலுமே நீதி இப்படியன்றி ஒருவருக்கொருவர் கலாம்விளைத்தல் நீதிகேடு. தத்துவாதீதசொரூப சிவப்பேறுடையவரை ஈச சதாசிவ சாந்த பதப்பேறுடையவர் வணங்கி வழிபடல்வேண்டும். இவ்விருதிறத்தாரையும் கந்த சண்டகணதீச பதப்பேறுடையவர் வணங்கி வழிபடல்வேண்டும். இம்மூன்றுதிறத்தாரையும் வசுருத்திராதித்த பதப்பேறுடையவர் வணங்கி வழிபடல்வேண்டும். இந்நான்குதிறத்தாரையும் இவரிற்றாழ்ந்த பிராகிருதர் வணங்கி வழிபடல்வேண்டும். மேலோர்களாயுள்ள ஈச சதாசிவ சாந்த பதப்பேறுடையவர்களும் கந்த சண்ட கணதீச பதப்பேறுடையவர்களுமாகிய சைவர்கள் கீழோர்களாகிய வசுருத்திராதித்த பதப்பேறுடையவர்களாகிய ஸ்மார்த்தர்களை வணங்குதலும் அவர்களைச் சிராத்தமுதலியவற்றில் வரித்துப் பூசித்தலும் நீதியா! இதைச் சிந்தியுங்கள்.

சைவசமயிகளே, நீங்கள் இவ்வுண்மைகளெல்லாவற்றையும் நன்றாக ஆராய்ந்தறிந்து, சிவபெருமானிடத்தும் உண்மை நாயன்மாரிடத்தும் சிவாகமவிதிப்படி பத்திசெய்தொழுகக் கடவீர்கள். இவ்வுண்மைநிலைக்கு மறுதலைப்பட்டவர்களைக் கண்டால் அவர்கள்பொருட்டிரங்கிஅவர்களுக்கு நல்லறிவுச்சுடர் கொளுத்தக்கடவீர்கள். அது கூடாதாயின், அவர்கள் செய்யும் சிவாகமநிந்தை குருநிந்தை சங்கமநிந்தை முதலியவற்றைக் கேட்டு எரிவாய் நரகத்துக்கு இரையாகா வண்ணம் அவர்கள்கூட்டத்தை ஒழித்துவிடக் கடவீர்கள். இப்படிச் செய்யாது மதிமயங்கி அவ்வதிபாதகர்களைப் பெரியோர்களெனக் கொண்டு வழிபட்டொழுகுவது பாவம் பாவம்!

திருச்சிற்றம்பலம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராணம்

என்று வழங்குகின்ற

# திருத்தொண்டர்புராணம்.

## பாயிரம்.

### நடேசர்துதி.

விருத்தம்.

உலகெலாமுணர்ந்தோதற்கரியவ
னிலவுலாவியநீர்மலிவேணியன்
அலகில்சோதியனம்பலத்தாடுவான்
மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம். (௧)

ஊனடைந்தவுடம்பின் ‡ பிறவியே
தானடைந்தவுறுதியைச்சாருமாற்
றேனடைந்தமலர்ப்பொழிற்றில்லையுண்
மானடஞ்செய்வரதர்பொற்றுடொழ. (௨)

### விநாயகர்துதி.

எடுக்குமாக்கதையின்றமிழ்ச்செய்யுளாய்
நடக்குமேன்மைநமக்கருள்செய்திடத்
தடக்கையைந்துடைத்தாழ்செவிநீண்முடிக்
கடக்களிற்றைக்கருத்துளிருத்துவாம். (௩)

### திருக்கூட்டப்புகழ்ச்சி—வேறு.

மதிவளர்சடைமுடிமன்றுளாரைமுன்
றுதிசெயுநாயன்மார்தூயசொன்மலர்ப்
பொதிநலனுகர்தருபுனிதர்பேரவை
விதிமுறையுலகினில்விளங்கிவெல்கவே. (௪)

### அவையடக்கம்—வேறு.

அளவிலாதபெருமையராகிய
அளவிலாவடியார்புகழ்கூறுகேன்
அளவுகூடவுரைப்பரிதாயினும்
அளவிலாசைதுரப்பவறைகுவேன். (௫)

‡ பிறவியை - எனவும்பாடம்.

தெரிவரும்பெருமைத்திருத்தொண்டர்தம்
பொருவருஞ்சீர்புகலலுற்றேன்முற்றப்
பெருகுதண்கட § லூற்றும்பெருநசை
யொருசுணங்கனையொக்குந்தகைமையேன். (௬)

செப்பலுற்றபொருளின்சிறப்பினல்
அப்பொருட்குரை யாவருங்கொள்வரால்
இப்பொருட்கென்னுரைசிறிதாயினு
மெய்ப்பொருட்குரியார்கொள்வர்மேன்மையால். (எ)

மேயவிவ்வுரைகொண்டுவிரும்புமாஞ்
சேயவன்றிருப்பேரம்பலஞ்செய்ய
தூயபொன்னணிசோழனீடூழிபா
ராயசீரநபாயனரசவை. (அ)

அருளினீர்மைத்திருத்தொண்டறிவருந்
தெருளினீரிதுசெப்புதற்காமெனின்
வெருளின்மெய்ம்மொழிவானிழல்கூறிய
பொருளினாகுமெனப்புகல்வாமன்றே. (௯)

நூற்பெயர்—வேறு.

இங்கிதனாமங்கூறினிவ்வுலகத்துமுன்னாட்
டங்கிருளிரண்டின்மாக்கள்சிந்தையுட்சார்ந்துநின்ற
பொங்கியவிருளையேனைப்புறவிருள்போக்குகின்ற
செங்கதிரவன்போனீக்குந்திருத்தொண்டர்புராணமென்பாம். (௧௦)

பாயிரமுற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருமலைச்சிறப்பு.

விருத்தம்.

பொன்னின்வெண்டிருநீறுபுனைந்தெனப்
பன்னுநீள்பனிமால்வரைப்பாலது
தன்னையார்க்குமறிவரியானென்று
மன்னிவாழ்கயிலைத்திருமாமலை. (௧)

அண்ணல்வீற்றிருக்கப்பெற்றதாதலி
னண்ணுமூன்றுலகுநான்மறைகளும்

---

§ ஊற்றுப்பெருநசை - எனவும்பாடம்.

எண்ணின்மாதவஞ்செய்யவந்தெய்திய
புண்ணியந்திரண்டுள்ளதுபோல்வது. (௨)

நிலவுமெண்ணிறலங்களுநீடொளி
யிலகுதண்டளிராகவெழுந்ததோர்
உலகமென்னுமொளிமணிவல்லிமேன்
மலரும்வெண்மலர்போல்வதம்மால்வரை. (௩)

மேன்மைநான்மறைநாதமும்விஞ்சையர்
கானவீணையினோசையுங்காரெதிர்
தானமாக்கண்முழக்கமுந்தாவில்சீர்
வானதுந்துபியார்ப்புமருங்கெலாம். (௪)

பனிவிசும்பிலமரர்பணிந்துசூழ்
அனிதகோடியணிமுடிமாலையும்
புனிதகற்பகப்பொன்னரிமாலையு
முனிவரஞ்சலிமாலையுமுன்னெலாம். (௫)

நீடுதேவர்நிலைகளும்வேண்டிடி
னூடுமைம்பெரும்பூதமுநாட்டுவ
கோடிகோடிகுறட்சிறுபூதங்கள்
பாடியாடும்பரப்பதுபாங்கெலாம். (௬)

நாயகன்கழல்சேவிக்கநான்முகன்
மேயகாலமலாமையின்மீண்டவன்
றூயமால்வரைச்சோதியின்மூழ்கியொன்
றுயவன்னமுங்காணுதயர்க்குமால். (௭)

வேறு. இதுவெள்ளிபாடல். [யான்

காதில்வெண்குழையோன்கழறொழநெடியோன்காலம்பார்த்திருந்ததுமறி
சோதிவெண்கயிலைத்தாழ்வரைமுழையிற்றுதிக்கையோனூர்தியைக்கண்டு
மீதெழுபண்டைச்செஞ்சுடரின்றுவெண்சுடரானதென்றதன்கீ
ழாதியேனமதாயிடக்கலுற்றானென்றதனைவந்தணைதருங்கலுழன். (௮)

---

அரம்பையராடன்முழவுடன்மருங்கினருவிகளெதிரொதிர்முழங்க
வரம்பெறுங்காதன்மனத்துடன்றெய்வமதுமலரிருகையுமேந்தி
நிரந்தரமிடைந்தவிமானசோபானநீடுபெர்வழியினாலேறிப்
புரந்தரன்முதலாங்கடவுளர்போற்றப்பொலிவதத்திருமலைப்புறம்பு. (௯)

வேதநான்முகன்மால்புரந்தரன்முதலாம்விண்ணவரெண்ணிலார்மற்றுங்
காதலான்மிடைந்தமுதற்பெருந்தடையாங்கதிர்மணிக்கோபுரத்துள்ளார்
பூதவேதாளப்பெருங்கணநாதர்போற்றிடப்பொதுவினின்றுடு
நாதனூராதிதேவனூர்கோயினாயகனந்தியெம்பெருமான். (௧௰)

நெற்றியிற்கண்ணர்நாற்பெருந்தோளர்நீறணிமேனியரநேகர்
பெற்றமேற்கொண்டதம்பிரானடியார்பிஞ்ஞகன்றன்னருள்பெறுவார்
மற்றவர்க்கெல்லாந்தலைமையாம்பணியுமலர்க்கையிற்சுரிகையும்பிரம்புங்
கற்றைவார்சடையானருளினாற்பெற்றான்காப்பதக்கயிலைமால்வரைதான்.

கையின்மான்மழுவர்கங்கைசூழ்சடையிற்கதிரிளம்பிறைநறுங்கண்ணி
யையர்வீற்றிருக்குந்தன்மையினாலுமளப்பரும்பெருமையினாலு
மெய்யொளிதழைக்குந்தூய்மையினாலும்வென்றிவெண்குடையநபாயன்
செய்யகோலபயன்றிருமனத்தோங்குந்திருக்கயிலாயநீள்சிலம்பு. (கஉ)

வேறு.

அன்னதன்றிருத்தாழ்வரையின்னிடத்
தின்னதன்மையனென்றறியாச்சிவன்
றன்னையேயுணர்ந்தார்வந்தழைக்கின்றான்
உன்னருஞ்சீருபமன்னியமுனி. (கங)

யாதவன்றுவரைக்கிறையாகிய
மாதவன்முடிமேலடிவைத்தவன்
பூதநாதன்பொருவருந்தொண்டினுக்
காதியந்தமிலாமையடைந்தவன். (கச)

அத்தர்தந்தவருட்பாற்கடலுண்டு
சித்தமார்ந்துதெவிட்டிவளர்ந்தவன்
பத்தராயமுனிவர்பல்லாயிரர்
சுத்தயோகிகள்சூழவிருந்துழி. (கரு)

அங்கணோரொளியாயிரஞாயிறு
பொங்குபேரொளிபோன்றுமுன்றோன்றிடத்
துங்கமாதவர்சூழ்ந்திருந்தாரெலாம்
இங்கிதென்கொலதிசயமென்றலும். (கசு)

அந்திவான்மதிசூடியவண்ணருள்
சிந்தியாவுணர்ந்தம்முனிதென்றிசை
வந்தநாவலர்கோன்புகழ்வன்றொண்டன்
எந்தையாரருளாலணைவானென. (கஎ)

கைகள்கூப்பித்தொழுதெழுந்தத்திசை
மெய்யிலாநந்தவாரிவிரவிடச்
செய்யநீள்சடைமாமுனிசெல்வுழி
ஐயநீங்கவினவுவோரந்தணர். (கஅ)

சம்புவின்னடித்தாமரைப்போதலால்
எம்பிரானிறைஞ்சாயிஃதென்னெனத்

தம்பிரானைத்தன்னுள்ளந்தழீஇயவ
னம்பியாரூரனுந்தொழுந்தன்மையான். (கக)

என்றுகூறவிறைஞ்சியியம்புவார்
வென்றபேரொளியார்செய்விழுத்தவம்
நன்றுகேட்கவிரும்புநசையினேம்
இன்றெமக்குரைசெய்தருளென்றலும். (உ0)

உள்ளவண்ணமுனிவனுரைசெய்வான்
வெள்ளநீர்ச்சடைமெய்ப்பொருளாகிய
வள்ளல்சாத்துமதுமலர்மாலையும்
அள்ளுநீறுமெடுத்தணைவானுள்ன். (உக)

அன்னவன்பெயராலாலசுந்தரன்
முன்னமாங்கொருநாண்முதல்வன்றனக்
கின்னவாமெனுநாண்மலர்கொய்திடத்
துன்னினானந்தனவனச்சூழலில். (உஉ)

அங்குமுன்னரேயாளுடைநாயகி
கொங்குசேர்குழற்காமலர்கொய்திடத்
திங்கள்வாண்முகச்சேடியரெய்தினர்
பொங்குகின்றகவினுடைப்பூவைமார். (உ௩)

அந்தமில்சீரனிந்திதையாய்குழற்
கந்தமாலைக்கமலினியென்பவர்
கொந்துகொண்டிருமலர்கொய்வுழி
வந்துவானவரீசரருளென. (உச)

மாதவஞ்செய்ததென்றிசைவாழ்ந்திடத்
தீதிலாத்திருத்தொண்டத்தொகைதரப்
போதுவாரவர்மேன்மனம்போக்கிடக்
காதன்மாதருங்காட்சியிற்கண்ணினார். (உரு)

முன்னமாங்கவர்மொய்ம்முகைநாண்மலர்
என்னையாட்கொண்டவீசனுக்கேய்வன
பன்மலர்கொய்துசெல்லப்பனிமலர்
அன்னமன்னவருங்கொண்டகன்றபின். (உசு)

ஆதிமூர்த்தியவன்றிறநோக்கியே
மாதர்மேன்மனம்வைத்தனைதென்புவி
மீதுதோன்றியம்மெல்லியலாருடன்
காதலின்பங்கலந்தணைவாயென. (உஎ)

கைகளஞ்சலிகூப்பிக்கலங்கினான்
செய்யசேவடிநீங்குஞ்சிறுமையேன்

மையன்மானிடமாய்மயங்கும்வழி
யையனேதடுத்தாண்டருள்செய்யென. (உஅ)

அங்கணாளனதற்கருள்செய்தபி
னங்கைமாருடனம்பிமற்றத்திசை
தங்குதோற்றத்திலின்புற்றுச்சாருமென்
றங்கவன்செயலெல்லாமறைந்தனன். (உகூ)

அந்தணாளருமாங்கதுகேட்டவர்
பந்தமானிடப்பாற்படுதென்றிசை
இந்தவான்றிசையெட்டினுமேற்பட
வந்தபுண்ணியமியாதெனமாதவன். (௩௦)

பொருவருந்தவத்தான்புலிக்காலனும்
அருமுனியெந்தையர்ச்சித்துமுள்ளது
பெருமைசேர்பெரும்பற்றப்புலியூரொன்
றொருமையாளர்வைப்பாம்பதியோங்குமால். (௩க)

அத்திருப்பதியின்னமையாளுடை
மெய்த்தவக்கொடிகாணவிருப்புட
னித்தனீடியவம்பலத்தாடுமற்
றித்திறம்பெறலாந்திசையெத்திசை. (௩உ)

† பூதமியாவையினுள்ளலர்போதென
வேதமூலம்வெளிப்படுமேதினிக்
காதன்மங்கையிதயகமலமா
மாதொர்பாகனாரூர்மலர்ந்ததால். (௩௩)

எம்பிராட்டியிவ்வேழுலகீன்றவ
ளெம்பிரானைத்தனித்தவத்தாலெய்திக்
கம்பையாற்றில்வழிபடுகாஞ்சியென்
றும்பர்போற்றும்பதியுமுடையது. (௩௪)

நங்கணாதனைநந்திதவஞ்செய்து
பொங்குசீடருளெய்தியபொற்பது
கங்கைவேணிமலரக்கனன்மலர்
செங்கையாளனையாறுந்திகழ்வது. (௩௫)

தேசமெல்லாம்விளக்கியதென்றிசை
யீசர்தோணிபுரத்துடனெங்கணும்
பூசனைக்குப்பொருந்துமிடம்பல
பேசிலத்திசையொவ்வாபிறதிசை. (௩௬)

---

† பூதமியாவையுமுள்ளலர் என்வும், வேதமூலம் வெளிப்படுமேதினி எனவும், பாடபேதம்.

என்றுமாமுனிவன்றொண்டர்செய்கையை
அன்றுசொன்னபடியாலடியவர்
துன்றுசீர்த்திருத்தொண்டத்தொகைவிரி
யின்றெனுதரவாலிங்கியம்புகேன். (௩எ)

மற்றிதற்குப்பதிகம்வன்றொண்டர்தாம்
புற்றிடத்தெம்புராணரருளினாற்
சொற்றமெய்த்திருத்தொண்டத்தொகையெனப்
பெற்றநற்பதிகந்தொழப்பெற்றதால். (௩அ)

அந்தமெய்ப்பதிகத்தடியார்களை
நந்தநாதனுநம்பியாண்டார்நம்பி
புந்தியாரப்புகன்றவகையினால்
வந்தவாறுவழாமலியம்புவாம். (௩௯)

உலகமுய்யவுஞ்சைவநின்றோங்கவும்
அலகில்சீர்நம்பியாரூரர்பாடிய
நிலவுதொண்டர்தங்கூட்டநிறைந்துறை
குலவுதண்புனனாட்டணிகூறுவாம். (௪0)

திருமலைச்சிறப்பு-முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௫0.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## புராணவரலாறு.

அநாதிமலமுத்தராய், நித்தியராய், வியாபகராய், எல்லாவறிவும் எல்லாமுதன்மையும் எல்லாவநுக்கிரகமுமுடையராய், ஆன்மாக்களிடத்தே பதிந்த கைம்மாறற்ற பெருங்கருணையினாலே படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களையும் இயற்றாதியற்றும் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான், ஒருதிருமுகமும், சந்திரன் சூரியன் அக்கினி என்னும் முச்சுடர்களாகிய மூன்றுதிருக்கண்களும், கங்கையையும் பிறையையும் கொன்றைமாலையையுஞ் சூடிய சடாமுடியும், சங்கக்குண்டலத்தையும் தோட்டையும் அணிந்ததிருச்செவிகளும், காளகண்டமும், மான் மழு அபயம் வரதம் என்பவைகளோடுகூடிய நான்கு திருக்கரங்களும், விபூதியினாலே உத்தூளிக்கப்பட்ட செம்பவளத்திருமேனியும், வெள்ளைப்பூணூலையும் எண்ணிறந்த பிரமவிட்டுணுக்களுடைய என்புமாலைகளையும் பிரமகபாலங்களையும் அணிந்த

திருமார்பும், புலித்தோலையுடுத்து உடைவாளுடனே கச்சையுடைத்தாய் விளங்குந்திருவரையும், வீரக்கழலும் சிலம்பும் ஒலிக்கும் செந்தாமரை மலர்போலுந் திருவடிகளும் உடைய ஸ்ரீகண்ட சரீரியாய், பலவிரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளிமயமாகிய நானுவித சிகரங்களோடு கூடிய திருக்கைலாசமலையிலே, செம்பொற்றிருக்கோயிலிலே, பூதர்களுட்பலர் நானுவிதவாத்தியங்களை முழக்க, பலர் இருபுறத்தும் வெண்சாமரம் வீச, வேறுபலர் ஆலவட்டம் அசைப்ப, தும்புருநாரதர்களும் விஞ்சையர்களும் இசை பாட, கணநாதர்கள் என்புகளெல்லாம் அழலிடைப்பட்ட வெண்ணெய்போலக் கரைந்து நெக்குநெக்குருகவும், சரீரநடுங்கவும், உரோமஞ்சிலிர்ப்பவும், மதகினிற்புறப்படுஞ் சலம்போல ஆனந்தவருவி சொரியவும், பேரானந்தப்பெருங்கடலுட்டிளைத்து ஆடிப்பாட, முனிவர்கள் தங்கள் கைகளைச் சிரசின்மீது குவித்து வேத சிரசுகளாகிய உபநிடதங்களை எடுத்தோத, பிரமா விட்டுணு இந்திரன் முதலிய தேவர்கள் திருநந்திதேவருடைய வேத்திரப்படையினலே பலமுறை விலக்கப்பட்டும் அடிக்கப்பட்டும் ஒதுக்கப்பட்டும் ஆடையை ஒதுக்கி வாய்புதைத்து நின்று தத்தங்குறைகளைக்கூற, அநந்தகோடி சூரியர்களது ஒளியைப்போலும் பேரொளியையுடைய திவ்விய சிங்காசனத்தின்மேலே, தமது அருட்சத்தியும் உலகமாதாவுமாகிய பார்ப்பதிதேவியார் தமது இடப்பாகத்தின்மேவ, வீற்றிருந்தருளுவர்.

அத்திருக்கைலாசமலையின் அடிவாரத்தின்கண்ணே, வியாக்கிரபாதமகாமுனிவருடைய திருக்குமாரரும், சிதம்பரத்திலே சிவபெருமானல் வருவித்தருளப்பட்ட திருப்பாற்கடலை உண்ட மெய்யடியாரும், கிருஷ்ணரைச் சிவதீக்ஷைசெய்து தடுத்தாட்கொண்டருளிய சைவாசாரியருமாகிய உபமன்னியுமகாமுனிவர் எண்ணில்லாத முனிவர்கள் கூட்டஞ் சூழ எழுந்தருளியிருந்தார். அப்பொழுது அவ்விடத்தில் அவரெதிரே ஓர்பேரொளி ஆயிரஞ்சூரியருடைய ஒளிபோலத் தோன்றிற்று. அது கண்ட முனிவர்களெல்லாரும் "இது என்னையாச்சரியம்,, என்றார்கள். உடனே உபமன்னியு மகாமுனிவர் உயிர்க்குயிராய் நின்று உணர்த்துஞ் சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்து, அவரது திருவருளினலே, திருக்கைலாசத்தினின்று நீங்கித் தக்கிணபூமியிலே திருவவதாரஞ்செய்தருளிய சுந்தரமூர்த்திநாயனர் எழுந்தருளிவருகின்றார் என்பதனை உணர்ந்து, விரைந்தெழுந்து, இரண்டுகைகளுஞ் சிரசின்மீதேறிக்குவிய, ஆனந்தவருவி திருமேனியெங்கும் பெருக, அந்தத்திக்கை நோக்கி நடந்தார். அப்பொழுது முனிவர்கள் "முனிவர்பெருமானே, சிவபெருமானையன்றிப் பிறரொருவரையும் வணங்கா இயல்பினராகிய நீர் இங்கே வணங்கிய காரணம் யாது,, என்று வினவ, உபமன்னியு மகாமுனிவர் "முனிவர்களே, கேளுங்கள். ஆதிகாலத்திலே திருக்கைலாசபதியாகிய சிவபெருமான் தமது திருவுருவத்தைக் கண்ணடியிலே பார்த்து அழைத்தருளலும், கோடிசூரியர்கள் ஒருங்கு திரண்டாற்போலுந் திருமேனிப்

பிரகாசந்தோடுந் தோன்றினர். அவர்பெயர் சுந்தரர். அவர்திருப்பாற்கடலினின்றுந்தோன்றி விட்டுணு முதலிய தேவர்களெல்லாரையும் அஞ்சி ஓட்டெடுப்பித்த ஆலாகலவிஷத்தைச் சிவபெருமான் திருவமுதுசெய்தருளும்பொருட்டுத் தமது உள்ளங்கையினுள்ளே அடக்கிக்கொண்டு போய்க் கொடுத்தார். அதனால் அவர்பெயர் ஆலாலசுந்தரர் என்றாயிற்று. அவர் சிவபெருமானுக்குப் புஷ்பமாலை தொடுத்துச் சாத்துதலும் விபூதிபாத்திரந்தாங்குதலுமாகிய திருத்தொண்டு பூண்டவர். அவர் சிவபெருமானது ஆஞ்ஞையினாலே திருக்கைலாசமலையினின்று நீங்கித் தக்ஷிணபூமியிலே திருவவதாரஞ்செய்து, ஆன்மாக்களெல்லாம் உய்யும்பொருட்டுத் தமிழ்வேதமாகிய தேவாரத்தை அருளிச்செய்து, இப்போது தேவர்கள் சூழ வெள்ளையானைமேற்கொண்டு திருக்கைலாசத்துக்கு எழுந்தருளிவருகின்றார். அவர் எம்மாலும் எவராலும் வணங்கப்படும் பெருந்தகைமையையுடையவர்" என்றுசொல்லியருளினர்.

அதுகேட்ட முனிவர்கள் உபமன்னியுமகாமுனிவரை வணங்கி, "சுவாமி, இத்துணைப் பெருஞ்சிறப்பினையுடைய நாயனரது சரித்திரத்தைக் கேட்கப் பேராசைகொண்டோம், அடியேங்களுக்கு அருளிச்செய்யும்" என்று விண்ணப்பஞ்செய்ய, உபமன்னியுமகாமுனிவர் "முனிவர்களே, சுந்தரமூர்த்திநாயனருடைய சரித்திரத்தையும், அவர் திருவாரூரிலே வான்மீகநாதர் அடியெடுத்துக்கொடுக்க அருளிச்செய்த திருத்தொண்டத்தொகை என்னுந் திருப்பதிகத்திற் சொல்லப்பட்ட ருத்தொண்டர்களுடைய சரித்திரத்தையும், சர்வான்மாக்களும் உய்யும்பொருட்டு, உங்களுக்குச் சொல்வோம், கேளுங்கள்" என்று திருவாய்மலர்ந்தருள்வாராயினர்.

திருச்சிற்றம்பலம்,

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்,

## திருநாட்டுச்சிறப்பு.

பாட்டியற்றமிழுரைபயின்றவெல்லையுட்
கோட்டுயர்பனிவரைக்குன்றினுச்சியிற்
சூட்டியவளர்புலிச்சோழர்காவிரி
நாட்டியல்பதனையானவிலலுற்றனன், (௧)

ஆதிமாதவமுனியகத்தியன்றரும்
பூதநீர்க்கமண்டலம்பொழிந்தகாவிரி

மாதர்மண்மடந்தைபொன்மார்பிற்றழ்ந்ததோர்
ஓதநீர்நித்திலத்தாமமொக்குமால். (உ)

சையமால்வரைபயிறலைமைசான்றது
செய்யபூமகட்குநற்செவிலிபோன்றது
வையகம்பல்லுயிர்வளர்த்துநாடொறும்
உய்யவேசுரந்தளித்தூட்டுநீரது. (ங)

மாலினுந்திச்சுழிமலர்தன்மேல்வருஞ்
சால்பினாற்பல்லுயிர்தருதன்மாண்பினாற்
கோலநற்குண்டிகைதாங்குங்கொள்கையாற்
பேரினான்முகனையும்பொன்னிமானதி (ச)

திங்கள்சூடியமுடிச்சிகரத்துச்சியிற்
பொங்குவெண்டலைநுரைபொருதுபோதலால்
எங்கணாயகன்முடிமிசைநின்றேயிழி
கங்கையாம்பொன்னியாங்கன்னிநீத்தமே, (ரு)

வண்ணநீள்வரைதரவந்தமேன்மையால்
எண்ணில்பேரறங்களும்வளர்க்குமீகையால்
அண்ணல்பாகத்தையாளுடையநாயகி
உண்ணெகிழ்கருணையினொழுக்கம்போன்றது. (சா)

வேறு.

வம்புலாமலர்நீரால்வழிபட்டுச்
செம்பொன்வார்கரையெண்ணில்சிவாலயத்
தெம்பிரானையிறைஞ்சலினீர்ம்பொன்னி
உம்பர்நாயகற்கன்பருமொக்குமால், (எ)

வாசநீர்குடைமங்கையர்கொங்கையிற்
பூசுகுங்குமமும்புனைசாந்தமும்
வீசுதெண்டிரைமீதழித்தோடுநீர்
தேசுடைத்தெனினுந்தெளிவில்லதே. (அ)

மாவிரைத்தெழுந்தார்ப்பவரைதரு
பூவிரித்தபுதுமதுப்பொங்கிட
வாவியிற்பொலிநாடுவளந்தரக்
காவிரிப்புனல்கால்பரந்தோங்குமால். (கூ)

ஒண்டுறைத்தலைமாமதகூடுபோய்
மண்டுநீர்வயலுட்புகவந்தெதிர்
கொண்டமள்ளர்குணாத்தகையோசைபோய்
அண்டர்வானத்தினப்புறஞ்சாருமால். (கo)

மாதர்நாறுபறிப்பவர்மாட்சியுஞ்
சீதநீர்முடிசேர்ப்பவர்செய்கையும்

ஓதையார்செய்புழுநரொழுக்கமுங்
காதல்செய்வதோர்காட்சிமலிந்தவே, (௧௧)

உழுதசான்மிகவூறித்தெளிந்தசே
றிழுதுசெய்யினுளிந்திரதெய்வதந்
தொழுதுநாறுநடுவார்தொகுதியே
பழுதில்காவிரிநாட்டின்பரப்பெலாம் (௧௨)

வேறு,

மண்டுபுனல்பரந்தவயல்வளர்முதலின்சுருள்விரியக்
கண்டுழவர்பதங்காட்டக்களைகளையுங்கடைசியர்கள்
தண்டரளஞ்சொரிபணிலமிடறியிடைதளர்ந்தசைவார்
வண்டலைபுங்குழலலையமடநடையின்வரம்பணைவார். (௧௩)

செங்குவளைபறித்தணிவார்கருங்குழன்மேற்சிறைவண்டை
யங்கைமலர்களைக்கொடுகைத்தயல்வண்டும்வரவழைப்பார்
திங்கணுதல்வெயர்வரும்பச்சிறுமுறுவறளவரும்பப்
பொங்குமலர்க்கமலத்தின்புதுமதுவாய்மடுத்தயர்வார். (௧௪)

கரும்பல்லநெல்லென்னக்கமுகல்லகரும்பென்னச்
சுரும்பல்லிகுடைநீலத்துகள்ல்லபகலெல்லாம்
அரும்பல்லமுலையென்னவமுதல்லமொழியென்ன
வரும்பல்லாயிரங்கடைசிமடந்தையர்கள்வயலெல்லாம். (௧௫)

கயல்பாய்பைந்தடநந்தூன்கழிந்தபெருங்கருங்குழிசி
வியல்வாய்வெள்வளைத்தரளமலர்வேரியுலைப்பெய்தங்
கயலாமையடுப்பேற்றிபரக்காம்பினெருப்பூதும்
வயன்மாதர்சிறுமகளிர்விளையாட்டுவரம்பெல்லாம். (௧௬)

காடெல்லாங்கழைக்கரும்புகாவெல்லாங்குழைக்கரும்பு
மாடெல்லாங்கருங்குவளைவயலெல்லாநெருங்குவளை
கோடெல்லாமடவன்னங்குளமெல்லாங்கடலன்ன
நாடெல்லாநீர்நாடுதனையொவ்வாநலமெல்லாம். (௧௭)

வேறு.

ஆலைபாய்பவரார்ப்புறுமோலமுஞ்
சோலைவாய்வண்டிரைத்தெழுசும்மையு
ஞாலமோங்கியநான்மறையோதையும்
வேலையோசையின்மிக்குவிரவுமால். (௧௮)

அன்னமாடுமகன்றுறைப்பொய்கையிற்
றுன்னுமேதிபடியத்துதைந்தெழு
கன்னிவாளைகமுகின்மேற்பாய்வன
மன்னும்வான்மிசைவானவிற்போலுமால். (௧௯)

காவினிற்பயிலுங்களிவண்டினம்
வாவியிற்படிந்துண்ணுமலர்மது
மேவியத்தடமீதெழப்பாய்கயல்
தாவியப்பொழிலின்கனிசாடுமால். (உ0)

வேறு.

சாலிநீள்வயலினோங்கித்தன்னிகரின்றிமிக்கு
வாலிதாம்வெண்மையுண்மைக்கருவினும்வளத்தவாகிச்
சூல்முதிர்பசலைகொண்டுசுருள்விரித்தரனுக்கன்பர்
ஆலினசிந்தைபோலவலர்ந்தனகதிர்களெல்லாம். (உக)

பத்தியின்பாலராகிப்பரமனுக்காளாமன்பர்
தத்தமிற்கூடினார்கடலையினால்வணங்குமாபோன்
மொய்த்தநீள்பத்தியின்பான்முதிர்தலைவணங்கிமற்றை
வித்தகர்தன்மைபோலவிளைந்தனசாலியெல்லாம். (உஉ)

அரிதருசெந்நெற்சூட்டினடுக்கியவடுக்கல்சேர்ப்பார்
பரிவுறத்தடிந்தபன்மீன்படர்நெடுங்குன்றுசெய்வார்
சுரிவளைசொரிந்தமுத்தின்சுடர்ப்பெரும்பொருப்புயர்ப்பார்
விரிமலர்க்கற்றைவேரிபொழிந்திழிவெற்புவைப்பார். (உங)

சாலியின்கற்றைதுற்றதடவரைமுகடுசாய்த்துக்
காலிரும்பகடுபோக்குங்கரும்பெரும்பாண்டிலீட்டம்
ஆலியமுகிலின்கூட்டமருவரைச்சிமயச்சாரல்
மேல்வலங்கொண்டுசூழுங்காட்சியின்மிக்கவன்றே. (உச)

வைதெரிந்தகற்றியாற்றிமைபெயன்மானத்தூற்றிச்
செய்யபொற்குன்றும்வேறுநவமணிச்சிலம்புமென்னக்
கைவினைமள்ளர்வானங்கரக்கவாக்கியநெற்குன்றூன்
மொய்வரையுலகம்போலுமுளரிநீர்மருதவைப்பு. (உரு)

அரசுகொள்கடன்களாற்றிமிகுதிகொண்டறங்கள்பேணிப்
பரவருங்கடவுட்போற்றிக்குரவரும்விருந்தும்பண்பின்
விரவியகிளையுந்தாங்கிவிளங்கியகுடிகளோங்கி
வரைபுரைமாடநீடிமலர்ந்துளபதிகளெங்கும். (உசா)

கரும்படுகளமராலைக்கமழ்நறும்புகையோமாதர்
சுரும்பெழவகிலாலிட்டதூபமோயூபவேள்விப்
பெரும்பெயர்ச்சாலைதோறும்பிறங்கியபுகையோவானின்
வருங்கருமுகிலோசூழ்வமாடமுங்காவுமெங்கும். (உஎ)

நாளிகேரஞ்செருந்திநறுமலர்நரந்தமெங்குங்
கோளிசாலந்தமாலங்குளிர்மலர்க்குரவமெங்குந்
தாளிரும்போந்துசந்துதண்மலர்நாகமெங்கு
நீளிலைவஞ்சிகாஞ்சிநிறைமலர்க்கோங்கமெங்கும். (உஅ)

சூதபாடலங்களெங்குஞ்சூழ்வழைஞாழலெங்குஞ்
சாதிமாலதிகளெங்குந்தண்டளிர்நறவமெங்கு
மாதவிச்சரளமெங்கும்வகுளசண்பகங்களெங்கும்
போதவிழ்கைதையெங்கும்பூகபுன்னாகமெங்கும். (உகூ)

மங்கலவினைகளெங்குமணஞ்செய்கம்பலைகளெங்கும்
பங்கயவதனமெங்கும்பண்களின்மழலையெங்குஞ்
பொங்கொளிக்கலன்களெங்கும்புதுமலர்ப்பந்தரெங்குஞ்
செங்கயல்பழனமெங்குந்திருமகளுறையுளெங்கும். (௩0)

மேகமுங்களிறுமெங்கும்வேதமுங்கிடையுமெங்கும்
யாகமுஞ்சடங்குமெங்குமின்பமுமகிழ்வுமெங்கும்
யோகமுந்தவமுமெங்குமூசலுமறுகுமெங்கும்
போகமும்பொலிவுமெங்கும்புண்ணியமுனிவரெங்கும். (௩க)

பண்டருவிபஞ்சியெங்கும்பாதசெம்பஞ்சியெங்கும்
வண்டறைகுழல்களெங்கும்வளரிசைக்குழல்களெங்குந்
தொண்டர்தமிருக்கையெங்குஞ்சொல்லுவதிருக்கையெங்குந்
தண்டலைபலவுமெங்குந்தாதகிபலவுமெங்கும். (௩உ)

மாடுபோதகங்களெங்கும்வண்டுபோதகங்களெங்கும்
பாடுமம்மனைகளெங்கும்பயிலுமம்மனைகளெங்கும்
நீடுகேதனங்களெங்குநிதிநிகேதனங்களெங்குந்
தோடுசூழ்மாலையெங்குந்துணைவர்சூழ்மாலையெங்கும். (௩௩)

வீதிகள்விழவினார்ப்பும்விரும்பினர்விருந்தினார்ப்புஞ்
சாதிகணெறியிற்றப்பாதநயருமனையிற்றப்பா
நீதியபுள்ளுமாவுநிலத்திருப்புள்ளுமாவு
மோதியவெழுத்தாமஞ்சுமுறுபிணிவரத்தாமஞ்சும். (௩ச)

நற்றமிழ்வரைப்பினீங்குநாம்புகழ்திருநாடென்றும்
பொற்றடந்தோளால்வையம்பொதுக்கடிந்தினிதுகாக்குங்
கொற்றவனநபாயன்பொற்குடைநிழற்குளிர்வதென்றான்
மற்றதன்பெருமைநம்மால்வரம்புறவிளம்பலாமோ. (௩௫)

திருநாட்டுச்சிறப்பு-முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-அ௫.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர்ச்சிறப்பு.

வேறு.

சொன்னநாட்டிடைத்தொன்மையின்மிக்கது
மன்னுமாமலராள்வழிபட்டது
வன்னியாறுமதிபொதிசெஞ்சடைச்
சென்னியார்திருவாரூர்த்திருநகர். (க)

வேதவோசையும்வீணையினோசையும்
சோதிவானவர்தோத்திரவோசையு
மாதராடன்மணிமுழவோசையுங்
கீதவோசையுமாய்க்கிளர்வுற்றதே. (உ)

பல்லியங்கள்பரந்தவொலியுடன்
செல்வவீதிச்செழுமணித்தேரொலி
மல்லலியானையொலியுடன்மாவொலி
எல்லையின்றியெழுந்துளவெங்கணும். (ங)

மாடமாளிகைசூளிகைமண்டபங்
கூடசாலைகள்கோபுரந்தெற்றிகள்
நீடுசாளரநீடரங்கெங்கணும்
ஆடன்மாதரணிசிலம்பார்ப்பன. (ச)

அங்குரைக்கென்னளவப்பதியிலார்
தங்கண்மாளிகையின்னொன்றுசம்புவின்
பங்கினுடிருச்சேடிபரவையார்
மங்கையாரவதாரஞ்செய்மாளிகை. (ரு)

படர்ந்தபேரொளிப்பன்மணிவீதிதான்
இடந்தவேனமுமன்னமுந்தேடுவார்
தொடர்ந்துகொண்டவன்றொண்டர்க்குத்தூதுபோய்
நடந்தசெந்தாமரையடிநாறுமால். (சு)

செங்கண்மாதர்தெருவிற்றெளித்தசெங்
குங்குமத்தின்குழம்பையவர்குழற்
பொங்குகோதையிற்பூந்துகள்வீழ்ந்துடன்
அங்கண்மேவியளறுபுலர்த்துமால். (எ)

உள்ளமாருருகாதவரூர்விடை
வள்ளலார்திருவாரூர்மருங்கெலாந்
தெள்ளுமோசைத்திருப்பதிகங்கள்பைங்
கிள்ளைபாடுவகேட்பனபூவைகள். (அ)

விளக்கமிக்ககலன்கள்விரவலாற்
றுளக்கில்பேரொலியாற்றுன்னுபண்டங்கள்
வளத்தொடும்பலவாறுமடுத்தலால்
அளக்கர்போன்றனவாவணவீதிகள். (௯)

ஆரணங்களெல்லமறுகிடை
வாரணங்களுமாறிமுழங்குமால்
சீரணங்கியதேவர்களேயலாற்
றேரணங்களிற்றுமமுஞ்சூழுமால். (௧௦)

தாழ்ந்தவேணியர்சைவர்தபோதனர்
வாழ்ந்தசிந்தைமுனிவர்மறையவர்
வீழ்ந்தவின்பத்துறையில்விரவுவார்
சூழ்ந்தபல்வேறிடத்ததத்தொன்னகர். (௧௧)

நிலமகட்கழகார்த்ருநீணுதற்
றிலகமொப்பதுசெம்பியர்வாழ்பதி
மலர்மகட்குவண்டாமரைபோன்மலர்ந்
தலகில்சீர்த்திருவாரூர்விளங்குமால். (௧௨)

அன்னதொன்னகருக்கரசாயினன்
றுன்னுஞ்செங்கதிரோன்வழித்தோன்றினன்
மன்னுசீரநபாயன்வழிமுதன்
மின்னுமாமணிப்பூண்மனுவேந்தனே. (௧௩)

மண்ணில்வாழ்தருமன்னுயிர்கட்கெலாங்
கண்ணுமாவியுமாம்பெருங்காவலான்
விண்ணுளார்மகிழ்வெய்திடவேள்விகள்
எண்ணிலாதனமாணவியற்றினன். (௧௪)

கொற்றவாழிகுவலயஞ்சூழ்ந்திடச்
சுற்றுமன்னர்திறைகடைசூழ்ந்திடச்
செற்றநீக்கியசெம்மையின்மெய்ம்மனு
பெற்றநீதியுந்தன்பெயராக்கினன். (௧௫)

பொங்குமாமறைப்புற்றிடங்கொண்டவர்
எங்குமாகியிருந்தவர்பூசனைக்
கங்கண்வேண்டுநிபந்தமாராய்ந்துளான்
துங்கவாகமஞ்சொன்னமுறைமையால். (௧௬)

வேறு.

அறம்பொருளின்பமானவறநெறிவழாமற்புல்லி
மறங்கடிந்தரசர்போற்றவையகங்காக்குநாளிற்
சிறந்தநற்றவத்தாற்றேவிதிருமணிவயிற்றுமைந்தன்
பிறந்தனனுலகம்போற்றப்பேரரிக்குருளையன்னான். (௧௭)

தவமுயன்றரிதிற்பெற்றதனியிளங்குமரனுளுஞ்
சிவமுயன்றடையுந்தெய்வக்கலைபலதிருந்தவோதிக்
கவனவாம்புரவியானைதேர்படைத்தொழில்கள்கற்றுப்
பவமுயன்றதுவும்பேறேயெனவரும்பண்பின்மிக்கான். (கஅ)

அளவிறுல்கலைகண்முற்றியரும்பெறற்றந்தைமிக்க
வுளமகிழ்காதல்கூரவோங்கியகுணத்தானீடி
இளவரசென்னுந்தன்மையெய்துதற்கணியனுகி
வளரிளம்பரிதிபோன்றுவாழுநாளொருநாண்மைந்தன். (கக)

திங்கள்வெண்கவிகைமன்னன்றிருவளர்கோயினின்று
மங்குறோய்மாடவீதிமன்னிளங்குமரர்சூழக்
கொங்கலர்மாலைதாழ்ந்துகுங்குமங்குலவுதோளான்
பொங்கியதானைசூழத்தேர்மிசைப்பொலிந்துபோந்தான். (உ0)

பரசு ‡ வந்தியர்முன்சூதர்மாகதரொருபாற்பாங்கர்
விரைநறுங்குழலார்சிந்தும்வெள்வளையொருபான்மிக்க
முரசொடுசங்கமார்ப்பமுழங்கொலியொருபால்வென்றி
அரசிளங்குமரன்போதுமணிமணிமாடவீதி. (உக)

தனிப்பெருந்தருமந்தானோர்தயாவின்றித்தானைமன்னன்
பணிப்பில்சிந்தையினினுண்மைப்பான்மைசோதித்தாலென்ன
மனித்தர்தன்வரவுகாணுவண்ணமோர்வண்ணநல்லான்
புனிற்றிளங்கன்றுதுள்ளிப்போந்ததம்மறுகினூடு. (உஉ)

அம்புனிற்றுவின்கன்றோரபாயத்தினூடுபோகிச்
செம்பொனின்றேர்க்கான்மீதுவிசையினுற்செல்லப்பட்டே
யும்பரினடையக்கண்டங்குருகுதாயலமந்தோடி
வெம்பிடுமலறுஞ்சோருமெய்ந்நடுக்குற்றுவீழும். (உங)

மற்றதுகண்டுமைந்தன்வந்ததிங்கபாயமென்று
சொற்றடுமாறிநெஞ்சிற்றுயருழந்தறிவழிந்து
பெற்றமுங்கன்றுமின்றெனுணர்வெனும்பெருமைமாளச்
செற்றவென்செய்கேனென்றுதேரினின்றிழிந்துவீழ்ந்தான். (உச)

அலறுபேராவைநோக்கியாருயிர்பதைத்துச்சோரு
நிலமிசைக்கன்றைநோக்கிநெடிதுயிர்த்திரங்கிநிற்கு
மலர்தலையுலகங்காக்குமனுவெனுமென்கோமானுக்
குலகிலிப்பழிவந்தெய்தப்பிறந்தவாவொருவனென்பான். (உரு)

வந்தவிப்பழியைமாற்றும்வகையினைமறைநூல்வாய்மை
அந்தணர்விதித்தவாற்றலாற்றுவதறமேயாகில்

‡ வந்தியர்-மங்கலப்பாடகர். சூதர்-பாணர்
மாகதர்-ஒருவர் வீரமுதலியவற்றைப் புகழ்வோர்.

எந்தையீதறியார்முன்னமியற்றுவனென்றுமைந்தன்
சிந்தைவெந்துயரந்தீர்ப்பான்றிருமறையவர்முன்சென்றான். (உசு)

தன்னுயிர்க்கன்றுவீயத்தளர்ந்தவாத்தரியாதாகி
முன்னெருப்புயிர்த்துவிம்மிமுகத்தினிற்கண்ணீர்வார
மன்னுயிர்காக்குஞ்செங்கோன்மனுவின்பொற்கோயில்வாயிற்
பொன்னணிமணியைச்சென்றுகோட்டினாற்புடைத்ததன்றே. (உஎ)

பழிப்பறைமுழக்கோவார்க்கும்பாவத்தினொலியோவேந்தன்
வழித்திருமைந்தனாவிகொளவருமறலியூர்திக்
கழுத்தணிமணியினார்ப்போவென்னத்தன்கடைமுன்கேளாத்
தெழித்தெழுமோசைமன்னன்செவிப்புலம்புக்கபோது. (உஅ)

ஆங்கதுகேட்டவேந்தனரியணையிழிந்துபோந்து
பூங்கொடிவாயினண்ணக்காவலரெதிரேபோற்றி
ஈங்கிதோர்பசுவந்தெய்தியிறைவநின்கொற்றவாயிற்
றூங்கியமணியைக்கோட்டாற்றுளக்கியதென்றுசொன்னார். (உகூ)

மன்னவனதனைக்கேளாவருந்தியபசுவைநோக்கி
என்னிதற்குற்றதென்பானமைச்சனையிகழ்ந்துநோக்க
முன்னுறநிகழ்ந்தவெல்லாமறிந்துளான்முதிர்ந்தகேள்வித்
தொன்னெறியமைச்சன்மன்னன்றாளிணைதொழுதுசொல்வான். (௩0)

வளவநின்புதல்வனாங்கோர்மணிநெடுந்தேர்மேலேறி
அளவிறேர்த்தானைசூழவரசுலாந்தெருவிற்போங்கால்
இளையவான்கன்றுதேர்க்காலிடைப்புகுந்திறந்ததாகத்
தளர்வுறுமித்தாய்வந்துவிளைத்ததித்தன்மையென்றான். (௩க)

அவ்வுரைகேட்டவேந்தனவுறுதுயரமெய்தி
வெவ்விடந்தலைக்கொண்டாற்போல்வேதனையகத்துமிக்கிங்
கிவ்வினைவிளைந்தவாவென்றிடருறுமிரங்குமேங்குஞ்
செவ்விதென்செங்கோலென்னுந்தெருமருந்தெளியுந்தேறான். (௩உ)

மன்னுயிர்புரந்துவையம்பொதுக்கடிந்தறத்தினீடு
மென்னெறிநன்றாலென்னுமென்செய்தாற்றீருமென்னுந்
தன்னிளங்கன்றுகாணாத்தாய்முகங்கண்டுசோரும்
அந்நிலையரசனுற்றதுயரமோரளவிற்றன்றால். (௩௩)

வேறு.

மந்திரிகளதுகண்டுமன்னவனையடிவணங்கிச்
சிந்தைதளர்ந்தருளுவதுமற்றிதற்குத்தீர்வன்றால்
கொந்தலர்தார்மைந்தனைமுன்கோவதைசெய்தார்க்குமறை
யந்தணர்கள்விதித்தமுறைவழிநிறுத்தலறமென்றார். (௩ச)

வழக்கென்றுநீமொழிந்தான்மற்றதுதான்வலிப்பட்டுக்
குழக்கன்றையிழந்தலறுங்கோவுறுநோய்மருந்தாமோ

இழக்கின்றேன்மைந்தனையென்றெல்லீருஞ்சொல்லியவிச்
சழக்கின்றுநானிசைந்தாற்றருமந்தான்சலியாதோ. (௩௫)

மாநிலங்காவலனுவான்மன்னுயிர்காக்குங்காலைத்
தானதனுக்கிடையூறுதன்னாற்றன்பரிசனத்தால்
ஊனமிகுபகைத்திறத்தாற்கள்வராலுயிர்தம்மால்
ஆனபயமைந்துந்தீர்த்தறங்காப்பானல்லனோ. (௩௬)

என்மகன்செய்பாதகத்துக்கிருந்தவங்கள்செயவிசைந்தேன்
அன்னியனோருயிர்கொன்றாலவனைக்கொல்வேனாற்
றொன்மனுநூற்றொடைமனுவாற்றுடைப்புண்டதெனும்வார்த்தை
மன்னுலகிற்பெறமொழிந்தீர்மந்திரிகள்வழக்கென்றான். (௩௭)

என்றரசனிகழ்ந்துரைப்பவெதிர்நின்றமதியமைச்சர்
நின்றநெறியுலகின்கணிதுபோன்முனிகழ்ந்ததாற்
பொன்றுவித்தன்மரபன்றுமறைமொழிந்தவறம்புரிதல்
ஒன்றுதொடுநெறியன்றேதொன்னிலங்காவலவென்றார். (௩அ)

அவ்வண்ணந்தொழுதுரைத்தவமைச்சர்களைமுகநோக்கி
மெய்வண்ணந்தெரிந்துணர்ந்தமனுவென்னுந்திறல்வேந்தன்
இவ்வண்ணம்பழுதுரைத்தீரொன்றெரியினிடைத்தோய்ந்த
செவ்வண்ணக்கமலம்போன்முகம்புலர்ந்துசெயிர்த்துரைப்பான். (௩௯)

அவ்வுரையில்வருநெறிகளவைநிற்கவறநெறியின்
செவ்வியவுண்மைத்திறநீர்சிந்தைசெயாதுரைக்கின்றீர்
எவ்வுலகிலெப்பெற்றமிப்பெற்றித்தாமிடரால்
வெவ்வுயிர்த்துக்கதறிமணியெறிந்துவிழுந்ததுவிளம்பீர். (௪0)

போற்றிசைத்துப்புரந்தரன்மாலயன்முதலோர்புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்தபெருமானார்மேவியுறைதிருவாரூர்த்
தோற்றமுடையுயிர்கொன்றானாதலினாற்றுணிபொருடான்
ஆற்றவுமற்றவற்கொல்லுமதுவேயாமெனநினைமின். (௪௧)

எனமொழிந்துமற்றிதனுக்கினியிதுவேசெயலிவ்வான்
மனமழியுந்துயரகற்றமாட்டாதேன்வருந்துமிது
தனதுறுபேரிடர்யானுந்தாங்குவதேகருமமென
அனகனருஞ்பொருடுணிந்தானமைச்சருமஞ்சினரகன்றார். (௪௨)

மன்னவன்றன்மைந்தனையங்கழைத்தொருமந்திரிதன்னை
முன்னிவனையவ்வீதிமுரண்டேர்க்காலூர்கவென
அன்னவனுமதுசெய்யாதகன்றுதன்னுருயிர்துறப்பத்
தன்னுடையகுலமகனைத்தான்கொண்டுமறுகணைந்தான். (௪௩)

ஒருமைந்தன்றன்குலத்துக்குள்ளானென்பதுமுணரான்
றருமந்தன்வழிச்செல்கைகடனென்றுதன்மைந்தன்

மருமந்தன்றேராழியுறவூர்ந்தான்மனுவேந்தன்
அருமந்தவரசாட்சியரிதோமற்றெளிதோதான். (௬௪)

தண்ணளிவெண்குடைவேந்தன்செயல்கண்டுதரியாது
மண்ணவர்கண்மழைபொழிந்தார்வானவர்பூமழைபொழிந்தார்
அண்ணலவன்கண்ணெதிரேயணிவீதிமழவிடைமேல்
விண்ணவர்கடொழநின்றான்வீதிவிடங்கப்பெருமான். (௬௫)

சடைமருங்கிலிளம்பிறையுந்தனிவிழிக்குந்திருநுதலும்
இடமருங்கிலுமையாளுமெம்மருங்கும்பூதகணம்
புடைநெருங்கும்பெருமையுமுன்கண்டரசன்போற்றிசைப்ப
விடைமருவும்பெருமானும்விறல்வேந்தற்கருள்கொடுத்தான். (௬௬)

அங்கிலேயேயுயிர்பிரிந்தவான்கன்றுமவ்வரசன்
மன்னுரிமைத்தனிக்கன்றுமந்திரியுமுடனெழலும்
இன்னபரிசானனென்றறிந்திலன்வேந்தனும்யார்க்கு
முன்னவனேமுன்னின்றான்முடியாதபொருளுளதோ. (௬௭)

அடிபணிந்ததிருமகனையாகமுறவெடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந்தருந்துயரநீங்கினனிலவேந்தன்
மடிசுரந்துபொழிதீம்பால்வருங்கன்றுமகிழ்ந்துண்டு
படிநனையவரும்பசுவும்பருவரனீங்கியதன்றே. (௬௮)

பொன்றயங்குமதிலாரூர்ப்பூங்கோயிலமர்ந்தபிரான்
வென்றிமனுவேந்தனுக்குவீதியிலேயருள்கொடுத்துச்
சென்றருளும்பெருங்கருணைத்திறங்கண்டுதென்னடியார்க்
கென்றுமெளிவரும்பெருமையேழுலகுமெடுத்தேத்தும். (௬௯)

இனையவகையறநெறியிலெண்ணிறந்தோர்க்கருள்புரிந்து
முனைவரவர்மகிழ்ந்தருளப்பெற்றுடையமூதூர்மேற்
புனையுமுரைநம்மளவிற்புகலலாந்தகைமையதோ
அனையதனுக்ககமலராமறவனூர்பூங்கோயில். (௭௰)

திருவாரூர்ச்சிறப்பு-முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௧௬௫.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கூட்டச்சிறப்பு.

பூதநாயகர்புற்றிடங்கொண்டவர்
ஆதிதேவரமர்ந்தபூங்கோயிலிற்
சோதிமாமணிநீள்சுடர்முன்றில்சூழ்
மூதெயிற்றிருவாயின்முன்னுயது, (க)

பூவார்திசைமுகனிந்திரன்பூமிசை
மாவாழகலத்துமான்முதல்வானவர்
ஓவாதெவருநிறைந்துறைந்துள்ளது
தேவாசிரயனெனுந்திருக்காவணம். (உ)

அரந்தைதீர்க்குமடியவர்மேனிமேல்
நிரந்தநீற்றொளியானிறைதூய்மையாற்
புரந்தவஞ்செழுத்தோசைபொலிதலாற்
பரந்தவாயிரம்பாற்கடல்போல்வது. (ங)

அகிலகாரணர்தாள்பணிவார்கடாம்
அகிலலோகமுமாடற்குரியரொன்
றகிலலோகத்துளார்களடைதலின்
அகிலலோகமும்போல்வததனிடை, (ச)

அத்தர்வேண்டிமுன்னாண்டவரன்பினான்
மெய்த்தழைத்துவிருப்புறுசிந்தையார்
கைத்திருத்தொண்டுசெய்கடப்பாட்டினார்
இத்திறத்தவரன்றியுமெண்ணிலார். (ரு)

மாசிலாதமணிதிகழ்மேனிமேற்
பூசுநீறுபோலுள்ளும்புனிதர்கள்
தேசினாலெத்திசையும்விளக்கினார்
பேசவொண்ணாப்பெருமைபிறங்கினார். (சு)

பூதமைந்துநிலையிற்கலங்கினும்
மாதோர்பாகர்மலர்த்தாண்மறப்பிலார்
ஓதுகாதலுறைப்பினெறிநின்றார்
கோதிலாதகுணப்பெருங்குன்றினார். (எ)

கேடுமாக்கமுங்கெட்டதிருவினார்
ஓடுஞ்செம்பொனுமொக்கவேநோக்குவார்
கூடுமன்பினிற்கும்பிடலேயன்றி
வீடும்வேண்டாவிறலின்விளங்கினார். (அ)

ஆரங்கண்டிகையாடையுங்கந்தையே
பாரமீசன்பணியலதொன்றிலார்
ஈரவன்பினர்யாதுங்குறைவிலார்
வீரமென்னால்விளம்புந்தகையதோ. (௯)

வேண்டுமாறுவிருப்புறும்வேடத்தர்
தாண்டவப்பெருமான்றனித்தொண்டர்க
ணீண்டதொல்புகழார்தந்நிலைமையை
ஈண்டுவாழ்த்துகெனென்னறிந்தேத்துகேன். (௧௦)

இந்தமாதவர்கூட்டத்தையெம்பிரான்
அந்தமில்புகழாலாலசுந்தரன்
சுந்தரத்திருத்தொண்டத்தொகைத்தமிழ்
வந்துபாடியவண்ணமுரைசெய்வாம். (௧௧)

திருக்கூட்டச்சிறப்பு-முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௧௬௯.

## திருவாரூர்ச்சிறப்பு.

தக்ஷிணதேசமாகிய தமிழ்நாடு, சிதம்பரம் காஞ்சீபுரமுதலிய எண்ணில்லாத சிவதலங்களையுடைமையால், மற்றையெத்தேசங்களினுஞ் சிறப்புற்றது. அதனுள்ளும் சோழமண்டலம் மிகச்சிறப்புற்றது. அது அகத்தியமகாமுனிவருடைய கமண்டலத்தை விநாயகக்கடவுள் காகவடிவாய்ச் சென்றுகவிழ்ப்ப, அதனாலே பொழியப்பட்டுச் சையகிரியினின்றுந் தோன்றிப் பெருகுந் திவ்விய தீர்த்தமாகிய காவேரிநதியையுடையது.

அச்சோழமண்டலத்திலே, சூரியகுலத்தர்களாகிய சோழராஜாக்களுக்கு உரிய இராஜதானிகள் ஐந்தனுள் † ஒன்றாகியும், காவற்கடவுளாகிய விட்டுணுவினுடைய மனைவியாகிய இலக்குமியினாலே பூசிக்கப்பட்டதாகியும், பிரமாவின் சரீரமாகிய பிரமாண்டத்துக்கு மூலாதாரஸ்தலமாகியும் உள்ளது திருவாரூர். அத்திருவாரூரின்கண் இருந்து அரசியற்றிய சோழராஜாக்களுள்ளே மனுநீதிகண்டசோழரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் உயிர்களுக்கெல்லாங் கண்ணும் உயிரும் போன்றவர். வன்மீகநாதராகிய சிவபெருமானுக்கு நிபந்தம் அமைத்து, பூசை முதலியவைகளைச் சிவாகம விதிப்படி வழுவாது சிரத்தையோடு நடத்துவிப்பவர்.

† சோழராஜாக்களுக்குரிய இராஜதானிகள் ஐந்தாவன காவிரிப்பூம்பட்டினம், கருவூர், திருவாரூர், உறையூர், திருச்சேய்ஞலூர் என்பவைகளாம்.

அவர் செங்கோனடாத்தி அரசியற்றுநாளிலே, அவர்செய்த சிவ புண்ணியமிகுதியினலே, அவருக்கு ஒருபுத்திரன் அவதரித்தான். அவன் பலகலைகளையுங் கசடறக் கற்று வல்லனுகி, அறிவொழுக்கங்களிற் சிறந்து, இளவரசாதற்குத் தக்கபருவத்தையுடையனய் வாழுநாளிலே, ஒருநாள், இராசமாளிகையினின்றும் புறப்பட்டு, இராசகுமாரர்களுஞ் சேனைகளுஞ்சூழத் தேரிலேறி வீதியிற்சென்றான். செல்லும்பொழுது வீதியிலே ஒருபசுக்கன்று துள்ளிக்கொண்டு போய், அத்தேர்க்காலினடியில் அகப்பட்டிறந்தது. அது கண்ட தாய்ப்பசு சுழன்று ஓடிவந்து, அலறிச் சோர்ந்து, நடுங்கி விழுந்தது. சோழபுத்திரன் அது கண்டு, "அபாயம் வந்ததே" என்று தடுமாறி, மனத்துயரங்கொண்டு, அறிவழிந்து, தேரினின்றும் வீழ்ந்தான்; அலறுகின்ற தாய்ப்பசுவைப் பார்த்து உயிர்பதைத்துச் சோர்வான்; இறந்து கிடக்கின்ற கன்றைப் பார்த்துப் பெருமூச்செறிந்து இரங்குவான்; "நானொருவன் பிறந்தது என்னுடைய தந்தையாருக்கு இப்பழி வந்தெய்துதற்கோ" என்பான். "எனக்கு அபுத்திபூர்வகமாக வந்த இப்பாவத்திற்குப் பிராயச்சித்தம் உளதாயின், என்னுடைய தந்தையார் அறியுமுன்னமே பிராமணர் விதிக்கும் பிரகாரஞ்செய்து கொள்ளல்வேண்டும்" என்று சிந்தித்துப் பிராமணரிடத்தே சென்றான்.

தன்கன்றை இழந்த பசு அத்துயரத்தைச் சகிக்கமாட்டாது பெருமூச்செறிந்து, கண்ணீர் வாரச் சென்று, இராசமாளிகை வாயிலிற் கட்டிய ஆராய்ச்சிமணியைத் தன்கொம்பினல் அடித்தது. அதுகேட்ட மனுநீதிகண்டசோழர் சிங்காசனத்தினின்றும் இறங்கி, விரைந்து போந்து, வாயிலை அடைய; வாயிற்காவலாளர்கள் எதிர்வந்து வணங்கி, "மகாராஜாவே, ஈங்கே ஒருபசு வந்து ஆராய்ச்சிமணியைத் தன் கொம்பினல் அடித்தது" என்று விண்ணப்பஞ்செய்தார்கள். மனுநீதிகண்டசோழர், அது கேட்டு, வருத்தமுறுகின்ற பசுவைப்பார்த்து, "இப்பசுவுக்கு யாது இடையூறு நிகழ்ந்தது" என்று மந்திரிகளைக் கோபித்துப் பார்க்க, அம்மந்திரிகளுள் ஒருவன் வணங்கி நின்று, "மகாராஜாவே, உம்முடைய புத்திரன் தேர்மேலேறி வீதியிற்போம்பொழுது, ஒருபசுக்கன்று அத்தேர்க்காலில் அகப்பட்டிறந்தது. அதன்றாயாகிய இப்பசு இங்கு வந்து ஆராய்ச்சிமணியை அடித்தது" என்று விண்ணப்பஞ்செய்தான். அது கேட்ட மனுநீதிகண்டசோழர் பெருந் துயரங்கொண்டு இரங்கி ஏங்கி, "என் செங்கோன்முறைமை நன்று நன்று" என்பார்; இது யாது செய்தாற்றீரும்" என்பார்; கன்றையிழந்த தாய்ப்பசுவின் முகத்தைப் பார்த்துச் சோர்வார். மந்திரிகள் அது கண்டு அச்சோழருடைய பாதங்களை வணங்கி நின்று "மகாராஜாவே, மனந்தளர்ந்தருளுவது இதற்குப் பரிகாரமாகாது. உம்முடைய புத்திரனைக்கொண்டு கோவதைக்குத் தருமநூல்களில் விதிக்கப்பட்ட பிராயச்சித்தத்தைச் செய்விப்பதே தருமம்,, என்றார்கள். அதற்கு ம

னுநீதிகண்டசோழர் "நீங்கள் கூறும் பிராயச்சித்தம் கன்றையிழந்தல றும் இப்பசுவினது நோய்க்குமருந்தாகுமா; நான் ஏகபுத்திரனை இழக்கின்றேன் என்று கருதி நீங்கள் எல்லீருஞ்சொல்லிய இவ்வார்த்தைக்கு நான் இசைந்தேனாயின், நடுவுநிலைமை தவறுதா; உயிர்களுக்குத் தன்னாலும், தன் பரிவாரத்தாலும், பகைவராலும், கள்வராலும், உயிர்களாலும் எய்தற்பாலனவாகிய ஐந்து பயத்தையும் நீக்கி அவைகளைக்காப்பவனன்றோ அரசனெனப்படுவான். நான் என்புத்திரன் செய்த பாவத்தின்பொருட்டுப் பிராயச்சித்தஞ்செய்தற்கு உடன்பட்டுப் பிறனொருவன் செய்தபாவத்தின்பொருட்டு அவனைக் கொல்வேனாயின், ஆதிகாலத்திருந்த மனுவினாலே செய்யப்பட்ட தருமநூல்விதி இப்பொழுது மனுவென்னும் ஒருசோழனால் நீக்கப்பட்டது என்னும் பழிமொழி உலகத்திலே நிலைபெறுதா" என்றார். அப்பொழுது மந்திரிகள் "மகாராஜாவே" இப்பூமியின்கண்ணே இதுபோல முன்னும் நடந்திருக்கின்றதே. இக்குற்றத்தின்பொருட்டு உம்முடைய புத்திரனைக் கொல்லல் முறையன்று. தருமநூலில் விதிக்கப்பட்ட பிராயச்சித்தஞ் செய்வதே பண்டுதொட்டு ஆன்றோர் வழங்கிய வழக்கு" என்றார்கள். அதற்கு மனுநீதிகண்டசோழர் "நீங்கள் தருமநெறியின் உண்மையைச் சிறிதும் சிந்தியாது பேசுகின்றீர்கள். எந்தலோகத்திலே எந்தப் பசு கன்றையிழந்த துன்பத்தினால் ஆராய்ச்சிமணியை அடித்தது; சொல்லுங்கள். அன்றியும் சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருவாரூரிலே பிறந்த உயிரைக் கொன்றானே. ஆதலால் அவனைக் கொல்வதே துணிபொருள் என்று சிந்தியுங்கள். நான் இப்பசுவினது துயரத்தை நீக்க வல்லனல்லேன். ஆதலால் இப்பசுத் தன் கன்றையிழந்து துயருறுதல்போல நானும் என்புத்திரனையிழந்து துயருறுதலே நீதி" என்று சொல்லி, எவ்விடத்தும் எக்காலத்தும் எவராலுஞ்செயற்கரிய செய்கையைச் செய்யத்துணிந்தார். உடனே மந்திரிகள் அஞ்சி, அவ்விடத்தினின்று நீங்கினார்கள்.

மனுநீதிகண்டசோழர் தம்முடைய புத்திரனை அங்கு வரவழைத்து. ஒருமந்திரியைப் பார்த்து, "நீ இந்தப்பிள்ளையை வீதியிலே தேர்க்காலின் கீழே கிடத்தித் தேரை நடத்தக்கடவாய்" என்றார். அம்மந்திரி போய், அவ்வாறு செய்யாது தன்னுயிரை விடுத்தான். அதனையுணர்ந்த மனுநீதிகண்டசோழர் தம்முடைய புத்திரனைத் தாமே கொண்டு வீதியிற் சென்று, தம்முடைய குலத்துக்கு ஒருபுத்திரனே உளன் என்பதைச் சிந்தியாது, தருமவழிநடத்தலொன்றையே சிந்தித்து, அவனைக் கீழே கிடத்தி, அவன் மார்பிலே உருளை அழுந்தும்படி தேரை நடத்தினார்.

மனுநீதிகண்டசோழர் செய்த இச்செயற்கருஞ் செய்கையைக் கண்டு, மனிதர்கள் தரியாது கண்மழை பொழிந்தார்கள். தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். சர்வலோகைகநாயகராகிய தியாகேசர் இடபவாகன

மேற்கொண்டு, தேவர்களும் பூதர்களும் புடைசூழ எழுந்தருளிவந்து முன்னின்றார். மனுநீதிகண்டசோழர் அவரைத் தரிசித்து வணங்கிப் பேரானந்தப் பெருங்கடலின் மூழ்கினார், அப்பொழுதே பசுக்கன்றும் இராசகுமாரனும் மந்திரியும் உயிர்பெற்றெழுதலும், அதுகண்ட சோழர் தாம் இத்தன்மையினரென்றறியாதவராயினார். அவர் தமது பாதத்தில் வந்து வணங்கிய புத்திரனைத் தழுவி மனமகிழ்ந்தார். பசு தன்னையணைந்த தன்கன்று உண்ணும் வண்ணம் பாலைப் பொழிந்து தனக்குண்டாகிய துன்பநீங்கிற்று. தியாகேசர் மனுநீதிகண்டசோழருக்குத் திருவருள்செய்து மறைந்தருளினார்.

இப்படியே தருமநெறியில் வழுவாதொழுகும் எண்ணில்லாத மெய்யன்பர்களுக்குப் பரமப்பிரசாதஞ் செய்துகொண்டு சருவசீவதயாபரராகிய தியாகேசர் எழுந்தருளியிருக்குந் திருவாரூரினது மகிமை நம்மாலே சொல்லற்பாலதன்று. அத்திருவாரூருக்கு வன்மீகநாதக்கடவுளுடைய திருக்கோயில் இருதயகமலம்போலும். அத்திருக்கோயிலிலே தேவாசிரயனெனப் பெயர் பெற்ற ஆயிரக்கான்மண்டபமொன்றுண்டு. தியாகேசரைச் சேவிக்கும்பொருட்டு இத்துணைத்தென்று அளவிடப்படாத பேராசையோடு வந்து கூடும் விட்டுணு பிரமா இந்திரன் முதலிய தேவர்களெல்லாரும் அம்மண்டபத்திலே நிறைந்திருப்பார்கள். விபூதி உருத்திராக்ஷம் என்னும் சிவசின்னங்களைத் தரித்தவர்களும், திருவைந்தெழுத்தை உச்சரிப்பவர்களும், ஓடும் பொன்னும் ஒப்ப நோக்குபவர்களும், நல்வினையால வரும் இன்பத்தினும் தீவினையால் வரும் துன்பத்தினும் சமபுத்தி பண்ணுமவர்களும், பசுபதியாகிய சிவபெருமானுடைய திருவடிக்கண்ணதாகிய மெய்யன்பொன்றையே உயர்வொப்பில்லாத பெருஞ்செல்வமெனக் கொண்டு இடையறாதொழுகுந் தைலதாரைபோலும் இயற்கைத்தாகிய அவ்வன்பால் விழுங்கப்பட்டவர்களும்,சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் வீட்டுநெறிநான்கின் வழியே நிற்பவர்களுமாகிய திருத்தொண்டர்களுடைய திருக்கூட்டம் அத்தேவாசிரய மண்டபமெங்கும் நிறைந்திருக்கும். அம்மெய்யடியார்களுடைய பெருமையை ஒன்றுக்கும் பற்றாத நாம் எங்ஙனமறிந்து எங்ஙனந்துதிப்போம்.

இனி எம்பெருமானாகிய ஆலாலசுந்தரர் தென்னாட்டிலே திருவவதாரஞ்செய்து, இந்தத்திருத்தொண்டர் திருக்கூட்டத்தைத் தரிசித்துத் திருத்தொண்டத்தொகை செய்தருளிய சரித்திரத்தைச் சொல்வாம்.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தடுத்தாட்கொண்டபுராணம்.

வேறு.

கங்கையுமதியும்பாம்புங்கடுக்கையுமுடிமேல்வைத்த
அங்கணரோலைகாட்டியாண்டவர்தமக்குநாடு
மங்கையர்வதனசீதமதியிருமருங்குமோடிச்
செங்கயல்குழைகளநாடுந்திருமுனைப்பாடிநாடு. (க)

பெருகியவளத்தான்மிக்கபெருந்திருநாடுதன்னில்
அருமறைச்சைவமோங்கவருளினாலவதரித்த
மருவியதவத்தான்மிக்கவளம்பதிவாய்மைகுன்றாத்
திருமறையவர்கணீடுந்திருநாவலூராமன்றே. (உ)

மாதொருபாகனார்க்குவழிவழியடிமைசெய்யும்
வேதியர்குலத்துட்டோன்றிமேம்படுசடையனாருக்
கேதமில்கற்பின்வாழ்க்கைமனையிசைஞானியார்பாற்
றீதகன்றுலகமுய்யத்திருவவதாரஞ்செய்தார். (ங)

தம்பிரானருளினாலேதவத்தினான்மிக்கார்பெற்று
நம்பியாரூரரென்றேநாமமுஞ்சாற்றிமிக்க
ஐம்படைச்சதங்கைசாத்தியணிமணிச்சுட்டிசாத்திச்
செம்பொனுணாயின்மின்னத்தெருவிற்றேருருட்டுநாளில். (ச)

நரசிங்கமுனையரென்னுநாடுவாழரசர்கண்டு
பரவருங்காதல்கூரப்பயந்தவர்தம்பாற்சென்று
விரவியநண்பினாலேவேண்டினர்பெற்றுத்தங்கள்
அரசிளங்குமரற்கேற்பவன்பினால் ‡ மகண்மைகொண்டார்.

பெருமைசாலரசர்காதற்பிள்ளையாய்ப்பின்னுந்தங்கள்
வருமுறைமரபின்வைகிவளர்ந்துமங்கலஞ்செய்கோலத்
தருமறைமுந்நூல்சாத்தியளவிறொல்கலைகளாய்ந்து
திருமலிசிறப்பினோங்கிச்சீர்மணப்பருவஞ்சேர்ந்தார். (கூ)

தந்தையார்சடையனார்தந்தனித்திருமகற்குச்சைவ
அந்தணர்குலத்துட்டங்களரும்பெருமரபுக்கேற்ப
வந்ததோர்சிறப்பிற்புத்தூர்ச்சடங்கவிமறையோன்றன்பாற்
செந்திருவனையகன்னிமணத்திறஞ்செப்பிவிட்டார். (எ)

குலமுதலறிவுமிக்ககோத்திரமுறையுந்தேர்ந்தார்
நலமிகுமுதியோர்சொல்லச்சடங்கவிநன்மையேற்று

‡ மகண்மை - மக்கட்டன்மை.

௨

மலர்தருமுகத்தனுகிமணம்புரிசெயலின்வாய்மை
பலவுடன்பேசியொத்தபண்பினுலன்புநேர்ந்தான். (அ)

மற்றவனிசைந்தவார்த்தைகேட்டவர்வள்ளறன்னைப்
பெற்றவர்தம்பாற்சென்றுசொன்னபின்பெருகுசிந்தை
யுற்றதோர்மகிழ்ச்சியெய்திமணவினையுவந்துசாற்றிக்
கொற்றவர்திருவுக்கேற்பக்குறித்தநாளோலைவிட்டார். (கூ)

மங்கலம்பொலியச்செய்தமணவினையோலையேந்தி
யங்கயற்கண்ணினுருமாடவர்பலருமீண்டிக்
கொங்கலர்சோலைமூதூர்குறுகினுரெதிரேவந்து
பங்கயவதனிமாருமைந்தரும்பணிந்துகொண்டார். (க0)

மகிழ்ச்சியான்மணமீக்கூறிமங்கலவினைகளெல்லாம்
புகழ்ச்சியாற்பொலிந்துதோன்றப்போற்றியதொழிலராகி
யிகழ்ச்சியொன்றுனுமின்றியேந்துபூமாலைப்பந்தர்
நிகழ்ச்சியின்மைந்தரீண்டிநீண்முளைசாத்தினுர்கள். (கக)

மணவினைக்கமைந்தசெய்கைமாதினைப்பயந்தார்செய்யத்
துணர்மலர்க்கோதைத்தாமச்சுரும்பணைதோளினுனைப்
புணர்மணத்திருநாண்முன்னுட்பொருந்தியவிதியினுலே
பணைமுரசியம்பவாழ்த்திப்பைம்பொனுண்காப்புச்சேர்த்தார். (கஉ)

மாமறைவிதிவழாமன்மணத்துறைக்கடன்களாற்றித்
தூமறைமூதூர்க்கங்குன்மங்கலந்துவன்றியார்ப்பத்
தேமருதொடையன்மார்பன்றிருமணக்கோலங்காணக்
காமுறுமனத்தான்போலக்கதிரவனுதயஞ்செய்தான். (கங)

காலைசெய்வினைகண்முற்றிக்கணிதநூற்புலவர்சொன்ன
வேலைவந்தணையாமுன்னர்விதிமணக்கோலங்கொள்வா
...லசைந்திலங்குமார்பினுணங்கியகேள்விமேலோன்
மாலையுந்தாரும்பொங்கமஞ்சனச்சாலைபுக்கான். (கச)

வாசநெய்யூட்டிமிக்கமலர்விரையடுத்தநாீர்ப்
பாசனத்தமைந்தபாங்கர்பருமணிப்பைம்பொற்றிண்கால்
ஆசனத்தணிநீராட்டியரிசனஞ்சாத்தியன்பால்
ஈசனுக்கினியான்மேனியெழில்பெறவிளக்கினுர்கள். (கரு)

அகில்விரைத்தூபமேய்ந்தவணிகொள்பட்டாடைசாத்தி
முகினுழைமதியம்போலக்கைவலான்முன்கைசூழ்ந்த
துகில்கொடுகுஞ்சியீரம்புலர்த்தித்தன்றூயசெங்கை
யுகிர்நுதிமுறையிற்போக்கியொளிர்நறுஞ்சிகழியார்த்தான். (கசு)

தூநறும்பசுங்கர்ப்பூரச்சுண்ணத்தால்வண்ணப்போதில்
ஆனதண்பனிநீர்கூட்டியமைந்தசந்தனச்சேறூட்டி

மான்மதச்சாந்துதோய்ந்தமங்கலக்கலவைசாத்திப்
பான்முறைமுந்நூன்மின்னப்பவித்திரஞ்சிறந்தகையான். (கஎ)

தூமலர்ப்பிணையன்மாலைதுணரிணர்க்கண்ணிக்கோதை
தாமமென்றிணையவேறுதகுதியாலமையச்சாத்தி
மாமணியணிந்ததூயவளரொளியிருள்கால்சீய்க்கு
நாமநீள்கலன்கள்சாத்திநன்மணக்கோலங்கொண்டான். (கஅ)

மன்னவர்திருவுந்தங்கள்வைதிகத்திருவும்பொங்க
நன்னகர்விழவுகொள்ளநம்பியாரூரர்நாதன்
றன்னடிமனத்துட்கொண்டுதகுந்திருநீறுசாத்திப்
பொன்னணிமணியார்யோகப்புரவிமேற்கொண்டுபோந்தார். (கக)

இயம்பலதுவைப்பவெங்குமேத்தொலியெடுப்பமாதர்
நயந்துபல்லாண்டுபோற்றநான்மறையொலியினோங்க
வியந்துபார்விரும்பவந்துவிரவினர்க்கின்பஞ்செய்தே
யுயர்ந்தவாகனயானங்கண்மிசைக்கொண்டாருழையரானோர். (உ0)

மங்கலகீதநாதமறையவர்குழாங்களோடு
தொங்கலும்விரையுஞ்சூழ்ந்தமைந்தருந்துவன்றிச்சூதும்
பங்கயமுகையுஞ்சாய்த்துப்பணைத்தெழுந்தணியின்மிக்க
குங்குமமுலையினாரும்பரந்தெழுகொள்கைத்தாகி. (உக)

அருங்கடியெழுந்தபோதினார்த்தவெள்வளைகளாலும்
இருங்குழைமகரத்தாலுமிலங்கொளிமணிகளாலு
நெருங்கியபீலிச்சோலைநீனிறத்தரங்கத்தாலுங்
கருங்கடல்கிளர்ந்ததென்னக்காட்சியிற்பொலிந்ததன்றே. (உஉ)

நெருங்குதூரியங்களேங்கநிரைத்தசாமரைகடோரைப்
பெருங்குடைமிடைந்துசெல்லப்பிறங்குபூங்கொடிகளாட
அருங்கடிமணம்வந்தெய்தவன்றுதொட்டென்றுமன்பில்
வருங்குலமறையோர்புத்தூர்மணம்வந்தபுத்தூராமால்.

நிறைகுடந்தூபதீபநெருங்குபாலிகைகளேந்தி
நறைமலரறுகுசுண்ணநறும்பொரிபலவும்வீசி
யுறைமலிகலவைச்சாந்தினுறுபுனறெளித்துவீதி
மறையவர்மடவார்வள்ளன்மணமெதிர்கொள்ளவந்தார். (உச)

கண்களெண்ணிலாதவேண்டுங்காளையைக்காணவென்பார்
பெண்களிலுயரநோற்றாள்சடங்கவிபேதையென்பார்
மண்களிகூரவந்தமணங்கண்டுவாழ்ந்தோமென்பார்
பாடி[illegible]நிறைந்தகீதம்பாடுவாராடுவார்கள். (உரு)

வே[illegible]னோக்கியருளினேக்கின்வெள்ளத்துளலைந்தோமென்பார்
மா[illegible]யபரியூம்பாற்றகுதியினடைந்ததென்பார்

பூண்டயங்கிவனேகாணும்புண்ணியமூர்த்தியென்பார்
நீண்டியமட்வார்கூட்டமின்னனவிசைப்பச்சென்றார். (உசு)

வருமணக்கோலத்தெங்கள்வள்ளலார்தெள்ளும்வாசத்
திருமணப்பந்தர்முன்புசென்றுவெண்சங்கமெங்கும்
பெருமழைக்குலத்தினார்ப்பப்பரிமிசையிழிந்துபேணும்
ஒருமணத்திறத்தினங்குநிகழ்ந்ததுமொழிவேனுய்ந்தேன். (உஎ)

வேறு.

ஆலுமறைசூழ்கயிலையின்கணருள்செய்த
சாலுமொழியால்வழிதடுத்தடிமைகொள்வான்
மேலுறவெழுந்துமிகுகீழுறவகழ்ந்து
மாலுமயனுக்குமரியாரொருவர்வந்தார். (உஅ)

கண்ணிடைகரந்தகதிர்வெண்படமெனச்சூழ்
புண்ணியநுதற்புனிதநீறுபொலிவெய்தத்
தண்மதிமுதிர்ந்துகதிர்சாய்வதெனமீதே
வெண்ணரைமுடித்ததுவிழுந்திடைசழங்க (உகூ)

காதிலணிகண்டிகைவடிந்தகுழைதாழச்
சோதிமணிமார்பின்மிசைநூலினொடுதோளின்
மீதுபுனைபுத்தரியவெண்டுகிலுடங்க
ஆதபமறைக்குடையணிக்கரம்விளங்க. (௩0)

பண்டிசரிகோவணவுடைப்பழைமைகூரக்
கொண்டதொர்சழங்கலுடையார்ந்தழகுகொள்ள
வெண்டுகிலுடன்குசைமுடிந்துவிடுவேணுத்
தண்டொருகைகொண்டுகழறள்ளுநடைகொள்ள. (௩க)

மொய்த்துவளர்பேரழகுமூத்தவடிவேயோ
அத்தகையமூப்பினுமதின்படிவமேயோ
மெய்ம்மையுணர்ந்ததநெறிவைதிகம்விளைத்தமுதலேயோ
இத்தகையவேடமெனவையமுறவெய்தி (௩உ)

வந்துதிருமாமறைமணத்தொழிலுடங்கும்
பந்தரிடைநம்பியெதிர்பன்னுசபைமுன்னின்
றிந்தமொழிகேண்மினெதிர்யாவர்களுமென்றான்
முந்தைமறையாயிரமொழிந்ததிருவாயான். (௩௩)

என்றுரைசெயந்தணனையெண்ணின்மறையோரு
மன்றல்வினைமங்கலமடங்கலனையானு
நன்றுமதுநல்வரவுநங்கட்வமென்றே
நின்றதிவணீர்மொழிமினீர்மொழிவதென்றார். (௩ச)

பின்னுகனுநாவலர்பெருந்தகையைநோக்கி
என்னிடையுநின்னிடையுநின்றவிசைவால்யான்

முன்னுடையதோர்பெருவழக்கினைமுடித்தே
நின்னுடையவேள்வியினைநீமுயறியென்றான். (௩௫)

நெற்றிவிழியான்மொழியநின்றநிகரில்லா
னுற்றதொர்வழக்கெனிடைநீயுடையதுண்டேன்
மற்றதுமுடித்தலதுயான்வதுவைசெய்யேன்
முற்றவிதுசொல்லுகெனவெல்லைமுடிவில்லான். (௩௬)

ஆவதிதுகேண்மின்மறையோரென்னடியானிந்
நாவனகரூரனிதுநான்மொழிவதென்றான்
றேவரையுமாலயன்முதற்றிருவின்மிக்கோர்
யாவரையும்வேறடிமையாவுடையவெம்மான். (௩௭)

வேறு.

என்றானிறையோனிதுகேட்டவரெம்மருங்கு
நின்றாரிருந்தாரிவனென்னினைந்தான்கொலென்று
சென்றார்வெகுண்டார்சிரித்தார்திருநாவலூர
னன்றான்மறையோன்மொழியென்றெதிர்நோக்கிநக்கான். (௩௮)

நக்கான்முகநோக்கிநடுங்கிநுடங்கியார்க்கு
மிக்கான்மிசையுத்தரியத்துகிருங்கிமேற்சென்
றக்காலமுன்றந்தைதன்றந்தையாளோலையீதால்
இக்காரியத்தைநீயின்றுசிரித்ததென்னேடவென்றான். (௩௯)

வேறு.

மாசிலாமரபில்வந்தவள்ளல்வேதியனைநோக்கி
நேசமுன்கிடந்தசிந்தைநெகிழ்ச்சியாற்சிரிப்புநீங்கி
யாசிலந்தணர்கள்வேறோரந்தணர்க்கடிமையாதல்
பேசவின்றுன்னைக்கேட்டோம்பித்தனேமறையோனென்றார். (௪௦)

பித்தனுமாகப்பின்னும்பேயனுமாகநீயின்
றெத்தனைதீங்குசொன்னாயாதுமற்றவற்றானேன்
அத்தனைக்கென்னையொன்றும்றிந்திலையாகிநின்று
வித்தகம்பேசவேண்டாபணிசெயவேண்டுமென்றார். (௪௧)

கண்டதோர்வடிவாலுள்ளங்காதல்செய்துருகாநிற்குங்
கொண்டதோர்பித்தர்வார்த்தைகோபமுமுடனேயாக்கு
மண்டொராளோலையென்னுமதனுண்மையறிவேனென்று
அந்தண்டனாரோலைகாட்டுகென்றனர்துணைவனார். (௪௨)

ஓலைகாட்டென்றுநம்பியுரைக்கநீயோலைகாணற்
பாலையோவவைமுன்காட்டப்பணிசெயற்பாலையென்ற
வேலையினாவலூரர்வெகுண்டுமேல்விரைந்துசென்று
மாலயன்றேடாரதானைவலிந்துபின்றொடரலுற்றார். (௪௩)

ஆவணம்பறிக்கச்சென்றவளவினிலந்தணாளன்
காவணத்திடையேயோடக்கடிதுபின்றொடர்ந்துநம்பி
பூவணத்தவரையுற்றூரவரலாற்புரங்கள்செற்ற
ஏவணச்சிலையினாரைத்தொடர்ந்தெட்டவல்லார். (௪௪)

மறைகளாயினமுன்போற்றிமலர்ப்பதம்பற்றிநின்ற
இறைவனைத்தொடர்ந்துபற்றியெழுதுமாளோலைவாங்கி
அறைகழலண்ணலாளாயந்தணர்செய்தலென்ன
முறையெனக்கீறியிட்டான்முறையிட்டான்முடிவிலாதான், (௪௫)

அருமறைமுறையிட்டின்னமறிவதற்கரியான்பற்றி
யொருமுறைமுறையோவென்னவுழைநின்றார்விலக்கியிந்தப்
பெருமுறையுலகிலில்லாநெறிகொண்டுபிணங்குகின்ற
திருமறைமுனிவரேநீரெங்குளீர்செப்புமென்றார். (௪௬)

என்றலுநின்றவையரிங்குளேனிருப்புஞ்சேய்த்த
தன்றிந்தவெண்ணெய்நல்லூரதுநிற்கவறத்தாறின்றி
வன்றிறல்செய்தென்கையிலாவணம்வலியவாங்கி
நின்றிவன்கிழித்துத்தானேநிரப்பினனடிமையென்றான். (௪௭)

குழைமறைகாதினானைக்கோதிலாரூரர்நோக்கிப்
பழையமன்றாடிபோலுமிவனென்றுபண்பின்மிக்க
விழைவுறுமனமும்பொங்கவெண்ணெய்நல்லூராயேலுன்
பிழைநெறிவழக்கையாங்கேபேசநீபோதாயென்றார். (௪௮)

வேதியனதனைக்கேட்டுவெண்ணெய்நல்லூரிலேநீ
போதினுநன்றுமற்றைப்புனிதநான்மறையோர்முன்னர்
ஆதியின்மூலவோலைகாட்டிநீயடிமையாதல்
சாதிப்பனென்றுமுன்னேதண்டுமுன்றூங்கிச்சென்றான். (௪௯)

செல்லுநான்மறையோன்றன்பின்றிரிமுகக்காந்தஞ்சேர்ந்த
வல்லிரும்பணையுமாபோல்வள்ளலுங்கடிதுசென்றான்
எல்லையில்சுற்றத்தாருமிதுவென்னாமென்றுசெல்ல
நல்லவந்தணர்கள்வாழும்வெண்ணெய்நல்லூரைநண்ணி. (௫௰)

வேதபாரகரின்மிக்கார்விளங்குபேரவைமுன்சென்று
நாதனுமறையோன்சொல்லுநாவலூராரூரன்றான்
காதலென்னடியானென்னக்காட்டியவோலைகீறி
மூதறிவீர்முன்போந்தானிதுமற்றென்முறைப்பாடென்றான்.

அந்தணரவையின்மிக்கார்மறையவரடிமையாதல்
இந்தமாநிலத்திலில்லையென்சொன்னையாவென்றார்
வந்தவாறிசைவேயன்றேவழக்கிவன்கிழித்தவோலை
தந்தைதன்றந்தைநேர்ந்ததென்றனன்றணியாய்நின்றான். (௫௨)

இசைவினாலெழுதுமோலைகாட்டினானாகிலின்று
விசையினால்வலியவாங்கிக்கிழிப்பதுவெற்றியாமோ
தசையெலாமொடுங்கமூத்தான்வழக்கினைச்சாரச்சொன்னான்
அசைவிலாரூரனெண்ணமென்னென்றாரவையின்மிக்கார். (௫௩)

அனைத்துநூலுணர்ந்தீராதிசைவனென்றறிவீரென்னைத்
தனக்குவேறடிமையென்றிவ்வந்தணன்சாதித்தானேல்
மனத்தினாலுணர்தற்கெட்டாமாயையென்சொல்லுகேன்யான்
எனக்கிதுதெளியவொண்ணாதென்றனனெண்ணமிக்கான். (௫௪)

அவ்வுரையவையின்முன்புநம்பியாரூரர்சொல்லச்
செவ்வியமறையோர்நின்றதிருமறைமுனியைநோக்கி
இவ்வுலகின்கணீரின்றிவரைநும்மடிமையென்ற
வெவ்வுரையெம்முன்பேற்றவேண்டுமென்றுரைத்துமீண்டும். (௫௫)

ஆட்சியிலாவணத்திலன்றிமற்றயலார்தங்கள்
காட்சியின்மூன்றிலொன்றுகாட்டுவாயென்னமுன்னே
மூட்சியிற்கிழித்தவோலைபடியோலைமூலவோலை
மாட்சியிற்காட்டவைத்தேனென்றனன்மாயைவல்லான். (௫௬)

வல்லையேற்காட்டிங்கென்னமறையவன்வலிசெய்யாமற்
சொல்லநீர்வல்லீராகிற்காட்டுவேனென்றுசொல்லச்
செல்வநான்மறையோர்நாங்கடீங்குறவொட்டோமென்றார்
அல்லறீர்த்தாளநின்றாராவணங்கொண்டுசென்றார். (௫௭)

இருண்மறைமிடற்றோன்கையிலோலைகண்டவையோரேவ
அருள்பெறுகரணத்தானுமாவணந்தொழுதுவாங்கிச்
சுருள்பெறுமடியைநீக்கிவிரித்ததன்றொன்மைநோக்கித்
தெருள்பெறுசவையோர்கேட்பவாசகஞ்செப்புகின்றான். (௫௮)

அருமறைநாவலாதிசைவனாரூரன்செய்கை
பெருமுனிவெண்ணெய்நல்லூர்ப்பித்தனுக்கியானுமென்பால்
வருமுறைமரபுளோரும்வழித்தொண்டுசெய்தற்கோலை
இருமையாலெழுதிநேர்ந்தேனிதற்கிவையென்னெழுத்து. (௫௯)

வாசகங்கேட்டபின்னர்மற்றுமேலெழுத்திட்டார்கள்
ஆசிலாவெழுத்தைநோக்கியவையொக்குமென்றபின்னர்
மாசிலாமறையோரையாமற்றுங்கள் ¶ பேரனார்தந்
தேசுடையெழுத்தேயாகிற்றெளியப்பார்த்தறிதியென்றார். (௬௦)

அந்தணர்கூறவின்னுமாளோலையிவனேகாண்பான்
றந்தைதன்றந்தைதான்வேறெழுதுகைச்சாத்துண்டாகில்
இந்தவாவணத்தினோடுமெழுத்துநீரொப்புநோக்கி
வந்ததுமொழிமினென்றான்வலியவாட்கொள்ளும்வள்ளல். (௬௧)

---

¶ பேரன்-பாட்டன்.

திரண்டமாமறையோர்தாமுந்திருநாவலூரர்கோமுன்
மருண்டதுதெளியமற்றமறையவனெழுத்தாலோலை
யரண்டருகாப்பில்வேறொன்றழைத்துடனொப்புநோக்கி
இரண்டுமொத்திருந்ததென்னேயினிச்செயலில்லையென்றார். (சுஉ)

நான்மறைமுனிவனார்க்குநம்பியாரூரர்தோற்றீர்
பான்மையினேவல்செய்தல்கடனென்றுபண்பின்மிக்க
மேன்மையோர்விளம்பநம்பிவிதிமுறையிதுவேயாகில்
யானிதற்கிசையேனென்னவிசையுமோவென்றுநின்றார். (சுங)

திருமிகுமறையோர்நின்றசெழுமறைமுனியைநோக்கி
அருமுனிநீர்முன்காட்டுமாவணமதனிலெங்கள்
பெருமைசேர்பதியேயாகப்பேசியதுமக்கிவ்வூரில்
வருமுறைமனையுநீடுவாழ்க்கையுங்காட்டுகென்றார். (சுச)

பொருவரும்வழக்கால்வென்றபுண்ணியமுனிவரென்னை
யொருவருமறியீராகிற்போதுமென்றுரைத்துச்சூழ்ந்த
பெருமறையவர்குழாமுநம்பியும்பின்புசெல்லத்
¶ திருவருட்டுறையேபுக்கார்கண்டிலர்திகைத்துநின்றார். (சுரு)

எம்பிரான்கோயினண்ணவிலங்குநூன்மார்பனெங்க
ணம்பர்தங்கோயில்புக்கதென்கொலோவென்றுநம்பி
தம்பெருவிருப்பினோடுதனிதொடர்ந்தழைப்பமாதோ.
டும்பரின்விடைமேற்றோன்றியவர்தமக்குணர்த்தலுற்றார். (சுசு)

முன்புநீநமக்குத்தொண்டன்முன்னியவேட்கைகூரப்
பின்புநம்மேவலாலேபிறந்தனைமண்ணின்மீது
துன்புறுவாழ்க்கைநின்னைத்தொடர்வறத்தொடர்ந்துவந்து
நன்புலமறையோர்முன்னர்நாந்தடுத்தாண்டோமென்றார். (சுஎ)

என்றெழுமோசைகேளாவீன்றவான்கனைப்புக்கேட்ட
கன்றுபோற்கதறிநம்பிகரசரணுதியங்கந்
துன்றியபுளகமாகத்தொழுதுகைதலைமேலாக
மன்றுளீர்செயலோவந்துவலியவாட்கொண்டதென்றார். (சுஅ)

எண்ணியவோசையைந்தும்விசும்பிடைநிறையவெங்கும்
விண்ணவர்பொழிபூமாரிமேதினிநிறைந்துவிம்ம
மண்ணவர்மகிழ்ச்சிபொங்கமறைகளுமுழங்கியார்ப்ப
அண்ணலையோலைகாட்டியாண்டவரருளிச்செய்வார். (சுகூ)

மற்றுநீவன்மைபேசிவன்றொண்டனென்னுநாமம்
பெற்றனைநமக்குமன்பிற்பெருகியசிறப்பின்மிக்க

¶ திருவருட்டுறையென்பது-அந்தத்தலத்திலிருக்கும் ஆலயத்தின்பெயர்.

அர்ச்சனைபாட்டேயாகுமாதலான்மண்மேனம்மைச்
சொற்றமிழ்பாடுகென்றார் தூய்மறைபாடும்வாயார். (எ0)

தேடியவயனுமாலுந்தெளிவுறாதைந்தெழுத்தும்
பாடியபொருளாயுள்ளான்பாடுவாய்நம்மையென்ன
நாடியமனத்தராகிநம்பியாரூரர்மன்றுள்
ஆடியசெய்யதாளையஞ்சலிகூப்பிநின்று. (எக)

வேதியனாகியென்னைவழக்கினால்வெல்லவந்த
ஊதியமறியாதேனுக்குணர்வுதந்துய்யக்கொண்ட
கோதிலாவமுதேயின்றுன்குணப்பெருங்கடலைநாயேன்
யாதினையறிந்தென்சொல்லிப்பாடுகேனெனமொழிந்தார். (எஉ)

அன்பனையருளினோக்கியங்கணரருளிச்செய்வார்
முன்பெனைப்பித்தனென்றேமொழிந்தனையாதலாலே
என்பெயர்பித்தனென்றேபாடுவாயென்றார்நின்ற
வன்பெருந்தொண்டராண்டவள்ளலைப்பாடலுற்றார். (எங)

வேறு.

கொத்தார்மலர்க்குழலாளொருகூறாயடியவர்பால்
மெய்த்தாயினுமினியானையவ்வியனாவலர்பெருமான்
பித்தாபிறைசூடியெனப்பெரிதாந்திருப்பதிகம்
இத்தாரணிமுதலாவுலகெல்லாமுயவெடுத்தார். (எச)

முறையால்வருமருத்தத்துடன்மொழியிந்தளமுதலிற்
குறையாநிலைமும்மைப்படிகூடுங்கிழமையினா
னிறைபாணியினிசைகோள்புணர்நீடும்புகல்வகையால்
இறையான்மகிழிசைபாடினனெல்லாநிகரில்லான். (எரு)

---

திருவெண்ணெய்நல்லூர்த்தேவாரம். பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா
வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே.

காரூர்புனலெய்திக்கரைகல்லித்திரைக்கையாற்
பாரூர்புகழெய்தித்திகழ்பன்மாமணியுந்திச்
சீரூர்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாரூரனெம்பெருமாற்காளல்லேனெனலாமே.

திருச்சிற்றம்பலம்.

சொல்லார்தமிழிசைபாடியதொண்டன்றனையின்னும்
பல்லாறுலகினினம்புகழ்பாடென்றுறுபரிசி

ணல்லார்வெண்ணெய்நல்லூரருட்டுறைமேவியஎம்பன்
னல்லாவுலகுய்யப்புரமெய்தானருள்செய்தான். (எசு)

அயலோர்தவமுயல்வார்பிறரன்றேமணமழியுஞ்
செயலானிகழ்புத்தூர்வருசிவவேதியன்மகளும்
உயர்நாவலர்தனிநாதனையொழியாதுணர்வழியிற்
பெயராதுயர்சிவலோகமுமெளிதாம்வகைபெற்றாள். (எஎ)

வேறு.

நாவலர்கோனாரூரன்றனைவெண்ணெய்நல்லூரின்
மேவுமருட்டுறையமர்ந்தவேதியராட்கொண்டதற்பின்
பூவலருந்தடம்பொய்கைத்திருநாவலூர்ப்புகுந்து
தேவர்பிரான்றனைப்பணிந்துதிருப்பதிகம்பாடினார். (எஅ)

---

திருவெண்ணெய்நல்லூரும் திருநாவலூரும் பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந்தீயெழுவித்தவனோரம்பினா
லேவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தென்னையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே.

நாதனுக்கூர்நமக்கூர்நரசிங்கமுனையரைய
னாதரித்தீசனுக்காட்செயுமூரணிநாவலூரொன்
றோதநற்றக்கவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்தம்வினைகட்டறுமே.

திருச்சிற்றம்பலம்

சிவனுறையுந்திருத்துறையூர்ச்சென்றணைந்துதீவினையால்
அவநெறியேசெல்லாமே தடுத்தாண்டாயடியேற்குத்
தவநெறிதந்தருளென்றுதம்பிரான்முன்னின்று
பவநெறிக்குவிலக்காகுந்திருப்பதிகம்பாடினார். (எகூ)

---

திருத்துறையூர்த் தேவாரம். பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மலையார்அருவித்திரண்மாமணியுந்திக்
குலையாரக்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
கலையாரல்குற்கன்னியராடுந்துறையூர்த்
தலைவாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே.

செய்யார்கமலம்மலர்நாவலர்மன்னன்
கையாற்றொழுதேத்தப்படுந்துறையூர்மேற்

பொய்யாத்தமிழூரனுரைத்தனவல்லார்
மெய்யேபெறுவார்கடவநெறிதானே.

திருச்சிற்றம்பலம்.

புலனொன்றும்படிதவத்திற்புரிந்தநெறிகொடுத்தருள
அலர்கொண்டநறுஞ்சோலைத்திருத்துறையூரமர்ந்தருளு
நிலவுந்தண்புனலுமொளிர்நீள்சடையொன்றிருப்பாத
மலர்கொண்டுபோற்றிசைத்துவந்தித்தார்வன்றொண்டர். (அ0)

திருத்துறையூர்தனைப்பணிந்துசிவபெருமானமர்ந்தருளும்
பொருத்தமாமிடம்பலவும்புக்கிறைஞ்சிப்பொற்புலியூர்
நிருத்தனார்திருக்கூத்துத்தொழுவதற்குநினைவுற்று
வருத்தமிகுகாதலினால்வழிக்கொள்வான்மனங்கொண்டார். (அக)

மலைவளர்சந்தகில்பீலிமலர்பரப்பிமணிகொழிக்கும்
அலைதருதண்புனற்பெண்ணையாறுகடந்தேறியபி
னிலவுபசும்புரவிநெடுந்தேரிரவிமேல்கடலிற்
செலவணையும்பொழுதணையத்திருவதிகைப்புறத்தணைந்தார். (அஉ)

உடையவரசுலகேத்துமுழவாரப்படையாளி
விடையவர்க்குக்கைத்தொண்டுவிரும்புபெரும்பதியைமிதித்
தடையுமதற்கஞ்சுவனென்றந்நகரிற்புகுதாதே
மடைவளர்தண்புறம்பணையிற்சித்தவடமடம்புகுந்தார். (அ௩)

வரிவளர்பூஞ்சோலைசூழ்மடத்தின்கண்வன்றொண்டர்
விரிதிரைநீர்க்கெடிலவடவீரட்டானத்திறைதாள்
புரிவுடையமனத்தினராய்ப்புடையெங்குமிடைகின்ற
பரிசனமுந்துயில்கொள்ளப்பள்ளியமர்ந்தருளினார். (அச)

அதுகண்டுவீரட்டத்தமர்ந்தருளுமங்கணரு
முதுவடிவின்மறையவராய்முன்னொருவரறியாமே
பொதுமடத்தினுட்புகுந்துபூந்தாரான்றிருமுடிமேற்
பதுமமலர்த்தாள்வைத்துப்பள்ளிகொள்வார்போற்பயின்றார். (அரு)

அந்நிலையாரூரனுணர்ந்தருமறையோயுன்னடியென்
சென்னியில்வைத்தனையென்னத்திசையறியாவகைசெய்த
தென்னுடையமூப்புக்காணென்றருளவதற்கிசைந்து
தன்முடியப்பால்வைத்தேதுயிலமர்ந்தான்றமிழ்நாதன். (அசு)

அங்குமவன்றிருமுடிமேன்மீட்டுமவர்தாணீட்டச்
செங்கயல்பாய்தடம்புடைசூழ்திருநாவலூராளி
யிங்கென்னைப்பலகாலுமிதித்தநீயாரென்னக்
கங்கைசடைக்கரந்தபிரானறிந்திலையோவெனக்கரந்தான். (அஎ)

செம்மாந்திங்கியானறியாதென்செய்தேனெனத்தெளிந்து
தம்மானையறியாதசாதியாருளரேயென்
றம்மானைத்திருவதிகைவீரட்டானத்தமர்ந்த
கைம்மாவினுரியானைக்கழல்பணிந்துபாடினார். (அஅ)

திருவதிகைவீரட்டானம்தேவாரம்-பண்-கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தம்மானையறியாதசாதியாருளரே - சடைமேற்கொள்பிறையானைவி டைமேற்கொள்விகிர்தன், கைம்மாவினுரியானைக்கரிகாட்டிலாட-லுடை யானைவிடையானைக்கறைகொண்டகண்டத்தெம்மான்றனடிக்கொண்டெ ன்முடிமேல்வைத்திடுமென்னு - மாசையால்வாழ்கின்றவறிவிலாநாயே- னெம்மானையெறிகெடிலவடவீரட்டானத் - துறைவானையிறைபோதுமிக ழ்வன்போல்யானே.

என்பினையேகலனாகவணிந்தானையெங்க - ளெருதேறும்பெருமானை யிசைஞானிசிறுவன், வன்பனையவளர்பொழில்சூழ்வயனாவலூர்க்கோன்- வன்றொண்டனாரூரன்மதியாதுசொன்ன, வன்பனையாவர்க்குமறிவரியவ த்தப்-பெருமானையதிகைமாநகருள்வாழ்பவனை, யென்பொன்னையெறிகெ டிலவடவீரட்டானத்-துறைவானையிறைபோதுமிகழ்வன்போலியானே.

திருச்சிற்றம்பலம்.

பொன்றிரளுமணித்திரளும்பொருகரிவெண்கோடுகளு
மின்றிரண்டவெண்முத்தும்விரைமலருநறுங்குறடும்
வன்றிரைகளாற்கொணர்ந்துதிருவதிகைவழிபடலாற்
றென்றிசையிற்கங்கையெனுந்திருக்கெடிலந்திளைத்தாடி. (அகூ)

அங்கணரையடிபோற்றியங்ககன்றுமற்றந்தப்
பொங்குநதித்தென்கரைபோய்ப்போர்வலித்தோண்மாவலிதன்
மங்கலவேள்வியிற்பண்டுவாமனனாய்மண்ணிரந்த
செங்கணவன்வழிபட்டதிருமாணிகுழியடைந்தார். (கூ0)

பரம்பொருளைப்பணிந்துதாள்பரவிப்போய்ப்பணிந்தவர்க்கு
வரந்தருவான்றினைநகரைவணங்கினர்வண்டமிழ்பாடி
நரம்புடையாழொலிமுழவினாதவொலிவேதவொலி
யரம்பையர்தங்கீதவொலியறாத்தில்லைமருங்கணைந்தார். (கூக)

திருத்தினைநகர்த்தேவாரம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

நீறுதாங்கியதிருநுதலானைநெற்றிக்கண்ணனைநிரைவளைமடந்தை
கூறுதாங்கியகொள்கையினானைக்குற்றமில்லியைக்கற்றைபஞ்சடைமே
லாறுதாங்கியவழகனையமரர்க்கரியசோதியைவரிவராலுகளுஞ்
சேறுதாங்கியதிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைச்சென்றடைமனனே.

நீடுபோக்கையிற்பிறவியைப்பழித்துநீங்கலாமென்றுமனத்தினைத்தெருட்டிச், சேடலாம்பொழிற்றிருத்தினைநகருட் சிவக்கொழுந்தினைத்திருவடியிணைத்தா, ஞாடெலாம்புகழ்நாவலூராளிநம்பிவன்றொண்டனூரனுரைத்த, பாடலாந்தமிழ்பத்திவைவல்லார்முத்தியாவதுபரகதிப்பயனே.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

தேமலங்கலணிமாமணிமார்பிற்செம்மலங்கயல்கள்செங்கமலத்தண்
பூமலங்கவெதிர்பாய்வனமாடேபுள்ளலம்புதிரைவெள்வளைவாவித்
தாமலங்குகடடம்பணைசூழுந்தன்மருங்குதொழுவார்கடமும்மை
மாமலங்களறவீடருடில்லைமல்லலம்பதியினெல்லைவணங்கி. (௯௨)

நாகசூதவகுளஞ்சரளஞ்சூழ்நாளிகேரமிலவங்கநரந்தம்
பூகஞாழல்குளிர்வாழைமதூகம்பொதுளும்வஞ்சிபலவெங்குநெருங்கி
மேகசாலமலிசோலைகளாகிமீதுகோகிலமிடைந்துமிழற்றப்
போகபூமியினுமிக்குவிளங்கும்பூம்புறம்பணைகடந்துபுகுந்தார். (௯௩)

வன்னிகொன்றைவழைசண்பகமாரமலர்ப்பலாசொடுசெருந்திமந்தாரங்
கன்னிகாரங்குரவங்கமழ்புன்னைகற்புபாடலங்கூவிளமோங்கித்
துன்னுசாதிமருமாலதிமௌவறுதைந்தநந்திகரவீரமிடைந்த
பன்மலர்ப்புனிதநந்தவனங்கள்பணிந்துசென்றனன்மணங்கமழ்தாரான்.

இடமருங்குதனிநாயகிகாணவேழ்பெரும்புவனமுய்யவெடுத்து,நடநவின்றருள்சிலம்பொலிபோற்றுநான்மறைப்பதியைநாளும்வணங்கக், கடல்வலங்கொள்வதுபோற் புடைசூழுங்காட்சிமேவிமிகுசேட்செலவோங்குந், தடமருங்குவளர்மஞ்சிவரிஞ்சித் தண்கிடங்கையெதிர்கண்டுமகிழ்ந்தார். (௯௫)

மன்றுளாடுமதுவின்னசையாலேமறைச்சுரும்பறைபுறத்தின்மருங்கே
குன்றுபோலுமணிமாமதில்சூழுங்குண்டகழ்க்கமலவண்டலர்கைதை
துன்றுநீறுபுனைமேனியவாகித்தூயநீறுபுனைதொண்டர்களென்னச் [றார்
சென்றுசென்றுமுரல்கின்றனகண்டுசிந்தையன்பொடுதிளைத்தெதிர்சென்

பார்விளங்கவளர்நான்மறைநாதம்பயின்றபண்புமிகவெண்கொடியாடுஞ்
சீர்விளங்குமணிநாவொலியாலுந்திசைகளுன்கெதிர்புறப்படலாலுந்
தார்விளங்குவரைமார்பினயன்பொற்சதுர்முகங்களெனலாயினதில்லை
ஊர்விளங்குதிருவாயில்களுன்கினுத்தரத்திசையின்வாயின்முனெய்தி.().

அன்பின்வந்தெதிர்கொண்டசீரடியாரவர்களோநம்பியாரூரர்தாமோ
முன்பிறைஞ்சினரியாவரென்றறியாமுறைமையாலெதிர் வணங்கிமகிழ்ந்து
பின்புகும்பிடும்விருப்பினிறைந்துபெருகுநாவனகரார்பெருமானும்
பொன்பிறங்குமணிமாளிகைநீடும்பொருவிறந்ததிருவீதிபுகுந்தார். (௯௮)

அங்கண்மாமறைமுழங்குமருங்கேயாடரம்பையரரங்குமுழங்கு
மங்குல்வானின்மிசையைந்துமுழங்கும்வாசமாலைகளின்வண்டுமுழங்கும்

பொங்குமன்பருவிகண்பொழிதொண்டர்போற்றிசைக்குமொலி யெங்கு
திங்கடங்குசடைகங்கைமுழங்குந்தேவதேவர்புரியுந்திருவீதி. [முழங்கும்

போகநீடுநிதிமன்னவன்மன்னும்புரங்களொப்பனவரம்பிலவோங்கி
மாகமுன்பருகுகின்றனபோலுமாளிகைக்குலமிடைந்தபதாகை
யோகசிந்தைமறையோர்கள்வளர்க்குமோமதூமமுயர்வானிலடுப்ப
மேகபந்திகளின்மீதிடையெங்குமின்னுடங்குவனவென்னவிளங்கும். ()

ஆடுதோகைபுடைநாசிகடோறுமரணிதந்தசுடராகுதிதோறு
மாடுதாமமணிவாயில்கடோறுமங்கலக்கலசம்வேதிகைதோறுஞ்
சேடுகொண்டவொளிதேர்நிறைதோறுஞ்செந்நெலன்னமலைசாலைகடோறு
நீடுதண்புனல்கள்பந்தர்கடோறுநிறைந்ததேவர்கணநீளிடைதோறும். ()

எண்ணில்பேருலகனைத்தினுமுள்ளவெல்லையில்லழகுசொல்லியவெல்லா
மண்ணிலிப்பதியில்வந்தனவென்னமங்கலம்பொலிவளத்தனவாகிப்
புண்ணியப்புனிதவன்பர்கண்முன்புபுகழ்ந்துபாடல்புரிபொற்பின் விளங்
அண்ணலாடுதிருவம்பலஞ்சூழ்ந்தவம்பொன்வீதியினைநம்பிவணங்கி.[கும்

மாலயன்சதமகன்பெருந்தேவர்மற்றுமுள்ளவர்கண்முற்றுநெருங்கிச்
சீலமாமுனிவர்சென்றுமுன்றுன்னித்திருப்பிரம்பினடிகொண்டு திளைத்து
காலநேர்படுதல்பார்த்தயனிற்பக்காதலன்பர்கணநாதர்புகும்பொற் [க்
கோலநீடுதிருவாயிலிறைஞ்சிக்குவித்துசெங்கைதலைமேற்கொடுபுக்கார். ()

வேறு.

பெருமகிழ்சிறந்தசெம்பொன்மாளிகைமின்பிறங்குபேரம்பலமேரு
வருமுறைவலங்கொண்டிறைஞ்சியபின்னர்வணங்கியமகிழ்வொடும் புகுந்
அருமறைமுதலினடுவினிற்கடையிலன்பர்தஞ்சிந்தையிலலர்ந்த [தார்
திருவளரொளிசூழ்திருச்சிற்றம்பலமுன்றிருவணுக்கன்றிருவாயில்.(௧௦௪)

வையகம்பொலியமறைச்சிலம்பார்ப்பமன்றுளேமாலயன்றேட
ஐயர்தாம்வெளியேயாடுகின்றாரையஞ்சலிமலர்த்திமுன்குவித்த
கைகளோதிளைத்தகண்களோவந்தக்கரணமோகலந்தவன்புந்தச் [ங்கு
செய்தவம்பெரியோன்சென்றுதாழ்ந்தெழுந்தான்றிருக்களிற்றுப் படிமரு

ஐந்துபேரறிவுங்கண்களேகொள்ளவளப்பருங்கரணங்களுன்குஞ்
சிந்தையேயாகக்குணமொருமூன்றுந்திருந்துசாத்துவிதமேயாக
இந்துவாழ்சடையானாடுமானந்தவெல்லையிறனிப்பெருங்கூத்தின்
வந்தபேரின்பவெள்ளத்துட்டிளைத்துமாறிலாமகிழ்ச்சியின்மலர்ந்தார். ()

தெண்ணிலாமலர்ந்தவேணியாயுன்றன்றிருநடங்கும்பிடப்பெற்று
மண்ணிலேவந்தபிறவியேயெனக்குவாலிதாமின்பமாமென்று
கண்ணிலானந்தவருவிநீர்சொரியக்கைம்மலருச்சிமேற்குவித்துப்
புண்ணினுனீடியறிவரும்பதிகம்பாடினார்பரவினார்பணிந்தார். (௧௦௭)

கோயிற்றேவாரம்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மடித்தாடுமடிமைக்களன்றியேமனனேநீவாழுநாளுந்
தடுத்தாட்டித்தருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
கடுத்தாடுங்கரதலத்திற்றமருகமுமெரியகலுங்கரியபாம்பும்
பிடித்தாடிபுலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே.

பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற
னூரூரன்றருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வா
னாரூரன்றம்பிரானாரூரனமீகொங்கிலணிகாஞ்சிவாய்ப்
பேரூரர்பெருமானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தேபெற்றாமன்றே.

திருச்சிற்றம்பலம்.

தடுத்துமுன்னாண்டதொண்டனார்முன்புதனிப்பெருந்தாண்டவம்புரிய
எடுத்தசேவடியாரருளினாற்றரளமெறிபுனன்மறிதிரைப்பொன்னி
மடுத்தநீள்வண்ணப்பண்ணையாரூரில்வருகநம்பாலெனவானில் [தார்.
அடுத்தபோதினில்வந்தெழுந்ததோர்நாதங்கேட்டலுமதுவுணர்ந் தெழுந்

ஆடுகின்றவர்பேரருளினைநிகழ்ந்தவப்பணிசென்னிமேற்கொண்டு
சூடுதங்கரங்களஞ்சலிகொண்டுதொழுந்தொறும்புறவிடைகொண்டு [து
மாடுபேரொளியின்வளருமம்பலத்தை வலங்கொண்டுவணங்கினர் போந்
நீடுவான்பணியவுயர்ந்தபொன்வரைபோனிலைபெழுகோபுரங்கடந்து. ()

நின்றுகோபுரத்தைநிலமுறப்பணிந்துநெடுந்திருவீதியைவணங்கி
மன்றலார்செல்வமறுகினூடேகிமன்னியதிருப்பதியதனிற்
றென்றிசைவாயில்கடந்துமுன்போந்துசேட்படுதிருவெல்லையிறைஞ்சிக்
கொன்றைவார்சடையானருளையேநினைவார்கொள்ளிடத்திருநதிகடந்தார்.

வேறு.

புறந்தருவார்போற்றிசைப்பப்புரிமுந்நூலணிமார்பர்
அறம்பயந்தாடிருமுலைப்பாலமுதுண்டுவளர்ந்தவர்தாம்
பிறந்தருளும்பெரும்பேறுபெற்றதெனமுற்றுலகிற்
சிறந்தபுகழ்க்கழுமலமாந்திருப்பதியைச்சென்றணைந்தார். (கககூ)

பிள்ளையார்திருவவதாரஞ்செய்தபெரும்புகலி
யுள்ளுநான்மிதியேனென்றாரொல்லைப்புறம்வணங்கி
வள்ளலார்வலமாகவரும்பொழுதுமங்கையிடங்
கொள்ளுமால்விடையானுமெதிர்காட்சிகொடுத்தருள. (ககஉ)

மண்டியபேரன்பினால்வன்றொண்டர்நின்றிறைஞ்சித்
தெண்டிரைவேலையின்மிதந்ததிருத்தோணிபுரத்தாரைக்
கண்டுகொண்டேன்கயிலையினில்வீற்றிருந்தபடியென்று
பண்ட்ருமின்னிசைபயின்றதிருப்பதிகம்பாடினார். (ககங)

திருக்கழுமலத்தேவாரம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

சாதலும்பிறத்தலுந்தவிர்த்தெனைவகுத்துத்தன்னருடந்த வெந்தலைவனைமலையின், மாதினைமதித்தங்கோர்பால்கொண்டமணியைவருபுனல்சடையிடைவைத்தவெம்மானை, யேதிலேன்மனத்துக்கோரிரும்புண்டநீரையெண்வகையொருவனையெங்கள்பிரானைக், காதில்வெண்குழையனைக்கடல்கொளமிதந்தகழுமலவளநகர்கண்டுகொண்டேனே.

செழுமலர்க்கொன்றையுங்கூவிளமலரும்விரவியசடைமுடியடிகளைநினைந்திட், டழுமலர்க்கண்ணிணையடியவர்க்கல்லாலறிவரிதவன்றிருவடியிணையிரண்டுங், கழுமலவளநகர்கண்டுகொண்டேரன்சடையன்றன்காதலன்பாடியபத்துந், தொழுமலரெடுத்தகையடியவர்தம்மைத்துன்பமுமிடும்பையுஞ்சூழகிலாவே.

திருச்சிற்றம்பலம்.

இருக்கோலமிடும்பெருமானெதிர்கின்றுமெழுந்தருள
வெருக்கோளுற்றதுநீங்கியாரூர்மேற்செலவிரும்பிப்
பெருக்கோதஞ்சூழ்புறவப்பெரும்பதியைவணங்கிப்போய்த்
திருக்கோலக்காவணங்கிச்செந்தமிழ்மாலைகள்பாடி. (கக௪)

தேனார்க்குமலர்ச்சோலைத்திருப்புன்கூர்நம்பர்பால்
ஆனப்பேரன்புமிகவடிபணிந்துதமிழ்பாடி
மானார்க்குங்கரதலத்தார்மகிழ்ந்தவிடம்பலவணங்கிக்
கானார்க்குமலர்த்தடஞ்சூழ்காவிரியின்கரையணைந்தார். (கக௫)

வம்புலாமலரலையமணிகொழித்துவந்திழியும்
பைம்பொன்வார்கரைப்பொன்னிப்பயினீர்த்தம்படிந்தாடித்
தம்பிரான்மயிலாடுதுறைவணங்கித்தாவில்சீ
ரம்பர்மாகாளத்தினமர்ந்தபிரானடிபணிந்தார். (கக௬)

மின்னார்செஞ்சடையண்ணல்விரும்புதிருப்புகலூரை
முன்னாகப்பணிந்தேத்திமுதல்வன்றனருணினைந்து
பொன்னாருமுத்தரியப்புரிமுந்நூலணிமார்பர்
தென்னவலூராளிதிருவாரூர்சென்றணைந்தார். (கக௭)

தேராருநெடுவீதித்திருவாரூர்வாழ்வாருக்
காராதகாதலினம்மாரூரனமழைக்க
வாராநின்றானவனைமகிழ்ந்தெதிர்கொள்வீரென்று
நீராருஞ்சடைமுடிமேனிலவணிந்தாரருள்செய்தார். (கக௮)

தம்பிரானருள்செய்யத்திருத்தொண்டரதுசாற்றி
யெம்பிரானாரருடானிருந்தபரிசிதுவானா
னம்பிரானாராவாரவரன்றேயெனுநலத்தால்
உம்பர்நாடிருந்ததெனவெதிர்கொள்ளவுடனெழுந்தார். (கக௯)

மாளிகைகண்மண்டபங்கண்மருங்குபெருங்கொடிநெருங்கத்
தாளினெடுந்தோரணமுந்தழைக்கமுகுங்குழைத்தொடையு
நீளிலையகதலிகளுநிறைந்தபசும்பொற்றசும்பும்
ஒளிநெடுமணிவிளக்குமுயர்வாயிறொறுநிரைத்தார். (௧௨௰)

சோதிமணிவேதிகைகடோய்நறுஞ்சாந்தணிநீவிக்
கோதில்பொரிபொற்சுண்ணங்குளிர்தரளமணிபரப்பித்
தாதவிழ்பூந்தொடைமாலைத்தண்பந்தர்களுஞ்சமைத்து
வீதிகணுண்டுகளடங்கவிரைப்பனிநீர்மிகத்தெளித்தார். (௧௨௧)

மங்கலகீதம்பாடமழைநிகர்தூரியமுழங்கச்
செங்கயற்கண்முற்றிழையார்தெற்றிதொறுநடம்பயில
நங்கள்பிரான்றிருவாரூர்நகர்வாழ்வார்நம்பியைமுன்
பொங்கெயினீடிருவாயிற்புறமுறவந்தெதிர்கொண்டார். (௧௨௨)

வேறு.

வந்தெதிர்கொண்டுவணங்குவார்முன்வன்றொண்டரஞ்சலிகூப்பிவந்து
சிந்தைகளிப்புறவீதியூடுசெல்வார்திருத்தொண்டர்தம்மைநோக்கி
யெந்தையிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோகேளீரென்னுஞ்
சந்தவிசைப்பதிகங்கள்பாடித்தம்பெருமான்றிருவாயில்சார்ந்தார். (௧௨௩)

---

திருவாரூர்த்தேவாரம்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கரையுங்கடலுமலையுங்காலையுமாலையுமெல்லா
முரையில்விரவிவருவானொருவனுருத்திரலோகன்
வரையின்மடமகள்கேள்வன்வானவர்தானவர்க்கெல்லா
மரையனிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோகேளீர்.

எந்தையிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோவென்று
சிந்தைசெயுந்திறம்வல்லான்றிருமருவுந்திரடோளன்
மந்தமுழவமியம்பும்வளவயனாவலாரூரன்
சந்தமிசையொடும்வல்லார்தாம்புகழெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

வானுறநீடிருவாயினோக்கிமண்ணுறவைந்துறுப்பால்வணங்கித்
தேனுறைகற்பகவாசமாலைத்தேவாசிரயன்றொழுதிறைஞ்சி
யூனுமுயிருமுருக்குமன்பாலுச்சிகுவித்தசெங்கைகளோடுந்
தூநறுங்கொன்றையன்மூலட்டானஞ்சூழ்திருமாளிகைவாயில்புக்கார். ()

புற்றிடங்கொண்டபுராதனனைப்பூங்கோயின்மேயபிரானையார்க்கும்
பற்றிடமாயபரம்பொருளைப்பார்ப்பதிபாகனைப்பங்கயத்தாள்
அர்ச்சனைசெய்யவருள்புரிந்தவண்ணலைமண்மிசைவீழ்ந்திறைஞ்சி [றூர்.
நற்றமிழ்நாவலர்கோனுடம்பானன்மையின்றன்மையைமெய்ம்மைபெற்

அன்புபெருகவுருகியுள்ளமலேயவட்டாங்கபஞ்சாங்கமாக
முன்புமுறைமையினல்வணங்கிமுடிவிலாக்காதன்முதிரவோங்கி
நன்புலனுகியவைந்துமொன்றிநாயகன்சேவடியெய்தப்பெற்ற
இன்பவெள்ளத்திடைமூழ்கிநின்றேயின்னிசைவண்டமிழ்மாலைபாட. ()

வாழியமாமறைப்புற்றிடங்கொண்மன்னவனாரருளாலோர்வாக்குத்
தோழமையாகவுனக்குநம்மைத்தந்தனநாமுன்புதொண்டுகொண்ட
வேள்வியிலன்றுநீகொண்டகோலமென்றும்புனைந்துநின்வேட்கைதீர
வாழிமண்மேல்விளையாடுவாயென்றாரூரர்கேட்கவெழுந்ததன்றே. (கஉஎ)

கேட்கவிரும்பிவன்றொண்டரென்றுங்கேடிலாதானையிறைஞ்சிநின்றே
யாட்கொளவந்தமறையவனேயாரூரமர்ந்தவருமணியே
வாட்கயல்கொண்டகண்மங்கைபங்காமற்றுன்பெரியகருணையன்றே
நாட்கமலப்பதந்தந்ததின்றுநாயினேனைப்பொருளாகவென்றார். (கஉஅ)

என்றுபலமுறையால்வணங்கியெய்தியவுள்ளக்களிப்பினோடும்
வென்றியடல்விடைபோனடந்துவீதிவிடங்கப்பெருமான்முன்பு
சென்றுதொழுதுதுதித்துவாழ்ந்துதிருமாளிகைவலஞ்செய்துபோந்தார்
அன்றுமுதலடியார்களெல்லாந்தம்பிரான்றோழனென்றேயறைந்தார். ()

மைவளர்கண்டரருளினாலேவண்டமிழ்நாவலர்தம்பெருமான்
சைவவிடங்கினணிபுனைந்துசாந்தமுமாலையுந்தாருமாகி
மெய்வளர்கோலமெலாம்பொலியமிக்கவிழுத்தவவேந்தரொன்னத் [ர்.
தெய்வமணிப்புற்றுளாரைப்பாடித்திளைத்துமகிழ்வொடுஞ்செல்லாநின்று

வேறு.

இதற்குமுன்னெல்லையில்லாத்திருநகரிதனுள்வந்து
முதற்பெருங்கயிலையாதிமுதல்வர்தம்பங்கினாட்குப்
பொதுக்கடிந்துரிமைசெய்யும்பூங்குழற்சேடிமாரிற்
கதித்தபூணேந்துகொங்கைக்கமலினியவதரித்தாள். (கஙக)

கதிர்மணிபிறந்ததென்னவுருத்திரகணிகைமாராம்
பதியிலார்குலத்திற்றோன்றிப்பரவையாரென்னுநாமம்
விதியுளிவிளக்கத்தாலேமேதகுசான்றோரான்ற
மதியணிபுனிதனன்னாண்மங்கலவணியாற்சாற்ற. (கஙஉ)

பரவினர்காப்புப்போற்றிப்பயில்பெருஞ்சுற்றந்திங்கள்
விரவியபருவந்தோறும்விழாவணியெடுப்பமிக்கோர்
வரமலர்மங்கையிங்குவந்தனளென்றுசிந்தை
தரவருமகிழ்ச்சிபொங்கத்தளர்நடைப்பருவஞ்சேர்ந்தார். (கஙங)

மானிளம்பிணையோதெய்வவள்ளிளமுகையோவாசத்
தேனிளம்பதமோவேலைத்திரையிளம்பவளவல்லிக்
கானிளங்கொடியோதிங்கட்கதிரிளங்கொழுந்தோகாமன்
றனிளம்பருவங்கற்குந்தனியிளந்தனுவோவென்ன. (கஙச

நாடுமின்பொற்புவாய்ப்புநாளுநாள்வளர்ந்துபொங்க
ஆடுமென்கழங்கும்பந்துமம்மனையூசலின்ன
பாடுமின்னிசையுந்தங்கள்பனிமலைவல்லிபாதங்
கூடுமன்புருகப்பாடுங்கொள்கையோர்குறிப்புத்தோன்ற. (கரு௫)

பிள்ளைமைப்பருவமீதாம்பேதைமைப்பருவநீங்கி
யள்ளுதற்கமைந்தபொற்பாலனங்கன்மெய்த்தனங்களீட்டங்
கொள்ளமிக்குயர்வபோன்றுகொங்கைகோங்கரும்பைவீழ்ப்ப
உள்ளமெய்த்தன்மைமுன்னையுண்மையுந்தோன்றவுய்ப்பார். (கருசு)

பாங்கியர்மருங்குசூழப்படரொளிமறுகுசூழத்
தேங்கமழ்குழலின்வாசந்திசையெலாஞ்சென்றுசூழ
ஓங்குபூங்கோயிலுள்ளாரொருவரையன்பினோடும்
பூங்கழல்வணங்கவென்றும்போதுவாரொருநாட்போந்தார். (கருஎ)

அணிசிலம்படிகள்பார்வென்றடிப்படுத்தனமென்றார்ப்ப
மணிவளர்காஞ்சிபல்குல்வரியரவுலகைவென்ற
துணிவுகொண்டார்ப்பமஞ்சுசுரிகுழற்கழியவிண்ணும்
பணியுமென்றினவண்டார்ப்பப்பரவையார்போதும்போதில். (கருஅ)

புற்றிடம்விரும்பினாரைப்போற்றினர்தொழுதுசெல்வார்
சுற்றியபரிசனங்கள்சூழவாளுடையநம்பி
நற்பெரும்பான்மைகூட்டநகைபொதிந்திலங்குசெவ்வாய்
விற்புரைநுதலின்வேற்கண்விளங்கிழையவரைக்கண்டார். (கருகூ)

வேறு.

கற்பகத்தின்பூங்கொம்போகாமன்றன்பெருவாழ்வோ
பொற்புடையபுண்ணியத்தின்புண்ணியமோபுயல்சுமந்து
விற்குவளைபவளமலர்மதிபூத்தவிரைக்கொடியோ
அற்புதமோசிவனருளோவறியேனென்றதிசயித்தார். (கச0)

ஓவியநான்முகனெழுதவொண்ணாமையுள்ளத்தான்
மேவியதன்வருத்தமுறவிதித்ததொருமணிவிளக்கோ
மூவுலகின்பயனாகிமுன்னின்றதெனநினைந்து
நாவலர்காவலர்நின்றார்நடுநின்றார்படைமதனார். (கசக)

தண்டரளமணித்தோடுந்தகைத்தோடுங்கடைபிறழுங்
கெண்டைநெடுங்கண்வியப்பக்கிளரொளிப்பூணுரவோனை
யண்டர்பிரான்றிருவருளாலயலறியாமணம்விரும்பிப்
பண்டைவிதிகடைகூட்டப்பரவையாருங்கண்டார். (கசஉ)

கண்கொள்ளாக்கவின்பொழிந்ததிருமேனிகதிர்விரிப்ப
விண்கொள்ளாப்பேரொளியானெதிர்நோக்குமெல்லியலுக்
கெண்கொள்ளாக்காதலின்முன்பெய்தாததொருவேட்கை
மண்கொள்ளாநாண்மடமச்சம்பயிர்ப்பைவலிந்தெழலும் (கசந)

முன்னேவந்தெதிர்தோன்றுமுருகனேபெருகொளியாற்
றன்னேரின்மாரனேதார்மார்பின்விஞ்சையனே
மின்னேர்செஞ்சடையண்ணன்மெய்யருள்பெற்றுடையவனே
என்னேயென்மனந்திரித்தவிவன்யாரோவெனநினைந்தார். (கசச)

அண்ணலவன்றன்மருங்கேயளவிறந்தகாதலினால்
உண்ணிறைபுங்குணநான்குமொருபுடைசாய்ந்தனவெனினும்
வண்ணமலர்க்கருங்கூந்தன்மடக்கொடியைவலிதாக்கிக்
கண்ணுதலைத்தொழுமன்பேகைக்கொண்டுசெலவுய்ப்ப. (கசரு)

பாங்கோடிச்சிலைவளைத்துப்படையனங்கன்விடுபாணந்
தாங்கோலியெம்மருங்குந்தடைசெய்யமடவரலுந்
தேங்கோதைமலர்க்குழன்மேற்சிறைவண்டுகலந்தார்ப்பப்
பூங்கோயிலமர்ந்தபிரான்பொற்கோயில்போய்ப்புக்காள். (கசசு)

வன்றொண்டரதுகண்டென்மனங்கொண்டமயிலியலின்
இன்றொண்டைச்செங்கனிவாயிளங்கொடிதான்யாரென்ன
அன்றங்குமுன்னின்றாரவர்நங்கைபரவையார்
சென்றும்பர்தரத்தார்க்குஞ்சேர்வரியாரெனச்செப்ப. (கசஎ)

பேர்பரவைபெண்மையினிற்பெரும்பரவைவிரும்பல்கு
லார்பரவையணிதிகழுமணிமுறுவலரும்பரவை
சீர்பரவையாயினதிருவுருவின்மென்சாயல்
ஏர்பரவையிடைப்பட்டவென்னுசையெழுபரவை.

(இதன்பொருள்.)

பெயர் பரவையென்றுசொல்லப்படுவது-அவளுடைய அழகுமுதலியவைகளாற் குறிக்குமிடத்து - பெரிய தேவர்கூட்டம் விரும்புகின்ற திலோத்தமைமுதலிய ரம்பாஸ்திரிகள்-துதிசெய்யத்தக்கதெய்வமாம். அழகு விளங்குகின்ற பற்கள் முல்லையரும்புகளை யொப்பானவை-சீருள்ள பரவையென்னுங் கூத்தினை யுடையவளாகிய இலக்குமியினுடைய சௌந்தரியம்பொருந்திய வடிவம்போன்ற மென்சாயலுள்ள-அந்தப் பரவையென்பவளுடைய-அழகாகிய சமுத்திரத்தினிடத்தில்பொருந்திய என்னுசையானது-ஏழுசமுத்திரங்களையு மொப்பாயிருக்கின்றது. சீர்பரவை-அடிநோக்கிமிகாதுநின்றது—என்றவாறு.

பரவை யென்னும் பெயருடையவள் பெண்தன்மையானேக்குமிடத்துப்பெரிய தேவர்களுக்கெல்லாந் தாய்போல்பவள் விரும்புகின்ற அல்குலினுடைய அழகினிறைவானது சர்ப்பங்களுக்கெல்லாம் இறையாகிய ஆதிசேஷனுடைய படத்தை யொப்பாயிருப்பது இலக்குமிதுதிசெய்யத்தக்க அழகையுடையவளாகிய அந்தப்பரவையின் திருவுருவின் சௌந்தரியு மாகிய சமுத்திரத்தினிடத்திற் பொருந்திய என்னுசையானது ஏழுசமுத்திரங்களையுமொப்பானது - எனப்பொருள் கூறுவதுமொன்று.

இவ்வாறுபொருள்கூறுங்கால்பெண்மையினிற்-பெரு-உம்பர்-அவை-என்றும், அல்குல்-ஆர்பு-அரவு-ஐ - என்றும்,சீர்-பரவு-ஐயாயினுள்-என்றும் பதம்பிரிக்க. முன்-ஐ-இறை-பின்-ஐ-அழகு-சீர்-இலக்குமி அவ்வையென்பது-அவையென விகாரமாயிற்று. (கசஅ)

என்றினையபலவுநினைந்தெம்பெருமானருள்வகையான்
முன்றொடர்ந்துவருங்காதன்முறைமையினாற்றொடக்குண்டு
நன்றெனையாட்கொண்டவர்பாணண்ணுவனென்றுண்மகிழ்ந்து
சென்றுடையநம்பியும்போய்த்தேவர்பிரான்கோயில்புக. (கசகூ)

பரவையார்வலங்கொண்டுபணிந்தேத்திமுன்னரே
புரவலனார்கோயிலினின்றொருமருங்குபுறப்பட்டார்
விரவுபெருங்காதலினான்மெல்லியலார்தமைவேண்டி
யரவினாரம்புனைந்தாரடிபணிந்தாராரூரர். (கடுo)

அவ்வாறுபணிந்தேத்தியணியாரூர்மணிப்புற்றின்
மைவாழுந்திருமிடற்றுவானவன்பாணின்றும்போந்
தெவ்வாறுசென்றுளென்னின்னுயிராமன்னமெனச்
செவ்வாய்வெண்ணகைக்கொடியைத்தேடுவாராயினார். (கடுக)

வேறு.

பாசமாம்வினைப்பற்றறுப்பான்மிகும்
ஆசைமேலுமொராசையளிப்பதோர்
தேசின்மன்னியென்சிந்தைமயக்கிய
ஈசனாரருளெந்நெறிச்சென்றதே. (கடுஉ)

உம்பர்நாயகர்தங்கழலல்லது
நம்புமாறறியேனைநடுக்குற
வம்புமால்செய்துவல்லியினெல்கியின்
றெம்பிரானருளெந்நெறிச்சென்றதே. (கடுங)

பந்தம்வீடுதரும்பரமன்கழல்
சிந்தையாரவுமுன்னுமென்சிந்தையை
வந்துமால்செய்துமானெனவேவிழித்
தெந்தையாரருளெந்நெறிச்சென்றதே. (கடுச)

என்றுசாலவுமாற்றலரென்னுயிர்
நின்றதெங்கெனநித்திலப்பூண்முலை
மன்றல்வார்குழல்வஞ்சியைத்தேடுவான்
சென்றுதேவாசிரயனைச்சேர்ந்தபின். (கடுடு)

காவிநேர்வருங்கண்ணியைநண்ணுவான்
யாவரோடுமுரையியம்பாதிருந்
தாவிநல்குவராருனையாண்டவர்
பூவின்மங்கையைத்தந்தெனும்போழ்தினில். (கடுசு)

காட்டுநல்லிசைநாவலூரன்சிந்தை
வேட்டமின்னிடையின்னமுதத்தினைக்
காட்டுவன்கடலைக்கடந்தென்பபோற்
பூட்டுமேழ்பரித்தேரோன்கடல்புக. (௧௫௭)

எய்துமென்பெடையோடிரைதேர்ந்துண்டு
பொய்கையிற்பகல்போக்கியபுள்ளினம்
வைகுசேக்கைகண்மேற்செலவந்தது
பையுண்மாலைதமியோர்பனிப்புற. (௧௫௮)

பஞ்சின்மெல்லடிப்பாவையருள்ளமும்
வஞ்சமாக்கடம்வல்வினையும்மரன்
அஞ்செழுத்துமுணராவறிவிலோர்
நெஞ்சுமென்னவிருண்டதுநீண்டவான். (௧௫௯)

மறுவில்சிந்தைவன்றொண்டர்வருந்திநல்
இறுமருங்குலார்க்கியார்பிழைப்பாரென்று
நறுமலர்க்கங்குனங்கைமுன்கொண்டபுன்
முறுவலென்னமுகிழ்த்ததுவெண்ணிலா. (௧௬௦)

அரந்தைசெய்வார்க்கழுங்கித்தம்மாருயிர்
வரன்கைதீண்டமலர்குலமாதர்போற்
பரந்தவெம்பகற்கொல்கிப்பணிமதிக்
கரங்கடீண்டவலர்ந்தகயிரவம். (௧௬௧)

தோற்றுமன்னுயிர்கட்கெலாந்தூய்மையே
சாற்றுமின்பமுந்தண்மையுந்தந்துபோ
யாற்றவண்டமெலாம்பரந்தண்ணல்வெண்
ணீற்றின்பேரொளிபோன்றதுநீணிலா. (௧௬௨)

வாவியுள்ளொலிமாற்றியமாலையி
நாவலூரருநங்கைபரவையாம்
பாவைதந்தபடர்பெருங்காதலு
மாவிசூழ்ந்ததனிமையுமாயினார். (௧௬௩)

தந்திருக்கண்ணெரிதழலிற்பட்டு
வெந்தகாமன்வெளியேயுருச்செய்து
வந்தென்முன்னின்றுவாளிதொடுப்பதே
யெந்தையாரருளிவ்வண்ணமோவென்பார். (௧௬௪)

ஆர்த்திகண்டுமென்மேனின்றழற்கதிர்
தூர்ப்பதேயெனத்தொண்டுகொண்டாண்டவர்
நீர்த்தரங்கநெடுங்கங்கைநீண்முடி
சாத்தும்வெண்மதிபோன்றிலைதண்மதி. (௧௬௫)

அடுத்துமேன்மேலலைத்தெழுமாழியே
தடுத்துமுன்னெனையாண்டவர்தாமுணக்
கடுத்தநஞ்சுன்றரங்கக்கரங்களால்
எடுத்துநீட்டிநீயென்னையின்றென்செயாய் (கசுசு)

பிறந்ததெங்கள்பிரான்மலயத்திடை
சிறந்தணைந்ததுதெய்வநீர்நாட்டணி
புறம்பணைத்தடம்பொங்கழல்வீசிட
மறம்பயின்றதெங்கோதமிழ்மாருதம். (கசுஎ)

இன்னதன்மையுமின்னுமியம்புவான்
மன்னுகாதலனாகியவள்ளல்பாற்
றன்னரும்பெறனெஞ்சுதயங்கப்போம்
அன்னமன்னவள்செய்கையறைகுவாம். (கசுஅ)

வேறு.

கணங்கொண்டமணிகண்டர்கழல்வணங்கிக் கணவனைமுன்பெறுவாள்போல, இனங்கொண்டசேடியர்கள்புடைசூழவெய்துபெருங் காதலோடுந், தனங்கொண்டுதளர்மருங்குற்பரவையும்வன்றொண்டர்பாற்றனித்துச்சென்ற, மனங்கொண்டுவரும்பெரியமயல்கொண்டுதன் மணிமாளிகையைச்சார்ந்தாள். (கசுகூ)

சீறடிமேனூபுரங்களறிந்தனபோற்சிறிதளவேயொலிப்பமுன்னர்
வேறொருவருடன்பேசாண்மெல்லவடியொதுங்கிமாளிகையின்மேலால்
ஏறிமரகதத்தூணத்திலங்குமணிவேதிகையினலங்கொள்பொற்கான்
மாறின்மலர்ச்சேக்கைமிசைமணிநிலாமுன்றின்மருங்கிருந்தாள்வந்து. ()

அவ்வளவிலருகிருந்தசேடிதனைமுகநோக்கியாரூராண்ட
மைவிரவுகண்டனைநாம்வணங்கப்போமறுகெதிர்வந்தவராரென்ன
இவ்வுலகிலந்தணராயிருவர்தேடொருவர்தாமெதிர்நின்றாண்ட
சைவமுதற்றிருத்தொண்டர்தம்பிரானாரூரனம்பியென்றாள். (கஎக)

என்றவுரைகேட்டலுமேயெம்பிரான்றமரேயோவென்றுமுன்னம்
வன்றொண்டர்பால்வைத்தமனக்காதலளவின்றிவளர்ந்துபொங்க
நின்றநிறைநாண்முதலாங்குணங்களுடனீங்கவுயிரொன்றுந்தாங்கி [து.
மின்றயங்குநுண்ணிடையாள்வெய்துயிர்த்துமெல்லணைமேல்வீழ்ந்தபோ

ஆரநறுஞ்சேறாட்டியரும்பனிநீர்நறுந்திவலையருகுவீசி
யீரவிளந்தளிர்குளிரப்படுத்துமடவார்செய்தவிவையுமெல்லாம்
பேரழலினெய்சொரிந்தாலொத்தனமற்றதன்மீதுசமிதையென்ன
மாரனுந்தன்பெருஞ்சிலையின்வலிகாட்டிமலர்வாளிசொரிந்தான்வந்து. ()

மலரமளித்துயிலாற்றாள்வருந்தென்றன்மருங்காற்றாண்மங்குல்வானி
னிலவுமிழுந்தழலாற்றாணிறையாற்றாம்பொறையாற்றாணீர்மையோடுந்

கலவமயிலெனவெழுந்துகருங்குழலின்பரமாற்றுக்கையளாகி [னுள்.
யிலவவிதழ்ச்செந்துவர்வாய்நெகிழ்ந்தாற்றுமையின்வறிதேயின்ன் சொன்

வேறு.

கந்தங்கமழ்மென்குழலீரிதுவென்கலைவாண்மதியங்கனல்வானெனையிச்
சந்தின்றழலைப்பனிநீரளவித்தடவுங்கொடியீர்தவிரீர்தவிரீர்
வந்திங்குலவுங்நிலவும்விரையார்மலயானிலமுமெரியாய்வருமால்
அந்தண்புனலுமரவும்விரவுஞ்சடையானருள்பெற்றுடையாரருளார். ()

புலரும்படியன்றிரவென்னளவும்பொறையுநிறையுமிறையுந்தரியா
உலருந்தனமுமனமும்வினையேனொருவேனள்வோபெருவாழ்வுனையீர்
பலரும்புரியுந்துயர்தானிதுவோபடைமன்மதனூர்புடைநின்றகலார்
அலரும்நிலவுமலருமுடியாரருள்பெற்றுடையாரவரோவறியார். (கஎசு)

தேருங்கொடியுமிடையுமறுகிற்றிருவாரூரர்நீரேயல்லால்
ஆரென்றுயரமறிவாரடிகளடியேன்யரும்படியோவிதுதா
னீரும்பிறையும்பொறிவாளரவினிரையுநிரைவெண்டலையின்புடையே
யூருஞ்சடையீர்விடைமேல்வருவீருமதன்பிலர்போலியானேவுறுவேன்.

என்றின்னனவேபலவும்புகலுமிருளாரளகச்சுருளோதியையும் [ர்
வன்றொண்டரையும்படிமேல்வரமுன்பருள்வானருளும்வகையார்நினைவா
சென்றும்பர்களும்பணியுஞ்செல்வத்திருவாரூர்வாழ்பெருமானடிகள்
அன்றங்கவர்மன்றலைநீர்செயுமென்றடியாரறியும்படியாலருளி. (கஎஅ)

மன்னும்புகழ்நாவலர்கோன்மகிழமங்கைபரவைதன்னைத்தந்தோம்
இன்னவகைநம்மடியாரறியும்படியேயுறைசெய்தனமென்றருளிப்
பொன்னின்புரிபுன்சடையன்விடையன்பொருமாகரியினுரிவைபுனைவான்
அன்னந்நடையாள்பரவைக்கணியஃதாரூரன்பாள்மணமென்றருள. ()

காமத்துயரிற்கவல்வார்நெஞ்சிற்கரையில்லிருளுங்கங்குற்கழிபோம்
யாமத்திருளும்புலரக்கதிரோனெழுகாலையில்வந்தடியார்கூடிச்
சேமத்துணையாமவர்பேரருளைத்தொழுதேதிருநாவலர்கோன்மகிழத்
தாமக்குழலாள்பரவைவதுவைதருநீர்மையினுனிகழச்செய்தார். (கஅ0)

வேறு.

தென்னாவலூர்மன்னன்றேவர்பிரான்றிருவருளான்
மின்னுருங்கொடிமருங்குற்பரவையெனுமெல்லியறன்
பொன்னுருமுலையோங்கற்புணர்குவடேசார்வாகப்
பன்னாளும்பயில்யோகபரம்பரையின்விரும்பினார். (கஅக)

தன்னையாளுடையபிரான்சரணாரவிந்தமலர்
சென்னியிலுஞ்சிந்தையிலுமலர்வித்துத்திருப்பதிகம்
பன்னுதமிழ்த்தொடைமாலைபலசாத்திப்பரவையெனு
மின்னிடையாளுடன்கூடிவிளையாடிச்செல்கின்றார். (கஅ௨)

வேறு.

மாதுடன்கூடவைகிமாளிகைமருங்குசோலைப்
போதலர்வாவிமாடுசெய்குன்றின்புடையோர்தெற்றிச்
சீதளத்தரளப்பந்தற்செழுந்தவிசிழிந்துதங்க
ளாதர்பூங்கோயினண்ணிக்கும்பிடும்விருப்பானம்பி. (கஅங)

அந்தரத்தமரர்போற்றுமணிகிளராடைசாத்திச்
சந்தனத்தளறுதோய்ந்தகுங்குமக்கலவைசாத்திச்
சுந்தரச்சுழியஞ்சாத்திச்சுடர்மணிக்கலன்கள்சாத்தி
இந்திரத்திருவின்மேலாமெழின்மிகவிளங்கித்தோன்ற. (கஅச)

கையினிற்புனைபொற்கோலுங்காதினிலிலங்குதோடு
மெய்யினிற்றுவளுநூலுநெற்றியின்விளங்குநீறும்
ஐயனுக்கழகிதாமென்றாயிழைமகளிர்போற்றச்
சைவமெய்த்திருவின்கோலந்தழைப்பவீதியினைச்சார்ந்தார். (கஅரு)

நாவலூர்வந்தசைவநற்றவக்களிறேயென்றும்
மேவலர்புரங்கள்செற்றவிடையவர்க்கன்பவென்றுந்
தாவில்சீர்ப்பெருமையாரூர்மறையவர்தலைவவென்றும்
மேவினரிரண்டுபாலும்வேறுவேறாயம்போற்ற. (கஅசு)

கைக்கடாகுரங்குகோழிசிவல்கவுதாரிபற்றிப்
பக்கமுன்போதுவார்கள்பயின்மொழிபயிற்றிச்செல்ல
மிக்கபூம்பிடகைகொள்வோர்விரையடைப்பையோர்சூழ
மைக்கருங்கண்ணினார்கண்மறுகநீண்மறுகில்வந்தார். (கஅஎ)

பொலங்கலப்புரவிபண்ணிப்போதுவார்பின்புபோத
இலங்கொளிவலயப்பொற்றோளிடையிடைமிடைந்துதொங்க
லலங்கிளர்நீழல்சூழநான்மறைமுனிவரோடும்
அலங்கலந்தோளினான்வந்தணைந்தனனண்ணல்கோயில். (கஅஅ)

கண்ணுதல்கோயிற்றேவாசிரயனுங்காவணத்து
விண்ணவரொழியமண்மேன்மிக்கசீரடியார்கூடி
எண்ணிலாரிருந்தபோதிலிவர்க்கியானடியேனாகப்
பண்ணுநாளெந்நாளென்றுபரமர்தாள்பரவிச்சென்றார். (கஅகூ)

அடியவர்க்கடியனாவேனென்னுமாதரவுகூரக்
கொடிநெடுங்கொற்றவாயில்பணிந்துகைகுவித்துப்புக்கார்
கடிகொள்பூங்கொன்றைவேய்ந்தாரவர்க்கெதிர்காணக்காட்டும்
படியெதிர்தோன்றிநிற்கப்பாதங்கள்பணிந்துபூண்டு. (ககூ0)

வேறு.

மன்பெருந்திருமாமறைவண்டுசூழ்ந்
தன்பர்சிந்தையலர்ந்தசெந்தாமரை

நன்பெரும்பரமானந்தநன்மது
என்றரத்துமளித்தெதிர்கின்றன. (ககூக)

ஞாலமுய்யக்கடமன்றுளாடின
காலனாருயிர்மாளக்கறுத்தன
மாலைதாழ்குழன்மாமலையாள்செங்கை
சிலமாகவருடச்சிவந்தன. (ககூஉ)

நீதிமாதவர்நெஞ்சிற்பொலிந்தன
வேதியாதவர்தம்மைவேதிப்பன
சோதியாயெழுஞ்சோதியுட்சோதிய
ஆதிமாலயன்காணுவளவின. (ககூ௩)

வேதவாரணமேற்கொண்டிருந்தன
பேதையேன்செய்பிழைபொறுத்தாண்டன
ஏதமானவைதீர்க்கவிசைந்தன
பூதநாதநின்புண்டரீகப்பதம். (ககூ௪)

வேறு.

இன்னவாறேத்துநம்பிக்கேறுசேவகனார்தாமும்
அந்நிலையவர்தாம்வேண்டுமதனையேயருளவேண்டி
மன்னுசீரடியார்தங்கள்வழித்தொண்டையுணரநல்கிப்
பின்னையுமவர்கடங்கள்பெருமையையருளிச்செய்வார். (ககூ௫)

பெருமையாற்றம்மையொப்பார்பேணலாலெம்மைப்பெற்றார்
ஒருமையாலுலகைவெல்வாரூனமேலொன்றுமில்லார்
அருமையாநிலையினின்றாரன்பினாலின்பமார்வார்
இருமையுங்கடந்துநின்றாரிவரைநீயடைவாயென்று. (ககூ௬)

நாதனாருளிச்செய்யநம்பியாரூரர்நானிங்
கேதந்தீர்நெறியைப்பெற்றேனென்றெதிர்வணங்கிப்போற்ற
நீதியாலவர்கடம்மைப்பணிந்துநீசிறைசொன்மாலை
கோதிலாவாய்மையாலேபாடெனவண்ணல்கூற (ககூ௭)

தன்னையாளுடையநாதன்றானருள்செய்யக்கேட்டுச்
சென்னியால்வணங்கிநின்றதிருமுனைப்பாடிநாடர்
இன்னவாறின்னபண்பென்றேத்துகேனதற்கியானார்
பன்னுபாமாலைபாடும்பரிசெனக்கருள்செய்யென்ன. (ககூ௮)

வேறு.

தொல்லைமால்வரைபயந்ததூயாடன்றிருப்பாகன்
அல்லறீர்ந்துலகுய்யமறையளித்ததிருவாக்காற்
றில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேனென்
றெல்லையில்வண்புகழாரையெடுத்திசைப்பாமொழியென்றான். (ககூ௯)

மன்னுசீர்வயலாரூர்மன்னவனைவன்றொண்டர்
சென்னியுறவடிவணங்கித்திருவருண்மேற்கொள்பொழுதின்
முன்னமாலயனறியாமுதல்வர்தாமெழுந்தருள
அந்நிலைகண்டடியவர்பாற்சார்வதனுக்கணைகின்றார். (உ௦௦)

தாரத்தேதிருக்கூட்டம்பலமுறையாற்றொழுதன்பு
சேரத்தாழ்ந்தெழுந்தருகுசென்றெய்திநின்றழியா
வீரத்தாரெல்லார்க்குந்தனித்தனிவேறடியேனென்
றார்வத்தாற்றிருத்தொண்டத்தொகைப்பதிகமருள்செய்வார். (உ௦௧)

தம்பெருமான்கொடுத்தமொழிமுதலாகத்தமிழ்மாலைச்
செம்பொருளாற்றிருத்தொண்டத்தொகையானதிருப்பதிகம்
உம்பர்பிரான்றானருளுமுணர்வுபெறவுலகேத்த
எம்பெருமான்வன்றொண்டர்பாடியவரெதிர்பணிந்தார். (உ௦உ)

---

திருத்தொண்டத்தொகைத்தேவாரம்-பண்-கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன் றிருநீலகண்டத்துக்குயவனார்க்கடியே, னில்லையேயென்னாதவியற்பகைக்குமடியேனிளையான்றன் குடிமாறனடியார்க்குமடியேன், வெல்லுமாமிகவல்லமெய்ப்பொருளுக்கடியேன் விரிபொழில்சூழ்குன்றையார்விறன்மிண்டர்க்கடியே, னல்லிமென்முல்லையந்தாரமர்நீதிக்கடியே னாரூரனாரூரிலம்மானுக்காளே. (க)

இலைமலிந்தவேனம்பியெறிபத்தர்க்கடியே னேனாதிநாதன்றனடியார்க்குமடியேன், கலைமலிந்தசீர்நம்பிகண்ணப்பர்க்கடியேன் கடவூரிற்கலயன்றனடியார்க்குமடியேன்,மலைமலிந்ததோள்வள்ளல்மானக்கஞ்சாறனெஞ்சாதவாட்டாயனடியார்க்குமடியேன், அலைமலிந்தபுனன்மங்கையானாயர்க்கடியே னாரூரனாரூரிலம்மானுக்காளே. (உ)

மும்மையாலுலகாண்டமூர்த்திக்குமடியேன் முருகனுக்குமுருத்திரபசுபதிக்குமடியேன், செம்மையேதிருநாளைப்போவார்க்குமடியேன் திருக்குறிப்புத்தொண்டர்தம்மடியார்க்குமடியேன், மெய்ம்மையேதிருமேனிவழிபடாநிற்க வெகுண்டெழுந்ததாதைதாள்மழுவினாலெறிந்த, வம்மையானடித்தண்டிப்பெருமானுக்கடியே னாரூரனாரூரிலம்மானுக்காளே. (ங)

திருநின்றசெம்மையேசெம்மையாக்கொண்ட திருநாவுக்கரையன்றனடியார்க்குமடியேன், பெருநம்பிகுலச்சிறைதனடியார்க்குமடியேன் பெருமிழலைக்குறும்பர்க்கும்பேயார்க்குமடியேன், ஒருநம்பியப்பூதியடியார்க்குமடியே னொலிபுனல்சூழ்சாத்தமங்கைநீலநக்கர்க்கடியேன், அருநம்பிநமிநந்தியடியார்க்குமடியே னாரூரனாரூரிலம்மானுக்காளே. (ச)

வம்பறுவரிவண்டுமணநாறமலருமதுமலர்நற் கொன்றையானடிய லாற்பேணு, வெம்பிரான்சம்பந்தனடியார்க்குமடியே னேயர்கோன்கலிக் காமனடியார்க்குமடியே, னம்பிரான்றிருமூலனடியார்க்குமடியே னாட்ட மிகுதண்டிக்கு மூர்க்கர்க்குமடியேன், ‡ அம்பரான்சோமாசிமாறனுக்கு மடியே னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௬)

வார்கொண்டவன்முலையாளுமைபங்கன்கழலே மறவாதுகல்லெறிந் தசாக்கியர்க்குமடியேன், சீர்கொண்டபுகழ்வள்ளல்சிறப்புலிக்குமடியே ன் செங்காட்டங்குடிமேயசிறுத்தொண்டர்க்கடியேன், கார்கொண்டகொ டைக்கழறிற்றறிவார்க்குமடியேன் கடற்காழிக்கணநாதனடியார்க்குமடி யேன், ஆர்கொண்டவேற்கூற்றன்களந்தைக்கோனடியே னாரூரனாரூரிலம் மானுக்காளே. (௭)

பொய்யடிமையில்லாதபுலவர்க்குமடியேன் பொழிற்கருவூர்த்துஞ்சி யபுகழ்ச்சோழற்கடியேன், மெய்யடியனரசிங்கமுனையரையற்கடியேன் வி ரிதிரைசூழ்கடனாகையதிபத்தர்க்கடியேன், கைதடிந்தவரிசிலையான்கலிக்க ம்பன்கலியன் கழற்சத்திவரிஞ்சையர்கோனடியார்க்குமடியேன், ஐயடிக ள்காடவர்கோனடியார்க்குமடியே னாரூரனாரூரிலம்மானுக்காளே. (எ)

கறைக்கண்டன்கழலடியேகாப்புக்கொண்டிருந்த கணம்புல்லநம்பிக் குங்காரிக்குமடியே, னிறைக்கொண்டசிந்தையானெல்வேலிவென்ற நின் றசீர்நெடுமாறனடியார்க்குமடியேன், றுறைக்கொண்டசெம்பவளமிருள கற்றுஞ்சோதித் தொன்மயிலைவாயிலானடியார்க்குமடியேன், அறைக்கொ ண்டவேனம்பிமுனையடுவார்க்கடியே னாரூரனாரூரிலம்மானுக்காளே. (அ)

கடல்சூழ்ந்தவுலகெலாங்காக்கின்றபெருமான் காடவர்கோன்கழற்சி ங்கனடியார்க்குமடியேன், மடல்சூழ்ந்ததார்நம்பியிடங்கழிக்குந்தஞ்சை மன்னவனாஞ்செருத்துணைதனடியார்க்குமடியேன், புடைசூழ்ந்தபுலியத ண்மேலரவாடவாடி பொன்னடிக்கேமனம்வைத்தபுகழ்த்துணைக்குமடி யேன், அடல்சூழ்ந்தவேனம்பிகோட்புலிக்குமடியே னாரூரனாரூரிலம்மா னுக்காளே. (௯)

பத்தராய்ப்பணிவார்களெல்லார்க்குமடியேன் பரமனையேபாடுவார டியார்க்குமடியேன், சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்க்குமடியேன் றி ருவாரூர்ப்பிறந்தார்களெல்லார்க்குமடியேன், முப்பொழுதுந்திருமேனி தீண்டுவார்க்கடியேன் முழுநீறுபூசியமுனிவர்க்குமடியேன், அப்பாலுமடி ச்சார்ந்தாரடியார்க்குமடியே னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௧௦)

மன்னியசீர்மறைநாவனின்றவூர்ப்பூசல் வரிவளையாண்மானிக்குநே னுக்குமடியேன், றென்னவனாயுலகாண்டசெங்கணார்க்கடியேன் றிருநீ

‡ அம்பர் - என்பது - ஒரு சிவஸ்தலம்.

கண்டத்துப்பாணனார்க்கடியே, னென்னவனுமரனடியேயடைந்திட்டச டைய னிசைஞாநிகாதலன்றிருநாவலூர்க்கோ, னன்னவனுமாரூரனடிமை கேட்டுவப்பா ராரூரிலம்மானுக்கன்பராவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

உம்பர்நாயகரடியார்பேருவகைதாமெய்த
நம்பியாரூரர்திருக்கூட்டத்தினடுவணைந்தார்
தம்பிரான்றோழரவர்தாமொழிந்ததமிழ்முறையே
யெம்பிரான்றமர்கள்திருத்தொண்டேத்தலுறுகின்றேன். (உ0௬)

தடுத்தாட்கொண்டபுராணமுற்றுப்பெற்றது.

ஆக-திருவிருத்தம்—௫௬௬.

---

## தடுத்தாட்கொண்டபுராணம்.

திருக்கைலாசமலையிலே பிரமவிட்டுணு முதலிய ஆன்மாக்களுக்கு நிக்கிரகாநுக்கிரகங்கள் செய்யும்பொருட்டுத் தமது சத்தியாகிய உமா தேவியாரோடும் எழுந்தருளியிருக்கின்ற அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப்பிழம்பாகிய சிவபெருமானுடைய அடியார் கூட்டத்துள் ஒருவராகிய ஆலாலசுந்தரர், ஒரு நாள், பத்தர்கள் செய்யும் அருச்ச னையை அவர்கள் முத்திபெற்று உய்யும்பொருட்டுக் கொண்டருளுகி ன்ற அக்கடவுளுக்குத் தரிக்கும்பொருட்டு, புஷ்பங்களைக் கொய்வத ற்குத் திருநந்தனவனத்துக்குப் போனார். போனபோது, பார்வதிதேவி யாருக்குத் தரிக்கும்பொருட்டு அந்தத் திருநந்தனவனத்திலே புஷ்பங் கொய்துகொண்டு நின்ற அவருடைய சேடியர்களாகிய அனிந்திதை கம லினி என்னும் பெயர்களையுடைய பெண்களிருவரையுங் கண்டு, அவர் கண்மேல் ஆசை வைத்தார். அவர்களும் ஆலாலசுந்தரரைக்கண்டு அவர் மேல் ஆசைகொண்டார்கள். பின்பு ஒருபிரகாரம் மனசைத் திருப்பி, புஷ்பங்களைக் கொய்துகொண்டு, ஆலாலசுந்தரர் சிவசந்நிதானத்துக்கும், சேடியர்கள் தேவிசந்நிதானத்துக்கும், திரும்பிவிட்டார்கள். அப்பொ ழுது, சர்வான்மாக்களிடத்திலும் வியாபித்திருந்து அந்த அந்த ஆன்மா க்கள் மனம் வாக்குக்காயங்களினாலே செய்கின்ற கர்மங்களை அறிந்து, அந்த அந்தக் கர்மங்களுக்கு ஏற்ற பலங்களை ஊட்டி அக்கர்மங்களைத் தொலைப்பிக்கின்ற காருண்ணிய ஸ்வரூபியாகிய கடவுளானவர் ஆலால சுந்தரரை நோக்கி, "நீ பெண்கள்மேல் இச்சைகொண்டபடியால், த க்ஷிணபூமியிலே மானுடதேகம் எடுத்துப் பிறந்து அந்தப்பெண்களோடு புணர்ந்து இன்பம் அனுபவிப்பாய்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதைக்கேட்ட ஆலாலசுந்தரர் மனங்கலங்கி, சந்நிதானத்திலே சாஷ்டா ங்கமாக நமஸ்காரம்பண்ணி, எழுந்து நின்று, அஞ்சலியஸ்தராகி, எம்

பெருமானே, தேவரீருடைய அருமைத்திருவடிகளைப் பிரிதற்கு ஏதுவாகிய கொடும்பாவத்தைச் செய்தவனாகிய சிறியேன் மயக்கம்பொருந்திய மனிதப்பிறப்பை எடுத்து, செய்யவேண்டியது இன்னது என்றும் நீக்கவேண்டியது இன்னது என்றும் அறியாது, பிரபஞ்சவாழ்க்கையிலே மயங்கும்போது, தேவரீர் வெளிப்பட்டு வந்து அடியேனைத்தடுத்து ஆட்கொண்டருளவேண்டும்'' என்று பிரார்த்திக்க; வேண்டுவார் வேண்டியவைகளை ஈந்தருளுங்கடவுளும் அவ்வேண்டுகோளுக்கு இசைந்தருளினார்.

பின்பு ஆலாலசுந்தரர், பூமியிலே புண்ணியபூமியாகிய பரதகண்டத்திலே, தமிழ்வழங்கும் நிலமாகிய தென்னாட்டைச்சேர்ந்த திருமுனைப்பாடிநாட்டிலே, திருநாவலூரென்னுந் திருப்பதியிலே, ஆதிசைவரென்னுஞ் சிவப்பிராமணகுலத்திலே, சடையனாரென்னுஞ் சிவாசாரியருக்கு அவருடைய மனைவியாராகிய கற்பிலேசிறந்த இசைஞானியார் என்பவரிடத்திலே, ஆன்மாக்கள் சைவசமயமே சற்சமயமென்று உணர்ந்து அதன்வழி ஒழுகி உய்யும்பொருட்டு, திருவவதாரஞ்செய்தருளினார். திருவவதாரஞ்செய்த அப்பிள்ளையாருக்கு நம்பியாரூரர் என்று நாமகரணஞ்செய்தார்கள். அப்பிள்ளையார் ஒருநாள் வீதியிலே சிறுதேர் உருட்டி விளையாடும்போது, அந்தத் திருமுனைப்பாடிநாட்டுக்கு அரசராகிய நரசிங்கமுனையரென்பவர் அப்பிள்ளையாரைக் கண்டு, அவர்மேல் ஆசை மிகுந்து, அவருடையதந்தையாராகிய சடையனாரிடத்துக்குப் போய், "இந்தப் பிள்ளையை எனக்குத் தாரும்'' என்று கேட்டுப் பெற்றுக்கொண்டு போய், அவரை அபிமானபுத்திரராகப் பாவித்து வளர்த்தார். அந்தப்பிள்ளையார் அரசரால் வளர்க்கப்படினும், தமது பிராமணவருணத்திற்கு உரிய ஒழுக்கத்தையே உடையவராகி வளர்ந்து, உரியகாலத்திலே உபநயனஞ்செய்யப்பெற்று, வேதங்களை அத்தியயனஞ்செய்து, சகலகலைகளிலும் மகாபாண்டித்தியமுடையவராய், விவாகஞ்செய்தற்கு உரியபருவத்தை அடைந்தார்.

அது கண்டு, தந்தையாராகிய சடையனார், ஆதிசைவகுலத்திலே தம்முடைய கொள்வகைக்கு ஏற்பப் பந்துவாய்ப்புத்தூரில் இருக்கின்ற சடங்கவிசிவாசாரியரிடத்திலே, அவருடைய புத்திரிக்கும் தம்முடைய புத்திரருக்கும் விவாகம்பேசி வரும்பொருட்டு, சிலமுதியோர்களை அனுப்பினார். அவர்கள் சடங்கவிசிவாசாரியரிடத்திற் போய்ப் பேசி, அவர் உடன்பட்டது கண்டு, சடையனாரிடத்துக்குத் திரும்பிப் போய்த் தெரிவித்தார்கள். அப்பொழுது சடையனார் மகிழ்ச்சிகொண்டு, விவாகத்துக்குச் சுபதினமுஞ் சுபமுகூர்த்தமும் நிச்சயித்து, தம்முடைய ஞாதிகள் சினேகர்கள் யாவரையும் விவாகபத்திரம் அனுப்பி அழைப்பித்தார். பின்பு நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திநாயனார் விவாகதினத்துக்கு முதற்றினத்திலே சமாவர்த்தனம் பண்ணி, ரக்ஷாபந்தனஞ்செய்து, மற்றநாள்

நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு, திருமணக்கோலங்கொண்டு, குதிரைமேல் ஏறி, மகாலங்காரத்தோடு புத்தூரிலே சடங்கவிசிவாசாரியர் வீட்டிலே திருக்கலியாணப்பந்தருக்கு முன் சென்று, குதிரையினின்றும் இறங்கி, உள்ளேபோய், ஆசனத்தில் இருந்தார்.

அப்பொழுது, ஊரும்பேரும்உருவும் இல்லாதவராயினும் ஆன்மாக்களுக்கு வினைவயத்தால் வந்தஊரையும் பேரையும் உருவையும் இருவினையொப்பாகிய பக்குவகாலத்திலே ஒழிக்கும்பொருட்டு அருள்வயத்தால் ஊரும்பேரும் உருவுங்கொண்டருளுகின்றசிவபெருமான், தாந்திருக்கைலாசத்திலே சுந்தரமூர்த்திக்கு வாக்குத்தத்தம்பண்ணிய பிரகாரம் அவரைப் பிரபஞ்சவாழ்க்கையிலே மயங்கவிடாமல் தடுத்து ஆட்கொண்டருளும்பொருட்டு, ஒரு வயோதிகப்பிராமணவடிவங் கொண்டு, அவ்விடத்திலே எழுந்தருளிவந்து நின்று, இவ்விடத்தில் இருக்கின்ற எல்லீர்களும் நான் சொல்லும் இவ்வார்த்தையைக் கேளுங்கள்,, என்றுசொல்லியருளினார், அப்படிச் சொல்லிய அந்த ஐயரை விவாகஞ்செய்யத் தொடங்கும் நம்பியாரூரரும் அங்கிருக்கின்ற மற்றப்பிராமணர்களும் பார்த்து, "இவ்விடத்திலே நீர் சொல்ல விரும்பியதைச் சொல்லும்" என்றார்கள். அதைக்கேட்ட ஐயர் நம்பியாரூரரை நோக்கி, "எனக்கும் உனக்கும் ஒரு வழக்கு இருக்கின்றது. அதை முடித்துக்கொண்டு உன்னுடைய விவாகத்தை நடத்து" என்று அருளிச்செய்தார். நம்பியாரூரர் "உமக்கும் எனக்கும் ஒருவழக்கு உளதாயின், அதை முடித்தன்றி நான் விவாகஞ் செய்யேன். நீர் அவ்வழக்கு இன்னதெனத் தெரியும்படிசொல்லும்" என்று கேட்க; அந்த ஐயர் பிராமணர்களைப் பார்த்து, "இந்தத் திருநாவலூரானாகிய நம்பியாரூரன் எனக்கு அடியவன்,, என்றுசொல்லியருளினார். அதைக்கேட்ட நம்பியாரூரர் "இந்த ஐயர் சொன்ன வார்த்தை நன்றாயிருக்கின்றது" என்று இகழ்ச்சியாகச் சொல்லிச் சிரிக்க; பிராமணவேடங்கொண்ட கடவுள் அவருக்குச் சமீபத்திலே போய், "அக்காலத்திலே உன்னுடைய பாட்டன் எனக்கு எழுதித் தந்த அடிமையோலை இதுவே. அப்படியிருக்க, இந்தக்காரியத்தைக்குறித்து நீ பரிகாசம்பண்ணியது என்ன,, என்றார். உடனே நம்பியாரூரர் ஐயரைப் பார்த்து, "பிராமணருக்குப் பிராமணர் அடிமையாதல் இன்றைக்கு நீயே சொல்லக் கேட்டோம். நீ பித்தனோ" என்று சொல்ல; ஐயர் "நான் பித்தனானாலும் ஆகுக. பேயனானாலும் ஆகுக. நீ இப்போது எத்தனை வசைமொழிகளைச் சொன்னாய். அவைகளினால் நான் சிறிதாயினும் வெட்கம் அடையேன். நீ என்னைச் சிறிதும் அறிந்திலை. இப்படி நின்று விளையாட்டு மொழிகள் பேசவேண்டாம். அடிமைத்தொழில் செய்ய வா" என்றார். அப்பொழுது நம்பியாரூரர் "இவர் அடிமையோலை ஒன்று உண்டென்றாரே. அதின் உண்மையை அறியவேண்டும்" என்று நினைத்து, "ஐயரே, உம்முடைய ஓலையைக் காட்டும்" என்று சொல்ல; ஐயர் "நீ இந்த

ஓலையைப் பார்த்து நிச்சயிக்கத்தக்கவனே, நான் இந்தச் சபையாருக்கு ஓலையைக்காட்டி மெய்யென்று அங்கீகாரஞ்செய்வித்தபின், எனக்கு ஊழியஞ் செய்தற்குமாத்திரம் தக்கவன்" என்றார். அது கேட்ட நம்பியாரூரர் கோபங்கொண்டு, அவர்கையில் இருக்கும் ஓலையைப் பறிக்கும்படி அவருக்கு எதிரே விரைந்து சென்றபோது, அவர் ஓடத் தாமும் ஓடி, அவரைப் பின்றொடர்ந்து பிடித்து, ஓலையைப் பறித்து, "பிராமணர்கள் அடிமையாய் ஊழியஞ் செய்தல் என்னமுறை" என்று சொல்லிக் கிழிக்க; ஐயர் சுந்தரமூர்த்தியைப் பிடித்துக்கொண்டு, ஒருதரம் "இது முறையோ" என்று சத்தமிட; சமீபத்தில் நின்றவர்கள் அவ்விருவரையும் விலக்கி, "உலகத்திலே ஒருகாலமும் நடந்திராத ஏற்பாட்டைக் கொண்டு வழக்காடுகின்ற பிராமணரே, நீர் எங்கே இருக்கிறவர், சொல்லும்" என்றார்கள். அதற்கு ஐயர் "நான் இந்தத்திருவெண்ணெய் நல்லூரில் இருக்கிறவன். அது நிற்க, இந்த நம்பியாரூரன் தருமவழிக்கு விரோதமாக வலாற்காரம்பண்ணி தன்கையில் ஓலையைப் பறித்துக் கிழித்தலினாலே, தான் எனக்கு அடியவன் என்றதை ஸ்திரப்படுத்தினான்" என்றார். அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனார் "நீர் திருவெண்ணெய்நல்லூரில் இருக்கிறவராகில், இந்தவழக்கை அங்கேதானே பேசித்தீர்ப்புச்செய்ய வாரும்" என்று சொல்ல; ஐயர் அதைக்கேட்டு, திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பிராமணர்களுக்கு முன்னே ஆதியில் எழுதப்பட்ட மூலவோலையைக்காட்டி நீ எனக்கு அடிமை என்பதைச் சாதிப்பேன்" என்று சொல்லி, தண்டை ஊன்றிக்கொண்டு முன்னே நடந்தார். சுந்தரமூர்த்தியும் மற்றப் பிராமணர்களும் பின்னாகப் போனார்கள்.

ஐயர் தமக்குப்பின் வந்த சுந்தரமூர்த்தியோடும் மற்றப் பிராமணர்களோடும் திருவெண்ணெய்நல்லூரை அடைந்து, அங்கு இருக்கின்ற பிராமணர்களுடைய சபையிலே போய், அவர்களை நோக்கி, "அறிவால் அமைந்த பெரியோர்களே, திருநாவலூரில் இருக்கின்ற ஆரூரனனவன் நான் நீ எனக்கு அடிமையென்று காண்பித்த ஓலையைக் கிழித்துவிட்டு உங்களிடத்துக்கு வந்திருக்கின்றான்" என்று சொல்லி முறைப்பாடுசெய்தார். அந்த அபியோகத்தைக் கேட்ட பிராமணர்கள் அவரைப்பார்த்து, "பிராமணர்கள் அடிமையாதல் இவ்வுலகத்திலே இதுவரையிலும் இல்லை. ஐயரே, நீர் என்ன தப்புவார்த்தைசொன்னீர்" என்று சொல்ல; ஐயர் "நான் பொய்வழக்குக் கொண்டுவரவில்லை. மெய்வழக்கே கொண்டுவந்தேன். இவன் பறித்துக் கிழித்த ஓலை இவன் பாட்டன் தானும் தன் மரபினரும் எனக்கு அடிமையென்று எழுதித் தந்த அடிமையோலை" என்றார். உடனே பிராமணர்கள் சுந்தரமூர்த்தியை நோக்கி, "இவர் உம்முடைய பாட்டன் அடிமைசெய்தற்கு இசைந்து எழுதிக்கொடுத்த ஓலையைக் காட்டினாராகில், நீர் அதைப் பறித்துக் கிழித்ததனால் உம்முடைய பக்ஷம் ஜயம்பெறுமோ! இவர் தம்முடைய வழக்கை யாவரும் அங்கீகரிக்

கும்படிசொன்னர். இனி உம்முடைய எண்ணம் யாது” என்றார்கள். அதற்குச் சுந்தரமூர்த்தி “வேதாகமம் முதலாகிய சமஸ்த சாஸ்திரங்களையும் உணர்ந்த மகான்களே, நான் ஆதிசைவன் என்பது உங்கள் எல்லாருக்குந்தெரியும். அப்படியிருக்க, இந்தப் பிராமணர் தமக்கு என்னை அடிமையென்று சாதித்தாராகில், இது மனசினால் அறிதல் கூடாத ஒரு மாயையென்று நினைக்கவேண்டும். இதைக்குறித்து நான் யாது சொல்வேன்! இது என்னால் அறியப்படுதல் கூடாது” என்று சொல்ல; பிராமணர்கள்கேட்டு, அந்த ஐயரைப் பார்த்து, “நீர் இவரை உம்முடைய அடிமை என்று சொல்லுகின்ற விவகாரத்தை எங்களுக்கு முன் உறுதிப்படுத்தல்வேண்டும். ஒரு விவகாரத்தை உண்மையென்று நிச்சயிப்பதற்கு, அனுபவம் லிகிதம் சாக்ஷியென்கின்ற மூன்றும் வேண்டும். ஆயினும், இந்த ஆரூரர் உமக்கு அடிமையென்பதற்கு அம்மூன்றில் ஒன்றாயினும் காட்டும்” என்றார்கள். அப்பொழுது ஐயர் “இவன் கிழித்த ஓலை மூலவோலையைப் பார்த்து எழுதிய படியோலை. மூலவோலையோ என்னிடத்தில் இருக்கின்றது,, என்று சொன்னர். உடனே பிராமணர்கள் “அதை எங்களுக்குக்காட்டும்,, என்று சொல்ல; ஐயர் “ஆரூரன் அதையும் பறித்துக்கிழியாதபடி செய்வீர்களாயின், அதைக்காட்டுவேன்,, என்றார். அதற்குப் பிராமணர்கள் “நாங்கள் கிழிக்க விடோம்” என்றுசொல்ல, ஐயர் மூலவோலையைக் கையில் எடுத்தார். அப்பொழுது சபையாருடைய கட்டளையினால் ஒரு கரணன் அவரைக் கும்பிட்டு அந்த ஓலையைவாங்கி, சுருளாயிருக்கின்ற மடிப்பை நீக்கி விரித்து, சபையார் கேட்கும்படி, “திருநாவலூரில் இருக்கின்ற ஆதிசைவனாகிய ஆரூரன் என்கின்ற நான் திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்கு நானும் என் சந்ததியாரும் வழித்தொண்டு செய்வதற்கு உள்ளும் புறமும் ஒப்ப உடன்பட்டு எழுதிக்கொடுத்தேன். இப்படிக்கு ஆரூரன்” என்று வாசித்தான். பின்பு அந்த ஓலையிலே சாட்சிகளாகக் கையெழுத்து இட்டவர்கள் தங்கள் கையெழுத்தென்றே ஒத்துக்கொண்டார்கள். அதைக் கண்ட பிராமணர்கள் சுந்தரமூர்த்தியை நோக்கி, “இது உம்முடைய பாட்டனுடைய எழுத்தோ! பாரும்” என்று சொல்ல; ஐயர் அவர்களைப் பார்த்து, “இந்தச்சிறுவன் அடிமையோலையில் எழுதப்பட்டிருக்கின்ற தன்பாட்டன் கையெழுத்தைக் கண்டறியச்சத்தியுள்ளவனே? இவன்பாட்டன் எழுதிய வேறு கைச்சாத்து உண்டாகில், வருவித்து, இதனுடன் ஒத்துப் பார்த்து, உங்கள் மனசிலே தோன்றிய தீர்ப்பைச் சொல்லுங்கள்” என்றார். அதைக்கேட்ட பிராமணர்கள், சந்தேகந்தெளியும்படி, சுந்தரமூர்த்தி சமுகத்திலே அவர்பாட்டனர் எழுதிய கைச்சாத்து ஒன்று அழைப்பித்து, அதின் எழுத்தையும் அடிமையோலையின் எழுத்தையும் ஒத்துப்பார்த்து, “இவ்விரண்டும் ஒத்திருக்கின்றன. இனி நீர் தப்ப வழி இல்லை. நீர் இந்தப்பிராமணருக்குத் தோற்றுப்போனீர். ஆதலால், அவர் கருத்தின்படி அவருக்கு ஏவல்செய்வதே கடன்” என்று சொல்ல; சுந்தரமூர்த்தி

அ

தி "விதிமுறை இதுவேயானால், நான் இதற்கு உடன்படாதிருத்தல் கூடுமோ" என்று சொல்லி நின்றார். அப்பொழுது பிராமணர்கள் அந்த ஐயரைப் பார்த்து, "நீர் காட்டிய அடிமையோலையிலே எங்கள் ஊரே உம்முடைய ஊராக எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால், உமக்கு இவ்வூரிலே தலைமுறையாக இருக்கின்ற வீடும் ஸ்திதியும் காட்டும்" என்றுசொல்ல; பிராமணவடிவங்கொண்ட கடவுள் "இத்தனை விருத்தர்களில் ஒருவரும் என்னுடைய வீடுமுதலியவற்றை அறியாதிருப்பீரானால், காட்டுகிறேன். வாருங்கள்" என்று சொல்லி, சுந்தரமூர்த்தியும் பிராமணர்களும் பின்னே வர, தாம் அவ்வூரிலிருக்கின்ற திருவருட்டுறை என்னும் சிவாலயத்தினுள்ளே போனார். பின்பு சபையார் அவரைக் காணாது திகைத்து நின்றார்கள்.

அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனார் "என்னை அடிமைகொண்ட பிராமணர் நமது கடவுளாகிய சிவபெருமான் வீற்றிருக்குந் திருக்கோயிலினுள்ளே புகுந்தது என்ன ஆச்சரியம்" என்று நினைத்து, அத்தியந்த ஆசையோடும் தனியே அவரைத்தொடர்ந்துபோய்க் கூப்பிட; சிவபெருமான் தருமவடிவாகிய இடபவாகனத்தின்மேலே பார்வதிசமேதராய் வெளிப்பட்டு, சுந்தரமூர்த்திக்கு, "நீ முன்னே நமக்குத் தொண்டனாய் இருந்தாய். நீ பெண்கண்மேல் இச்சை வைத்ததினால் நம்முடைய ஆஞ்ஞையினாலே பூமியிலே பிறந்தாய். இப்பொழுது துன்பத்தைத் தருகின்ற சமுசாரபந்தமானது உன்னைத் தொடராதபடி, நாமே வலிய வந்து உன்னைத் தடுத்து ஆட்கொண்டோம்" என்று திருவாய்மலர்ந்தருளினார். இங்ஙப்பிரகாரமாக எழுந்த அருமைத் திருவாக்கைக்கேட்டு, சுந்தரமூர்த்தியானவர் தன்னை ஈன்ற பசுவினது குரலைக்கேட்ட கன்றுபோல அலறி, சரீரமுழுதும் உரோமப்புளகங்கொள்ள, இரண்டு கண்ணினின்றும் ஆனந்தவருவி பொழிய, அடியற்றமரம்போல நிலத்திலே விழுந்து நமஸ்கரித்து, எழுந்து நின்று, இரண்டு கைகளையும் சிரசின்மேல் ஏறக்குவித்து, "கனகசபையிலே படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்கிற ஐந்தொழிலாகிய திருநடனத்தைச் செய்தருளுகின்ற சுவாமீ, தேவரீர் ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை மார்ச்சாரசம்பந்தம்போல வலிய வந்து தடுத்தாட்கொண்ட காருண்ணியமகிமை இருந்தபடி என்னென்று சொல்லுவேன்" என்றார். அப்பொழுது, தம்மால் செய்யப்படும் கிருத்தியங்கள் ஒவ்வொன்றையும் தம்பயன் கருதாது பிறர்பயன் கருதியே செய்கின்ற பரமசிவனானவர், தமிழ்நாட்டில் உள்ளவர்கள் தாமே மெய்ப்பொருளென்று உணர்ந்து தம்மை வழிபட்டு மும்மலத்தடைகளையும் நீங்கிப் பேரின்பம் பெற்று அநுபவிக்கவேண்டும் என்று தமது திருவுளத்திலே முகிழ்த்த பெருங்கருணையினாலே, சுந்தரமூர்த்திநாயனாரை நோக்கி, "நீ நம்மோடு வன்சொற்களைச் சொல்லி வன்றொண்டன் என்கிற பெயரைப்பெற்றாய். நமக்கு அன்பினோடுசெய்ய

த்தக்க அருச்சனையாவது பாடலேயாம். ஆதலால், நம்மேலே தமிழ்ப் பாட்டுக்களைப் பாடு" என்று அருளிச்செய்ய; சுந்தரமூர்த்திநாயனார் அஞ்சலியஸ்தராகி, "தேவரீர் பிராமணவடிவங்கொண்டு தமியேனை வழக்கினால் வெல்லுதற்கு எழுந்தருளி வந்தமையை அறியாத சிறியேனுக்குப் பழைய அறிவைத் தந்து உலகவாழ்க்கையிலே மயங்காமல் உய்யும்படி செய்தருளிய கடவுளே, அடியேன் தேவரீருடைய அநந்த குணங்களில் எதையறிவேன்? என்னசொல்லிப் பாடுவேன்" என்றார். அதற்குக் கடவுள் "நீமுன்னே என்னைப் பித்தனென்று சொன்னாய். ஆகையால் என்பெயர் பித்தனென்றே பாடு,, என்றுசொல்லியருள; சுந்தரமூர்த்தியானவர் தம்மை ஆண்டருளிய பரமசிவன்மேல் "பித்தா பிறை சூடி,, என்னுஞ் சொற்றொடரை முதலாகக்கொண்ட திருப்பதிகத்தைப் பாடியருளினார். அதன்பின் கடவுளானவர் சுந்தரமூர்த்திநாயனாரை நோக்கி, "தொண்டனே நீ இன்னும் நம்முடையபுகழைக்குறித்துப் பலவகையாகப் பாடு,, என்று அருளிச்செய்து, அந்தர்த்தானமாயினார். அது நிற்க. புத்தூரிலிருக்கின்ற சடங்கவிசிவாசாரியருடைய புத்திரியாரோவெனில், கலியாணந்தவிர்ந்ததினாலே, சுந்தரமூர்த்திநாயனாரையே தியானஞ் செய்து கொண்டிருந்து, சிலகாலத்தின்பின் சிவலோகப் பிராப்தியானார்.

சுந்தரமூர்த்திநாயனார், திருவெண்ணெய்நல்லூரில் உள்ள திருவருட்டுறை யென்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற கடவுளானவர் தம்மை ஆட்கொண்டபின்பு, திருநாவலூருக்கும் திருத்துறையூருக்கும் போய்த் திருப்பதிகம் பாடி, சிதம்பரத்திலே திருநடனஞ் செய்கின்ற சபாநாயகரைத் தரிசிக்கவிரும்பி, பெண்ணை நதியைக்கடந்து, அஸ்தமயனகாலத்திலே திருவதிகையென்னுந் தலத்தினெல்லையிலே போய், "திருநாவுக்கரசுநாயனார் உழவாரத்தினாலே நமது சிவபெருமானுக்குக்கைத்தொண்டு செய்த இந்த ஸ்தலத்திலே கான்மிதிக்க அஞ்சுகிறேன்,, என்று சொல்லி, அதற்கு உள்ளே போகாமல் சமீபத்திலிருந்த சித்தவடமடத்திற்குப் போய், திருவதிகைவீரட்டானத்தில் வீற்றிருக்கும் கடவுளுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டு நித்திரைசெய்தார். நித்திரை செய்யும்பொழுது, வீரட்டானேசுரர் ஒரு விருத்தப் பிராமணராகி அம்மடத்தினுள்ளே புகுந்து, சுந்தரமூர்த்திநாயனாருடைய சிரசின்மேலே பாதங்களை வைத்து, நித்திரை செய்பவர்போலக் காட்டியருளினார். அப்பொழுது சுந்தரமூர்த்தி விழித்து, "ஐயரே, ஏன் உம்முடைய பாதத்தை என்சிரசின்மேல் வைத்தீர்,, என்று சொல்ல; ஐயர் "என்னுடையமூப்பினாலே நீர் தலைவைத்திருக்கும் திசையை அறியாமல் அப்படிச்செய்துபோட்டேன்,, என்றார். சுந்தரமூர்த்திநாயனார் அதற்கு ஒத்துக்கொண்டு, தம்முடைய சிரசை வேறொருதிக்கில் வைத்துக்கொண்டு நித்திரைசெய்தார். எம்பெருமான் அவ்விடத்திலும் சென்று சுந்தரமூர்த்தியுடைய சிரசின்மேலே பின்னும் தம்முடைய பாதத்தை நீட்ட; சுந்தரமூர்த்தி "இ

ங்கே என்னைப் பலமுறை மிதித்த நீர் யாவர்,, என்று கேட்டார். உடனே சிவபெருமான் "என்னை நீ அறியாயா,, என்று சொல்லி மறைந்தருளினார். அது கண்டு, சுந்தரமூர்த்திநாயனார் தம்மை மிதித்தவர் கடவுளென்று அறிந்து, "தமியேன் இறுமாப்படைந்து ஆண்டவரை அறியாமல் என்னசெய்தேன்,, என்று சொல்லி, வீரட்டானேசுரர்மேல் "தம்மானை யறியாத சாதியாருளரே" என்னும் திருப்பதிகம் பாடினார்.

பின்பு அத்திருவதிகைக்குத் தென்புறத்தில் இருக்கும் திருக்கெடிலநதியிலே ஸ்நானஞ்செய்து, அந்த நதியின் தென்கரையிற்சென்று, திருமாணிக்குழியை அடைந்து தரிசித்துக் கொண்டு, திருத்தினைநகருக்குப் போய்த் திருப்பதிகம் பாடி, சிதம்பரத்தின் எல்லையை அடைந்து; அவ்வெல்லையை வணங்கி, ஊரினுள்ளேபோய், ஸ்தூலலிங்கமாகிய கோபுரத்தைக் கண்டு, நிலத்திலே விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, எழுந்து, இரண்டு திருக்கரங்களையும் சிரமீது குவித்துக்கொண்டு திருக்கோயிலினுள்ளேபோய், கனகசபையிலே ஆனந்ததாண்டவஞ் செய்தருளுகின்ற சபாநாயகரைத் தரிசித்து, அக்கினியிற்பட்ட மெழுகுபோலக் கசிந்து உருகி, ஆனந்த பாஷ்பஞ்சொரிய விழுந்து நமஸ்காரஞ்செய்து, எழுந்து நின்று, எல்லையில்லாத பேரின்பசாகரத்திலே அமிழ்ந்தி, இரண்டுகைகளையும் சிரசின்மேலே குவித்து, திருப்பதிகம் பாடித்துதித்தார்.

அதன்பின், சபாநாயகருடைய திருவருளினால், "நீ திருவாரூரிலே நம்மிடத்துக்கு வா" என்று ஆகாயத்தில் எழுந்த அசரீரிவாக்கைக் கேட்டு, அந்தக்கட்டளையைச் சிரசின்மேல் வகித்து, கனகசபையைப் பிரதக்ஷிணஞ் செய்து வணங்கிச் சென்று, கோபுரத்தைக்கடந்து, புறத்திலே நின்று அக்கோபுரத்தை நமஸ்கரித்து, திருவீதியைத் தொழுது, தெற்கு வாயிலைக்கடந்து, அப்புறஞ்சென்று, அந்தஸ்தலத்தின் எல்லையை வணங்கி, கொள்ளிடம் என்கின்ற திருநதியைத்தாண்டி, சீர்காழிக்குச் சமீபித்தார். அந்தச்சீர்காழி திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவவதாரஞ் செய்தருளிய ஸ்தலமாதலால் அதனுள்ளே மிதிக்கலாகாதென்று நினைந்து, அதின் புறவெல்லையை வணங்கிப் பிரதக்ஷிணஞ் செய்யும்பொழுது, பரமசிவன் காட்சி கொடுத்தருள; அது கண்டு, "சாதலும் பிறத்தலுந்தவிர்த்து" என்று திருப்பதிகம் எடுத்துத் திருப்பாட்டினிறுதிதோறும் "கழுமலவளநகர்க் கண்டுகொண்டேனே" என்று பாடினார். அதன்பின் திருக்கோலக்காவுக்கும், திருப்புன் கூருக்கும்போய்த் திருப்பதிகம்பாடி, காவேரிநதியின் கரையை அடைந்து, அதில் ஸ்நானம்பண்ணி, மாயூரத்துக்கும், அம்பர்மாகாளத்துக்கும், திருப்புகலூருக்கும் போய்த் தரிசனஞ்செய்துகொண்டு, பின் திருவாரூருக்குச் சமீபித்தார்.

உடனே வன்மீகநாதர் திருவாரூரில் வாழ்பவர்களெல்லாருக்கும் நம்முடைய அடியானாகிய நம்பியாரூரன் நாம் அழைக்கவருகின்றான்;

நீங்கள் அவனை எதிர்கொள்ளக்கடவீர்கள்'' என்று பணித்தருள; அவர்களெல்லாரும் ஆச்சரியங்கொண்டு மனமகிழ்ந்து, வீதிகளெல்லாவற்றையும் மிகவலங்கரித்து, நானாவிதவாத்தியங்கள் ஒலிக்க, திருமதில்வாயிற்புறத்து வந்து, சுந்தரமூர்த்திநாயனாரை எதிர்கொண்டு வணங்கினார்கள். சுந்தரமூர்த்திநாயனார் அவர்களெதிரே அஞ்சலிகூப்பி வந்து, திருவீதியிற் செல்லும்பொழுது அவர்களை நோக்கி "கரையுங்கடலும்" என்றெடுத்து "எந்தை யிருப்பது மாரூ ரவரெம்மையு மாள்வுரோ கேளீர்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு, திருக்கோயிற்றிருவாயிலை அணுகினார். அணுகியவுடனே திருவாயிலை நமஸ்கரித்து எழுந்து சென்று, தேவாசிரயமண்டபத்தை வணங்கி, சிரசின்மீது குவித்த கைகளோடும் திருமூலட்டானத்தைச் சூழ்ந்த திருமாளிகைவாயிலிற் புகுந்து, வன்மீகநாதரை வணங்கிப் பேரானந்தப் பெருங்கடலின் மூழ்கி நின்று, திருப்பதிகம்பாடினார். அப்பொழுது, சுந்தரமூர்த்திநாயனார் கேட்கும்படி, வன்மீகநாதருடைய திருவருளினாலே, "நாம் உனக்குத்தோழரானோம். முன்னே நாம் உன்னை ஆட்கொண்ட விவாககாலத்திலே நீ கொண்ட மணக்கோலத்தை எப்பொழுதும் கொண்டு பூமியின்மேல் விளையாடுவாய்" என்று ஒரு அசரீரிவாக்கு எழுந்தது. அது கேட்ட சுந்தரமூர்த்திநாயனார் வன்மீகநாதரை வணங்கித் துதித்து, "அடியேனைத் தடுத்தாட்கொண்டருளிய பரமகருணாநிதியே, திருவாரூரமர்ந்த அருமணியே, நாயினேனைப் பொருளாகக்கொண்டு இங்ஙனந் திருவாய்மலர்ந்தருளியது உமது பெருங்கருணையன்றோ" என்று விண்ணப்பஞ்செய்து, பலமுறை வணங்கி, உள்ளக்களிப்பினோடும் நடந்து, தியாகேசர் சந்நிதியை அடைந்து, வணங்கித்துதித்துத் திருமாளிகையை வலஞ்செய்துகொண்டு, வெளியே போனார். அன்று முதற்கொண்டு அடியார்கள் எல்லாரும் சுந்தரமூர்த்திநாயனாரைத் தம்பிரான்றோழர் என்று சொல்லிக்கொண்டார்கள். சுந்தரமூர்த்திநாயனார் மகாலங்காரம் பொருந்திய திருக்கோலத்தையுடையவராய், வன்மீகநாதரைத் தினந்தோறும்போய்த் தரிசித்து வந்தார்.

இதற்குமுன்னே, திருக்கைலாசகிரியில் இருந்த பார்வதிதேவியாருடைய சேடியர்கள் இருவருள் ஒருவராகிய கமலினி என்பவர், அந்தத் திருவாரூரிலே, உருத்திரகணிகையர் குலத்திலே பிறந்து, பரவையார் என்னும் பெயரைப் பெற்று, மங்கைப்பருவம் அடைந்திருந்தார். அவரும் தினந்தோறும் பாங்கிமாரோடு திருக்கோயிலுக்குப் போய், சுவாமிதரிசனம் பண்ணிவருவார்,

அந்தப் பரவையார் ஒருநாள் சுவாமிதரிசனம் பண்ணப்போம்போது, அப்படியே சுவாமி தரிசனம் பண்ணும்பொருட்டுப் பரிசனங்களோடுசென்ற சுந்தரமூர்த்திநாயனார், திருவருள் கூட்ட, அந்தப் பரவையாரைக்கண்டு ஆசைகொண்டு நின்றார். பரவையாரும் சுந்தரமூர்த்திநாய

ஞரைக் கண்டு ஆசைகொண்டு, பின் சுவாமி தரிசனம் பண்ணவேண்டும் என்னும் விருப்பமானது தம்மை அவ்வாசையினின்றும் நீக்கித் தன்வசமாக்கிக்கொண்டு திருக்கோயிலின் உள்ளே செலுத்த, சென்ருர். சுந்தரமூர்த்திநாயனர் அதுகண்டு, "என்மனசைக் கவர்ந்து சென்ற அதிசௌந்தரியமுள்ள இந்தப் பெண்யார்" என்று வினவ; அங்கு நின்றவர்கள் "இவர் உருத்திரகணிகையரில் ஒருவர். இவர் பெயர் பரவையார்" என்ருர்கள். அதைக்கேட்ட சுந்தரமூர்த்திநாயனரோ திருக்கோயிலினுள்ளே போனர். அதற்குமுன் பரவையார் பிரதக்ஷிணஞ்செய்து சுவாமியை நமஸ்காரம்பண்ணித் துதித்துக்கொண்டு சந்நிதியினின்றும் புறப்பட்டார். சுந்தரமூர்த்திநாயனர் சுவாமிசந்நிதானத்திற் சென்று, பரவையார்மேல் வைத்தபேராசையால் அவரைச் சேரவேண்டிச் சுவாமியினது திருவடிகளை வணங்கிக்கொண்டு, புறப்பட்டு, பரவையாரைத்தேடி, தேவாசிரயன் என்னும் பெயரையுடைய ஆயிரக்கால் மண்டபத்தை அடைந்து, "வன்மீகநாதர் பரவையாரை எனக்குத் தந்தருளுவார்" என்று நினைத்துக்கொண்டு, அங்கு இருக்க; சூரியன் அஸ்தமயனமாயிற்று. அது நிற்க.

முன்னே சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு புறப்பட்ட பரவையார், சுந்தரமூர்த்தியிடத்தில் தனியே சென்ற தமதுமனசை ஒருவகையாக வலிந்து தம்வசப்படுத்தி, அதிகமயக்கத்தோடு தமது மாளிகையை அடைந்து, பூவணையில் இருந்து, தம்மருகிருந்தபாங்கியை நோக்கி, நாம் சுவாமிதரிசனம் செய்யப்போனபோது வழியில் எதிராகவந்தவர் யார்" என்றுகேட்க; அவள் "அவர் பிரமவிஷ்ணுக்களும் தேடியறியாத சமானதீதராகிய கடவுளே வலியவந்து ஆட்கொள்ளப் பெற்ற ஆதிசைவராகிய சுந்தரமூர்த்திநாயனர்" என்ருள். அதுகேட்ட பரவையார் "நமது ஆண்டவருக்கு உரிய அடியவரோ" என்று சொல்லி, சுந்தரமூர்த்திநாயனர்மேல் முன் வைத்த ஆசை மேன்மேலும் வளர சயனத்தின்மேல் விழுந்து புலம்பினர். அப்பொழுது கடவுளானவர், பரவையாரைச் சுந்தரமூர்த்திநாயனருக்கு விவாகஞ்செய்து கொடுக்கும்படி அடியார்களுக்குக் கட்டளையிட்டு, சுந்தரமூர்த்திநாயனரிடத்திற் சென்று, "உனக்குப் பரவையை விவாகம்செய்து தரும்படி நம்முடைய அடியார்களுக்கு ஆஞ்ஞாபித்தோம்" என்று அருளிச்செய்து, பரவையாரிடத்திலும் போய், "உனக்கும் சுந்தரனுக்கும் விவாகம் நடக்கும்" என்று சொல்லியருளினர். மற்றநாள் உதயகாலத்திலே சிவபத்தர்கள் எல்லாருங்கூடி வந்து, சுந்தரமூர்த்திநாயனருக்குப் பரவையாரை விதிப்படி விவாகஞ்செய்து கொடுத்தார்கள்.

சுந்தரமூர்த்திநாயனர் பரவையாரோடு கூடி வாழ்ந்திருக்குங்காலத்தில், ஒருநாள் திருக்கோயிலை அடைந்தபோது தேவாசிரயமண்டபத்திலே சிவனடியார்கள் கூடியிருந்ததைக்கண்டு, அவர்கண்மேலே பத்தி

குந்து, "இவர்களுக்கு நான் அடியனாகும் நாள் எந்நாள்" என்று நினைத்துக்கொண்டு, சுவாமி தரிசனஞ்செய்வதற்குத் திருக்கோயிலினுள்ளே போனார். அப்பொழுது, அடியார்க்கு அடியனாகவேண்டுமென்று அவர் விரும்பிய வரத்தைக் கொடுக்கும்பொருட்டு, சுவாமி அவருக்குக் காட்சி கொடுத்தருளி, "நீ நம்முடைய அடியார்களைவணங்கி அவர்கண்மேலே பதிகம் பாடு" என்றருளிச்செய்ய; சுந்தரமூர்த்திநாயனார் வணங்கி நின்று, "சுவாமீ, அடியார்களுடைய வரலாறு இன்னது என்றும் அவர்கள் தன்மை இப்படிப்பட்டது என்றும் அறியாத தமியேன் எப்படிப்பாடுவேன்? அவர்களைக்குறித்துப் பாடுஞ்சத்தியைச் சர்வஞ்ஞத்துவம் உடைய தேவரீரே அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார். சுவாமி அதற்கு இசைந்து, அடியார்களுடைய வழித்தொண்டு அவருக்குத்தெரியும்படிசெய்து, உலகத்தார் உய்யும்வண்ணம் வேதாகமங்களை அருளிச்செய்த தமது அருமைத்திருவாக்கினாலே "தில்லைவாழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று அடியெடுத்துக்கொடுத்து மறைந்தருளினார். அது கண்டு, சுந்தரமூர்த்திநாயனார் புறப்பட்டுத் தேவாசிரயமண்டபத்தை அடைந்து, அடியார் திருக்கூட்டத்தைப் பலமுறை வணங்கி, அந்தஅடியார்கள் யாவர்க்கும் வெவ்வேறாக அடியேன் அடியேன் என்று திருத்தொண்டத்தொகை என்னும் திருப்பதிகம் பாடி, அவர்களை வணங்கினார்.

சுந்தரமூர்த்திநாயனார் திருவாரூரிலே தினந்தோறும் திரிகாலத்திலும் அன்பினோடு சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, பரவையாரோடு வாழ்ந்திருக்குங்காலத்திலே, வேளாளராகிய குண்டையூர்க்கிழவர் என்பவர் அவருடைய மகிமையைக் கேள்வியுற்று, அவருடைய திருவடிகளை அடைந்து, அன்பினோடு வழிபடுவாராயினார். அவர் சுந்தரமூர்த்திநாயனார் பொருட்டுப் பரவையாருடைய வீட்டுக்கு நெல்லும் பருப்பும் பிறபதார்த்தங்களும் நெடுங்காலம் தவறாமல் அனுப்பிவந்தார். அப்படி அனுப்பிவருங்காலத்திலே, மழையில்லாமையால் வளம் சுருங்க, ஒருநாள் குண்டையூர்க்கிழவர் நெல்லுப் போதாமை கண்டு, வருத்தமுற்று, "சுந்தரமூர்த்திநாயனார் திருமாளிகைக்கு அனுப்புவதற்கு இன்றைக்கு நெல்லுப் போதாதே! ஐயோ! இதற்கு என்னசெய்வேன்" என்று நினைந்து, பெருங்கவலைகொண்டு, போசனம்பண்ணாமல் அன்றிரவு நித்திரைகொண்டார். அப்பொழுது சிவபெருமான் அவருக்குச் சொப்பனவத்தையிலே தோன்றி, "சுந்தரனுக்கு அனுப்பும்படி உனக்கு நெல்லுத்தந்தோம்" என்று சொல்லியருளி, பின் குபேரனுக்கு ஆஞ்ஞாபிக்க, அந்தக்குண்டையூர் முழுதிலும் நென்மலையானது ஆகாயமும் மறையும்வண்ணம் நிறைந்து ஓங்கியது. அன்றிரவு விடியும்போது குண்டையூர்க்கிழவர் விழித்தெழுந்து அந்த நென்மலையைக்கண்டு, அதிசயித்து, பரமசிவனுடைய திருவருளைத் துதித்து, "சுந்தரமூர்த்திநாயனாருக்கு அனுப்பும்படி பு

ரமசிவன் தந்தருளிய இந்தநெல்லை யாவரெடுக்க வல்லவர்கள்? இந்தச்ச மாசாரத்தை அவருக்கு விண்ணப்பஞ்செய்யும்படி போவேன்,, என்று திருவாரூருக்குப்போக; நிகழ்ந்த சமாசாரத்தைப் பரமசிவனால் அறிந்து சுந்தரமூர்த்திநாயனாரும் எதிரே எழுந்தருளிவந்தார். அதுகண்ட குண்டையூர்க்கிழவர் அந்நாயனாரை விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று, "சுவாமீ, நெடுங்காலமாக அடியேன் தேவரீருக்குச் செய்துவந்த திருத்தொண்டுக்கு இந்நாளிலே முட்டு வந்தது. அதுகண்டு சிவபெருமானே நென்மலையைத் தந்தருளினார். அந்த நென்மலை மனிதரால் எடுக்கப்படும், அளவினையுடையதன்று. இனி இது என்னாற் செய்யப்படக்கூடிய தொண்டன்று,, என்று விண்ணப்பஞ்செய்ய; சுந்தரமூர்த்திநாயனார் அதைக் கேட்டு, அவரோடு கூடிக்கொண்டு குண்டையூர்க்குப்போய், ஆகாயத்தை அளாவிய நென்மலையைக் கண்டு அதிசயித்து, திருவருளை வியந்து "பரவையார்வீட்டுக்கு இந்நெல்லை எடுக்க ஆளும் சிவபெருமானே தந்தருளினன்றி, முடியாது,, என்று திருவுளங்கொண்டு, சமீபத்திலுள்ள திருக்கோளிலியென்னும் ஸ்தலத்திலிருக்கின்ற சிவாலயத்தை அடைந்து சிவபெருமானை வணங்கி, "நீள நினைந்தடியேனுமை நித்தலுங் கைதொழுவேன் - வாளன கண்மடவா ளவள் வாடிவருந்தாமே - கோளிலி யெம்பெருமான் குண்டை யூர்ச்சிலநெல்லுப் பெற்றே - னாளிலை யெம்பெருமா னவை யட்டித் தரப்பணியே,, என்னுந்திருப்பதிகம் பாடினார். அப்பொழுது பரமசிவனுடைய திருவருளினாலே, "இன்று பகற்காலம் நீங்கியபின் நம்முடைய பூதங்கள் பரவைவீடுமாத்திரமன்றித் திருவாரூர் முழுதும் நிறையும்படி நென்மலையைக் கொண்டுவந்துதரும்,, என்று ஆகாயத்தினின்றும் ஓரசரீரிவாக்குத் தோன்றியது. சுந்தரமூர்த்திநாயனார் அதைக் கேட்டுத் திருவருளைத் துதித்து வணங்கி, திருவாரூருக்குத் திரும்பிப்போய், திருக்கோயிலை அடைந்து, வன்மீகநாதனைத் தரிசனஞ்செய்துகொண்டு, பரவையார் திருமாளிகையிலே சேர்ந்து, அவர் மகிழும்படி நிகழ்ந்த சமாசாரத்தைச் சொல்லி அங்கிருந்தார். அதன்பின் சிவாஞ்ஞையினாலே பூதங்கள் குண்டையூரிலே யிருந்த நென்மலையை எடுத்துக்கொண்டுபோய்ப் பரவையார் திருமாளிகையை நிறைவித்து, திருவாரூர் முழுதிலும் நென்மலையாக்கின. அன்றிரவு கழிந்தபின், பரவையார் அவ்வூர்ச்சனங்களெல்லாரும் தங்கள் தங்கள் வீட்டின் எல்லையைச் சேர்ந்த நென்மலையை எடுத்துக் கொள்ளலாம் என்று சொல்லிப் பறையறைவித்தார்,

சிலநாட்சென்றபின்பு, திருநாட்டியத்தான்குடியில் வசிக்கின்ற கோட்புலிநாயனார் சுந்தரமூர்த்திநாயனாரிடத்திலே சென்று, அவரைவணங்கி. தம்முடைய ஊருக்கு எழுந்தருளிவரும்படி அவரைப் பிரார்த்தித்து, அவர் அதற்கு இசைந்தது கண்டு, தமது ஊருக்குத் திரும்பிவிட்டார். அதன்பின், சுந்தரமூர்த்திநாயனார் வன்மீகநாதரை வணங்கி அனுமதி

பெற்றுக்கொண்டு, திருநாட்டியத்தான் குடியை அடைந்தபோது, அங்கிருந்த கோட்புலிநாயனார் வீதிகளெல்லாம் அலங்கரித்து, நால்வித வாத்தியமுழக்கத்தோடு எதிர்கொண்டு வணங்கி, தம்முடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய், ஆசனத்தில் இருத்தி, விதிப்படி அருச்சனை செய்து திருவமுதுசெய்வித்து, அவரை வணங்கி ஸ்தோத்திரம்பண்ணி, சிங்கடியார் வனப்பகையார் என்கின்ற தமது புத்திரிகள் இருவரையும் கொண்டுவந்து, அவரை நமஸ்கரிப்பித்து, தாமும் வணங்கி, "சுவாமீ, அடியேன்பெற்ற இந்தப்பெண்கள் இருவரையும் அடிமையாகக் கொண்டருளவேண்டும்,, என்றுபிரார்த்திக்க; சுந்தரமூர்த்திநாயனார் "இப்பெண்கள் இருவரும் எனக்குப்புத்திரிகள்,, என்று சொல்லி, அவர்களைத் தம்முடைய திருத்தொடையின்மேலிருத்தி, மனக்கசிவுடனே அணைத்து உச்சிமோந்து, அவர்கள் விரும்பியவைகளைக் கொடுத்தருளி, பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயத்தை அடைந்து, அவரை வணங்கி, "பூணாணாவதோரரவம்,, என்னும் திருப்பதிகம் பாடினார். அந்தப்பதிகத்தின் திருக்கடைக்காப்பிலே கோட்புலிநாயனாரைச் சிறப்பித்து, சிங்கடியாருக்குப் பிதாவாகத் தம்மை நினைத்தபடியினால் தம்மைச் "சிங்கடியப்பன்,, என்று வைத்தருளினார். பின், அவ்விடத்தினின்றும் எழுந்தருளி, திருவலி வலத்துக்குப் போய்ச்சிவபெருமானை வணங்கி, "வலிவலந்தன்னில்வந்து கண்டேனே,, என்னும் பதிகம் பாடி, மீண்டும் திருவாரூரை அடைந்து, வன்மீகநாதரை வணங்கிக்கொண்டு பரவையார் வீட்டிலிருந்தார். இருக்கும்பொழுது, பங்குனி உத்திரத்திருநாள் சமீபித்தலும், பரவையார் திருவிழாச்செலவிற்குக் கொடுப்பதற்குப் பொன்கொண்டு வரும்பொருட்டு, திருப்புகலூரை அடைந்து கோயிலிற்சென்று, சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடி, சமீபத்தில் இருக்கின்ற திருமடத்துக்குப் போகத் திருவுளங்கொண்டு புறப்பட்டு வந்து, கோயிற்றிருமுன்றிலின் ஒருபக்கத்திலே அடியார்களோடும் இருந்தருளினார். அப்பொழுது சிவபிரானது திருவருளினாலே நித்திரை வந்தது. உடனே அங்கே திருப்பணிக்காகச் சுடப்பட்ட செங்கற்கள் பலவற்றை வருவித்து உயரம்பண்ணி, அதனையே தலையணையாகக் கொண்டு, உத்தரீயத்தை விரித்து நித்திரைசெய்தார். பின் விழித்தெழுந்தபோது, அந்தச்செங்கற்கள் எல்லாம் பொற்கல்லாய் இருக்கக்கண்டு, திருவருளைத் துதித்து, திருக்கோயிலினுள்ளேபோய்த் "தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்" என்னுந் திருப்பதிகம் பாடி, பொற்குவையையுங்கொண்டு அவ்விடத்தினின்றும் புறப்பட்டு, திருப்பனையூருக்குப் புறத்தே போனார். அப்பொழுது சிவபெருமான் திருக்கூத்தோடுங் காட்சி கொடுத்தருள, சுந்தரமூர்த்திநாயனார் எதிர்சென்று வணங்கி, "மாடமாளிகை" என்று திருப்பதிகம் எடுத்து, அரங்கிலாட வல்லாரவரே யழகியரே" என்று பாடி, திருவாரூரை அடைந்து, பரவையார் வீட்டில் எழுந்தருளியிருந்தார்.

பின் அவ்விடத்தை விட்டு, திருநன்னிலம், திருவீழிமிழலை, திருவாஞ்சியம், திருநறையூர், அரிசிற்கரைப்புத்தூர், திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், சிவபுரம், திருக்கலயநல்லூர், கும்பகோணம், திருவலஞ்சுழி, திருநல்லூர், திருச்சோற்றுத்துறை, திருக்கண்டியூர், திருவையாறு, திருப்பூந்துருத்தி என்னுந் தலங்களுக்கு யாத்திரைசெய்து, திருவாலம்பொழிலை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, அன்றிரவு நித்திரைசெய்தார். சுவாமி அவருக்குச்சொப்பனத்திலே தோன்றி, "மழபாடிக்கு வருதற்கு மறந்தாயோ" என்று சொல்லியருளினார். சுந்தரமூர்த்திநாயனார் விழித்தெழுந்து, காவேரிநதியைக் கடந்து, அதன் வடபக்கத்திற்சேர்ந்து, திருமழபாடிக்குப் போய், சுவாமிதரிசனஞ்செய்து, "பொன்னார் மேனியனே" என்னுந் திருப்பதிகம் பாடி, சிலநாள் அங்கிருந்து, காவேரிநதியின் இருபக்கத்திலுமுள்ள ஸ்தலங்களை வணங்கி, மேற்குத்திக்குக்கு யாத்திரை செய்யநினைந்து, திருவானைக்காவுக்குப்போய், சிவபெருமானை வணங்கி, "மறைகளாயின நான்கும்" என்னும் திருப்பதிகம் பாடினார். உறையூர்ச் சோழமகாராஜா பதக்கஞ்சாத்திக்கொண்டு காவேரியிலே ஸ்நானஞ்செய்தலும், அது வழுவிப்போக, அவர் "சிவபெருமானே கொண்டருளும்" என்று பிரார்த்திக்க, அது திருமஞ்சனக்குடத்துள்ளே புக, அபிஷேகஞ்செய்யப்படும்பொழுது அதனைச் சிவபெருமான் அணிந்து அவருக்கு அருள்புரிந்த தன்மையைச் சுந்தரமூர்த்திநாயனார் அத்திருப்பதிகத்திலே சிறப்பித்தருளினார்.

பின்பு திருப்பாச்சிலாச்சிராமத்தை அடைந்து, சிவபெருமானைவணங்கி, அவர் தமக்குப் பொன்னளித்தருளாமையினாலே திருவுளம் புழுங்கி, "வைத்தனன்றனக்கே தலையுமெனாவும்" என்று திருப்பதிகம் எடுத்து, திருப்பாட்டினிறுதிதோறும் "இவரல்லாதில்லையோ பிரானார்" என்று பாடிப்பொற்குவை பெற்று, சிலநாள் அங்கிருந்து, பின் புறப்பட்டு, திருப்பைஞ்ஞீலி, திருவீங்கோய்மலையென்னும் ஸ்தலங்களுக்குப்போய், வணங்கிக்கொண்டு, கொங்கதேசத்தை அடைந்து, அவ்விடத்திலே காவேரிக்குத் தென்கரையிலிருக்கும் திருப்பாண்டிக் கொடுமுடிக்குப் போய் மற்றுப்பற்றெனக்கின்றி,, என்னும் நமச்சிவாயப்பதிகம் பாடி, திருப்பேரூரை அடைந்து, அங்கே பரமசிவன் கனகசபையிலே நடனஞ்செய்யும் திருக்கோலத்தைத் தமக்குக் காட்டக் கண்டு, வணங்கிப்பேரானந்தப் பெருங்கடலின் மூழ்கி, சிதம்பரத்துக்கு மீண்டெழுந்தருளுதற்குத் திருவுளங்கொண்டு புறப்பட்டு, திருவெஞ்சமாக்கூடலையும் வணங்கி, சோழமண்டலத்துக்குத் திரும்பி, திருக்கற்குடிமலை, திருவாறைமேற்றளி, திருவின்னம்பர், திருப்புறம்பயம் என்னும் ஸ்தலங்களுக்கு யாத்திரைபண்ணி, திருக்கூடலையாற்றூருக்குச் சமீபித்தும், அதற்குப் போகாமல் திருமுதுகுன்றை நோக்கிச்சென்றார். செல்லும் வழியிலே, பரமசிவன் ஒருபிராமணராகி, சுந்தரமூர்த்திநாயனாருக்கு முன்னின்றார். நின்

ற அந்தப் பிராமணரைச் சுந்தரமூர்த்திநாயனார் பார்த்து, "ஐயரே, திருமுதுகுன்றுக்குப்போம் வழி எது? சொல்லும்" என்றுகேட்க; ஐயர் "இது கூடலையாற்றூருக்குப் போம் வழி" என்று சொல்லி, வழிகாட்டிக்கொண்டு முன்னே சென்றார். சுந்தரமூர்த்திநாயனார் அவரைத் தொடர்ந்து சென்று, பின் அவரைக் காணாதவராய், "வடிவுடைமழுவேந்தி" என்றெடுத்து, "அடிகளிவ் வழிபோந்த வதிசய மறியேனே" என்னும் திருப்பதிகத்தைப் பாடி, கூடலையாற்றூரை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, திருமுதுகுன்றுக்குப் போனார். அந்த ஸ்தலத்திலே சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகங்கள் பாடியபோது, சுவாமி பன்னீராயிரம் பொன்கொடுத்தருள; சுந்தரமூர்த்திநாயனார் வணங்கி நின்று, "சுவாமீ, தேவரீர் தந்தருளிய இந்தப்பொன்னெல்லாம் திருவாரூரிலே உள்ளவர்கள் அதிசயிக்கும்படி அங்கே வரச்செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அப்பொழுது, சுவாமியுடைய திருவருளினாலே, "சுந்தரனே, நீ இந்தப்பொன்னெல்லாவற்றையும் மணிமுத்தநதியிலே இட்டுத் திருவாரூர்க்குளத்திலே போய் எடுத்துக்கொள்" என்று ஓரசரீரிவாக்கு எழுந்தது. அதைக் கேட்ட சுந்தரமூர்த்திநாயனார் மச்சம் வெட்டிவைத்துக்கொண்டு, பொன்முழுதையும் மணிமுத்தநதியிலே புகவிட்டு, "அன்று என்னை வலிந்தாட்கொண்ட திருவருளை இதிலே அறிவேன்" என்று சொல்லி, சிதம்பரத்துக்குப் போக நினைந்து வழிக்கொண்டு, இடையிலே திருக்கடம்பூரை வணங்கி, சிதம்பரத்தை அடைந்து, சபாநாயகரை நமஸ்கரித்து, "மடித்தாடு மடிமைக்களன்றியே" என்னுந் திருப்பதிகம் பாடினார். தாம் சபாநாயகரைத் திருப்பேரூரிலே கண்ட நிலையைச் சிறப்பித்து, அத்திருப்பதிகத்திலே "மீகொங்கிலணி காஞ்சிவாய்ப்பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்றம்பலத்தே பெற்றாம் மன்றே" என்று அருளிச்செயதார். பின்பு அங்குநின்றும் புறப்பட்டு, திருக்கருப்பறியலூர், திருமண்ணிப்படிக்கரை, திருவாளொளிபுற்றூர், திருக்கானாட்டு முள்ளூர், திருவெதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி என்னும் ஸ்தலங்களை வணங்கி, திருவாரூரை அடைந்தார்.

அங்கே சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு பரவையாரோடு கூடியிருக்கும் நாளில்; ஒருநாள் பரவையாரை நோக்கி, எனக்குத் திருமுதுகுன்றர் தந்தருளிய பொன்னை மணிமுத்தநதியிலே புகவிட்டுவந்தேன். இப்போது இந்த ஸ்தலத்திலே இருக்கின்ற திருக்கோயிலுக்கு மேற்றிசையிலுள்ள குளத்திலே போய் அவருடைய அருளினாலே எடுத்துக்கொண்டு வருவோம், வா" என்றார். பரவையார் அதைக் கேட்டு, "இது என்ன அதிசயம்" என்று சொல்லி, புன்னகை செய்ய; சுந்தரமூர்த்திநாயனார் "பெண்ணே நமது கடவுளுடைய திருவருளினாலே பொன் முழுதும் குளத்திலே எடுத்து உனக்குத் தருவேன், இது சத்தியம்" என்றுசொல்லி, பரவையாரும் கூட வர, கோயிலிலே பிரவேசித்து வன்மீக

நாதனை வணங்கிக்கொண்டு, கோயிலை வலம்வந்து மேற்றிசையிலிருக்கின்ற திருக்குளத்தை அடைந்து, அதன் வடகீழ்க்கரையிலே போய், பரவையாரை நிறுத்தி, சுவாமியை வணங்கி, குளத்திலே இறங்கி, அங்கே தடவினர். அப்பொழுது, பரமசிவன், சுந்தரமூர்த்திநாயனுரைக் கொண்டு திருப்பதிகம் பாடுவிக்கவேண்டும் என்னும் திருவிளையாட்டினுலே, பொன்னை அக்குளத்திலே வருவியாதொழிந்தருள; பரவையார் "ஆற்றிலே இட்டுக் குளத்திலே தேடுகிறீரா,, என்றுர். அதுகேட்ட சுந்தரமூர்த்திநாயனுர் "சுவாமீ, தேவரீர் முன் அருளிச்செய்தபடியே பரவையார் நகையாதபடி பொன்னைத் தாரும்,, என்று திருமுதுகுன்றர்மேல் "பொன்செய்த மேனியினீர்,, என்னும் திருப்பதிகம் பாடி, பரமசிவனுடைய திருவருளினுல் வந்தெழுந்த பொற்றிரளை எடுத்து, கரையிலேற்றி, அந்தப் பொன்னையும் முன் கொண்டுவந்த மச்சத்தையும் உரைப்பித்து, மச்சத்திலும் பார்க்க இது உரை தாழ்ந்தது கண்டு, பின்னும் கடவுளைப்பாடினுர். பாடியபோது, கடவுளானவர் உரை தாழாது அருள்செய்ய; சுந்தரமூர்த்திநாயனுர் மனமகிழ்ந்து, பொற்குவைகளை ஆட்களிற்சுமத்தி, பரவையாரோடு வீட்டுக்கு அனுப்பி, தாம் திருக்கோயிலிலே போய்ச்சுவாமியை வணங்கி, வீட்டுக்குப்போய், பரவையாருடன் இன்புற்று வாழ்ந்திருந்தார்.

அப்படி வாழ்ந்திருக்கும் காலத்தில், சிவஸ்தலயாத்திரை செய்ய விரும்பி, திருநள்ளாறு, திருக்கடவூர் வீரட்டம், திருக்கடவூர் மயானம், திருவலம்புரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருநனிபள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திருநின்றியூர், திருநீடூர், திருப்புன்கூர், திருக்கோலக்கா என்னும் ஸ்தலங்களை வணங்கி, பதிகம்பாடிப்போய், சீர்காழியினெல்லையை வலங்கொண்டு வணங்கி, திருஞானசம்பந்தமூர்த்திநாயனுருடைய திருவடிகளைத் துதித்து, திருக்குருகாவூருக்குப் போம்படி வழிக்கொண்டார். வழியிலே, சுவாமி, அவர் பசியினுலும் தாகத்தினுலும் வருந்துதலை அறிந்து, தண்ணீரும் பொதிசோறும் கொண்டுவந்து, வெய்யில் வெப்பத்தைத் தணிக்கும்பொருட்டு ஒருபக்கத்திலே ஒரு பந்தலையுண்டாக்கி, அங்கே பிராமணவேடங்கொண்டு, சுந்தரமூர்த்திநாயனுரை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனுர் திருத்தொண்டர்களுடனே அவ்விடத்திலே வந்து, பந்தரின் கீழேபோய், அந்தப்பிராமணர் சமீபத்திலே பஞ்சாக்ஷரத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார். பிராமணர் அவரைப் பார்த்து, "நீர் மிகப் பசிகொண்டிருக்கின்றீர். இந்தப்பொதிசோற்றை உண்டு இந்தத் தண்ணீரைக்குடித்து இளைப்பாறும்" என்று சொல்லியருள; சுந்தரமூர்த்திநாயனுர் அதற்கு இசைந்து, அந்தப் பொதிசோற்றை வாங்கி, திருத்தொண்டருடன் அமுதுசெய்து, அளவில்லாத பரிசனங்களெல்லாரும் அமுதுசெய்யப்பண்ணினுர். பண்ணியபின்னும், அந்தப்பொதிசோறு அவ்விடத்திலே பசித்து வந்த

பிறரும் உண்ணும்படி குறையாது பொலிந்தது. சுந்தரமூர்த்திநாயனார் போசனம்பண்ணியபின் சலபானம் பண்ணி, அந்த ஐயரைப்புகழ்ந்து, அவர் சமீபத்திலே பரிசனங்களோடு நித்திரைசெய்ய; ஐயர் பந்தருடனே மறைந்தருளினர். சுந்தரமூர்த்திநாயனார் விழித்து எழுந்து, ஐயரைக் காணுமையால் அதிசயங்கொண்டு, "இத்தனையாமாற்றமறிந்திலன்,, என்னும் திருப்பதிகம் பாடி, திருக்குருகாவூரை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, அங்கே இருந்தார். பின் அவ்விடத்தை விட்டுப்போய், திருக்கழிப்பாலையை வணங்கி, சிதம்பரத்தை அடைந்து, சபாநாயகரைத் தரிசனஞ்செய்துகொண்டு, திருத்தினைநகரை வணங்கி, திருநாவலூரை அடைந்து, சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு, சிலநாள் அங்கிருந்தார்.

பின் தொண்டைமண்டலத்தில் இருக்கின்ற ஸ்தலங்களுக்குயாத்திரைசெய்ய விரும்பி, அவ்விடத்தினின்றும் பிரஸ்தானமாகி, திருக்கழுக்குன்றிற் சென்று சுவாமி தரிசனஞ்செய்து, திருப்பதிகம்பாடி, திருக்கச்சூரிலேபோய், ஆலக்கோயிலுள்ளே பிரவேசித்துச் சுவாமியை வணங்கிக்கொண்டு, புறத்திலே வந்து, அமுது செய்யும் பொழுதாகியும், பாகம் பண்ணிக் கொடுக்கும் பரிசனங்கள் வாராமையால் மிகுந்த பசிவருத்தத்தினுலே மதிற்புறத்தில் இருந்தார். அப்பொழுது பரமசிவனுனவர் ஒரு பிராமணராகி, ஒரு ஓட்டை ஏந்திக்கொண்டு, அங்கேசென்று, அவருடையமுகத்தைப் பார்த்து, "நீர் பசியினுல் மிகவருந்தி இளைப்புற்றிருக்கின்றீர். நான் இப்பொழுது உமக்கு அன்னம் யாசித்துக்கொண்டு வருவேன். நீர் அப்புறம்போகாமல் சிறிதுபொழுது இங்கே இரும்" என்று சொல்லி, அந்தத் திருக்கச்சூரிலே இருக்கின்ற பிராமணவீடுகள் எங்கும் போய், அன்னமும் கறியும் யாசித்துக்கொண்டு, சுந்தரமூர்த்திநாயனுரிடத்திற்சென்று, "பசி தீர இதை உண்ணும்" என்று சொல்லிக்கொடுக்க; நாயனுர் அவ்வையருடைய அன்பைப் புகழ்ந்து, மிகுந்த மகிழ்ச்சியோடு அஞ்சலிசெய்து வாங்கி, தம்மோடு வந்த தொண்டர்களுடனே அமுது செய்தார். உடனே அவ்வையர் மறைந்தருளினர். அதுகண்டு, சுந்தரமூர்த்திநாயனுர் அவர் பரமசிவனென்று உணர்ந்து, "இந்தப்பெரும்பகலிலே திருவடி வருந்தத் திருமேனிகொண்டு அடியேன்பொருட்டு எழுந்தருளிவந்த பெருங்கருணை இருந்தபடி என்ன" என்று மனங்கசிந்துருகி உரோமாஞ்சங்கொள்ள, கண்ணினின்றும் ஆனந்தவருவிசொரிய, "முதுவாயோரி கதற" என்னும் திருப்பதிகம் பாடி, சுவாமியை வணங்கிக்கொண்டு, அவ்விடத்தை விட்டு நீங்கி, காஞ்சீபுரத்தைச் சமீபித்து, அவ்விடத்தினின்று தமது மகிமையையும் வரவையுங் கேள்வியுற்று வந்து எதிர்கொண்டு வணங்கிய பத்தர்களைத் தாமும் வணங்கி, அவர்களோடு திருநகரத்தினுள்ளே சென்று, திருவேகாம்பரத்தை அடைந்து உலகமாதாவாகிய காமாட்சியம்மையால் அருச்சிக்கப்பட்ட ஏகாம்பரநாதசுவாமியைத்

தரிசித்து, பரவசமாய் அடியற்றமரம்போல விழுந்து எழுந்து, விம்மி, ஆனந்தபாஷ்பஞ்சொரிய, அஞ்சலியஸ்தராகி, மெய்யன்பினோடு திருப்பதிகம் பாடி,புறத்தே போந்து, திருத்தொண்டர்களோடு அக்காஞ்சிபுரத்திலே சிலநாள் வசித்தார். வசிக்கும்நாட்களிலே, அந்நகரத்தில் இருக்கின்ற காமக்கோட்டத்திற் சென்று, அங்கே எழுந்தருளியிருக்கும் காமாக்ஷியம்மையை வணங்கி, திருமேற்றளியை அடைந்து சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடி, திருவோணகாந்தன் றளியை அடைந்து "நெய்யும்பாலும்" என்னும் திருப்பதிகம் பாடிப் பொன்பெற்று, அநேகதங்காவதத்தை அடைந்து திருப்பதிகம் பாடினார். பின் திருப்பனங்காட்டூர், திருமாற்பேறு, திருவல்லம் முதலிய ஸ்தலங்களுக்குப் போய் வணங்கிக்கொண்டு, திருக்காளத்தி மலையை அடைந்து, அதனைப் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து மேலே ஏறி, காளத்தியப்பர் சந்நிதானத்திற்சென்று, அவரைவணங்கி, அவருக்கு வலப்பக்கத்தில் நிற்கின்ற அன்பிலே தமக்குவேறொப்பில்லாத கண்ணப்பநாயனாருடைய திருவடித்தாமரைகளை வணங்கி, கீழே இறங்கி, திருத்தொண்டர்களுடனே சிலநாள் அந்தஸ்தலத்தில் இருந்தார். இருக்கும் நாட்களிலே, உத்தரபூமியில் இருக்கின்ற ஸ்ரீபருப்பதம் திருக்கேதாரமலை முதலாகிய சிவஸ்தலங்களை அங்கிருந்தேவணங்கி, அவைகளின்மேலே திருப்பதிகம் பாடியருளினார். அதன்பின், அவ்விடத்தை விட்டு நீங்கி, சமுத்திரதீரத்தில் இருக்கின்ற திருவொற்றியூரிற் சென்று திருப்பதிகம் பாடி, திரிகாலங்களிலும் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு அங்கே இருந்தார்.

இதற்கு முன், திருக்கைலாசமலையிலே சுந்தரமூர்த்திநாயனார் மேல் ஆசை வைத்த சேடியர்கள் இருவருள் அனிந்திதையார் என்பவர் ஞாயிறு என்னும் ஊரிலே இருக்கும் வேளாளரிற் சிறந்தோங்கிய ஞாயிறுகிழவர் என்பவருக்குப் புத்திரியாராய்த் திருவவதாரஞ்செய்து, சங்கிலியார் என்னும் பெயரைப் பெற்று, உமாதேவியாருடைய திருவடிகளிலே மிகுந்த பத்தியுடையவராய் இருந்தார். அவர் பெதும்பைப் பருவமடைந்தது கண்டு, தந்தையாராகிய ஞாயிறுகிழவர் தம்முடைய மனைவியாரை நோக்கி, "நம்முடைய புத்திரி இப்பூவுலகத்துப் பெண்களெல்லாரிலும் பார்க்க அதிக சௌந்தரியமும் நற்குணமும் உடையவளாய் இருக்கின்றாள். அவளுக்கு விவாகஞ்செய்து கொடுக்குங்காலமாயிற்று. இதற்கு யாது செய்வோம்" என்று சொல்ல; மனைவியார் "அவளுடைய சௌந்தரியத்துக்கும் குணத்துக்கும் இசைய ஒரு புருஷனைத் தெரிந்து விவாகஞ்செய்து கொடும்" என்றார். அதைக் கேட்டுக்கொண்டிருந்த சங்கிலியார் "இவர்கள் பேசும் வார்த்தை எனக்குப் பொருந்தும் வார்த்தையன்று. நானோ நமது கடவுளாகிய பரமசிவனுடைய திருவருளைப்பெற்ற ஒருவருக்கு மனைவியாதற்கு உரியேன். இப்படியன்றி மற்றெப்படி விளையுமோ தெரியேன்" என்று நினைந்து, அச்சங்கொண்டு, அறிவும

யங்கி மிகச்சோகித்து, நிலத்திலே விழுந்தார். சமீபத்தில் நின்ற தந்தையாரும் தாயாரும் அதைக் கண்டு, பதைபதைத்து அவரை எடுத்து, ஏங்கிய மனத்தையுடையவர்களாகி, "இவளுக்கு நிகழ்ந்தது யாதோ" என்று பயந்து, தாங்கிப்பனிநீர் தெளித்துத் தடவி, அவருக்குச்சோகம் நீங்கியபின், அவரைப் பார்த்து, "மகளே, உனக்கு நிகழ்ந்தது யாது? சொல்" என்றுகேட்க; சங்கிலியார் "இப்பொழுது என்னைக்குறித்து நீங்கள் பேசியது எனக்கு இசையாது. நானோ பரமசிவனது திருவருளைப்பெற்ற ஒருவருக்கு மனைவியாதற்கு உரியேன். நான் இனிமேல் திருவொற்றியூரை அடைந்து திருவருளிற் செல்லுவேன்" என்றார். அதைக்கேட்ட தந்தை தாயார் இருவரும் சோகமும் அச்சமும் அதிசயமும் உடையவர்களாகி, அந்தச் சங்கிலியார் சொல்லிய வார்த்தையை மறைத்து ஒழுகினார்கள். ஒழுகும் நாட்களில், அவர்களுடைய குலத்துக்கு ஒப்பாகிய குலத்தில் உள்ள ஒருவன், நிகழ்ந்த அந்தச் சங்கதியை அறியாதவனாகி, சங்கிலியார்மேல் விருப்பங்கொண்டு, அவருடைய தந்தையாரிடத்திலே கலியாணம் பேசும்பொருட்டுச் சிலரை அனுப்பினான். அனுப்பப்பட்ட அவர்கள் அத் தந்தையாரிடத்திற் சென்றுபேச; அது கேட்டுத் தந்தையார், நிகழ்ந்த சங்கதியைச் சொல்லுதல் தகுதியன்று என்று நினைந்து, வேறோர் உபாயத்தினால் அனுப்பிவிட்டார். அவர்கள் திரும்பிப் போய்ச் சேர்ந்தவுடனே, அவர்களை அனுப்பினவன் அவர்களோடு இறந்துபோயினான். அதைச் சங்கிலியாருடைய தந்தை தாயார் கேள்வியுற்று மனமயங்கி, உய்யவேண்டும் என்கின்ற நினைவுடையவர்கள் சங்கிலியார் பக்ஷத்திலே பேசத் தகாதவார்த்தையைப் பேசார்கள் என்பதை உலகம் அறியும்படி செய்த திருவருளைக் கண்டு, அதனை யாவர்க்கும் உள்ளபடி சொல்லி, மிகப்பயந்து "இனி நாங்கள் இவரெண்ணத்தின்படியே இவரைச் சிவபுண்ணியஞ் செய்துகொண்டு இருக்கும்பொருட்டுத் திருவொற்றியூரிலே கொண்டுபோய் விடவேண்டும்" என்று துணிந்து, தங்கள் ஞாதிகளோடும் சங்கிலியாரைப் பார்த்து, "நீர் திருவொற்றியூரை அடைந்து கன்னிமாடத்தில் இருந்து பரமசிவனுடைய திருவருளை முன்னிட்டுத் தவஞ்செய்யும்" என்று சொல்லி, மிகுந்த செல்வத்தோடும் அவரைத் திருவொற்றியூருக்குக் கொண்டுபோய், கோயிலிலே பிரவேசித்து, சுவாமியை வணங்கிக்கொண்டு, சமீபத்திலே ஒரு கன்னிமாடஞ் செய்வித்து, அதிலே அவரை இருத்தி, அவருக்கு வேண்டும் திரவியங்களையும் அமைத்து, அவரை வணங்கி நின்று, "நீர் இந்தக் கன்னிமாடத்திலே பரமசிவனுக்குத் திருத்தொண்டு செய்துகொண்டு இரும்" என்று சொல்லி, அவரைப் பிரிதலினாலே இரண்டுகண்ணினின்றும் சோகபாஷ்பஞ்சொரிய, அனுமதி பெற்றுக்கொண்டு தங்கள் ஊருக்குத் திரும்பிவிட்டார்கள். சங்கிலியார் அந்தக் கன்னிமாடத்தில் இருந்து, தினந்தோறும் திரிகாலங்களிலும், திருக்கோயிலிலேபோய், சுவாமி தரிசனஞ்செய்து,

பூக்கட்டு மண்டபத்திலே திரை இட்டிருக்கின்ற ஓரிடத்திற் போயிருந்து, புஷ்பமாலைகட்டி, சுவாமிக்குச் சாத்தும்படி கொடுத்துக்கொண்டு வருவார்.

இப்படி நிகழுங்காலத்திலே, ஒருநாள் சுந்தரமூர்த்திநாயனர் திருக்கோயிலிலே போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு புறப்பட்டு, அடியார்கள் செய்கின்ற பலவகைத் திருத்தொண்டைப் பார்ப்பவராகி, புஷ்பமண்டபத்தினுள்ளே போனர். போனபொழுது, முன்போலத் திரையை நீக்கிப் பரமசிவனுக்குச் சாத்தும்படி தாம் கட்டிய பூமாலைகளைக் கொடுத்துவிட்டு மின்போல மறைந்த சங்கிலியாரை விதி கூட்டக் கண்டு, அவர்மேல் ஆசைகொண்டு, புறத்திலே போய், "புஷ்பமண்டபத்தினுள்ளே ஒருபக்கத்திலே திரைக்குள்ளே நின்று ஒரு பெண் என்னுடைய மனசைக்கவர்ந்து கொண்டாள். அவள் யார்" என்றார். சமீபத்திலே நின்றவர்கள் "அவர் பரமசிவனுக்கு மிகுந்த பத்தியோடு திருத்தொண்டு செய்கின்ற கன்னிகையாகிய சங்கிலியார்" என்றார்கள். அதைக்கேட்ட சுந்தரமூர்த்திநாயனர் திருக்கோயிலினுள்ளே போய், சுவாமியை வணங்கி நின்று, சங்கிலியாரைத் தமக்குத் தந்தருளும்படி பிரார்த்தித்துக்கொண்டு, திருக்கோயிலின் புறத்திலே போய், ஓரிடத்திலேயிருக்க; சூரியன் அஸ்தமயனமாயிற்று. அப்பொழுது பரமசிவன் சுந்தரமூர்த்திநாயனரிடத்திலே போய், "இவ்வுலகத்தில் உள்ளவர்கள் யாவராலுஞ் செய்யப்படுதல் கூடாதபெருந்தவத்தைச் செய்கின்ற உத்தமியாகிய சங்கிலியை உனக்குத் தருவோம். நீ கொண்ட கவலையை ஒழி" என்று திருவாய்மலர்ந்தருளி, அத்தயாமத்திலே கன்னிமாடத்திலே நித்திரைசெய்கின்ற சங்கிலியாருக்குச் சொப்பனத்திலே தோன்றினர். தோன்றியபொழுது, சங்கிலியார் பரவசமாய் விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று, சுவாமீ, அடியேன் உய்யும்படி தேவரீர் அடியேனிடத்திலே எழுந்தருளிவரும்பொருட்டுப் பூர்வஜன்மத்திலே என்னதவஞ்செய்தேன்" என்று சொல்ல; பரமசிவன் "சங்கிலியே, நம்மேலே மிகுந்தபத்தியுடையவனும் திருவெண்ணெய்நல்லூரிலே சமஸ்தரும் அறியும்படி நம்மாலே தடுத்தாட்கொள்ளப்பட்டவனும் நமக்குத் தோழனும் ஆகிய சுந்தரன் தனக்கு மனைவியாக உன்னைத் தரும்பொருட்டு என்னைப் பிரார்த்தித்தான். நீ மகிழ்ச்சியோடும் அதற்கு உடன்படு" என்று சொல்லியருளினர். அதற்குச் சங்கிலியார் "சுவாமீ, அடியேன் தேவரீருடைய ஆஞ்ஞையைத் தலைமேற் கொண்டேன். தேவரீர் சொல்லியருளிய நாயனருக்கே மனைவியாதற்கு உரியேன். ஆயின், அவர் திருவாரூரினிடத்தே மிகுந்த சந்தோஷத்தோடு வசிக்கின்றவர் என்பதைத் தேவரீர் திருவுளங்கொண்டருளும்" என்று விண்ணப்பஞ்செய்தார். அது கேட்ட கடவுள் "பெண்ணே, அந்தச் சுந்தரன் உன்னைப் பிரிந்து போகேன் என்று ஒருசபதஞ்செய்து தருவான்,, என்று சொல்லியருளி, சுந்தரமூர்த்திநாயனரிட

த்திற்சென்று, "நாம் சங்கிலியிடத்திலே போய் உன்னெண்ணத்தைத் தெரிவித்தோம். நான் உன்னைப் பிரிந்து செல்லேன் என்று நீ அவளுக்குச் சபதஞ்செய்துகொடுத்தால், அவள் உடன்படுவாள். இனி உனக்கு நாம் என்னசெய்யவேண்டும்" என்று அருளிச்செய்ய; சுந்தரமூர்த்திநாயனார் "இக்கடவுளுடைய பிறதலங்களையும் சென்று வணங்க விரும்புகின்ற அடியேனுக்கு இது விலக்காகும்" என்று நினைந்து, அவரை வணங்கி, "சுவாமீ, சங்கிலிக்கு நான் உன்னைப் பிரியேன் என்று சபதஞ் செய்துகொடுக்கும் பொருட்டு அடியேன் அவளோடு தேவரீருடைய ஆலயத்துக்கு வந்தால், அப்பொழுது தேவரீர் அவ்வாலயத்தை விட்டுத் திருமகிழின்கீழ் இருந்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதற்குக் கடவுள் இசைந்தருளி, சங்கிலியாரிடத்திலே முன்போலப் போய், "பெண்ணே, சுந்தரன் உனக்குச் சபதஞ்செய்துதருதற்கு உடன்பட்டிருக்கிறான். அவன் நம்முடைய ஆலயத்திலே சபதஞ்செய்துதருதற்கு வந்தால், நீ அதற்கு உடன்படாமல் மகிழின்கீழே சபதஞ்செய்து தரும்படி கேள்" என்று சொல்லி மறைந்தருளினர். சங்கிலியார் விழித்தெழுந்து, அதிசயித்து, அவ்விரவிலே பரமசிவனுடைய திருவருளை நினைந்து நினைந்து, நித்திரைசெய்யாதவராகி, சமீபத்திலே நித்திரைசெய்கின்ற தம்முடைய சேடியர்களை எழுப்பி, தமக்குக் கனவிலே பரமசிவன் அருளிச்செய்த எல்லாவற்றையும் அவர்களுக்குத் தெரிவிக்க; அவர்கள் அச்சம் அதிசயம் ஆனந்தம் மூன்றும் அடைந்து, சங்கிலியாரை வணங்கினார்கள். திருப்பள்ளியெழுச்சிக்குப் புஷ்பந்தொடுக்கும் பொழுது ஆயினமை கண்டு, சங்கிலியார் சேடியர்களோடு திருக்கோயிலுக்குச் செல்ல; அவருக்குச்சபதஞ் செய்துகொடுக்கும்பொருட்டு, அதற்கு முன் அவ்விடத்தில் வந்து அவருடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு நின்ற சுந்தரமூர்த்திநாயனார், தமக்கு எதிரே வந்த அவர் சமீபத்திற் சென்று, தமக்குப் பரமசிவன் அருளிச்செய்ததைச் சொன்னார். அதற்குச் சங்கிலியார் எதிர்வார்த்தை ஒன்றும் சொல்லாமல் நாணங்கொண்டு, சேடியர்களோடும் திருக்கோயிலினுள்ளே புகுந்தார். சுந்தரமூர்த்திநாயனார் அவர் பின்னே போய், "பெண்ணே, நான் உம்மைப் பிரியேன் என்று சபதஞ்செய்யும்பொருட்டுச் சுவாமி சந்நிதானத்துக்கு வாரும்" என்று சொல்ல; சங்கிலியார் கண்ட கனவைக் கேட்டறிந்த சேடியர்கள் "சுவாமீ, இதன்பொருட்டுத் தேவரீர் சிவசந்நிதானத்திலே சபதஞ்செய்வது தகாது" என்றார்கள். அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனார் பரமசிவனுடைய செய்கையை அறியாமல், "பெண்களே, நான் வேறெங்கே சபதஞ்செய்து தரவேண்டும்" என்று கேட்க; சேடியர்கள் "மகிழின்கீழே சபதஞ் செய்து கொடும்" என்றார்கள். அதைக் கேட்ட நாயனார் மனமருண்டு, "இவர்கள் சொல்லியதை மறுக்கில், விவாகந் தவறினுந்தவறும்: ஆதலால், இதற்கு உடன்படவேண்டும்" என்று துணிந்து, "அப்படியே செய்யலாம் வாருங்கள்" என்று சொல்லி, அவர்களோடு மகிழின்கீழே போய்

ச்சேர்ந்து, சங்கிலியார் காணும்படி அந்த மகிழை மூன்றுதரம் வலஞ்செய்து, "உன்னை நான் பிரியேன்" என்று சபதஞ் செய்துகொடுத்தார். அது கண்டு, சங்கிலியார் மனங்கலங்கி, "கடவுளுடைய ஆஞ்ஞையினலே பாவியேன் இதைக் கண்டேனே" என்று துக்கித்துக்கொண்டு, ஒருபக்கத்திலே மறைந்து நின்றார். சுந்தரமூர்த்திநாயனர் சபதமுடித்தபின், ஆலயத்தினுள்ளே போய்க் கடவுளை வணங்கி ஸ்தோத்திரஞ் செய்துகொண்டு திரும்பிவிட்டார். அதற்குப்பின், சங்கிலியார் புஷ்பமண்டபத்திலே போய்த் தம்முடைய பணியை முடித்து, பரமசிவன் தமக்கு அருள் செய்ததை நினைந்து, அவரை வணங்கிக்கொண்டு, விடியும்பொழுது கன்னிமாடத்துக்குத் திரும்பிவிட்டார். அவ்விரவிற்றானே பரமசிவன் திருவொற்றியூரில் இருக்கின்ற தம்முடைய தொண்டர்களுக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நம்முடைய அடியானகிய சுந்தரனுக்குச் சங்கிலியென்னும் கன்னிகையை விவாகஞ்செய்து கொடுங்கள்" என்று ஆஞ்ஞாபித்து மறைந்தருளினர். அவர்கள் அவ்வாஞ்ஞையைத் தலைமேற்கொண்டு, மற்றநாளிலே அவ்வூரில் இருக்கின்ற சமஸ்தசனங்களோடுங் கூடி, மிகுந்த மகிழ்ச்சியோடும் மகாலங்காரத்தோடும் சங்கிலியாரைச் சுந்தரமூர்த்திநாயனருக்கு விவாகஞ்செய்து கொடுத்தார்கள்.

விவாகஞ்செய்த சுந்தரமூர்த்திநாயனர் சங்கிலியாரோடு கூடி அவ்வூரிலே வாழ்ந்திருந்தார். இருக்கும் நாளிலே, ஒருநாள் திருவாரூரிலிருக்கின்ற வீதிவிடங்கப்பெருமானுடைய வசந்தோற்சவ காலம் சமீபித்ததை அறிந்து, "வன்மீகநாதரை இவ்வளவுகாலமும் மறந்திருந்தேனே" என்று துக்கித்து, அவர்மேலே "பத்திமையு மடிமையையுங் கைவிடுவான் பாவியேன்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினர். பின்னொருநாளிலே அவரை மிக நினைந்து, திருவாரூருக்குப் போகக்கருதி, ஆலயத்திலே புகுந்து சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, திருவொற்றியூரை நீங்கினர். நீங்கியபொழுது, சுந்தரமூர்த்திநாயனருக்கு, அவர் சபதந்தவறினமையால், இரண்டு கண்களும் மறைந்தன. அப்பொழுது நாயனர் திகைத்து நெடிதுயிர்த்து, "சபதந்தவறினமையால், எனக்கு இது நிகழ்ந்தது" என்று நினைந்து, "இந்தக்கொடுந்துயரத்தை நீக்கும்பொருட்டு நமது கடவுளைப் பாடுவேன்" என்று துணிந்து, "அழுக்கு மெய்கொடுன் றிருவடி யடைந்தேன்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடினர். பாடியும், கடவுள் அத்துயரத்தை நீக்கினரில்லை. ஆயினும், திருவாரூருக்குச் செல்லவேண்டுமென்கிற பேரவாவினல் சிலர் முன்னே வழிகாட்டிக்கொண்டு செல்ல, திருமுல்லைவாயிலுக்குப் போய், சுவாமியைவணங்கி "விண்பணிந் தேத்தும் வேதியா" என்னுந் திருப்பதிகத்தைப் பாடி, திருவெண்பாக்கத்தை அடைந்து சிவபெருமானை வணங்கி, "திருக்கோயிலுள்ளீரோ" என்று விண்ணப்பஞ்செய்ய; சிவபெருமான் அவருக்கு ஊன்றுகோல் கொடுத்து, "உள்ளோம் போகீர்" என்று சொல்லியருளின

ர். சுந்தரமூர்த்திநாயனார் "பிழையுளன பொறுத்திடுவர்" என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டு, பழையனூரிலே போய், காரைக்காலம்மையார் திருத்தலையாலே பிரதக்ஷிணஞ்செய்த திருவாலங்காட்டுக்குச் சமீபத்திலே நின்று அதனை வணங்கி, "முத்தா முத்தி தரவல்ல" என்னுந் திருப்பதிகம் பாடி, திருவூறலிற் சென்று வணங்கி, காஞ்சீபுரத்தை அடைந்தார். அங்கே முன் காமக்கோட்டத்திற்சென்று, தருமத்தை வளர்க்கின்ற பெருங்கருணையையுடைய உலகமாதாவாகிய காமாக்ஷியம்மையை வணங்கித் துதித்துக்கொண்டு, திருவேகம்பத்தை அடைந்து, ஏகாம்பரநாதசுவாமியை வணங்கி, ஆதிகாலத்திலே திருப்பாற்கடலினின்று எழுந்து தேவர்களை வருத்தத்தொடங்கிய ஆலாகலவிஷத்தைத் திருமிடற்றிலடைத்து அவர்கள் அமுதுண்ண அருள்செய்த கருணாநிதியே, சிறியேன் செய்த பிழையைப் பொறுத்துச் சிறியேனுக்குத் தேவரீரைத் தரிசிக்கும்பொருட்டுக் கண்ணைத் தந்தருளும்" என்று பிரார்த்தித்தார். அப்பொழுது கடவுள் இடக்கண்ணை மாத்திரம் கொடுத்து, தமது திருக்கோலத்தைக்காட்ட; சுந்தரமூர்த்திநாயனார் கண்டு பரவசமாகி அடியற்றமரம்போல வீழ்ந்து எழுந்து, "ஆலந் தானுகந் தமுதுசெய் தானை,, என்னுந் திருப்பதிகத்தைப் பாடி, அந்தஸ்தலத்திலே சிலநாள் இருந்து, பின் அந்தஸ்தலத்தை நீங்கி, வழியிலே "அந்தியுநண் பகலும்,, என்றெடுத்து, "தென்றிரு வாரூர்புக் கெந்தைபிரானாரை யென்றுகொலெய்துவதே,, என்னுந் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு, தொண்டைமண்டலத்தைக் கடந்து, திருவாமாத்தூரிற் சென்று பதிகம்பாடி, திருவரத்துறையை வணங்கிப் பதிகம் பாடிக்கொண்டு, சோழமண்டலத்தை அடைந்தார்.

அந்நாட்டிலே திருவாவடுதுறையிற்சேர்ந்து, சுவாமியை வணங்கி, ஒரு கண்ணில்லாமையைக் குறித்து மனங்கவன்று, "கங்கைவார்சடையாய்,, என்னுந் திருப்பதிகம் பாடி, திருத்துருத்திக்குப் போய்ச் சுவாமியை வணங்கி, "அடியேனுடைய சரீரத்தின்மேலே பொருந்திய நோயை நீக்கியருளல் வேண்டும்,, என்று பிரார்த்தித்தார். அதற்குக் கடவுள் "நீ இக்கோயிலுக்கு வடபுறத்தில் இருக்கின்ற குளத்திலே ஸ்நானம் பண்ணுவாயாகில், இந்நோய் நீங்கிவிடும்,, என்று திருவாய்மலர்ந்தருளினார். அதுகேட்டுச் சுந்தரமூர்த்திநாயனார் கைதொழுது புறப்பட்டு, அந்தத் தீர்த்தத்தை அடைந்து, சுவாமியை வணங்கிக்கொண்டு, அவருடைய திருவடிகளிலே அன்போடு பதிந்த இருதயத்துடனே அத்தீர்த்தத்திலே ஸ்நானம் பண்ணினார். உடனே அவருடைய திருமேனி நோய் நீங்கிப் பிரகாசம் அடைந்தது. அவர் கண்டவர்கள் அதிசயிக்கும்படி கரையேறி, வஸ்திரந் தரித்துக்கொண்டு, திருக்கோயிலிலே போய், சுவாமியை வணங்கி, "மின்னுமாமேகங்கள்,, என்னுந் திருப்பதிகம்பாடி, அத்திருப்பதியைநீங்கி, திருவாரூரிற் சென்று, மாலைக்காலத்திலே முன்னே தூவாயை வணங்கும்படி அடியார்களோடு பரவையுண்மண்டளி என்னுந் தி

ருக்கோயிலிலே பிரவேசித்து வணங்கிக் கண் தந்தருளும்படி திருப்பதிகம் பாடி, வெளியே போய், ஓரிடத்தில் இருந்து, பின் அடியார்களோடு திருமூலட்டானத்திலே திருவத்தயாமத்திலே சுவாமிதரிசனஞ் செய்வதற்கு எழுந்து வழிக்கொண்டு, வழியிலே அடியார்கள் தமக்கெதிரே வர அவர்கள் முகத்தைப் பார்த்து, கைக்கிளையினாலே "குருகுபாய,, என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டு போய், தேவாசிரயமண்டபத்தை முன்னே நமஸ்கரித்து, கோபுரத்தையும் வணங்கி, உள்ளே புகுந்து, சுவாமி சந்நிதானத்திலே போய் விழுந்து நமஸ்கரித்து, எழுந்து நின்று, சுவாமியைத் தரிசனஞ்செய்தற்கு ஒருகண் போதாமையால் அதிகதுக்கங்கொண்டு, "சுவாமீ, அடியேனுக்கு வலக்கண்ணையுந்தந்து அடியேனை இத்துக்கசாகரத்தினின்றும் கரையேற்றியருளல்வேண்டும்,, என்று பிரார்த்தித்து, "மீளா வடிமை யுமக்கே யாளாய்,, என்னுந் திருப்பதிகம் பாடினர். அப்பொழுது வன்மீகநாதர் திருவுளமிரங்கி, அவருக்கு வலக்கண்ணையுங் கொடுத்தருளினர். உடனே சுந்தரமூர்த்திநாயனர் பரவசமாய்ப் பலமுறை விழுந்தும், எழுந்தும், மிகுந்த களிப்பினால் ஆடியும் பாடியும், ஆனந்தசாகரத்தில் அமிழ்ந்தி, வன்மீகநாதருடைய திருக்கோலத்தை இரண்டு கண்களினாலுந்தரிசனஞ்செய்து வணங்கித்துதித்துக்கொண்டு புறப்பட்டு, தேவாசிரயமண்டபத்திலே போய், அங்கெழுந்தருளியிருந்தார்.

முன் சுந்தரமூர்த்திநாயனர் திருக்கோயிலுக்குப் போம்போது, அவருடைய பரிசனங்களிற் சிலர் பரவையார் வீட்டுக்குப்போக நினைந்து, அவர்வாயிலிலே போய், அப்பரவையார் தம்மைப் பிரிந்து சென்ற சுந்தரமூர்த்திநாயனர் திருவொற்றியூரிலே சங்கிலியாரை விவாகஞ்செய்துகொண்டிருந்த சங்கதியைக் கேள்வியுற்று அதிகதுக்கமும் கோபமுங்கொண்டிருந்தமையால், உள்ளே போகப் பெறுமல், திரும்பி, தேவாசிரயமண்டபத்திலிருந்த சுந்தரமூர்த்திநாயனரை அடைந்து, "சுவாமீ, பரவையார் தேவரீர் திருவொற்றியூரிலே சங்கிலியாரை விவாகஞ்செய்த சமாசாரம் முற்றும் கேள்வியுற்றமையால், இப்பொழுது அவர்வீட்டுப் புறத்தும் செல்லப்பெறுமல் திரும்பிவிட்டோம்,, என்றார்கள். அதைக்கேட்ட நாயனர் மனங்கலங்கி, "இனி இதற்கு யாது செய்வோம்,, என்று ஆலோசித்து, லௌகிகவிஷயத்திலே வல்ல சிலமனிதர்களை, பரவையார் கொண்ட கோபத்தை நீக்கிக்கொண்டு வரும்பொருட்டு, அவரிடத்திற்கு அனுப்பினர். அனுப்பப்பட்ட அவர்கள் பரவையார்முன் சென்று, அவருக்குப் பலநியாயங்களையும் எடுத்துச்சொல்லி, "சுந்தரமூர்த்திநாயனரோடு முன்போலக் கூடியிருக்கவேண்டும்,, என்று பிரார்த்தித்தார்கள். அதற்குப் பரவையார் இசையாதவராகி, கோபம் அதிகரித்து, "எனக்குக் குற்றஞ்செய்த அவர்பக்கத்தில் இன்னும் இப்படிப் பேசுவீர்களாகில், நான் பிராணத்தியாகம் பண்ணிப்போடுவேன்,, என்றார். அவர்கள் அதைக்கேட்டு மிகப்பயந்து, சுந்தரமூர்த்திநாயனரிடத்திற்சென்று, நிகழ்ந்

த சங்கதியைத் தெரிவித்தார்கள். அதைக்கேட்ட நாயனார் மிகுந்த து க்கசாகரத்தில் அமிழ்ந்தி, சமீபத்தில் இருந்தவர்கள் எல்லாரும் நித்திரை செய்யும்பொழுது, அத்தயாமத்திலே தனியே வருந்தி, பரமசிவனுடைய திருவடிகளைத் தியானித்து, "ஆன்மாக்கள் செய்த கன்மங்களைத் தொலை க்கும்பொருட்டு அவைகளின் பலன்களைப் புசிப்பித்தருளுகின்ற கடவு ளே, அடியேன் பூர்வத்திலே செய்த கர்மத்தினாலே அடியேனுக்குத் தே வரீராலே கூட்டப்பட்ட பரவையினுடைய ஊடலைத் தேவரீரே இந்த அத்தயாமத்தில் எழுந்தருளிவந்து தீர்த்தருளல்வேண்டும்" என்று பிரா ர்த்தித்தார். அப்பொழுது, தனுகரணங்களை யானென்றும் புவனபோ கங்களை எனதென்றும் அபிமானிக்கின்ற அகங்கார மமகாரங்களை ஒழிந் து தம்மை உணர்ந்து தமது திருவருள் வழிநிற்கும் மெய்ஞ்ஞானிகளுக் குப் பிராரத்தமாத்திரம் புசிப்பித்து அவர்கள் அதுபுசிக்கும்போது ம னம் வாக்குக் காயம் என்னுந் திரிகரணங்களாற் செய்யுஞ்செயல்கள் அ வர்களுக்கு ஆகாமியமாய் ஏறாது அவைகளைத் தஞ்செயலாகக் கொண்ட ருளும் சிவபெருமான், சுந்தரமூர்த்திநாயனாருக்குப் பிராரத்தமுற்றும் புசிப்பித்துத் தொலைப்பிக்கும்பொருட்டும், தாம் அப்படிச் செய்தல் அ வன் அவள் அது முன்னிலையாயாம் ஆயினும், அம்முன்னிலையாய் அது செய்பவர் தாமே என்பது நம்மனோர்க்கும் தெளிவுறப்புலப்படும்பொரு ட்டும், விஷ்ணுமூர்த்தியாலும் தேடிக் காணப்படாத அருமைத்திருவடிக ள் பூமியிலே தீண்டும்படி அந்நாயனாருக்குவெளிப்பட எழுந்தருளிவந்தா ர். அது கண்டநாயனார் எழுந்து, தாங்கற்கரிய ஆனந்தமேலீட்டினாலே சரீரம் நடுங்க, உரோமஞ்சிலிர்க்க, இரண்டுகைகளும் சிரசின்மேல் ஏறிக் குவிய, கடவுளுடைய திருவடியின்கீழ் விழுந்து, எழுந்து, ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு நின்றார். கடவுள் அவரை நோக்கி, "உனக்கு நிகழ்ந் தது யாது" என்று கேட்டருள; "அவர் தேவரீருடைய திருவருள்கூட் ட அடியேன் திருவொற்றியூரிலே சங்கிலியை விவாகஞ்செய்த சமாசார முழுதும் பரவையானவள் கேள்வியுற்று அறிந்து, தன்னிடத்திலே நா ன் வரில் தான் பிராணத்தியாகம் பண்ணுதல் தவறாது என்று சொல்லி க்கொண்டிருக்கின்றாள். சிறியேன் தேவரீருக்கு அடியானும் தேவரீர் சிறியேனுக்குத் தோழனும் ஆண்டவருமாயிருத்தல் மெய்யானால், சிறி யேன் படுந் துன்பத்தைப் பார்த்துத் தேவரீரே இவ்விரவில் பரவைவீ ட்டுக்குச் சென்று அவளுடைய ஊடலைத் தீர்த்தருளல்வேண்டும்" என் று விண்ணப்பஞ் செய்தார். அதைக்கேட்ட கடவுள் "தோழனே, நா ன் இப்பொழுது உனக்கு ஒரு தூதனாகிப் பரவைவீட்டுக்குப் போகின் றேன். நீ உன் துன்பத்தை ஒழி" என்று திருவாய்மலர்ந்தருளி, தேவ ர் முனிவர் பூதர்கள் முதலாகிய சமஸ்தரும் ஸ்தோத்திரஞ்செய்துகொண் டு புறத்திலே சூழும்படி, பரவையார்வீட்டை நோக்கி நடந்து, அவ்வீட் டுவாயிலை அடைந்து, தம்மோடு வந்த கணங்கள் புறத்திலே நிற்க, தாம் தமக்கு அருச்சனை செய்கின்ற ஒரு ஆதிசைவர்வடிவங்கொண்டு உள்ளே

தனியே சென்று, கதவுபூட்டியிருத்தலால் அதற்கு முன்னின்று, "பரவையே, கதவைத் திற" என்று அழைத்தார். நித்திரையின்றித் துக்கத்தோடிருந்த பரவையார் அதைக் கேட்டு, தம்மை அழைத்தவர் சுவாமிக்கு அருச்சனை செய்கின்ற ஆதிசைவரெனத் துணிந்து, சுவாமிக்கு அருச்சனைசெய்யும் பெரியவர் இந்த அத்தயாமத்திலே இங்கேவந்தது யாதுகாரணம் பற்றியோ" என்று பயந்து, பதைபதைத்துப்போய், கதவைத் திறந்து, அவரைக் கண்டு, "சுவாமீ, தேவரீர் இப்பொழுது இங்கே எழுந்தருளிவந்த காரணம்யாது,, என்று கேட்டார். அதற்குக் கடவுள் "நான் சொல்வதை நீ மறுது செய்வாயாகில், சொல்லுவேன்,, என்று சொல்ல; பரவையார் "நீர் அதைச் சொல்லும். அது என்னால் இயலுமாகில், செய்வேன்,, என்றார். கடவுள் "சுந்தரமூர்த்தி இங்கே வருதற்கு நீ உடன்படல் வேண்டும்" என்று சொல்ல; பரவையார் "உம்முடையபெருமை நன்றாய் இருக்கின்றது. என்னைப்பிரிந்து சென்று திருவொற்றியூரிலே சேர்ந்து அங்கே சங்கிலியினாலே பிணிப்புண்டவருக்கு இங்கே ஒருசார்பு உண்டாகுமோ,, என்றார். சுவாமி அதைக் கேட்டு, "நீ உனக்குச் சுந்தரமூர்த்தி செய்த குற்றங்களை மனசிலே கொள்ளாமல் கோபநீங்கி அவரை இங்கே வருவிக்கும்பொருட்டு, உன்னை நான் வேண்டிக்கொண்டேன். நீ மறுப்பது தகுதியன்று,, என்று அருளிச்செய்ய; பரவையார் "நீர் இந்தக் காரியத்தின்பொருட்டு இந்த வீட்டுக்கு வருதல் உம்முடைய பெருமைக்குத் தகுதியன்று. அவர் இங்கே வருதற்கு நான் இசையமாட்டேன். நீர் போய்விடும்,, என்றார்.

அதைக்கேட்ட கடவுள் உள்ளே நகைத்துக்கொண்டு, தம்முடைய திருவுருவத்தைப் பரவையாருக்குக் காட்டாமல், சுந்தரமூர்த்திநாயனாரிடத்திற்குத் திரும்பிச் சென்றார். சென்ற கடவுளைச் சுந்தரமூர்த்தி நாயனார் மகிழ்ச்சியோடு எதிர்கொண்டு நமஸ்கரித்து, அவருடைய திருமுகத்திலே தோன்றிய சிரிப்பைக்கண்டு, அவருடைய திருவுள்ளக்கருத்தை அறியாமல், தாம் நினைத்தகருத்தை முடித்து வந்தனர் என்றுதுணிந்து, தேவரீர் அன்றைக்குச் சிறியேனை ஆட்கொண்டதற்கு இசைய இன்றைக்குப் பரவையுடைய கோபம் முழுதையும் தீர்த்து வந்தருளினீர்,, என்றார். கடவுள் அதைக்கேட்டு, உன் வேண்டுகோளின்படி நாம் பரவைவீட்டுக்குப்போய் அவளிடத்திலே பேசினோம். அவள் இசையவில்லை,, என்றார். உடனே நாயனார் நடுக்கங்கொண்டு வணங்கி, "தேவரீர் அருளிச்செய்ததை அடியாளாகிய பரவையாமறுப்பாள்? தேவரீர் தமியேனுடைய அடிமைத்தன்மையை வேண்டுவதில்லையாகில், அன்றைக்குத் தமியேனை வலிய ஆட்கொண்டதேது? தமியேன்படுந் துக்கத்தைக் கண்டீர். இன்றைக்குத் தமியேன் அவளிடத்திலே போவதற்கு அருள் செய்யீராகில், என்னுயிர் நீங்கிவிடும்,. என்று சொல்லி விழுந்தார். அதுகண்டு கடவுள் "நாம் இன்னும் பரவையிடத்திலே போய், இப்போதே

நீ அவளிடத்திற் செல்லும்படி பண்ணுவோம். நீ துக்கிக்கவேண்டாம்" என்று அருளிச்செய்து, கணங்களோடு பரவையார் வீட்டை அடைந்தார். அதற்கு முன், பரவையார், தம்மிடத்தில் வந்த ஆதிசைவர் போன பின்பு, அவ்வாதிசைவராய் வந்தவர் பரமசிவன் என்றே பல அதிசயத் தோற்றத்தால் அறிந்து பயங்கொண்டு, "ஐயோ! கெட்டேன். எங்கள் சுவாமி திருவாக்குக்கு எதிர்வாக்குச் சொல்லி மறுத்தேனே" என்று புலம்பி, நித்திரை செய்யாதவராகி, தம்முடைய தோழருக்காக அருச்சகர் வடிவங்கொண்டு வந்த கடவுளைப் பாவியேன் மதித்தேனில்லை" என்றுவாயிலையே பார்த்துக்கொண்டிருந்தார். சிவபெருமான், தாமாந் தன்மையை அறிதற்கு ஏற்ற திருக்கோலத்தோடும், தேவர் முனிவரர் முதலாகிய சமஸ்தகணங்களும் சூழும்படி, பரவையார் வீட்டினுள்ளே பிரவேசித்தார். அது கண்ட பரவையார், அதிசீக்கிரம் எழுந்து போய்க் கடவுளுடைய திருவடியிலே விழுந்து நமஸ்கரிக்க, கடவுள் அவரை நோக்கி, "பரவையே, நாம் சுந்தரன் அனுப்பத் திரும்பவும் உன்னிடத்தில் வந்தோம். நீ இன்னும் முன்போல மறுமல் ஊடலினால் வருந்துகின்ற அவன் உன்னிடத்தில் வருதற்கு உடன் படல்வேண்டும்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதற்குப் பரவையார் "தேவரீர் பிராமணவடிவங்கொண்டு முன் இங்கே எழுந்தருளிவந்தீர். பின் உண்மையாகிய இந்தத்திருக்கோலத்தோடு இப்பொழுது எழுந்தருளிவந்தீர். அடியேன் பூர்வசன்மத்திலே செய்த தவப்பயன் இதுவோ" என்று விண்ணப்பஞ்செய்து வியந்து, பின்பு "பிரம விஷ்ணுக்களாலும் அறியப்படாத தேவரீர் அன்பர் பொருட்டு இரவிலே மாறுமல் அங்கும் இங்கும் திரிந்து எளியவராவீராகில், சிறியேன் இதற்கு உடன்படாமல் யாது செய்வேன்,, என்றார். கடவுள் அதைக் கேட்டு, "நன்றுசொன்னாய்,, என்று திருவாய்மலர்ந்தருளி, புறப்பட்டு, சுந்தரமூர்த்திநாயனாரிடத்திற்போனார். சுந்தரமூர்த்திநாயனார் அவரைக் கண்டு எதிர்கொண்டு, நமஸ்கரித்து, "சுவாமி யாது சொல்வாரோ" என்று அறியாதவராகி, சுவாமீ, அடியேனுடைய உயிரைக் காவாமல் இடர்செய்கின்ற பரவையிடத்தினின்றும் என்ன உத்தரம் கொண்டுவந்தீர்,, என்று கேட்க; கடவுள் "உன்மேலே பரவை கொண்ட கோபத்தைத் தணிவித்தோம். நீ இனி அவளிடத்திற் போகலாம்,, என்று திருவாய்மலர்ந்தருளினார். அது கேட்ட நாயனார் மனசிலே களிப்படைந்து, "சுவாமீ, போகமோக்ஷம் இரண்டையும் கொடுத்தருளுகின்றவர் தேவரீரே என்பதை யாவர்க்கும் புலப்படுத்தியருளினீர். இனி அடியேனுக்கு இடர் ஏது,, என்று சொல்லித் திருவடியிலே விழுந்தார். உடனே சிவபெருமான் மறைந்தருளினார். விழுந்த நாயனார் எழுந்து, பரவையார்வீட்டுக்குப் போகத்தொடங்கினார். அப்பொழுது அவருடைய பரிசனங்களெல்லாம் விழித்துஎழுந்தன. நாயனார், அப்பரிசனங்கள் பக்கத்திலே சூழ, தேவர்கள் புஷ்பமாரிபொழிந்து துதிக்க, சென்று பரவையார்வீட்டை அடைந்தார். அதற்கு முன் மிகுந்த விருப்பு,

த்தோடும் தம்முடைய வீடுமுழுதையும் அலங்கரிப்பித்துத் தீபதூபங்களும் நிறைகுடமும் நிரைத்துத் தோழியர்களோடு வாயிலிலே வரவுபார்த்து நின்ற பரவையார், அங்கே எழுந்தருளிவந்த நாயனாரைக் கண்டு, மகாசந்தோஷங்கொண்டு அவரை நமஸ்கரிக்க; அவர் கையினாலே பரவையாரைப் பிடித்துக்கொண்டு, உள்ளே போய்ச் சேர்ந்தார். அவ்விருவரும் பரமசிவனுடைய திருவருளின் மகிமையைப் புகழ்ந்துகொண்டு முன்போல ஐக்கியமாகக் கூடியிருந்தார்கள்.

சுந்தரமூர்த்திநாயனார் தாம் தினந்தோறும் சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு திருவாரூரில் வசிக்குங்காலத்திலே; தாம் பரமசிவனைத் தூதனுப்பிய சமாசாரத்தைத் திருப்பெருமங்கலத்திலிருந்த ஏயர்கோன்கலிக் காமநாயனார் கேள்வியுற்று அது தகுதி அன்று என்று தம்மேலே கோபங்கொண்டிருத்தலை அறிந்து, அதைக் குறித்துப் பரமசிவனுக்கு விண்ணப்பஞ்செய்தார். பரமசிவன் அக்கலிக்காமநாயனாரைச் சூலைநோயினால் வருத்தி, அவரிடத்தில் எழுந்தருளி, "சுந்தரனாலன்றி இந்நோய் தீராது" என்று அருளிச்செய்து, அவர் சுந்தரமூர்த்திநாயனாரைக்கொண்டு அந்நோயைத் தீர்ப்பித்தற்கு உடன்படாமையைக் கண்டு, சுந்தரமூர்த்திநாயனாரிடத்திற் சென்று, நம்முடைய ஏவலாலே கலிக்காமனை வருத்துகின்ற சூலையை நீபோய்த் தீர்ப்பாய்" என்றார். சுந்தரமூர்த்திநாயனார் அதைக் கேட்டு மனமகிழ்ந்து, அவரிடத்திற்குப்போம்படி பிரஸ்தானமாகி, சூலைதீர்க்கும்படி தாம் வருஞ் சமாசாரத்தை அவருக்குத் தெரிவித்தற்கு ஆளனுப்பினார். அவ்வாளினாலே அவர் வரவை அறிந்த கலிக்காமநாயனார் உடைவாளினாலே தன்வயிற்றைக் கிழித்துக்கொண்டு இறந்துபோனார். சுந்தரமூர்த்திநாயனார் அங்கே சென்றபோது, கலிக்காமநாயனார் இறந்து கிடத்தலைக்கண்டு, நானும் இவர்போலே இறந்துபோவேன்" என்றுசொல்லி உடைவாளை எடுத்தார். உடனே பரமசிவனுடைய திருவருளினால் கலிக்காமநாயனார் உயிர்த்து எழுந்து, அவர் கையில் வாளைப் பிடித்துக்கொள்ள; அவர் விழுந்து நமஸ்கரித்தார். கலிக்காமநாயனாரும் சுந்தரமூர்த்திநாயனாரை நமஸ்கரித்தார். பின்பு இருவரும் எழுந்து ஒருவரையொருவர் தழுவி அதிக நண்புள்ளவரானார்கள். பின் சுந்தரமூர்த்திநாயனார் கலிக்காமநாயனாரோடு திருப்புன்கூருக்குப்போய், சுவாமிதரிசனஞ்செய்து "அந்தணாளனுன் னடைக்கலம்" என்னுந் திருப்பதிகம் பாடி, சிலநாட்சென்றபின்பு திருவாரூரை அடைந்தார். அவ்விடத்திலே சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு கலிக்காமநாயனார் தம்முடைய ஊருக்குத் திரும்பிவிட; சுந்தரமூர்த்திநாயனார் சிலநாள் அங்கிருந்து, பின் திருநாகைக்காரோணத்துக்குப் போய், சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடி, பொன்னும் நவரத்தினங்களும் ஆபரணங்களும் வஸ்திரங்களும் குதிரைகளும் உடைவாளும் பிறவும்பெற்று, பிற ஸ்தலங்களையும் வணங்கிக்கொண்டு, மீண்டு அத்திருவாரூரிற் சேர்ந்து எழுந்தருளியிருந்தார்.

அப்பொழுது சேரமண்டலத்திலுள்ள கொடுங்கோளூரிலிருந்த சேரமான்பெருமாணயனார் சுந்தரமூர்த்திநாயனாருடைய பத்திமகிமையைப் பரமசிவனால் அறிந்து, அவரைத்தரிசிக்க விரும்பி, திருவாரூரை அடைந்தார். சுந்தரமூர்த்திநாயனார் மகிழ்ச்சியோடு அவரை எதிர்கொள்ள; அவர் சுந்தரமூர்த்திநாயனாரை நமஸ்கரித்தார். உடனே சுந்தரமூர்த்திநாயனாரும் அவரை நமஸ்கரித்து, அவரை எடுத்துத்தழுவ; அவரும் தழுவினார். இப்படி இவர்கள் நண்புகலந்தமையால், சுந்தரமூர்த்திநாயனாருக்குச் சேரமான்றோழர் என்னும் பெயர் உண்டாயிற்று. சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான்பெருமாணயனாரைக் கையிலே பிடித்துக்கொண்டு, திருக்கோயிலிலே பிரவேசித்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, பரவையார்வீட்டுக்கு, அழைத்துக்கொண்டு போய், அவருக்கும் அவரோடு வந்த சமஸ்த சனங்களுக்கும் விருந்துசெய்து, சிலநாள் அவரோடு அங்கிருந்து, பின் பாண்டிநாட்டிலிருக்கின்ற மதுரை முதலாகிய சிவஸ்தலங்களுக்கு யாத்திரைசெய்ய விரும்பி, வன்மீகநாதரை வணங்கிக்கொண்டு திருவாரூரை நீங்கி, கீழ்வேளூரை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, திருநாகைக் காரோணத்துக்குச் சென்று திருப்பதிகம் பாடி, சிலநாள் அங்கிருந்து, வேதாரணியத்திற்குப்போய்த் திருக்கோயிலிலே சென்று, திருநாவுக்கரசுநாயனாராலும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாராலும் முறையே திறத்தற்கும் அடைத்தற்கும் திருப்பதிகம் பாடப்பெற்ற திருவாயிலே அடைந்து, ஆனந்தபாஷ்பம் சொரிந்து, அந்நாயன்மார்களை நினைந்து வணங்கி, வேதங்களால் அருச்சிக்கப்பட்ட கடவுளை நமஸ்கரித்து, "யாழைப்பழித்து" என்னுந் திருப்பதிகம் பாடி புறப்பட்டு, சிலநாள் அங்கிருந்து, அகத்தியான்பள்ளிக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ்செய்து, குழகர்கோடிக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து "கடிதாய்க் கடற்காற்று" என்னுந் திருப்பதிகம் பாடி, சோழநாட்டைக் கடந்து, பாண்டிநாட்டை அடைந்தார்.

அந்நாட்டிலே திருப்புத்தூரை வணங்கி, மதுரைக்குச் சமீபித்து, அம்மதுரையினின்று வந்து தங்களை எதிர்கொண்ட பாண்டியராசாவோடும் பாண்டியராசாவுடைய புத்திரியை விவாகஞ்செய்துகொண்டு அங்கிருந்த சோழராசாவோடும் திருக்கோயிலிலே போய், சோமசுந்தரக்கடவுளை வணங்கித் திருப்பதிகம் பாடிப்புறப்பட்டார். பாண்டியர் அவர்களை ஓரிரத்தினமாளிகைக்கு அழைத்துக்கொண்டு போய் அங்கே இருத்தினார். சுந்தரமூர்த்திநாயனாரும் சேரமான்பெருமாணயனாரும் சிலநாள் அங்கே இருந்து கொண்டு, தினந்தோறும் சுவாமிதரிசனஞ்செய்து வந்தார்கள். பின் சுந்தரமூர்த்திநாயனார் அவ்வரசர் மூவரோடும் மதுரையை நீங்கி, திருப்பூவணத்துக்குச் சமீபித்து, பக்கத்திலே வருந் திருத்தொண்டர்கள் அந்தத்தலத்தைக் காட்ட; அதன்மேல் "திருவுடையார்" என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டு ஸ்தலத்திலேபோய், திருக்கோயிலிலே

பிரவேசித்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, அந்தத்தலத்தில் இருந்தார். சிலநாளாயினபின், அவ்வரசர்மூவரோடும் திருப்பூவணத்தைநீங்கி, மதுரையிற்சென்று, தினந்தோறும் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு சிலநாள் அங்கிருந்தார். அந்நாட்களிலே திருவாப்பனூர் திருவேடகம் முதலாகிய சிவஸ்தலங்களுக்கும் போய்த் தரிசனஞ்செய்துகொண்டு, திரும்பி மதுரையில் வந்திருந்தார். அதற்குப் பின், அரசர் மூவரோடும் திருப்பரங்குன்றுக்குப்போய், சுவாமி தரிசனஞ்செய்து, பரமசிவனுடைய திருவடிகளுக்குத் தொண்டுசெய்யும் அருமையை நினைந்தஞ்சுதும் என்று "கோத்திட்டையுங் கோவலும்" என்னுந் திருப்பதிகம்பாடினார். அவ்வருமையை அரசர் மூவருங்கேட்டு அஞ்சி, சுந்தரமூர்த்திநாயனாரை வணங்கினார்கள். அதன்பின் சுந்தரமூர்த்திநாயனார், பாண்டியராசாவும் சோழராசாவும் அனுமதிபெற்றுக்கொண்டு மதுரைக்குத் திரும்பிவிட, சேரமான்பெருமாணாயனாரோடும் அந்தஸ்தலத்தை நீங்கி வழிக்கொண்டு, திருக்குற்றாலம், திருக்குறும்பலா, திருநெல்வேலி, முதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, இராமேச்சரத்துக்குப் போய், சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடிக்கொண்டு சிலநாள் அங்கிருந்தார். ஈழமண்டலத்தில் இருக்கின்ற மாதோட்டத்துத் திருக்கேதீச்சரத்தை அவ்விராமேச்சரத்தி லிருந்துகொண்டே வணங்கி அதன்மேலே பதிகம் பாடினார். இராமேச்சரத்தை நீங்கித் திருச்சுழியலிலே போய்ச் சுவாமி தரிசனஞ்செய்து, பதிகம் பாடிக்கொண்டு, அங்கே இருக்க; சுவாமி அவருக்குச் சொப்பனத்திலே காளைவடிவங்கொண்டு கையிலே பொற்செண்டும் முடியின்மேல் சுழியமும் உடையவராகித் தோன்றி, "நம்முடைய வாசஸ்தானம் கானப்பேர்" என்று சொல்லி மறைந்தருளினார். சுந்தரமூர்த்திநாயனார் விழித்தெழுந்து, திருவருளைவியந்து, தாங்கண்ட சொப்பனத்தைச் சேரமான்பெருமாணாயனாருக்குத் தெரிவித்து, திருச்சுழியலை நீங்கி, "தொண்டரடித்தொழலும்" என்று எடுத்து, "கண்டு தொழப்பெறுவ தென்றுகொலோவடியேன் கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே" என்று திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு திருக்கானப்பேருக்குப்போய், சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடி, அங்கே சிலநாள் இருந்து, அதனை நீங்கி, திருப்புனவாயிலை அடைந்து, பதிகம் பாடி, பாண்டி நாட்டைக் கடந்து, சோழமண்டலத்தை அடைந்து, பாதாளீச்சரத்தை வணங்கி, திருவாரூரிலே சேர்ந்து, வன்மீகநாதனை வணங்கிப் பதிகம்பாடி, அரசரோடும் பரவையார்வீட்டிற்குப் போய் எழுந்தருளியிருந்தார்.

பலநாட்சென்றபின், சேரமான்பெருமாணாயனார் சுந்தரமூர்த்திநாயனாரை வணங்கி, தம்முடைய ஊருக்கு எழுந்தருளிவரும்படி பிரார்த்திக்க; சுந்தரமூர்த்திநாயனார் அதற்கு இசைந்து, சேரமான்பெருமாணாயனாரோடும் எழுந்து போய், வன்மீகநாதனை வணங்கிக்கொண்டு, திருவா

ரூரை நீங்கி, மேற்றிசையை நோக்கிக் காவேரிநதியின் தென்கரைவழியே சென்று, திருக்கண்டியூரை அடைந்து சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு புறப்பட்டார். அப்பொழுது வடகரையிலிருக்கின்ற திருவையாறு எதிரே தோன்ற; சேரமான்பெருமாணாயனார் கண்டு வணங்கி, சுந்தரமூர்த்திநாயனாரைப் பார்த்து, "சுவாமீ, அடியேன்மனம் திருவையாற்றை வணங்க விரும்புகின்றது. நாங்கள் இந்நதியைக் கடந்து போய் வணங்குவோம்" என்றார். அதைக் கேட்ட சுந்தரமூர்த்திநாயனார், அக்காவேரிநதி இருகரையையும் அழித்து ஓடங்கள் செல்லாதபடி பெருகுதலைக்கண்டு, "பரவும் பரிசொன் றறியேனான்" என்று திருப்பதிகந் தொடங்கி, திருப்பாட்டினிறுதிதோறும் "ஐயாறுடைய வடிகளோ" என்றுசொல்லி அழைத்துப் பாடினார். அப்பொழுது கடவுள், கன்று அழைத்தலைக்கேட்டுக் கதறிக் கனைக்கின்ற பசுப்போல, சராசரங்களெல்லாம் கேட்கும்படி "ஓலம்" என்று சொல்லியருளினார். உடனே காவேரிநதிபிரிந்து வழிகாட்டியது. மேற்றிசையினீர் பளிங்குமலைபோல நிற்க, கீழ்த்திசையினீர் வடிந்த நடுவழி மணற்பரப்பாய் இருந்தது. அதனைக் கண்ட அடியார்களெல்லாரும், உரோமாஞ்சங்கொள்ள, ஆனந்தபாஷ்பஞ்சொரிய, அஞ்சலிசெய்தார்கள். சேரமான்பெருமாணாயனார் சுந்தரமூர்த்திநாயனாருடைய திருவடிகளை நமஸ்கரிக்க, சுந்தரமூர்த்திநாயனாரும் அவரை வணங்கி, "கடவுள் உமக்கருளியதன்றோ" என்று சொல்லிக் கடவுளைத் துதித்துக்கொண்டு, அவரோடும் பரிசனங்களோடும் நதியின் மத்தியிலிருக்கின்ற மணல்வழியே போய், திருவையாற்றை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, திரும்பிக் காவேரிநதியின் முன்சென்றபடியே நடுவழியே வந்து தென்கரையிலேறினார். உடனே பிரிந்து மலைபோல நின்ற நீர் தொடர்ந்து பாய்ந்தது. அதைக்கண்டு சுந்தரமூர்த்திநாயனாரும் சேரமான்பெருமாணாயனாரும் அதிசயித்து, திருவருளைத் துதித்துக்கொண்டு, மேற்றிசையை நோக்கி வழிக்கொண்டு, கொங்கநாட்டை அடைந்து, அதைக் கடந்து, மலைநாட்டிற் சென்று, அங்குள்ளார்களெல்லாரும் வந்து எதிர்கொள்ளக் கொடுங்கோளூரிலே போனார்கள். போனபின்பு சேரமான்பெருமாணாயனார் சுந்தரமூர்த்திநாயனாரைத் திருவஞ்சைக்களத்துக்கு அழைத்துக்கொண்டு போனார். அங்கே சுந்தரமூர்த்திநாயனார் சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடி, புறப்பட்டார் சேரமான்பெருமாணாயனார் யானையின்மேலே முன்னே அவரை ஏற்றி, பின் தாமும் ஏறி, வெண்சாமரம் வீசிக்கொண்டு சென்று, தம்முடைய மாளிகையின் வாயிலிலே புகுந்து, யானையினின்றும் இறங்கி, அந்நாயனாரை இறக்கி, மாளிகையினுள்ளே கொண்டுபோய், சிங்காசனத்திலிருத்தி, அவருக்கு அருச்சனைபண்ணி, விருந்து செய்தார்.

சுந்தரமூர்த்திநாயனார் சேரமான்பெருமாணாயனாரோடும் அந்தக் கொடுங்கோளூரிலே சிலநாள் இருந்தார். ஒருநாள் திருவாரூரில் எழுந்

தருளியிருக்கின்ற வன்மீகநாதருடைய திருவடிகளை நினைந்து, "பொன்னு மெய்ப்பொருளும்" என்று திருப்பதிகம் எடுத்துத் திருப்பாட்டிறுதிதோறும் "ஆரூரானை மறக்கலுமாமே" என்று பாடி திருவாரூருக்குச் செல்லும்பொருட்டு அடியார்களோடு எழுந்து வழிக்கொண்டு சென்றார். செல்லும்பொழுது, சேரமான்பெருமாணாயனார் பிரிவாற்றாதவராகி, எழுந்து அவரைப் பின்றொடர்ந்து, போகாதபடி தடுத்து, அதற்கு அவர் உடன்படாமை கண்டு, மந்திரிகளை அழைத்து, தம்முடைய நகரத்திலிருக்கின்ற களஞ்சியத்திலுள்ள பொன் இரத்தினம் ஆபரணம் வஸ்திரம் சுகந்தவர்க்கம் முதலிய திரவியங்களெல்லாம் பல ஆட்களின்மேலே சுமத்தி அனுப்பும்படி ஆஞ்ஞாபிக்க; அவர்கள் அப்படியே செய்தார்கள். சேரமான்பெருமாணாயனார் அந்தச் சுமையாட்களைச் சுந்தரமூர்த்திநாயனாருடைய பரிசனத்துக்கு முன் செல்லும்படி அனுப்பி, அவரை விழுந்து நமஸ்கரிக்க; அவர் அவரைத்தழுவி விடைகொடுத்து, மலை நாட்டை நீங்கி, சுரங்களையும் கான்யாறுகளையும் வனங்களையும் கடந்து, திருமுருகன் பூண்டிவழியே செல்லுதற்குத் திருவுளம்கொண்டு போனார். அதற்கு அயலிலே போம்பொழுது, பரமசிவன் தம்முடைய பூதகணங்களை நோக்கி, "நீங்கள் வேடவடிவங்கொண்டு சென்று சுந்தரனுடைய பண்டாரங்களைக் கவருங்கள்" என்று ஆஞ்ஞாபிக்க; அவைகள் சுந்தரமூர்த்திநாயனாருடைய சுமையாட்கள் வரும்வழியிலே வேடுவர்களாகிப்போய், வில்லை வளைத்து நாண்பூட்டி அம்புகளைத் தொடுத்து, "நாங்கள் உங்களைக் கொன்றுபோடுவோம்; இத்திரவியங்களெல்லாவற்றையும் போட்டுவிட்டுப் போங்கள்" என்று சொல்லி, கோபத்தினாலே குத்தி, அந்தத் திரவியங்களெல்லாவற்றையுங் கவர்ந்துகொண்டன. அவர்கள் துன்பத்துடனே ஓடிப்போய், சுந்தரமூர்த்திநாயனார் பக்கத்திலே சேர்ந்தார்கள். அவ்வேடுவர்களோ சிவாஞ்ஞையினாலே சுந்தரமூர்த்திநாயனார் பக்கத்திலே செல்லாமல் நீங்கிவிட; சுந்தரமூர்த்திநாயனார் திருமுருகன்பூண்டியிலே சென்று திருக்கோயிலிலே பிரவேசித்து, சுவாமியை வணங்கி, "கொடுகுவெஞ்சிலை வடுகவேடுவர்" என்று திருப்பதிகமெடுத்துத் திருப்பாட்டிறுதிதோறும் "எத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே" என்று பாடியருளினார், உடனே கடவுளுடைய திருவருளினால், அவ்வேடுவர்கள் தாங்கள் பறித்த திரவியங்களெல்லாவற்றையும் அந்தத் திருக்கோயில்வாயிலிலே கொண்டுபோய்க் குவித்தார்கள். சுந்தரமூர்த்திநாயனார் அது கண்டு, சுவாமியைவணங்கி; அவைகளை எடுத்துக்கொண்டு முன்னே செல்லும்படி சுமையாட்களை ஏவி, அவ்விடத்தை நீங்கி, கொங்கதேசத்தைக்கடந்துபோய், திருவாரூரை அடைந்து, அங்கே சுவாமிதரிசனஞ்செய்துகொண்டிருந்தார்.

சிலநாட்சென்றபின், சுந்தரமூர்த்திநாயனார் சேரமான்பெருமாணாயனாரை நினைந்து அவரிடத்திற்குப் போம்படி கருதி, சோழமண்டலத்

தைக் கடந்து, கொங்கதேசத்தை அடைந்து, திருப்புக்கொளியூரிற்சென்று, அங்கே ஒருவீதியிலே இரண்டு வீடுகளில் ஒன்றிலே மங்கலவொலியும் மற்றதிலே அழுகையொலியும் எழுதலைக்கேட்டு, அங்கே இருந்த பிராமணர்களை நோக்கி, "இவ்விரண்டொலியும் ஒருங்கு நிகழ்வது என்னை" என்று வினவினர். அதுகேட்ட பிராமணர்கள் வணங்கி, ஐந்து வயசுடைய இரண்டுபுதல்வர்கள் குளத்திலே குளித்த பொழுது ஒரு புதல்வனை முதலை விழுங்கிற்று; மற்றப்புதல்வன் பிழைத்துக்கொண்டான். இந்தவீட்டில் ஒலி பிழைத்த புதல்வனுக்கு உபநயனஞ்செய்யும் ஒலி; இந்த வீட்டில் ஒலி இறந்த புதல்வனைக்குறித்து அழும் ஒலி" என்றுசொன்னார்கள். அதைக் கேட்டுத் திருவுளமிரங்கி நின்ற சுந்தரமூர்த்திநாயனாரை, புதல்வனை இழந்த பிராமணனும் மனைவியுங் கண்டு, ஓடி வந்து, முகமலர்ச்சியோடு அவருடைய திருவடிகளை நமஸ்கரித்தார்கள். சுந்தரமூர்த்திநாயனார் அவர்களுடைய முகத்தை நோக்கி, "புதல்வனை இழந்தவர்கள் நீங்களா" என்று சொல்லியருள; அவர்கள் பின்னும் வணங்கி, "சுவாமீ, அதுமுன்னே நிகழ்ந்துபோயிற்று. அது நிற்க, அடியேங்கள் தேவரீரை வணங்குதற்கு நெடுங்காலமாக அவாவியிருந்தோம். அவ்வன்பு பழுதாகாமல் தேவரீர் இங்கே எழுந்தருளப் பெற்றோம்" என்று விண்ணப்பஞ்செய்தார்கள். அதைக் கேட்ட நாயனார் "இந்தப்பிராமணனும் மனைவியும் தங்கள் புதல்வனை இழந்த துன்பத்தை மறந்து நாம் வந்ததற்காக மனம்மகிழ்கின்றார்கள். ஆகையால், நாம், இவர்கள் புதல்வனை அம்முதலைவாயினின்றும் அழைத்துக் கொடுத்து, அவிநாசியில் வீற்றிருக்கின்ற நமது கடவுளை வணங்குவோம்" என்று அருளிச்செய்து, அந்தப் புதல்வனை முதலைவிழுங்கிய வாவி எங்கே" என்று வினவி, அதன் கரையிலே எழுந்தருளி, அம்முதலை தான் விழுங்கிய புதல்வனைக் கொண்டுவரும் பொருட்டுத் திருப்பதிகம் பாடத்தொடங்கினர். "உரைப்பாருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாயரைக்கா டரவாவாதியு மந்தமு மாயினுய்-புகைக்காடு சோலைப் புக்கொளியூரவி நாசியே-கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே" என்னும் நான்காந்திருப்பாட்டு முடிதற்குமுன், இயமன் அந்தப் புதல்வனுடைய உயிரைக் கொண்டுவந்து, அவ்வாவியிலுள்ள முதலைவயிற்றினுள்ளே முந்தினதேகத்தைச் சென்ற ஆண்டுகளின் வளர்ச்சியையும் உடையதாகத் தோற்றுவித்து, அதனுள்ளே புகுத்திவிட்டான். உடனே முதலை அந்தப்புதல்வனைக் கரையிலே கொண்டுபோய் உமிழ்ந்தது. அப்பொழுது மாதாவானவள் ஓடிப் போய், அப்புதல்வனை எடுத்துக் கொண்டு வந்து, நாயகனோடு சுந்தரமூர்த்திநாயனாருடைய திருவடியிலே விழுந்து நமஸ்கரித்தாள். இவ்வற்புதத்தைக் கண்ட தேவர்கள் ஆகாயத்தினின்று நாயனார்மேல் புஷ்பமாரி பொழிந்தார்கள். பிராமணர்களெல்லாரும் உத்தரீயங்களை ஆகாயத்திலே வீசி ஆரவாரித்தார்கள். சுந்தரமூர்த்திநாயனார் அந்தப் புதல்வனையும் அழைத்துக்கொண்டு, அவிநாசிக்

குப் போய், சுவாமிதரிசனஞ்செய்து, திருப்பதிகம் பாடிக்கொண்டு திரு ம்பி, அப்புதல்வன் வீட்டிற்சென்று, அவனுக்கு உபநயனஞ்செய்வித்து, கொங்கதேசத்தைக் கடந்து, மலைநாட்டை அடைந்தார்.

அதனையறிந்த மலைநாட்டின்கணுள்ள சிவனடியார்கள் விரைந் தோடிப் போய்ச் சேரமான்பெருமாணாயனார் திருமுன் சென்று, "மகா ராஜாவே, சுந்தரமூர்த்திநாயனார் திருப்புக்கொளியூரிலே முதலைவாய்ப் பிள்ளையை மீட்டு, எழுந்தருளிவருகின்றார்" என்று விஞ்ஞாபித்தார்கள். அது கேட்ட சேரமான்பெருமாணாயனார் பேரானந்தப்பெருங்கடலின் மூழ்கி, அவர்களுக்குப் பொற்கிழிகளையும் இரத்தினாபரணங்களையும் வஸ் திரங்களையுங் கொடுத்தார். கொடுத்தபின், "திருவாரூரிற் சைவசிகாம ணியார் எழுந்தருளிவருகின்றார்; நம்மை யாண்டருளுஞ் சுந்தரமூர்த்திநா யனார் எழுந்தருளிவருகின்றார்; நமக்கு உயிர்த்துணைவராகியதலைவர் எழு ந்தருளிவருகின்றார்; உலகமெல்லாம் உய்யும்பொருட்டுத் திருவவதாரஞ் செய்தருளிய பரமாசாரியர் எழுந்தருளிவருகின்றார்" என்று முரச்சறை வித்து, தமது திருநகரமெங்கும் மிக அலங்கரிப்பித்து, யானைமேற்கொ ண்டு, மந்திரிமார்களும் சேனைகளும் சூழப் புறப்பட்டுச் சென்று, தூரத் தே சுந்தரமூர்த்திநாயனாரைக் கண்டவுடனே யானையினின்றும் இறங்கி, விரைந்தோடிப் போய், அவருடைய திருவடிகளை நமஸ்கரித்தார். சுந்த ரமூர்த்திநாயனாரும் சேரமான்பெருமாணாயனாரை வணங்கித் தழுவினார். அது கண்ட இருபக்கத்தாரும் ஆனந்த சாகரத்தின் மூழ்கி ஆரவாரித்தா ர்கள். சேரமான்பெருமாணாயனார் சுந்தரமூர்த்திநாயனாரை யானைமேலே ற்றித் தாம் பின்னே அவருக்கு வெள்ளைக் குடை பிடித்துக்கொண்டு, நானாவித வாத்தியங்கள் ஒலிக்கச் சென்று, தமது திருநகரத்திற் புகுந்து, தமது திருமாளிகைவாயிலை அடைந்து, அந்நாயனாரை யானையினின்றும் இறக்கி, உள்ளே அழைத்துக்கொண்டுபோய்ச் சிங்காசனத்தில் இருத் திப் பூசித்து வணங்கினார். சுந்தரமூர்த்திநாயனார் அங்கே எழுந்தருளி யிருந்தார். இருந்த நாட்களிலே அம்மலைநாட்டி லிருக்கின்ற சிவஸ்தல ங்கள் பலவற்றிற்கும் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, மகோ தைநகரத்தை அடைந்தார்.

இப்படிப் பலநாட்சென்றபின், ஒருநாள், சேரமான்பெருமாணாய னார் ஸ்நானம் பண்ணும்பொழுது, சுந்தரமூர்த்திநாயனார் திருவஞ்சைக் களத்துக்கு எழுந்தருளி, அங்கிருக்கின்ற சிவாலயத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து, உள்ளே புகுந்து, சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து, எழு ந்து நின்று, அக்கினியிற்பட்ட மெழுகுபோல மனங்கசிந்துருக, இரண்டு கண்ணினின்றும் ஆனந்தவருவி சொரிய, சரீரத்திலே உரோமாஞ்சங் கொள்ள, இரண்டு கைகளும் சிரசின்மேல் ஏறிக் குவிய, அடியேனை இப் பிரபஞ்ச வாழ்க்கையினின்றும் நீக்கித் தேவரீருடைய திருவடியிலே சே

ர்த்தருளல்வேண்டுமென்னுங் குறிப்போடு "தலைக்குத் தலைமாலை" என்னுந் திருப்பதிகம் பாடினார். அப்பொழுது திருக்கைலாசகிரியிலே விச்சுவாதிகரும் விச்சுவசேவியருமாகிய சிவபெருமான் விட்டுணு பிரமன் முதலிய தேவர்களை நோக்கி, "நீங்கள் போய் நம்முடைய தோழனாகிய சுந்தரனை வெள்ளையானையின்மேலேற்றிக்கொண்டு வாருங்கள்" என்று ஆஞ்ஞாபித்தருளினார். அதைக்கேட்ட தேவர்கள் சுவாமியை நமஸ்கரித்து அநுமதி பெற்று, வெள்ளையானையையுங் கொண்டு, திருவஞ்சைக்களத்தை அடைந்து, திருக்கோயிலை வலஞ்செய்து, திருவாயிலிலே போய், உள்ளே நின்று எழுந்தருளிவந்த சுந்தரமூர்த்திநாயனாரை எதிர்கொண்டு, சிவபெருமானுடைய ஆஞ்ஞையைத் தெரிவித்தார்கள். அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனார் சுவாமியைநினைந்து நமஸ்கரித்து, எழுந்து, தேவர்களுக்கு எதிரே போனார். தேவர்கள் அவரைப் பிரதக்ஷிணஞ் செய்து வெள்ளை யானையின்மேலேற்ற; அவர் பஞ்சவாத்தியங்கள் ஆரவாரிக்கவும், தேவர்களெல்லாரும் ஸ்தோத்திரஞ்செய்து புஷ்பமாரிபொழியவும், தம்முடைய தோழராகிய சேரமான்பெருமாணாயனாரைத் திருவுளத்திலே நினைத்துக்கொண்டு சென்றார்.

சேரமான்பெருமாணாயனார் சுந்தரமூர்த்திநாயனாருடைய செயலை அறிந்து, அந்தக்ஷணமே அருகில் நின்ற ஓர் குதிரையின் மேலேறிக்கொண்டு, திருவஞ்சைக்களத்துக்குப்போய், வெள்ளையானையின்மேலேறிக் கொண்டு ஆகாயத்திற்செல்லும் சுந்தரமூர்த்திநாயனாரைக் கண்டு, தாமேறிய குதிரையின் செவியிலே ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதியருளினார். உடனே அந்தக் குதிரையானது ஆகாயத்திலே பாய்ந்து, சுந்தரமூர்த்திநாயனாருடைய வெள்ளையானையை அடைந்து, அதனை வலஞ்செய்து, அதற்கு முன்னாகச்சென்றது. சேரமான்பெருமாணாயனாருடைய படைவீரர்கள் குதிரையிற்செல்லும் அந்நாயனாரைத் தங்கள் கண்ணுக்குப் புலப்படுமெல்லைவரைக்கும் ஆகாயத்திலே கண்டு, பின் காணாமையால் மிகுந்த திடபத்தியினாலே உருவிய உடைவாட்களினால் தங்கள் தங்கள் தேகத்தைச் சேதித்து, வீரயாக்கையைப் பெற்றுப் போய், சேரமான்பெருமாணாயனாருக்கு முற்பட்டு, அவரைச் சேவித்துக்கொண்டு சென்றார்கள். சேரமான்பெருமாணாயனார் முன் செல்லப்பின் சென்ற சுந்தரமூர்த்திநாயனார் "தானெனை முன்படைத்தான்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு, திருக்கைலாசமலையின் தெற்குவாயிலுக்கு முன் போனார். போனவுடனே இருவரும் யானையினின்றும் குதிரையினின்றும் இறங்கி, பலவாயில்களையும் கடந்து, திருவணுக்கன் றிருவாயிலை அடைந்தார்கள். அங்கே சேரமான்பெருமாணாயனார் தடைப்பட்டு நிற்க; சுந்தரமூர்த்திநாயனார் உள்ளே போய், சுவாமி சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து. எழுந்து ஸ்தோத்திரஞ் செய்துகொண்டு நின்றார். சுவாமி அவரை நோக்கி, "சுந்தரா, வந்தாயோ" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதைக்

கேட்ட சுந்தரமூர்த்திநாயனூர் "சுவாமீ, அடியேன் செய்தபிழையைப் பொறுத்து அடியேனைப் பந்தத்தினின்றும் நீக்கி அடியேனுக்குத் திருவடி தந்தருளிய பெருங்கருணை அடியேன் மறத்தரோ" என்று சொல்லி, பலமுறை நமஸ்காரஞ்செய்து, சிவானந்தவெள்ளத்தில் அமிழ்ந்தி நின்றார். பின்பு "சுவாமீ, தேவரீருடைய திருவடிகளை அடையும்பொருட்டுச் சேரமான்பெருமாள் திருவணுக்கன்றிருவாயிலின் புறத்திலே வந்து நிற்கின்றார்" என்று விண்ணப்பஞ்செய்ய; சிவபிரான் அவரை உள்ளே அழைப்பித்து, "நீயும் ஆலாலசுந்தரனும் நம்முடைய கணங்களெல்லாவற்றிற்குந் தலைவராயிருங்கள்" என்று அருளிச்செய்தார். அதைக்கேட்டுத் திருக்கைலாசபதியை நமஸ்கரித்து எழுந்து, அவருடைய திருவருளைத் தலைமேற்கொண்டு, சுந்தரமூர்த்திநாயனூர் ஆலாலசுந்தரராகி முன்னே தாஞ்செய்த திருத்தொண்டைச் செய்பவரும், சேரமான்பெருமாணாயனூர் கணநாதராகி அவர் செய்யுந்தொழிலைச் செய்பவருமாயினூர்கள்.

முன்னே பூமியில் அவதரித்த பரவையாரும் சங்கிலியாரும் முறையே கமலினியாரும் அநிந்திதையாருமாகி, பார்வதிதேவியாருக்குத் தாங்கள் முன்செய்த திருத்தொண்டைச் செய்துவந்தார்கள். சுந்தரமூர்த்திநாயனூர் தாம் வழியிலே அருளிச்செய்த திருப்பதிகத்தைத் தக்ஷிணபூமியிலே ஏற்றும்பொருட்டுச் சமுத்திர ராஜனுகிய வருணனிடத்திலே கொடுத்தருள; அவன் அதைத் திருவஞ்சைக்களத்திலே உய்த்துத் தெரிவித்தான்.

திருச்சிற்றம்பலம்.

---

இப்புராணத்துக்குச் செய்யுள் தடுத்தாட்கொண்ட புராணத்திலும், ஏயர்கோன்கலிக்காமநாயனூர் புராணத்திலும், வெள்ளையானைச் சருக்கத்திலும் இருக்கின்றமையால் அங்கங்கே வசனங்களைப்பிரித்தால் சரித்திரம் தொடராயிராமையால் சரித்திரமுழுதும் தடுத்தாட்கொண்ட புராணத்திறுதியில் அச்சிடப்பட்டது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

முதலாவது

# தில்லைவாழந்தணர் சருக்கம்.

## தில்லைவாழந்தணர் புராணம்.

நடேசர்தோத்திரம்—வேறு.

ஆதியாய்நடுவுமாகியளவிலாவளவுமாகிச்
சோதியாயுணர்வுமாகித்தோன்றியபொருளுமாகிப்
பேதியாவேகமாகிப்பெண்ணுமாயாணுமாகிப்
போதியாநிற்குந்தில்லைப்பொதுநடம்போற்றிபோற்றி. (௧)

கற்பனைகடந்தசோதிகருணையேயுருவமாகி
அற்புதக்கோலநீடியருமறைச்சிரத்தின்மேலாஞ்
சிற்பரவியோமமாகுந்திருச்சிற்றம்பலத்துணின்று
பொற்புடனடஞ்செய்கின்றபூங்கழல்போற்றிபோற்றி. (௨)

போற்றிநீடில்லைவாழந்தணர்திறம்புகலலுற்றே
னீற்றினைநிறைந்தகோலநிருத்தனுக்குரியதொண்டாம்
பேற்றினர்பெருமைக்கெல்லையாயினர்பேணிவாழும்
ஆற்றினர்பெருகுமன்பாலடித்தவம்புரிந்துவாழ்வார். (௩)

பொங்கியதிருவினீடும்பொற்புடைப்பணிகளேந்தி
மங்கலத்தொழில்கள்செய்துமறைகளாற்றுதித்துமற்றுந்
தங்களுக்கேற்றபண்பிற்றகும்பணிதலைநின்றுய்த்தே
யங்கணர்கோயிலுள்ளாவகம்படித்தொண்டுசெய்வார். (௪)

வருமுறையெரிமூன்றோம்பிமன்னுயிரருளான்மல்கத்
தருமமேபொருளாக்கொண்டுதத்துவநெறியிற்செல்லும்
அருமறைநான்கினோடாறங்கமும்பயின்றுவல்லார்
திருநடம்புரிவார்க்காளாந்திருவினாற்சிறந்தசீரார். (௫)

மறுவிலாமரபின்வந்துமாறிலாவொழுக்கம்பூண்டார்
அறுதொழிலாட்சியாலேயருங்கலிநீக்கியுள்ளார்
உறுவதுநீற்றின்செல்வமெனக்கொளுமுள்ளமிக்கார்
பெறுவதுசிவன்பாலன்பாம்பேறெனப்பெருகிவாழ்வார். (௬)

ஞானமேமுதலாநான்குநவையறத்தெரிந்துமிக்கார்
தானமுந்தவமும்வல்லார்தகுதியின்பகுதிசார்ந்தார்
ஊனமேலொன்றுமில்லாருலகெலாம்புகழ்ந்துபோற்று
மானமும்பொறையுந்தாங்கிமனையறம்புரிந்துவாழ்வார். (௭)

செம்மையாற்றணிந்தசிந்தைத்தெய்வவேதியர்களானார்
மும்மையாயிரவர்தாங்கள்போற்றிடமுதல்வனாரை

யிம்மையேபெற்றுவாழ்ந்தாரினிப்பெறும்பேறென்றில்லார்
தம்மையேதமக்கொப்பானநிலைமையாற்றலைமைசார்ந்தார். (அ)

இன்றிவர்பெருமையெம்மாலியம்பலாமெல்லைத்தாமோ
தென்றமிழ்ப்பயனாயுள்ளதிருத்தொண்டத்தொகைமுன்பாட
அன்றுவன்றொண்டர்தம்மையருளியவாரூரண்ணன்
முன்றிருவாக்காற்கோத்தமுதற்பொருளானுரென்றால். (கூ)

அகலிடத்துயர்ந்ததில்லையந்தணரகிலமெல்லாம்
புகழ்திருமறையோரென்றும்பொதுநடம்போற்றிவாழ
நிகழ்திருநீலகண்டக்குயவனார்நீடுவாய்மை
திகழுமன்புடையதொண்டர்செய்தவங்கூறலுற்றாம். (க௦)

திருச்சிற்றம்பலம்.

முதலாவது - தில்லைவாழந்தணர்சருக்கம்.

தில்லைவாழந்தணர்புராணமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩கூகூ.

---

## தில்லைவாழந்தணர் புராணம்.

தாவரமாகிய அண்டமும் சங்கமமாகிய பிண்டமும் சமமாமாதலால், பிண்டமாகிய சரீரத்தில் இடைக்கும் பிங்கலைக்கும் நடுவிலுள்ள சுழுமுனாநாடியும், பிரமாண்டத்திலுள்ள பரதகண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவிலுள்ள தில்லைவனமும், சமமாகும்.

சாந்தோக்கியோபநிடதத்திலே பிரமபுரத்தினுள்ள தகரமாகிய புண்டரீக வீட்டினுள்ளே இருக்கும் ஆகாசத்தை அறிதல்வேண்டுமென்று தகரவித்தை சொல்லப்பட்டது. இங்கே பிரமபுரமென்றது இச்சரீரத்தையும், புண்டரீகவீடென்றது இருதயகமலத்தையும், ஆகாசமென்றது பரப்பிரமமாகிய சிவத்தையுமென்றறிக. புறத்தும், இப்படியே இப்பிரமாண்டம் பிரமபுரமெனவும், இப்பிரமாண்டத்தினுள்ளே இருக்கும் தில்லைவனம் புண்டரீகவீடெனவும், தில்லைவனத்தில் நிருத்தஞ்செய்யும் சிவம் ஆகாசமெனவும் சொல்லப்படும். இவ்வாகாசம் பூதாகாசம்போற் சடமாகாது சித்தேயாம் ஆதலால், சிதம்பரமெனப்படும். இச்சிதம்பரம் எந்நாளும் நீக்கமின்றி விளங்குந்தானமாதலால், தில்லைவனமும் சிதம்பரமெனப் பெயர்பெறும்.

இத்துணைப்பெருஞ்சிறப்பினதாகிய அந்தத்தில்லைவனத்தின் கண்ணே முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய சிவபெருமான் சர்வான்மாக்களுக்கும் அருள்செய்யும்பொருட்டுத் திருமூலத்தானமாகிய சிவலிங்கவடிவமாய் எழுந்தருளியிருப்பார். அந்தத் திருமூலத்

தானத்துக்குத் தெற்குத்திக்கிலே திருவருள்வடிவாகிய கனகசபை இருக்கின்றது. அந்தக்கனகசபையின்கண்ணே பரமகாருண்ணிய சமுத்திரமாகிய சிவபிரான் தமது அருட்சத்தியாகிய சிவகாமியம்மையார் காண அனவரதமும் ஆனந்ததாண்டவஞ் செய்தருளுவர்.

திருமூலத்தானலிங்கத்துக்கும் சபாநாதருக்கும் வேதசிவாகமவிதிப்படி பூசை முதலியவை செய்யும் பிராமணர்கள் தில்லைவாழந்தணர் என்று சொல்லப்படுவர்கள். அவர்கள் மூவாயிரர். அவர்கள் குற்றமில்லாத வமிசத்தில் உதித்தவர்கள். பாவமென்பது சிறிதுமில்லாதவர்கள்; புண்ணியங்களெல்லாம் திரண்டு வடிவெடுத்தாற் போன்றவர்கள். கிருகத்தாச்சிரமத்தில் ஒழுகுகின்றவர்கள். இருக்கு யசுர் சாமம் அதர்வம் என்னு நான்குவேதங்களையும், சிக்ஷை வியாகரணம் சந்தோவிசிதி நிருத்தம் சோதிடம் கற்பம் என்னும் ஆறு வேதாங்கங்களையும், மீமாஞ்சை நியாயம் புராணம் மிருதி என்னு நான்கு உபாங்கங்களையும் ஓதியுணர்ந்தவர்கள். ஆகவனீயம் தக்ஷிணாக்கினி காருகபத்தியம் என்னும் மூன்றக்கினிகளையும் விதிப்படி வளர்க்கின்றவர்கள். ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்னும் அறுதொழிலினாலும் கலியை நீக்கினவர்கள். விபூதி உருத்திராக்ஷம் என்னுஞ் சிவசின்னங்களை விதிப்படி சிரத்தையோடு தரிக்கின்றவர்கள். சிவபெருமானுடைய திருவடிக்கண்ணே இடையறாது பதிந்த அன்பே தங்களுக்குச் செல்வமெனக் கொள்கின்றவர்கள்.

அவர்கள் சமயதீக்ஷை விசேஷதீக்ஷை நிருவாணதீக்ஷை ஆசாரியாபிஷேகம் என்னு நான்கும் பெற்றவர்கள். காமிகமுதல் வாதுளமிறுதியாகிய சைவாகமங்கள் இருபத்தெட்டையும் ஓதியுணர்ந்தவர்கள். அச்சைவாகமங்களால் வீட்டுநெறிகள் இவையென உணர்த்தப்படுஞ் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் வழுவாவண்ணம் அநுட்டிக்கின்றவர்கள்.

அவர்கள் சபாநாயகர் "இவ்விருடிகளில் நாம் ஒருவர்" என்று அருளிச்செயப்பெற்ற பெருமையையுடையவர்கள். அது மட்டோ, தியாகேசர் சுந்தரமூர்த்திநாயனாருக்குத் திருத்தொண்டத்தொகை பாடும்படி அருளிச்செய்தபோது "தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று அவர்களைத் தமது அருமைத் திருவாக்கினாலே எடுத்துச் சொல்லியருளினார். இங்ஙனமாயின், அவர்களுடைய அளவிறந்த மகிமையை நாமா சொல்ல வல்லம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர்புராணம்

முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநீலகண்டநாயனார்புராணம்.

வேதியர்தில்லைமூதூர்வேட்கோவர்குலத்துவந்தார்
மாதொருபாகநோக்கிமன்னுசிற்றம்பலத்தே
யாதியுமுடிவுமில்லாவற்புதத்தனிக்கூத்தாடு
நாதனார்கழல்கள்வாழ்த்திவழிபடுநலத்தின்மிக்கார். (௧)

பொய்கடிந்தறத்தின்வாழ்வார்புனற்சடைமுடியார்க்கன்பா
மெய்யடியார்கட்கானபணிசெயும்விருப்பினின்றார்
வையகம்போற்றுஞ்செய்கைமனையறம்புரிந்துவாழ்வார்
சைவமெய்த்திருவின்சார்வேபொருளெனச்சாருநீரார். (௨)

அளவிலாமரபின்வாழ்க்கைமட்கலமமுதுக்காக்கி
வளரிளந்திங்கட்கண்ணிமன்றுளாரடியார்க்கென்றும்
உளமகிழ்சிறப்பின்மல்கவோடளித்தொழுகுநாளின்
இளமைமீதூரவின்பத்துறையினிலெளியரானார். (௩)

அவர்தங்கண்மனைவியாருமருந்ததிகற்பின்மிக்கார்
புவனங்களுய்யவையர்பொங்குநஞ்சுண்ணயாஞ்செய்
தவமின்றுதடுத்ததென்னத்தகைந்துதான்றரித்ததென்று
சிவனெந்தைகண்டந்தன்னைத்திருநீலகண்டமென்பார். (௪)

ஆனதங்கேள்வரங்கோர்பரத்தைபாலணைந்துநண்ண
மானமுன்பொருதுவந்தவூடலான்மனையின்வாழ்க்கை
ஏனையவெல்லாஞ்செய்தேயுடனுறைவிசையாரானார்
தேனலர்கமலப்போதிற்றிருவினுமுருவமிக்கார். (௫)

மூண்டவப்புலவிதீர்க்கவன்பனார்முன்புசென்று
பூண்டயங்கிளமென்சாயற்பொற்கொடியனையார்தம்மை
வேண்டுவவிரந்துகூறிமெய்யுறவணையும்போதிற்
றீண்டுவீராயினெம்மைத்திருநீலகண்டமென்றார். (௬)

ஆதியார்நீலகண்டத்தளவுதாங்கொண்டவார்வம்
பேதியாவாணைகேட்டபெரியவர்பெயர்ந்துநீங்கி
ஏதிலார்போலநோக்கியெம்மையென்றதனான்மற்றை
மாதரார்தமையுமென்றன்மனத்தினுந்தீண்டேனென்றார். (௭)

கற்புறுமனைவியாருங்கணவனார்க்கானவெல்லாம்
பொற்புறமெய்யுறாமற்பொருந்துவபோற்றிச்செய்தே
இற்புறம்பொழியாரங்கணிருவரும்வேறுவைகி
யற்புறுபுணர்ச்சியின்மையயலறியாமைவாழ்ந்தார். (௮)

இளமையின்மிக்குள்ளார்களிருவருமறியநின்ற
அளவில்சீராணைபோற்றியாண்டுகள்பலவுஞ்செல்ல
வளமலியிளமைநீங்கிவடிவுறுமூப்புவந்து
தளர்வொடுசாய்ந்துமன்புதம்பிரான்றிறத்துச்சாயார். (கூ)
இந்நெறியொழுகுநாளிலெரிதளிர்த்தென்னநீண்ட
மின்னொளிர்சடையோன்றானுந்தொண்டனைவிளக்கங்காண
நன்னெறியிதுவாமென்றுஞாலத்தோர்விரும்பியுய்யும்
அந்நெறிகாட்டுமாற்றாலருட்சிவயோகியாகி. (க0)

வேறு.

கீளொடுகோவணஞ்சாத்திக்கேடிலா
வாள்விடுநீற்றொளிமலர்ந்தமேனிமேற்
றோளொடுமார்பிடைத்துவளுநூலுட
னீளொளிவளர்திருமுண்டநெற்றியும். (கக)
நெடுஞ்சடைகரந்திடநெறித்தபம்பையும்
விடுங்கதிர்முறுவல்வெண்ணிலவுமேம்பட
இடும்பலிப்பாத்திரமேந்துகையராய்
நடந்துவேட்கோவர்தமனையினண்ணினர். (கஉ)
நண்ணியதவச்சிவயோகநாதரைக்
கண்ணுறநோக்கியகாதலன்பர்தாம்
புண்ணியத்தொண்டராமென்றுபோற்றிசெய்
தெண்ணியவகையினலெதிர்கொண்டேத்தினர். (கங)
பிறைவளர்சடைமுடிப்பிரானைத்தொண்டரொன்
றுறையுளிலணைந்துபேருவகைகூர்ந்திட
முறைமையின்வழிபடமொழிந்தபூசைக
ணிறைபெருவிருப்பொடுசெய்துநின்றபின். (கச)
எம்பிரான்யான்செயும்பணியெதென்றனர்
வம்புலாமலர்ச்சடைவள்ளறொண்டனார்
உம்பர்நாயகனுமிவ்வோடுன்பால்வைத்து
நம்பிநீதருகநாம்வேண்டும்போதென்று. (கரு)
தன்னையொப்பரியதலத்துத்தன்னுழைத்
துன்னியயாவையுந்தூய்மைசெய்வது
பொன்னினுமணியினும்போற்றவேண்டுவ
தின்னதன்மையதுவாங்குநீயென. (கசு)
தொல்லைவேட்கோவர்தங்குலத்துட்டோன்றிய
மல்குசீர்த்தொண்டனார்வணங்கிவாங்கிக்கொண
டொல்லையின்மனையிலோர்மருங்குகாப்புறும்
எல்லையில்வைத்துமீண்டிறையையெய்தினர். (கள)
வைத்தபின்மறையவராகிவந்தரு
ணித்தனார்நீங்கிடநின்றதொண்டரும்

உய்த்துடன்போய்விடைகொண்டுமீண்டனர்
அத்தர்தாமம்பலமணையமேவினர். (கஅ)

வேறு.

சாலநாள்கழிந்தபின்புதலைவனர்தாமுன்வைத்த
கோலமாரோடுதன்னைக்குறியிடத்தகலப்போக்கிச்
சீலமார்கொள்கைபென்றுந்திருந்துவேட்கோவர்தம்பால்
வாலிதாகிலைமைகாட்டமுன்புபோன்மனையில்வந்தார். (கக)

வந்தபின்றெண்டனாருமெதிர்வழிபாடுசெய்து
சிந்தைசெய்தருளிற்றெங்கள்செய்தவமென்றுநிற்ப
முந்தைநாளுன்பால்வைத்தமொய்யொளிவிளங்குமோடு
தந்துநில்லென்றுனெல்லாந்தான்வைத்துவாங்கவல்லான். (உ0)

என்றவர்விரைந்துகூறவிருந்தவரீந்தவோடு
சென்றுமுன்கொணர்வான்புக்கார்கண்டிலர்திகைத்துநோக்கி
நின்றவர்தம்மைக்கேட்டார்நேடியுங்காணார்மாயை
யொன்றுமங்கறிந்திலாதாருரைப்பதொன்றின்றிநின்றார். (உக)

மறையவனுகிநின்றமலைமகள்கேள்வன்றானும்
உறையுளிற்புக்குநின்றவொருபெருந்தொண்டர்கேட்ப
இறையிலிங்கெய்தப்புகாய்தாழ்த்ததென்னென்னவந்து
கறைமறைமிடற்றினானைக்கைதொழுதுரைக்கலுற்றார். (உஉ)

இழையணிமுந்நூன்மார்பனெந்தைநீர்தந்துபோன
விழைதகுமோடுவைத்தவேறிடந்தேடிக்காணேன்
பழையமற்றதனினல்லபாத்திரந்தருவன்கொண்டிப்
பிழையினைப்பொறுக்கவேண்டும்பெருமவென்றிறைஞ்சிநின்றார். (உந)

சென்னியால்வணங்கிச்சொன்னதொண்டரைச்செயிர்த்துநோக்கி
யென்னிதுமொழிந்தவாநீயான்வைத்தமண்ணோடன்றிப்
பொன்னினாலமைத்துத்தந்தாயாயினுங்கொள்ளேன்போற்ற
முன்னைநான்வைத்தவோடேகொண்டுவாவென்றான்முன்னோன். (உச)

கேடிலாப்பெரியோயென்பால்வைத்ததுகெடுதலாலே
நாடியுங்காணேன்வேறுநல்லதோரோடுசால
நீடுசெல்வதுதானென்றுதருகின்றேனெனவுங்கொள்ளா
தூடிநின்றுரைத்ததென்றனுணர்வெலாமொழித்ததென்ன. (உரு)

ஆவதெனின்பால்வைத்தவடைக்கலப்பொருளைவெளவிப்
பாவகம்பலவுஞ்செய்துபழிக்குநீயொன்றுநாணு
யாவருங்காணவுன்னைவளைத்துநான்கொண்டேயேறிப்
போவதுசெய்யேனென்றான்புண்ணியப்பொருளாய்நின்றான். (உசா)

வளத்தினன்மிக்கவோடுவெளவினேனல்லேனென்னை
யுளத்தினுங்களவிலாமைக்கென்செய்கேனுரைமென்னக்

களத்துஞ்சொளித்துநின்றான்காதலுன்மகனைப்பற்றிக்
குளத்தினின்மூழ்கிப்போவென்றருளினன்கொடுமையில்லான். (உஎ)

அய்யர்நீரருளிச்செய்தவண்ணமியான்செய்வதற்குப்
பொய்யில்சீர்ப்புதல்வனில்லையென்செய்கேன்புகலுமென்ன
மையறுசிறப்பின்மிக்கமனையவடன்னைப்பற்றி
மொய்யலர்வாவிபுக்குமூழ்குவாயெனமொழிந்தார். (உஅ)

வேறு.

கங்கைநதிகரந்தசடைகரந்தருளியெதிர்நின்ற
வெங்கண்விடையவரருளவேட்கோவருரைசெய்வார்
எங்களிலோர்சபதத்தாலுடன்மூழ்கவிசைவில்லை
பொங்குபுனலியான்மூழ்கித்தருகின்றேன்போதுமென. (உகூ)

தந்ததுமுன்றாராதேகொள்ளாமைக்குன்மனைவி
யந்தளிர்ச்செங்கைப்பற்றியலைபுனலின்மூழ்காதே
சிந்தைவலித்திருக்கின்றாய்தில்லைவாழந்தணர்கள்
வந்திருந்தபேரவையின்மன்னுவனியானெனச்சென்றார். (கூ0)

நல்லொழுக்கந்தலைநின்றார்நான்மறையின்றுறைபோனார்
தில்லைவாழந்தணர்கள்வந்திருந்ததிருந்தவையின்
எல்லையிலான்முன்செல்லவிருந்தொண்டரவர்தாமு
மல்குபெருங்காதலினால்வழக்குமேலிட்டணைந்தார். (கூக)

அந்தணனாயெந்தைபிரானருமறையோர்முன்பகர்வான்
இந்தவேட்கோவன்பால்யான்வைத்தபாத்திரத்தைத்
தந்தொழியான்கெடுத்தானேற்றன்மனைவிகைப்பற்றி
வந்துமூழ்கியுந்தாரான்வலிசெய்கின்றானென்றார். (கூஉ)

நறைகமழுஞ்சடைமுடியுநாற்றோளுமுக்கண்ணுங்
கறைமருவுந்திருமிடறுங்கரந்தருளியெழுந்தருளு
மறையவனித்திறமொழியமாமறையோருரைசெய்வார்
நிறையுடையவேட்கோவர்நீர்மொழியும்புகுந்ததென. (கூகூ)

நீணிதியாமிதுவென்றுநின்றவிவர்தருமோடு
பேணிநான்வைத்தவிடம்பெயர்ந்துகரந்ததுகாணேன்
பூணணிநூன்மணிமார்பீர்புகுந்தபரிசிதுவென்று
சேணிடையுந்தீங்கடையாத்திருத்தொண்டருரைசெய்தார். (கூச)

வேறு.

திருவுடையந்தணாளர்செப்புவார்திகழ்ந்தநீற்றின்
உருவுடையிவர்தாம்வைத்தவோட்டினைக்கெடுத்தீராகற்
றருமிவர்குளத்தின்மூழ்கித்தருகவென்றுரைத்தாராகின்
மருவியமனைவியோடுமூழ்குதல்வழக்கேயென்றார். (கூரு)

அரும்பெருந்தொண்டர்தாமுமந்தணர்மொழியக்கேட்டுத்
திருந்தியமனைவியாரைத்தீண்டாமைசெப்பமாட்டார்

பொருந்தியவகையான்மூழ்கித்தருகின்றேன்போதுமென்று
பெருந்தவமுநிவரோடும்பெயர்ந்துதம்மனையைச்சார்ந்தார். (௩௬)

மனைவியார்தம்மைக்கொண்டுமறைச்சிவயோகியார்முன்
சினவிடைப்பாகர்மேவுந்திருப்புலீச்சரத்துமுன்னர்
நனைமலர்ச்சோலைவாவிநண்ணித்தம்முண்மைகாப்பார்
புனைமணிவேணுத்தண்டினிருதலைபிடித்துப்புக்கார். (௩௭)

தண்டிருதலையும்பற்றிப்புகுமவர்தம்மைநோக்கி
வெண்டிருநீற்றுமுண்டவேதியர்மாதைத்தீண்டிக்
கொண்டுடன்மூழ்கீரென்னக்கூடாமைபாரோர்கேட்கப்
பண்டுதஞ்செய்கைசொல்லிமூழ்கினார்பழுதிலாதார். (௩௮)

வாவியின்மூழ்கியேறுங்கணவருமனைவியாரு
மேவியமூப்புநீங்கிவிருப்புறுமிளமைபெற்றுத்
தேவருமுநிவர்தாமுஞ்சிறப்பொடுபொழியுந்தெய்வப்
பூவின்மாமழையின்மீளமூழ்குவார்போன்றுதோன்ற. (௩௯)

அந்நிலையவரைக்காணுமதிசயங்கண்டாரெல்லா
முன்னிலைநின்றவேதமுதல்வரைக்கண்டாரில்லை
இந்நிலையிருந்தவண்ணமென்னெனமருண்டுநின்றார்
துன்னியவிசும்பினூடுதுணையுடன்விடைமேற்கண்டார். (௪0)

கண்டனர்கைகளாரத்தொழுதனர்கலந்தகாதல்
அண்டருமேத்தினார்களன்பர்தம்பெருமைநோக்கி
விண்டரும்பொலிவுகாட்டிவிடையின்மேல்வருவார்தம்மைத்
தொண்டருமனைவியாருந்தொழுதுடன்போற்றிநின்றார். (௪௧)

மன்றுளேதிருக்கூத்தாடியடியவர்மனைகடோறுஞ்
சென்றவர்நிலைமைகாட்டுந்தேவர்கடேவர்தாமும்
வென்றவைம்புலனுன்மிக்கீர்விருப்புடனிருக்கநம்பால்
என்றுமிவ்விளமைநீங்காதென்றெழுந்தருளினாரே. (௪௨)

விறலுடைத்தொண்டனாரும்வெண்ணகைச்செவ்வாய்மென்றோள்
அறலியற்கூந்தலாளாமனைவியுமருளினார்ந்த
திறலுடைச்செய்கைசெய்துசிவலோகமதனையெய்திப்
பெறலருமிளமைபெற்றுப்பேரின்பமுற்றாரன்றே. (௪௩)

அயலறியாதவண்ணமண்ணலாராணையுய்த்த
மயலில்சீர்த்தொண்டனாரையானறிவகையால்வாழ்த்திப்
புயல்வளர்மாடநீடும்பூம்புகார்வணிகர்பொய்யில்
செயலியற்பகையார்செய்ததிருத்தொண்டுசெப்பலுற்றேன். (௪௪)

திருநீலகண்டநாயனார்புராணமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௧௩.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநீலகண்டநாயனார்புராணம்.

சிதம்பரத்திலே, குயவர்குலத்திலே, பொய்சொல்லல் சிறிதுமின்றித் தருமநெறியிலே வாழ்கின்றவரும், இல்லறத்திலே நிற்பவரும், சிவபத்தி அடியார்பத்திகளிலே சிறந்தவருமாகிய தொண்டர் ஒருவர் இருந்தார். அவர் தம்முடைய குலத்துக்கு ஏற்ப மட்கலங்களை வனைந்து விற்றுச் சீவனஞ்செய்தும், திருவோடுகளைச் சிவனடியார்களுக்குக் கொடுத்தும் வந்தார். அவர் "ஆதிகாலத்திலே பரமசிவன் திருப்பாற்கடலினின்றும் எழுந்த ஆலாகலவிஷத்தை உலகம் உய்யும்பொருட்டு உண்டபொழுது, அவருடைய கண்டமானது, அவர் தம்மை அடைந்தவர்களுக்கு வரும் இடையூறுகளை நீக்கியருளுவார் என்பதை நாமெல்லாம் அறிந்துகொள்ளும்படி ஓரறிகுறியாய் விளங்கும்பொருட்டு, அதனை உள்ளே புகவொட்டாமல் தடுத்துத் தானே தரித்துக்கொண்டது" என்று நினைந்து, அக்கடவுளுடைய கண்டத்தைத் திருநீலகண்டம் என்று எப்பொழுதும் சிறப்பித்துச் சொல்லுவார். அதனால் அவருக்குத் திருநீலகண்டநாயனார் என்னும் பெயர் உண்டாயிற்று.

ஒருநாள் அவர் அவ்வூரிலே ஓர்வேசியிடத்துச் சென்று வீட்டுக்குத் திரும்ப; கற்பிலே சிறந்த அவர் மனைவியார் அதை அறிந்து, அதைக்குறித்துத் தம்முடைய மனசிலே தோன்றிய கோபத்தை அடக்கிக்கொண்டு, இல்வாழ்க்கைக்குரிய மற்றப்பணிகளெல்லாஞ் செய்தும், புணர்ச்சிக்குமாத்திரம் இசையாதவரானார். நாயகர் தம்முடைய மனைவியார் கொண்ட புலவியைத் தீர்க்கும்பொருட்டு அவர் சமீபத்திலே போய், வேண்டிய இரப்புரைகளைச் சொல்லி, அவரைத் தீண்டும்படி சென்றார். அப்பொழுது மனைவியார் "நீர் எம்மைத் தீண்டுவீராயில் திருநீலகண்டம்" என்று ஆணையிட்டார். அதைக்கேட்ட நாயகர், பரமசிவனுடைய திருநீலகண்டத்திலே தாம் வைத்த பத்தி குன்றுவண்ணம், அம்மனைவியாரைத் தொடாமல் நீங்கி, "இவர் 'எம்மை' என்று பன்மையாகச் சொன்னதனால் இவரைமாத்திரமன்றி மற்றப்பெண்களையும் நான் மனசினால் நினைத்தலுஞ்செய்யேன்" என்று உறுதிகொண்டார். அவர்கள் இருவரும் தங்கள்வீட்டினின்றும் புறப்படாதொழிந்து, அவ்வீட்டிலே தானே இருந்து, இல்லறத்திற்குரிய பிறசெய்கைகளெல்லாம் செய்துகொண்டு, புணர்ச்சியின்மையைப் பிறரறியாதபடி வாழ்ந்தார்கள். இளமைப்பருவத்தையுடைய இருவரும் அவ்வாணையைப் பேணிக்கொண்டு, பலவருஷங்கள் செல்ல, யௌவனம் நீங்கி, வயோதிகர்களாகி, வருத்தமுற்றார்கள். உற்றும், சிவபத்தி சிறிதும் குறையாதவர்களாகி இருந்தார்கள்.

இப்படியிருக்கும் காலத்திலே, காருண்ணிய ஸ்வரூபியாகிய பரமசிவன், அவ்வடியாருடைய மகிமையை உலகத்தவர்கள் ஐயந்திரிபற அறிந்து அவருடைய தொண்டை அனுகரித்து உய்யும்பொருட்டு, ஒரு சிவயோகிவடிவங் கொண்டு, அவ்வடியார்வீட்டுக்குச் சென்றார். அவ்வடியார் அவரைக் கண்டு எதிர்கொண்டு வீட்டினுள்ளே அழைத்துக்கொண்டுபோய், ஆசனத்தில் இருத்தி, அவருக்கு விதிப்படி அன்பினோடு பூசைசெய்து, நமஸ்கரித்து, எழுந்து அஞ்சலிசெய்து நின்று, "சுவாமீ, அடியேன் தேவரீருக்குச் செய்யவேண்டிய குற்றேவல் யாது" என்று வினவ; சிவயோகியார் "இந்தத்திருவோட்டை வைத்திருந்து, நாம் கேட்கும்போது தா. இந்த ஓடு தனக்கு வேறொப்பில்லாதது; தன்னிடத்திலே சேர்ந்த பொருள்களெல்லாவற்றையும் சுத்திசெய்வது; பொன்னிலும் இரத்தினத்திலும் பார்க்கக் காப்பாற்றப்படத்தக்கது. இப்படிப்பட்ட மேன்மையுள்ளதாகிய இந்த ஓட்டை நீ வாங்கி வைத்திரு" என்று அருளிச்செய்தார். அதைக் கேட்ட அடியவர் அவரை வந்தனஞ்செய்து, அவ்வோட்டை வாங்கிக்கொண்டு வீட்டிலே ஒரு பக்கத்தில் சேமித்துவைத்துவிட்டு, திரும்பி வந்து, போம்படி எழுந்த சிவயோகியாருக்குப்பின் சிறிது தூரஞ் சென்று, அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினர்.

நெடுநாட்கள் கழிந்தபின், ஒருநாள் பரமசிவன் தாம் வைக்கக்கொடுத்த திருவோட்டை வைக்கப்பட்ட இடத்தில் இல்லாதொழியும்படி செய்து, அவ்வடியாருடைய உண்மைநிலையைப் பிறர்க்குப் புலப்படுத்தும்பொருட்டு முன்போலச் சிவயோகிவடிவங் கொண்டு, அவர்வீட்டுக்கு எழுந்தருளினர். அவர் சிவயோகியாரை முன்போல வழிபட்டு, "சுவாமீ, தேவரீர் இவ்வீட்டிற்கு எழுந்தருளிவந்தது அடியேங்கள் பூர்வ சன்மத்திற் செய்த தவத்தினாற்போலும்" என்று விண்ணப்பஞ்செய்து நிற்க; சிவயோகியார் "நாம் முன்னாளிலே உன்னிடத்திலே தந்த திருவோட்டை இப்பொழுது தா" என்றார். அடியவர் அதைக்கொண்டுவந்து கொடுக்கும்பொருட்டு உள்ளேபோய்ப் பார்த்துக் காணாமையாலே திகைத்து, அங்கு நின்றவர்களிடத்திலே கேட்டும் பிறவிடங்களிலே தேடியும் காணாதவராகி, சிவயோகியாருக்கு உத்தரம் சொல்வதற்கு ஒன்றுமின்றி அங்கே நின்றார். சிவயோகியார் உள்ளே நின்ற அடியார் கேட்கும்படி, "நொடிப்பொழுதில் வருவேன் என்று போன நீ ஏன் இவ்வளவு நேரம் தாழ்த்து நிற்கின்றாய்" என்று கேட்க; அடியவர் வந்து சிவயோகியாரை வணங்கி, "சுவாமீ, தேவரீர் தந்ததிருவோட்டை வைத்த இடத்திலும் பிறவிடங்களிலும் தேடிக் காணேன். பழையதாகிய அந்தத் திருவோட்டைப் பார்க்கினும் புதிதாகிய வேறொரு திருவோடுதருவேன். அதை ஏற்றுக்கொண்டு, அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளல்வேண்டும்" என்று சொல்லிப் பிரார்த்தித்து நின்றார். உட

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இயற்பகைநாயனார் புராணம்.

வேறு.

¶ சென்னிவெண்குடைநீடநபாயன்றிருக்குலம்புகழ்பெருக்கியசிறப்பின்
மன்னுதொல்புகழ்மருதநீர்நாட்டுவயல்வளந்தரவியல்பினினளித்துப்
பொன்னிநன்னதிமிக்கநீர்பாய்ந்துபுணரிதன்னையும்புனிதமாக்குவதோர்
நன்னெடும்பெருந்தீர்த்தமுன்னுடையநலஞ்சிறந்ததுவளம்புகார்நகரம்.

அக்குலப்பதிக்குடிமுதல்வணிகரளவில்செல்வத்துவளமையினமைந்தார்
செக்கர்வெண்பிறைச்சடையவரடிமைத் திறத்தின்மிக்கவர்மறைச்சிலம்ப
மிக்கசீரடியார்கள்யாரேனும்வேண்டும்யாவையுமில்லையென்னுதே [டியார்
இக்கடற்படிநிகழமுன்கொடுக்குமியல்பினின்றவருலகியற்பகையார்.(௨)

ஆறுசூடியவையர்மெய்யடிமையளவிலாததோருளநிறையருளா
னீறுசேர்திருமேனியர்மனத்துநினைத்தயாவையும்வினைப்படமுடித்து
மாறிலாதநன்னெறியினில்விளங்குமனையறம்புரிமகிழ்ச்சியின்வந்த
பேறெலாமவரேவினசெய்யும்பெருமையேயெனப்பேணிவாழ்நாளில். ()

ஆயுநுண்பொருளாகியும்வெளியேயம்பலத்துநின்றுடுவாரும்பர்
நாயகிக்குமஃதறியவோபிரியாநங்கைதானறியாமையோவறியோந் [ய்
தூயநீறுபொன்மேனியில்விளங்கத் தூர்த்தவேடமுந்தோன்றவேதியரா
மாயைவண்ணமேகொண்டுதந்தொண்டர் மறுதவண்ணமுங்காட்டுவான்
[வந்தார். (௪)

வந்துதண்புகார்வணிகர்தமறுகின்மருங்கியற்பகையார்மனைபுகுத
எந்தையெம்பிரானடியவரணைந்தாரென்றுநின்றதோரின்பவாதரவாற்
சிந்தையன்பொடுசென்றெதிர்வணங்கிச்சிறப்பின்மிக்கவர்ச்சனைகண்முன்
செய்து, முந்தையெம்பெருந்தவத்தினுலென்கோமுனிவரிங்கெழுந்தருளி
யதென்றார். (௫)

என்றுகூறியவியற்பகையார்முனெய்திநின்றவக்கைதவமறையோர்
கொன்றைவார்சடையாரடியார்கள்குறித்துவேண்டின குணமெனக்கொ
ண்டே, ஒன்றுநீரெதிர்மறுதுவந்தளிக்குமுண்மைகேட்டுநும்பாலொன்று
வேண்டி, இன்றுநானிங்குவந்தனனதனுக்கிசையலாமெனிலியம்பலாமெ
[ன்றார். (௬)

என்னவவ்வுரைகேட்டியற்பகையார்யாதுமொன்றுமென் பக்கலுண்டாகி
அன்னதெம்பிரானடியவருடைமையையமில்லைநீரருள்செய்யுமென்ன [ல்

---

¶ சென்னி - சோழன்.

மன்னுகாதலுன் மனைவியைவேண்டிவந்ததிங்கெனவங்கணரெதிரே
சொன்னபோதிலுமுன்னையின்மகிழ்ந்து தூயதொண்டனார்தொழுதுரை
செய்வார். (எ)

இதுவெனக்குமுன்புள்ளதேவேண்டி யெம்பிரான்றந்தபேறெனக்கெள்
கதுமெனச்சென்றுதம்மனைவாழ்க்கைக்கற்பின்மேம்படுகாதலியாரை[ணக்
விதிமணக்குலமடந்தையின்றனையிம் மெய்த்தவர்க்குநான் கொடுத்தன
னென்ன, மதுமலர்க்குழன் மனைவியார்கலங்கிமனந்தெளிந்தபின்மற்றிது
மொழிவார். (அ)

இன்றுநீரொன்னையருள்செய்ததிதுவே லென்னுயிர்க்கொருநாதர்நீருரைத்
த, தொன்றைநான்செயுமத்தனையல்லாலுரிமைவேறுளதோவெனக்கென்
று, தன்றனிப்பெருங்கணவரைவணங்கத்தாழ்ந்துதொண்டனார்தாமெதிர்
வணங்கச், சென்றுமாதவன்சேவடிபணிந்துதிகைத்துநின்றனடிருவினும்
[பெரியாள். (கூ)

மாதுதன்னைமுன்கொடுத்தமாதவர்தாமன மகிழ்ந்துபேருவகையின்மலர்
ந்தே,யாதுநானினிச்செய்பணிதானென்றிறைஞ்சிநின்றவர்தம்மெதிர்நோ
சாதிவேதியராகியதலைவர்தையறன்னையான்றனிகொடுபோகக் [க்கிச்
கர்தன்மேவியசுற்றமும்பதியுங்கடக்கநீதுணைபோதுகவென்றார். (௧௦)

வேறு.

என்றவரருளிச்செய்யயானேமுன்செய்குற்றேவல்
ஒன்றிதுதன்னையென்னையுடையவரருளிச்செய்ய
நின்றதுபிழையாமென்றுநினைந்துவேறிடத்துப்புக்குப்
பொன்றிகழறுவைசாத்திப்பூங்கச்சுப்பொலியவீக்கி. (௧௧)

வாளொடுபலகையேந்திவந்தெதிர்வணங்கிமிக்க
ஆளரியேறுபோல்வாரவரைமுன்போக்கிப்பின்னே
தோள்இணைதுணையேயாகப்போயினர்துன்னினாரை
நீளிடைப்படமுன்கூடிநிலத்திடைவீழ்த்தநேர்வார். (௧௨)

மனைவியார்சுற்றத்தாரும்வள்ளலார்சுற்றத்தாரும்
இனையதொன்றியாரேசெய்தாரியற்பகைபித்தனானாற்
புனையிழைதன்னைக்கொண்டுபோவதாமொருவனென்று
துனைபெரும்பழியைமீட்பான்றொடர்வதற்கெழுந்துசூழ்வார். (௧௩)

வேலொடுவில்லும்வாளுஞ்சுரிகையுமெடுத்துமிக்க
காலெனவிசையிற்சென்றுகடிநகர்ப்புறத்துப்போகிப்
பாலிருமருங்குமீண்டிப்பரந்தவார்ப்பரவம்பொங்கி
மால்கடல்கிளர்ந்ததென்னவந்தெதிர்வளைத்துக்கொண்டார். (௧௪)

வழிவிடுந்துணைபின்போதவழித்துணையாகியுள்ளார்
கழிபெருங்காதல்காட்டிக்காரிகையுடன்போம்போதில்

அழிதகன்போகேலீண்டவருங்குலக்கொடியைவிட்டுப்
பழிவிடநீபோவென்றுபகர்ந்தெதிர்நிறைந்துவந்தார். (௧௫)

மறைமுனியஞ்சினான்போன்மாதினைப்பார்க்கமாதும்
இறைவனேயஞ்சவேண்டாவியற்பகைவெல்லுமென்ன
அறைகழலண்ணல்கேளாவடியனேனவரையெல்லாந்
தறையிடைப்படுத்துகின்றேன்றளர்ந்தருள்செய்யேலென்று. (௧௬)

பெருவிறலாளியென்னப்பிறங்கெரிசிதறநோக்கிப்
பரிபவப்பட்டுவந்தபடர்பெருஞ்சுற்றத்தாரை
ஒருவருமெதிர்நில்லாமேயோடிப்போய்ப்பிழையுமன்றேல்
எரிசுடர்வாளிற்கூறுய்த்துடிக்கின்றீரென்றுநேர்ந்தார். (௧௭)

¶ ஏடநீயென்செய்தாயாலித்திறமியம்புகின்றாய்
நாடுறுபழியுமொன்னார்நகையையுநாணுயின்று
§ பாடவமுரைப்பதுன்றன்மனைவியைப் † பனவற்கீந்தோ
கூடவேமடிவதன்றிக்கொடுக்கயாமொட்டேமென்றார். (௧௮)

மற்றவர்சொன்னமாற்றங்கேட்டலுமனத்தின்வந்த
செற்றமுன்பொங்கவுங்களுடற்றுணியெங்குஞ்சிந்தி
முற்றுநும்முயிரையெல்லாமுதல்விசும்பேற்றிக்கொண்டு
நற்றவர்தம்மைப்போகவிடுவனென்றெழுந்தார்நல்லோர். (௧௯)

நேர்ந்தவரெதிர்ந்தபோதுநிறைந்தவச்சுற்றத்தாருஞ்
சார்ந்தவர்தம்முன்செல்லார்தையலைக்கொண்டுபெற்றம்
ஊர்ந்தவர்படிமேற்செல்லவுற்றெதிருடன்றுபொங்கி
ஆர்ந்தவெஞ்சினத்தான்மேற்சென்றடர்ந்தெதிர்தடுத்தாரன்றே. (௨௦)

சென்றவர்தடுத்தபோதிலியற்பகையார்முன்சீறி
வன்றுணைவாளேயாகச்சாரியைமாறிவந்து
துன்றினர்தோளுந்தாளுந்தலைகளுந்துணித்துவீழ்த்து
வென்றடுபுலியேறென்னவமர்விளையாட்டின்மிக்கார். (௨௧)

மூண்டுமுன்பலராய்வந்தார்தனிவந்துமுட்டினார்கள்
வேண்டியதிசைகடோறும்வேறுவேறமர்செய்போழ்தில்
ஆண்டகைவீரர்தாமேயனைவர்க்குமனைவராகிக்
காண்டகுவிசையிற்பாய்ந்துகலந்துமுன்றுணித்துவீழ்த்தார். (௨௨)

சொரிந்தனகுடல்களெங்குந்துணிந்தனவுடல்களெங்கும்
விரிந்தனதலைகளெங்குமிடைந்தனகழுகுமெங்கும்

---

¶ ஏட -என்பது-தோழன்முன்னிலைப்பெயர்.
§ பாடவம்-என்பது-சாமார்த்தியம்.
† பனவன்-என்பது-பிராமணன்.

எரிந்தனவிழிகளெங்குமெதிர்ப்பவரொருவரின்றித்
திரிந்தனர்களனிலெங்குஞ்சிவன்கழல்புனைந்தவீரர். (௨௩)

மாடலைகுருதிபொங்கமடிந்தசெங்களத்தினின்றும்
‡ ஆடுறுசெயலின்வந்தகிளைஞரோடணைந்தார்தம்மில்
ஓடினருள்ளாருய்ந்தாரொழிந்தவரொழிந்தேமாண்டார்
நீடியவாளுந்தாமுநின்றவர்தாமேநின்றார். (௨௪)

திருவுடைமனைவியாரைக்கொடுத்திடைச்செறுத்துமுன்பு
வருபெருஞ்சுற்றமெல்லாம்வாளினாற்றுணித்துமாற்றி
அருமறைமுனியைநோக்கியடிகணீரஞ்சாவண்ணம்
பொருவருங்கானநீங்கவிடுவனென்றுடனேபோந்தார். (௨௫)

இருவராலறியவொண்ணாவொருவர்பின்செல்லுமேழை
பொருதிறல்வீரர்பின்புபோதமுன்போகும்போதில்
அருமறைமுனிவர்சாய்க்காடதன்மருங்கணையமேவித்
திருமலிதோளினானைமீளெனச்செப்பினாரே. (௨௬)

தவமுனிதன்னைமீளச்சொன்னபின்றலையாலார
அவன்மலர்ப்பதங்கள்சூடியஞ்சலிகூப்பிநின்று
புவனமூன்றுய்யவந்தபூசுரன்றன்னையேத்தி
இவனருள்பெறப்பெற்றேனென்றியற்பகையாருமீண்டார். (௨௭)

செய்வதற்கரியசெய்கைசெய்தநற்றொண்டர்போக
மைதிகழ்கண்டனெண்டோண்மறையவன்மகிழ்ந்துநோக்கிப்
பொய்தருமுள்ளமில்லான்பார்க்கிலன்போனானென்று
மெய்தருசிந்தையாரைமீளவுமழைக்கலுற்றார். (௨௮)

இயற்பகைமுனிவாவோலமீண்டநீவருவாயோலம்
அயர்ப்பிலாதானேயோலமன்பனேயோலமோலஞ்
செயற்கருஞ்செய்கைசெய்ததீரனேயோலமென்றான்
மயக்கறுமறையோலிட்டுமாலயன்றேடநின்றான். (௨௯)

அழைத்தபேரோசைகேளாவடியனேன்வந்தேன்வந்தேன்
பிழைத்தவருளரேலின்னும்பெருவலித்தடக்கைவாளின்
இழைத்தவராகின்றாரென்றியற்பகையார்வந்தெய்தக்
குழைப்பொலிகாதினானுமறைந்தனன்கோலங்கொள்வான். (௩0)

சென்றவர்முனியைக்காணார்சேயிழைதன்னைக்கண்டார்
பொன்றிகழ்குன்றுவெள்ளிப்பொருப்பின்மேற்பொலிந்ததென்னத்
தன்றுணையுடனேவானிற்றலைவனைவிடைமேற்கண்டார்
நின்றிலர்தொழுதுவீழ்ந்தார்நிலத்தினின்றெழுந்தார்நேர்ந்தார். (௩௧)

‡ ஆடு - என்பது - வெற்றி.

சொல்லுவதறியேன்வாழிதோற்றியதோற்றம்போற்றி
வல்லைவந்தருளியென்னைவழித்தொண்டுகொண்டாய்போற்றி
எல்லையிலின்பவெள்ளமெனக்கருள்செய்தாய்போற்றி
தில்லையம்பலத்துளாடுஞ்சேவடிபோற்றியென்ன. (௩௨)

விண்ணிடைநின்றவெள்ளைவிடையவரடியார்தம்மை
எண்ணியவுலகுதன்னிலிப்படிநம்பாலன்பு
பண்ணியபரிவுகண்டுமகிழ்ந்தனம்பழுதிலாதாய்
நண்ணியமனைவியோடுநம்முடன்போதுகென்று. (௩௩)

திருவளர்சிறப்பின்மிக்கதிருத்தொண்டர்தமக்குந்தேற்ற
மருவியதெய்வக்கற்பின்மனைவியார்தமக்குந்தக்க
பெருகியவருளினீடுபேறளித்திமையோரேத்தப்
பொருவிடைப்பாகர்மன்னும்பொற்பொதுவதனுட்புக்கார். (௩௪)

வானவர்பூவின்மாரிபொழியமாமறைகளார்ப்ப
ஞானமாமுனிவர்போற்றநலமிகுசிவலோகத்தில்
ஊனமில்தொண்டர்கும்பிட்டுடனுறைபெருமைபெற்றார்
ஏனையசுற்றத்தாரும்வானிடையின்பம்பெற்றார். (௩௫)

இன்புறுந்தாரந்தன்னையீசனுக்கன்பரென்றே
துன்புறாதுதவுந்தொண்டர்பெருமையைத்தொழுதுவாழ்த்தி
அன்புறுமனத்தானாதனடியவர்க்கன்புநீடு
மன்புகழிளைசைமாறன்வளத்தினைவழுத்தலுற்றேன். (௩௬)

திருச்சிற்றம்பலம்.

இயற்பகைநாயனார்புராணமுற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௪௪௧.

---

## இயற்பகைநாயனார் புராணம்.

சோழமண்டலத்திலே, காவேரிநதி சமுத்திரத்தோடு கலத்தலால் காவேரிசங்கமம் எனப்பெயர்கொண்ட விசேடதீர்த்தம் பொருந்திய காவிரிப்பூம்பட்டினத்திலே, வைசியர் குலத்திலே, குருலிங்க சங்கமபத்திகளிற் சிறந்தவரும் ஔதாரியம் உள்ளவரும் ஆகிய இயற்பகையாரென்பவர் ஒருவர் இருந்தார்.

அவர் இல்லறத்தில் இருந்து, விபூதி உருத்திராக்ஷம் தரித்த சிவபத்தர்களுக்கு அவர்கள் விரும்பிய எல்லாவற்றையும் மகிழ்ச்சியோடு கொடுத்துக்கொண்டு வருங்காலத்தில்; ஒருநாள், திருக்கைலாசபதியானவர், அவ்வியற்பகையார் அடியார்கள் விரும்பியவை யாவையேனும் அவற்றை மறாது கொடுத்தலைச் சகலருக்கும் புலப்படுத்தும்பொருட்டு, ஒரு

பிராமணவடிவங்கொண்டு, விபூதி திருமேனியிலே பிரகாசிக்க, தூர்த்த வேடமுந் தோன்ற, அவர் வீட்டிற்கு எழுந்தருளினுர். இயற்பகைநாயனுர் அன்பினோடு அவரை எதிர்கொண்டு நமஸ்கரித்து, அழைத்துக்கொண்டு போய், விதிப்படி அருச்சித்து, "சுவாமீ, தேவரீர் இங்கே எழுந்தருளியது பூர்வசன்மத்தில் அடியேன் செய்த தவத்தினுற் போலும்" என்றுர். அது கேட்ட ஐயர் இயற்பகைநாயனுரை நோக்கி, "சிவனடியார்கள் விரும்பிக் கேட்பன யாவையெனினும் நீர் அவைகளை மறுமல் மகிழ்ச்சியோடு கொடுத்தலை நான் கேள்வியுற்று; உம்மிடத்திலுள்ள ஒரு பொருளை விரும்பி இன்றைக்கு இங்கே வந்தேன். நீர் தருதற்கு இசைவீராயில், அந்தப்பொருள் இன்னது என்று சொல்லுவேன்" என்றுர். அதற்கு இயற்பகைநாயனுர் "எப்படிப்பட்ட பொருளாயினும் என்னிடத்தில் இருக்குமாயின், அந்தப்பொருள் நமது கடவுளாகிய பரமசிவனுடைய அடியார்களுக்கு உரிய பொருளேயாம். இதைக் குறித்துத் தேவரீர் சந்தேகிக்க வேண்டுவதில்லை. திருவுள்ளம் விரும்பியதை இன்னது என்று சொல்லியருளும்,, என்று சொல்ல; ஐயர் "உம்முடைய மனைவியை விரும்பி வந்தேன்,, என்றுர். அப்பொழுது இயற்பகைநாயனுர் முன்னிலும்பார்க்க மிக மகிழ்ந்து வணங்கி நின்று, "சுவாமீ, தேவரீர் அடியேனிடத்தில் உள்ள பொருளையே விரும்பிக் கேட்டது அடியேனுடைய பாக்கியம்,, என்று சொல்லி, சீக்கிரம் உள்ளே போய், கற்பிலே சிறந்த தம்முடைய மனைவியாரை நோக்கி, "நான் இன்றைக்கு உன்னை இந்தச் சிவனடியாருக்குக் கொடுத்துவிட்டேன்,, என்றுர். உடனே மனைவியார் மனங்கலங்கிப் பின்னே தெளிந்து, "பிராணநாயகரோ, நீர் கட்டளையிட்டது எதுவோ அதையே நான் செய்வேன். அதையன்றிச்செய்தற்கு உரிய காரியம் எனக்கு வேறென்று உண்டோ, இல்லை,, என்று சொல்லி, அவரை வணங்க; அவர் தமது மனைவியாரை, அங்கு வந்த சிவனடியாருக்கு மனைவியாகைபற்றி, வணங்கினுர். மனைவியார் போய், அவ்வையருடைய பாதங்களிலே விழுந்து நமஸ்கரித்து, எழுந்து நின்றுர். அது கண்ட இயற்பகைநாயனுர் மனமகிழ்ந்து அவ்வையரை வணங்கி, "இன்னும் அடியேன் செய்யவேண்டிய பணி யாது,, என்றுவினுவ; ஐயர் "இந்தப்பெண்ணை நான் தனியே கொண்டுபோகையால், உங்கள் மேலே பற்றுள்ள பந்துக்களையும் ஊரவர்களையும் கடக்கும்வரைக்கும் அவர்களால் எனக்கு ஓரிடையூறும் உண்டாகாதிருக்கும்படி, நீர் துணையாக வரவேண்டும்,, என்றுர். இயற்பகைநாயனுர் அதைக் கேட்டு, "இவர் கட்டளையிடுமுன் நானே நினைந்து செய்யவேண்டிய இக்குற்றேவலைச் செய்யாமல், இவர் சொல்லும் வரைக்கும் தாழ்த்து நின்றது குற்றம்,, என்று நினைத்துத் துக்கித்து, ஆயுதசாலையிலே போய், போர்க்கோலங் கொண்டு, வாளும் பரிசையும் ஏந்திக்கொண்டு, ஐயரிடத்திற்கு வந்து, அவரைவணங்கி, அவரையும் மனைவியாரையும் முன் போம்படி செய்து, தாம் பின்னேபோனுர்.

அப்பொழுது இயற்பகைநாயனருடைய சுற்றத்தவர்களும் அவர் மனைவியாருடைய சுற்றத்தவர்களும் "இயற்பகை பைத்தியத்தினலே தன்மனைவியைக் கொடுத்தானயினும், அவ்வளை ஒருவன் கொண்டுபோவது நீதியா" என்று, தங்கள் மரபுக்கு வரும் பெரும்பழியை நீக்கிக்கொள்ளும்பொருட்டு அவர்களைத் தொடரக் கருதி, வேல் வில் வாள் முதலிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு, சண்டமாருதம்போலத் தீவிரமாக நடந்து, நகருக்குப் புறத்திலே போய், ஐயருக்கு இருபக்கத்திலும் நெருங்கி, ஆரவாரித்து, "ஓ துட்டனே, எங்களுக்குப் பழி வராதபடி எங்கள் குலப்பெண்ணைவிட்டுப் போ" என்று சொல்லி, அவ்வரை வளைத்துக்கொண்டார்கள். ஐயர் அதைக் கண்டு, அஞ்சினவர்போல இயற்பகைநாயனருடைய மனைவியாரைப் பார்க்க; அம்மனைவியார் "சுவாமீ, நீர் பயப்படவேண்டாம். இயற்பகைநாயனர் அவர்களை வெல்லுவார்" என்றார். இயற்பகைநாயனர் அதைக்கேட்டு, "அடியேன் அவர்கள் எல்லாரையும் இப்போது கொன்றுபோடுகிறேன். தேவரீர் அஞ்சவேண்டாம்" என்று சொல்லி, அங்கு வந்த சுற்றத்தவர்களைப் பார்த்து, "நீங்கள் என் வாளுக்கு இரையாவீர்கள். ஒருவரும் எனக்கு எதிர் நில்லாமல் ஓடிப் பிழையுங்கள்" என்று கூற; அவர்கள் "ஏடா இயற்பகை! நீ என்னகாரியஞ் செய்தாய்? ஊரவர்கள் பேசும் பழிமொழிக்கும் நம்முடைய சத்துருக்கள் நகைக்கும் நகைப்புக்கும் நீ சற்றாயினும் வெட்கப்படவில்லை. மனைவியைப் பிராமணனுக்குக் கொடுத்தோ நீ சாமர்த்தியம் பேசுவது. நாமெல்லாம் ஒருங்கே மடிவதன்றி இந்தப்பெண்ணைப் பிராமணனுக்குக் கொடுக்கவிடோம்" என்றார்கள், உடனே இயற்பகைநாயனர் அதிக கோபங்கொண்டு, "உங்கள் சரீரங்களைத் துண்டம் துண்டமாக்கி உங்களுயிரைச் சுவர்க்கத்துக்கேற்றி ஐயரைத்தடையின்றிப்போகவிடுவேன்" என்றுசொல்லி எதிர்க்க; அவர்கள் அந்நாயனரோடு யுத்தஞ்செய்யத்தொடங்காமல், அவர் மனைவியாரைக் கொண்டுசெல்கின்ற ஐயருக்கு முற்பட்டு, அதிக கோபத்தோடும் அவரைத் தடுத்தார்கள். அது கண்டநாயனர் கோபங்கொண்டு, வாளினலே, இடசாரி வலசாரியாக மாறி மாறிச் சுற்றி வந்து, அவர்களுடைய தோள்களையும் கால்களையும் தலைகளையும் துணித்து விழுத்தி, பின் ஒவ்வொருவராய் வந்து எதிர்த்தவர்களையும் கொன்று, மேல் எதிர்ப்பவர் ஒருவருமின்றி யுத்தகளத்திலே உலாவினர். பின் இந்தச் செயற்கருஞ்செய்கையைச் செய்த நாயனர் ஐயரை நோக்கி, "சுவாமீ, தேவரீர் அஞ்சாவண்ணம் இந்தக் காட்டைக் கடக்கும் வரைக்கும் வருகிறேன்" என்று சொல்லி, அவரோடு போனர். திருச்சாய்க்காடு என்னுஞ் சிவஸ்தலத்துக்குச் சமீபத்திலே போனபொழுது, ஐயர் இயற்பகைநாயனரை நோக்கி, இனி நீர் திரும்பிப் போகலாம்" என்று சொல்ல; நாயனர் அவருடைய திருவடிகளை வணங்கி அஞ்சலிசெய்து, ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு திரும்பினர். அப்பொழுது ஐயர் "இயற்பகையே! இங்கே வா" என்று சொல்லி ஓலமிட்டார், நாயனர் அந்

ஓசையைக் கேட்டு, "அடியேன் வந்து விட்டேன் வந்துவிட்டேன். இன்னும் இடையூறு செய்பவர்கள் உண்டாயில், கொன்றுபோடுவேன்" என்றுசொல்லிக்கொண்டுவர; ஐயர் மறைந்தருளினர். வந்த நாயனர் அவ்வையரைக்காணுமல் மனைவியாரைமாத்திரங் கண்டார். பின்பு ஆகாயத்திலே பார்வதி சமேதராகி இடபவாகனத்தில் எழுந்தருளிவந்த திருக்கைலாசபதியைக் கண்டார். ஆராமையினலே உடனே விழுந்தார்; எழுந்து ஸ்தோத்திரம்பண்ணினர். சுவாமி அவரை நோக்கி, "நம்மேலும் நம்முடைய அடியார்கண்மேலும் நிஷ்களங்கமாகிய அன்பு வைத்த இயற்பகையே, நீ உன் மனைவியோடும் நம்முடனே வா" என்று திருவாய்மலர்ந்து, அந்தர்த்தானமாயினர். இயற்பகைநாயனரும் மனைவியாரும் சிவலோகத்தை அடைந்து, பேரின்பத்தை அனுபவித்து வாழ்ந்திருந்தார்கள். யுத்தத்திலே இறந்த அவர்கள் பந்துக்களும் வானுலகத்தை அடைந்து இன்பமனுபவித்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

இயற்பகைநாயனர் புராணம்

முற்றிற்று.

---

௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## இளையான்குடிமாறநாயனர் புராணம்.

வேறு.

அம்பொனீடியவம்பலத்தினிலாடுவாரடிசூடுவார்
தம்பிரானடிமைத்திறத்துயர்சால்பின்மேன்மைதரித்துளார்
நம்புவாய்மையினீடுசூத்திரநற்குலஞ்செய்தவத்தினல்
இம்பர்ஞாலம்விளக்கினரிளையான்குடிப்பதிமாறனர். (க)

ஏரின்மல்குவளத்தினல்வருமெல்லையில்லதொர்செல்வமு
நீரின்மல்கியவேணியாரடியார்திறத்துநிறைந்ததோர்
சீரின்மல்கியவன்பின்மேன்மைதிருந்தமன்னியசிந்தையும்
பாரின்மல்கவிரும்பிமற்றவைபெற்றநீடுபயன்கொள்வார். (உ)

ஆரமென்புபுனைந்தவையர்தமன்பரென்பதொர்தன்மையா
னேரவந்தவர்யாவராயினுநித்தமாகியபத்திமுன்
கூரவந்தெதிர்கொண்டுகைகள்குவித்துநின்றுசெவிப்புலத்
தீரமென்மதுரப்பதம்பரிவெய்தமுன்னுரைசெய்தபின். (௩)

கொண்டுவந்துமனைப்புகுந்துகுலாவுபாதம்விளக்கியே
மண்டுகாதலினதனத்திடைவைத்தருச்சனைசெய்தபின்

உண்டிநாலுவிதத்திலாறுசுவைத்திறத்தினிலொப்பிலா
அண்டர்நாயகர்தொண்டரிச்சையிலமுதுசெய்யவளித்துளார். (௪)

ஆளுநாயகரன்பரானவரளவிலாருளமகிழவே
நாளுநாளுநிறைந்துவந்துநுகர்ந்ததன்மையினன்மையா
னீளுமாநிதியின்பரப்புநெருங்குசெல்வநிலாவியெண்
டோளினாரளகைக்கிருத்தியதோழனாரெனவாழுநாள். (௫)

செல்வமேவியநாளிலிச்செயல்செய்வதன்றியுமெய்யினால்
அல்லனல்குரவானபோதினும்வல்லரென்றறிவிக்கவே
மல்லனீடியசெவ்வமெல்லமறைந்துநாடொறுமாறிவந்
தொல்லையில்வறுமைப்பதம்புகவுன்னினார்தில்லைமன்னினார். (௬)

இன்னவாறுவளஞ்சுருங்கவுமெம்பிரானிளையான்குடி
மன்னன்மாறன்மனஞ்சுருங்குதலின்றியுள்ளனமாறியுந்
தன்னைமாறியிறுக்கவுள்ளகடன்கடக்களகொண்டுபின்
முன்னைமாறிறிருப்பணிக்கண்முதிர்ந்தசெய்கைபராயினார். (௭)

மற்றவன்செயலின்னதன்மையதாகமாலயனானவக்
கொற்றவேனமுமன்னமுந்தெரியாதகொள்கையராயினார்
பெற்றமூர்வதுமின்றிநீடியபேதையாளுடனின்றியோர்
நற்றவத்தவர்வேடமேகொடுஞாலமுய்ந்திடநண்ணினார். (௮)

வேறு.

மாரிக்காலத்திரவினில்வைகியோர்
தாரிப்பின்றிப்பசிதலைக்கொள்வது
பாரித்தில்லமடைத்தபின்பண்புற
வேரித்தாரான்விருந்தெதிர்கொண்டனன். (௯)

ஈரமேனியைநீக்கியிடங்கொடுத்
தாரவின்னமுதூட்டுதற்காசையாற்
றூரமாதனைநோக்கித்தபோதநர்
தீரவேபசித்தார்செய்வதென்னென. (௰)

நமக்குமுன்பிங்குணவிலையாயினும்
இமக்குலக்கொடிபாகர்க்கினியவர்
தமக்குநாமின்னடிசிறகவுற
அமைக்குமாறெங்ஙனேயணங்கேயென. (௧௧)

மாதுகூறுவன்மற்றொன்றுங்காண்கிலேன்
ஏதிலாருமினித்தருவாரில்லை
போதுவைகிற்றுபோமிடம்வேறிலை
தீதுசெய்வினையேற்கென்செயலென்று, (௧௨)

செல்லனீங்கப்பகல்வித்தியசெந்நென்
மல்லனீர்முளைவாரிக்கொடுவந்தால்

வல்லவாறமுதாக்கலுமாகுமற்
றல்லதொன்றறியேனென்றயர்வுற. (கங)

மற்றமாற்றமனைவியார்கூறமுன்
பெற்றசெல்வமெனப்பெரிதுண்மகிழ்
துற்றகாதலினுலொருப்பட்டனர்
சுற்றுநீர்வயல்செல்லத்தொடங்குவார். (கச)

பெருகுவானம்பிறங்கமழைபொழிந்
தருகுநாப்பணறிவருங்கங்குறுன்
கருகுமையிருளின்கனங்கட்டுவிட்
டுருகுகின்றதுபோன்றதுலகெலாம். (கரு)

எண்ணுமிவ்வுலகத்தவர்யாவருந்
துண்ணெனும்படிதோன்றமுன்றோன்றிடில்
வண்ணநீடியமைக்குழம்பாமென்று
நண்ணல்செய்யாநடுவிருள்யாமத்து. (சசு)

உள்ளமன்புகொண்டூக்கவோர்பேர் † இடாக்
கொள்ளமுன்கவித்துக்குறியின்வழிப்
புள்ளுறங்கும்வயல்புகப்போயினர்
வள்ளலாரிளையான்குடிமாறனார். (கஎ)

காலினற்றடவிச்சென்றுகைகளாற்
சாலிவெண்முளைநீர்வழிச்சார்ந்தன
கோலிவாரியிடாநிறையக்கொண்டு
மேலெடுத்துச்சுமந்தொல்லைமீண்டனர். (கஅ)

வேறு.

வந்தபின்மனைவியாரும்வாய்தலினின்றுவாங்கிச்
சிந்தையில்விரும்பிநீரிற்சேற்றினையலம்பியூற்றி
வெந்தழலடுப்பின்மாட்டவிறகில்லையென்னமேலோர்
அந்தமின்மனையினீடும்அலக்கினையறுத்துவீழ்த்தார். (கக)

முறித்தவையடுப்பின்மாட்டிமுளைவித்துப்பதமுன்கொள்ள
வறுத்தபின்னரிசியாக்கிவாக்கியவுலையிற்பெய்து
வெறுப்பிலின்னடிசிலாக்கிமேம்படுகற்பின்மிக்கார்
கறிக்கினியென்செய்கோமென்றிறைஞ்சினர்கணவனாை. (உ௦)

வழிவருமிளைப்பினோடும்வருந்தியபசியினாலே
அழிவுறுமையனென்னுமன்பினிற்பொலிந்துசென்று
குழிநிரம்பாதபுன்செய்க்குறும்பயிர்தடவிப்பாசப்
பழிமுதல்பறிப்பார்போலப்பறித்தவைகறிக்குநல்க. (உக)

---

† இடா-என்பது-இறைகூடை.

மனைவியார்கொழுநர்தந்தமனமகிழ்கறிகளாய்ந்து
புனலிடைக்கழுவித்தக்கபுனிதபாத்திரத்துக்கைம்மை
வினையினில்வேறுவேறுகறியமுதாக்கிப்பண்டை
நினைவினாற்குறையைநேர்ந்துதிருவமுதமைத்துநின்று. (உஉ)

கணவனார்தம்மைநோக்கிக்கறியமுதானகாட்டி
இணையிலாதவரையீண்டவமுதுசெய்விப்போமென்ன
உணர்வினாலுணரவொண்ணாவொருவரையுணர்த்தவேண்டி
அணையமுன்சென்றுநின்றங்கவர்துயிலகற்றலுற்றார். (உங)

அழுந்தியவிடருணீங்கியடியனேனுய்யவென்பால்
எழுந்தருள்பெரியோயீண்டவமுதுசெய்தருள்கவென்று
தொழும்பனாருரைத்தபோதிற்சோதியாயெழுந்துதோன்றச்
செழுந்திருமனைவியாருந்தொண்டருந்திகைத்துநின்றார். (உச)

மாலயற்கரியநாதன்வடிவொருசோதியாகச்
சாலவேமயங்குவார்க்குச்சங்கரன்றான்மகிழ்ந்தே
ஏலவார்குழலாடன்னோடிடபவாகனனாய்த்தோன்றிச்
சீலமார்பூசைசெய்ததிருத்தொண்டர்தம்மைநோக்கி. (உரு)

அன்பனேயன்பர்பூசையளித்தநீயணங்கினோடும்
என்பெருந்தலத்தையெய்தியிருநிதிக்கிழவன்றானே
முன்பெருநிதியமேந்திமொழிவழியேவல்கேட்ப
இன்பமார்ந்திருக்கவென்றேயருள்செய்தானெவர்க்குமிக்கான். (உசு)

இப்பரிசிவர்க்குத்தக்கவகையினாலின்பநல்கி
முப்புரஞ்செற்றாரன்பர்முன்பெழுந்தருளிப்போனார்
அப்பெரியவர்தந்தூயவடியிணைதலைமேற்கொண்டு
மெய்ப்பொருட்சேதிவேந்தன்செயலினைவிளம்பலுற்றேன். (உஎ)

இளையான்குடிமாறநாயனார்புராணமுற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-சஎசு.

## இளையான்குடிமாறநாயனார் புராணம்.

இளையான்குடியென்னும் ஊரிலே, வேளாளர் குலத்திலே, எத்தொழிலினும் சிறந்த வேளாண்மையால் வரும் குற்றமற்ற அளவிறந்த செல்வத்தையும் சிவனடியார்கண்மேலே முழுமையும் பதிந்த அன்புகொண்ட சிந்தையையும் உடையவராகிய மாறனார் என்பவர் ஒருவரிருந்தார். அவர், தம்முடைய கிருகத்துக்கு வரும் சிவபத்தர்கள் எந்த வருணத்தாராயினும், மெய்யன்போடு அவர்களை எதிர்கொண்டு அஞ்சலிசெய்து, இன்சொற்களைச் சொல்லி, வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வந்து, கரகநீர் கொண்டு அவர்கள் திருவடிகளை விளக்கி, அத்தீர்த்தத்தைச் சிர

மேற்றெளித்து, உள்ளும்பருகி, அத்திருவடிகளை மெல்லிய வஸ்திரத்தினு லொற்றி, ஆசனத்திலிருத்தி, சைவாகம விதிப்படி அருச்சித்து நமஸ்கரித்து, பின்பு-கைப்பு, புளிப்பு, தித்திப்பு, துவர்ப்பு, கார்ப்பு, உவர்ப்பு என்னும் அறுவகைச் சுவையையுடையனவாய், உண்ணப்படுவது, தின்னப்படுவது, நக்கப்படுவது, பருகப்படுவது என நால்வகைப்படும் உணவுகளை அவரவர் பிரீதிப்படி திருவமுதுசெய்விப்பார். இப்படித் தினந்தோறும் மாகேசுரபூசை பண்ணுதலாகிய சிவபுண்ணியத்தினாலே செல்வம் அபிவிருத்தியாக, அவர் குபேரனை ஒத்து வாழ்ந்திருந்தார். அப்படியிருக்குங் காலத்திலே, சிவபெருமான், அவ்விளையான்குடிமாறநாயனார் இந்தச்செய்கையைச் செல்வம் வந்தகாலத்திலன்றி வறுமை வந்த காலத்திலும் தளராது செய்யவல்லவர் என்பதையும், தாம் நல்லோர்களுக்கு வறுமையைக்கொடுத்தல் அவர்கள் நயத்தின்பொருட்டே என்பதையும், அந்நயம் இறுதியிலேயே பலிக்கும் என்பதையும், அக்கருத்தறியாது அதற்குள்ளே புண்ணியஞ்செய்த நமக்குக் கடவுள் இடர் செய்தாரே என்று தம்மை நோதல் பழுதாம் என்பதையும், பிறர்க்குத் தெரிவித்து உய்விக்கும்பொருட்டுத் திருவுளங்கொண்டு, அந்நாயனாரிடத்தில் உள்ள செல்வமெல்லாம் நாடோறும் சுருங்கி வறுமையெய்தும்படி அருள்செய்தார். அப்படிச் செல்வம் சுருங்கவும், நாயனார் மாகேசுரபூசையிலே பதிந்த தம்முடைய மனம் சிறிதும் சுருங்குதலின்றி, தம்மிடத்துள்ள நிலங்கள்முதலியவற்றை விற்றும், தம்மைக் கூட விற்று இறுக்கத்தக்க அவ்வளவு கடன்களை வாங்கியும், முன்போலவே தாஞ்செய்யும் திருப்பணியைவிடாது செய்துவந்தார்.

அவர், மழைக்காலத்திலே மழைபெய்யும் ஒருநாள், இரவில் நெடுநேரம் எதிர்பார்த்திருந்தும், ஒருவருடைய உதவியும் இல்லாமல், பகன்முழுதும் போசனஞ்செய்யாமையால் பசி அதிகப்பட்டு, வீட்டுக்கதவைப்பூட்டிய பின்பு; திருக்கைலாசபதியானவர் சைவவேடங்கொண்டுஎழுந்தருளிவந்து, கதவைத் தட்டி அழைக்க; நாயனார் கதவைத் திறந்து, அவரை உள்ளே அழைத்துக்கொண்டுபோய், மழையினால்நனைந்த அவருடைய திருமேனியைவஸ்திரங்கொண்டு துடைத்து, இருத்தற்கு இடங்கொடுத்து, அவருக்கு அமுதூட்டல் வேண்டும் என்னும் ஆசைமிகுதியால் தம்முடைய மனைவியாரை நோக்கி, இந்தச் சைவர் மிகப்பசிகொண்டு வந்திருக்கின்றார். நமக்கு முன்னமே போசனத்துக்கு ஒன்றுமில்லை. ஆயினும், இவருக்கு எப்படியும் அன்னங்கொடுக்கவேண்டுமே. இதற்கு யாது செய்வோம்'' என்றார். அதற்கு மனைவியார் "வீட்டிலே ஒரு பதார்த்தமுமில்லை. அயலவர்களும் இனி உதவமாட்டார்கள். நெடுநேரம் ஆயிற்று. அரிசிகடன் கேட்கப்போவதற்கு வேறிடமும் இல்லை. பாவியாகிய நான் இதற்கு யாது செய்வேன்'' என்று சொல்லி, பின்பு "இன்று பகற்காலத்திலே வயலில் விதைக்கப்பட்ட ஈரத்தால் முன்

ணமே முளைகொண்டிருக்கின்ற நெல்லைவாரிக்கொண்டு வந்தால், இயன்ற படி அன்னஞ் சமைக்கலாம். இதுவேயன்றி வேறொருவழியும் அறியேன்" என்று சொல்லித்துக்கித்தார். இந்தவார்த்தை செவிப்புலப்படுதற்குமுன், இளையான்குடிமாறநாயனார் மிகமனமகிழ்ந்து, அதற்கு உடன்பட்டு, மிகமழைபொழிகின்ற மகா அந்தகாரமயமாகிய அத்தராத்திரியிலே ஒரு பெரிய இறைகூடையைத் தலையிலே கவிழ்த்துக்கொண்டு, காலினாலே தடவிக் குறிவழியே தம்முடைய வயலிற்சென்று, அதிலே அதிக மழையினால் நீர்மேலே மிதக்கின்ற நென்முளைகளைக் கையினாலே கோலி வாரி, இறைகூடை நிறைய இட்டு, தலையிலேவைத்துச் சுமந்து கொண்டு சீக்கிரம் திரும்பி வந்தார். அவரை எதிர்பார்த்துக்கொண்டு வாயிலிலே நின்ற மனைவியார் மனமகிழ்ச்சியோடு அந்த நென்முளையை வாங்கி, சேறு போம்படி நீரினாலே கழுவியூற்றி, பின்பு தம்முடைய பிராணநாயகரை நோக்கி, "அடுப்பிலே நெருப்பு மூட்டுதற்கு விறகு இல்லையே" என்று சொல்ல; அவர் கிலமாயிருக்கின்ற வீட்டின் மேற்கூரையிலுள்ள வரிச்சுக்களை அறுத்து விழுத்தினார். மனைவியார் அவைகளை முறித்து அடுப்பிலேமாட்டி, நென்முளையை ஈரம் போய்ப் பதமாகும்படி வறுத்து, பின் அரிசியாக்கி, நீர் வார்த்துக் காய்ந்திருக்கிற உலையில் அதையிட்டு, சோறாக்கி, தம்முடைய நாயகரைப் பார்த்து, "இனிக் கறிக்கு யாது செய்வோம்" என்றார். உடனே நாயனார் புறக்கடைத் தோட்டத்திற்குச் சென்று, குழியினின்றும் மேற்படாத சிறுபயிர்களைக் கையினாலே தடவிப் பிடுங்கிக்கொண்டு வந்து, கறி சமைக்கும்படி கொடுக்க; மனைவியார் அவைகளை வாங்கி ஆய்ந்து, நீரினாலே கழுவி, தமது சாமர்த்தியத்தினால் வெவ்வேறு கறியமுதுகள்செய்து முடித்து, நாயகருக்கு அமுதும் கறியும் பாகம்பண்ணப் பட்டமையைத் தெரிவித்து, "சைவரை அமுது செய்விப்போம்" என்று சொன்னார். நாயகர், நித்திரை செய்பவர்போலக் காட்டிய ஐயருக்குச் சமீபத்திற்சென்று, "சுவாமீ, அமுது செய்ய எழுந்தருளும்" என்று சொல்லி அழைக்க; அவர் ஒரு சோதிவடிவமாய் எழுந்து தோன்றினார். அதைக் கண்ட இளையான்குடிமாறநாயனாரும் மனைவியாரும் திகைத்து நின்றார்கள். பின்பு பரமசிவன் பார்வதிதேவியாரோடும் இடபாரூடராய்த் தோன்றி, இளையான்குடிமாறநாயனாரை நோக்கி, "அன்பனே, நம்முடைய அடியார்களை அமுதுசெய்வித்த நீ உன்மனைவியோடும் நம்முடைய பதத்தை அடைந்து, பேரின்பத்தை அனுபவித்துக்கொண்டிரு" என்று திருவாய்மலர்ந்தருளி, அந்தர்த்தானமாயினார்.

திருச்சிற்றம்பலம்.

இளையான்குடிமாறநாயனார்புராணம்

முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மெய்ப்பொருணாயனார் புராணம்.

வேறு.

சேதிநன்னாட்டுநீடு திருக்கோவலூரின்மன்னி
மாதொருபாகரன்பின் வழிவருமலாடர்கோமான்
வேதநன்னெறியின்வாய்மை விளங்கிடமேன்மைபூண்டு
காதலாலீசர்க்கன்பர் கருத்தறிந்தேவல்செய்வார். (க)

அரசியனெறியின்வந்த வறநெறிவழாமற்காத்து
வரைநெடுந்தோளால்வென்று மாற்றலர்முனைகண்மாற்றி
உரைதிறம்பாதநீதி யோங்குநீர்மையினின்மிக்கார்
திரைசெய்நீர்ச்சடையானன்பர் வேடமேசிந்தைசெய்வார். (உ)

மங்கையைப்பாகமாக வுடையவர்மன்னுங்கோயில்
எங்கணும்பூசைநீடி யேழிசைப்பாடலாடல்
பொங்கியசிறப்பின்மல்கப் போற்றுதல்புரிந்துவாழ்வார்
தங்கணாயகருக்கன்பர் தாளலாற்சார்பொன்றில்லார். (ங)

தேடியமாடுநீடு செல்வமுந்தில்லைமன்றுள்
ஆடியபெருமானன்பர்க் காவனவாகுமென்று
நாடியமனத்தினோடு நாயன்மாரணைந்தபோது
கூடியமகிழ்ச்சிபொங்கக் குறைவறக்கொடுத்துவந்தார். (ச)

இன்னவாறொழுகுநாளி லிகற்றிறம்புரிந்தோர்மன்னன்
அன்னவர்தம்மைவெல்லு மாசையாலமர்மேற்கொண்டு
பொன்னணியோடையானை பொருபரிகாலாள்மற்றும்
பன்முறையிழந்துதோற்றுப் பரிபவப்பட்டுப்போனான். (ரு)

இப்படியிழந்தமாற்றா னிகலினால்வெல்லமாட்டான்
மெய்ப்பொருள்வேந்தன்சீல மறிந்துவெண்ணீறுசாத்தும்
அப்பெருவேடங்கொண்டே யற்றத்தில்வெல்வானாகச்
செப்பருநிலைமையெண்ணித் திருக்கோவலூரிற்சேர்வான். (சு)

மெய்யெலாநீறுபூசி வேணிகண்முடித்துக்கட்டிக்
கையினிற்படைகரந்த புத்தகக்கவளியேந்தி
மைபொதிவிளக்கேயென்ன மனத்தினுட்கறுப்புவைத்துப்
பொய்தவவேடங்கொண்டு புகுந்தனன்முத்திநாதன். (எ)

மாதவவேடங்கொண்ட வன்கணன்மாடந்தோறுங்
கோதைசூழளகபாரக் குழைக்கொடியாடமீது
சோதிவெண்கொடிகளாடுஞ் சுடர்நெடுமறுகிற்போகிச்
சேதியர்பெருமான்கோயிற் றிருமணிவாயிற்சேர்ந்தான். (அ)

கடையுடைக்காவலாளர் கைதொழுதேறநின்றே
உடையவர்தாமேவந்தா ருள்ளெழுந்தருளுமென்னத்
தடைபலபுக்கபின்பு தனித்தடைநின்றதத்தன்
இடைதெரிந்தருளவேண்டுந் துயில்கொளுமிறைவனென்றான். (௯)

என்றவன்கூறக்கேட்டே யானிவற்குறுதிகூற
நின்றிடுநீயுமென்றே யவனையுநீக்கிப்புக்குப்
பொன்றிகழ்பள்ளிக்கட்டிற் புரவலன்றுயிலமாடே
மன்றலங்குழன்மென்சாயன் மாதேவியிருப்பக்கண்டான். (௧௦)

கண்டுசென்றணையும்போது கதுமெனவெழுந்துதேவி
வண்டலர்மாலையானை யெழுப்பிடவுணர்ந்துமன்னன்
அண்டர்நாயகனார்தொண்ட ராமெனக்குவித்தசெங்கை
கொண்டெழுந்தெதிரேசென்று கொள்கையின்வணங்கிநின்று. (௧௧)

மங்கலம்பெருகமற்றென் வாழ்வுவந்தணைந்ததென்ன
இங்கெழுந்தருளப்பெற்ற தென்கொலோவென்றுகூற
உங்கணாயகனார்முன்ன முரைத்தவாகமநூன்மண்மேல்
எங்குமில்லாததொன்று கொடுவந்தேனியம்பவென்றான். (௧௨)

பேறெனக்கிதன்மேலுண்டோ பிரானருள்செய்தவிந்த
மாறிலாகமத்தைவாசித் தருள்செய்யவேண்டுமென்ன
நாறுபூங்கோதைமாது தவிரவேநானுநீயும்
வேறிடத்திருக்கவேண்டு மென்றவன்விளம்பவேந்தன். (௧௩)

திருமகளென்னநின்ற தேவியார்தம்மைநோக்கிப்
புரிவுடன்விரையவந்தப் புரத்திடைப்போகவேவித்
தருதவவேடத்தானைத் தவிசின்மேலிருத்தித்தாமும்
இருநிலத்திருந்துபோற்றி யினியருள்செய்யுமென்றார். (௧௪)

கைத்தலத்திருந்தவஞ்சக் கவளிகைமடிமேல்வைத்துப்
புத்தகமவிழ்ப்பான்போன்று புரிந்தவர்வணங்கும்போதிற்
பத்திரம்வாங்கித்தான்மு னினைந்தவப்பரிசேசெய்ய
மெய்த்தவவேடமேமெய்ப் பொருளெனத்தொழுதுவென்றார். (௧௫)

மறைத்தவன்புகுந்தபோதே மனமங்குவைத்ததத்தன்
இறைப்பொழுதின்கட்கூடி வாளினாலெறியலுற்றா
னிறைத்தசெங்குருதிசோர வீழ்கின்றார்நீண்டகையாற்
றறைப்படுமளவிற்றத்தா நமரெனத்தடுத்துவீழ்ந்தார். (௧௬)

வேதனையெய்திவீழ்ந்த வேந்தரால்விலக்கப்பட்ட
தாதனாந்தத்தன்றானுந் தலையினால்வணங்கித்தாங்கி
யாதுநான்செய்கேனென்ன வெம்பிரானடியார்போக
நீதிடைவிலக்காவண்ணங் கொண்டுபோய்விடுநீயென்றார். (௧௭)

அத்திறமறிந்தாரெல்லா மரசனைத்தீங்குசெய்த
பொய்த்தவன்றன்னைக்கொல்வோ மெனப்புடைசூழ்ந்தபோது
தத்தனுமவரையெல்லாந் தடுத்துடன்கொண்டுபோவான்
இத்தவன்போகப்பெற்ற திறைவனதாணையென்றான். (கஅ)

அவ்வழியவர்களெல்லா மஞ்சியேயகலநீங்கச்
செவ்வியநெறியிற்றத்தன் றிருநகர்கடந்துபோந்து
கைவ்வடிநெடுவாளேந்தி யாளுறுக்கானஞ்சேர
வெவ்வினைக்கொடியோன்றன்னை விட்டவன்மீண்டுபோந்தான். (கசு)

மற்றவன்கொண்டுபோன வஞ்சனைவேடத்தான்மேற்
செற்றவர்தம்மைநீக்கித் தீதிலாநெறியில்விட்ட
சொற்றிறங்கேட்கவேண்டிச் சோர்கின்றவாவிதாங்குங்
கொற்றவன்முன்புசென்றான் கோமகன்குறிப்பினின்றான். (௨௦)

சென்றடிவணங்கிநின்று செய்தவவேடங்கொண்டு
வென்றவற்கிடையூறின்றி விட்டனனென்றுகூற
இன்றெனக்கையன்செய்த தியார்செய்யவல்லாரென்று
நின்றவன்றன்னைநோக்கி நிறைபெருங்கருணைகூர்ந்தார். (௨க)

அரசியலாயத்தார்க்கு மழிவுறுங்காதலார்க்கும்
விரவியசெய்கைதன்னை விளம்புவார்விதியினாலே
பரவியதிருநீற்றன்பு பாதுகாத்துய்ப்பீரென்று
புரவலன்மன்றுளாடும் பூங்கழல்சிந்தைசெய்தான். (௨௨)

தொண்டனார்க்கிமயப்பாவை துணைவனாரவர்முன்றம்மைக்
கண்டவாறெதிரேநின்று காட்சிதந்தருளிமிக்க
அண்டவானவர்கட்கெட்டா வருட்கழனிழல்சேரக்
கொண்டவரிடையறாமற் கும்பிடுங்கொள்கையீந்தார். (௨௩)

இன்னுயிர்செகுக்கக்கண்டு மெம்பிரானன்பரென்றே
நன்னெறிகாத்தசேதி நாதனார்பெருமைதன்னில்
என்னுரைசெய்தேனாக விகல்விறன்மிண்டர்பொற்றாள்
சென்னிவைத்தவர்முன்செய்த திருத்தொண்டுசெப்பலுற்றேன். (௨௪)

ஆக-திருவிருத்தம்-௫௦௦.

---

திருச்சிற்றம்பலம்.

சேதிநாட்டிலே, திருக்கோவலூரிலே, மலையமானாட்டாருக்கு அரசரும், வேதாகமங்களின் உண்மையை அறிந்தவரும், சிவனடியார்களுடைய திருவேடத்தையே மெய்ப்பொருளெனச் சிந்தைசெய்பவருமாகிய மெய்ப்பொருணாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தம்முடைய இராச்சியத்தைத் தருமநெறி தவறாமல் நடத்தியும், தம்மை எதிர்த்த பகைவர்களை ஜயங்கொண்டும், சிவாலயங்களெங்கும் நித்திய நைமி

த்திகங்களைச் சிறப்பாக நடத்தியும், சிவபத்தர்கள் வந்தபொழுது மன மகிழ்ச்சியோடும் வேண்டிய திரவியங்களைப் பூர்த்தியாகக் கொடுத்தும், வந்தார்.

இப்படி நடக்கும் காலத்திலே, முத்திநாதன் என்கின்ற ஓரரசனவன் அவரை வெல்லுதற்கு விரும்பி, யுத்தசந்நத்தனாகி, அவரோடு பொருது, யானை குதிரை தேர் காலாள் என்னுஞ் சேனைகளைப் பலமுறை இழந்து, தோற்று, அவமானப்பட்டுப்போனான். பின்பு அவன் யுத்தத்தினாலே அவரை ஜயிக்கமாட்டாதவனாகி, அவரிடத்திலே இருக்கின்ற அடியார்பத்தியை அறிந்து, விபூதி தரிக்கின்ற அவ்வடியார்வேடங்கொண்டு அவரைக் கபடத்தினால் வெல்ல நினைந்து, சரீரமுழுதிலும் விபூதி தரித்து, சடைகளைச் சேர்த்துக் கட்டி, புத்தகக்கவளிபோலத் தோன்றுகின்ற ஆயுதத்தை மறைத்து வைத்திருக்கின்ற ஓர்கவளியை எடுத்துக்கொண்டு, திருக்கோவலூரிற்சென்று, மெய்ப்பொருணயனாருடைய திருமாளிகை வாயிலை அடைந்தான். அப்பொழுது வாயிற்காவலாளர் அவனை அஞ்சலிசெய்து, "சுவாமீ, உள்ளே எழுந்தருளும்" என்று சொல்ல; அம்முத்திநாதன் உள்ளே போய், மற்றவாயில்களையும் அப்படியே கடந்து சென்று, இறுதிவாயிலை அடைந்தபொழுது, அவ்வாயிற் காவலாளனாகிய தத்தனென்பவன் "இப்பொழுது இராசா நித்திரைசெய்கின்றார். நீர் சமயமறிந்து போகவேண்டும்" என்றான். அதைக் கேட்ட முத்திநாதன் "நான் அவருக்குச் சாஸ்திரோபதேசஞ் செய்யப்போகின்றபடியால், நீ என்னைத் தடுக்கலாகாது" என்றுசொல்லி, உள்ளே புகுந்து, மெய்ப்பொருணயனார் கட்டிலிலே நித்திரைசெய்ய அவர் மனைவியார் பக்கத்திலிருக்கக் கண்டும், சமீபத்திலே சென்றான்.

அப்பொழுது, மனைவியார் சீக்கிரம் எழுந்து, மெய்ப்பொருணயனாரை எழுப்ப; அவர் விழித்தெழுந்து, அவனை எதிர்கொண்டு வணங்கி நின்று, "சுவாமீ, தேவரீர் இங்கே எழுந்தருளுதற்குக் காரணம் யாது" என்று வினவினார். அதற்கு முத்திநாதன் "உங்கள் கடவுளாகிய பரமசிவன் ஆதிகாலத்திலே அருளிச்செய்த சைவாகமங்களுள் எவ்விடத்துங் காணப்படாத ஓராகமத்தை உமக்குப் போதிக்கும்படி கொண்டுவந்தேன்" என்றான். மெய்ப்பொருணயனார் அதைக் கேட்டு "இதைப் பார்க்கிலும் உயர்ந்தபேறு அடியேனுக்கு உண்டோ? அந்தச் சைவாகமத்தை வாசித்து அடியேனுக்கு அதன் பொருளை அருளிச்செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க; முத்திநாதன் "பட்டத்தரசி இல்லாமல் நீரும் நானும் வேறிடத்திருக்கவேண்டும்" என்றான். உடனே மெய்ப்பொருணயனார் தம்முடைய மனைவியாரை அந்தப்புரத்துக்குப் போம்படி செய்து, பொய்வேடங்கொண்ட முத்திநாதனை ஆசனத்தின்மேல் இருத்தி, தாம் கீழே இருந்துகொண்டு, "இனி அருளிச்செய்யும்" என்றார். முத்திநாதன் தன்கையில் இருந்த வஞ்சக்கவளிகையை மடியின்மேலே

வைத்து, புத்தகம் அவிழ்ப்பவன்போல அவிழ்த்து, மெய்ப்பொருணாய னார் வணங்கும்போது, அக்கவளிகையில் மறைத்து வைத்த உடைவாளை எடுத்து, அவரைக் குத்த; அவர் சிவவேடமே மெய்ப்பொருளென்று, அவனை வணங்கினார். அம்முத்திநாதன் உள்ளே புகுந்தபொழுதே "இராசாவுக்கு என்ன அபாயம் சம்பவிக்குமோ" என்று மனசை அங் கேயே செலுத்திக்கொண்டிருந்த தத்தனென்பவன் நொடியளவிலே உள்ளே புகுந்து, தன்கைவாளினால் அப்பகைவனை வெட்டப்போனான். அதற்குமுன் உடைவாளினாலே குத்தப்பட்டு இரத்தஞ்சொரிய விழப் போகின்ற மெய்ப்பொருணாயனார், விழும்பொழுது, "தத்தனே, இவர் சிவனடியாராதலால் இவருக்கு ஓரிடையூறும் செய்யாதே" என்று கையி னாலே தடுத்து விழுந்தார். அப்பொழுது தத்தன் மெய்ப்பொருணாய னாரைத் தலையினால் வணங்கி, அவரைத் தாங்கி, "அடியேன் செய்யவே ண்டிய குற்றேவல் யாது" என்று கேட்க; மெய்ப்பொருணாயனார் "வழி யிலே இவருக்கு யாவரொருவரும் இடையூறு செய்யாதபடி இவரை அழைத்துக்கொண்டுபோய் விடு" என்று சொன்னார். அப்படியே தத் தன் முத்திநாதனை அழைத்துக்கொண்டு போம்பொழுது அம்முத்திநா தன் இராசாவைக் குத்தின சங்கதியை அறிந்தவர்களெல்லாரும் அவனைக் கொல்லும்படி வந்து சூழச்சூழ, அவர்களெல்லாரையும், "இந்தச் சிவப த்தருக்கு ஒருவரும் இடையூறு செய்யாதபடி இவரை அழைத்துக்கொ ண்டுபோய் விடும்பொருட்டு இராசாவே எனக்கு ஆஞ்ஞாபித்தார்" என்று சொல்லி, தடுத்தான். அவர்களெல்லாரும் அதைக் கேட்டவு டனே பயந்து நீங்கிவிட; தத்தன் அவனை அழைத்துக்கொண்டு நகரத் தைக்கடந்து சென்று, அவனுக்குரிய காட்டுவழியிலே அவனை விட்டு, நக ரத்துக்குத் திரும்பி, சிவவேடங்கொண்ட முத்திநாதனை யாதொரு இடை யூறு வராமல் அழைத்துக்கொண்டுபோய் விட்ட சமாசாரத்தைக் கேட்ப தற்கு விரும்பி முன்னேயே நீங்கிவிடக்கூடிய உயிரைத் தாங்கிக்கொண் டிருக்கும் மெய்ப்பொருணாயனாருக்குமுன் சென்று, வணங்கி நின்று, "சிவபத்தரை இடையூறு ஒன்றும் வராதபடி கொண்டுபோய் விட்டேன்" என்று சொன்னான். அதைக் கேட்ட மெய்ப்பொருணாயனார் "இன்றை க்கு நீ எனக்குச் செய்த உபகாரத்தை வேறார் செய்ய வல்லவர்" என்று சொல்லி, பின்பு தமக்குப் பின் அரசாளுதற்குரிய குமாரர்களையும் மந்திரி முதலானவர்களையும் நோக்கி, சைவாகமவிதிப்படி விபூதிமேல் வைத்த அன்பைப் பாதுகாக்கும்படி போதித்து, கனகசபையிலே ஆனந்ததாண் டவம் செய்தருளுகின்ற சபாநாதரைத் தியானம்பண்ணினார். அப்பொ ழுது சபாநாதர் மெய்ப்பொருணாயனாருக்குத் தோன்றி, அவரைத் தம் முடைய திருவடியிலே சேர்த்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.

மெய்ப்பொருணாயனார்புராணமுற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## விறன்மிண்டநாயனூர் புராணம்.

வேறு.

விரைசெய்நறும்பூந்தொடையிதழி வேணியார்தங்கழல்பரவிப்
‡ பரசுபெறுமாதவமுனிவன் பரசிராமன்பெறுநாடு
திரைசெய்கடலின்பெருவளனுந் திருந்துநிலனின்செழுவளனும்
வரையின்வளனுமுடன்பெருகி மல்குநாடுமலைநாடு. (க)

வாரிசொரியுங்கதிர்முத்தும் வயன்மென்கரும்பிற்படுமுத்தும்
வேரல்விளையுங்குளிர்முத்தும் வேழமருப்பினொளிர்முத்து
மூரலெனச்சொல்வெண்முத்த நகையர்தெரிந்துமுறைகோக்குஞ்
சேரர்திருநாட்டூர்களின்முன் சிறந்தமூதூர்செங்குன்றூர். (உ)

என்னும்பெயரின்விளங்கியுல கேறும்பெருமையுடையதுதான்
அன்னம்பயிலும்வயலுழவி னமைந்தவளத்தாலாய்ந்தமறை
சொன்னநெறியின்வழியொழுகுந் தூயகுடிமைத்தலைநின்றூர்
மன்னுங்குலத்தின்மாமறைநூன் மரபிற்பெரியோர்வாழ்பதியாம். (ந)

அப்பொற்பதியினிடைவேளாண் குலத்தைவிளக்கவவதரித்தார்
செப்பற்கரியபெருஞ்சீர்த்திச் சிவனூர்செய்யகழல்பற்றி
எப்பற்றினையுமறவெறிவா ரெல்லைதெரியவொண்ணுதார்
மெய்ப்பத்தர்கள்பாற்பரிவுடையா ரெம்பிரானூர்விறன்மிண்டர். (ச)

நதியுமதியும்புனைந்தசடை நம்பர்விரும்பிநலஞ்சிறந்த
பதிகளெங்குங்கும்பிட்டுப் படருங்காதல்வழிச்செல்வார்
முதிருமன்பிற்பெருந்தொண்டர் முறைமைநீடுதிருக்கூட்டத்
தெதிர்முன்பரவுமருள்பெற்றே யிறைவர்பாதந்தொழப்பெற்றூர். (ரு)

பொன்றூழருவிமலைநாடு கடந்துகடல்சூழ்புவியெங்குஞ்
சென்றூளுடையாரடியவர்தந் திண்மையொழுக்கநடைசெலுத்தி
வன்றூண்மேருச்சிலைவளைத்துப் புரங்கள்செற்ற § வைதிகத்தேர்
நின்றூரிருந்ததிருவாரூர் பணிந்தார்நிகரொன்றில்லாதார். (சு)

திருவார்பெருமைதிகழ்கின்ற தேவாசிரயனிடைப்பொலிந்து
மருவாநின்றசிவனடியார் தம்மைத்தொழுதுவந்தணையா

¶ பரசு என்பது - கோடாலி.

§ வேதன் - என்னும் பிரமன் சாரதியாயும், வேதங் குதிரைகளாயும் பொருந்திய தேராதலால் வைதிகத் தேரெனப்பட்டது.

தொருவாறேதுங்கும்வன்றெண்டர் புறகென்றுரைப்பச்சிவனருளாற்
பெருகாநின்றபெரும்பேறு பெற்றார்மற்றும்பெறநின்றார். (எ)

சேணார்மேருச்சிலைவளைத்த சிவனாரடியார்திருக்கூட்டம்
பேணாதேகுமூரனுக்கும் பிரானுந்தன்மைப்பிறைசூடிப்
பூணாரரவம்புனைந்தார்க்கும் புறகென்றுரைக்கமற்றவர்பாற்
கோணாவருளைப்பெற்றார்மற் றினியார்பெருமைகூறுவார். (அ)

ஞாலமுய்யநாமுய்ய நம்பிசைவநன்னெறியின்
சீலமுய்யத்திருத்தொண்டத் தொகைமுன்பாடச்செழுமறைகள்
ஓலமிட்டுமுணர்வரியா ரடியாருடனுமுளதென்றால்
ஆலமுதுசெய்தபிரா னடியார்பெருமையறிந்தாரார். (கூ)

ஒக்கநெடுநாளிவ்வுலகி லுயர்ந்தசைவப்பெருந்தன்மை
தொக்கதலைமைநெறிபோற்றித் தொண்டுபெற்றவிறன்மிண்டர்
தக்கவகையாற்றம்பெருமா னருளினாலேதாணிழற்கீழ்
மிக்ககணநாயகராகுந் தன்மைபெற்றுவிளங்கினார். (க0)

வேறுபிறிதென்றிருத்தொண்டத் தொகையாலுலகுவிளங்கவரும்
பேறுதனக்குக்காரணராம் பிரானார்விறன்மிண்டரைப்பெருமை
கூறுமளவென்னளவிற்றே யவர்தாள்சென்னிமேற்கொண்டே
யாறைவணிகரமர்நீதி யன்பர்திருத்தொண்டறைகுவாம். (கக)

ஆக-திருவிருத்தம்-௫கக.

திருச்சிற்றம்பலம்.

மலைநாட்டிலே, செங்குன்றூரிலே, வேளாளர்குலத்திலே, பரம சிவனுடைய திருவடிகளை மனசில் இருத்தி உட்பற்றுப் புறப்பற்றுக்களை அறுத்தவரும், அடியார் பத்தியிலே உயர்வொப்பில்லாதவருமாகிய விற ன்மிண்டநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர், சிவஸ்தலங்களுக் குப் போனபொழுதெல்லாம், முன் அடியார் திருக்கூட்டங்களுக்கு எதி ரேபோய், அவர்களை வணங்கிக்கொண்டே, பின் சிவபெருமானை வண ங்குகின்றவர். அவர் தாம் வசிக்கின்ற மலைநாட்டை நீங்கி, பலதலங்க ளினும் சஞ்சரித்து, சிவனடியார்கள் ஒழுகும் ஒழுக்கத்தை அனுசரித்து, திருவாரூரை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டிருந்தார்.

ஒருநாள் சுந்தரமூர்த்திநாயனார் தேவாசிரயமண்டபத்தில் எழுந் தருளியிருக்கின்ற சிவனடியார்களை அடைந்து வணங்காமல் ஒருபிரகா ரம் ஒதுங்கிச் சென்றதை அவ்விறன்மிண்டநாயனார் கண்டு, "அடியார் களை வணங்காமற் செல்கின்ற வன்றொண்டன் அவ்வடியார்களுக்குப் புறகு; அவனை வலிய ஆட்கொண்ட பரமசிவனும் புறகு" என்றார். சுந்தரமூர்த்திநாயனார் அவ்விறன்மிண்ட நாயனாரிடத்திலுள்ள சங்கம

பத்தி வலிமையைக் கண்டு, அவ்வடியார்கண்மேலே திருத்தொண்டத் தொகை என்னுந் திருப்பதிகத்தைப்பாடினார். அதைக் கேட்ட விறன் மிண்டநாயனூர் மிகமகிழ்ந்து, "இவ்வன்றொண்டருடைய மனம் அடியாரிடத்திலே பதிந்திருக்கின்றது" என்று அருளிச்செய்தார். இந்தச் சங்கமபத்தி வலிமையைக் கண்ட பரமசிவனூர் அவ்விறன்மிண்டநாயனூரைத் தம்மைச் சேவிக்கின்ற கணங்களுக்குத் தலைவராக்கியருளினார்.

திருச்சிற்றம்பலம்.

விறன்மிண்டநாயனூர்புராணமுற்றிற்று.

---

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அமர்நீதிநாயனூர் புராணம்.

வேறு.

சீர்நீடிய செம்பியர்பொன்னிநன் னாட்டுக்
காரின்மேவிய களியளிமலர்ப்பொழில் சூழ்ந்து
தேரின்மேவிய செழுமணிவீதிகள் சிறந்து
பாரினீடிய பெருமைசேர்பதிபழை யாறை. (க)

மன்னுமப்பதி வணிகர்தங்குலத்தினில் வந்தார்
பொன்னுமுத்துநன் மணிகளும்பூந்துகின் முதலா
எந்நிலத்தினு முள்ளனவருவளத் தியல்பால்
அந்நிலைக்கண்மிக் கவரமர்நீதியா ரென்பார்.

சிந்தைசெய்வது சிவன்கழலல்லதொன் றில்லார்
அந்திவண்ணர்த மடியவர்க்கமுதுசெய் வித்துக்
‡ கந்தைகீளுடை கோவணங்கருத்தறிந் துதவி
வந்தசெல்வத்தின் வளத்தினல் வரும்பயன் கொள்வார். (௩)

முக்கணக்கரா முதல்வனூரவர்திரு நல்லூர்
மிக்கசீர்வளர் திருவிழாவிருப்புடன் வணங்கித்
தக்கவன்பர்க ளமுதுசெய்திருமடஞ் சமைத்தார்
தொக்கசுற்றமுந் தாமும்வந்தணைந்தனர் தூயோர். (௪)

மருவுமன்பொடு வணங்கினர்மணிகண்டர் நல்லூர்த்
திருவிழாவணி சேவித்துத்திருமடத் தடியார்
பெருகுமின்பமோ டமுதுசெய்திடவருள் பேணி
உருகுசிந்தையின் மகிழ்ந்துறைநாளிடை யொருநாள். (௫)

---

‡ கந்தை என்பது - பொந்தை. அதாவது நாலைந்து ஒன்றன்மேலொன்றாக வைத்து நூலிழைகளோட்டப்பட்டிருக்கும் போர்வை வஸ்திரம். கீள் என்பது - அரைஞாணுக்குப்பதிலாகத் துறவிகள் கட்டிக்கொள்வது.

பிறைத்தளிர்ச்சடைப் பெருந்தகைப்பெருந்திரு நல்லூர்க்
கறைக்களத்திறை கோவணப்பெருமைமுன் காட்டி
நிறைத்தவன்புடைத் தொண்டர்க்குநீடருள் கொடுப்பான்
மறைக்குலத்தொரு பிரமசாரிகள்வடி வாகி. (௬)

செய்யபுன்சடை கரந்ததோர்திருமுடிச் சிகையுஞ்
சைவவெண்டிரு நீற்றுமுண்டத்தொளித் தழைப்பு
மெய்யில்வெண்புரி நூலுடன்விளங்குமான் றோலும்
கையின்மன்னிய பவித்திரமரகதக் கதிரும். (௭)

முஞ்சிநாணுற முடிந்ததுசாற்றிய வரையிற்
றஞ்சமாமறைக் கோவணவாடையின் றசைவும்
வஞ்சவல்வினைக் கறுப்பறுமனத்தடி யார்க
ணெஞ்சினீங்கிடா வடிமலர்நீணிலம் பொலிய. (௮)

கண்டவர்க்குறு காதலின்மனங்கரைந் துருகத்
தொண்டரன்பெனுந் தூநெறிவெளிப்படுப் பாராய்த்
தண்டின்மீதிரு கோவணநீற்றுப்பை தருப்பை
கொண்டுவந்தயர் நீதியார்திருமடங் குறுக. (௯)

வடிவுகாண்டலு மனத்தினுமுகமிக மலர்ந்து
கடிதுவந்தெதிர் வணங்கியிம்மடத்தினிற் காணும்
படியிலாதநீ ரணையமுன்பயிறவ மென்னோ
அடியனேன்செய்த தென்றனரமர்நீதி யன்பர். (௧௦)

பேணுமன்பரை நோக்கிநீர்பெருகிய வடியார்க்
கூணுமேன்மையி லூட்டிநற்கந்தைகீ ளுடைகள்
யாணர்வெண்கிழிக் கோவணமீதல்கேட் டும்மைக்
காணவந்தன மென்றனன்கண்ணுதற் கரந்தோன். (௧௧)

என்றுதம்பிரா னருள்செயவித்திரு மடத்தே
நன்றுநான்மறைப் பெருந்தவரமுதுசெய் தருளத்
துன்றுவேதியர் தூய்மையினமைப்பது முளதால்
இன்றுநீருமிங் கமுதுசெய்தருளுமென் றிறைஞ்ச. (௧௨)

வணங்குமன்பரை நோக்கியம்மறையவ ரிசைந்தே
அணங்குநீர்ப்பொன்னி யாடிநான்வரமழை வரினும்
உணங்குகோவணம் வைத்துநீர்தாருமென் றொருவெண்
குணங்கொள்கோவணந் தண்டினிலவிழ்த்தது கொடுப்பார். (௧௩)

ஓங்குகோவணப் பெருமையையுள்ளவா றுமக்கே
ஈங்குநான்சொல வேண்டுவதில்லைநீ ரிதனை
வாங்கிநான்வரு மளவுமும்மிடத்திக ழாதே
ஆங்குவைத்துநீர் தாருமென்றவர்கையிற் கொடுத்தார். (௧௪)

கொடுத்தகோவணங் கைக்கொண்டுகோதிலா வன்பர்
கடுப்பிலிங்கெழுந் தருளுநீர்குளித்தெனக் கங்கை
மடுத்ததும்பிய வளர்சடைமறைத்தவம் மறையோர்
அடுத்ததெண்டிரைப் பொன்னிநீராடுதற் ககன்றார். (௧௫)

தந்தகோவணம் வாங்கியதனிப்பெருந் தொண்டர்
முந்தையந்தணர் மொழிகொண்டுமுன்புதாங் கொடுக்குங்
கந்தைகீளுடை கோவணமன்றியோர் காப்புச்
சிந்தைசெய்துவே றிடத்தொருசேமத்தின் வைத்தார். (௧௬)

போனவேதியர் வைத்தகோவணத்தினைப் போக்கிப்
பானலந்துறைப் பொன்னிநீர்படிந்துவந் தாரோ
தூநறுஞ்சடைக் கங்கைநீர்தோய்ந்துவந் தாரோ
வானநீர்மழை பொழிந்திடநனைந்துவந் தணைந்தார். (௧௭)

கதிரிளம்பிறைக் கண்ணியர்நண்ணிய பொழுதின்
முதிருமன்புடைத் தொண்டர்தாமுறைமையின் முன்னே
அதிகநன்மையி னறுசுவைத்திருவமு தாக்கி
எதிரெழுந்துசென் றிறைஞ்சிடநிறைந்தநூன் மார்பர். (௧௮)

தொண்டரன்பெனுந் தூயநீராடுதல் வேண்டி
மண்டுதெண்புனன் மூழ்கியவீரத்தை மாற்றத்
தண்டின்மேலுள நீரநான்றந்தகோ வணத்தைக்
கொண்டுவாருமென் றுரைத்தனர்கோவணக் கள்வர். (௧௯)

ஐயர்கைதவ மறிவுறாதவர்கடி தணுக
எய்திநோக்குறக் கோவணமிருந்தவே றிடத்தின்
மையில்சிந்தையர் கண்டிலர்வைத்தகோ வணமுன்
செய்ததென்னென்று திகைத்தனர்தேடுவா ரானார். (௨௦)

பொங்குவெண்கிழிக் கோவணம்போயின நெறிமேற்
சங்கையின்றியே தப்பினதென்றுதன் சரக்கில்
எங்குநாடியுங் கண்டிலரென்செய்வார் நின்றார்
அங்கண்வேதியர் பெருந்தொடக்கினிலகப் பட்டார். (௨௧)

மனைவியாரொடு மன்னியகிளைஞருந் தாமும்
இனையதொன்றுவந் தெய்தியதெனவிடர் கூர்ந்து
நினைவதொன்றிலர் வருந்தினர்நிற்கவு மாட்டார்
புனையவேறொரு கோவணங்கொடுபுறப் பட்டார். (௨௨)

அத்தர்முன்புசென் றடிகணீர்தந்தகோ வணத்தை
வைத்திடத்துநான் கண்டிலன்மற்றுமோ ரிடத்தில்
உய்த்தொளித்தன ரில்லையஃதொளித்தவா றறியேன்
இத்தகைத்தவே றதிசயங்கண்டிலே னென்று. (௨௩)

வேறுநல்லதோர் கோவணம்விரும்பிமுன் கொணர்ந்தேன்
கீறுகோவண மன்றுநெய்தமைத்தது கிளர்கோ
ணீறுசாற்றிய நெற்றியீர்மற்றது களைந்து
மாறுசாற்றியென் பிழைபொறுப்பீரென வணங்க. (உச)

நின்றவேதியர் வெகுண்டமர்நீதியார் நிலைமை
நன்றுசால்வு நாளிடைகழிந்தது மன்றால்
இன்றுநான்வைத்த கோவணங்கொண்டதற் கெதிர்வே
றென்றுகொள்கென வுரைப்பதேனீரென வுரையா. (உரு)

நல்லகோவணங் கொடுப்பனென்றுலகின்மே லுளுஞ்
சொல்லுவித்ததென் கோவணங்கொள்வது துணிந்தோ
வல்லையீங்குறு வாணிபமழகிதே யுமக்கென்
றெல்லையில்லவ னெரிதுள்ளினலென வெகுண்டான். (உசா)

மறிகரந்துதண் டேந்தியமறையவர் வெகுளப்
பொறிகலங்கிய வுணர்வினராய்முகம் புலர்ந்து
சிறியவென்பெரும் பிழைபொறுத்தருளுவீ ரடியேன்
அறியவந்ததொன் றன்றெனவடிபணிந் தயர்வார். (உஎ)

செயத்தகும்பணி செய்வனிக்கோவண மன்றி
நயத்தகுந்தன நல்லபட்டாடைகண் மணிகள்
உயர்த்தகோடிகொண் டருளுமென்றுடம்பினி லடங்காப்
பயத்தொடுங்குலைந் தடிமிசைப்பலமுறை பணிந்தார். (உஅ)

பணியுமன்பரை நோக்கியப்பரம்பொரு ளானார்
தணியுமுள்ளத்த ராயினர்போன்றுநீர் தந்த
மணியும்பொன்னுநல் லாடையுமற்றுமென் செய்ய
அணியுங்கோவண நேர்தரவமையுமென் றருள. (உகூ)

மலர்ந்தசிந்தைய ராகியவணிகரே றனையார்
அலர்ந்தவெண்ணிறக் கோவணமதற்குநே ராக
இலங்குபூந்துகில் கொள்வதற்கிசைந்தருள் செய்யீர்
நலங்கொள்கோவணந் தரும்பரிசியாதென நம்பர். (ந௦)

உடுத்தகோவண மொழியநாமுங்கையிற் றரநீர்
கெடுத்ததாகமுன் சொல்லுமக்கிழித்தகோ வணநேர்
அடுத்தகோவண மிதுவென்றுதண்டினி லவிழா
எடுத்துமற்றித னிடையிடுங்கோவண மென்றார். (நக)

நன்றுசாலவென் றன்பர்தாமொருதுலை நாட்டக்
குன்றவில்லியார் கோவணமொருதட்டி லிட்டார்
நின்றதொண்டருங் கையினினெய்தகோ வணந்தட்
டொன்றிலேயிட் டிறைநிலாதொழிந்தமை கண்டார். (நஉ)

நாடுமன்பொடு நாயன்மார்க்களிக்குமுன் வைத்த
நீடுகோவண மடையநேராகவொன் றென்றுக்
கோடுதட்டின்மீ திடவிடக்கொண்டெழுந் ததுகண்
டாடுசேவடிக் கடியருமற்புத மெய்தி. (௩௩)

உலகிலில்லதோர் மாயையிக்கோவண மொன்றுக்
கலகில்கோவண மொத்திலவென்றதி சயித்துப்
பலவுமென்றுகில் பட்டுடனிடவிட வுயர
இலகுபூந்துகிற் பொதிகளையெடுத்துமே லிட்டார். (௩௪)

முட்டிலன்பர்த மன்பிடுந்தட்டுக்கு முதல்வர்
மட்டுநின்றதட் டருளொடுந்தாழ்வுறும் வழக்காற்
பட்டொடுந்துகி லனேககோடிகளிடப் பத்தர்
தட்டுமேற்படத் தாழ்ந்ததுகோவணத் தட்டு. (௩௫)

ஆனதன்மைகண் டடியவரஞ்சியந் தணர்முன்
றூநறுந்துகில் வர்க்கநூல்வர்க்கமே முதலா
மானமில்லன குவிக்கவுந்தட்டின்மட் டிதுவால்
ஏனையென்றன மிடப்பெறவேண்டுமென் றிறைஞ்ச. (௩௬)

மங்கைபாகரா மறையவர்மற்றதற் கிசைந்தே
யிங்குநாமினி வேறென்றுசொல்லுவ தென்கொல்
அங்குமற்றுங்க டனங்களினுகிலு மிடுவீர்
எங்கள்கோவண நேர்நிற்கவேண்டுவ தென்றார். (௩௭)

நல்லபொன்னொடும் வெள்ளியுநவமணித் திரளும்
பல்வகைத்திறத் துலோகமும்புணர்ச்சிகள் பலவும்
எல்லையில்பொருள் சுமந்தவரிடவிடக் கொண்டே
மல்குதட்டுமீ தெழுந்ததுவியந்தனர் மண்ணோர். (௩௮)

தவநிறைந்தநான் மறைப்பொருணூல்களாற் சமைந்த
சிவன்விரும்பிய கோவணமிடுஞ்செழுந் தட்டுக்
கவனிமேலமர் நீதியார்தனமெலா மன்றிப்
புவனம்யாவையு நேர்நிலாவென்பது புகழோ. (௩௯)

நிலைமைமற்றிது நோக்கியநிகரிலார் நேர்நின்
றுலைவில்பஃறன மொன்றொழியாமையுய்த் தொழிந்தேன்
றலைவயானுமென் மனைவியுஞ்சிறுவனுந் தருமேற்
றுலையிலேறிடப் பெறுவதுன்னருளெனத் தொழுதார். (௪௦)

பொச்சமில்லடி மைத்திறம்புரிந்தவ ரெதிர்நின்
றச்சமுன்புற வுரைத்தலுமங்கண ரருளா

னிச்சயித்தவர் நிலையினைத்துலையெனுஞ் * சலத்தால்
இச்சழக்கினின் றேற்றுவாரேறுதற் கிசைந்தார். (சக)

மனமகிழ்ந்தவர் மலர்க்கழல்சென்னியால் வணங்கிப்
புனைமலர்க்குழன் மனைவியார்தம்மொடு புதல்வன்
றனையுடன்கொடு தனித்துலைவலங்கொடு தகவால்
இனையசெய்கையி லேறுவார்கூறுவா ரெடுத்து. (சஉ)

இழைத்தவன்பினி லிறைதிருநீற்றுமெய் யடிமை
பிழைத்திலோமெனிற் பெருந்துலைநேர்நிற்க வென்று
மழைத்தடம்பொழிற் றிருநல்லூரிறைவரை வணங்கித்
தழைத்தவஞ்செழுத் தோதினாேறினர் தட்டில். (சங)

மண்டுகாதலின் மற்றவர்மகிழ்ந்துட னேற
அண்டர்தம்பிரான் றிருவரைக்கோவண மதுவுங்
கொண்டவன்பினிற் குறைபடாவடியவ ரடிமைத்
தொண்டுமொத்தலா லொத்துநேர்நின்றதத் துலைதான். (சச)

மதிவிளங்கிய தொண்டர்தம்பெருமையை மண்ணோர்
துதிசெய்தெங்கணு மதிசயமுறவெதிர் தொழுதார்
கதிர்விசும்பிடை கரந்திடநிரைந்தகற் பகத்தின்
புதியபூமழை யிமையவர்மகிழ்வுடன் பொழிந்தார். (சரு)

அண்டர்பூமழை பொழியமற்றதனிடை யொளித்த
¶ முண்டவேதிய ரொருவழியான்முத னல்லூர்ப்
பண்டுதாம்பயில் கோலமேவிசும்பினிற் பாகங்
கொண்டபேதையுந் தாமுமாய்க்காட்சிமுன் கொடுத்தார். (சசு)

தொழுதுபோற்றியத் துலைமிசைநின்றுநேர் துதிக்கும்
வழுவிலன்பரு மைந்தருமனைவியார் தாமு
முழுதுமின்னருள் பெற்றுத்தமுன்றெழு திருக்கும்
அழிவில்வான்பதங் கொடுத்தெழுந்தருளின ரையர். (சஎ)

நாதர்தந்திரு வருளினற்பெருந் துலையே
மீதுகொண்டெழு விமானமதாகிமேற் செல்லக்
கோதிலன்பருங் குடும்பமுங்குறைவறக் கொடுத்த
ஆதிமூர்த்தியா ருடன்சிவபுரியினை யணைந்தார். (சஅ)

* சலம் என்பது - வியாசம். அது யாதெனில் முகாந்தரமென்ப தாக வேண்டும்.

¶ முண்டம் என்பது - திரிபுண்டரம், அது விபூதி மூன்றுவகையாகத் தரிக்கப்படுவது.

வேறு.

மலர்மிசையயனுமாலுங் காணுதற்கரியவள்ளல்
பலர்புகழ்வெண்ணெய்நல்லூ ராவணப்பழைமைகாட்டி
உலகுய்யவாண்டுகொள்ளப் பெற்றவர்பாதமுன்னித்
தலைமிசைவைத்துவாழுந் தலைமைநந்தலைமையாகும். (சகூ)

ஆக-திருவிருத்தம்-கூ00.

---

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலே, பழையாறை என்னும் ஊரிலே, வைசியர் குலத்திலே, பெருஞ்செல்வமுடையவரும், சிவனடியார்களைத் திருவமுதுசெய்வித்து அவரவர் குறிப்பறிந்து கந்தை கீள் கோவணம் என்பவைகளைக் கொடுப்பவருமாகிய அமர்நீதிநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருநல்லூர் என்னுஞ் சிவஸ்தலத்திலே மகோற்சவதரிசனஞ்செய்ய வருஞ் சிவனடியார்கள் திருவமுது செய்யும்பொருட்டு ஒரு திருமடம் கட்டுவித்துக்கொண்டு, தம்முடைய சுற்றத்தார்களோடும் அவ்விடத்திற் போய்ச் சேர்ந்து, மகோற்சவ தரிசனஞ்செய்து, தம்முடைய மடத்திலே சிவனடியார்களைத் திருவமுது செய்வித்துக்கொண்டு, மனமகிழ்ச்சியோடும் இருந்தார்.

இருக்கும் நாட்களிலே, ஒருநாள், சிவபெருமான் பிராமணவருணத்துப் பிரமசாரிவடிவங்கொண்டு, இரண்டு கௌபீனங்களையும் விபூதிப்பையையும் கட்டியிருக்கின்ற ஒருதண்டைக் கையிலே பிடித்துக்கொண்டு, அந்தத்திருமடத்திற்கு எழுந்தருளிவந்தார். அது கண்ட அமர்நீதிநாயனார் மனமகிழ்ச்சியோடும் முகமலர்ச்சியோடும் அவரை எதிர்கொண்டு வணங்கி, "சுவாமீ, தேவரீர் இங்கே எழுந்தருளிவருதற்கு அடியேன் பூர்வத்தில் யாது தவஞ் செய்தேனோ" என்று இன்சொற்சொல்ல; பிரமசாரியானவர் அவரை நோக்கி, "நீர் அடியார்களைத் திருவமுதுசெய்வித்து அவர்களுக்கு வஸ்திரங்களும் கந்தைகளும் கீள் கௌபீனங்களும் கொடுக்கின்றீர் என்பதைக் கேள்வியுற்று, உம்மைக் காணுதற்கு விரும்பி வந்தோம்" என்றார். அது கேட்ட அமர்நீதிநாயனார் "இந்தத் திருமடத்திலே பிராமணர்கள் போசனம் பண்ணும்பொருட்டுப் பிராமணர்கள் பாகம்பண்ணுவதும் உண்டு. தேவரீரும் இங்கே திருவமுதுசெய்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார். பிரமசாரியானவர் அதற்கு உடன்பட்டு, "நாம் காவேரியிலே ஸ்நானம் பண்ணிக்கொண்டு வருவோம். ஒருபோது மழைவரினும் தரித்துக்கொள்ளும்பொருட்டு நீர் இந்த உலர்ந்த கௌபீனத்தை வைத்திருந்து தாரும்" என்று சொல்லி, தண்டிலே கட்டப்பட்டிருக்கின்ற இரண்டு கௌபீனங்களில் ஒன்றை அவிழ்த்து, "இந்தக் கௌபீனத்தின் மகிமையை உமக்கு நான் சொல்லு

வேண்டுவதில்லை. நான் ஸ்நானம்பண்ணிக்கொண்டு வரும்வரைக்கும் நீர் இதை வைத்திருந்து தாரும்'' என்று அவர்கையிலே கொடுத்துவிட்டு, காவேரியிலே ஸ்நானம்பண்ணுதற்குப் போக; அமர்நீதிநாயனார் அந்தக் கௌபீனத்தை ஒரு தகுந்த இடத்திலே சேமித்து வைத்தார்.

ஸ்நானம்பண்ணப் போன பிரமசாரியானவர் அமர்நீதிநாயனார் சேமித்து வைத்த கௌபீனத்தை அது வைக்கப்பட்ட ஸ்தானத்தினின்றும் நீங்கும்படி செய்து, ஸ்நானஞ் செய்துகொண்டு, மழை பொழிய நனைந்து திருமடத்தை அடைந்தார். அமர்நீதிநாயனார் அது கண்டு எதிர்கொண்டு, "சமையலாயிற்று" என்று சொல்லி வணங்க; பிரமசாரியார், இனி அந்நாயனாருடைய அன்பாகிய ஜலத்திலே முழுகவேண்டி, அவரை நோக்கி, "ஈரம் மாற்ற வேண்டும். தண்டிலே கட்டப்பட்டிருக்கின்ற கௌபீனமோ ஈரமாயிருக்கின்றது. உம்மிடத்திலே தந்த கௌபீனத்தைக் கொண்டுவாரும்'' என்றார். அமர்நீதிநாயனார் சீக்கிரம் உள்ளே போய்ப் பார்த்து, கௌபீனத்தைக் காணாதவராகி, திகைத்து, மற்றையிடங்களிலுந்தேடிக் காணாமையால் மிகுந்த துக்கங்கொண்டு வேறொரு கௌபீனத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டு, பிரமசாரியார்முன் சென்று, "சுவாமீ, தேவரீர் தந்த கௌபீனத்தை வைத்த இடத்திலும் பிறவிடங்களிலுந் தேடிக் கண்டிலேன். அது போன விதம் இன்னதென்று அறியேன். வேறொரு நல்லகௌபீனம் கொண்டுவந்தேன். இது கிழிக்கப்பட்ட கோவணமன்று, நெய்யப்பட்ட கோவணமே. தேவரீர் நனைந்த கௌபீனத்தைக் களைந்து, இந்தக் கௌபீனத்தைச் சாத்தி, அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருளும்'' என்று பிரார்த்தித்தார். அதைக் கேட்ட பிரமசாரியார் மிகக்கோபித்து, "உம்முடைய நிலைமை நன்றாயிருக்கின்றது. நெடுநாட்கழிந்ததுமன்று; இன்றைக்கே நான் உம்மிடத்தில்வைத்த கௌபீனத்தைக் கவர்ந்துகொண்டு, அதற்குப் பிரதியாக வேறொருகௌபீனத்தை ஏற்றுக்கொள்ளுமென்று நீர் சொல்வது என்னே! சிவனடியார்களுக்கு நல்ல கௌபீனம் கொடுப்பேன் என்று நீர் ஊரிலே பரவச்செய்தது என்னுடைய கௌபீனத்தைக் கவர்தற்கோ! நீர் செய்கின்ற இவ்வாணிகம் நன்றாயிருக்கின்றது'' என்று சொல்ல; அமர்நீதிநாயனார் பயந்து முகம் வாடி நடுநடுங்கி, "சுவாமீ, அடியேன் இக்குற்றத்தை அறிந்து செய்தேனல்லேன். இதைப் பொறுத்தருளும். தேவரீருக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளெல்லாம் செய்கின்றேன். இந்தக்கோவணமன்றி வெகுபொன்களையும் பட்டாடைகளையும் இரத்தினங்களையும் தருகிறேன், ஏற்றுக்கொள்ளும்'' என்றார். அதற்குப் பிரமசாரியார் கோபந்தணிந்தவர்போலத் தோன்றி, "பொன்களும் பட்டாடைகளும் இரத்தினங்களும் எனக்கு ஏன்! நான் தரிப்பதற்கு உபயோகியாகிய கௌபீனத்துக்கு ஒத்த நிறையுள்ள கௌபீனம் தந்தாற்போதும்'' என்றுசொல்ல; அமர்நீதிநாயனார் மனமகிழ்ந்து, "எதனுடைய நிறைக்குச்

சமமாகிய கௌபீனத்தைத் தரல்வேண்டும்" என்று கேட்டார். பிரமசாரியார் "நீர் இழந்த கௌபீனத்தின் நிறைக்கு ஒத்த நிறையையுடைய கௌபீனம் இது" என்று சொல்லி, தமது தண்டிலே கட்டப்பட்டிருந்த கௌபீனத்தை அவிழ்த்து, "இதற்கு ஒத்தநிறையுள்ளதாகக் கௌபீனத்தை நிறுத்துத் தாரும்" என்றார். அமர்நீதிநாயனார் "மிகநன்று" என்று சொல்லி, ஒருதராசைக்கொண்டுவந்து நாட்ட; பிரமசாரியார் அந்தக் கௌபீனத்தை ஒருதட்டிலே வைத்தார். அமர்நீதிநாயனார் தம்முடைய கையிலிருந்த நெய்யப்பட்ட கௌபீனத்தை மற்றத்தட்டிலே வைத்தார். அது ஒத்த நிறையிலே நில்லாமல் மேலெழுந்தது. அதைக் கண்டு, அடியார்களுக்குக் கொடுக்கும்படி தாம் வைத்திருந்த கோவணங்களெல்லாவற்றையும் கொண்டுவந்து ஒவ்வொன்றாக இட இட; பின்னும் தூக்கிக்கொண்டு எழும்பியது. அதைப் பார்த்து, ஆச்சரியம் அடைந்து, பலவஸ்திரங்களையும் பட்டுக்களையும் கொண்டுவந்து இட இட, பின்னும் உயர்ந்தது. அது கண்டு அநேகவஸ்திரப்பொதிகளைக் கொண்டுவந்து இட்டார். இட்டும், அத்தட்டு மேலே எழும்ப; கௌபீனத்தட்டுக் கீழே தாழ்ந்தது. அமர்நீதிநாயனார் அதைக் கண்டு மிக அஞ்சி, பிரமசாரியாரை வணங்கி, "எண்ணிறந்த வஸ்திரப்பொதிகளையும் நூற்கட்டுக்களையும் குவிக்கவும், தட்டு உயர்கின்றது. தமியேனுடைய மற்றத்திரவியங்களையும் இத்தட்டிலே இடுதற்கு அனுமதி தந்தருளும்" என்றார். அதற்குப் பிரமசாரியார் "இனி நாம் வேறென்ன சொல்லுவோம்! மற்றத்திரவியங்களையும் இட்டுப்பாரும். எப்படியும் நம்முடைய கோவணத்துக்கு ஒத்த நிறையில் நிற்கவேண்டும்" என்றார். அமர்நீதிநாயனார் நவரத்தினங்களையும் பொன் வெள்ளி முதலிய உலோகங்களையும் சுமைசுமையாக எடுத்துவந்து இட இட; தட்டு எழுந்தபடியே மேலே நின்றது. அமர்நீதிநாயனார் அதைக் கண்டு பிரமசாரியாரை வணங்கி, "என்னுடைய திரவியங்களில் ஒன்றும் சேஷியாமல் இந்தத்தட்டிலே இட்டேன். நானும் என்மனைவியும் புத்திரனும் மாத்திரம் சேஷித்து நிற்கின்றோம். தேவரீருக்குப் பிரீதியாகில், இனி அடியேங்களும் இத்தட்டில் ஏறுவதற்கு அனுமதி தந்தருளும்" என்றார். பிரமசாரியாரும் அதற்கு உடன்பட்டார்.

அது கண்டு, அமர்நீதிநாயனார் மனமகிழ்ந்து, பிரமசாரியாரை வணங்கி, தம்முடைய மனைவியாரோடும் புத்திரரோடும் தராசை வலஞ்செய்து, "சிவனடியார்களுக்குச் செய்யுந்திருத்தொண்டிலே அடியேங்கள் தவறாமல் இருந்தோமாகில், அடியேங்கள் ஏறினமாத்திரத்தே இந்தத் தட்டு மற்றத்தட்டுக்கு ஒத்து நிற்கக்கடவது" என்று சொல்லி, திருநல்லூரில் வீற்றிருக்கின்ற பரமசிவனை வணங்கி, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதிக்கொண்டு, மகிழ்ச்சியோடு தட்டிலே ஏறினார். ஏறினவுடனே, பரமசிவனுடைய திருவரையிலே சாத்தப்படும் கௌபீனமும் பத்தியிலே சிறி

கள

துங் குறைவில்லாத அமர்நீதிநாயனருடைய அடிமைத்திறமும் பெருமையில் ஒத்திருந்தபடியால், துலாக்கோலின் இரண்டு தட்டுக்களும் ஒத்து நின்றன. அவ்வற்புதத்தைக் கண்டவர்களெல்லாரும் அமர்நீதிநாயனரைவணங்கி ஸ்தோத்திரஞ் செய்தார்கள். தேவர்கள் ஆகாயத்தினின்றும் கற்பகவிருக்ஷங்களின் புஷ்பங்களை மழைபோலப் பொழிந்தார்கள். திருக்கைலாசபதி தாங்கொண்டுவந்த பிரமசாரிவடிவத்தை ஒழித்து, ஆகாயத்திலே பார்வதிதேவியாரோடு இடபாரூடராய்த் தோன்றி, தம்மைத் தரிசித்து அந்தத் தராசுத்தட்டிலே தானே நின்றுகொண்டு ஸ்தோத்திரஞ்செய்கின்ற அமர்நீதிநாயனர் அவர் மனைவியார் புத்திரர் என்னு மூவர்மேலும் திருவருணோக்கஞ்செய்து, "நீங்கள் மூவரும் நம்முடைய அருளைப் பெற்று, நம்முடைய சந்நிதானத்திலே நம்மை வணங்கிக்கொண்டிருங்கள்" என்று அருளிச்செய்து, மறைந்தருளினர். அமர்நீதிநாயனரும், அவர்மனைவியாரும், புத்திரரும், அக்கடவுளுடைய திருவருளினல் அந்தத் தராசுதானே தேவவிமானமாகி மேலே செல்ல, அவரோடு சிவலோகத்தை அடைந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

அமர்நீதிநாயனர்புராண முற்றிற்று.

---

முதலாவது

தில்லைவாழந்தணர்சருக்க முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது,

# இலைமலிந்தசருக்கம்

## எறிபத்தநாயனர் புராணம்.

வேறு.

மல்லனீர்ஞாலந்தன்னுண் மழவிடையுடையானன்பர்க்
கொல்லைவந்துற்றசெய்கை யுற்றிடத்துதவுநீரார்
எல்லையில்புகழின்மிக்க வெறிபத்தர்பெருமையெம்மாற்
சொல்லலாம்படித்தன்றேனு மாசையாற்சொல்லலுற்றும். (௧)

பொன்மலைப்புலிவென்றோங்கப் புதுமலையிடித்துப்போற்றும்
அந்நெறிவழியேயாக வயல்வழியடைத்தசோழன்
மன்னியவநபாயன்சீர் மரபின்மாநகரமாகுந்
தொன்னெடுங்கருவூரென்னுஞ் சுடர்மணிவீதிமூதூர். (௨)

மாமதின்மஞ்சுசூழு மாளிகைநிரைவிண்சூழுந்
தூமணிவாயில்சூழுஞ் சோலையில்வாசஞ்சூழுந்
தேமலரளகஞ்சூழுஞ் சிலமதிதெருவுஞ்சூழுந்
தாமகிழ்ந்தமரர்சூழுஞ் சதமகனகரந்தாழ. (ங)

கடகரிதுறையிலாடுங் களிமயில்புறவிலாடும்
அடர்மணியரங்கிலாடு மரிவையர்குழல்வண்டாடும்
படரொளிமறுகிலாடும் பயில்கொடிகதிர்மீதாடுந்
தடநெடும்புவிகொண்டாடுந் தனிநகர்வளமையீதால். (ச)

மன்னியசிறப்பின்மிக்க வளநகர்தன்னின்மல்கும்
பொன்னியல்புரிசைசூழ்ந்து சுரர்களும்போற்றும்பொற்பாற்
றுன்னியவன்பின்மிக்க தொண்டர்தஞ் சிந்தைநீங்கா
அந்நிலையரனுர்வாழ்வ § தானிலையென்னுங்கோயில். (ரு)

பொருட்டிருமறைகடந்த புனிதனையினிதக்கோயின்
மருட்டுறைமாற்றுமாற்றல் வழிபடுந்தொழிலராகி
இருட்கடுவொடுங்குகண்டத் திறையவர்க்குரிமைபூண்ட
அருட்பெருந்தொண்டுசெய்வா ரவரெறிபத்தராவார். (சு)

மழைவளருலகிலெங்கு மன்னியசைவமோங்க
அழலவிர்சடையானன்பர்க் கடாதனவடுத்தபோது
முழையரியென்னத்தோன்றி முரண்கெடவெறிந்துதீர்க்கும்
பழமறைபரசுந்தூய பரசுமுன்னெடுக்கப்பெற்றார். (எ)

அண்ணலார்நிகழுநாளி லானிலையடிகளார்க்குத்
திண்ணியவன்புகூர்ந்த சிவகாமியாண்டாரென்னும்
புண்ணியமுனிவனூர்தாம் பூப்பறித்தலங்கல்சாத்தி
உண்ணிறைகாதலோடு மொழுகுவாரொருநாண்முன்போல். (அ)

வைகறையுணர்ந்துபோந்து புனன்மூழ்கிவாயுங்கட்டி
மொய்ம்மலர்நெருங்குவாச நந்தனவனத்துமுன்னிக்
கையினிற்றெரிந்துநல்ல கமழ்முகையலரும்வேலைத்
தெய்வநாயகர்க்குச்சாத்துந் திருப்பள்ளித்தாமங்கொய்து. (கூ)

கோலப்பூக்கூடைதன்னை நிறைத்தனர்கொண்டுநெஞ்சில்
வாலியநேசங்கொண்டு மலர்க்கையிற்றண்டுங்கொண்டங்
காலயமதனைநோக்கி யங்கணர்க்கமைத்துச்சாத்துங்
காலைவந்துதவவேண்டிக் கடிதினில்வாராநின்றார். (க0)

மற்றவரணையவிப்பால் வளநகர்தன்னின்மன்னுங்
கொற்றவர்வளவர்தங்கள் குலப் ‡ புகழ்ச்சோழனூர்தம்

§ ஆனிலை என்பது - கருவூரிலிருக்குஞ் சிவாலயத்தின்பெயர்.

‡ புகழ்ச்சோழனூர் - அக்காலத்திருந்த சோழராசாவின்பெயர். இவர் நாயன்மார்களிலொருவர்,

பற்றலர்முனைகள்சாய்க்கும் பட்டவர்த்தனமாம்பண்பு
பெற்றவெங்களிறுகோலம் பெருகுமாநவமிமுன்னாள். (கக)

மங்கலவிழவுகொண்டு வருந்தித்துறைநீராடிப்
பொங்கியகளிப்பினோடும் பொழிமதஞ்சொரியநின்றார்
எங்கணுமிரியல்போக வெதிர்பரிக்காரரோடத்
துங்கமால்வரைபோற்றோன்றித் துண்ணெனவணைந்ததன்றே. (கஉ)

வென்றிமால்யானைதன்னை மேல்கொண்டபாகரோடுஞ்
சென்றொருதெருவின்முட்டிச் சிவகாமியார்முன்செல்ல
வன்றனித்தண்டிற்றாங்கு மலர்கொள்பூக்கூடைதன்னைப்
பின்றொடர்ந்தோடிச்சென்று பிடித்துமுன்பறித்துச்சிந்த. (கங)

மேல்கொண்டபாகர்கண்டு விசைகொண்டகளிறுசண்டக்
கால்கொண்டுபோவார்போலக் கடிதுகொண்டகலப்போக
நூல்கொண்டமார்பிற்றொண்டர் நோக்கினர்பதைத்துப்பொங்கி
மால்கொண்டகளிற்றின்பின்பு தண்டுகொண்டடிக்கவந்தார். (கச)

அப்பொழுதணையவொட்டா தடற்களிறகன்றுபோக
மெய்ப்பெருந்தொண்டர்மூப்பால் விரைந்துபின்செல்லமாட்டார்
தப்பினர்விழுந்துகையாற் றரையடித்தெழுந்துநின்று
செப்பருந்துயரநீடிச் செயிர்த்துமுன்சிவதாவென்பார். (கரு)

வேறு.

களியானையினீ ருரியாய்சிவதா
எளியார்வலியா மிறைவாசிவதா
அளியாரடியா ரறிவேசிவதா
தெளிவாரமுதே சிவதாசிவதா. (கசு)

ஆறும்மதியும் மணியுஞ்சடைமேல்
ஏறும்மலரைக் கரிசிந்துவதே
வேறுங்கிளைவார் புரம்வெந்தவியச்
சீறுஞ்சிலையாய் சிவதாசிவதா. (கஎ)

நஞ்சேசரணம் புகுதுந்தமியோர்
நெஞ்சேய்துயரங் கெடநேர்தொடரு
மஞ்சேயெனவீழ் மறலிக்கிறைநீள்
செஞ்சேவடியாய் சிவதாசிவதா. (கஅ)

நெடியோனறியா நெறியாரறியும்
படியாலடிமைப் பணிசெய்தொழுகும்
அடியார்களில்யா ரராவணைவார்
முடியாமுதலா ரெனவேமொழிய. (கக)

வேறு.

என்றவருரைத்தமாற்ற மெறிபத்தரெதிரேவாரா
நின்றவர்கேளாமூளு நெருப்புயிர்த்தழன்றுபொங்கி
மன்றவரடியார்க்கென்றும் வழிப்பகைகளிறேயன்றோ
கொன்றதுவீழ்ப்பனென்று கொலைமழுவெடுத்துவந்தார். (௨௦)

வந்தவரழைத்ததொண்டர் தமைக்கண்டுவணங்கியும்மை
இந்தவல்லிடும்பைசெய்த யானையெங்குற்றதென்ன
எந்தையார்சாத்தும்பூவை யென்கையிற்பறித்துமண்மேற்
சிந்திமுன்பிழைத்துப்போகா நின்றதித்தெருவேயென்றார். (௨௧)

இங்கிதுபிழைப்பதெங்கே யினியெனவெரிவாய்சிந்தும்
அங்கையின்மழுவுந்தாமு மனலும்வெங்காலுமென்னப்
பொங்கியவிசையிற்சென்று பொருகரிதொடர்ந்துசெல்லுஞ்
செங்கண்வாளரியிற்கூடிக் கிடைத்தனர்சீற்றமிக்கார். (௨௨)

கண்டவரிதுமுன்பண்ண லுரித்தவக்களிறேபோலும்
அண்டருமண்ணுளோருந் தடுக்கினுமடர்த்துச்சிந்தத்
துண்டித்துக்கொல்வேனென்று சுடர்மழுவலத்தில்வீசிக்
கொண்டெழுந்தன்பர்சென்று காலினாற்குலுங்கப்பாய்ந்தார். (௨௩)

பாய்தலுமிசைகொண்டுய்க்கும் பாகரைக்கொண்டுசீறிக்
காய்தழலுமிழ்கண்வேழந் திரிந்துமேற்கதுவஅச்சந்
தாய்தலையன்பின்முன்பு நிற்குமேதகைந்துபாய்ந்து
தோய்தனித்தடக்கைவீழ மழுவினாற்றுணித்தார்தொண்டர். (௨௪)

கையினைத்துணித்தபோது கடலெனக்கதறிவீழ்ந்து
மைவரையனையவேழம் புரண்டிடமருங்குவந்த
வெய்யகோற்பாகர்மூவர் மிசைகொண்டாரிருவராக
ஐவரைக்கொன்றுநின்றா ரருவரையனையதோளார். (௨௫)

வெட்டுண்டுபட்டுவீழ்ந்தா ரொழியவேறுள்ளாரோடி
மட்டவிழ்தொங்கன்மன்னன் வாயிற்காவலரைநோக்கிப்
பட்டவர்த்தனமும்பட்டுப் பாகரும்பட்டாரென்று
முட்டநீர்கடிதுபுக்கு முதல்வனுக்குரையுமென்றார். (௨௬)

மற்றவர்மொழிந்தமாற்ற மணிக்கடைகாப்போர்கேளாக்
கொற்றவன்றன்பாலெய்திக் குரைகழல்பணிந்துபோற்றிப்
பற்றலரிலாதாய்நின்பொற் பட்டமால்யானைவீழச்
செற்றனர்சிலராமென்று செப்பினார்பாகரென்றார். (௨௭)

வளவனுங்கேட்டபோதின் மாறின்றிமண்காக்கின்ற
கிளர்மணித்தோளலங்கற் சுரும்பினங்கிளர்ந்துபொங்க
அளவில்சீற்றத்தினாலே யார்செய்தாரென்றுகேளான்
இளவரியேறுபோல வெழுந்தன்மணிவாயினீங்க, (௨௮)

தந்திரத்தலைவர்தாமுந் தலைவன்றனிலைமைகண்டு
வந்துறச்சேனைதன்னை வல்விரைந்தெழமுன்சாற்ற
அந்தரத்தகலமெல்லா மணிதுகிற்பதாகைதூர்ப்ப
எந்திரத்தேருமாவு மிடையிடைகளிறுமாகி. (௨௯)

வில்லொடுவேல்வாடண்டு பிண்டிபாலங்கண்மிக்க
வல்லெழுமுசலநேமி மழுக்கழுக்கடைமுன்னான
பல்படைக்கலன்கள்பற்றிப் பைங்கழல்வரிந்தவன்கண்
எல்லையில்படைஞர்கொட்புற் றெழுந்தனரெங்குமெங்கும். (௩0)

சங்கொடுதாரைகாளந் தழங்கொலிமுழங்குபேரி
வெங்குரற்பம்பைகண்டை வியன்றுடிதிமிலைதட்டி
பொங்கொலிச்சின்னமெல்லாம் பொருபடைமிடைந்தபொற்பின்
மங்குல்வான்கிளர்ச்சிநாண மருங்கெழுந்தியம்பிமல்க. (௩௧)

தூரியத்துவைப்புமுட்டுஞ் சுடர்ப்படையொலிப்புமாவின்
றார்மணியிசைப்பும்வேழ முழக்கமுந்தடந்தேர்ச்சீரும்
வீரர்தஞ்செருக்கினார்ப்பு மிக்கெழுந்தொன்றாமெல்லைக்
காருடன்கடைநாட்பொங்குங் கடலெனக்கலித்தவன்றே. (௩௨)

பண்ணுறுமுறுப்புநான்கிற் பரந்தெழுசேனையெல்லா
மண்ணிடையிறுகான்மேன்மேல் வந்தெழுந்ததுபோற்றோன்றத்
தண்ணளிக்கவிகைமன்னன் றானைபின்றொடரத்தானோர்
அண்ணலம்புரவிமேற்கொண் டரசமாவீதிசென்றான். (௩௩)

கடுவிசைமுடுகிப்பொங்கிக் களிற்றொடும்பாகர்வீழ்ந்த
படுகளங்குறுகச்சென்றான் பகைப்புலத்தவரைக்காணான்
விடுசுடர்மழுவொன்றேந்தி வேறிருதடக்கைத்தாய
அடுகளிறென்னநின்ற வன்பரைமுன்புகண்டான். (௩௪)

பொன்றவழருவிக்குன்ற மெனப்புரள்களிற்றின்முன்பு
நின்றவர்மன்றுளென்று நிருத்தமேபயிலும்வெள்ளிக்
குன்றவரடியாரானார் கொன்றவரிவரென்றோரான்
வென்றவரியாவரென்றான் வெடிபடமுழங்குஞ்சொல்லான். (௩௫)

அரசனங்கருளிச்செய்ய வருகுசென்றணைந்துபாகர்
விரைசெய்தார்மாலையோய்நின் விறற்களிற்றெதிரேநிற்குந்
திரைசெய்நீருலகின்மன்ன ரியாருளார்தீங்குசெய்தார்
பரசுமுன்கொண்டுநின்ற விவரெனப்பணிந்துசொன்னார். (௩௬)

குழையணிகாதினானுக் கன்பராங்குணத்தின்மிக்கார்
பிழைபடினன்றிக்கொல்லார் பிழைத்ததுண்டென்றுட்கொண்டு
மழைமதயானைச்சேனை வரவினைமாற்றிமற்ற
உழைவயப்புரவிமேனின் றிழிந்தனனுலகமன்னன். (௩௭)

மைத்தடங்குன்றுபோலு மதகளிற்றெதிரேயிந்த
மெய்த்தவர்சென்றபோது வேறொன்றுபுகுதாவிட்டீ
அத்தவமுடையேனானே னம்பலவாணரன்பர்
இத்தனைமுனியக்கேட்டே னென்கொலோபிழையென்றஞ்சி. (௩௮)

செறிந்தவர்தம்மைநீக்கி யன்பர்முன்றொழுதுசென்றீ
தறிந்திலேனடியேனங்குக் கேட்டதொன்றதுதானிற்க
மறிந்தவிக்களிற்றின்குற்றம் பாகரோடிதனைமாள
எறிந்ததேபோதுமோதா னருள்செய்யுமென்றுநின்றான். (௩௯)

மன்னவன்றன்னைநோக்கி வானவரீசர்நேசர்
சென்னியித்துங்கவேழஞ் சிவகாமியாண்டார்கொய்து
பன்னகாபரணர்ச்சாத்தக் கொடுவரும்பள்ளித்தாமந்
தன்னைமுன்பறித்துச்சிந்தத் தரைப்படத்துணித்துவீழ்த்தேன். (௪0)

மாதங்கந்தீங்குசெய்ய வருபரிக்காரர்தாமு
மீதங்குக்கடவுவாரும் விலக்கிடாதொழிந்துபட்டார்
ஈதிங்குநிகழ்ந்ததென்றா ரெறிபத்தரென்னவஞ்சிப்
பாதங்கண்முறையாற்றாழ்ந்து பருவரைத்தடந்தோண்மன்னன். (௪௧)

அங்கணரடியார்தம்மைச் செய்தவிவ்வபராதத்துக்
கிங்கிவைதம்மாற்போதா தென்னையுங்கொல்லவேண்டு
மங்கலமழுவாற்கொல்கை வழக்குமன்றிதுவாமென்று
செங்கையிலுடைவாள்வாங்கிக் கொடுத்தனன்றீர்வுநேர்வான். (௪௨)

வெந்தழற்சுடர்வாணீட்டும் வேந்தனைநோக்கிக்கெட்டேன்
அந்தமில்புகழானன்புக் களவின்மைகண்டேனென்று
தந்தவாள்வாங்கமாட்டார் தன்னைத்தான்றுறக்குமென்று
சிந்தையாலுணர்வுற்றஞ்சி வாங்கினார்தீங்குதீர்ப்பார். (௪௩)

வாங்கியதொண்டர்முன்பு மன்னனார்தொழுதுநின்றே
ஈங்கெனைவாளினாற்கொன் றென்பிழைதீர்க்கவேண்டி
ஓங்கியவுதவிசெய்யப் பெற்றனனிவர்பாலென்றே
ஆங்கவருரைப்பக்கண்ட வெறிபத்தரதனுக்கஞ்சி. (௪௪)

வன்பெருங்களிறுபாகர் மடியவுமுடைவாளைத்தந்
தென்பெரும்பிழையினாலே யென்னையுங்கொல்லுமென்னும்
அன்பனார்தம்மைத்தீங்கு நினைத்தனனென்றுகொண்டு
முன்பெனதுயிர்செகுத்து முடிப்பதேமுடிவென்றெண்ணி. (௪௫)

புரிந்தவர்கொடுத்தவாளை யன்பர்தங்கழுத்திற்பூட்டி
அரிந்திடலுற்றபோதி லரசனும்பெரியோர்செய்கை
இருந்தவாறிதுவென்கெட்டே னென்றெதிர்கடிதிற்சென்று
பெருந்தடந்தோளாற்கூடிப் பிடித்தனன்வாளுங்கையும். (௪௬)

வளவனூர்விடாதுபற்ற மாதவர்வருந்திநிற்ப
அளவிலாப்பரிவில்வந்த விடுக்கணையகற்றவேண்டிக்
களமணிகளத்துச்செய்ய கண்ணுதலருளால்வாக்குக்
கிளரொளிவிசும்பின்மேல்வந் தெழுந்ததுபலருங்கேட்ப. (சஎ)

தொழுந்தகையன்பின்மிக்கீர் தொண்டினைமண்மேற்காட்டச்
செழுந்திருமலரையின்று சினக்கரிசிந்தத்திங்கட்
கொழுந்தணிவேணிக்கூத்த ரருளினாற்கூடிற்றென்றங்
கெழுந்ததுபாகரோடு மியானையுமெழுந்ததன்றே. (சஅ)

ஈரவேபூட்டும்வாளை விட்டெறிபத்தர்தாமு
நேரியர்பெருமான்றாண்மேல் விழுந்தனர்நிருபர்கோனும்
போர்வடிவாளைப்போக வெறிந்தவர்கழல்கள்போற்றிப்
பார்மிசைப்பணிந்தான்விண்ணோர் பனிமலர்மாரிதூர்த்தார். (சகூ)

இருவருமெழுந்துவானி லெழுந்தபேரொலியைப்போற்ற
அருமறைப்பொருளாயுள்ளா ரணிகொள்பூக்கூடைதன்னின்
மருவியபள்ளித்தாம நிறைந்திடவருளமற்றைத்
திருவருள்கண்டுவாழ்ந்து சிவகாமியாருநின்றார். (ருo)

மட்டவிழலங்கல்வென்றி மன்னவர்பெருமான்முன்னர்
உட்டருகளிப்பினோடு முறங்கிமீதெழுந்ததொத்து
முட்டவெங்கடங்கள்பாய்ந்து முகிலெனமுழங்கிப்பொங்கும்
பட்டவர்த்தனத்தைக்கொண்டு பாகருமணையவந்தார். (ருக)

ஆனசீர்த்தொண்டர்கும்பிட் டடியனேன்களிப்பவிந்த
மானவெங்களிற்றையேறி மகிழ்ந்தெழுந்தருளுமென்ன
மேன்மையப்பணிமேற்கொண்டு வணங்கிவெண்குடையினீழல்
யானைமேல்கொண்டுசென்று ரிவுளிமேற்கொண்டுவந்தார். (ருஉ)

அந்நிலையெழுந்தசேனை யார்கலியேழுமொன்றாய்
மன்னியவொலியினார்ப்ப மண்ணெலாமகிழ்ந்துவாழ்த்தப்
பொன்னெடும்பொதுவிலாட னீடியபுனிதர்பொற்றாள்
சென்னியிற்கொண்டுசென்னி திருவளர்கோயில்புக்கான். (ருங)

தம்பிரான்பணிமேற்கொண்டு சிவகாமியாருஞ்சார
எம்பிரானன்பரான வெறிபத்தர்தாமுமென்னே
அம்பலநிறைந்தார்தொண்ட ரறிவதற்கரியாரென்று
செம்பியன்பெருமையுன்னித் திருப்பணிநோக்கிச்சென்றார். (ருச)

மற்றவரினையவான வன்பெருந்தொண்டுமண்மேல்
உற்றிடத்தடியார்முன்சென் றுதவியேநாளுநாளு
நற்றவக்கொள்கைதாங்கி நலமிகுகயிலைவெற்பிற்
கொற்றவக்கணத்தின்முன்னாங் கோமுதற்றலைமைபெற்றார். (ருரு)

ஆளுடைத்தொண்டர்செய்த வாண்மையுந்தம்மைக்கொல்ல
வாளினைக்கொடுத்துநின்ற வள்ளவனார்பெருமைதானு
நாளுமற்றவர்க்குநல்கு நம்பர்தாமளக்கிலன்றி
நீளுமித்தொண்டினீர்மை நினைக்கிலாரளக்கவல்லார். (௫௬)

தேனருந்தண்பூங்கொன்றைச் செஞ்சடையவர்பொற்றாளில்
ஆனதகாதலன்ப ரெறிபத்தரடிகள்சூடி
வானளுந்தேவர்போற்று மன்றுளார்நீறுபோற்றும்
ஏனதிநாதர்செய்த திருத்தொழிலியம்பலுற்றேன். (௫௭)

ஆக-திருவிருத்தம்-௬௪௭.

திருச்சிற்றம்பலம்.

கொங்கதேசத்திலே, இராஜதானியாகிய கருவூரிலே, ஆனிலை என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற பரமசிவனை வழிபடுகின்றவரும், அவருடைய அடியார்களுக்குத் திருத்தொண்டுசெய்கின்றவரும், அவ்வடியார்களுக்கு ஆபத்து வந்த காலத்தில் வெளிப்பட்டு அவ்வாபத்துக்குக் காரணராயிருந்தவர்களை மழுவினால் வெட்டுகின்றவருமாகிய எறிபத்த நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

அவர்காலத்திலே சிவகாமியாண்டார் என்கின்ற ஒரு பெரியவர் தினந்தோறும் புஷ்பங்கொய்து, திருமாலை கட்டி, அவ்வானிலையில் வீற்றிருக்கும் கடவுளுக்குச் சாத்திவந்தார். ஒருநாள் முன்போல வைகறையிலே எழுந்து போய், ஸ்நானஞ்செய்து, வாயை வஸ்திரத்தினாலே கட்டி, திருநந்தனவனத்துக்குப் போய், புஷ்பங்களை அலருஞ்சமயத்திலே கொய்து, திருப்பூங்கூடையை நிறைத்து, கையிலே தண்டை ஏந்தி, சுவாமிக்கு திருப்பள்ளித் தாமங்கட்டிச் சாத்தும்பொருட்டு அந்தச் சிவாலயத்தை நோக்கிச் சீக்கிரம் நடந்தார். நடக்கும்பொழுது, அந்நகரிலிருக்கின்ற அரசராகிய புகழ்ச்சோழநாயனாருடைய பட்டவர்த்தனயானையானது, மகாநவமியின் முதனாளாகிய அந்நாளிலே, காவேரியிலே முழுகி மிக அலங்கரிக்கப்பட்டு, குத்துக்கோற்காரர் முன்னே ஓட, தன்மேலேறிய பாகர்களோடும் ஒர்வீதியிலே விரைவாகச்சென்று, தனக்கு முன்னே செல்லும் சிவகாமியாண்டாரைப் பின்றொடர்ந்தோடி, அவர்கையிலே தாங்கிய தண்டிலே தூங்குகின்ற திருப்பூங்கூடையைப் பறித்துச்சிதறியது. அந்த யானையின்மேல் இருக்கின்ற பாகர்கள் அதைக் கண்டு, சீக்கிரம் அதைச் செலுத்திக்கொண்டு போக; சிவகாமியாண்டார் பதைபதைத்துக் கோபித்து, அந்த யானையைத் தண்டினால் அடிக்கும்படி அதற்குப் பின்னே போனார். யானை அவர் சமீபிக்கவொட்டாத மகாகதிகொண்டு சென்றது. சிவகாமியாண்டார் வயோதிகரானபடியால், அந்த யானைக்குப்பின் விரைந்து செல்லச் சத்தியில்லாதவராகி, தவறி விழுந்து,

நிலத்திலே கைகளை மோதி எழுந்து நின்று, அதிதுக்கங்கொண்டு, "தேவரீருக்குச் சாத்தும்படி கொண்டுவந்த பூவை யானையா சிந்துகின்றது! சிவதா சிவதா" என்று சொல்லி ஓலமிட்டார். அதை எதிரே வந்த எறிபத்தநாயனுர் கேட்டு, மிகக்கோபித்து மழுவை எடுத்துக்கொண்டு ஓடிவந்து, சிவகாமியாண்டாரைக் கண்டு வணங்கி, "உமக்கு இந்தத் துன்பத்தைச்செய்த யானை எங்கே போய்விட்டது" என்று கேட்க; அவர் "சுவாமிக்குச் சாத்தும்படி நான் கொண்டுவந்த பூவைப் பறித்துச் சிந்திவிட்டு இந்தத் தெருவழியேதான் போகின்றது" என்ருர். உடனே எறிபத்தநாயனுர் அதிககோபங்கொண்டு அதிசீக்கிரம் ஓடிப் போய், யானையைச் சமீபித்து, மழுவை வீசி அதன்மேலே பாய்ந்தார். பாயவும், யானை கோபித்து எறிபத்தநாயனுர்மேலே திரும்ப; எறிபத்தநாயனுர் சற்றும் அஞ்சாமல் அதைத் தடுத்து, அதினுடைய துதிக்கையைத் துணித்தார். அப்பொழுது யானை கதறிக் கீழே விழுந்து புரண்டது, பின்பு எறிபத்தநாயனுர் அதற்குமுன்னேடும் குத்துக்கோற்காரர் மூவரும் அதன்மேல் ஏறியிருந்த பாகர்கள் இருவரும் ஆகிய ஐவரைக் கொன்று நின்ருர்.

அந்த ஐவரை ஒழிந்த மற்றவர்கள் ஓடிப் போய், புகழ்ச்சோழநாயனுருடைய வாயிற்காவலாளரை நோக்கி, "பட்டவர்த்தன யானையையும் பாகர்கள் சிலரையும் சிலர் கொன்றுபோட்டார்கள். இதை மகாராஜாவுக்கு விண்ணப்பஞ்செய்யுங்கள்" என்று சொன்னுர்கள். உடனே வாயிற்காவலாளர்கள் அரசரிடத்திலே போய், அவரை வணங்கி, அந்தச் சமாசாரத்தைத் தெரிவித்தார்கள். அரசர் அதைக் கேட்டமாத்திரத்தே அளவிறந்த கோபங்கொண்டு புறப்பட்டு, குதிரையில் ஏறி, சதுரங்க சேனைகளோடும் விரைந்து சென்று; யானையும் பாகரும் இறந்த போர்க்களத்தை அடைந்து, அங்கே நின்ற சிவவேடந்தரித்த எறிபத்தநாயனுரை மாத்திரம் கண்டு, யானையைக் கொன்றவர் அவர் என்பதை அறியாதவராகி, "யானையைக்கொன்றவர் யாவர்" என்று கேட்டார். பாகர்கள் சமீபத்திலே போய் வணங்கி நின்று, "மழுவைத் தரித்துக்கொண்டு இவ்விடத்தில் நிற்கின்றவரே யானையைக் கொன்றவர்" என்ருர்கள். அப்பொழுது புகழ்ச்சோழநாயனுர் "இவர் சிவபத்தராகையால் அந்த யானை குற்றஞ்செய்தாலன்றி அதைக் கொல்லார். அது யாதோ குற்றஞ்செய்ததுபோலும்" என்று நினைந்து, தம்முடைய சேனைகளை அவ்விடத்துக்கு வரவொட்டாமல் நிறுத்தி, குதிரையினின்றும் இறங்கி, "இந்த அடியவர் யானைக்கு எதிரே போனபொழுது அதினலே இவருக்கு யாதொரு அபாயம் சம்பவியாமல் இருக்கும்படி பூர்வசன்மத்திலே தவஞ்செய்திருந்தேன். இந்தப் பெரியவர் இவ்வளவு கோபங்கொள்ளும்படி என்னபிழை உண்டாயிற்ருே" என்று சொல்லிப் பயந்து, எறிபத்தநாயனுர் திருமுன்னேசென்று, அவரை வணங்கி நின்று, "சுவாமீ, தேவ

நீரே இந்த யானையைக் கொன்றீரென்பதைத் தமியேன் முன்னறிந்திலேன். அது நிற்க. இந்தயானை செய்த குற்றத்தின்பொருட்டு இதனைப் பாகரோடு கொன்றதுமாத்திரம் போதுமா? சொல்லியருளும்" என்றார். எறிபத்தநாயனார் புகழ்ச்சோழநாயனாரை நோக்கி, "சிவகாமியாண்டார் சுவாமிக்குச் சாத்தும்படி கொண்டுவந்த பூவை இந்த யானை பறித்துச் சிந்தினதினால், நான் இதைக் கொன்றேன். யானை தீங்குசெய்தபொழுது குத்துக்கோற்காரரும் பாகர்களும் அதை விலக்காதபடியால், அவர்களையுங்கொன்றேன். இதுவே இங்கு நிகழ்ந்த சமாசாரம்" என்றார். புகழ்ச்சோழநாயனார் அதைக் கேட்டுப்பயந்து, எறிபத்தநாயனாரை வணங்கி, "சிவனடியாருக்குச்செய்த அபராதத்துக்கு இந்த யானையையும் பாகரையும் குத்துக்கோற்காரரையும் கொன்றது மாத்திரம் போதாது. அடியேனையும் கொல்லவேண்டும். பெரும்பாவியாகிய சிறியேனைத் தேவரீருடைய திருக்கரத்திலிருக்கின்ற மங்கலம் பொருந்திய மழுவாயுதத்தினாலே கொல்வது நீதியன்று" என்று சொல்லி, உடைவாளை உறையினின்றும் உருவி, "இதினாலே கொன்றருளும்" என்று நீட்டினார். எறிபத்தநாயனார் அதைக் கண்டு, அவருடைய அளவிறந்த அன்பைக்குறித்து ஆச்சரியம் அடைந்து, அவர் நீட்டிய வாளை வாங்காமல் சிறிதுபொழுது தாழ்த்துநின்று, பின்பு அவர்கையிலே வாள் இருந்தால் தம்மைத் தாமே மாய்த்துக்கொள்வார் என்று நினைந்து அஞ்சி, அதை வாங்கினார். வாங்கிய எறிபத்தநாயனாரைப் புகழ்ச்சோழநாயனார் வணங்கி நின்று, "இந்தச் சிவபத்தர் தமியேனை வாளினாலே கொன்று என்குற்றத்தைத் தீர்க்கும்படி பெற்றேன்" என்றார். எறிபத்தநாயனார் அதைக் கேட்டு, மிக அஞ்சி, "பட்டவர்த்தனயானையும் பாகரும் இறந்துபோகவும் அதைக் குறித்துச் சிறிதும் துக்கியாமல் உடைவாளைத் தந்து தம்மையும் கொல்லும்படி கேட்கின்ற புகழ்ச்சோழராசாவுக்குத் தீங்குநினைத்தேனே" என்று எண்ணி, "முன்னே என்னுயிரைக் கொன்று முடிப்பதே தீர்ப்பு" என்று நினைத்து, அந்தவாளைத் தம்முடைய கழுத்திலே பூட்டி அறுக்கத் தொடங்கினார். அது கண்ட புகழ்ச்சோழநாயனார் பயந்து நடுநடுங்கி, சீக்கிரம் எதிரேபோய், அவருடைய கையையும் வாளையும் பிடித்துக்கொள்ள; அவர் தம்முடைய எண்ணம் நிறைவேறாமையால் வருந்தி நின்றார்.

அப்பொழுது, அளவிறந்த அன்பினாலே அவ்விருவருக்கும் உண்டாகிய இத்துக்கத்தை நீக்கும்பொருட்டு, பரமசிவனுடைய திருவருளினாலே, "அடியார்களுடைய தொண்டை உலகத்திலே வெளிப்படுத்தும்பொருட்டு இன்றைக்கு யானைபுஷ்பத்தைச் சிதறும்படி பரமசிவன் அருள்செய்தார்" என்று ஓர்சரீரிவாக்கு ஆகாயத்திலே எழுந்தது. உடனே யானையும் பாகர்களோடு எழுந்தது. அப்பொழுது எறிபத்தநாயனார் கழுத்திற்பூட்டிய வாளை விட்டுப் புகழ்ச்சோழநாயனாருடைய பாதத்திலே விழுந்து நமஸ்கரித்தார். புகழ்ச்சோழநாயனாரும் அந்தவாளை எறிந்து

விட்டு, எறிபத்தநாயனருடைய பாதத்திலே விழுந்து நமஸ்கரித்தார். பின் இருவரும் எழுந்து அசரீரிவாக்கைத் துதித்தார்கள். பரமசிவனுடைய திருவருளினாலே திருப்பூங்கூடையிலே முன்போலப் பூக்கள் நிறைந்திருக்க; சிவகாமியாண்டார் அதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார். பாகர்கள் பட்டவர்த்தனயானையை நடத்திக்கொண்டு புகழ்ச்சோழநாயனர் முன் வந்தார்கள். எறிபத்தநாயனர் புகழ்ச்சோழநாயனரை அஞ்சலி செய்து, "அடியேன் மகிழும்படி இந்த யானையின்மேல் ஏறிச் செல்லும்" என்று விண்ணப்பஞ்செய்ய; புகழ்ச்சோழநாயனர் அவரை வணங்கி, யானையின்மேலேறிக்கொண்டு சேனைகளோடும் தமது திருமாளிகையை அடைந்தார். சிவகாமியாண்டார் திருப்பூங்கூடையை எடுத்துக்கொண்டு சுவாமிக்குத் திருமாலை கட்டிச் சாத்தும்படி போனர். எறிபத்தநாயனர் இப்படியே அடியார்களுக்கு இடையூறுகள் வந்த காலங்களிலே முற்பட்டு, அவைகளை நீக்கி, பத்திவலிமையிற் சிறந்தவராயிருந்து, பின்பு திருக்கைலாசகிரியில் இருக்கின்ற சிவகணங்களுக்குத் தலைவரானர்.

திருச்சிற்றம்பலம்.

எறிபத்தநாயனர் புராணம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ஏனாதிநாதநாயனர் புராணம்.

வேறு.

புண்டரிகம்பொன்வரை மேலேற்றிப்புவியளிக்குந்
தண்டரளவெண்கவிகைத் தார்வளவர்சோணாட்டில்
வண்டறைபூஞ்சோலை வயன்மருதத்தண்பணைசூழ்ந்
தெண்டிசையுமேறியசீர் மூதூரெயினனூர். (க)

வேழக்கரும்பினொடு மென்கரும்புதண்வயலிற்
ருழக்கதிர்ச்சாலி தானோங்குந்தன்மையதாய்
வாழக்குடிதழைத்து மன்னியவப்பொற்பதியில்
ஈழக்குலச்சான்று ரேனாதிநாதனார். (உ)

தொன்மைத்திருநீற்றுத் தொண்டின்வழிபாட்டி
னன்மைக்கணின்ற நலமென்றுங்குன்றாதார்
மன்னர்க்குவென்றி வடிவாட்படைபயிற்றுந்
தன்மைத்தொழில்விஞ்சை யிறறலைமைசார்ந்துள்ளார். (ங)

வாளின்படைபயிற்றி வந்தவளமெல்லா
நாளும்பெருவிருப்பா னண்ணுங்கடப்பாட்டிற்
றாளுந்தடமுடியுங் காணாதார்தம்மையுந்தொண்
டாளும்பெருமா னடித்தொண்டர்க்காக்குவார். (ச)

நள்ளார்களும்போற்று நன்மைத்துறையின்கண்
எள்ளாதசெய்கை யியல்பினொழுகுநாட்
டள்ளாததங்க டொழிலுரிமைத்தாயத்தின்
உள்ளானதிசூர னென்பானுளனானான். (ரு)

மற்றவனுங்கொற்ற வடிவாட்படைத்தொழில்கள்
கற்றவர்கடன்னிற் கடந்துள்ளாரில்லையெனும்
பெற்றிமையான்மாநிலத்து மிக்கபெருமிதம்வந்
துற்றுலகிற்றன்னையே சாலமதித்துள்ளான். (சு)

தானுள்விருத்திகெடத் தங்கள்குலத்தாயத்தின்
ஆனதசெய்தொழிலா மாசிரியத்தன்மைவள
மேநாளுந்தான்குறைந்து மற்றவர்க்கேமேம்படலால்
ஏனாதிநாதர்திறத் தேலாவிகல்புரிந்தான். (எ)

கதிரோனெழமழுங்கிக் கால்சாயுங்காலை
மதிபோலழிந்துபொறா மற்றவனுஞ்சுற்றப்
பதியோருடன்கூடப் பண்ணியமர்மேற்சென்
றெதிர்போர்விளைப்பதற்கே யெண்ணித்துணிந்தெழுந்தான். (அ)

தோள்கொண்டவல்லாண்மைச் சுற்றத்தொடுந்துணையாங்
கோள்கொண்டபோர்மள்ளர் கூட்டத்தொடுஞ்சென்று
வாள்கொண்டதாயம் வலியாரேகொள்வதென
மூள்கின்றசெற்றத்தான் முன்கடையினின்றழைத்தான். (கூ)

வெங்கட்புலிகிடந்த வெம்முழையிற்சென்றழைக்கும்
பைங்கட்குறுநரியே போல்வான்படைகொண்டு
பொங்கிப்புறஞ்சூழ்ந்து போர்குறித்துநேர்நின்றே
யங்கட்கடைநின் றழைத்தானொலிகேளா. (க0)

ஆர்கொல்பொரவழைத்தா ரென்றரியேற்றிற்கிளர்ந்து
சேர்வுபெறக்கச்சிற் செறிந்தவுடைமேல்வீக்கி
வார்கழலுங்கட்டி வடிவாட்பலகைகொடு
போர்முனையிலேனாதி நாதர்புறப்பட்டார். (கக)

புறப்பட்டபோதின்கட் போர்த்தொழில்கள்கற்கும்
விறற்பெருஞ்சீர்க்காளையர்கள் வேறிடத்துநின்றார்
மறப்படைவாட்சுற்றத்தார் கேட்டோடிவந்து
செறற்கரும்போர்வீரர்க் கிருமருங்குஞ்சேர்ந்தார்கள். (கஉ)

வந்தழைத்தமாற்றான் வயப்புலிப்போத்தன்னார்மு
னந்தமதுவாட்பயிற்று நற்றாயங்கொள்ளுங்கால்
இந்தவெளிமேற்கை வகுத்திருவேம்பொருபடையுஞ்
சந்தித்தமர்விளைத்தாற் சாயாதார்கொள்வதெனை. (கங)

என்றுபகைத்தோனுரைப்ப வேனாதிநாதரது
நன்றுனக்குவேண்டுமே னண்ணுவனென்றுண்மகிழ்ந்து
சென்றவன்முன்சொன்ன செருக்களத்துப்போர்குறிப்பக்
கன்றியிருபடையுங் கைவகுத்துநேர்மலைவார். (கச)

வேறு.

மேகவொழுங்குகண் முன்கொடுமின்னிரை தம்மிடையேகொடு
மாகமருங்கினு மண்ணினும்வல்லுரு மேறெதிர்செல்வன
வாகநெடும்பல கைக்குலமாள்வினை வாளுடையாடவர்
காகமிடைந்த களத்திருகைகளின் வந்துகலந்தனர். (கரு)

கால்கழல்கட்டிய மள்ளர்கள்கைகளின் மெய்களடக்கிய
வாளொளிவட்ட முனைத்திடவந்திரு கைகளின்முந்தினர்
வேலொடுவேலெதிர் நீள்வனமேவிய பாதலம்விட்டுயர்
ஞாலமுறும்பணி வீரர்கணாநிமிர் கின்றனவொத்தன. (கசா)

வெங்கண்விறற்சிலை வீரர்கள்வேறிரு கையினுநேர்பவர்
தங்கள்சிலைக்குல முந்தினதாவில் சரங்கணெருங்குவ
பொங்குசினத்தெரி யிற்புகைபோகு கொடிக்கள்வளைத்தெதிர்
செங்கண்விழிக்கனல் சிந்தியசீறு பொறிச்செலவொத்தன. (கஎ)

வாளொடுநீள்கை துடித்தனமார்பொடு வேல்கள்குளித்தன
தோளொடுவாளி நிலத்தனதோலொடு தோல்கடகைத்தன
தாளொடுவார்கழ லிற்றனதாரொடு சூழ்சிரமற்றன
நாளொடுசீறி மலைப்பவர்நாடிய போர்செய்களத்தினில். (கஅ)

குருதியினதிகள் பரந்தனகுறையுட லொழுகியலைந்தன
பொருபடையறுதுணி சிந்தினபுடைசொரி குடருடல்பம்பின
வெருவரவெருவை நெருங்கினவிசியறு துடிகள்புரண்டன
இருபடைதனினு மெதிர்ந்தவரெதிரெதி ரமர்செய்பறந்தலை. (கக)

நீளிடைமுடுகி நடந்தெதிர்நேரிரு வரிலொர்ருவன்றொடர்
தாளிருதொடையற முன்பெயர்சாரிகை முறைமைதடிந்தனன்
வாளொடுவிழுமுடல் வென்றவன்மார்பிடை யறமுனெறிந்திட
ஆளியினவனு மறிந்தனனாயினர் பலருளரெங்கணும். (உ0)

கூர்முனையயில்கொடு முட்டினர்கூடிமு னுருவியதட்டுட
னேருரமுருவ வுறைப்புடனேர்பட வெதிரெதிர்குத்தினர்
ஆருயிர்கழியவு நிற்பவராண்மையி லிருவருமொத்தமை
போரடுபடைகொட ளப்பவர்போல்பவ ரளவிலர்பட்டனர். (உக)

பொற்சிலைவளைய வெதிர்ந்தவர்புற்றர வனையசரம்பட
விற்படைதுணியவு நின்றிலர்வெற்றிகொள் சுரிகைவழங்கினர்
முற்றியபெருவள னின்றியுமுற்படி கொடைநிலைநின்றிட
உற்றனவுதவிய பண்பினரொத்தன ருளர்சிலகண்டகர். (உஉ)

அடன்முனைமறவர் மடிந்தவரலர்முக முயிருளவென்றுறு
படர்சிறைசுலவு கருங்கொடிபடர்வன சுழல்வனதுன்றலில்
விடுசுடர்விழிக ளிரும்புசெய்வினைஞர்த முலையின்முகம்பொதி
புடைமிடைகரியிடை தங்கியபுகைவிடு தழலைநிகர்ந்தன. (உங)

திண்படைவயவர் பிணம்படுசெங்கள மதனிடைமுன்சிலர்
புண்படுவழிசொரி யுங்குடர்பொங்கிய கழுகுபருந்தொடு
கொண்டெழுபொழுதினு முன்செயல்குன்றுத லிலர்தலைநின்றனர்
விண்படர்கொடிவிடு பண்பயில்விஞ்சையர் குமரரைவென்றனர். (உச)

வேறு.

இம்முனையவெம்போரி லிருபடையின்வாள்வீரர்
வெம்முனையின்வீடியபின் வீடாதுமிக்கொழிந்த
தம்முடையபல்படைஞர் பின்னாகத்தாமுன்பு
தெம்முனையிலேனாதி நாதர்செயிர்த்தெழுந்தார். (உரு)

வெஞ்சினவாடீயுமிழ வீரக்கழல்கலிப்ப
நஞ்சணிகண்டர்க்கன்பர் தாமெதிர்ந்தநாட்பின்கண்
எஞ்சியெதிர்நின்ற விகன்முனையில்வேலுழவர்
தஞ்சிரமுந்தோளுரமுந் தாளுரமுந்தாந்துணித்தார். (உசா)

தலைப்பட்டாரெல்லாருந் தனிவீரர்வாளிற்
கொலைப்பட்டார்முட்டாதார் கொல்களத்தைவிட்டு
நிலைப்பட்டமெய்யுணர்வு நேர்பட்டபோதில்
அலைப்பட்டவார்வமுதற் குற்றம்போலாயினர். (உஎ)

இந்நிலையவெங்களத்தி லேற்றழிந்தமானத்தாற்
றன்னுடையபல்படைஞர் மீண்டார்தமைக்கொண்டு
மின்னொளிவாள்வீசி விறல்வீரர்வெம்புலியே
றன்னவர்தமுன்சென் றதிசூரனேரடர்ந்தான். (உஅ)

மற்றவர்தஞ்செய்கை வடிவாளொளிகாணச்
சுற்றிவரும்வட்டணையிற் றோன்றுவகைகலந்து
பற்றியடர்க்கும்பொழுதிற் றானும்படைபிழைத்துப்
பொற்றடந்தோள்வீரர்க் குடைந்துபுறகிட்டான். (உகூ)

போனவதிசூரன் போரிலவர்க்கழிந்த
மானமிகுதூர மண்படுவான்கண்படான்
ஆனசெயலோரிரவுஞ் சிந்தித்தலமருவான்
ஈனமிகுவஞ்சனையால் வெல்வனெனவெண்ணினன். (ஙo)

சேட்டாருங்கங்குல் புலர்காலைத்தீயோனு
நாட்டாரைக்கொல்லாதே நாமிருவேம்வேறிடத்து
வாட்டாயங்கொள்போர் மலைக்கவருகவென்த்
தேர்ட்டார்பூந்தாரார்க்குச் சொல்லிச்செலவிட்டான். (௩௧)

இவ்வாறுகேட்டலுமே யேனாதிநாதனார்
அவ்வாறுசெய்த லழகிதென வமைந்து
கைவாளமர்விளைக்கத் தான்கருதுமக்களத்தில்
வெவ்வாளுரவோன் வருகவெனமேற்கொள்வார் (௩௨)

சுற்றத்தார்யாரு மறியாவகைசுடர்வாள்
பொற்பலகையுந்தாமே கொண்டுபுறம்போந்து
மற்றவன்முன்சொல்லி வரக்குறித்தவக்களத்தே
பற்றலனைமுன்வரவு பார்த்துத்தனிநின்றார். (௩௩)

தீங்குகுறித்தழைத்த தீயோன்றிருநீறு
தாங்கியநெற்றியினார் தங்களையேயெவ்விடத்தும்
ஆங்கவருந்தீங்கிழையா ரென்பதறிந்தானாய்ப்
பாங்கிற்றிருநீறு பண்டுபயிலாதான். (௩௪)

வெண்ணீறுநெற்றி விரவப்புறம்பூசி
யுண்ணெஞ்சில்வஞ்சக் கறுப்புமுடன்கொண்டு
வண்ணச்சுடர்வாண் மணிப்பலகைகைக்கொண்டு
புண்ணியப்போர்வீரர்க்குச் சொன்னவிடம்புகுந்தான். (௩௫)

வென்றிமடங்கல் விடக்குவரமுன்பார்த்து
நின்றாற்போனின்ற நிலைகண்டுதன்னெற்றி
சென்றுகிடைப்பளவுந் திண்பலகையான்மறைத்து
முன்றனிவீரர்க்கெதிரே மூண்டான்மறம்பூண்டான். (௩௬)

அடல்விடையேறென்ன வடர்த்தவனைக்கொல்லும்
இடைதெரிந்துதாள்பெயர்க்கு மேனாதிநாதர்
புடைபெயர்ந்தமாற்றான் பலகைபுறம்போக்கக்
கடையவன்றனெற்றியின்மேல் வெண்ணீறுதாங்கண்டார். (௩௭)

கண்டபொழுதேகெட்டேன் முன்பிவர்மேற்காணாத
வெண்டிருநீற்றின்பொலிவு மேற்கண்டேன்வேறினியென்
அண்டர்பிரான்சீரடியா ராயினாரென்றுமனங்
கொண்டிவர்தங்கொள்கைக் குறிவழிநிற்பேனென்று. (௩௮)

கைவாளுடன்பலகை நீக்கக்கருதியது
செய்யார்நிராயுதரைக் கொன்றாரெனுந்தீமை
யெய்தாமைவேண்டு மிவர்க்கென்றிரும்பலகை
நெய்வாளுடனடர்த்து நேர்வரர்போனேர்நின்றார். (௩௯)

அங்கின்றதொண்டர் திருவுள்ளமாரறிவார்
முன்னின்றபாதகனுந் தன்கருத்தேமுற்றுவித்தான்
இங்கின்றதன்மை யறிவாரிவர்க்கருள
மின்னின்றசெஞ்சடையார் தாமேவெளிநின்றார். (௪௦)

மற்றினிநாம்போற்றுவதென் வானோர்பிரானருளைப்
பற்றலர்தங்கைவாளாற் பாசமறுத்தருளி
யுற்றவரையென்று முடன்பிரியாவன்பருளிப்
பொற்றொடியாள்பாகனார் பொன்னம்பலமணைந்தார். (௪௧)

தம்பெருமான்சாத்துந் திருநீற்றுச்சார்புடைய
எம்பெருமானேனாதி நாதர்கழலிறைஞ்சி
யும்பர்பிரான்காளத்தி யுத்தமர்க்குக்கண்ணப்ப
நம்பெருமான்செய்தபணி நாந்தெரிந்தவாறுரைப்பாம். (௪௨)

ஆக-திருவிருத்தம்-௬௫௧.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, எயினனூரிலே, சான்றார்குலத்திலே விபூதியில் மகாபத்தியுடையவராகிய ஏனாதிநாதர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அரசர்களுக்கு வாள்வித்தையைப் பயிற்றி, அதனால் வந்த வளங்கள் எல்லாவற்றையும் சிவனடியார்களுக்கு நாடோறும் கொடுத்து வந்தார்.

இப்படி நிகழுங்காலத்தில், வாள்வித்தை பயிற்றலிலே அவரோடு தாயபாகம் பெற்ற அதிசூரன் வாள்வித்தை பயிற்றுதலினால் வரும் ஊதியம் நாடோறும் தனக்குக் குறைதலையும் ஏனாதிநாதநாயனாருக்கு வளர்தலையும் கண்டு, பொறாமையுற்று, அவரோடு போர்செய்யக் கருதி, வீரர்கூட்டத்தோடும் போய், அவர் வீட்டுத்தலைக்கடையில் நின்று, போர்செய்தற்கு வரும்படி அழைக்க; ஏனாதிநாதநாயனார் யுத்தசந்நத்தராகிப் புறப்பட்டார். அப்பொழுது அவரிடத்திலே போர்த்தொழில் கற்கும் மாணாக்கர்களும் யுத்தத்திலே சமர்த்தர்களாகிய அவர்பந்துக்களும் அதைக் கேள்வியுற்று, விரைந்து வந்து, அவருக்கு இரண்டுபக்கத்திலும் சூழ்ந்தார்கள். போருக்கு அறைகூவிய அதிசூரன் ஏனாதிநாதநாயனாரைநோக்கி, "நாம் இருவரும் இதற்குச் சமீபமாகிய வெளியிலே சேனைகளை அணிவகுத்து யுத்தஞ்செய்வோம். யுத்தத்தில் வெற்றிகொள்பவர் எவரோ அவரே வாள்வித்தை பயிற்றும் உரிமையைப் பெறல்வேண்டும்" என்று சொல்ல; ஏனாதிநாதநாயனாரும் அதற்கு உடன்பட்டார். இருவரும் தங்கள் தங்கள் சேனைகளோடு அவ்வெளியிலே போய், கலந்து யுத்தஞ்செய்தார்கள். யுத்தத்திலே அதிசூரன் ஏனாதிநாதநாயனாருக்குத் தோற்று, எஞ்சிய சிலசேனைகளோடும் புறங்காட்டியோடினான்,

அன்றிரவு முழுதும் அவன் தன்னுடைய தௌர்பலியத்தைநினைந்து, நித்திரையின்றித் துக்கித்துக்கொண்டிருந்து, ஏனாதிநாதநாயனாரை வெல்லுதற்கேற்ற உபாயத்தை ஆலோசித்து, வஞ்சனையினாலே ஜயிக்கும்படி துணிந்து, விடியற்காலத்திலே "நமக்கு உதவியாக நம்முடைய ஆரவர்களை அழைத்துக் கொல்லாமல் நாம் இருவரும் வேறோரிடத்திலே போர்செய்வோம், வாரும்" என்று ஏனாதிநாதநாயனாருக்குத் தெரிவிக்கும்படி ஒருவனை அனுப்பினான். ஏனாதிநாதநாயனார் அதைக் கேட்டு; அதற்கு உடன்பட்டுத் தம்முடைய சுற்றத்தார்கள் ஒருவரும் அறியாதபடி வாளையும் பரிசையையும் எடுத்துக்கொண்டு, தனியே புறப்பட்டு; அவ்வதிசூரன் குறித்த யுத்தகளத்திலே சென்று, அவனுடைய வரவை எதிர்பார்த்து நின்றார். முன்னொருபொழுதும் விபூதி தரியாத அதிசூரன், விபூதி தரித்தவர்களுக்கு ஏனாதிநாதநாயனார் எவ்விடத்திலும் துன்பஞ்செய்யார் என்பதை அறிந்து, நெற்றியிலே விபூதியைப் பூசி, வாளையும் பரிசையையும் எடுத்துக்கொண்டு, தான் குறித்த யுத்தகளத்திற்சென்று, அங்கு நின்ற ஏனாதிநாதநாயனாரைக் கண்டு, அவர் சமீபத்திலே போம்வரைக்கும் நெற்றியைப் பரிசையினால் மறைத்துக்கொண்டு, அவருக்கு முன்னே முடுகி நடந்தான். ஏனாதிநாதநாயனார் அவ்வதிசூரனைக் கொல்லுதற்குச் சமயந்தெரிந்துகொண்டு அடிபெயர்த்தார். அப்பொழுது அதிசூரன் தன்முகத்தை மறைத்துக்கொண்டிருந்த பரிசையைப் புறத்திலே எடுக்க; ஏனாதிநாதநாயனார் அவனுடைய நெற்றியிலே தரிக்கப்பட்ட விபூதியைக் கண்டார். கண்டபொழுதே "ஆ கெட்டேன்! முன் ஒரு பொழுதும் இவர் நெற்றியிலே காணாத விபூதியை இன்றைக்குக்கண்டேன். இனி வேறென்ன ஆலோசனை! இவர் பரமசிவனுக்கு அடியவராய் விட்டார். ஆதலால் இவருடைய உள்ளக்குறிப்பின் வழியே நிற்பேன்" என்று திருவுள்ளத்திலே நினைந்து, வாளையும் பரிசையையும் விடக் கருதி, பின்பு "நிராயுதரைக் கொன்ற தோஷம் இவரை அடையாதிருக்கவேண்டும்" என்று எண்ணி, அவைகளைவிடாமல் எதிர்ப்பவர்போல நேராக நிற்க; பாதகனாகிய அதிசூரன் அவரைக் கொன்றான். அப்பொழுது பரமசிவன் அவருக்குத்தோன்றி, அவரைத் தம்முடைய திருவடியிலே சேர்த்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.

ஏனாதிநாதநாயனார்புராணம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கண்ணப்பநாயனார் புராணம்.

வேறு.

மேவலர்புரங்கள்செற்ற விடையவர்வேதவாய்மைக்
காவலர்திருக்காளத்திக் கண்ணப்பர்திருநாடென்ப,
நாவலர்புகழ்ந்துபோற்று நல்வளம்பெருகின்ற
பூவலர்வாவிசோலை சூழ்ந்தபோத்தப்பிநாடு. (க)

இத்திருநாடுதன்னி லிவர்திருப்பதியாதென்னி
னித்திலவருவிச்சார னீள்வரைசூழ்ந்தபாங்கர்
மத்தவெங்களிற்றுக்கோட்டு வன்றொடர்வேலிகோலி
ஒத்தபேரரணஞ்சூழ்ந்த முதுபதியுடுப்பூராகும். (உ)

குன்றவரதனில்வாழ்வார் கொடுஞ்செவிஞமலியார்த்த
வன்றிறல்விளவின்கோட்டு வார்வலைமருங்குதூங்கப்
பன்றியும்புலியுமெண்குங் கடமையுமானின்பார்வை
அன்றியும்பாறைமுன்றி லைவனமுணங்குமெங்கும். (ங)

வன்புலிக்குருளையோடும் வயக்கரிக்கன்றினோடும்
புன்றலைச்சிறுமகார்கள் புரிந்துடனாடலன்றி
அன்புறுகாதல்கூர வணையுமான்பிணைகளோடும்
இன்புறமருவியாடு மெயிற்றியர்மகளிரெங்கும். (ச)

வெல்படைத்தறுகண்வெஞ்சொல் வேட்டுவர்கூட்டந்தோறுங்
கொல்லெறிகுத்தென்றார்த்துக் குழுமியவோசையன்றிச்
சில்லரித்துடியுங்கொம்புஞ் சிறுகணூகுளியுங்கூடிக்
கல்லெனுமொலியின்மேலுங் கறங்கிசையருவியெங்கும். (ரு)

ஆறலைத்துண்ணும்வேட ரயற்புலங்கவர்ந்துகொண்ட
வேறுபல்லுருவின்மிக்கு விரவுமாணிரைகளன்றி
ஏறுடைவானந்தன்னி லிடிக்குரலெழிலியோடு
மாறுகொண்முழக்கங்காட்டு மதக்கைம்மாநிரைகளெங்கும். (சா)

மைச்செறிந்தனையமேனி வன்றொழின்மறவர்தம்பால்
அச்சமுமருளுமென்று மடைவிலாருடைவன்றோலார்
பொச்சையினறவுமூனின் புழுக்கலுமுணவுகொள்ளு
நச்சழற்பகழிவேட்டர்க் கதிபதிநாகனென்பான். (எ)

பெற்றியாற்றவமுன்செய்தா னுயினும்பிறப்பின்சார்பாற்
குற்றமேகுணமாவாழ்வான் கொடுமையேதலைநின்றுள்ளான்
விற்றொழில்விறலின்மிக்கான் வெஞ்சினமடங்கல்போல்வான்
மற்றவன்குறிச்சிவாழ்க்கை மனைவியுந்தத்தையென்பாள். (அ)

அரும்பெறன்மறவர்தாயத் தான்றதொல்குடியில்வந்தாள்
இரும்புலியெயிற்றுத்தாலி யிடையிடைமனவுகோத்துப்
பெரும்புறமலையப்பூண்டாள் பீலியுங்குழையுந்தட்டச்
சுரும்புறுபடலைமுச்சிச் சூரரிப்பிணவுபோல்வாள். (கூ)

பொருவருஞ்சிறப்பின்மிக்கா ரிவர்க்கினிப்புதல்வர்ப்பேறே
அரியதென்றெவருங்கூற வதற்படுகாதலாலே
முருகலரலங்கற்செவ்வேள் முருகவேண்முன்றிற்சென்று
பரவுதல்செய்துநாளும் பராய்க்கடனெறியினிற்பார். (க0)

வாரணச்சேவலோடும் வரிமயிற்குலங்கள்விட்டுத்
தோரணமணிகடூக்கிச் சுரும்பணிகதம்பநாற்றிப்
போரணிநெடுவேலாற்குப் புகழ்புரிகுரவைதூங்கப்
பேரணங்காடல்செய்து பெருவிழாவெடுத்தபின்றை. (கக)

பயில்வடுப்பொலிந்தயாக்கை வேடர்தம்பதியாநாகற்
கெயிலுடைப்புரங்கள்செற்ற வெந்தையார்மைந்தரான
மயிலுடைக்கொற்றவூர்தி வரையுரங்கிழித்ததிண்மை
அயிலுடைத்தடக்கைவென்றி யண்ணலாரருளினாலே. (கஉ)

கானவர்குலம்விளங்கத் தத்தைபாற்கருப்பநீட
ஊனமில்பலிகள்போக்கி யுறுகடன்வெறியாட்டோடும்
ஆனவத்திங்கள்செல்ல வளவில்செய்தவத்தினாலே
பான்மதியுவரியீன்ற லெனமகப்பயந்தபோது. (கங)

கரிப்பருமருப்பின்முத்துங் கழைவிளைசெழுநீர்முத்தும்
பொருப்பினின்மணியும்வேடர் பொழிதருமழையேயன்றி
வரிச்சுரும்பலையவானின் மலர்மழைபொழிந்ததெங்கும்
அரிக்குறுந்துடியேயன்றி யமரர்துந்துபியுமார்த்த. (கச)

அருவரைக்குறவர்தங்க ளகன்குடிச்சீறூராயம்
பெருவிழாவெடுத்துமிக்க பெருங்களிகூருங்காலைக்
கருவரைகாளமேக மேந்தியதென்னத்தாதை
பொருவரைத்தோள்களாரப் புதல்வனையெடுத்துக்கொண்டான். (கரு)

கருங்கதிர்விரிக்குமேனிக் காமருகுழவிதானும்
இரும்புலிப்பறழினோங்கி யிறவுளரளவேயன்றி
யரும்பெறலுலகமெல்லா மளப்பரும்பெருமைகாட்டித்
தருங்குறிபலவுஞ்சாற்றுந் தன்மையிற்பொலிந்துதோன்ற. (கசு)

அண்ணலைக்கையிலேந்தற் கருமையா லுரிமைப்பேருந்
திண்ணனென் றியம்புமென்னத் திண்சிலைவேடரார்த்தார்
புண்ணியப்பொருளாயுள்ள பொருவில்சீருருவினானைக்
கண்ணினுக்கணியாத்தங்கள் கலன்பலவணிந்தாரன்றே. (௧௭)

வரையுறைகடவுட்காப்பு மறக்குடிமரபிற்றங்கள்
புரையிறுன்முறைமைக்கேற்பப் பொருந்துவபோற்றிச்செய்து
விரையிளந்தளிருஞ்சூட்டி வேம்பிழைத்திடையிற்கோத்த
அரைமணிக்கவடிகட்டி யழகுறவளர்க்குநாளில். (௧௮)

வருமுறைப்பருவந்தோறும் வளமிகுசிறப்பிற்றெய்வப்
பெருமடைகொடுத்துத்தொக்க பெருவிறல்வேடர்க்கெல்லாந்
திருமலிதுழனிபொங்கச் செழுங்களிமகிழ்ச்சிசெய்தே
யருமையிற்புதல்வற்பெற்ற வார்வமுந்தோன்றவுய்த்தார். (௧௯)

ஆண்டெதிரணைந்துசெல்ல விடுமடித்தளர்வுநீங்கிப்
பூண்டிகழ்சிறுபுன்குஞ்சிப் புலியுகிர்ச்சுட்டிசாத்தி
மூண்டெழுசினத்துச்செங்கண் முளவுமுள்ளரிந்துகோத்த
நாண்டருமெயிற்றுத்தாலி நலங்கிளர்மார்பிற்றூங்க. (௨௦)

பாசொளிமணியோடார்த்த பன்மணிச்சதங்கையேங்கக்
காசொடுதொடுத்தகாப்புக் கலன்புனையரைஞாண்சேர்த்தித்
தேசுடைமருப்பிற்றண்டை செறிமணிக்குதம்பைமின்ன
மாசறுகோலங்காட்டி மறுகிடையாடுநாளில். (௨௧)

தண்மலரலங்கற்றாதை தாய்மனங்களிப்பவந்து
புண்ணியக்கங்கைநீரிற் புனிதமாந்திருவாய்நீரில்
உண்ணனைந்தமுதமூறி யொழுகியமழலைத்தீஞ்சொல்
வண்ணமென்பவளச்செவ்வாய் குதட்டியேவளராநின்றார். (௨௨)

பொருபுலிப்பார்வைப்பேழ்வாய் முழையெனப்பொற்கைநீட்டப்
பரிவுடைத்தந்தைகண்டு பைந்தழைகைக்கொண்டோச்ச
இருசுடர்க்குறுகண்டீர்க்கு மெழில்வளர்கண்ணீர்மல்கி
வருதுளிமுத்தமத்தாய் வாய்முத்தங்கொள்ளமாற்றி. (௨௩)

துடிக்குறடுருட்டியோடித் தொடக்குநாய்ப்பாசஞ்சுற்றிப்
பிடித்தறுத்தெயினப்பிள்ளைப் பேதையரிழைத்தவண்டல்
அடிச்சிறுதளிராற்சிந்தி யருகுறுசிறுவரோடுங்
குடிச்சிறுகுரம்பையெங்குங் குறுநடைக்குறும்புசெய்து. (௨௪)

அனையனபலவுஞ்செய்தே யைந்தின்மேலானவாண்டின்
வனைதருவடிவார்கண்ணி மறச்சிறுமைந்தரோடுஞ்
சினைமலர்க்காவுளாடிச் செறிகுடிக்குறிச்சிசூழ்ந்த
புனைமருப்புழலைவேலிப் புறச்சிறுகானிற்போகி. (௨௫)

கடுமுயற்பறழினோடுங் கானவேனத்தின்குட்டி
கொடுவரிக்குருளைசெந்நாய் கொடுஞ்செவிச்சரபமான
முடுகியவிசையிலோடித் தொடர்ந்துமுன்பற்றிமுற்றத்
திடுமரத்திரளிற்கட்டி வளர்ப்பனவெண்ணிலாத. (உசு)

அலர்பகல்கழிந்தவந்தி யையவிப்புகையுமாட்டிக்
குலமுதுகுறத்தியூட்டிக் கொண்டுகண்டுயிற்றிக்கங்குல்
புலரவூனுணவுநல்கிப் புரிவிளையாட்டின்விட்டுச்
சிலமுறையாண்டுசெல்லச் சிலைபயில்பருவஞ்சேர்ந்தார். (உஎ)

தந்தையுமைந்தனாரை நோக்கித்தன்றடித்ததோளாற்
சிந்தையுண்மகிழப்புல்லிச் சிலைத்தொழில்பயிற்றவேண்டி
முந்தையத்துறையின்மிக்க முதியரையழைத்துக்கூட்டி
வந்தநாட்குறித்ததெல்லா மறவர்க்குச்சொல்லிவிட்டான். (உஅ)

வேடர்தங்கோமானாகன் வென்றிவேளருளாற்பெற்ற
சேடரின்மிக்கசெய்கைத் திண்ணன்விற்பிடிக்கின்றானென்
றூடியற்றுடியுஞ்சாற்றி யறைந்தபேரோசைகேட்டு
மாடுபேர்மலைகளாளு மறக்குலத்தலைவரெல்லாம். (உகூ)

மலைபடுமணியும்பொன்னுந் தரளமும்வரியின்றோலுங்
கொலைபுரிகளிற்றின்கோடும் பீலியின்குவையுந்தேனுந்
தொலைவில்பன்னறவுமூனும் பலங்களுங்கிழங்குந்துன்றச்
சிலையுடைவேடர்கொண்டு திசைதொறுநெருங்கவந்தார். (௩௦)

மல்கியவளங்களெல்லா நிறைந்திடமாறில்சீறூர்
எல்லையிலடங்காவண்ண மீண்டினர்கொணர்ந்தாரெங்கும்
பல்பெருங்கிளைஞர்போற்றப் பராய்க்கடன்பலவுநேர்ந்து
வில்விழாவெடுக்கவென்று விளம்பினன்வேடர்கோமான். (௩க)

பான்மையிற்சமைத்துக்கொண்டு படைக்கலம்வினைஞரேந்தத்
தேனலர்கொன்றையார்தந் திருச்சிலைச்செம்பொன்மேரு
வானதுகடலினஞ்ச மாக்கிடவவர்க்கேபின்னுங்
கானவூனமுதமாக்குஞ் சிலையினைக்காப்புச்சேர்த்தார். (௩உ)

சிலையினைக்காப்புக்கட்டுந் திண்புலிநரம்பிற்செய்த
நலமிகுகாப்புநன்னா ளாகனார்பயந்தநாகக்
குலம்விளங்கரியகுன்றின் கோலமுன்கையிற்சேர்த்தி
மலையுறைமாக்களெல்லாம் வாழ்த்தெடுத்தியம்பினார்கள். (௩௩)

ஐவனவடிசில்வெவ்வே றமைந்தனபுற்பாற்சொன்றி
மொய்வரைத்தினைமென்சோறு மூங்கில்வன்பதங்கண்மற்றுங்
கைவினையெயினராக்கிக் கலந்தவூன்கிழங்குகூடச்
செய்வரையுயர்ப்பவெங்குங் கலந்தனர்சிலைவில்வேடர். (௩௪)

செந்தினையிடியுந்தேனு மருந்துவார்தேனிற்றோய்த்து
வெந்தவூனயில்வார்வேரி விளங்கனிக்கவளங்கொள்வார்
நந்தியவீயலுண்டி நசையொடுமிசைவார்வெவ்வே
றந்தமிலுணவின்மேலோ ராயினாரளவிலார்கள். (௩௫)

அயல்வரைப்புறத்தின்வந்தா ரருங்குடியிருப்பினுள்ளார்
இயல்வகையுணவிலார்ந்த வெயிற்றியரெயினரெல்லாம்
உயர்கதிருச்சிநீங்க வொழிவில்பன்னறவமாந்தி
மயலுறுகளிப்பினீடி வரிசிலைவிழவுகொள்வார். (௩௬)

பாசிலைப்படலைசுற்றிப் பன்மலர்த்தொடையல்சூடிக்
காசுடைவடத்தோல்கட்டிக் கவடிமெய்க்கலன்கள்பூண்டார்
மாசில்சீர்வெட்சிமுன்னா வருந்துறைக்கண்ணிசூடி
ஆசிலாசிரியனேந்து மடற்சிலைமருங்குசூழ்ந்தார். (௩௭)

தொண்டகமுரசுங்கொம்புந் துடிகளுந்துளைகொள்வேயும்
எண்டிசைநிறைந்துவிம்ம வெழுந்தபேரொலியினோடு
திண்டிறன்மறவரார்ப்புச் சேண்விசும்பிடித்துச்செல்லக்
கொண்டசீர்விழவுபொங்கக் குறிச்சியைவலங்கொண்டார்கள். (௩௮)

குன்றவர்வரிகொண்டாடக் கொடிச்சியர்துணங்கையாடத்
துன்றியமகிழ்ச்சியோடுஞ் சூரரமகளிராட
வென்றிவில்விழவினோடும் விருப்புடையேழாநாளாம்
அன்றிருமடங்குசெய்கை யழகுறவமைத்தபின்னர். (௩௯)

வெங்கதிர்விசும்பினுச்சி மேவியபொழுதிலெங்கு
மங்கலவாழ்த்துமல்க மருங்குபல்லியங்களார்ப்பத்
தங்கடொன்மரபின்விஞ்சைத் தனுத்தொழில்வலவர்தம்பாற்
பொங்கொளிக்கரும்போரேற்றைப் பொருசிலைபிடிப்பித்தார்கள். (௪0)

பொற்றடவரையின்பாங்கர்ப் புரிவுறுகடன்முன்செய்த
விற்றொழிற்களத்தினண்ணி விதிமுறைவணங்கிமேவும்
அற்றைநாட்டொடங்கிநாளு மடற்சிலையாண்மைமுற்றக்
கற்றனனென்னையாளுங் கானவர்க்கரியசிங்கம். (௪௧)

வண்ணவெஞ்சிலையுமற்றப் படைகளுமலரக்கற்றுக்
கண்ணகன்சாயல்பொங்கக் கலைவளர்திங்களேபோல்
எண்ணிரண்டாண்டின்செவ்வி யெய்தினரெல்லையில்லாப்
புண்ணியந்தோன்றிமேன்மேல் வளர்வதன்பொலிவுபோல்வார். (௪௨)

வேறு.

இவ்வண்ணந்திண்ணனார் நிரம்புநாளி லிருங்குறவர்பெருங்குறிச்சிக்கிறைவனாய, மைவ்வண்ணவரைநெடுந்தோ ணாகன்றானு மலையெங்கும்வளமெங்கும் வரம்பில்காலங், கைவ்வண்ணச்சிலைவேட்டை யாடித்தெவ்

வர் கணநிரைகள்பலகவர்ந்து கானங்காத்து, மெய்வ்வண்ணந்தளர்மூப் பின் பருவமெய்தி வில்லுழவின்பெருமுயற்சி மெலிவனுனன். (௪௩)

அங்கண்மலைத்தடஞ்சாரற் புனங்களெங்கு மடலேனம்புலிகரடி க டமையாமா, வெங்கண்மரைகலையொடுமான் முதலாயுள்ள மிருகங்கண் மிகநெருங்கி மீதூர்காலைத், திங்கண்முறைவேட்டைவினை தாழ்த்ததெ ன்று சிலைவேடர்தாமெல்லாந் திரண்டுசென்று, தங்கள்குலமுதற்றலைவ னுகியுள்ள தன்டெரியனுகன்பாற் சார்ந்துசொன்னுர். (௪௪)

சொன்னவுரைகேட்டலுமே நாகன்றானுஞ் சூழ்ந்துவருதன்மூப்பின் றொடர்வுநோக்கி, முன்னவர்கட்குரைசெய்வான் மூப்பினுலே முன்போ லவேட்டையினின் முயலகில்லேன்,எள்மகனையுங்களுக்கு நாதனுக வெல் லீருங்கைக்கொண்மி னென்றபோதின், அன்னவருமிரங்கிப்பின் மகிழ்ந் துதங்கோ னடிவணங்கியிம்மாற்ற மறைகின்றுர்கள். (௪௫)

இத்தனைகாலமுநின து சிலைக்கீழ்த்தங்கி யினிதுண்டுதீங்கின்றி யிரு ந்தோமின்னும், அத்தவுனதருள்வழியே நிற்பதல்லா லடுத்தநெறிவேறு ளதோ வதுவேயன்றி, மெய்த்தவிறற்றிண்ணனையுன் மரபிற்சால மேம் படவேபெற்றளித்தாய் விளங்குமேன்மை, வைத்தசிலைமைந்தனையீண் டழைத்துநுங்கள் வரையாட்சியருளென்றுர் மகிழ்ந்துவேடர். (௪௬)

சிலைமறவருரைசெய்ய நாகன்றானுந் திண்ணனைமுன்கொண்டுவரச் செப்பிவிட்டு, மலைமருவுநெடுங்கானிற் கன்னிவேட்டை மகன்போகக்கா டுபலி மகிழவூட்டத், தலைமரபின்வழிவந்த தேவராட்டி தனையழைமினெ னவங்குச் சார்ந்தோர்சென்று, நிலைமையவடனக்குரைப்ப நரைமூதாட்டி நெடிதுவந்துவிருப்பினெடுங் கடிதுவந்தாள். (௪௭)

கானில்வரித்தளிர்துதைந்த கண்ணிசூடிக் கலைமருப்பினரிந்தகுழை காதிற்பெய்து, மானின்வயிற்றரிதாரத் திலகமிட்டு மயிற்கழுத்துமனவு மணி வடமும்பூண்டு, தானிழிந்துதிரங்கிமுலை சரிந்துதாழத் தழைப்பீலி மரவுரிமேற் சாரவெய்திப், பூநெருங்குதோரைமலி சேடைநல்கிப் போர் வேடர்கோமானைப் போற்றிநின்றுள். (௪௮)

நின்றமுதுகுறக்கோலப் படிமத்தாளை நேர்நோக்கியன்னைநீ நிரப்பு நீங்கி, நன்றினிதினிருந்தனையோ வென்றுகூறு நாகனெதிர்நலம்பெறுக வாழ்த்திநல்ல, மென்றசையுமீயலொடு நறவும்வெற்பில் விளைவளனும்பிற வளனும் வேண்டிற்றெல்லாம், அன்றுநீவைத்தபடி பெற்றுவாழ்வே னழைத்தபணியென்னென்று ளணங்குசார்ந்தாள். (௪௯)

கோட்டமிலென்குலமைந்தன் றிண்ணனெங்கள் குலத்தலைமையா ன்கொடுப்பக் கொண்டுபூண்டு, பூட்டுறுவெஞ்சிலைவேடர் தம்மைக்காக் கும் பொருப்புரிமைபுகுகின்று னவனுக்கென்றும், வேட்டைவினையென ங்குமேலாகவாய்த்து வேறுபுலங்கவர்வென்றி மேவுமாறு, காட்டிலுறை தெய்வங்கள்விரும்பியுண்ணக் காடுபலியூட்டென்றுன் கவலையில்லான். ()

மற்றவன்றன்மொழிகேட்ட வரைச்சூராட்டி மனமகிழ்ந்திங்கன் போடுவருகின்றேனுக், கெற்றையினுங்குறிகண்மிக நல்லவான விதனாலே யுன்மைந்தன் றிண்ணனுன, வெற்றிவரிச்சிலையோனின் னளவிலன்றி மேம்படுகின்றானென்று விரும்பிவாழ்த்திக், கொற்றவனத்தெய்வங்கண் மகிழவூட்ட வேண்டுவனகுறைவின்றிக் கொண்டுபோனாள். (௫௧)

தெய்வசிகழ்குறமுதியாள் சென்றபின்பு திண்ணனார்சிலைத்தாதை யழைப்பச்சீர்கொண், மைவிரவுநறுங்குஞ்சி வாசக்கண்ணி மணிநீலமலை யொன்று வந்ததென்னக், கைவிரவுசிலைவேடர் போற்றவந்து காதல்புரி தாதைகழல் வணங்கும்போதிற், செவ்வரைபோற்புயமிரண்டுஞ் செறிய ப்புல்லிச் செழும்புலித்தோலிருக்கையின்முன் சேரவைத்தான். (௫௨)

முன்னிருந்தமைந்தன்முக நோக்கிநாகன் மூப்பெனைவந்தடைதலி னுன் முன்புபோல, என்னுடையமுயற்சியினல் வேட்டையாட வினியெ னக்குக்கருத்தில்லை யெனக்குமேலாய், மன்னுசிலைமலையர்குலக் காவல் பூண்டு மாறெறிந்துமாவேட்டை யாடியென்றும், உன்னுடையமரபுரிமை தாங்குவாயென் றுடைதோலுஞ்சுரிகையுங்கைக் கொடுத்தானன்றே. ()

தந்தைநிலையுட்கொண்டு தளர்வுகொண்டு தங்கள்குலத்தலைமைக் குச் சார்வுதோன்ற, வந்தகுறைபாடதனை நிரப்புமாறு மனங்கொண்ட குறிப்பினுன் மறுமைகொண்டு, முந்தையவன்கழல்வணங்கி முறைமைத ந்த முதற்சுரிகையுடைதோலும் வாங்கிக்கொண்டு, சிந்தைபரங்கொளசி ன்ற திண்ணனார்க்குத் திருத்தாதைமுகமலர்ந்து செப்புகின்றான். (௫௪)

நம்முடையகுலமறவர் சுற்றத்தாரை நான்கொண்டுபரித்ததன்மே னலமேசெய்து, தெம்முனையிலயற்புலங்கள் கவர்ந்துகொண்ட திண்சிலை யின்வளமொழியாச் சிறப்பின்வாழ்வாய், வெம்முனையின்வேட்டைகளு முனக்குவாய்க்கும் விரைந்துநீதாழாதே வேட்டையாட, இம்முரண்வெ ஞ்சிலைவேடர் தங்களோடு மெழுகவெனவிடைகொடுத்தா னியல்பினி ன்றான். (௫௫)

செங்கண்வயக்கோளரியே றன்னதிண்மைத் திண்ணனார்செய்தவத் தின் பெருமைபெற்ற, வெங்கண்விறற்றாதைகழல் வணங்கிநின்று விடை கொண்டுபுறம்போந்து வேடரோடு, மங்கலநீர்ச்சுனைபடிந்து மனையின் வைகி வைகிருளின்புலர்காலை வரிவிற்சாலைப், பொங்குசிலையடல்வேட் டைக் கோலங்கொள்ளப் புனைதொழிற்கைவினைஞரொடும் பொலிந்துபு க்கார். (௫௬)

வேறு.

நெறிகொண்டகுஞ்சிச் சுருடுஞ்சி நிமிர்ந்துபொங்க
முறிகொண்டகண்ணிக் கிடைமொய்யொளிப் பீலிசேர்த்தி
வெறிகொண்டமுல்லைப் பிணைமீது குறிஞ்சிவெட்சிச்
செறிகொண்டவண்டின் குலஞ்சேர்கொளப் பின்புசெய்து. (௫௭)

முன்னெற்றியின் மீதுமுருந்திடை வைத்தகுன்றி
தன்னிற்புரி கொண்டமயிர்க்கயி றூரச்சாத்தி
மின்னிற்றிகழ் சங்குவிளங்குவெண் டோடுகாதின்
மன்னிப்புடை நின்றனமாமதி போலவைக. (ருஅ)

கண்டத்திடை வெண்கவடிக்கதிர் மாலைசேரக்
கொண்டக்கொடு பன்மணிகோத்திடை யேனக்கோடு
துண்டப்பிறை போல்வன தூங்கிட வேங்கைவன்றோற்
றண்டைச்செயல் பொங்கியசன்னவீ ரந்தயங்க. (ருகூ)

மார்பிற்சிறு தந்தமணித்திரண் மாலைதாழத்
தாரிற்பொலி தோள்வலயங்க டழைத்துமின்னச்
சேர்விற்பொலி கங்கணமீது திகழ்ந்தமுன்கை
கார்விற்செறி நாணெறிகைச்செறி கட்டிகட்டி. (சு0)

அரையிற்சர ணத்துரியாடையின் மீதுபௌவத்
திரையிற்படு வெள்ளலகார்த்து விளிம்புசேர்த்தி
நிரையிற்பொலி நீளுடைத்தோல்சுரி கைப்புறஞ்சூழ்
விரையிற்றுவர் வார்விசிபோக்கிய மைத்துவீக்கி. (சுக)

வீரக்கழல் காலின்விளங்கவி சித்துப்பாதஞ்
சேரத்தொடு நீடுசெருப்பு விருப்புவாய்ப்பப்
பாரப்பெரு வில்வலங்கொண்டு பணிந்துதிண்ணன்
சாரத்திருத் தாண்மடுத்தேற்றி வியந்துதாங்கி. (சுஉ)

அங்கப்பொழு திற்புவனத்திடர் வாங்கவோங்கித்
துங்கப்பெரு மாமழைபோன்றுதுண் ணென்றொலிப்ப
வெங்கட்சின நீடுவிலங்கு விலங்கிநீங்கச்
செங்கைத்தலத் தாற்றடவிச்சிறு நாணெறிந்தார். (சுஙு)

பல்வேறுவாளி புதைபார்த்துடன் போதவேவி
வில்வேடராயத் துடிமேவி யொலிக்குமுன்றிற்
சொல்வேறுவாழ்த்துத் திசைதோறுந் துதைந்துவிம்ம
வல்லேறுபோல்வா ரடல்வாளி தெரிந்துநின்றார். (சுச)

மானச்சிலை வேடர்மருங்கு நெருங்குபோதிற்
பானற்குல மாமலரிற்படர் சோதியார்முன்
றேனற்றசை தேறல்சருப்பொரி மற்றுமுள்ள
கானப்பலி நேர்கடவுட்பொறை யாட்டிவந்தாள். (சுரு)

நின்றெங்குமொய்க்குஞ் சினவேடர்க ணீங்கப்புக்குச்
சென்றங்குவள்ள றிருநெற்றியிற் சேடைசாத்தி
யுன்றந்தைதந்தைக்கு மிந்நன்மைக ளுள்ளவல்ல
நன்றும்பெரிதுன் விறனம்மள வன்றிதென்றாள். (சுசு)

அப்பெற்றியில் வாழ்த்துமணங்குறை யாட்டிதன்னைச்
செப்பற்கரி தாயசிறப்பெதிர் செய்துபோக்கிக்
கைப்பற்றிய திண்சிலைக்கார்மழை மேகமென்ன
மெய்ப்பொற்புடை வேட்டையின்மேற்கொ டெழுந்துபோந்தார். (௬௭)

வேறு.

தாளில்வாழ்செருப்பர்தோ றழைத்தநீடுதானையார்
வாளியோடுசாபமேவு கையர்வெய்யவன்கணூர்
ஆளியேறுபோலவேகு மண்ணலார்முனெண்ணிலார்
மீளிவேடர்நீடுகூட்ட மிக்குமேலெழுந்ததே. (௬௮)

வன்றொடர்ப்பிணித்தபாசம் வன்கைமள்ளர்கொள்ளவே
வென்றிமங்கைவேடர்வில்லின் மீதுமேவுபாதமுன்
சென்றுநீளுமாறுபோல்வ செய்யநாவின்வாயவாய்
ஒன்றொடொன்றுநேர்படாம லோடுநாய்கண்மாடெலாம். (௬௯)

போர்வலைச்சிலைத்தொழிற் புறத்திலேவிளைப்பவச்
சார்வலைத்தொடக்கறுக்க வேகுமையர்தம்முனே
கார்வலைப்படுத்தகுன்று கானமாவளைக்கநீள்
வார்வலைத்திறஞ்சுமந்து வந்தவெற்பர்முந்தினர். (௭0)

நண்ணிமாமறைக்குலங்க ளுடவென்றுநீடுமத்
தண்ணிலாவடம்புகொன்றை தங்குவேணியார்தமைக்
கண்ணினீடுபார்வையொன்று கொண்டுகொணுமன்பர்முன்
எண்ணில்பார்வைகொண்டுவேட ரெம்மருங்குமேகினர். (௭௧)

கோடுமுன்பொலிக்கவுங் குறுங்கணுகுளிக்குல
மாடுசென்றிசைப்பவு மருங்குபம்பைகொட்டவுஞ்
சேடுகொண்டகைவிளிச் சிறந்தவோசைசெல்லவுங்
காடுகொண்டெழுந்தவேடு கைவளைந்துசென்றதே. (௭௨)

நெருங்குபைந்தருக்குலங்க ணீடுகாடுகூடநேர்
வருங்கருஞ்சிலைத்தடக்கை மானவேடர்சேனைதான்
பொருந்தடந்திரைக்கடற் பரப்பிடைப்புகும்பெருங்
கருந்தரங்கநீள்புனற்க ளிந்தகன்னிபொத்ததே. (௭௩)

தென்றிசைப்பொருப்புட்ன் செறிந்தகானின்மானினம்
பன்றிவெம்மரைக்கணங்க ளாதியானபல்குலந்
துன்றிநின்றவென்றடிச் சுவட்டினெற்றர்சொல்லவே
வன்றடக்கைவார்கொடெம் மருங்கும்வேடரோடினர். (௭௪)

ஓடியெறிந்துவாரொழுக்கி யோசனைப்பரப்பெலா
நெடியதிண்வலைத்தொடக்கு நீளிடைப்பிணித்துநேர்
கடிகொளப்பரந்தகாடு காவல்செய்தமைத்தபின்
செடிதலைச்சிலைக்கைவேடர் திண்ணனூர்முனண்ணினர். (௭௫)

வெஞ்சிலைக்கைவீரனாரும் வேடரோடுகூடிமுன்
மஞ்சலைக்குமாமலைச்ச ரிப்புறத்துவந்தமர்
அஞ்சுவித்தடர்க்குநாய்க ளட்டமாகவிட்டுநீள்
செஞ்சரத்தினோடுசூழல் செய்தகானுளெய்தினர். (எசு)

வெய்யமாவெழுப்பவேவி வெற்பராயமோடிநேர்
எய்யும்வாளிமுன்றெரிந்து கொண்டுசெல்லவெங்கணு
மொய்குரற்றுடிக்குலங்கள் பம்பைமுன்சிலைத்தெழக்
கைவிளித்ததிர்த்துமா வெழுப்பினர்கள்கானெலாம். (எஎ)

ஏனமோடுமானினங்க ளெண்குதிண்கலைக்குலங்
கானமேதியானைவெம் புலிக்கணங்கள்கான்மரை
யானமாவனேகமா வெருண்டெழுந்துபாய்முன்
சேனைவேடர்மேலடர்ந்து சீறியம்புநூறினர். (எஅ)

வேறு.

தாளறுவனவிடை துணிவனதலைதுமி வனகலைமா
வாளிகளொடுகுடல் சொரிதரமறிவன சிலமரைமா
நீளுடல்விடுசர முருவிடநிமிர்வன மிடைகடமா
மீளிகொள்கணைபடு முடலெழவிழுவன பலவுழையே. (எகூ)

வெங்கணைபடுபிடர் கிழிபடவிசையுரு வியகயவாய்
செங்கனல்விடவத னொடுகணைசெறியமு னிருகருமா
அங்கெழுசிரமுரு வியபொழுதடலெயி றுறவதனைப்
பொங்கியசினமொடு கவர்வனபுரைவன சிலபுலிகள். (அ0)

பின்மறவர்கள்விடு பகழிகள்பிறகுற வயிறிடைபோய்
முன்னடுமுகமிசை யுருவிடமுடுகிய விசையுடனக்
கொன்முனையடுசர மினமெதிர்குறுகிய முகமுருவத்
தன்னெதிரெதிர்பொரு வனகிகர்தலையன பலகலைகள். (அக)

கருவரையொருதனு வொடுவிசைகடுகிய தெனமுனைநேர்
குரிசின்முன்விடுமடு சரமெதிர்கொலைபயில் பொழுதவையே
பொருகரியொடுசின வரியிடைபுரையற வுடல்புகலால்
வருமிரவொடுபக லணைவனவெனமிடை யுமவ்வனமே. (அஉ)

நீளிடைவிசைமிசை குதிகொளநெடுமுகி றூடெழுமான்
றாளுறுகழன்மற வர்கள்விடுசரநிரை தொடர்வனதாம்
வாள்விடுகதிர்மதி பரிவுறவருமென விழுமுழையைக்
கோளொடுபயில்பணி தொடர்நிலைகொளவுள தெதிர்பலவே. (அங)

கட்டல்விரிபுனல்கொள விழுவனகருமுகி லெனநிரையே
படர்வொடுசெறிதழை பொதுளியபயில்புதல் வனமதன்மேல்
அட்டுறுசரமுட் லுறவரையடியிட மலமரலான்
நிடைகருமரைகர டிகளொடுவிழுவன வனமேதி. (அச)

பலதுறைகளின்வெரு வரலொடுபெயில்வலை யறநுழைமா
உலமொடுபடர்வன தகைவுறவுறுசின மொடுகவர்நாய்
நிலவியவிருவினை வலையிடைநிலைசுழல் பவர்நெறிசேர்
புலனுறுமனனிடைத் தடைசெய்தபொறிகளி னளவுளவே. (அ௫)

துடியடியனமடி செவியனதுறுகய முனிதொடரார்
வெடிபடவிரிசிறு குருளைகண்மிசைபடு கொலைவிரவார்
அடிதளர்வுறுகரு வுடையனவணைவுறு பிணையலையார்
கொடியனவெதிர்முடு கியுமுறுகொலைபுரி சிலைமறவோர். (அ௬)

இவ்வகைவருகொலை மறவினையெதிர்நிகழ் வுழியதிரக்
கைவரைகளும்வெரு வுறமிடைகானெழு வதொரேனம்
பெய்கருமுகிலென விடியொடுபிதிர்கனல் விழிசிதறி
மொய்வலைகளையற நிமிர்வுறமுடுகிய கடுவிசையில். (அ௭)

போமதுதனையடு திறலொடுபொருமற வர்களரியே
றாமவர்தொடர்வுறும் விசையுடனடிவழி செலுமளவிற்
றாமொருவருமறி கிலரவர்தனிதொடர் வுழியதன்மேல்
ஏமுனையடுசிலை விடலைகளிருவர்க ளடிபிரியார். (அ௮)

நாடியகழல்வய வர்களவர்நாணனு நெடுவரிவிற்
காடனுமெனுமிரு வருமலைகர்வல ரொடுகடிதிற்
கூடினர்விடுபக ழிகளொடுகொலைஞம லிகள்வழுவி
நீடியசரிபடர் வதுதருநீழலின் விரைகேழல். (அ௯)

குன்றியைநிகர்முன் செறவெரிகொடுவிழி யிடிகுரனீள்
பன்றியுமடல்வன் றிறலொடுபட்ர்நெறி நெடிதோடித்
துன்றியதொருகுன் றடிவரைசுலவிய நெறிசூழற்
சென்றதனிடைநின் றதுவலிதெருமர மரநிரையில். (௯௦)

அத்தருவளர்சுழ லிடையடையதனிலை யறிபவர்முன்
கைத்தெரிகணையினி லடுவதுகருதலர் விசைகடுகி
மொய்த்தெழுசுடர்விடு சுரிகையைமுனைபெற வெதிருருவிக்
குத்தினருடன்முறி படவெறிகுலமற வர்கடலைவர். (௯௧)

வேறு.

வேடர்தங்கரியசெங்கண் வில்லியார்விசையிற்குத்த
மாடிருதுணியாய்வீழ்ந்த வராகத்தைக்கண்டுநாணன்
காடனேயிதன்பினின்று காதங்கள்பலவந்தெய்த்தோம்
ஆடவன்கொன்றானச்சோ வென்றவரடியிற்றாழ்ந்தார். (௯௨)

மற்றவர்திண்ணனார்க்கு மொழிகின்றார்வழிவந்தாற்ற
உற்றதுபசிவந்தெம்மை யுதவியவிதனைக்காய்ச்சிச்
சற்றுநீயருந்தியாமுந் தின்றுதண்ணீர்குடித்து
வெற்றிகொள்வேட்டைக்காடு குறுகுவோமெல்லவென்றார். (௯௩)

என்றவர்கூறநோக்கித் திண்ணனார்தண்ணீரெங்கே
நன்றுமிவ்வனத்திலுள்ள தென்றுரைசெய்யநாண
னின்றவிப்பெரியதேக்கி னப்புறஞ்சென்றானீண்ட்
குன்றினுக்கயலேயோடுங் குளிர்ந்தபொன்முகலியென்றான். (௬௪)

பொங்கியசினவில்வேடன் சொன்னபின்போவோமங்கே
இங்கிதுதன்னைக்கொண்டு போதுமினென்றுதாமும்
அங்கதுநோக்கிச்சென்றார் காவதமரையிற்கண்டார்
செங்கணேறுடையார்வைகுந் திருமலைச்சாரற்சோலை. (௬௫)

நாணனேதோன்றுங்குன்றி னண்ணுவேமென்னநாணன்
காணநீபோதினல்ல காட்சியேகாணுமிந்தச்
சேணுயர்திருக்காளத்தி மலைமிசையெழுந்துசெவ்வே
கோணமில்குடுமித்தேவ ரிருப்பர்கும்பிடலாமென்றான். (௬௬)

ஆவதெனிதனைக்கண்டிங் கணைதொறுமென்மேற்பாரம்
போவதொன்றுளதுபோலு மாசையும்பொங்கிமேன்மேன்
மேவியநெஞ்சும்வேறோர் விருப்புறவிரையாநிற்குந்
தேவரங்கிருப்பதெங்கே போதென்றார்திண்ணனார்தாம். (௬௭)

உரைசெய்துவிரைந்துசெல்ல வவர்களுமுடனேபோந்து
கரைவளர்கழையின்முத்துங் காரகிற்குறடுஞ்சந்தும்
வரைதருமணியும்பொன்னும் வயிரமும்புளினந்தோறுந்
திரைகண்முன்றிரட்டிவைத்த திருமுகலியினைச்சார்ந்தார். (௬௮)

ஆங்கதன்கரையிற்பாங்கோ ரணிநிழற்கேழலிட்டு
வாங்குவிற்காடன்றன்னை மரக்கடைதீக்கோல்பண்ணி
ஈங்குநீநெருப்புக்காண்பா யிம்மலையேறிக்கண்டு
நாங்கள்வந்தணைவோமென்று நாணனுந்தாமும்போந்தார். (௬௯)

அளிமிடைகரைசூழ்சோலை யலர்கள்கொண்டணைந்தவாற்றின்
றெளிபுனலிழிந்துசிந்தை தெளிவுறுந்திண்ணனார்தாங்
களிவருமகிழ்ச்சிபொங்கக் காளத்திகண்டுகொண்டு
குளிர்வருநதியூடேகிக் குலவரைச்சாரல்சேர்ந்தார். (௭௦)

கதிரவனுச்சிநண்ணக் கடவுண்மால்வரையினுச்சி
அதிர்தருமோசையைந்து மார்கலிமுழக்கங்காட்ட
இதுவென்கொனுணுவென்றார்க் கிம்மலைப்பெருந்தேன்சூழ்ந்து
மதுமலரீக்கண்மொய்த்து மருங்கெழுமொலிகொலென்றான். (௭௧)

முன்புசெய்தவத்தினீட்ட முடிவிலாவின்பமான
அன்பினையெடுத்துக்காட்ட வளவிலாவார்வம்பொங்கி
மன்பெருங்காதல்கூர வள்ளலார்மலையைநோக்கி
என்புநெக்குருகியுள்ளத் தெழுபெருவேட்கையோடும்; (௭௨)

நாணனுமன்புமுன்பு நளிர்வரையேறத்தாமும்
பேணுதத்துவங்களென்னும் பெருகுசோபானமேறி
ஆணையாஞ்சிவத்தைச்சார வணைபவர்போலவையர்
நீணிலைமலையையேறி நேர்படச்செல்லும்போதில். (கoங)

திங்கள்சேர்சடையார்தம்மைச் சென்றவர்காணுமுன்னே
அங்கணர்கருணைகூர்ந்த வருட்டிருநோக்கமெய்தத்
தங்கியபவத்தின்முன்னைச் சார்புவிட்டகலநீங்கிப்
பொங்கியவொளியினீழற் பொருவிலன்புருவமானார். (கoச)

மாகமார்திருக்காளத்தி மலையெழுகொழுந்தாயுள்ள
ஏகநாயகரைக்கண்டா ரெழுந்தபேருவகையன்பின்
வேகமானதுமேற்செல்ல மிக்கதோர்விரைவினோடு
மோகமாயோடிச்சென்றார் தழுவினார்மோந்துநின்றார். (கoரு)

நெடிதுபோதுயிர்த்துநின்று நிரைந்தெழுமயிர்க்காலேறும்
வடிவெலாம்புளகம்பொங்க மலர்க்கண்ணீரருவிபாய
அடியனேற்கிவர்தாமிங்கே யகப்பட்டாரச்சோவென்று
படியிலாப்பரிவுதானோர் படிவமாம்பரிசுதோன்ற. (கoசு)

வெம்மறக்குலத்துவந்த வேட்டுவச்சாதியார்போற்
கைம்மலைகரடிவேங்கை யரிதிரிகானந்தன்னில்
உம்முடன்றுணையாயுள்ளா ரொருவருமின்றிக்கெட்டேன்
இம்மலைத்தனியேநீரிங் கிருப்பதேயென்றுநைந்தார். (கoஎ)

கைச்சிலைவிழுந்ததோரார் காளையார்மீளவிந்தப்
பச்சிலையோடுபூவும் பறித்திட்டுநீரும்வார்த்து
மச்சி ‡ துசெய்தார்யாரோ வென்றலுமருங்குநின்ற
அச்சிலைநாணன்றானு நானிதுவறிந்தேனென்பான். (கoஅ)

வன்றிறலுந்தையோடு மாவேட்டையாடிப்பண்டிக்
குன்றிடைவந்தோமாகக் குளிர்ந்தநீரிவரையாட்டி
ஒன்றியவிலைப்பூச்சூட்டி யூட்டிமுன்பறைந்தோர்பார்ப்பான்
அன்றிதுசெய்தானின்று மவன்செய்தானுருமென்றான். (கoகூ)

உண்ணிறைந்தெழுந்ததேனு மொழிவின்றியாராவன்பிற்
றிண்ணனார்திருக்காளத்தி நாயனார்க்கினியசெய்கை
எண்ணியவிவைகொலாமென் றிதுகடைப்பிடித்துக்கொண்டவ்
வண்ணலைப்பிரியமாட்டா தளவிலாதரவுநீட. (கக0)

இவர்தமைக்கண்டேனுக்குத் தனியராயிருந்தாரென்னே
இவர்தமக்கமுதுசெய்ய விறைச்சியுமிடுவாரில்லை
இவர்தமைப்பிரியவொண்ணா தென்செய்கேனினியான்சால
இவர்தமக்கிறைச்சிகொண்டிங் கெய்தவும்வேண்டுமென்று. (கக்க)

‡ மச்சு என்பது - குற்றம்.

போதுவர்மீண்டுசெல்வர் புல்லுவர்மீளப்போவர்
காதலினேக்கிநிற்பர் கன்றகல்புனிற்றுப்போல்வர்
நாதனேயமுதுசெய்ய நல்லமெல்லிறைச்சிநானே
கோதறத்தெரிந்துவேறு கொண்டிங்குவருவேனென்பார். (ககஉ)

ஆர்தமராகிநீரிங் கிருப்பதென்றகலமாட்டே
னீர்பசித்திருக்கவிங்கு நிற்கவுங்கில்லேனென்று
சோர்தருகண்ணீர்வாரப் போய்வரத்துணிந்தாராகி
வார்சிலையெடுத்துக்கொண்டு மலர்க்கையாற்றொழுதுபோந்தார். (ககங)

முன்புநின்றரிதுநீங்கி மொய்வரையிழிந்துநாணன்
பின்புவந்தணையமுன்னைப் பிறதுறைவேட்கைநீங்கி
அன்புகொண்டுய்ப்பச்செல்லு மவர்திருமுகலியாற்றின்
பொன்புனைகரையிலேறிப் புதுமலர்க்காவிற்புக்கார். (ககச)

காடனுமெதிரேசென்று தொழுதுதீக்கடைந்துவைத்தேன்
கோடுடையேனமுங்கள் குறிப்படியுறுப்பையெல்லா
மாடுறநோக்கிக்கொள்ளு மறித்துநாம்போகைக்கின்று
நீடநீர்தாழ்த்ததென்னே வென்றலுநின்றநாணன். (ககரு)

அங்கிவன்மலையிற்றேவர் தம்மைக்கண்டணைத்துக்கொண்டு
வங்கினைப்பற்றிப்போதா வல்லுடும்பென்னநீங்கான்
இங்குமத்தேவர்தின்ன விறைச்சிகொண்டேகப்போந்தா
னங்குலத்தலைமைவிட்டா னலப்பட்டான்தேவர்க்கென்றான். (ககசா)

என்செய்தாய்திண்ணநீதா னென்னமால்கொண்டாயெங்கள்
முன்பெருமுதலியல்லை யோவெனமுகத்தைநோக்கார்
வன்பெரும்பன்றிதன்னை யெரியினில்வதக்கிமிக்க
இன்புறுதசைகள்வெவ்வே றம்பினுலீர்ந்துகொண்டு. (ககஎ)

கோலினிற்கோத்துக்காய்ச்சிக் கொழுந்தசைபதத்தில்வேவ
வாலியசுவைமுன்காண்பான் வாயினிலதுக்கிப்பார்த்துச்
சாலவுமினியவெல்லாஞ் சருகிலையிணைத்தகல்லை
ஏலவேகோலிக்கூட வதன்மிசையிடுவாரானார். (ககஅ)

மருங்குநின்றவர்கள்பின்னு மயன்மிகமுதிர்ந்தானென்னே
அரும்பெறலிறைச்சிகாய்ச்சி யதுக்கிவேறுமிழாநின்றான்
பெரும்பசியுடையனேனும் பேச்சிலனெமக்கும்பேறு
தரும்பரிசுணரான்மற்றைத் தசைபுறத்தெறியாநின்றான். (ககசு)

தேவுமால்கொண்டானிந்தத் திண்ணன்மற்றிதனைத்தீர்க்க
லாவதொன்றறியோந்தேவ ராட்டியைநாகனோடு
மேவிநாங்கொணர்ந்துதீர்க்க வேண்டுமவ்வேட்டைக்கானில்
ஏவலாட்களையுங்கொண்டு போதுமென்றெண்ணிப்போனார். (கஉ0)

கானவர்போனதோரார் கடிதினிற்கல்லையின்கண்
ஊனமுதமைத்துக்கொண்டு மஞ்சனமாட்டவுன்னி
மாநதிநன்னீர்தூய வாயினிற்கொண்டுகொய்த
தூநறும்பள்ளித்தாமங் குஞ்சிமேற்றுதையக்கொண்டார். (௧௨௧)

தனுவொருகையில்வெய்ய சரத்துடன்றாங்கிக்கல்லைப்
புனிதமெல்லிறைச்சிநல்ல போனகமொருகையேந்தி
இனியவெம்பிரானார்சாலப் பசிப்பரென்றிரங்கியேங்கி
நனிவிரைந்திறைவர்வெற்பை நண்ணினார்திண்ணனார்தாம். (௧௨௨)

இளைத்தனர்நாயனாரென் றீண்டச்சென்றெய்திவெற்பின்
முளைத்தெழுமுதலைக்கண்டு முடிமிசைமலரைக்காலில்
வளைத்தபொற்செருப்பான்மாற்றி வாயின்மஞ்சனநீர்தன்னை
விளைத்தவன்புமிழ்வார்போல விமலனார்முடிமேல்விட்டார். (௧௨௩)

தலைமிசைச்சுமந்தபள்ளித் தாமத்தைத்தடங்காளத்தி
மலைமிசைத்தம்பிரானார் முடிமிசைவணங்கிச்சாத்திச்
சிலைமிசைப்பொலிந்தசெங்கைத் திண்ணனார்சேர்த்தகல்லை
இலைமிசைப்படைத்தவூனின் றிருவமுதெதிரேவைத்து. (௧௨௪)

கொழுவியதசைகளெல்லாங் கோலினிற்றெரிந்துகோத்தங்
கழலுறுபதத்திற்காய்ச்சிப் பல்லினாலதுக்கிநாவிற்
பழகியவினிமைபார்த்துப் படைத்தவிவ்விறைச்சிசால
அழகிதுநாயனீரே யமுதுசெய்தருளுமென்றார். (௧௨௫)

அன்னவிம்மொழிகள்சொல்லி யமுதுசெய்வித்தவேடர்
மன்னனார்திருக்காளத்தி மலையினார்க்கினியநல்லூண்
இன்னமும்வேண்டுமென்னு மெழுபெருங்காதல்கண்டு
பன்னெடுங்கரங்கள்கூப்பிப் பகலவன்மலையிற்றாழ்ந்தான். (௧௨௬)

அவ்வழியந்திமாலை யணைதலுமிரவுசேரும்
வெவ்விலங்குளவென்றஞ்சி மெய்ம்மையின்வேறுகொள்ளாச்
செவ்வியவன்புதாங்கித் திருக்கையிற்சிலையுந்தாங்கி
மைவரையென்னவையர் மருங்குநின்றகலாநின்றார். (௧௨௭)

சார்வருந்தவங்கள்செய்து முனிவருமமரர்தாமுங்
கார்வரையடவிசேர்ந்துங் காணுதற்கரியார்தம்மை
ஆர்வமுன்பெருகவாரா வன்பினிற்கண்டுகொண்டே
நேர்பெறநோக்கிநின்றார் நீளிருணீங்கநின்றார். (௧௨௮)

கழைசொரிதரளக்குன்றிற் கதிர்நிலவொருபாற்பொங்க
முழையரவுமிழ்ந்தசெய்ய மணிவெயிலொருபான்மொய்ப்பத்
தழைகதிர்ப்பரிதியோடுஞ் சந்திரன்றலையுவாவிற்
குழையணிகாதர்வெற்பைக் கும்பிடச்சென்றுலொக்கும். (௧௨௯)

விரவுபன்மணிகள்கான்ற விரிகதிர்ப்படலைபொங்க
மரகதமொளிகொணீல மணிகளுமிமைக்குஞ்சோதி
பொரவிருசுடருக்கஞ்சிப் போயினபுடைகடோறும்
இரவிருளொதுங்கினலே போன்றுளதெங்குமெங்கும். (௧௩௦)

செந்தழலொளியிற்பொங்குந் § தீபமாமரங்களாலு
மந்திகண்முழையில்வைத்த மணிவிளக்கொளிகளாலும்
ஐந்துமாறடக்கியுள்ளா ரரும்பெருஞ்சோதியாலும்
எந்தையார்திருக்காளத்தி மலையினிலிரவொன்றில்லை. (௧௩௧)

வருங்கறைப்பொழுதுநீங்கி மல்கியயாமஞ்சென்று
சுருங்கிடவறிந்தபுள்ளின் சூழ்சிலம்போசைகேட்டுக்
கருங்கடலென்னநின்ற கண்டுயிலாதவீரர்
அரும்பெறற்றம்பிரானுர்க் கமுதுகொண்டணையவேண்டி. (௧௩௨)

ஏறுகாற்பன்றியோடு மிருங்கலைபுனமான்மற்றும்
வேறுவேறினங்கள்வேட்டை வினைத்தொழில்விரகினாலே
ஊறுசெய்காலஞ்சிந்தித் துருமிகத்தெரியாப்போதின்
மாறடுசிலையுங்கொண்டு வள்ளலைத்தொழுதுபோந்தார். (௧௩௩)

வேறு.

மொய்காட்டுமிருள்வாங்கி முகங்காட்டுந்தேரிரவி
மெய்காட்டுமன்புடைய வில்லியார்தனிவேட்டை
* எய்காட்டினமர்விளைக்க விட்டகருந்திரைபெடுத்துக்
கைகாட்டுவான்போலக் கதிர்காட்டியெழும்போதில். (௧௩௪)

எய்தியசீராகமத்தி லியம்பியபூசனைக்கேற்பக்
கொய்தமலரும்புனலு முதலானகொண்டணைந்தார்
மைதழையுங்கண்டத்து மலைமருந்தைவழிபாடு
செய்துவருந்தவமுடைய முனிவர்சிவகோசரியார். (௧௩௫)

வந்துதிருமலையின்கண் வானவர்நாயகர்மருங்கு
சிந்தைநியமத்தோடுஞ் செல்கின்றார்திருமுன்பு
வெந்தவிறைச்சியுமெலும்பும் கண்டகலமிதித்தோடி
இந்தவநுசிதங்கெட்டே னியார்செய்தாரென்றழிவார். (௧௩௬)

மேவநேர்வரவஞ்சா வேடுவரேயிதுசெய்தார்
தேவதேவீசனே திருமுன்பேயிதுசெய்து
போவதேயிவ்வண்ணம் புகுதநீர்திருவுள்ளம்
ஆவதேயெனப்பதறி யழுதுவிழுந்தலமந்தார். (௧௩௭)

---

§ தீபமரம் என்பது - சோதிவிருக்ஷம்.
* எய் என்பது - முள்ளம்பன்றி.

பொருப்பிலெழுஞ்சுடர்க்கொழுந்தின் பூசனையுந்தாழ்க்கான்
இருப்பதினியென்னென்றவ் விறைச்சியெலும்புடனிலையுஞ்
செருப்படியுநாயடியுந் திருவலகான்மாற்றியபின்
விருப்பினொடுந்திருமுகலிப் புனன்மூழ்கிவிரைந்தணைந்தார். (௧௩௮)

பழுதுபுகுந்ததுதீரப் பவித்திரமாஞ்செயல்புரிந்து
தொழுதுபெறுவனகொண்டு தூயபூசனைதொடங்கி
வழுவிறிருமஞ்சனமே முதலாக்வரும்பூசை
முழுதுமுறைமையின்முடித்து முதல்வனார்கழல்பணிந்தார். (௧௩௯)

பணிந்தெழுந்துதனிமுதலாம் பரனென்றுபன்முறையாற்
றுணிந்தமறைமொழியாலே துதிசெய்துசுடர்த்திங்கள்
அணிந்தசடைமுடிக்கற்றை யங்கணரைவிடைகொண்டு
தணிந்தமனத்திருமுனிவர் தபோவனத்தினிடைச்சார்ந்தார். (௧௪௦)

இவ்வண்ணம்பெருமுனிவ ரேகினரினியிப்பால்
மைவண்ணக்கருங்குஞ்சி வனவேடர்பெருமானார்
கைவண்ணச்சிலைவளைத்துக் கான்வேட்டைதனியாடிச்
செய்வண்ணத்திறமொழிவேன் றீவினையின்றிறமொழிவேன். (௧௪௧)

திருமலையின்புறம்போன திண்ணனார்செறிதுறுகற்
பெருமலைகளிடைச்சரியிற் பெரும்பன்றிபுன்மேய்ந்து
வருவனவுந்துணிபடுத்து மானினங்கள்கானிடைநின்
றொருவழிச்சென்றேறுதுறை யொளிநின்றுகொன்றருளி. (௧௪௨)

பயில்விளியாற்கலையழைத்துப் பாடுபெறவூடுருவும்
அயின்முகவெங்கணைபோக்கி யடியொற்றிமரையினங்க
டுயிலிடையிற்கிடையெய்து தொடர்ந்துகடமைகளெய்து
வெயில்படுவெங்கதிர்முதிரத் தனிவேட்டைவினைமுடித்தார். (௧௪௩)

பட்டவன்விலங்கெல்லாம் படர்வனத்திலொருசூழல்
இட்டருகுதீக்கடைகோ லிருஞ்சுரிகைதனையுருவி
வெட்டிநறுங்கோற்றேனை மிகமுறித்துத்தேக்கிலையால்
வட்டமுறுபெருங்கல்லை மருங்குபுடைபடவமைத்தார். (௧௪௪)

இந்தனத்தைமுறித்தடுக்கி யெரிகடையுமரணியினில்
வெந்தழலைப்பிறப்பித்து மிகவளர்த்துமிருகங்கள்
கொந்தியயிலலகம்பாற் ⁰ குட்டமிடுங்கொழுப்பறிந்து
வந்தனகொண்டெழுந்தழலில் வக்குவனவக்குவித்து. (௧௪௫)

வாயம்பாலழிப்பதுவும் வகுப்பதுவுஞ்செய்தவற்றின்
ஆயவுறுப்பிறைச்சியெல்லா மரிந்தொருகல்லையிலிட்டுக்
காயநெடுங்கோல்கோத்துக் கனலின்கணுறக்காய்ச்சித்
தூயதிருவமுதமைக்கச் சுவைகாணலுறுகின்றார். (௧௪௬)

---

⁰ குட்டமிடுதல் - கொழுப்புள்ளவிடத்தில் வட்டமாகக்கொந்துதல்.

எண்ணிறந்தகடவுளருக் கிடுமுணவுகொண்டூட்டும்
வண்ணவெரிவாயின்கண் வைத்ததெனக்காளத்தி
அண்ணலார்க்காம்பரிசு தாஞ்சோதித்தமைப்பார்போற்
றிண்ணனார்திருவாயி லமைத்தாரூன்றிருவமுது. (௧௪௭)

நல்லபதமுறவெந்து நாவின்கணிடுமிறைச்சி
கல்லையினிற்படைத்துத்தேன் பிழிந்துகலந்ததுகொண்டு
வல்விரைந்துதிருப்பள்ளித் தாமமுந்தூய்மஞ்சனமும்
ஒல்லையினின்முன்புபோ லுடன்கொண்டுவந்தணைந்தார். (௧௪௮)

வந்துதிருக்காளத்தி மலையேறிவனசரர்கள்
தந்தலைவனாரிமையோர் தலைவனார்தமையெய்தி
அந்தணனார்பூசையினை முன்புபோலகற்றியபின்
முந்தைமுறைதம்முடைய பூசனையின்செயல்முடிப்பார். (௧௪௯)

ஊனமுதுகல்லையுடன் வைத்திதுமுன்னையினன்றால்
ஏனமொடுமான்கலைகண் மரைகடமையிவையிற்றில்
ஆனவுறுப்பிறைச்சியமு தடியேனுஞ்சுவைகண்டேன்
றேனுமுடன்கலந்ததிது தித்திக்குமெனமொழிந்தார். (௧௫௦)

இப்பரிசுதிருவமுது செய்வித்துத்தம்முடைய
ஒப்பரியபூசனைசெய் தந்நெறியிலொழுகுவார்
எப்பொழுதுமேன்மேல்வந் தெழுமன்பாற்காளத்தி
அப்பரெதிரல்லுறங்கார் பகல்வேட்டையாடுவார். (௧௫௧)

மாமுனிவர்நாடோறும் வந்தணைந்துவனவேந்தர்
தாமுயலும்பூசனைக்குச் சாலமிகத்தளர்வெய்தித்
தீமையெனவதுநீக்கிச் செப்பியவாகமவிதியால்
ஆமுறையிலர்ச்சனைசெய் தந்நெறியிலொழுகுவரால். (௧௫௨)

நாணனொடுகாடனும்போய் நாகனுக்குச்சொல்லியபின்
ஊணுமுறக்கமுமின்றி யணங்குறைவாளையுங்கொண்டு
பேணுமகனார்தம்பால் வந்தெல்லாம்பேதித்துக்
காணுநெறிதங்கள்குறி வாராமற்கைவிட்டார். (௧௫௩)

முன்புதிருக்காளத்தி முதல்வனாரருணோக்கால்
இன்புறுவேதகத்திரும்பு பொன்னானாற்போல்யாக்கை
தன்பரிசும்வினையிரண்டுஞ் சாருமலமூன்றுமற
அன்புபிழம்பாய்த்திரிவா ரவர்கருத்தினளவினரோ. (௧௫௪)

அங்கிலையிலன்பனா ரறிந்தநெறிபூசிப்ப
மன்னியவாகமப்படியான் மாமுனிவரர்ச்சித்திங்
கென்னுடையநாயகனே யிதுசெய்தார்தமைக்காணேன்
உன்னுடையதிருவருளா லொழித்தருளவேண்டுமென. (௧௫௫)

அன்றிரவுகனவின்க ணருண்முனிவர் தம்பாலே
மின்றிகழுஞ்சடைமவுலி வேதியர்தாமெழுந்தருளி
வன்றிறல்வேடுவனென்று மற்றவனைநீநினையே
னன்றவன்றன்செயறன்னை நாமுரைப்பக்கேளென்று. (௧௫௬)

அவனுடையவடிவெல்லா நம்பக்கலன்பென்றும்
அவனுடையவறிவெல்லா நமையறியுமறிவென்றும்
அவனுடையசெயலெல்லா நமக்கினியவாமென்றும்
அவனுடையநிலையிவ்வா றறிநீயென்றருள்செய்வார். (௧௫௭)

பொருப்பினில்வந்தவன்செய்யும் பூசனைக்குமுன்பென்மே
லருப்புறுமென்மலர்முன்னை யவைநீக்குமாதரவால்
விருப்புறுமன்பெனும்வெள்ளக் கால்பெருகிற்றெனவீழ்ந்த
செருப்படியவ்விளம்பருவச் சேயடியிற்சிறப்புடைத்தால். (௧௫௮)

உருகியவன்பொழிவின்றி நிறைந்தவவனுருவென்னும்
பெருகியகொள்கலமுகத்திற் பிறங்கியினிதொழுகுதலா
லொருமுனிவன்செவியுமிழு முயர்கங்கைமுதற்றீர்த்தப்
பொருபுனலிலெனக்கவன்றன் வாயுமிழும்புனல்புனிதம். (௧௫௯)

இம்மலைவந்தெனையடைந்த கானவன்றனியல்பாலே
மெய்ம்மலருமன்புமேல் விரிந்தனபோல்விழுதலாற்
செம்மலர்மேலயனெடுமான் முதற்றேவர்வந்துபுனை
யெம்மலருமவன்றலையா லிருமலர்போலெனக்கொவ்வா. (௧௬௦)

வெய்யகனற்பதங்கொள்ள வேவுறுமோவெனுமன்பா
னையுமனத்தினிமையி னினையன்மிகமென்றிடலாற்
செய்யுமறைவேள்வியோர் முன்புதருந்திருந்தவியி
லெய்யும்வரிசிலையவன்றா னிட்டவூனமக்கினிய. (௧௬௧)

மன்பெருமாமறைமொழிகண் மாமுனிவர்மகிழ்ந்துரைக்கு
மின்பமொழித்தோத்திரங்கண் மந்திரங்களியாவையினு
முன்பிருந்துமற்றவன்றன் முகமலரவகநெகிழ்ந்த
வன்பினினைந்தெனையல்லா லறிவுறாமொழிநல்ல. (௧௬௨)

உனக்கவன்றன்செயல்காட்ட நாளைநீயொளித்திருந்தால்
எனக்கவன்றன்பரிவிருக்கும் பரிசெல்லாங்காண்கின்றாய்
மனக்கவலையொழிகென்று மறைமுனிவர்க்கருள்செய்து
புனற்சடிலத்திருமுடியா ரெழுந்தருளிப்போயினார். (௧௬௩)

கனவுநிலைநீங்கியபின் விழித்துணர்ந்துகங்குலிடைப்
புனைதவத்துமாமுனிவர் புலரளவுங்கண்டுயிலார்
மனமுறுமற்புதமாகி வரும்பயமுமுடனாகித்
துனைபுரவித்தனித்தேர்மேற் றோன்றுவான்கதிர்தோன்ற. (௧௬௪)

முன்னைநாள்போல்வந்து திருமுகலிப்புனன்மூழ்கிப்
பன்முறையுந்தம்பிரா னருள்செய்தபடிநினைந்து
மன்னுதிருக்காளத்தி மலையேறிமுன்புபோற்
பின்னுகனைப்பூசித்துப் பின்பாகவொளித்திருந்தார். (கசுரு)

வேறு.

கருமுகிலென்னநின்ற கண்படாவில்லியார்தாம்
வருமுறையாறுநாளின் வருமிரவொழிந்தகாலை
அருமறைமுனிவனார்வந் தணைவதன்முன்னம்போகித்
தருமுறைமுன்புபோலத் தனிப்பெருவேட்டையாடி. (கசுசு)

மாறிலூனமுதுநல்ல மஞ்சனப்புனலுஞ்சென்னி
ஏறுநாண்மலரும்வெவ்வே றியல்பினிலமைத்துக்கொண்டு
தேறுவார்க்கமுதமான செல்வனார்திருக்காளத்தி
ஆறுசேர்சடையார்தம்மை யணுகவந்தணையாநின்றார். (கசுஎ)

இத்தனைபொழுதுதாழ்த்தே னெனவிரைந்தேகுவார்முன்
மொய்த்தபல்சகுனமெல்லா முறைமுறைதீங்குசெய்ய
இத்தகுதீயபுட்க ளீண்டமுன்னுதிரங்காட்டும்
அத்தனுக்கென்கொல்கெட்டே னடுத்ததென்றணையும்போதில். (கசுஅ)

அண்ணலார்திருக்காளத்தி யடிகளார்முனிவனார்க்குத்
திண்ணனார்பரிவுகாட்டத் திருநயனத்திலொன்று
துண்ணெனவுதிரம்பாய விருந்தனர்தூரத்தேயவ்
வண்ணவெஞ்சிலையார்கண்டு வல்விரைந்தோடிவந்தார். (கசுகூ)

வந்தவர்குருதிகண்டார் மயங்கினார்வாயினன்னீர்
சிந்திடக்கையிலூனுஞ் சிலையுடன்சிதறிவீழக்
கொந்தலர்பள்ளித்தாமங் குஞ்சிநின்றலைந்துசோரப்
பைந்தழையலங்கன்மார்பர் நிலத்திடைப்பதைத்துவீழ்ந்தார். (கஎ0)

விழுந்தவரெழுந்துசென்று துடைத்தனர்குருதிவீழ்வ
தொழிந்திடக்காணார்செய்வ தறிந்திலருயிர்த்துமீள
அழிந்துபோய்வீழ்ந்தார்தேறி யாரிதுசெய்தாரென்னு
எழுந்தனர்திசைகளெங்கும் பார்த்தனரெடுத்தார்வில்லும். (கஎக)

வாளியுந்தெரிந்துகொண்டிம் மலையிடையெனக்குமாறு
மீளிவெம்மறவர்செய்தா ருளர்கொலோவிலங்கின்சாதி
ஆளிமுன்னாகியுள்ள விளைத்தவோவறியேனென்று
நீளிருங்குன்றச்சார னெடிதிடைநேடிச்சென்றார். (கஎஉ)

வேட்ரைக்காணார்தீய விலங்குகண்மருங்குமெங்கு
நாடியுங்காணார்மீண்டு நாயனார்தம்பால்வந்து
நீடியசோகத்தோடு நிறைமலர்ப்பாதம்பற்றி
மாடுறக்கட்டிக்கொண்டு கதறினார்கண்ணீர்வார. (கஎஙு)

பாவியேன்கண்டவண்ணம் பரமனார்க்கடுத்ததென்னோ
ஆவியினினியவெங்க ளத்தனார்க்கடுத்ததென்னோ
மேவினார்பிரியமாட்டா விமலனார்க்கடுத்ததென்னோ
ஆவதொன்றறிகிலேனா னென்செய்கேனென்றுபின்னும். (கஎச)

என்செய்தாற்றீருமோதா னெம்பிரான்றிறத்துத்தீங்கு
முன்செய்தார்தம்மைக்காணேன் மொய்கழல்வேடரென்று
மின்செய்வார்பகழிப்புண்க டீர்க்குமெய்ம்மருந்துநாடிப்
பொன்செய்தாழ்வரையிற்கொண்டு வருவனானென்றுபோனார். (கஎரு)

நினைத்தனர்வேறுவேறு நெருங்கியவனங்களெங்கும்
இனத்திடைப்பிரிந்தசெங்க ணேறெனவெருக்கொண்டெய்திப்
புனத்திடைப்பறித்துக்கொண்டு பூதநாயகன்பால்வைத்த
மனத்தினுங்கடிதுவந்து மருந்துகள்பிசைந்துவார்த்தார். (கஎசு)

மற்றவர்பிசைந்துவார்த்த மருந்தினாற்றிருக்காளத்திக்
கொற்றவர்கண்ணிற்புண்ணீர் குறைபடாதொழுகக்கண்டே
இற்றையினிலைமைக்கென்னோ வினிச்செயலென்றுபார்ப்பார்
உற்றநோய்தீர்ப்பதூனுக் கூனெனுமுரைமுன்கண்டார். (கஎஎ)

இதற்கினியென்கணம்பா லிடந்தப்பினெந்தையார்கண்
ணதற்கிதுமருந்தாய்ப்புண்ணீர் நிற்கவுமடுக்குமென்று
மதர்த்தெழுமுள்ளத்தோடு மகிழ்ந்துமுன்னிருந்துதங்கண்
முதற்சரமடுத்துவாங்கி முதல்வர்தங்கண்ணிலப்ப. (கஎஅ)

நின்றசெங்குருதிகண்டார் நிலத்தினின்றேறப்பாய்ந்தார்
குன்றெனவளர்ந்ததோள்கள் கொட்டினார்கூத்துமாடி
நன்றுநான்செய்தவிந்த மதியெனநகையுந்தோன்ற
ஒன்றியகளிப்பினாலே யுன்மத்தர்போலமிக்கார். (கஎகூ)

வலத்திருக்கண்ணிற்றங்க ணப்பியவள்ளலார்த
நலத்தினைப்பின்னுங்காட்ட நாயனார்மற்றைக்கண்ணில்
உலப்பில்செங்குருதிபாயக் கண்டனருலகில்வேடர்
குலப்பெருந்தவத்தால்வந்த கொள்கையினும்பர்மேலார். (கஅ0)

கண்டபின்கெட்டேனெங்கள் காளத்தியார்கண்ணொன்று
புண்டருகுருதிநிற்க மற்றைக்கண்குருதிபொங்கி
மண்டுமற்றிதனுக்கஞ்சேன் மருந்துகைகண்டேனின்னும்
உண்டொருகண்ணக்கண்ணை யிடந்தப்பியொழிப்பேனென்று. (கஅக)

கண்ணுதல்கண்ணிற்றங்க ணிடந்தப்பிற்காணுநேர்பா
டெண்ணுவார்தம்பிரான்றன் றிருக்கண்ணிலிடக்காலூன்றி
உண்ணிறைவிருப்பினோடு மொருதனிப்பகழிகொண்டு
திண்ணனார்கண்ணிலூன்றத் தரித்திலர்தேவதேவர். (கஅ௨)

செங்கண்வெள்விடையின்பாகர் திண்ணனார்தம்மைபாண்ட
அங்கணர்திருக்காளத்தி யற்புதர்திருக்கையம்பாற்
றங்கண்முன்னிடக்குங்கையைத் தடுக்குமுன்றடுக்குநாக
கங்கணரமுதவாக்கு கண்ணப்பநிற்கவென்றே. (கஅங)

கானவர்பெருமானார்தங் கண்ணிடந்தப்பும்போதும்
ஊனமுதுவந்தவைய ருற்றுமுன்பிடித்தபோதும்
ஞானமாமுனிவர்கண்டார் நான்முகன்முதலாயுள்ள
வானவர்பூவின்மாரி பொழிந்தனர்மறைகளார்ப்ப. (கஅச)

பேறினியிதன்மேலுண்டோ பிரான்றிருக்கண்ணில்வந்த
ஊறுகண்டஞ்சித்தங்க ணிடந்தப்பவுதவுங்கையை
ஏறுயர்த்தவர்தங்கையாற் பிடித்துக்கொண்டென்வலத்தின்
மாறிலாய்நிற்கவென்று மன்னுபேரருள்புரிந்தார். (கஅரு)

மங்குல்வாழ்திருக்காளத்தி மன்னனார்கண்ணிற்புண்ணீர்
தங்கணான்மாற்றப்பெற்ற தலைவர்தாடலைமேற்கொண்டே
கங்கைவாழ்சடையார்வாழுங் கடவூரிற்கலயனாராம்
பொங்கியபுகழின்மிக்கார் திருத்தொண்டுபுகலலுற்றேன். (கஅசு)

ஆக-திருவிருத்தம்-அசரு.

---

திருச்சிற்றம்பலம்.

இப்புராணத்தில் (கருஎ) வது திருவிருத்தத்திற்குக் கீழிருக்கும் (ரு) திருவிருத்தத்தை அறியார் சிலர் வெள்ளிப்பாடல் என நீக்கினர் அவை வெள்ளிப்பாடல் அல்ல.

பொத்தப்பிநாட்டிலே, உடுப்பூரிலே, வேடர்களுக்கு அரசனாகிய நாகன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன்மனைவி பெயர் தத்தை. அவ்விருவரும் நெடுங்காலம் புத்திரபாக்கியம் இல்லாமையால் அதிதுக்கங்கொண்டு. குறிஞ்சி நிலத்திற்குக் கடவுளாகிய சுப்பிரமண்ணியசுவாமியுடைய சந்நிதானத்திலே சேவற்கோழிகளையும் மயில்களையும் விட்டு, அவரை வழிபட்டுவந்தார்கள். சுப்பிரமண்ணியசுவாமியுடைய திருவருளினாலே தத்தையானவள் கருப்பவதியாகி, ஒருபுத்திரனைப் பெற்றாள். அப்பிள்ளையை நாகன் தன்கையிலே எடுத்தபொழுது திண்ணெனவாயிருந்தபடியால், அதற்குத் திண்ணன் என்றுபெயரிட்டான். அத்திண்ணனார் வளர்ந்து, உரிய பருவத்திலே வில்வித்தை கற்கத் தொடங்கி, அதிலே மகாசமர்த்தராயினார். நாகன் வயோதிகனானபடியால், வேட்டைமுயற்சியிலே இளைத்தவனாகி, தன்னதிகாரத்தைத் தன்புத்திரராகிய திண்ணனாருக்குக் கொடுத்தான்.

அந்தத்திண்ணனார் வேட்டைக் கோலங்கொண்டு வேடர்களோடும் வனத்திலே சென்று வேட்டையாடினார். வேட்டையாடும்பொழுது, ஒரு பன்றியானது வேடராலே கட்டப்பட்ட வலையறும்படி எழுந்து, மிகுந்த விசையுடனே ஓடியது. அதைக் கண்ட திண்ணனார் அதைக் கொல்ல நினைந்து, அதைத் தொடர்ந்து பிடிக்கத்தக்க விசையுடனே அது செல்லும் அடிவழியே சென்றார். நாணன் காடன் என்கின்ற இரண்டு வேடர்கள்மாத்திரம் அவருக்குப் பின் ஓடினார்கள். அந்தப்பன்றி நெடுந்தூரம் ஓடிப் போய், இளைப்பினாலே மலைச்சாரலிலே ஒருமரத்தின் நிழலிலே நின்றது. திண்ணனார் அதைக் கண்டு அதனைச் சமீபித்து, உடைவாளையுருவி அதனை இருதுண்டாகும்படி குத்தினார். நாணனும் காடனும் இறந்து கிடந்த அந்தப் பன்றியைக் கண்டு, திண்ணனாரை வியந்து வணங்கி, "நெடுந்தூரம் நடந்து வந்தபடியால் பசி நம்மை மிகவருத்துகின்றது. நாம் இந்தப்பன்றியை நெருப்பிலே காய்ச்சித் தின்று, தண்ணீர் குடித்துக்கொண்டு, வேட்டைக்காட்டுக்கு மெல்லப்போவோம்" என்றார்கள். திண்ணனார் அவர்களை நோக்கி, "இவ்வனத்திலே தண்ணீர் எங்கே இருக்கின்றது" என்று கேட்க; நாணன் "அந்தத் தேக்கமரத்துக்கு அப்புறம் போனால், மலைப்பக்கத்திலே பொன்முகலியாறு ஓடுகின்றது" என்றான். அதைக் கேட்ட திண்ணனார் "இந்தப் பன்றியை எடுத்துக்கொண்டு வாருங்கள். நாம் அங்கேதானே போவோம்" என்று சொல்லி, அதை நோக்கி நடந்து, அரைக்காதவழி தூரத்துக்கு அப்பால் இருக்கின்ற திருக்காளத்திமலையைக் கண்டு, நாணனை நோக்கி, "நமக்கு முன்னாகத்தோன்றுகின்ற மலைக்குப்போவோம்" என்று சொல்ல; நாணன் "இந்தமலையிலே குடுமித்தேவர் இருக்கிறார். நாம் போனாற் கும்பிடலாம்" என்றான்.

திண்ணனார் "இந்தமலையைக் கண்டு இதை அணுக அணுக என் மேல் ஏற்றப்பட்ட பெரிய பாரம் குறைகின்றதுபோலும். இனி உண்டாவது யாதோ! அறியேன்" என்று சொல்லி, அதிதீவிரமாகிய விருப்பத்தோடும் விரைந்து சென்று, பொன்முகலியாற்றை அடைந்து, அதன் கரையிலிருக்கின்ற மரநிழலிலே, கொண்டு வந்த பன்றியை இடுவித்து, காடனைநோக்கி, "தீக்கடைகோல் செய்து நெருப்பை உண்டாக்கு. நாங்கள் இம்மலையிலே ஏறி, சுவாமி தரிசனஞ்செய்துகொண்டு வந்து சேருவோம்" என்று சொல்லி, நாணனோடும் அந்தப் பொன்முகலிநதியைக் கடந்து, மலைச்சாரலை அடைந்து, மலையிலே நாணன் முன்னே ஏற, தாமும் அளவில்லாத பேராசையோடும் ஏறிச் சென்று, சிவலிங்கப்பெருமான் எழுந்தருளியிருத்தலைக் கண்டார். கண்டமாத்திரத்திலே, பரமசிவனுடைய திருவருட்பார்வையைப் பெற்று, இரும்பானது தரிசனவேதியினாலே உருவம் மாறிப் பொன்மயமானாற்போல முன்னுள்ள குணங்கள் மாறிச் சிவபெருமானிடத்தில் வைத்த அன்புருவமானார். நெடுங்காலம் பிரிந்திருந்த தன்குழந்தையைக் கண்ட மாதாவைப்போலத் தாழா

மல் விரைந்தோடி, தோள்கள் நெருங்கும்படி அக்கட்வுளைத் தழுவி, மோந்துமுத்தமிட்டார். நெடுநேரம் பெருமூச்சுவிட்டுக்கொண்டு நின்று, சரீரம் முழுதிலும் உரோமாஞ்சங்கொள்ள, இரண்டுகண்ணினின்றும் கண்ணீர் சொரிய, வெயிலிடைப்பட்ட மெழுகுபோல மனங்கசிந்துருக, "இந்தச்சுவாமி அடியேனுக்கு அகப்பட்டது என்ன ஆச்சரியம்" என்று சொல்லி ஆனந்தங்கொண்டார். "ஐயையோ! சிங்கம் யானை புலி கரடி முதலிய துட்டமிருகங்கள் சஞ்சரிக்கின்ற காட்டிலே நீர் யாதொரு துணையுமின்றி வேடர்போலத் தனியே இருப்பது ஏது" என்று சொல்லித் துக்கித்து, தம்முடைய கையில் இருந்த வில்லு கீழேவிழுந்ததையும் அறியாதவராகிப் பரவசமடைந்தார். பின் ஒருவாறு தெளிந்து, "இவருடைய முடியிலே நீரை வார்த்துப் பச்சிலையையும் பூவையும் இட்டவர் யாரோ" என்றார். அப்பொழுது சமீபத்திலே நின்ற நாணன் "நான் முற்காலத்திலே உம்முடைய பிதாவுடனே வேட்டையாடிக்கொண்டு இம்மலையிலே வந்தபொழுது, ஒரு பிராமணன் இவர்முடியிலே நீரை வார்த்து, இலையையும் பூவையும் சூட்டி, உணவை ஊட்டி, சிலவார்த்தைகள் பேசினதைக் கண்டிருக்கின்றேன். இன்றைக்கும் அவனே இப்படிச் செய்தான்போலும்" என்றான். அதைக் கேட்ட திண்ணனார் அந்தச் செய்கைகளே திருக்காளத்தியப்பருக்குப் பிரீதியாகிய செய்கைகளென்று கடைப்பிடித்தார். பின்பு, "ஐயோ! இவருக்கு அமுதுசெய்தற்கு இறைச்சி கொடுப்பார் ஒருவரும் இல்லை. இவர் இங்கே தனியே இருக்கின்றார். இறைச்சி கொண்டுவரும்பொருட்டு இவரைப் பிரியவோ மனமில்லை. இதற்கு யாது செய்வேன்? எப்படியும் இறைச்சிகொண்டு வரவேண்டும்" என்று சொல்லிக்கொண்டு, சுவாமியைப் பிரிந்து சிறிது தூரம் போவார். கன்றை விட்டுப் பிரிகின்ற தலையீற்றுப் பசுப்போல அவரிடத்திற்குத் திரும்பி வருவார். கட்டி அணைத்துக்கொள்வார். மீளப் போவார். சிறிது தூரம் போய் அத்தியந்த ஆசையோடு சுவாமியைத் திரும்பிப் பார்த்து நிற்பார். "சுவாமீ, நீர் உண்பதற்கு மிருதுவாகிய நல்ல இறைச்சியை நானே குற்றமறத் தெரிந்து கொண்டுவருவேன்" என்பார். "நீர் யாதொரு துணையுமின்றி இங்கே தனியே இருக்கிறபடியால் நான் உம்மைப் பிரியமாட்டேன். உமக்குப் பசி மிகுந்த படியால் இங்கே நிற்கவுமாட்டேன். ஐயையோ! நான் யாது செய்வேன்" என்று சொல்லிக்கொண்டு கண்ணீர் இடைவிடாது பொழிய நிற்பார். பின்பு ஒருபிரகாரம் போய் வரத்துணிந்து, வில்லை எடுத்துக்கொண்டு, கையினாலே கும்பிட்டு, சுவாமிசந்நிதானத்தை அருமையாக நீங்கி, மலையினின்றும் இறங்கி, நாணன் பின்னே வர, பிறவிஷயங்களிலே உண்டாகும் ஆசை பரமாணுப்பிரமாணமாயினும் இன்றி, அன்புமயமாகி, பொன்முகலியாற்றைக் கடந்து கரை ஏறி, அங்குள்ள சோலையிலே புகுந்தார்.

அது கண்டு காடன் எதிரே போய்க் கும்பிட்டு, "நெருப்புக் கடைந்து வைத்திருக்கின்றேன், பன்றியின் அவயவங்களெல்லாவற்றையும்

உம்முடைய அடையாளப்படி பார்த்துக்கொள்ளும். திரும்பிப் போத ற்கு வெகுநேரம் சென்று போயிற்று. நீர் இவ்வளவுநேரமும் தாழ்த் தது என்னை" என்றான். நாணன் அதைக் கேட்டு, "இவர் மலையிலே சுவாமியைக் கண்டு அவரைத் தழுவிக்கொண்டு மரப்பொந்தைப் பற்றி விடாத உடும்பைப்போல அவரை நீங்கமாட்டாதவராய் நின்றார். இங் கேயும் அந்தச்சுவாமி உண்ணுதற்கு இறைச்சி கொண்டுபோம்பொருட்டு வந்திருக்கிறார். எங்கள் குலத்தலைமையை விட்டுவிட்டார். அந்தச் சுவாமிவசமாய் விட்டார்" என்றான். உடனே காடன் "திண்ணரே! நீர் என்ன செய்தீர்? என்ன பைத்தியங்கொண்டீர்" என்று சொல்ல; திண்ணனார் அவன் முகத்தைப் பாராமல், பன்றியை நெருப்பிலே வத க்கி, அதினுடைய இனிய தசைகளை அம்பினாலே வெவ்வேறாகக் கிழித்து, அம்பிலே கோத்து நெருப்பிலே காய்ச்சி, பதமாக வெந்தவுடனே, சுவை பார்க்கும்படி அவைகளைத் தம்முடைய வாயிலே இட்டுப் பல்லினாலே மெல்ல மெல்லப் பலமுறை அதுக்கிப் பார்த்து, மிக இனியனவாகிய இறைச்சிகளெல்லாவற்றையும் தேக்கிலையினாலே தைக்கப்பட்ட கல்லை யிலே வைத்து, இனியனவல்லாத இறைச்சிகள் எல்லாவற்றையும் புறத் திலே உமிழ்ந்தார். அதைக் கண்ட நாணன் காடன் இருவரும், "இவர் மிகப் பைத்தியங் கொண்டிருக்கின்றார். பெறுதற்கரிய இறைச்சியைக் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி வீணாக உமிழுகின்றார். மற்றையிறைச்சி யைப் புறத்திலே எறிந்துவிடுகின்றார். தாம் மிகப் பசியுடையராயிருந் தும், அதனை உண்கின்றாரில்லை. எங்களுக்குத் தருகின்றாருமில்லை. இவர் தெய்வப்பைத்தியங்கொண்டிருக்கின்றார். இதனைத் தீர்க்கத்தக்க வழி ஒன்றையும் அறியோம். தேவராட்டியையும் நாகனையும் அழைத் துக்கொண்டுவந்து இதைத் தீர்க்கவேண்டும். வேட்டைக்காட்டிலே நிற் கின்ற ஏவலாளரையும் கொண்டு நாங்கள் போவோம்" என்று நினைத்துக் கொண்டு போனார்கள்.

திண்ணனார் அவ்விருவரும் போனதை அறியாதவராகி, சீக்கிரம் கல்லையிலே மாமிசத்தை வைத்துக்கொண்டு, திருமஞ்சனமாட்டும் பொரு ட்டு ஆற்றில் நீரை வாயினால் முகந்து, பூக்களைக் கொய்து தலைமயிரிலே செருகி, ஒருகையிலே வில்லையும் அம்பையும் மற்றக்கையிலே இறைச்சி வைத்த தேக்கிலைக்கல்லையையும் எடுத்துக்கொண்டு, "ஐயோ! என்னுயி ர்த்துணையாகிய சுவாமி மிகுந்த பசியினால் இளைத்தாரோ" என்று நினை ந்து இரங்கிப் பதைபதைத்து ஏங்கி, தன் குஞ்சுக்கு இரை அருத்துத ற்குத் தாழாதோடுகின்ற பறவைபோல மனோகதியும் பின்னிட ஓடிப் போய்க் கடவுளை அடைந்தார். அடைந்து, அவருடைய திருமுடிமேல் இருந்த பூக்களைத் தம்முடைய காற்செருப்பால் மாற்றி, தம்முடைய வாயில் இருக்கின்ற திருமஞ்சனநீரைத் தம்முடைய மனசில் உள்ள அன்பை உமிழ்பவர்போலத் திருமுடியின்மேல் உமிழ்ந்து, தம்முடைய தலையில் இருந்த பூக்களை எடுத்துத் திருமுடியின்மேலே சாத்தி, தேக்கி

லையிலே படைத்த இறைச்சியைத் திருமுன்னே வைத்து, "சுவாமீ, கொழுமையாகிய இறைச்சிகளெல்லாவற்றையும் தெரிந்து, அம்பினாலே கோத்து நெருப்பிலே பதத்தோடு காய்ச்சிப் பல்லினால் அதுக்கி நாவினாலே சுவைபார்த்துப் படைத்தேன். இவ்விறைச்சி மிக நன்றாயிருக்கின்றது. எம்பெருமானே, இதை அமுது செய்தருளும்" என்று சொல்லி, உண்பித்தார். பின்பு சூரியன் அஸ்தமயனமாயிற்று. திண்ணனார் அவ்விரவிலே துஷ்டமிருகங்கள் சுவாமிக்குத் துன்பஞ்செய்தல் கூடுமென்று அஞ்சி. அம்பு தொடுக்கப்பட்ட வில்லைக் கையிலே பிடித்துக்கொண்டு, மறந்தும் கண்ணிமையாமல் சுவாமிக்குப் பக்கத்திலே விழித்துக்கொண்டு நின்றார். அப்படி நின்ற திண்ணனார் வைகறையிலே சுவாமிக்கு இறைச்சிகொண்டு வரும்பொருட்டு, வேட்டையாடுதற்கு மலைச்சாரலுக்குப் போனார். அது நிற்க.

அறிவு அருள் அடக்கம் தவம் சிவபத்தி முதலியவைகளெல்லாம் திரண்டொருவடிவம் எடுத்தாற்போன்றவரும், நல்வினை தீவினைகளால் வரும், ஆக்கக்கேடுகளிலே சமபுத்தி பண்ணுகின்றவரும், யாவரையும் மோகிப்பிக்க வல்ல மகா சௌந்தரியமுள்ள பெண்கள் வலிய வந்து தம்மைத் தழுவினும் பரமாணுப்பரிமாணமாயினும் சித்தந்திரியாமல் அவர்களைத் தாயென மதிக்கும் மகாமுனிவரும், திருக்காளத்தியப்பரைத் தினந்தோறும் சைவாகமவிதிப்படி அருச்சிப்பவருமாகிய சிவகோசரியார் என்பவர், பிராமமுகூர்த்தத்திலே எழுந்து போய், பொன்முகலியாற்றிலே ஸ்நானம்பண்ணி, சுவாமியை அருச்சிக்கும் பொருட்டுத் திருமஞ்சனமும் பத்திர புஷ்பமும் எடுத்து, சிவநாமத்தை உச்சரித்துக்கொண்டு, சுவாமிசந்நிதானத்திலே போனார். போம்பொழுது, அங்கே வெந்த இறைச்சியும் எலும்பும் கிடக்கக் கண்டு, நடுநடுங்கி, குதித்துப் பக்கத்திலே ஓடினார். ஓடி நின்று, "தேவாதிதேவரே, தேவரீருடைய சந்நிதானத்தை அடைதற்கு அஞ்சாத துஷ்டராகிய வேட்டுவப்புலையர்களே இந்த அநுசிதத்தைச் செய்தார்கள்போலும். அவர்கள் இப்படிச் செய்துபோதற்குத் தேவரீர் திருவுளம் இசைந்தீரோ" என்று சொல்லி, பதறி அழுது விழுந்து புரண்டார். பின்பு "சுவாமிக்கு அருச்சனைசெய்யாமல் தாழ்த்தலால் பயன் யாது" என்று நினைந்து, அங்கேகிடந்த இறைச்சியையும் எலும்பையும் கல்லையையும் திருவலகினால் மாற்றி, சம்புரோக்ஷணஞ்செய்து, மீளப் பொன்முகலியாற்றிலே ஸ்நானஞ்செய்து திரும்பி வந்து, வேதமந்திரத்தினாலே சுத்திசெய்து, உருத்திரசமக நமகத்தினால் சுவாமிக்கு அபிஷேகம் பண்ணி, பத்திரபுஷ்பங்களால் அருச்சனை செய்தார். செய்து, திருமுன்னே நின்று, இரண்டுகைகளையும் சிரசின்மேலே குவித்து, இரண்டுகண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சொரிய, திருமேனியெங்கும் மயிர்பொடிப்ப, அக்கினியில் அகப்பட்ட மெழுகுபோல மனம் மிக உருகி இளக, நாத்தழும்ப, கீதநடையுள்ளதாகிய சாமவேதம் பாடினார். பாடியபின், பலமுறை பிரதக்ஷிணஞ்செய்து சாஷ்டாங்கமாக நம

ஸ்கரித்து, அருமையாக நீங்கிப் போய், தபோவனத்தை அடைந்தார். அது நிற்க.

முன்னே வேட்டையாடுதற்கு மலைச்சாரலிலே சென்ற திண்ணனர் பன்றி மான் கலை மரை கடமை என்னு மிருகங்களைக் கொன்று, அவைகளினிறைச்சியை முன்போலப் பக்குவப்படுத்தி, தேக்கிலையில் வைத்து, கோற்றேனைப் பிழிந்து அதனோடு கலந்து, முன்போலத் திருமஞ்சனமும் புஷ்பமுங்கொண்டு, மலையிலே ஏறி, சுவாமிசந்நிதானத்தை அடைந்து, முன்போலப் பூசைசெய்து, இறைச்சிக்கல்லையைத் திருமுன்னேவைத்து, "இந்த இறைச்சி முன் கொண்டுவந்ததுபோலன்று. இவை பன்றி மான் கலை மரை கடமை என்கின்ற மிருகங்களின் இறைச்சி. இவைகளை அடியேனும் சுவைத்துப் பார்த்திருக்கின்றேன். தேனும் கலந்திருக்கின்றது. தித்திக்கும்" என்று சொல்லி, உண்பித்து, அவருக்குப் பக்கத்திலே பிரியாமல் நின்றார். அப்பொழுது முதனாட்போன நாணனும் காடனும் ஆகிய இருவராலும் தன்புத்திரராகிய திண்ணனுருடைய செய்கைகளை அறிந்த நாகன் ஊணும் உறக்கமுமின்றித் தேவராட்டியையுங் கொண்டுவந்து, திண்ணனுரைப் பற்பல திறத்தினாலே வசிக்கவும், அவர் வசமாகாமையைக் கண்டு, சிந்தைநொந்து, "இனி யாது செய்வோம்" என்று சொல்லிக்கொண்டு, அவரை விட்டுத் திரும்பிப் போய்விட்டான்.

சிவபெருமானோடு ஒற்றுமைப்பட்டு அவ்விறைபணியின் வழுவாது நிற்குந்திண்ணனர் பகற்காலத்திலே மிருகங்களைக் கொன்று சுவாமிக்கு இறைச்சியை ஊட்டியும், இராக்காலத்திலே நித்திரைசெய்யாமல் சுவாமிக்கு அருகே நின்றும், இப்படித் தொண்டுசெய்துவந்தார். சிவகோசரியாரும் தினந்தோறும் வந்து, சந்நிதானத்திலே இறைச்சி கிடத்தலைக் கண்டு, இரங்கிச் சுத்திசெய்து, சைவாகமவிதிப்படி அருச்சித்துக்கொண்டு, "இந்த அநுசிதம் நிகழாமல் அருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்து வந்தார். திருக்காளத்தியப்பர் அந்தச் சிவகோசரியாருடைய மனத்துயரத்தை நீக்கும்பொருட்டு, ஐந்தாநாள் இராத்திரியில் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "அன்பனே, அவனை வேடுவன் என்று நீ நினையாதே. அவனுடைய செய்கைகளைச் சொல்வோம், கேள். அவனுடைய உருவமுழுதும் நம்மேல் வைக்கப்பட்ட அன்புருவமே. அவனுடைய அறிவுமுழுதும் நம்மை அறியும் அறிவே. அவனுடைய செய்கைகள் எல்லாம் நமக்கு இதமாகிய செய்கைகளே. நம்முடைய முடியின்மேல் உன்னாலே சாத்தப்பட்ட பூக்களை நீக்கும்படி அவன் வைக்கின்ற செருப்படி நம்முடைய குமாரனாகிய சுப்பிரமண்ணியனுடைய காலினும் பார்க்க நமக்கு மிகுந்த ஆனந்தத்தைத் தருகின்றது. அவன் தன்வாயினால் நம்மேல் உமிழுகின்ற ஜலமானது, அன்புமயமாகிய அவனுடைய தேகமென்னும் கொள்கலத்தினின்றும் ஒழுகுகின்றபடியால், கங்கைமுதலாகிய புண்ணியதீர்த்தங்களைப்பார்க்கினும் நமக்குப் பரிசுத்தமுள்ளதாய்

இருக்கின்றது. அவன் தன்னுடைய தலைமயிரிலே செருகிக்கொண்டு வந்து நமக்குச் சாத்துகின்ற புஷ்பங்கள், அவனுடைய மெய்யன்பானது விரிந்து விழுதல்போல விழுதலால், பிரம விஷ்ணு முதலாகிய தேவர்கள் நமக்குச் சாத்தும் புஷ்பங்களும் அவைகளுக்குச் சற்றேனும் சமானமாகாவாம். அவன் நமக்குப் படைக்கின்ற மாமிசம், பதமாக வெந்திருக்கின்றதோ என்று அன்பினால் உருகி இளகிய மனசினோடும் மென்று சுவைபார்த்துப் படைக்கப்பட்டபடியால், வேதவிதிப்படி யாகம் செய்கின்றவர்கள் தரும் அவியிலும்பார்க்க நமக்கு அதிக மதுரமாயிருக்கின்றது. அவன் நம்முடைய சந்நிதானத்தில் நின்று சொல்லும் சொற்கள், நிஷ்களங்கமாகிய அன்பினோடும் நம்மையன்றி மற்றொருவரையும் அறியாது வெளிப்படுதலால், வேதங்களும் மகாமுனிவர்கள் மகிழ்ந்து செய்கின்ற ஸ்தோத்திரங்களும் ஆகிய எல்லாவற்றிலும்பார்க்க நமக்கு மிக இனியனவாயிருக்கின்றன. அவனுடைய அன்பினால் ஆகிய செய்கைகளை உனக்குக் காட்டுவோம், நீ நாளைக்கு நமக்குப் பிற்பக்கத்திலே ஒளித்திருந்து பார்" என்று சொல்லி மறைந்தருளினார். சிவகோசரியார் சொப்பனவத்தையை நீங்கிச் சாக்கிராவத்தையையடைந்து, பரமசிவன் தமக்கு அருளிச்செய்த திருவார்த்தைகளை நினைந்து நினைந்து, "அறியாமையே நிறைந்துள்ள இழிவாகிய வேடுவர்குலத்திலே பிறந்த அவருக்கு வேதாகமாதி சாஸ்திரங்களிலே மகா பாண்டித்தியமுடைய மகாமுனிவர்கள் தேவர்களிடத்திலும் காணப்படாத உயர்வொப்பில்லாத இவ்வளவு பேரன்புவந்தது, ஐயையோ! எவ்வளவு அருமை அருமை" என்று ஆச்சரியமும், "இப்படிப்பட்ட பேரன்பர் செய்த அன்பின் செய்கைகளைப் புழுத்த நாயினும் கடையனாகிய பாவியேன் அநுசிதம் என்று நினைந்தேனே! ஐயையோ! இது என்னகொடுமை" என்று அச்சமும் அடைந்து, வைகறையிலேபோய்ப் பொன்முகலியாற்றிலே ஸ்நானம்பண்ணி மலையில் ஏறி, முன்போலச் சுவாமியை அருச்சித்து, அவருக்குப் பிற்பக்கத்திலே ஒளித்திருந்தார்.

சிவகோசரியார் வருதற்கு முன்னே வேட்டையாடுதற்குச்சென்ற திண்ணனார் வேட்டையாடி, இறைச்சியும் திருமஞ்சனமும் புஷ்பமும் முன்போல அமைத்துக்கொண்டு, அதிசீக்கிரந் திரும்பினார். திரும்பி வரும்பொழுது, பலபல துர்ச்சகுனங்களைக் கண்டு, "இந்தச் சகுனங்களெல்லாம் உதிரங்காட்டுகின்றன. ஆகெட்டேன்! என் கண்மணிபோன்ற சுவாமிக்கு என்ன அபாயம் சம்பவித்ததோ! அறியேனே" என்று மனங்கலங்கி, அதிசீக்கிரம் நடந்தார். அடியார்களுடைய பத்திவலையில் அகப்படுகின்ற அருட்கடலாகிய பரமசிவன் திண்ணனாருடைய அன்புமுழுதையும் சிவகோசரியாருக்குக் காட்டும் பொருட்டுத் திருவுளங்கொண்டு, தம்முடைய வலக்கண்ணினின்று இரத்தம் சொரியப்பண்ணினார். திண்ணனார் தூரத்திலே கண்டு விரைந்தோடி வந்தார். வந்தவுடனே, இரத்தஞ் சொரிதலைக் கண்டார். கண்டலும், வாயிலுள்ள திருமஞ்சனம்

சிந்த, கையில் இருந்த இறைச்சி சிதற, அம்பும் வில்லும்விழ, தலைமயிரிலே செருகப்பட்ட புஷ்பங்கள் அலைந்து சோர, ஆட்டுகின்ற கயிறு அற்றபொழுது வீழ்கின்ற நாடகப்பாவைபோலச் சீக்கிரம் பதைபதைத்து நிலத்திலே விழுந்தார். விழுந்தவர் எழுந்துபோய், இரத்தத்தைப் பலமுறை கையினாலே துடைக்க; அது காலுதல் தவிராமையைக் கண்டு, அதற்கு இன்னது செய்வோம் என்று அறியாதவராகி, பெருமூச்செறிந்து, திரும்பிப்போய்விழுந்தார். நெடும்பொழுது உள்ளுயிர்த்தலின்றி இறந்தவர்கள்போலக் கிடந்தார். பின் ஒருவாறு தெளிந்து, "இப்படிச் செய்தவர்கள் யாவர்" என்று சொல்லிக்கொண்டு எழுந்தார். எங்கும் பார்த்தார். வில்லையெடுத்து அம்புகளைத் தெரிந்துகொண்டு, "என்னுடைய சுவாமிக்கு இத்தீங்கு வந்தது எனக்குப் பகைவர்களாகிய வேடுவர்களாலோ இந்தவனத்திற் சஞ்சரிக்கின்ற துஷ்டமிருகங்களாலோ? யாதென்று தெரியவில்லையே" என்றுசொல்லி, மலைப்பக்கங்களிலே நெடுந்தூரமட்டும் தேடிப்போனார். வேடர்களையேனும் விலங்குகளையேனும் காணாதவராகி, திரும்பிவந்து, குறைவில்லாத துன்பத்தினாலே மனம் விழுங்கப்பட்டு, சுவாமியைக் கட்டிக்கொண்டு, இடியேறுண்ட சிங்கேறுபோல வாய்விட்டுக் கண்ணீர்சொரிய அழுதார். "என்னுயிரினும் சிறந்தவரும் அடைந்தவர்கள் அன்பினாலே பிரியமாட்டாதவரும் ஆகிய சுவாமிக்கு எப்படி இந்தத் துன்பம் சம்பவித்ததோ! இதைத் தீர்ப்பதற்கு மருந்தொன்றை அறியேனே? ஐயையோ! இதற்கு என்னசெய்வேன்" என்றார். இந்த உதிரம் என்னசெய்தால் நிற்குமோ? இந்தத்தீங்கைச் செய்தவர்களைக் காணேன். "வேடர்கள் அம்பினாலாகிய புண்ணைத் தீர்க்கின்ற பச்சிலைமருந்துகளை மலையடிவாரத்திலே பிடுங்கிக்கொண்டு வருவேன்" என்று சொல்லிக்கொண்டு போனார். தன்னினத்தைப் பிரிந்து வந்த இடபம்போலச் சுவாமியைப் பிரிந்து வந்ததினால் வெருட்கொண்டு, வனங்களெங்குந்திரிந்து, பலவகையாகிய பச்சிலைகளைப் பிடுங்கிக்கொண்டு, சுவாமிமேல் வைத்த மனசிலும்பார்க்க விரைந்துவந்து, அம்மருந்துகளைப் பிழிந்து அவர்கண்ணிலே வார்த்தார். அதினால் அக்கண்ணிலிரத்தம் தடைபடாமையைக் கண்டு, ஆவி சோர்ந்து, "இனி நானிதற்கு என்ன செய்வேன்" என்று ஆலோசித்துக்கொண்டு நின்றார். நிற்க, "ஊனுக்கு ஊனிடல்வேண்டும்" என்னும் பழமொழி அவருடைய ஆத்தியானத்திலே வந்தது. உடனே, "இனி என்னுடைய கண்ணை அம்பினாலே இடந்து அப்பினால் சுவாமியுடைய கண்ணினின்று பாயும் இரத்தம் தடைபடும்" என்று நிச்சயித்துக்கொண்டு, மனமகிழ்ச்சியோடும் திருமுன்னே இருந்து, அம்பை யெடுத்துத் தம்முடைய கண்ணைத்தோண்டிச் சுவாமியுடைய கண்ணிலே அப்பினார். அப்பினமாத்திரத்திலே இரத்தம் தடைபட்டதைக் கண்டார். உடனே அடங்குதற்கரிய சந்தோஷமாகிய கடலிலே அமிழ்ந்திக் குதித்துப்பாய்ந்தார். மலைபோலப் பருத்த புயங்களிலே கைகளினாலே கொட்டி ஆரவாரித்தார், கூத்தாடினார்.

"நான் செய்த செய்கை நன்று நன்று" என்று சொல்லி வியந்து, அத்தி யந்த ஆனந்தத்தினாலே உன்மத்தர்போலாயினார். இப்படிச் சந்தோஷ சாகரத்திலே உலாவும்பொழுது, திருக்காளத்தியீசுரர் அந்தத் திண்ணனா ருடைய பேரன்பைச் சிவகோசரியாருக்குப் பின்னுங்காட்டுதற்குத் திரு வுளங்கொண்டு, தம்முடைய மற்றையிடக்கண்ணிலும் இரத்தஞ் சொரி யப்பண்ணினார். அது திண்ணனாருடைய அளவில்லாத சந்தோஷசாக ரத்தை உறிஞ்சியது. அக்கினிகிரயத்துள்ளே விழுந்து நெடுங்காலந் துன்பமுற்று அதனை நீங்கிச் சுவர்க்கத்தை அடைந்து இன்பமுற்றோ னொருவன் பின்னும் அந்நிரயத்திலே வீழ்ந்தாற்போல, திண்ணனார் உவகை மாறி, கரையில்லாத துன்பக்கடலிலே அழுந்தி ஏங்கி, பின்னர் ஒருவாறு தெளிந்து, "இதற்கு நான் அஞ்சேன். மருந்து கைகண்டு கொண்டேன். இன்னும் ஒருகண்ணிருக்கின்றதே! அதைத்தோண்டி அப்பி இந்நோயைத் தீர்ப்பேன்" என்று துணிந்து, தம்முடைய கண் ணைத்தோண்டியபொழுது சுவாமியுடைய கண் இவ்விடத்திலிருக்கின் றது என்று தெரியும்பொருட்டு, ஒருசெருப்புக்காலை அவர் கண்ணின் அருகிலே ஊன்றிக்கொண்டு, பின்னே மனசிலே பூர்த்தியாகிய விருப்ப த்தோடும் தம்முடைய கண்ணைத் தோண்டும்படி அம்பை வைத்தார். தயாநிதியாகிய கடவுள் அதைச் சகிக்கலாற்றாதவராகி, வேதாகமங்கள் தோன்றிய தம்முடைய அருமைத்திருவாய்மலரைத் திறந்து, "நில்லு கண்ணப்ப நில்லு கண்ணப்ப என்னன்புடைத்தோன்றல் நில்லு கண் ணப்ப" என்று அருளிச்செய்து, அவருடையகண்ணைத் தோண்டும் கையைத் தமது வியஸ்தித்தானமாகிய இலிங்கத்திற்றோன்றிய திருக்கர த்தினாலே பிடித்துக்கொண்டார். உடனே பிரமாதி தேவர்கள் சமஸ்த ரும் வேதகோஷத்தோடும் நிலம் புதையக் கற்பகப் பூமாரி பெய்தார்கள். மகாஞானியாகிய சிவகோசரியார் இந்தச் சமாசாரம் முழுதையும் கண்டு அத்தியந்த ஆச்சரியமடைந்து, சுவாமியை வணங்கினார். அற்றைநாள் முதலாகப் பெரியோர்கள் சுவாமி சொல்லியபடியே அவருக்குக் கண்ண ப்பர் என்னும் பெயரையே வழங்குகின்றார்கள். நெடுங்காலமாக உஷ் ணமாகிய அக்கினி மத்தியில் நின்று ஐம்புலன் வழியே செல்லாதபடி மனசை ஒடுக்கி அருந்தவஞ் செய்கின்றவர்களுக்கும் கிட்டாத பரம்பொ ருளாகிய கடவுள், ஆறுநாளுக்குள்ளே பெருகிய அன்புமேலீட்டினாலே தம்முடைய திருநயனத்தில் இரத்தத்தைக் கண்டு அஞ்சித் தம்முடைய கண்ணை இடந்து அத்திருநயனத்தில் அப்புந் திண்ணனாருடைய கையைத் தமது அருமைத்திருக்கரத்தினாலே பிடித்துக்கொண்டு, "நிஷ்களங்கபத் தியையுடைய கண்ணப்பா, நீ நமக்கு வலப்பக்கத்திலே நில்" என்று திருவ ருள்புரிந்தார். இதைப் பார்க்கிலும் பெறவேண்டிய பெரும்பேறு யாது?

திருச்சிற்றம்பலம்.

கண்ணப்பநாயனார்புராண முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குங்குலியக்கலயநாயனூர் புராணம்.

வேறு.

வாய்ந்தநீர்வளத்தாலோங்கி மன்னியபொன்னிநாட்டின்
ஏய்ந்தநீர்மறையோர்வாழு மெயிற்பதியெறிநீர்க்கங்கை
தோய்ந்தநீள்சடையார்பண்டு தொண்டர்மேல்வந்தகூற்றைக்
காய்ந்தசேவடியார்நீடி யிருப்பதுகடவூராகும். (க)

வயலெலாம்விளைசெஞ்சாலி வரம்பெலாமலையின்முத்தம்
அயலெலாம்வேள்விச்சாலை யணையெலாங்கழுநீர்க்கற்றை
புயலெலாங்கமுகின்காட்ப் புறமெலாமதன்சீர்போற்றல்
செயலெலாந்தொழில்களாறே செழுந்திருக்கடவூரென்றும். (உ)

குடங்கையினெடியவுண்கட் கடைசியர்குழுமியாடும்
இடம்படுபண்ணைதோறு மெழுவனமருதம்பாடல்
வடம்புரிமுந்நூன்மார்பின் வைதிகமறையோர்செய்கைச்
சடங்குடையிடங்கடோறு மெழுவனசாமம்பாடல். (ஙு)

துங்கநீண்மருப்பின்மேதி படிந்துபால்சொரிந்தவாவிச்
செங்கயல்பாய்ந்துவாசக் கமலமுந்தீம்பாறு
மங்குறேய்மாடச்சாலை மருங்கிறையொதுங்குமஞ்சும்
அங்கவைபொழிந்தநீரு மாகுதிப்புகைப்பாறும். (ச)

மருவியதிருவின்மிக்க வளம்பதியதனில்வாழ்வார்
அருமறைமுந்நூன்மார்பி னந்தணர்கலயரென்பார்
பெருநதியணியும்வேணிப் பிரான்கழல்பேணிநாளும்
உருகியவன்புகூர்ந்த சிந்தையாரொழுக்கமிக்கார். (ரு)

பாலனுமறையோன்பற்றப் பயங்கெடுத்தருளுமாற்றுன்
மாலுநான்முகனுங்காணு வடிவுகொண்டெதிரேவந்து
காலனுருயிர்செற்றூர்க்குக் கமழ்ந்தகுங்குலியத்தூபஞ்
சாலவேநிறைந்துவிம்ம விடும்பணிதலைநின்றுள்ளார். (சு)

கங்கைநீர்கலிக்குஞ்சென்னிக் கண்ணுதலெம்பிராற்குப்
பொங்குகுங்குலியத்தூபம் பொலிவுறப்போற்றிச்செல்ல
அங்கவரருளினலே வறுமைவந்தடைந்தபின்னுந்
தங்கணுயகர்க்குத்தாமுன் செய்பணிதவாமையுய்த்தார். (எ)

இந்நெறியொழுகுநாளில் * இலம்பாடுநீடுசெல்ல
நன்னிலமுற்றும்விற்று நாடியவடிமைவிற்றும்
பன்னெடுந்தனங்கண்மாளப் பயின்மனைவாழ்க்கைதன்னின்
மன்னியசுற்றத்தோடு மக்களும்வருந்தினார்கள். (அ)

யாதொன்றுமில்லையாகி யிருபகலுணவுமாறிப்
பேதுறுமைந்தரோடும் பெருகுசுற்றத்தைநோக்கிக்
காதல்செய்மனைவியார்தங் கணவனார்கலயனார்கைக்
கோதின்மங்கலநூற்றாலி கொடுத்துநெற்கொள்ளுமென்றார். (கூ)

அப்பொழுததனைக்கொண்டு நெற்கொள்வானவரும்போக
ஒப்பில்குங்குலியங்கொண்டோர் வணிகனுமெதிர்வந்துற்றான்
இப்பொதியென்கொலென்றார்க் குள்ளவாறியம்பக்கேட்டு
மூப்புரிவெண்ணூன்மார்பர் முகமலர்ந்திதனைச்சொன்னார். (க0)

ஆறுசெஞ்சடைமேல்வைத்த வங்கணர்பூசைக்கேற்ற
நாறுகுங்குலியமீதே லுனின்றுபெற்றேனல்ல
பேறுமற்றிதன்மேலுண்டோ பெறுப்பேறுபெற்றுவைத்து
வேறினிக்கொள்வதென்னென் றுரைத்தெழும்விருப்பின்மிக்கார். (கக)

பொன்றரத்தாருமென்று புகன்றிடவணிகன்றானும்
என்றரவிசைந்ததென்னத் தாலியைக்கலயனார்தார்
அன்றவனதனைவாங்கி யப்பொதிகொடுப்பக்கொண்டு
கலிலர்விரைந்துசென்றார் நிறைந்தெழுகளிப்பினோடும். (கஉ)

விடையவர்வீரட்டானம் விரைந்துசென்றெய்தியென்னை
உடையவரெம்மையாளு மொருவர்தம்பண்டாரத்தில்
அடைவுறவொடுக்கியெல்லா மார்ந்தெழுமன்புபொங்கச்
சடையவர்மலர்த்தாள்போற்றி யிருந்தனர்தமக்கொப்பில்லார். (கஙு)

அன்பரங்கிருப்பநம்ப ரருளினாலளகைவேந்தன்
றன்பெருநிதியந்தூர்த்துத் தரணிமேனெருங்கவெங்கும்
பொன்பயில்குவையுநெல்லும் பொருவில்பல்வளனும்பொங்க
மன்பெருஞ்செல்வமாக்கி வைத்தனன்மனையினீட. (கச)

மற்றவர்மனைவியாரு மக்களும்பசியால்வாடி
அற்றைநாளிரவுதன்னி லயர்வுறத்துயிலும்போதி
னற்றவக்கொடியனார்க்குக் கனவிடைநாதனல்கத்
தெற்றெனவுணர்ந்துசெல்வங் கண்டபின்சிந்தைசெய்வார். (கரு)

கொம்பனாரில்லமெங்குங் குறைவிலாநிறைவிற்காணும்
அம்பொனின்குவையுநெல்லு மரிசியுமுதலாயுள்ள
எம்பிரானருளாமென்றே யிருகரங்குவித்துப்போற்றித்
தம்பெருங்கணவனார்க்குத் திருவமுதமைக்கச்சார்ந்தார். (கசு)

* இலம்பாடு என்பது - வறுமை.

காலனைக்காய்ந்தசெய்ய காலனார்கலயனாராம்
ஆலுமன்புடையசிந்தை யடியவரறியுமாற்றாற்
சாலநீபசித்தாயுன்றன் றடநெடுமனையினண்ணிப்
பாலினின்னடிசிலுண்டு பருவரலொழிகவென்றார். (௧௭)

கலையனாரதனைக்கேளாக் கைதொழுதிறைஞ்சிக்கங்கை
அலைபுனற்சென்னியார்த மருண்மறுத்திருக்கவஞ்சித்
தலைமிசைப்பணிமேற்கொண்டு சங்கரன்கோயினின்று
மலைநிகர்மாடவீதி மருங்குதம்மனையைச்சார்ந்தார். (௧௮)

இல்லத்திற்சென்றுபுக்கா ரிருநிதிக்குவைகளார்ந்த
செல்வத்தைக்கண்டுநின்று திருமனையாரைநோக்கி
வில்லொத்தநுதலாயிந்த விளைவெலாமென்கொலென்ன
அல்லொத்தகண்டனெம்மா னருடரவந்ததென்றார். (௧௯)

மின்னிடைமடவார்கூற மிக்கசீர்க்கலயனார்தா
மன்னியபெருஞ்செல்வத்து வளமலிசிறப்பைநோக்கி
என்னையுமாளுந்தன்மைக் கெந்தையெம்பெருமானீசன்
றன்னருளிருந்தவண்ண மென்றுகைதலைமேற்கொண்டார். (௨௦)

பதுமநற்றிருவின்மிக்கார் பரிகலந்திருத்திக்கொண்டு
கதுமெனக்கணவனாரைக் கண்ணுதற்கன்பரோடும்
விதிமுறைதீபமேந்தி மேவுமின்னடிசிலூட்ட
அதுநுகர்ந்தின்பமார்ந்தா ரருமறைக்கலயனார்தாம். (௨௧)

ஊர்தொறும்பலிகொண்டுய்க்கு மொருவனதருளினாலே
பாரினிலார்ந்தசெல்வ முடையராம்பண்பினீடிச்
சீருடையரிசிநல்ல செழுங்கறிதயிர்நெய்பாலால்
ஆர்தருகாதல்கூர வடியவர்க்குதவுநாளில். (௨௨)

செங்கண்வெள்ளேற்றின்பாகன் றிருப்பனந்தாளின்மேவும்
அங்கணன்செம்மைகண்டு கும்பிடவரசனார்வம்
பொங்கித்தன்வேழமெல்லாம் பூட்டவும்நேர்நில்லாமைக்
கங்குலும்பகலுந்தீராக் கவலையுற்றழுங்கிச்செல்ல. (௨௩)

மன்னவன்வருத்தங்கேட்டு மாசறுபுகழின்மிக்க
நன்னெறிக்கலயனார்தா நாதனைநேரேகாணும்
அந்நெறிதலைநின்றானென் றரசனைவிரும்பித்தாமு
மின்னெறித்தனையவேணி விகிர்தனைவணங்கவந்தார். (௨௪)

மழுவுடைச்செய்யகையர் கோயிலின்மருங்குசென்று
தொழுதுபோந்தன்பினோடுந் தொன்மறைநெறிவழாமை
முழுதுலகினையும்போற்ற மூன்றெரிபுரப்போர்வாழுஞ்
செழுமலர்ச்சோலைவேலித் திருப்பனந்தாளைச்சேர்ந்தார். (௨௫)

காதலாலரசனுற்ற வருத்தமுங்களிற்றினோடுந்
தீதில்வன்சேனைசெய்யுந் திருப்பணிநேர்படாமை
மேதினிமிசையேயெய்த்து வீழ்ந்திளைப்பதுவுநோக்கி
மாதவக்கலயர்தாமு மனத்தினில்வருத்தமெய்தி. (உசு)

சேனையுமானைபூண்ட திரளுமெய்த்தெழாமைநோக்கி
யானுமிவ்விளைப்புற்றெய்க்கு மிதுபெறவேண்டுமென்று
தேனலர்கொன்றையார்தந் திருமேனிபூங்கச்சேய்ந்த
மானவன்கயிறுபூண்டு கழுத்தினால்வருந்தலுற்றார். (உஎ)

நண்ணியவொருமையன்பி னுருவுபாசத்தாலே
திண்ணியதொண்டர்பூட்டி யிளைத்தபின்றிறம்பிநிற்க
ஒண்ணுமோகலயனார்த மொருப்பாடுகண்டபோதே
அண்ணலார்நேரேநின்று ரமரரும்விசும்பிலார்த்தார். (உஅ)

பார்மிசைநெருங்கவெங்கும் பரப்பினபயில்பூமாரி
தேர்மலிதானைமன்னன் சேனையுங்களிறுமெல்லாங்
கார்பெறுகானம்போலக் களித்தனகைகள்கூப்பி
வார்கழல்வேந்தன்றொண்டர் மலரடிதலைமேல்வைத்து. (உகூ)

விண்பயில்புரங்கள்வேவ வைதிகத்தேரின்மேருத்
திண்சிலைகுனியநின்றார் செந்நிலைகாணச்செய்தீர்
மண்பகுந்தவனுங்காணு மலரடியிரண்டும்யாரே
பண்புடையடியாரல்லாற் பரிந்துநேர்காணவல்லார். (௩0)

என்றுமெய்த்தொண்டர்தம்மை யேத்தியங்கெம்பிரானுக்
கொன்றியபணிகண்மற்று முள்ளனபலவுஞ்செய்து
நின்றவெண்கவிகைமன்ன னீங்கவுநிகரிலன்பர்
மன்றிடையாடல்செய்யு மலர்க்கழல்வாழ்த்திவைகி. (௩க)

சிலபகல்கழிந்தபின்பு திருக்கடவூரினண்ணி
நிலவுதம்பணியிற்றங்கி நிகழுநாள்நிகரில்காழித்
தலைவராம்பிள்ளையாருந் தாண்டகச்சதுரராகும்
அலர்புகழரசுங்கூட வங்கெழுந்தருளக்கண்டு. (௩உ)

மாறிலாமகிழ்ச்சிபொங்க வெதிர்கொண்டுமனையிலெய்தி
ஈறிலாவன்பின்மிக்கார்க் கின்னமுதொக்குமாற்றால்
ஆறுநற்சுவைகளோங்க வமைத்தவருளேயன்றி
நாறுபூங்கொன்றைவேணி நம்பர்தமருளும்பெற்றார். (௩௩)

கருப்புவில்லோனைக்கூற்றைக் காய்ந்தவர்கடவூர்மன்னி
விருப்புறுமன்புமேன்மேன் மிக்கெழுவேட்கைகூர
ஒருப்படுமுள்ளத்தன்மை யுண்மையாற்றமக்குநேர்ந்த
திருப்பணிபலவுஞ்செய்து சிவபதநிழலிற்சேர்ந்தார். (௩௪)

தேனக்ககோதைமாதர் திருநெடுந்தாலிமாறிக்
கூனற்றண்பிறையினர்க்குக் குங்குலியங்கொண்டுய்த்த
பான்மைத்திண்கலயனாரைப் பணிந்தவரருளினாலே
மானக்கஞ்சாறர்மிக்க வண்புகழ்வழுத்தலுற்றேன். (ரு௫)

ஆக-திருவிருத்தம்-அ௮௦.

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, திருக்கடவூரிலே, பிராமண குலத்திலே, சிவபத்தியிற்சிறந்த கலயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அந்தத் திருப்பதியிலே திருவீரட்டானமென்னுந் திருக்கோயிலில் வீற்றிருக்கின்ற பரமசிவனுக்குத் தினந்தோறும் குங்குலியத்தூபம் இட்டுவந்தார். இட்டுவருங்காலத்திலே, பரமசிவனுடைய திருவருளினாலே அவருக்கு வறுமை உண்டாயிற்று. உண்டாகியும், அவர் தாஞ்செய்யுந் திருப்பணியைத் தவறாமல் நடத்திவந்தார். வறுமைமிகுதியினாலே நிலங்களை விற்றும், அடிமைகளை விற்றும், செலவழித்தார். இப்படி எல்லாம் செலவானமையால், அவருடைய மக்களும் சுற்றத்தார்களும் வருந்தினார்கள்.

ஒருநாள் அவர்மனைவியார், அரிசி முதலியன வாங்குதற்கு ஒன்றும் இல்லாமையால் இரண்டுநாளாகப் பட்டினியிருந்து வருந்துகின்ற புதல்வரையும் சுற்றத்தாரையும் பார்த்து இரங்கி, தம்முடைய தாலியை அக்கணவர்கையிலே கொடுத்து, "இதற்கு நெல் வாங்கிக்கொண்டு வாரும்" என்றார். குங்குலியக்கலயநாயனார் அந்தத்தாலியை வாங்கிக்கொண்டு, நெல்லுக் கொள்ளும்படி போனார். போம்பொழுது, வழியிலே ஒருவணிகன் குங்குலியப்பொதி கொண்டு தமக்கு எதிரேவரக் கண்டு, மனமகிழ்ந்து, "சுவாமிக்குத் தூபம் இடும்படி குங்குலியத்தைப் பெற்றுக் கொண்டேன். இதினும் பார்க்க மேலாகிய பேறு உண்டோ" என்று சொல்லி, தம்முடைய கையில் இருந்த தாலியைக் கொடுத்து, அந்தக் குங்குலியப்பொதியை வாங்கிக்கொண்டு, ஆலயத்துக்கு விரைந்து சென்று, அங்குள்ள பண்டாரத்திலே அக்குங்குலியத்தை வைத்துவிட்டு, சுவாமியைத் துதித்துக்கொண்டு அங்கே இருந்தார். அவர் அங்கே இருக்க, வீட்டிலே அவர் மனைவியாரும் மக்களும் பசியினாலே வாடி, அன்றிராத்திரியிலே இளைப்புற்று நித்திரைசெய்யும் பொழுது; கருணாகராகிய கடவுள் அவ்வீடுமுழுதிலும், பொற்குவியலும் நெற்குவியலும் அரிசிக் குவியலும் பிறவளங்களும் நிறைந்து கிடக்கும்படி அருள்செய்து, அம்மனைவியாருக்குச் சொப்பனத்திலே தோன்றி, அநுக்கிரகஞ்செய்தார். உடனே அவர் விழித்தெழுந்து, அங்கே இருக்கின்ற செல்வத்தைக் கண்டு, பரமசிவனுடைய திருவருளை வியந்து ஸ்தோத்திரஞ் செய்துகொண்டு, தம்முடைய நாயகராகிய குங்குலியக்கலயநாயனாருக்குத் திருவமுது பாகம்பண்ணப் பிரயத்தனஞ்செய்தார். கிருபாநிதியாகிய பரம

சிவன் குங்குலியக்கலய நாயனருக்குத்தோன்றி, "நீ மிகப் பசிகொண்டிருக்கின்றாய். உன்வீட்டுக்குப் போய்ப் பாலும் அன்னமும் உண்டு துன்பத்தை ஒழி" என்று திருவாய்மலர்ந்தருளினர். குங்குலியக்கலயநாயனர் அதைக் கேட்டுக் கைகூப்பி வணங்கி, அவருடைய ஆஞ்ஞையை மறுத்து இருத்தற்கு அஞ்சி, அதனைச் சிரசின்மேலேவகித்து, திருக்கோயிலினின்றும் நீங்கிப் போய்த் தம்முடைய வீட்டினுள்ளே புகுந்தார். புகுந்த நாயனர் அவ்வீடெங்கும் நிறைந்திருக்கின்ற நிதிக்குவைகளைக் கண்டு, மனைவியாரை நோக்கி, "இந்தச் சம்பத்துக்கள் எல்லாம் எப்படி வந்தன" என்றுகேட்க; அவர் "எம்பெருமானுடைய திருவருளினல் வந்தன" என்றார். அது கேட்ட நாயனர் "ஒன்றுக்கும் பற்றாத சிறியேனையும் ஆட்கொள்ளும்பொருட்டு நமது கடவுளுடைய கருணை இருந்தபடி இப்படியோ" என்று கடவுளை வணங்கினர். மனைவியார் விரைவிலே கணவரையும் சிவனடியார்களையும் விதிப்படி தூபதீபங்களால் ஆராதனைசெய்து, திருவமுது செய்வித்தார். குங்குலியக்கலயநாயனர் பரமசிவனுடைய திருவருளினலே பெருஞ்செல்வ முடையவராகி, சிவனடியார்களைத் தயிர் நெய் பாலோடு திருவமுது செய்வித்துவந்தார்.

இப்படி நடக்குங் காலத்திலே, திருப்பனந்தாளென்னும் திருப்பதியில் வீற்றிருக்கின்ற சிவலிங்கம் சாய்ந்திருக்கின்றமையால், அதனை நிமிரப்பண்ணிக் கும்பிடுதற்கு விரும்பி, இராஜாவானவர் தம்முடைய யானைகளெல்லாவற்றையும் பூட்டி இழுப்பித்தார். இழுப்பித்தும், அது நிமிராமையால் அகோராத்திரம் தீராத கவலையுற்றிருந்தார். குங்குலியக்கலயநாயனர் அந்தச்சமாசாரத்தைக் கேள்வியுற்று, சுவாமிதரிசனஞ்செய்யும்பொருட்டுத் திருப்பனந்தாளை அடைந்தார். அங்கே சிவலிங்கத்தை நிமிரப்பண்ணவேண்டுமென்கின்ற ஆசையால் இராஜாவருத்தமுறுதலையும், சேனைகள் யானைகளோடு சிவலிங்கத்தை இழுத்துத் தங்கள் கருத்து முற்றாமையால் பூமியின்மேலே வலி குறைந்து விழுந்து இளைத்தலையும் கண்டு, மனசிலே துன்பங்கொண்டு, "அடியேனும் இளைப்பைத் தருகின்ற இந்தத் திருப்பணியைச் செய்யவேண்டும்" என்று விரும்பி, சிவலிங்கத்திலே கட்டப்பட்ட கயிற்றைத் தம்முடைய கழுத்திலே கட்டிக்கொண்டு இழுத்தார். உடனே சிவலிங்கம் நிமிர்ந்தது. அப்படி நிமிர்ந்தது அவர் புறத்திலே கட்டி இழுத்த அக்கயிற்றினலோ, அன்று; அகத்திலே கட்டியிழுத்த அன்புக்கயிற்றினலேயாம். அது கண்டு, இராஜாவும் சேனைகளும் மிகுந்த களிப்பையடைந்தார்கள். இராஜா குங்குலியக்கலய நாயனரை நமஸ்கரித்து வியந்து ஸ்தோத்திரம்பண்ணி, சுவாமிக்கு வேண்டிய திருப்பணிகள்பலவற்றை நிறைவேற்றிக்கொண்டு, தம்முடைய நகரத்துக்குப் போய்விட்டார்.

குங்குலியக்கலயநாயனர் சிலநாள் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு அங்கே இருந்து, பின் தமது வாசஸ்தானமாகிய திருக்கடவூருக்குப் போய், தாஞ்செய்யுந் திருப்பணியைச் செய்துகொண்டிருந்தார். இரு

க்குநாளிலே, அந்த ஸ்தலத்திற்கு எழுந்தருளிவந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரையும் திருநாவுக்கரசுநாயனாரையும் எதிர்கொண்டு, தமது வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய், திருவமுதுசெய்வித்து, அவர்களுடைய திருவருளையும் பரமசிவனுடைய திருவருளையும் பெற்றார். பின்னுஞ் சிலகாலம் அன்பு மேன்மேலும் பெருகப் பலதிருப்பணிகளையும் செய்துகொண்டிருந்து, சிவபதமடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

குங்குலியக்கலயநாயனார்புராணம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மானக்கஞ்சாறநாயனார் புராணம்.

வேறு.

மேலாறுசெஞ்சடைமேல் வைத்தவர்தாம்விரும்பியது
நூலாறுநன்குணர்வார் தாம்பாடுநோன்மையது
கோலாறுதேன்பொழியக் கொழுங்கனியின்சாறொழுகுங்
காலாறுவயற்கரும்பின் கமழ்சாறூர்கஞ்சாறூர். (க)

கண்ணீலக்கடைசியர்கள் கடுங்களையிற்பிழைத்தொதுங்கி
உண்ணீர்மைப்புணர்ச்சிக்க ணுறைத்துமலர்க்கண்சிவக்குந்
தண்ணீர்மென்கழுநீர்க்குத் தடஞ்சாலிதலைவணங்கு
மண்ணீர்மைநலஞ்சிறந்த வளவயல்களுளவயல்கள். (உ)

புயல்காட்டுங்கூந்தல்சிறு புறங்காட்டப்புனமயிலின்
இயல்காட்டியிடையொதுங்க வினங்காட்டுமுழத்தியர்கண்
முயல்காட்டுமதிதோற்கு முகங்காட்டக்கண்மூரிக்
கயல்காட்டுந்தடங்கள்பல கதிர்காட்டுந்தடம்பணைகள். (ங)

சேறணிதண்பழனவயற் செழுநெல்லின்கொழுங்கதிர்போய்
வேறருகுமிடைவேலிப் பைங்கமுகின்மிடறுரிஞ்சி
மாறெழுதிண்குலைவளைப்ப வண்டலைதண்டலையுழவர்
தாறரியுநெடுங்கொடுவா ளனையவுளதனியிடங்கள். (ச)

பாங்கின்மணிப்பலவெயிலுஞ் சூலவெயிலுமுளமாட்
ஞாங்கரணிதுகிற்கொடியு நகிற்கொடியுமுளவரங்கம்
ஓங்குநிலைத்தோரணமும் பூரணகும்பமுமுளவாற்
பூங்கணைவீதியிலணைவோர் புலமறுகுஞ்சிலமறுகு. (ரு)

மனைசாலுநிலையறத்தின் வழிவந்துவளம்பெருகும்
வினைசாலுமுழவுதொழின் மிக்கபெருங்குடிதுவன்றிப்
புனைசாயன்மயிலனையார் நடம்புரியப்புகன்முழவங்
கனைசாறுமிடைவீதிக் கஞ்சாறுவிளங்கியதால். (சு)

அப்பதியிற்குலப்பதியா யரசர்சேனாபதியாஞ்
செப்பவருங்குடிவிளங்கத் திருவவதாரஞ்செய்தார்
மெய்ப்பொருளையறிந்துணர்ந்தார் விழுமியவேளாண்குடிமை
வைப்பனையமேன்மையினார் மானக்கஞ்சாறனார். (எ)

பணிவுடையவடிவுடையார் பணியினொடும்பனிமதியின்
அணிவுடையசடைமுடியார்க் காளாகும்பதம்பெற்ற
தணிவில்பெரும்பேறுடையார் தம்பெருமான்கழல்சார்ந்த
துணிவுடையதொண்டர்க்கே யேவல்செயுந்தொழில்பூண்டார். (அ)

மாறில்பெருஞ்செல்வத்தின் வளம்பெருகமற்றதெலாம்
ஆறுலவுஞ்சடைக்கற்றை யந்தணர்தமடியாராம்
ஈறில்பெருந்திருவுடையா ருடையாரென்றியாவையுநேர்
கூறுவதன்முன்னவர்தங் குறிப்பறிந்துகொடுத்துள்ளார். (கூ)

விரிகடல்சூழ்மண்ணுலகில் விளங்கியவித்தன்மையராம்
பெரியவர்க்குமுன்சிலநாட் பிள்ளைப்பேறின்மையினால்
அரியறியாமலர்க்கழல்க ளறியாமையறியாதார்
வருமகவுபெறற்பொருட்டு மனத்தருளால்வழுத்தினார். (க0)

குழைக்கலையும்வடிகாதிற் கூத்தனாரருளாலே
மழைக்குதவும்பெருங்கற்பின் மனைக்கிழத்தியார்தம்பால்
இழைக்கும்வினைப்பயன்சூழ்ந்த விப்பிறவிக்கொடுஞ்சூழல்
பிழைக்குநெறிதமக்குதவப் பெண்கொடியைப்பெற்றெடுத்தார். (கக)

பிறந்தபெருமகிழ்ச்சியினாற் பெருமூதூர்களிசிறப்பச்
சிறந்தநிறைமங்கலதூ ரியமுழங்கத்தேவர்பிரான்
அறந்தலைநின்றவர்க்கெல்லா மளவில்வளத்தருள்பெருக்கிப்
புறந்தருவார்போற்றிசைப்பப் பொற்கொடியைவளர்க்கின்றார். (கஉ)

காப்பணியுமிளங்குழவிப் பதநீங்கிக்கமழ்சுரும்பின்
பூப்பயிலுஞ்சுருட்குழலும் பொலன்குழையுமுடன்றாழ
யாப்புறுமென்சிறுமணிமே கலையணிசிற்றாடையுடன்
கோப்பமைகிண்கிணியசையக் குறுந்தளிர்மெல்லடியொதுங்கி. (கங)

புனைமலர்மென்கரங்களினாற் போற்றியதாதியர்நடுவண்
மனையகத்துமணிமுன்றின் மணற்சிற்றிலிழைத்துமணிக்
கனைகுரனூபுரமலையக் கழன்முதலாப்பயின்றுமுலை
நனைமுகஞ்செய்முதற்பருவ நண்ணினளப்பெண்ணமிர்தம். (கச)

உறுசுவின்மெய்ப்புறம்பொலிய வொளிநுசுப்பைமுலைவருத்த
முறுவல்புறமலராத முகிண்முத்தநகையென்னு
நறுமுகைமென்கொடிமருங்கு னளிர்ச்சுருளுந்தளிர்ச்செங்கை
மறுவில்குலக்கொழுந்தினுக்கு மணப்பருவம்வந்தணைய. (கரு)

திருமகட்குமேல்விளங்குஞ் செம்மணியின்றீபமெனும்
ஒருமகளைமன்னுலகி லோங்குகுலமரபினராய்க்
கருமிடற்றுமறையவனார் தமராயகழலேயர்
பெருமகற்குமகட்பேச வந்தணைந்தார்பெருமுதியோர். (கசு)

வந்தமூதறிவோரை மானக்கஞ்சாறனார்
முந்தைமுறைமையின்விரும்பி மொழிந்தமணத்திறங்கேட்டே
எந்தமதுமரபினுக்குத் தகும்பரிசாலேயுமெனச்
சிந்தைமகிழ்வுறவுரைத்து மணநேர்ந்துசெலவிட்டார். (கஎ)

சென்றவருங்கஞ்சாறர் மணமிசைந்தபடிசெப்பக்
குன்றனையபுயத்தேயர் கோனாருமிகவிரும்பி
நின்றநிலைமையினிரண்டு திறத்தார்க்குநேராய
மன்றல்வினைமங்கலநாண் மதிநூல்வல்லவர்வகுத்தார். (கஅ)

மங்கலமாஞ்செயல்விரும்பி மகட்பயந்தவள்ளலார்
தங்குலநீள்சுற்றமெலாந் தயங்குபெருங்களிசிறப்பப்
பொங்கியவெண்முளைப்பெய்து பொலங்கலங்களிடைநெருங்கக்
கொங்கலர்த்தண்பொழின்மூதூர் வதுவைமுகங்கோடித்தார். (ககூ)

கஞ்சாறர்மகட்கொடுப்பக் கைப்பிடிக்கவருகின்ற
எஞ்சாதபுகழ்ப்பெருமை யேயர்குலப்பெருமானுந்
தஞ்சால்புநிறைசுற்றந் தலைநிறையமுரசியம்ப
மஞ்சாலுமலர்ச்சோலைக் கஞ்சாற்றின்மருங்கணைய. (உ0)

வள்ளலார்மணமவ்வூர் மருங்கணையாமுன்மலர்க்கண்
ஒள்ளிழையைப்பயந்தார்தந் திருமனையிலொருவழியே
தெள்ளுந்திரைநீருலக முய்வதற்குமற்றவர்தம்
உள்ளநிலைப்பொருளாய வும்பர்பிரான்றாமணைவார். (உக)

வேறு.

முண்டநிறைநெற்றியின்மேன் முண்டித்ததிருமுடியிற்
கொண்டசிகைசிகையின்கட் கோத்தணிந்தவெற்புமணி
பண்டொருவனுடலங்கம் பரித்தநாளதுகடைந்த
வெண்டரளமெனக்காதின் மிசையசையுங்குண்டலமும். (உஉ)

அவ்வென்பினொளிமணிகோத் தணிந்ததிருத்தாழ்வடமும்
பைவனப்பேரரவொழியத் தோளிலிடும்பூட்டிகையும்
மைவந்தநிறக்கேச வடப்பூணுநூலுமனச்
செவ்வன்பர்பவமாற்றுந் திருநீற்றுப்பொக்கணமும். (உங)

ஒருமுன்கைத் தனிமணிகோத் தணிந்தவொளிர்சூத்திரமும்
அருமறைநூற்கோவணத்தின் மிசையசையுந்திருவுடையும்
இருநிலத்தின்மிசைதோய்ந்த வெழுதரியதிருவடியும்
திருவடியிற்றிருப்பஞ்ச முத்திரையுந்திகழ்ந்திலங்க. (௨௪)

பொடிமூடுதழலென்னத் திருமேனிதனிற்பொலிந்த
படிநீடுதிருநீற்றின் பரப்பணிந்தபான்மையராய்க்
கொடிநீடுமறுகணைந்து தம்முடையகுளிர்கமலத்
தடிநீடுமனத்தன்பர் தம்மனையினகம்புகுந்தார். (௨௫)

வந்தணைந்தமாவிரத முனிவரைக்கண்டெதிரெழுந்து
சிந்தைகளிகூர்ந்துமகிழ் சிறந்தபெருந்தொண்டனார்
எந்தைபிரான்புரிதவத்தோ ரிவ்விடத்தேயெழுந்தருள
உய்ந்தொழிந்தேனடியேனென் றுருகியவன்பொடுபணிந்தார். (௨௬)

நற்றவராம்பெருமானார் நலமிகுமன்பரைநோக்கி
உற்றசெயன்மங்கலமிங் கொழுகுவதென்னெனவடியேன்
பெற்றதொருபெண்கொடிதன் வதுவையெனப்பெருந்தவரு
மற்றுமக்குச்சோபனமா குவதென்றுவாய்மொழிந்தார். (௨௭)

ஞானச்செய்தவரடிமேற் பணிந்துமனையகநண்ணி
மானக்கஞ்சாறனார் மணக்கோலம்புனைந்திருந்த
தேனக்கமலர்க்கூந்தற் றிருமகளைக்கொண்டணைந்து
பானற்கந்தரமறைத்து வருமவரைப்பணிவித்தார். (௨௮)

தஞ்சரணத்திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்தமடக்கொடிதன்
மஞ்சுதழைத்தெனவலர்ந்த மலர்க்கூந்தற்புறநோக்கி
அஞ்சலிமெய்த்தொண்டரைப்பார்த் தணங்கிவடன்மயிர்நமக்குப்
* பஞ்சவடிக்காமென்றார் பரவவடித்தலங்கொடுப்பார். (௨௯)

அருள்செய்தமொழிகேளா வடற்சுரிகைதனையுருவிப்
பொருள்செய்தாமெனப்பெற்றே னெனக்கொண்டுபூங்கொடிதன்
இருள்செய்தகருங்கூந்த லடியிலரிந்தெதிர்நின்ற
மருள்செய்தபிறப்பறுப்பார் மலர்க்கரத்தினிடைநீட்ட. (௩0)

வாங்குவார்போனின்ற மறைப்பொருளாமவர்மறைந்து
பாங்கின்மலைவல்லியுடன் பழையமழவிடையேறி
ஓங்கியவிண்மிசைவந்தா ரொளிவிசும்புநிலநெருங்கத்
தூங்கியபொன்மலர்மாரி தொழும்பர்தொழுதெதிர்விழுந்தார். (௩௧)

---

* பஞ்சவடி என்பது - மயிரினல் அகலமாகச்செய்யப்பட்டு மார்பில் பூணூலாகத்தரிக்கப்படும் வடமாம். பஞ்சம்-விரிவு. வடி-வடம். (௨௩) வது திருவிருத்தத்தானுமுணர்க. மாவிரதியர் அணிதல் - மயிர்ப்பூணூல் - எலும்புமணி. மாவிரதம் - உட்சமயம் ஆறிலொன்று.

விழுந்தெழுந்துமெய்ம்மறந்த மெய்யன்பர்தமக்குமதிக்
கொழுந்தலை:பவிழுங்கங்கை குதித்தசடைக்கூத்தனார்
எழும்பரிவினம்பக்க லுனக்கிருந்தபரிசிந்தச்
செழும்புவனங்களிலேறச் செய்தோமென்றருள்செய்தார். (௫௨)

மருங்குபெருங்கணநாதர் போற்றிசைப்பவானவர்க
ணெருங்கவிடைமேற்கொண்டு நின்றவர்முனின்றவர்தாம்
ஒருங்கியநெஞ்சொடுகரங்க ளுச்சியின்மேற்குவித்தையர்
பெருங்கருணைத்திறம்போற்றும் பெரும்பேறுநேர்பெற்றார். (௫௩)

தொண்டனார்தமக்கருளிச் சூழ்ந்திமையோர்துதிசெய்ய
இண்டைவார்சடைமுடியா ரெழுந்தருளிப்போயினார்
வண்டுவார்குழற்கொடியைக் கைப்பிடிக்கமணக்கோலங்
கண்டவர்கள்கண்களிப்பக் கலிக்காமனார்புகுந்தார். (௫௪)

வந்தணைந்தவேயர்குல மன்னவனார்மற்றந்தச்
சிந்தைநினைவரியசெயல் செறிந்தவர்பாற்கேட்டருளிப்
புந்தியினின்மிகவுவந்து புனிதனாரருள்போற்றிச்
சிந்தைதளர்ந்தருள்செய்த திருவாக்கின்றிறங்கேட்டு. (௨)

மனந்தளருமிடர்நீங்கி வானவர்நாயகரருளாற்
புனைந்தமலர்க்குழல்பெற்ற பூங்கொடியைமணம்புணர்ந்து
தனம்பொழிந்துபெருவதுவை யுலகெலாந்தலைசிறப்ப
இனம்பெருகத்தம்முடைய வெயின்மூதூர்சென்றணைந்தார். (௫௬)

வேறு.

ஒருமகள்கூந்தறன்னை வதுவைநாளொருவர்க்கீந்த
பெருமையார்தம்மைப்போற்றும் பெருமையென்னளவிற்றாமே
மருவியகமரிற்புக்க மாவடுவிடேலென்னோசை
உரிமையாற்கேட்கவல்லார் திறமினியுரைக்கலுற்றேன். (௫௭)

ஆக-திருவிருத்தம்-௫௭.

---

திருச்சிற்றம்பலம்.

கஞ்சாறூரிலே, வேளாளர்குலத்திலே, அரசர்களிடத்திற் பரம்பரையாகச் சேனாதிபதிநியோகத்தில் இருக்கின்ற குடியிலே, சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்த மானக்கஞ்சாறநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிலகாலம் பிள்ளைப்பேறின்மையால் அதிதுக்கங்கொண்டு, பிள்ளைப்பேற்றின்பொருட்டுப் பரமசிவனை உபாசனைபண்ணி, அவருடைய திருவருளினால் ஒரு பெண்குழந்தையைப் பெற்றார். அந்தப் பெண் வளர்ந்து மணப்பருவம் அடைய; ஏயர்கோன்கலிக்காமநாயனார் சிலமுதியோர்களை மானக்கஞ்சாறநாயனாரிடத்தில் அனுப்பி, அந்தப்பெண்ணைத் தமக்கு விவாகஞ்செய்துதரும்படி பேசுவித்து, அவர் அதற்கு

உடன்பட்டமையை அறிந்து, சோதிடர்களாலே நிச்சயிக்கப்பட்ட சுப தினத்திலே மணக்கோலங்கொண்டு, சுற்றத்தார்களோடும் கஞ்சாறூருக்குச் செல்லும்படி பிரஸ்தானமானார்.

அவர் கஞ்சாறூருக்கு வருதற்குமுன்னே, கருணாநிதியாகிய பரமசிவன் ஒரு மகாவிரதிவடிவங்கொண்டு, மானக்கஞ்சாறநாயனார்வீட்டுக்குச் சென்றார். அந்நாயனார் அவரைக்கண்டு எதிர்கொண்டு, உபசாரவார்த்தைகளைச் சொல்லி, வணங்கினார். மகாவிரதியார் அந்நாயனாரை நோக்கி, “இங்கேஎன்ன மங்கலகிருத்தியம் நடக்கப்போகின்றது” என்று வினவ; நாயனார் “அடியேனுடைய புத்திரியின் விவாகம் நடக்கப்போகின்றது” என்றார். மகாவிரதியார் “உமக்குச் சோபனம் உண்டாகுக” என்று ஆசீர்வதித்தார். நாயனார் உள்ளே போய், மணக்கோலங்கொண்டிருந்த தமது புத்திரியை அழைத்து வந்து, மகாவிரதியாரை வணங்கும்படி செய்தார். மகாவிரதியார் தம்மை வணங்கி எழுந்த பெண்ணினுடைய கூந்தலைப் பார்த்து, மானக்கஞ்சாறநாயனாரை நோக்கி, “இந்தப் பெண்ணினுடைய தலைமயிர் நமக்குப் பஞ்சவடிக்கு உதவும்” என்றார். பெற்றன நாயனார் தம்முடைய உடைவாளை உருவி, “இவர் இது கேட்டமற்குச் சிறியேன் என்னபுண்ணியஞ்செய்தேனோ” என்று, அந்தப் பெண்ணினுடைய கூந்தலை அடியிலே அரிந்து, அம் மகாவிரதியார்கையிலே நீட்ட; கடவுள் தாங்கொண்டுவந்த மகா விரதிவடிவத்தை ஒழித்து, ஆகாயத்திலே உமாதேவியாரோடும் இடபாரூடராய்த்தோன்றினார். அது கண்டு, மானக்கஞ்சாறநாயனார் பரவசமாகி, அடியற்ற மரம்போலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து, அஞ்சலியஸ்தராகி நின்றார். சிவபெருமான் அம்மானக்கஞ்சாறநாயனாருக்குத் தம்முடைய சந்நிதானத்திலே தம்முடைய பெருங்கருணைத்திறத்தைப் புகழ்ந்துகொண்டிருக்கும் பெரும்பேற்றைக்கொடுத்து அந்தர்த்தானமாயினார்.

கலிக்காமநாயனார் கஞ்சாறூரிலே வந்து சேர்ந்து, அங்கே நிகழ்ந்த சமாசாரத்தைக் கேள்வியுற்று மனமகிழ்ந்து, திருவருளைத் துதித்து, “முண்டிதஸ்திரியை விவாகம்பண்ணுதல் சாஸ்திரவிரோதமன்றோ” என்று மனந்தளர்ந்து, அதற்குச் சிவபெருமான் “கலிக்காமா, நீ மனந்தளரவேண்டாம். இந்தப்பெண்ணுக்குக் கூந்தலை மீளக் கொடுத்தருள்கின்றோம்” என்று அருளிச்செய்த திருவாக்கைக் கேட்டு, மனத்தளர்ச்சி நீங்கி, முன்போலக் கூந்தலைப் பெற்ற அப்பெண்ணை விவாகஞ்செய்துகொண்டு, தம்முடைய ஊருக்குப் போய்விட்டார்.

திருச்சிற்றம்பலம்.

மானக்கஞ்சாறநாயனார்புராணமுற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அரிவாட்டாயநாயனார் புராணம்.

வேறு.

வரும்புனற்பொன்னி நாட்டொருவாழ்பதி
சுரும்புவண்டொடு சூழ்ந்துமுரன்றிட
விரும்புமென்க ணுடையவாய்விட்டுநீள்
கரும்புதேன்சொரி யுங்கணமங்கலம். (க)

செந்நெலார்வயற் கட்டசெந்தாமரை
முன்னர்நந்துமிழ் முத்தஞ்சொரிந்திடத்
துன்னுமள்ளர்கை மேற்கொண்டுதோன்றுவார்
மன்னுபங்கய மாநிதிபோன்றுளார். (உ)

வளத்தினீடும் பதியதன்கண்வரி
யுளர்த்துமைம்பா லுடையோர்முகத்தினுங்
களத்தின்மீதுங் கயல்பாய்வயலயற்
குளத்துநீளுங் குழையடைநீலங்கள். (ங)

அக்குலப்பதி தன்னிலறநெறித்
தக்கமாமனை வாழ்க்கையிற்றங்கினார்
தொக்கமாநிதித் தொன்மையிலோங்கிய
மிக்கசெல்வத்து வேளாண்டலைமையார். (ச)

தாயனாரெனு நாமந்தரித்துளார்
சேயகாலந் தொடர்ந்துந்தெளிவிலா
மாயனார்மண் கிளைத்தறியாதவத்
தூயநாண்மலர்ப் பாதந்தொடர்ந்துளார். (ரு)

மின்னுசெஞ்சடை வேதியர்க்காமென்று
செந்நெலின்னமு தோடுசெங்கீரையு
மன்னுபைந்துணர் மாவடுவுங்கொணர்ந்
தன்னவென்று மமுதுசெய்விப்பரால். (சு)

இந்தநன்னிலை யின்னல்வந்தெய்தினுஞ்
சிந்தைநீங்காச் செயலினுவந்திட
முந்தைவேத முதல்வரவர்வழி
வந்தசெல்வ மறியாமைமாற்றினார். (எ)

மேவுசெல்வங் ‡ களிறுண்விளங்கனி
யாவதாகி யழியவுமன்பினாற்
பாவைபங்கர்க்கு முன்புபயின்றவத்
தாவில்செய்கை தவிர்ந்திலர்தாயனார். (அ)

அல்லனல்குர வாயிடக்கூலிக்கு
நெல்லறுத்துமெய் நீடியவன்பினு
னல்லசெங்நெலிற் பெற்றனநாயனூர்க்
கொல்லையின்னமு தாக்கொண்டொழுகுவார். (கூ)

சாலிதேடி யறுத்தவைதாம்பெறுங்
கூலியெல்லாந் திருவமுதாக்கொண்டு
நீலநெல்லரி கூலிகொண்டுண்ணுநாண்
மாலயற்கரி யாரதுமாற்றுவார். (க0)

வேறு.

நண்ணியவயல்களெல்லா நாடொறுமுன்னங்காண
வண்ணவார்கதிர்ச்செஞ்சாலி யாக்கிடமகிழ்ந்துசிந்தை
அண்ணலாரறுத்தகூலி கொண்டிஃதடியேன்செய்த
புண்ணியமென்றுபோத வமுதுசெய்விப்பாரானூர். (கக)

வைகலுமுணவிலாமை மனைப்படப்பையினிற்புக்கு
நைகரமில்லாவன்பி னங்கைக்கையடகுகொய்து
பெய்கலத்தமைத்துவைக்கப் பெருந்தகையருந்தித்தங்கள்
செய்கடன்முட்டாவண்ணந் திருப்பணிசெய்யுநாளில். (கஉ)

மனைமருங்கடகுமாள் § வடநெடுவானமீனே
அனையவர்தண்ணீர்வார்க்க வமுதுசெய்தன்பனூரும்
வினைசெயன்முடித்துச்செல்ல மேவுநாளொருநாண்மிக்க
முனைவனூர்தொண்டர்க்கங்கு நிகழ்ந்ததுமொழியப்பெற்றேன். (கங)

முன்புபோன்முதல்வனூரை யமுதுசெய்விச்கமூளும்
அன்புபோற்றூயசெங்நெ லரிசிமாவடுமென்கீரை
துன்புபோமனத்துத்தொண்டர் கூடையிற்சுமந்துசெல்லப்
பின்புபோமனைவியார் ¶ ஆன் பெற்றவஞ்சேந்திச்சென்றூர். (கச)

போதராநின்றபோது புலர்ந்துகாறளர்ந்துதப்பி
மாதரார்வருந்திவீழ்வார் மட்கலமூடுகையாற்
காதலாலணைத்துமெல்லாங் கமரிடைச்சிந்தக்கண்டு
பூதநாயகர்தந்தொண்டர் போவதங்கினியெனென்று. (கரு)

‡ களிறுண்விளங்கனி என்பது - வேழமுண்டவிளாங்கனி. வேழமாவது - அக்கனிக்குண்டாவதோர்நோய். அது தேரைமோந்த காயெனத் தேங்காய்க்குண்டாகுமோர்நோய் போல்வதென்றறிக.

§ வடநெடுவானமீன் என்பது - அருந்ததி.

¶ ஆன்பெற்றவஞ்சு என்பது - பஞ்சகவ்வியம்.

நல்லசெங்கீரை தூய மாவடுவரிசிசிந்த
அல்லநீர்த்தாளவல்லா ரமுதுசெய்தருளுமப்பே
றெல்லையிறீமையேனிங் கெய்திடப்பெற்றிலேனென்
றெல்லையிலரிவாட்பூட்டி யூட்டியைபரியலுற்றார். (௧௬)

ஆட்கொள்ளுமையர்தாமிங் கமுதுசெய்திலர்கொலென்னுப்
பூட்டியவரிவாட்பற்றிப் புரையறவிரவுமன்பு
காட்டியநெறியினுள்ளந் தண்டறக்கழுத்திடுேம்
ஊட்டியுமரியாநின்ற ருறுபிறப்பரிவாரொத்தார். (௧௭)

மாசறுசிந்தையன்பர் கழுத்தரியரிவாட்பற்றும்
ஆசில்வண்கையைமாற்ற வம்பலத்தாடுமையர்
வீசியசெய்யகையு மாவடு * விடேல்விடேலென்
றோசையுங்கமரினின்று மொக்கவேயெழுந்ததன்றே. (௧௮)

திருக்கைசென்றரிவாட்பற்றுந் திண்கையைப்பிடித்தபோது
வெருக்கொடங்கூறுநீங்க வெவ்வினைவிட்டுநீங்கிப்
பெருக்கவேமகிழ்ச்சிநீடத் தம்பிரான்பேணித்தந்த
அருட்பெருங்கருணைநோக்கி யஞ்சலிகூப்பிநின்று. (௧௯)

அடியனேனறிவிலாமை கண்டுமென்னடிமைவேண்டிப்
படிமிசைக்கமரில்வந்திங் கமுதுசெய்பரனேபோற்றி
துடியிடைபாகமான தூயநற்சோதிபோற்றி
பொடியணிபவளமேனிப் புரிசடைப்புராணபோற்றி. (௨0)

என்றவர்போற்றிசெய்ய விடபவாகனராய்த்தோன்றி
நன்றுநீபுரிந்தசெய்கை நன்னுதலுடனேகூட
என்றுநம்முலகில்வாழ்வா யென்றவருடனேநண்ண
மன்றுளேயாடுமையர் மழவிடையுகைத்துச்சென்றார். (௨௧)

பரிவுறுசிந்தையன்பர் பரம்பொருளாகியுள்ள
பெரியவரமுதுசெய்யப் பெற்றிலேனென்றுமாவின்
வரிவடுவிடேலெனுமுன் வன்கழுத்தரிவாள்பூட்டி
அரிதலாலரிவாட்டாய ராயினார்தூயநாமம். (௨௨)

முன்னிலைகமரேயாக முதல்வனாரமுதுசெய்யச்
செந்நெலினரிசிசிந்தச் செவியுறவடுவினோசை
அந்நிலைகேட்டதொண்ட ரடியிணைதொழுதுவாழ்த்தி
மன்னுமானுயர்செய்கை யறிந்தவாவழுத்தலுற்றேன். (௨௩)

ஆக-திருவிருத்தம்-௯௪0.

திருச்சிற்றம்பலம்.

---

* விடேலென்பது - அனுகரணவோசை.

சோழமண்டலத்திலே, கணமங்கலம் என்கின்ற ஊரிலே, வேளாளர்குலத்திலே, சிவபத்தியிற் சிறந்தவரும், இல்லறத்தை ஒழுங்காக நடத்துகின்றவரும், மிகுந்தசெல்வமுள்ளவருமாகிய தாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுக்குச் செந்நெலரிசியும் செங்கீரையும் மாவடுவும் தினந்தோறுங் கொண்டுபோய், திருவமுதுசெய்வித்து வருவார். இப்படி நிகழுங்காலத்திலே, கடவுளுடைய திருவருளினால் அவருக்கு வறுமை உண்டாயிற்று. உண்டாகியும், அவர் கூலிக்கு நெல் அறுப்பவராகி, தாங் கூலியாகப்பெற்ற செந்நெலெல்லாம் சுவாமிக்குத் திருவமுதுசெய்வித்து, கார்நெல்லைக்கொண்டு தாஞ் சீவனஞ்செய்துவந்தார். செய்யுநாளிலே, பரமசிவன் அவ்வூரிலிருக்கின்ற வயல்களிலுள்ள நெல்லெல்லாம் செந்நெல்லாகும்படி அருள்செய்ய; தாயனார் மனமகிழ்ந்து, தினந்தோறும் வயல்களுக்குப் போய் நெல்லறுத்து, கூலி வாங்கி, "இப்படிக் கிடைத்தது அடியேன் செய்த புண்ணியத்தால்" என்று சுவாமிக்கு மிகத்திருவமுது செய்விப்பாராயினர்.

இப்படி நடக்கின்றபடியால், நாடோறும் உணவில்லாமைபற்றி, மனைவியார் வீட்டின் பின்புறத்திலுள்ள தோட்டத்திற்குப் போய், இலைக்கறி கொய்து சமைத்து வைக்க; தாயனார் அதையுண்டு முன்போலத் தாஞ்செய்யுந் திருப்பணியைச் செய்தார். செய்யுநாளிலே, தோட்டத்திலுள்ள இலைக்கறியெல்லாம் அற்றுப்போக; மனைவியார் தண்ணீர் வார்க்க, அதனைப் பானம்பண்ணி, திருப்பணியைச் செய்துவந்தார். இப்படிச் செய்துவருநாளிலே ஒருநாள், முன்போலச் சுவாமிக்குத் திருவமுது செய்விக்கும் பொருட்டுச் செந்நெலரிசியும் செங்கீரையும் மாவடுவும் கூடையில் வைத்துச் சுமந்துகொண்டு போக; மனைவியார் பஞ்சகவ்வியங் கொண்டு அவருக்குப் பின்னாக நடந்தார். முன் செல்கின்ற தாயனார் பசியினாலே கால் தள்ளாடித் தவறி விழ, மனைவியார் பஞ்சகவ்வியக்கலயத்தை மூடியிருந்த கையினால் அவரை அணைத்தார். அணைத்தும், எல்லாம் கமரிலே சிந்திப்போகக் கண்டு, தாயனார் "இனித் திருக்கோயிலுக்குப் போவதினாற் பயன் யாது" என்று துக்கித்து, "இங்கே சிந்திய செந்நெலரிசியையும் செங்கீரையையும் மாவடுவையும் கடவுள் திருவமுது செய்தருளும் பேற்றைப் பெற்றேனில்லையே" என்று, அரிவாளினாலே தம்முடைய ஊட்டியை அரியத்தொடங்கினார். அப்பொழுது அவ்வடியார் தம்முடைய கழுத்தை அரிகின்ற கையைத் தடுக்கும் பொருட்டுச் சிதசித்துப்பிரபஞ்சமெங்கும் வியாபித்திருக்கின்ற பரமசிவன் உயர நீட்டிய திருக்கரமும், மாவடுவைக் கடித்தலால் உண்டாகுகின்ற விடேல் விடேல் என்னும் ஓசையும், கமரினின்றும் ஒக்க எழுந்தன. தாயனார், பரமசிவனுடைய திருக்கரம் வெளியில் வந்து அரிவாள் பிடித்த தம்முடைய கையைப் பிடித்தபொழுது, பயங்கொண்டு, முந்திய துன்பும் நீங்கி, மனம் மிகமகிழ்ந்து, அவர் தமக்குச் செய்த திருவருளை வியந்து

அஞ்சலிசெய்து ஸ்தோத்திரம்பண்ணிக்கொண்டு நின்றார். சிவபெருமான் இடபாரூடராய்த் தோன்றி, "நீ நம்மேல் வைத்த அன்பினாலே செய்த செய்கை நன்றாயிருக்கின்றது. நீ உன்மனைவியோடு வந்து நமது சிவலோகத்தில் வாழ்ந்திரு" என்று சொல்லி, அவர்கள் உடன்செல்ல! போயருளினார். அந்தத் தாயரென்பவர் "இங்கே சிந்தியவைகளைப் பரமசிவன் திருவமுதுசெய்யப் பெற்றேனில்லையே" என்று துக்கித்து, அரிவாளினாலே தமது கழுத்தை அரிதலுற்றபடியால், அவருடைய பெயர் அரிவாட்டாயநாயனார் என்றாயிற்று.

திருச்சிற்றம்பலம்.

அரிவாட்டாயநாயனார்புராண முற்றிற்று.

---

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆனாயநாயனார் புராணம்.

வேறு.

மாடுவிரைப்பொலி சோலையில்வான்மதி வந்தேறச்
சூடுபரப்பிய பண்ணைவரம்பு சுரும்பேற
ஈடுபெருக்கிய போர்களின்மேக மிளைத்தேற
நீடுவளத்தது மேன்மழநாடெனு நீர்நாடு. (௧)

நீவிநிதம்பவு முத்தியர்நெய்க்குழன் மைச்சூழன்
மேவியுறங்குவ மென்சிறைவண்டு விரைக்கஞ்சப்
பூவிலுறங்குவ நீள்கயல்பூமலி தேமாவின்
காவினறுங்குளிர் நீழலுறங்குவ கார்மேதி. (௨)

வன்னிலைமள்ள ருகைப்பவெழுந்த மரக்கோவை
பன்முறைவந்தெழு மோசைபயின்ற முழக்கத்தால்
அன்னமருங்குறை தண்டுறைவாவி யதன்பாலைக்
கன்னலடும்புகை யான்முகில்செய்வ கருப்பாலை. (௩)

பொங்கியமாநதி நீட்டலையுந்து புனற்சங்கந்
துங்கவிலைக்கத லிப்புதன்மீது தொடக்கிப்போய்த்
தங்கியபாசடை சூழ்கொடியூடு தவழ்ந்தேறிப்
பைங்கமுகின்றலை முத்தமுதிர்க்குவ பாளையென. (௪)

அல்லிமலர்ப்பழ னத்தயலுள்ள வானீனும்
ஒல்லைமுழுப்பையு கைப்பினுழக்கு குழக்கன்று
கொல்லைமடக்குறு மான்மறியோடு குதித்தோடு
மல்குவளத்தது முல்லையுடுத்த மருங்கோர்பால். (௫)

கண்மலர்காவிகள் பாயவிருப்பன கார்முல்லைத்
தண்ணகைவெண்முகை மேவுசுரும்பு தடஞ்சாலிப்
பண்ணையெழுங்கயல் பாயவிருப்பன காயாவின்
வண்ணநறுஞ்சினை மேவியவஞ்சிறை வண்டானம். (சு)

பொங்கரில்வண்டு புறம்பலைசோலைகண் மேலோடும்
வெங்கதிர்தங்க விளங்கியமேன்மழ நன்னாடாம்
அங்கதுமண்ணி னருங்கலமாக வதற்கேயோர்
மங்கலமானது மங்கலமாகிய வாழ்மூதூர். (எ)

ஒப்பில்பெருங்குடி நீடியதன்மையி லோவாமே
தப்பில்வளங்கள் பெருக்கியறம்புரி சால்போடுஞ்
செப்பவுயர்ந்த சிறப்பின்மலிந்தது சீர்மேவும்
அப்பதிமன்னிய வாயர்குலத்தவ ரானாயர். (அ)

ஆயர்குலத்தை விளக்கிடவந்து தயஞ்செய்தார்
தூயசுடர்த்திரு நீறுவிரும்பு தொழும்புள்ளார்
வாயினின்மெய்யின் வழுத்துமனத்தின் வினைப்பாலிற்
பேயுடனாடு பிரானடியல்லது பேணாதார். (கூ)

ஆனிரைகூட் வகன்புறவிற்கொடு சென்றேறிக்
கானுறைதீய விலங்குறுநோய்கள் கடிந்தெங்குந்
தூநறுமென்புல ருந்திவிரும்பிய தூநீருண்
டூனமிலாய முலப்பிலபல்கவ ளித்துள்ளார். (க0)

கன்றொடுபான்மறை நாகுகறப்பன பாலாவும்
புன்றலைமென்சினை யானொடுநீடு புனிற்றாவும்
வென்றிவிடைக்குல மோடுமினந்தொறும் வெவ்வேறே
துன்றிநிறைந்துள் சூழலுடன்பல தோழங்கள். (கக)

ஆவினிரைக்குல மப்படிபல்க வளித்தென்றுங்
கோவலரேவல் புரிந்திடவாயர் குலம்பேணுங்
காவலர்தம்பெரு மானடியன்புறு கானத்தின்
மேவுதுளைக்கரு விக்குழல்வாசனை மேல்கொண்டார். (கஉ)

வேறு.

முந்தைமறைநூன்மரபின் மொழிந்தமுறையெழுந்தவே
யந்தமுதனாலிரண்டி லரிந்துநரம்புறுதானம்
வந்ததுளைநிரையாக்கி வாயுமுதல்வழங்குதுளை
யந்தமில்சீரிடையீட்டி னங்குலியெண்களினமைத்து. (கங)

எடுத்தகுழற்கருவியினி லெம்பிரானெழுத்தஞ்சுந்
தொடுத்தமுறையேழிசையின் சுருதிபெறவாசித்துத்
தடுத்தசராசரங்களெலாந் தங்கவருந்தங்கருணை
யடுத்தவிசையமுதளித்துச் செல்கின்றாரங்கொருநாள். (கச)

வாசமலர்ப்பிணைபொங்க மயிர்நுழுதிமருங்குயர்ந்த
தேசுடையசிகழிகையிற் செறிகண்ணித்தொடைசெருகிப்
பாசிலைமென்கொடியின்வடம் பயிலநறுவிலிபுனைந்து
காசுடைநாணதற்கயலே கருஞ்சுருளின்புறங்கட்டி. (௧௫)

வெண்கோடலிலைச்சுருளிற் பைந்தோட்டுவிரைத்தோன்றித்
தண்கோலமலர்புனைந்த வடிகாதினொளிதயங்கத்
திண்கோலநெற்றியின்மேற் றிருநீற்றினொளிகண்டோர்
கண்கோடனிறைந்தாராக் கவின்விளங்கமிசையணிந்து. (௧௬)

நிறைந்தநீறணிமார்பி னிரைமுல்லைமுகைசுருக்கிச்
செறிந்தபுனைவடந்தாழத் திரடோளின்புடையலங்கல்
அறைந்தசுரும்பிசையரும்ப வரையுடுத்தமரவுரியின்
புறந்தழையின்மலிதானைப் பூம்பட்டுப்பொலிந்தசைய. (௧௭)

சேவடியிற்றொடுதோலுஞ் செங்கையினில்வெண்கோலும்
மேவுமிசைவேய்ங்குழலு மிகவிளங்கவினைசெய்யுங்
காவல்புரிவல்லாயர் கன்றுடையானிரைசூழப்
பூவலர்தார்க்கோவலனார் நிரைகாக்கப்புறம்போந்தார். (௧௮)

நீலமாமஞ்ஞையேங்க நிரைகொடிபுறவம்பாடக்
கோலவெண்முகையேர்முல்லைக் கோபவாய்முறுவல்காட்ட
ஆலுமின்னிடைசூழ்மாலைப் பயோதரமசையவந்தாள்
ஞாலநீடரங்கிலாடக் காரெனும்பருவநல்லாள். (௧௯)

எம்மருங்குநிரைபரப்ப வெடுத்தகோலுடைப்பொதுவர்
தம்மருங்குதொழுதணையத் தண்புறவில்வருந்தலைவர்
அம்மருங்குதாழ்ந்தசினை யலர்மருங்குமதுவுண்டு
செம்மருந்தண்சுரும்புசுழல் செழுங்கொன்றைமருங்கணைந்தார். (௨0)

சென்றணைந்தவானாயர் செய்தவிரைத்தாமமென
மன்றன்மலர்த்துணர்தூக்கி மருங்குதாழ்சடையார்போ
னின்றநறுங்கொன்றையினை நேர்நோக்கிநின்றுருகி
யொன்றியசிந்தையிலன்பை யுடையவர்பான்மடைதிறந்தார். (௨௧)

அன்பூறிமிசைப்பொங்கு மமுதவிசைக்குழலொலியால்
வன்பூதப்படையாளி யெழுத்தைந்தும்வழுத்தித்தா
முன்பூதிவருமளவின் முறைமையேயெவ்வுயிரும்
என்பூடுகரைந்துருக்கு மின்னிசைவேய்ங்கருவிகளில். (௨௨)

ஏழுவிரலிடையிட்ட வின்னிசைவங்கியமெடுத்துத்
தாழுமலர்வரிவண்டு தாவிப்பிடிப்பனபோற்
சூழுமுரன்றெழுகின்ற தூயபெருந்தனித்துளையில்
வாழியநந்தோன்றலார் மணியதரம்வைத்தூத. (௨௩)

முத்திரையேமுதலனைத்து முறைத்தானஞ்சோதித்து
வைத்ததுளையாராய்ச்சி வக்காணைவழிபோக்கி
யொத்தநிலையுணர்ந்ததற்பி னென்றுமுதல்படிமுறையால்
அத்தகைமையாரோசை யமரோசைகளினமைத்தார். (௨௪)

மாறுமுதற்பண்ணின்பின் வளர்முல்லைப்பண்ணாக்கி
யேறியதாரமுமுழையுங் கிழமைகொளவிடுந்தானம்
ஆறுலவுஞ்சடைமுடியா ரஞ்செழுத்தினிசைபெருகக்
கூறியபட்டடைக்குரலாங் கொடிப்பாலையினிறுத்தி. (௨௫)

ஆயவிசைப்புகனான்கி னமைந்தபுகல்வகையெடுத்து
மேயதுளைப்பற்றுவன விடுவனவாம்விரனிரையிற்
சேயவொளியிடையலையத் திருவாளனெழுத்தஞ்சுந்
தூயவிசைக்கிளைகொள்ளுந் துறையஞ்சின்முறைவிளைத்தார். (௨௬)

மந்தரத்துமத்திமத்துந் தாரத்தும்வரன்முறையாற்
றந்திரிக்கண்மெலிவித்துஞ் சமங்கொண்டுவலிவித்தும்
அந்தரத்துவிரற்றொழில்க ளளவுபெறவசைத்தியக்கிச்
சுந்தரச்செங்கனிவாயுந் துளைவாயுந்தொடக்குண்ண. (௨௭)

எண்ணியநூற்பெருவண்ண மிடைவண்ணம்வனப்பென்னும்
வண்ணவிசைவகையெல்லா மாதுரியநாதத்தி
னண்ணியபாணியுமியலுந் தூக்குநடைமுதற்கதியிற்
பண்ணமையவெழுமோசை யெம்மருங்கும்பரப்பினார். (௨௮)

வள்ளலார்வாசிக்கு மணித்துளைவாய்வேய்ங்குழலின்
உள்ளுறையஞ்செழுத்தாக வொழுகியெழுமதுரவொலி
வெள்ளநிறைந்தெவ்வுயிர்க்கு மேலமரர்தருவிளைதேன்
றெள்ளமுதினுடன்கலந்து செவிவார்ப்பதெனத்தேக்க. (௨௯)

ஆனிரைகளறுகருந்தி யசைவிடாதணைந்தயரப்
பானுரைவாய்த்தாய்முலையிற் பற்றுமிளங்கன்றினமுந்
தானுணவுமறந்தொழியத் தடமருப்பின்விடைக்குலமு
மான்முதலாங்கான்விலங்கு மயிர்முகிழ்த்துவந்தணைய. (௩௦)

ஆடுமயிலினங்களுமங் கசைவயர்ந்துமருங்கணுக
ஊடுசெவியிசைநிறைந்த வுள்ளமொடுபுள்ளினமு
மாடுபடிந்துணர்வொழிய மருங்குதொழில்புரிந்தொழுகுங்
கூடியவன்கோவலருங் குறைவினையின்றுறைநின்றார். (௩௧)

பணிபுவனங்களிலுள்ளார் பயில்பிலங்கள்வழியணைந்தார்
மணிவரைவாழரமகளிர் மருங்குமயங்கினர்மலிந்தார்
தணிவிலொளிவிஞ்சையர்கள் சாரணர்கின்னரரமரர்
அணிவிசும்பினயர்வெய்தி விமானங்கண்மிசையணைந்தார். (௩௨)

சுரமகளிர்கற்பகப்பூஞ் சோலைகளின்மருங்கிருந்து
கரமலரினமுதூட்டுங் கனிவாய்மென்கிள்ளையுடன்
விரவுநறுங்குழலலைய விமானங்கள்விரைந்தேறிப்
பரவியவேழிசையமுதஞ் செவிமடுத்துப்பருகினார். (௩௩)

நலிவாருமெலிவாரு முணர்வொன்றாய்நயத்தலினால்
மலிவாய்வெள்ளெயிற்றரவ மயின்மீதுமருண்டுவிழுஞ்
சலியாதநிலையரியுந் தடங்கரியுமுடன்சாரும்
புலிவாயின்மருங்கணையும் புல்வாயபுல்வாயும். (௩௪)

மருவியகால்விசைத்தசையா மரங்கண்மலர்ச்சினைசலியா
கருவரைவீழருவிகளுங் கான்யாறுங்கலித்தோடா
பெருமுகிலின்குலங்கள்புடை பெயர்வொழியப்புனல்சோரா
இருவிசும்பினிடைமுழங்கா வெழுகடலுமிடைதுளும்பா. (௩௫)

இவ்வாறுநிற்பனவுஞ் சரிப்பனவுமிசைமயமாய்
மெய்வாழும்புலன்கரண மேவியவொன்றாயினவால்
மொய்வாசநறுங்கொன்றை முடிச்சடையாரடித்தொண்டர்
செவ்வாயின்மிசைவைத்த திருக்குழல்வாசனையுருக்க. (௩௬)

மெய்யன்பர்மனத்தன்பின் விளைந்தவிசைக்குழலோசை
வையந்தன்னையுநிறைத்து வானந்தன்வயமாக்கிப்
பொய்யன்புக்கெட்டாத பொற்பொதுவினடம்புரியும்
ஐயன்றன்றிருச்செவியி னருகணையப்பெருகியதால். (௩௭)

ஆனாயர்குழலோசை கேட்டருளியருட்கருணை
தானாயதிருவுள்ள முடையதவவல்லியுடன்
கானாதிகாரணராங் கண்ணுதலார்விடையுகைத்து
வானூடுவந்தணைந்தார் மதிநாறுஞ்சடைதாழ. (௩௮)

திசைமுழுதுங்கணநாதர் தேவர்கட்குமுன்னெருங்கி
மிசைமிடைந்துவரும்பொழுது வேற்றொலிகள்விரவாமே
யசையவெழுங்குழனாதத் தஞ்செழுத்தாற்றமைப்பரவும்
இசைவிரும்புங்கூத்தனா ரெழுந்தருளியெதிர்நின்றார். (௩௯)

முன்னின்றமழவிடைமேன் முதல்வனாரெப்பொழுதுஞ்
சென்னின்றமனப்பெரியோர் திருக்குழல்வாசனைகேட்க
இந்நின்றநிலையேநம் பாலணைவாயெனவவரும்
அந்நின்றநிலைபெயர்ப்பா ரையர்திருமருங்கணைந்தார். (௪0)

விண்ணவர்கண்மலர்மாரி மிடைந்துலகமிசைவிளங்க
எண்ணிலருமுனிவர்குழா மிருக்குமொழியெடுத்தேத்த
அண்ணலார்குழற்கருவி யருகிசைத்தங்குடன்செல்லப்
புண்ணியனாரெழுந்தருளிப் பொற்பொதுவினிடைப்புக்கார். (௪௧)

வேறு.

தீதுகொள்வினைக்குவாரோஞ் செஞ்சடைக்கூத்தர்தம்மைக்
காதுகொள்குழைகள்வீசுங் கதிர்நிலவிருள்கால்சீப்ப
மாதுகொள்புலவிநீக்க மனையிடையிருகாற்செல்லத்
தூதுகொள்பவராநம்மைத் தொழும்புகொண்டுரிமைகொள்வார். (சஉ)

ஆக-திருவிருத்தம்-கூஅஉ.

---

திருச்சிற்றம்பலம்.

மழநாட்டிலே, மங்கலவூரிலே, ஆயர்குலத்திலே, சிவபத்தியிற்சிறந்த ஆனாயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தம்முடைய ஏவலாளராகிய மற்றையிடையர்களோடும் பசுநிரைகளைக் காட்டுக்குக் கொண்டுபோய் மேய்த்துக்கொண்டும், காந்தருவவேதத்திலே சொல்லியபடி செய்யப்பட்ட வேய்ங்குழலினாலே ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் சத்தசுரம் பொருந்த வாசித்து ஆன்மாக்களுக்குத் தம்முடைய இசையமுதத்தைச் செவித்துவாரத்தினாலே புகட்டிக்கொண்டும் வருவார்.

கார்காலத்திலே ஒருநாள், இடையர்கள் பசுநிரைகளைச் சூழ்ந்துகொண்டு செல்ல, அவ்வானாயநாயனார் கையிலே கோலும் வேய்ங்குழலுங் கொண்டு நிரை காக்கும்படி காட்டுக்குச்சென்றபொழுது; அவ்விடத்திலே மாலையைப்போல நீண்ட பூங்கொத்துக்களைத் தாங்கிக்கொண்டு புறத்திலே தாழ்கின்ற சடையினையுடைய பரமசிவனைப்போல நிற்கின்ற ஒருகொன்றைமரத்துக்குச் சமீபத்திலேபோய், அதைப் பார்த்துக்கொண்டு நின்று, அன்பினாலே உருகி இளகிய மனசையுடையவராகி, வேய்ங்குழலினாலே இசைநூலிலே விதித்தபடி ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை வாசித்தார். அவர் பஞ்சாக்ஷரத்தை அமைத்து வாசிக்கின்ற அதிமதுரமாகிய இசைவெள்ளமானது எவ்வகைப்பட்ட உயிர்களின் செவியிலும் தேவதருவின் பூந்தேனைத் தேவாமிர்தத்தோடு கலந்து வார்த்தாற்போலப் புகுந்தது. புற்களை மேய்ந்த பசுக்கூட்டங்கள் அசைவிடாமல் அவரை அடைந்து, உருக்கத்தினாலே மெய்ம்மறந்து நின்றன; பால் குடித்துக்கொண்டு நின்ற கன்றுகளெல்லாம் குடித்தலை மறந்துவிட்டு, இசை கேட்டுக்கொண்டு நின்றன; எருதுகளும் மான் முதலாகிய காட்டுமிருகங்களும் மயிர் சிலிர்த்துக்கொண்டு அவர்சமீபத்தில் வந்தன; ஆடுகின்ற மயிற்கூட்டங்கள் ஆடுதலொழிந்து அவர்பக்கத்தை அடைந்தன; மற்றைப் பலவகைப் பட்சிகளும் தங்கள் செவித்துவாரத்தினாலே புகுந்து கீதம் நிறைந்த அகத்தோடும் அவரருகிலே வந்து உருகி நின்றன; மாடு மேய்த்துக்கொண்டு நின்ற இடையர்களெல்லாரும் தங்கள் தொழிலை மறந்து கானத்தைக் கேட்டுக்கொண்டு நின்றார்கள்; விஞ்சையர்களும் சாரணர்களும் கின்னரர்களும் தேவர்களும் மெய்ம்மறந்து விமானங்களிலேறிக்கொண்டு வந்தார்

கள்; வருத்துகின்ற உயிர்களும் வருத்தப்படுகின்ற உயிர்களும் அவ்வி சையைக் கேட்டு அதன்வசமானபடியால், பாம்புகள் மயங்கிப் பயமின்றி மயில்களின்மேலே விழும்; சிங்கமும் யானையும் ஒருங்கே கூடி வரும்; மான்கள் புலிகளின் பக்கத்திலே செல்லும்; மரக்கொம்புகள் தாமும் சலியாதிருந்தன. இப்படியே சரம் அசரம் என்னும் ஆன்மவர்க்கங்க ளெல்லாம் ஆனுயநாயனுருடைய வேய்ங்குழல்வாசனையைக்கேட்டு, இசை மயமாயின. அவ்விசையைப் பொய்யன்புக்ககப்படாத பரமசிவன் கேட்டு, பார்வதிதேவியாரோடும் இடபாரூடராய் ஆகாயமார்க்கத்தில் எழுந்தருளிவந்து நின்று, அவ்வானுயநாயனூர்மீது திருவருளைக்கஞ்செ ய்து, "மெய்யன்பனே, நம்முடைய அடியார்கள் உன்னுடைய வேய்ங்கு ழலிசையைக் கேட்கும்பொருட்டு, நீ இப்பொழுது இவ்விடத்தில் நின்ற படியே நம்மிடத்துக்கு வருவாய்" என்று திருவாய்மலர்ந்தருளி, அவ் வானுயநாயனூர் வேய்ங்குழல் வாசித்துக்கொண்டு பக்கத்திலே செல்லத் திருக்கைலாசத்தை அடைந்தருளினூர்.

திருச்சிற்றம்பலம்.

ஆனுயநாயனூர்புராண முற்றிற்று.

---

இரண்டாவது

இலைமலிந்தசருக்க முற்றுப்பெற்றது.

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மூன்றுவது;

# மும்மையாலுலகாண்டசருக்கம்.

## மூர்த்திநாயனூர்புராணம்.

வேறு.

சீர்மன்னுசெல்வக் குடிமல்கு சிறப்பினேங்குங்
கார்மன்னுசென்னிக் கதிர்மாமணி மாடவைப்பு
நார்மன்னுசிந்தைப் பலநற்றுறை மாந்தர்போற்றும்
பார்மன்னுதொன்மைப் புகழ்பூண்டது பாண்டிநாடு. (௧)

சாயுந்தளிர்வல்லி மருங்கு னெடுந்தடங்கண்
வேயும்படுதோ ளியர்பண்படு மின்சொற்செய்ய
வாயும்படு நீள்கரைமண்பொருந் தண்பொருந்தம்
பாயுங்கட லும்படுநீர்மை பணித்தமுத்தம். (௨)

மொய்வைத்தவண்டின் செறிசூழன் முரன்றசந்தின்
மைவைத்தசோலை மலயந்தர வந்தமந்த
மெய்வைத்தகாலுந் தருஞாலமளந்தமேன்மைத்
தெய்வத்தமிழுந் தருஞ்செவ்வி மணஞ்செயீரம். (ரு)

சூழுமிதழ்ப்பங் கயமாகவத் தோட்டின்மேலாள்
தாழ்வின்றியென்றுந் தனிவாழ்வதத் தையலொப்பார்
யாழின்மொழியிற் குழலின்னிசை யுஞ்சுரும்பும்
வாழுநகர மதுராபுரி யென்பதாகும். (சு)

சால்பாயமும்மைத் தமிழ்தங்கிய வங்கண்மூதூர்
நூல்பாயிடத்தும் முளநோன்றலை மேதிபாயப்
பால்பாய்முலை தோய்மதுப்பங்கயம் பாயவெங்குஞ்
சேல்பாய்தடத்தும் முளசெய்யுண்மிக் கேறுசங்கம். (ஓ)

மந்தானிலம் வந்தசைபந்தரின் மாடமுன்றிற்
பந்தாடிய மங்கையர்பங்கயச் செங்கைதாங்குஞ்
சந்தார்முலை மேலனதாழ்குழை வாண்முகப்பொற்
செந்தாமரை மேலனதிலஞ் சேர்ந்தகோவை. (அ)

மும்மைப்புவ னங்களின்மிக்கதன் றேயம்மூதூர்
மெய்ம்மைப்பொரு ளாந்தமிழ்நூலின் விளங்குவாய்மைச்
செம்மைப்பொரு ளுந்தருவார்திரு வாலவாயில்
எம்மைப்பவந் தீர்ப்பவர்சங்க மிருந்ததென்றால். (எ)

அப்பொற்பதி வாழ்வணிகக்குலத் தான்றதொன்மைச்
செப்பத்தகு சீர்க்குடிசெய்தவஞ் செய்யவந்தார்
எப்பற்றினையு மறுத்தேறுகைத் தேறுவார்தாண்
மெய்ப்பற்றெனப் பற்றிவிடாத விருப்பின்மிக்கார். (அ)

நாளும்பெருங் காதனயப்புறும் வேட்கையாலே
கேளுந்துணை யும்முதற்கேடில் பதங்களெல்லாம்
ஆளும்பெரு மானடித்தாமரை யல்லதில்லார்
மூளும்பெரு கன்பெனுமூர்த்தியார் மூர்த்தியார்தாம். (கூ)

அந்திப்பிறை செஞ்சடைமேலணி யாலவாயில்
எந்தைக்கணி சந்தனக்காப்பிடை யென்றுமுட்டா
அந்தச்செய லின்னிலைநின்றடி யாருவப்பச்
சிந்தைக்கினி தாயதிருப்பணி செய்யுநாளில். (கo)

கானக்கடி சூழ்வடுகக்கரு நாடர்காவன்
மானப்படை மன்னன்வலிந்து நிலங்கொள்வானு
யானைக்குதி ரைக்கருவிப்படை வீரர்திண்டேர்
சேனைக்கட லுங்கொடுதென்றிசை நோக்கிவந்தான். (கக)

வந்துற்ற பெரும்படைமண்புதை யப்பரப்பிச்
சந்தப்பொதி யிற்றமிழ்நாடுடை மன்னன்வீரஞ்
சிந்தச்செரு வென்றுதன்னாணை செலுத்துமாற்றாற்
கந்தப்பொழில் சூழ்மதுராபுரி காவல்கொண்டான். (கஉ)

வல்லாண்மையின் வண்டமிழ்நாடு வளம்படுத்து
நில்லாநிலை யொன்றியவின்மையி னீண்டமேரு
வில்லானடி மைத்திறமேவிய நீற்றின்சார்பு
செல்லாதரு கந்தர்திறத்தினிற் சிந்தைதாழ்ந்தான். (கங)

தாழுஞ்சமண் கையர்தவத்தைமெய் யென்றுசார்ந்து
வீழுங்கொடி யோனதுவன்றியும் வெய்யமுன்னைச்
சூழும்வினை யாலரவஞ்சுடர்த் திங்களோடும்
வாழுஞ்சடை யானடியாரையும் வன்மைசெய்வான். (கச)

செக்கர்ச்சடை யார்விடையார்திரு வாலவாயுண்
முக்கட்பர னார்திருத்தொண்டரை மூர்த்தியாரை
மைக்கற்புரை நெஞ்சுடைவஞ்சகன் வெஞ்சமண்பேர்
எக்கர்க்குட னாகவிகழ்ந்தன செய்யவெண்ணி. (கரு)

அந்தம்மில வாமிறைசெய்யவு மன்பனார்தா
முந்தைம்முறை மைப்பணிமுட்டலர் செய்துவந்தார்
தந்தம்பெரு மைக்களவாகிய சார்பினிற்கும்
எந்தம்பெரு மக்களையாவர் தடுக்கவல்லார். (கசு)

எள்ளுஞ்செயல் வன்மைகளெல்லையில் லாதசெய்யத்
தள்ளுஞ்செய லில்லவர்சந்தனக் காப்புத்தேடிக்
கொள்ளுந்துறையு மடைத்தான்கொடுங் கோன்மைசெய்வான்
றெள்ளும்புனல் வேணியர்க்கன்பருஞ் சிந்தைநொந்து. (கஎ)

புன்மைச்செயல் வல்லமண்குண்டரிற் போதுபோக்கும்
வன்மைக்கொடும் பாதகன்மாய்ந்திட வாய்மைவேத
நன்மைத்திரு நீற்றுயர்நன்னெறி தாங்குமேன்மைத்
தன்மைப்புவி மன்னரைச்சார்வதென் றென்றுசார்வார். (கஅ)

காய்வுற்றசெற் றங்கொடுகண்டகன் காப்பவுஞ்சென்
றாய்வுற்றகொட் பிற்பகலெல்லை யடங்கநாடி
யேய்வுற்றநற் சந்தனமெங்கும் பெறாதுசிந்தை
சாய்வுற்றிட வந்தனர்தம்பிரான் கோயிறன்னில். (கக)

நட்டம்புரி வாரணிநற்றிரு மெய்ப்பூச்சின்று
முட்டும்பரி சாயினுந்தேய்க்குங்கை முட்டாதென்று
வட்டந்திகழ் பாறையின்வைத்து முழங்கைதேய்த்தார்
கட்டும்புறந் தோனரம்பென்பு கரைந்துதேய. (உ0)

கல்லின்புறந் தேய்த்தமுழங்கை கலுழ்ந்துசோரி
செல்லும்பரப் பெங்கணுமென்பு திறந்துமூளை
புல்லும்படி கண்டுபொறுத்திலர் தம்பிரானூர்
அல்லின்கணெழுந்ததுவந்தருள் செய்தவாக்கு. (உக)

அன்பின்றுணி வாலிதுசெய்திட லையவுன்பால்
வன்புன்கண் விளைத்தவன்கொண்டமண் ணெல்லாங்கொண்டு
முன்பின்னல் புகுந்தனமுற்றவு நீத்துக்காத்துப்
பின்புன்பணி செய்துநம்பேருல கெய்துகென்ன. (உ௨)

இவ்வண்ண மெழுந்தது கேட்டெழுந் தஞ்சிமுன்பு
செய்வ்வண்ண மொழிந்திடத்தேய்ந்தபுண் ணூறுதீர்ந்து
கைவ்வண்ண நிரம்பினவாசமெல் லாங்கலந்து
மொய்வ்வண்ண விளங்கொளியெய்தினர் மூர்த்தியார்தாம். (உ௩)

அந்நாளிர வின்கணமண்புகல் சார்ந்துவாழு
மன்னுகிய போர்வடுகக்கரு நாடர்மன்னன்
றன்னூரு முடிந்ததுசங்கரன் சார்பிலோர்க்கு
மின்னுமென் னீடியமெய்ந்நிலை யாமைவெல்ல. (உ௪)

இவ்வாறுல கத்தினிறப்ப வுயர்ந்தநல்லோர்
மெய்வ்வாழுல கத்துவிரைந்தணை வார்களேபோல்
அவ்வாறர னூரடியாரை யலைத்ததீயோன்
வெவ்வாய்நிர யத்திடைவீழ்வான் விரைந்துவீந்தான். (உ௫)

முழுதும்பழு தேபுரிமூர்க்க னுலந்தபோதின்
எழுதுங்கொடி போல்பவருட்பட வேங்குஞ்சுற்ற
முழுதும்புலர் வுற்றதுமற்றவ னன்னமாலைப்
பொழுதும்புலர் வுற்றதுசெங்கதிர் மீதுபோத. (உ௬)

அவ்வேலையி லங்கணமைச்சர்கள் கூடித்தங்கள்
கைவ்வேறுகொ ளீம்வருங்கடன் காலைமுற்றி
வைவ்வேலவன் றன்குலமைந்தரு மின்மையாலே
செய்வ்வேறு வினைத்திறஞ்சிந்தனை செய்துதேர்வார். (உ௭)

தாழுஞ்செய லின்றெருமன்னவன் றுங்கவேண்டுங்
கூழுங்குடியு முதலாயினகொள் கைத்தேனுஞ்
சூழும்படை மன்னவன்றேளிணை காவலின்றி
வாழுந்தகைத்தன் றிந்தவையக மென்றுசொன்னூர். (உ௮)

வேறு.

பன்முறையுயிர்களெல்லாம் பாலித்துஞாலங்காப்பான்
றன்னெடுங்குடைக்கீழ்த்தத்த நெறிகளிற்சரித்துவாழு
மன்னரையின்றிவைகு மண்ணுலகெண்ணுங்காலை
யின்னுயிரின்றிவாழும் யாக்கையையொக்குமென்பார். (உ௯)

இவ்வகைபலவுமெண்ணி யிங்கினியரசரில்லை
செய்வ்வகையிதுவேயென்று தெளிபவர்சிறப்பின்மிக்க
மைவ்வரையனையவேழங் கண்கட்டிவிட்டான்மற்றக்
கைவ்வரைகைக்கொண்டார்மண் காவல்கைக்கொள்வாரென்று. (௩0)

வேறு.

செம்மாண்வினை யர்ச்சனைநான்முறை செய்துதோளால்
இம்மாநில மேந்தவொரேந்தலை யேந்துகென்று
பெய்ம்மாமுகில் போன்மதம்பாய்பெரு கோடைநெற்றிக்
கைம்மாவை நறுந்துகில்கொண்டுகண் கட்டிவிட்டார். (௩௧)

கண்கட்டி விடுங்களியானையக் காவன்மூதூர்
மண்கொட்புற வீதிமருங்கு திரிந்துபோகித்
திண்பொற்றட மாமதில்சூழ்திரு வாலவாயின்
விண்பிற்பட வோங்கியகோபுர முன்புமேவி. (௩௨)

நீங்கும்மிர வின்கணிகழ்ந்தது கண்டதொண்டர்
ஈங்கெம்பெரு மானருளாமெனி லிந்தவையந்
தாங்குஞ்செயல் பூண்பனென்றுள்ளந் தளர்வுநீங்கிப்
பூங்கொன்றை மிலைந்தவர்கோயிற் புறத்தினிற்ப. (௩௩)

வேழத்தரசங் கண்விரைந்து நடந்துசென்று
வாழ்வுற்றுல கஞ்செய்தவத்தினின் வள்ளலாரைச்
சூழ்பொற்சுடர் மாமணிமாநிலந் தோயமுன்பு
தாழ்வுற்றெடுத் துப்பிடர்மீது தரித்ததன்றே. (௩௪)

மாதங்க மெருத்தினில்வைத்தவர் தம்மைக்காணு
ஏதங்கெட வெண்ணியதிண்மைய மைச்சரெல்லாம்
பாதங்களின் மீதுபணிந்தெழுந் தார்களப்போ
தோதங்கிளர் வேலையையொர்த்தொலி மிக்கதவ்வூர். (௩௫)

சங்கங்கண் முரன்றனதாரைகள் பேரியோடும்
எங்கெங்கு மியம்பினபல்லிய மெல்லையில்ல
அங்கங்கு மலிந்தனவாழ்த்தொலி யம்பொற்கொம்பின்
பங்கன்னரு ளாலுலகாள்பவர் பாங்கரெங்கும். (௩௬)

வெங்கட்களிற் றின்மிசைநின்று மிழிச்சிவேரித்
தொங்கற்சுடர் மாலைகள்சூழ்முடி சூடுசாலை
யங்கட்கொடு புக்கரியாசனத் தேற்றியொற்றைத்
திங்கட்குடைக் கீழுரிமைச்செயல் சூழ்ந்துசெய்வார். (௩௭)

மன்னுந்திசை வேதியின்மங்கல வாகுதிக்கட்
டுன்னுஞ்சுடர் வன்னிவளர்த்துத் துதைந்தநூல்சூழ்
பொன்னின்கல சங்கள்குடங்கள்பூ ரித்ததூநீர்
உன்னுஞ்செயன் மந்திரயோகி னிறுத்தினார்கள். (௩௮)

வந்துற்றெழு மங்கலமாந்தர்க டம்மைநோக்கிச்
சிந்தைச்சிவ மேதெளியுந்திரு மூர்த்தியார்தா
முந்தைச்செய லாமமண்போய்முதற் சைவமோங்கில்
இந்தப்புவி தாங்கியிங்கின்னர சாள்வனென்றார். (௩௯)

அவ்வாறு மொழிந்ததுகேட்ட வமைச்சரோடு
மெய்வ்வாழ்தரு நூலறிவின்மிகு மாந்தர்தாமும்
எவ்வாறருள் செய்தனைமற்றவை யன்றியாவர்
செய்வ்வார்பெரி யோயெனச்சேவடி தாழ்ந்துசெப்ப. (௪0)

வையம்முறை செய்குவனாகில் வயங்குநீறே
செய்யும்மபி டேகமுமாகச் செழுங்கலன்கள்
ஐயன்னடை யாளமுமாக வணிந்துதாங்கு
மொய்புன்சடை மாமுடியேமுடி யாவதென்றார். (௪௧)

என்றிவ்வுரை கேட்டலுமெல்லையில் கல்வியோரும்
வன்றிண்மதி நூல்வளர்வாய்மை யமைச்சர்தாமு
நன்றிங்கரு டானெனநற்றவ வேந்தர்சிந்தை
யொன்றுமர சாளுரிமைச்செய லானவுய்த்தார். (௪௨)

மாடெங்கு நெருங்கியமங்கல வோசைமல்கச்
சூடுஞ்சடை மௌலியணிந்தவர் தொல்லையேனங்
தேடுங்கழ லார்திருவாலவாய் சென்றுதாழ்ந்து
நீடுங்களிற் றின்மிசைநீண்மறு கூடுபோந்தார். (௪௩)

மின்னும்மணி மாளிகைவாயிலின் வேழமீது
தன்னின்றுமி ழிந்துதயங்கொளி மண்டபத்திற்
பொன்னின்னரி மெல்லணைச்சாமரைக் காமர்பூங்கான்
மன்னுங்குடை நீழலிருந்தனர் வையந்தாங்கி. (௪௪)

குலவுந்துறை நீதியமைச்சர் குறிப்பின்வைகக்
கலகஞ்செய மண்செயலாயின கட்டுநீங்கி
நிலவுந்திரு நீற்றுநெறித்துறை நீடுவாழ
உலகெங்கு நிரம்பியசைவ முயர்ந்துமன்ன. (௪௫)

நுதலின்கண் விழித்தவர்வாய்மை நுணங்குநூலின்
பதமெங்கு நிறைந்துவிளங்கப் பவங்கண்மாற்ற
உதவுந்திரு நீறுயர்கண்டிகை கொண்டவேணி
முதன்மும்மையினு லுலகாண்டனர் மூர்த்தியார்தாம். (௪௬)

ஏலங்கமழ் கோதையர்தந்திற மென்றுநீங்குஞ்
சீலங்கொடு வெம்புலன்றெவ்வுடன் வென்றுநீக்கி
ஞாலந்தனி னேமிநடாத்தி நலங்கொளூழிக்
காலம்முயிர் கட்கிடரான கடிந்துகாத்து. (௪௭)

பாதம்பர மன்னவர்சூழ்ந்து பணிந்துபோற்ற
ஏதம்பிணி யாவகையிவ்வுல காண்டுதொண்டின்
பேதம்புரி யாவருட்பேரர சாளப்பெற்று
நாதன்கழற் சேவடிநண்ணின ரண்ணலாரே. (சஅ)

அகல்பாறையின் வைத்துமுழங்கையை யன்றுதேய்த்த
இகலார்களிற் றன்பரையேத்திமுருகனாரா
முகில்சூழ்நறுஞ் சோலையின்மொய்யொளி மாடவீதிப்
புகலூர்வரு மந்தணர்தந்திறம் போற்றலுற்றும். (சகூ)

ஆக-திருவிருத்தம்-௧0௬௧.

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலே, மதுராபுரியிலே, வைசியர் குலத்திலே, சிவபத்தியே ஒருவடிவெடுத்தாற்போலும் மூர்த்திநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அந்தஸ்தலத்திலே வீற்றிருக்கின்ற சோமசுந்தரக்கடவுளுக்குத் தரிக்கும்பொருட்டுத் தினந்தோறும் சந்தனக்காப்புக் கொடுத்து வருங்காலத்திலே; கருநடதேசத்தரசன் சதுரங்க சேனைகளோடும் அம்மதுரைக்கு வந்து, பாண்டியனோடு யுத்தஞ்செய்து அவனைவென்று,அந்நகருக்கு அரசனாயினன். அவன் புறச்சமயிகளாகிய சமணர்களுடைய போதனசத்தியினாலே ஆருகதமதத்திற் பிரவேசித்து, சிவனடியார்களுக்கு இடுக்கண் செய்வானாயினான். ஆயினும், மூர்த்திநாயனார் தாஞ்செய்யுந் திருப்பணியைத் தவறாது செய்துவந்தார்.

அது கண்டு, அரசன் அவரை ஆருகதமதத்திலே பிரவேசிப்பித்தற்கு உத்தேசித்து, அவருக்குப் பல கொடுஞ்செய்கைகளைச் செய்தான். செய்தும், அவர் தம்முடைய திருப்பணியினின்றும் சிறிதும் வழுவாதவராயினர். அதுபற்றி அவ்வரசன் அவர் சந்தனக்கட்டை வாங்குமிடங்களிலெல்லாம் அவருக்குக் கொடுக்கவொட்டாமற் றடுத்தான். அதனால் அவர் மனநொந்து, "இப்பாண்டிநாடு, துர்ச்சமயமாகிய ஆருகத சமயத்திலே பிரவேசித்துச் சிவபுண்ணியத்துக்கு இடையூறுசெய்கின்ற அதிபாதகனாகிய இவ்வரசன் இறக்க, சற்சமயமாகிய சைவசமயத்தை வளர்க்கின்ற அரசரைச் சாருங்காலம் எக்காலம்" என்று நினைந்து துக்கித்து, பகற்காலமுழுதும் சந்தனக்கட்டை தேடித்திரிந்து, எங்கும் பெறாமையால், ஆலயத்துக்கு வந்து, "சுவாமிக்குத் தரிப்பதற்குத் தேய்த்துக் கொடுக்கும் பொருட்டுச் சந்தனக்கட்டைக்கு இன்றைக்கு முட்டு வந்தாலும், அக்கட்டையைப் போலத் தேய்க்கத்தக்க கைக்கு ஒருமுட்டும் இல்லை" என்று ஒரு சந்தனக்கல்லிலே தம்முடைய முழங்கையை வைத்து, தோலும் நரம்பும் எலும்பும் தேய்ந்து குறையும்படி தேய்த்தார். தேய்த்தலும், உதிரம் ஒழுகி நாற்புறத்திலும் பெருகி, எலும்பினுள்ளே இருக்கும் துவாரந்திறந்து மூளை வெளியிலே வந்தது. அப்

பொழுது, "அன்பனே, நீ பத்தியினது உறுதிப்பாட்டினால் இப்படிப்பட்ட செய்கையைச் செய்யாதே. உனக்கு இடுக்கண்செய்த கொடுங்கோலரசன் பெற்ற இந்நாடு முழுதையும் நீயே கைக்கொண்டு, இதற்குமுன் இவ்விடத்திலே அவனாலுண்டாகிய கொடுமைகள் யாவற்றையும் நீக்கி. பரிபாலனஞ்செய்து, உன்னுடைய பணியை நடப்பித்து, பின்பு நம்முடைய சிவலோகத்தை அடைதி" என்று ஒரு அசரீரிவாக்கு எழுந்தது. மூர்த்திநாயனார் அதைக் கேட்டு, அஞ்சி, கையைத் தேய்த்தலை ஒழிந்து, எழுந்தார். உடனே அவர் கையானது தேய்ந்ததனாலாகிய ஊறு நீங்கி முன்போலாயிற்று.

அவ்விரவிலே அந்தக்கருநாடராஜன் இறந்து, சிவனடியார்களுக்கு வருத்தஞ்செய்த அதிபாதகத்தினாலே கொடுமையாகிய நரகத்திலே விழுந்தான். மற்றநாள் பிராதக்காலத்திலே மந்திரிமார்கள் கூடி, தகனசம்ஸ்காரஞ் செய்து, பின்னர்த் தங்கள் அரசனுக்குப் புத்திரர் இல்லாமையால் வேறொருவரை அரசராக நியோகித்தற்கு உபாயத்தை ஆலோசித்து, "யானையைக் கண்கட்டி விடுவோம். அந்தயானை எவரை எடுத்துக்கொண்டுவருமோ அவரே இந்நாட்டுக்கு அரசராவார்" என்று நிச்சயித்துக்கொண்டு, யானையை விதிப்படி அருச்சித்து, "நீ இந்தநாட்டை ஆளுதற்கு வல்ல ஒருவரையெடுத்துக்கொண்டு வா" என்று சொல்லி, அதை வஸ்திரங்கொண்டு கண்ணைக் கட்டிவிட்டார்கள். அந்தயானை அந்தப்பட்டணத்து வீதிகளிலே திரிந்து சென்று,சொக்கநாதசுவாமியுடைய ஆலயத்தின் கோபுரத்துக்கு முன்னே போயிற்று. மூர்த்திநாயனார் இரவிலே தமக்குச் செவிப்புலப்பட்ட அசரீரிவாக்கினால் மனத்துயரம் நீங்கி, "நமது கடவுளாகிய பரமசிவனுக்குத் திருவுளமாகில் அடியேன் இந்த நாட்டை ஆளுதற்கு உடன்படுவேன்" என்று நினைத்துக்கொண்டு, திருக்கோயிற்புறத்திலே நின்றார். யானையானது அவர் திருமுன்னே சென்று தாழ்ந்து, அவரை எடுத்து முதுகின்மேல் வைத்துக்கொண்டது. அது கண்ட மந்திரிமார்கள் அவரை நமஸ்கரித்து. யானையின் முதுகினின்றும் இறக்கி, முடிசூட்டுமண்டபத்திலே கொண்டுபோய். ஒரு சிங்காசனத்தின்மேல் இருத்தி, முடி சூட்டுக்கு வேண்டும் மங்கலகிருத்தியங்களைச்செய்ய ஆரம்பித்தார்கள். மூர்த்திநாயனார் அவர்களை நோக்கி, "ஆருகதமதம் நீங்கிச் சைவசமயம் விருத்தியாயின் நான் இந்நாட்டை ஆளுதற்கு உடன்படுவேன்" என்றார். அதைக்கேட்ட மந்திரிமார்களும் சாஸ்திரபரிசயமுள்ள பிறரும் அவரை வணங்கி நின்று, "சுவாமீ, தேவரீருடைய ஆஞ்ஞையின்படியே யன்றி அதற்குமாறாக யாவர் செய்வார்கள்" என்று சொன்னார்கள். பின்பு மூர்த்திநாயனார் "நான் அரசாள்வேனாகில், எனக்கு விபூதியே அபிஷேகத்திரவியமும், உருத்திராட்சமே ஆபரணமும், சடாமுடியே கிரீடமும் ஆகுக" என்றார். அவர்கள் "தேவரீர் அருளிச்செய்தபடியே ஆகுக" என்று சொல்லி, மகுடாபிஷேகத்துக்கு வண்டும் செய்கைகளைச் செய்து நிறைவேற்றினார்கள்.

மூர்த்திநாயனார் சடைமுடி தரித்து ஆலயத்திற்சென்று சோமசுந்தரக்கடவுளை வணங்கிக்கொண்டு, யானையின்மேல் ஏறி, இராசமாளிகையைச் சேர்ந்தார். அங்கே அத்தாணிமண்டபத்திலே இரத்தின சிங்காசனத்தின்மேலே தவளச்சத்திரநிழலிலே வீற்றிருந்துகொண்டு, பொய்ச்சமயமாகிய ஆருகதம் நீங்கவும், மெய்ச்சமயமாகிய சைவசமயமே எங்கும் விளங்கவும், பெண்ணாசை சிறிதுமின்றி, நெடுங்காலம் விபூதி உருத்திராக்ஷம் சடைமுடி என்கின்ற மூன்றினாலும் அரசாண்டு, பின் சிவபதப்பிராப்தியானார்.

திருச்சிற்றம்பலம்.

மூர்த்திநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## முருகநாயனார் புராணம்.

வேறு.

தாதுசூழுங்குழன்மலையா டளிர்க்கைசூழ்ந்திருமேனி
மீதுசூழும்புனற்கற்றை வேணிநம்பர்விரும்புபதி
சோதிசூழுமணிமௌலிச் சோழர்பொன்னித்திருநாட்டுப்
போதுசூழுந்தடஞ்சோலைப் பொய்கைசூழும்பூம்புகலூர். (க)

நாமமூதூர்மற்றதனு ணல்லோர்மனம்போலவரணிந்த
சேமநிலவுதிருநீற்றின் சிறந்தவெண்மைத்திருந்தொளியால்
யாமவிருளும்வெளிபரக்கு மிரவேயல்லவிரைமலர்மேற்
காமர்மதுவுண்சிறைவண்டுங் களங்கமின்றிவிளங்குமால். (உ)

நண்ணுமிசைதேர்மதுகரங்க ணனைமென்சினையின்மருங்கலைய
வண்ணமதுரத்தேன்பொழிவ வாசமலர்வாயேயல்ல
தண்ணென்சோலையெம்மருங்குஞ் சாருமடமென்சாரிகையின்
பண்ணின்கிளவிமணிவாயும் பதிகச்செழுந்தேன்பொழியுமால். (௩)

வண்டுபாடப்புனற்றடத்து மலர்ந்துகண்ணீரரும்புவன
கொண்டவாசமுகையவிழ்ந்த குளிர்பங்கயங்களேயல்ல
அண்டர்பெருமான்றிருப்பாட்டி னமுதம்பருகச்செவிமடுக்குந்
தொண்டர்வதனபங்கயமுந் துளித்தகண்ணீரரும்புமால். (௪)

ஆனபெருமைவளஞ்சிறந்த வந்தண்புகலூரதுதன்னின்
மானமறையோர்குலமரபின் வந்தார்முந்தைமறைமுதல்வர்
ஞானவரம்பின்றலைநின்றார் நாகம்புனைவார்சேவடிக்கீழ்
ஊனமின்றிநிறையன்பா லுருகுமனத்தார்முருகனார். (௫)

அடைமேலலவன்றுயிலுணர வலர்செங்கமலவயற்கயல்கண்
மடைமேலுகளுந்திருப்புகலூர் மன்னிவாழுந்தன்மையராய்

விடைவேல்வருவார்க்காளாய மெய்ம்மைத்தவத்தாலவர்கற்றைச்
சடைமேலணியத்திருப்பள்ளித் தாமம்பறித்துச்சாத்துவார். (௬)

புலரும்பொழுதின்முன்னெழுந்து புனிதநீரின்மூழ்கிப்போய்
மலருஞ்செவ்வித்தம்பெருமான் முடிமேல்வானீரார்றுமதி
உலவுமருங்குமுருகுயிர்க்க நகைக்கும்பதத்தினுடன்பறித்த
அலகின்மலர்கள்வெவ்வேறு திருப்பூக்கூடைகளிலமைப்பார். (௭)

கோட்டுமலருநிலமலருங் குளிர்நீர்மலருங்கொழுங்கொடியின்
றோட்டுமலருமாமலருஞ் சுருதிமலருந்திருவாயிற்
காட்டுமுறுவனிலவலரக் கனகவரையிற்பன்னகநாண்
பூட்டுமொருவர்திருமுடிமேற் புனையலாகுமலர்தெரிந்து. (௮)

கொண்டுவந்துதனியிடத்தி னிருந்துகோக்குங்கோவைகளும்
இண்டைச்சுருக்குந்தாமமுட னிசைக்கும்வாசமாலைகளுந்
தண்டிற்கட்டுங்கண்ணிகளுந் தாளிற்பிணைக்கும்பிணையல்களு
நுண்டாதிறைக்குந்தொடையல்களுஞ் சமைத்துநுடங்குநூன்மார்பர். ()

ஆங்கப்பணிகளானவற்றுக் கமைத்தகாலங்களினமைத்துத்
தாங்கிக்கொடுசென்றன்பினெடுஞ் சாத்திவாய்ந்தவர்ச்சனைகள்
பாங்கிற்புரிந்துபரிந்துள்ளார் பரமர்பதிகப்பற்றான
ஓங்கிச்சிறந்தவஞ்செழுத்து மோவாநாவினுணர்வினர். (௧0)

தள்ளுமுறைமையொழிந்திடவித் தகுதியொழுகுமறையவர்தாந்
தெள்ளுமறைகண்முதலான ஞானஞ்செம்பொன்வள்ளத்தில்
அள்ளியகிலமீன்றளித்த வம்மைமுலைப்பாலுடனுண்ட
பிள்ளையார்க்குநண்பருமாம் பெருமையுடையாராயினர். (௧௧)

அன்னவடிவுமேனமுமா யறிவாரிருவரறியாமே
மன்னும்புகலூருறைவாரை வர்த்தமானவீச்சரத்து
நன்னர்மகிழ்ச்சிமனங்கொள்ள நாளும்பூசைவழுவாமே
பன்னும்பெருமையஞ்செழுத்தும் பயின்றேபணிந்துபரவினர். (௧௨)

ஆங்கணமருந்திருமுருக ரழகார்புகலிப்பிள்ளையார்
பொங்குமணத்தின்முன்செய்த பூசையதனாற்புக்கருளிச்
செங்கணடலேறுடையவர்தாஞ் சிறந்தவருளின்பொருளளிக்கத்
தங்கள்பெருமானடிநீழற் றலையாநிலைமைசார்வுற்றார். (௧௩)

அரவமணிந்தவரையாரை யர்ச்சித்தவர்தங்கழனிழற்கீழ்
விரவுபுகலூர்முருகனார் மெய்ம்மைத்தொண்டின்றிறம்போற்றி
கரவிலவர்பால்வருவாரைக் கருத்திலுருத்திரங்கொண்டு
பரவுமன்பர்ப்சுபதியார் பணிந்தபெருமைபகர்வுற்றேன். (௧௪)

ஆக-திருவிருத்தம்-௧0௪௫.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, திருப்புகலூரிலே, பிராமணகுலத்திலே, சிவபத்தியிற் சிறந்தவராகிய முருகநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தினந்தோறும் சூரியோதயத்துக்குமுன் எழுந்து ஸ்நானம் பண்ணிச் சந்தியாவந்தனம் முடித்துக்கொண்டு போய், கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூ என்கிற நால்வகைப் பூக்களில் உரிய பூக்களைக்கொய்து திருப்பூங்கூடைகளிலே இட்டுக்கொண்டு வந்து, தனியிடத்திலிருந்து, பலவகைப்பட்ட திருமாலைகள் செய்து, அந்த ஸ்தலத்திலுள்ள வர்த்தமானீச்சரம் என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற பரமசிவனுக்குச் சாத்தி அருச்சனை செய்தும், திவ்விய மந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபித்தும் வருவார்.

இப்படிச் செய்துவருங்காலத்திலே, திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்குச் சிநேகராகிய பெருமையையும் பெற்றார். பெற்ற அம்முருகநாயனார் அந்தத் திருஞானசம்பந்த மூர்த்திநாயனாருடைய திருமணத்திலே தம்முடைய சிவபூசாபலத்தினாலே போய், பரமசிவனுடைய திருவடிநிழலை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

முருகநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## உருத்திரபசுபதிநாயனார் புராணம்.

வேறு.

நிலத்திேனாங்கிய நிவந்தெழும்பெரும்புன னீத்த
மலர்த்தடம்பணை வயல்புகுபொன்னிநன் னாட்டுக்
குலத்தினோங்கிய குறைவிலாநிறைகுடி குழுமித்
தலத்தின்மேம்படு நலத்ததுபெருந்திருத் தலையூர். (௧)

வானளிப்பன மறையவர்வேள்வியின் வளர்தீ
தேனளிப்பன நறுமலர்ச்செறிசெழுஞ் சோலை
ஆனளிப்பன வஞ்சுகந்தாடுவார்க் கவ்வூர்
தானளிப்பன தருமமுநீதியுஞ் சால்பும். (௨)

அங்கண்மாநக ரதனிடையருமறை வாய்மைத்
துங்கவேதியர் குலத்தினிற்றோன்றிய தூயோர்
செங்கண்மால்விடை யார்செழும்பொன்மலை வல்லி
பங்கினாரடி மைத்திறம்புரிபசு பதியார். (௩)

ஆயவந்தண ரருமறையுருத்திரங் கொண்டு
மாயனாறி யாமலர்ச்சேவடி வழுத்துந்
தூயவன்பொடு தொடர்பினிலிடையறாச் சுருதி
நேயநெஞ்சின ராகியதொழிற்றலை நின்றார். (௪)

கரையில்கம்பலை புள்ளொலிகறங்கிட மருங்கு
பிரசமென்சுரும் பறைந்திடக்கருவரால் பிறழு
நிறைநெடுங்கய னீரிடைநெருப்பெழுந் தனைய
விரைநெகிழ்ந்தசெங் கமலமென்பொய்கையுண் மேவி. (௫)

தெள்ளுதண்புனல் கழுத்தளவாயிடைச் செறிய
உள்ளுறப்புக்கு நின்றுகையுச்சிமேற் குவித்துத்
தள்ளுவெண்டிரைக் கங்கைநீர்ததும்பிய சடையார்
கொள்ளுமன்பினி லுருத்திரங்குறிப்பொடு பயின்றார். (௬)

அருமறைப்பய னாகியவுருத்திர மதனை
வருமுறைப்பெரும் பகலுமெல்லியும்வழு வாமே
திருமலர்ப்பொகுட் டிருந்தவனனையவர் சிலநாள்
ஒருமையுய்த்திட வுமையிடமகிழ்ந்தவ ருவந்தார். (௭)

காதலன்பர்த மருந்தவப்பெருமையுங் கலந்த
வேதமந்திர நியதியின்மிகுதியும் விரும்பி
ஆதிநாயக ரமர்ந்தருள்செய்யமற் றவர்தாந்
தீதிலாநிலைச் சிவபுரியெல்லையிற் சென்றார். (௮)

நீடுமன்பினி லுருத்திரமோதிய நிலையால்
ஆடுசேவடி யருகுறவணைந்தன ரவர்க்குப்
பாடுபெற்றசீ ருருத்திரபசுபதி யாராங்
கூடுநாமமு நிகழ்ந்ததுகுவலயம் போற்ற. (௯)

அயில்கொண்முக்குடு மிப்படையார்மருங் கருளாற்
பயிலுருத்திர பசுபதியார்திறம் பரசி
எயிலுடைத்தில்லை யெல்லையினுளேப்போ வாராஞ்
செயலுடைப்புறத் திருத்தொண்டர்திறத்தினை மொழிவாம். (௧௦)

ஆக-திருவிருத்தம்-௧௦௫௫.

---

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலே, திருத்தலையூரிலே, பிராமணகுலத்திலே, பரம சிவனுடைய திருவடிகளிலே பதிந்த அன்பே தமக்குச் செல்வமெனக் கொண்ட பசுபதி என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தாமரைத்தடாகத்திலே அகோராத்திரம் கழுத்தளவினதாகிய தண்ணீரிலே நின்று கொண்டு, இரண்டுகைகளையும் சிரசின்மேலேறக் குவித்து, பரமசிவனு

டைய திருவடிகளை மறவாத சிந்தனையோடு வேதபுருஷனுக்குக் கண்ணாகிய ஸ்ரீருத்திரத்தை ஓதி, சிலநாட்சென்றபின் சிவபதத்தை அடைந்தார். அதனால் அவர்பெயர் உருத்திரபசுபதி நாயனூர் என்றாயிற்று.

திருச்சிற்றம்பலம்.

உருத்திரபசுபதிநாயனூர் புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருநாளைப்போவார்நாயனூர் புராணம்.

வேறு.

பகர்ந்துலகுசீர்போற்றும் பழையவளம்பதியாகுந்
திகழ்ந்தபுனற்கொள்ளிடம்பொன் செழுமணிகடிரைக்கரத்தான்
முகந்துதரவிருமருங்கு முளரிமலர்க்கையேற்கும்
அகன்பணைநீர்நன்னாட்டு மேற்காநாட்டாதனூர். (க)

நீற்றலர்பேரொளிநெருங்கு மப்பதியினிறைக்ரும்பின்
சாற்றலைவன்குலைவயலிற் றகட்டுவராலெழப்பகட்டேர்
ஆற்றலவன்கொழுக்கிழித்த சால்வழிபோயசைந்தேறிச்
சேற்றலவன்கருவுயிர்க்க முருகுயிர்க்குஞ்செழுங்கமலம். (உ)

நனைமருவுஞ்சினைபொதுளி நறுவிரைசூழ்செறிதளிரிற்
றினகரன்மண்டலம்வருடுஞ் செழுந்தருவின்குலம்பெருகிக்
கனமருவியசைந்தலையக் களிவண்டுபுடைசூழப்
புனன்மழையோமதுமழையோ பொழிவொழியாபூஞ்சோலை. (௩)

பாளைவிரிமணங்கமழும் பைங்காய்வன்குலைத்தெங்கின்
றாளதிரமிசைமுட்டித் தடங்கிடங்கினெழப்பாய்ந்த
வாளைபுதையச்சொரிந்த பழமிதப்பவண்பலவி
னீளமுதிர்கனிகிழிதே னீத்தத்திலெழுந்துகளும். (௪)

வயல்வளமுஞ்செய்ல்படுபைந் துடவையிடைவருவளமும்
வியலிடமெங்கணுநிறைய மிக்கபெருந்திருவினவாம்
புயலடையுமாடங்கள் பொலிவெய்தமலிவுடைத்தா
யயலிடைவேறடிநெருங்கக் குடிநெருங்கியுளதவ்வூர். (௫)

மற்றவ்வூர்ப்புறம்பணையின் வயன்மருங்குபெருங்குலையிற்
சுற்றம்விரும்பியகீழ்மைத் தொழிலுழவர்கிளைதுவன்றிப்
பற்றியபைங்கொடிச்சுரைமேற் படர்ந்தபழங்கூரையுடைப்
புற்குரம்பைச்சிற்றில்பல நிலைத்துளதோர்புலைப்பாடி. (௬)

கூருகிர்மெல்லடியளகின் குறும்பார்ப்புக்குழூச்சுழலும்
வார்பயின்முன் றினினின்ற வள்ளுகிர்நாய்த்துள்ளுபறழ்
காரிரும்பின்சரிசெறிகைக் கருஞ்சிறுர்கவர்ந்தோட
வார்சிறுமென்குரைப்படக்கு மரைக்கசைத்தவிருப்புமணி. (எ)

வன்சிறுதோன்மிசையுழத்தி மகவுறக்குகிழன்மருதுந்
தன்சினைமேற்பெடையொடுங்குந் தடங்குழிசிப்புதைநீழன்
மென்சினையவஞ்சிகளும் விசிப்பறைதூங்கினமாவும்
புன்றலைநாய்ப்புனிற்றுமுழைப் புடைத்தெங்குமுடைத்தெங்கும். (அ)

செறிவலித்திண்கடைஞர்வினைச் செயல்புரிவைகறையாமக்
குறியளக்கவழைக்குஞ்செங் குடுமிவாரணச்சேக்கை
வெறிமலர்த்திண்சினைக்காஞ்சி விரிநீழன்மருங்கெல்லா
நெறிகுழற்புன்புலைமகளிர் நெற்குறுபாட்டொலிபரக்கும். (கூ)

புள்ளுந்தண்புனற்கலிக்கும் பொய்கையுடைப்புடையெங்குந்
தள்ளுந்தாணடையசையத் தளையவிழ்பூங்குவளைமது
விள்ளும்பைங்குழற்கதிர்நெல் மிலைச்சியபுன்புலைச்சியர்கள்
கள்ளுண்டுகளிதூங்கக் கறங்குபறையுங்கலிக்கும். (க0)

இப்படித்தாகியகடைஞ ரிருப்பின்வரைப்பினின்வாழ்வார்
மெய்ப்பரிவுசிவன்கழற்கே விளைந்தவுணர்வொடும்வந்தார்
அப்பதியிலூர்ப்புலைமை யான்றதொழிற்றுயத்தார்
ஒப்பிலவர்நந்தனு ரெனவொருவருளரானுர். (கக)

பிறந்துணர்வுதொடங்கியபின் பிறைக்கண்ணிப்பெருந்தகைபாற்
சிறந்தபெருங்காதலினுற் செம்மைப்புரிசிந்தையராய்
மறந்துமயனினைவின்றி வருபிறப்பின்வழிவந்த
அறம்புரிகொள்கையராயே யடித்தொண்டினெறிநின்றுர். (கஉ)

ஊரில்விடும்பறைத்துடவை யுணவுரிமையாக்கொண்டு
சார்பில்வருந்தொழில்செய்வார் தலைநின்றுர்தொண்டினுற்
கூரிலையமுக்குடுமிப் படையண்ணல்கோயிற்றேறும்
பேரிகையேமுதலாய முகக்கருவிபிறவினுக்கும். (கங)

போர்வைத்தோல்விசிவாரென் றினையனவும்புகலுமிசை
நேர்வைத்தவீணைக்கும் யாழுக்குநிலைவகைபாற்
சேர்வுற்றதந்திரியுந் தேவர்பிரானர்ச்சனைகட்
கார்வத்தினுடன்கோரோ சனையுமிவையளித்துள்ளார். (கச)

இவ்வகையாற்றந்தொழிலி னியன்றவெலாமெவ்விடத்துஞ்
செய்வ்வனவுங்கோயில்களிற் றிருவாசற்புறநின்று
மெய்வ்விரவுபேரன்பு மிகுதியினுலாடுதலும்
அவ்வியல்பிற்பாடுதலு மாய்நிகழ்வாரந்நாளில். (கரு)

திருப்புன்கூர்ச்சிவலோகன் சேவடிகண்மிகநினைந்து
விருப்பினொடுந்நம்பணிகள் வேண்டுவனசெய்வதற்கே
அருத்தியினாலொருப்பட்டங் காதனார்தனினின்றும்
வருத்தமுறுங்காதலினால் வந்தவ்வூர்மருங்கணைந்தார். (கசு)

சீரேறுமிசைபாடித் திருத்தொண்டர்திருவாயி
னேரேகும்பிடவேண்டு மெனநினைந்தார்க்கதுநேர்வார்
காரேறுமெயிற்புன்கூர்க் கண்ணுதலார்திருமுன்பு
போரேற்றைவிலங்கவருள் புரிந்தருளிப்புலப்படுத்தார். (கஎ)

சிவலோகமுடையவர்தந் திருவாயின்முன்னின்று
பவலோகங்கடப்பவர்தம் பணிவிட்டுப்பணிந்தெழுந்து
சுவலோடுவாரலையப் போவார்பின்பொருசூழல்
அவலோடுமடுத்ததுகண் டாதரித்துக்குளந்தொட்டார். (கஅ)

வடங்கொண்டபொன்னிதழி மணிமுடியார்திருவருளாற்
றடங்கொண்டகுளத்தளவு சமைத்ததற்பின்றம்பெருமான்
இடங்கொண்டகோயில்புறம் வலங்கொண்டுபணிந்தெழுந்து
நடங்கொண்டுவிடைகொண்டு தம்பதியினண்ணினார். (கக)

இத்தன்மையீசர்மகிழ் பதிபலவுஞ்சென்றிறைஞ்சி
மெய்த்ததிருத்தொண்டுசெய்து விரவுவார்மிக்கெழுந்த
சித்தமொடுந்திருத்தில்லைத் திருமன்றுசென்றிறைஞ்ச
உய்த்தபெருங்காதலுணர் வொழியாதுவந்துதிப்ப. (உ0)

அன்றிரவுகண்டுயிலார் புலர்ந்ததற்பினங்கெய்த
ஒன்றியணைதருதன்மை யுறுகுலத்தோடிசைவில்லை
யென்றிதுவுமெம்பெருமா னேவலெனப்போக்கொழிவார்
நன்றினெழுங்காதன்மிக நாளைப்போவேனென்பார். (உக)

நாளைப்போவேனென்று நாள்கள்செலத்தரியாது
பூளைப்பூவாம்பிறவிப் பிணிப்பொழியப்போவாராய்ப்
பாளைப்பூங்கமுகுடுத்த பழம்பதியினின்றும்போய்
வாளைப்போத்தெழும்பழனஞ் சூழ்தில்லைமருங்கணைவார். (உஉ)

செல்கின்றபோழ்தந்தத் திருவெல்லைபணிந்தெழுந்து
பல்குஞ்செந்தீவளர்த்த பயில்வேள்வியெழும்புகையு
மல்குபெருங்கிடையோது மடங்களெருங்கினவுங்கண்
டல்குந்தங்குலநினைந்தே யஞ்சியணைந்திலர்நின்றார். (உ௩)

நின்றவரங்கெய்தரிய பெருமையினைநினைப்பார்முன்
சென்றிவையுங்கடந்தார்சூ ழெயிற்றிருவாயிலைப்புக்கார்
குன்றனையமாளிகைக டொறுங்குலவும்வேதிகைகள்
ஒன்றியமூவாயிரமங் குளவென்பாராகுதிகள். (உச)

இப்பரிசாயிருக்கவெனக் கெய்தலரிதென்றஞ்சி
அப்பதியின்மதிற்புறத்தி னாராதபெருங்காதல்
ஒப்பரிதாய்வளர்ந்தோங்க வுள்ளுருகிக்கைதொழுதே
செப்பரியதிருவெல்லை வலங்கொண்டுசெல்கின்றார். (உரு)

இவ்வண்ணமிரவுபகல் வலஞ்செய்தங்கெய்தரிய
அவ்வண்ணநினைந்தழிந்த வடித்தொண்டரயர்வெய்தி
மைவ்வண்ணத்திருமிடற்றார் மன்றினடங்கும்பிடுவ
தெவ்வண்ணமெனநினைந்தே யேசறவினொடுந்துயில்வார். (உசு)

இன்னறருமிழிபிறவி யிதுதடையென்றேதுயில்வார்
அன்னிலைமையம்பலத்து ளாடுவாரறிந்தருளி
மன்னுதிருத்தொண்டரவர் வருத்தமெலாந்தீர்ப்பதற்கு
முன்னணைந்துகனவின்கண் முறுவலொடுமருள்செய்வார். (உஎ)

இப்பிறவிபோய்நீங்க வெரியினிடைநீமூழ்கி
முப்புரிநூன்மார்பருடன் முன்னணைவாயெனமொழிந்த
அப்பரிசேதில்லைவா ழந்தணர்க்குமெரியமைக்க
மெய்ப்பொருளானாருளி யம்பலத்தேமேவினார். (உஅ)

தம்பெருமான்பணிகேட்ட தவமறையோரெல்லாரும்
அம்பலவர்திருவாயின் முன்பச்சமுடனீண்டி
யெம்பெருமானருள்செய்த பணிசெய்வோமென்றேத்தித்
தம்பரிவுபெருகவருந் திருத்தொண்டர்பாற்சார்ந்தார். (உகூ)

ஐயரேயம்பலவ ரருளாலிப்பொழுதணைந்தோம்
வெய்யவழலமைத்துமக்குத் தரவேண்டியெனவிளம்ப
நையுமனத்திருத்தொண்டர் நானுய்ந்தேனெனத்தொழுதார்
தெய்வமறைமுனிவர்களுந் தீயமைத்தபடிமொழிந்தார். (௩0)

மறையவர்கண்மொழிந்ததற்பின் றென்றிசையின்மதிற்புறத்துப்
பிறையுரிஞ்சுந்திருவாயின் முன்னாகப்பிஞ்ஞகர்த
நிறையருளான்மறையவர்க ணெருப்பமைத்தகுழியெய்தி
இறையவர்தாண்மனங்கொண்டே யெரிசூழவலங்கொண்டார். (௩க)

கைதொழுதுநடமாடுங் கழலுன்னியழல்புக்கார்
எய்தியவப்பொழுதின்க ணெரியின்கணிம்மாயப்
பொய்தகையுமுருவொழித்துப் புண்ணியமாமுனிவடிவாய்
மெய்திகழ்முந்நூல்விளங்க வேணிமுடிகொண்டெழுந்தார். (௩உ)

செந்தீமேலெழும்பொழுது செம்மலர்மேல்வந்தெழுந்த
அந்தணன்போற்றோன்றினா ரந்தரதுந்துபிநாதம்
வந்தெழுந்ததிருவிசும்பில் வானவர்கண்மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந்தாரத்தின் பனிமலர்மாரிகள்பொழிந்தார். (௩௩)

திருவுடையதில்லைவா ழந்தணர்கள்கைதொழுதார்
பரவரியதொண்டர்களும் பணிந்துமனங்களிபயின்றார்
அருமறைசூழ்திருமன்றி லாடுகின்றகழல்வணங்க
வருகின்றார்திருநாளைப் போவாராமறைமுனிவர். (௩௪)

தில்லைவாழந்தணரு முடன்செல்லச்சென்றெய்திக்
கொல்லைமான்மறிக்கரத்தார் கோபுரத்தைத்தொழுதிறைஞ்சி
ஒல்லைபோயுட்புக்கா ருலகுய்யநடமாடும்
எல்லையினைத்தலைப்பட்டார் யாவர்களுங்கண்டிலரால். (௩௫)

அந்தணர்களதிசயித்தா ரருமுனிவர்துதிசெய்தார்
வந்தணைந்ததிருத்தொண்டர் தம்மைவினைமாசறுத்துச்
சுந்தரத்தாமரைபுரையுந் துணையடிகடொழுதிருக்க
அந்தமிலாவானந்தப் பெருங்கூத்தரருள்புரிந்தார். (௩௬)

மாசுடம்புவிடத்தீயின் மஞ்சனஞ்செய்தருளியெழுந்
தாசின்மறைமுனியாகி யம்பலவர்தாளடைந்தார்
தேசுடையகழல்வாழ்த்தித் திருக்குறிப்புத்தொண்டர்வினைப்
பாசமறமுயன்றவர்செய் திருத்தொண்டின்பரிசுரைப்பாம். (௩௭)

ஆக-திருவிருத்தம்-௧0௬௨.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, கொள்ளிடநதியின் பக்கத்துள்ள மேற்கா நாட்டிலே, ஆதனூரிலே, புலையர் குலத்திலே, நந்தனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுடைய திருவடிகளையேயன்றி மற்றொன்றையும் மறந்தும் நினையாதவர். அவ்வூரிலே தமக்கு வெட்டிமைக்காக விடப்பட்டிருக்கின்ற மானியமாகிய நிலத்தின் விளைவினாலே சீவனஞ்செய்து கொண்டு, தாஞ்செய்யவேண்டும் தொழிலை நடத்துகின்றவர்; சிவாலயங்கடோறும், பேரிகை முதலாகிய ஒருமுகக்கருவிகளுக்கும் மத்தளமுதலாகிய இருமுகக்கருவிகளுக்கும் தோலும் வாரும், வீணைக்கும் யாழுக்கும் நரம்பும், அருச்சனைக்குக் கோரோசனையும் கொடுக்கின்றவர்; ஆலயங்களின் திருவாயிற்புறத்தில் நின்றுகொண்டு அன்பின்மேலீட்டினால் கூத்தாடிப் பாடுகின்றவர்.

அவர் ஒருநாள் திருப்புன்கூரிலே போய்ச் சுவாமிதரிசனம் பண்ணித் திருப்பணி செய்தற்கு விரும்பி, அங்கே சென்று திருக்கோயில் வாயிலிலே நின்றுகொண்டு, சுவாமியை நேரே தரிசித்துக் கும்பிடவேண்டும் என்று நினைத்தார். சுவாமி அவருடைய விருப்பத்தின்படியே தமக்கு முன்னிருக்கின்ற இடபதேவரை விலகும்படி செய்து, அவருக்குக்

காட்சிகொடுத்தருளினர். நந்தனர் அந்த ஸ்தலத்திலே ஒரு பள்ளத்தைக் கண்டு, பெரிய குளமாக வெட்டித் தம்முடைய ஊருக்குத் திரும்பினர்.

அவர் இப்படியே பலஸ்தலங்களுக்கும் போய் வணங்கித் திருப்பணி செய்து வந்தார். ஒருநாள், சிதம்பரஸ்தலத்திற்குப் போகவேண்டும் என்று ஆசைகொண்டு, அவ்வாசை மிகுதியினலே அன்றிரவு முழுதும் நித்திரைசெய்யாதவராகி, விடிந்தபின் "நான் சிதம்பரஸ்தலத்திற்குப் போனல் திருக்கோயிலினுள்ளே பிரவேசிக்கும் யோக்கியதை என் சாதிக்கு இல்லையே" என்று துக்கித்து, "இதுவும் சுவாமியினுடைய அருள்தான்" என்று சொல்லிப் போகாதொழிந்தார். பின்னும் ஆசை வளர்தலால் "நாளைக்குப் போவேன்" என்ருர். இப்படியே "நாளைக்குப் போவேன் நாளைக்குப் போவேன்" என்று அனேகநாட்கள் கழித்தார். அதனல் அவருக்குத் திருநாளைப்போவார் என்னும் பெயர் உண்டாயிற்று.

ஒருநாள் அவர் சிதம்பரதரிசனம் பண்ணவேண்டும் என்னும் ஆசை பிடித்துந்துதலால், தம்முடைய ஊரினின்றும் பிரஸ்தானமாகி, சிதம்பரத்தின் எல்லையை அடைந்தார். அத்திருப்பதியைச் சுற்றிய திருமதில்வாயிலிலே புகுந்து, அங்குள்ள பிராமணர்களுடைய வீடுகளிலே ஓமஞ் செய்யப்படுதலைக் கண்டு, உள்ளே போதற்கு அஞ்சி, அங்கே நமஸ்கரித்து அத்திருவெல்லையை வலஞ்செய்துகொண்டுபோவார். இப்படி இராப்பகல் வலஞ்செய்து, உள்ளே போகக்கூடாமையை நினைந்து வருந்துகின்ற திருநாளைப்போவார் "சபாநாயகரை எப்படித் தரிசிக்கலாம்? இந்த இழிந்த பிறப்பு இதற்குத் தடைசெய்கின்றதே" என்று துக்கத்தோடும் நித்திரை செய்தார். சபாநாதர் அவருடைய வருத்தத்தை நீக்கி அவருக்கு அருள்செய்யத் திருவுளங்கொண்டு, அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நீ இந்தப்பிறப்பு நீங்கும்படி நெருப்பிலே மூழ்கி எழுந்து, பிராம்மணர்களோடும் நம்முடைய சந்நிதானத்தில் வருவாய்" என்று அருளிச்செய்து, தில்லைவாழந்தணர்களுக்கும் சொப்பனத்திலே தோன்றி, அந்தத் திருநாளைப்போவார்பொருட்டு நெருப்பை வளர்க்கும்படி ஆஞ்ஞாபித்து, மறைந்தருளினர். தில்லைவாழந்தணர்கள் எல்லாரும் விழித்தெழுந்து, திருக்கோயில் வாயிலிலே வந்து கூடி, "சபாநாயகர் ஆஞ்ஞாபித்தபடி செய்வோம்" என்று சொல்லி, திருநாளைப்போவாரிடத்திலே சென்று, "ஐயரே, சபாநாயகருடைய ஆஞ்ஞையினலே இப்பொழுது உம்பொருட்டு நெருப்பு வளர்க்கும்படி வந்தோம்" என்ருர்கள். அதைக் கேட்ட திருநாளைப்போவார் "அடியேன் உய்ந்தேன்" என்று சொல்லி வணங்கினர். பிராமணர்கள் தென்மதிற்புறத்திலே கோபுரவாயிலுக்கு முன்னே ஒருகுழியிலே நெருப்பு வளர்த்து,

அதைத் திருநாளைப்போவாருக்குப் போய்த் தெரிவித்தார்கள். திருநாளைப்போவார் அந்நெருப்புக்குழியை அடைந்து, சபாநாயகருடைய திருவடிகளை மனசிலே தியானம்பண்ணி, அதனை வலஞ்செய்து கும்பிட்டுக் கொண்டு, அதனுள்ளே புகுந்தார். புகுந்த நாயனார் அந்தத் தேகத்தை ஒழித்து, புண்ணியமயமாகிய பிராமணமுனிவடிவங்கொண்டு உபவீதத்தோடும் சடைமுடியோடும் எழுந்தார். அது கண்டு தில்லைவாழந்தணர்களும் மற்றைச்சிவபத்தர்களும் அஞ்சலிசெய்து களிப்படைந்தார்கள். திருநாளைப்போவார், அவர்கள் உடன்செல்லச் சென்று, கோபுரத்தை அணுகி, அதனை நமஸ்கரித்து எழுந்து, உள்ளே போய்க் கனகசபையை அடைந்தார். பின் அவரை அங்கு நின்ற பிராமணர்முதலியோர் யாவரும் காணாமையால் ஆச்சரியங்கொண்டு ஸ்தோத்திரஞ் செய்தார்கள். சபாநாயகர் திருநாளைப்போவாருக்குத் தம்முடைய ஸ்ரீபாதங்களைக் கொடுத்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.

திருநாளைப்போவார்நாயனார்புராணம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணம்.

வேறு.

ஏயுமாறுபல் லுயிர்களுக்கெல்லையில் கருணைத்
தாயனுடனி யாயினதலைவரைத் தழுவப்
பாயுநான்மறை போற்றநின்றருந்தவம் புரியத்
தூயமாதவஞ் செய்ததுதொண்டைநன் னாடு. (க)

நன்மைநீடிய நடுநிலையொழுக்கத்து நயந்த
தன்மைமேவிய தலைமைசால்பெருங்குடி தழைப்ப
வன்மையோங்கெயில் வளம்பதியின்றது வரம்பின்
றொன்மைமேன்மையி னிகழ்பெருந்தொண்டைநன் னாடு. (உ)

நற்றிறம்புரி பழையனூர்ச்சிறுத்தொண்டர் நவைவந்
துற்றபோதுதம் முயிரையும்வணிகனுக் கொருகாற்
சொற்றமெய்ம்மையுந் தூக்கியச்சொல்லையே காக்கப்
பெற்றமேன்மையி னிகழ்ந்ததுபெருந்தொண்டை நாடு. (௩)

ஆணையாமென நீறுகண்டடிச்சேர னென்னுஞ்
சேணுலாவுசீர்ச் சேரனூர்திருமலை நாட்டு
வாணிலாவுபூண் வயவர்கண்மைத் துனக் கேண்மை
பேணநீடிய முறையதுபெருந்தொண்டை நாடு. (ச)

கறைவிளங்கிய கண்டர்பாற்காதல்செய் முறைமை
நிறைபுரிந்திட நேரிழையறம்புரிந் ததனாற்
பிறையுரிஞ்செயிற் பதிபயில்பெருந்தொண்டை நாடு
முறைமையாமென் வுலகினின்மிகுமொழி யுடைத்தால். (ரு)

தாவில்செம்மணி யருவியாறிழிவன சாரல்
பூவில்வண்டினம் புதுமறவருந்துவ புறவம்
வாவிநீள்கயல் வரம்பிறவுகைப்பன மருதம்
நீவிரித்திலம் பரத்தியருணக்குவ நெய்தல். (சு)

குறவர்பன்மணி யரித்திதைவிதைப்பன குறிஞ்சி
கறவையானிரை மானுடன்பயில்வன கானம்
பறவைதாமரை யிருந்திறவருந்துவ பழனஞ்
சுறவமுண்மருப் பணங்கயர்வனகழிச் சூழல். (எ)

கொண்டல்வானத்தின் மணிசொரிவனகுல வரைப்பாற்
றண்டுணர்க்கொன்றை பொன்சொரிவனதள வயற்பால்
வண்டலன்முத்தநீர் மண்டுகால்சொரிவள் வயற்பாற்
கண்டன்முன்றுறைக் கரிசொரிவனகலங் கடற்பால். (அ)

தேனிறைந்தசெந் தினையிடிதருமலைச் சீறூர்
பாணிறைந்தபுற் பதத்தனமுல்லைநீள் பாடி
தூநெலன்னநெய் கன்னலின்கனியதண் டுறையூர்
மீனிறைந்தபே ருணவின்வேலைவைப் பிடங்கள். (கூ)

குழல்செய்வண்டினங் குறிச்சியாழ்முரல்வன குறிஞ்சி
முழவுகார்கொள முல்லைகண்முகைப்பன முல்லை
மழலைமென்கிளி மருதமர்சேக்கைய மருத
நிழல்செய்கைதைசூழ் நெய்தலங்கழியன நெய்தல். (க0)

மல்குமப்பெரு நிலங்களில்வரைபுணர் குறிஞ்சி
யெல்லையெங்கணு மிறவுளரேனன்முன் விளைக்கும்
பல்பெரும்புனம் பயில்வனபடர்சிறைத் தோகை
சொல்லுமப்புனங் காப்பவுஞ்சுரிகுழற் றோகை. (கக)

அங்கண்வான்மிசை யரம்பையர்கருங்குழற் சுரும்பு
பொங்குபூண்முலைக் கொடிச்சியர்குழன்மூழ்கிப் போர்காச்
செங்கண்மால்விடை யார்திருக்காளத்தி யென்னு
மங்குல்சூழ்வரை நிலவியவாழ்வினுன் மல்கும். (கஉ)

பேறுவேறுசூ ழிமையவரரம்பையர் பிறந்து
மாறில்வேட்டு மாதருமாகவே வணங்கும்
ஆறுசூழ்சடை யண்ணலார்திருவிடைச் சுரமுங்
கூறுமேன்மையின் மிக்கதந்நாட்டுவண் குறிஞ்சி. (௧௩)

அம்பொன்வார்குழற் கொடிச்சியருடனர மகளிர்
வம்புலாமலர்ச் சுனைபடிந்தாடுநீள் வரைப்பின்
உம்பர்நாயகர் திருக்கழுக்குன்றமு முடைத்தால்
கொம்பர்வண்டுசூழ் குறிஞ்சிசெய்தவங்குறை யுளதோ. (௧௪)

கோலமுல்லையுங் குறிஞ்சியுமடுத்தசில் லிடங்க
ணீலவாட்படை நீலிகோட்டங்களு நிரந்து
காலவேனிலிற் கடும்பகற்பொழுதினைப் பற்றிப்
பாலையுஞ்சொல்ல லாவனவுளபரன் முரம்பு. (௧௫)

சொல்லுமெல்லையின் புறத்தன துணர்ச்சுரும் பலைக்கும்
பல்பெரும்புனற் கானியாறிடையிடை பரந்து
கொல்லைமெல்லிணர்க் குருந்தின்மேற்படர்ந்தபூம் பந்தர்
முல்லைமென்புதன் முயலுகைத்தடங்குநீண் முல்லை. (௧௬)

பிளவுகொண்டதண் மதிநுதற்பேதைய ரெயிற்றைக்
களவுகொண்டது தளவெனக்கள்வலர் தூற்றும்
அளவுகண்டவர் குழனிறங்கனியுமக் களவைத்
தளவுகண்டெதிர் சிரிப்பனதமக்குமுண் டென்று. (௧௭)

மங்கையர்க்குவாள் விழியிணைதோற்றமான் குலங்கள்
எங்குமற்றவ ரிடைக்கிடைமலர்க்கொடி யெங்கும்
அங்கண்முல்லையின் றெய்வமென்றருந்தமி ழுரைக்குஞ்
செங்கண்மாறெழுஞ் சிவன்மகிழ்திருமுல்லை வாயில். (௧௮)

நீறுசேர்திரு மேனியர்நிலாத்திகழ் முடிமேன்
மாறில்கங்கைதா னவர்க்குமஞ்சனந்தர வணைந்தே
யூறுநீர்தரு மொளிமலர்க்கலிகைமா நகரை
வேறுதன்பெரு வைப்பெனவிளங்குமா முல்லை. (௧௯)

வாசமென்மலர் மல்கியமுல்லைசூழ் மருதம்
வீசுதெண்டிரை நதிபலமிக்குயர்ந் தோடிப்
பாசடைத்தடந் தாமரைப்பழனங்கண் மருங்கும்
பூசல்வன்கரைக் குளங்களுமேரியும் புகுவ. (௨௦)

துங்கமாதவன் சுரபியின்றிருமுலை சொரிபால்
பொங்குதீர்த்தமாய் நந்திமால்வரைமிசைப் போந்தே
யங்கணித்திலஞ் சந்தனமகிலொடு மணிகள்
பங்கயத்தட நிரைப்பவந்திழிவது பாலி. (௨௧)

பிள்ளைதைவரப் பெருகுபால்சொரிமுலைத் தாய்போல்
மள்ளர்வேனிலின் மணற்றிடர்பிசைந்துகை வருட
வெள்ளநீரிரு மங்குகால்வழிமிதந் தேறிப்
பள்ளநீள்வயற் பருமடையுடைப்பது பாலி. (உஉ)

அனையவாகிய நதிபரந்தகன்பணை மருங்கிற்
கனைநெடும்புன னிறைந்துதிண்கரைப்பெருங் குளங்கள்
புனையிருங்கடி மதகுவாய்திறந்திடப் புறம்போய்
வினைஞரார்ப்பொலி யெடுப்பநீர்வழங்குவ வியன்கால். (உ௩)

மாறில்வண்பகட் டேர்பலநெருங்கிட வயல்கள்
சேறுசெய்பவர் செந்நெலின்வெண்முளை சிதறி
நாறுவார்ப்பவர் பறிப்பவர்நடுபவ ரான
வேறுபல்வினை யுடைப்பெருங்கம்பலை மிகுமால். (உ௪)

வரும்புனற்பெருங் கால்களைமறித்திட வாளை
பெருங்குலைப்பட விலங்குவபிறங்குநீர்ப் பழன
நெருங்குசேற்குல முயர்த்துவநீள்கரைப் படுத்துச்
சுருங்கைநீர்வழக் கறுப்பனபருவராற் றொகுதி. (உ௫)

தளைத்தடம்பணை யெழுந்தசெந்தாமரைத் தவிசின்
இளைத்தசூல்வளை கண்படுப்பனவிடை யெங்கும்
விளைத்தபாசொளி விளங்குநீள்விசும்பிடை யூர்கோள்
வளைத்தமாமதி போன்றுளமருதநீர் வைப்பு. (உ௬)

ஓங்குசெந்நெலின் புடையனவுயர்கழைக் கரும்பு
பூங்கரும்பயன் மிடைவனபூகமப் பூகப்
பாங்குநீள்குலைத் தெங்குபைங்கதலிவண் பலவு
தூங்குதீங்கனிச் சூதநீள்வேலிய சோலை. (உ௭)

நீடுதண்பணை யுடுத்தநீண்மருங்கின நெல்லின்
கூடுதுன்றிய விருக்கையவிருந்தெதிர் கொள்ளும்
பீடுதங்கிய பெருங்குடிமனையறம் பிறங்கு
மாடமோங்கிய மறுகனமல்லன்மூ தூர்கள். (உ௮)

தொல்லைநான்மறை முதற்பெருங்கலையொலி துவன்றி
இல்லறம்புரிந் தாகுதிவேள்வியி லெழுந்த
மல்குதண்புகை மழைதருமுகிற்குலம் பரப்புஞ்
செல்வமோங்கிய திருமறையவர்செழும் பதிகள். (உ௯)

தீதுநீங்கிடத் தீக்காலியாமவு ணற்கு
நாதர்தாமருள் புரிந்ததுநல்வினைப் பயன்செய்
மாதர்தோன்றிய மரபுடைமறையவர் வல்லம்
பூதிசாதனம் போற்றியபொற்பினால் விளங்கும். (௩௰)

அருவிதந்தசெம் மணிகளும்புறவிலாய் மலரும்
பருவியோடைக ணிறைந்திழிபாலியின் கரையின்
மருவுகங்கைவாழ் சடையவர்மகிழ்ந்தமாற் பேறும்
பொருவில்கோயிலுஞ் சூழ்ந்ததப்புறம்பணை மருதம். (௩௧)

விரும்புமேன்மையென் பகர்வதுவிரிதிரை நதிகள்
அருங்கரைப்பயில் சிவாலயமனேகமு மணைந்து
பருங்கையானையை யுரித்தவரிருந்தவப் பாசூர்
மருங்குசூழ்தவம் புரிந்ததன்றேமற்ற மருதம். (௩௨)

பூமரும்புனல் வயற்களம்பரடிய பொருநர்
தாமருங்கிளை யுடன்றடமென்மலர் மிலைந்து
மாமருங்குதண் ணீழலின்மருதயாழ் முரலுங்
காமர்தண்பணைப் புறத்ததுகருங்கழி நெய்தல். (௩௩)

தூயவெண்டுறைப் பரதவர்தொடுப்பன வலைகள்
சேயநீள்விழிப் பரத்தியர்தொடுப்பன செருந்தி
யாயபேரளத் தளவர்களளப்பன வுப்பு
சாயன்மென்னடை யளத்தியரளப்பன தரளம். (௩௪)

கொடுவினைத்தொழி லுளையர்கள்கொடுப்பன கொழுமீன்
படுமணற்கரை நுளைச்சியர்கொடுப்பன பவளந்
தொடுகடற்சங்கு துறையவர்குளிப்பன வவர்தம்
வடுவகிர்க்கண்மங் கையர்குளிப்பன மணற்கேணி. (௩௫)

சுழிப்புனற்கட லோதமுன்சூழ்ந்துகொண் டணிய
வழிக்கரைப்பொதிப் பொன்னவிழ்ப்பனமலர்ப் புன்னை
விழிக்குநெய்தலின் விரைமலர்க்கட்சுரும் புண்ணக்
கழிக்கரைப்பொதி சோறவிழ்ப்பனமடற் கைதை. (௩௬)

காயல்வண்கரைப் புரைநெறியடைப்பன கனிமுட்
சேயதண்ணறுஞ் செழுமுகைசெறியுமுண் டகங்கள்
ஆயநுண்மணல் வெண்மையமறைப்பன வன்னந்
தாயமுன்றுறைச் சூழல்சூழ்ஞாழலின் றாது. (௩௭)

வாம்பெருந்திரை வளாகமுன்குடிபயில் வரைப்பிற்
றும்பரப்பிய கயல்களின்விழிக்கய றவிரக்
காம்பினேர்வருந் தோளியர்கழிக்கயல் விலைசெய்
தேம்பொதிந்தசின் மழலைமென்மொழியசெவ் வழியாழ். (௩௮)

மருட்கொடுந்தொழில் மன்னவனிறக்கிய வரியை
நெருக்கிமுன்றிரு வொற்றியூர்நீங்கலென் றெழுதும்
ஒருத்தர்தம்பெருங் கோயிலினொருபுறஞ் சூழ்ந்த
திருப்பரப்பையு முடையதத்திரைக்கடல் வைப்பு. (௩௯)

மெய்தரும்புகழ்த் திருமயிலாபுரி விரைசூழ்
மொய்தயங்குதண் பொழிற்றிருவான்மியூர் முதலாப்
பைதரும்பணி யணிந்தவர்பதியெனைப் பலவா
னெய்தலெய்தமுன் செய்தவங்கிறைதவஞ் சிறிதோ. (சா0)

கோடுகொண்டெழுங் திரைக்கடற்பவளமென் கொழுந்து
மாடுமொய்வரைச் சந்தனச்சினைமிசை வளரு
நீடுநெய்தலுங் குறிஞ்சியும்புணர்நிலம் பலவால்
ஆடுநீள்கொடி மாடமாமல்லையே யனைய. (சாக)

மலைவிழிப்பன வெனவயற்சேல்வரைப் பாறைத்
தலையுகைப்பவுந் தளைச்செறுவிடைநெடுங் கருமான்
கலைகுதிப்பன கரும்பகட்டேர்நிகர்ப் பவுமாய்
அலைபுனற்பணை குறிஞ்சியோடணைவன வனேகம். (சாஉ)

புணர்ந்தவானிரைப் புறவிடைக்குறுமுயல் பொருப்பின்
அணைந்தவான்மதி முயலினையினமென வணைந்து
மணங்கொள்கொல்லையில் வரகுபோர்மஞ்சென வரைக்கார்
இணைந்துமுல்லையுங் குறிஞ்சியுங்கலப்பன வெங்கும். (சாங)

கவருமீன்குவை கழியவர்கானவர்க் களித்துச்
சிவலுஞ்சேவலு மாறியுஞ்சிறுகழிச் சியர்கள்
அவரையேனலுக் கெயிற்றியர்பவளமுத் தளந்தும்
உவரிநெய்தலுங் கானமுங்கலந்துள வொழுக்கம். (சாச)

அயலறும்புற வினிலிடைச்சியரணி நடையும்
வியனெடும்பணை யுழத்தியர்சாயலும் விரும்பி
இயலுமன்னமுந் தோகையுமெதிரெதிர் பயில
வயலுமுல்லையு மியைவனபலவுள மருங்கு. (சாரு)

மீளுமோதமங் கொழித்தவெண்டரளமுங் கமுகின்
பாளையுக்கவும் விரவலிற்பரத்தியர் பணைமென்
றோளுழத்தியர் மகளிர்மாறுடிமுன் றெருக்கு
நீளுநெய்தலு மருதமுங்கலந்துள நிலங்கள். (சாசு)

ஆயநானிலத் தமைதியிற்றத்தமக் கடுத்த
மேயசெய்தொழில் வேறுபல்குலங்களின் விளங்கித்
தீயவென்பன கனவிலுநினைவிலாச் சிந்தைத்
தூயமாந்தர்வாழ் தொண்டைநாட்டியல்புசொல் வரைத்தோ. (சா எ)

இவ்வளந்தரு பெருந்திருநாட்டிடை யென்று
மெய்வ்வளந்தரு சிறப்பினுலகெலாம் வியப்ப
எவ்வுகங்களு முள்ளதென்றியாவரு மேத்துங்
கைவ்விளங்கிய நிலையதுகாஞ்சிமா நகரம். (சாஅ)

ஆனதொன்னக ரம்பிகைதம்பெரு மானை
மானவர்ச்சனை யாலொருகாலத்து வழிபட்
டேனமில்லற மனேகமுமுலகுய்ய வைத்த
மேன்மைபூண்டவப் பெருமையையறிந்தவா விளம்பில். (சகூ)

வெள்ளிமால்வரைக் கைலையில்வீற்றிருந் தருளித்
துள்ளுவார்புனல் வேணியாரருள்செயத் தொழுது
தெள்ளுவாய்மையி னாகமத்திறனெலாந் தெரிய
உள்ளவாறுகேட் டருளினாளுலகையா ளுடையாள். (ரு0)

எண்ணிலாகம மியம்பியவிறைவர்தாம் விரும்பும்
உண்மையாவது பூசனையெனவுரைத தருள
அண்ணலார்தமை யர்ச்சனைபுரியவர் தரித்தாள்
பெண்ணினல்லவ ளாயினபெருந்தவக் கொழுந்து. (ருக)

வேறு.

நங்கைபுண்ணிறை காதலைநோக்கி நாயகன்றிரு வுள்ளத்துமகிழ்ந்தே, அங்கணெய்திய முறுவலுந்தோன்ற வடுத்ததென்கொனின் பாலென்றுவினவ, இங்குநாதநீ மொழிந்தவாகமத்தி னியல்பினுலுனை யர்ச்சனைபுரியப், பொங்குகின்றதென் னுசையென்றிறைஞ்சிப் போகமார்த்தபூண்முலையினுள்போற்ற. (ருஉ)

தேவதேவனு மதுதிருவுள்ளஞ் செய்துதென்றிசை மிக்கசெய்தவத்தால், யாவருந்தனை யடைவதுமண்மே லென்றுமுள்ளது காஞ்சிமற்றதனுண், மாவமர்ந்தநம் மிருக்கையிலணைந்து மன்னுபூசனை மகிழ்ந்துசெய்வாயென், றேவவெம்பெரு மாட்டியும்பிரியா விசைவுகொண்டெழுந் தருளுதற்கிசைந்தாள். (ருங)

ஏதமில்பல யோனியெண்பத்து நான்குநூறுயிர மதில்வைத்த, பேதமும்புரந் தருளுமக்கருணைப் பிரான்மொழிந்தவா கமவழிபேணிப், போதுநீர்மையிற் றொழுதனள்போதப் பொருப்பில்வேந்தனும் விருப்பில்வந்தெய்தி, மாதவம்புரிந் தருளுதற்கமைந்த வளத்தொடும்பரி சனங்களைவிடுத்தான். (ருச)

துன்னுபல்லுயிர் வானவர்முதலாச் சூழ்ந்துடன்செலக் காஞ்சியிலணையத், தன்னைநேர்வரும் பதுமமாநாகந் தம்பிராட்டிதா டலைமிசைவைத்தே, அன்னையாயுல கனைத்தையுமீன்ற யடியனேனுறை பிலமதனிடையே, மன்னுகோயில்கொண் டருளுவாயென்ன மலைமடந்தைமற் றதற்கருள்புரிந்து. (ருரு)

அங்குமண்ணுல கத்துயிர்தழைப்ப வளவிலின்பத்தி னருட்கருவிருத்தித், திங்கடங்கிய புரிசடையார்க்குத் திருந்துபூசனை விரும்பினள்

செய்ய, எங்குநாடவுந் திருவிளையாட்டா லேகமாமுத லெதிர்படாதொ
ழியப், பொங்குமாதவஞ் செய்துகாண்பதற் கேபுரிவுசெய்தனள் பொன்
மலைவல்லி. (௫௬)

நெஞ்சமீசனைக் காண்பதேவிரும்பி நிரந்தரந்திரு வாக்கினினிகழ்வ
தஞ்செழுத்துமே யாகவாளுடைய வம்மைசெம்மலர்க் கைகுவித்தருளித்,
தஞ்சமாகிய வருந்தவம்புரியத் தரிப்பரேயவடனிப் பெருங்கணவர்
வஞ்சநீக்கிய மாவின்மூலத்தில் வந்துதோன்றினார் மலைமகள்காண.(௫௭)

கண்டபோதிலப் பெருந்தவப்பயனுங் கம்பமேவிய தம்பெருமானை,
வண்டுலாங்குழற் கற்றைமுன்றாழ வணங்கிவந்தெழு மாசைமுன்பொங்
கக், கொண்டகாதலின் விருப்பளவின்றிக் குறித்தபூசனை சொள்கைமே
ற்கொண்டு, தொண்டையங்கனி வாயுமைநங்கை தூயவர்ச்சனை தொடங்
குதல்புரிவாள். (௫௮)

உம்பர்நாயகர் பூசனைக்கவர்தா முரைத்தவாகமத் துண்மையேதலை
நின்,றெம்பிராட்டியர்ச்சனைபுரிவதனுக் கியல்பில்வாழ்திருச்சேடியரான,
கொம்பனார்கள்பூம் பிடகைகொண்டணையக் குலவுமென்றளி ரடியிணை
யொதுங்கி, யம்பிகாவன மாந்திருவனத்தி லானதூநறும் பூமலர்கொய்
தாள். (௫௯)

கொய்துபன்மலர் கம்பைமாநதியிற் குலவுமஞ்சன நிலவுமெய்ப்பூ
ச்சு, நெய்தருங்கொழுந் தூபதீபங்க ணிறைந்தசிந்தையி னீடியவன்பின்,
மெய்தரும்படி வேண்டினவெல்லாம் வேண்டுபோதினி லுதவமெய்ப்பூ
சை, யெய்தவாகம விதியெலாஞ்செய்தா ளுயிர்கள்யாவையு மீன்றவெம்
பிராட்டி. (௬0)

கரந்தருபய னிதுவெனவுணர்ந்து கம்பமேவிய வும்பர்நாயகர்பா
னிரந்தகாதல்செ யுள்ளத்தளாகி நீடுநன்மைக ளியாவையும்பெருக
வரந்தரும்பொரு ளாமலைவல்லி மாறிலாவகை மலர்ந்தபேரன்பாற்
சிரம்பணிந்தெழு பூசைநாடோறுந் திருவுள்ங்கொளப் பெருகியதன்றே.()

நாதரும்பெரு விருப்பொடுநயந்து நங்கையர்ச்சனைசெய்யு மப்பொ
ழுதிற், காதன்மிக்கவோர் திருவிளையாட்டிற் கனங்குழைக்கருள் புரிந்தி
டவேண்டி, யோகமார்கட லேழுமொன்றாகி யோங்கிவானமு முட்பட
ப்பரந்து, மீதுசெல்வது போல்வரக்கம்பை வெள்ளமாந்திரு வுள்ளமுஞ்
செய்தார். (௬௨)

அண்ணலாரருள் வெள்ளத்தைநோக்கி யங்கயற்கண்ணி தம்பெரு
மான்மேல், விண்ணெலாங்கொள வரும்பெருவெள்ள மீதுவந்துறு மெ
னவெருக்கொண்டே, யுண்ணிலாவிய பதைப்புறுகாத லுடன்றிருக்கை
யாற் றடுக்கநில்லாமை, தண்ணிலாமலர் வேணியினாரைத் தழுவிக்கொண்
டன டன்னையேயொப்பாள். (௬௩)

மலைக்குலக்கொடி பரிவுறுபயத்தான் மாவின்மேவிய தேவர்நாயக ரை, முலைக்குவட்டொடு வளைக்கையானெருக்கி முறுகுகாதலா லிறுகிட் த்தழுவச், சிலைத்தனித்திரு நுதறிருமுலைக்குஞ் செந்தளிர்க்கரங் களுக்கு மெத்தெனவே, கொலைக்களிற்றுரி புனைந்ததம்மேனி குழைந்துகாட்டினார் விழைந்தகொள்கையினர். (சுச)

கம்பர்காதலி தழுவமெய்குழையக் கண்டுசிறப்பவுஞ் சரிப்பவுமான உம்பரேமுதல் யோனிகளெல்லா முயிரும்பாக்கையு முருகியொன்றாகி யெம்பிராட்டிக்கு மெல்லியராகு ரென்றுமேகம்ப ரென்றெடுத்தேத்த வம்புலாமலர் நிறையவிண்பொழியக் கம்பையாறுமுன் வணங்கியதன்றே.

பூதியாகிய புனிதநீராடிப் பொங்குகங்கைதோய் முடிச்சடைபுனை ந்து, காதில்வெண்குழை கண்டிகைதாழக் கலந்தயோகத்தின் மருவியக ருத்தால், ஆதிதேவனா ராயுமாதவஞ்செ யவ்வரங்கொலோ வகிலமீன்ற ளித்த, மாதுமெய்ப்பயன் கொடுப்பவேகொண்டு வளைத்தழும்புடன் முலைச்சுவடணிந்தார். (சுரு)

கோதிலாவமு தனையவண்முலைக்குக் குழைந்ததம்மண வாளநற்கோல மாதுவாழவே காட்டிமுனின்று வரங்கள்வேண்டுவ கொள்கவென்றருள வேதகாரண ராயவேகம்பர் விரைமலர்ச்செய்ய தாமரைக்கழற்கீழ் ஏதநீங்கிய பூசனைமுடிந்த தின்மைதானறி விப்பதற்கிறைஞ்சி. (சுஎ)

அண்டர்நாயக ரெதிர்நின்றுகூறு மளவினலஞ்சி யஞ்சலிகூப்பிக், கொண்டவிற்றையென் பூசனையின்னுங் குறைநிரம்பிடக் கொள்கவென் றருள, வண்டுவார்குழன் மலைமகள்கமல வதனநோக்கிய மலர்க்கணெற் றியின்மேன், முண்டநீற்றார்நின் பூசனையென்று முடிவதில்லைநம் பாலெனமொழிய. (சுஅ)

மாறிலாதவிப் பூசனையென்று மன்னவெம்பிரான் மகிழ்ந்துகொண் டருளி, யீறிலாதவிப் பதியினுளெல்லா வறமும்யான்செய வருள்செய வேண்டும், வேறுசெய்வினை திருவடிப்பிழைத்த லொழியவிங்குளார் வேண்டினசெயினும், பேறுமாதவப் பயன்கொடுத்தருளப் பெறவும்வே ண்டுமென் றனள்பிறப்பொழிப்பாள். (சுகூ)

விடையின்மேலவர் மலைமகள்வேண்ட விரும்புபூசனை மேவிவீற்றி ருந்தே, யிடையறுவற மாக்கும்வித்தாக விகபரத்திரு நாழிநெல்லளித் துக், கடையராகியு முயர்ந்தவராயுங் காஞ்சிவாழ்பவர் தாஞ்செய்தீவினை யுந், தடைபடாதுமெய் நெறியடைவதற்காந் தவங்களாகவு முவந்தருள் செய்தார். (எ0)

எண்ணரும்பெரு வரங்கண்முன்பெற்றங் கெம்பிராட்டிதம் பிரான் மகிழ்ந்தருள,மண்ணின்மேல்வழி பாடுசெய்தருளி மனையறம்பெருக் குங்

கருணையினு, னண்ணுமன்னுயிர் யாவையும்பல்க நாடுகாதலி னீடியவர்ழ்க்கைப், புண்ணியத்திருக் காமக்கோட்டத்துப் பொலியமுப்பதோ டிரண்டறம்புரக்கும். (எக)

அலகினீடவத் தறப்பெருஞ்செல்வி யண்டமாந்திரு மனைக்கிடுந்தீப, முலகில்வத்துறு பயனறிவிக்க வோங்குநாண்மலர் மூன்றுடனென்று, நிலவவாண்டினுக் கொருமுறைசெய்யு நீடுதொன்மையா னிறைந்தபேருலக, மலர்பெருந்திருக் காமக்கோட்டத்து வைத்தநல்லற மன்னவேமன்னும். (எ௨)

திங்குதீர்க்குநற் றீர்த்தங்கள்போற்றுஞ் சிறப்பினுற்றிருக் காமக்கோட்டத்தின், பாங்கின்மூன்றுல கத்தினுள்ளோரும் பரவுதீர்த்தமாம் பைம்புனற்கேணி, வாங்குதெண்டிரை வேலைமேகலைசூழ் வையகந்தனக் கெய்தியபடியா, யோங்குதன்வடி வாய்நிறைந்தென்று முள்ளதொன்றுலகாணியென்றுளதால். (எ௩)

அந்தமின்றிநல் லறம்புரிந்தளிக்கு மம்மைதன்றிருக் காமக்கோட்டத்தில், வந்துசந்திர சூரியர்மீது வழிக்கொளாததன் மருங்குபோதலினுற், சந்தமாதிர மயங்கியெம்மருங்குஞ் சாயைமாறிய தன்றிசைமயக்கம், இந்தமாநிலத் தவரெலாங்காண வென்றுமுள்ள்தொன் றின்றுமங்குளதால்.

கன்னிநன்னெடுங் காப்புடைவரைப்பிற் காஞ்சியாந்திரு நதிக்கரைமருங்கு, சென்னியிற்பிறை யணிந்தவர்விரும்பு திருப்பெரும்பெய ரிருக்கையிற்றிசழ்ந்து, மன்னுவெங்கதிர் மீதெழும்போது மறித்துமேற்கடற் றலைவிழும்போதுந், தன்னிழற்பிரி யாதவண்காஞ்சித் தானமேவிய மேன்மையுமுடைத்தால். (எரு)

மறைகளாற்றுதித் தருந்தவம்புரிந்து மாறிலாநிய மந்தலைநின்று
முறைமையால்வரும் பூசனைசெய்ய முனிவர்வானவர் முதலுயிரெல்லா
நிறையுமன்பினு லர்ச்சனைசெய்ய நீடுகாமங்க ளவரவர்க்கருளி
யிறைவர்தாமகிழ்ந் தருளியபதிக ளெண்ணிறந்தவத் திருநகரெல்லை.(எசு)

மன்னுகின்றவத் திருநகர்வரைப்பின் மண்ணின்மிக்கதோர் நன்மையினுலே, துன்னும்யானையைத் தூற்றில்வாழ்முயன்முன் றுரக்கவெய்திய தொலைவிலூக்கத்தாற்,றன்னிலத்துநின் றகற்றுதல்செய்யுந் தானமன்றியுந் தனுவெழுந்தரணி, யெந்நிலத்தினுங் காண்பருமிறவாத் தானமென்றிவை யியல்பினிலுடைத்தால். (எஎ)

ஈண்டுதீவினை யாவையுநீக்கி யின்பமேதரும் புண்ணியதீர்த்தம்
வேண்டினுர்தமக் கிட்டசித்தியதாய் விளங்குதீர்த்தநன் மங்கலதீர்த்த
நீண்டகாப்புடைத் தீர்த்தமூன்றுலகி னிகழ்ந்தசாருவ தீர்த்தமுமுதலா
ஆண்டுநீடிய தீர்த்தமெண்ணிலவு மமரநாட்டவ ராடுதலொழியார்.(எஅ)

தாளதொன்றினின் மூன்றுபூமலருந் தமனியச்செழுந் தாமரைத்தடமு
நீளவார்புனல் குடதிசையோடி நீர்கரக்குமா நதியுடனீடு
நாள்லர்ந்தசெங் குவளைபைங்கமல நன்பகற்றரு பாடலமன்றி
காளமேகமொப் பாளுறைவரைப்பிற் கண்படாதகா யாப்புளியுளதால்.()

சாயைமுன்பிணிக் குங்கிணறென்று தஞ்சமுண்ணினஞ் சாந்தட மொன்று, மாயையின்றிவங் துள்ளடைந்தார்கள் வானரத்துரு வாம்பில மொன்று,மேயவவ்வுரு நீங்கிடக்குளிக்கும் விளங்குபொய்கையு மொன் றுவிண்ணவரோ, டாயவின்பமுய்க் கும்பிலமொன்றே டனையவாகிய வதிசயம்பலவால். (௮0)

அஞ்சுவன்கரத் தாறிழிமதத்தோ ரானைநிற்கவு மசைவிருட்டிரியு
மஞ்சுநீள்வது போலுமாமேனி மலர்ப்பதங்களில் வண்சிலம்பொலிப்ப
நஞ்சுபில்கெயிற் றரவவெற்றரையி னுமமூன்றிலைப் படையுடைப்பிள்ளை
யெஞ்சலின்றிமுன் றிரியவுங்குன்றமெறிந்தவேலவன் காக்கவுமிசையும்.

சத்திதற்பர சித்தயோகிகளுஞ் சாதகத்தனித் தலைவருமுதலா, நித் தமெய்திய வாயுண்மெய்த்தவர்க ணீடிவாழ்திருப் பாடியுமனேகஞ், சித்த ர்விஞ்சைய ரியக்கர்கந்தருவர் திகழ்ந்துமன்னுவார் செண்டுகையேந்தி, வித்தகக்கரிமேற்கொளுங்காரி மேவுசெண்டணை வெளியுமொன்றுளதால்.

வந்தடைந்தவர் தம்முருமாய மற்றுளாரைத்தாங் காண்பிடமுளது, சிந்தையோகத்து முனிவர்யோகினிகள் சேரும்யோகபீ டமுமுளதென் றும்,அந்தமில்லறம் புரப்பவள்கோயி லானபோகபீ டமுமுளதாகும்,எந் தையார்மகிழ் காஞ்சிநீடெல்லை யெல்லையில்லன வுள்ளவாரறிவார். (௮௩)

தூண்டுசோதியொள் ளெழுந்திருடிரக்குஞ் சுரர்கள்வந்துசூ ழுருத் திரசோலை, வேண்டினார்கடம் பிறப்பினையொழிக்கு மெய்நெறிக்கணின் றார்சடாம்விரும்பித், தீண்டில்யாவையுஞ் செம்பொனாக்குவதோர் சிலையு முண்டுரை செய்வதற்கரிதால், ஆண்டநாயகி சமயங்களாறு மகிலயோ னியு மளிக்குமந்நகரம். (௮௪)

என்றுமுள்ளவிந் நகர்சலியுகத்தி லிலங்குவேற்கரி காற்பெருவளத் தோன், வன்றிறற்புலி யிமயமால்வரைமேல் வைக்கவேகுவோன் றனக்கி தன்வளமை, சென்றுவேடன்முன் கண்டுரைசெய்யத் திருந்துகாதநான் குட்படவகுத்துக்,குன்றுபோலுமா மதில்புடைபோக்கிக் குடியிருத்தின கொள்கையின்விளங்கும். (௮௫)

வேறு.

தண்காஞ்சிமென்சினைப்பூங் கொம்பராடல் சார்ந்தசையவ்வதன்மருங் கு சுரும்புதாழ்ந்து, பண்காஞ்சியிசைபாடும் பழனவேலிப் பணைமருதம் புடையுடைத்தாய்ப் பாரினீடு, திண்காஞ்சிநகர்நொச்சி யிஞ்சிசூழ்ந்த செ

ழூங்கிடங்குதிருமறைக ளொலிக்குந்தெய்வ, வண்காஞ்சி யல்குன்மலை வல்லிகாக்க வளர்கருணைக்கடலுலகஞ் சூழ்ந்தான்மானும். (அசு)

கொந்தலர்பூங் குழலிமயக் கொம்புகம்பர் கொள்ளும்பூசனைகுறித்த தானங்காக்க, மந்திரமாமதிலகழி யவர்தாந்தந்த வாய்மையாகமவிதியின் வகுப்புப்போலு, மந்தமில்சீர்க்காஞ்சியைவந் தடைந்தார்க்கன்றி யடைக ளங்கமறுப்பரிதென் றறிந்துசூழ, வந்தணைந்துதன்கறுப்பு முவர்ப்புநீக்கு மாகடலும்போலுமலர்க் கிடங்குமாதோ. (அஎ)

ஆங்குவளரெயிலினுடன் விளங்கும்வாயி லப்பதியில்வாழ்பெரியோ ருள்ளம்போல, வோங்குநிலைத்தன்மையவா யகிலமுய்ய வுமைபாகரருள்செய்த வொழுக்கமல்லாற், றீங்குநெறியடையாத தடையுமாகிச் செந்நெறிக்கணிகழ்வாய்மை திருந்துமார்க்கந், தாங்குலவநிலவிவள ரொளியாலென்றுந் தடநெடுவாளளப்பனவாந் தகையவாகும். (அஅ)

மாறுபெறலருங்கனக மாடநீடு மணிமறுகுநெடுந்தெருவும் வளத்தில்வந்த, வாறுபயிலாவணவீ திகளும்மற்று மமைந்தநகரணிவளாக ணடுவுபோக்கிக், கூறுபடுநவகண்ட மன்றிமல்கக் கொண்டவனேகங்கண்ட மாகியன்ன, வேறொருமண்ணுலகுதனி லுளதாலென்ன விளங்கியுமாலோகநிலை மேவிற்றன்றே. (அகூ)

பாகமருங்கிருபுடையு முயர்ந்துநீண்ட படரொளிமாளிகைநிரைகள் பயின்மென்கூந்தற், றேமைகையர்தங்குழாமலையத் தூக்குமுத்தின் சுடர்க்கோவைக்குளிர்நீர்மை துதைந்தவீதி, மாகமிடையொளிதழைப்ப மன்னிநீடு மருங்குதாரகையலைய வரம்பில்வண்ண, மேகமிடைகிழித்தொழுகுந் தெய்வக்கங்கை மேனதிகள்பலமண்மேல் விளங்கியொக்கும். (கூ0)

கிளரொளிச்செங்கனகமயந் தானாய்மாடு கீழ்நிலையோர்நீலச்சோ பானம்பூணக், கொளவமைத்துமீதொருபாற் ‡ கன்னசாலை குலவயிரத்தாலமைத்த கொள்கையாலே, யளவில்சுடர்ப்பிழம்பானார் தம்மைத்தேடி யகழ்ந்தேனமானானு மன்னமாகி, வளர்விசும்பிலெழுந்தானும் போலநீடு மாளிகைகளுளமற்ற மறுகுதோறும். (கூக)

மின்பொலிபன்மணிமிடைந்த தவளமாட மிசைப்பயில்சந்திரகாந்தம் விசும்பின்மீது,பொன்புனையுஞ்செக்கர்நிறப் பொழுதுதோன்றும் புனிற்றுமதிகண்டுருகிப் பொழிந்தநீரால், வன்புலியினுரியாடைத் திருவேகம்பர் வளர்சடையுமிளம்பிறையுங் கண்டுரும்பிட், டன்புருகிமெய்ப்பொழியக் கண்ணீர்வாரு மடியவருமனையவுள வலகிலாத. (கூஉ)

முகிலுரிஞ்சுங்கொடிதொடுத்த முடியவாகு முழுப்பளிங்கின்மாளிகைகண் முற்றுஞ்சுற்று, நிகரில்சராசரங்களெல்லா நிழலினாலே நிறைத

‡ கன்னசாலை - சாளரவாயில்.

ஞ் னிறைதவஞ்செ யிமயப்பாவை, நகிலுழுதசுவடும்வளைத் தழும்பும் ண்ட நாயகனார்நான்முகற்குப் படைக்கலகும்,அகிலயோனிகளெல்லா மைத்துவைத்த வரும்பெரும்பண்டாரநிலை யனையவாகும். (கூ௩)

பொற்களபமாளிகைமேன் முன்றினின்று பூங்கழங்குமணிப்பந்தும் போற்றியாடும், விற்புருவக்கொடிமடவார் கலன்கள்சிந்தி விழுவனவுங் கெழுவுதுணை மேவுமாதர், அற்புமுதிர்கலவியினிற் பரிந்துசிந்து மணிம ணிச்சேடியர்தொகுக்கு மவையுமாகி, நற்கனகமழையன்றிக் காஞ்சியெ ல்லை நவமணிமாரியும்பொழியு நாளுநாளும். (கூ௪)

பூமகளுக்குறையுளெனுந் தகையவான பொன்மாடத்தரமியங்கள் பொலியநின்று, மாமகரக்குழைமகளிர் மைந்தரங்கண் வந்தேறுமுன்னறு ர் வண்டலாடத், தூமணிப்பொன்புனைநாளத் துருத்திவீசுஞ் சுடர்விடு செங்குங்குமநீர்த் துவலைதோய்ந்த, காமர்மணிநாசிகையின் மருங்குதங் தங் கருமுகில்கள்செம்முகில்க ளாகிக்காட்டும். (கூ௫)

இமமலியவெடுத்தநெடு வரைகள்போல விலங்குசுதைத்தவளமா ளிகைநீள்கோட்டுச், சிமையடையுஞ்சோபான நிறையும்விண்ணுந் தெரி வரியதூய்மையினு லவற்றுட்சேர்ந்து, தமர்களுடனிழிந்தேறு மைந்தர் மாதர் தங்களையும்விசும்பிடைநின் றிழியாநிற்கும், அமரரையுமரமகளிர் நமையும்வெவ்வே றறிவரிதாந்தகைமையன வனேகமங்கண். (கூ௬)

அரவநெடுந்தேர்வீதி யருகுமாடத் தனிமணிக்கோபுரத்தயலே விய ல்வாய்நீண்ட, விரவுமரகதச்சோதி வேதித்திண்ணை விளிம்பினொளிதுளு ம்புமுறை படிமீதேறுங், குரவலருங்குழன்மடவா ரடியினூட்டுங் குழம் படுத்தசெம்பஞ்சின் சுவட்டுக்கோலம், பரவைநெடுந்தரங்கமிசை விளங் த்தோன்றும் பவளநறுந்தளிரனைய பலவும்பாங்கர். (கூ௭)

வெம்புசினக்களிற்றதிர்ப்பு மாவினார்ப்பும் வியனெடுந்தேர்க்காலிசை ப்பும் விழவறாத, அம்பொன்மணிவீதிகளி லரங்கிலாடு மரிவையர்நூபுர வொலியோ டமையுமிம்பர், உம்பரினிந்திரன்களிற்றின் முழக்குந்தெய்வ புரிரவிமாக்கலிப்பு மயனூர்தித்தேர், பம்பிசையும்விமானத்தி லாடுந்தெ வப் பாவையர்நூபுரவரவத் துடனேபல்கும். (கூ௮)

அருமறையந்தணர்மன்னு மிருக்கையான வாகுதியின்புகைபடுத்த வம்பொன்மாடப், பெருமறுகுதொறும்வேள்விச் சாலையெங்கும் பெறும விர்ப்பாகங்கொடுக்கும் பெற்றிமேலோர், வருமுறைமை யழைத்துவிடு ந்திரமெம் மருங்கும்வானவர்நாயகர்திருவே கம்பர்முன்றிற், றிருமலி பொற்கோபுரத்து நெருங்குமெல்லாத் தேவரையுமணித்தாகக் கொண்டு செல்லும். (கூகூ)

அரசர்குலப்பெருந்தெருவுந் தெற்றிமுற்றத் தாயுதங்கள்பயிலும் விய லிடமுமங்கண், புரசைமதக்கரிகளொடு புரவியேறும் பொற்புடைய

வீதிகளும் பொலியவெங்கும்,விரைசெய்நறுந்தொடையலங்கற் குமரர்செய்யும் வியப்புறுசெய்தொழில்கண்டு விஞ்சைவிண்ணோர், நிரைசெறியும் விமானவூர் திகளின்மேலு நிலமிசையும் பலமுறையு நிரந்துநீங்கார். (க00)

வெயிலுமிழும்பன்மணிப்பூண் வணிகமாக்கள் விரவுநிதிவளம்பெருக்கும் வெறுக்கைமிக்க,வயினிலவுமணிக்கடைமா நகர்களெல்லாம் வனப்புடையபொருட்குலங்கண் மலிதலாலே,கயிலைமலையார்கச்சி யாலயங்கள் கம்பமுமேவியதன்மை கண்டுபோற்றப்,பயிலுமுருப்பலகொண்டு நிதிக்கோன்றங்கப் பயிலளகாபுரிவகுத்த பரிசுகாட்டும். (க0க)

விழவின்மலிதிருக்காஞ்சி வரைப்பின்வேளாண் விழுக்குடிமைப்பெருஞ்செல்வர் விளங்கும்வேணி, மழவிளவெண்டிங்கள்புனை கம்பர்செம்பொன் மலைவல்லிக்களித்தவரு ளுணவின்மூலந், தொழவுலகுபெறுமவடா னருளப்பெற்றுத் தொன்னிலத்துமன்னுபயிர் வேதவாய்மை, யுழவுதொழிலாற்பெருக்கி யுயிர்களெல்லா மோங்கவருந்தருமவினைக் குளராலென்றும். (க0உ)

ஓங்கியநாற்குலத்தொவ்வாப் புணர்விற்றம்மி லுயர்ந்தனவுமிழிந்தனவு மானசாதி, தாங்குழுமிப்பிறந்தகுல பேதமெல்லாந் தந்தகைமைக்கேற்றதனி யிடங்கண்மேவி, யாங்குநிறைகிளைபயின்று மரபினூற்ற வடுத்தவினைத்தொழின்முறைமை வழாமைநீடு,பாங்குவளரிருக்கைநிலை பலவுமெல்லாம் பண்புநீடியவுரிமைப் பாலவன்றே. (க0௩)

வேறு.

ஆதிமூதெயி லந்நகர்மன்னிய
சோதிநீண்மணித் தூபமுந்தீபமுங்
கோதில்பல்லிய முங்கொடியும்பயில்
வீதிநாளு மொழியாவிழாவணி. (க0௪)

வாயிலெங்கணுந் தோரணமாமதின்
ஞாயிலெங்கணுஞ் சூழ்முகிலொண்மதி
தோயிலெங்கணு மங்கலத்தொண்டர்சூழ்
கோயிலெங்கணு மும்பர்குலக்குழாம். (க0௫)

வேதவேதியர் வேள்வியேதியன
மாதரோதி மலரேயிணியன
காதல்வீதி விலக்கேகவலைய
சூதமாதவி யேபுறஞ்சூழ்வன. (க0௬)

சாயலார்க ணுசுப்பேதளர்வன
ஆயமாடக் கொடியேயசைவன
சேயவோடைக் களிறேதிகைப்பன
பாயசோலைத் தருவேபயத்தன. (க0௭)

அண்ணலாரன்ப ரன்பேழுனர்த்தன
தண்ணறுஞ்செழுந் தாதேதுகளன
வண்ணநீண்மணி மாலையேதாழ்வன
எண்ணில்குங்குமச் சேறேயிழுக்கின. (௧௦அ)

வென்றிவானவர் தாம்விளையாடலும்
என்றுமுள்ளவர் வாழுமியற்கையு
நன்றுமுள்ளத்து நண்ணினர்வேட்கையுள்
ஒன்றுமங்கொழி யாவகையுய்ப்பது. (௧௦௯)

புரங்கடந்தவர் காஞ்சிபுரம்புகழ்
பரம்புநீள்புவ னம்பதினன்கினும்
வரம்பில்போக வனப்பின்வளமெலா
நிரம்புகொள்கல மென்னநிறைந்ததால். (௧௧௦)

வேறு.

அவ்வகையதிருநகர மதன்கணொருமருங்குறைவார்
இவ்வுலகிற்பிறப்பினு லேகாலிக்குலத்துள்ளார்
செவ்வியவன்புடைமனத்தார் சீலத்திநெறிநின்றார்
மைவ்விரவுகண்டரடி வழித்தொண்டருளரானார். (௧௧௧)

மண்ணின்மிசைவந்ததற்பின் மனமுதலாயினமூன்றும்
அண்ணலார்சேவடியின் சார்வாகவணைவிப்பார்
புண்ணியமெய்த்தொண்டர்திருக் குறிப்பறிந்துபோற்றுநிலைத்
திண்மையினற்றிருக்குறிப்புத் தொண்டரெனுஞ்சிறப்பினர். (௧௧௨)

தேரொலிக்கமாவொலிக்கத் திசையொலிக்கும்புகழ்க்காஞ்சி
யூரொலிக்கும்பெருவணணு ரெனவொண்ணுவுண்மையினர்
நீரொலிக்கவராவிளைக்க நிலாமுகிழ்க்குந்திருமுடியார்
பேரொலிக்கவுருகுமவர்க் கொலிப்பர்பெருவிருப்பினெடும். (௧௧௩)

தேசுடையமலர்க்கமலச் சேவடியாரடியார்தந்
தூசுடையதுகண்மாசு கழிப்பார்போற்றொல்லைவினை
யாசுடையமலமூன்று மணையவரும்பெரும்பிறவி
மாசுதனைவிடக்கழித்து வருநாளிலங்கொருநாள். (௧௦௪)

பொன்னிமயப்பொருப்பரையன் பயந்தருளும்பூங்கொடிதன்
னன்னிலைமையன்றளக்க வெழுந்தருளுநம்பெருமான்
றன்னுடையவடியவர்தந் தனித்தொண்டர்தம்முடைய
அந்நிலைமைகண்டன்பர்க் கருள்புரிவான்வந்தணைவான். (௧௦௫)

சீதமலிகாலத்துத் திருக்குறிப்புத்தொண்டர்பால்
ஆதுலராய்மெலிந்துமிக வழுக்கடைந்தகந்தையுடன்
மாதவவேடந்தாங்கி மாலறியாமலரடிகள்
கோதடையாமனத்தவர்முன் குறுநடைகள்கொளக்குறுகி. (௧௧௬)

திருமேனிவெண்ணீறு திகழ்ந்தொளிருங்கோலத்துக்
கருமேகமெனவழுக்குக் கந்தையுடனெழுந்தருளி
வருமேனியருந்தவரைக் கண்டுமனமகிழ்ந்தெதிர்கொண்
டுருமேவுமயிர்ப்புளக முளவாகப்பணிந்தெழுந்தார். (௧௧௭)

எய்துமவர்குறிப்பறிந்தே யினியமொழிபலமொழிந்து
செய்தவத்தீர்திருமேனி யிளைத்திருந்ததென்னென்று
கைதொழுதுகந்தையினைத் தந்தருளுங்கழுவவென
மைதிகழ்கண்டங்கரந்த மாதவத்தோரருள்செய்வார். (௧௧௮)

இக்கந்தையழுக்கேறி யெடுக்கவொணாதெனினும்யான்
மெய்க்கொண்டகுளிர்க்குடைந்து விடமாட்டேன்மேல்கடற்பால்
அக்குன்றம்வெங்கதிரோ னணைவதன்முன்றருவீரேற்
கைக்கொண்டுபோயொலித்துக் கொடுவாருங்கடிதென்றார். (௧௧௯)

தந்தருளுமிக்கந்தை தாழாதேயொலித்துமக்கின்
தந்திபடுவதன்முன்னந் தருகின்றேனெனவவருங்
கந்தையிதுவொலித்துணக்கிக் கடிதின்றேதாரீரேல்
இந்தவுடற்கிடர்செய்தீ ரென்றுகொடுத்தேகினார். (௧௨௦)

குறித்தபொழுதேயொலித்துக் கொடுப்பதற்குக்கொடுபோந்து
வெறித்தடநீர்த்துறையின்கண் மாசெறிந்துமிகப்புழுக்கிப்
பிறித்தொலிக்கப்புகுமளவிற் பெரும்பகல்போய்ப்பின்பகலாய்
மறிக்கரத்தார்திருவருளான் மழையெழுந்துபொழிந்திடுமால். (௧௨௧)

திசைமயங்கவெளியடைத்த செறிமுகிலின்குழாமிடைந்து
மிசைசொரியும்புனற்றாரை விழிநுழையாவகைமிடைய
அசைவுடையமனத்தன்ப ரறிவுமறந்தருந்தவர்பால்
இசைவுநினைந்தழிந்தினியா னென்செய்கேனெனநின்றார். (௧௨௨)

ஓவாதேபொழியுமழை யொருகால்விட்டொழியுமெனக்
காவாலிதிருத்தொண்டர் தனிநின்றார்விடக்காணார்
மேவார்போற்கங்குல்வர மெய்குளிரும்விழுத்தவர்பால்
ஆவாவென்குற்றேவ லழிந்தவாவெனவிழுந்தார். (௧௨௩)

விழுந்தமழையொழியாது மெய்த்தவர்சொல்லியவெல்லை
கழிந்ததுமுன்பொலித்துமனைக் காற்றேற்கவறிந்திலேன்
செழுந்தவர்தந்திருமேனி குளிர்காணுந்தீங்கிழைத்த
தொழும்பனேற்கினியிதுவே செயலென்றுதுணிந்தெழுவார். (௧௨௪)

கந்தைபுடைத்திட்டவெற்றுங் கற்பாறைமிசைத்தலையைச்
சிந்தவெடுத்தெற்றுவனென் றணைந்துசெழும்பாறைமிசைத்
தந்தலையைப்புடைத்தெற்ற வப்பாறைதன்மருங்கு
வந்தெழுந்துபிடித்ததணி வளைத்தழும்பர்மலர்ச்செங்கை. (௧௨௫)

வானிறைந்தபுனன்மழைபோய் மலர்மழையாயிடமருங்கு
தேனிறைந்தமலரிதழித் திருமுடியார்பொருவிடையின்
மேனிறைந்ததுணைவியொடும் வெளிநின்றார்மெய்த்தொண்டர்
தானிறைந்தவன்புருகக் கைதொழுதுதனிநின்றார். (௧உ௬)

முன்னவரைநேர்நோக்கி முக்கண்ணர்மூவுலகு
நின்னிலைமையறிவித்தோ நீயுமினிநீடியநம்
மன்னுலகுபிரியாது வைகுவாயெனவருளி
யந்நிலையேயெழுந்தருளி யணியேகாம்பரமணைந்தார். (௧உ௭)

சீர்நிலவுதிருக்குறிப்புத் தொண்டர்திருத்தொழில்போற்றிப்
பார்குலவத்தந்தைதா ளறவெறிந்தார்பரிசுரைக்கேன்
பேரருளின்மெய்த்தொண்டர் பித்தனெனப்பிதற்றுதலால்
ஆருலகிலிதனுண்மை யறிந்துரைக்கவிசைந்தெழுவார். (௧உ௮)

ஆக-திருவிருத்தம்-௧உ௰.

திருச்சிற்றம்பலம்.

தொண்டைமண்டலத்திலே, காஞ்சிபுரத்திலே, ஏகாலியர்குலத்திலே, சிவனடியார்களுடைய திருக்குறிப்பையறிந்து அவர்களுக்குத் தொண்டு செய்கின்றமையால் திருக்குறிப்புத்தொண்டர் எனப்பெயர் பெற்ற ஒருபெரியவர் இருந்தார். அவர்மிகுந்த விருப்பத்தோடு சிவபத்தர்களுக்கு வஸ்திரம் ஒலித்துக் கொடுத்துவருங்காலத்திலே, ஏகாம்பரநாதசுவாமி குளிர்காலத்திலே ஒரு சிவபத்தர்வேடங்கொண்டு, மெலிந்த சரீரத்தையுடைய ஒருவறியவர்போலாகி, அழுக்கடைந்த கந்தையுடன் அவரிடத்திற்சென்றார். திருக்குறிப்புத்தொண்டர் அவரைக் கண்டு எதிர்கொண்டு வணங்கி, பல உபசாரவார்த்தைகளைச் சொல்லி, அவருடைய குறிப்பையறிந்து, உந்தக் கந்தையைத்தந்தருளும், ஒலித்துத் தருகின்றேன் என்றார். சிவபத்தர் வேடங்கொண்ட கடவுள், இந்தக் கந்தை அழுக்கு அதிகமாக ஏறப்பெற்றுத் தரிக்கப்படுதற்குத் தகுதியில்லாததாயிருந்தாலும், குளிர்மிகுதியினால் வருத்தமுறுகின்றபடியால் கைவிடுதல் கூடாது; அஸ்தமயனத்திற்குமுன் தருவீராயில் கொண்டு போய்ச் சீக்கிரமாக ஒலித்துக்கொண்டு வாரும் என்றார். திருக்குறிப்புத்தொண்டர், அடியேன் தாழாமல் ஒலித்து அஸ்தமயனத்துக்கு முன் கொண்டுவந்து தருகின்றேன்; தந்தருளும் என்றுசொல்ல; சுவாமி விரைவிலே ஒலித்து உலர்த்தித் தராதொழிவீராகில், இந்ததேகத்துக்குத் துன்பஞ்செய்தீர் என்று சொல்லி, அக்கந்தையை அவர்கையிற் கொடுத்தார்.

திருக்குறிப்புத்தொண்டநாயனார் அதை வாங்கிக்கொண்டு ஒரு குளத்திற்சென்று, முன் சிறிதழுக்குப் போக்கி வெள்ளாவியில்வைத்து,

பின் ஒலிக்கப்புகுந்தார். அப்பொழுது பரமசிவனுடைய திருவருளி னாலே நண்பகலொழிந்து பின்பகல்போலத் தோன்றும்படி மேகங்கள் இருண்டு ஆகாயவெளியெல்லாம் மறைத்து மழை பெய்தன. அது கண்டு, திருக்குறிப்புத்தொண்டர் சிவபத்தருக்குத் தாம் வாக்குச்செய் ததை நினைந்து, "இனி நான் யாதுசெய்வேன்" என்று கவலையுற்று, விரைவிலே மழைவிடவுங் கூடுமென்று அங்கேதானே நின்றார். அது விடவில்லை. பின் இராக்காலம் வர, திருக்குறிப்புத்தொண்டர் "குளிரி னாலே திருமேனி நடுங்குகின்ற சிவபத்தருக்கு நான் செய்ய விரும்பிய பணிவிடை, ஐயையோ! தவறிப்போயிற்றே" என்று கீழே விழுந்தார். "மழைவிடாது; சிவபத்தர் சுட்டிய காலமோ நீங்கிற்று. முன்னேயே ஒலித்து வீட்டிலே காற்றினால் உலரும்படி கட்டிவிட்டேனுமில்லை. சிவ பத்தரது திருமேனி குளிரினால் வருந்தும்படி தீங்குசெய்த சிறியேனுக்கு இனியிதுவே செயல்" என்று எழுந்தார். "வஸ்திரங்களைப் புடைக் கின்ற கற்பாறையிலே எனது தலையைச் சிந்தும்படி மோதுவேன்" என்று போய்க் கற்பாறையிலே தமது சிரசைமோத; சர்வவியாபகராகிய பரமசிவனுடைய திருக்கரம் அந்தக் கற்பாறையின் பக்கத்திலேதோன்றி, அவரைப் பிடித்துக்கொண்டது. ஆகாயத்தினின்று சொரிந்த நீர்மழை நீங்கிப் பூமழைபொழிந்தது. பரமசிவன் உமாதேவியாரோடும் இடபா ரூடராய்க் காட்சிகொடுத்தருளினார். திருக்குறிப்புத்தொண்டநாயனார் மிகுந்த அன்பினோடு விழுந்து நமஸ்கரித்து எழுந்து, அஞ்சலிசெய்து கொண்டு நின்றார். பரமசிவன் அவரை நோக்கி, "உனது பத்திவலி மையை மூவுலகத்தார்களுக்குந் தெரிவித்தோம். இனி நீ நம்முடைய உலகத்தையடைந்து பேரின்பம்பெற்று வாழ்ந்திரு" என்று திருவருள் புரிந்து சென்றருளினார்.

திருச்சிற்றம்பலம்.

திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சண்டேசுரநாயனார் புராணம்.

வேறு.

பூந்தண்பொன்னியெந்நாளும் பொய்யாதளிக்கும்புனனாட்டு
வாய்ந்தமண்ணித்தென்கரையின் மன்னமுன்னாள்வளாகிழிய
ஏந்துமயில்வேனிலைகாட்டி யிமையோரிகல்வெம்பகைகடக்குஞ்
சேந்தனளித்ததிருமறையோர் மூதூர்செல்வச்சேய்ஞலூர். (க)

செம்மைவெண்ணீற்றொருமையினா ரிரண்டுபிறப்பின்சிறப்பினார்
மும்மைத்தழலோம்பியநெறியார் நான்குவேதமுறைபயின்றார்
தம்மையைந்துபுலனும்பின் செல்லுந்தகையாரறுதொழிலின்
மெய்ம்மையொழுக்கமேழுலகும் போற்றுமறையோர்விளங்குவது. (௨)

கோதின்மான்றோற்புரிமுந்நூல் குலவுமார்பிற்குழைக்குடுமி
யோதுகிடைசூழ்சிறுவர்களு முதவும்பெருமையாசானும்
போதின்விளங்குந்தாரகையு மதியும்போலப்புணர்மடங்கண்
மீதுமுழங்குமுகிலொதுங்க வேதவொலிகண்முழங்குவன. (௩)

யாகநிலவுஞ்சாலைதொறு மறையோரீந்தவவியுணவின்
பாகநுகரவருமாலு மயனுமூரும்படர்சிறைப்புண்
மாகமிகந்துவந்திருக்குஞ் சேக்கையெனவும்வானவர்கோ
னாகமணையுங்கந்தெனவு நாட்டும்யூபவீட்டமுள. (௪)

தீம்பாலொழுகப்பொழுதுதொறு மோமதேனுச்செல்வனவுந்
தாம்பாடியசாமங்கணிப்போர் சமிதையிடக்கொண்டணைவனவும்
பூம்பாசடைநீர்த்தடமூழ்கி மறையோர்மகளிர்புகுவனவும்
ஆம்பான்மையினில்விளங்குவன வணிநீண்மறுகுபலவுமுள. (௫)

வாழ்பொற்பதிமற்றதன்மருங்கு மண்ணித்திரைகள்வயல்வரம்பின்
றாழ்விற்றரளஞ்சொரிகுலைப்பாற் சமைத்தயாகத்தடஞ்சாலை
சூழ்வைப்பிடங்கணெருங்கியுள தொடங்குசடங்குமுடித்தேறும்
வேள்வித்தலைவர்பெருந்தேர்கள் விண்ணோரேறும்விமானங்கள். (௬)

மடையிற்கழுநீர்செழுநீர்சூழ் வயலிற்சாலிக்கதிர்க்கற்றைப்
புடையிற்சுரும்புமிடைகமுகு புனலிற்பரம்புபூம்பாளை
அடையிற்பயிலுந்தாமரைநீ ளலரிற்றுயிலுங்கயல்கள்வழி
நடையிற்படர்மென்கொடிமௌவ லணையிற்றிகழுஞ்சினைக்காஞ்சி. (௭)

சென்னியபயன்குலோத்துங்கச் சோழன்றில்லைத்திருவெல்லை
பொன்னின்மயமாக்கியவளவர் போரேறென்றும்புவிகாக்கு
மன்னர்பெருமானநபாயன் வருந்தொன்மரபின்முடிசூட்டுந்
தன்மைநிலவு * பதியைந்தி னொன்றாய்விளங்குந்தகைத்தவ்வூர். (௮)

பண்ணின்பயனாநல்லிசையும் பாலின்பயனாமின்சுவையுங்
கண்ணின்பயனாம்பெருகொளியுங் கருத்தின்பயனாமெழுத்தஞ்சும்
விண்ணின்பயனாம்பொழிமழையும் வேதப்பயனாஞ்சைவமும்போன்
மண்ணின்பயனாமப்பதியின் வளத்தின்பெருமைவரம்புடைத்தோ. (௯)

பெருமைபிறங்குமப்பதியின் மறையோர்தம்முட்பெருமனைவாழ்
தருமநிலவுகாசிபகோத் திரத்துத்தலைமைசார்மரபில்

---

* முடிசூட்டும்பதி ஐந்தாவன - காவிரிப்பூம்பட்டினம். கருவூர். திருவாரூர். உறையூர். திருச்சேய்ஞலூர் என்பவைகளாம்.

அருமைமணியுமளித்ததுவே நஞ்சுமளிக்குமரவுபோல்
இருமைவினைக்குமொருவடிவா மெச்சதத்தனுளனுனன். (௧0)

மற்றைமறையோன்றிருமனைவி வாய்ந்தமரபின்வந்துதித்தாள்
சுற்றம்விரும்புமில்வாழ்க்கைத் தொழிலாளுலகிற்றுணைப்புதல்வற்
பெற்றுவிளங்குந்தவஞ்செய்தாள் பெறும்பேறெல்லைப்பயன்பெறுவாள்
பற்றையெறியும்பற்றுவரச் சார்பாயுள்ளபவித்திரையாள். (௧௧)

நன்றிபுரியுமவர்தம்பா னன்மைமறையின்றுறைவிளங்க
என்றுமறையோர்குலம்பெருக வேழுபுவனங்களுமுய்ய
மன்றினடஞ்செய்பவர்சைவ வாய்மைவளரமாதவத்தோர்
வென்றிவிளங்கவந்துதயஞ் செய்தார்விசார § சருமனுர். (௧௨)

ஐந்துவருடமவர்க்கணைய வங்கமாறுமுடனிறைந்த
சந்தமறைகளுட்படமுன் றலைவர்மொழிந்தவாகமங்கண்
முந்தையறிவின்றொடர்ச்சியினுன் முகைத்தமலரின்வாசம்போற்
சிந்தைமலரவுடன்மலருஞ் செவ்வியுணர்வுசிறந்ததால். (௧௩)

நிகழுமுறைமையாண்டேழு நிரம்பும்பருவம்வந்தெய்தப்
புகழும்பெருமையுபநயநப் பொருவில்சடங்குமுடித்தறிவின்
இகழுநெறியவல்லாத வெல்லாமியைந்தவெனினுந்தந்
திகழுமரபினேதுவிக்குஞ் செய்கைபயந்தார்செய்வித்தார். (௧௪)

குலவுமறையும்பலகலையுங் கொளுத்துவதன்முன்கொண்டமைந்து
நிலவுமுணர்வின்றிறங்கண்டு நிறுவுமறையோரதிசயித்தார்
அலகில்கலையின்பொருட்கெல்லை யாடுங்கழலேயெனக்கொண்ட
செலவுமிகுந்தசிந்தையினிற் றெளிந்தார்சிறியபெருந்தகையார். (௧௫)

நடமேபுரியுஞ்சேவடியார் நம்மையுடையாரெனுமெய்ம்மை
உடனேதோன்றுமுணர்வின்க ணொழியாதூறும்வழியன்பின்
கடனேயியல்பாய்முயற்றிவருங் காதன்மேன்மேலெழுங்கருத்தின்
றிடநேர்நிற்குஞ்செம்மலார் திகழுநாளிலாங்கொருநாள். (௧௬)

ஓதுகிடையினுடன்போவா ரூரானிரையினுடன்புக்க
போதுமற்றங்கொருபுனிற்று போற்றுமவன்மேன்மருப்போச்ச
யாதுமொன்றுங்கூசாதே யெடுத்தகோல்கொண்டவன்புடைப்ப
மீதுசென்றுமிகும்பரிவால் வெகுண்டுவிலக்கிமெய்யுணர்ந்து. (௧௭)

பாவுங்கலைகளாகமநூல் பரப்பின்றொகுதிப்பான்மையினுன்
மேவும்பெருமையருமறைகண் மூலமாக்விளங்குலகில்
யாவுந்தெளிந்தபொருணிலையே யெய்தவுணர்ந்தவுள்ளத்தால்
ஆவின்பெருமையுள்ளபடி யறிந்தாராயற்கருள்செய்வார். (௧௮)

---

§ சருமன் என்பது - பிராமணனுக்கும், வருமன் என்பது - க்ஷத்திரியனுக்கும், குத்தன் என்பது - வைசியனுக்கும், தாதன் என்பது - சூத்திரனுக்கும் பட்டப்பெயர்.

தங்குமகிலயோனிகட்கு மேலாம்பெருமைத்தகைமையன
பொங்குபுனிததீர்த்தங்க ளெல்லாமென்றும்பொருந்துவன
துங்கவமரர்திருமுனிவர் கணங்கள்சூழ்ந்துபிரியாத
அங்கமனைத்துந்தாமுடைய வல்லவோநலலானினங்கள். (௧௯)

ஆயசிறப்பினாற்பெற்ற வன்றேமன்றுணடம்புரியு
நாயனார்க்குவளர்மதியு நதியுநகுவெண்டலைத்தொடையு
மேயவேணித்திருமுடிமேல் விரும்பியாடியருளுதற்குத்
தூயதிருமஞ்சனமைந்து மளிக்குமுரிமைச்சுரபிகடாம். (௨௦)

சீலமுடையகோக்குலங்கள் சிறக்குந்தகைமைத்தேவருடன்
காலமுழுதுமுலகனைத்துங் காக்குமுதற்காரணராகு
நீலகண்டர்செய்யசடை நிருத்தர்சாத்துநீறுதரு
மூலமவதாரஞ்செய்யு மூர்த்தமென்றான்முடிவென்னே. (௨௧)

உள்ளுந்தகைமையினிப்பிறவே றுளவேயுமைமான்மறிக்கன்று
துள்ளுங்கரத்தாரணிபணியின் சுடர்சூழ்மணிகள்சுரநதிநீர்
தெள்ளுஞ்சடையார்தேவர்கடம் பிராட்டியுடனேசேரமிசைக்
கொள்ளுஞ்சினமால்விடைத்தேவர் குலமன்றோவிச்சுரபிகுலம். (௨௨)

என்றின்னனவேபலவுநினை திதத்தின்வழியேமேய்த்திந்தக்
கன்றுபயிலாநிரைகாக்கு மிதன்மேலில்லைகடனிதுவே
மன்றுளாடுஞ்சேவடிகள் வழுத்துநெறியாவதுமென்று
நின்றவாயன்றனைநோக்கி நிரைமேய்ப்பொழிகநீயென்பார். (௨௩)

யானேயினியிந்நிரைமேய்ப்ப னென்றாரஞ்சியிடைமகனுந்
தானேரிறைஞ்சிவிட்டகன்றான் றாமுமறையோரிசைவினால்
ஆனேநெருங்கும்பேராய மளிப்பாராகிப்பைங்கூழ்க்கு
வானேயென்னநிரைகாக்க வந்தார்தெய்வமறைச்சிறுவர். (௨௪)

கோலுங்கயிறுங்கொண்டுகுழைக் குடுமியலையக்குலவுமான்
றோலுநூலுஞ்சிறுமார்பிற் றுவளவரைக்கோவணஞ்சுடரப்
பாலும்பயனும்பெருகவரும் பசுக்கண்மேய்க்கும்பான்மையினாற்
சாலும்புல்லினவைவேண்டுந் தனையுமிசையுந்தலைச்சென்று. (௨௫)

பதவுகாலங்களின்மேய்த்துப் பறித்துமளித்தும்பரிவகற்றி
இதமுண்டுறையுணற்றண்ணீ ரூட்டியச்சமெதிர்நீக்கி
அதர்நல்லனமுன்செலநீழ லமர்வித்தமுதமதுரப்பால்
உதவும்பொழுதுபிழையாம லுடையோரில்லந்தொறுமுய்த்தார். (௨௬)

மண்ணிக்கரையின்வளர்புறவின் மாடும்படுகர்மருங்கினிலுந்
தண்ணித்திலநீர்மருதத்தண் டலைசூழ்குலையின்சார்பினிலும்
எண்ணிற்பெருகுநிரைமேய்த்துச் சமிதையுடன்மேலெரிகொண்டு
நண்ணிக்கங்குன்முன்புகுது நன்னாள்பலவாமந்நாளில். (௨௭)

ஆயநிரையின்குலமெல்லா மழகின்விளங்கிமிகப்பல்கி
மேபவினியபுல்லுணவும் விரும்புபுனலுமார்தலினால்
ஏயமனங்கொள்பெருமகிழ்ச்சி யெய்தியிரவுநண்பகலுந்
தூயதீம்பான்மடிபெருகிச் சொரியமுலைகள்சுரந்தனவால். (உஅ)

பூணுந்தொழில்வேள்விச்சடங்கு புரியசிவாமதேனுக்கள்
காணும்பொலிவின்முன்னையினு மனேகமடங்குகறப்பனவாய்
பேணுந்தகுதியன்பாலிப் பிரமசாரிமேய்த்ததற்பின்
மாணுந்திறத்தவானவென மறையோரெல்லாமனமகிழ்ந்தார். (உகூ)

அனைத்துத்திறத்துமானினங்க ளணைந்தமகிழ்ச்சியளவின்றி
மனைக்கட்கன்றுபிரிந்தாலு மருவுஞ்சிறியமறைக்கன்று
தனைக்கண்டருகுசார்ந்துருகித் தாயாந்தன்மைநிலைமையவாய்க்
கனைத்துச்சுரந்துமுலைக்கண்கள் கறவாமேபால்பொழிந்தனவால். (௩௰)

தம்மையணைந்தவான்முலைப்பால் தாமேபொழியக்கண்டுவந்து
செம்மைநெறியேயுறுமனத்திற் றிருமஞ்சனமாங்குறிப்புணர்ந்தே
எம்மையுடையவள்ளலா ரெய்தநினைந்துதெளிந்ததனின்
மெய்ம்மைச்சிவனார்பூசனையை விரும்பும்வேட்கைவிளைந்தெழலும். (௩க)

அங்கண்முன்னையர்ச்சனையி னளவின்றொடர்ச்சிவிளையாட்டாப்
பொங்குமன்பான்மண்ணிமணற் புளினக்குறையிலாத்தியின்கீழ்ச்
செங்கண்விடையார்திருமேனி மணலாலாக்கிச்சிவாலயமுந்
துங்கநீடுகோபுரமுஞ் சுற்றாலயமும்வகுத்தமைத்தார். (௩உ)

ஆத்திமலருஞ்செழுந்தளிரு முதலாவருகுவளர்புறவிற்
பூத்தமலர்கடாந்தெரிந்து புனிதர்சடிலத்திருமுடிமேற்
சாத்தலாகுந்திருப்பள்ளித் தாமம்பலவுந்தாங்கொய்து
கோத்தவிலைப்பூக்கூடையினிற் கொணர்ந்துமணந்தங்கிடவைத்தார். ()

நல்லநவகும்பங்கள்பெற நாடிக்கொண்டுநாணற்பூங்
கொல்லையிடத்துங்குறைமறைவு மேவுங்கோக்களுடன்கூட
ஒல்லையணைந்துபாலாக்க ளொன்றுக்கொருகாலாகவெதிர்
செல்லவவையுங்கனைத்துமுலை தீண்டச்செழும்பால்பொழிந்தனவால். ()

கொண்டுமடுத்தகுடநிறையக் கொணர்ந்துவிரும்புங்கொள்கையினால்
அண்டர்பெருமான்வெண்மணலா லயத்துள்வைமுன்றாபித்து
வண்டுமருவுந்திருப்பள்ளித் தாமங்கொண்டுவரன்முறையே
பண்டைப்பரிவாலருச்சித்துப் பாலின்றிருமஞ்சனமாட்டி. (௩௫)

மீளமீளவிவ்வண்ணம் வெண்பால்சொரிமஞ்சனமாட்ட
ஆளவுடையார்தம்முடைய வன்பரன்பின்பாலுளதாய்
மூளவமர்ந்தநயப்பாடு முதிர்ந்தபற்றுமுற்றச்சூழ்
கோளமதனிலுண்ணிறைந்து குறித்தபூசைகொள்கின்றார். (௩௬)

பெருமைபிறங்குஞ்சேய்ஞலூர்ப் பிள்ளையார்தாமுள்ளத்தில்
ஒருமைநினைவாலும்பர்பிரா னுவக்கும்பூசையுறுப்பான
திருமஞ்சனமேமுதலவற்றிற் றேடாதனவன்பினினிரப்பி
வருமந்நெறியேயர்ச்சனைசெய் தருளிவணங்கிமகிழ்கின்றார். (௩௭)

இறையோனடிக்கீழ்மறையவனா ரெடுத்துத்திருமஞ்சனமாட்டி
நிறைபூசனைக்குக்குடங்கள்பா னிரம்பச்சொரிந்துநிரைக்குலங்கள்
குறைபாடின்றிமடிபெருகக் குவிந்தமுலைப்பால்குறைவின்றி
மறையோர்மனையின்முன்புதரும் வளங்கள்பொலியவைகுமால். (௩௮)

செயலிப்படியேபலநாளுஞ் சிறந்தபூசைசெய்வதற்கு
முயல்வுற்றதுவேதிருவிளையாட் டாகமுந்நூலணிமார்பர்
இயல்பிற்புரியுமற்றிதனைக் கண்டித்திறத்தையறியாத
அயன்மற்றொருவனப்பதியி லந்தணாளர்க்கறிவித்தான். (௩௯)

அச்சொற்கேட்டவருமறையோ ராயனறியானென்றவற்றின்
இச்சைவழியேயான்மேய்ப்பே னென்றெம்பசுக்கடமைக்கறந்து
பொச்சமொழுகுமாணவகன் பொல்லாங்குரைக்கவவன்றாதை
யெச்சதத்தன்றனையழைமி னென்றாரவையிலிருந்தார்கள். (௪0)

ஆங்குமருங்குநின்றார்க ளவ்வந்தணன்றன்றிருமனையின்
பாங்குசென்றுமற்றவனை யழைத்துக்கொண்டுவரப்பரந்த
ஓங்குசபையோரவனைப்பார்த் துரானிரைமேய்த்துன்மகன்செய்
தீங்குதன்னைக்கேளென்று புகுந்தபரிசுசெப்புவார். (௪௧)

அந்தண்மறையோராகுதிக்குக் கறக்கும்பசுக்களானவெல்லாஞ்
சிந்தைமகிழ்ந்துபரிவினாற் றிரளக்கொடுபோய்மேய்ப்பான்போற்
கந்தமலிபூம்புனன்மண்ணி மணலிற்கறந்துபாலுகுத்து
வந்தபரிசேசெய்கின்றா னென்றானென்றுவாய்மொழிந்தார். (௪உ)

மறையோர்மொழியக்கேட்டஞ்சிச் சிறுமாணவகன்செய்தவீ
திறையுநான்முன்பறிந்திலே னிதற்குமுன்புபுகுந்ததனை
நிறையும்பெருமையந்தணர்காள் பொறுக்கவேண்டுநீங்களெனக்
குறைகொண்டிறைஞ்சியினிப்புகுதிற் குற்றமெனதேயாமென்றான் (௪௩)

அந்தணாளர்தமைவிடைகொண் டந்திதொழுதுமனைபுகுந்து
வந்தபழியொன்றெனநினைந்தே மகனார்தமக்குவாய்நேரான்
இந்தநிலைமையறிவேனென் றிரவுகழிந்துநிரைமேய்க்க
மைந்தனார்தாம்போயினபின் மறைந்துசென்றான்மறைமுதியோன். (௪௪)

சென்றமறையோன்றிருமகனார் சிறந்தவூரானிரைகொடுபோய்
மன்றன்மருவும்புறவின்கண் மேய்ப்பார்மண்ணிமணற்குறையில்
அன்றுதிரளக்கொடுசென்ற வதனையறிந்துமறைந்தப்பா
னின்றகுரவின்மிசையேறி நிகழ்வதறியவொளித்திருந்தான். (௪௫)

அன்புபுரியும்பிரமசா ரிகளுமூழ்கியரனர்க்கு
முன்புபோலமணற்கோயி லாக்கிமுகைமென்மலர்கொய்து
பின்புவருமான்முலைபொழிபால் பெருகுங்குடங்கள்பேணுமிடந்
தன்பாற்கொணர்ந்துதாபித்துப் பிறவும்வேண்டுவனசமைத்தார். (௪௬)

நின்றவிதியின்விளையாட்டா னிறைந்தவரும்பூசனைதொடங்கி
யொன்றுமுள்ளத்துண்மையினு லுடையநாதன்றிருமுடிமேன்
மன்றல்விரவுந்திருப்பள்ளித் தாமஞ்சாத்திமஞ்சனமா
நன்றுநிறைதீம்பாற்குடங்க ளெடுத்துநயப்புற்றாட்டுதலும். (௪௭)

பரவமேன்மேலெழும்பரிவும் பழையபான்மைமிகும்பண்பும்
விரவுமேதக்கவர்தம்பான் மேவும்பெருமைவெளிப்படுப்பான்
அரவமேவுஞ்சடைமுடியா ரருளாமென்னவறிவழிந்து
குரவமேவுமுதுமறையோன் கோபமேவும்படிக்கண்டான். (௪௮)

கண்டபோதேவிரைந்திழிந்து கடிதுசென்றுகைத்தண்டு
கொண்டுமகனுர்திருமுதுகிற் புடைத்துக்கொடிதாமொழிகூறத்
தொண்டுபுரியுஞ்சிறியபெருந் தோன்றலார்தம்பெருமான்மேன்
மண்டுகாதலருச்சனையின் வைத்தார்மற்றென்றறிந்திலரால். (௪௯)

மேலாம்பெரியோர்பலகாலும் வெகுண்டோனடிக்கவேறுணரார்
பாலார்திருமஞ்சனமாட்டும் பணியிற்சலியாததுகண்டு
மாலாமறையோன்மிகச்செயிர்த்து வைத்ததிருமஞ்சனக்குடப்பால்
காலாலிடறிச்சிந்தினுன் கையாற்கடைமைத்தலைநின்றான். (௫௦)

சிந்தும்பொழுதிலதுநோக்குஞ் சிறுவரிறையிற்றீயோனை
தந்தையெனவேயறிந்தவன்றன் றாள்கள்சிந்துந்தகுதியினுன்
முந்தைமருங்குகிடந்தகோ லெடுத்தார்க்கதுவேமுறைமையினல்
வந்துமழுவாயிடவெறிந்தார் மண்மேல்வீழ்ந்தான்மறையோனும். (௫௧)

எறிந்தவதுவேயர்ச்சனையி லிடையூறகற்றும்படையாக
மறிந்ததாதையிருதாளுந் துணித்தமைந்தர்பூசனையில்
அறிந்தவிடையூறகற்றினராய் முன்போலர்ச்சித்திடப்புகலுஞ்
செறிந்தசடைநீண்முடியாருந் தேவியோடும்விடையேறி. (௫௨)

பூதகணங்கள்புடைசூழப் புராணமுனிவர்புத்தேளிர்
வேதமொழிகளெடுத்தேத்த விமலமூர்த்திதிருவுள்ளங்
காதல்கூரவெளிப்படலுங் கண்டுதொழுதுமனங்களித்துப்
பாதமலர்கண்மேல்விழுந்தார் பத்திமுதிர்ந்தபாலகனுர். (௫௩)

தொடுத்தவிதழிசூழ்சடையார் துணைத்தாணிழற்கீழ்விழுந்தவரை
யெடுத்துநோக்கிநம்பொருட்டா லீன்றதாதைவிழவெறிந்தா
யடுத்ததாதையினியுனக்கு நாமென்றருள்செய்தணைத்தருளி
மடுத்தகருணையாற்றடவி யுச்சிமோந்துமகிழ்ந்தருள. (௫௪)

செங்கண்விடையார்திருமலர்க்கை தீண்டப்பெற்றசிறுவனார்
அங்கண்மாயையாக்கையின்மே லளவின்றுயர்ந்தசிவமயமாய்ப்
பொங்கியெழுந்ததிருவருளின் மூழ்கிப்பூமேலயன்முதலாத்
துங்கவமரர்துதிசெய்யச் சூழ்ந்தவொளியிற்றோன்றினார். (ருரு)

அண்டர்பிரானுந்தொண்டர்தமக் கதிபனாக்கியனைத்துநாம்
உண்டகலமுமுடுப்பனவுஞ் சூடுவனவுமுனக்காகச்
சண்டீசனுமாம்பதந்தந்தோ மென்றங்கவர்பொற்றடமுடிக்குத்
துண்டமதிசேர்சடைக்கொன்றை மாலைவாங்கிச்சூட்டினார். (ருசு)

எல்லாவுலகுமார்ப்பெடுப்ப வெங்குமலர்மாரிகள்பொழியப்
பல்லாயிரவர்கணநாதர் பாடியாடிக்களிபயிலச்
சொல்லார்மறைகடுதிசெய்யச் சூழ்பல்லியங்களெழச்சைவ
நல்லாறோங்கநாயகமா நங்கள்பெருமான்றொழுதணைந்தார். (ருஎ)

ஞாலமறியப்பிழைபுரிந்து நம்பரருளானன்மறையின்
சீலந்திகழுஞ்சேய்ஞலூர்ப் பிள்ளையார்தந்திருக்கையிற்
கோலமழுவாலேறுண்டு குற்றநீங்கிச்சுற்றமுடன்
மூலமுதல்வர்சிவலோக மெய்தப்பெற்றான்முதுமறையோன். (ருஅ)

வந்துமிகைசெய்தாதைதாண் மழுவாற்றுணித்தமறைச்சிறுவர்
அந்தவுடம்புதன்னுடனே யரனார்மகனாராயினார்
இந்தநிலைமையறிந்தாரா ரீறிலாதார்தமக்கன்பு
தந்தவடியார்செய்தனவே தவமாமன்றேசாற்றுங்கால். (ருகூ)

நேசநிறைந்தவுள்ளத்தா னீலநிறைந்தமணிகண்டத்
தீசனடியார்பெருமையினை யெல்லாவுயிருந்தொழவெடுத்துத்
தேசமுய்யத்திருத்தொண்டத் தொகைமுன்பணித்ததிருவாளன்
வாசமலர்மென்கழல்வணங்க வந்தபிறப்பைவணங்குவாம். (சுo)

ஆக-திருவிருத்தம்-கஉஅo.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, திருச்சேய்ஞலூரிலே, பிராமணகுலத்திலே, காசிபகோத்திரத்திலே, எச்சதத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு அவன் மனைவியாகிய பவித்திரைவயிற்றிலே, விசாரசருமர் என்பவர் திருவவதாரஞ்செய்தார். அவருக்கு, ஐந்துவயசிலே, வேதங்களையும் வேதாங்கங்களையும் சைவாகமங்களையும் பூர்வசன்மத்து அறிவுத்தொடர்ச்சியினாலே கற்பிப்பார் இன்றித் தாமே அறியுமறிவு உண்டாயிற்று. தந்தை தாயர்கள் அவருக்கு ஏழுவயசிலே உபநயனச்சடங்கு செய்து, தகுந்த ஆசாரியர்களைக்கொண்டு வேதாத்தியயனஞ் செய்விப்பிக்கத் தொடங்கினார்கள். அவ்வாசாரியர்கள் வேதங்

களையும் பிறகலைகளையும் ஓதுவித்தற்கு முன்னமே அவ்விசாரசருமருக்குத் தாமே அறிந்துகொள்ளும்படி அமைந்திருக்கின்ற புத்தியின்றிறத்தைக் கண்டு, ஆச்சரியம் அடைந்தார்கள்.

பாலியதசையிலே சான்றோர்க்கு உரிய குணத்தை அடைந்திருக்கின்ற அவ்விசாரசருமர், ஆன்மாக்களாகிய நாமெல்லாம் அநாதிமல பெத்தர் என்பதும், நமக்கு அம்மலசத்தியைக் கெடுத்து நித்தியமாகிய பேரின்பத்தைத் தரும்பொருட்டுச் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகம் என்கின்ற பஞ்சகிருத்தியங்களையும் செய்வாராகிய ஒருபதி உண்டு என்பதும், அப்பதிக்குத் தம்வயத்தராதல், தூயவுடம்பினராதல், இயற்கையுணர்வினராதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்னும் எட்டுக்குணங்களும் இன்றியமையாதன என்பதும், அக்குணங்களெல்லாம் உடைய பதி சிவபெருமானே என்பதும், அவர் அத்தொழில் இயற்றுதல் தம்மோடொற்றுமையுடைய சிவசத்தியாலாகும் என்பதும், அதுபற்றி அவ்விருவருமே நமக்குப் பரமபிதா மாதாக்கள் என்பதும், அதனால் அவர்களிடத்தேயே நாம் அன்புசெய்ய வேண்டும் என்பதும், அவ்வன்பை மற்றோர்பிறவியில் செய்குவமெனின் அதற்குக் கருவியாய்ச் சிறந்துள்ள இம்மானுடப்பிறவி பெறுதற்கரியது என்பதும், அப்படியாகில் இப்பிறவியிற்றானே இன்னுஞ் சிலநாட்சென்ற பின் செய்குவமெனின் இப்பிறவி நீங்குமவதி அறிதற்கரியது என்பதும், அங்ஙனமாகையால் அவ்வன்பு செய்தற்கேயன்றி மற்றொன்றிற்கும் சமயமில்லை என்பதும், அது செய்யுமிடத்தும் நமக்கு ஓர் சாமர்த்தியமுளதெனக் கருதி அதனை முன்னிடாது திருவருளையே முன்னிட்டு நின்று செய்ய வேண்டும் என்பதுமே வேதாகமமுதலிய நூல்களெல்லாவற்றானும் துணியப்படும் மெய்ப்பொருள் என்று சந்தேகவிபரீதமறத் துணிந்துகொண்டார். அந்த யதார்த்தமாகிய துணிவு தோன்றவே, அவருக்குச் சிவபெருமானிடத்தே மெய்யன்பு கலைதோறும் வளர்வதாயிற்று.

ஒருநாள் அவர் தம்மோடு அத்தியயனஞ் செய்கின்ற பிள்ளைகளோடும் அவ்வூரவர்களுடைய பசுநிரைகளுடன் கூடிச்சென்றபொழுது, ஓரீற்றுப்பசு ஒன்று மேய்ப்பானாகிய இடையனைக் குத்தப்போயிற்று. அவ்விடையன் சிறிதும் பாவத்துக்கு அஞ்சாமல் அப்பசுவைக் கோலினால் அடித்தான். மெய்யறிவுடைய அவ்விசாரசருமர் அது கண்டு மிகுந்த பதைபதைப்போடும் அவன் சமீபத்திற்சென்று, மகா கோபங்கொண்டு, பின்னும் அடியாதபடி அவனைத் தடுத்து நின்று, பசுக்கள் சிவலோகத்தினின்றும் பூமியில் வந்த வரலாற்றையும், அவைகளின் உறுப்புக்களிலே தேவர்களும் முனிவர்களும் தீர்த்தங்களும் இருத்தலையும்,

அவை தரும் பஞ்சகவ்வியங்கள் சிவபிரானுக்கு அபிஷேகத் திரவிய மாதலையும், சிவசின்னமாகிய விபூதிக்கு மூலம் அவற்றின் சாணமாதலையும், சிந்தித்து, அந்தப்பசுக்களைத் தாமே மேய்க்கும்படி விரும்பி, அவ் விடையனை நோக்கி, "இப்பசுநிரைகளை இனி நீ மேய்க்கவேண்டியதில்லை. நானே மேய்ப்பேன்" என்றார். இடையன் அதைக்கேட்டுப் பயந்து கும்பிட்டுக்கொண்டு போய்விட்டான்.

விசாரசருமர் பசுக்களை அவ்வவற்றிற்குரிய பிராமணர்களின் சம்மதி பெற்று, தினந்தோறும் மண்ணியாற்றங்கரையில் இருக்கின்ற காடுகளிலும், வயலோரங்களிலும், புல்லு நிறைந்திருக்கும் இடத்திற் கொண்டுபோய், வேண்டுமட்டும் மேயவிட்டும், தண்ணீரூட்டியும், வெய்யிலெறிக்கும்பொழுது நிழலிருக்குமிடங்களிலே செலுத்தியும், நன்றாகக் காப்பாற்றி, சமித்துக்கள் ஒடித்துக்கொண்டு, அஸ்தமயனத்துக்குமுன் அவ்வப்பசுக்களை அவரவர் வீட்டுக்கு ஓட்டிக்கொண்டு போய்விட்டு, தம்முடைய வீட்டுக்குப் போவார்.

இப்படிச் செய்யுங்காலத்திலே, பசுநிரைகளெல்லாம் அழகோடு மிகப்பெருகி, போசனபானங்களிலே குறைவில்லாமையால் மகிழ்ச்சியடைந்து, இராப்பகல் மடி சுரந்து பாலை மிகப்பொழிந்தன. பிராமணர்கள் நித்திய ஓமாகுதியின்பொருட்டு விட்டிருக்கின்ற தங்கள பசுக்கள் விசாரசருமர் மேய்க்கத் தொடங்கியபின் முன்னிலும் அதிகமாகக் கறக்கக் காண்கையால் மிகுந்த சந்தோஷத்தை அடைந்தார்கள். பசுக்கள் எல்லாவகையுபசரிப்பினாலும் அளவிறந்த களிப்பை அடைந்து, வீட்டிலே கட்டப்பட்டிருக்கின்ற தங்கள் கன்றுகள் பிரிந்தாலும் சிறிதும் வருத்தமுறாதவைகளாகி, மிகுந்த அன்போடு தங்களை மேய்க்கின்ற விசாரசருமர் சற்றாயினும் பிரிவாராகில் அப்பிரிவாற்றாமல் தாய்போல உருகி, அவர் சமீபத்திலே சென்று கனைத்து, மடி சுரந்து ஒருவர் கறக்காமல் தாமே பால்பொழியும். அது கண்ட விசாரசருமர் அப்பால் பரமசிவனுக்குத் திருமஞ்சனமாந் தகுதியுடைமையை நினைந்தார். நினையவே, அவருக்குச் சிவார்ச்சனையினிடத்தே வேட்கை தலைப்பட்டது. உடனே அவர் மண்ணியாற்றின் கரையிலிருக்கின்ற ஒரு மணற்றிட்டையிலே திருவாத்திமரத்தின்கீழே மணலினாலே ஒரு சிவலிங்கங் குவித்து, திருக்கோயிலும் கோபுரமும் மதிலும் வகுத்து, திருவாத்திப்பூமுதலிய புஷ்பங்களும் பத்திரங்களும் பறித்துத் திருப்பூங்கூடையிலிட்டுக்கொண்டு வந்து வைத்துவிட்டு, புதிய குடங்களைத் தேடி வாங்கிக் கொண்டு வந்து, கறவைப்பசுக்கள் ஒவ்வொன்றினிடத்திலும் சென்று, முலையைத் தீண்டினார். அவைகள் கனைத்துப் பாலைப்பொழிந்தன. பாலினாலே நிறைவுற்ற அக்குடங்களைக் கொண்டுபோய் ஆலயத்திலே வைத்துப் பத்திரபுஷ்பங்களால் சுவாமியை அருச்சித்து, பாலினால் அபிஷேகஞ்செய்

தார். பரமசிவன் அவ்விலிங்கத்தினின்று அவ்விசாரசருமர் அன்போடு செய்யும் அருச்சனையைக் கொண்டருளினார். விசாரசருமர் சிவபூசைக்கு அங்கமாகிய திருமஞ்சனம் முதலிய பொருள்களுள், கிடையாதவைகளை மானசமாகக் கிடைத்தனவாகக் கொண்டு நிறைவுசெய்து, விதிப்படி அருச்சித்து வணங்கிவந்தார். பசுக்கள் அபிஷேகத்தின்பொருட்டு அவ் விசாரசருமர் கொண்டுவரும் குடங்கள் நிறையப் பாலைச் சொரிந்தும், பிராமணர்க்கும் முன்போலக் குறைவு தீரப் பாலைக் கொடுத்து வந்தன.

இப்படி நெடுநாளாகப் பார்ப்பவர்களுக்கு விளையாட்டுப்போலத் தோன்றுகின்ற சிவார்ச்சனையைச் செய்து வரும்பொழுது, அதைக் கண்ட ஒருவன் அதின் உண்மையை அறியாதவனாகி, அதை அவ்வூர்ப் பிராமணர்களுக்குத் தெரிவித்தான். அவர்கள் அதைச் சபையாருக்குத் தெரிவிக்க; சபையார் எச்சதத்தனை அழைத்து, "பிராமணர்கள் ஓமாகுதியின் பொருட்டுப் பால் கறக்கும் பசுக்களையெல்லாம் உம்முடைய புத்திரனாகிய விசாரசருமன் அன்புடனே மேய்ப்பவன்போலக் கொண்டு போய்ப் பாலைக் கறந்து விருதாவாக மணலிலேசொரிந்து விளையாடுகின்றான்" என்றார்கள். எச்சதத்தன் அதைக் கேட்டுப் பயந்து, "சிறு பிள்ளையாகிய விசாரசருமன் செய்கின்ற இந்தச் செய்கையை இதற்கு முன் நான் சிறிதாயினும் அறிந்திலேன். அக்குற்றத்தை நீங்கள் பொறுத்துக்கொள்ளவேண்டும்" என்று குறையிரந்து வணங்கி, "இனி அவன் அப்படிச் செய்வானாயின், அக்குற்றம் என்மேலதாகும்" என்று சொல்லி, அச்சபையாரிடத்திலே அநுமதி பெற்றுக்கொண்டு, வீட்டுக்குப் போய் விட்டான்.

மற்றநாட்காலையில் அந்தச் சமாசாரத்தைச் சோதித்தறிய விரும்பி விசாரசருமர் பசு மேய்க்கப்போனபின்பு, அவர் அறியாதபடி அவர் பின்னே சென்றான். விசாரசருமர் பசுக்களை ஓட்டி மண்ணியாற்றின் மணற்றிட்டையிலே கொண்டு போனதைக் கண்டு, எச்சதத்தன் அருகில் இருந்த ஒரு குராமரத்தில் ஏறி, அங்கே நிகழ்வதை அறியும்படி ஒளித்திருந்தான். விசாரசருமர் ஸ்நானம்பண்ணி, முன்போல மணலினாலே திருக்கோயிலுஞ் சிவலிங்கமுஞ்செய்து, பத்திரபுஷ்பங்கள் பறித்துக்கொண்டுவந்து வைத்து, பின்பு பாற்குடங்களைக் கொண்டுவந்து தாபித்து, அருச்சனைக்கு வேண்டிய பிறவற்றையும் அமைத்து, மிகுந்த அன்பினோடு பூசைக்கு ஆரம்பித்து, சிவலிங்கத்துக்குப் பத்திரபுஷ்பங்களைச் சாத்தி, பாற்குடங்களை எடுத்து அபிஷேகம் பண்ணினார். குராமரத்தில் ஏறியிருந்த எச்சதத்தன் அதைக் கண்டு, மிகுந்த கோபங்கொண்டு, சீக்கிரம் இறங்கிப் போய்த் தன் கையிலிருந்த தண்டினால் அவ்விசாரசருமருடைய திருமுதுகிலே அடித்துக் கொடுஞ்சொற்களைச் சொல்ல; அவருடைய மனம் பூசையிலேயே முழுவதும் பதிந்து கிடந்த

படியால், அது அவருக்குப் புலப்படவில்லை. பின்னும் எச்சதத்தன் கோபங்கொண்டு பலமுறையடிக்க; விசாரசருமர் அவ்வடியாலாகிய வருத்தந்தோன்றப்பெறாதவராகி, அபிஷேகத் திருத்தொண்டினின்றுந் தவறாதிருந்தார். அவருடைய உள்ளன்பை அறியாத எச்சதத்தன் மிகக்கோபித்துத் திருமஞ்சனப் பாற்குடத்தைக் காலினால் இடறிச் சிந்தினான். உடனே விசாரசருமர் அதைக்கண்டு, அது செய்தவன் பிதாவும் பிராமணனும் குருவுமாகிய எச்சதத்தனென்பதை அறிந்தும், அவன் செய்தது அதிபாதகமாகிய சிவாபராதமாதலால், அவன்காலைத் துணிக்கக்கருதித் தமக்குமுன் கிடந்த ஒருகோலை எடுக்க, அது மழுவாயிற்று. அதினாலே அவன்கால்களை வெட்டினார். சிவபூசைக்கு வந்த அவ்விடரை நீக்கினவராகிய விசாரசருமர் முன்போல அருச்சனை செய்ய; சிவபெருமான் உமாதேவியாரோடும் இடபாரூடராய்த் தோன்றியருளினார். விசாரசருமர் அது கண்டு மனங்களித்து விழுந்து நமஸ்கரித்தார். பரமசிவன் அவரைத் தம்முடைய திருக்கரங்களினால் எடுத்து, "நீ நம்பொருட்டு உன்னைப் பெற்ற பிதாவை வெட்டினாய். இனி உனக்கு நாமே பிதா" என்று அருளிச்செய்து, அவரை அணைத்து, அவருடைய திருமேனியைத் தடவி உச்சிமோந்தருளினார். சிவபிரானுடைய திருக்கரத்தினாலே தீண்டப்பட்ட அவ்விசாரசருமருடைய திருமேனி சிவமயமாகித் திவ்வியப்பிரகாசத்தோடு விளங்கிற்று. பரமசிவன் அவரை நோக்கி, "நாம் நம்முடைய தொண்டர்களுக்கெல்லாம் உன்னைத் தலைவனாக்கி, நாம் ஏற்றுக்கொண்ட அமுதும் பரிவட்டமும் புஷ்பமும் உனக்கே கிடைக்கும்படி சண்டேசுரபதத்தைத் தந்தோம்" என்று திருவாய்மலர்ந்து, தம்முடைய சடையிலே தரித்திருக்கின்ற கொன்றைமாலையை எடுத்து அவருக்குச் சூட்டியருளினார். அவ்விசாரசருமர், சமஸ்தரும் ஆரவாரிக்கவும், எவ்விடத்தும் புஷ்பமழை பொழியவும், சிவகணங்கள் பாடியாடிக் களிகூரவும், வேதங்கள் கோஷிக்கவும், நானாபேதவாத்தியங்கள் முழங்கவும், சைவசமயம் நிலைபெறும்படி பரமசிவனைக் கும்பிட்டு; அவராலே தரப்பட்ட சண்டேசுரபதத்தை அடைந்தார். எச்சதத்தர் சிவத்துரோகஞ்செய்தும், சண்டேசுரநாயனாராலே தண்டிக்கப்பட்டமையால், அக்குற்றம் நீங்கிச் சுற்றத்துடன் சிவலோகத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

சண்டேசுரநாயனார்புராண முற்றிற்று.

---

மூன்றாவது,

மும்மையாலுலகாண்ட சருக்க முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நான்காவது,

# திருநின்றசருக்கம்.

## திருநாவுக்கரசுநாயனார் புராணம்.

வேறு.

திருநாவுக்கரசுவளர் திருத்தொண்டினெறிவாழ
வருஞானத்தவமுனிவர் வாகீசர்வாய்மைதிகழ்
பெருநாமச்சீர்பரவ லுறுகின்றேன்பேருலகில்
ஒருநாவுக்குரைசெய்ய வொண்ணாமையுணராதேன். (க)

தொன்மைமுறைவருமண்ணின் றுகளன்றித்துகளில்லா
நன்மைநிலையொழுக்கத்தி னலஞ்சிறந்தகுடிமல்கிச்
சென்னிமதிபுனையவளர் மணிமாடச்செழும்பதிகண்
மன்னிநிறைந்துளதுதிரு முனைப்பாடிவளநாடு. (உ)

புனப்பண்ணைமணியினெடும் புறவினறும்புதுமலரின்
கனப்பெண்ணிநிரைசூழ்ந்து களைமருங்குபெரும்பகட்டேர்
இனப்பண்ணையுழும்பண்ணை யெறிந்துலவிபெவ்வுலகும்
வனப்பெண்ணவரும்பெண்ணை மாநதிபாய்வளம்பெருகும். (௩)

காலெல்லாந்தகட்டுவரால் கரும்பெல்லாங்கண்பொழிதேன்
பாலெல்லாங்கதிர்ச்சாலி பரப்பெல்லாங்குலைக்கமுகு
சாலெல்லாந்தரளநிரை தடமெல்லாஞ்செங்கழுநீர்
மேலெல்லாமகிற்றூபம் விருந்தெல்லாந்திருந்துமனை. (௪)

கடைஞர்மிடைவயற்றுறைத்த கரும்புகுறைபொழிகொழுஞ்சா
றிடைதொடுத்ததேன்கிழிய விழிந்தொழுகுநீத்தமுடன்
புடைபரந்துஞிமிறொலிப்பப் புதுப்புனல்போமடையுடைப்ப
உடைமடையக்கரும்படுகட் டியினடைப்பவூர்கடொறும். (௫)

கருங்கதலிப்பெருங்குலைகள் களிற்றுக்கைமுகங்காட்ட
மருங்குவளர்கதிர்ச்செங்நெல் வயப்புரவிமுகங்காட்டப்
பெருஞ்சகடுதேர்காட்ட வினைஞரார்ப்பொலிபிறங்க
நெருங்கியசாதுரங்கபல நிகர்ப்பனவாநிறைமருதம். (௬)

நறையாற்றுங்கமுகுநவ மணிக்கமுத்தினுடன்கூந்தற்
பொறையாற்றாமகளிரெனப் புறம்பலைதண்டலைவேலித்
துறையாற்றமணிவண்ணச் சுரும்பிரைக்கும்பெரும்பெண்ணை
நிறையாற்றுநீர்க்கொழுந்து படர்ந்தேறுநிலைமையதால். (எ)

மருமேவுமலர்மேய மாகடலினுட்படியும்
உருமேகமெனமண்டி யுகைத்தகருங்கன்றுபோல்
வருமேனிச்செங்கண்வரான் மடிமுட்டப்பால்சொரியுங்
கருமேதிதனைக்கொண்டு கனைபுரள்வதிளவாவி. (அ)

மொய்யளிசூழ்நிரைநீல முழுவலயங்களினலையச்
செய்யதளிர்நறுவிரலிற் செழுமுகையினகஞ்சிறப்ப
மெய்யொளியினிழற்காணு மாடியெனவெண்மதியை
வையமகள்கையணைத்தாற் போலுயர்வமலர்ச்சோலை. (கூ)

எயிற்குலவும்வளம்பதிக ளெங்குமணந்தங்கும்வயற்
பயிர்க்கண்வியலகலிடங்கள் பரந்துயர்நெற்கூடுகளும்
வெயிற்கதிர்மென்குழைமகளிர் விரவியமாடமுமேவி
மயிற்குலமுமுகிற்குலமு மாறாடமருங்காடும். (க0)

மறந்தருதீநெறிமாற மணிகண்டர்வாய்மைநெறி
யறந்தருநாவுக்கரசு மாலாலசுந்தரரும்
பிறந்தருளவுளதானா னம்மளவோபேருலகிற்
சிறந்ததிருமுனைப்பாடித் திறம்பாடுஞ்சீர்ப்பாடு. (கக)

இவ்வகையதிருநாட்டி லெனைப்பலவூர்களுமென்று
மெய்வ்வளங்களோங்கவரு மேன்மையனவாங்கவற்றுட்
சைவநெறியேழுலகும் பாலிக்குந்தன்மையினாற்
றெய்வநெறிச்சிவம்பெருக்குந் திருவாமூர்திருவாமூர். (கஉ)

ஆங்குவனமுலைகள்சுமந் தணங்குவனமகளிரிடை
ஏங்குவனநூபுரங்க ளிரங்குவனமணிக்காஞ்சி
ஓங்குவனமாடநிரை யொழுகுவனவழுவிலற
நீங்குவனதீங்குநெறி நெருங்குவனபெருங்குடிகள். (கங)

மலர்நீலம்வயல்காட்டு மைஞ்ஞீலமதிகாட்டும்
அலர்நீடுமறுகாட்டு மணியூசல்பலகாட்டும்
புலர்நீலவிருள்காட்டும் பொழுதுழவரொலிகாட்டுங்
கலநீடுமனைகாட்டுங் கனைகாட்டாப்பெருவளங்கள். (கச)

தலத்தின்கண்விளங்கியவத் தனிப்பதியிலனைத்துவித
நலத்தின்கண்வழுவாத நடைமரபிற்குடிநாப்பண்
விலக்கின்மனையொழுக்கத்தின் மேதக்கநிலைவேளாண்
குலத்தின்கண்வரும்பெருமைக் குறுக்கையர்தங்குடிவிளங்கும். (கரு)

அக்குடியின்மேற்றோன்ற லாயபெருந்தன்மையினார்
மிக்கமனையறம்புரிந்து விருந்தளிக்குமேன்மையினார்
ஒக்கல்வளர்பெருஞ்சிறப்பி னுளரானாருளரானார்
திக்குநிலவும்பெருமை திகழவரும்புகழனார். (கசு)

புகழனார்தமக்குரிமைப் பொருவில்குலக்குடியின்கண்
மகிழவருமணம்புணர்ந்த மாதினியார்மணிவயிற்றி
னிகழுமலர்ச்செங்கமல நிரைவிதழினகவயினிற்
றிகழவருந்திருவனைய திலதவதியார்பிறந்தார். (கஎ)

திலதவதியார்பிறந்து சிலமுறையாண்டகன்றதற்பின்
அலகில்கலைத்துறைதழைப்ப வருந்தவத்தோர்நெறிவாழ
உலகின்வருமிருணீக்கி யொளிவிளங்குகதிர்போல
மலருமருணீக்கியார் வந்தவதாரஞ்செய்தார். (கஅ)

மாதினியார்திருவயிற்றின் மன்னியசீர்ப்புகழனார்
காதலனாருதித்ததற்பின் கடன்முறைமைமங்கலங்கண்
மேதகுநல்வினைசிறப்ப விரும்பியபாராட்டினுடன்
ஏதமில்பல்கிளைபோற்ற விளங்குழவிப்பதங்கடந்தார். (கக)

மருணீக்கியார்சென்னி மயிர்நீக்குமணவினையுந்
தெருணீர்ப்பன்மாந்தரெலா மகிழ்சிறப்பச்செய்ததற்பின்
பொருணீத்தங்கொளவீசிப் புலன்கொளுவமனமுகிழ்த்த
சுருணீக்கிமலர்விக்குங் கலைபயிலத்தொடங்குவித்தார். (உ0)

தந்தையார்களிமகிழ்ச்சி தலைசிறக்குமுறைமையினாற்
சிந்தைமலர்ந்தெழுமுணர்விற் செழுங்கலையின்றிறங்களெல்லா
முந்தைமுறைமையிற்பயின்று முதிரவறிவெதிரும்வகை
மைந்தனார்மறுவொழித்த விளம்பிறைபோல்வளர்கின்றார். (உக)

அந்நாளிற்றிலதவதி யாருக்காண்டாறிரண்டின்
முன்னாகவொத்தகுல முதல்வேளாண்குடித்தலைவர்
மின்னார்செஞ்சடையண்ணன் மெய்யடிமைவிருப்புடையார்
பொன்னருமணிமௌலிப் புரவலன்பாலருளுடையார். (உஉ)

ஆண்டகைமைத்தொழிலின்க ணடலரியேறெனவுள்ளார்
காண்டகையபெருவனப்பிற் கலிப்பகையாரெனும்பெயரார்
பூண்டகொடைப்புகழனார் பாற்பொருவின்மகட்கொள்ள
வேண்டியெழுங்காதலினன் மேலோரைச்செலவிட்டார். (உ௩)

அணங்கனையதிலதவதி யார்தம்மையாங்கவர்க்கு
மணம்பேசிவந்தவரும் வந்தபடியறிவிப்பக்
குணம்பேசிக்குலம்பேசிக் கோதில்சீர்ப்புகழனார்
பணங்கொளரவகலல்குற் பைந்தொடியைமணநேர்ந்தார். (உச)

கன்னிதிருத்தாதையார் மணமிசைவுகலிப்பகையார்
முன்னணைந்தாரறிவிப்ப வதுவைவினைமுடிப்பதன்முன்
மன்னவற்குவடபுலத்தோர் மாறேற்கமற்றவர்மேல்
அன்னவர்க்குவிடைகொடுத்தா னவ்வினைமேலவரகன்றார். (உரு)

வேந்தற்குற்றுழிவினைமேல் வெஞ்சமத்தில்விடைகொண்டு
போந்தவரும்பொருப்புடையு முடன்கொண்டுசிலநாளிற்
காய்ந்தசினப்பகைப்புலத்தைக் கலந்துகடுஞ்சமர்க்கடலை
நீந்துவார்நெடுநாள்க ணிகழ்வெம்போர்த்துறைவிளைத்தார். (உசு)

ஆயநாளிடையிப்பா லணங்கனையாடனைப்பயந்த
தூயகுலப்புகழனார் தொன்றுதொடுநிலையாமை
மேயவினைப்பயத்தாலே யிவ்வுலகைவிட்டகலத்
தீயவரும்பிணியுழந்து விண்ணுலகிற்சென்றடைந்தார். (உஎ)

மற்றவர்தாமுயிர்நீப்ப மனைவியார்மாதினியார்
சுற்றமுடன்மக்களையுந் துகளாகவேநீத்துப்
பெற்றிமையாலுடனென்றும் பிரியாதவுலகெய்துங்
கற்புநெறிவழுவாமற் கணவனாருடன்சென்றார். (உஅ)

தாதையாரும்பயந்த தாயாருமிறந்ததற்பின்
மாதரார்திலதவதி யாருமவர்பின்வந்த
காதலனார்மருணீக்கி யாருமனக்கவலையினாற்
பேதுறுநற்சுற்றமொடும் பெருந்துயரிலழுந்தினார். (உகூ)

ஒருவாறுபெருங்கிளைஞர் மனந்தேற்றத்துயரொழிந்து
பெருவானமடைந்தவர்க்குச் செய்கடன்கள்பெருக்கினார்
மருவார்மேன்மன்னவற்கா மலைப்போங்கலிப்பகையார்
பொருவாரும்போர்க்களத்தி லுயிர்கொடுத்துப்புகழ்கொண்டார். (௩௰)

வெம்முனைமேற்கலிப்பகையார் வேல்வேந்தனேவப்போய்
அம்முனையிற்பகைமுருக்கி யமருலகமாள்வதற்குத்
தம்முடையகடன்கழித்த பெருவார்த்தைதலஞ்சாற்றச்
செம்மலர்மேற்றிருவனைய திலதவதியார்கேட்டார். (௩க)

எந்தையுமெம்மனையுமவர்க் கெனைக்கொடுக்கவிசைந்தார்கள்
அந்தமுறையாலவர்க்கே யுரியதுதானாதலினால்
இந்தவுயிரவருயிரோ டிசைவிப்பனெனத்துணிய
வந்தவர்தம்மடியிணைமேன் மருணீக்கியார்விழுந்தார். (௩உ)

அந்நிலையின்மிகப்புலம்பி யன்னையுமத்தனுமகன்ற
பின்னையுநானுமைவணங்கப் பெறுதலினாலுயிர்தரித்தேன்
என்னையினித்தனிக்கைவிட் டேகுவீரெனில்யானு
முன்னமுயிர்நீப்பனென மொழிந்திட்டினைமுழந்தினார். (௩௩)

தம்பியாருளராக வேண்டுமெனவைத்ததயா
உம்பருலகணையவுறு நிலைவிலக்கவுயிர்தாங்கி
அம்பொன்மணிநூற்றுங்கா தனைத்துயிர்க்குமருடாங்கி
இம்பர்மனைத்தவம்புரிந்து திலதவதியாரிருந்தார். (௩௪)

மாசின்மனத்துயரொழிய மருணீக்கியார்நிரம்பித்
தேசநெறிநிலையாமை கண்டறங்கள்செய்வாராய்க்
காசினிமேற்புகழ்விளங்க நிதியளித்துக்கருணையினால்
ஆசிலறச்சாலைகளுந் தண்ணீர்ப்பந்தருமமைப்பார். (௩௫)

காவளர்த்துங்குளந்தொட்டுங் கடப்பாடுவழுவாமல்
மேவினர்க்குவேண்டுவன மகிழ்ந்தளித்தும்விருந்தளித்து
நாவலர்க்குவளம்பெருக நல்கியுநானிலத்துள்ளோர்
யாவருக்குந்தவிராத வீகைவினைத்துறைநின்றார். (௩௬)

நில்லாதவுலகியல்பு கண்டுநிலையாவாழ்க்கை
அல்லேனென்றறத்துறந்து சமயங்களானவற்றி
னல்லாறுதெரிந்துணர நம்பரருளாமையினாற்
கொல்லாமைமறைந்துறையு மமண்சமயங்குறுகினார். (௩௭)

பாடலிபுத்திரமென்னும் பதியணைந்துசமண்பள்ளி
மாடணைந்தார்வல்லமணர் மருங்கணைந்துமற்றவர்க்கு
வீடறியுநெறியிதுவே யெனமெய்போற்றங்களுடன்
கூடவருமுணர்வுகொளக் குறிபலவுங்கொளுவினார். (௩௮)

அங்கவருமமண்சமயத் தருங்கலைநூலானவெலாம்
பொங்குமுணர்வுறப்பயின்றே யந்நெறியிற்புலன்சிறப்பத்
துங்கமுழுவுடற்சமணர் சூழ்ந்துமகிழ்வாரவர்க்குத்
தங்களின்மேலாந்தரும சேனரெனும்பேர்கொடுத்தார். (௩௯)

அத்துறையின்மீக்கூரு மமைதியினாலகலிடத்திற்
சித்தநிலையறியாத தேரரையும்வாதின்கண்
உய்த்தவுணர்வினில்வென்றே யுலகின்கணொளியுடைய
வித்தகராயமண்சமயத் தலைமையினின்மேம்பட்டார். (௪௦)

அந்நெறியின்மிக்கா ரவரொழுகவான்றதவச்
செந்நெறியின்வைகுந் திலதவதியார்தாமுத்
தொன்னெறியின்சுற்றத் தொடர்பொழியத்தூயசிவ
நன்னெறியேசேர்வதற்கு நாதனருணண்ணுவார். (௪௧)

பேராதபாசப் பிணிப்பொழியப்பிஞ்ஞகன்பால்
ஆராதவன்புபெற வாதரித்தவம்மடவார்
நீரார்கெடிலவட நீள்கரையினீடுபெருஞ்
சீரார்திருவதிகை வீரட்டானஞ்சேர்ந்தார். (௪௨)

சென்றுதிருவீரட்டா னத்திருந்தசெம்பவளக்
குன்றையடிமிசைப்பணிந்து கோதில்சிவசின்னம்
அன்றுமுதற்றாங்கி யார்வமுறத்தங்கையாற்
றுன்றுதிருப்பணிகள் செய்யத்தொடங்கினார். (௪௩)

புலர்வதன்முன்றிருவலகு பணிமாறிப்புனிறகன்ற
நலமலியான்சாணத்தா னன்குதிருமெழுக்கிட்டு
மலர்கொய்துகொடுவந்து மாலைகளுந்தொடுத்தமைத்துப்
பலர்புகழும்பண்பினாற் றிருப்பணிகள்பலசெய்தார். (௪௪)

நாளுமிகும்பணிசெய்து குறைந்தடையநன்னாளிற்
கேளுறுமன்புறவொழுகுங் கேண்மையினார்பின்பிறந்தார்
கோளுறுதீவினைமுந்தப் பரசமயங்குறித்ததற்கு
மூளுமனக்கவலையினான் முற்றவருந்துயருழந்து. (௪௫)

தூண்டுதவவிளக்கனையார் சுடரொளியைத்தொழுதென்னை
ஆண்டருளுநீராகி லடியேன்பின்வந்தவனை
ஈண்டுவினைப்பரசமயக் குழிநின்றுமெடுத்தருள
வேண்டுமெனப்பலமுறையும் விண்ணப்பஞ்செய்தனரால். (௪௬)

தவமென்றுபாயிடுக்கித் தலைபறித்துநின்றுண்ணும்
அவமொன்றுநெறிவீழ்வான் வீழாமேயருளுமெனச்
சிவமொன்றுநெறிநின்ற திலகவதியார்பரவப்
பவமொன்றும்வினைதீர்ப்பார் திருவுள்ளம்பற்றுவார். (௪௭)

மன்னுதபோதனியார்க்குக் கனவின்கண்மழவிடையார்
உன்னுடையமனக்கவலை யொழிநீயுன்னுடன்பிறந்தான்
முன்னமேமுனியாகி யெனையடையத்தவமுயன்றான்
அன்னவனையினிச்சூலை மடுத்தாள்வமெனவருளி. (௪௮)

பண்டுதவம்புரிதவத்துப் பழுதினளவிறைவழுவுந்
தொண்டரையாளத்தொடங்குஞ் சூலைவேதனைதன்னைக்
கண்டருநெற்றியரருளக் கடுங்கனல்போலடுங்கொடிய
மண்டுபெருஞ்சூலையவர் வயிற்றினிடைப்புக்கதால். (௪௯)

அடைவிலமண்புரிதரும சேனர்வயிற்றடையுமது
வடவனலுங்கொடுவிடமும் வச்சிரமும்பிறவுமாங்
கொடியவெலாமொன்றாகு மெனக்குடரினகங்குடையப்
படருழந்துநடுங்கியமண் பாழியறையிடைவீழ்ந்தார். (௫௰)

அச்சமயத்திடைத்தாமுன் னதிகரித்துவாய்த்துவரும்
விச்சைகளாற்றடுத்திடவு மேன்மேலுமிகமுடுகி
உச்சமுறவேதனைநோ யோங்கியெழவாங்கவர்தா
நச்சரவின்விடந்தலைக்கொண் டெனமயங்கிநவையுற்றார். (௫௧)

அவர்நிலைமைகண்டதற்பி னமண்கையர் பலரீண்டிக்
கவர்கின்றவிடம்போன்முன் கண்டறியாக்கொடுஞ்சூலை
இவர்தமக்குவந்ததினி யாதுசெயலென்றழிந்தார்
தவமென்றுவினைபெருக்கிச் சார்பல்லாநெறிசார்வார். (ருஉ)

புண்டலைவன்முருட்டமணர் புலர்ந்துசெயலறியாது
குண்டிகைநீர்மந்திரித்துக் குடிப்பித்துந்தணியாமை
கண்டுமிகப்பீலிகொடு காலளவுந்தடவிடவும்
பண்டையினுநோவுமிகப் பரிபவத்தாலிடருழந்தார். (ருங)

தாவாதபுகழ்த்தரும சேனர்க்குவந்தபிணி
ஓவாதுநின்றிடலு மொழியாமையுணர்ந்தாராய்
ஆவாநாமென்செய்கோ மென்றழிந்தமனத்தினராய்ப்
போவார்களித்நம்மாற் போக்கரிதாமெனப்புகன்று. (ருச)

குண்டர்களுங்கைவிட்டார் கொடுஞ்சூலைக்கொண்டு
மண்டிமிகமேன்மேலு முடுகுதலான்மதிமயங்கிப்
பண்டையுறவுணர்ந்தார்க்குத் திலதவதியாருளராக்
கொண்டவர்பாலூட்டுவான் றனைவிட்டார்குறிப்புணர்த்த. (ருரு)

ஆங்கவன்போய்த்திருவதிகை தனையடையவருந்தவத்தார்
பூங்கமழ்நந்தனவனத்தின் புறம்பணையக்கண்டிறைஞ்சி
யீங்கியானுமக்கிளையா ரேவலினல்வந்ததெனத்
தீங்குளவோவெனவினவ மற்றவனுஞ்செப்புவான். (ருசு)

கொல்லாதசூலைநோய் குடர்முடக்கித்தீராமை
யெல்லாருங்கைவிட்டா ரிதுசெயலென்முன்பிறந்த
நல்லாள்பாற்சென்றியம்பி நானுய்யும்படிகேட்டிங்
கல்லாகும்பொழுதணைவா யென்றுரென்றறிவித்தான். (ருஎ)

என்றவன்முன்கூறுதலும் யானங்குன்னுடன்போந்து
நன்றறியாரமண்பள்ளி நண்ணுகிலெனெனுமாற்றஞ்
சென்றவனுக்குரையென்று திலதவதியார்மொழிய
அன்றவனுமீண்டுபோய்ப் புகுந்தபடியவர்க்குரைத்தான். (ருஅ)

அவ்வார்த்தைகேட்டலுமே யயர்வெய்தியிதற்கினியான்
எவ்வாறுசெய்வனென வீசரருள்கூடுதலால்
ஒவ்வாவிப்புன்சமயத் தொழியாவித்துயரொழியச்
செவ்வாறுசேர்திலத வதியார்தாள்சேர்வனென. (ருகூ)

எடுத்தமனக்கருத்துய்ய வெழுதலாலெழுமுயற்சி
யடுத்தலுமேயயர்வொதுங்கத் திருவதிகையணைவதனுக்
குடுத்துழலும்பாயொழிய வுறியுறுகுண்டிகையொழியத்
தொடுத்தபீலியுமொழியப் போவதற்குத்துணிந்தெழுந்தார். (சுo)

பொய்தருமாலுள்ளத்துப் புன்சமணரிடங்கழிந்து
மெய்தருவானெறியடைவார் வெண்புடைவைமெய்சூழ்ந்து
கைதருவார்தமையூன்றிக் காணுமேயிரவின்கட்
செய்தவமாதவர்வாழுந் திருவதிகைசென்றடைவார். (௬௧)

சூலவிவயிற்றகங்கனலுஞ் சூலைநோயுடன்றொடரக்
குலவியெழும்பெருவிருப்புக் கொண்டணையக்குலவரைபோன்
றிலகுமணிமதிற்சோதி யெதிர்கொடிருவதிகையினிற்
றிலதவதியாரிருந்த திருமடத்தைச்சென்றணைந்தார். (௬௨)

வந்தணைந்துதிலதவதி யாரடிமேலுறவணங்கி
நந்தமதுகுலஞ்செய்த நற்றவத்தின்பயனனையீர்
இந்தவுடற்கொடுஞ்சூலைக் கிடைந்தடைந்தேனினிமயங்கா
துய்ந்துகரையேறுநெறி யுரைத்தருளுமெனவுரைத்து. (௬௩)

தாளிணைமேல்விழுந்தயருந் தம்பியார்தமைநோக்கி
யாளுடையதம்பெருமா னருணினைந்துகைதொழுது
கோளில்பரசமயநெறிக் குழியில்விழுந்தறியாது
மூளுமருந்துயருழந்தீ ரெழுந்திரீரெனமொழிந்தார். (௬௪)

மற்றவுரைகேட்டலுமே மருணீக்கியார்தாமும்
உற்றபிணியுடனடுங்கி யெழுந்துதொழவுயர்தவத்தோர்
கற்றைவேணியரருளே காணுமிதுசழலடைந்தோர்
பற்றறுப்பார்தமைப்பணிந்து பணிசெய்வீரெனப்பணித்தார். (௬௫)

என்றபொழுதவரருளை யெதிரேற்றுக்கொண்டிறைஞ்ச
நின்றதபோதனியாரு நின்மலன்பேரருணினைந்து
சென்றுதிருவீரட்டம் புகுவதற்குத்திருக்கயிலைக்
குன்றுடையார்திருநீற்றை யஞ்செழுத்தோதிக்கொடுத்தார். (௬௬)

திருவாளன்றிருநீறு திலதவதியாரளிப்பப்
பெருவாழ்வுவந்ததெனப் பெருந்தகையார்பணிந்தேற்றங்
குருவாரவணிந்துதமக் குற்றவிடத்துய்யுநெறி
தருவாராய்த்தம்முன்பு வந்தார்பின்றாம்வந்தார். (௬௭)

நீறணிந்தாரகத்திருளு நிறைகங்குற்புறத்திருளு
மாறவருந்திருப்பள்ளி யெழுச்சியினின்மாதவஞ்செய்
சீறடியார்திருவலகுந் திருமெழுக்குத்தோண்டியுங்கொண்
டாறணிந்தார்கோயிலினு ளடைந்தவரைக்கொடுபுக்கார். (௬௮)

தொக்கெடிலவீரட்டா னத்திருந்தசெங்கனக
வரைச்சிலையார்பெருங்கோயி றொழுதுவலங்கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின்மிசைவீழ்ந்து தம்பிரான்றிருவருளால்
உரைத்தமிழ்மாலைகள்சாத்து முணர்வுபெறவுணர்ந்துரைப்பார். (௬௯)

வேறு.

நீற்றானிறைவாகியமேனியுட னிறையன்புறுசிந்தையினேசமிக
மாற்றார்புரமாற்றியவேதியனை மருளும்பிணிமாயையறுத்திடுவான்.
கூற்றாயினவாறுவிலக்ககிலீ ரெனநீடியகோதிறிருப்பதிகப்
போற்றாலுலகேழின்வருந்துயரும் போமாறெதிர்நின்றுபுகன்றனரால்.()

மன்னும்பதிகம்மதுபாடியபின் வயிறுற்றடுசூலமறப்பிணிதான்
அந்நின்றநிலைக்கணகன்றிடலு மடியேனுயிரோடருட்டந்தெனச்
செந்நின்றபரம்பொருளானவர்தந் திருவாரருள்பெற்றசிறப்புடையோர்
முன்னின்றதெருட்சிமருட்சியினுன் முதல்வன்கருணைக்கடன்மூழ்கினரே.

அங்கங்களடங்கவுரோமமெலா மடையப்புளகங்கண்முகிழ்த்தலரப்
பொங்கும்புனல்கண்கள்பொழிந்திழியப்புவிமீதுவிழுந்துபுரண்டயர்வார்
இங்கென்செயலுற்றபிழைப்பதனு லேறாதபெருந்திடரேறிடநின் [வார்.
றங்குங்கருணைப்பெருவெள்ளமிடத் தகுமோவெனவின்னனதாமொழி

---

திருச்சிற்றம்பலம்.

திருவதிகைவீரட்டானம் - பண் - கொல்லி.

கூற்றாயினவாறுவிலக்ககிலீர் கொடுமைபலசெய்தனநானறியேன்
ஏற்றாயடிக்கேயிரவும்பகலும் பிரியாதுவணங்குவனெப்பொழுதுந்
தோற்றாதென்வயிற்றினகம்படியே குடரோடுதொடக்கிமுடக்கியிட
வாற்றேனடியேனதிகைக் * கெடில வீரட்டானத்துறையம்மானே.

போர்த்தாயங்கோரானையினீருரிதோல் புறங்காடரங்காநடமாடவல்லா
யார்த்தானரக்கன்றனைமால்வரைக்கீ ழடர்த்திட்டருள்செய்தவதுகருதாய்
வேர்த்தும்புரண்டும்விழுந்துமெழுந்தாலென் வேதனையானவிலக்கிவிடா
யார்த்தார்புனல்சூழதிகைக்கெடில வீரட்டானத்துறையம்மானே.

---

பொய்வாய்மைபெருக்கிய புன்சமயப் பொறையில்சமணீசர் புறத்
துறையாம், அவ்வாழ்குழியின்கண் விழுந்தெழுமா றறியாதுமயங்கிய
வம்புரிவேன், மைவாசநறுங்குழன்மாமலையாண் மணவாளன்மலர்க்கழல்
வந்தடையும், இவ்வாழ்வுபெறத்தரு சூலையினுக் கெதிர்செய்குறையென்
கொ லெனத்தொழுதார். (எ௩)

மேவுற்றவிவ்வேலையி னீடியசீர் வீரட்டமமர்ந்த பிரானருளப், பாவு
ற்றலர்செந்தமிழின் சொல்வளம்பதிகத் தொடைபாடிய பான்மையினல்,
நாவுக்கரசென்றுலகேழினுநின் னுமங்கணயப் புறநண்ணுகவென், றியா
வர்க்கும்வியப்புறமஞ்சுறை வானிடையேயொருவாய்மையெழுந்ததுவே.

---

* கெடிலம் என்பது - திருவதிகையை அடுத்துவரும் நதி இந்தத்தலம் அஷ்ட வீரட்டானத்துளொன்று. சுவாமிபெயர் வீரட்டானேசுவரர். அதிகையப்பர். தேவியார் வீரட்டானநாயகி.— திருப்பதிகம் - ௬௮.

இத்தன்மைநிகழ்ந்துழிநாவின்மொழிக்கிறையாகிய வன்பருமிங்கெடு நாட், சித்தந்திகழ்தீவினையே னடையுந்திருவோவிதுவென்று தெருண்டறியா, அத்தன்மையனுய விராவணனுக்கருளுங் கருணைத்திறமானவதன், மெய்த்தன்மையறிந்து துதிப்பதுவே மேல்கொண்டுவண்ணங்கினர் மெய்யுறவே. (எரு)

பரசுங்கருணைப் பெரியோனருளப் பறிபுன்றலையோர் நெறிபாழ்படவந், தரசிங்கருள்பெற் றுலகுய்ந்ததெனுவடியார் புடைசூழதிகைப்பதிதான், முரசம்படகந் துடிதண்ணுமையாழ் முழவங்கிளைதுந் துபிகண்டையுட, னிசைசங்கொலியெங் குமுழங்குதலா னெடுமாகடலென்ன நிறைந்துளதே. (எசு)

மையற்றுறையேறி மகிழ்ந்தலர்சீர்வாகீசர் மனத்தொடுவாய்மையுடன்
மெய்யுற்றதிருப்பணிசெய்பவராய்விரவுஞ் சிவசின்னம்விளங்கிடவே
யெய்துற்றதியானமருவுணர்வுமிறின்றியெழுந்திருவாசகமுங்
கையிற்றிகழும்முழைவாரமுடன்கைத்தொண்டுகலந்துகசிந்தனரோ. (எஎ)

மெய்ம்மைப்பணிசெய்தவிருப்பதனுல் விண்ணோர்தனிநாயகனார்கழலிற், றம்மிச்சைநிரம்ப வரம்பெறுமத்தன்மைப் பதிமேவியதாபதியார், பொய்ம்மைச்சமயப் பிணிவிட்டவர்முன் போதும்பிணிவிட்டருளிப்பொருளா, எம்மைப்பணிகொள் கருணைத் திறமிங்கியார்பெற்றனரென்னவிறைஞ்சினரோ. (எஅ)

வேறு.

இன்னதன்மையி லிவர்சிவநெறியினை யெய்தி
மன்னுபேரருள் பெற்றிடர்நீங்கிய வண்ணம்
பன்னுதொன்மையிற் பாடலிபுத்திர நகரிற்
புன்மையேபுரி யமணர்தாங்கேட்டது பொறுராய். (எகூ)

தருமசேனர்க்கு வந்தவத்தடுப்பருஞ் சூலை
யொருவராலுமிங் கொழிந்திடாமையிலவரு யப்போய்ப்
பெருகுசைவராய்ப் பெயர்ந்துதம்பிணியொழிந் துய்ந்தார்
மருவுநம்பெருஞ் சமயம்வீழ்ந்ததுவென மருள்வார். (அ0)

மலையும்பல்சம யங்களும்வென்றுமற் றவரால்
நிலையும்பெற்றவிந் நெறியினியழிந்ததென் றழுங்கிக்
கொலையும்பொய்மையு மிலமென்றுகொடுந்தொழில் புரிவோர்
தலையும்பீலியுந் தாழவந்தொருசிறைசார்ந்தார். (அக)

இவ்வகைப்பலவ மணர்கடியருட னீண்டி
மெய்வ்வகைத்திற மறிந்திடில்வேந்தனும் வெகுண்டு
சைவனுகிநம் விருத்தியுந்தவிர்க்குமற் றினிநாஞ்
செய்வதென்னென வஞ்சனைதெரிந்துசித் திரிப்பார். (அஉ)

தவ்வைசைவத்து நிற்றலிற் றருமசே னருந்தாம்
பொய்வகுத்ததோர் சூலைதீர்ந்திலதெனப் போயிங்
கெவ்வமாசவந் தெய்திஞ்சமய * லங் கனமுந்
தெய்வநிந்தையுஞ் செய்தனரெனச்சொலத் தெளிந்தார். (அரு)

சொன்னவண்ணமே செய்வதுதுணிந்ததுன் மதியோர்
முன்னநாஞ்சென்று முறைப்படுவோமெனமுன்யறே
யின்னதன்மையி லிருட்குழாஞ்செல்வது போல
மன்னனாகிய பல்லவனகரில்வந் தணைந்தார். (அச)

உடையொழிந்தொரு பேச்சிடையின்றிநின் றுண்போர்
கடையணைந்தவன் வாயில்காவலருக்கு நாங்கள்
அடையவந்தமை யரசனுக்கறிவியு மென்ன
இடையறிந்துபுக் கவருந்தமிறைவனுக் கிசைத்தார். (அரு)

வேறு.

அடிகண்மாரெல்லாரு மாகுலமாய்மிகவழிந்து
கொடிநுடங்குதிருவாயிற் புறத்தணைந்தாரெனக்கூற
வடிநெடுவேன்மன்னவனு மற்றவர்சார்பாதலினாற்
கடிதணைவானவர்க்குற்ற தென்கொலெனக்கவன்றுரைத்தான். (அசு)

கடைக்காவலுடையார்கள் புகுதவிடக் காவலன்பா
னடையாடுந்தொழிலுடையார் நண்ணித்தாமெண்ணியவா
றுடையாராகியதரும சேனர்பிணியுற்றாராய்ச்
சடையானுக்காளாய்நின் சமயமழித்தாரென்றார். (அஎ)

விரையலங்கற்பல்லவனு மதுகேட்டுவெகுண்டெழுந்து
புரையுடையமனத்தினராய்ப் போவதற்குப்பொய்ப்பிணிகொண்
டுரைசிறந்தசமயத்தை யிழித்தொழியப்பெறுவதே
கரையிறவத்தீரதனுக் கென்செய்வதெனக்கனன்றான். (அஅ)

தலைநெறியாகியசமயந் தன்னையழித்துன்னுடைய
நிலைநின்றதொல்வரம்பி னெறியழித்தபொறியிலியை
யலைபுரிவாயெனப்பாவி வாயாலஞ்சாதுரைத்தார்
கொலைபுரியாநிலைகொண்டு பொய்யொழுகுமமண்குண்டர். (அகூ)

அருள்கொண்டவுணர்வின்றி நெறிகோடியறிவென்று
மருள்கொண்டமன்னவனு மந்திரிகடமைநோக்கித்
தெருள்கொண்டோரிவர்சொன்ன தீயோனைச்செறுவதற்குப்
பொருள்கொண்டுவிடாதென்பாற் கொடுவாருமெனப்புகன்றான். (கூ0)

* லங்கனம் என்பது - தாண்டுதல்.

அரசனதுபணிதலைநின் றமைச்சர்களுமங்கிலையே
முரசதிருந்தானையொடு முன்சென்றுமுகில்சூழ்ந்து
விரைசெறியுஞ்சோலைசூழ் திருவதிகைதனைமேவிப்
பரசமயப்பற்றறுத்த பான்மையினர்பாற்சென்றார். (கூக)

சென்றணைந்தவமைச்சருடன் சேனைவீரருஞ்சூழ்ந்து
மின்றயங்குபுரிவேணி வேதியனாரடியவரை
யின்றுநுமையரசனழைத் தெமைவிடுத்தான்போதுமென
நின்றவரைநேர்நோக்கி நிறைதவத்தோருரைசெய்தார். (கூஉ)

நாமார்க்குங்குடியல்லோ மென்றெடுத்துநான்மறையின்
கோமானைநதியினுடன் குளிர்மதிவாழ்சடையானைத்
தேமாலைச்செந்தமிழின் செழுந்திருத்தாண்டகம்பாடி
யாமாறுநீரழைக்கு மடைவிலமென்றருள்செய்தார். (கூந)

---

திருச்சிற்றம்பலம்.

(மறுமாற்றத் திருத்தாண்டகத் தேவாரம்.)

நாமார்க்குங் குடியல்லோ நமனையஞ்சோ நரகத்தி லிடர்ப்படோ நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோ மின்பமே யெந்நாளுந் துன்பமில்லைத், தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர்காதிற், கோமாற்கே நாமென்றுமீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.

நாவார நம்பனையே பாடப்பெற்றோ நாணற்றார் நள்ளாமே விள்ளப்பெற்றோம், ஆவாவென் றெமையாள்வா னமரர்நாத னயனெடுமாற் கறிவரிய வனலாய்நீண்ட, தேவாதி தேவன் சிவனென்சிந்தை சேர்ந்திருந்தான் றென்றிசைக்கோன் றானேவந்து, கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலுங் குணமாகக் கொள்ளோமென் குணத்துள்ளோமே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆண்டவரசருள்செய்யக் கேட்டவரு மடிவணங்கி
வேண்டியவர்க் கொண்டேக விடையுகைத்தார் திருத்தொண்டர்
ஈண்டுவரும் வினைகளுக்கெம் பிரானுளனென் றிசைந்திருந்தார்
மூண்டசினப் போர்மன்னன் முன்னணைந்தங் கறிவித்தார். (கூச)

பல்லவனு மதுகேட்டுப் பாங்கிருந்த பாயுடுக்கை
வல்லமணர் தமைநோக்கி மற்றவனைச் செய்வதினிச்
சொல்லுமென வறந்துறந்து தமக்குறுதி யறியாத
புல்லறிவோ ரஞ்சாது நீற்றறையி லிடப்புகன்றார். (கூரு)

அருகணைந்தார் தமைநோக்கி யவ்வண்ணஞ் செய்கவெனப்
பெருகுசினக் கொடுங்கோலான் மொழிந்திடலும் பெருந்தகையை
யுருகுபெருந் தழல்வெம்மை நீற்றறையி னுள்ளிருத்தித்
திருகுகருந் தாட்கொளுவிச் சேமங்கள் செய்தமைத்தார். (௬௬)

ஆண்டவர சதனகத்து ளணைந்தபொழு தம்பலத்துத்
தாண்டவமுன் புரிந்தருளுந் தாணிழலைத் தலைக்கொண்டே
யீண்டுவருந் துயருளவோ வீசனடி யார்க்கென்று
மூண்டமன நேர்நோக்கி முதல்வனையே தொழுதிருந்தார். (௬௭)

வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவங்
தைவருதண் டென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதா
யையர்திரு வடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே. (௬அ)

திருச்சிற்றம்பலம்.

(தனிக்குறுந்தொகைத் தேவாரம்.)

மாசில்வீணையு மாலைமதியமும்
வீசுதென்றலும் வீங்கிளவேனலு
மூசுவண்டறை பொய்கையும்போன்றதே
யீசனெந்தை யிணையடிநீழலே.

விறகிற்றீயினன் பாலிற்படுநெய்போன்
மறையநின்றுளன் மாமணிச்சோதியான்
உறவுகோனட் டுணர்வுகயிற்றினன்
முறுகவாங்கிக் கடையமுன்னிற்குமே.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

மாசின்மதிநீடுபுனன் மன்னிவளர்சென்னியனைப்
பேசவினியானையுல காளுடையபிஞ்ஞகனை
யீசனையெம்பெருமானை யெவ்வுயிருந்தருவானை
யாசையிலாராவமுதை யடிவணங்கியினிதிருந்தார். (௬௯)

ஓரெழுநாள்கழிந்ததற்பி னுணர்விலமணரையழைத்துப்
பாருமினிநீற்றறையை யெனவுரைத்தான்பல்லவனுங்
காரிருண்டகுழாம்போலு முருவுடையகாரமணர்
தேருநிலையில்லாதார் நீற்றறையைத்திறந்தார்கள். (௧௦௦)

ஆனந்தவெள்ளத்தி னிடைமூழ்கியம்பலவர்
தேனுந்துமலர்ப்பாதத் தமுதுண்டுதெளிவெய்தி
யூனந்தானிலராகி யுவந்திருந்தார்தம்மைக்கண்
டீனந்தங்கியதிலதா மென்னவதிசயமென்றார். (௧௦௧)

அதிசயமன்றிதுமுன்னே யமண்சமயச்சாதகத்தால்
இதுசெய்துபிழைத்திருந்தா னெனவேந்தற்குரைசெய்து
மதிசெய்வதினிக்கொடிய வல்விடமூட்டுவதென்று
முதிரவரும்பாதகத்தோர் முடைவாயான்மொழிந்தார்கள். (௧0௨)

ஆங்கதுகேட்டலுங்கொடிய வமண்சார்பாற்கெடுமன்னன்
ஓங்குபெருமையலினால் நஞ்சூட்டுமெனவுரைப்பத்
தேங்காதார்திருநாவுக் கரசரையத்தீயவிடப்
பாங்குடையபாலடிசி லமுதுசெயப்பண்ணினார். (௧0௩)

நஞ்சுமமுதாமெங்க ணாதரடியார்க்கென்று
வஞ்சமிகுநெஞ்சுடையார் வஞ்சனையாம்படியறிந்தே
செஞ்சடையார்சீர்விளக்குந் திறலுடையார்தீவிடத்தால்
வெஞ்சமணரிடுவித்த பாலடிசின்மிசைந்திருந்தார். (௧0௪)

பொடியார்க்குந்திருமேனிப் புனிதர்க்குப்புவனங்கண்
முடிவாக்குந்துயர்நீங்க முன்னைவிடமமுதானாற்
படியார்க்குமறிவரிய பசுபதியார்தம்முடைய
அடியார்க்குநஞ்சமுத மாவதுதானற்புதமோ. (௧0௫)

அவ்விடத்தையாண்டவர சமுதுசெய்துமுன்னிருப்ப
வெவ்விடமுமமுதாயிற் றெனவமணர்வெருக்கொண்டே
யிவ்விடத்திலிவன்பிழைக்கி லெமக்கெல்லாமிறுதியெனத்
தெவ்விடத்துச்செயல்புரியுங் காவலற்குச்செப்புவார். (௧0௬)

நஞ்சுகலந்தூட்டிடவு நஞ்சமயத்தினில்விடந்தீர்
தஞ்சமுடைமந்திரத்தாற் சாதியாவகைதடுத்தான்
எஞ்சும்வகையவற்கிலதே லெம்முயிருநின்முறையுந்
துஞ்சுவதுதிடமென்றார் சூழ்வினையின்றுறைநின்றார். (௧0௭)

மற்றவர்தமொழிகேட்டு மதிகெட்டமன்னவனுஞ்
செற்றவனையினிக்கடியுந் திறமெவ்வாறெனச்செப்ப
உற்றவருமந்திரசா தகநாங்களொழித்திடநின்
கொற்றவயக்களிற்றெதிரே விடுவதெனக்கூறினார். (௧0௮)

மாபாவிக்கடையமணர் வாகீசத்திருவடியாங்
காபாலியடியவர்பாற் கடக்களிற்றைவிடுகென்னப்
பூபாலர்செயன்மேற்கொள் புலைத்தொழிலோனவர்தம்மேற்
கோபாதிசயமான கொலைக்களிற்றைவிடச்சொன்னான். (௧0௯)

கூடத்தைக்குத்தியொரு குன்றமெனப்புறப்பட்டு
மாடத்தைமறித்திட்டு மண்டபங்களெடுத்தெற்றித்
தாடத்திற்பரிக்காரர் தலையிடறிக்கடகளிற்றின்
வேடத்தால்வருங்கூற்றின் மிக்கதொருவிறல்வேழம். (௧௧0)

வேறு.

பாசத்தொடைநிகளத் தொடர்பறியத்தறிமுறியா
மீசுற்றியபறவைக் குலம்வெருவத்துணிவிலகா
ஊசற்கரமெதிர்சுற் றிடவுரறிப்பரியுழறா
வாசக்கடமழைமுற் படமதவெற்பெதிர்வருமால். (௧௧௧)

இடியுற்றெழுமொலியிற் றிசையிபமுட்கிடவடியிற்
படிபுக்கறநெளியப் படர்பவனக்கதிவிசையிற்
கடிதுற்றடுசெயலிற் கிளர்கடலிற்படுகடையின்
முடிவிற்கனலெனமுற் சினமுடுகிக்கடுகியதே. (௧௧௨)

மாடுற்றணையிவுளிக் குலமறியச்செறிவயிரக்
கோடுற்றிருபிளவிட் டறுகுறைகைக்கொடுமுறியச்
சாடுற்றிடுமதில்தெற் றிகள்சரியப்புடையணிசெற்
றூடுற்றகல்வெளியுற் றதவ்வடர்கைக்குலவரையே. (௧௧௩)

பாவக்கொடுவினைமுற் றியபடிறுற்றடுகொடியோர்
நாவுக்கரசெதிர்முற் கொடுநணுகிக்கருவரைபோல்
ஏவிச்செறுபொருகைக் கரியினையுய்த்திடவெருளார்
சேவிற்றிகழ்பவர்பொற் கழறெளிவுற்றனர்பெரியோர். (௧௧௪)

வேறு.

அண்ணலருந்தவவேந்த ரானைதம்மேல்வரக்கண்டு
விண்ணவர்தம்பெருமானை விடையுவந்தேறும்பிரானைச்
சுண்ணவெண்சந்தனச்சாந்து தொடுத்ததிருப்பதிகத்தை
மண்ணுலகுய்யவெடுத்து மகிழ்வுடன்பாடுகின்றார். (௧௧௫)

---

திருச்சிற்றம்பலம்.

(திருக்கெடிலவீரட்டானத்தேவாரம் - பண் - காந்தாரம்.)

சுண்ணவெண்சந்தனச்சாந்துஞ் சுடர்த்திங்கட்சூளாமணியும்
வண்ணவுரிவையுடையும் வளரும்பவளநிறமு
மண்ணலரண்முரணேறு மகலம்வளாயவரவுந்
திண்ணென்கெடிலப்புனலு முடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லை யஞ்சவருவதுமில்லை.

நரம்பெழுகைகள்பிடித்து நங்கைநடுங்கமலையை
யுரங்களெல்லாங்கொண்டெடுத்தா னொன்பதுமொன்றுமலற
வரங்கள்கொடுத்தருள்செய்வான் வளர்பொழில்வீரட்டஞ்சூழ்ந்து
நிரம்புகெடிலப்புனலு முடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லை யஞ்சவருவதுமில்லை.

திருச்சிற்றம்பலம்.

வஞ்சகர்விட்டசினப்போர் மதவெங்களிற்றினைநோக்கிச்
செஞ்சடைநீண்முடிக்கூத்தர் தேவர்க்குந்தேவர்பிரானார்
வெஞ்சுடர்மூவிலைச்சூல வீரட்டர்தம்மடியோநாம்
அஞ்சுவதில்லையென்றென்றே யருந்தமிழ்பாடியறைந்தார். (ககசு)

தண்டமிழ்மாலைகள்பாடித் தம்பெருமான்சரணாகக்
கொண்டகருத்திலிருந்து குலாவியவன்புறுகொள்கைத்
தொண்டரைமுன்வலமாகச் சூழ்ந்தெதிர்தாழ்ந்துநிலத்தில்
எண்டிசையோர்களுங்காண விறைஞ்சியெழுந்ததுவேழம். (ககஎ)

ஆண்டவரசைவணங்கி யஞ்சியவ்வேழம்பெயரத்
தூண்டியமேன்மறப்பாகர் தொடக்கியடர்த்துத்திரித்து
மீண்டுமதனையவர்மேன் மிறைசெய்துகாட்டிடவீசி
ஈண்டவர்தங்களையேகொன்ற மணர்மேலோடிற்றெதிர்ந்தே. (ககஅ)

ஓடியருகர்கடம்மை யுழறிமிதித்துப்பிளந்து
நாடிப்பலரையுங்கொன்று நகரங்கலங்கிமறுக
நீடியவேலைகலக்கு நெடுமந்தரகிரிபோல
ஆடியலியானையம்மன் னற்காகுலமாக்கியதன்றே. (ககக)

யானையின்கையிற்பிழைத்த வினையமண்கையர்களெல்லா
மானமழிந்துமயங்கி வருந்தியசிந்தையராகித்
தானைநிலமன்னன்றாளிற் றனித்தனிவீழ்ந்துபுலம்ப
மேன்மைநெறிவிட்டவேந்தன் வெகுண்டினிச்செய்வதெனென்றான். ()

நங்கள்சமயத்தினின்றே நாடியமுட்டினிலையால்
எங்களெதிரேறழிய யானையாலிவ்வண்ணநின்சீர்ப்
பங்கப்படுத்தவன்போகப் பரிபவந்தீருமுனக்குப்
பொங்கழல்போகவதன்பின்பு கையகன்றாலெனவென்றார். (கஉக)

அல்லிருளன்னவர்கூற வரும்பெரும்பாவத்தவன்பின்
றொல்லைச்சமயமழித்துத் துயரம்விளைத்தவன்றன்னைச்
சொல்லுமினிச்செய்வதென்னச் சூழ்ச்சிமுடிக்குந்தொழிலோர்
கல்லுடன்பாசம்பிணித்துக் கடலிடைப்பாய்ச்சுகவென்றார். (கஉஉ)

ஆங்கதுகேட்டவரச னவ்வினைமாக்களைநோக்கித்
தீங்குபுரிந்தவன்றன்னைச் சேமமுறக்கொண்டுபோகிப்
பாங்கொருகல்லிலணைத்துப் பாசம்பிணித்தோர்படகில்
வீங்கொலிவேலையிலேற்றி வீழ்த்துமினென்றுவிடுத்தான். (கஉங)

அவ்வினைசெய்திடப்போகு மவருடன்போயருகந்த
வெவ்வினையாளருஞ்சென்று மேவிடநாவுக்கரசர்
செவ்வியதாந்திருவுள்ளஞ் சிறப்பவவருடன்சென்றார்
பவ்வத்தின்மன்னவன்சொன்ன படிமுடித்தாரப்பதகர். (கஉச)

அப்பரிசவ்வினைமுற்றி யவரகன்றேகியபின்னர்
ஒப்பருமாக்கடல்புக்க வுறைப்புடைமெய்த்தொண்டர்தாமும்
எப்பரிசாயினுமாக வேத்துவனெந்தையையென்று
செப்பியவண்டமிழ்தன்னாற் சிவனஞ்செழுத்துந்துதிப்பார். (கஉ௫)

வேறு.

சொற்றுணைவேதிய னென்னுந்தூய்மொழி
நற்றமிழ்மாலையா நமச்சிவாயவென்
றற்றமுன்காக்குமைந் தெழுத்தையன்பொடு
பற்றியவுணர்வினாற் பதிகம்பாடினார். (கஉசு)

---

(நமச்சிவாயத் திருப்பதிகம் - பண் - காந்தாரம்.)

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணைவேதியன் சோதிவானவன்
பொற்றுணைதிருந்தடி பொருந்தக்கைதொழக்
கற்றுணைப்பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே.

மாப்பிணைதழுவிய மாதொர்பாகத்தன்
பூப்பிணைதிருந்தடி பொருந்தக்கைதொழ
நாப்பிணைதழுவிய நமச்சிவாயப்பத்
தேத்தவல்லார்தமக் கிடுக்கணில்லையே.

திருச்சிற்றம்பலம்.

---

பெருகியவன்பினர் பிடித்தபெற்றியால்
அருமலரோன்முத லமரர்வாழ்த்துதற்
கரியவஞ்செழுத்தையு மரசுபோற்றிடக்
கருநெடுங்கடலினுட் கன்மிதந்ததே. (கஉஎ)

அப்பெருங்கல்லுமங் கரசுமேற்கொளத்
தெப்பமாய்மிதத்தலிற் செறிந்தபாசமுந்
தப்பியததன்மிசை யிருந்ததாவில்சீர்
மெய்ப்பெருந்தொண்டனார் விளங்கித்தோன்றினார். (கஉஅ)

இருவினைப்பாசமு மலக்கலார்த்தலின்
வருபவக்கடலில் வீழ்மாக்களேறிட
அருளுமெய்யஞ்செழுத் தரசையிக்கடல்
ஒருகன்மேலேற்றிட லுரைக்கவேண்டுமோ. (கஉகூ)

அருணயந்தஞ்செழுத் தேத்தப்பெற்றவக்
கருணைநாவரசினைத் திரைக்கரங்களாற்
றெருணெறிநீர்மையிற் சிரத்திற்றாங்கிட
வருணனுஞ்செய்தனன் முன்புமாதவம். (கந௦)

வாய்ந்தசீர்வருணனே வாக்கின்மன்னரைச்
சேர்ந்தடைகருங்கலே சிவிகையாயிட
ஏந்தியேகொண்டெழுந் தருளுவித்தனன்
பூந்திருப்பாதிரிப் புலியூர்ப்பாங்கரில். (கஙக)

அத்திருப்பதியினி லணைந்தவன்பரை
மெய்த்தவக்குழாமெலா மேவியார்த்தெழ
எத்திசையினுமர வென்னுமோசைபோற்
றத்துநீர்ப்பெருங்கட றானுமார்த்ததே. (கஙஉ)

தொழுந்தகைநாவினுக் கரசுதொண்டர்முன்
செழுந்திருப்பாதிரிப் புலியூர்த்திங்கள்வெண்
கொழுந்தணிசடையரைக் கும்பிட்டன்புற
விழுந்தெழுந்தருணெறி விளங்கப்பாடுவார். (கஙங)

வேறு.

ஈன்றாளுமாயெனக் கெந்தையுமாகி யெனவெடுத்துத்
தோன்றாத்துணையா யிருந்தனன்றன்னடி யோங்கட்கென்று
வான்றாழ்புனற்கங்கை வாழ்சடையானைமற் றெவ்வுயிர்க்குஞ்
சான்றாமொருவனைத் தண்டமிழ்மாலைகள் சாத்தினரே. (கஙச)

---

(திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

ஈன்றாளுமாயெனக் கெந்தையுமாயுடன் றோன்றினராய்
மூன்றாயுலகம் படைத்துகந்தான்மனத் துள்ளிருக்க
வேன்றாலிமையவர்க் கன்பன்றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத்துணையா யிருந்தனன்றன்னடி யோங்களுக்கே.

திருந்தாவமணர்தந் தீநெறிப்பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தாளிணைக்கே சரணம்புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தாவரக்க னுடல்நெரித்தாய்பா திரிப்புலியூ
ரிருந்தாயடியே னினிப்பிறவாமைவந் தேன்றுகொள்ளே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி திருநாமம் - தோன்றாத்துணை. தேவியார் - உமையம்மை.

திருப்பதிகம்—உ.

---

மற்றுமினையன வண்டமிழ்மாலைகள் பாடிவைகி
வெற்றிமழவிடை வீரட்டர்பாத மிகநினைவில்
உற்றதொர்காதலி னங்குநின்றேகியொன் னார்புரங்கள்
செற்றவர்வாழுந் திருவதிகைப்பதி சென்றடைவார். (கஙரு)

தேவர்பிரான்றிரு மாணிகுழியுந் தினைநகரு
மேவினர்சென்று விரும்பியசொன்மலர் கொண்டிறைஞ்சிப்
பூவலர்சோலை மணமடிபுல்லப் பொருண்மொழியின்
காவலர்செல்வத் திருக்கெடிலத்தைக் கடந்தணைந்தார். (௧௩௬)

வெஞ்சமண்குண்டர்கள் செய்வித்ததீய மிறைகளெல்லாம்
எஞ்சவென்றேறிய வின்றமிழீச ரெழுந்தருள
மஞ்சிவர்மாடத் திருவதிகைப்பதி வாணரெல்லாந்
தஞ்செயல்பொங்கத் தழங்கொலிமங்கலஞ் சாற்றலுற்றார். (௧௩௭)

மணிநெடுந்தோரணம் வண்குலைப்பூக மடற்கதலி
இணையுறநாட்டி யெழுநிலைக்கோபுரந் தெற்றியெங்குந்
தணிவில்பெருகொளித் தாமங்கணாற்றிச்செஞ் சாந்துநீவி
யணிநகர்முன்னை யணிமேலணிசெய் தலங்கரித்தார். (௧௩௮)

மன்னியவன்பின் வளநகர்மாந்தர் வயங்கிழையார்
இன்னியநாதமு மேழிசையோசையு மெங்கும்விம்மப்
பொன்னியல்சுண்ணமும் பூவும்பொரிகளுந் தூவியெங்குந்
தொன்னகரின்புறஞ் சூழ்ந்தெதிர்கொண்டனர் தொண்டரையே. (௧௩௯)

தூயவெண்ணீறு துதைந்தபொன்மேனியுந் தாழ்வடமு
நாயகன்சேவடி தைவருஞ்சிந்தையு நைந்துருகிப்
பாய்வதுபோலன்பு நீர்பொழிகண்ணும் பதிகச்செஞ்சொன்
மேயசெவ்வாயு முடையார்புகுந்தனர் வீதியுள்ளே. (௧௪0)

கண்டார்கள்கைதலை மேற்குவித்திந்தக் கருணைகண்டால்
மிண்டாயசெய்கைய மண்கையர்தீங்கு விளைக்கச்செற்றம்
உண்டாயினவண்ண மெவ்வண்ணமென் றுரைப் பார்கள்பின்னுந்
தொண்டாண்டுகொண்ட பிரானைத்தொழுது துதித்தனரே. (௧௪௧)

இவ்வண்ணம்போல வெணைப்பலமாக்க ளியம்பியேத்த
மெய்வ்வண்ணநீற்றொளி மேவுங்குழாங்கள் விரவிச்செல்ல
அவ்வண்ணநண்ணிய வன்பரும்வந்தெய்தி யம்பவளச்
செவ்வண்ணர்கோயிற் றிருவீரட்டானத்தைச் சேர்ந்தனரே. (௧௪௨)

உம்பர்தங்கோனை யுடையபிரானையுள் புக்கிறைஞ்சி
நம்புறுமன்பின யப்புறுகாதலி னூற்றிளைத்தே
எம்பெருமான்றனை யேழையெனுன்பண் டிகழ்ந்ததென்று
தும்பரிவாற்றிருத் தாண்டகச்செந்தமிழ் சாற்றிவாழ்ந்தார். (௧௪௩)

(திருவீரட்டானம் - ஏழைத்திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

வெறிவிரவுகூவிளநற் றொங்கலானை வீரட்டத்தானைவெள் ளேற்றி னானைப், பொறியரவினானைப்புள் ளூர்தியானைப் பொன்னிறத்தினானைப் புகழ்தக்கானை, யறிதற்கரியசீ ரம்மான்றன்னை யதியரையமங்கை யமர்ந் தான்றன்னை, எறிகெடிலத்தானை யிறைவன்றன்னை யேழையேனான்பண் டிகழ்ந்தவாறே.

தொல்லைவான்சூழ்வினைகள் சூழப்போந்து தூறறியேனாறறியேன் சுடராய்நின்று, வல்லையேயிடர்தீர்த்திங் கடிமைக்கொண்ட வானவர்க்கு ந்தானவர்க்கும் பெருமான்றன்னைக், கொல்லைவாய்க் குருந்தொசித்துக் குழலூதுங் கோவலனுநான்முகனுங் கூடியெங்கும், எல்லைகாண் பரி யானை யெம்மான்றன்னை யேழையேனான்பண் டிகழ்ந்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

அரியயனுக்கரியானை யடியவருக்கெளியானை
விரிபுனல்சூழ்திருவதிகை வீரட்டானத்தமுதைத்
தெரிவரியபெருந்தன்மைத் திருநாவுக்கரசுமனம்
பரிவுறுசெந்தமிழ்ப்பாட்டுப் பலபாடிப்பணிசெயுநாள். (கசச)

புல்லறிவிற்சமணர்க்காய்ப் பொல்லாங்குபுரிந்தொழுகும்
பல்லவனுந்தன்னுடைய பழவினைப்பாசம்பறிய
அல்லலொழிந்தங்கெய்தி யாண்டவரசினைப்பணிந்து
வல்லமணர்தமைநீத்து மழவிடையோன்றாளடைந்தான். (கசரு)

வீடறியாச்சமணர்மொழி பொய்யென்றுமெய்யுணர்ந்த
காடவனுந்திருவதிகை நகரின்கட் கண்ணுதற்குப்
பாடலிபுத்திரத்திலமண் பள்ளியொடுபாழிகளுங்
கூடவிடித்துக்கொணர்ந்து குணதரவீச்சரமெடுத்தான். (கசசு)

இந்நாளிற்றிருப்பணிகள் செய்கின்றவின்றமிழ்க்கு
மன்னனவாகீசத் திருமுனியுமதிச்சடைமேற்
பன்னகமணிந்தவர்தம் பதிபலவுஞ்சென்றிறைஞ்சிச்
சொன்னமத்தமிழ்புனைந்து தொண்டுசெய்வான்றொடர்ந்தெழுவார். கசஎ

திருவதிகைப்பதிமருங்கு திருவெண்ணெய்நல்லூரும்
அருளுதிருவாமாத்தூர் திருக்கோவலூர்முதலா
மருவுதிருப்பதிபிறவும் வணங்கிவளத்தமிழ்பாடிப்
பெருகுவிருப்புடன்விடையார் மகிழ்பெண்ணாகடமணைந்தார். (கசஅ)

கார்வளருமாடங்கள் கலந்தமறையொலிவளர்க்குஞ்
சீருடையந்தணர்வாழுஞ் செழும்பதியினகத்தெய்தி
வார்சடையார்மன்னுதிருத் தூங்கானைமாடத்தைப்
பார்பரவுந்திருமுனிவர் பணிந்தேத்திப்பரவினர். (௧௪௯)

புன்னெறியாமமண்சமயத் தொடக்குண்டுபோந்தவுடல்
தன்னுடனேயுயிர்வாழத் தரியேனான்றரிப்பதனுக்
கென்னுடையநாயகநின் னிலச்சினையிட்டருளென்று
பன்னுசெழுந்தமிழ்மாலை முன்னின்றுபாடுவார். (௧௫௦)

பொன்னார்ந்ததிருவடிக்கென் விண்ணப்பமென்றெடுத்து
முன்னாகியெப்பொருட்கு முடிவாகிநின்றவனைத்
தன்னாகத்துமைபாகங் கொண்டவனைச்சங்கரனை
நன்னுமத்திருவிருத்த நலஞ்சிறக்கப்பாடுதலும். (௧௫௧)

---

(திருத்தூங்கானைமாடம் - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்திருவடிக் கொன்றுண்டுவிண்ணப்பம் போற்றிசெய்யு
மென்னாவிகாப்பதற் கிச்சையுண்டேலிருங் கூற்றகல
மின்னாருமூவிலைச் சூலமென்மேற்பொறி மேவுகொண்டற்
றுன்னார்கடந்தையுட் டூங்கானைமாடச் சுடர்க்கொழுந்தே.

கடவுந்திகிரி கடவாதொழியக் கயிலையுற்றான்
படவுந்திருவிர லொன்றுவைத்தாய்பனி மால்வரைபோ
லிடபம்பொறித்தென்னை யென்றுகொள்ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவுங்கடந்தையுட் டூங்கானைமாடத்தெந் தத்துவனே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி திருநாமம் - சுடர்க்கொழுந்தீசர். தேவியார் - கடந்தைநாயகி.

திருப்பதிகம்—உ.

---

நீடுதிருத்தூங்கானை மாடத்துநிலவுகின்ற
ஆடகமேருச்சிலையா னருளாலோர்சிவபூத
மாடொருவரறியாமே வாகீசர்திருத்தோளிற்
சேடியர்மூவிலைச்சூலஞ் சினவிடையினுடன்சாத்த. (௧௫௨)

ஆங்கவர்தந்திருத்தோளி லார்ந்ததிருவிலச்சினையைத்
தாங்கண்டுமனங்களித்துத் தம்பெருமானருணினைந்து
தூங்கருவிகண்பொழியத் தொழுதுவிழுந்தார்வத்தால்
ஓங்கியசிந்தையராகி யுய்ந்தொழிந்தேனெனவெழுந்தார். (௧௫௩)

தூங்கானைமாடத்துச் சுடர்க்கொழுந்தினடிபரவிப்
பாங்காகத்திருத்தொண்டு செய்துபயின்றமருநாட்
பூங்கானின்மணங்கமழும் பொருவிறிருவரத்துறையும்
தேங்காவின்முகிலுறங்குந் திருமுதுகுன்றமும்பணிந்து. (௧௫௪)

வண்டமிழ்மென்மலர்மாலை புனைந்தருளிமருங்குள்ள
தண்டுறைநீர்ப்பதிகளிலுந் தனிவிடையார்மேவியிடங்
கொண்டருளுந்தானங்கள் கும்பிட்டுக்குணதிசைமேற்
புண்டரிகத்தடஞ்சூழ்ந்த நிவாக்கரையேபோதுவார். (௧௫௫)

ஆறுதசீர்த்தில்லை யம்பலத்தேயாடுகின்ற
வாறுறுபுடைபரக்கு மலர்ச்சடையாரடிவணங்கி
ஊனுலுமுயிராலு முள்ளபயன்கொளநினைந்து
தேனுருமலர்ச்சோலைத் திருப்புலியூர்மருங்கணைந்தார். (௧௫௬)

வேறு.

நாவுக்கரசரு மிருவர்க்கரியவர் நடமாடியதிரு வெல்லைப்பான்
மேவித்தலமுற மெய்யிற்றொழுதபின் மேன்மேலெழுதரு விழைவோடுங்
காவிற்களிமயின் மகிழ்வுற்றெதிரெதி ராடக்கடிகமழ் கமலஞ்சூழ்
வாவித்தடமலர் வதனம்பொலிவுறு மருதத்தண்பணை வழிவந்தார். ()

முருகிற்செறியிதழ் முளரிப்படுகரின் முதுமேதிகள்புது மலர்மேயும்
அருகிற்செறிவன மெனமிக்குயர்கழை யளவிற்பெருகிட வளரிக்குப்
பெருகிப்புடைமுதிர் தரளஞ்சொரிவன பெரியோரவர்திரு வடிவைக்கண்
டுருகிப்பரிவுறு புனல்கண்பொழிவன வெனமுன்புளவள வயலெங்கும்.()

அறிவிற்பெரியவ ரயனெற்பணைவய லவைபிற்படும்வகை யணைகின்றார்
பிறவிப்பவநெறி விடுவீரிருவினை பெருகித்தொடர்பிணி யுறுபாசம்
பறிவுற்றிடவணை யுமினென்றிருபுடை பயில்சூழ்சினைமிசை குயில்கூவுஞ்
செறிவிற்பலதரு நிலையிற்பொலிவுறு திருநந்தனவன மெதிர்கண்டார்.()

அவர்முன்பணிவொடு தொழுதங்கணைவுற வணிகொம்பரின்மிசை யருகெங்குந், தவமுன்புரிதலில் வருதொண்டெனுநிலை தலைநின்றுயர்தமி ழிறையோராம், இவர்தந்திருவடி வதுகண்டதிசய மெனவந்தெதிரர கரவென்றே, சிவமுன்பயின்மொழி பகர்கின்றனவளர் சிறைமென்கிளியொடு சிறுபூவை. (௧௬௦)

அஞ்சொற்றிருமறை யவர்முன்பகர்தலு மவருந்தொழுதுமு னருள்கூரு, நெஞ்சிற்பெருகிய மகிழ்வுங்காதலு நெறியன்பொடுமுனை தடுமாறச், செஞ்சொற்றிருமறை மொழியந்தணர்பயி றில்லைத்திருநக ரெல்லைப்பான், மஞ்சிற்பொலிநெடு மதில்சூழ்குடதிசை மணிவாயிற்புறம் வந்துற்றார். (௧௬௧)

அல்லற்பவமற வருளுந்தவமுத லடியாரெதிர்கொள வவரோடு
மல்லற்புனல்கமழ் மாடேவாயிலின் வழிபுக்கெதிர்தொழு தணைவுற்றார்
கல்வித்துறைபல வருமாமறைமுதல் கரைகண்டுடையவர் கழல்பேணுஞ்
செல்வக்குடிநிறை நல்வைப்பிடைவளர் சிவமேநிலவிய திருவீதி. (கசுஉ)

நவமின்சுடர்மணி நெடுமாலையுநறு மலர்மாலையுநிறை திருவீதிப்
புவனங்களின்முத லிமையோர்தடமுடி பொருதுந்தியமணி போகட்டிப்
பவனன்பணிசெய வருணன்புனல்கொடு பணிமாறவுமவை பழுதாமென்,
றெவருந்தொழுதெழு மடியார்திருவல கிடுவார்குளிர்புனல் விடுவார்கள்.()

மேலம்பரதல நிறையுங்கொடிகளில் விரிவெங்கதிர்நுழை வரிதாகுங்
கோலம்பெருகிய திருவீதியைமுறை சூலவும்பெருமையர் பணிவுற்றே
ஞாலந்திகழ்திரு மறையின்பெருகொலி நலமார்முனிவர்க டுதியோடும்
ஓலம்பெருகிய நிலையேழ்கோபுர முறையேகொடுதொழு துள்புக்கார். ()

வளர்பொற்கனமணி திருமாளிகையினை வலம்வந்தலமரு வரைவில்லா, அளவிற்பெருகிய வார்வத்திடையெழு மன்பின்கடனிறை யுடலெங்கும், புளகச்செறிநிரை விரவித்திருமலி பொற்கோபுரமது புகுவார்முன், களனிற்பொலிவிட முடையார்நடநவில் கனகப்பொதுவெதிர் கண்ணுற்றார். (கசுரு)

நீடுந்திருவுட் னிகழும்பெருகொளி நிறையம்பலநினை வுறநேரே
கூடும்படிவரு மன்பாலின்புறு குணமும்பெறவரு நிலைகூடத்
தேடும்பிரமனு மாலுந்தேவரு முதலாம்யோனிக டெளிவொன்றா
ஆடுங்கழல்புரி யமுதத்திருநட மாராவகைதொழு தார்கின்றார். (கசுசு)

கையுந்தலைமிசை புனையஞ்சலியன கண்ணும்பொழிமழை யொழியாதே, பெய்யுந்தகையன கரணங்களுமுட னுருகும்பரிவின பேறெய்து, மெய்யுந்தலமிசை விழுமுன்பெழுதரு மின்றாழ்சடையொடு நின்றாடும், ஐயன்றிருநட மெதிர்கும்பிடுமவ ரார்வம்பெருகுத லளவின்றால்.(கசுஎ)

இத்தன்மையர்பல முறையுந்தொழுதெழ வென்றெய்தினையென மன்றாடும், அத்தன்றிருவருள் பொழியுங்கருணையி னருள்பெற்றிடவரு மானந்த, மெய்த்தன்மையினில் விருத்தத்திருமொழி பாடிப்பின்னையு மேன்மேலுஞ், சித்தம்பெருகிய பரிவாலின்புறு திருநேரிசைமொழி பகர்கின்றார். (கசுஅ)

வேறு.

பத்தனாய்ப்பாடமாட்டே னென்றுமுன்னெடுத்துப்பண்ணால்
அத்தவுன்னாடல்காண்பா னடியனேன்வந்தவாறென்
றித்திறம்போற்றிநின்றே யின்றமிழ்மாலைபாடிக்
கைத்திருத்தொண்டுசெய்யுங் காதலிற்பணிந்துபோந்தார். (கசுசு)

(கோயிற்றிருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

பத்தனாய்ப்பாடமாட்டேன் பரமனேபரமயோகி
யெத்தினாற்பத்திசெய்கே னென்னைநீயிகழவேண்டா
முத்தனேமுதல்வாதில்லை யம்பலத்தாடுகின்ற
வத்தாவுன்னாடல்காண்பா னடியனேன்வந்தவாறே.

மண்ணுண்டமாலவனும் மலர்மிசைமன்னினானும்
விண்ணுண்டதிருவுருவம் விரும்பினார்காணமாட்டார்
திண்ணுண்டதிருவேமிக்க தில்லைச்சிற்றம்பலத்தே.
பண்ணுண்டபாடலோடும் பரமநீயாடுமாறே.

திருச்சிற்றம்பலம்.

---

நீடியமணியின்சோதி நிறைதிருமுன்றின்மாடும்
ஆடியர்கொடிசூழ்பொற்றே ரணிதிருவீதியுள்ளுங்
கூடியபணிகள்செய்து கும்பிடுந்தொழிலராகிப்
பாடியபுனிதவாக்கின் பணிகளும்பயிலச்செய்வார். (௧௭0)

அருட்பெருமகிழ்ச்சிபொங்க வன்னம்பாலிக்குமென்னுந்
திருக்குறுந்தொகைகள்பாடித் திருவுழவாரங்கொண்டு
பெருத்தெழுகாதலோடும் பெருந்திருத்தொண்டுசெய்து
விருப்புறுமேனிகண்ணீர் வெண்ணீற்றுவண்டலாட. (௧௭௧)

---

(கோயிற்றிருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

அன்னம்பாலிக்குந் தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்கு மென்னுமிப்பூமிசை
யென்னம்பாலிக்கு மாறுகொண்டின்புற
வின்னம்பாலிக்கு மோவிப்பிறவியே.

மதுரவாய்மொழி மங்கையோர்பங்கினன்
சதுரன்சிற்றம் பலவன்றிருமலை
யதிரவார்த்தெடுத் தான்முடிபத்திற
மிதிகொள்சேவடி சென்றணைந்துய்மினே.

திருச்சிற்றம்பலம்.

---

மேவியபணிகள்செய்து விளங்குநாள்வேட்களத்துச்
சேவுயர்கொடியார்தம்மைச் சென்றுமுன்வணங்கிப்பாடிக்
காவியங்கண்டர்மன்னுந் திருக்கழிப்பாலைதன்னி
னாவினுக்கரசர்சென்று நண்ணினார்மண்ணோர்வாழ. (௧௭௨)

வேறு.

சினவிடையேறுகைத்தேறு மணவாளநம்பிகழல் சென்றுதாழ்ந்து
வனபவளவாய்திறந்து வானவர்க்குந்தானவனே யென்கின்றாளென்
றனையதிருப்பதிகமுட னன்புறவண்டமிழ்பாடி யங்குவைகி
நினைவரியார்தமைப்போற்றி நீடுதிருப்புலியூரை நினைந்துமீள்வார். (கஎங)

(திருக்கழிப்பாலை - பண் - காந்தாரம்.)

திருச்சிற்றம்பலம்.

வனபவளவாய்திறந்து வானவர்க்குந்தானவனே யென்கின்றாளாற்
சினபவளத்திண்டோண்மேற் சேர்ந்திலங்குவெண்ணீற்ற னென்கின்றா
லனபவளமேகலையோ டப்பாலைக்கப்பாலா னென்கின்றாளாற் [ளா
கனபவளஞ்சிந்துங்கழிப் பாலைச்சேர்வானைக் கண்டாள்கொலோ.

அடர்ப்பரியவிராவணனை யருவரைக்கீழடர்த்தவனே யென்கிறாளாற்
சுடர்ப்பெரியதிருமேனிச் சுண்ணவெண்ணீற்றவனே யென்கின்றாளான்
மடற்பெரியவாலின்கீ ழறநால்வர்க்கன்றுரைத்தா னென்கின்றாளாற்
கடற்கருவிசூழ்ந்த கழிப்பாலைச்சேர்வானைக் கண்டாள்கொலோ.

திருச்சிற்றம்பலம்.

மனைப்படப்பிற் கடற்கொழுந்து வளைசொரியுங் கழிப்பாலை மரு ங்குநீங்கி, நனைச்சினைமென் குளிர்ஞாழற் பொழிலூடு வழிக்கொண்டு நண்ணும்போதி, னினைப்பவர்த மனக்கோயில் கொண்டருளு மம்பலத்து நிருத்தனாைத், தினைத்தனையாம் பொழுதுமறந் துய்வனோ வெனப்பா டித் தில்லைசார்ந்தார். (கஎச)

(கோயிற்றிருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

பனைக்கைமும்மத வேழமுரித்தவ
னினைப்பவர்மனங் கோயிலாக்கொண்டவ
னனைத்தும்வேடமா மம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழு தும்மறந்துய்வனோ.

ஓங்குமால்வரை யேந்தலுற்றான்சிரம்
வீங்குவிம்முற வூன்றியதாளினன்
தேங்குநீர்வயல் சூழ்தில்லைக்கூத்தனைப்
பாங்கிலாத்தொண்ட னேன்மறந்துய்வனோ.

திருச்சிற்றம்பலம்.

அரியானையென்றெடுத்தே யடியவருக்கெளியானை யவர்தஞ்சிந்தை பிரியாதபெரியதிருத் தாண்டகச்செந்தமிழ்பாடிப் பிறங்குசோதி விரியாநின்றெவ்வுலகும் விளங்கியபொன்னம்பலத்து மேவியாடல் புரியாநின்றவர்தம்மைப் பணிந்துதமிழாற்பின்னும் போற்றல்செய்தார்.()

---

(கோயிற்பெரிய திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

அரியானை யந்தணர்தஞ் சிந்தையானை யருமறையி னகத்தானை யணு வையார்க்குந், தெரியாத தத்துவனைத் தேனைப்பாலைத் திகழொளியைத் தேவர்சடங் கோனைமற்றைக், கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்துநின்ற, பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே.

காரொளிய திருமேனிச் செங்கண்மாலுங் கடிக்கமலத் திருந்தயனுங் காணாவண்ணஞ், சீரொளிய தழற்பிழம்பாய் நின்றதொல்லைத் திகழொளி யைச் சிந்தைதனை மயக்கந்தீர்க்கும், ஏரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணு மேழுலகுங் கடந்தண்டத் தப்பானின்ற,பேரொளியைப் பெரு ம்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே.

திருச்சிற்றம்பலம்.

---

செஞ்சடைக் சற்றைமுற்றத் திளநிலா வெறிக்குமென்னுஞ் சிறந்த வாய்மை, யஞ்சொல்வளத் தமிழ்மாலை யதிசயமாம் படிபாடி யன்புசூழ் ந்த, நெஞ்சுருகப் பொழிபுனல்வார் கண்ணிணையும் பரவியசொன் னிறை ந்தவாயுந், தஞ்செயலி னொழியாத திருப்பணியு மாறுது சாருநாளில். ()

---

(கோயிற்றிருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

செஞ்சடைக்கற்றைமுற்றத் திளநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சடைகண்டனாைக் காணலாநறவநாறு
மஞ்சடைசோலைத்தில்லை மல்குசிற்றம்பலத்தே
துஞ்சடையிருள்கிழியத் துளங்கெரியாடுமாறே.

மதியிலாவரக்கனோடி மாமலையெடுக்கநோக்கி
நெதியன்றோணெரியவூன்றி நீடிரும்பொழில்கள்சூழ்ந்த
மதியந்தோய்தில்லைதன்னுண் மல்குசிற்றம்பலத்தே
யதிசயம்போலநின்று வனலெரியாடுமாறே.

திருச்சிற்றம்பலம்.

கடையுகத்திலாழியின்மேன் மிதந்ததிருக்கழுமலத்தி னிருந்தசெங் கண்,விடையுகைத்தார்திருவருளால் வெற்பரையன்பாவைதிரு முலைப்பா லோடும், அடையநிறைசிவம்பெருகி வளர்ஞானங்குழைத்தூட்ட வமுது செய்த, உடையமறைப்பிள்ளையார் திருவார்த்தையடியார்க ளுரைப்பக் கேட்டார். (கஎஎ)

ஆழிவிடமுண்டவரை யம்மைதிருமுலையமுத முண்டபோதே
ஏழிசைவண்டமிழ்மாலை யிவனெம்மானெனக்காட்டி யியம்பவல்ல
காழிவரும்பெருந்தகைசீர் கேட்டலுமேயதிசயமாங் காதல்கூர
வாழியவர்மலர்க்கழல்கள் வணங்குதற்குமனத்தெழுந்தவிருப்புவாய்ப்ப.

அப்பொழுதேயம்பலத்து ளாடுகின்றகழல்வணங்கி யருண்முன்பெ ற்றுப், பொய்ப்பிறவிப்பிணியோட்டுந் திருவீதிபுரண்டுவலங் கொண்டு போந்தே, யெப்புவனங்களுநிறைந்த திருப்பதியினெல்லையினை யிறைஞ்சி யேத்திச், செப்பரியபெருமையினர் திருநாரையூர்பணிந்து பாடிச்செல் வார். (கஎகூ)

தொண்டர்குழாம்புடைசூழத் தொழுதகரத்தொடுநீறு துதைந்த கோலங், கண்டவர்தமனங்கசிந்து கரைந்துருகுங்கருணைபுறம் பொழிந் துகாட்டத், தெண்டிரைவாய்க்கன்மிதப்பி லுகைத்தேறுந்திருநாவுக் கர சர்தாமும், வண்டமிழாலெழுதுமறை மொழிந்தபிரான்றிருப்புகலி மரு ங்குசார்ந்தார். (கஅ0)

நீண்டவரைவில்லியார் வெஞ்சூலமடுத்தருளி நேரேமுன்னாள்
ஆண்டவரசெழுந்தருளக் கேட்டருளியாளுடைய பிள்ளையாருங்
காண்டகையபெருவிருப்புக் கைமிக்கதிருவுள்ளக் கருத்தினோடு
மூண்டவருண்மனத்தன்பர் புடைசூழவெழுந்தருளி முன்னேவந்தார். ()

தொழுதணைவுற்றாண்டவர சன்புருகத்தொண்டர்குழாத் திடையே சென்று, பழுதில்பெருங்காதலுட னடிபணியப்பணிந்தவர்தங் கரங்கள் பற்றி, யெழுதரியமலர்க்கையா லெடுத்திறைஞ்சிவிடையின்மேல் வருவா ர்தம்மை, யழுதழைத்துக் கொண்டவர்தா மப்பரேயெனவவரு மடியே னென்றார். (கஅஉ)

அம்பிகைசெம்பொற்கிண்ணத் தமுதஞானங்கொடுப்ப வழுகைதீர் ந்த, செம்பவளவாய்ப்பிள்ளை திருநாவுக்கரசரெனச் சிறந்தசீர்த்தி,யெம் பெருமக்களுமியைந்த கூட்டத்திலரனடியா ரின்பமெய்தி, யும்பர்களும் போற்றிசைப்பச் சிவம்பெருகுமொலிநிறைத்தா ருலகமெல்லாம்.(கஅங)

பிள்ளையார்கழல்வணங்கப் பெற்றேனென்றரசுவப்பப் பெருகுஞான, வள்ளலார்வாகீசர் தமைக்காணப்பெற்றதற்கு மகிழ்ச்சிபொங்க, உள்ள நிறைகாதலினா லொருவரொருவரிற்கலந்த வுண்மையோடும்,வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந்தார்கழல்வணங்கும் விருப்பின்மிக்கார். (கஅச)

அருட்பெருகுதனிக்கடலு முலகுக்கெல்லா மன்புநிறைகடலுமா மெனவும்பொங்கும், பொருட்சமயமுதற்சைவ நெறிதான்பெற்ற புண்ணியக்கண்ணிரண்டெனவும் புவனமுய்ய, இருட்கடுவுண்டவரருளு மகிலமெல்லா மீன்றுடன்றிருவருளு மெனவுங்கூடித், தெருட்கலைஞானக் கன்று மரசுஞ்சென்று செஞ்சடைவானவர்கோயில் சேர்ந்தாரன்றே. ()

பண்பயில்வண்டறைசோலை சூழுங்காழிப் பரமர்திருக்கோபுரத்தைப் பணிந்துள்புக்கு, விண்பணியவோங்குபெரு விமானந்தன்னை வலங்கொண்டுதொழுதுவிழுந் தெழுந்தவெல்லை, சண்பைவரும் பிள்ளையாரப்பருங்க டம்பிரானுரைநீர் பாடிரென்னக்,கண்பயிலும் புனல்பொழிந்தவரசும்வாய்மைக் கலைபயிலுமொழிபொழியக் கசிந்துபாடி. (கஅசு)

பெரியபெருமாட்டியுடன் றோணிமீது பேணிவீற்றிருந்தருளும் பிரான்முன்னின்று, பரிவுறுசெந்தமிழ்மாலை பத்தியொடும் பார்கொண்டுமூடியெனும் பதிகம்போற்றி,அரியவகைபுறம்போந்து பிள்ளையார்தந் திருமடத்திலெழுந்தருளி யமுதுசெய்து, மருவியநண்புறுகேண்மை யற்றைநாள்போல் வளர்ந்தோங்கவுடன்பலநாள் வைகுநாளில். (கஅஎ)

---

(திருக்கழுமலம் - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

பார்கொண்டுமூடிக் கடல்கொண்டஞான்றுநின் பாதமெல்லா
நாலைந்துபுள்ளின மேந்தினவென்பர் நளிர்மதியங்
கால்கொண்டவண்கைச் சடைவிரித்தாடுங் கழுமலவர்க்
காளன்றிமற்றுமுண் டோவந்தணாழி யகலிடமே.

கரையார்கடல்சூ ழிலங்கையர்கோன்றன் முடிசிதறத்
துலையாமலரடி யூன்றலுமுள்ளம் விதிர்விதிர்த்துத்
தலையாய்க்கிடந்துயர்ந் தான்றன்கழுமலங் காண்பதற்கே
அலையாப்பரிசிவை நாடோறுநந்தமை யாள்வனவே.

திருச்சிற்றம்பலம்.

---

அத்தன்மை யினிலரசும் பிள்ளையாரு மளவளா வியமகிழ்ச்சி யளவிலாத, சித்தமகிழ்ச் சியினோடு செல்லுநாளிற் றிருநாவுக்கரசர்திரு வுள்ளந்தன்னின், மைத்தழையு மணிமிடற்றார் பொன்னிநாட்டு மன்னியதானங்களெல்லாம் வணங்கிப்போற்ற, மெய்த்தெழுந்த பெருங்காதல் பிள்ளையார்க்கு விளம்புதலு மவருமது மேவிநேர்வார். (கஅஅ)

ஆண்டவரசெழுந்தருளக் கோலக்காவை யவரோடுஞ் சென்றிறைஞ்சி யன்புகொண்டு, மீண்டருளி னாரவரும் விடைகொண்டிப்பால் வேதநாயகர்விரும்பும் பதிகளான, நீண்டகருப் பறியலூர் புன்கூர்நீடூர் நீடுதிருக்குறுக்கைதிரு நின்றியூருங், காண்டகைய நனிபள்ளி முதலாநண்ணிக் கண்ணுதலார் கழறொழுது கலந்துசெல்வார். (கஅகூ)

மேவுபுனற் பொன்னியிரு கரையுஞ்சார்ந்து விடையுயர்த்தார் திருச்செம்பொன் பள்ளிபாடிக், காவுயரு மயிலாடு துறைநீள்பொன்னிக் கரைத்துருத்தி வேள்விக்குடி யெதிர்கொள்பாடி, பாவுறுசெந் தமிழ்மாலை பாடிப்போற்றிப் பரமர்திருப் பதிபலவும் பணிந்துபோந்தே, ஆவுறுமஞ் சாடுவார் கோடிகாவி லணைந்துபணிந் தாவடுதண் டுறையைச் சார்ந்தார். (௧௧௰)

ஆவடுதண் டுறையானை யடைந்துய்ந்தேனென் றளவிறிருத் தாண்டகமுன் னருளிச்செய்து, மேவுதிருக் குறுந்தொகையு நேரிசையுஞ்சந்த விருத்தங்க ளானவையும் வேறுவேறு, பாவலர்செந் தமிழ்த்தொடையாற் பள்ளித்தாமம் பலசாத்தி மிக்கெழுந்த பரிவினோடும், பூவலயத் தவர்பரவப் பலநாட்டங்கிப் புரிவுறுகைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார். (௧௧௧)

---

(திருவாவடுதுறைத் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

நம்பனைநால்வேதங் கரைகண்டானை ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக், கம்பனைக் கல்லா லிருந்தான்றன்னைக் கற்பகமா யடியார்கட் கருள்செய்வானைச், செம்பொன்னைப் பவளத்தைத் திரளுமுத்தைத் திங்களைஞாயிற்றைத் தீயைநீரை, யம்பொன்னை யாவடுதண் டுறையுண்மேய வரனடியே யடிநாயே னடைந்துய்ந்தேனே.

தரித்தானைத் தண்கடனஞ் சுண்டான்றன்னைத் தக்கன்றன் பெருவேள்வி தகர்த்தான்றன்னைப், பிரித்தானைப் பிறைதவழ்செஞ் சடையினானைப் பெருவலியால் மலையெடுத்த வரக்கன்றன்னை, நெரித்தானை நேரிழையாள் பாகத்தானை நீசனேனுடலுறுநோ யானதீர,வரித்தானை யாவடுதண் டுறையுண்மேய வரனடியே யடிநாயே னடைந்துய்ந்தேனே.

திருச்சிற்றம்பலம்.

---

எறிபுனல்பொன் மணிசிதறு திரைநீர்ப்பொன்னி யிடைமருதைச் சென்றெய்தி யன்பினோடு,மறிவிரவு கரத்தாரை வணங்கிவைகி வண்டமிழ்ப்பா மாலைபல மகிழச்சாத்திப், பொறியரவம் புனைந்தாரைத் திருநாகேச்சரத்துப் போற்றியருந் தமிழ்மாலை புனைந்துபோந்து,செறிவிரைநன் மலர்ச்சோலைப் பனழயாறெய்தித் திருச்சத்தி முற்றத்திற்சென்றுசேர்ந்தார்.()

வேறு.

சென்றுசேர்ந்துதிருச்சத்தி முற்றத்திருந்தசிவக்கொழுந்தைக்
குன்றமகடன்மனக்காதல் குலவும்பூசைகொண்டருளும்
என்றுமினியபெருமானை யிறைஞ்சியியல்பிற்றிருப்பணிகண்
முன்றிலணைந்துசெய்துதமிழ் மொழிமாலைகளுஞ்சாத்துவார், (௧௧௩)

கோவாய்முடுகியென்றெடுத்துக் கூற்றம்வந்துகுமைப்பதன்முன்
பூவாரடிகளென்றலைமேற் பொறித்துவைப்பாயெனப்புகன்று
நாவார்பதிகம்பாடுதலு நாதன்றானுநல்லூரில்
வாவாவென்றேயருள்செய்ய வணங்கிமகிழ்ந்துவாகீசர். (கஙசு)

(திருச்சத்திமுற்றம் - திருவிருத்தம்.)
திருச்சிற்றம்பலம்.

கோவாய்முடுகி யடுதிறற்கூற்றங் குமைப்பதன்முன்
பூவாரடிச்சுவ டென்மேற்பொறித்துவை போகவிடின்
மூவாமுழுப்பழி மூடுங்கண்டாய்முழங் குந்தழற்கைத்
தேவாதிருச்சத்தி முற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே.

பொறித்தேரரக்கன் பொருப்பெடுப்புற்றவன் பொன்முடிதோ
ளிறத்தாரொருவிர லூன்றிட்டலற விரங்கியொள்வாள்
குறித்தேகொடுத்தாய் கொடியேன்செய்குற்றக் கொடுவினைநோய்
செறுத்தாய்திருச்சத்தி முற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே.
திருச்சிற்றம்பலம்.

வேறு.

நன்மைபெருகருணெறியே வந்தணைந்துநல்லூரின்
மன்னுதிருத்தொண்டனூர் வணங்கிமகிழ்ந்தெழும்போதில்
உன்னுடையநினைப்பதனை முடிக்கின்றேமென்றவர்தஞ்
சென்னிமிசைப்பாதமலர் சூட்டினான்சிவபெருமான். (கஙரு)

நனைந்தனையதிருவடியென் றலைமேல்வைத்தாரென்று
புனைந்ததிருத்தாண்டகத்தாற் போற்றிசைத்துப்புனிதனரு
ளினைந்துருகிவிழுந்தெழுந்து நிறைந்துமலர்ந்தொழியாத
தனம்பெரிதும்பெற்றுவந்த வறியோன்போன்மனந்தழைத்தார். (கஙசா)

(திருநல்லூர்த் - திருத்தாண்டகம்.)
திருச்சிற்றம்பலம்.

நினைந்துருகுமடியாரை நையவைத்தார் நில்லாமேதீவினைக ணீங்கவைத்தார், சினந்துருகுகளிற்றுரிவைப் போர்வைவைத்தார் செழுமதியின்றளிர்வைத்தார் சிறந்துவானோ, ரினைந்துறுமிமணிமகுடத் தேறத்துற்ற வினமலர்கள்போதவிழ்ந்து மதுவாய்ப்பில்கி, நனைந்தனையதிருவடியென் றலைமேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே.

குலங்கிளரும் வருதிரைக ளேழும்வைத்தார் குருமணிசேர் மலைவைத்தார் மலையைக்கையா, லுலங்கிளர வெடுத்தவன்றோண் முடியுநோவ வொருவிரலா லுறவைத்தா ரிறைவாவென்று, புலம்புதலு மருளொடுபோர் வாளும்வைத்தார் புகழவைத்தார் புரிந்தாளாக் கொள்ளவைத்தார், நலங்கிளருந் திருவடியென் றலைமேல்வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே.
திருச்சிற்றம்பலம்

நாவுக்குமன்னர்திரு நல்லூரினம்பர்பான்
மேவுற்றதிருப்பணிகண் மேவுறநாளுஞ்செய்து
பாவுற்றதமிழ்மாலை பலபாடிப்பணிந்தேத்தித்
தேவுற்றதிருத்தொண்டு செய்தொழுகிச்செல்லுநாள். (௧௯௭)

கருகாவூர்முதலாகக் கண்ணுதலோனமர்ந்தருளுந்
திருவாவூர்திருப்பாலைத் துறைபிறவுஞ்சென்றிறைஞ்சிப்
பெருகார்வத்திருத்தொண்டு செய்துபெருந்திருநல்லூர்
ஒருகாலும்பிரியாதே யுள்ளுருகிப்பணிகின்றார். (௧௯௮)

ஆளுடையநாயகன்ற னருள்பெற்றங்ககன்றுபோய்
வாளைபாய்புனற்பழனத் திருப்பழனமருங்கணைந்து
காளவிடமுண்டிருண்ட கண்டர்பணிக்கலன்பூண்டு
நீளிரவிலாடுவார் கழல்வணங்கநேர்பெற்றார். (௧௯௯)

அப்பதியைச்சூழ்ந்ததிருப் பதியிலரனார்மகிழும்
ஒப்பரியதானங்க ளுள்ளுருகிப்பணிந்தணைவார்
மெய்ப்பொருடேர்நாவினுக்கு வேந்தர்தாமேவினார்
செப்பருஞ்சீரப்பூதி யடிகளூர்திங்களூர். (௨00)

அந்தணரின்மேம்பட்ட வப்பூதியடிகளார்
தந்தனையருடன்சாலை கூவல்குளந்தருதண்ணீர்ப்
பந்தர்பலவாண்டவர செனும்பெயராற்பண்ணினமை
வந்தணைந்தவாகீசர் கேட்டவர்தமனைநண்ண. (௨0௧)

மற்றவருமனமகிழ்ந்து மனைவியார்மைந்தர்பெருஞ்
சுற்றமுடன்களிகூரத் தொழுதெழுந்துசூழ்ந்துமொழிக்
கொற்றவனாயமுதுசெயக் குறைகொள்வாரிறைகொள்ளப்
பெற்றபெருந்தவத்தொண்டர் திருவுள்ளம்பெறப்பெற்றார். (௨0௨)

காண்டகைமையின்றியுமுன் கலந்தபெருங்கேண்மையினார்
பூண்டபெருங்காதலுடன் போனகமுங்கறியமுதும்
வேண்டுவனவெவ்வேறு விதங்கள்பெறவிருப்பினால்
ஆண்டவரசமுதுசெயத் திருவமுதாம்படியமைத்து. (௨0௩)

திருநாவுக்கரசமுது செய்தருளமற்றவர்தம்
பெருநாமஞ்சாற்றியவப் பிள்ளைதனையழைத்தன்பு
தருஞானத்திருமறையோர் தண்டலையின்வண்கதலிக்
குருநாளக்குருத்தரிந்து கொண்டுவரத்தனிவிட்டார். (௨0௪)

ஆங்கவனும்விரைந்தெய்தி யம்மருங்குதாழாதே
பூங்கதலிக்குருத்தரியப் புகுமளவிலொருநாகந்
தீங்கிழைக்கவதுபேணான் றிருவமுதுசெய்தருள
வோங்குகதலிக்குருத்துக் கொண்டொல்லைவந்தணைந்தான். (௨0௫)

தீயவிடந்தலைக்கொள்ளத் தெருமந்துசெழுங்குருத்தைத்
தாயர்கரத்தினினீட்டித் தளர்ந்துதனைத்தழுனக
மேயபடியுரைசெய்யான் விழக்கண்டுகெட்டொழிந்தேந்
தூயவரிங்கமுதுசெயத் தொடங்காரென்றதுவொளித்தார். (உ0சு)

தம்புதல்வன்சவமறைத்துத் தடுமாற்றமிலராகி
யெம்பெருமானமுதுசெய வேண்டுமெனவந்திறைஞ்ச
உம்பர்பிரான்றிருத்தொண்ட ருள்ளத்திற்றடுமாற்ற
நம்பர்திருவருளாலே யறிந்தருளிநவைதீர்ப்பார். (உ0எ)

அன்றவர்கண்மறைத்ததனுக் களவிறந்தகருணையராய்க்
கொன்றைநறுஞ்சடையார்தங் கோயிலின்முன்கொணர்வித்தே
யொன்றுகொலாமெனப்பதிக மெடுத்துடையான்சீர்பாடப்
பின்றைவிடம்போய்நீங்கிப் பிள்ளையுணர்ந்தெழுந்திருந்தான். (உ0அ)

(விஷந்தீர்த்ததிருப்பதிகம் - பண் - இந்தளம்.)

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுகொலாமவர் சிந்தையுயர்வரை
யொன்றுகொலாமுய ரும்மதிசூடுவ
ரொன்றுகொலாமிடு வெண்டலைகையது
வொன்றுகொலாமவ ரூர்வதுதானே.

பத்துக்கொலாமவர் பாம்பின்கண்பாம்பின்பல்
பத்துக்கொலாமெயி றுந்நெரிந்துக்கன
பத்துக்கொலாமவர் காயப்பட்டான்றலை
பத்துக்கொலாமடி யார்செய்கைதானே.

திருச்சிற்றம்பலம்.

அருந்தனயனுயிர்பெற்ற வதுகண்டுமமுதுசெயா
திருந்ததற்குத்தளர்வெய்தி யிடருழந்தார்துயர்நீங்க
வருந்துமவர்மனைபுகுந்து வாகீசத்திருமுனிவர்
விருந்தமுதுசெய்தருளி விருப்பினுடன்மேவுநாள். (உ0கூ)

திங்களூர்தனினின்றுந் திருமறையோர்பின்செல்லப்
பைங்கண்விடைத்தனிப்பாகர் திருப்பழனப்பதிபுகுந்து
தங்குபெருங்காதலொடு தம்பெருமான்கழல்சார்ந்து
பொங்கியவன்பொடுவணங்கி முன்னின்றுபோற்றிசைப்பார். (உக0)

புடைமாலைமதிக்கண்ணிப் புரிசடையார்பொற்கழற்கீழ்
அடைமாலைச்சீலமுடை யப்பூதியடிகடமை
நடைமாணச்சிறப்பித்து நன்மைபுரிதீந்தமிழின்
றொடைமாலைத்திருப்பதிகச் சொன்மாலைபாடினார். (உகக)

(திருப்பழனம் - பண் - தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

சொன்மாலைபயில்கின்ற குயிலினங்காள்சொல்லீரோ
பன்மாலைவரிவண்டு பண்மிழற்றும்பழனத்தான்
முன்மாலைநகுதிங்கள் முகிழ்விளங்குமுடிச்சென்னிப்
பொன்மாலைமார்பனென் புதுநலமுண்டிகழ்வானோ.

வஞ்சித்தென்வளைகவர்ந்தான் வாரானேயாயிடினும்
பஞ்சிக்காற்சிறகன்னம் பரந்தார்க்கும்பழனத்தா
னஞ்சிப்போய்க்கலிமெலிய வழலோம்புமப்பூதி
குஞ்சிப்பூவாய்நின்ற சேவடியாய்கோடியையே.

திருச்சிற்றம்பலம்.

---

எழும்பணியுமிளம்பிறையு மணிந்தவரையெம்மருங்குந்
தொழும்பணிமேற்கொண்டருளுந் திருச்சோற்றுத்துறைமுதலாத்
தழும்புறுகேண்மையினண்ணித் தானங்கள்பலபாடிச்
செழும்பழனத்திறைகோயிற் றிருத்தொண்டுசெய்திருந்தார். (உகஉ)

சாலநாளங்கமர்ந்து தந்தலைமேற்றாள்வைத்த
ஆலமார்மணிமிடற்று ரணிமலர்ச்சேவடிநினைந்து
சேலுலாம்புனற்பொன்னித் தென்கரையேறிச்சென்று
கோலநீண்மணிமாடத் திருநல்லூர்குறுகினார். (உகங)

அங்கணைந்துதம்பெருமா னடிவணங்கியாராது
பொங்கியவன்பொடுதிளைத்துப் போற்றிசைத்துப்பணிசெயுநாட்
டங்குபெருங்காதலினாற் றமைமேல்விரிஞ்சனொடு
செங்கண்மாலறிவரியார் திருவாரூர்தொழநினைந்தார். (உகச)

நல்லூரினம்பரருள் பெற்றுப்போய்ப்பழையாறைப்
பல்லூர்வெண்டலைக்கரத்தார் பயிலுமிடம்பலபணிந்து
சொல்லூர்வண்டமிழ்ப்பாடி வலஞ்சுழியைத்தொழுதேத்தி
யல்லூர்வெண்பிறையணிந்தார் திருக்குடமூக்கணைந்திறைஞ்சி. (உகரு)

நாலூர்தென்றிருச்சேறை குடவாயினறையூர்சேர்
பாலூருமின்மொழியாள் பாகனார்கழல்பரவி
மேலூர்திவிடைக்கொடியார் மேவுமிடம்பலபாடிச்
சேலூர்தண்பணைசூழ்ந்த தென்றிருவாஞ்சியமணைந்தார். (உகசு)

பெருவாசமலர்ச்சோலைப் பெருவேளூர்பணிந்தேத்தி
முருகாருமலர்க்கொன்றை முதல்வனார்பதிபிறவுந்
திருவாரும்விளமருடன் சென்றிறைஞ்சிவாகீசர்
மருவாரூரெரித்தவர்தந் திருவாரூர்வந்தடைந்தார். (உகஎ)

ஆண்டவரசெழுந்தருள வாரூரிலன்பர்கடா
நீண்டசடையார்தம்பா னிறைந்தவருள்பெற்றுடையார்
காண்டகுமாளிகைமாடங் கவின்சிறந்தோங்கிடவெங்குஞ்
சேண்டிகழ்வீதிகள்பொலியுந் திருமலிமங்கலஞ்செய்தார். (உகஅ)

வேறு.

வல்லமண்குண்டர்தம் மாயைகடந்து மறிகடலிற்
கல்லேமிதப்பாகப் போந்தவர்வந்தா ரெனுங்களிப்பால்
எல்லையிறெண்ட ரெயிற்புறஞ்சென்றெதிர் கொண்டபோது
சொல்லினரசர் வணங்கித்தொழுதுரை செய்தணைவார். (உகசு)

பற்றொன்றிலாவரும் பாதகராகு மமணர்தம்பால்
உற்றபிணியொழிந் துய்யப்போந்தேன்பெற லாவதொன்றே
புற்றிடங்கொண்டார்தந் தொண்டர்க்குத்தொண்டராம் புண்ணியமென்
றற்றவுணர்வொடு மாரூர்த்திருவீதி யுள்ளணைந்தார். (உஉ0)

---

(திருவாரூர்த் - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

குலம்பலம்பாவரு குண்டாமுன்னேநமக் குண்டுகொலோ
வலம்பலம்பாவரு தண்புனலாரு ரவிர்சடையான்
சிலம்பலம்பாவரு சேவடியான்றிரு மூலட்டானம்
புலம்பலம்பாவரு தொண்டர்க்குத்தொண்டராம் புண்ணியமே.

குற்றமுடைய வமணர்திறமது கையகன்றிட்
டுற்றகருமஞ்செய் துய்யப்போந்தெனுக்கு முண்டுகொலோ
மற்பொலிதோளா னிராவணன்றன்வலி வாட்டுவித்த
பொற்கழலானடித் தொண்டர்க்குத்தொண்டராம் புண்ணியமே.

திருச்சிற்றம்பலம்.

---

சூழ்திருத்தொண்டர் தம்முடன்றோரண வாயினண்ணி
வாழிதிருநெடுந் தேவாசிரயன்முன் வந்திறைஞ்சி
யாழிவளைத்திரு மாளிகைவாயி லவைபுகுந்து
நீள்சுடர்மாமணிப் புற்றுவந்தாரைநேர் கண்டுகொண்டார். (உஉக)

கண்டுதொழுது கரசரணுதியங் கங்களெல்லாங்
கொண்டபுளகங்க ளாகவெழுந்தன்பு கூரக்கண்க
ணண்டுளிமாரி பொழியத்திருமூலட் டானர்தம்மைப்
புண்டரிகக்கழல் போற்றித்திருத்தாண் டகம்புனைந்து. (உஉஉ)

---

(திருவாரூர்ப்போற்றித் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

கற்றவர்களுண்ணுங் கனியேபோற்றி கழலடைந்தார்செல்லுங் கதியேபோற்றி, யற்றவர்கட்சாரமுத மானாய்போற்றி யல்லலறுத்தடியேனையாண்டாய்போற்றி, மற்றொருவரொப்பிலா மைந்தாபோற்றி வானவர்கள்போற்று மருந்தேபோற்றி,செற்றவர்தம்புரமெரித்த சிவனேபோற்றி திருமூலட்டானனே போற்றிபோற்றி.

பிரமன்றன்சிரமரிந்த பெரியோய்போற்றி பெண்ணுருவோடாணுருவாய் நின்றாய்போற்றி, கரநான்குமுக்கண்ணு முடையாய்போற்றி காதலிப்பார்க்காற்ற வெளியாய்போற்றி,யருமந்ததேவர்க் கரைசேபோற்றி யன்றரக்கனைஞ்ஞான்கு தோளுந்தாளுஞ், சிரநெரித்தசேவடியாய் போற்றி போற்றி திருமூலட்டானனே போற்றிபோற்றி.

திருச்சிற்றம்பலம்.

---

காண்டலேகருத் தாயினவென்னுங் கலைப்பதிகந்
தூண்டாவிளக்கன்ன சோதிமுன்னின்று துதித்துருகி
யீண்டுமணிக்கோயில் சூழவலஞ்செய் திறைஞ்சியன்பு
பூண்டமனத்தொடு நீடிருவாயிற் புறத்தணைந்தார். (உஉ௩)

---

(திருவாரூர்ப் - பண் - சீகாமரம்.)

திருச்சிற்றம்பலம்.

காண்டலேகருத்தாய்நினைந்திருந்தேன்மனம்புகுந்தாய்கழலடி
பூண்டுகொண்டொழிந்தேன்புறம்போயினாலறையோ
வீண்டுமாடங்கணீண்டமாளிகைமேலெழுகொடிவானிளமதி
தீண்டிவந்துலவுந்திருவாரூரம்மானே.

நாடினார்கமலம்மலரயனோடிரணியனாகங்கீண்டவ
னாடிக்காணமாட்டாததழலாயநம்பரனைப்
பாடுவார்பணிவார்பல்லாண்டிசைகூறுபத்தர்கள்சித்தத்துள்புக்குத்
தேடிக்கண்டுகொண்டேன்திருவாரூரம்மானே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

செய்யமாமணியொளிசூழ் திருமுன்றின்முன்றேவா சிரயன்சார்ந்து
கொய்யுலாமலர்ச்சோலைக் குயில்கூவமயிலாலு மாரூரைக்
கையினாற்றொழாதேமுன் கனியிருக்கக்காய்கவர்ந்த கள்வனேனென்
றெய்தரியகையறவாற் றிருப்பதிகமருள்செய்தங் கிருந்தாரன்றே. (உஉ௪)

(திருவாரூர்ப் பழமொழிப்பத்து - பண் - காந்தாரம்.)

திருச்சிற்றம்பலம்.

மெய்யெலாம்வெண்ணீறு சண்ணித்தமேனியான் றாடொழாதே
யுய்யலாமென்றெண்ணி யுறிதூக்கியுழிதந்தே னுள்ளம்விட்டுக்
கொய்யுலாமலர்ச்சோலைக் குயில்கூவமயிலாலு மாரூரனைக்
கையினாற்றொழாதொழிந்து கனியிருக்கக்காய்கவர்ந்த கள்வனேனே.

மறுத்தானோர்வல்லரக்க னீரைந்துமுடியினொடு தோளுந்தாளு [றை
மிறுத்தானையெழின்முளரித் தவிசின்மிசையிருந்தான்றன் றலையிலொன்
யறுத்தானையாரூரி லம்மானையாலால முண்டுகண்டங்
கறுத்தானைக்கருதாதே கரும்பிருக்கவிரும்புகடித் தேய்த்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

மார்பாரப்பொழிகண்ணீர் மழைவாருந்திருவடிவு மதுரவாக்கிற்
சேர்வாகுந்திருவாயிற் றீந்தமிழின்மாலைகளுஞ் செம்பொற்றாளே
சார்வானதி[illegible]னமு முழவாரத்தனிப்படையுந் தாமுமாகிப்
பார்வாழத்திருவீதிப் பணிசெய்துபணிந்தேத்திப் பரவிச்செல்வார். ()

நீடுபுகழ்த்திருவாரூர் நிலவுமணிப்புற்றிடங்கொ ணிருத்தர்தம்மைக்
கூடியவன்பொடுகாலங் களிலணைந்துகும்பிட்டுக் கோதில்வாய்மைப்
பாடிளம்பூதத்தி னெனும்பதிகமுதலான பலவும்பாடி
நாடியவார்வம்பெருக நைந்துமனங்கரைந்துருகி நயந்துசெல்வார். (உஉரு)

---

(திருவாரூர்ப் - பண் - காந்தாரம்.)

திருச்சிற்றம்பலம்.

பாடிளம்பூதத்தினும் பவளச்செவ்வாய்வண்ணத்தானுங்
கோடிளமென்முலையாளைக் கூடியகோலத்தினு
மோடிளவெண்பிறையானு மொளிதிகழ்சூலத்தினு
மாடிளம்பாம்பசைத்தானு மாரூரமர்ந்தவம்மானே.

பையஞ்சுடர்விடுநாகப் பள்ளிகொள்வானுள்ளத்தானுங்
கையஞ்சுநான்குடையானைக் கால்விரலாலடர்த்தானும்
பொய்யஞ்சிவாய்மைகள்பேசிப் புகழ்புரிந்தார்க்கருள்செய்யு
மையஞ்சினப்புறத்தானு மாரூரமர்ந்தவம்மானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - வன்மீகநாதர். தேவியார் பெயர் - அல்லியங்கோதை.

திருப்பதிகம்—கச.

---

நான்மறைநூற் பெருவாய்மை நமிநந்தி யடிகடிருத் தொண்டின்மைப்
பான்மையிலே யாலவரைப் பரமர்திரு விருத்தத்துள் வைத்துப் பாடித்
தேன்மருவுங் கொன்றையார் திருவாரூ ரரனெறியிற் றிகழுந்தன்மை
யானதிற மும்போற்றி யணிவீதிப் பணிசெய்தங் கமருநாளில். (உஉ௭)

நீராருஞ் சடைமுடியார் நிலவுதிரு வலிவலமு நினைந்துசென்று
வாரார்முலைமங்கை யுமைபங்கர் கழல்பணிந்து மகிழ்ந்துபாடிக்
காராருங் கறைக்கண்டர் கீழ்வேளூர் கன்றாப்பூர் கலந்துபாடி
யாராத காதலினாற் றிருவாரூர் தனின்மீண்டு மணைந்தாரன்றே. (உஉ௮)

மேவுதிரு வாதிரைநாள் வீதிவிடங் கப்பெருமாள் பவனிதன்னிற்
றேவருடன் முனிவர்கண்முன் சேவிக்கு மடியார்க ளுடன்சேவித்து
மூவுலகுங் களிகூர வரும்பெருமை முறைமையெல்லாங் கண்டுபோற்றி
நாவினுக்குத் தனியரசர் நயக்குநா ணம்பர்திரு வருளினாலே. (உஉ௯)

திருப்புகலூ ரமர்ந்தருளுஞ் சிவபெருமான் சேவடிகள் கும்பிட்டேத்தும்,விருப்புடைய வுள்ளத்து மேவியெழுங் காதல்புரி வேட்கைகூர,ஒருப்படுவார் திருவாரூ ரொருவாறு தொழுதகன்றங் குள்ளம்வைத்துப்,பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் பதிபிறவும் பணிந்துபோந்தார்.()

அந்நாளி லாளுடைய பிள்ளையார் திருப்புகலி யதன்கணின்றும்
பன்னாகப் பூணணிவார் பயின்றதிருப் பதிபலவும் பணிந்துசெல்வார்
புன்னாக மணங்கமழும் பூம்புகலூர் வந்திறைஞ்சிப் பொருவில்சீர்த்தி
மின்னாரும் புரிமுந்நூன் முருகனார் திருமடத்தின் மேவுங்காலை. (உ௩௧)

ஆண்டவர செழுந்தருளி யணியாரூர் மணிப்புற்றி லமர்ந்துவாழு
நீண்டசுடர் மாமணியைக் கும்பிட்டு நீடுதிருப் புகலூர்நோக்கி
மீண்டருளி னாரென்று கேட்டருளி யெதிர்கொள்ளும் விருப்பினோடும்
ஈண்டுபெருந்தொண்டர்குழாம் புடைசூழவெழுந்தருளி யெதிரேசென்றார்

கரண்டமலி தடம்பொய்கைக் காழியர்கோ னெதிரணையுங் காதல்கேட்டு
வரன்றுமணிப் புனற்புகலூர் நோக்கிவரும்வாகீசர் மகிழ்ந்துவந்தார்
திரண்டுவருந் திருநீற்றுத் தொண்டர்குழா மிருதிறமுஞ் சேர்ந்தபோதில்
இரண்டுசில வின்கடல்க ளொன்றாகி யணைந்தனபோ லிசைந்தவன்றே.()

திருநாவுக் கரசரெதிர் சென்றிறைஞ்சச் சிரபுரத்துத் தெய்வவாய்மைப்
பெருஞான சம்பந்தப் பிள்ளையா ரெதிர்வணங்கி யப்பரோநீர்
வருநாளிற் றிருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீ ரென்றுகூற
வருநாமத் தஞ்செழுத்துப் பயில்வாய்மை யவருமெதி ரருளிச்செய்வார்.()

வேறு.

சித்தநிலாவுந் தென்றிருவாரூர் நகராளு
மைத்தழைகண்ட ராதிரைநாளின் மகிழ்செல்வம்
இத்தகைமைத்தென் றென்மொழிகேனென் றுரைசெய்தார்
முத்துவிதான மணிப்பொற்கவரி மொழிமாலை. (உ௩௫)

(திருவாரூர்த் திருவாதிரைத் - திருப்பதிகம் - பண் - குறிஞ்சி.)

திருச்சிற்றம்பலம்.

முத்துவிதான மணிப்பொற்கவரி முறையாலே
பத்தர்களோடு பாவையர்சூழப் பலிப்பின்னே
வித்தகக்கோல வெண்டலைமாலை * விரதிக
ளத்தனூரு ராதிரைநாளா லதுவண்ணம்.

பாரூர்பவ்வத் தானைப்பத்தர் பணிந்தேத்தச்
சீரூர்பாட லாடலறாத செம்மாப்பார்ந்
தோரூரொழியா துலகமெங்கு மெடுத்தேத்து
மாரூரன்ற னாதிரைநாளா லதுவண்ணம்.

திருச்சிற்றம்பலம்.

---

அம்மொழிமாலைச் செந்தமிழ்கேளா வணிசண்பை
மைம்மலர்கண்டத் தண்டர்பிரானூர் மகனூருங்
கொய்ம்மலர்வாவித் தென்றிருவாரூர் கும்பிட்டே
யும்முடன்வந்திங் குடனமர்வேனென் றருள்செய்தார். (உ௩௬)

மாமதிலாரூர் மன்னரையங்கு வணங்கச்செந்
தாமரையோடைச் சண்பையர்நாதன் றானேக
நாமருசொல்லி னூதருமார்வத் தொடுபுக்கார்
பூமலர்வாசத் தண்பணைசூழும் புகலூரில். (உ௩எ)

அத்திருமூதூர் மேவியநாவுக் கரசுந்தஞ்
சித்தநிறைந்தே யன்புதெவிட்டுந் தெளிவெள்ள
மொய்த்திழிதாரைக் கண்பொழிநீர்மெய் முழுதாரப்
பைத்தலைநாகப் பூணணிவாரைப் பணிவுற்றூர். (உ௩அ)

தேவர்பிரானைத் தென்புகலூர்மன் னியதேனைப்
பாவியன்மாலைச் செந்தமிழ்பாடிப் பரிவோடு
மேவியகாலந் தோறும்விருப்பிற் கும்பிட்டே
யோவுதலோவு திருப்பணிசெய்தங் குறைகின்றூர். (உ௩௯)

சீர்தருசெங்காட் டங்குடிநீடு திருநள்ளா
றூர்தருசோலை சூழ்தருசாந்தை யயவந்தி
வார்திகழ்மென்முலை யாளொருபாகன் றிருமருகல்
ஏர்தருமன்பாற் சென்றுவணங்கி யின்புற்றூர். (உ௪0)

அப்படிசின்னாள் சென்றபினூர் நகராளுந்
துப்புறழ்வேணிக் கண்ணுதலாரைத் தொழுதிப்பாள்
மெய்ப்பொருண்ஞானம் பெற்றவர்வேணு புரத்தெங்கள்
பொற்புரிமுந்நூன் மார்பரும்வந்தார் புகலூரில். (உ௪க)

---

* விரதிகள் என்பது - சந்தர்ப்பத்தால் விரதீகளென நீண்டது.

வேறு.

பிள்ளையாரெழுந்தருளப் பெருவிருப்பால்வாகீசர்
உள்ளமகிழ்ந்தெதிர்கொண்டங் குடனுறையுநாளின்கண்
வள்ளலார்சிறுத்தொண்டர் மற்றவர்பாலெழுந்தருள
எள்ளருஞ்சீர்நீலநக்கர் தாமுமெழுந்தருளினர். (உ௪௨)

ஆங்கணையுமவர்களுட னப்பதியிலந்தணரா
மோங்குபுகழ்முருகனர் திருமடத்திலுடனாகப்
பாங்கில்வருஞ்சீரடியார் பலருமுடன்பயில்கேண்மை
நீங்கரியதிருத்தொண்டி னிலையுணர்ந்துநிகழ்கின்றார். (உ௪௩)

திருப்பதிகச்செந்தமிழின் றிறம்போற்றிமகிழ்வுற்றுப்
பொருப்பரையன்மடப்பாவை யிடப்பாகர்பொற்றாளில்
விருப்புடையதிருத்தொண்டர் பெருமையினைவிரித்துரைத்தங்
கொருப்படுசிந்தையினார்க ளுடனுறைவின்பயன்பெற்றார். (உ௪௪)

அந்நாளிற்றமக்கேற்ற திருத்தொண்டினெறியாற்ற
மின்னார்செஞ்சடையண்ணன் மேவுபதியெனைப்பலவு
முன்னாகச்சென்றேத்தி முதல்வன்றாடொழுவதற்குப்
பொன்னாருமணிமாடப் பூம்புகலூர் தொழுதகன்றார். (உ௪௫)

திருநீலநக்கடிகள் சிறுத்தொண்டர் முருகனர்
பெருநீர்மையடியார்கள் பிறரும்விடை கொண்டேக
ஒருநீர்மைமனத்துடைய பிள்ளையாருடனரசும்
வருநீர்செஞ்சடைக்கரந்தார் திருவம்பர்வணங்கினர். (உ௪௬)

செங்குமுதமலர்வாவித் திருக்கடவூரணைந்தருளிப்
பொங்கியவெங்கூற்றடர்த்த பொன்னடிகடொழுதேத்திக்
குங்கிலியக்கலயனர் திருமடத்திற்குறைவறுப்ப
அங்கவர்பாற்சிவனடியா ருடனமுதுசெய்தார்கள். (உ௪௭)

சீர்மன்னுந்திருக்கடவூர்த் திருமயானமும்வணங்கி
யேர்மன்னுமின்னிசைப்பா பலபாடியினிதமர்ந்து
கார்மன்னுங்கறைக்கண்டர் கழலிணைகடொழுதகன்று
தேர்மன்னுமணிவீதித் * திருவாக்கூர்சென்றடைந்தார். (உ௪௮)

சார்ந்தார்தம்புகலிடத்தைத் தான்றோன்றிமாடத்துக்
கூர்ந்தார்வமுறப்பணிந்து கோதிறமிழ்த்தொடைபுனைந்து
வார்ந்தாடுஞ்சடையார்தம் பதிபலவும்வணங்கியுடன்
சேர்ந்தார்கடம்பெருமான் றிருவீழிமிழலையினை. (உ௪௯)

---

* திருஆக்கூர் ஸ்தலம். அதிலிருக்கும் ஆலயத்திற்குத் தான்றோன்றி மாடமென்று பெயர். சுவாமி திருநாமம் - சுயம்புநாதர். தேவியார் - கட்கநேத்திராம்பிகை. திருப்பதிகம்—உ.

வேறு.

வீழிமிழலைவந்தணையு மேவுநாவுக்கரசினையுங்
காழிஞானப்பிள்ளையையுங் கலந்தவுள்ளக்காதலினால்
ஆழிவலவனறியாத வடியாரடியாரவர்களுடன்
வாழிமறையோரெதிர்கொண்டு வணங்கவணங்கியுள்புக்கார். (உருo)

மாடவீதியலங்கரித்து மறையோர்வாயின்மணிவிளக்கு
நீடுகதலிதழைப்பூக நிரைத்துநிறைபொற்குடமெடுத்துப்
பீடுபெருகும்வாகீசர் பிள்ளையாருந்தொண்டர்களுங்
கூடமகிழ்ந்துவிண்ணிழிந்த கோயில்வாயில்சென்றணைந்தார். (உருக)

சென்றுபுகுந்துதிருவீழி மிழலையமர்ந்தசெங்கனகக்
குன்றவில்லியார்மகிழ்ந்த கோயில்வலமாவந்துதிரு
முன்றில்வணங்கிமுன்னெய்தி முக்கட்செக்கர்ச்சடைமவுலி
வென்றிவிடையார்சேவடிக்கீழ் விழுந்தாரெழுந்தார்விம்மினார். (உருஉ)

கைகள்குவித்துக்கழல்போற்றிக் கலந்தவன்புகரைந்துருக
மெய்யில்வழியுங்கண்ணருவி விரவப்பரவுஞ்சொன்மாலை
செய்யசடையார்தமைச்சேரார் தீங்குநெறிசேர்கின்றாரென்
றுய்யுநெறித்தாண்டகமொழிந்தங் கொழியாக்காதல்சிறந்தோங்க. (உருங)

---

(திருவீழிமிழலைத் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

போரானை யீருரிவைப் போர்வையானைப் புலியதளே யுடையாடைப் போற்றினானைப், பாரானை மதியானைப் பகலானானைப் பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்துநின்ற, நீரானைக் காற்றானைத் தீயானானை நினையாதார் புரமெரிய நினைந்ததெய்வத், தேரானைத் திருவீழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே.

அறுத்தானை யயன்றலைக ளஞ்சிலொன்றை யஞ்சாதே வரையெடுத்த வரக்கன்றோள்க, ளிறுத்தானை யெழுநரம் பிசைகேட்டானை யிந்துவினைத் தேய்த்தானை யிரவிதன்பற், பறித்தானைப் பகீரதற்கா வானோர்வேண்டப் பரந்திழியும் புனற்கங்கை பனிபோலாங்குச், செறுத்தானைத் திருவீழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி திருநாமம் - வீழியழகர். தேவியார் பெயர் - சுந்தரகுசாம்பிகை.

திருப்பதிகம்—உச.

---

முன்னாளயனுந்திருமாலு முடிவுமுதலுங்காணாத
பொன்னார்மேனிமணிவெற்பைப் பூநீர்மிழலையினிற்போற்றிப்
பன்னாள்பிரியாநிலைமையினாற் பயிலக்கும்பிட்டிருப்பாரா
யந்நாண்மறையோர்திருப்பதியி லிருந்தார்மெய்ம்மையருந்தவர்கள். ()

சீரின்விளங்குந்திருத்தொண்ட ரிருந்துசிலநாட்சென்றதற்பின்
மாரிசுருங்கிவளம்பொன்னி நதியும்பருவமாறுதலும்
நீரினியன்றவுணவருகி நிலவும்பலமன்னுயிர்களெல்லாம்
பாரின்மலிந்த * விலம்பாட்டிற் படர்கூர்வறுமைபரந்ததால். (உருரு)

வையமெங்கும்வற்கடமாய்ச் செல்லவுலகோர்வருத்தமுற
நையுநாளிற்பிள்ளையார் தமக்குநாவுக்கரசினுக்குங்
கையின்மானுமழுவுமுடன் காணக்கனவிலெழுந்தருளிச்
செய்யசடையார்திருவீழி மிழலையுடையாரருள்செய்வார். (உருசு)

காலநிலைமையாலுங்கள் கருத்தில்வாட்டமுறீரெனினும்
ஏலவும்மைவழிபடுவார்க் களிக்கவளிக்கின்றோமென்று
கோலங்காணவெழுந்தருளிக் குலவும்பெருமையிருவர்க்கு
ஞாலமறியப்படிக்காசு வைத்தார்மிழலைநாயகனர். (உருஎ)

விண்ணின்றிழிந்தவிமானத்தின் கிழக்குமேற்கும்பீடத்தில்
அண்ணல்புகலியாண்டகையார் தமக்குமாண்டவரசினுக்கு
நண்ணுநாள்கடொறுங்காசு படிவைத்தருளநானிலத்தில்
எண்ணிலடியாருடனமுது செய்தங்கிருந்தாரிருவர்களும். (உருஅ)

அல்லார்கண்டத்தண்டர்பிரா னருளாற்பெற்றபடிக்காசு
பல்லாறியன்றவளம்பெருகப் பரமனடியாரானார்கள்
எல்லாமெய்தியுண்கவென விரண்டுபொழுதும்பறைநிகழ்த்திச்
சொல்லாற்சாற்றிச்சோறிட்டார் துயர்கூர்வறுமைதொலைத்திட்டார். ()

ஈசர்மிழலையிறையவர்பா லிமயப்பாவைதிருமுலைப்பா
றேசமுய்யவுண்டவர்தாந் திருமாமகனாராதலினாற்
காசு ◯ வாசியுடன்பெற்றார் கைத்தொண்டாகுமடிமையினால்
வாசியில்லாக்காசுபடி பெற்றுவந்தார்வாகீசர். (உகூ0)

ஆறுசடைமேலணிந்தருளு மண்ணல்வைத்தபடிக்காசால்
ஈறிலாதபொருளுடைய விருவருடையதிருமடங்கள்
சோறுநாளுந்தொண்டர்மகிழ்ந் துண்ணவுண்ணத்தொலையாதே
யேறுபெருமைபுவிபோற்ற வின்புற்றிருக்குமந்நாளில். (உகூக)

காலந்தவறுதீர்ந்தெங்குங் கலிவான்பொழிந்தபுனல்கலந்து
ஞாலமெல்லாங்குளிர்தூங்கி யுணவுபெருகிநலஞ்சிறப்ப
மூலவன்பரிருவர்களு மொழிமாலைகளும்பலசாத்தி
நீலகண்டருறைபதிகள் பிறவும்வணங்கநினைவுற்றார். (உகூஉ)

* இலம்பாடு வற்கடகம் என்பவை - கருப்புக்காலம்.
◯ வாசி என்பது - வட்டம்.

வாய்ந்தமிழலைமாமணியை வணங்கிப்பிரியாவிடைகொண்டு
பூந்தண்புனல்சூழ்வாஞ்சியத்தி றங்கிப்புனிதர்வாழ்பதிகள்
ஏய்ந்தவன்பினாலிறைஞ்சி யிசைவண்டமிழ்கள்புனைந்துபோய்ச்
சேர்ந்தார்செல்வத்திருமறைக்கா டெல்லையில்லாச்சீர்த்தியினார். (உ௬௩)

மன்றல்விரவுமலர்ப்புன்னை மணஞ்சூழ்சோலையுப்பளத்தின்
முன்றிரேறுஞ்சிறுமடவார் முத்தங்கொழிக்குமறைக்காட்டுக்
குன்றவில்லியார்மகிழ்ந்த கோயில்புகுந்துவலங்கொண்டு
சென்றுசேர்ந்தார்தென்புகலிக் கோவுமரசுந்திருமுன்பு. (உ௬௪)

பரவையோதக்கழிக்கானற் பாங்குநெருங்குமப்பதியில்
அரவச்சடையந்தணனாரை யகிலமறைகளர்ச்சனைசெய்
துரவக்கதவந்திருக்காப்புச் செய்தவந்நாண்முதலிந்நாள்
வரையுமடைத்தேநிற்கின்ற மணிநீள்வாயில்வணங்குவார். (உ௬௫)

தொல்லைவேதந்திருக்காப்புச் செய்தவாயிற்றொடர்வகற்ற
வல்லவன்பரணையாமை மருங்கோர்வாயில்வழியெய்தி
யல்லறீர்ப்பார்தமையருச்சிப் பார்கடொழுவாராம்படிகண்
டெல்லையில்லாப்பெரும்புகழா ரிதனையங்குக்கேட்டறிந்தார். (உ௬௬)

ஆங்கப்படியையறிந்தருளி யாழித்தோணிபுரத்தரசர்
ஓங்கும்வேதமருச்சனைசெ யும்பர்பிரானையுள்புக்குத்
தேங்காதிருவோநேரிறைஞ்சத் திருமுன்கதவந்திருக்காப்பு
நீங்கப்பாடுமப்பரென நீடுந்திருநாவுக்கரசர். (உ௬௭)

உண்ணீர்மையினாற்பிள்ளையா ருரைசெய்தருளவதனாலே
பண்ணினேருமொழியாளென் றெடுத்துப்பாடப்பயன்றுய்ப்பான்
றெண்ணீரணிந்தார்திருக்காப்பு நீக்கத்தாழ்க்கத்திருக்கடைக்காப்
பெண்ணீரிரக்கமில்லீரே யென்றுபாடியிறைஞ்சுதலும். (உ௬அ)

(திருமறைக்காடு- திருக்குறுந்தொகை.)
திருச்சிற்றம்பலம்.

பண்ணினேர்மொழி யாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ் செய்மறைக்காடரோ
கண்ணினாலுமைக் காணக்கதவினைத்
திண்ணமாகத் திறந்தருள்செய்மினே.

அரக்கனைவிர லாலடர்த்திட்டநீ
ரிரக்கமொன்றிலீ ரெம்பெருமானிரோ
சுரக்கும்புன்னைகள் சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கத வந்திறப்பிம்மினே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி திருநாமம்-மறைக்காட்டீசர். தேவியார்-யாழைப்பழித்தநாயகி,
திருப்பதிகம்—கக,

வேதவனத்தின்மெய்ப்பொருளி னருளால்விளங்குமணிக்கதவங்
காதலன்பர்முன்புதிருக் காப்புநீங்கக்கலைமொழிக்கு
நாதர்ஞானமுனிவருடன் றெழுதுவிழுந்தார்ஞாலத்துள்
ஓதவொலியின்மிக்கெழுந்த தும்பரார்ப்புமறையொலியும். (உசுகூ)

அன்பரீட்டங்களிசிறப்ப வாண்டவரசுஞ்சிவக்கன்றும்
இன்பவெள்ளத்திடைமூழ்கி யெழுந்துள்புகுந்துதம்பெருமான்
முன்புபணிந்துபோற்றிசைத்துப் பரவிமொழிமாலைகள்பாடி
யென்புகரையவுள் ளுருகி யிறைஞ்சியரிதிற்புறத்தணைந்தார். (உஎ0)

புறம்புநின்றவாகீசர் புனிதாருளாலிக்கதவந்
திறந்துமடைத்துஞ்செல்லுநெறி திருந்தமலையாடிருமுலையிற்
கறந்தஞானங்குழைத்தமுது செய்தபுகலிக்கவுணியரை
நிறைந்தகதவமடைக்கும்வகை நீரும்பாடியருளுமென. (உஎக)

சண்பையாளுந்தமிழ்விரகர் தாமுந்திருநாவுக்கரசர்
பண்பின்மொழிந்தவுரைகொண்டு பதிகம்பாடுமவ்வளவிற்
கண்பொற்பமைந்தநுதற்காள கண்டராருளாற்கடிதுடனே
திண்பொற்கதவந்திருக்காப்புச் செய்ததெடுத்ததிருப்பாட்டில். (உஎஉ)

அதுகண்டுடையபிள்ளையார் தாமுமாண்டவரசுமகிழ்ந்
திதுநம்பெருமானருள்செய்யப் பெற்றோமென்றங்கிறைஞ்சியபின்
பதிகநிரம்பப்பிள்ளையார் பாடித்தொழுதுபணிவுற்றார்
எதிர்பொற்றிருவாயிலின்வழக்க மென்றுநிகழ்ச்சியெய்தியதால். (உஎங)

அங்குநிகழ்ந்தவச்செயல்கண் டடியாரெல்லாமதிசயித்துப்
பொங்குபுளகமெய்திடமெய் பொழியுங்கண்ணீர்பரந்திழிய
எங்குநிகரொன்றில்லாத விருவர்பாதமிறைஞ்சினார்
நங்கள்புகலிப்பெருந்தகையு மரசுமடத்தினண்ணியபின். (உஎச)

அரிதிற்றிறக்கத்தாம்பாட வடைக்கவவர்பாடியவெளிமை
கருதிநம்பர்திருவுள்ள மறியாதயர்ந்தேனெனக்கவன்று
பெரிதுமஞ்சித்திருமடத்தி லொருபாலடைந்துபேழ்கணித்து
மருவுமுணர்விற்றுயில்கொண்டார் வாய்மைதிறம்பாவாகீசர். (உஎரு)

மன்னுஞ்செல்வமறைக்காட்டு மணியின்பாதமனத்தின்கண்
உன்னித்துயிலும்பொழுதின்க ணுமையோர்பாகமுடையவர்தாம்
பொன்னின்மேனிவெண்ணீறு புனைந்தகோலப்பொலிவினொடுந்
துன்னியவர்க்குவாய்மூரி லிருப்போந்தொடரவாவென்றார். (உஎசு)

போதநிகழவாவென்று போனாரென்கொ லெனப்பாடி
யீதெம்பெருமானருளாகில் யானும்போவே னென்றெழுந்து
வேதவனத்தைப்புறப்பட்டு விரைந்துபோக வவர்முன்னே
யாதிமூர்த்திமுன்காட்டு மவ்வேடத்தா லெழுந்தருள. (உஎஎ)

(திருவாய்மூர்த் - திருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

எங்கேயென்னை யிருந்திடந்தேடிக்கொண்
டங்கேவந்தடை யாளமருளினா
ரெங்கேதோன்றுந் திருவாய்மூர்ச்செல்வனா
ரங்கேவாவென்று போனாரதென்கொலோ.

தீண்டற்கரிய திருவடியொன்றினால்
மீண்டற்குமிதித் தாராக்கன்றனை
வேண்டிக்கொண்டேன்றிரு வாய்மூர்விளக்கினைத்
தூண்டிக்கொள்வேனா னென்றலுந்தோன்றுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வாய்மூர்நாதர்.தேவியார்பெயர்-பாலினும்நன்மொழியாள்.

திருப்பதிகம்—ங.

சீரார்பதியினின்றெழுந்து செல்லுந்திருநாவுக்கரசர்
ஆராவன்பிலாரமுத முண்ணவெய்தாவாறேபோல்
நீரார்சடையாரெழுந்தருள நெடிதுபின்புசெல்லுமவர்
பேராளரைமுன்றொடர்ந்தணையப் பெறுவாரெய்தப்பெற்றிலரால். உஎஅ

அன்னவண்ணமெழுந்தருளி யணித்தேகாட்சிகொடுப்பார்போற்
பொன்னின்கோயிலொன்றெதிரே காட்டியதனுட்புக்கருளத்
துன்னுந்தொண்டரம்மருங்கு விரைந்துதொடரப்போந்தபடி
மன்னும்புகலிவள்ளலார் தாமுங்கேட்டுவந்தணைந்தார். (உஎக)

அழைத்துக்கொடுபோந்தணியார்போற் காட்டிமறைந்தாரெனவயர்ந்து
பிழைத்துச்செவ்வியறியாதே திறப்பித்தேனுக்கேயல்லால்
உழைத்தாமொளித்தாற்கதவந்தொண் டுறைக்கப்பாடியடைப்பித்த
தழைத்தமொழியாருப்பாலார் தாமிங்கொப்பான்மற்றப்பதென். (உஅ0)

மாடநீடுதிருப்புகலி மன்னரவர்க்குமாலயனு
நேடியின்னங்காணாதார் நேரேகாட்சிகொடுத்தருள
ஆடல்கண்டுபணிந்தேத்தி யரசுங்காணக்காட்டுதலும்
பாடவடியாரென்றெடுத்துப் பரமர்தம்மைப்பாடினார். (உஅக)

(திருவாய்மூர்த் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

பாடவடியார் பரவக்கண்டேன் பத்தர்கணங்கண்டேன் மொய்த்த பூதம், மாடன்முழவமதிரக்கண்டே னங்கையனல்கண்டேன் கங்கையாளைக்,கோடலரவார்சடையிற்கண்டேன் கொக்கினிதழ்கண்டேன் கொன்றைகண்டேன், வாடற்றலையொன்றுகையிற்கண்டேன் வாய்மூரடிகளை நான் கண்டவாறே.

கலங்கவிருவர்க்கழலாய்நீண்ட காரணமுங்கண்டேன் கருவாய்நின்று, பலங்கடரித்துகந்தபண்புங்கண்டேன் பாடலொலியெலாங் கூடக் கண்டே, னிலங்கைத்தலைவன்சிரங்கள்பத்து மிறுத்தவனுக்கீந்த பெருமைகண்டேன், வலங்கைத்தலத்துளனலுங்கண்டேன் வாய்மூரடிகளை நான் கண்டவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடுந்தமிழ்மாலைகள்கொண்டு பரமர்தாமுமெழுந்தருள
நீடுந்திருவாய்மூரடைந்து நிலவுங்கோயிலவலஞ்செய்து
சூடும்பிறையார்பெருந்தொண்டர் தொழுதுபோற்றித்துதிசெய்து
நாடுங்காதல்வளர்ந்தோங்க நயந்தந்நகரிலுடனுறைந்தார். (உஅஉ)

ஆண்டவரசும்பிள்ளையா ருடனேயங்கணினிதமர்ந்து
பூண்டகாதல்பொங்கியெழ வாய்மூரடிகளடிபோற்றி
மூண்டவன்பின்மொழிமாலை சாத்திஞானமுனிவரொடு
மீண்டுவந்துதிருமறைக்காட் டெய்திவிமலர்தாள்பணிந்தார். (உஅங)

ஆதிமுதலவர்தமைப்பணிந்தங் கானபணிசெய்தமருநாட்
சீதமதிவெண்குடைவளவர் மகளார்தென்னதேவியாங்
கோதில்குணத்துப்பாண்டிமா தேவியார்முன்குலச்சிறையார்
போதவிட்டார்சிலர்வந்தார் புகலிவேந்தர்தமைக்காண. (உஅச)

வந்துசிவனார்திருமறைக்காட் டெய்திமன்னுவேணுபுரி
அந்தணளர்தமக்கறிவித்தவர்பா லெய்தியடிவணங்கச்
சிந்தைமகிழ்ந்துதீதின்மைவினவத் தீங்குமுளவாமோ
இந்தவுலகமுயவருவீரிருதா ணினைவார்க்கென்றுரைப்பார். (உஅரு)

சைவநெறிவைதிகநிற்கச் சழக்குநெறியைத்தவமென்னும்
பொய்வல்லமணர்செயறன்னைப் பொறுக்ககில்லோமெனக்கேட்டே
அவ்வன்றொழிலோர்செயன்மாற்றி யாதிசைவநெறிவிளங்கத்
தெய்வநீறுநினைந்தெழுந்தார் சீர்கொள்சண்பைத்திருமறையோர். (உஅசா)

ஆயபொழுதுதிருநாவுக்கரசும் புகலியாண்டகைக்குக்
காயமாசுபெருக்கியுழல்கலதி யமணர்கடுவினைசெய்
மாயைசாலமிகவல்லாரவர்மற் றென்னைமுன்செய்த
தீயதொழிலும்பலகெட்டேன் செல்லவிசையேன்யானென்றார். (உஅஎ)

என்றுகூறவெல்லையிலா நீறுபோற்றுமிருவரையுஞ்
சென்றுகாணுங்கருத்துடையே னங்குத்தீங்குபுரியமணர்
நின்றநிலைமையழிவித்துச் சைவநெறிபாரித்தன்றி
ஒன்றுஞ்செய்யேனுணையுமதென் றுரைத்தருளுடையபிள்ளையார். (உஅஅ)

போமாதுணிந்துரீரங்குப் போதப்போதாவவ்வமணர்
தீமாயையினையானேபோய்ச் சிதைத்துவருகின்றேனென்ன
ஆமாறெல்லாமுரைத்தவரை மறுக்கமாட்டாதரசிருப்பத்
தாமாதரவாற்றமிழ்நாட்டிற் போனார்ஞானத்தலைவனார். (௨அ௯)

வேணுபுரக்கோனெழுந்தருள விடைகொண்டிருந்தவாகீசர்
பூணுமன்பான்மறைக்காட்டிற் புனிதர்தம்மைப்போற்றிசைத்துப்
பேணியிருந்தங்குறையுநாட் பெயர்வார்வீழிமிழலையமர்
தாணுவின்றன்செய்யகழன் மீண்டுஞ்சாரநினைக்கின்றார். (௨௯0)

சோலைமறைக்காட்டமர்ந்தருளுஞ் சோதியருள்பெற்றகன்றுபோய்
வேலைவிடமுண்டவர்வீழி மிழலைமீண்டுஞ்செல்வனென
ஞாலநிகழ்ந்தநாசைக்கா ரோணம்பிறவும்பணிந்தணைவார்
சாலுமொழிவண்டமிழ்பாடித் தலைவர்மிழலைவந்தடைந்தார். (௨௯௧)

வீழிமிழலைதனைப்பணிந்து வேதமுதல்வர்தாமிருப்ப
ஆழிவலமேந்தியவரியா லாகாசத்தினின்றிழிந்த
வாழிமலர்ந்தகோயிறனின் மன்னும்பொருளைப்போற்றிசைத்துத்
தாழுநாளிற்பிறபதியும் பணியுங்காதறலைநிற்பார். (௨௯௨)

பூவிற்பொலியும்புனற்பொன்னிக் கரைபோய்ப்பணிவார்பொற்பமைந்த
ஆவுக்கருளுமாவடுதண் டுறையார்பாதமணைந்திறைஞ்சி
நாவுக்கரசர்ஞானபோ னகர்க்குச்செம்பொனாயிரமும்
பாவுக்களித்ததிறம்போற்றிப் போந்துபிறவும்பணிகின்றார். (௨௯௩)

---

(திருவாவடுதுறைத் - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

மாயிருஞாலமெல்லா மலரடிவணங்கும்போலும்
பாயிருங்கங்கையாளைப் படர்சடைவைப்பர்போலுங்
காயிரும்பொழில்கள்சூழ்ந்த கழுமலவூரர்க்கம்பொன்
னாயிரங்கொடுப்பர்போலு மாவடுதுறையனாரே.

பார்த்தனுக்கருளர்போலும் படர்சடைமுடியர்போலும்
மேத்துவாரிடர்கடீர வின்பங்கள்கொடுப்பர்போலும்
கூத்தராய்ப்பாடியாடிக் கொடுவலியரக்கன்றன்னை
யார்த்தவாயலறுவிப்பா ராவடுதுறையனாரே.

திருச்சிற்றம்பலம்

சுவாமி திருநாமம் - மாசிலாமணியீசுரர். தேவியார் பெயர் -
ஒப்பிலாமுலையம்மை. திருப்பதிகம்—அ.

செய்யசடையார்பழையாறை யெய்தவதனிற்செல்பொழுதின்
மையலமணர்மறைக்கவட தளியின்மன்னுஞ்சிவனாைக்
கைகள்கூப்பித்தொழுதருளக் கண்டவாற்றாலமணர்கடம்
பொய்கொள்விமானமெனக்கேட்டுப் பொறாதவுள்ளமிகப்புழுங்கி. உகூச

அந்தவிமானந்தனக்கருகா வாங்கோரிடத்தின்பாங்கெய்திக்
கந்தமலருங்கடிக்கொன்றை முடியார்செய்யகழலுன்னி
மந்தவமணர்வஞ்சனையால் மறைத்தவஞ்சமொழித்தருளிப்
பந்தங்கொண்டகுண்டர்திறம் பாற்றுமென்றுபணிந்திருந்தார். (உகூரு)

வண்ணங்கண்டுநானும்மை வணங்கியன்றிப்போகேனென்
றெண்ணமுடிக்கும்வாகீச ரிருந்தாரமுதுசெய்யாதே
அண்ணலாருமதுவுணர்ந்தங் கரசுதம்மைப்பணிவதற்குத்
திண்ணமாகமன்னனுக்குக் கனவிலருளிச்செய்கின்றார். (உகூசு)

அறிவிலமணர்நமைமறைப்ப விருந்தோமென்றங்கடையாளக்
குறிகளருளிச்செய்தருளி நம்மையரசுகும்பிடுவான்
நெறியிலமணர்தமையழித்து நீக்கிப்போக்கென்றருள்புரியச்
செறிவிலறிவுற்றெழுந்தவனுஞ் செங்கைதலைமேற்குவித்திறைஞ்சி.(உகூஎ)

கண்டவியப்புமந்திரிகட் கியம்பிக்கூடக்கடிதெய்தி
அண்டர்பெருமானருள்செய்த வடையாளத்தின்வழிகண்டு
குண்டர்செய்தவஞ்சனையைக் குறித்துவேந்தன்குலவுபெருந்
தொண்டர்தம்மையடிவணங்கித் தொக்கவமணர்தூரறுத்தான். (உகூஅ)

ஆனையினத்திற்றுகைப்புண்ட வமணாயிரமுமாய்ந்ததற்பின்
மேன்மையரசன்ஈசர்க்கு விமானமாக்கிவிளக்கியபின்
ஆனவழிபாட்டர்ச்சனைக்கு நிரம்பவெல்லாமமைத்திறைஞ்ச
ஞானவரசும்புக்கிறைஞ்சி நாதர்முன்புபோற்றுவார். (உகூகூ)

தலையின்மயிரைப்பறித்துண்ணுஞ் சாதியமணர்மறைத்தாலும்
நிலையிலாதார்நிலைமையினான் மறைக்கவொண்ணுமோவென்னும்
விலையில்வாய்மைக்குறுந்தொகைகள் விளம்பிப்புறம்போந்தங்கமர்ந்தே
யிலைகொள்சூலப்படையார்சே ரிடங்கள்பிறவுந்தொழவணைவார். (௩00)

---

(திருப்பழையாறைவடதளித் - திருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

தலையெலாம்பறிக் குஞ்சமண்கையரு
ணிலையினான்மறைத் தான்மறைக்கொண்ணுமே
யலையினார்பொழி லாறைவடதளி
நிலையினானடி யேநினைந்துய்ம்மினே.

செருத்தனைச்செய்யுஞ் சேணரக்கனுட
லெருத்திறவ்விர லாலிறவூன்றிய
வருத்தனைப்பழை யாறைவடதளித்
திருத்தனைத்தொழு வார்வினைதேயுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - சோமேசர். தேவியார் பெயர் - சோமகலாநாயகி.

திருப்பதிகம்—க.

---

பொங்குபுனலார்பொன்னியினி லிரண்டுகரையும்பொருவிடையார்
தங்குமிடங்கள்புக்கிறைஞ்சித் தமிழ்மாலைகளுஞ்சாத்திப்போ
யெங்குநிறைந்தபுகழாள ரீறில்தொண்டரெதிர்கொள்ளச்
செங்கண்விடையார்திருவானைக் காவின்மருங்குசென்றணைந்தார். (௩௦க)

சிலந்திக்கருளுங்கழல்வணங்கிச் செஞ்சொன்மாலைபலபாடி
இலங்குசடையாரெறும்பியூர் மலையுமிறைஞ்சிப்பாடிப்பின்
மலர்ந்தசோதித்திருச்சிராப் பள்ளிமலையுங்கற்குடியு
நலங்கொள்செல்வத்திருப்பராய்த் துறையுந்தொழுவானண்ணினார். ()

மற்றப்பதிகண்முதலான மருங்குள்ளனவுங்கைதொழுது
பொற்புற்றமைந்ததிருப்பணிகள் செய்துபதிகங்கொடுபோற்றி
உற்றவருளாற்காவிரியை யேறியொன்னார்புரமெரியச்
செற்றசிலையார்திருப்பைஞ்ஞீ லியினைச்சென்றுசேர்கின்றார். (௩௦௩)

வழிபோம்பொழுதுமிகவிளைத்து வருத்தமுறநீர்வேட்கையொடும்
அழிவாம்பசிவந்தணைந்திடவு மதற்குச்சித்தமலையாதே
மொழிவேந்தருமுன்னெழுந்தருள முருகார்சோலைப்பைஞ்ஞீலி
விழியேந்தியநெற்றியினார்தந் தொண்டர்வருத்தமீட்பாராய். (௩௦௪)

காவுங்குளமுமுன்சமைத்துக் காட்டிவழிபோங்கருத்தினான்
மேவுந்திருநீற்றந்தணராய் விரும்புபொதிசோறுங்கொண்டு
நாவின்றனிமன்னவர்க்கெதிரே நண்ணியிருந்தார்விண்ணின்மேற்
றாவும்புள்ளுமண்கிழிக்குந் தனியேனமுங்காணரியவர்தாம். (௩௦௫)

அங்கணிருந்தமறையவர்பா லாண்டவரசுமெழுந்தருள
வெங்கண்விடைவேதியர்நோக்கி மிகவும்வழிவந்திளைத்திருந்தீர்
இங்கென்பாலேபொதிசோறுண் டிதனையுண்டுதண்ணீரிப்
பொங்குகுளத்திற்குடித்திளைப்புப் போக்கிப்போவீரெனப்புகன்றார். ()

நண்ணுந்திருநாவுக்கரசர் நம்பரருளென்றறிந்தார்போல்
உண்ணுமென்றுதிருமறையோ ருரைத்துப்பொதிசோறளித்தலுமே
எண்ணமிலாதெதிர்வாங்கி யினிதாவமுதுசெய்தினிய
தண்ணீரமுதுஞ்செய்தருளித் தூய்மைசெய்துதளர்வொழிந்தார். (௩௦௭)

வார்ந்துசொரிந்தகண்ணருவி மயிர்க்காறுறும்வரும்புளகம்
ஆர்ந்தமேனிப்புறம்பலைப்ப வன்புகரைந்தென்புள்ளலைப்பச்
சேர்ந்தநயனப்பயன்பெற்றுத் திளைப்பத்திருவேகம்பர்தமை
நேர்ந்தமனத்திலுறவைத்து நீடும்பதிகம்பாடுவார். (௩உ௩)

வேறு.

கரவாடும்வன்னெஞ்சர்க் கரியானையென்றெடுத்துப்
பரவாயசொன்மாலைத் திருப்பதிகம்பாடியபின்
விரவார்தம்புரமெரித்த விடையவனார்வெள்ளையெயிற்
றரவாரம்புனைந்தவர்தந் திருமுன்றிற்புறத்தணைந்தார். (௩உ௪)

---

(திருவேகம்பம் மனத்துள்வைத்த திருப்பதிகம் - பண் - காந்தாரம்.)

திருச்சிற்றம்பலம்.

கரவாடும்வன்னெஞ்சர்க் கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானை விடையேறும்வித்தகனை
யரவாடச்சடைதாழ வங்கையினிலனலேந்தி
யிரவாடும்பெருமானை யென்மனத்தேவைத்தேனே.

அடுத்தானையுரித்தானை யருச்சுனற்குப்பாசுபதங்
கொடுத்தானைக்குலவரையே சிலையாகக்கூரம்பு
தொடுத்தானைப்புரமெரியச் சுனைமல்குகயிலாய
மெடுத்தானைத்தடுத்தானை யென்மனத்தேவைத்தேனே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி திருநாமம் - ஏகாம்பரநாதர். தேவியார் பெயர் - காமாக்ஷியம்மை.

திருப்பதிகம்—௧௨.

---

கையார்ந்ததிருத்தொண்டு கழியமிகுங்காதலொடுஞ்
செய்யாநின்றேயெல்லாச் செந்தமிழ்மாலையும்பாடி
மையார்ந்தமிடற்றார்திரு மயானத்தைவலங்கொண்டு
மெய்யார்வமுறத்தொழுது விருப்பினுடன்மேவுவார். (௩உ௫)

சீர்வளருமதிற்கச்சி நகர்த்திருமேற்றளிமுதலா
நீர்வளருஞ்சடையவர்தா நிலவியுறையாலயங்கள்
ஆர்வமுறப்பணிந்தேத்தி யாய்ந்ததமிழ்ச்சொன்மலராற்
சார்வுறுமாலைகள்சாத்தித் தகுந்தொண்டுசெய்திருந்தார். (௩உ௬)

அந்நகரிலவ்வண்ண மமர்ந்துறையுநாளின்கண்
மன்னுதிருமாற்பேறு வந்தணைந்துதமிழ்பாடி
சென்னிமிசைமதிபுனைவார் பதிபலவுஞ்சென்றிறைஞ்சித்
துன்னினார்காஞ்சியினைத் தொடர்ந்தபெருங்காதலினால். (௩உ௭)

ஏகம்பன்காணவனென் னெண்ணத்தானெனப்போற்றிப்
பாகம்பெண்ணுருவானைப் பைங்கண்விடையுயர்த்தானை
நாகம்பூணுவந்தானை நலம்பெருகுந்திருநீற்றின்
ஆகந்தோயணியானை யணைந்துபணிந்தின்புற்றார். (௩உ௮)

---

(திருவேகம்பம் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

கூற்றுவன்காண்கூற்றுவனைக் குமைத்தகோன்காண் குவலயங்காண்குவலயத்தி னீரானான்காண், காற்றவன்காண்கனலவன்காண் கலிக்குமின்காண் கனபவளச்செம்மேனி கலந்தவெள்ளை, நீற்றவன்காணிலாவூருஞ்சென்னியான்கா ணிறையார்ந்தபுனற்கங்கை நிமிர்சடைமே, லேற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே.

அறுத்தான்காணயன்சிரத்தை யமரர்வேண்ட வாழ்கடலினஞ்சுண்டங் கணிநீர்க்கங்கை, செறுத்தான்காண்தேவர்க்குந் தேவன்றான்காண் திசையனைத்துந்தொழுதேத்தக் கலைமான்கையிற், பொறுத்தான்காண்புகலிடத்தை நலியவந்து பொருகயிலையெடுத்தவன்றன் முடிதோணலெரிந், திறுத்தான்காணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவேகம்பர் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

உரித்தவன்காணுரக்களிற்றை யுமையாளொல்க வோங்காரத்தொருவன்கா ணுணர்மெய்ஞ்ஞானம், விரித்தவன்காண்விரித்தநால் வேதத்தான்காண் வியனுலகிற்பல்லுயிரை விதியினாலே,தெரித்தவன்காண்சில்லுருவாய்த் தோன்றியெங்குந் திரண்டவன்காண்டிரிபுரத்தை வேவவில்லா, லெரித்தவன்காணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே.

பொன்னிசையும்புரிசடையெம் புனிதன்றான்காண் பூதகணநாதன்காண் புலித்தோலாடைத், தன்னிசையவைத்தவெழி லரவினான்காண் சங்கவெண்குழைக்காதிற் சதிரன்றான்காண், மின்னிசையும்வெள்ளெயிற்றோன் வெகுண்டுவெற்பை யெடுக்கவடியடர்ப்பமீண் டவன்றன்வாயி, லின்னிசைகேட்டிலங்கொளிவா ளீந்தோன்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கச்சியேகம்பம் பணிந்தேத்தித்திங்களார்
நெருக்கச்செஞ்சடைக்கணிந்தார் நீடுபதிதொழுநினைவார்
வருக்கைச்செஞ்சுளைபொழிதேன் வயல்விளைக்குநாட்டிடைப்போய்ப்
பருக்கைத்திண்களிற்றுரியார் கழுக்குன்றின்பாங்கணைந்தார். (௩உ௯)

நீடுதிருக்கழுக்குன்றி னிருத்தனார்கழல்வணங்கிப்
பாடுதமிழ்த்தொடைபுனைந்து பாங்குபலபதிகளிலுஞ்
சூடுமிளம்பிறைமுடியார் தமைத்தொழுதுபோற்றிப்போய்
மாடுபெருங்கடலுடுத்த வான்மியூர்மருங்கணைந்தார். (௩௩0)

திருவான்மியூர்மருந்தைச் சேர்ந்துபணிந்தன்பினெடும்
பெருவாய்மைத்தமிழ்பாடி யம்மருங்குபிறப்பறுத்துத்
தருவார்தங்கோயில்பல சார்ந்திறைஞ்சித்தமிழ்வேந்தர்
மருவாருமலர்ச்சோலை மயிலாப்பூர்வந்தடைந்தார். (௩௩௧)

வரைவளர்மாமயிலென்ன மாடமிசைமஞ்சாடுந்
தரைவளர்சீர்த்திருமயிலைச் சங்கரனார்தாள்வணங்கி
யுரைவளர்மாலைகளணிவித் துழவாரப்படையாளி
திரைவளர்வேலைக்கரைபோய்த் திருவொற்றியூர்சேர்ந்தார். (௩௩உ)

ஒற்றியூர்வளநகரத் தொளிமணிவீதிகள்விளக்கி
நற்கொடிமாலைகள்பூக நறுங்கதலிநிரைநாட்டிப்
பொற்குடங்கடூபங்க டீபங்கள்பொலிவித்து
மற்றவரையெதிர்கொண்டு கொடுபுக்கார்வழித்தொண்டர். (௩௩௩)

திருநாவுக்கரசருமத் திருவொற்றியூரமர்ந்த
பொருநாகத்திண்சிலையார் கோபுரத்தையிறைஞ்சிப்புக்
கொருஞானத்தொண்டருட னுருகிவலங்கொண்டடியார்
கருநாமந்தவிர்ப்பாரைக் கைதொழுதுமுன்வீழ்ந்தார். (௩௩௪)

எழுதாதமறையளித்த வெழுத்தறியும்பெருமானைத்
தொழுதார்வமுறநிலத்திற் றோய்ந்தெழுந்தேயங்கமெலா
முழுதாயபரவசத்தின் முகிழ்த்தமயிர்க்கான்மூழ்க
விழுதாரைகண்பொழிய விதிர்ப்புற்றுவிம்மினார். (௩௩௫)

வண்டோங்குஞ்செங்கமல மெனவெடுத்துமனமுருகப்
பண்டோய்ந்தசொற்றிருத்தாண் டகம்பாடிப்பரவுவார்
விண்டோய்ந்தபுனற்கங்கை வேணியார்திருவுருவங்
கண்டோங்குகளிசிறப்பக் கைதொழுதுபுறத்தணைந்தார். (௩௩௬)

(திருவொற்றியூர்த் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

வண்டோங்குசெங்கமலக் கழுநீர்மல்கு மதமத்தஞ்செஞ்சடைமேல் மதியஞ்சூடித், திண்டோள்களாயிரமும்வீசிநின்று திசைசேரநடமாடி

சிவலோகனார், உண்டார்நஞ்சுலகுக்கோ ருறுதிவேண்டி யொற்றியூர்மேய வொளிவண்ணனார், கண்டேனான்கனவகத்திற் கண்டேற்கென்றன் கடும் பிணியுஞ்சுடுந்தொழிலுங் கைவிட்டாவே.

மருவுற்றமலர்க்குழலி மடவாளஞ்ச மலைதுளங்கச்சிலைநடுங்கச் செறுத்துநோக்கிச், செறுவுற்றவாளரக்கன் வலிதான்மாளத் திருவடியில்விரலொன்று லலறவூன்றி, யுருவொற்றியங்கிருவ ரோடிக்காண வோங்கினவ்வொள்ளழலா ரிங்கேவந்து, திருவொற்றியூர்நம்மூ ரென்றுபோனார் செறிவளைகளொன்றொன்றாய்ச் சென்றவாறே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - படம்பக்கநாதர். பலகைநாதர். மாணிக்கத்தியாகர்.

தேவியார் பெயர் - வடிவுடையம்மன். திருப்பதிகம்—அ.

---

விளங்குபெருந்திருமுன்றின் மேவுதிருப்பணிசெய்தே
யுளங்கொடிருவிருத்தங்க ளோங்குதிருக்குறுந்தொகைகள்
களங்கொடிருநேரிசைகள் பலபாடிக்கைதொழுது
வளங்கொடிருப்பதியதனிற் பலநாள்கள்வைகினார். (௩௩௭)

---

(திருவொற்றியூர்த் - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

செற்றுக்களிற்றுரி கொள்கின்றஞான்று செருவெண்கொம்பொன்
றிற்றுக்கிடந்தது போலுமிளம்பிறை பாம்பதனைச்
சுற்றிக்கிடந்தது கிம்புரிபோலச் சுடரிமைக்கு
நெற்றிக்கண்மற்றதன் முத்தொக்குமாலொற்றி யூரனுக்கே.

தருக்கினவாளரக் கன்முடிபத்திறப் பாதந்தன்னா
லொருக்கினவாறடி யேனைப்பிறப்பறுத் தாளவல்லா
னெருக்கினவானவர் தானவர்கூடிக் கடைந்தநஞ்சைப்
பருக்கினவாறென்செய் கேனொற்றியூருறை பண்டங்கனே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவொற்றியூர்த் - திருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

ஒற்றியூரு மொளிமதிபாம்பினை
யொற்றியூருமப் பாம்புமதனையே
யொற்றியூர வொருசடைவைத்தவ
னொற்றியூர்தொழ நம்வினையோயுமே.

வரையினருயர் தோளுடைமன்னனை
வரையினல்வலி செற்றவர்வாழ்விடந்
திரையினர்புடை சூழ்திருவொற்றியூர்
உரையினர்பொலிந் தாருயர்ந்தார்களே.

திருச்சிற்றம்பலம்.

(திருவொற்றியூர்த் - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

வெள்ளத்தைச்சடையில்வைத்த வேதகீதன்றன்பாத
மெள்ளத்தானடையவேண்டின் மெய்தருஞானத்தியாற்
கள்ளத்தைக்கழியகின்றார் காயத்துக்கலந்துநின்று
வுள்ளத்துளொளியுமாகு மொற்றியூருடையகோவே.

வெறுத்துகப்புலன்களஞ்சும் வேண்டிற்றுவேண்டுநெஞ்சே
யறுத்துகவார்வச்செற்றக் குரோதங்களானமாயப்
பொறுத்துகப்புட்பகத்தே ருடையானையடரவூன்றி
யொறுத்துகந்தருள்கள்செய்தா னொற்றியூருடையகோவே.

திருச்சிற்றம்பலம்.

(திருவொற்றியூர்த் - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

ஓம்பினேன்கூட்டைவாளா வுள்ளத்தோர்கொடுமைவைத்துக்
காம்பிலாமூழைபோலக் கருதித்தேமுகக்கமாட்டேன்
பாம்பின்வாய்த்தேரைபோலப் பலபலநினைக்கின்றேனை
யோம்பிநீயுய்யக்கொள்ளா யொற்றியூருடையகோவே.

மனமெனுந்தோணிபற்றி மதியெனுங்கோலையூன்றிச்
சினமெனுஞ்சரக்கையேற்றிச் செறிகடலோடும்போது
மதனெனும்பாரைத்தாக்கி மறியும்போதறியவொண்ணாத்
துனையுனுமுணர்வைநல்கா யொற்றியூருடையகோவே.

திருச்சிற்றம்பலம்.

இந்தத் திருப்பதிகத்தி லிவ் விரண்டு தேவாரங்களே யிருக்கின்றன.

அங்குறையுநாளின்க ணருகுளவாஞ்சிவாலயங்கள்
எங்குஞ்சென்றினிதிறைஞ்சி யேத்துமவரிறையருளாற்
பொங்குபுனற்றிருவொற்றி யூர்தொழுதுபோந்துமையாள்
பங்குடையாரமர்ந்ததிருப் பாசூராம்பதியணைந்தார். (௩௩௮)

திருப்பாசூர்நகரெய்திச் சிந்தையினில்வந்தூறும்
விருப்பார்வமேற்கொள்ள வேயிடங்கொண்டுலகுய்ய
இருப்பாரைப்புரமூன்று மெரித்தருளவெடுத்ததனிப்
பொருப்பார்வெஞ்சிலையாரைத் தொழுதெழுந்துபோற்றுவார். (௩௩௯)

முந்திமூவெயிலெய்த முதல்வனாரெனவெடுத்துச்
சிந்தைகரைந்துருகுதிருக் குறுந்தொகையுந்தாண்டகமுஞ்
சந்தநிறைநேரிசையு முதலானதமிழ்பாடி
யெந்தையார்திருவருள்பெற் றேகுவார்வாகீசர். (௩௪0)

(திருப்பாசூர்த் - திருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

முந்திமூவெயி லெய்தமுதல்வனார்
சிந்திப்பார்வினை தீர்த்திடுஞ்செல்வனார்
அந்திக்கோன்றனக் கேயருள்செய்தவப்
பந்திச்செஞ்சடைப் பாசூரடிகளே.

திரியுமூவெயில் செங்கணையொன்றினா
லெரியவெய்தன ரேனுமிலங்கைக்கோ
னெரியவூன்றியிட் டார்விரலொன்றினாற்
பரியர்நுண்ணிய பாசூரடிகளே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - பாசூர்நாதர். தேவியார் பெயர் - பசுபதிநாயகி.

திருப்பதிகம்—௩.

(திருப்பாசூர்த் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

விண்ணாகிநிலனாகி விசும்புமாகி வேலைசூழ்ஞாலத்தார் விரும்புகின்ற, வெண்ணாகியெழுத்தாகி யியல்புமாகி யேழுலகுந்தொழுதேத்திக் காண நின்ற, கண்ணாகிமணியாகிக் காட்சியாகிக் காதலித்தங்கடியார்கள் பரவ நின்ற, பண்ணாகியின்னமுதம் பாசூர்மேய பரஞ்சுடரைக்கண்டடியே னுய்ந்தவாறே.

வேந்தனெடுமுடியுடைய வரக்கர்கோமான் மெல்லியலாளுமைவெருவ விரைந்திட்டோடிச், சாந்தமென நீறணிந்தான் கயிலைவெற்பைத் தடக்கைகளா லெடுத்திடலுந் தாளாலூன்றி, யேந்துதிரடிண்டோளுந் தலைகள்பத்து மிறுத்தவன்றனிசைகேட்டு யிரக்கங்கொண்ட, பாந்தளணி சடைமுடியே னம்பாசூர்மேய பரஞ்சுடரைக்கண்டடியே னுய்ந்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

அம்மலர்ச்சீர்ப்பதியையகன் றயலுளவாம்பதியனைத்தின்
மைம்மருவுங்களத்தாரை வணங்கிமகிழ்வொடும்போற்றி
மெய்ம்மைநிலைவழுவாத மேன்மைநெறிவிழுக்குடிமைச்
செம்மையினார்பழையனூர்த் திருவாலவனம்பணிந்தார். (௩௪௧)

திருவாலங்காடுறையுஞ் செல்வர்தாமெனச்சிறப்பி
னொருவாதபெருந்திருத்தாண் டகமுதலாவோங்குதமிழ்ப்
பெருவாய்மைத்தொடைமாலை பலபாடிப்பிறபதியு
மருவார்வம்பெறவணங்கி வடதிசைமேல்வழிக்கொள்வார். (௩௪௨)

(திருவாலங்காட்டுத் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

ஒன்றாயுலகனைத்து மானார்தாமே யூழிதோறூழி யுயர்ந்தார்தாமே, நின்றாகியெங்கு நிமிர்ந்தார்தாமே நீர்வளிதீயாகாச மானார்தாமே, கொன்றாடுங்கூற்றை யுதைத்தார்தாமே கோலப்பழனை யுடையார்தாமே, சென்றாடுந்தீர்த்தங்க ளானார்தாமே திருவாலங்காட்டுறையுஞ் செல்வர்தாமே.

மாலைப்பிறைசென்னி வைத்தார்தாமே வண்கயிலைமாமலையைவந்தியாத, நீலக்கடல்சூ ழிலங்கைக்கோனை நெரியவிரலா லடர்த்தார்தாமே பாலொத்தமேனி நிறத்தார்தாமே பழனைப்பதியை யுடையார்தாமே, சீலத்தாரேத்துந் திறத்தார்தாமே திருவாலங்காட்டுறையுஞ் செல்வர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஊர்த்ததாண்டவர். தேவியார்பெயர் - வண்டார்குழலி.

திருப்பதிகம் — ௪.

பல்பதியுநெடுங்கிரியும் படர்வனமுஞ்சென்றடைவார்
செல்கதிமுன்னளிப்பார்தந் திருக்காரிக்கரைபணிந்து
தொல்கலையின்பெருவேந்தர் தொண்டர்கள்பின்னும்பர்குழா
மல்குதிருக்காளத்தி மாமலைவந்தெய்தினார். (௩௪௩)

பொன்முகலித்திருநதியின் புனிதநெடுந்தீர்த்தத்தின்
முன்மூழ்கிக்காளத்தி மொய்வரையின்றாழ்வரையிற்
சென்னியுறப்பணிந்தெழுந்து செங்கண்விடைத்தனிப்பாகர்
மன்னுமலைமிசையேறி வலங்கொண்டுவணங்குவார். (௩௪௪)

காதணிவெண்குழையானைக் காளத்திமலைக்கொழுந்தை
வேதமொழிமூலத்தை விழுந்திறைஞ்சியெழுந்துபெருங்
காதல்புரிமனங்களிப்பக் கண்களிப்பப்பரவசமாய்
நாதனையென்கண்ணுள்ளா னெனுந்திருத்தாண்டகநவின்றார். (௩௪௫)

(திருக்காளத்தித் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

விற்றூணொன்றில்லாத நல்கூர்ந்தான்காண் வியன்கச்சிக்கம்பன்காண் பிச்சையல்லான், மற்றூணொன்றில்லாத மாசதுரன்காண் மயானத்

துமைந்தன்காண் மாசொன்றில்லாப்,பொற்றூண்காண்மாமணிநற் குன்றொப்பான்காண் பொய்யாதபொழிலேழுந் தாங்கிநின்ற, கற்றூண்காண் காளத்தி காணப்பட்ட கணநாதன்காணவனென் கண்ணுளானே.

உண்ணாதவருநஞ்ச முண்டான்றான்கா ணூழித்தீயன்னான்கா ணுகப்பார்காணப், பண்ணாரப்பல்லிலயம் பாடினான்காண் பயின்றநால்வேதத்தின் பண்பினான்கா, ணண்ணாமலையான்கா ணடியாரீட்ட மடியிணைகள் தொழுதேத்த வருளுவான்காண், கண்ணாரக்காண்பார்க்கோர் காட்சியான்காண் காளத்தியானவனென் கண்ணுளானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - காளத்தீசர். தேவியார் பெயர் - ஞானப்பூங்கோதை.

திருப்பதிகம்—௪.

---

மலைச்சிகரச்சிகாமணியின் மருங்குறமுன்னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக்கண்ணப்பர் திருப்பாதஞ்சேர்ந்திறைஞ்சி
யலைத்துவிழுங்கண்ணருவி யாகத்துப்பாய்ந்திழியத்
தலைக்குவித்தகையினராய்த் தாழ்ந்துபுறம்போந்தணைந்தார். (௩௪௬)

சேணிலவுதிருமலையிற் றிருப்பணியாயினசெய்து
தாணுவிணையம்மலைமேற் றாள்பணிந்தகுறிப்பினாற்
பேணுதிருக்கயிலைமலை வீற்றிருந்தபெருங்கோலங்
காணுமதுக்காதலித்தார் கலைவாய்மைக்காவலனார். (௩௪௭)

வேறு.

அங்கண்மாமலை மேன்மருந்தை வணங்கியாரரு ளான்மிகப்
பொங்குகாதலி னுத்தரத்திசை மேல்விருப்பொடு போதுவார்
துங்கமால்வரை கானியாறு தொடர்ந்தநாடு கடந்தபின்
செங்கண்மால்விடை யண்ணன்மேவு திருப்பருப்பத மெய்தினார். ௩௪௮

மானவிஞ்சையர் வான்நாடர்கள் வானியக்கர்கள் சித்தர்கள்
கானகின்னரர் பன்னகாதிபர் காமசாரிக ளேமுதன்
ஞானமோனிக ளுளும்நம்பனை வந்திறைஞ்சி நலம்பெறுந்
தானமான திருச்சிலம்பை வணங்கிவண்டமிழ் சாற்றினார். (௩௪௯)

---

(திருப்பருப்பதந் - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

கன்றினார்புரங்கள்மூன்றுங் கனலெரியாகச்சீறி
நின்றதோருருவந்தன்னை னீர்மையுநிறையுங்கொண்டே
ஒன்றியாங்குமையுந்தாமு மூர்ப்பலிதேர்ந்துபின்னும்
பன்றிப்பின்வேடராகிப் பருப்பதநோக்கினாரே.

அடல்விடையூர்தியாகி யரக்கன்றோளடரவூன்றிக்
கடலிடைநஞ்சமுண்ட கறையணிகண்டனார்தாஞ்
சுடர்விடுமேனிதன்மேற் சுண்ணவெண்ணீறுபூசிப்
படர்சடைமதியஞ்சேர்த்திப் பருப்பதநோக்கினாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - சிவன். தேவியார் பெயர் - பருப்பதமங்கை.

திருப்பதிகம்—௩.

---

அம்மருங்கு கடந்துபோமவ ரார்கொள்சூல வயிற்படைச்
செம்மல்வெண்கயி லைப்பொருப்பை நினைந்தெழுந்ததொர் சிந்தையால்
எம்மருங்குமொர் காதலின்றி யிரண்டுபாலும் வியந்துளோர்
கைம்மருங்கணை யுந்தெலுங்கு கடந்துகன்னட மெய்தினார். (௩௫௦)

கருநடங்கழி வாகவெய்திய பின்கலந்தவ னங்களுந்
திருநதித்துறை யாவையும்பயில் சேணெடுங்கிரி * வட்டையும்
பெருநலங்கிளர் நாடுமெண்ணில பிற்படச்செறி பொற்பினால்
வருநெடுங்கதிர் கோலுசோலைய மாளவத்தினை நண்ணினார். (௩௫௧)

அங்குமுற்றி யகன்றுபோகி யருஞ்சுரங்கள் கடந்துசென்
றெங்குமிக்க வறங்கணீடு மிலாடபூமி யிகந்துபோய்
மங்குல்சுற்றிய வெற்பினோடு வனங்களாறு கடந்தயற்
பங்கயப்பழ னத்துமத்திம 0 பைதிரத்தினை யெய்தினார். (௩௫௨)

அன்னநாடு கடந்துகங்கை யணைந்துசென்று வலங்கொளு
மின்னுவேணியர் ‡ வாரணாசி விருப்பினோடு பணிந்துடன்
பின்னணைந்தவர் தம்மையங்க ணொழிந்துகங்கை கடந்துபோய்
மன்னுகாதல்செய் நாவின்மன்னவர் வந்துகற்சுர முந்தினார். (௩௫௩)

மாகமீது வளர்ந்தகானக மாகியெங்கு மனித்தராற்
போகலாநெறி யன்றியும்புரி கின்றகாதல் பொலிந்தெழச்
சாகமூல பலங்கடுய்ப்பன வுந்தவிர்ந்து தனித்துநேர்
ஏகினாரிர வும்பெருங்கயி லைக்குலக்கிரி யெய்துவார். (௩௫௪)

ஆயவாரிரு ளின்கணேகுமவ் வன்பர்தம்மை யணைந்துமுன்
றீயவாய விலங்குவன்றொழில் செய்யவஞ்சின நஞ்சுகால்
வாயநாக மணிப்பணங்கொள் விளக்கெடுத்தன வந்துகால்
தோயவானவ ராயினுந்தனி துன்னருஞ்சுர மன்னினார். (௩௫௫)

---

* வட்டை - வழி.

0 பைதிரம் - நாடு

‡ வாரணாசி - இந்தத்தலத்துக்குத் தனியே பதிகமில்லையாதலால் வைப்புத்தலம் ௧௮0 - தில். சேர்ந்திருக்கின்றது அப்பூதிநாயனார் க்ஷேத்திரமாகிய திங்களூரும் அவ்வாறேயிருக்கின்றது.

வெங்கதிர்ப்பக லக்கடத்திடை வெய்யவன்கதிர் கைபரந்
தெங்குமிக்க பிளப்பினுகர்த மெல்லைபுக்கெரி கின்றன
பொங்கழற்றெறு பாலைவெங்கிழல் புக்கசூழல் புகும்பகற்
செங்கதிர்க்கனல் போலுமத்திசை திண்மைமெய்த்தவர் நண்ணினார். ()

இங்ஙனம்மிர வும்பகற்பொழு தும்மருஞ்சுர மெய்துவார்
பங்கயம்புரை தாள்பரட்டள வும்பசைத்தசை தேயவு
மங்கைபாகர்தம் வெள்ளிமால்வரை வைத்தசிந்தை மறப்பரோ
தங்கரங்களி ரண்டுமேகொடு தாவியேகுதன் மேவினார். (௩௫௭)

கைகளும்மணி பந்தசைந்துற வேகரைந்து சிதைந்தபின்
மெய்கலந்தெழு சிந்தையன்பின் வுருப்புமீமிசை பொங்கிட
மொய்கடுங்கனல் வெம்பரற்புகை மூளும் * அத்த முயங்கியே
மைகொள்கண்டர்த மன்பர்செல்ல வருந்தியுந்தினர் மார்பினால். (௩௫௮)

மார்பமுந்தசை நைந்துசிந்தி வருந்தவென்பு முரிந்திட
நேர்வருங்குறை நின்றசிந்தையி னேசமீசனை நேருநீ
டார்வமங்குயிர் கொண்டுகைக்கு முடம்படங்கவு முன்கொட
சேர்வரும்பழு வம்புரண்டு புரண்டுசென்றனர் செம்மையோர். (௩௫௯)

அப்புறம்புரள் கின்றநீளிடை யங்கமெங்கு மரைந்திடச்
செப்பருங்கயி லைச்சிலம்படி சிந்தைசென்றுறு மாதலால்
மெய்ப்புறத்தி லுறுப்பழிந்தபின் மெல்லவுந்து முயற்றியுந்
தப்புறச்செய லின்றியங்நெறி தங்கினார்தமி ழாளியார். (௩௬0)

வேறு.

அன்னதன்மையார் கயிலையையணைவதற் கருளார்
மன்னுதீந்தமிழ் புவியின்மேற்பின்னையும் வழுத்த
நன்னெடும்புனற் றடமுமொன் றுடன்கொடு நடந்தார்
பன்னகம்புனை பரமரோர்முனிவராம் படியால். (௩௬௧)

வந்துமற்றவர் மருங்குறவணைந்துநேர் நின்று
நொந்துநோக்கிமற் றவரெதிர்நோக்கிட நுவல்வார்
சிந்தியிவ்வுறுப் பழிந்திடவருந்திய திறத்தால்
இந்தவெங்கடத் தெய்தியதென்னென விசைத்தார். (௩௬௨)

மாசில்வற்கலை யாடையுமார்பின்முந் நூலுந்
தேசுடைச்சடை மவுலியுநீறுமெய் திகழ
ஆசின்மெய்த்தவ ராகிநின்றவர்தமை நோக்கிப்
பேசவுற்றதோ ருணர்வுறவிளம்புவார் பெரியோர். (௩௬௩)

---

* அத்தம் - அருநெறி.

வண்டுலாங்குழன் மலைமகளுடன்வட கயிலை
யண்டர்நாயக ரிருக்குமப்பரிசவ ரடியேன்
கண்டுகும்பிட விருப்பொடுங்காதலி னடைந்தேன்
கொண்டவென்குறிப் பிதுமுனியேயெனக் கூற. (௩௬௪)

கயிலைமால்வரை யாவதுகாசினி மருங்கு
பயிலுமானிடப் பான்மையோரடைவதற் கெளிதோ
யயில்கொள்வேற்படை யமரருமணுகுதற் கரிதால்
வெயில்கொள்வெஞ்சுரத் தென்செய்தீர்வந்தென விளம்பி. (௩௬௫)

மீளுமத்தனை யுமக்கினிக்கடனென விளங்குந்
தோளுமாகமுந் துவளுமுந்நூன்முனி சொல்ல
ஆளுநாயகன் கயிலையிலிருக்கைகண் டல்லால்
மாளுமிவ்வுடல் கொண்டுமீளேனென மறுத்தார். (௩௬௬)

ஆங்குமற்றவர் துணிவறிந்தவர்தமை யறிய
நீங்குமாதவர் விசும்பிடைக்கரந்துநீண் மொழியால்
ஓங்குநாவினுக் கரசனேயெழுந்திரொன் றுரைப்பத்
தீங்குநீங்கிய யாக்கைகொண்டெழுந்தொளி திகழ்வார். (௩௬௭)

அண்ணலேயெனை யாண்டுகொண்டருளிய வமுதே
விண்ணிலேமறைந் தருள்புரிவேதநா யகனே
கண்ணினற்றிருக் கயிலையிலிருந்தநின் கோல
நண்ணிநான்றொழ நயந்தருள்புரியெனப் பணிந்தார். (௩௬௮)

தொழுதெழுந்தநற் றொண்டரைநோக்கிவிண் டலத்தில்
எழுபெருந்திரு வாக்கினாலிறைவரிப் பொய்கை
முழுகிநம்மைநீ கயிலையிலிருந்தவம் முறைமை
பழுதில்சீர்த்திரு வையாற்றிற்காணெனப் பணித்தார். (௩௬௯)

ஏற்றினாரரு ளலைமிசைக்கொண்டெழுந் திறைஞ்சி
வேற்றுமாகிவிண் ணாகிநின்றார்மொழி விரும்பி
யாற்றல்பெற்றவ ரண்ணலாரஞ்செழுத் தோதிப்
பாற்றடம்புனற் பொய்கையின்மூழ்கினார் பணியால். (௩௭0)

ஆதிதேவர்தந் திருவருட்பெருமையா ரறிந்தார்
போதமாதவர் பனிமலர்ப்பொய்கையின் மூழ்கி
மாதொர்பாகனார் மகிழுமையாற்றிலோர் வாவி
மீதுதோன்றிவந் தெழுந்தனருலகெலாம் வியப்ப. (௩௭௧)

வம்புலாமலர் வாவியின்கரையின்வந் தேறி
யும்பர்நாயகர் திருவருட்பெருமையை யுணர்ந்தார்
நம்பிரான்றருங் கருணைபோலிதுவென விருகண்
பம்புதாரைநீர் வாவியிற்படிந்தெழும் படியார். (௩௭௨)

மிடையுகீள்கொடி வீதிகள்விளங்கிய வையா
றுடையநாயகர் சேவடிபணியவந் துறுவார்
அடையவப்பதி நிற்பவுஞ்சரிப்பவு மான
புடையமர்ந்ததந் துணையொடும்பொலிவன கண்டார். (௩௭௩)

பொன்மலைக்கொடி யுடனமர்வெள்ளியம் பொருப்பிற்
றன்மையாம்படி சத்தியுஞ்சிவமுமாஞ் சரிதைப்
பன்மையோனிகள் யாவையும்பயில்வன பணிந்தே
மன்னுமாதவர் தம்பிரான்கோயின்முன் வந்தார். (௩௭௪)

காணுமப்பெருங் கோயிலுங்கயிலைமால் வரையாய்ப்
பேணுமாலய னிந்திரன்முதற்பெருந் தேவர்
பூணுமன்பொடு போற்றிசைத்தெழுமொலி பொங்கத்
தாணுமாபறை யாவையுந்தனித்தனி முழங்க. (௩௭௫)

தேவர்தானவர் சித்தர்விச்சாதர ரியக்கர்
மேவுமாதவர் முனிவர்கள்புடையெலா மிடையக்
காவிவாள்விழி யரம்பையர்கானமு முழவுந்
தாவிலேழ்கடன் முழக்கினும்பெருகொலி தழைப்ப. (௩௭௬)

கங்கையேமுதற் றீர்த்தமாங்கடவுண்மா நதிகண்
மங்கலம்பொலி புனற்பெருந்தடங்கொடு வணங்க
எங்குநீடிய பெருங்கணநாதர்க ளிறைஞ்சப்
பொங்கியங்களாற் பூதவேதாளங்கள் போற்ற. (௩௭௭)

அந்தண்வெள்ளிமால் வரையிரண்டாமென வணைந்தோர்
சிந்தைசெய்திடச் செங்கண்மால்விடையெதிர் நிற்ப
முந்தைமாதவப் பயன்பெறுமுதன்மையான் மகிழ்ந்தே
நந்தியெம்பிரா னடுவிடையாடிமுன் னணுக. (௩௭௮)

வெள்ளிவெற்பின்மேன் மரகதக்கொடியுடன் விளங்குந்
தெள்ளுபேரொளிப் பவளவெற்பெனவிடப் பாகங்
கொள்ளுமாமலை யாளுடன்கூடிவீற் றிருந்த
வள்ளலாரைமுன் கண்டனர்வாக்கின்மன் னவனூர். (௩௭௯)

கண்டவானந்தக் கடலினைக்கண்களான் முகந்து
கொண்டுகைகுவித் தெதிர்விழுந்தெழுந்துமெய் குலைய
அண்டர்முன்புநின் றாடினூர்பாடினூ ரழுதார்
தொண்டனூர்க்கங்கு நிகழ்ந்தனயார்சொல வல்லார். (௩௮௦)

முன்புகண்டுகொண் டருளினூரமுதுண்ண மூவா
அன்புபெற்றவ ரளவிலாவார்வமுன் பொங்கப்
பொன்பிறங்கிய சடையனைப்போற்றுதாண் டகங்கள்
இன்பமோங்கிட வேத்தினூரெல்லையி றவத்தோர். (௩௮௧)

(திருவையாறு - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

ஆரார்திரிபுரங்க ணீறுநோக்கு மனலாடியாரமுதே யென்றேனானே, கூரார்மழுவாட் படையொன்றேந்திக் குறட்பூதப்பல்படையா யென்றேனானே, பேராயிரமுடையா யென்றேனானே பிறைசூடும்பிஞ்ஞகனே யென்றேனானே, யாராவமுதேயென்னை யாறனேயென் றென்றேநானரற் றிநைகின்றேனே.

வில்லாடிவேடனே யென்றேனானே வெண்ணீறு மெய்க்கணிந்தா யென்றேனானே, சொல்லாயசூழலா யென்றேனானே சுலாவாயதொன்னெறியே யென்றேனானே, எல்லாமாமென்னுயிரே யென்றேனானே, யிலங்கையர்கோன்றோளிறுத்தா யென்றேனானே, யல்லாவினைதீர்க்குமை யாறனே யென் றென்றேநானரற் றிநைகின்றேனே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவையாறு - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

ஓசையொலியெலா மானாய்நீயே யுலகுக்கொருவனாய் நின்றாய்நீயே
வாசமலரெலா மானாய்நீயே மலையான்மருகனாய் நின்றாய்நீயே
பேசப்பெரிது மினியாய்நீயே பிரானாயடியன்மேல் வைத்தாய்நீயே
தேசவிளக்கெலா மானாய்நீயே திருவையாறகலாத செம்பொற்சோதி.

ஆருமறியா விடத்தாய்நீயே யாகாசந்தேரூர வல்லாய்நீயே
பேரும்பெரிய விலங்கைவேந்தன் பெரியமுடிபத் திறுத்தாய்நீயே
யூரும்புரமூன்று மட்டாய்நீயே யொண்டாமரையானு மாலுங்கூடித்
தேருமடியென்மேல்வைத்தாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதி.

திருச்சிற்றம்பலம்.

---

ஆயவாறுமற் றவர்மனங்களிப்புறக் கயிலை
மேயநாதர்தந் துணையொடும்வீற்றிருந் தருளித்
தூயதொண்டருந் தொழுதெதிர்நிற்கவக் கோலஞ்
சேயதாக்கினார் திருவையாறமர்ந்தமை திகழ. (௩அ௨)

அய்யர்கோலமங் களித்தகன்றிடவடித் தொண்டர்
மையல்கொண்டுள் மகிழ்ந்திடவருந்திமற் றிங்குச்
செய்யவேண்டிய தருளிதுவோவெனத் தெளிந்து
வையமுய்ந்திடக் கண்டமைபாடுவார் மகிழ்ந்து. (௩அ௩)

வேறு.

மாதர்ப்பிறைக்கண்ணியானை மலையான்மகளொடுமென்னுங்
கோதறுதண்டமிழ்ச்சொல்லாற் குலவுதிருப்பதிகங்கள்
வேதமுதல்வனையாற்றில் விரவுஞ்சராசரமெல்லாங்
காதற்றுணையொடுங்கூடக் கண்டேனெனப்பாடிநின்றார். (௩அச)

---

(திருவையாறு - பண் - காந்தாரம்.)

திருச்சிற்றம்பலம்.

மாதர்ப்பிறைக்கண்ணியானை மலையான்மகளொடும்பாடிப்
போதொடுநீர்சுமந்தேத்திப் புகுவாரவர்பின்புகுவே
னியாதுஞ்சுவடுபடாமலையா றடைகின்றபோது
காதன்மடப்பிடியோடுங் களிறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங் கண்டறியாதனகண்டேன்.

வளர்மதிக்கண்ணியினானை வார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததோர்காலங் காண்பான்கடைக்கணிக்கின்றே
னளவுபடாததோரன்போடையா றடைகின்றபோது
இளமணநாகுதழுவி யேறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங் கண்டறியாதனகண்டேன்.

திருச்சிற்றம்பலம்.

---

கண்டுதொழுதுவணங்கிக் கண்ணுதலார்தமைப்போற்றிக்
கொண்டதிருத்தாண்டகங்கள் குறுந்தொகைநேரிசையன்பின்
மண்டுவிருத்தங்கள்பாடி வணங்கித்திருத்தொண்டுசெய்தே
யண்டர்பிரான்றிருவையா றமர்ந்தனர்நாவுக்கரசர். (௩அரு)

---

(திருவையாறு - திருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

சிந்தைவாய்தலு ளான்வந்துசீரியன்
பொந்துவார்புலால் வெண்டலைக்கையினன்
முந்திவாயதோர் மூவிலைவேல்பிடித்
தந்திவாயதோர் பாம்பனையாறனே.

அரக்கின்மேனி யனந்தளிர்மேனிய
னரக்கின்சேவடி யாளஞ்சவஞ்சலென்
றரக்கனீரைந்து வாயுமலறவே
யரக்கினானடி யாலுமையாறனே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவையாறு - திருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

சிந்தைவண்ணத்த ராய்த்திறம்பாவண
முந்திவண்ணத்த ராய்முழுநீறணி
சந்திவண்ணத்த ராய்த்தழல்போல்வதோ
ரந்திவண்ணமு மாவரையாறரே.

எடுத்தவாளரக் கன்றிறல்வண்ணமு
மிடர்க்கள்போற்பெரி தாகியவண்ணமுங்
கடுத்தகைந்நரம் பாலிசைவண்ணமு
மடுத்தவண்ணமு மாவரையாறரே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவையாறு - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

கங்கையைச்சடையுள்வைத்தார் கதிர்பொறியரவும்வைத்தார்
திங்களைத்திகழவைத்தார் திசைதிசைதொழவும்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார் மான்மறிமழுவும்வைத்தா
ரங்கையுளனலும்வைத்தா ரையனையாறனாரே.

இரப்பவர்க்கீயவைத்தா ரீபவர்க்கருளும்வைத்தார்
கரப்பவர்தங்கட்கெல்லாங் கடுநரகங்கள்வைத்தார்
பரப்புநீர்க்கங்கைதன்னைப் படர்சடைப்பாகம்வைத்தா
ரரக்கனுக்கருளும்வைத்தா ரையனையாறனாரே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவையாறு - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

குண்டனாய்ச்சமணரோடே கூடிநான்கொண்டமாலைத்
துண்டனேசுடர்கொள்சோதி தூநெறியாகிநின்ற
வண்டனேயமரரேறே திருவையாறமர்ந்ததேனே
தொண்டனேன்தொழுதுன்பாதஞ் சொல்லினன்றிரிகின்றேனே.

அறிவிலாவரக்கனோடி யருவரையெடுக்கலுற்று
முறுகினன்முறுக்கங்கண்டு மூதறிவாளனோக்கி
நிறுவினன்சிறுவிரலா னெரிந்துபோய்நிலத்தில்வீழ
வறிவினாலருள்கள்செய்தான் திருவையாறமர்ந்ததேனே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவையாறு - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

தானலாதுலகமில்லைச் சகமலாதடிமையில்லைக்
கானலாநாடலில்லைக் கருதுவார்தங்களுக்கு
வானலாதருளுமில்லை வார்குழல்மங்கையோடு
மானலா ஆர்வதில்லை யையனையாறனார்க்கே.

மலையலாலிருக்கையில்லை மதித்திடாவரக்கன்றன்னைத்
தலையலால்நெரித்ததில்லைத் தடவரைக்கீழடர்த்து
நிலையிலார்புரங்கள்வேவ நெருப்பலால்விரித்ததில்லை
யலையினார்பொன்னிமன்னு மையனையாறனார்க்கே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவையாறு - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

குறுவித்தவாகுற்ற நோய்வினைகாட்டிக் குறுவித்தநோ
யுறுவித்தவாவுற்ற நோய்வினைதீர்ப்பா னுகந்தருளி
யறிவித்தவாறடி யேனையையாற னடிமைக்களே
செறிவித்தவாதொண்ட னேனைத்தன்பொன்னடிக் கீழெனவே.

கறுத்துமிட்டார்கண்டங் கங்கைச்சடைமேற் கரந்தருளி
யிறுத்துமிட்டாரிலங் கைக்கிறைதன்னை யிருபதுதோ
ளறுத்துமிட்டாரடி யேனையையாற னடிமைக்களே
பொறுத்துமிட்டார்தொண்ட னேனைத்தன்பொன்னடிக் கீழெனையே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருவையாறு - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

சிந்திப்பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்துசெந்தேன்
முந்திப்பொழிவன முத்திகொடுப்பன மொய்த்திருண்டு
பந்தித்துநின்ற பழவினைதீர்ப்பன பாம்புசுற்றி
யந்திப்பிறையணிந் தாடுமையாற னடித்தலமே.

வலியான்றலைபத்து வாய்விட்டலற வரையடர்த்து
மெலியாவலியுடைக் கூற்றையுதைத்தது விண்ணோர்கள்முன்னே
பலிசேர்படுகடை பார்த்துப்பன்னாளும் பலரிகழ
வலியாநிலைநிற்கு மையனையாற னடித்தலமே.

திருச்சிற்றம்பலம்.

(திருவையாறு - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

அந்திவட்டத்திங்கட் கண்ணியனையா றமர்ந்துவந்தென்
புந்திவட்டத்திடைப் புக்குநின்றானையும் பொய்யென்பனோ
சிந்திவட்டச்சடைக் கற்றையலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட்டத்தொடு கொன்றையளாவிய நம்பனையே.

பாடகக்கால்கழற் கால்பருதிக்கதி ருக்கவந்தி
நாடகக்கானங்கை முன்செங்கணேனத்தின் பின்னடந்த
காடகக்கால்கணங் கைதொழுங்காலெங்க ளாய்நின்றகா
லாடகக்காலரி மான்றேர்வலவனை யாற்றனவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - செம்பொற்சோதிநாதர். தேவியார்-அறம்வளர்த்தநாயகி.

திருப்பதிகம்—௧௮.

---

நீடியவப்பதிநின்று நெய்த்தானமே முதலாக
மாடுயர்தானம்பணிந்து மழபாடியாரை வணங்கிப்
பாடியசெந்தமிழ்மாலை பகர்ந்துபணி செய்துபோற்றித்
தேடியமாலுக்கரியார் திருப்பூந்துருத்தி யைச்சேர்ந்தார். (௩௮௬)

சேர்ந்துவிருப்பொடும்புக்குத் திருநடமாளிகை முன்னர்
சார்ந்துவலங்கொண்டிறைஞ்சித் தம்பெருமான் றிருமுன்பு
நேர்ந்தபரிவொடுந்தாழ்ந்து நிறைந்தொழியா வன்புபொங்க
வார்ந்தகண்ணீர்மழைதூங்க வயர்வுறுந்தன் மையரானார். (௩௮௭)

திருப்பூந்துருத்தியமர்ந்த செஞ்சடையானையா னேற்றுப்
பொருப்பூர்ந்தருளும்பிரானைப் பொய்யிலியைக் கண்டேனென்று
விருப்புறுதாண்டகத்தோடு மேவியகாதல் விளைப்ப
இருப்போந்திருவடிக்கீழ் நாமென்னுங்குறுந் தொகைபாடி. (௩௮௮)

---

(திருப்பூந்துருத்தித் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

நில்லாதநீர்சடைமே னிற்பித்தானை நினைவென்னெஞ்சை நினைவித்தானைக், கல்லாதனவெல்லாங் கற்பித்தானை காணாதனவெல்லாங் காட்டினானைச், சொல்லாதனவெல்லாஞ் சொல்லியென்னைத் தொடர்ந்திங்கடியேனை யாளாக்கொண்டு, பொல்லாவென்னோய்தீர்த்த புனிதன்றன்னைப் புண்ணியனைப்பூந்துருத்திக் கண்டேனானே.

மறுத்தானைமலைகோத்தங் கெடுத்தான்றன்னை மணிமுடியோடிருபதுதோ ளெரியக்காலா, லிறுத்தானையெழுநரம்பி னிசைகேட்டானை யெண்டிசைக்குங்கண்ணுன சிரமேலொன்றை, யறுத்தானையமரர்களுக் கமுதீந்தானை யாவர்க்குந்தாங்கொணு நஞ்சமுண்டு, பொறுத்தானைப்புண்ணியனைப் புனிதன்றன்னைப் பொய்யிலியைப்பூந்துருத்திக் கண்டேனானே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருப்பூந்துருத்தித் - திருக்குறுந்தொகை.)

திருச்சிற்றம்பலம்.

கொடிகொள்செல்வ விழாக்குணலையாரூக்
கடிகொள்பூம்பொழிற் கச்சியேகம்பனார்
பொடிகள்பூசிய பூந்துருத்திந்நக
ரடிகள்சேவடிக் கீழ்நாமிருப்பதே.

துடித்ததோள்வலி வாளரக்கன்றனைப்
பிடித்தகைந்நெரிக் துற்றனகண்ணெலாம்
பொடிக்கலூன்றிய பூந்துருத்திந்நகர்ப்
படிக்கொள்சேவடிக் கீழ்நாமிருப்பதே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்குறையுந்தன்மைவேண்டி நாமடிபோற்றுவதென்று
பொங்குந்தமிழ்ச்சொல்விருத்தம் போற்றியபாடல்புரிந்து
தங்கித்திருத்தொண்டுசெய்வார் தம்பிரானாருள்பெற்றுத்
திங்களூநாயிறுந்தோயுந் திருமடமங்கொன்றுசெய்தார். (௩அ௬)

---

(திருப்பூந்துருத்தி - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

மாலினைமாலுற நின்றான்மலைமக டன்னுடைய
பாலனைப்பான்மதி சூடியைப்பண்புண ரார்மதின்மேற்
போலனைப்போர்விடை யேறியைப்பூந் துருத்திமகிழு
மாலனையாதி புராணனைநாமடி போற்றுவதே.

பைக்கையும்பாந்தி விழிக்கையும்பாம்பு சடையிடையே
வைக்கையும்வானிழி கங்கையுமங்கை நடுக்குறவே
மெய்க்கையரக்கனை யூன்றினன்பூந் துருத்தியுறையு
மிக்கநல்வேத விகிர்தனைநாமடி போற்றுவதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - புட்பவனநாதர். தேவியார் பெயர் - அழகாலமர்ந்தநாயகி.

திருப்பதிகம்—௩.

---

பல்வகைத்தாண்டகத்தோடும் பரவுந்தனித்தாண்டகமும்
அல்லலறுப்பவர்தானத் தடைவுதிருத்தாண்டகமுஞ்
செல்கதிகாட்டிடப்போற்றுந் திருவங்கமாலையுமுள்ளிட்
டெல்லையில்பன்மைத்தொகையு மியம்பினரேத்தியிருந்தார். (௩௧௦)

(பல்வகைத் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

நேர்ந்தொருத்தியொருபாகத் தடங்கக்கண்டு நீலதளராவாயிரமாமுகத்தினோடு, பாய்ந்தொருத்திபடர்சடைமேற் பாயக்கண்டு படவரவும் பனிமதியும் வைத்தசெல்வன், தாந்திருத்தித்தம்மனத்தை யொருக்காத் தொண்டர் தனித்தொருதண்டேன்றிமெய் தளராமுன்னம், பூந்துருத்தி பூந்துருத்தி யென்பீராகிற் பொல்லாப்புலாற்றுருத்தி போக்கலாமே.

தந்தையார்தாயாருடன்பிறந்தார் தாரமார்புத்திரரார் தாந்தாமாரே, வந்தவாறெங்ஙனேபோமாறேதோ மாயமாமிதற்கேது மகிழவேண்டா, சிந்தையீருமக்கொன்று சொல்லக்கேண்மின் திகழ்மதியும்வாளரவுந் திளைக்குஞ்சென்னி, யெந்தையார்திருநாம நமச்சிவாய வென்றெழுவார்க்கிரு விசும்பி லிருக்கலாமே.

திருச்சிற்றம்பலம்.

(தனித் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

அப்பனீயம்மைநீ யையனுநீ யன்புடையமாமனு மாமியுநீ, யொப்புடையமாதருமொண் பொருளுநீ யொருகுலமுஞ்சுற்றமு மோரூருநீ, துய்ப்பனவுமுய்ப்பனவுந் தோற்றுவாய்நீ துணையாயென்னெஞ்சந் துரப்பிப்பாய்நீ, யிப்பொன்னீயிம்மணிநீ யிம்முத்துநீ யிறைவனீயேறூர்ந்த செல்வநீயே.

சங்கநிதிபதுமநிதி யிரண்டுந்தந்து தரணியொடுவானாளத் தருவரேனு, மங்கினரவர்செல்வ மதிப்போமல்லே மாதெவர்க்கேகாந்த ரல்லராகி, லங்கமெலாங்குறைந்தழுகு தொழுநோயரா யாவுரித்துத்தின் றுழலும் புலையரேனுங், கங்கைவார்சடைக்கரந்தார்க் கன்பராகி லவர்கண்டீர்நாம் வணங்குங் கடவுளாரே.

திருச்சிற்றம்பலம்.

(அடைவு - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

பொருப்பள்ளிவரைவில்லாப் புரமூன்றெய்து புலந்தழியச்சலந்தரனைப் பிளந்தான்பொற்சக், கரப்பள்ளிதிருக்காட்டுப் பள்ளிகள்ளார் கமழ

ழ்கொல்லியறைப்பள்ளி கலவஞ்சாரற், சிரப்பள்ளிசிவப்பள்ளி செம்பொன்பள்ளி செழுநனிபள்ளிதவப் பள்ளிசீரார், பரப்பள்ளியென்றென்று பகர்வோரெல்லாம் பரலோகத்தினிதாகப் பாலிப்பாரே.

கயிலாயமலையெடுத்தான் கரங்களோடுஞ் சிரங்களுரநெரியக்கால் விரலாற்செற்றோன், பயில்வாயபராய்த்துறை தென்பாலைத்துறை பண்டெழுவர்தவத்துறைவெண் டுறைபைம்பொழிற், குயிலாலந்துறைசோற்றுத் துறைபூந்துறை பெருந்துறையுங்குரங்காடு துறையினோடு, மயிலாடு துறைகடம்பந் துறையாவடு துறைமற்றுந்துறையனைத்தும் வணங்குவோமே.

திருச்சிற்றம்பலம்.

---

(திருஅங்கமாலை.)

திருச்சிற்றம்பலம்.

தலையே நீவணங்காய்
தலை மாலைதலைக்கணிந்து
தலையாலேபலி தேருந்தலைவனைத்
தலையே நீவணங்காய்.

தேடிக் கண்டுகொண்டேன்
திரு மாலொடுநான்முகனுந்
தேடித்தேடொணாத் தேவனையென்னுள்ளே
தேடிக் கண்டுகொண்டேன்.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

பொன்னிவலங்கொண்டதிருப் பூந்துருத்தியவரிருப்பக்
கன்மனத்துவல்லமணர் தமைவாதிற்கட்டழித்துத்
தென்னவன்கூனிமிர்த்தருளித் திருநீற்றினொளிகண்டு
மன்னியசீர்ச்சண்பைநகர் மறையவனார்வருகின்றார். (௩௧௧)

தீந்தமிழ்நாட்டிடைநின்று மெழுந்தருளிச்செம்பொன்னி
வாய்ந்தவளந்தருநாட்டு வந்தணைந்தார்வாக்கினுக்கு
வேந்தரிருந்தமைகேட்டு விரைந்தவர்பாற்செல்வனெனப்
பூந்துருத்திவளம்பதியின் புறம்பணையில்வந்தணைந்தார். (௩௧௨)

சண்பைவருந்தமிழ்விரக ரெழுந்தருளத்தாங்கேட்டு
மண்பரவும்பெருங்கீர்த்தி வாகீசர்மனமகிழ்ந்து
கண்பெருகுங்களிகொள்ளக் கண்டிறைஞ்சுங்காதலினால்
எண்பெருகும்விருப்பெய்த வெழுந்தருளியெதிர்சென்றார். (௩௧௩)

காழியர்கோன்வருமெல்லை கலந்தெய்திக்காதலித்தார்
சூழுமிடைந்திடுநெருக்கிற் காணாமேதொழுதருளி
வாழியவர்தமைத்தாங்கு மணிமுத்தின்சிவிகையினைத்
தாழுமுடலிதுகொண்டு தாங்குவன்யானெனத்தரித்தார். (௩௯௪)

வந்தொருவரறியாமே மறைந்தவடிவொடும்புகலி
யந்தணனாரேறியெழுந் தருளிவருமணிமுத்தின்
சந்தமணிச்சிவிகையினைத் தாங்குவாருடன்றாங்கிச்
சிந்தைகளிப்புறவருவார் தமையாருந்தெளிந்திலரால். (௩௯௫)

திருஞானமாமுனிவ ரரசிருந்தபூந்துருத்திக்
கருகாகவெழுந்தருளி யெங்குற்றாரப்பரென
உருகாநின்றும்மடியே னும்மடிகடாங்கிவரும்
பெருவாழ்வுவந்தெய்தப் பெற்றிங்குற்றேனென்றார். (௩௯௬)

பிள்ளையாரதுகேளாப் பெருகுவிரைவுடனிழிந்தே
யுள்ளமிகுபதைப்பெய்தி யுடையவரசினைவணங்க
வள்ளலார்வாகீச ரவர்வணங்காமுன்வணங்கத்
துள்ளுமான்மறிக்கரத்தார் தொண்டரெலாந்தொழுதார்த்தார். (௩௯௭)

கழுமலக்கோன்றிருநாவுக் கரசருடன்கலந்தருளிச்
செழுமதியந்தவழ்சோலைப் பூந்துருத்தித்திருப்பதியின்
மழுவினொடுமானேந்து திருக்கரத்தார்மலர்த்தாள்கள்
தொழுதுருகியின்புற்றுத் துதிசெய்தங்குடனிருந்தார். (௩௯௮)

வல்லமணர்தமைவாதில் வென்றதுவும்வழுதிபாற்
புல்லியகூனிமிர்த்ததுவுந் தண்பொருந்தம்புனனாட்டில்
எல்லையில்லாத்திருநீறு வளர்த்ததுவுமிருந்தவத்தோர்
சொல்லவதுகேட்டுவந்தார் தூயபுகழ்வாகீசர். (௩௯௯)

பண்புடையபாண்டிமா தேவியார்தம்பரிவு
நண்புடையகுலச்சிறையார் பெருமையுஞானத்தலைவர்
எண்பெருகவுரைத்தருள வெல்லையில்சீர்வாகீசர்
மண்குலவுதமிழ்நாடு காண்பதற்குமனங்கொண்டார். (௪00)

பிரமபுரத்திருமுனிவர் பெருந்தொண்டைநன்னாட்டில்
அரன்மகிழுந்தானங்க ளணைந்திறைஞ்சிப்பாடுவதற்
குரனுடையதிருநாவுக் கரசருரைசெய்தருளப்
புரமெரித்தார்திருமகனார் பூந்துருத்திதொழுதகன்றார். (௪0௧)

ஆண்டவரசங்கணர்சீ ரருள்பெற்றப்பதிநின்றும்
பாண்டிநாட்டெழுந்தருளும் பான்மையராய்த்தென்றிசைபோய்க்
காண்டகையதிருப்புத்தூர் பணிந்தேத்திக்கதிர்மதியந்
தீண்டுகொடிமதின்மதுரைத் திருவாலவாய்சேர்ந்தார். (௪0௨)

சென்றணைந்துமதுரையினிற் றிருந்தியநாற்சங்கத்துள்
அன்றிருந்துதமிழாராய்ந் தருளியவங்கணர்கோயின்
முன்றிலினைவலங்கொண்டு முன்னிறைஞ்சியுள்புக்கு
வன்றனிமால்விடையாரை வணங்கிமகிழ்வொடுந்திளைத்தார். (௪0௩)

எய்தியபேரானந்த வின்பத்தினிடையழுந்தி
மொய்திகழுஞ்சடையானை முளைத்தானையென்றெடுத்துச்
செய்தவத்தோர்தாண்டகச்செந் தமிழ்பாடிப்புறத்தணைவார்
கைதொழுதுபணிந்தேத்தித் திருவுள்ளங்களிசிறந்தார். (௪0௪)

(திருவாலவாய்த் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

முளைத்தானையெல்லார்க்கு முன்னேதோன்றி முதிருஞ்சடைமுடிமேன் முகிழ்வெண்டிங்கள், வளைத்தானைவல்லசுரர் புரங்கள்மூன்றும் வரைசிலையாவாசுகிமா நாணுக்கோத்துத்,துளைத்தானைச்சுடுசரத்தாற் றுவளநீறுத் தூமுத்தவெண்முறுவ லுமையோடாடித், திளைத்தானைத்தென் கூடற்றிருவாலவாய்ச் சிவனடியேசிந்திக்கப் பெற்றேனானே.

தூர்த்தனைத்தோள்முடிபத் திறுத்தான்றன்னைத் தொன்னரம்பினின்னிசைகேட் டருள்செய்தானைப், பார்த்தனைப்பணிகண்டு பரிந்தான்றன்னைப் பரிந்தவற்குப்பாசுபத மீந்தான்றன்னை, யார்த்தனையடியேனுக் கன்பன்றன்னை அளவில்லாப்பல்லூழி கண்டுநின்ற, தீர்த்தனைத்தென்கூடற்றிருவாலவாய்ச் சிவனடியேசிந்திக்கப் பெற்றேனானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சொக்கநாதர். தேவியார்பெயர்-மீனாக்ஷியம்மை.

திருப்பதிகம்—௧௧.

சீர்திகழும்பாண்டிமா தேவியார்திருமேனி
சேரவருளுடையதனாற் கூனிமிர்ந்ததென்னவனார்
பார்பரவுங்குலச்சிறையார் வாகீசர்தமைப்பணிவுற்
றாரதிலாக்காதல்மிக வடிபோற்றவங்கிருந்தார். (௪0௫)

திருவாலவாயமர்ந்த செஞ்சடைச்செழும்பொருளா
றருவானைநேரிசையுந் தாண்டகமுமுதலான
பெருவாய்மைத்தமிழ்பாடிப் பேணுதிருப்பணிசெய்து
மருவார்தம்புரமெரித்தார் பூவணத்தைவந்தடைந்தார். (௪0௬)

(திருவாலவாய்த் - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

வேதியாவேதகீதா விண்ணவரண்ணாவென்றென்
றோதியேமலர்கடூவி யொருங்கிநின்கழல்கள்காணப்

பாதியோர்பெண்ணைவைத்தாய் படர்சடைமதியஞ்சூடு
மாதியேயாலவாயி லப்பனேயருள்செய்யாயே.

பொடிக்கொடுபூசிப்பொல்லாக் குரம்பையிற்புந்தியொன்றிப்
பிடித்துநின்றுள்களென்றும் பிதத்திநானிருக்கமாட்டே
னெடுப்பனென்றிலங்கைக்கோன்வந் தெடுத்தலுமிருபதுதோ
ளடர்த்தனேயாலவாயி லப்பனேயருள்செய்யாயே.

திருச்சிற்றம்பலம்.

---

கொடிமாடநிலவுதிருப் பூவணத்துக்கோயிலினுள்
நெடியானுக்கறிவரியார் நேர்தோன்றக்கண்டிறைஞ்சி
வடிவேறுதிரிசூலத் தாண்டகத்தால்வழுத்திப்போய்ப்
பொடிநீடுதிருமேனிப் புனிதர்பதிபிறபணிவார். (௪௰௭)

(திருப்பூவணம் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

வடிவேறுதிரிசூலந் தோன்றுந்தோன்றும் வளர்சடைமேலிளமதியுந் தோன்றுந்தோன்றுங், கடியேறுகமழ்கொன்றைக் கண்ணிதோன்றுங் காதில்வெண்குழைதோடு கலந்துதோன்றும், இடியேறுகளிற்றுரிவைப் போர்வைதோன்று மெழிறிகழுந்திருமுடியு மிலங்கித்தோன்றும், பொடியேறுதிருமேனி பொலிந்துதோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம் புனிதனார்க்கே.

ஆருருவவுள்குவா ருள்ளத்துள்ளே யவ்வுருவாய்நிற்கின்ற வருளுந் தோன்றும், வாருருவப்பூண்முலைநன் மங்கைதன்னை மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவுதோன்று, நீருருவக்கடலிலங்கை யரக்கர்கோனை நெறுநெறெனவடர்த்திட்ட நிலையுந்தோன்றும், போருருவக்கூற்றுதைத்த பொற்புத்தோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம் புனிதனார்க்கே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - பூவணநாதர். தேவியார் பெயர் - மின்னம்மை.

திருப்பதிகம்—௪.

---

தென்னிலங்கையிராவணன்றன் சிரமீரைந்துந்துணித்த
மன்னவனுமிராமனுக்கு வரும்பெரும்பாதகந்தீர்க்கும்
பின்னுகரைத்தொழுவதற்கு நினைந்துபோய்ப்பெருமகிழ்ச்சி
துன்னிமனங்கரைந்துருகத் தொழுதெழுந்தார்சொல்லரசர். (௪௰௮)

தேவர்தொழுந்தனிமுதலைத் திருவிராமேச்சுரத்து
மேவியசங்கரனையெதிர் நின்றுவிருப்புறுமொழியாற்
பாவுதிருநேரிசைகண் முதலானதமிழ்பாடி
நாவரசர்திருத்தொண்டு நலம்பெருகச்செய்தமர்ந்தார். (௪௰௯)

---

(திருவிராமேச்சுரத் - திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

பாசமுங்கழிக்ககில்லா வரக்கரைப்படுத்துத்தக்க
வாசமிக்கலர்கள்கொண்டு மதியினால்மால்செய்கோயி
னேசமிக்கன்பினாலே நினைமினீர்நின்றுநாளுந்
தேசமிக்கானிருந்த திருவிராமேச்சரமே.

வரைகளொத்தேயுயர்ந்த மணிமுடியரக்கர்கோனை
விரையமுற்றறவொடுக்கி மீண்டுமால்செய்தகோயி
றிரைகண்முத்தால்வணங்குந் திருவிராமேச்சரத்தை
யுரைகள்பத்தாலுரைப்பா ருள்குவாரன்பினாலே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - இராமநாதர். தேவியார் - பர்வத்வர்த்தனி.
தமிழ்ப்பெயர் - மலைவளர்காதலி. திருப்பதிகம்—ந.

---

அங்குறைந்துகண்ணுதலா ரருள்சூடியகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த்திருநாட்டுப் புறம்பணைசூழ்நெல்வேலி
செங்கண்விடையார்மன்னுந் திருக்கானப்பேர்முதலா
எங்குநிகழ்தானங்க ளெல்லாம்புக்கிறைஞ்சுவார். (சுக0)

தொழுதுபலவகையாலுஞ் சொற்றொடைவண்டமிழ்பாடி
வழுவிறிருப்பணிசெய்து மனங்கசிவுற்றெப்பொழுது
மொழுகியகண்பொழிபுனலு மோவாதுசிவன்றாள்கள்
தழுவியசிந்தையிலுணர்வுந் தங்கியநீர்மையிற்சரித்தார். (சுகக)

தேம்பொழியுஞ்செந்தமிழ்நாட் டினிலெங்குஞ்சென்றிறைஞ்சிப்
பாம்பணிவார்தமைப்பணிவார் பொன்னிநாடதுவணைந்து
வாம்புனல்சூழ்வளநகர்கள் பின்னும்போய்வணங்கியே
பூம்புகலூர்வந்தடைந்தார் பொய்ப்பாசம்போக்குவார். (சுகஉ)

பொய்கைசூழ்பூம்புகலூர்ப் புனிதர்மலர்த்தாள்வணங்கி
மையுமனப்பரிவோடு நாடோறுந்திருமுன்றிற்
கைகலந்ததிருத்தொண்டு செய்துபெருங்காதலுடன்
வைகுநாளெண்ணிறந்த வண்டமிழ்மாலைகள்மொழிவார். (சுகங)

நின்றதிருத்தாண்டகமு நீடுதனித்தாண்டகமு
மன்றுறைவார்வாழ்பதிகள் வழுத்துதிருத்தாண்டகமுங்
கொன்றைமலர்ச்சடையார்பாற் குறைந்தடைந்தநேரிசையும்
துன்றுதனிநேரிசையு முதலானதொடுத்தமைத்தார். (சுகச)

---

(நின்ற - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

இருநிலனாய்த்தீயாகி நீருமாகி யியமானனாயெறியுங் காற்றுமாகி, யருநிலையதிங்களாய் ஞாயிறாகி யாகாசமாயட்ட மூர்த்தியாகி, பெருநல முங்குற்றமும் பெண்ணுமாணும் பிறருருவுந்தம்முருவுந் தாமேயாகி, நெருநலையாயின்றாகி நாளையாகி நிமிர்புன்சடையடிக ணின்றவாறே.

மாலாகிநான்முகனாய் மாபூதமாய் மருக்கமாயருக்கமாய் மகிழ்வுமாகிப், பாலாகியெண்டிசைக்கு மெல்லையாகிப் பரப்பாகிப்பரலோகந் தானேயாகிப், பூலோகபுவலோக சுவலோகமாய்ப் பூதங்களாய்ப்புராணன் றானேயாகி, யேலாதனவெல்லா மேல்விப்பானா யெழுஞ்சுடராயெம்மடிகள் நின்றவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

(த னி த் த ா ண் ட க ம்.)

திருச்சிற்றம்பலம்.

ஆமயந்தீர்த்தடியேனை யாளாக்கொண்டா ரதிகைவீரட்டான மாட்சிகொண்டார், தாமரையோன்சிரமரிந்து கையிற்கொண்டார் தலையதனிற்பலிகொண்டார் நிறைவாந்தன்மை, வாமனனார்மாகாயத் துதிரங்கொண்டார் மானிடங்கொண்டார்வலங்கை மழுவாட்கொண்டார், காமனையுமுடல்கொண்டார் கண்ணால்நோக்கிக் கண்ணப்பர்பணியுங்கொள் கவாலியாரே.

குராமலரோடராமதியஞ் சடைமேற்கொண்டார் குடமுழநந்தீசனை வாசனாக்கொண்டார், சிராமலைதஞ்சேர்விடமாத் திருந்தக்கொண்டார் தென்றல்நெடுந்தேரோனைப் பொன்றக்கொண்டார், பராபரனென்பது தமது பேராக்கொண்டார் பருப்பதங்கைக்கொண்டார் பயங்கள்பண்ணி, இராவணனென்றவனைப்பே ரியம்பக்கொண்டா ரிடருறுநோய்தீர்த்தென்னை யாட்கொண்டாரே.

திருச்சிற்றம்பலம்.

---

(க்ஷே த் தி ர க் கோ வை.)

திருச்சிற்றம்பலம்.

தில்லைச்சிற்றம்பலஞ் செம்பொன்பள்ளி தேவன்குடிசிராப் பள்ளி தென்கூர், கொல்லிக்குளிரறைப் பள்ளிக்கோவல் வீரட்டங்கோகரணங் கோடிகாவு, முல்லைப்புறவ முருகன்பூண்டி முனையூர்பழையாறை சத்திமுற்றங், கல்லிற்றிகழ்சீரார் காளத்தியுங் கயிலாயநாதனையே காணலாமே.

புலிவலம்புத்தூர் புகலூர்புன்கூர் புறம்பியம்பூவணம் பொய்கை நல்லூர், வலிவலமாற் பேறுவாய் மூர்வைகல்வலஞ்சுழி வாஞ்சியமருகல் வன்னி, நிலமலி நெயத்தானத்தோ டெத்தானத்து நிலவுபெருங் கோயில் பல கண்டாற்றொண்டீர், கலிவலிமிக்கோனைக் கால்விரலாற்செற்ற கயிலாயநாதனையே காணலாமே.

திருச்சிற்றம்பலம்.

---

(குறைந்த திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

வென்றிலேன் புலன்களைந்தும் வென்றவர் வளாகந்தன்னில்
சென்றிலே னாதலாலே செந்நெறி யதற்குஞ்சேயே
னின்றுளே துளும்புகின்றே னீசனே னீசனேயோ
வின்றுளே னாளையில்லே னென்செய்வான் தோன்றினேனே.

வெட்டன வுடையனாகி வீரத்தான் மலையெடுத்த
துட்டனைத் துட்டுத்தீர்த்துச் சுவைபடக் கீதங்கேட்ட
வட்டமா மூர்த்தியாய வாதியை யோதிநாளு
மெட்டனை யெட்டமாட்டே னென்செய்வான் தோன்றினேனே.

திருச்சிற்றம்பலம்.

---

(குறைந்த திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

தம்மானங் காப்பதாகித் தையலார் வலையுளாழ்ந்து
அம்மானை யமுதன்றன்னை யாதியை யந்தமாய
செம்மான வொளிகொண்மேனிச் சிந்தையு ளொன்றிநின்ற
வெம்மானை நினையமாட்டே னென்செய்வான் தோன்றினேனே.

வளைத்துநின் றைவர்கள்வர் வந்தெனை நடுக்கஞ்செய்யத்
தளைத்துவைத் துலையையேற்றித் தழலெரி மடுத்தநீரிற்
றிளைத்துநின் றாடுகின்ற வாமைபோற் றெளிவிலாதே
னிளைத்துநின் றாடுகின்றே னென்செய்வான் தோன்றினேனே.

திருச்சிற்றம்பலம்.

---

(தனித் திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

தொண்டனேன் பட்டதென்னே தூயகா விரியினன்னீர்
கொண்டிருக் கோதியாட்டிக் குங்குமக் குழம்புசாத்தி
யிண்டைகொண் டேறநாக்கி யீசனை யெம்பிரானைக்
கண்டனைக் கண்டிராதே காலத்தைக் கழித்தவாறே.

பெருவிர லிறைதானூன்றப் பிறையெயி றிலங்கவங்காந்
தருவரை யனையதோளா னரக்கனன் றலறிவீழ்ந்தா
னிருவரு மொருவனாய வுருவமங் குடையவள்ளல்
திருவடி சுமந்துகொண்டு காணநான் றிரியுமாறே.

திருச்சிற்றம்பலம்.

---

(தனித் திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

மருளவா மனத்தனாகி மயங்கினேன் மதியிலாதே
னிருளவா வறுக்குமெந்தை யிணையடி நீழலென்னு
மருளவாப் பெறுதலின்றி யஞ்சினா னலமந்தேற்குப்
பொருளவாத் தந்தவாறே போதுபோய்ப் புலர்ந்ததன்றே.

நடுவிலாக் காலன்வந்து நணுகும்போ தறியவொண்ணா
வடுவன வஞ்சபூத மவைதனக் காற்றலாகேன்
படுவன பலவுங்குற்றம் பாங்கிலா மனிதர்வாழ்க்கைக்
கெடுவதிப் பிறவிசீசீ கிளரொளிச் சடையினீரே.

திருச்சிற்றம்பலம்.

---

(தனித் திருநேரிசை.)

திருச்சிற்றம்பலம்.

கடும்பகல் நட்டமாடிக் கையிலோர் கபாலமேந்தி
யிடும்பலிக் கில்லந்தோறு முழிதரு மிறைவனீரே
நெடும்பொறை மலையர்பாவை நேரிழை நெறிமென்கூந்தற்
கொடுங்குழை புகுந்தவன்றுங் கோவண மரையதேயோ.

உய்த்தகா லுதையத்தும்ப ருமையவ ளடுக்கந்தீர
வைத்தகா லரக்கனோதன் வான்முடி தனக்குநேர்ந்தான்
மொய்த்தகால் முகில்வெண்டிங்கண் மூர்த்தியென் னுச்சிதன்மேல்
வைத்தகால் வருந்துமென்று வாடினா னொடுங்கினேனே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆருயிரின்றிரு விருத்தந்தசபுரா ணத்தடைவும்
பார்பரவும்பாவ நாசப்பதிகம் பன்முறையும்
நேர்பட்நின்றறை கூவுந்திருப்பதிக முதற்பிறவும்
பேரருளின்கட லளிக்கும்பெருமானைப் பாடினார். (௪௱௨௰௫)

(ஆருயிர்த் திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

எட்டாந்திசைக்கு மிருதிசைக்கும்மிறை வாமுறையென்
றிட்டாரமரர்வெம் பூசலெனக்கேட் டெரிவிழியா
லொட்டாக்கயவர் திரிபுரமூன்றையு மோரம்பினு
லட்டானடிநிழற் கீழதன்றேவென்ற னாருயிரே.

பழகவோரூர்தியான் பைங்கட்பாரிடம் பாணிசெய்யக்
குழலுமுழவொடு மாநடமாடி யுயரிலங்கைக்
கிழவனிருபது தோளுமொருவிர லாலிறுத்த
வழகனடிநிழற் கீழதன்றேவென்ற னாருயிரே.

திருச்சிற்றம்பலம்.

---

(தசபுராணம் - பழம்பஞ்சுரம்.)

திருச்சிற்றம்பலம்.

பருவரையொன்றுசுற்றி யரவங்கைவிட்ட விமையோரிரந்துபயமாய்த்
திருநெடுமால்நிறத்தை யடுவான்விசும்பு சுடுவானெழுந்துவிசைபோய்ப்
பெருகிடமற்றிதற்கோர் பிதிகாரமொன்றை யருளாய்பிரானேயெனலு
மருள்கொடுமாவிடத்தை யெரியாமலுண்ட வவனண்டரண்டரரசே.

கடுகியதேர்செலாது கயிலாயமீது கருதேலுன்வீரமொழிநீ
முடுகுவதன்றுகாண்டி யெனநின்றுபாகன் மொழிவானைநன்றுமுனியா
விடுவிடுவென்றுசென்று விரைவுற்றரக்கன் வரையுற்றெடுக்கமுடிதோ
ளெறுவிடுவித்துவீழி விரலுற்றபாத நினைவுற்றதென்றன்மனமே.

திருச்சிற்றம்பலம்.

---

(பாவநாசம் - பண் - பழம்பஞ்சுரம்.)

திருச்சிற்றம்பலம்.

பற்றற்றார்சேர் பழம்பதியைப் பாசூர்நிலாய பவளத்தைச்
சிற்றம்பலத்தெந் திகழ்கனியைத் தீண்டற்கரிய திருவுருவை
வெற்றியூரில் விரிசுடரை விமலாகரனைத் திரைசூழ்ந்த
வொற்றியூரெ முத்தமனை யுள்ளத்துள்ளே வைத்தேனே.

முந்தித்தானே முளைத்தானை மூரிவெள்ளே றூர்ந்தானை
யந்திச்செவ்வான் படியானை யரக்கனாற்ற லழித்தானைச்
சிந்தைவெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன்மாலை யடிசேர்த்தி
யெந்தைபெம்மா னென்னெம்மா னென்பார்பாவ நாசமே.

திருச்சிற்றம்பலம்

(சரக்கறைத் - திருவிருத்தம்.)

திருச்சிற்றம்பலம்.

விடையும்விடைப்பெரும் பாகாவென்விண்ணப்பம் வெண்மழுவாட்
படையும்படையாய் நிரைத்தபல்பூதமும் பாய்புலித்தோ
லுடையுமுடைதலை மாலையும்மாலைப் பிறையொதுங்குஞ்
சடையுமிருக்குஞ் சரக்கறையோவென் றனிநெஞ்சமே.

விவந்தாடியகழ லெந்தாயென்விண்ணப்ப மேலிலங்குந்
தவந்தாளெடுக்கத் தலைபத்தடுத்தனை தாழ்புலித்தோல்
சிவந்தாடியபொடி நீறுஞ்சிரமாலை சூடிநின்று
தவந்தானிருக்குஞ் சரக்கறையோவென் றனிநெஞ்சமே.

திருச்சிற்றம்பலம்.

---

அந்நிலைமை தனிலாண்ட வரசுபணி செய்யவவர்
நன்னிலைமைகாட்டுவார் நம்பர்திரு மணிமுன்றில்
தன்னில்வருமுழவார நுழைந்தவிடந் தானெங்கும்
பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்க வருள்செய்தார். (௬௱௰௬)

செம்பொன்னு நவமணியுஞ் சேண்விளங்க வாங்கவையு
மும்பர்பிரான் றிருமுன்றி லுருள்பருக்கை யுடனொக்க
வெம்பெருமான் வாகீச ருழவாரத் தினிலேந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினிற் புகவெறிந்தார். (௬௱௰௭)

புல்லோடுங் கல்லோடும் பொன்னோடு மணியோடும்
சொல்லோடும் வேறுபா டிலாநிலைமை துணிந்திருந்த
நல்லோர்முன் றிருப்புகலூர் நாயகனார் திருவருளால்
வில்லோடு நுதன்மடவார் விசும்பூடு வந்திழிந்தார். (௬௱௰௮)

வானகமின் னுக்கொடிகள் வந்திழிந்தா லெனவந்து
தானநிறை சுருதிகளிற் றகுமலங்கா ரத்தன்மை
கானவமு தம்பரக்குங் கனிவாயி லொளிபரப்பப்
பானனெடுங் கண்கள்வெளி பரப்பியிசை பாடுவார். (௬௱௰௯)

கற்பகப்பூந் தளிரடிபோங் காமருசா ரிகைசெய்ய
உற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடுங் கைபெயரப்
பொற்புறுமக் கையின்வழிப் பொருகயற்கண் புடைபெயர
அற்புதப்பொற் கொடிநுடங்கி யாடுவபோ லாடினார். (௬௱௨௰)

ஆடுவார்பாடுவா ரலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார்போன்றணைவார் குழலவிழ விடைநுடங்க
ஓடுவார்மாரவே ளுடன்மீள்வ ரொளிபெருக
நீடுவார்துகிலசைய நிற்பாரு மாயினார். (௬௱௨௧)

இத்தன்மை யரம்பையர்க ளெவ்விதமுஞ் செயல்புரிய
அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா வன்புருகு
மெத்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தஞ்
சித்தநிலைதிரியாது செய்பணியின் றலைநின்றார். (௪௨௨)

இம்மாயப் பவத்தொடக்கா மிருவினைக டமைநோக்கி
யும்மாலிங் கென்னகுறை யுடையேன்யான் றிருவாரூர்
அம்மானுக் காளானே னலையேன்மி னீரென்று
பொய்ம்மாயப் பெருங்கடலு ளெனுந்திருத்தாண் டகம்புகன்றார்.(௪௨௩)

---

(திருவாரூர்த் திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பாநின்ற புண்ணியங்கா டீவி னைகாள் திருவேநீங்கள், தம்மாயப் பெருங்கடலை யரித்துத்தின்பீர்க் கில் லையே கிடந்ததுதான் யானேல்வானோர், தம்மானைத் தலைமகனைத் தண் ணவாரூர்த் தடங்கடலைத் தொடர்ந்தோரா யடங்கச்செய்யு, மெம்மான்ற னடித்தொடர்வா னுழதாகின்றே னிடையிலென் கெடுவீர்கா ளிட்டேன் மின்னே.

சுருக்கமொடு பெருக்கநிலை நிற்றல்பற்றித் துப்பறையென் றனைவீ ரிவ் வுலகையோடிச், செருக்கிமிகை செலுத்தியுஞ்செய் கைவைகல்செய் கின்றீர்க்க மையாதே யானேன்மிக்க, தருக்கிமிக வரையெடுத்த வரக்க னாகந் தளரவடி யெடுத்தவன்றன் பாடல்கேட், டிரக்கமெழுந் தருளிய வெம் பெருமான்பாதத் திடையிலென் கெடுவீர்கா ளிடரேன்மின்னே.

திருச்சிற்றம்பலம்.

---

மாதரவர் மருங்கணைய வந்தெய்தி மதனவசக்
காதலவர் புரிந்தொழுகுங் கைதவங்கள் செய்திடவும்
பேதமிலா வோருணர்விற் பெரியவரைப் பெயர்விக்க
யாதுமொரு செயலில்லா மையிலிறைஞ்சி யெதிரகன்றார். (௪௨௪)

இந்நிலைமை யுலகேழு மெய்தவறிந் தியல்பேத்த
மன்னியவன் புறுபத்தி வடிவான வாகீசர்
மின்னிலவுஞ் சடையார்த மெய்ப்பொருட்டா னெய்தவரு
மந்நிலைமை யணித்தாகச் சிலநாளங் கமர்ந்திருந்தார். (௪௨௫)

மன்னியவந் தக்கரண மருவுதலைப் பாட்டினாற்
றன்னுடைய சரணான தமியேனைப் புகலூரா
னென்னையினிச் சேவடிக்கீ ழிருத்திடுமென் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினாற் றிருவிருத்தம் பலமொழிந்தார். (௪௨௬)

மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே னெனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
யண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர சமர்ந்திருந்தார். (சூஉஎ)

(திருப்புகலூர்த் - திருத்தாண்டகம்.)

திருச்சிற்றம்பலம்.

எண்ணுகேனென்சொல்லி யெண்ணுகேனோ வெம்பெருமான்றிருவடியே யெண்ணினல்லாற், கண்ணிலேன்மற்றோர்களை கண்ணில்லென் கழலடியேகைதொழுது காணினல்லா, லொண்ணுளேயொன்பது வாசல் வைத்தா யொக்கவடைக்கும்போ துணரமாட்டேன், புண்ணியனேயுன் னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர்மேவிய புண்ணியனே.

ஒருவரையுமில்லா துணராதுள்ள முணர்ச்சித்தடுமாற்றத் துள்ளேநின்ற, விருவரையுமூவரையு மென்மேலேவி யில்லாததரவறுத்தாய்க் கில்லேனெல்க, கருவரைசூழ்கான லிலங்கைவேந்தன் கடுந்தேர்மீதோடாமைக் காலாற்செற்ற, பொருவரையா யுன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர்மேவிய புண்ணியனே.

திருச்சிற்றம்பலம்.

வானவர்கண் மலர்மாரி மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த வைந்துபே ரியவொலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினவெல்லா முண்ணிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையிற் சதயமாந் திருநாளில். (சூஉஅ)

அடியனே னாதரவா லாண்டவர சின்சரிதப்
படியையா னறிந்தபடி பகர்ந்தேனப் பரமுனிவன்
கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது குலச்சிறையார்
முடிவில்புகழ்த் திருத்தொண்டின் முயற்சியினை மொழிகின்றேன். (சூஉகூ)

ஆ. திருவிருத்தம் - களாகூ.

திருச்சிற்றம்பலம்.

திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாமூரிலே, வேளாளர்குலத்திலே, குறுக்கையர் குடியிலே, புகழனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மனைவியார்பெயர் மாதினியார். அம்மாதினியார் வயிற்றிலே திலகவதியார் என்கின்ற புத்திரியார் பிறந்தார். அவர் பிறந்து சிலவருஷஞ்சென்றபின், சைவசமயம் அபிவிருத்தியாகும்படி மருணீக்கியார் என்கின்ற புத்திரர் அவதரித்தார். அவருக்குத் தந்தையார் உரிய பருவத்திலே

வித்தியாரம்பஞ்செய்வித்தார். மருணீக்கியார், தந்தையாருக்குப் பெருமகிழ்ச்சியுண்டாகும்படி, பலகலைகளையுங் கிரமமாகக் கற்று வல்லவராயினார்.

திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயசு ஆனபொழுது, அப்புகழனார் மரபிற்கு ஒத்த மரபினையுடையவரும், சிவபத்தியிலே சிறந்தவரும், இராஜாவிடத்திலே சேனாதிபதியாயுள்ளவருமாகிய கலிப்பகையார் என்பவர், அப்புகழனாரிடத்திலே சில முதியோர்களை அனுப்பி, திலகவதியாருக்குந் தமக்கும் மணம் பேசுவித்தார். புகழனார் அதற்கு இசைந்தமை கண்டு, அம்முதியோர்கள் மீண்டு சென்று, கலிப்பகையாருக்குத் தெரிவித்தார்கள். கலிப்பகையார் தாம் விவாகஞ்செய்தற்குமுன், தம்முடைய அரசனது ஆஞ்ஞையினாலே சேனைகளோடும் சில நாளிலே அவன்பகைஞராகிய வடதேசத்தரசரிருக்குமிடத்தைச் சேர்ந்து, அவர்களோடு நெடுநாள் யுத்தஞ்செய்தார். அங்கே அப்படி நிகழுங்காலத்திலே, இங்கே புகழனார் தேகவியோகம் அடைந்தார். அப்பொழுது அவர் மனைவியாராகிய மாதினியார் சககமனஞ்செய்தார். அவர்கள் பிள்ளைகளாகிய திலகவதியாரும் மருணீக்கியாரும், சுற்றத்தார்களோடு மிக மனக்கவலையுற்று, சுற்றத்தாருள் அறிவால் அமைந்த பெரியோர்கள் ஒருவாறு தேற்றத் தேறி, தந்தை தாயர்களுக்குச் செய்யவேண்டும் அந்தியகருமங்களை முடித்தார்கள்.

இங்கே இப்படி நிகழ, அங்கே கலிப்பகையார் யுத்தகளத்திலே தம்முடைய பூதவுடம்பை விட்டுப் புகழுடம்பைப் பெற்றுக்கொண்டார். அந்தச் சமாசாரந் திலகவதியாருக்குச் செவிப்புலப்பட; அவர் "என்னுடைய பிதாமாதாக்கள் என்னை அவருக்கு மணஞ்செய்துகொடுக்க உடன்பட்டிருந்தமையால், இவ்வுயிர் அவருக்கே உரியது. ஆதலால் இவ்வுயிரை அவருயிரோடும் இசைவிப்பேன்" என்று சாவத்துணிந்தார். அது கண்ட மருணீக்கியார் வந்து, அத்திலகவதியாருடைய இரண்டுபாதங்களிலும் விழுந்து அழுது, "அடியேன் நம்முடைய பிதாமாதாக்கள் இறந்தபின்னும் உம்மையே அவர்களாகப் பாவித்துப் பூசிக்கலாம் என்றன்றோ உயிர்வைத்துக்கொண்டிருக்கின்றேன். அடியேனைத் தனியே கைவிட்டிறப்பீராயின், அடியேன் உமக்கு முன்னமே இறந்து விடுவேன்" என்றார். திலகவதியார் அதைக் கேட்டு, தம்பியார் உயிரோடு இருக்கவேண்டும் என்னும் ஆசையால் தமது கருத்தைத் தடுத்து உயிர்தாங்கி, வேறொருவரையும் விவாகஞ்செய்துகொள்ளாமல்,சீவகாருண்ணியம் உள்ளவராகி, வீட்டிலே தவஞ்செய்துகொண்டிருந்தார்.

மருணீக்கியார் யாக்கை நிலையாமையையும் செல்வநிலையாமையையும் நினைந்து தருமஞ்செய்ய விரும்பி,அன்புடனே திரவியங்களைச் செல

வழித்து, அறச்சாலைகளையும் தண்ணீர்ப்பந்தர்களையும் அமைத்தார்; சோலைகளை வைப்பித்தார்; குளங்களைத் தோண்டுவித்தார்; விருந்தினரை உபசரித்தார்; புலவர்களுக்குக் கனகமாரி பொழிந்தார். பிரபஞ்சவாழ்வினது அநித்தியத்துவத்தை அறிந்து இல்வாழ்க்கையிலே புகாமல் எல்லாவற்றையும் துறந்தார். எல்லாச்சமயங்களுள்ளும் சற்சமயம் இது என்று அறியுமறிவு அவருக்குத் தலைப்படவில்லை. அவர் பாடலிபுத்திரம் என்னும் நகரத்திற்சென்று, சமணர்களுடைய பள்ளியையடைந்து, அங்குள்ள சமணர்களுடைய போதனுசத்தியினுலே அவர்கள் அநுட்டிக்கின்ற ஆருகதசமயமே முத்தியை அடைதற்குத் தகுந்த நெறியென்று துணிந்து, அந்தச்சமயத்திலே பிரவேசித்தார். பிரவேசித்த அம்மருணீக்கியார் அந்தச் சமணசமயநூல்களெல்லாவற்றையும் கற்று, அவைகளிலே மகா பாண்டித்தியம் உடையவராயினர். அது கண்ட சமணர்கள் அவருக்குத் தருமசேனர் என்று பெயரிட்டு, அவரைத் தங்கள் மதாசாரியராகக்கொண்டு வழிபட்டார்கள். அவர் தமது வித்தியாசாமர்த்தியத்தினுலே பௌத்தர்களை வாதிலே வென்றுபுகழ்பெற்று, ஆருகத சமயாசாரியர்களுக்குள்ளே சிரேஷ்டராய் இருந்தார். அது நிற்க.

திருவாமூரிலே இருந்த திலகவதியார் சிவபெருமானிடத்திலே பத்திமிகுந்து, சிவபுண்ணியங்கள் செய்ய விரும்பி, கெடிலநதிக்கு வடகரையில் இருக்கின்ற திருவதிகைவீரட்டானம் என்னுந் திருப்பதியிற்சென்று பரமசிவனை வணங்கி, சிவசின்னங்களைத் தரித்து, தினந்தோறும் சூரியோதயத்துக்கு முன்னே திருக்கோயிலின் உள்ளும் புறமும் திருவலகிடுதல், கோமயத்தினுலே மெழுகுதல், திருநந்தனவனங்களிற் சென்று புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு வந்து திருமாலை தொடுத்துச் சுவாமிக்குச் சாத்தக்கொடுத்தல் முதலாகிய சிவபுண்ணியங்களைச் செய்துவந்தார். செய்துவருநாளிலே, தம்முடைய தம்பியாராகிய மருணீக்கியார் கபடமார்க்கமாகிய ஆருகதத்திலே பிரவேசித்தமையை நினைந்து, துக்கசாகரத்தில் அமிழ்ந்தி, வீரட்டானேசுரரை வணங்கி, "சர்வாபீஷ்டவரதரே, தேவரீர் அடியேனை ஆட்கொள்பவர் என்பது சத்தியமாயின், தவமென்று சொல்லிப் பாயை இடுக்கித் தலைமயிரைப்பறித்தெறிந்துவிட்டு நின்றுகொண்டே உண்கின்ற சமணர்களுடைய கபடமார்க்கமாகிய படுகுழியிலே விழுந்த தமியேனுடைய தம்பியை அதினின்றும் தூக்கிக் காப்பாற்றியருளல் வேண்டும்" என்று பலமுறை விண்ணப்பஞ்செய்தார். பரமசிவன் திலகவதியாருக்குச் சொப்பனத்திலேதோன்றி, "தபோதனியே, நீ உன் மனக்கவலையை ஒழி. உன்னுடைய தம்பி துறவியாகி நம்மை அடையும்பொருட்டுப் பூர்வசன்மத்திலே தவஞ்செய்திருக்கின்றான். அந்தத் தவத்திற் சிறிது வழுவுற்றதினுலே அந்நியமதத்திலே பிரவேசித்தான். இனி அவனைச் சூலைநோயினுல் வருத்தி ஆட்கொள்வோம்" என்று சொல்லி, மறைந்தருளினர்.

பரமசிவன் திருவாய்மலர்ந்தருளியபடியே, அவருடைய திருவருளினாலே, தருமசேனருடைய வயிற்றிலே கொடிய சூலைநோய் உண்டாகிக் குடலைக் குடைதலுற்றது. அதனால் அவர் வருந்தி நடுக்கமுற்று, சமண்பாழியறையில் விழுந்தார். தமக்குக் கைவந்த சமணசமயமந்திரோச்சாரணத்தால் தடுக்கவும், அச்சூலைநோய் தடைப்படாமல் மேற்கொண்டது. மேற்கொள்ளவே, சர்ப்பவிஷந் தலைக்கொண்டாற்போல மயங்கி மூர்ச்சை அடைந்தார். அது கண்ட சமணர் பலர் வந்து கூடி, "இந்தச் சூலைநோய்போலக் கொடிய நோய் முன்னொருபோதும் கண்டறியோம். இதற்குயாது செய்வோம்" என்று துக்கமுற்று, பின் கமண்டத்தில் இருக்கின்ற ஜலத்தை அபிமந்திரித்துக் குடிப்பித்தார்கள். அதனாலே தணியாமையால், மயிற்பீலிகொண்டு காலளவுந் தடவினார்கள். அதினாலுந்தணியாமல், சூலைநோய் முன்னிலும் அதிகப்பட; தருமசேனர் அதைச் சகிக்கலாற்றாதவராய்த் துன்பப்பட்டார். சமணர்கள் அதுகண்டு, "ஐயோ! இதற்கு நாம் யாது செய்வோம்" என்று மனங் கலங்கி, "இந்நோயை நீக்குதற்கு நாம் வல்லமல்லேம்" என்று சொல்லிக்கொண்டு, அவரைக் கைவிட்டுப் போயினார்கள். பின் தருமசேனர் தம்முடைய சகோதரியாராகிய திலகவதியாரை நினைந்து,அவரே தமக்கு உதவிசெய்ய வல்லர் எனத் துணிந்து,தம்முடைய சமாசாரத்தை அவருக்கு உணர்த்தும் பொருட்டு, தம்முடைய பாகுகனை அவரிடத்துக்கு அனுப்பினார். அப்பாகுகன் திருவதிகையிற்சென்று, அத்திலகவதியாரை ஒரு திருநந்தனவனத்துக்குச் சமீபத்திலே கண்டுவணங்கி, "நான் உம்முடைய தம்பியார் ஏவலினால் இவ்விடத்துக்கு வந்தேன்" என்று சொல்ல; திலகவதியார் "தம்பியாருக்கு யாதாயினும் தீங்கு உண்டா" என்றார். அதற்கு அவன் "ஆம், அவர் கொடிய சூலைநோயினால் மிக வருந்துகின்றார். சமணர்களெல்லாரும் அந்நோயைத் தீர்த்தற்கு வன்மையின்மையால், அவரைக் கைவிட்டு விட்டார்கள். அவர் அது கண்டு, என்னைநோக்கி, அந்தச் சமாசாரத்தைச் சகோதரியாராகிய உமக்குத் தெரிவித்து, தாம் உய்யும் நெறியைக் கேட்டுக்கொண்டு இரவிலே தம்மிடத்துக்கு வரும்பொருட்டு என்னை ஏவினார்" என்றான். திலகவதியார் "பதிதராகிய சமணர்களுடைய பள்ளிக்கு நான் வரேன். இதைத் தம்பிக்குச் சொல்லு" என்றார். அது கேட்ட பாகுகன் மீண்டு தருமசேனரிடத்திற்சென்று,அதைத்தெரிவிக்க; தருமசேனர் "இனி இதற்கு யாது செய்வேன்" என்று சோகித்தார்.

அப்பொழுது சிவபெருமானுடைய திருவருள் கூடுதலால், மருணீக்கியார் "இந்தத் துர்ச்சமயமாகிய ஆருகதமார்க்கப் பிரவேசத்தால் என்னை வருத்தும் இந்நோய்நீங்கும்படி,சற்சமயமாகிய சைவசமயத்தை அநுட்டிக்கின்ற திலகவதியாருடைய திருவடிகளை அடைவேன், என்று கருதினார். அக்கருத்துப் பிடித்தெழுப்ப எழுந்து, சமணர்களுடைய

ஸ்தானத்தைக் கடந்து, உடுத்த பாயையும் உறியில் உற்ற கமண்டலத்தையும் மயிற்பீலியையும் நீக்கி வஸ்திரந்தரித்து, தமக்குப் பற்றுக்கோடாகக் கைதந்து வருகின்றவர்களைப் பற்றிக்கொண்டு, ஒருவருங் காணாதபடி இரவிலே ஆருகதமார்க்கப் பிரவேசத்தால் தமக்குக் கிடைத்தவைகளில் சூலைநோய் ஒன்றுமாத்திரம் உடன்றொடர, திருவதிகையிற்சென்று திலகவதியாருடைய திருமடத்தை அடைந்து, அவருடைய திருவடிகளை நமஸ்கரித்து, "நமது குலத்தாற் செய்த தவப்பயனெல்லாம் திரண்டு ஒரு வடிவெடுத்தாற்போலும் அம்மே, அடியேன் கொடிய சூலைநோயைச் சகிக்கலாற்றாமையால், உம்மையே கதியென்று அடைந்தேன். இனித் தமியேன் உய்ந்து கரையேறும் வழியை அருளிச்செய்யும்" என்று விண்ணப்பஞ்செய்து, பாதத்திலே விழுந்து அயர்ந்தார். திலகவதியார் தம்பியாரை நோக்கி, தமக்குச் சொப்பனத்திலே பரமசிவன் அருளிச்செய்தபடி முடித்ததை நினைந்து, மனங்கசிந்துருகிக் கடவுளை அஞ்சலிசெய்து கொண்டு, "அறியாமையினாலே பரசமயப்படுகுழியில் விழுந்து கொடுந்துயரத்தை அனுபவிக்கின்ற தம்பியாரே, எழுந்திரும்" என்றார். தம்பியார் சூலைநோயுடனே நடுக்கமுற்று எழுந்து, அஞ்சலிசெய்தார். திலகவதியார் "இது பரமசிவனுடைய திருவருளே. தம்முடைய திருவடிகளையடைந்த மெய்யன்பர்களுக்கு இன்னருள்புரியும் அக்கடவுளையே வணங்கி அவருக்கே திருத்தொண்டுசெய்யும்" என உபதேசித்தார். உடனே மருணீக்கியார் அவ்வுபதேசத்தை ஏற்றுக்கொண்டு; வணங்கி நிற்க; திலகவதியார் திருவருளை நினைந்து, அவருக்கு விபூதியை ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதிக்கொடுத்தார். மருணீக்கியார் மிகுந்த ஆசையோடு வணங்கி, அவ்விபூதியை வாங்கி, சரீரமுழுதிலும் அணிந்து கொண்டார்.

திலகவதியார் திருப்பள்ளியெழுச்சியிலே, திருவலகும் திருமெழுக்குத்தோண்டியும் எடுத்துக்கொண்டு, திருக்கோயிலுக்குத் தம்பியாரை அழைத்துக்கொண்டுபோனார். மருணீக்கியார் வீரட்டானேசுரரைப் பிரதக்ஷிணஞ்செய்து, சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று, அவருடைய திருவருளினாலே தமிழ்ச்செய்யுள் பாடுஞ்சத்தி உண்டாகப்பெற்று, தம்முடைய சூலைநோய் நீங்கும்பொருட்டும், பிற்காலத்திலே அன்போடு ஓதுகின்ற யாவருடைய துன்பமும் நீங்கும்பொருட்டும், சிவபெருமான்மேல் "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்னுந் திருப்பதிகத்தைப்பாடியருளினார். உடனே சூலைநோய் நீங்கிற்று. அப்பொழுது மருணீக்கியார் தமக்கு உயிரையுந்தந்து முத்திநெறியையுந்தந்த சிவபெருமானுடைய திருவருளாகிய கடலில் அமிழ்ந்தி, திருமேனி முழுதிலும் உரோமாஞ்சங்கொள்ள, இரண்டு கண்ணினின்றும் ஆனந்த பாஷ்பஞ்சொரிய, நிலத்திலே விழுந்து புரண்டு, "சமணசமயப் படுகுழியிலே விழுந்து எழுமாறு அறியாது மயங்கிய பாவியேன் சிவபெருமானுடைய

த்திருவதிகையிலே கொண்டுவந்து, பரமசிவனுக்குக் குணதரவீச்சரம் என்னுங் கோயிலைக்கட்டினான்.

அந்நாட்களிலே திருநாவுக்கரசுநாயனார் சிவஸ்தலங்கள் பலவற்றிற்குஞ் சென்று சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடவிரும்பி அவ்விடத்தினின்றும் நீங்கி, திருவெண்ணெய்நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலிய திருப்பதிகளை வணங்கிப் பதிகம் பாடிக்கொண்டு பெண்ணாகடத்திற்சென்று, திருத்தூங்கானை மாடமென்னும் ஆலயத்திற் பிரவேசித்து, சுவாமியை வணங்கி, "சுவாமீ, அடியேன் இழிவினையுடைய சமணசமயத் தொடக்குண்டுவருந்திய இத்தேகத்துடனே உயிர்வாழ்தற்குத் தரியேன். அடியேன் தரிக்கும் பொருட்டுத் தேவரீருடைய இலச்சினை * யாகிய சூலத்தையும் இடபத்தையும் அடியேன்மேற் பொறித்தருளவேண்டும்" என்னுங் கருத்தால் "பொன்னார் திருவடிக்கொன்றுண்டு விண்ணப்பம்" என்னுந் திருப்பதிகம் பாடினார். உடனே பரமசிவனுடைய திருவருளினால் ஒருசிவபூதம் மற்றொருவருக்கும் தெரியாதபடி அவ்வாகீசருடைய திருத்தோளிலே சூலக்குறியையும் இடபக்குறியையும் பொறித்தது. நாயனார் தம்முடைய திருத்தோளிலே பொறிக்கப்பட்ட இலச்சினைகளைக் கண்டு மனமகிழ்ந்து, திருவருளை நினைந்து கண்ணீர்சொரிய விழுந்து நமஸ்கரித்து எழுந்தார். அவர் அந்தஸ்தலத்தில் இருக்கின்ற நாளிலே, திருவரத்துறைக்கும் திருமுதுகுன்றுக்கும் போய், சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடி, கிழக்கே நிவாக்கரையின் வழியாக நடந்து, சிதம்பரத்திலே சென்று, கனகசபையிலே ஆனந்ததாண்டவஞ் செய்தருளுகின்ற சபாநாயகரைத் தரிசித்து விழுந்து நமஸ்கரித்து எழுந்து, இரண்டு கைகளும் சிரசின்மேலேறிக் குவிய, இரண்டு கண்ணினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சொரிய, அக்கினியிற்பட்ட வெண்ணெய்போல மனங்கசிந்துருக, என்று வந்தாய் என்னுந் திருக்குறிப்போடு நிருத்தஞ்செய்கின்ற சுவாமியுடைய திருநயனத்தினின்றும் பொழிகின்ற திருவருளாலாகிய ஆனந்தமேலீட்டினாலே "கருநட்டகண்டனை" என்னுந் திருவிருத்தமும் "பத்தனாய்ப்பாடமாட்டேன்" என்னுந் திருநேரிசையும் பாடினார். அவர் சுவாமிதரிசனம் பண்ணி, திருக்கோயிற்றிருமுற்றத்தினும் திருவீதிகளினும் உழைவாரப்பணிசெய்துகொண்டு சிலநாள் அங்கே எழுந்தருளியிருந்தார். அப்பொழுது "அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்" என்னுந் திருக்குறுந்தொகை பாடினார். பின் திருவேட்களத்துக்குச் சென்று, சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடி, திருக்கழிப்பாலையை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு, சிலநாள் அங்கே இருந்தார். பின் அவ்விடத்தினின்றும் நீங்கி, வழியிலே "பனைக்கை மும்மத வேழ முரித்தவன்" என்று எடு

* இலச்சினை-முத்திரை.

த்து "அம்பலக் கூத்தனைத் - தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ" என்னுந் திருக்குறுந்தொகை பாடிக்கொண்டு, சிதம்பரத்தை அடைந்து, "அரியானை யந்தணர்தஞ்சிந்தை யானை" என்னும் பெரியதிருத்தாண்டகம் பாடிக்கொண்டு திருக்கோயிலிற் சென்று, சபாநாதனைத் தரிசித்து வணங்கி, "செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா வெறிக்கும்" என்னுந் திருநேரிசை பாடினார்.

திருநாவுக்கரசுநாயனார் அங்கே பாடற்றொண்டும் உழைவாரத்தொண்டுஞ் செய்துகொண்டிருக்குநாளில், ஒருநாள், சீர்காழியிலே பரமசிவனது திருவருளினால் உமாதேவியார் ஞானப்பாலை ஊட்ட உண்டு வேதார்த்தங்களைத் தமிழிலே தேவாரமாகப் பாடியருளுகின்ற திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய மகிமையை அடியார்கள் சொல்லக் கேள்வியுற்று, அவருடைய திருவடிகளை வணங்கல்வேண்டும் என்னும் ஆசைமிகுதியினால், சபாநாயகனைத்தொழுது அநுமதி பெற்றுக்கொண்டு புறப்பட்டு, திருவீதியிலே அங்கப்பிரதக்ஷிணஞ்செய்து, அத்திருப்பதியின் எல்லையைக் கடந்து, திருநாரையூரைப் பணிந்து பாடி, சீர்காழிக்குச் சமீபித்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சீர்காழிக்குத் திருநாவுக்கரசுநாயனார் வருதலைக் கேள்வியுற்று, அத்தியந்த ஆசையோடு அடியார்கள் பக்கத்திலே சூழ அவரை எதிர்கொண்டார். திருநாவுக்கரசுநாயனார் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரிக்க; அவர் தம்முடைய திருக்கரங்களினால் இவருடைய திருக்கரங்களைப் பிடித்து எடுத்து, தாமும் அஞ்சலிசெய்து, "அப்பரே" என்றார். அதற்குத் திருநாவுக்கரசுநாயனார் "அடியேன்" என்றார். அவ்விருவரும் தாங்கள் ஒருவரை ஒருவர் காணப்பெற்றதனால் மிக மனமகிழ்ந்து, ஆலயத்திற்சென்று, சுவாமியை வலங்கொண்டு நமஸ்கரித்து எழுந்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அப்பமூர்த்தியை நோக்கி, "அப்பரே, உம்முடைய சுவாமியைப் பாடும்" என்று சொல்ல, இவர் திருப்பதிகம் பாடி, திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய திருமடத்திற் சென்று, அவரோடு அளவளாவிப் பலநாள் இருந்தார்.

ஒருநாள் திருநாவுக்கரசுநாயனார் சோழமண்டலத்திலுள்ள சிவஸ்தலங்களெல்லாவற்றையும் வணங்கவேண்டும் என்று தமது திருவுள்ளத்தே தோன்றிய ஆசையைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்கு விண்ணப்பஞ்செய்து, அவரோடும் திருக்கோலக்காவிற்குச் சென்று, சுவாமிதரிசனம் பண்ணினார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அவ்விடத்தினின்றும் மீண்டருளினார். அப்பமூர்த்தி, திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி முதலியஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, காவேரியாற்றின் இருகரைவழியாகவுஞ்சென்று, திருச்செம்பொன்பள்ளி, திருமயிலாடுதுறை, திருத்துருத்தி,

திருவேள்விக்குடி, திருவெதிர்கொள்பாடி, திருக்கோடிகா, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேச்சரம், திருப்பழையாறை என்கின்ற ஸ்தலங்களைப் பணிந்து பாடி,திருச்சத்திமுற்றத்தை அடைந்தார். அங்கே சுவாமிதரிசனஞ்செய்து "கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்-பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை" என்னுந் திருப்பதிகம்பாடவும்; பரமசிவன் "நல்லூருக்கு வா வா" என்று அருளிச்செய்தார். அப்பமூர்த்தி திருநல்லூரிலே சென்று, சுவாமியை வணங்கி எழுந்தார். எழும்பொழுது, சுவாமி "உன்னுடைய நினைப்பை முடிக்கின்றோம்" என்று சொல்லி,தம்முடைய திருவடிகளை அவர் சிரசின்மேலே சூட்டியருளினார். அப்பமூர்த்தி "நினைந்துருகுமடியாரை" என்றுதிருத்தாண்டகமெடுத்து, திருப்பாட்டிறுதிதோறும் "திருவடியென்றலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே" என்று பாடியருளினார். இன்னுந் திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு, சிலநாள் அங்கிருந்தார். இருக்குநாட்களிலே, திருக்கருகாவூர், திருவாவூர், திருப்பாலைத்துறை முதலாகிய ஸ்தலங்களுக்குப் போய், சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு,திருநல்லூருக்குத் திரும்பிவிடுவார்.

சிலநாட் சென்றபின், அப்பமூர்த்தி திருநல்லூரினின்றும் நீங்கி,திருப்பழனத்தை வணங்கிக்கொண்டு, திங்களூரின் வழியாகச் சென்றார். செல்லும்பொழுது, அவ்வூரிலே அப்பூதியடிகணாயனார் என்பவர் தம்முடைய புத்திரர்களுக்குத் திருநாவுக்கரசு என்னும் பெயரைத் தரித்தும், தம்முடைய அன்னசத்திரம் கிணறு குளம் தண்ணீர்ப்பந்தல் முதலியவற்றிலும் தனித்தனியே "இது திருநாவுக்கரசு நாயனாருடையது" என்று தீட்டியுமிருத்தலைக் கேள்வியுற்று, அவருடைய வீட்டுக்கு எழுந்தருளினார். அப்பூதிநாயனார் அப்பமூர்த்தியைத் தம்முடைய மனைவியார் புத்திரர்முதலாயினாரோடும் வணங்கி,அங்கே திருவமுது செய்யும்படி பிரார்த்தித்து, அதற்கு அந்நாயனார் உடன்பட்டது கண்டு, அமுது சமைப்பித்து, தமது புத்திரராகிய மூத்ததிருநாவுக்கரசை நோக்கி, "தோட்டத்திற் சென்று வாழைக்குருத்து அரிந்துகொண்டு வா" என்று சொல்லியனுப்பினார். அவர்விரைந்து வாழைக்குருத்து அரியப் புகுந்த பொழுது, ஒருபாம்பு அவரைத் தீண்டிற்று. அதை அவர் பேணாமல், அப்பமூர்த்தி திருவமுதுசெய்யும்படி குருத்தை அரிந்துகொண்டு, விரைவிலே திரும்பிவந்து, விஷந் தலைக்கொள்கையால் மயக்கமடைந்து, வாழைக்குருத்தைத் தம்முடைய தாயார்கையிலே கொடுத்துவிட்டு, கீழேவிழுந்து இறந்தார். அது கண்டு, அப்பூதிநாயனாரும், அவர் மனைவியாரும், "ஐயோ இனி நாயனார் திருவமுது செய்யாரே" என்று துக்கித்து,சவத்தை மறைத்து வைத்து, சிறிதுந்தடுமாற்றமின்றி அப்பமூர்த்தியிடத்திற்சென்று, "சுவாமீ, எழுந்து வந்து திருவமுதுசெய்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அப்பமூர்த்தி அங்கு நிகழ்ந்த உண்மையைத் திருவரு

யினால் அறிந்துகொண்டு, அவர்களுடைய அன்பை நினைந்து திருவருள் சுரந்து, சவத்தைச் சிவாலயத்தின்முன் கொணர்வித்து, "ஒன்றுகொலா மவர்சிந்தை" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். உடனே அப் புத்திரர் உணர்வு பெற்று எழுந்தார். அப்பூதிநாயனார் தம்முடைய புத்திரர் பிழைத்ததைக் கண்டும், அதைக்குறித்துச் சந்தோஷியாமல்,அப்பமூர்த்தி திருவமுதுசெய்யா திருந்தமையைக்குறித்துத் துக்கித்து வருந்தினார். அவ்வருத்தத்தை நீக்கும்பொருட்டு, அப்பமூர்த்தி அவருடைய வீட்டிற்சென்று, திருவமுதுசெய்து, அங்கே எழுந்தருளியிருந்தார். சிலநாட்சென்றபின், திங்களூரினின்றும் நீங்கி, திருப்பழனத்திற்குப் போய், சுவாமி தரிசனஞ்செய்து, "சொன்மாலைபயில்கின்ற" என்னுந் திருப்பதிகம்பாடினார். அத்திருப்பதிகத்திலே அப்பூதிநாயனாரை "அழலோம்பு மப்பூதி குஞ்சிப்பூவாய் நின்றசேவடியாய்" எனச் சிறப்பித்தருளினார். அங்கே எழுந்தருளியிருக்குநாளிலே, திருச்சோற்றுத்துறை முதலாகிய ஸ்தலங்களுக்கும் போய் வருவார்.

வெகுநாட்சென்றபின் அப்பமூர்த்தி திருநல்லூருக்குச் சென்று சிலநாள் அங்கே வசித்து, பின் திருவாரூருக்குப்போகக் கருதி, அதனை நீங்கி பழையாறை, திருவலஞ்சுழி, கும்பகோணம், நாலூர்,திருச்சேறை, திருக்குடவாயில், திருநறையூர், திருவாஞ்சியம், பெருவேளூர், திருவிளமர் முதலியதலங்களை வணங்கிக்கொண்டு,திருவாரூரை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகங்கள் பாடிக்கொண்டிருந்தார். ஒரு திருப்பதிகத்திலே, நமிநந்தியடிகள் நீரினால் விளக்கேற்றினமையைச் சிறப்பித்துப்பாடினார். அந்தத் திருப்பதியில் இருக்கின்ற அரனெறியென்னும் ஆலயத்தையும் வணங்கித் திருப்பதிகம் பாடினார். அங்கிருக்குநாட்களிலே, திருவலிவலம், கீழ்வேளூர், கன்றாப்பூர் என்னும் ஸ்தலங்களுக்கும் போய், திருப்பதிகம் பாடிக்கொண்டு, அவ்விடத்திற்குத் திரும்பிவிட்டார். திருவாதிரை நக்ஷத்திரத்திலே வீதிவிடங்கப் பெருமானுடைய திருவிழாவை அடியார்களுடன் சேவித்து, மகிழ்ந்து இருந்தார். அந்நாட்களிலே திருப்புகலூருக்குப் போம்படிகருதி, திருவாரூரினின்றும் நீங்கி பல தலங்களையும் பணிந்துசென்றார். அந்நாளிலே திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருப்புகலூருக்கு வந்து சுவாமி தரிசனஞ்செய்து கொண்டு முருகநாயனாருடைய திருமடத்தில் எழுந்தருளியிருந்தார். ஒருநாள் அப்பமூர்த்தி திருவாரூரினின்றும் திருப்புகலூரை நோக்கி எழுந்தருளி வருகின்றார் என்று கேள்வியுற்று,அடியார் கூட்டத்தோடுஞ்சென்று,அவரை எதிர்கொண்டார். அப்பமூர்த்தி திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை வணங்க; திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் அப்பமூர்த்தியைவணங்கி, "அப்பரே, நீர் வரும் நாளிலே திருவாரூரிலேநடந்த பெருமையைச்சொல்லும்" என்றார். அப்பமூர்த்தி திருவாதிரைச்சிறப்பை "முத்துவிதான மணிப்பொற்கவரி" என்னுந் திருப்பதிகத்தினாலே சொல்லி

வருளினர். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் அதைக் கேட்டு, "நான் திருவாரூருக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ்செய்து கொண்டு இவ்விடத்திற்கு வருவேன்" என்றுசொல்லித் திருவாரூருக்கு எழுந்தருள; அப்பமூர்த்தி திருப்புகலூருக்குவந்து சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடிக்கொண்டிருந்தார். திருச்செங்காட்டங்குடி, திருநள்ளாறு, சாத்தமங்கை, திருமருகல் என்னுந் தலங்களுக்கும் போய்த் தரிசனஞ்செய்து கொண்டு, திருப்புகலூருக்குத் திரும்பினர். சிலநாட் சென்றபின், திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் திருவாரூரினின்றும் நீங்கி, திருப்புகலூருக்கு எழுந்தருளிவந்தார். அப்பமூர்த்தி அவரை எதிர்கொண்டு அழைத்துவந்து, முருகநாயனருடைய திருமடத்தில் அவரோடும் எழுந்தருளியிருந்தார். இருக்குநாளிலே, சிறுத்தொண்டநாயனரும், திருநீலநக்கநாயனரும், அவர்களிடத்திற்கு வந்து, அவர்களோடு இருந்தார்கள்.

சிலநாளாயினபின், திருஞானசம்பந்தமூர்த்திநாயனரும் அப்பமூர்த்தியும் திருப்புகலூரினின்றும் நீங்கி, திருநீலநக்கநாயனரும் சிறுத்தொண்டநாயனரும் முருகநாயனரும் மற்றையடியார்களும் அநுமதி பெற்றுக்கொண்டு போய்விட, திருவம்பர் என்னுந்தலத்தை அடைந்துவணங்கி, திருக்கடவூரிற்சென்று வீரட்டானேசுரரைப் பணிந்து, குங்குலியக்கலயநாயனரால் அவருடைய திருமடத்திலே திருவமுதுசெய்விக்கப்பட்டு, திருக்கடவூர்மயானத்தையும் வணங்கி, திருவாக்கூர் முதலிய திருப்பதிகளைத் தரிசித்து, திருவீழிமிழலையை அடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு அங்கே எழுந்தருளியிருந்தார்கள். சிலநாட்சென்றபின், மழையின்மையாலும் காவேரிப்பெருக்கு இன்மையாலும் பஞ்சம் உண்டாக; அதனல் உயிர்களெல்லாம் வருத்தமுற்றன. அக்காலத்திலே பரமசிவன் திருஞானசம்பந்தமூர்த்திநாயனருக்கும் திருநாவுக்கரசுநாயனருக்குந் தோன்றி, "காலபேதத்தினலே நீங்கள் மனவாட்டம் அடையீர்களாயினும், உங்களை வழிபடுகின்ற அடியார்களுக்குக் கொடுக்கும்பொருட்டு, நாம் உங்களுக்குப் படிக்காசு தருகின்றோம்" என்று திருவாய்மலர்ந்து, திருக்கோயிலின் கிழக்குப்பீடத்திலும் மேற்குப்பீடத்திலும் தினந்தோறும் படிக்காசு வைத்தருளினர். அவ்வடியார்களிருவரும் தாங்கள் பெற்ற படிக்காசுகளை அனுப்பிப் பண்டங்கள் வாங்குவித்து, அமுதுசமைப்பித்து, "சிவனடியார்கள் எல்லாரும் வந்து போசனம் பண்ணக்கடவர்கள்" என்று இரண்டுகாலங்களினும் பறைசாற்றித் தெரிவித்து, அன்னமிட்டார்கள். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் தாம் பரமசிவனுக்குக் குமாரராகையாலும் பாடற்றொண்டுமாத்திரஞ் செய்கையாலும் தாம் பெற்ற படிக்காசை வட்டங்கொடுத்து மாற்றப்பெற்றார். அப்பமூர்த்தியோ, தாம் அக்கடவுளுக்கு அடியாராகையாலும், பாடற்றொண்டோடும் கைத்தொண்டுஞ் செய்கையாலும், தாம் பெற்ற படிக்காசை

வட்டங்கொட்ாது மாற்றப்பெற்றார். இருவருடைய திருமடங்களினும் நாடோறுஞ் சிவனடியார்கள் போசனம்பண்ணி மகிழ்ந்திருக்குங்காலத்திலே, எங்கும் மழை பெய்து, தானியமுதலியவைகள் மிகவிளைந்தமையால், பஞ்சம் நீங்கிற்று.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் திருநாவுக்கரசு நாயனாரும் திருவீழிமிழலையினின்றும் நீங்கி, திருவாஞ்சியமுதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, வேதாரணியத்தை அடைந்து, ஆலயத்திலே பிரவேசித்து வலஞ்செய்து, வேதங்கள் அருச்சித்துத் திருக்காப்புச்செய்த அந்நாண்முதல் இந்நாள்வரைக்கும் அடைக்கப்பட்டே யிருக்கின்ற திருக்கதவுக்கு முன் வந்து,வேதங்களாலே திருக்காப்புச்செய்யப்பட்ட அத்திருக்கதவை அடியார்கள் நீக்கப்பெறாமையினால் வேறோர்பக்கத்திலே ஓர்வாயிலிட்டு அதன்வழியே செல்கின்றார்கள் என்பதைக் கேட்டறிந்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அப்பமூர்த்தியைநோக்கி "அப்பரே, நாம் எப்படியும் சுவாமியை அபிமுகத்திருவாயில் வழியே சென்று தரிசிக்கவேண்டும். ஆதலால் இந்தத்திருக்கதவு திறக்கப்படும் பொருட்டு நீரே திருப்பதிகம்பாடும்" என்றார். அப்பமூர்த்தி "பண்ணினேர்மொழியாள்" என்னுந் திருப்பதிகத்தைக் கதவுதிறக்கப்படும்பொருட்டுப்பாட; அது திறக்கப்படாமல் தாழ்த்தது. அது கண்டு "இரக்கமொன்றிலீர்" என்று திருக்கடைக்காப்பிலே பாடி வணங்கினார். உடனே வேதாரணியேசுரருடைய திருவருளினாலே திருக்கதவு திறக்கப்பட்டது. அப்பொழுது நாயன்மாரிருவரும் விழுந்து நமஸ்கரித்தார்கள். அடியார்களெல்லாரும் ஆனந்தகோஷஞ் செய்தார்கள். நாயன்மாரிருவரும் பேரின்பவெள்ளத்தில் அமிழ்ந்தி எழுந்து, உள்ளே புகுந்து, சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகங்கள்பாடி, அரிதில் வெளியே வந்தார்கள். அப்போது திருநாவுக்கரசுநாயனார் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரை நோக்கி, "சுவாமியுடைய திருவருளினாலே இந்தத்திருக்கதவு திறக்கப்பட்டும் அடைக்கப்பட்டும் என்றும் வழங்கும்பொருட்டு, தேவரீர் இது அடைக்கப்படும்படி திருப்பதிகம் பாடியருளும்" என்றார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருப்பதிகத்திலே முதற்பாட்டுப் பாடிய மாத்திரத்திலே திருக்கதவு அடைக்கப்பட்டது. அது கண்டு, நாயன்மாரிருவரும் திருவருளை வியந்து களிப்புற்று வணங்கினார்கள். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தாம் எடுத்த திருப்பதிகத்தை முடித்தருளினார். அன்று தொடுத்து அந்தத்திருக்கதவு திறத்தலும் அடைத்தலுமாகிய வழக்கம் என்றும் நிகழ்ந்தது. அங்கே நிகழ்ந்த அற்புதத்தைக் கண்ட அடியார்களெல்லாரும் ஆச்சரியங்கொண்டு, உரோமாஞ்சங் கொள்ள, கண்ணீர் சொரிய நாயன்மா ரிருவருடைய திருவடிகளிலும் விழுந்து நமஸ்கரித்தார்கள்.

நாயன்மாரிருவரும் திருமடத்தை அடைந்தபின், திருநாவுக்கரசு நாயனார், தாம் திருப்பதிகம் முழுதும் பாடியபின்னே திருக்கதவு திறந்த அருமையையும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் முதற்பாட்டைப் பாடினவுடனே கதவு அடைத்த எளிமையையும் நினைந்து, "சுவாமியுடைய திருவுள்ளம் இதுவென்று அறியமாட்டாமல் அயர்கின்றேன்" என்று கவன்று, மிக அஞ்சி, திருமடத்தில் ஒருபக்கத்திலே போய், வேதாரணியேசுரருடைய திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டு அருநித்திரை செய்தார். அப்பொழுது பரமசிவன் அவரிடத்திற் சென்று, "நாம் வாய்மூரில் இருப்போம். அவ்விடத்திற்குத் தொடர்ந்து வா" என்று அருளிச்செய்தார். அப்பமூர்த்தி "எங்கே யென்னை யிருந்திடந் தேடிக் கொண்—டங்கே வந்தடை யாள மருளினா—றெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச்செல்வனா—ரங்கே வாவென்று போனா தென்கொலோ" என்னுந்திருப்பதிகம் பாடிக்கொண்டு எழுந்து, வேதாரணியத்தினின்றும் புறப்பட்டு விரைந்து போக; சுவாமி அவருக்கு முன்னாகத் தாம் அவருக்கு முன் காட்டியருளிய திருக்கோலத்தோடும் நடந்தருளினார். நெடும்பொழுது பரமசிவனுக்குப் பின்னாகச் செல்கின்ற அப்பமூர்த்தி அவரைச் சமீபிக்கப்பெற்றிலர். சுவாமி சமீபத்திலே காட்சிகொடுப்பவர் போல ஒரு திருக்கோயிலை எதிரே காண்பித்து, அதனுள்ளே புகுந்தருள அப்பமூர்த்தியும் அவ்விடத்திலே விரைந்து தொடர்ந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் அப்பமூர்த்தி திருவாய்மூருக்குப் போகின்றார் என்று கேள்வியுற்று, வந்துசேர்ந்தார். அப்பமூர்த்தி சுவாமி மறைந்தமையைக்குறித்துத் துக்கித்து, "அடியார்களிற்சிறந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரோ திறக்கவேண்டும் என்பதை நினையாமல் திறந்துகுற்றஞ்செய்த சிறியேனுக்கு ஒளிக்கலாம். ஒரு திருப்பதிகத்தின் முதற்பாட்டாலேயே திருக்கதவை அடைப்பித்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் இங்கே வந்திருக்கின்றார். அவருக்கு எப்படி ஒளிக்கலாம்" என்றார். உடனே பரமசிவன் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்குக் காட்சிகொடுத்தருளினார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தரிசித்து ஸ்தோத்திரம்பண்ணி, அப்பமூர்த்தியுங் காணும்படி காட்ட; அப்பமூர்த்தியும் தரிசித்து "பாடவடியார் பரவக்கண்டேன்" என்னுந்திருப்பதிகம் பாடினார். சுவாமி அத்திருப்பதிகத்தை ஏற்றுக்கொண்டு எழுந்தருள; நாயன்மாரிருவரும் திருவாய்மூரை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, சிலநாள் அங்கிருந்து, பின் வேதாரணியத்துக்குத் திரும்பி வந்து, அங்கே சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்தார்கள்.

இருக்குநாளிலே, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், மதுரையில் இருக்கின்ற பாண்டியனுடைய மனைவியாராகிய மங்கையர்க்கரசியாரும் மந்திரியாராகிய குலச்சிறைநாயனாரும் அனுப்பிய தூதர்களாலே பாண்

டிநாட்டிலே, ஆருகதசமயம் பரம்பச் சைவம் குன்றிய சமாசாரத்தைக் கேள்வியுற்று, சமணர்களை வென்று சைவஸ்தாபனஞ் செய்யும்பொருட்டு அவ்விடத்திற்குச் செல்ல எழுந்தார். அப்பொழுது திருநாவுக்கரசுநாயனார் சமணர்களுடைய கொடுமையை நினைந்து, மதுரைக்குப் போகாதிருக்கும்படி திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரைத் தடுக்க; திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அதற்கு இசையாமல் பாண்டிநாட்டுக்கு எழுந்தருளினார்.

திருநாவுக்கரசு நாயனார் வேதாரணியத்திலே சிலநாள் இருந்து, பின் அதனை நீங்கி, திருநாகைக்காரோணம் முதலிய ஸ்தலங்களைவணங்கிக்கொண்டு, திருவீழிமிழலையை அடைந்து, சிலநாள் அங்கிருந்து, பின் திருவாவடுதுறையிற் சென்று, சுவாமிதரிசனம் பண்ணி, திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்கு ஒரு திருப்பதிகத்தின் பொருட்டு ஆயிரஞ்செம்பொன் கொடுத்தருளிய திறத்தை "மாயிருஞாலமெல்லாம்" என்னுந்திருப்பதிகத்தினாலே புகழ்ந்து பாடி, பழையாறையிற்சென்றார். அங்கே வடதளி என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற சிவலிங்கப்பெருமானைச் சமணர்கள் மறைத்திருத்தலைக் கேள்வியுற்று, சமீபமாகிய ஓரிடத்திற் சென்று, திருவமுதுசெய்யாமல் சுவாமியைத் தியானித்து, "சுவாமீ, அடியேன் தேவரீருடைய திருவுருவைக்கண்டு வணங்கியன்றிப்போகேன். அந்தத்திருவுருவை மறைத்த சமணர்களுடைய செய்கையைக் கெடுத்தருளும் என்று சொல்லிக்கொண்டிருந்தார். சிவபெருமான் அரசனுக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நாம் சமணர்களால் மறைக்கப்பட்டிருக்கின்றோம். நாவுக்கரசன் நம்மை வெளிப்படக்கண்டு கும்பிடவேண்டும் என்று சிந்தித்துக்கொண்டிருக்கின்றான். நீ அந்தச்சமணர்களை அழித்து நமக்கு ஆலயஞ்செய்யவேண்டும்" என்று அருளிச்செய்து, தாம் இருக்கின்ற இடத்தின் அடையாளங்களைத் தெரிவித்து, மறைந்தருளினார். அரசன் விழித்தெழுந்து ஆச்சரியமடைந்து, மந்திரிமாரோடும் விரைவிலே திருக்கோயிலிற்சென்று, சுவாமி அருளிச்செய்த அடையாளத்தின் வழி கண்டு, சமணர்கள் செய்த வஞ்சனையை உணர்ந்து, அப்பமூர்த்தியை வணங்கி, அந்தச்சமணர்களை யானைகளாலே மிதிப்பித்துக் கொன்று, பரமசிவனுக்கு விமானஞ்செய்து, நிபந்தங்கள் அமைத்தான். அப்பமூர்த்தி உள்ளே புகுந்து, சுவாமியைத் தரிசித்து, "தலையெலாம்பறிக் குஞ்சமண் கையரு—ணிலையினுன்மறைத் தான்மறைக் கொண்ணுமே—யலையினார் பொழி லாறை வடதளி—நிலையி னானடி யேநினைந் துய்மினே" என்னுந் திருப்பதிகம் பாடி, சிலநாள் அங்கிருந்தார்.

பின் அவ்விடத்தினின்றும் நீங்கி, திருவானைக்கா, எறும்பியூர், திருச்சிராப்பள்ளி, கற்குடி, திருப்பராய்த்துறை என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு, திருப்பைஞ்ஞீலியை நோக்கிச் சென்றார். செல்லும் வழி

யிலே, பசியினாலும் தாகத்தினாலும் மிகவருந்தி இளைத்தார். இளைத்தும், சித்தமலையாமல் நடக்க; பரமசிவன் அவருடைய வருத்தத்தை நீக்கும் பொருட்டு வழியிலே ஒரு சோலையையும் குளத்தையும் உண்டாக்கி ஒரு பிராமணவடிவங்கொண்டு பொதிசோறு வைத்துக்கொண்டிருந்தார். திருநாவுக்கரசுநாயனார் தமக்குச் சமீபத்தில் வந்தவுடனே, ஐயர் அவரை நோக்கி, "நீர் வழிநடந்து மிக இளைத்துப்போனீர். என்னிடத்திலே பொதிசோறு இருக்கின்றது. புசித்து இந்தக்குளத்திலே சலபானம்பண்ணி இளைப்பு நீக்கிக்கொண்டு போம்" என்று சொல்லி, பொதிசோற்றைக் கொடுத்தார். அப்பமூர்த்தி அதை வாங்கிப் புசித்துச் சலபானம் பண்ணிக்கொண்டு, இளைப்பு நீங்கி இருந்தார். சுவாமி அவரை நோக்கி "நீர் எங்கே போகின்றீர்" என்று கேட்க; வாகீசர் "நான் திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்" என்று சொல்லிப்போனார். சிவபிரான் "நானும் அங்கேதான்போகின்றேன் என்று சொல்லி, அவருடனே கூடிச்சென்று திருப்பைஞ்ஞீலியைச் சமீபித்தவுடனே மறைந்தருளினார். அப்பமூர்த்தி அது கண்டு திருவருளை வியந்து, கண்ணீர் பொழிந்தழுது, விழுந்து நமஸ்கரித்து எழுந்து, ஆலயத்திற்சென்று சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடி, கைத்தொண்டு செய்துகொண்டிருந்தார். சிலநாளாயினபின் அவ்விடத்தினின்றும் நீங்கி, திருவண்ணாமலைக்குச் சென்று சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, தொண்டைநாட்டை அடைந்து, திருவோத்தூரை வணங்கிக்கொண்டு, காஞ்சீபுரத்திற்சென்று, திருவேகம்பம், திருக்கச்சிமயானம், திருமேற்றளி, திருமாற்பேறு என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு சிலநாள் அங்கிருந்தார். பின் அங்குநின்றும் புறப்பட்டு, திருக்கழுக்குன்று, திருவான்மியூர், திருமயிலாப்பூர், திருவொற்றியூர், திருப்பாசூர், திருவாலங்காடு, திருக்காரிக்கரை என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு, தென்கைலாசமாகிய திருக்காளத்திமலையை அடைந்தார். அங்கே பொன்முகலியிலே ஸ்நானஞ்செய்துகொண்டு, மலையின்மேல் ஏறி, சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடி, அவருடைய வலப்பக்கத்திலே நிற்கின்ற கண்ணப்பநாயனாருடைய திருவடிகளை வணங்கி, சிலநாள் அந்த ஸ்தலத்திலே வசித்தார்.

பின் உத்தரகைலாசத்திலே பரமசிவன் வீற்றிருக்கின்ற திருக்கோலத்தைத் தரிசிக்க விரும்பி, திருக்காளத்திமலையினின்று நீங்கி, உத்தரதிசையிலிருக்கின்ற திருப்பருப்பதத்தை அடைந்து வணங்கி, திருப்பதிகம் பாடிச் சென்று, காசியை வணங்கிக்கொண்டு, அதற்கு அப்பால் இருக்கின்ற கற்சுரத்திலே சாகமூலபலங்கள் புசித்தலையும் ஒழிந்து, திருக்கைலாசதரிசனஞ் செய்யல்வேண்டுமென்னும் பேராசையால் இராப்பகல் விடாது நடந்தார். அதனால் அவருடைய பாதங்கள் பரடுவரைக் குந்தேய்ந்தன. தேய்ந்தும், ஆசைமேலீட்டினால் தம்முடைய இரண்டு கைகளையும் ஆதரவாகக்கொண்டு தாவிச்சென்றார். அந்தக்கைகளும்

மணிக்கட்டு அசைந்து கரைந்து சிதைந்தன. பின்னும் ஆசை சிறிதுங் குன்றுதலின்றி மேலிடுதலால், கொடிய நெருப்பையொத்த வெவ்விய பருக்கைக்கற்கள் பொருந்திய மார்க்கத்தில் மார்பினால் நகர்ந்துபோயினார். மார்பும் தசை நைந்து சிந்த, எலும்புகளும் முறியலுற்றன. பின் புரண்டு புரண்டு போயினார். அதனால் தேகமுழுதும் அரைய, நாயனார் திருக்கைலாசகிரியினிடத்தே பதிந்த அன்பின் உறுதியினால் மெல்ல நகருதற்கு முயன்றும், கூடாமையால் வழியிலே கிடந்தார். அப்பொழுது பரமசிவன், அப்பமூர்த்தியை மீளவும் தமிழ்நாட்டிற் செலுத்தி அந்நாட்டிலுள்ளோர் உய்யும்பொருட்டுத் தமிழ்வேதமாகிய தேவாரம் பாடுவித்தற்கும், அவ்வப்பமூர்த்தியுடைய கருத்தையும் மாறின்றி முடித்தற்கும், திருவுளங்கொண்டு, அவ்விடத்தில் ஒரு தடாகத்தை உண்டாக்கி, ஒரு முனிவர் வடிவங்கொண்டு, அந்நாயனாருக்கு முன் வந்து நின்று, "நீர் அங்கங்கள் எல்லாம் அழிந்துபோக வருத்தத்தோடும் இந்தக்கொடிய காட்டில் எதன்பொருட்டு வந்தீர்" என்று கேட்டார். அப்பமூர்த்தி மரவுரியாடையையும் யஞ்ஞோபவீதத்தையும் சடைமுடியையும் விபூதி தாரணத்தையுமுடைய அந்தமுனிவரைக் கண்டபொழுதே பேசுதற்கு அற்பசத்தியுண்டாக, அவரை நோக்கி, "முனிவரே, நமதுகடவுளாகிய பரமசிவன் உத்தரகைலாசத்திலே உமாதேவிசமேதராய் வீற்றிருக்கின்ற திருக்கோலத்தைத் தரிசித்து வணங்கும்பொருட்டு விரும்பிவந்தேன்" என்றார். அதற்கு முனிவர் "தேவர்களாலும் அடையப்படுதற்கு அரியதாகிய திருக்கைலாசகிரி மனிதர்களால் அடையப்படுதற்கு எளிதா! நீர் இந்தக் கொடுஞ்சுரத்திலே வந்து என்செயதீர்! இனித் திரும்பிவிடுதலே உத்தமம் என்றார். உடனே அப்பமூர்த்தி "திருக்கைலாசகிரியில் இருக்கின்ற சிவபெருமானுடைய திருக்கோலத்தைத் தரிசித்தன்றி அநித்தியமாகிய இந்தத்தேகத்தைக் கொண்டு திரும்பேன்" என்று மறுத்தார். சுவாமி அவருடைய துணிவைக் கண்டு மறைந்தருளி ஆகாயத்தில் அசரீரியாகி நின்று "நாவுக்கரசனே, எழுந்திரு" என்றார். உடனே அப்பமூர்த்தி அழிந்த உறுப்புக்களெல்லாம் முன்போல நிரம்பப்பெற்றுச் சிறந்த திருமேனியோடும் எழுந்து, சுவாமி தேவரீர் "திருக்கைலாசகிரியில் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோலத்தை அடியேன் தரிசித்து வணங்கும்பொருட்டு அருள்செய்யும்" என்று பிரார்த்தித்து, நமஸ்காரம்பண்ணினார். அப்பொழுது பரமசிவன் "நீ இந்தத்தடாகத்திலே முழுகித் திருவையாற்றை அடைந்து, நம்மைக் கைலாசகிரியில் வீற்றிருந்தபடி அந்த ஸ்தலத்திலே தரிசித்துவணங்கு" என்று பணித்தருளினார்.

அப்பமூர்த்தி அப்பணியைச் சிரமேற்கொண்டு, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதி, தடாகத்திலே முழுகி, திருவையாற்றிலிருக்கின்ற ஓர்வாவியின்மேலே தோன்றிக் கரையிலேறி, வழியிலே அந்தத் திருப்பதியிலுள்ள சராசரங்கள் தங்கள் தங்கள் துணையோடும் பொலிதலைக் கண்டு,

அவைகளைச் சிவமும் சத்தியுமாகப் பார்த்து வணங்கிக்கொண்டு, ஆலயத்துக்கு முன்னே சென்றார். அவ்வாலயம் திருக்கைலாசகிரியாக, அதனிடத்தே, வேதங்களும் சிவாகமங்களும் இருபக்கத்திலும் வாழ்த்தவும், தும்புரு நாரதரென்னும் இருவரும் யாழ் வாசிக்கவும், பிரம விஷ்ணுக்களிருவரும் வஸ்திரத்தை ஒதுக்கி வாயைக் கையினாலே பொத்திக்கொண்டு ஒதுங்கி நின்று தத்தங்குறைகளைச் சொல்லவும், பூதகணங்கள் கடை தோறும் காக்கவும், தேவர் சித்தர் அசுரர் சாரணர் காந்தருவர் கின்னரர் இயக்கர் விஞ்சையர் முதலாகிய கணத்தவர்கள் துதிக்கவும், திருநந்திதேவர் கையிலே பிரம்பைத் தரித்துக்கொண்டு பணிசெய்யவும், காருண்ணிய ஸ்வரூபியாகிய சிவபெருமான் ஒருதிவ்வியாசனத்தின்மேலே அநந்தகோடி சூரியப்பிரகாசத்தோடும் பார்வதிசமேதராய் வீற்றிருந்தருளினார். அப்படியிருத்தலை அப்பமூர்த்தி கண்டமாத்திரத்திலே விழுந்து நமஸ்கரித்து, உரை தடுமாற, உரோமஞ்சிலிர்ப்ப, ஆனந்தவருவி சொரிய, கரையிறந்த அருட்பெருங்கடலிலே அன்புநதி ஈர்த்துச் செல்ல மிதந்து போய்,தெவிட்டுதலில்லாத அளவிறந்த சிவானந்தாமிர்தத்தைப் பருகி, சந்நிதானத்திலே ஆனந்தக்கூத்தாடித் திருத்தாண்டகங்கள் பாடினார். திருக்கைலாசபதியாகிய கடவுள் தம்முடைய திருக்கோலத்தை இப்படி அப்பமூர்த்திக்குத் தரிசிப்பித்து, பின் மறைந்தருள; அவ்வப்பமூர்த்தி மனம் வருந்தி; பின் ஒருவாறு தெளிந்து, திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு அந்தத்திருப்பதியில் இருந்தார்.

சிலநாட்சென்றபின், திருவையாற்றினின்றும் நீங்கி,நெய்த்தானம், மழபாடி முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, திருப்பூந்துருத்தியை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகங்கள் பாடி, அங்கே ஒரு திருமடங்கட்டுவித்து, பல்வகைத்தாண்டகம், தனித்திருத்தாண்டகம், அடைவுதிருத்தாண்டகம், திருவங்கமாலைமுதலிய திருப்பதிகங்களைப் பாடிக்கொண்டிருந்தார். இருக்கும்பொழுது, பாண்டிநாட்டிற்சென்று சமணர்களை வாதில் வென்று சைவஸ்தாபனம் பண்ணிப் பாண்டியராஜனுடைய கூனை நிமிர்த்தருளிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அந்நாட்டினின்று நீங்கி,சோழமண்டலத்தை அடைந்து,அப்பமூர்த்தி திருப்பூந்துருத்தியிலிருத்தலைக் கேள்வியுற்று, அதற்குச் சமீபத்திலே வந்தருளினார். அதை அப்பமூர்த்தி அறிந்து மனமகிழ்ந்து, அவரை எதிர்கொண்டுவணங்கும்படி சென்று, அவர் வரும் எல்லையை அடைந்து, திருச்சின்னத்தின் ஓசையைக் கேட்டு அவரைத் தரிசிக்கும்படி சூழ்ந்த அடியார்களுடைய நெருக்கத்தினாலே தம்மை ஒருவரும் இன்னாரென்று அறியாதபடி உட்புகுந்து, அவர் ஏறிவரும் முத்துச்சிவிகையைத் தாங்குகின்றவர்களோடு தாமும் ஒருவராய்த் தாங்கிக்கொண்டு வந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருப்பூந்துருத்திக்கு மிகச் சமீபித்தவுடனே “அப்பர் எங்குற்றார்” என்று வினவ; அதைக் கேட்ட அப்பமூர்த்தி “அடி

யேன் தேவரீரைத் தாங்கிவரும் பெருவாழ்வைப் பெற்று இங்குற்றேன்" என்றார். உடனே திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அதிசீக்கிரஞ் சிவிகையினின்றும் இறங்கி, மனப்பதைப்போடு அப்பமூர்த்தியை வணங்க; இவரும் தம்மை அவர் வணங்குதற்குமுன் தாம் அவரை வணங்க; அது கண்ட அடியார்களெல்லாரும் வணங்கி, ஆனந்தகோஷஞ் செய்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் வாகீசரோடும் திருப்பூந்துருத்தியிற் சென்று, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தாம் பாண்டிநாட்டிற்சென்று சமணர்களை வாதில் வென்றதையும், பாண்டியனுடைய கூனை நிமிர்த்ததையும், அந்நாடெங்கும் விபூதியை வளர்த்ததையும், பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியார் மந்திரியாராகிய குலச்சிறைநாயனார் என்கின்ற இருவருடைய பெருமையையும், வாகீசருக்குச் சொல்லியருளினார். வாகீசர் தாந்தொண்டைநாட்டுக்குச் சென்று அங்குள்ள சிவஸ்தலங்களை வணங்கியதைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்குச் சொல்லியருளினார்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தொண்டைநாட்டுக்கு யாத்திரைசெய்ய விரும்பித் திருப்பூந்துருத்தியினின்றும் புறப்பட; வாகீசர் பாண்டிநாட்டுக்கு யாத்திரைசெய்ய விரும்பிப் புறப்பட்டு, அப்பாண்டிநாட்டை அடைந்து, திருப்புத்தூரை வணங்கிக்கொண்டு, மதுரையிற் சென்று சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடி, பாண்டிமாதேவியாரும் கூனிமிர்ந்த பாண்டியரும் குலச்சிறைநாயனாரும் வணங்கித் துதிக்கச் சிலநாள் அங்கிருந்தார். பின் மதுரையை நீங்கி, திருப்பூவணம், இராமேச்சரம், திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலாகிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, சோழமண்டலத்துக்குத் திரும்பி வந்து, திருப்புகலூரை அடைந்தார்.

திருப்புகலூரிலே தினந்தோறும் சுவாமிதரிசனம் பண்ணி திருமுன்றிலிலே கைத்தொண்டு செய்துகொண்டிருந்தார். இருக்குநாட்களிலே, நின்றதிருத்தாண்டகம், தனித்திருத்தாண்டகம், க்ஷேத்திரக்கோவை, குறைந்ததிருநேரிசை, தனித்திருநேரிசை, நினைந்ததிருநேரிசை, ஆருயிர்த்திருவிருத்தம், தசபுராணத்தடைவு, பாவநாசப்பதிகம், சரக்கறைத் திருவிருத்தம் முதலிய திருப்பதிகங்களைப் பாடினார். பரமசிவன் அந்நாயனாருடைய வைராக்கியத்தை யாவருக்கும் காட்டுதற்குத் திருவுளங்கொண்டு, அவர் திருமுன்றிலிலே கைத்தொண்டுசெய்யும் பொழுது உழைவாரம் நுழைந்தவிடங்களெங்கும் பொன்னும் நவரத்தினங்களும் பிரகாசித்துக் கிடக்கும்படி அருள்செய்தார். நாயனார் அவைகளைக் கண்டு, அவைகளை அங்கே கிடக்கின்ற பருக்கைக்கற்களோடு சமமாக எண்ணி உழைவாரத்தில் ஏந்திக் குளத்திலே விழ எறிந்துவிட்டார்.

பின்பு கடவுளுடைய திருவருளினால் அரம்பையர்கள் சுவர்க்கத்தினின்றும் இறங்கி வந்து,நாயனார் திருமுன்னின்று, இசைபாடியும்,கூத்தாடியும், அவர்மேற் பூக்களைப் பொழிந்தும், அவரை அணைபவர்கள் போலச் சமீபித்தும், அளகம் அவிழ இடைநுடங்க ஓடியும்,திரும்பியும், வஸ்திரம் அசையநின்றும்,இப்படி அவரை மோகிப்பித்தற்கு யத்தினஞ் செய்தார்கள். செய்தும், சிவபிரானுடைய திருவருளையே முன்னிட்டு ஒழுகுகின்ற வாகீசர் தம்முடைய சித்தநிலை சிறிதும் வேறுபடாதபடி, தாஞ்செய்யுந் திருப்பணியிலே உறுதிகொண்டு, இருவினை முதலியவைகளை முன்னிலைப்படுத்தி "நான் திருவாரூரில் வீற்றிருக்கின்ற சுவாமிக்கு ஆளானேன். உங்களாலே நான் ஆட்டுண்ணேன். நீங்கள் என்னை அலையன்மின்" என்னுங் கருத்தால், "பொய்ம்மாயப் பெருங்கடலில்" என்னுந் திருத்தாண்டகத்தைப் பாடினார். அரம்பையர்கள் தங்கள் கருத்து முற்றாமையால், அவரை நமஸ்கரித்துக்கொண்டு போய்விட்டார்கள். இந்த நிலைமையைச் சமஸ்தலோகத்தார்களும் அறிந்து துதிக்கலுற்றார்கள்.

வாகீசர் புகலூரர் என்னை இனிச் சேவடிக்கீழிருத்திடும் என்று எழுகின்ற ஞானத்தினால் திருவிருத்தங்கள் பலவற்றைப் பாடி, ஒரு சித்திரை மாசத்திலே சதயநக்ஷத்திரத்திலே"எண்ணுகேனென்சொல்லியெண்ணுகேனே" என்று திருத்தாண்டகமெடுத்துத் திருப்பாட்டிறுதிதோறும் "உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே" என்று பாடி, சிவபெருமானுடைய திருவடியை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

திருநாவுக்கரசுநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## குலச்சிறைநாயனார் புராணம்.

பன்னுதொல்புகழ்ப் பாண்டிநன்னாட்டிடைச்
செந்நெலார்வயற் றீங்கரும்பின்னயற்
றுன்னுபூகப் புறம்பணைசூழ்ந்தது
மன்னுவண்மையி னார்மணமேற்குடி. (க)

அப்பதிக்குமுதல்வர்வன் றொண்டர்தா
மொப்பரும்பெரு நம்பியென்றோதிய
செப்பருஞ்சீர்க் குலச்சிறையார்திண்மை
வைப்பினாற்றிருத் தொண்டின்வழாதவர். (உ

காரணங்கண்ணு தற்கன்பரென்னவே
வாரமாகிமகிழ்ந்தவர் தாண்மிசை
யாருமன்பொடு வீழ்ந்தஞ்சலிமுகிழ்த்
தீரநன்மொழி யெய்தவிசைத்துளார். (௩)

குறியினான்கு குலத்தினராயினு
நெறியினக்குல நீங்கினராயினும்
அறிவுசங்கரற் கன்பரெனப்பெறிற்
செறிவுறப்பணிந் தேத்தியசெய்கையார். (௪)

உலகர்கொள்ளு நலத்தினராயினு
மலகிறீமைய ராயினுமம்புலி
யிலகுசெஞ்சடை யாரடியாரெனிற்
றலமுறப்பணிந் தேத்துந்தகைமையார். (௫)

பண்பின்மிக்கார் பலராயணையினும்
உண்பவேண்டி யொருவரணையினும்
எண்பெருக்கி யவன்பாலெதிர்கொண்டு
நண்புகூர்ந்தமு தூட்டுநலத்தினார். (௬)

பூதிகோவணஞ் சாதனத்தாற்பொலிந்
தாதிதேவர் தமஞ்செழுத்தாமவை
யோதுநாவணக் கத்தாலுரைப்பவர்
பாதநாளும் பரவியபண்பினார். (௭)

இன்னநல்லொழுக் கத்தினாரீறில்சீர்த்
தென்னவன்னெடு மாறற்குச்சீர்திகழ்
மன்னுமந்திரி கட்குமேலாகியார்
ஒன்னலர்ச்செற் றுறுதிக்கணின்றுளார். (௮)

ஆயசெய்கை யராயவராறணி
நாயனார்திருப் பாதநவின்றுளார்
பாயசீர்புனை பாண்டிமாதேவியார்
மேயதொண்டுக்கு மெய்த்தொண்டராயினார். (௯)

புன்னயத்தரு கந்தர்பொய்நீக்கவுந்
தென்னர்நாடு திருநீறுபோற்றவு
மன்னுகாழியர் வள்ளலார்பொன்னடி
சென்னிசேர்த்தி மகிழ்ந்தசிறப்பினார். (௧௦)

வாதிற்றோற்ற வமணாவன்கழுத்
தீதுநீங்கிட வேற்றுவித்தார்திறம்
யாதுபோற்றினேன் மேலினியேத்துகேன்
வேதநீதி மிழலைக்குறும்பர்தாள். (௧௧)

ஆ. திருவிருத்தம் - ௧௭௨௦.

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலே, மணமேற்குடியிலே, குலச்சிறைநாயனார் என்பவரொருவர் இருந்தார். அவர் விபூதி உருத்திராக்ஷந்தரிக்கின்றவர்களும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதுகின்றவர்களுமாகிய சிவனடியார்களை, உயர்குலம் இழிகுலங்களும் நற்குணம் தீக்குணங்களும் பாராமல், வணங்கித் துதிக்கின்றவர். அவ்வடியார்கள் பலர் கூடி வரினும், ஒருவர் வரினும், அன்பினோடு எதிர்கொண்டு அழைத்துத் திருவமுதுசெய்விக்கின்றவர். பரமசிவனுடைய திருவடிகளை அநுதினமுஞ் சிந்தித்துத் துதித்து வணங்குகின்றவர் நெடுமாறர் என்னும் பெயரையுடைய பாண்டியருக்கு முதன்மந்திரியாராயினவர். அந்தப்பாண்டியருடைய மாதேவியாராகிய மங்கையர்க்கரசியார் செய்கின்ற திருத்தொண்டுக்குத் துணைசெய்கின்றவர். கீழ்மக்களாகிய சமணர்களுடைய பொய்ச்சமயத்தைக் கெடுத்து, பாண்டிநாடெங்கும் திருநீற்றை வளர்க்கும்பொருட்டு, பரசமய கோளரியாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய திருவடிகளை வணங்கிய சிறப்பினையுடையவர். வாதிலே அந்நாயனாருக்குத்தோற்ற சமணர்களைக் கழுவிலே ஏற்றுவித்தவர். சுந்தரமூர்த்திநாயனாராலே திருத்தொண்டத்தொகையிலே "பெருநம்பி" என்று வியந்துரைக்கப்பட்டவர்.

திருச்சிற்றம்பலம்.

குலச்சிறைநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பெருமிழலைக் குறும்பநாயனார் புராணம்.

சூதநெருங்கு குலைத்தெங்கு பலவுபூகஞ் சூழ்வுடைத்தாய்
வீதிதோறு நீற்றினொளி விரியமேவி விளங்குபதி
நீதிவழுவா நெறியினராய் நிலவுங்குடியா னெடுநிலத்து
மீதுவிளங்குந் தொன்மையது மிழலைநாட்டுப் பெருமிழலை. (க)

அன்னதொன்மைத் திருப்பதிக்க ணதிபர்மிழலைக் குறும்பனார்
சென்னிமதியம் வைத்தவர்த மடியார்க்கான செய்பணிகள்
இன்னவண்ண மென்றவர்தா முறையாமுன்ன மெதிரேற்று
முன்னமுவந்து செய்வாராய் முதிருமறிவின் பயன்கொள்வார். (உ)

தொண்டர்பலரும் வந்தீண்டி யுண்ணத்தொலையா வமுதூட்டிக்
கொண்டுசெல்ல விருநிதிய முகந்துகொடுத்துக் குறைந்தடைவார்
வண்டுமருவுங் குழலுமையாள் கேள்வன்செய்ய தாளென்னும்
புண்டரீக மகமலரில் வைத்துப்போற்றும் பொற்பினார். (௩)

இத்தன்மையராய் நிகழுநா ளெல்லையில்லாத் திருத்தொண்டின்
மெய்த்தன்மையினை யுலகறிய விதியால்வணங்கி மெய்யடியார்
சித்தநிலவுந் திருத்தொண்டத் தொகைபாடியநம் பியைப்பணிந்து
நித்தனருள்பெற் றவர்பாத நினைக்குநியமத் தலைநின்றார். (௪)

மையார்தடங்கட் பரவையார் மணவாளன்றன் மலர்க்கழல்கள்
கையாற்றொழுது வாய்வாழ்த்தி மனத்தானினைக்குங் கடப்பாட்டிற்
செய்யாள்கோனு நான்முகனு மறியாச்செம்பொற் றாளிணைக்கீழ்
உய்வான்சேர வுற்றநெறி யிதுவேயென்றன் பினிலுய்த்தார். (௫)

நாளுநம்பி யாரூரர் நாமநவின்ற நலத்தாலே
யாளும்படியா லணிமாதி சித்தியான வணைந்ததற்பின்
மூளுங்காத லுடன்பெருக முதல்வர்நாமத் தஞ்செழுத்துங்
கேளும்பொருளு முணர்வுமாம் பரிசுவாய்ப்பக் கெழுமினார். (௬)

இன்னவாறே யிவரொழுக வேறுகொடிமே லுயர்த்தவர்தம்
பொன்னின்கழல்கண் மண்ணின்மேற் பொருந்தவந்து வழக்குரைத்து
மன்னுமோலை யவைமுன்பு காட்டியாண்ட வன்றொண்டர்
சென்னிமதிதோய் மாடமலி கொடுங்கோளூரைச் சேர்வுற்றார். (௭)

அஞ்சைக்களத்து நஞ்சுண்ட வமுதைப்பரவி யணைவுறுவார்
செஞ்சொற்றமிழ்மாலை கண்மொழியத் தேவர்பெருமா னருளாலே
மஞ்சிற்றிகழும் வடகயிலைப் பொருப்பிலெய்த வரும்வாழ்வு
நெஞ்சிற்றெளிய விங்குணர்ந்தார் மிழலைக் குறும்பனார். (௮)

மண்ணிற்றிகழுந் திருநாவ லூரில்வந்த வன்றொண்டர்
நண்ணற்கரிய திருக்கயிலை நாளையெய்த நான்பிரிந்து
கண்ணிற்கரிய மணிகழிய வாழ்வார்போல வாழேனென்
றெண்ணிச்சிவன்றா ளின்றேசென் றடைவன்யோகத் தாலென்பார். (௯)

நாலுகரணங் களுமொன்றாய் நல்லவறிவு மேற்கொண்டு
காலும்பிரம நாடிவழிக் கருத்துச்செலுத்தக் கபாலநடு
ஏலவேமுன் பயின்றநெறி யெடுத்தமறைமூ லந்திறப்ப
மூலமுதல்வர் திருப்பாத மடைவார்கயிலை முன்னடைந்தார். (௰)

பயிலைச்செறிந்த யோகத்தார் பரவைகேள்வன் பாதமுறக்
கயிலைப்பொருப்ப ரடியடைந்த மிழலைக்குறும்பர் கழல்வணங்கி
மயிலைப்புறங்கொண் மென்சாயன் மகளிர்கிளவி யாழினொடுங்
குயிலைப்பொருவுங் காரைக்கா லம்மைபெருமை கூறுவாம். (௧௧)

ஆ. திருவிருத்தம் - ௧௭௩௧.

திருச்சிற்றம்பலம்.

மிழலைநாட்டிலே, பெருமிழலையென்னும் ஊரிலே, சிவபத்தி அடியார் பத்திகளிற் சிறந்த பெருமிழலைக்குறும்பநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்களைக் காணுந்தோறும் விரைந்தெதிர் கொண்டு வணங்கி, அவர்களுக்குக் குறிப்பறிந்து தொண்டுசெய்பவர். அவர்களை நாடோறுந் திருவமுது செய்வித்து, அவர்களுக்கு வேண்டுந் திரவியங்களைக் கொடுப்பவர். அவர் சுந்தரமூர்த்திநாயனாருடைய பெருமையை அறிந்து, அவருடைய திருவடிகளை மனம் வாக்குக் காயங்களினாலே சிந்தித்துத் துதித்து வணங்குதலே பரமசிவனுடைய திருவடிகளை அடைதற்கு உரிய நெறியென்று அப்படிச் செய்துவந்தார். அதனால் அவர், அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் அஷ்டமகாசித்திகளையும் அடைந்தார். அடைந்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஜபித்துவந்தார்.

இப்படி நிகழுங்காலத்திலே, திருவஞ்சைக்களத்திற் சென்று திருப்பதிகம்பாடுஞ் சுந்தரமூர்த்திநாயனாருக்குப் பரமசிவனுடைய திருவருளினாலே உத்தரகைலாசத்தை அடையும் வாழ்வு கிடைப்பதைத் தம்முடைய ஊரிலிருந்து கொண்டே யோகப்பிரத்தியக்ஷத்தால் அறிந்து, "சுந்தரமூர்த்திநாயனார் உத்தரகைலாசத்தை நாளைக்கு அடைய நான் பிரிந்து இங்கே வாழமாட்டேன்" என்றுநினைந்து, "இன்றைக்கு யோகத்தினாலே சிவபிரானுடைய திருவடியை அடைவேன்" என்று துணிந்து, யோகமுயற்சியினாலே பிரமரந்திரந்திறப்ப உடலினின்றும் பிரிந்து, திருக்கைலாசத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானுடைய திருவடியை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

பெருமிழலைக்குறும்பநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## காரைக்காலம்மையார் புராணம்.

மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில்
ஊனமில்சீர்ப் பெருவணிகர் குடிதுவன்றி யோங்குபதி
கூனல்வளை திரைசுமந்து கொண்டேறி மண்டுகழிக்
கானன்மிசை யுலவுவளம் பெருகுதிருக் காரைக்கால். (க)

நீடுகெழும் பெருந்தெருவு புத்தரோடு பீலியமண்
வேடமுடை யவர்பொருள்போ லாகாச வெளிமறைக்கு
மாடுகொடி நெடுமணிமா ளிகைநிரைக ணிலைகமுகின்
காடனைய கடற்படப்பை யெனவிளங்குங் கவின்காட்டும். (௨)

வங்கமலி கடற்காரைக் காலின்கண் வாழ்வணிகர்
தங்கள்குலத் தலைவனார் தனதத்த னார்தவத்தால்
அங்கவர்பாற் றிருமடந்தை யவதரித்தா ளெனவந்து
பொங்கியபே ரழகுமிகப் புனிதவதி யார்பிறந்தார். (௩)

வணிகர்பெருங் குலம்விளங்க வந்துபிறந் தருளியபின்
அணிகிளர்மெல் லடிதளர்வுற் றசையுநடைப் பருவத்தே
பணியணிவார் கழற்கடிமை பழகிவரும் பாங்குபெறத்
தணிவில்பெரு மனக்காத றதும்பவரு மொழிபயின்றார். (௪)

பல்பெருநற் கிளையுவப்பப் பயில்பருவச் சிறப்பெல்லாஞ்
செல்வமிகுந் தாதையார் திருப்பெருகுஞ் செயல்புரிய
மல்குபெரும் பாராட்டின் வளர்கின்றார் விடையவர்பால்
அல்கியவன் புடனழகின் கொழுந்தெழுவ தெனவளர்வார். (௫)

வண்டல்பயில் வனவெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை
யண்டர்பிரான் றிருவார்த்தை யணையவரு வனபயின்று
தொண்டர்வரிற் றொழுதுதா தியர்போற்றத் துணைமுலைகள்
கொண்டுநுசுப் பொதுங்குபதக் கொள்கையினிற் குறுகினார். (௬)

நல்லவென வுறுப்புநூ லவருரைக்கு நலநிரம்பி
மல்குபெரு வனப்புமீக் கூரவரு மாட்சியினால்
இல்லிகவாப் பருவத்தி லிவர்கண்மர பினுக்கேற்குந்
தொல்குலத்து வணிகர்மகட் பேசுதற்குத் தொடங்குவார். (௭)

நீடியசீர்க் கடனாகை நிதிபதியென் றுலகின்கட்
பாடுபெறு புகழ்வணிகன் பயந்தகுல மைந்தனுக்குத்
தேடவருந் திருமரபிற் சேயிழையை மகட்பேச
மாடமலி காரைக்கால் வளநகரின் வரவிட்டார். (௮)

வந்தமூ தறிவோர்கண் மணங்குறித்த மனைபுகுந்து
தந்தையாந் தனதத்தன் றனைநோக்கி நீபயந்த
பைந்தொடியை நிதிபதிமைந் தன்பரம தத்தனுக்கு
முந்தைமர பினுக்கேற்கு முறைமைமணம் புரிகென்றார். (௯)

மற்றவனு முறைமையினான் மணமிசைந்து செலவிடச்சென்
றுற்றவர்க ளுரைகேட்ட நிதிபதியு முயர்சிறப்புப்
பெற்றனன்போ லுவந்துதனிப் பெருமகற்குத் திருமலியுஞ்
சுற்றமுடன் களிகூர்ந்து வதுவைவினைத் தொழில்பூண்டான். (௧௦)

மணமிசைந்த நாளோலை செலவிட்டு மங்கலநாள்
அணையவது வைத்தொழில்க ளானவெலா மமைவித்தே
யிணரலங்கன் மைந்தனையு மணவணியி னெழில்விளக்கிப்
பணைமுரச மெழுந்தார்ப்பக் காரைக்காற் பதிபுகுந்தார். (௧௧)

அளிமிடைதார்த் தனதத்த னணிமாடத் துட்புகுந்து
தெளிதருநூல் விதிவழியே செயன்முறைமை செய்தமைத்துத்
தளிரடிமென் னகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கல்யாணஞ் செய்தார்கள். (௧௨)

மங்கலமா மணவினைகண் முடித்தியல்பின் வைகுநாட்
டங்கள்குடிக் கொருபுதல்வி யாதலினாற் றனதத்தன்
பொங்கொலிநீர் நாகையினிற் போகாமே கணவனுடன்
அங்கணமர்ந் தினிதிருப்ப வணிமாட மருங்கமைத்தான். (௧௩)

மகட்கொடையின் மகிழ்சிறக்கும் வரம்பிறனங் கொடுத்ததற்பி
னிகர்ப்பரிய பெருஞ்சிறப்பி னிதிபதிதன் குலமகனுந்
தகைப்பில்பெருங் காதலினாற் றங்குமனை வளம்பெருக்கி
மிகப்புரியுங் கொள்கையினின் மேம்படுதன் மேவினான். (௧௪)

ஆங்கவன்ற னில்வாழ்க்கை யருந்துணையா யமர்கின்ற
பூங்குழலா ரவர்தாமும் பொருவிடையார் திருவடிக்கீழ்
ஓங்கியவன் புறுகாத லொழிவின்றி மிகப்பெருகப்
பாங்கில்வரு மனையறத்தின் பண்புவழா மைப்பயில்வார். (௧௫)

நம்பரடி யாரணைந்தா னல்லதிரு வமுதளித்துஞ்
செம்பொன்னு நவமணியுஞ் செழுந்துகிலு முதலான
தம்பரிவி னால்வர்க்குத் தகுதியின்வேண் டுவகொடுத்தும்
உம்பர்பிரான் திருவடிக்கீ ழுணர்வுமிக வொழுகுநாள். (௧௬)

பாங்குடைய நெறியின்கட் பயில்பரம தத்தனுக்கு
மாங்கனிக ளோரிரண்டு வந்தணைந்தார் சிலர்கொடுப்ப
ஆங்கவைதான் முன்வாங்கி யவர்வேண்டுங் குறையளித்தே
யீங்கிவற்றை யில்லத்துக் கொடுக்கவென வியம்பினான். (௧௭)

கணவன்றான் வரவிடுத்த கனியிரண்டுங் கைக்கொண்டு
மணமலியு மலர்க்கூந்தன் மாதரார் வைத்ததற்பின்
பணவரவம் புனைந்தருளும் பரமனார் திருத்தொண்டர்
உணவின்மிகு வேட்கையினா லொருவர்மனை யுட்புகுந்தார். (௧௮)

வேதங்கண் மொழிந்தபிரான் மெய்த்தொண்டர் நிலைகண்டு
நாதன்ற னடியாரைப் பசிதீர்ப்பே னெனநண்ணிப்
பாதங்கள் விளக்கநீர் முன்னளித்துப் பரிகலம்வைத்
தேதந்தீர் நல்விருந்தா மின்னடிசி லூட்டுவார். (௧௯)

கறியமுதங் குதவாதே திருவமுது கைகூட
வெறிமலர்மேற் றிருவனையார் விடையவன்ற னடியாரே
பெறலரிய விருந்தானாற் பேறிதன்மே லில்லையெனும்
அறிவினரா யவரமுது செய்வதனுக் காதரிப்பார். (௨0)

இல்லாளன் வைக்கவெனத் தம்பக்கன் முன்னிருந்த
நல்லநறு மாங்கனிக ளிரண்டினிலொன் றைக்கொண்டு
வல்விரைந்து வந்தணைந்து படைத்துமன மகிழ்ச்சியினால்
அல்லறீர்ப் பவரடியார் தமையமுது செய்வித்தார். (௨௧)

மூப்புறுமத் தளர்வாலு முதிர்ந்தமுடு கியவேட்கைத்
தீப்பசியி னிலையாலு மயர்ந்தணைந்த திருத்தொண்டர்
வாய்ப்புறுமென் சுவையடிசின் மாங்கனியோ டினிதருந்திப்
பூப்பயின்மென் குழன்மடவார் செயலுவந்து போயினார். (௨௨)

மற்றவர்தாம் போயினபின் மனைப்பதியா கியவணிகன்
உற்றபெரும் பகலின்க ணோங்கியபே ரில்லெய்திப்
பொற்புறமுன் னீராடிப் புகுந்தடிசில் புரிந்தயிலக்
கற்புடைய மடவாருங் கடப்பாட்டி லூட்டுவார். (௨௩)

இன்னடிசில் கறிகளுட னெய்துமுறை யிட்டதற்பின்
மன்னியசீர்க் கணவன்றான் மனையிடைமுன் வைப்பித்த
நன்மதுர மாங்கனியி லிருந்ததனை நறுங்கூந்தல்
அன்னமனை யார்தாமுன் கொடுவந்து கலத்தளித்தார். (௨௪)

மனைவியார் தாம்படைத்த மதுரமிக வாய்த்தகனி
தனைநுகர்ந்த வினியசுவை யாராமைத் தார்வணிகன்
இனையதொரு பழமின்னு முளததனை யிடுகவென
அனையதுதாங் கொண்டுவர வணைவார்போ லங்ககன்றார். (௨௫)

அம்மருங்கு நின்றயர்வா ரருங்கனிக்கங் கென்செய்வார்
மெய்ம்மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்தாள்
தம்மனங்கொண் டுணர்தலுமே யவரருளாற் றார்குழலார்
கைம்மருங்கு வந்திருந்த ததிமதுரக் கனியொன்று. (௨௬)

மற்றதனைக் கொடுவந்து மகிழ்ந்திடலு மயின்றகனி
யுற்றசுவை யமுதினுமேற் படவுளதா யிடவிதுதான்
முற்றருமாங் கனியன்று மூவுலகிற் பெறற்கரிதாற்
பெற்றதுவே றெங்கென்று பெய்வளையார் தமைக்கேட்டான். (௨௭)

அவ்வுரைகேட் டலுமடவா ரருளுடையா ரளித்தருளுஞ்
செவ்வியபே ரருளவிளம்புந் திறமன்றென் றுரைசெய்யார்
கைவருகற் புடைநெறியாற் கணவனுரை கரவாமை
மெய்வழியென் றெனவிளம்பல் விடமாட்டார் விதிர்ப்புறுவார். (௨௮)

செய்தபடி சொல்லுவதே கடனென்னுஞ் சீலத்தார்
மைதழையுங் கண்டர்சே வடிகண்மனத் துறவணங்கி
யெய்தவருங் கனியளித்தா ரியாரென்னுங் கணவனுக்கு
மொய்தருபூங் குழன்மடவார் புகுந்தபடி தனைமொழிந்தார். (உ௯)

ஈசனரு ளெனக்கேட்ட வில்லிறைவ னதுதெளியான்
வாசமலர்த் திருவனையார் தமைநோக்கி மற்றிதுதான்
தேசுடைய சடைப்பெருமான் றிருவருளே லின்னமுமோர்
ஆசில்கனி யவனருளா லழைத்தளிப்பா யெனமொழிந்தான். (௩0)

பாங்ககன்று மனைவியார் பணியணிவார் தமைப்பரவி
யீங்கிதளித் தருளீரே லென்னுரைபொய் யாமென்ன
மாங்கனியொன் றருளால்வந் தெய்துதலு மற்றதனை
யாங்கவன்கைக் கொடுத்தலுமே யதிசயித்து வாங்கினான். (௩௧)

வேறு.

வணிகனுந் தன்கைபுக்க மாங்கனி தன்னைக்காணான்
றணிவரும் பயமேற்கொள்ள வுள்ளமுந் தடுமாறெய்தி
யணிகுழ லவரைவேறோ ரணங்கெனக் கருதிநீங்குந்
துணிவுகொண் டெவர்க்குஞ்சொல்லான் றொடர்வின்றி யொழுகுநாளில்.

விடுவதே யெண்ணமாக மேவிய முயற்சிசெய்வான்
படுதிரைப் பரவைமீது படர்கலங் கொண்டுபோகி
நெடுநிதி கொணர்வேனென்ன நிரந்தபல் கிளைஞராகும்
வடுவில்சீர் வணிகமாக்கண் மரக்கலஞ் சமைப்பித்தார்கள். (௩௩)

கலஞ்சமைத் ததற்குவேண்டுங் கம்மிய ருடனேசெல்லும்
புலங்களில் விரும்புபண்டம் பொருந்துவ நிரம்பவேற்றிச்
சலந்தரு கடவுட்போற்றித் தலைமையா நாய்கன்றானு
நலந்தரு நாளிலேறி நளிர்திரைக் கடன்மேற்போனான் (௩௩)

கடன்மிசை வங்கமோட்டிக் கருதிய தேயந்தன்னில்
அடைவுறச் சென்றுசேர்ந்தங் களவில்பல் வளங்கண்முற்றி
யிடைசில நாட்கணீங்க மீண்டுமக் கலத்திலேறிப்
படர்புனற் கன்னிநாட்டோர் பட்டின மருங்குசார்ந்தான். (௩௫)

அப்பதி தன்னிலேறி யலகில்பல் பொருள்களாக்கும்
ஒப்பின்மா நிதியமெல்லா மொருவழி பெருகவுய்த்து
மெய்ப்புகழ் விளங்குமவ்வூர் விரும்பவோர் வணிகன்பெற்ற
செப்பருங் கன்னிதன்னைத் திருமலி வதுவைசெய்தான். (௩௬)

பெறலருந் திருவினாளைப் பெருமணம் புணர்ந்துமுன்னை
யறலிய னறுமென்கூந்த லணங்கனா டிறத்திலற்றம்

புறமொரு வெளியுறுமற் பொதிந்தசிந் தனையினோடு
முறைமையின் வழாமைவைகி முகமலர்ந் தொழுகுநாளில். (நடஎ)

முருகலர்ச் சோலைமூதூ ரதின்முதல் வணிகரோடும்
இருநிதிக் கிழவனென்ன வெய்திய திருவின்மிக்குப்
பொருகடற் கலன்கள்போக்கும் புகழினன் மனைவிதன்பாற்
பெருகொளி விளக்குப்போலோர் பெண்கொடி யரிதிற்பெற்றான். (நடஅ)

மடமக டன்னைப்பெற்று மங்கலம் பேணித்தான்முன்
புட்டுறை வஞ்சிநீத்த வொருபெரு மனைவியாரைத்
தொடர்வற நினைந்துதெய்வத் தொழுகுல மென்றேகொண்டு
கடனமைத் தவர்தநாமங் காதல்செய் மகவையிட்டான். (நடகூ)

இங்கிலை யிவனிங்கெய்தி யிருந்தன னிப்பானீடுங்
கன்னிமா மதில்சூழ்மாடக் காரைக்கால் வணிகனான
தன்னிகர் கடந்தசெல்வத் தனதத்தன் மகளார்தாமு
மன்னிய கற்பினோடு மனையறம் புரிந்துவைக. (சo)

விளைவளம் பெருக்கவங்க மீதுபோம் பரமதத்தன்
வளர்புகழ் பாண்டிநாட்டோர் மாநகர் தன்னின்மன்னி
யளவின்மா நிதியமாக்கி யமர்ந்தினி திருந்தானென்று
கிளரொளி மணிக்கொம்பன்னார் கிளைஞர்தாங் கேட்டாரன்றே. (சக)

அம்மொழி கேட்டபோதே யணங்கனார் சுற்றத்தாருந்
தம்முறு கிளைஞர்ப்போக்கி யவனிலை தாமுங்கேட்டு
மம்மர்கொண் மனத்தராகி மற்றவ னிருந்தபாங்கர்க்
கொம்மைவெம் முலையினாளைக் கொண்டுபோய் விடுவதென்பார். (சஉ)

மாமணிச் சிவிகைதன்னின் மடநடை மயிலன்னாரைத்
தாமரைத் தவிசில்வைகுந் தனித்திரு வென்னவேற்றிக்
காமரு 0 கழனிவீழ்த்துக் காதல்செய் சுற்றத்தாருந்
தேமொழி யவருஞ்சூழச் சேணிடைக் கழிந்துசென்றார். (சந)

சிலபகல் கடந்துசென்று செந்தமிழ்த் திருநாடெய்தி
மலர்புகழ் பரமதத்தன் மாநகர் மருங்குவந்து
குலமுதன் மனைவியாரைக் கொண்டுவந் தணைந்ததன்மை
தொலைவில்சீர்க் கணவனார்க்குச் சொல்லிமுன் செல்லவிட்டார். (சச)

வந்தவ ரணைந்தமாற்றங் கேட்டலும் வணிகன்றானுஞ்
சிந்தையி லச்சமெய்திச் செழுமணம் பின்புசெய்த
பைந்தொடி தனையுங்கொண்டு பயந்தபெண் மகவினோடு
முந்துறச் செல்வேனென்று மொய்குழ லவர்பால்வந்தான் (சரு)

---

0 கழனி - இளைாச்சிலை.

தானுமம் மனைவியோடுந் தளர்நடை மகவினோடு
மானிளம் பிணைபோனின்ற மனைவியா ரடியிற்றாழ்ந்தே
யானும தருளால்வாழ்வே னிவ்விளங் குழவிதானும்
பான்மையா லுமதுநாம மென்றுமுன் பணிந்துவீழ்ந்தான். (சசு)

கணவர்தாம் வணங்கக்கண்ட காமர்பூங் கொடியனாரும்
அணைவுறுஞ் சுற்றத்தார்பா லச்சமோ டொதுங்கிநிற்ப
உணர்வுறு கிளைஞர்வெள்கி யுன்றிரு மனைவிதன்னை
மணமலி தாரினாய்நீ வணங்குவ தென்கொலென்றார். (சஎ)

மற்றவர் தம்மைநோக்கி மானிட மிவர்தாமல்லர்
நற்பெருந் தெய்வமாத லானறிந் தகன்றபின்பு
பெற்றவிம் மகவுதன்னைப் பேரிட்டே னாதலாலே
பொற்பதம் பணிந்தேனீரும் போற்றுதல் செய்மினென்றான். (சஅ)

என்றபின் சுற்றத்தாரு மிதுவென்கொ லென்றுநின்றார்
மன்றலங் குழலினாரும் வணிகன்வாய் மாற்றங்கேளாக்
கொன்றைவார் சடையினார்தங் குரைகழல் போற்றிச்சிந்தை
யொன்றிய நோக்கின்மிக்க வுணர்வுகொண் டுரைசெய்கின்றார். (சகூ)

ஈங்கிவன் குறித்தகொள்கை யிதுவினி யிவனுக்காகத்
தாங்கிய வனப்புநின்ற தசைப்பொதி கழித்திங்குன்பால்
ஆங்குநின் றார்கள்போற்றும் பேய்வடி வடியேனுக்குப்
பாங்குற வேண்டுமென்று பரமர்தாள் பரவிநின்றார். (ரு0)

ஆனவப் பொழுதுமன்று ளாடுவா ரருளினாலே
மேனெறி யுணர்வுகூர வேண்டிற்றே பெறுவார்மெய்யில்
ஊனடை வனப்பையெல்லா முதறியெற் புடம்பேயாக
வானமு மண்ணுமெல்லாம் வணங்குபேய் வடிவமானார். (ருக)

மலர்மழை பொழிந்ததெங்கும் வானதுந் துபியினாதம்
உலகெலா நிறைந்துவிம்ம வும்பரு முனிவர்தாமுங்
குலவினர் கணங்களெல்லாங் குணலையிட் டனமுன்னின்ற
தொலைவில்பல் சுற்றத்தாருந் தொழுதஞ்சி யகன்றுபோனார். (ருஉ)

உற்பவித் தெழுந்தஞானத் தொருமையி னுமைகோன்றன்னை
யற்புதத் திருவந்தாதியப்பொழு தருளிச்செய்வார்
பொற்புடைச் செய்யபாதப் புண்டரீ கங்கள்போற்று
நற்கணத் தினிலொன்றானே னென்று நயந்துபாடி. (ருங)

## அற்புதத் திருவந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

வெண்பா.

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தே—னிறந்திகழு
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
யெஞ்ஞான்று தீர்ப்ப திடர்.

உரையினி லிம்மாலை யந்தாதி வெண்பா
கரைவினற் காரைக்காற் பேய்ச்சொற்—பரவுவார்
ஆராத வன்பினோ டண்ணலைச் சென்றேத்துவர்
பேராத காதல் பிறந்து.

திருச்சிற்றம்பலம்.

---

ஆய்ந்தசீ ரிரட்டைமாலை யந்தாதி யெடுத்துப்பாடி
யேய்ந்தபே ருணர்வுபொங்க வெயிலொரு மூன்றுமுன்னாட்
காய்ந்தவ ரிருந்தவெள்ளிக் கைலைமால் வரையைநண்ண
வாய்ந்தபே ரருண்முன்கூர வழிப்படும் வழியால்வந்தார். (ருச)

---

## திரு இரட்டைமணிமாலை.

திருச்சிற்றம்பலம்.

கட்டளைக்கலித்துறை.

கிளர்ந்துந்து வெந்துயர் வந்தடும் போதஞ்சி நெஞ்சமென்பாய்
தளர்ந்திங் கிருத்தற விர்திகண் டாய்தள ராதுவந்தி
வளர்ந்துந்து கங்கையும் வானத் திடைவளர் கோட்டுவெள்ளை
யிளந்திங் களுமெருக் கும்மிருக் குஞ்சென்னி யீசனுக்கே.

வெண்பா.

உத்தமராய் வாழ்வா ருலந்தக்கா லுற்றார்கள்
செத்த மரமடுக்கித் தீயாமுன்—உத்தமனாய்
நீளாழி நஞ்சுண்ட நெய்யாடி தன்றிறமே
கேளாழி நெஞ்சே கிளர்ந்து.

திருச்சிற்றம்பலம்.

---

கண்டவர் வியப்புற்றஞ்சிக் கையகன் றேடுவார்கள்
கொண்டதோர் வேடத்தன்மை யுள்ளவா கூறக்கேட்டே
யண்டர்நா யகனுரென்னை யறிவரோ லறியாவாய்மை
யெண்டிசை மாக்களுக்கியா னெவ்வுரு வாயெனென்பார். (ருரு)

வடதிசைத் தேசமெல்லா மனத்தினுங் கடுகச்சென்று
தொடையவிழ் இதழிமாலைச் சூலபா ணியினார்மேவும்
படரொளிக் கைலைவெற்பிற் பாங்கணைந் தாங்குக்காலி
னடையினைத் தவிர்ந்துபார்மேற் றலையினா னடந்துசென்றார். (௫௬)

தலையினா னடந்துசென்று சங்கர னிருந்தவெள்ளி
மலையின்மே லேறும்போது மகிழ்ச்சியா லன்புபொங்கக்
கலையிளந் திங்கட்கண்ணிக் கண்ணுத லொருபாகத்துச்
சிலைநுத லிமயவல்லி திருக்கணோக் குற்றதன்றே. (௫௭)

அம்பிகை திருவுள்ளத்தி னதிசயித் தருளித்தாழ்ந்து
தம்பெரு மானைநோக்கித் தலையினா னடந்திங்கேறும்
எம்பெரு மானோரெற்பின் யாக்கையன் பென்னேயென்ன
நம்பெரு மாட்டிக்கங்கு நாயக னருளிச்செய்வான். (௫௮)

வருமிவ ளம்மைப்பேணு மம்மைகா ணுமையேமற்றிப்
பெருமைசேர் வடிவும்வேண்டிப் பெற்றன ளென்றுபின்னை
யருகுவந் தடையநோக்கி யம்மையே யென்னுஞ்செம்மை
யொருமொழி யுலகமெல்லா முய்யவே யருளிச்செய்தார். (௫௯)

அங்கண னம்மையேயென் றருள்செய வப்பாவென்று
பங்கயச் செம்பொற்பாதம் பணிந்துவீழ்ந் தெழுந்தார்தம்மைச்
சங்கவெண் குழையினாருந் தம்மைநேர் நோக்குநம்பால்
இங்குவேண் டுவதென்னென்ன விறைஞ்சிநின் றியம்புகின்றார். (௬௦)

இறவாத வின்பவன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டுமீண்டும் பிறப்புண்டே லுன்னையென்றும்
மறவாமை வேண்டுமின்னும் வேண்டுநான் மகிழ்ந்துபாடி
யறவாநீ யாடும்போதுன் னடியின்கீ ழிருக்கவென்றார். (௬௧)

கூடுமா றருள்கொடுத்துக் குலவுதென் றிசையினின்று
நீடுவாழ் பழனமூதூர் நிலவியவாலங்காட்டில்
ஆடுமா நடமுநீகண் டானந்தஞ் சேர்ந்தெப்போதும்
பாடுவாய் நம்மையென்றான் பரவுவார் பற்றாய்நின்றான். (௬௨)

அப்பரி சருள்ப்பெற்ற வம்மையுஞ் செம்மைவேத
மெய்ப்பொரு ளானார்தம்மை விடைகொண்டு வணங்கிப்போந்து
செப்பரும் பெருமையன்பாற் றிகழ்திரு வாலங்காடா
நற்பதி தலையினாலே நடந்துபுக் கடைந்தாரன்றே. (௬௩)

ஆலங்கா டதனினண்ட முறநிமிர்ந் தாடுகின்ற
கோலங்காண் பொழுதுகொங்கை திரங்கியென் றெடுத்துத்தங்கு
மூலங்காண் பரியார்தம்மை மூத்தநற் பதிகம்பாடி
ஞாலங்கா தலித்துப்போற்று நட்டம்போற்றி நண்ணுநாளில். (௬௪)

வேறு.

மட்டவிழ்கொன் றையினர்தந் திருக்கூத்து முன்வணங்கும்
இட்டமிகு பெருங்காத லெழுந்தோங்க வியப்பெய்தி
யெட்டியில வம்மீகை யெனவெடுத்துத் திருப்பதிகங்
கொட்டமுழ வங்குழக னாடுமெனப் பாடினர். (௬௫)

மடுத்தபுனல் வேணியினா ரம்மையென மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவியதாண் டவத்தினவர்
எடுத்தருளுஞ் சேவடிக்கீ ழென்றுமிருக் கின்றாரை
யடுத்தபெருஞ் சீர்பரவ லாரளவா யினதம்மா. (௬௬)

வேறு.

ஆதியோ டந்தமில்லா னருணட மாடும்போது
கீதமுன் பாடுமம்மை கிளரொளி மலர்த்தாள் போற்றிச்
சீதநீர் வயல்சூழ்திங்க ளூரினப் பூதியாராம்
போதமா முனிவர்செய்த திருத்தொண்டு புகலலுற்றேன். (௬௭)

ஆ திருவிருத்தம் - ௧௭௬௮.

---

திருச்சிற்றம்பலம்.

## அம்மைமூத்த திருப்பதிகம்.

(பண் - நட்டபாஷை.)

கொங்கைதிரங்கி நரம்பெழுந்து குண்டுகண்வெண்பற் குழிவயிற்றுப்
பங்கிசிவந்திரு பற்கணீண்டு பரடுயர்நீள்கணைக் காலோர்பெண்பேய்
தங்கியலறி யுலறுகாட்டிற் றாழ்சடையெட்டுத் திசைகள்வீசி
யங்கங்குளிர்ந்தன லாடுமெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே. (௧)

கள்ளிக்கவட்டிடைக் காலைநீட்டிக் கடைக்கொள்ளிவாங்கி மசித்துமையை
விள்ளவெழுதி வெடுவெடென்ன நக்குவெருண்டு விலங்குகாட்டிற்
றுள்ளித்துடித்துச் சுடுபிணத்தீச் சுட்டிடமுற்றுஞ் சுழிந்துபூழ்தி
யள்ளியவிக்கநின் றாடுமெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே. (௨)

வாகைவிரிந்துவெண் ணெற்றொலிப்ப மயங்கிருள்கூர்நடு நாளையாங்கே
கூகையோடாண்டலை பாடவாந்தை கோடதன்மேற்குதித் தோடிவீசி
யீகைபடர்தொடர் கள்ளிநீழ லீமமிடுசுடு காட்டகத்தே
யாகங்குளிர்ந்தன லாடுமெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே. (௩)

குண்டிலோமக் குழிச்சோற்றைவாங்கிக் குறுநரிதின்ன வதனைமுன்னே
கண்டிலோமென்று கனன்றுபேய்கள் கையடித்தோடிடு காட்டரங்கா
மண்டலநின்றங்குள் ளாளமிட்டு வாதித்துவீசி யெடுத்தபாத
மண்டமுறநிமிர்ந் தாடுமெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே. (௪)

விழுதுநிணத்தை விழுக்கியிட்டு வெண்டலைமாலை விரவிப்பூட்டிக்
கழுதுதன்பிள்ளையைக் காளியென்று பேரிட்டுச்சீருடைத் தாய்வளர்த்து
புழுதிதுடைத்து முலைகொடுத்துப் போயினதாயை வரவுகாணு [ப்
தழுதுறங்கும்புறங் காட்டிலாடு மப்பனிடந்திரு வாலங்காடே. (௫)

பட்டடிநெட்டுகிர்ப் பாறுகாற்பேய் பருந்தொடுகூகை பரண்டையாந்தை
குட்டியிடமுட்டை கூகைபேய்கள் குறுநரிசென்றிணங் காடுகாட்டிற்
பிட்டடித்துப்புறங் காட்டிலிட்ட பிணத்தினைப்போகப் புரட்டியாங்கே
யட்டமேபாயநின் றாடுமெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே. (௬)

சுழலுமழல்விழிக் கொள்ளிவாய்ப்பேய் சூழ்ந்து துணங்கையிட்டோடியா
தழலுளெரியும்பிணத்தைவாங்கித் தான்றடிதின்றிணங்காடுகாட்டிற்[டித்
கழலொலியோசை சிலம்பொலிப்பக் காலுயர்வட்டணை யிட்டுநட்
மழலுமிழ்ந்தோரி கதிக்கவாடு மப்பனிடந்திரு வாலங்காடே. (௭)

நாடுநகருந் திரிந்துசென்று நன்னெறிநாடி நயந்தவரை
மூடிமுதுபிணத் திட்டமாடே முன்னியபேய்க்கணஞ் சூழச்சூழக்
காடுங்கடலு மலையுமண்ணும் விண்ணுஞ்சுழல வனல்கையேந்தி
யாடுமமரர் புயங்கனெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே. (௮)

துத்தங்கைக்கிளை விளரிதார முழையிளியோசைபண் கெழுமப்பாடிச்
சச்சரிகொக்கரை தக்கையோடு தகுணிச்சந்துந்துபி தாளம்வீணை [சித்
மத்தளங்கரடிகை முன்கைமென்றோற் றமருகங்குடமுழா மொந்தைவா
தத்தனமைவினொ டாடுமெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே. (௯)

புந்திகலங்கி மதிமயங்கி யிறந்தவரைப்புறங் காட்டிலிட்டுச்
சந்தியில்வைத்துக் கடமைசெய்து தக்கவரிட்டசெந் தீவிளக்கா
முந்தியமரர் முழவினோசை திசைகதுவச்சிலம் பார்க்கவார்க்க
வந்தியின்மாநட மாடுமெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே. (௧௦)

ஒப்பிணையில்லவன்பேய்கள்கூடியொன்றினையொன்றடித்தொக்கலித்துப்
பப்பிணையிட்டுப் பரண்டைபாட்டப் பாடிருந்தந்நரி யாழமைப்ப
வப்பனையணிதிரு வாலங்காட்டு ளடிகளைச்செடிதலைக் காரைக்காற்பேய்
செப்பியசெந்தமிழ் பத்தும்வல்லார் சிவகதிசேர்ந்தின்ப மெய்துவாரே.()

ஆ. திருவிருத்தம் - ௧௮0௯.

திருச்சிற்றம்பலம்.

## தேவாரப்பதிகம்.

பண்-இந்தளம்.

எட்டியிலவ மீகைசூரை காரை படர்ந்தெங்குஞ்
சுட்டசுடலை சூழ்ந்தகள்ளி சோர்ந்த குடர்கவ்விப்
பட்டபிணங்கள் பரந்தகாட்டிற் பறைபோல் விழிகட்பேய்
கொட்டமுழவங் கூளிபாடக் குழகனாடுமே. (௧)

பிணந்தானுருகி நிலந்தானணைப்ப நெடும்பற் குழிகட்பேய்
சுணங்கையெறிந்து சூழநோக்கிச் சுடர நவித்தெங்குங்
கணங்கள்கூடிப் பிணங்கண்மாந்திக் களித்த மனத்தவா
யணங்குகாட்டி லனல்கையேந்தி யழக னாடுமே. (உ)

புட்கள்பொதுத்த புலால்வெண்டலையைப் புறமே நரிகவ்வ
வட்கென்றழைப்ப வாந்தைவீச வருகே சிறுகூகை
புட்கவிழ்க்க வூமன்வெருட்ட வோரி கதித்தெங்கும்
பிட்கநக்கம் பேணுமிறைவன் பெயரும் பெருங்காடே. (ங)

செத்தபிணத்தைத் தெளியாதொருபேய் சென்று விரல்சுட்டிக்
குத்தியுறுமிக் கனல்விட்டெறிந்து கடக்கப் பாய்ந்துபோய்ப்
பத்தல்வயிற்றைப் பதக்கமோதிப் பலபே யிரிந்தோடப்
பித்தவேடங் கொண்டுநட்டம் பெருமா னாடுமே. (ச)

முள்ளிதீந்து முளரிகருகி மூளை சொரிந்துக்குக்
கள்ளிவற்றி வெள்ளில்பிறங்கு கடுவெங் காட்டுள்ளே
புள்ளியுழைமான் றோலொன்றுடுத்துப் புலித்தோல் பியற்கிட்டுப்
பள்ளியிடமு மதுவேயாகப் பரம னாடுமே. (ரு)

வாளைக்கிளர வளைவாளெயிற்று வண்ணச் சிறுகூகை
மூளைத்தலையும் பிணமும்விழுங்கி மூரலு முதுகாட்டிற்
றாளிப்பனையி னிலைபோன்மயிர்க்கட் டழல்வா யழல்கட்பேய்
கூளிக்கணங்கள் குழலோடியம்பக் குழக னாடுமே. (சு)

நொந்திக்கிடந்த சுடலைதடவி நுகரும் புழுக்கின்றிச்
சிந்தித்திருந்தங் குறங்குசிறுபேய் சிரமப் படுகாட்டின்
முந்திமுழவம் விழவினோசை முறைமை வழுவாமே
யந்திநிருத்த மனல்கையேந்தி யழக னாடுமே. (எ)

வேய்களோங்கி வெண்முத்துதிர வெடிகொள் சுடலையுள்
ஓயுமுருவி லுலறுகூந்த லலறு பகுவாய்ப்
பேய்கள்கூடிப் பிணங்கண்மாந்தி யணங்கும் பெருங்காட்டில்
மாயனுட மலையான்மகளு மருண்டு நோக்குமே. (அ)

கடுவனுகளுங் கழைசூழ்பொதும்பிற் கழுதும் பேயுமா
யிடுவெண்டலையு மீமப்புகையு மெழுந்த பெருங்காட்டிற்
கொடுவெண்மழுவும் பிறையுந்ததும்பக் கொள்ளென் றிசைபாடப்
படுவெண்டுடியும் பறையுங்கறங்கப் பரம னாடுமே. (கூ)

குண்டைவயிற்றுக் குறியசிறிய நெடிய பிறங்கற்பேய்
இண்டுபடர்ந்த விருள்சூழ்மயானத் தெரிவா யெயிற்றுப்பேய்
கொண்டுகுழவி தடவிவெருட்டிக் கொள்ளென் றிசைபாடத்
திண்டிமிலிர்ந்த சடைகடாழ விமல னாடுமே. (க0)

சூடுமதியஞ் சடைமேலுடையர் சுழல்வர் திருநட்டம்
ஆடுமரவ மரையிலார்த்த வடிக ளருளாலே
காடுமலிந்த கனல்வாயெயிற்றுக் காரைக்காற் பேய்தன்
பாடல்பத்தும் பாடியாடப் பாவ நாசமே. (௧௧)

ஆ. திருவிருத்தம் – ௧௪௨௦.

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, காரைக்காலிலே, வைசியர்குலத்திலே, தன தத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவனுக்குப் புனிதவதியார் என்கின்ற ஒருபுத்திரியார் பிறந்தார். அத்தனதத்தன் அப்புத்திரியாரை நாகபட்டணத்தில் இருக்கின்ற நிதிபதி என்பவனுடைய புத்திரனாகிய பரமதத்தனுக்கு விவாகஞ்செய்துகொடுத்து, தனக்கு வேறு பிள்ளையி ன்மையால் அவரை நாகபட்டணத்திற்குப் போகவிடாமல் தன்னுடைய வீட்டுக்கு அருகிலே ஒரு வீடு கட்டுவித்து, அளவிறந்த திரவியங்களையுங் கொடுத்து, கணவனோடும் அதிலிருத்தினான். பரமதத்தன் அந்தச் செல வத்தை விருத்திசெய்து இல்லறத்தை ஒழுங்குபெற நடத்திவந்தான். அவன் மனைவியாராகிய புனிதவதியார், பரமசிவனுடைய திருவடிகளிலே அன்பு மேன்மேலும் பெருக இல்லறத்திற்கு வேண்டுவனவற்றை வழு வாது செய்வாராயினார். தம்முடையவீட்டுக்குச் சிவனடியார்கள் வரின், அவர்களைத் திருவமுதுசெய்வித்து, அவரவர் வேண்டியபடி பொன் இரத் தினம் வஸ்திரம் முதலாயின உதவுவார்.

இப்படி நிகழுங்காலத்தில், ஒருநாள், பரமதத்தனிடத்திற் காரிய மூலமாக வந்தவர்கள் சிலர் அவனுக்குஇரண்டு மாம்பழங்கொடுக்க; அவன் அவைகளை வாங்கிக்கொண்டு அவர்கள் கருத்தை முடித்து, அவைகளை மனைவியாரிடத்திற்கு அனுப்பிவிட்டான். மனைவியார் அவைகளை வாங்கி வைத்தபின்பு; சிவனடியார் ஒருவர் பசியினால் வருந்தி, அவர்வீட்டிற் சென்றார். புனிதவதியார் அவ்வடியவருடைய நிலையைக் கண்டு, கலத் தை வைத்துச் சோறு படைத்து, அந்நேரத்திலே கறியமுது பாகம்பண் ணப்படாமையால், "சிவனடியவரே பெறுதற்கு அரிய விருந்தினராய் வந்தபொழுதே இதைப்பார்க்கிலும் பெறவேண்டிய பேறு நமக்கு ஒன் றும் இல்லை" என்று நினைந்து, தம்முடைய கணவன் அனுப்பிய மாம்பழ ங்கள் இரண்டினுள் ஒன்றை எடுத்துக் கொண்டுவந்து படைத்து, அவ்வ டியவரைத் திருவமுதுசெய்வித்தார். அடியவர் சோற்றை மாங்கனி யோடு உண்டு, புனிதவதியாருடைய செய்கையை உவந்து போயினார்.

போயபின், பரமதத்தன் நடுப்பகலிலே வீட்டுக்கு வந்து போச னம்பண்ணும் பொழுது, மனைவியார் எஞ்சியிருந்த மாங்கனியைக் கொண் டுவந்து, கலத்திலே வைத்தார். பரமதத்தன் மிக இனிய அந்தக்கனியை உண்டு அதன் இனியசுவையினாலே திருத்தியடையாமல் மனைவியாரை

நோக்கி, "மற்றக் கனியையுங் கொண்டுவந்து வை" என்றான். மனைவியார் கொண்டுவரச் செல்பவர்போலப் போய் நின்றுகொண்டு,சோகித்து தம்மை விசுவசிக்கின்ற மெய்யன்பர்களுக்கு உற்றவிடத்து உதவும் பரமசிவனுடைய திருவடிகளைத் தியானித்தார். உடனே, அக்கடவுளுடைய கருணையினால், அதிமதுரமாகிய ஒருமாங்கனி அவர்கையில் வந்திருந்தது. அவர் அதைக் கொண்டுவந்து,கணவனுடைய கலத்திலேபடைக்க; அவன் அதனை உண்டு, அதன் சுவை தேவாமிர்தத்தைப்பார்க்கிலுஞ் சிறந்தமையால் "இது முன் நான் தந்த மாங்கனியன்று. இது மூவுலகங்களிலும் பெறுதற்கு அரியது. இதனை நீ எங்கே பெற்றாய்"என்றான். மனைவியார் அதைக்கேட்டு,தமக்குத் திருவருள் உதவிய திறத்தை வெளிப்படுத்துவது தகுதியன்று என்று நினைந்தமையால் நிகழ்ந்ததைச்சொல்லமாட்டாதவரும், கணவனுக்கு உண்மையை மறைத்துக் கூறுதலுந்தகுதியன்று என்று நினைந்தமையால் அதனைச் சொல்லாது விடமாட்டாதவருமாய், வருந்தி நின்று, பின் நிகழ்ந்தபடி சொல்வதே கடன்என்று துணிந்து, "நீர் தந்தகனிகளில் ஒன்றை ஓரடியாருக்குக் கொடுத்துவிட்டமையால்,அதற்கு நான் யாது செய்வேன் என்று கவன்று,பரமசிவனைத் தியானித்துக்கொண்டு நின்றேன். அவருடைய திருவருளினால் இந்தக் கனி என்கையில் வந்திருந்தது" என்றார். பரமதத்தன் அதை நம்பாதவனாகி, மனைவியாரை நோக்கி, "இந்தக்கனி சிவபிரானுடைய திருவருளினாலே கிடைத்ததாயின், இன்னும் ஒரு கனி அவருடைய திருவருளினாலே அழைத்துத் தா" என்றான். புனிதவதியார் அவ்விடத்தை விட்டுப்போய், பரமசிவனைத் துதித்து, "இன்னும் ஒருகனி தந்தருளீராகில், அடியேனுடைய வார்த்தை பொய்யாய்விடும்" என்று விண்ணப்பஞ்செய்ய; சுவாமியுடைய திருவருளினாலே ஒருமாங்கனி அவர்கையில் வந்திருந்தது. அவர் அதைக் கொண்டுவந்து, கணவன்கையிற் கொடுக்க; அவன் ஆச்சரியமடைந்து வாங்கினான். வாங்கிய பழத்தைப் பின் காணாதவனாகி, மிகுந்த பயங்கொண்டு, மனந்தடுமாறி, அப்புனிதவதியாரைத் தெய்வமென நினைந்து,அவரைப் பிரிந்து வாழவேண்டும் என்றுதுணிந்து தன்கருத்தைப் பிறருக்கு வெளிப்படுத்தாமல், அவரோடு தொடர்பின்றி ஒழுகினான்.

ஒழுகு நாளிலே, ஒரு மரக்கலஞ் செய்வித்து, தான் செல்லவிரும்பிய தேசத்திலே விரும்பப்படுகின்ற அரும்பண்டங்களை அதனிடத்து, நிறைய ஏற்றி, சுபதினத்திலே சமுத்திரராஜனாகிய வருணனைத் தொழுதுகொண்டு, மாலுமி முதலியோரோடும் ஏறி, அத்தேசத்தை அடைந்து வாணிகஞ்செய்து, சிலநாளாயினபின், மீண்டும் அம்மரக்கலத்தில் ஏறி, பாண்டிநாட்டிலுள்ள ஓர்நகரத்தை அடைந்து, அங்குள்ள ஒருவைசியனுடைய மகளை விவாகஞ்செய்துகொண்டு, பெருஞ்செல்வத்தோடும் வாழ்ந்திருந்தான். அவனுக்கு அம்மனைவிவயிற்றிலே ஒரு பெண்குழந்தை

பிறந்தது. அவன் தான்கூடி வாழ்தற்கு அஞ்சி நீக்கிய மனைவியாரைத் தான் வணங்கும் தெய்வமாகக்கொண்டு, அவருடைய புனிதவதியார் என்னும் பெயரையே அந்தப்பெண்ணிற்கு இட்டான்.

பரமதத்தன் இப்படியே இங்கே இருக்க; புனிதவதியார் காரைக் காலிலே கற்பினோடு இல்லறத்தை வழுவாது நடத்திக்கொண்டு வந்தார். அவருடைய சுற்றத்தார்கள், வாணிகத்தின்பொருட்டுச் சென்ற பரமத் த்தன் பாண்டிநாட்டிலே ஓர்நகரத்திலே செல்வத்தை விருத்திசெய்து கொண்டு வாசஞ்செய்கின்றான் என்று கேள்வியுற்று, அவனிடத்திற் சில ரை அனுப்பி, அவனுடைய நிலையை உணர்ந்து, கவலை கூர்ந்து, புனிதவ தியாரைத் தாமே அவனிடத்திற்குக் கொண்டுபோய் விடவேண்டும் என் று நினைந்து, சிவிகையில் ஏற்றிக்கொண்டு சென்று, அவனிருக்கின்ற நகர த்திற்குச் சமீபித்து, தாம் புனிதவதியாரைக் கொண்டுவந்தமையை அவ னுக்கு ஆள் அனுப்பித் தெரிவித்தார்கள். அவன் அதனை அறிந்து அச் சங்கொண்டு,தன்னுடைய இரண்டாம் மனைவியோடும் மகளோடும் புனி தவதியாரிடத்திற்கு வந்து, "அடியேன் உம்முடைய கருணையினாலே வா ழ்கின்றேன். இந்தப் பெண்ணுக்கு உம்முடைய பெயரையே இட்டேன் என்று சொல்லிக்கொண்டு, அவருடைய பாதங்களிலே விழுந்து சாஷ் டாங்கமாக நமஸ்கரித்தான். உடனே புனிதவதியார் தம்முடைய சுற் றத்தார்களிடத்திலே அச்சத்தோடும் ஒதுங்கி நிற்க; அவர்கள் வெள்கி, பரமதத்தனை நோக்கி, "நீ உன்னுடைய மனைவியை வணங்குவதென்னை என்றார்கள். அதற்குப் பரமதத்தன் நான் இவரிடத்திலே ஒரு பெரிய அற்புதத்தைக் கண்டபடியால், இவர் தெய்வப்பெண்ணேயன்றி மானு டப்பெண்ணல்லர் என்று துணிந்து, இவரைப் பிரிந்தேன். இவரைநான் தொழுந்தெய்வம் என்று கொண்டமையால்;நான்பெற்ற இந்தக்குழந்தை க்கு இவர் பெயரைத் தரித்தேன். அதுபற்றியே இவருடைய திருவடி யையும் வணங்கினேன். நீங்களும் இவரை வணங்குங்கள்" என்றான். அது கேட்ட சுற்றத்தார்கள் "இது என்ன ஆச்சரியம்" என்றுதிகைத்து நின்றார்கள். புனிதவதியார் கணவன் சொல்லிய வார்த்தையைக்கேட்டு பரமசிவனுடைய திருவடிகளைச் சிந்தித்து, "சுவாமீ, இவனுடையகொள் கை இது. இனி இவன்பொருட்டுத் தாங்கிய அழகுதங்கிய தசைப்பொ தியை நீக்கி, தேவரீரைச் சூழ்ந்து நின்று துதிக்கின்ற பேய்வடிவை அடி யேனுக்குத் தந்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அந்தக்கண த்தே, அக்கடவுளுடைய திருவருளினாலே, மாமிசம் முழுதையும் உதறி எற்புடம்பாக, மண்ணுலகமும் விண்ணுலகமும் வணங்கும் பேய்வடிவ மாயினார். அப்பொழுது தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். தேவதுந் துபிகள் ஒலித்தன. அதுகண்ட சுற்றத்தார்களெல்லாரும் அஞ்சி, அவ ரை நமஸ்கரித்துக்கொண்டு போய்விட்டார்கள்.

புனிதவதியார் தமக்குச் சிவபெருமானுடைய திருவருளினாலே கிடைத்த ஞானத்தைக்கொண்டு, அற்புதத்திருவந்தாதியும் திருவிரட்டைமணிமாலையும் பாடி, திருக்கைலாசகிரிக்குப் போக விரும்பி, மனசிலும் பார்க்க மிகுந்த வேகத்தோடு சென்று, அந்தத்திருக்கைலாசகிரியின்பக்கத்தை அடைந்து, அங்கே காலினால் நடத்தல் தகுதியன்றென்று ஒழிந்து, தலையினாலே நடந்து போய், மலையிலேறினார். ஏறும்பொழுது, உமாதேவியார் அதைக் கண்டு, எம்போலிகள் புனிதவதியாருடைய திடபத்தியைக் குறித்து உலகமாதாவாகிய உமாதேவியாரே ஆச்சரியம் அடைந்தாராயின், நாம் எவ்வளவு ஆச்சரியம் அடைதல் வேண்டுமென்று சிந்திக்கச்செய்யும் பொருட்டுத் தாம் ஆச்சரியமுடையவராகி, அவரது பத்திமகிமையை உயர்வொப்பில்லாத பரமசிவனுடைய திருவாக்கினாலேயே நமக்கு உணர்த்துவித்து நம்மை உய்விக்கத் திருவுளங்கொண்டு; அக்கடவுளை வணங்கி நின்று, "சுவாமீ, இங்கே தலையினால் நடந்து ஏறிவருகின்ற எற்புடம்பையுடையவரது அன்பின் மகிமை இருந்தபடி என்னை" என்று விண்ணப்பஞ்செய்ய; பரமசிவன் "இங்கே வருகின்றவள் நம்மைத் துதிக்கின்ற அம்மை என்றறி. இந்தப்பெருமை பொருந்திய வடிவத்தையும் வேண்டிப் பெற்றாள்" என்றார். பின் புனிதவதியார்சமீபத்தில் வந்தவுடனே உலகமெல்லாம் உய்யும்பொருட்டு, அவரை நோக்கி, "அம்மையே" என்று அழைத்தார். அது கேட்ட புனிதவதியார் "அப்பா" என்று சொல்லிக்கொண்டு, அவருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்தார். சுவாமி அவரை நோக்கி, "உனக்கு வேண்டும் வரம் யாது" என்று வினாவ; புனிதவதியார் வணங்கி நின்று, "சுவாமீ அடியேனுக்கு இறவாத பேரின்பமயமாகிய அன்பு வேண்டும்; இனிப் பிறவாமைவேண்டும் பிறக்கினும் தேவரீரை ஒருகாலமும் மறவாமைவேண்டும்; இன்னும்தேவரீர் திருநிருத்தஞ்செய்யும் பொழுது, தேவரீருடைய திருவடியின்கீழே சிவானந்தத்தை உடையேனாகி, தேவரீரைப் பாடிக்கொண் டிருத்தல் வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்தார். சுவாமி அவரை நோக்கி "நீ தென்றிசையிலுள்ள ஆலங்காட்டிலே நம்முடைய நடனத்தைத் தரிசித்து, பேரானந்தத்தோடு நம்மைப் பாடிக்கொண்டிரு" என்று அருளிச்செய்தார். அதுகேட்ட காரைக்காலம்மையார் சுவாமியை நமஸ்கரித்து அநுமதி பெற்றுக்கொண்டு, திருவாலங்காட்டுக்குத் தலையினால் நடந்து சென்று, சுவாமியுடைய திருநடனத்தைத் தரிசித்து, "கொங்கைதிரங்கி" என்னும் மூத்ததிருப்பதிகத்தையும், "எட்டியிலவமீகை" என்னுந் திருப்பதிகத்தையும் பாடினார். அவர் சுவாமியுடைய தூக்கிய திருவடியின்கீழே சிவானந்தத்தை அநுபவித்துக் கொண்டு எக்காலமும் இருக்கின்றார்.

திருச்சிற்றம்பலம்.

காரைக்காலம்மையார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அப்பூதியடிகள்நாயனார் புராணம்.

தாண்டவம் புரியவல்ல தம்பிரா னாருக்கன்பர்
ஈண்டிய புகழின்பால ரெல்லையில் குணத்தின்மிக்கார்
ஆண்டசீ ரரசின்பாத மடைந்தவ ரறியாமுன்னே
காண்டகு காதல்கூரக் கலந்தவன் பினராயுள்ளார். (க)

களவுபொய் காமங்கோப முதலிய குற்றங்காய்ந்தார்
வளமிகு மனையின்வாழ்க்கை நிலையினார் மனைப்பாலுள்ள
அளவைக ணிறைகொல்மக்க ளாவொடு மேதிமற்றும்
உளவெலா மரசினாமஞ் சாற்றுமவ் வொழுக்க மிக்கார். (உ)

வடிவுதான் காணாராயு மன்னுசீர் வாக்கின்வேந்தர்
அடிமையுந் தம்பிரானா ரருளுங்கேட் டவர்நாமத்தார்
படிநிகழ் மடங்கள்தண்ணீர்ப் பந்தர்கண் முதலாயுள்ள
முடிவிலா வறங்கள்செய்து முறைமையால் வாழுநாளில். (௩)

வேறு.

பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிற்றின்
றிருப்பழனம் பணிந்துபணி செய்திருநா வுக்கரசர்
ஒருப்படுகா தலிற்பிறவு முடையவர்தம் பதிவணங்கும்
விருப்பினுடன் றிங்களூர் மருங்குவழி மேவுவார். (௪)

அளவில்சனஞ் செலவொழியா வழிக்கரையி லருளுடையார்
உளமனைய தண்ணளித்தா யுறுவேனிற் பரிவகற்றிக்
குளநிறைந்த நீர்த்தடம்போற் குளிர்தூங்கும் பரப்பினதாய்
வளமருவு நிழறருதண் ணீர்ப்பந்தர் வந்தணைந்தார். (௫)

வந்தணைந்த வாகீசர் மந்தமா ருதசீதப்
பந்தருட னமுதமுமாந் தண்ணீரும் பார்த்தருளிச்
சிந்தைவியப் புறவருவார் திருநாவுக் கரசெனும்பேர்
சந்தமுற வரைந்ததனை யெம்மருங்குந் தாங்கண்டார். (௬)

இப்பந்த ரிப்பெயரிட் டிங்கமைத்தா ரியாரென்றார்க்
கப்பந்த ரறிவார்க ளாண்டவர செனும்பெயராற்
செப்பருஞ்சீ ரப்பூதி யடிகளார் செய்தமைத்தார்
தப்பின்றி யெங்குமுள சாலைகுளங் காவென்றார். (௭)

என்றுரைக்க வரசுகேட் டிதற்கென்னோ கருத்தென்று
நின்றவரை நோக்கியவ ரெவ்விடத்தா ரெனவினவத்
துன்றியநூன் மார்பருமித் தொல்பதியார் மனையின்கட்
சென்றனரிப் பொழுததுவுஞ் சேய்த்தன்று நணித்தென்றார். (அ)

அங்ககன்று முனிவரும்போ யப்பூதி யடிகளார்
தங்குமனைக் கடைத்தலைமுன் சார்வாக வுள்ளிருந்த
திங்களூர் மறைத்தலைவர் செழுங்கடையில் வந்தடைந்தார்
நங்கள்பிரான் றமரொருவ ரெனக்கேட்டு நண்ணினார். (கூ)

கடிதணைந்து வாகீசர் கழல்பணிய மற்றவர்தம்
அடிபணியா முன்பணியு மாசினெதி ரந்தணனார்
முடிவிறவஞ் செய்தேள்கொன் முன்பொழியுங் கருணைபுரி
வடிவுடையீ ரென்மனையில் வந்தருளிற் றென்னென்றார். (க0)

ஒருகுன்ற வில்லாரைத் திருப்பழனத் துள்ளிறைஞ்சி
வருகின்றோம் வழிக்கரையி னீர்வைத்த வாய்ந்தவளந்
தருகின்ற நிழற்றண்ணீர்ப் பந்தருங்கண் டத்தகைமை
புரிகின்ற வறம்பிறவுங் கேட்டணைந்தோ மெனப்புகல்வார். (கக)

ஆறணியுஞ் சடைமுடியா ரடியார்க்கு நீர்வைத்த
ஈறில்பெருந் தண்ணீர்ப்பந் தரினும்பே ரெழுதாதே
வேறொருபேர் முன்னெழுத வேண்டியகா ரணமென்கொல்
கூறுமென வெதிர்மொழிந்தார் கோதின்மொழிக் கொற்றவனார். (கஉ)

நின்றமறை யோர்கேளா நிலையழிந்த சிந்தையராய்
நன்றருளிச் செய்திலீர் நாணிலமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூட்சி திருத்தொண்டி னுறைப்பாலே
வென்றவர்தந் திருப்பேரோ வேறொருபே ரெனவெகுள்வார். (கங)

நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
யிம்மையிலும் பிழைப்பதென வென்போல்வா ருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக் கரசர்திருப் பேரெழுத
வெம்மைமொழி யான்கேட்க விளம்பினீ ரெனவிளம்பி. (கச)

பொங்குகடற் கன்மிதப்பிற் போந்தேறு மவர்பெருமை
யங்கணர்தம் புவனத்தி லறியாதா ரியாருளரோ
மங்கலமாந் திருவேடத் துடனின்றிவ் வகைமொழிந்தீர்
எங்குறைவீர் நீர்தாமா ரியம்புமென வியம்பினார். (கரு)

திருமறையோ ரதுமொழியத் திருநாவுக் கரசரவர்
பெருமையறிந் துரைசெய்வார் பிறதுறையி னின்றேற்ற
அருள்பெருகு சூலையினா லாட்கொள்ள வடைந்துய்ந்த
தெருளுமுணர் வில்லாத சிறுமையேன் யானென்றார். (கசு)

அரசறிய வுரைசெய்ய வப்பூதி யடிகடாங்
கரகமல மிசைக்குவியக் கண்ணருவி பொழிந்திழிய
உரைகுழறி யுடம்பெல்லா முரோமபுள கம்பொலியத்
தரையின்மிசை விழுந்தவர்தஞ் சரணகம லம்பூண்டார். (௧௭)

மற்றவரை யெதிர்வணங்கி வாகீச ரெடுத்தருள
அற்றவர்க ளருநிதியம் பெற்றுர்போ லருமறையோர்
முற்றவுளங் களிகூர முன்னின்று கூத்தாடி
யுற்றவிருப் புடன்சூழ வோடினர் பாடினர். (௧௮)

மூண்டபெரு மகிழ்ச்சியினுன் முன்செய்வ தறியாதே
யீண்டமனே யகத்தெய்தி யில்லவர்க்கு மக்களுக்கும்
ஆண்டவர செழுந்தருளு மோகையுரைத் தார்வமுறப்
பூண்டபெருஞ் சுற்றமெலாங் கொடுமீளப் புறப்பட்டார். (௧௯)

மனைவியா ருடன்மக்கண் மற்றுள்ள சுற்றத்தோர்
அனைவரையுங் கொண்டிறைஞ்சி யாராத காதலுடன்
முனைவரையுள் ளெழுந்தருளு வித்தவர்தாண் முன்விளக்கும்
புனைமலர்நீர் தங்கண்மேற் றெளித்துள்ளும் பூரித்தார். (௨0)

ஆசனத்திற் பூசனைக ளமர்வித்து விருப்பினுடன்
வாசநிறை திருநீற்றுக் காப்பேந்தி மனந்தழைப்பத்
தேசமுய்ய வந்தவரைத் திருவமுது செய்விக்கு
நேசமுற விண்ணப்பஞ் செயவவரு மதுநேர்ந்தார். (௨௧)

வேறு.

செய்தவ ரிசைந்தபோது திருமனை யாரைநோக்கி
யெய்திய பேறும்பா லிருந்தவா றென்னேயென்று
மைதிகழ் மிடற்றினுன்ற னருளினுல் வந்ததென்றே
யுய்துமென் றுவந்துகொண்டு திருவமு தாக்கலுற்றுர். (௨௨)

தூயநற் கறிகளான வறுவகைச் சுவையாலாக்கி
யாயவின் னமுதுமாக்கி யமுதுசெய் தருளத்தங்கள்
சேயவர் தம்மின்மூத்த திருநாவுக் கரசைவாழை
மேயபொற் குருத்துக்கொண்டு வாவென விரைந்துவிட்டார். (௨௩)

நல்லதாய் தந்தையேவ நானிது செயப்பெற்றேனென்
றெல்லையி லணைந்துதோட்டத் துட்புக்குப் பெரியவாழை
மல்லலங் குருத்தையீரும் பொழுதினில் வாளராவொன்
றல்லலுற் றழுங்கிவீழ வங்கையிற் றீண்டிற்றன்றே. (௨௪)

கையினிற் கவர்ந்துசுற்றிக் கண்ணெரி காந்துகின்ற
பையர வுதறிவீழ்த்துப் பதைப்புடன் பாந்தள்பற்றும்
வெய்யவே கத்தால்வீழா முன்னம்வே கத்தாலெய்திக்
கொய்தவிக் குருத்தைச்சென்று கொடுப்பனென் றோடிவந்தான். (௨௫)

பொருந்திய விடவேகத்திற் போதுவான் வேகமுந்த
வருந்தியே யணையும்போழ்து மாசுணங் கவர்ந்ததார்க்கும்
அருந்தவ ரமுதுசெய்யத் தாழ்க்கயா னறையேனென்று
திருந்திய கருத்தினோடுஞ் செழுமனை சென்றுபுக்கான். (௨௬)

எரிவிட முறையேயேறித் தலைக்கொண்ட வேழாம்வேகந்
தெரிவுற வெயிறுங்கண்ணு மேனியுங் கருகித்தீந்து
விரியுரை குழறியாவி விடக்கொண்டு மயங்கிவீழ்வான்
பரிகலக் குருத்தைத்தாயார் பால்வைத்துப் படிமேல்வீழ்ந்தான். (௨௭)

தளர்ந்துவீழ் மகனைக்கண்டு தாயருந் தந்தையாரும்
உளம்பதைத் துற்றுநோக்கி யுதிரஞ்சோர் வடிவுமேனி
விளங்கிய குறியுங்கண்டு விடத்தினால் வீந்தானென்று
துளங்குத லின்றித்தொண்ட ரமுதுசெய் வதற்குச்சூழ்வார். (௨௮)

பெறலரும் புதல்வன்றன்னைப் பாயினுட் பெய்துமூடிப்
புறமனை முன்றிற்பாங்கோர் புடையினின் மறைத்துவைத்தே
யறவிது தெரியாவண்ண மமுதுசெய் விப்போமென்று
விறலுடைத் தொண்டனார்பால் விருப்பொடு விரைந்துவந்தார். (௨௯)

கடிதுவந் தமுதுசெய்யக் காலந்தாழ்க் கின்றதென்றே
யடிசிலுங் கறியுமெல்லா மழகுற வமையவைத்துப்
படியில்சீர்த் தொண்டர்முன்பு பணிந்தெழுந் தமுதுசெய்தெங்
குடிமுழு துய்யக்கொள்வீ ரென்றவர் கூறக்கேட்டு. (௩௦)

அருந்தவ ரெழுந்துசெய்ய வடியிணை விளக்கிவேறோர்
இருந்துமா சனத்திலேற்றிப் பரிகலந் திருத்துமுன்னர்
இருந்துவெண் ணீறுசாத்தி யில்லுடை யிருவருக்கும்
பொருந்திய நீறுநல்கிப் புதல்வர்க்கு மளிக்கும்போழ்தில். (௩௧)

ஆதிநான் மறைநூல்வாய்மை யப்பூதி யாரைநோக்கிக்
காதலா லிவர்க்குமூத்த சேயையுங் காட்டுமென்ன
மேதகு பூதிசாத்த வென்றலும் விளைந்ததன்மை
யாதுமொன் றுரையாரிப்போ திங்கவ னுதவானென்றார். (௩௨)

அவ்வுரை கேட்டபோதே யங்கண ரருளாலன்பர்
செவ்விய திருவுள்ளத்தோர் தடுமாற்றஞ் சேரநோக்கி
யிவ்வுரை பொறாதென்னுள்ள மென்செய்தா னிதற்கொன்றுண்டால்
மெய்விரித் துரையுமென்ன விளம்புவார் விதிர்ப்புற்றஞ்சி. (௩௩)

பெரியவ ரமுதுசெய்யும் பேறிது பிழைக்கவென்றோ
வருவதென் றுரையாரேனு மாதவர்வினவ வாய்மை
தெரிவுற வுரைக்கவேண்டுஞ் சீலத்தாற் சிந்தைநொந்து
பரிவொடு வணங்கிமைந்தர்க் குற்றது பகர்ந்தாரன்றே. (௩௪)

நாவினுக் கரசர்கேளா நன்றுநீர் மொழிந்தவண்ணம்
இயாவரித் தன்மைசெய்தா ரென்றுமுன் னெழுந்துசென்றே
யாவிதீர் சவத்தைநோக்கி யண்ணலா ரருளும்வண்ணம்
பாவிசைப் பதிகம்பாடிப் பணிவிடம் பாற்றுவித்தார். (௩௫)

தீவிட நீங்கவுய்ந்த திருமறை யவர்தஞ்சேயு
மேவிய வுறக்கநீங்கி விரைந்தெழு வானைப்போன்று
சேவுகைத் தவராட்கொண்ட திருநாவுக் கரசர்செய்ய
பூவடி வணங்கக்கண்டு புனிதநீ றளித்தாரன்றே. (௩௬)

பிறிவுறு மாவிபெற்ற பிள்ளையைக் காண்பார்தொண்டி
னெறியினைப் போற்றிவாழ்ந்தார் நின்றவப் பயந்தார்தாங்கள்
அறிவரும் பெருமையென்ப ரமுதுசெய் தருளுதற்குச்
சிறிதிடை யூறுசெய்தா னிவனென்று சிந்தைநொந்தார். (௩௭)

ஆங்கவர் வாட்டந்தன்னை யறிந்துசொல் லரசர்கூட
ஓங்கிய மனையிலெய்தி யமுதுசெய் தருளவுற்ற
பாங்கினி லிருப்பமுந்நூல் பயின்மணி மார்பர்தாமுந்
தாங்கிய மகிழ்ச்சியோடுந் தகுவன சமைத்துச்சார்வார். (௩௮)

புகழ்ந்தகோ மயத்தினீராற் பூமியைப் பொலியநீவித்
திகழ்ந்தவான் சுதையும்போக்கிச் சிறப்புடைத் தீபமேற்றி
நிகழ்ந்தவக் கதலிநீண்ட குருத்தினை விரித்துநீரான்
மகிழ்ந்துடன் விளக்கியீர்வாய் வலம்பெற மரபின்வைத்தார். (௩௯)

திருந்திய வாசநன்னீ ரளித்திடத் திருக்கைநீவும்
பெருந்தவ மறையோர்தம்மைப் பிள்ளைக ளுடனேநோக்கி
யரும் புதல்வர்களுநீரு மமுதுசெய் வீரிங்கென்ன
விரும்பிய வுள்ளத்தோடு மேலவ ரேவல்செய்வார். (௪0)

மைந்தரு மறையோர்தாமு மருங்கிருந் தமுதுசெய்யச்
சிந்தைமிக் கில்லமாதர் திருவமு தெடுத்துநல்கக்
கொந்தவிழ் கொன்றைவேணிக் கூத்தனு ரடியாரோடும்
அந்தமி லாளியாரங் கமுதுசெய் தருளினாரே. (௪௧)

பாதவ மறையோர்செல்வ மனையிடை யமுதுசெய்து
காதனண் பளித்துப்பன்னாள் கலந்துட னிருந்தபின்னை
மேதகு நாவின்மன்னர் விளங்கிய பழனமூதூர்
நாதர்தம் பாதஞ்சேர்ந்து நற்றமிழ்ப் பதிகஞ்செய்வார். (௪௨)

அப்பூதி யடிகளார்த மடிமையைச் சிறப்பித்தான்ற
மெய்ப்பூதி யணிந்தார்தம்மை விரும்புசொன் மாலைவேய்ந்த
இப்பூதி பெற்றநல்லோ ரெல்லையி லன்பாலென்றுஞ்
செப்பூதி யங்கைக்கொண்டார் திருநாவுக் கரசர்பாதம். (௪௩)

இவ்வகை யரசினும மேத்தியெப் பொருளுநாளும்
அவ்வருந் தவர்பொற்றுளே யெனவுணர்ந் தடைவார்செல்லுஞ்
செவ்விய நெறியதாகத் திருத்தில்லை மன்றுளாடு
நவ்வியங் கண்ணாள்பங்கர் நற்கழ னண்ணினாரே. (௪௪)

மான்மறிக் கையர்பொற்றாள் வாகீச ரடைவாற்பெற்ற
மேன்மையப் பூதியாராம் வேதியர் பாதம்போற்றிக்
கான்மலர்க் கமலவாவிக் கழனிசூழ் சாத்தமங்கை
நான்மறை நீலநக்கர் திருத்தொழி லவிலலுற்றேன். (௪௫)

ஆ திருவிருத்தம்-௧அ௪௫.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, திங்களூரிலே, பிராமணகுலத்திலே, பாவங்கள் என்று சொல்லப்பட்டவைகள் எல்லாவற்றையும் நீங்கினவரும், புண்ணியங்களென்று சொல்லப்பட்டவைகளெல்லாவற்றையும் தாங்கினவரும், கிருகஸ்தாச்சிரமத்தையுடையவரும், சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்தவருமாகிய அப்பூதியடிகளுயனார்என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவானுபூதிமானாகிய திருநாவுக்கரசுநாயனாருடைய மகிமையைக் கேள்வியுற்று, அவர்மேலே மிக அன்புகூர்ந்து, தம்முடைய வீட்டினுள்ள அளவைகள் தராசுகள் பிள்ளைகள் பசுக்கள் எருமைகள் முதலிய எல்லாவற்றிற்கும் அந்நாயனாருடைய பெயரையே சொல்லிவருவார். இன்னும் அவர்மேலாசையினாலே, திருமடங்கள் தண்ணீர்ப்பந்தர்கள் குளங்கள் திருநந்தனவனங்கள் முதலியனவற்றை அந்நாயனார் பெயரினாற் செய்துகொண்டிருந்தார்.

இருக்குநாளிலே, அத்திருநாவுக்கரசுநாயனார் திருப்பழனமென்னும் ஸ்தலத்தை வணங்கிக்கொண்டு, பிறதலங்களையும் வணங்கும்பொருட்டு, அந்தத் திங்களூருக்குச் சமீபமாகிய வழியே செல்லும்பொழுது ஒரு தண்ணீர்ப்பந்தரை அடைந்து, திருநாவுக்கரசுநாயனார் என்னும் பெயர் எங்கும் எழுதப்பட்டிருத்தலைக் கண்டு, அங்கு நின்றவர்கள் சிலரை நோக்கி, "இந்தத்தண்ணீர்ப்பந்தரை இப்பெயரிட்டுச் செய்தவர் யாவர்" என்று வினவ; அவர்கள் "இப்பந்தரைமாத்திரமன்று; இவ்விடத்தெங்கும் உள்ள அறச்சாலைகள் குளங்கள் திருநந்தனவனங்களெல்லாவற்றையும் அப்பூதியடிகளுயனாரென்பவர் இத்திருநாவுக்கரசுநாயனார் என்னும் பெயராலேயே செய்தனர்" என்றார்கள். அதைத் திருநாவுக்கரசுநாயனார் கேட்டு, "இங்ஙனஞ் செய்தற்குக் காரணம் யாதோ" என்று நினைந்து, அவர்களை நோக்கி, "அவர் எவ்விடத்தில் இருக்கின்றவர்" என்றுவினவ; "அவர் இவ்வூரவரே. இப்பொழுதுதான் வீட்டுக்குப்

போகின்றார். அவ்வீடும் தூரமன்று, சமீபமே'' என்றார்கள். உடனே திருநாவுக்கரசுநாயனார் அப்பூதியடிகணாயனாருடைய வீட்டுத்தலைக்கடை வாயிலிற் செல்ல; உள்ளிருந்த அப்பூதிநாயனார் சிவனடியார் ஒருவர் வாயிலில் வந்து நிற்கின்றார் என்று கேள்வியுற்று, விரைந்து சென்று, அவருடைய திருவடிகளிலே நமஸ்கரிக்க; அவரும் வணங்கினார். அப்பூதிநாயனார் "சுவாமீ, தேவரீர் இவ்விடத்திற்கு எதுபற்றி எழுந்தருளினீர்'' என்று வினவ; திருநாவுக்கரசுநாயனார் "நாம் திருபபழனத்தை வணங்கிக்கொண்டு வரும்பொழுது, வழியிலே நீர் வைத்த தண்ணீர்ப்பந்தரைக் கண்டும், அப்படியே நீர் செய்திருக்கின்ற பிறதருமங்களைக்கேட்டும், உம்மைக்காணவிரும்பி இங்கே வந்தோம்'' என்று சொல்லி, பின்பு, "சிவனடியார்கள்பொருட்டு நீர் வைத்த தண்ணீர்ப்பந்தரிலே உம்முடையபெய்ரை எழுதாது வேறொருபெயரை எழுதியதற்குக் காரணம் யாது'' என்று வினவ; அப்பூதிநாயனார் "நீர் நல்லவார்த்தை அருளிச்செய்திலீர். பாதகர்களாகிய சமணர்களோடுகூடிப் பல்லவராஜன் செய்த விக்கினங்களைச் சிவபத்திவலிமையினாலே ஜயித்த பெருந்தொண்டரது திருப்பெயரோ வேறொருபெயர்'' என்று கோபித்து, பின்னும், "பரமசிவனுக்குத் திருத்தொண்டுசெய்தலாலே இம்மையினும் பிழைக்கலாம் என்பதை என்போலும் அறிவிலிகளும் தெளியும்பொருட்டு அருள்புரிந்த திருநாவுக்கரசுநாயனாருடைய திருப்பெயரை நான் எழுத. நீர் இந்தக் கொடுஞ்சொல்லை நான்கேட்கும்படி சொன்னீர், கற்றோணியைக்கொண்டு கடல் கடந்த அந்த நாயனாருடைய மகிமையை இவ்வுலகத்திலே அறியாதார் யாருளர்! நீர் சிவவேடத்தோடு நின்று இவ்வார்த்தை பேசினீர். நீர் எங்கே இருக்கிறவர்? சொல்லும்'' என்றார்.

திருநாவுக்கரசுநாயனார் அவ்வப்பூதியடிகளுடைய அன்பை அறிந்து, "ஆருகதசமயப்படுகுழியினின்றும் ஏறும்பொருட்டுப் பரமசிவன் சூலைநோயை வருவித்து ஆட்கொள்ளப்பெற்ற உணர்வில்லாத சிறுமையேன் யான்'' என்று அருளிச்செய்தார். உடனே அப்பூதிநாயனார், இரண்டுகைகளும் சிரசின்மேலே குவிய, கண்ணீர் சொரிய, உரை தடுமாற, உரோமஞ்சிலிர்ப்ப, பூமியிலே விழுந்து திருநாவுக்கரசுநாயனாருடைய ஸ்ரீ பாதாரவிந்தங்களைப் பூண்டார். திருநாவுக்கரசுநாயனார் அப்பூதியடிகளை எதிர்வணங்கி எடுத்தருள; அப்பூதியடிகள் மிகக்களிப்படைந்து கூத்தாடினார்; பாடினார்; சந்தோஷமேலீட்டினால் செய்வது இன்னது என்று அறியாமல், வீட்டினுள்ளே சென்று, மனைவியாருக்கும் பிள்ளைகளுக்கும் பிறசுற்றத்தார்களுக்கும் திருநாவுக்கரசுநாயனார் எழுந்தருளிவந்த சந்தோஷசமாசாரத்தைச் சொல்லி, அவர்களை அழைத்துக்கொண்டுவந்து, நாயனாரை வணங்கும்படி செய்து, அவரை உள்ளே எழுந்தருளுவித்து, பாதப்பிரக்ஷாளனஞ் செய்தார். அங்ஙனஞ்செய்த தீர்த்தத்தை அவர்களெல்லாரும் தங்கண்மேலே தெளித்து, உள்ளும் பூரித்தார்கள். நாயனாரை

ஆசனத்தில் இருத்தி, விதிப்படி அருச்சனை செய்து, "சுவாமீ, தேவரீர் இங்கே திருவமுது செய்தருளல்வேண்டும்" என்று பிரார்த்திக்க; அவரும் அதற்கு உடன்பட்டருளினார். அப்பூதிநாயனார் திருவமுது சமைப்பித்து, தங்கள் புத்திரராகிய மூத்ததிருநாவுக்கரசை வாழைக்குருத்து அரிந்துகொண்டு வரும்பொருட்டு அனுப்ப; அவர் விரைந்து தோட்டத்திற் சென்று, வாழைக்குருத்து அரியும்பொழுது, ஒருபாம்பு அவருடையகையிலே தீண்டி, அதனைச் சுற்றிக்கொண்டது. அவர் அதை உதறி வீழ்த்து,பதைப்புடனே அது பற்றிய வேகத்தினாலே வீழுமுன்,கொய்த குருத்தை வேகத்தோடு கொண்டோடி வந்து, விஷம் முறையே ஏறித் தலைக்கொண்ட ஏழாம்வேகத்தினாலே பல்லும் கண்ணும் சரீரமும் கருகித் தீய்ந்து, உரை குழறி மயங்கி, குருத்தைத் தாயார்கையில் நீட்டி, கீழே விழுந்து இறந்தார். அது கண்டு,தந்தையாரும் தாயாரும்"ஐயோ இது தெரிந்தால் இனிநாயனார் திருவமுதுசெய்யாரோ" என்று துக்கித்து சவத்தைச் வீட்டுப்புறத்து முற்றத்தின் ஓர்பக்கத்திலே பாயினால் மறைத்து வைத்துவிட்டு, அப்பமூர்த்தி யிடத்திற்சென்று, "சுவாமீ, எழுந்து வந்து திருவமுது செய்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.அப்பமூர்த்தி எழுந்து, கைகால் சுத்திசெய்துகொண்டு, வேறோராசனத்தில் இருந்து, விபூதி தரித்து, அப்பூதிநாயனாருக்கும் அவர் மனைவியாருக்கும் விபூதி கொடுத்து, புதல்வர்களுக்கும் கொடுக்கும் போது, அப்பூதிநாயனாரை நோக்கி, "நாம் இவர்களுக்குமுன்னே விபூதி சாத்தும்படி உம்முடைய சேட்டபுத்திரரை வருவியும்" என்றார். அப்பூதிநாயனார் "இப்போது அவன் இங்கே உதவான்" என்றார். அப்பமூர்த்தி அதைக்கேட்டவுடனே சிவபிரானுடைய திருவருளினாலே தம்முடைய திருவுள்ளத்திலே ஒரு தடுமாற்றந்தோன்ற, அப்பூதிநாயனாரை நோக்கி, "அவன் என் செய்தான்? உண்மை சொல்லும்" என்றார். அப்பூதிநாயனார் அஞ்சி நடுக்குற்று, வணங்கி நின்று, நிகழ்ந்த சமாசாரத்தை விண்ணப்பஞ்செய்தார். அப்பமூர்த்தி அதைக்கேட்டு, "நீர்செய்தது நன்றாயிருக்கின்றது; இப்படி வேறியார் செய்தார்" என்று சொல்லிக்கொண்டு எழுந்து சிவாலயத்துக்குமுன் சென்று, சவத்தை அங்கே கொணர்வித்து, விஷத்தைநீக்கியருளும்பொருட்டுப் பரமசிவன்மேலே திருப்பதிகம் பாடினார். உடனே அப்புத்திரர் உயிர்பெற்று எழுந்து, அப்பமூர்த்தியுடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரிக்க; அப்பமூர்த்தி விபூதி கொடுத்தருளினார். அப்பூதிநாயனாரும் மனைவியாரும் தங்கள் புத்திரர் பிழைத்தமையைக் கண்டும் அதைக்குறித்துச் சந்தோஷியாமல், நாயனார் திருவமுதுசெய்யாதிருந்தமையைக்குறித்துச் சிந்தை நொந்தார்கள். அப்பமூர்த்தி அதனை அறிந்து, அவர்களோடும் வீட்டிற்சென்று, அப்பூதிநாயனாரோடும் அவர் புத்திரர்களோடும் ஒருங்கிருந்து திருவமுதுசெய்தருளினார். அப்படிசிலநாள் அங்கிருந்து, பின் திருப்பழனத்திற்குப் போயினார்.

அப்பூதியடிகள் சைவசமயா சாரியராகிய திருநாவுக்கரசு நாயனுருடைய திருவடிகளைத் துதித்தலே தமக்குப் பெருஞ்செல்வமெனக்கொண்டு வாழ்ந்திருந்து, சிலகாலஞ்சென்றபின் பரமசிவனுடைய திருவடிகளை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

அப்பூதியடிகளுயனூர்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருநீலநக்கநாயனூர் புராணம்.

பூத்தபங்கயப் பொகுட்டின்மேற் பொருகய லுகளுங்
காய்த்தசெந்நெலின் காடுசூழ்காவிரி நாட்டுச்
சாத்தமங்கையென் றுலகெலாநிகழ்வுறுந் தகைத்தால்
வாய்த்தமங்கல மறையவர்முதற்பதி வனப்பு. (க)

நன்மைசாலுமப் பதியிடைநறுநுதன் மடவார்
மென்மலர்த்தடம் படியமற்றவருடன் விரவி
யன்னமுன்றுறை யாடுவபாடுவ சாமம்
பன்மறைக்கிடை யுடன்பயிற்றுவபல பூவை. (உ)

ஆய்ந்தமெய்ப்பொரு ணீறெனவளர்க்குமக் காப்பில்
லேய்ந்தமூன்றுதீ வளர்த்துளாரிருபிறப் பாளர்
நீந்துநல்லற நீர்மையின்வளர்க்குமத் தீயை
வாய்ந்தகற்புட னென்கெனவளர்ப்பர்கண் மடவார். (௩)

சீலமுய்த்தவத் திருமறையோர்செழு மூதூர்
ஞாலமிக்கநான் மறைக்குலம்விளக்கிய நலத்தார்
ஆலம்வைத்தகண் டத்தவர்தொண்டரா மன்பர்
நீலநக்கனு ரென்பவர்நிகழ்ந்துளா ரானூர். (௪)

வேதவுள்ளுறை யாவனவிரிபுனல் வேணி
நாதர்தம்மையு மவரடியாரையு நயந்து
பாதமர்ச்சனை புரிவதும்பணிவது மென்றே
காதலாலவை யிரண்டுமேசெய்கருத் துடையார். (௫)

மெய்த்தவாகம விதிவழிவேதகா ரணரை
நித்தல்பூசனை புரிந்தெழுநியமமுஞ் செய்தே
யத்தரன்பருக் கமுதுசெய்விப்பது முதலா
இத்திறத்தன பணிகளுமேற்றெதிர் செய்வார். (௬)

ஆயசெய்கையி லமருநாளாதினை நாளின்
மேயபூசனை கியதியைவிதியினுன் முடித்துத்
தூயதொண்டனூர் தொல்லைீடயவந்தி யமர்ந்த
நாயனாரையு மர்ச்சனைபுரிந்திட நயந்தார். (எ)

உறையுளாகிய மனைநின்றுமொருமையன் புற்ற
முறைமையால்வரு பூசைக்குமுற்றவேண் டுவன
குறைவறக்கொண்டு மனைவியார்தம்மொடுங் கூட
இறைவர்கோயில்வந் தெய்தினரொல்லையி றவத்தோர். (அ)

அணையவந்துபுக் கயவந்திமேவிய வமுதின்
றுணைமலர்க்கழ றொழுதுபூசனைசெயத் தொடங்கி
யிணையகின்றங்கு வேண்டுவமனைவியா ரேந்த
உணர்வுமிக்கவ ருயர்ந்தவர்ச்சனைமுறை யுய்த்தார். (௯)

நீடுபூசனை நிரம்பியுமன்பினு னிரம்பார்
மாடுசூழ்புடை வலங்கொண்டுவணங்கிமுன் வழுத்தித்
தேடுமாமறைப் பொருளினைத்தெளிவுற நோக்கி
நாடுமஞ்செழுத் துணர்வுறவிருந்துமுன் னவின்றார். (௧0)

தொலைவில்செய்தவத் தொண்டனார்சுருதியே முதலாங்
கலையினுண்மையா மெழுத்தஞ்சுங்கணிக்கின்ற காலை
நிலையினின்றுமுன் வழுவிடநீண்டபொன் மேருச்
சிலையினூர்திரு மேனிமேல்விழுந்ததோர் சிலம்பி. (௧௧)

விழுந்தபோதிலங் கயனின்றமனைவியார் விரைவுற்
றெழுந்தவச்சமோ டிளங்குழவியில்விழுஞ் சிலம்பி
யொழிந்துநீங்கிட வூதிமுன்றுமிப்பவர் போலப்
பொழிந்தவன்பினு லூதிமேற்றுமிந்தனர் போக. (௧௨)

பதைத்தசெய்கையான் மனைவியார்முற்செயப் பந்தஞ்
சிதைக்குமாதவத் திருமறையவர்கண்டு தங்கண்
புதைத்துமற்றிது செய்ததென்பொறியிலா யென்னச்
சுதைச்சிலம்பிமேல் விழவூதித்துமிந்தன னென்றார். (௧௩)

மனைவியார்செய்த வன்பினைமனத்தினிற் கொள்ளார்
புனையுநூன்மணி மார்பர்தம்பூசனைத் திறத்தில்
இனையசெய்கையிங் கநுசிதமாமென வெண்ணு
நினைவினலவர் தம்மைவிட்டகன்றிட நீப்பார். (௧௪)

மின்னெடுஞ்சடை விமலர்மேல்விழுந்தநூற் சிலம்பி
றன்னைவேறொரு பரிசினுற்றவிர்ப்பது தவிர
முன்னணைந்துவந் தூதிவாய்நீர்ப்பட முயன்று
யுன்னையானினித் துறந்தனனிங்கென வுரைத்தார். (௧௫)

மற்றவேலையிற் கதிரவன்மலைமிசை மறைந்தான்
உற்றவேவலின் மனைவியாரொருவழி நீங்க
முற்றவேண்டுவ பழுதுதீர்பூசனை முடித்துக்
கற்றைவேணியர் தொண்டருங்கடிமனை புகுந்தார். (௧௬)

அஞ்சுமுள்ளமோ டவர்மருங்கணைவுற மாட்டார்
நஞ்சமுண்டவர் கோயிலினங்கையா ரிருந்தார்.
செஞ்சொனான்மறைத் திருநீலநக்கர்தா மிரவு
பஞ்சின்மெல்லணைப் பள்ளியிற்பள்ளிகொள் கின்றார். (௧௭)

பள்ளிகொள்பொழு தயவந்திப்பரமர்தாங் கனவில்
வெள்ளநீர்ச்சடை யொடுநின்றுமேனியைக் காட்டி
யுள்ளம்வைத்தெம்மை யூதிமுன்றுமிந்தபா லொழியக்
கொள்ளுமிப்புறஞ் சிலம்பியின்கொப்புளென் றருள. (௧௮)

கண்டவப்பெருங் கனவினைநனவெனக் கருதிக்
கொண்டவச்சமோ டஞ்சலிகுவித்துடன் விழித்துத்
தொண்டனார்தொழு தாடினார்பாடினார் துதித்தார்
அண்டநாயகர் கருணையேபோற்றிநின் றழுதார். (௧௯)

போதுபோயிருள் புலர்ந்திடக்கோயிலுட் புகுந்தார்
ஆதிநாயக னாவந்தியமர்ந்தவங் கணர்தம்
பாதமூலங்கள் பணிந்துவீழ்ந்தெழுந்துமுன் பரவி
மாதராரையுங் கொண்டுதம்மனையின்மீண் டணைந்தார். (௨௦)

பின்புமுன்னையிற் பெருகியமகிழ்ச்சிவந் தெய்த
இன்புறுந்திறத் தெல்லையில்பூசனை யியற்றி
யன்புமேம்படு மடியவர்மிகவணை வார்க்கு
முன்புபோலவர் வேண்டுவவிருப்புடன் முடிப்பார். (௨௧)

அன்னதன்மையி லமர்ந்தினிதொழுகுமந் நாளின்
மன்னுபூந்தராய் வருமறைப்பிள்ளையார் பெருமை
பன்னிவையகம் போற்றிடமற்றவர் பாதம்
சென்னிவைத்துடன் சேர்வுறும்விருப்பினிற் சிறந்தார். (௨௨)

பண்புமேம்படு நிலைமையார்பயிலுமப் பருவ
மண்பெருந்தவப் பயன்பெறமருவுமப் பதிகள்
விண்பிறங்குநீர் வேணியார்தமைத்தொழ வணைவான்
சண்பைமன்னருஞ் சாத்தமங்கையில்வந்து சார்ந்தார். (௨௩)

நீடுசேர்த்திரு நீலகண்டப்பெரும் பாணர்
தோடுலாங்குழல் விறலியாருடன்வரத் தொண்டர்
கூடுமப்பெருங் குழாத்தொடும்புகலியர் பெருமான்
மாடுவுந்தமை கேட்டுளமகிழ்நீல நக்கர். (௨௪)

கேட்டவப்பொழு தேபெருமகிழ்ச்சியிற் கிளர்ந்து
தோட்டலங்கலுங் கொடிகளும்புனைந்துதோ ரணங்க
ணாட்டிநீணடைக் காவணமிட்டுநற் சுற்றத்
தீட்டமுங்கொடு தாமுமுன்பெதிர்கொள வெழுந்தார். (௨௫)

சென்றுபிள்ளையா ரெழுந்தருளுந்திருக் கூட்டம்
ஒன்றியங்கெதிர் கொண்டுதங்களிப்பினு லொருவா
றன்றியாடியும் பாடியுந்தொழுதெழுந் தணைவார்
பொன்றயங்குநீண் மனையிடையுடன்கொண்டு புக்கார். (௨௬)

பிள்ளையாரெழுந் தருளியபெருமைக்குத் தக்க
வெள்ளமாகிய வடியவர்கூட்டமும் விரும்ப
உள்ளமாதர வோங்கிடவோங்குசீர்க் காழி
வள்ளலாரைத்தம் மனையிடையமுதுசெய் வித்தார். (௨௭)

அமுதுசெய்தபின் பகலவன்கருங்கட லணையக்
குமுதவாவியிற் குளிர்மதிக்கதிரணை போதில்
இமயமங்கைதன் றிருமுலையமுதுண்டா ரிரவு
தமதுசீர்மனைத் தங்கிடவேண்டுவ சமைத்தார். (௨௮)

சீலமெய்த்திருத் தொண்டரோடமுதுசெய் தருளி
ஞாலமிக்கிட நாயகியுடனம்பர் நண்ணுங்
காலமுற்பெற வழுதவரழைத்திடக் கடிது
நீலநக்கனுர் வந்தடிபணிந்துமுன் னின்றார். (௨௯)

நின்றவன்பரை நீலகண்டப்பெரும் பாணர்
இன்றுதங்கவோ ரிடங்கொடுத்தருளுவீ ரென்ன
நன்றுமின்புற்று நடுமனைவேதியின் பாங்கர்ச்
சென்றுமற்றவர்க் கிடங்கொடுத்தார்திரு மறையோர். (௩0)

ஆங்குவேதியி லறுதசெந்தீவலஞ் சுழிவுற்
றோங்கிமுன்னையி லொருபடித்தன்றியே யொளிரத்
தாங்குநூலவர் மகிழ்வுறச்சகோடயாழ்த் தலைவர்
பாங்குபாணியா ருடனருளாற்பள்ளி கொண்டார். (௩௧)

கங்குலிற்பள்ளி கொண்டபின்கவுணியர்க் கிறைவர்
அங்குநின்றெழுந் தருளுவாரயவந்தி யமர்ந்த
திங்கள்சூடியை நீலநக்கரைச்சிறப் பித்தே
பொங்குசெந்தமிழ்த் திருப்பதிகத்தொடை புனைந்தார். (௩௨)

பதிகநாண்மலர் கொண்டுதம்பிரான்கழல் பரவி
யதிகநண்பினை நீலநக்கருக்களித் தருளி
யெதிர்தொழும்பதி களிலெழுந்தருளினு ரென்றும்
புதியசெந்தமிழ்ப் பழமறைமொழிந்தபூ சுரனுர். (௩௩)

பிள்ளையாரெழுந் தருளவத்தொண்டர்தாம் பின்பு
தள்ளுமன்புடன் கேண்மையுந்தப்பில வெனினும்
வள்ளலார்திரு வருளினைவலியமாட் டாமை
யுள்ளமங்குடன் போக்கிமீண்டொருவகை யிருந்தார். (௩௪)

மேவுநாளிலவ் வேதியர்முன்புபோல் விரும்புந்
தாவில்பூசனை முதற்செய்கைதலைத்தலை சிறப்பச்
சேவின்மேலவர் மைந்தராந்திருமறைச் சிறுவர்
பூவடித்தலம் பொருந்தியவுணர்வொடும் பயின்றார். (௩௫)

சண்பையாளியார் தாமிருந்தருளுமெப் பதியு
நண்புமேம்பட நாளிடைச்செலவிட்டு நண்ணி
வண்பெரும்புக ழவருடன்பயின்றுவந் தணைந்தார்
திண்பெருந்தொண்ட ராகியதிருநீல நக்கர். (௩௬)

பெருகுகாதலிற் பன்னெடுநாண்முறை பிறங்க
வருபெருந்தவ மறையவர்வாழிசீ காழி
யொருவர்தந்திருக் கல்லியாணத்தினி லுடனே
திருமணத்திறஞ் சேவித்துநம்பர்தாள் சேர்ந்தார். (௩௭)

தருதொழிற்றிரு மறையவர்சாத்தமங் கையினில்
வருமுதற்பெருந் திருநீலநக்கர்தாள் வணங்கி
யிருபிறப்புடை யந்தணரேறுயர்த் தவர்பால்
ஒருமையுய்த்துணர் நமிநந்தியார்தொழி லுரைப்பாம். (௩௮)

ஆக திருவிருத்தம் - ௧௧௦௩.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, சாத்தமங்கையிலே, பிராமணகுலத்திலே, திருநீலநக்கநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் வேதத்தின் உள்ளுறையாவது பரமசிவனையும் அவருடைய அடியார்களையும் அன்பினோடு அருச்சித்து வணங்குதலே என்று துணிந்து, தினந்தோறுஞ் சைவாகமவிதிப்படி சிவார்ச்சனை பண்ணி, சிவபத்தர்களுக்குத் திருவமுது செய்வித்தல் முதலாகிய பலவகைப்பட்ட பணிகளையுஞ்செய்வார்.

அப்படிச்செய்யுநாளிலே, ஒரு திருவாதிரை நக்ஷத்திரத்திலே, சிவபூசையை முடித்துக்கொண்டு, அந்தஸ்தலத்திலுள்ள அயவந்தி என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற சுவாமியையும் அருச்சிக்க விரும்பி, தம்முடையமனைவியார் பூசைக்கு வேண்டும் உபகரணங்களைக் குறைவறக் கொண்டுவர, அவ்வாலயத்திற்சென்று, பூசை பண்ணிப் பிரதக்ஷிணஞ்செய்து, சந்நிதானத்திலே நமஸ்கரித்து, இருந்துகொண்டு, வேதாகமாதி சமஸ்த சாத்திரங்களின் உண்மைப்பொருளாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஜபித்

தார். ஜபிக்கும்பொழுது, ஒரு சிலம்பி மேலே நின்று வழுவி, சிவலிங் கத்தின்மேல் விழுந்தது. அதைச் சமீபத்திலே நின்ற மனைவியார் கண்டு அச்சமடைந்து, விரைந்து, குழந்தைமேல் விழுஞ் சிலம்பி நீங்கும்படி ஊதித் துமிபவர்போல அன்பு மிகுதியினாலே அந்தச்சிலம்பி நீங்கும்படி ஊதித் துமிந்தார். திருநீலநக்கநாயனார் அதைக்கண்டு, தம்முடைய கண்ணைப் புதைத்து, "அறிவில்லாதவளே, நீ இப்படிச் செய்ததென்னை என்று சொல்ல; மனைவியார் "சிலம்பி விழுந்தபடியால் ஊதித் துமிந் தேன்" என்றார். நாயனார் மனைவியாருடைய அன்பின் செய்கையை நன்குமதியாமல், அது அநுசிதம் என்று நினைந்து, அவரைநோக்கி, "நீசிவ லிங்கத்தின்மேலே விழுந்த சிலம்பியை வேறொருபரிசினாலே நீக்காமல், முற்பட்டுவந்து ஊதித் துமிந்தாய். இந்த அநுசிதத்தைச் செய்த உன்னை நான் இனித்துறந்தேன்; நீங்கிவிடு" என்றார். அப்பொழுது சூரியாஸ்த மயனமாயிற்று. மனைவியார் நாயகருடைய ஏவலினாலே ஒருவழி நீங்க; நாயகர் பூசையை முடித்துக்கொண்டு, வீட்டிற்குத் திரும்பிவிட்டார். மனைவியார் அஞ்சுகின்ற உள்ளத்தோடும், அவரிடத்திற்செல்லமாட்டா தவராகி, ஆலயத்தில் இருந்தார். நாயனார் நித்திரை செய்யும்பொழுது பரமசிவன் அவருக்குச்சொப்பனத்திலே தோன்றி, தம்முடைய திருமே னியைக்காட்டி, "உன்மனைவி மனம்வைத்து ஊதித் துமிந்த இடமொ ழிய, இப்புறம் சிலம்பியின் கொப்புளம்" என்று சொல்லியருளினார். நாயனார் அச்சத்துடனே அஞ்சலிசெய்துகொண்டு விழித்து எழுந்து, கூத்தாடினார்; பாடினார்; சிவபிரானுடைய திருவருளை வியந்து நின்று அழுதார். விடிந்தபின், ஆலயத்துக்குப்போய், சுவாமியை நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ்செய்து, மனைவியாரையும் அழைத்துக்கொண்டு, வீட்டுக் குத் திரும்பினார். அதற்குப்பின், முன்னிலும்பார்க்க மிகுந்தமகிழ்ச்சி யோடு, சிவார்ச்சனையையும் மாகேசுரபூசையையுஞ் செய்துகொண்டிருந் தார்.

அப்படியிருக்குநாளிலே, பரமாசாரியாராகிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனாருடைய மகிமையைக் கேள்வியுற்று, அவருடைய ஸ்ரீபாதா ரவிந்தங்களைத் தரிசிக்கவேண்டும் என்னும் அத்தியந்த ஆசையையுடைய ராயினார். அப்படியிருக்கும்பொழுது, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அயவந்திநாதரை வணங்கும்பொருட்டுத் திருக்கூட்டத்தோடும் சாத்தம ங்கைக்கு எழுந்தருளி வர; திருநீலநக்கநாயனார் கேள்வியுற்று, மிகுந்த மகிழ்ச்சியோடும் நடைப்பந்தரிட்டு,வாழைகளையும் கமுகுகளையும் நாட்டி தோரணங்கள் கட்டி, நிறைகுடங்களும் தூபதீபங்களும் வைத்து,தம்மு டைய சுற்றத்தார்கள் சமஸ்தரோடும் அவரை எதிர்கொண்டு நமஸ்கரி த்து, தம்முடைய வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போய், திருவமுது செய்வித்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அன்றிரவிலும் அங்கே தானே திருவமுதுசெய்து, திருநீலநக்கநாயனாரை அழைத்து, "திருநீலந

ண்டப் பெரும்பாணருக்கும் விறலியாருக்கும் இன்று தங்குதற்கு ஓரிடங்கொடும்'' என்று சொல்லியருள; திருநீலநக்கநாயனார் வீட்டுக்கு நடுவிலிருக்கின்ற வேதிகையின் பக்கத்திலே அவர்களுக்குஇடங்கொடுத்தார் பெரும்பாணர், அவ்விடத்திலே வேதிகையிலுள்ள நித்தியாக்கினி வலஞ்சுழித்து ஓங்கி முன்னையிலுஞ் சிறந்து பிரகாசித்து,வருணமன்றுபத்தியே மகிமைதருவது என்பதை விளக்கவும், அது கண்ட திருநீலநக்கநாயனார் மகிழ்ச்சியடையவும், விறலியாரோடு நித்திரைசெய்தார்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், விடிந்தபின், அயவந்தியிற் சென்று சுவாமிமேலே திருநீலநக்கநாயனாரைச் சிறப்பித்துத் திருப்பதிகம்பாடி, சிலநாள் அங்கிருந்து, பின் திருநீலநக்கநாயனாருக்கு விடைகொடுத்து, அந்தத்திருப்பதியினின்றும் நீங்கியருளினார். திருநீலநக்கநாயனார் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்மேலே பதிந்த அன்பும் அவருடைய கேண்மையும் அவருக்குப் பின் செல்லும்படி தம்மை வலிந்தனவாயினும், தாம் அவருடைய ஆஞ்ஞையை வலியமாட்டாமையால், அந்தத்திருப்பதியிலே அவருடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் செல்லுந்தலங்களிலே இடைநாட்களிற் சென்று அவரோடிருந்து, பின் திரும்பிவிடுவார். இப்படி நெடுநாட்செ ன்றபின், திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய திருமணத்தைச் சேவித்துச் சிவபதமடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

திருநீலநக்கநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## நமிநந்தியடிகணாயனார் புராணம்.

வையம்புரக்குந் தனிச்செங்கோல் வளவர்பொன்னித் திருநாட்டுச்
செய்யகமலத் தடம்பணையுஞ் செழுநீர்த்தடமும் புடையுடைத்தாய்ப்
பொய்தீர்வாய்மை யருமறைநூல் புரிந்தசீலப் புகழதனால்
எய்தும்பெருமை யெண்டிசையு மேறுமேமப் பேறூரால். (க)

மாலைபயிலுந் தோரணங்கண் மருங்குபயிலு மணிமறுகு
வேலைபயிலும் புனல்பருகு மேகம்பயிலு மாடங்கள்
சோலைபயிலுங் குளிர்ந்தவிருள் சுரும்புபயிலு மரும்பூகங்
காலைபயிலும் வேதவொலி கழுநீர்பயிலுஞ் செழுநீர்ச்செய். (உ)

பணையில்விளைந்த வெண்ணெல்லின் பரப்புமீது படச்செய்ய
துணையமென்கமல மிடையிடையே சுடர்விட்டெழுந்து தோன்றுவன
புணர்மென்புரிநூ லவர்வேள்விக் களத்திற்புனைந்த வேதிகைமேன்
மணல்வெண்பரப்பி னிடையிடையே வளர்த்தசெந்தீ மானுமால். (௩)

பெருமைவிளங்கு மப்பதியிற் பேணுநீற்றுச் சைவநெறி
யொருமைநெறிவா ழந்தணர்த மோங்குகுலத்தி னுள்வந்தார்
இருமையுலகு மீசர்கழ லிறைஞ்சியேத்தப் பெற்றதவத்
தருமைபுரிவர் நமிநந்தி யடிகளென்பா ராயினார். (௪)

வாய்மைமறைநூற் சீலத்தால் வளர்க்குஞ்செந்தீ யெனத்தகுவார்
தூய்மைத்திருநீற் றடைவேமெய்ப் பொருளென்றறியுந் துணிவினார்
சாமகண்டர் செய்யகழல் வழிபட்டொழுகுந் தன்மைநிலை
யாமவிரவும் பகலுமுணர் வொழியாவின்ப மெய்தினார். (௫)

அவ்வூர்நின்றுந் திருவாரூ ரதனையடைவா ரடியார்மேல்
வெவ்வூறகற்றும் பெருமான்றன் விரைசூழ்மலர்த்தாள் பணிவுறுவ
தெவ்வூதியமு மெனக்கொள்ளு மெண்ணமுடையார் பலநாளுந்
தெவ்வூரெரித்த வரிச்சிலையார் திருப்பாதங்கள் வணங்கினார். (௬)

செம்பொற்புற்றின் மாணிக்கச் செழுஞ்சோதியைநேர் தொழுஞ்சீலந்
தம்பற்றாக நினைந்தணைந்து தாழ்ந்துபணிந்து வாழ்ந்துபோந்
தம்பொற்புரிசைத் திருமுன்றி லணைவார்பாங்கோ ரரனெறியி
னம்பர்க்கிடமாங் கோயிலினுட் புக்குவணங்க நண்ணினார். (௭)

நண்ணியிறைஞ்சி யன்பினா னயப்புற்றெழுந்த காதலுடன்
அண்ணலாரைப் பணிந்தெழுவா ரடுத்தநிலைமைக் குறிப்பினாற்
பண்ணுந்தொண்டின் பாங்குபல பயின்றுபரவி விரவுவார்
எண்ணிறீப மேற்றுவதற் கெடுத்தகருத்தி னிசைந்தெழுவார். (௮)

எழுந்தபொழுது பகற்பொழுதிங் கிறங்குமாலை யெய்துதலுஞ்
செழுந்தண்பதியி னிடையப்பாற் செல்லிற்செல்லும் பொழுதென்ன
ஒழிந்தங்கணைந்தோர் மனையில்விளக் குறுநெய்வேண்டி யுள்புகலும்
அழிந்தநிலைமை யமணர்மனை யாயிற்றங்க ணவருரைப்பார். (௯)

கையில்விளங்கு கனலுடையார் தமக்குவிளக்கு மிகைகாணு
நெய்யிங்கில்லை விளக்கெரிப்பீ ராகினீரை முகந்தெரித்தல்
செய்யுமென்று திருத்தொண்டர்க் குரைத்தார்தெளியா தொருபொருளே
பொய்யுமெய்யு மாமென்னும் பொருண்மேற்கொள்ளும் புரைநெறியார்.

அருகர்மதியா துரைத்தவுரை யாற்றாராகி யப்பொழுதே
பெருகமனத்தில் வருத்தமுடன் பெயர்ந்துபோந்து பிறையணிந்த
முருகுவிரியு மலர்க்கொன்றை முடியார்கோயின் முன்னெய்தி
யுருகுமன்பர் பணிந்துவிழ வொருவாக்கெழுந்த துயர்விசும்பில். (௧௧)

வந்தகவலை மாற்றுமினி மாறுவிளக்குப் பணிமாற
இந்தமருங்கிற் குளத்துநீர் முகந்துகொடுவந் தேற்றுகென்ன
அந்திமதிய மணிந்தபிரா னருளென்றெழுந்த மொழிகேளாச்
சிந்தைமகிழ்ந்து நமிநந்தி யடிகள்செய்வ தறிந்திலரால். (௧௨)

சென்னிமிசைநீர் தரித்தபிரா னருளேசிந்தை செய்தெழுவார்
நன்னீர்ப்பொய்கை நடுப்புக்கு நாதர்நாம நவின்றேத்தி
யந்நீர்முகந்து கொண்டேறி யப்பர்கோயி லடைந்தகலுண்
முந்நீருலக மதிசயிப்ப முறுக்குந்திரிமே னீர்வார்த்தார். (௧௩)

சோதிவிளக்கொன் றேற்றுதலுஞ் சுடர்விட்டெழுந்த ததுநோக்கி
யாதிமுதல்வ ரரனெறியார் கோயிலடைய விளக்கேற்றி
யேதநினைந்த வருகந்த ரெதிரேமுதிருங் களிப்பினுட
னாதரருளாற் றிருவிளக்கு நீராலெரித்தார் நாடறிய. (௧௪)

நிறையும்பரிசு திருவிளக்கு விடியுமளவு நின்றெரியக்
குறையுந்தகளி களுக்கெல்லாங் கொள்ளவேண்டு நீர்வார்த்து
மறையின்பொருளை யருச்சித்து மனையினியதி வழுவாமல்
உறையும்பதியி னவ்விரவே யணைவார்பணிவுற் றொருப்பட்டார். (௧௫)

இரவுசென்று தம்பதியி லெய்திமனைப்புக் கென்றும்போல்
விரவிநியமத் தொழின்முறையே விமலர்தம்மை யர்ச்சித்துப்
பரவியமுது செய்தருளிப் பள்ளிகொண்டு புலர்காலை
யரவமணிவார் பூசையமைத் தாரூர்நகரின் மீண்டணைந்தார். (௧௬)

வந்துவணங்கி யரனெறியார் மகிழுங்கோயில் வலங்கொண்டு
சிந்தைமகிழப் பணிந்தெழுந்து புறம்புமுள்ளுந் திருப்பணிகள்
முந்திமுயன்று பகலெல்லா முறையேசெய்து மறையவனார்
அந்தியமைத்த வரியவிளக் கெங்குமேற்றி யடிபணிந்தார். (௧௭)

பண்டுபோலப் பலநாளும் பயிலும்பணிசெய் தவரொழுகத்
தண்டியடிக ளாலமணர் கலக்கம்விளைக்கச் சார்விலமண்
குண்டரழிய வேழுலகுங் குலவும்பெருமை நிலவியதால்
அண்டர்பெருமான் றொண்டர்கழ லமரர்பணியு மணியாரூர். (௧௮)

நாதமறைதேர் நமிநந்தி யடிகளார்நற் றொண்டாகப்
பூதநாதர் புற்றிடங்கொள் புனிதர்க்கமுது படிமுதலா
நீதிவளவன் றன்வேண்டு நிபந்தம்பலவு மரியணையின்
மீதுதிகழ விருந்தமைத்தான் வேதாகமநூல் விதிவிளங்க. (௧௯)

வென்றிவிடையார் மதிச்சடையார் வீதிவிடங்கப் பெருமாள்தாம்
என்றுந்திருவா ரூராளு மியல்பின்முறைமைத் திருவிளையாட்
டொன்றுஞ்செயலும் பங்குனியுத் திரமாந்திருநா ளுயர்சிறப்பு
நின்றுவிண்ணப் பஞ்செய்த படிசெய்தருளு நேர்பெற்றார். (௨௦)

இன்னபரிசு திருப்பணிகள் பலவுஞ்செய்தே யேழுலகு
மன்னும்பெருமைத் திருவாரூர் மன்னரடியார் வழிநிற்பார்
அன்னவண்ணந் திருவிளையாட் டாடியருள வெந்நாளு
நன்மைபெருக நமிநந்தி யடிகடொழுதார் நாமுய்ய. (உக)

தேவர்பெருமா னெழுச்சிதிரு மணலூர்க்கொருநா ளெழுந்தருள
யாவரொன்று துடன்சேவித் தெல்லாக்குலத்தி லுள்ளோரு
மேவவன்பர் தாமுமுடன் சேவித்தணைந்து விண்ணவர்தங்
காவலாள ரோலக்க மங்கேகண்டு களிப்புற்றார். (உஉ)

பொழுதுவைகச் சேவித்துப் புனிதர்மீண்டுங் கோவில்புகத்
தொழுதுதம்மூர் மருங்கணைந்து தூயமனையுட் புகுதாதே
யிழுதுமிருள்சே ரிரவுபுறங் கடையிற்றுயில வில்லத்து
முழுதுந்தருமம் புரிமனையார் வந்துட்புகுத மொழிகின்றார். (உ௩)

திங்கண்முடியார் பூசனைகண் முடித்துச்செய்யுங் கடன்முறையால்
அங்கிதனைவேட் டமுதுசெய்து பள்ளிகொள்வீ ரெனவவர்க்குத்
தங்கள்பெருமான் றிருமணலூர்க் கெழுச்சிசேவித் துடனண்ண
எங்குமெல்லா ரும்போத விழிவுதொடக்கிற் றெனையென்று. (௩ச)

ஆதலாலே குளித்தடுத்த தூய்மைசெய்தே யகம்புகுந்து
வேதநாதர் பூசனைக டொடங்கவேண்டு மதற்குநீ
சீதநன்னீர் முதலான கொண்டிங்கணைவா யெனச்செப்பக்
காதன்மனையார் தாமுமவை கொணருமதற்குக் கடிதணைந்தார். (உரு)

ஆயபொழுது தம்பெருமா னருளாலேயோ மேனியின்மேல்
ஏயுமசைவி னயர்வாலோ வறியோமிறையுந் தாழாதே
மேயவுறக்கம் வந்தணைய விண்ணோர்பெருமான் கழனினைந்து
தூயவன்பர் துயில்கொண்டார் துயிலும்பொழுது கனவின்கண். (உசு)

மேன்மைவிளங்குந் திருவாரூர் வீதிவிடங்கப் பெருமாள்தா
மானவன்பர் பூசனைக்கு வருவார்போல வந்தருளி
ஞானமறையோ ராரூரிற் பிறந்தாரெல்லா நங்கணங்க
ளானபரிசு காண்பாயென் றருளிச்செய்தங் கெதிரகன்றார். (உஎ)

ஆதிதேவ ரெழுந்தருள வுணர்ந்தாரிரவர்ச் சனைசெய்யா
தேதகினைந்தே னெனவஞ்சி யெழுந்தபடியே வழிபட்டு
மாதரார்க்கும் புகுந்தபடி மொழிந்துவிடியல் விரைவோடு
நாதனார்தந் திருவாரூர் புகுதவெதிரந் நகர்காண்பார். (உஅ)

தெய்வப்பெருமாள் திருவாரூர் பிறந்துவாழ்வா ரெல்லாரு
மைமேவைத்தனைய கண்டரவர் வடிவேயாகிப் பெருகொளியால்
மொய்வைத்தமர்ந்த மேனியராம் பரிசுகண்டு முடிகுவித்த
கைவைத்தஞ்சி யவனிமிசை விழுந்துபணிந்து களிசிறந்தார். (உகூ)

படிவமாற்றிப் பழம்படியே நிகழ்வுங்கண்டு பரமர்பால்
அடியேன்பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று பணிந்தருளாற்
குடியுந்திருவா ரூரகத்துப் புகுந்துவாழ்வார் குவலயத்து
நெடிதுபெருகுந் திருத்தொண்டு நிகழச்செய்து நிலவுவார். (௩௦)

நீறுபுனைந்த வடியார்க்கு நெடுநாணியதி யாகவே
வேறுவேறு வேண்டுவன வெல்லாஞ்செய்து மேவுதலால்
ஏறுசிறப்பு மணிப்புற்றி லிருந்தார்தொண்டர்க் காணியெனும்
பேறுதிருநா வுக்கரசர் விளம்பப்பெற்ற பெருமையினார். (௩௧)

இன்னவகையாற் றிருப்பணிக ளெல்லாவுலகுந் தொழச்செய்து
நன்மைபெருகு நமிநந்தி யடிகணயமார் திருவீதி
சென்னிமதியுந் திருநதியு மலையவருவார் திருவாரூர்
மன்னர்பாத நீழன்மிகும் வளர்பொற்சோதி மன்னினார். (௩௨)

நாட்டாரறிய முன்னாளி னன்னாளிறந்த வைம்படையின்
பூட்டார்மார்பிற் சிறியமறைப் புதல்வன்றன்னைப் புக்கொளியூர்த்
தாட்டாமரைநீர் மடுவின்கட் டனிமாமுதலை வாய்நின்று
மீட்டார்கழலே நினைவாரை மீளாவழியின் மீட்பனவே. (௩௩)

ஆ திருவிருத்தம் - ௧௧௩௬.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, ஏமப்பேறூரிலே, பிராமணகுலத்திலே பரமசிவனுடைய திருவடிகளை மிகுந்த அன்போடும் ஒழியாதே அகோராத்திரம்வழிபடுதலே இன்பமெனக்கொண்ட நமிநந்தியடிகள் என்பவர் ஒருவர் இருந்தார்.

அவர் பலநாளுந் திருவாரூருக்குப் போய் வன்மீகநாதரை வணங்கினார். ஒருநாள் வணங்கிக்கொண்டு,புறப்பட்டுத் திருமுன்றிலை அடைந்து,பக்கத்தில் இருக்கின்ற அரநெறி என்னும் ஆலயத்துட்புகுந்து, சுவாமியை நமஸ்கரித்து, அங்கே செய்யவேண்டிய பலதொண்டுகளைச் செய்து, இரவிலே அங்கே எண்ணில்லாத தீபமேற்றுதற்கு விரும்பி, எழுந்தார். எழுந்தபொழுது, மாலைக்கால மாதலைக் கண்டு,அப்பாற் செல்லிற் பொழுது செல்லும் என்றுநினைந்து, சமீபத்திலே ஓர் வீட்டில், அது சமணர்வீடென்று அறியாமையினாலே, புகுந்து, "சிவாலயத்தில் விளக்கேற்றுதற்கு நெய்தாருங்கள்" என்று கேட்டார். அதற்கு அவர்கள் "கையிலே சுவாலிக்கின்ற அக்கினியையுடைய பரமசிவனுக்கு விளக்கு மிகையன்றோ? இங்கே நெய்யில்லை. விளக்கெரிப்பீராகில், நீரை முகந்து எரியும்" என்றார்கள். நமிநந்தியடிகணாயனார் அந்தச்சொல்லைப்பொறாதவராகி

அப்பொழுதே மிகுந்த மனவருத்தத்தோடும் திரும்பிப்போய், சுவாமி சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்தார். அப்பொழுது ஆகாயத்திலே "நமிநந்தியே, நீ உன்னுடைய கவலையை நீக்கு. இதற்குச் சமீபத்தில் இருக்கின்ற குளத்தில்நீரை முகந்துகொண்டுவந்து விளக்கேற்று,, என்று ஒரு அசரீரிவாக்குத்தோன்றிற்று. நமிநந்தியடிகளுயனர் அதைக்கேட்டு மனமகிழ்ந்து திருவருளை வியந்துகொண்டு எழுந்து போய், குளத்தில் இறங்கி, சிவநாமத்தை உச்சரித்து, நீரை முகந்துகொண்டு, திருக்கோயிலிலே வந்து, அகலிலே முறுக்கிய திரியின்மேலே அந்நீரைவார்த்து, விளக்கேற்றினர். அது சுடர்விட்டெழுந்தது. அது கண்டு, அவ்வாலயம் முழுதிலும் சமணர்களெதிரே மிகுந்த களிப்புடனே நாடறிய நீரினலே திருவிளக்கெரித்தார். திருவிளக்கு விடியுமளவும் நின்று எரியும்படி, குறைகின்ற தகழிகளுக்கெல்லாம் நீர்வார்த்து, இரவிலே தானே தம்முடைய ஊருக்குப்போய், சிவார்ச்சனை பண்ணி, திருவமுதுசெய்து நித்திரைகொள்வார். உதயகாலத்திலே பூசையை முடித்துக்கொண்டு, திருவாரூரை அடைந்து, அரநெறி என்னும் ஆலயத்திற்சென்று, சுவாமிதரிசனம்பண்ணி, பகன்முழுதினும் திருத்தொண்டுகள் செய்து, இரவிலே எங்கும் விளக்கேற்றுவார்.

இப்படி நிகழுங்காலத்திலே, தண்டியடிகளாலே சமணர்கள் கலக்கம் விளைந்து, நாசமடைய; திருவாரூர் பெருமையடைந்து விளங்கியது, சோழமகாராஜா, நமிநந்தியடிகளுயனரே அத்தியக்ஷராக, வன்மீகநாதருக்கு வேண்டும் நிபந்தங்கள் பலவற்றையும் வேதாகமவிதி விளங்க அமைத்தார். நமிநந்தியடிகள் வீதிவிடங்கப்பெருமாளுக்குப் பங்குனிமாதத்திலே மகோற்சவம் நடத்துவித்தார். நடத்துவிக்கும்பொழுது, சுவாமி ஒருநாள் திருமணலிக்கு எழுந்தருள; சகலசாதியார்களும் ஒருங்குசேவித்துப்போனர்கள். நமிநந்தியடிகளுயனரும் சேவித்துப் போய், அங்கே சுவாமியுடைய திருவோலக்கத்தைக் கண்டு களிப்படைந்தார். பொழுதுபட, சுவாமி திரும்பித் திருக்கோயிலிலே புக, நமிநந்தியடிகள் வணங்கிக்கொண்டு, தம்முடைய ஊரை அடைந்து, வீட்டினுள்ளே புகாமல், புறக்கடையிலே படுக்க, மனைவியார்வந்து, "உள்ளே எழுந்தருளிச் சிவார்ச்சனையையும் அக்கினிகாரியத்தையும் முடித்துக்கொண்டு பள்ளிகொள்ளும்" என்றார். நமிநந்தியடிகள் "இன்றைக்குச் சுவாமி திருமணலிக்கு எழுந்தருளியபோது நானும் சேவித்துப்போனேன். சகல சாதியும் கலந்துவந்தபடியால, தீட்டுண்டாயிற்று. ஆதலால் ஸ்நானம்பண்ணிப் பிராயச்சித்தஞ்செய்துகொண்டே உள்ளே புகுந்து சிவார்ச்சனையைத் தொடங்கல்வேண்டும். அதற்கு நீ ஜலமுதலாயின கொண்டுவா" என்றுசொல்ல; மனைவியாரும் கொண்டுவரும்பொருட்டு விரைந்து சென்றார் அப்பொழுது நமிநந்தியடிகளுயனர் சிறிதுறக்கம் வர, நித்திரை செய்தார்

செய்யும்பொழுது, வீதிவிடங்கப்பெருமாள் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "திருவாரூரிலே பிறந்தவர்களெல்லாரும் நம்முடைய கணங்கள். அதை நீ காண்பாய்" என்றுசொல்லி மறைந்தருளினர். நமிநந்தியடிகணுயனர் விழித்தெழுந்து, தாம் நினைந்தது குற்றமென்று கருதி எழுந்தபடியே சிவார்ச்சனையை முடித்து, மனைவியாருக்கு நிகழ்ந்ததைச் சொல்லி, விடிந்தபின் திருவாரூருக்குப் போனர். போனபொழுது, அந்தத் திருப்பதியிலே பிறந்தவர்களெல்லாரும் சிவசாரூப்பியமுள்ளவர்களாய்ப் பிரகாசிக்கக் கண்டு, பூமியிலே விழுந்து நமஸ்கரித்து, அவர்கள் அவ்வுருவம் நீங்கி முன்போலாயினமையையுங்கண்டு. "அடியேன் செய்தகுற்றத்தைப் பொறுத்தருளும்" என்று சுவாமியைப் பிரார்த்தித்தார்.

பின்பு திருவாரூரிலே தானே குடிபுகுந்து, தம்முடைய திருத்தொண்டுகளைச் செய்துகொண்டிருந்தார். நெடுங்காலம் சிவனடியார்களுக்கு நியதியாக வேண்டுவன எல்லாவற்றையும் செய்துகொண்டிருந்தமையால், தொண்டர்களுக்கு ஆணிப்பொன் என்று, திருநாவுக்கரசுநாயனராலே, தேவாரப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப்பட்டார். இவர் இந்தப்பிரகாரம் சமஸ்தலோகங்களும் தொழும்படி திருப்பணிகளைச் செய்துகொண்டிருந்து, சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

நமிநந்தியடிகணுயனர்புராண முற்றிற்று.

---

நான்காவது,

திருநின்றசருக்க முற்றுப்பெற்றது.

---

முதற்காண்டம்

---

நமிநந்தியடிகள்நாயனர் புராணம்வரையில் முடிவாயிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## இரண்டாங் காண்டம்.

ஐந்தாவது,

# வம்பறுவரிவண்டுச்சருக்கம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம்.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம். (க)

சென்னிவளர் மதியணிந்த சிலம்பணிசே வடியார்த
மன்னிய சைவத்துறையின் வழிவந்த குடிவளவர்
பொன்னிவளந் தருநாடு பொலிவெய்த நிலவியதாற்
கன்னிமதின் மருங்குமுகி னெருங்குகழு மலமூதூர். (உ)

அப்பதிதா னந்தணர்தங் கிடைகளரு மறைமுறையே
செப்புமொலி வளர்பூகச் செழுஞ்சோலை புறஞ்சூழ
ஒப்பினக ரோங்குதலா லுகக்கடைநா ளன்றியே
யெப்பொழுதுங் கடன்மேலே மிதப்பதென விசைந்துளதால். (ங)

அரியயனே முதலமர ரடங்கவெழும் வெள்ளங்கள்
விரிசுடர்மா மணிப்பதண மீதெறிந்த திரைவரைகள்
புரிசைமுதல் புறஞ்சூழ்வ பொங்கோதங் கடைநாளில்
வரியரவ மந்தரஞ்சூழ் வடம்போல வயங்குமால். (ச)

வளம்பயிலும் புறம்பணைப்பால் வாசப்பா சடையிடைந்த
தளம்பொலியும் புனற்செந்தா மரைச்செவ்வித் தடமலராற்
களம்பயினீர்க் கடன்மலர்வ தொருபரிதி யெனக்கருதி
யிளம்பரிதி பலமலர்ந்தாற் போல்பவுள விலஞ்சிபல. (ரு)

உளங்கொண்மறை வேதியர்த மோமதூமத் திரவுங்
கிளர்ந்ததிரு நீற்றொளியிற் கெழுமியநண் பகலுமலர்ந்
தளர்ந்தறியாப் பல்லூழி யாற்றுதலா லகலிடத்து
விளங்கியவம் மூதூர்க்கு வேறிரவும் பகலுமிகை. (சா)

பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரநீ ளிலைக்கடையா லொழுகுதலா னெடிதவ்வூர்
மரங்களுமா குதிமேட்குந் தகையவென மணந்துளதால். (எ)

வேலையழற் கதிர்படிந்த வியன்கங்குல் வெண்மதியஞ்
சோலைதொறு நுழைந்துபுறப் படும்பொழுது துதைந்தமலர்ப்
பாலணைந்து மதுதோய்ந்து தாதளைந்து பயின்றந்தி
மாலையெழுஞ் செவ்வொளிய மதியம்போல் வதியுமால். (அ)

காமர்திருப் பதியதன்கண் வேதியர்போற் கடிகமழுந்
தாமரையும் புல்லிதழுந் தயங்கியநூ லுந்தாங்கித்
தூமருநுண் டுகளணிந்து துளிவருகண் ணீர்ததும்பித்
தேமருமென் சுரும்பிசையாற் செழுஞ்சாமம் பாடுமால். (௯)

புனைவார்பொற் குழையசையப் பூந்தானை பின்போக்கி
வினைவாய்ந்த தழல்வேதி மெழுக்குறவெண் சுதையொழுக்குங்
கனைவான முகிற்கூந்தற் கதிர்செய்வட மீன்கற்பின்
மனைவாழ்க்கைக் குலமகளிர் வளம்பொலிவ மாடங்கள். (௧0)

வேழ்விபுரி சடங்கதனை விளையாட்டுப் பண்ணைதொறும்
பூழியுற வகுத்தமைத்துப் பொன்புனைகிண் கிணியொலிப்ப
ஆழிமணிச் சிறுதேரூர்ந் தவ்விரதப் பொடியாடும்
வாழிவளர் மறைச்சிறார் நெருங்கியுள மணிமறுகு. (௧௧)

விடுசுடர்நீண் மணிமறுகின் வெண்சுதைமா ளிகைமேகந்
தொடுகுடுமி நாசிதொறுந் தொடுத்தகொடி சூழ்கங்கு
லுடுவெனுநாண் மலரலர வுறுபகலிற் பலநிறத்தா
னெடுவிசும்பு தளிர்ப்பதென நெருங்கியுள மருங்கெல்லாம். (௧௨)

மடையெங்கு மணிக்குப்பை வயலெங்குங் கயல்வெள்ளம்
புடையெங்கு மலர்ப்பிறங்கல் புறமெங்கு மகப்பொலிவு
கிடையெங்குங் கலைச்சூழல் கிளர்வெங்கு முரலளிகள்
இடையெங்கு முனிவர்குழா மெயிலெங்கும் பயிலெழிலி. (௧௩)

பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவிறிருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால். (௧௪)

அப்பதியி லந்தணர்தங் குடிமுதல்வ ராசின்மறைக்
கைப்படுத்த சீலத்துக் கவுணியர்கோத் திரம்விளங்கச்
செப்புநெறி வழிவந்தார் சிவபாத விருதயரென்
றிப்புவிவா ழத்தவஞ்செ யியல்பினு ருளரானார். (௧௫)

மற்றவர்தந் திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு
பெற்றியினு ரெவ்வுலகும் பெறற்கரிய பெருமையினுர்
பொற்புடைய பகவதியா ரெனப்போற்றும் பெயருடையார்
கற்புமேம் படுசிறப்பாற் கணவனுர் கருத்தமைந்தார். (௧௬)

மரபிரண்டுஞ் சைவநெறி வழிவந்த கேண்மையினுர்
அரவணிந்த சடைமுடியா ரடியலா லறியாது
பரவுதிரு நீற்றன்பு பாலிக்குந் தன்மையராய்
விரவுமறை மனைவாழ்க்கை வியப்பெய்த மேவுநாள். (௧௭)

மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்மிகுத்தே
யாதியரு மறைவழக்க மருகியர னடியார்பாற்
பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறு தொழியக்கண்
டேதமில்சீர்ச் சிவபாத விரதயர்தா மிடருழந்தார். (௧௮)

மனையறத்தி லின்பமுறு மகப்பெறுவான் விரும்புவா
ரனையநிலை தலைநின்றே யாடியசே வடிக்கமல
நினைவுறமுன் பரசமய நிராகரித்து நீறாக்கும்
புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றுந் தவம்புரிந்தார். (௧௯)

பெருத்தெழுமன் பாற்பெரிய நாச்சியா ருடன்புகலித்
திருத்தோணி வீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபட்டுக்
கருத்துமுடிந் திடப்பரவுங் காதலியார் மணிவயிற்றில்
உருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய வுளதாக. (௨0)

ஆளுடையா ளுடன்றோணி யமர்ந்தபிரா னருள்போற்றி
மூளுமகிழ்ச் சியிற்றங்கண் முதன்மறைநூன் முறைச்சடங்கு
நாளுடைய வீரைந்து திங்களினு நலஞ்சிறப்பக்
கேளிருடன் செயல்புரிந்து பேரின்பங் கிளர்வுறுநாள். (௨௧)

அருக்கன்முதற் கோளனைத்து மழகியவுச் சங்களிலே
பெருக்கவலி யுடனிற்கப் பேணியநல் லோரையெழத்
திருக்கிளரு மாதிரைநாட் டிசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க. (௨௨)

தொண்டர்மனங் களிசிறப்பத் தூயதிரு நீற்றுநெறி
யெண்டிசையுந் தனிநடப்ப வேழுலகுங் குளிர்தூங்க
வண்டர்குல மதிசயிப்ப வந்தணரா குதிபெருக
வண்டமிழ்செய் தவநிரம்ப மாதவத்தோர் செயல்வாய்ப்ப. (௨௩)

திசையனைத்தின் பெருமையெலாந் தென்றிசையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகு மேதினியே தனிவெல்ல
வசைவில்செழுந் தமிழ்வழக்கே யயல்வழக்கின் றுறைவெல்ல
விசைமுழுது மெய்யறிவு மிடங்கொள்ளு நிலைபெருக. (௨௪)

தாளுடைய படைப்பென்னுந் தொழிற்றன்மை தலைமைபெற
நாளுடைய நிகழ்கால மெதிர்கால நவைநீங்க
வாளுடைய மணிவீதி வளர்காழிப் பதிவாழ
வாளுடைய திருத்தோணி யமர்ந்தபிரா னருள்பெருக. (உ௫)

அவம்பெருக்கும் புல்லறிவி னமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறுந்
தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெல்லாஞ்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார். (உ௬)

வேறு.

அப்பொழுது பொற்புறு திருக்கழு மலத்தோ
ரெப்பெயரி னோருமய லெய்துமிடை யின்றி
மெய்ப்படு மயிர்ப்புளக மேவியறி யாமே
யொப்பில்களி கூர்வதொரு வப்புற வுரைப்பார். (உ௭)

சிவனரு ளெனப்பெருகு சித்தமகிழ் தன்மை
யிவணிது நமக்குவர வெய்தியதெ னென்பார்
கவுணியர் குலத்திலொரு காதல னுதித்தா
னவன்வரு நிமித்தமிது வென்றறி சயித்தார். (உ௮)

பூமுகை யவிழ்ந்துமண மேவுபொழி லெங்குந்
தேமருவு தாதொடு துதைந்ததிசை யெல்லாந்
தூமருவு சோதிவிரி யத்துக ளடக்கி
மாமலய மாருதமும் வந்தசையு மன்றே. (உ௯)

மேலையிமை யோர்களும் விருப்பொடு கரப்பில்
சோலைமலர் போலமலர் மாமழை சொரிந்தே
ஞாலமிசை வந்துவளர் காழிநகர் மேவுஞ்
சீலமறை யோர்களுட னேமவினை செய்தார். (௩0)

பூதகண நாதர்புவி வாழவருள் செய்த
நாதனரு ளின்பெருமை கண்டுநல முய்ப்பார்
ஓதுமறை யோர்பிறி துரைத்திடினு மோவா
வேதமொழி யாலொலி விளங்கியெழு மெங்கும். (௩௧)

பயன்றருவ பஃறருவும் வல்லிகளு மல்கித்
தயங்குபுன லுந்தெளிவ தண்மையுட னண்ணும்
வயங்கொளி விசும்புமலி னங்கழியு மாறு
நயம்புரிவ புள்ளொலிக ணல்லதிசை யெல்லாம். (௩௨)

அங்கண்விழ விற்பெருகு சண்பையகன் மூதூர்ச்
சங்கபட கங்கருவி தாரைமுத லான
எங்கணு மியற்றுபவ ரின்றியு மியம்பு
மங்கல முழக்கொலி மலிந்தமறு கெல்லாம். (௩௩)

இரும்புவன மித்தகைமை யெய்தவவர் தம்மைத்
தருங்குல மறைத்தலைவர் தம்பவன முன்றிற்
பெருங்களி வியப்பொடு பிரானருளி னாலே
யருந்திரு மகப்பெற வணைந்தவணி செய்வார். (௩௪)

காதல்புரி சிந்தைமகி ழக்களி சிறப்பார்
மீதணியு நெய்யணி விழாவொடு திளைப்பார்
சூதநிகழ் மங்கல வினைத்துழனி பொங்கச்
சாதக முறைப்பல சடங்குவினை செய்வார். (௩௫)

மாமறை விழுக்குல மடந்தையர்க டம்மிற்
றாமுறு மகிழ்ச்சியொடு சாயன்மயி லென்னத்
தூமணி விளக்கொடு சுடர்க்குழைகண் மின்னக்
காமர்திரு மாளிகை கவின்பொலிவு செய்வார். (௩௬)

சுண்ணமொடு தண்மலர் துதைந்ததுகள் வீசி
யுண்ணிறை விருப்பினுட னேகையுறை செய்வார்
வெண்முளைய பாலிகைகள் வேதிதொறும் வைப்பார்
புண்ணிய நறும்புனல்கொள் பொற்குட நிரைப்பார். (௩௭)

செம்பொன்முத லாயபல தானவினை செய்வார்
நம்பரடி யாரமுது செய்யநல முய்ப்பார்
வம்பலர் நறுந்தொடையல் வண்டொடு தொடுப்பார்
நிம்பமுத லானகடி நீடுவினை செய்வார். (௩௮)

ஐயவி யுடன்பல வமைத்தபுகை யாலு
நெய்யகி னறுங்குறை நிறைத்தபுகை யாலும்
வெய்யதழ லாகுதி விழுப்புகையி னாலுந்
தெய்வமண நாறவரு செய்தொழில் விளைப்பார். (௩௯)

ஆயபல செய்தொழில்க ளன்றுமுதல் விண்ணோர்
நாயக னருட்பெருமை கூருநல மெய்தத்
தூயதிரு மாமறை தொடர்ந்தநடை நூலின்
மேயவிதி யையிரு தினத்தினும் விளைத்தார். (௪0)

நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
சேமவுத யப்பரிதி யிற்றிகழ்பி ரானைத்
தாமரை மிசைத்தனி முதற்குழவி யென்ன
தூமணி நிரைத்தணிசெய் தொட்டிலமர் வித்தார். (௪க)

பெருமலை பயந்தகொடி பேணுமுலை யின்பா
லருமறை குழைத்தமுது செய்தருளு வாரைத்
தருமறைவி யார்பரமர் தாள்பரவு மன்பே
திருமுலை சுரந்தமுது செய்தருளு வித்தார். (௪உ)

ஆறுலவு செய்யசடை யையரரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை யென்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியி னிறுத்திநிறை வித்தார். (௩௩)

வேறு.

தாயர்திரு மடித்தலத்துந் தயங்குமணித் தவிசினினுந்
தூயசுடர்த் தொட்டிலினுந் தூங்குமலர்ச் சயனத்துஞ்
சேயபொருட் டிருமறையுந் தீந்தமிழுஞ் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பலபா ராட்டினர். (௪௪)

வருமுறைமைப் பருவத்தில் வளர்புகலிப் பிள்ளையா
ரருமறைக டலையெடுப்ப வாண்டதிரு முடியெடுத்துப்
பெருமழுவர் தொண்டல்லாற் பிறிதிசையோ மென்பார்போற்
றிருமுகமண் டலமசையச் செங்கீரை யாடினர். (௪௫)

நாமறியோம் பரசமய முலகிலெதிர் நாடாது
போமகல வென்றங்கை தட்டுவதும் புனிதன்பாற்
காமருதா ளம்பெறுதற் கொத்துவதுங் காட்டுவபோற்
றாமரைச்செங் கைகளினாற் சப்பாணி கொட்டினர். (௪௬)

விதிதவறு படும்வேற்றுச் சமயங்க ளிடைவிழுந்து
கதிதவழ விருவிசும்பு நிறைந்தகடி வார்கங்கை
நதிதவழுஞ் சடைமுடியார் ஞானமளித் திடவுரியார்
மதிதவழ்மா ளிகைமுன்றின் மருங்குதவழ்ந் தருளினர். (௪௭)

சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையருந் தாதியருங்
காழியர்தஞ் சீராட்டே கவுணியர்கற் பகமேயென்
றேழிசையும் பலகலையு மெவ்வுலகுந் தனித்தனியே
வாழவரு மவர்தம்மை வருகவரு கெனவழைப்ப. (௪௮)

திருநகையா லழைத்தவர்தஞ் செழுமுகங்கண் மலர்வித்தும்
வருமகிழ்வு தலைசிறப்ப மற்றவர்மேற் செலவுகைத்தும்
உருகிமனங் கரைந்தலைய வுடனணைந்து தழுவியுமுன்
பெருகியவின் புறவளித்தார் பெரும்புகலிப் பிள்ளையார். (௪௯)

வளர்பருவ முறையாண்டு வருவதன்முன் மலர்வரிவண்
டுளர்கருமென் சுருட்குஞ்சி யுடனலையச் செங்கின்று
கிளரொளிக்கிண் கிணியெடுப்பக் கீழ்மைநெறிச் சமயங்க
டளர்நடையிட் டறத்தாமுந் தளர்நடையிட் டருளினர். (௫௦)

தாதியர்தங் கைப்பற்றித் தளர்நடையி னசைவொழிந்து
சோதியணி மணிச்சதங்கை தொடுத்தவடம் புடைசூழ்ந்த
பாதமலர் நிலம்பொருந்தப் பருவமுறை யாண்டொன்றின்
மீதணைய நடந்தருளி விளையாட்டுத் தொடங்கினர். (௫௧)

சிறுமணித்தேர் தொடர்ந்துருட்டிச் செழுமணிச்சிற் றில்களிழைக்கு
நறுநுதற்பே தையர்மருங்கு நடந்தோடி யடர்ந்தழித்துங்
குறுவெயர்ப்புத் துளியரும்பக் கொழும்பொடியா டியகோல
மறுகிடைப்பே ரொளிபரப்ப வந்துவளர்ந் தருளுநாள். (௫௨)

மங்கையோ டுடனாகி வளர்தோணி வீற்றிருந்த
திங்கள்சேர் சடையார்தந் திருவருட்குச் செய்தவத்தி
னங்குரம்போல் வளர்ந்தருளி யருமறையோ டுலகுய்ய
வெங்கள்பிரா னீராண்டின் மேலோராண் டெய்துதலும். (௫௩)

நாவாண்ட பலகலையு நாமகளு நலஞ்சிறப்பப்
பூவாண்ட திருமகளும் புண்ணியமும் பொலிவெய்தச்
சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவர்க்கு
மூவாண்டி னுலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன். (௫௪)

பண்டுதிரு வடிமறவாப் பான்மையோர் தமைப்பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டி னளித்தருளத்
தொண்டினிலை தரவருவார் தொடர்ந்தபிரி வுணர்வொருகாற்
கொண்டெழலும் வெருக்கொண்டார் போலழுவர் குறிப்பயலாய். ()

மேதகைய வந்நாளில் வேறொருநாள் வேதவிதி
நீதிமுறைச் சடங்குநெறி முடிப்பதற்கு நீராடத்
தாதையார் போம்பொழுது தம்பெருமா னருள்கூடச்
சோதிமணி மனைமுன்றிற் றொடர்ந்தழுது பின்சென்றார். (௫௬)

பின்சென்ற பிள்ளையார் தமைநோக்கிப் பெருந்தவத்தோர்
முன்செல்கை தனையொழிந்து முனிவார்போல் விலக்குதலு
மின்செய்பொலங் கிண்கிணிக்கால் கொட்டியவர் மீளாமை
யுள்செய்கை யிதுவாகிற் போதென்றங் குடன்சென்றார். (௫௭)

கடையுகத்திற் றனிவெள்ளம் பலவிரிக்குங் கருப்பம்போல்
இடையறுப் பெருந்தீர்த்த மெவற்றிற்கும் பிறப்பிடமாய்
விடையுயர்த்தார் திருத்தோணிப் பற்றுவிடா மேன்மையதாந்
தடமதனிற் றுறையணைந்தார் தருமத்தின் றலைநின்றார். (௫௮)

பிள்ளையார் தமைக்கரையில் வைத்துத்தாம் பிரிவஞ்சித்
தெள்ளுநீர் புகமாட்டார் தேவியொடுந் திருத்தோணி
வள்ளலா ரிருந்தாரை யெதிர்வணங்கி மணிவாவி
யுள்ளிழிந்து புனல்புக்கா ருலகுய்ய மகப்பெற்றார். (௫௯)

நீராடித் தருப்பித்து நியமங்கள் பலசெய்வார்
சீராருந் திருமகனார் காண்பதன்முன் செய்ததற்பி
னாராத விருப்பினால் 0 அகமருடம் படியவ்வழி
பேராது மூழ்கினார் பெருங்காதல் பெற்றாராய். (௬0)

---

0 அகமருடம் என்பது - பாவம்நீங்குதல்-ஷ-டகரமாயிற்று.

மறைமுனிவர் மூழ்குதலு மற்றவர்தம் மைக்காணா
திறைதரியா ரெனுநிலைமை தலைக்கீடா வீசர்கழல்
முறைபுரிந்த முன்னுணர்வு மூளவழத் தொடங்கினார்
நிறைபுனல்வா விக்கரையி னின்றருளும் பிள்ளையார். (௬௧)

கண்மலர்க ணீர்ததும்பக் கைமலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணியதரம் புடைதுடிப்ப
வெண்ணின்மறை யொலிபெருக வெவ்வுயிருங் குதுகுலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமியழு தருளினார். (௬௨)

மெய்ம்மேற்கண் டுளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும்பிள் ளைமைதானோ
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்
தம்மேயப் பாவென்றன் றழைத்தருளி யழுதருள. (௬௩)

அந்நிலையிற் றிருத்தோணி வீற்றிருந்தா ரருணோக்கான்
முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்
பொன்மலைவல் லியுந்தாமும் பொருவிடைமே லெழுந்தருளிச்
சென்னியிளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார். (௬௪)

திருமறைநூல் வேதியர்க்குந் தேவியர்க்குந் தாங்கொடுத்த
பெருகுவர நினைந்தோதான் றம்பெருமைக் கழல்பேணு
மொருநெறியில் வருஞானங் கொடுப்பதனுக் குடனிருந்த
வருமறையா ளுடையவளை யளித்தருள வருள்செய்வார். (௬௫)

அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி யருட்கருணை
யெழுகின்ற திருவுள்ளத் திறையவர்தா மெவ்வுலகுந்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் துணைமுலைகள்
பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன. (௬௬)

ஆரணமு முலகேழு மீன்றருளி யனைத்தினுக்குங்
காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரிணங்கு சிவபெருமா னருளுதலுஞ் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைப்பொன் வள்ளத்துக் கறந்தருளி. (௬௭)

எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
யுண்ணடிசி லெனவூட்ட வுமையம்மை யெதிர்நோக்குங்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலையங் கழுகைதீர்த் தங்கணா ரருள்புரிந்தார். (௬௮)

யாவர்க்குந் தந்தைதா யெனுமவரிப் படியளித்தா
ராவதனா லாளுடைய பிள்ளையா ராயகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்
தாவிறனிச் சிவஞான சம்பந்த ராயினார். (௬௯)

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞான
முவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில். (எ0)

எப்பொருளு மாக்குவா னீசனே யெனுமுணர்வு
மப்பொருடா னுளுடையா ரடியார்க ளெனுமறிவு
மிப்படியா லிதுவன்றித் தம்மிசைவு கொண்டியலுந்
துப்புரவில் லார்துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார். (எக)

சீர்மறையோர் சிவபாத விருதயருஞ் சிறுபொழுதி
னீர்மருவித் தாஞ்செய்யு நியமங்கண் முடித்தேறிப்
பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் தமைநோக்கி
யாரளித்த பாலடிசி லுண்டதுநீ யெனவெகுளா. (எஉ)

எச்சின்மயங் கிடவுனக்கீ திட்டாரைக் காட்டென்று
கைச்சிறிய தொருமாறு கொண்டோச்சக் காலெடுத்தே
யச்சிறிய பெருந்தகையா ரானந்தக் கண்டுளிபெய்
துச்சியினி லெடுத்தருளு மொருதிருக்கை விரற்சுட்டி. (எ௩)

விண்ணிறைந்த பெருகொளியால் விளங்குமழ விடைமேலே
பண்ணிறைந்த வருமறைகள் பணிந்தேத்தப் பாவையுட
னெண்ணிறைந்த கருணையினா னின்றானை யெதிர்காட்டி
யுண்ணிறைந்து பொழிந்தெழுந்த வுயர்ஞானத் திருமொழியால். (எச)

எல்லையிலா மறைமுதன்மெய் யுடனெடுத்த வெழுதுமறை
மல்லனெடுந் தமிழாலிம் மாநிலத்தோர்க் குறைசிறப்பப்
பல்லுயிருங் களிகூரத் தம்பாடல் பரமர்பாற்
செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து. (எ௫)

செம்மைபெற வெடுத்ததிருத் தோடுடைய செவியனெனு
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் பிரமபுர மேவினார்
தம்மையடை யாளங்க ளுடன்சாற்றித் தாதையார்க்
கெம்மையிது செய்தபிரா னிவனன்றே யெனவிசைத்தார். (எ௬)

---

திருப்பிரமபுரம்-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

தோடுடைய செவியன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடிபூசி யென துள்ளங் கவர்கள்வ
னேடுடைய மலரான் முனநாள் பணிந்தேத்த வருள்செய்த
பீடுடைய பிரமா புரமேவிய பெம்மா னிவனன்றே.

அருநெறிய மறை வல்லமுனி யகன்பொய்கை யலர்மேய
பெருநெறிய பிரமா புரமேவிய் பெம்மா னிவன்றன்னை
யொருநெறிய மனம்வைத் துணர்ஞான சம்பந்த னுரைசெய்த
திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தலெளிதாமே.

திருச்சிற்றம்பலம்.

---

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளு மெனக்காட்ட
வெண்ணமில்லா வல்லரக்க னெடுத்துமுறிந் திசைபாட
வண்ணலவற் கருள்புரிந்த வாக்கப்பா டருள்செய்தார். (எஎ)

தொழுவார்க்கே யருளுவது சிவபெருமா னெனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனு
மிழிவாகுங் கருவிலங்கும் பறவையுமா யெய்தாமை
விழுவார்க ளஞ்செழுத்துந் துதித்துய்ந்த படிவிரித்தார். (எஅ)

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதனெறி யறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதமிலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கு
மேதமே யெனமொழிந்தா ரெங்கள்பிரான் சம்பந்தர். (எகூ)

திருப்பதிக நிறைவித்துத் திருக்கடை காப்புச்சாத்தி
யிருக்குமொழிப் பிள்ளையா ரெதிர்தொழுது நின்றருள
வருட்கருணைத் திருவாள னாருள்கண் டமரரெலாம்
பெருக்கவிசும் பினிலார்த்துப் பிரசமலர் மழைபொழிந்தார். (அ0)

வந்தெழுமங் கலமான வானதுந் துமிமுழக்குங்
கந்தருவர் கின்னரர்கள் கானவொலிக் கடன்முழக்கு
மிந்திரனே முதற்றேவ ரெடுத்தேத்து மிசைமுழக்கு
மந்தமில்பல் கணநாத ரரவெனுமோ சையினடங்க. (அக)

வேறு.

மறைகள்கிளர்ந்தொலி வளரமுழங்கிட வானோர்தம்
நிறைமுடியுந்திய நிரைமணிசிந்திட நீள்வானத்
துறையெனவந்துல கடையநிறைந்திட வோவாமெய்ப்
பொறைபெருகுந்தவ முனிவரொனுங்கடல் புடைசூழ. (அஉ)

அணைவுறவந்தெழு மறிவுதொடங்கின வடியார்பா
லிணையில்பவங்கிளர் கடல்களிகந்திட விருதாளின்
புணையருளுங்கணர் பொருவிடைதங்கிய புணர்பாகத்
துணையொடணைந்தனர் சுருதிதொடர்ந்த பெருந்தோணி. (அங)

அண்ணலணைந்தமை கண்டுதொடர்ந்தெழு மன்பாலே
மண்மிசைநின்ற மறைச்சிறுபோதக மன்னுருங்
கண்வழிசென்ற கருத்துவிடாது கலந்தேகப்
புண்ணியர்நண்ணிய பூமலிகோயிலி னுட்புக்கார். (அச)

ஈறில்பெருந்தவ முன்செய்துதாதை யெனப்பெற்றார்
மாறுவிழுந்த மலர்க்கைகுவித்து மகிழ்ந்தாடி
வேறுவிளைந்த வெருட்சிவியப்பு விருப்போடுங்
கூறுமருந்தமி ழின்பொருளான குறிப்போர்வார். (அரு)

காணுவினைத்தனி கண்டுதொடர்ந்தவர் தம்மைப்போற்
காணுதல்பெற்றில ரேனுநிகழ்ந்தன கண்டுள்ளார்
தோணிப்புரத்திறை தன்னருளாதர வணிந்தார்வம்
பேணுமனத்தொடு முன்புகுகாதலர் பின்சென்றார். (அசு)

அப்பொழுதங்க ணணைந்ததுகண்டவ ரல்லாதார்
முப்புரிநூன்மறை யோர்களுரோம முகிழ்ப்பெய்தி
யிப்படியொப்பதோ ரற்புதமெங்குள தென்றென்றே
துப்புறழ்வேணியர் கோயிலின்வாய்தல் புறஞ்சூழ. (அஎ)

பொங்கொளிமால்விடை மீதுபுகுந்தணி பொற்றோணித்
தங்கியிருந்த பெருந்திருவாழ்வு தலைப்பட்டே
யிங்கெனையாளுடை யானுமையோடு மிருந்தானென்
றங்கெதிர்நின்று புகன்றனர்ஞானத் தமுதுண்டார். (அஅ)

இன்னிசையேழு மிசைந்தசெழுந்தமி ழீசர்க்கே
சொன்முறைபாடு தொழும்பருள்பெற்ற தொடக்கோடும்
பன்மறைவேதியர் காணவிருப்பொடு பாலறும்
பொன்மணிவாயினர் கோயிலினின்று புறப்பட்டார். (அகூ)

பேணியவற்புத நீடருள்பெற்ற பிரான்முன்னே
நீணிலையிற்றிகழ் கோபுரவாயிலி னெய்தி
வாணிலவிற்றிகழ் வேணியர்தொண்டர்கள் வாழ்வெய்துந்
தோணிபுரத்தவர் தாமெதிர்கொண்டு துதிக்கின்றார். (௯0)

வேறு.

காழியர்தவமே கவுணியர்தனமே கலைஞானத்
தாழியகடலே யதனிடையமுதே யடியார்முன்
வாழியவந்திம் மண்மிசைவானோர் தனிநாத
னேழிசைமொழியா டன்றிருவருள்பெற் றனையென்பார். (௯க)

மறைவளர்திருவே வைதிகநிலையே வளர்ஞானப்
பொறையணிமுகிலே புகலியர்புகலே பொருபொன்னித்
துறைபெறுமணியே சுருதியினொளியே வெளியேவந்
திறையவனுமையா ளுடனருடரவெய் தினையென்பார். (௯உ)

புண்ணியமுதலே புனைமணியாரா ஞெடுபோதுங்
கண்ணிறைகதிரே கலைவளர்மதியே கவின்மேவும்
பண்ணியல்கதியே பருவமதொருமூ வருடத்தே
யெண்ணியபொருளாய் நின்றவரருள்பெற் றனையென்பார். (சுரு)

வே று.

என்றினைய பலகூறி யிருக்குமொழி யந்தணரு மேனையோரு
நின்றுதுதி செய்தவர்தா ணீண்முடிக்கண் மேலேந்தி நிரந்தபோது
சென்றணைந்த தாதையார் சிவபாத விருதயர்தாந் தெய்வஞானக்
கன்றினைமுன் புக்கெடுத்துப் பியலின்மேற் கொண்டுகளி கூர்ந்துசெல்ல

மாமறையோர் குழாத்தினுடன் மல்குதிருத் தொண்டர்குழா மரு ங்கு சூழ்ந்து, தாமறுவை யுத்தரியந் தனிவிசும்பி லெறிந்தார்க்குந் தன் மையாலே, பூமருகு சிவாநந்தப் பெருக்காறு போதவதன் மீதுபொங்கு ம், காமர்நுரைக் குமிழியெழுந்திழிவனபோல் விளங்குபெருங் காட்சித் தாகும். (சுசு)

நீடுதிருக் கழுமலத்து ० நிலத்தேவர் மாளிகைமே னெருங்கியங்கண்
மாடுநிறை மடவார்கண் மங்கலமா மொழிகளால் வாழ்த்தியோசத்
தோடுமலி நறுமலருஞ் சுண்ணமும்வெண் பொரியினொடுந் தூவிநிற்பார்
கோடுபயில்குலவரைமேன் மின்குலங்கள்புடைபெயருங்கொள்கைத்தாக.

மங்கலதூ ரியந்துவைப்பார் மறைச்சாமம் பாடுவார் மருங்குவேதிப்
பொங்குமணிவிளக்கெடுத்துப் பூரணகும்பமுநிரைபார்போற்றிசெய்வா
ரங்கவர்கண்மனத்தெழுந்த வதிசயமும் பெருவிருப்பு மன்பும்பொங்கத்
தங்குதிரு மலிவீதிச் சண்பைநகர் வலஞ்செய்து சாருங்காலை. (சுஎ).

தந்திருமா ளிகையின்க ணெழுந்தருளிப் புறம்பொழுது சங்கநாத
மந்தரதுந் துபிமுதலா வளவில்பெரு கொலிதழைப்ப வணைந்துபுக்கார்
சுந்தரப்பொற் றோணிமிசை யிருந்தபிரா னுடனணைந்த துணைவியாகும்
பைந்தொடியா டிருமுலையின் பாலறாமதுரமொழிப் பவளவாயர். (சுஅ)

தூமணிமா ளிகையின்க ணமர்ந்தருளி யன்றிரவு தொல்லைநாத
மாமறைக டிரண்டபெருந் திருத்தோணி மன்னிவீற் றிருந்தார்செய்ய
காமருசே வடிக்கமலங் கருத்தினுற விடையறுக் காதல்கொண்டு
நாமநெடுங் கதிருதிப்ப நண்ணினார் திருத்தோணி நம்பர்கோயில். (சுசு)

காதலுட னணைந்துதிருக் கழுமலத்துக் கலந்துவீற் றிருந்ததங்க
டாதையா ரையும்வெளியே தாங்கரிய மெய்ஞ்ஞானந் தம்பால்வந்து
போதமுலை சுரந்தளித்த புண்ணியத்தா யாரையுமுன் வணங்கிப்போற்றி
மேதகையவருள்பெற்றுத் திருக்கோலக்காவிறைஞ்சவிருப்பிற்சென்றார்.

---

० நிலத்தேவர் பிராமணர்கள்.

பெருக்கோலிட் டலைபிறங்குங் காவிரிநீர் பிரசமலர் தரளஞ்சிந்த
வரிக்கோல வண்டாட மாதரார் குடைந்தாடு மணிநீர்வாவித்
திருக்கோலக் காவெய்தித் தேவர்பிரான் கோயில்வலஞ் செய்துமுன்னின்
றிருக்கோலிட் டரிவரிய திருப்பாத மேத்துவதற் கெடுத்துக்கொள்வார்.

மெய்ந்நிறைந்த செம்பொருளாம் வேதத்தின் விழுப்பொருளை வேணிமீது
பைந்நிறைந்த வரவுடனே பசுங்குழவித் திங்கள்பரித் தருளுவானை
மைந்நிறைந்த மிடற்றானை மடையில்வா ளைகள்பாய வென்னும்வாக்காற்
கைந்நிறைந்த வொத்தறுத்துக் கலைப்பதிகங் கவுணியர்கோன் பாடுங்காலை.

---

திருக்கோலக்காதக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீ
ளுடையுங் கொண்ட வுருவ மென்கொலோ.

நலங்கொள் காழி ஞான சம்பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள பாடல் வல்ல வாய்மையா
ருலங்கொள் வினைபோ யோங்கி வாழ்வரே.

திருச்சிற்றம்பலம்

---

கையதனு லொத்தறுத்துப் பாடுதலுங் கண்டருளிக் கருணைகூர்ந்த
செய்யசடை வானவர்த மஞ்செழுத்து மெழுதியசெம் பொற்றாளங்க
ளையரவர் திருவருளா லெடுத்தபா டலுக்கிசைந்த வளவாலொத்த
வையமெலா முய்யவரு மறைச்சிறுவர் கைத்தலத்து வந்தவன்றே(௧0௫)

காழிவரும் பெருந்தகையார் கையில்வருந் திருத்தாளக் கருவிகண்டு
வாழியதந் திருமுடிமேற் கொண்டருளி மனங்களிப்ப மதுரவாயி
லேழிசையுந்தழைத்தோங்கவின்னிசைவண்டமிழ்ப்பதிக மெய்தப்பாடித்
தாழுமணிக் குழையார்முன் றக்கதிருக் கடைகாப்புச் சாத்திநின்றார். ()

உம்பருல கதிசயிப்ப வோங்கியநா தத்தளவி னுண்மைநோக்கித்
தும்புருநா ரதர்முதலாஞ் சுருதியிசைத்துறையுளோர் துதித்துமண்மேல்
வம்பலர்மா மழைபொழிந்தார் மறைவாழ வந்தருளு மதலையாருந்
தம்பெருமா னருள்போற்றி மீண்டருளிச் சண்பைநகர் சாரச்செல்வார்

செங்கமல மலர்க்கரத்துத் திருத்தாளத் துடனடந்து செல்லும்போது
தங்கள்குலத் தாதையார் தரியாது தோளின்மேற் றரித்துக்கொள்ள
அங்கவர்தந் தோளின்மிசை யெழுந்தருளி யணைந்தார்சூழ் தமரோத்துந்
திங்களணி மணிமாடத் திருத்தோணி புரத்தோணிச் சிகரக்கோயில். ()

திருப்பெருகு பெருங்கோயில் சூழவலங் கொண்டருளித் திருமுன்னின்றே, யருட்பெருகு திருப்பதிக மெட்டொருகட் டளையாக்கி யவற்று ளொன்று, விருப்புறுபொற் றிருத்தோணி வீற்றிருந்தார் தமைப்பாட மேவுகாதற், பொருத்தமுற வருள்பெற்றுப் போற்றியெடுத் தருளினார் பூவார்கொன்றை. (க0எ)

---

சீகாழி - பண் - தக்காரம்.

திருச்சிற்றம்பலம்.

பூவார் கொன்றைப் புரிபுன் சடையீச
காவா யெனநின் றேத்துங் காழியார்
மேவார் புரமூன் றட்டா ரவர்போலாம்
பாவா ரின்சொற் பயிலும் பரமரே.

காரார் வயல்சூழ் காழிக்கோன் றன்னைச்
சீரார் ஞான சம்பந்தன் சொன்ன
பாரார் புகழப் பாடல் வல்லவ
ரேரார் வானத் தினிதா யிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

எடுத்ததிருப் பதிகத்தி னிசைதிருத்தா ளத்தினொ லிசையவொத்தி யடுத்தநடை பெறப்பாடி யார்வமுற வணங்கிப்போந் தலைநீர்ப்பொன்னி மடுத்தவயற பூந்தரா யவர்வாழ மழவிளங்கோ லத்துக்காட்சி கொடுத்தருளி வைகினார் குறைவிலா நிறைஞானக் கொண்டலார்தாம்.()

---

திருக்கழுமலம்திருத்தாளச்சதி - பண் - வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்றவும்பரப் பாலேசேர்வாயேனோர்கான் பயில்கண முனிவர்களுஞ், சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின்மங்கைதன்னொடுஞ் சேர்வார்நாணு ணீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாஞ், சந்தித்தே யிந்தப்பார்ச் சனங்கணின்றுதங்கணாற் றுமேகாணு வாழ்வாரத் தகவுசெய்த வனதிடங், கந்தத்தா லெண்டிக்குங் கமழ்ந்திலங்குசந்தனக் காடார்பூவார் சீர்மேவுங் கழுமல வளநகரே.

கஞ்சத்தே னுண்டிட்டே களித்துவண்டுசெண்பகக் கானேதேனே போரருங் கழுமல நகரிறையைத், தஞ்சத்தார் சண்பைக்கோன் சமைத்தநற்கலைத்துறை தாமேபோல்வார் தேனேரார் தமிழ்விர கன்மொழிக, ளெஞ்சத்தே வென்றிக்கே யிமைத்திசைத்தமைத்தகொண் டேழேயேழே நாலேமூன் றியலிசை யிசையியல்வா,வஞ்சத்தே வின்றிக்கே மனங்கொளப்பயிற்றுவோர் மார்வேசேர்வாள் வானோர்சீர் மதிநுதல் மடவாலே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்கிலையி லாளுடைய பிள்ளையார் தமைமுன்ன மளித்ததாயார்
முன்னுதிக்க முயன்றதவத் திருநன்னி பள்ளிமுதன் மறையோரெல்லா
மன்னுபெரு மகிழ்ச்சியுடன் மங்கலதூ ரியந்துவைப்ப மறைகளோதிக்
கன்னிமதிற்சண்பைநகர் வந்தணைந்துகவுணியர்கோன் கழலிற்றாழ்ந்தார்.

மங்கலமா மெய்ஞ்ஞான மண்களிப்பப் பெற்றபெரு வார்த்தையாலே
யெங்கணுநீள் பதிமருங்கி லிருபிறப்பா ளருமல்லா லேனையோரும்
பொங்குதிருத்தொண்டர்களுமதிசயித்துக்குழாங்கொண்டுபுகலியார்தஞ்
சிங்கவிள வேற்றின்பால் வந்தணைந்து கழல்பணியுஞ் சிறப்பின்மிக்கார்.()

வந்ததிருத் தொண்டர்க்கு மல்குசெழு மறையவர்க்கு மற்றுளோர்க்குஞ்
சிந்தைமகிழ் வுறமலர்ந்து திருவமுதுமுதலான சிறப்பின்செய்கை
தந்தமள வினில்விரும்புந் தகைமையினாற் கடனாற்றுஞ் சண்பைமூதூ
ரெந்தைபிரான் சிவலோக மெனவிளங்கி யெவ்வுலகு மேத்துநாளில். ()

செழுந்தரளப் பொன்னிசூழ் திருநன்னி பள்ளியுள்ளோர் தொழு
துதிங்கட், கொழுந்தணியுஞ் சடையாரை யெங்கள்பதி யினிற்கும்பிட்
டருளவங்கே, யெழுந்தருள வேண்டுமென விசைந்தருளித் தோணிவீற்
றிருந்தார்பாதந்,தொழுந்தகைமை யாலிறைஞ்சி யருள்பெற்றுப் பிறபதி
யுந் தொழமுன்செல்வார். (ககஉ)

தாதவிழ்செந் தாமரையி னகவிதழ்போற் சீரடிக டரையின்மீது
போதுவதும் பிறரொருவர் பொறுப்பதுவும் பொறாவன்பு புரிந்தசிந்தை
மாதவஞ்செய்தாதையார் வந்தெடுத்துத்தோளின்மேல்வைத்துக்கொள்ள
நாதர்கழறம்முடிமேற் கொண்டகருத்துடன்போந்தார் ஞானமுண்டார்.

தேனலருங் கொன்றையினார் திருநன்னி பள்ளியினைச் சாரச்செல்வார்
வானணையு மலர்ச்சோலை தோன்றுவதெப் பதியென்ன மகிழ்ச்சியெய்திப்
பானல்வயற் றிருநன்னி பள்ளியெனத் தாதையார் பணிப்பக்கேட்டு
ஞானபொ னகர்தொழுது நற்றமிழ்ச்சொற் றொடைமாலை நவிலலுற்றார்.

வேறு.

காரைகள் கூகைமுல்லை யெனநிகழ் கலைசேர்வாய்மைச்
சீரியற் பதிகம்பாடித் திருக்கடை காப்புத்தன்னி
னாரியோர் பாகர்வைகு நனிபள்ளி யுள்குவார்தம்
பேரிடர் கெடுதற்காணை நமதெனும் பெருமைவைத்தார். (ககரு)

---

திருநன்னிபள்ளி - பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

காரைகள் கூகைமுல்லை களவாகையீகை படர்தொடரி கள்ளிகவினிச்
சூரைகள் பம்மிவிம்மு சுடுகாடமர்ந்த சிவன்மேய சோலைநகர்தான்
றேரைகள் சாரைசாய மிதிகொள்ளவாளை குதிகொள்ள வள்ளைதுவள
நாரைக ளாரல்வார வயன்மேதிவைகு நனிபள்ளிபோலு நமர்காள்.

சடையிடை புக்கொடுங்கி யுட்டங்குவெள்ளம் வளர்திங்கள் கண்ணியயலே, யிடையிடை வைத்தகொக்கு மலர்தொத்துமாலை யிறைவன்னிடங்கொள்பதிதான்,மடையிடை வாளைபாய முகிழ்வாய்நெரிந்து மணநாறு நீலமலரு, நடையுடை யன்னம்வைகு புனலம்படப்பை நனிபள்ளி போலு நமர்காள்.

கடல்வரை யோதமல்கு கழிகானல்பானல் கமழ்காழி யென்றுகருதப் படுபொரு ளாறுநாலு முளதாகவைத்த பதியான ஞானமுனிவ னிடுபறை யொன்றவத்தர் பியன்மேலிருந்து விசையா லுரைத்தபனுவல் நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளியுள்க வினைகெடுத லாணைநமதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நற்றுணையப்பர். தேவியார்-பர்வதராசபுத்திரி.

திருப்பதிகம்—௩.

---

ஆதியார் கோயில்வாயி லணைந்துபுக் கன்புகூரு
நீதியாற் பணிந்துபோற்றி நீடிய வருண்முன்பெற்றுப்
போதுவார் தம்மைச்சூழ்ந்து பூசுரர் குழாங்கள்போற்றுங்
காதல்கண் டங்கமர்ந்தார் கவுணியர் தலைவனார்தாம். (௧௧௬)

அம்பிகை யளித்தஞான மகிலமு முய்யவுண்ட
நம்பெருந் தகையார்தம்மை யெதிர்கொண்டு நண்ணவேண்டி
யும்பரும் வணங்குமெய்ம்மை யுயர்தவத் தொண்டரோடு
தம்பெரு விருப்பால்வந்தார் தலைசையந் தணர்களெல்லாம். (௧௧௭)

காவண மெங்குமிட்டுக் கமுகொடு கதலிநாட்டிப்
பூவணை தாமந்தூக்கிப் பூரண கும்பமேந்தி
யாவண வீதியெல்லா மலங்கரித் தண்ணலாரை
மாவணை மலர்மென்சோலை வளம்பதிக் கொண்டுபுக்கார். (௧௧௮)

திருமறை யோர்கள்சூழ்ந்து சிந்தையின் மகிழ்ச்சிபொங்கப்
பெருமறை யோசைமல்கப் பெருந்திருக் கோயிலெய்தி
யருமறைப் பொருளானாரைப் பணிந்தணி நற்சங்கத்தின்
றருமுறை நெறியக்கோயில் சார்ந்தமை யருளிச்செய்தார். (௧௧௯)

கறையணி கண்டர்கோயில் காதலாற் பணிந்துபாடி
மறையவர் போற்றவந்து திருவலம் புரத்துமன்னும்
இறைவரைத் தொழுதுபாடுங் கொடியுடை யேத்திப்போந்து
நிறைபுனற் றிருச்சாய்க்காடு தொழுதற்கு நினைந்துசெல்வார். (௧௨0)

---

திருவலம்புரம்-பண்-பழம்பஞ்சுரம்.
திருச்சிற்றம்பலம்.

கொடியுடைமும்மதி லூடுருவக் குனிவெஞ் சிலைவாங்கி
யிடிபடவெய்த வமரர்பிரா னடியா ரிசைந்தேத்தத்
துடியிடையாளை யோர்பாகமாகத் துதைந்தா ரிடம்போலும்
வடிவுடைமேதி வயல்படியும் வலம்புர நன்னகரே.

நல்லியனன்மறை யோர்புகலித் தமிழ்ஞான சம்பந்தன்
வல்லியதோலுடை யாடையினன் வலம்புர நன்னகரைச்
சொல்லியபாடல்கள் பத்துஞ்சொல்ல வல்லவர் தொல்வினைபோய்ச்
செல்வனசேவடி சென்றணுகிச் சிவலோகஞ் சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

வலம்புரநாதர். வடுவகிர்க்கண்ணம்மை. திருப்பதிகம்—ச.

---

பன்னகப் பூணினாைப் பல்லவ னீச்சுரத்துச்
சென்னியால் வணங்கியேத்தித் திருந்திசைப் பதிகம்பாடிப்
பொன்னிசூழ் புகாரினீடு புனிதர்தந் திருச்சாய்க்காடு
மன்னுசீர்த் தொண்டரெல்லாம் மகிழ்ந்தெதிர் கொள்ளப்புக்கார். (கஉக)

வானள வுயர்ந்தவாயி லுள்வலங் கொண்டுபுக்கு
தேனலங் கொன்றையார்தந் திருமுன்பு சென்றுதாழ்ந்து
மானிடந் தரித்தார்தம்மைப் போற்றுவார் மண்புகாரென்
றானெலா முருகவேத்தி யுச்சிமேற் குவித்தார்செங்கை. (கஉஉ)

---

திருச்சாய்க்காடு-பண் - சீகாமரம்.
திருச்சிற்றம்பலம்.

மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார் சாய்க்காட்டெந் தலைவன்றாள் சார்ந்தாரே.

கொம்பந்து புடைத்தொல்கு நூபுரஞ்சேர் மெல்லடியார்
அம்பந்தும் வரிக்கழலு மரவஞ்செய் பூங்காழிச்
சம்பந்தன் றமிழ்பகர்ந்த சாய்க்காட்டுப் பத்தனையு
மெம்பந்த மெனக்கருதி யேத்துவார்க் கிடர்கெடுமே.

திருச்சிற்றம்பலம்.

---

சீரினிற் றிகழ்ந்தபாட்டிற் றிருக்கடை காப்புப்போற்றிப்
பாரினிற் பொலிந்ததொண்டர் போற்றிட பயில்வார்பின்னும்
ஏரிசைப் பதிகம்பாடி யேத்திப்போந் திறைவர்வெண்கா
டாருமெய்க் காதலோடும் பணிவதற் கணைந்தாரன்றே. (கஉந)

---

திருச்சாய்க்காடு-பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நித்தலுநியமஞ் செய்துநீர்மலர் தூவிச்
சித்தமொன்றவல் லார்க்கருளுஞ்சிவன் கோயில்
மத்தயானையின் கோடும்வண்பீலியும் வாரித்
தத்துநீர்ப்பொன்னி சாகரமேவுசாய்க் காடே.

ஏனையோர்புகழ்ந் தேத்திய வெந்தைசாய்க் காட்டை
ஞானசம்பந்தன் காழியர்கோனவில் பத்து
மூனமின்றி யுரைசெயவல்லவர் தாம்போய்
வானநாடினி தாள்வரிம் மாநிலத்தோரே.

திருச்சிற்றம்பலம்.

சாயாவனேசர். குயில்மொழியம்பிகை. திருப்பதிகம்—ச.

---

பொன்னிதழ்க் கொன்றைவன்னி புனலிளமதியினீடு
சென்னியர் திருவெண்காட்டுத் திருத்தொண்ட ரெதிரேவந்திங்
கின்னதன் மையர்களாகு ரெனவொணு மகிழ்ச்சிபொங்க
மன்னுசீர்ச் சண்பையாளு மன்னரைக் கொண்டுபுக்கார். (கஉச)

முத்தமிழ் விரகர்தாமு முதல்வர்கோ புரத்துமுன்னர்
சித்தநீ டுவகையோடுஞ் சென்றுதாழ்ந் தெழுந்துபுக்குப்
பத்தரா மடியார்சூழப் பரமர்கோ யிலைச்சூழ்வந்து
நித்தனர் தம்முன்பெய்தி நிலமுறத் தொழுதுவீழ்ந்தார். (கஉரு)

மெய்ப்பொரு ளாகினாரை வெண்காடு மேவினாரைச்
செப்பரும் பதிகமாலை கண்காட்டு நுதன்முன்சேர்த்தி
முப்புரஞ் செற்றார்பாதஞ் சேருமுக் குளமும்பாடி
யொப்பரு ஞானமுண்டா ருளமகிழ்ந் தேத்திவாழ்ந்தார். (கஉசு)

---

திருவெண்காடு-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே.

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவெ லாம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே.

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் றமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே.

திருச்சிற்றம்பலம்

சுவேதாரணியேசுரர். பிர்ம்மவித்தியாநாயகி. திருப்பதிகம்—கூ.

---

அருமையாற் புறம்போந்து வணங்கியங் கமருநாளிற்
திருமுல்லை வாயிலெய்திச் செந்தமிழ் மாலைசேர்த்தி
மருவிய பதிகண்மற்றும் வணங்குவார் மறையோரேத்தத்
தருமலி புகலிவந்து ஞானசம் பந்தர்சார்ந்தார். (௧௨௭)

---

திருமுல்லைவாயில்-பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

துளிமண்டியுண்டுநிறம் வந்தகண்டமன்னு துன்னுசுடரோ
ஞெளிமண்டியும்ப ருலகங்கடந்த வுமைபங்க னெங்களரனூர்
களிமண்டுசோலைக் கழனிக்கலந்த கமலங் கடங்குமதுவின்
றெளிமண்டியுண்டு சிறைவண்டுபாடு திருமுல்லை வாயிலிதுவே.

அணிகொண்டகோதை யவணன்றுமேத்தவருள்செய்தவெந்தைமருவார்
திணிகொண்டமூன்று புரமெய்தவில்லி திருமுல்லை வாயிலதன்மேற்
றணிகொண்டசிந்தை யவர்காழிஞான மிகுபந்த னெண்டமிழ்களி
னணிகொண்டபத்து மிவைபாடுபத்த ரகல்வான மாள்வர்மிகவே.

திருச்சிற்றம்பலம்.

முல்லைவனநாதர். அணிகொண்டகோதை. திருப்பதிகம்—க.

---

தோணிவீற் றிருந்தார்தம்மைத் தொழுதுமுன் னின்றுதுய
ஆணியாம் பதிகம்பாடி யருட்பெரு வாழ்வுகூரச்
சேணுயர் மாடமோங்கு திருப்பதி யதனிற்செய்ய
வேணியார் தம்மைநாளும் போற்றிய விருப்பின்மிக்கார். (௧௨௮)

வைகுமந் நாளிற்கீழ்பான் மயேந்திரப் பள்ளிவாசஞ்
செய்பொழிற் குருகாவூருந் திருமுல்லை வாயிலுள்ளிட்
டெய்திய பதிகளெல்லா மின்புற விறைஞ்சியேத்தத்
தையலாள் பாகர்தம்மைப் பாடினார் தமிழ்ச்சொன்மாலை. (௧௨௯)

---

திருமயேந்திரப்பள்ளி-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

திரைதரு பவளமுஞ் சீர்திகழ் வயிரமுங்
கரைதரு மகிலொடு கனவளை புகுதரும்
வரைவிலா வெயிலெய்த மயேந்திரப் பள்ளியுள்
ளரவனை யழகனை யடியிணை பணிமினே.

வம்புலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியு
ணம்பனூர் கழலடி ஞானசம் பந்தன்சொ
னம்பர மிதுவென நாவினு னவில்பவர்
உம்பரா ரெதிர்கொள வுயர்பதி யணைவரே.

திருச்சிற்றம்பலம்.

திருமேனியழகர். முல்லைநகைவடிவாள். திருப்பதிகம்—க.

---

அவ்வகை மருங்குசூழ்ந்த பதிகளி லரனூர்பொற்றண்
மெய்வகை ஞானமுண்ட வேதியர் விரவிப்போற்றி
யுய்வகை மண்ணுளோருக் குதவிய பதிகம்பாடி
யெவ்வகை யோருமேத்த விறைவரை யேத்துநாளில். (கருo)

வேறு.

திருநீல கண்டத்துப் பெரும்பாணர் தெள்ளமுதின்
வருநீர்மை யிசைப்பாட்டு மதங்கசூ ளாமணியா
ரொருநீர்மை யுடனுடைய பிள்ளையார் கழல்வணங்கத்
தருநீர்மை யாழ்கொண்டு சண்பையிலே வந்தணைந்தார். (கருக)

பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையா ரெதிர்கொள்ளச்
சுரும்பார்செங் கமலமலர்த் துணைப்பாதந் தொழுதெழுந்து
விரும்பார்வத் தொடுமேத்தி மெய்ம்மொழிக ளாற்றுதித்து
வரும்பான்மை தருவாழ்வு வந்தெய்த மகிழ்சிறந்தார். (கருஉ)

அளவிலா மகிழ்ச்சியினூர் தமைநோக்கி யையர்நீ
ருளமகிழ விங்கணைந்த வுறுதியுடையோ மென்றே
யிளநிலா நகைமுகிழ்ப்ப விசைத்தவரை யுடன்கொண்டு
களநிலவு நஞ்சணிந்தார் பாலணையுங் கவுணியனூர். (கருங)

கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்
தேயுமிசை யாழுங்க ளிறைவருக்கிங் கியற்றுமென
வாயபுகழ்ப் பிள்ளையா ரருள்பெற்ற வதற்கிறைஞ்சி
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கியிசை விரிக்கின்றார். (கருச)

தானநிலைக் கோல்வடித்துப் படிமுறைமைத் தகுதியினு
லானவிசை யாராய்வுற் றங்கணர்தம் பாணியினை
மானமுறைப் பாடினியா ருடன்பாடி வாசிக்க
ஞானபொ ளகர்மகிழ்ந்தார் நான்மறையோ ரதிசயித்தார். (௧௩௫)

யாழிலெழு மோசையுட னிருவர்மிடற் றிசையொன்றி
வாழிதிருத் தோணியுளார் மருங்கணையு மாட்சியினைத்
தாழுமிரு சிறைப்பறவை படிந்ததனி விசும்பிடைநின்
றேழிசைநூற் கந்தருவர் விஞ்சையரு மெடுத்திசைத்தார். (௧௩௬)

எண்ணருஞ்சீர்த் திருத்தோணி யெம்பெருமான் கழல்பரவிப்
பண்ணமையா ழிசைகூடப் பெரும்பாணர் பாடியபின்
கண்ணுதலா ரருளினாற் காழியர்கோன் கொடுபோந்து
நண்ணியுறை யிடஞ்சமைத்து நல்விருந்து சிறந்தளிப்ப. (௧௩௭)

பிள்ளையா ரருள்பெற்ற பெரும்பாணர் பிறையணிந்த
வெள்ளநீர்ச் சடையாரை யவர்மொழிந்த மெய்ப்பதிக
முள்ளபடி கேட்டலுமே யுருகுபெரு மகிழ்ச்சியராய்த்
தெள்ளமிர்த மருந்தினர்போற் சிந்தைகளி யுறத்தொழுதார். (௧௩௮)

காழியார் தவப்பயனுங் கவுணியர்தந் தோன்றலா
ராழிவிட முண்டவர்த மடிபோற்றும் பதிகவிசை
யாழின்முறை மையினிட்டே யெவ்வுயிரு மகிழ்வித்தா
ரேழிசையும் பணிகொண்ட நீலகண்ட யாழ்ப்பாணர். (௧௩௯)

சிறியமறைக் களிறளித்த திருப்பதிக விசையாழி
னெறியிலிடும் பெரும்பாணர் பின்னுநீ ரருள்செய்யு
மறிவரிய திருப்பதிக விசையாழி லிட்டடியேன்
பிறிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டு மெனத்தொழுதார். (௧௪௰)

மற்றதற்குப் பிள்ளையார் மனமகிழ்வுற் றிசைந்தருளப்
பெற்றவர்தாந் தம்பிரா னருளிதுவே யெனப்பேணிச்
சொற்றமிழ்மா லையினிசைகள் சுருதியாழ் முறைதொடுத்தே
யற்றைநாட் போலென்று மகலாநண் புடனமர்ந்தார். (௧௪௧)

சிரபுரத்தி லமர்ந்தருளுந் திருஞான சம்பந்தர்
பரவுதிருத் தில்லைநடம் பயில்வாரைப் பணிந்தேத்த
விரவியெழும் பெருங்காதல் வெள்ளத்தை யுள்ளத்திற்
றரவிசையுங் குறிப்பறியத் தவமுனிவர்க் கருள்செய்தார். (௧௪௨)

பிள்ளையா ரருள்செய்யப் பெருந்தவத்தாற் பெற்றெடுத்த
வள்ளலார் தாமுமுடன் செல்வதற்கு மனங்களிப்ப
வெள்ளிமால் வரையென்னத் திருத்தோணி வீற்றிருந்த
புள்ளிமா னுரியாரைத் தொழுதருளாற் புறப்பட்டார். (௧௪௩)

தாவில்யாழ்ப் பாணரொடுந் தாதையார் தம்மோடு
மேவியசீ ரடியார்கள் புடைவரவெங் குருவேந்தர்
பூவின்மே லயன்போற்றும் புகலியினைக் கடந்துபோய்த்
தேவர்கடம் பெருந்தேவர் திருத்தில்லை வழிச்செல்வார். (கசச)

வே று.

நள்ளிருட்கணின் றுடுவாருறைபதி நடுவுகண்டனபோற்றி
முள்ளிடைப்புற வெள்ளிதழ்க்கேதகை முகிழ்விரிமணஞ்சூழப்
புள்ளுடைத்தடம் பழனமும்படுகரும் புடைகழிந்திடப்போந்து
கொள்ளிடத்திரு நதிக்கரையடைந்தனர் கவுணியர்குலதீபர். (கசரு)

வண்டிரைத்தெழு செழுமலர்ப்பிறங்கலு மணியுமாரமுமுந்தித்
தண்டலைப்பல வளத்தொடும்வருபுன றாழ்ந்துசேவடிதாழத்
தெண்டிரைக்கடற் பவளமும்பணிலமுஞ் செழுமணித்திரண்முத்துங்
கொண்டிரட்டியுந் தோதமங்கெதிர்கொளக் கொள்ளிடங்கடந்தேறி. ()

பல்குதொண்டர்தங் குழாத்தொடுமுடன்வரும் பயின்மறையவர்சூழச்
செல்கதிப்பயன் காண்பவர்போற்களி சிந்தைகூர்தரக்கண்டு
மல்குதேவரோ முதலனைத்துயிர்களும் வணங்கவேண்டினவெல்லா
நல்குதில்லைசூழ் திருவெல்லைபணிந்தனர் ஞானவாரமுதுண்டார். ()

செங்கணேற்றவர் தில்லையேநோக்கியித் திருந்துலகினிற்செல்லா
மங்கலந்தரு மழவிளம்போதகம் வருமிருமருங்கெங்குந்
தங்குபுள்ளொலி வாழ்த்துரையெடுத்துமுன் றாமரைமதுவாசப்
பொங்குசெம்முகை கரங்குவித்தலர்முகங் காட்டினபுனற்பொய்கை. ()

கலவமென்மயி லினங்களித்தழைத்திடக் கடிமணக்குளிர்கால்வந்
துலவிமுன்பணிந்தெதிர்கொளக்கிளர்ந்தெழுந்துடன்வருஞ்சுரும்பார்ப்ப
விலகுசெந்தளி ரொளிநிறந்திகழ்தர விருகுழைபுடையாட
மலர்முகம்பொலிந் தசையமென்கொம்பர்நின் றுடுவமலர்ச்சோலை. ()

இழைத்தடங்கொங்கை யிமயமாமலைக்கொடி யின்னமுதெனஞானங்
குழைத்தளித்திட வமுதுசெய்தருளிய குருளையார்வரக்கண்டு
மழைத்தமந்தமா ருதத்தினனலமலர் வண்ணநுண்டுகளேவித்
தழைத்தபொங்கெழின் முகஞ்செய்துவணங்கின தடம்பணைவயற்சாலி.

ஞாலமுய்ந்திட ஞானமுண்டவரொழுந் தருளுமங்கலங்கண்டு
சேலலம்புதண் புனற்றடம்படிந்தணை சீதமாருதம்வீசச்
சாலவும்பல கண்பெறும்பயன்பெறுந் தன்மையிற்களிகூர்வ
போலசைந்திரு புடைமிடைந்தாடின புறம்பணைநறும்பூகம். (கருக)

பவந்தவிர்ப்பவர் தில்லைசூழெல்லையின் மறையவர்பயில்வேள்விச்
சிவந்தரும்பய னுடையவாகுதிகளின் செழும்புகைப்பரப்பாலே
தவந்தழைப்பவந் தருளியபிள்ளையார் தாமணைவுறமுன்னே
நிவந்தநீலநுண் டுகில்விதானித்தது போன்றதுநெடுவானம். (கருஉ)

கரும்புசெந்நெல்பைங் கமுகொடுகலந்துயர் கழனியம்பணைநீங்கி
யரும்புமென்மலர் தளிர்பலமூலமென் றனைத்தினுகரமான
மருங்கினந்தன வனம்பணிந்தணைந்தனர் மாடமாளிகையோங்கி
நெருங்குதில்லைசூழ் நெடுமதிற்றென்றிரு வாயினேரணித்தாக. (௧௫௩)

பொங்குகொங்கையிற் கறந்தமெய்ஞ்ஞானமாம் போனகம்பொற்குன்ற
மங்கைசெங்கையா லூட்டவுண்டருளிய மதலையார்வந்தாரென்
றங்கண்வாழ்பெருந் திருத்தில்லையந்தண ரன்பர்களுடனீண்டி
யெங்குமங்கல வணிமிகவலங்கரித் தெதிர்கொளவணைவார்கள். (௧௫௪)

வேதநாதமு மங்கலமுழக்கமும் விசும்பிடைநிறைந்தோங்கச்
சீதவாசநீர் நிறைகுடந்தீபங்க டிசையெலாநிறைந்தாரச்
சோதிமாமணி வாயிலின்புறஞ்சென்று சோபனவாக்கமுஞ்சொல்லிக்
கோதிலாதவர் ஞானசம்பந்தரை யெதிர்கொண்டுகொடுபுக்கார். (௧௫௫)

செல்வமல்கிய தில்லைமூதூரினிற் றென்றிசைத்திருவாயி
லெல்லைநீங்கியுள் புகுந்திருமருங்குநின் றெடுக்குமேத்தொலிசூழ
மல்லலாவண மறுகிடைக்கழிந்துபோய் மறையவர்நிறைவாழ்க்கைத்
தொல்லைமாளிகை நிரைத்திருவீதியைத் தொழுதணைந்தனர்தூயோர். ()

மலர்ந்தபேரொளி குளிர்தரச்சிவமணர் கமழ்ந்துவான்றுகண்மாறிச்
சிலம்பலம்புசே வடியவர்பயில்வுறுஞ் செம்மையாற்றிருத்தொண்டு
கலந்தவன்பர்தஞ் சிந்தையிற்றிகழ்திரு வீதிகண்களிசெய்யப்
பலன்கொண்மைந்தனு ரெழுநிலைக்கோபுரம் பணிந்தெழுந்தனர்போற்றி.

நீடுநீணிலைக் கோபுரத்துள்புக்கு நிலவியதிருமுன்றின்
மாடுசெம்பொனின் மாளிகைவலங்கொண்டு வானுறவளர்திங்கள்
சூடுகின்றபே ரம்பலந்தொழுதுபோந் தருமறைதொடர்ந்தேத்த
வாடுகின்றவர் முன்புறவணைந்தவ ரணிகிளர்மணிவாயில். (௧௫௮)

நந்தியெம்பிரான் முதற்கணநாதர்க ணலங்கொள்பன்முறைகூட
அந்தமில்லவ ரணுகிமுன்றெழுதிரு ০ அணுக்கனுந்திருவாயில்
சிந்தையார்வமும் பெருகிடச்சென்னியிற் சிறுச்செய்யகையேற
வுய்ந்துவாழ்திரு நயனங்கள்களிகொள்ள வுருகுமன்பொடுபுக்கார். ()

அண்ணலார்தமக் களித்தமெய்ஞ்ஞானமே யானவம்பலமுந்தம்
முண்ணிறைந்தஞா னத்தெழுமானந்த வொருபெருந்தனிக்கூத்துங்
கண்ணின்முன்புறக் கண்டுகும்பிட்டெழுங் களிப்பொடுங்கடற்காழிப்
புண்ணியக்கொழுந் தனையவர்போற்றுவார் புனிதராடியபொற்பு. (௧௬௦)

உணர்வினேர்பெற வருஞ்சிவபோகத்தை யொழிவின்றியுருவின்கண்
ணணையுமைம்பொறி யளவினுமெளிவர வருளினையெனப்போற்றி

০ அணுக்கனுந்திருவாயில் ஆவது-திருவணுச்கன்றிருவாயில். இதற்குப்பொருள் சமீபத்திலிருக்குந் திருவாயில் எனக் கூறப்படும்.

யிணையில்வண் பெருங் கருணையேயேத்திமுன் னெடுத்தசொற்பதிகத்திற்
புணருமின்னிசை பாடினராடினர் பொழிந்தனர்விழிமாறி. (௧௬௧)

வேறு.

ஊழிமுதல்வர்க் குரிமைத் தொழிற்சிறப்பால்
வாழிதிருத் தில்லைவா ழந்தணரை முன்வைத்தே
யேழிசையு மோங்க வெடுத்தா ரௌமையாளுங்
காழியர்தங் காவலனார் கற்றாங் கெரியோம்பி. (௧௬௨)

கோயில்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார்வாழ் தில்லைச் சிற்றம் பலமேய
முற்றாவெண் டிங்கண் முதல்வன் பாதமே
பற்றாநின் றாரைப் பற்றா பாவமே.

பறப்பை படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்புஞ்
சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
பிறப்பில் பெருமானைப் பின்றாழ் சடையானை
மறப்பிலார் கண்டீர் மையறீர்வாரே.

ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத்தார் கொள்கைச் சிற்றம் பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத்தாற் பாட வல்லார் நல்லாரே.

திருச்சிற்றம்பலம்.

பண்ணார் பதிகத் திருக்கடைகாப் புப்பரவி
யுண்ணாடு மென்பு முயிருங் கரைந்துருக்கும்
விண்ணா யகன்கூத்து வெள்ளவெளியேதிளைத்துக்
கண்ணா ரமுதுண்டார் காலம் பெறவுழுதார். (௧௬௩)

முன்மா லயனறியா மூர்த்தியார் முன்னின்று
சொன்மாலை யாற்கால மெல்லாந் துதித்திறைஞ்சிப்
பன்மா மறைவெள்ளஞ் சூழ்ந்து பரவுகின்ற
பொன்மா ளிகையை வலங்கொண்டு புறம்போந்தார். (௧௬௪)

செல்வத் திருமுன்றிற் றாழ்ந்தெழுந்து தேவர்குழா
மல்குந் திருவாயில் வந்திறைஞ்சி மாதவங்க
ணல்குந் திருவீதி நான்குந் தொழுதங்கண்
0 அல்குந் திறமஞ்சு வார்சண்பை யாண்டகையார். (௧௬௫)

0 அல்குந்திறம - அந்தத்தலத்தில் தங்கியிருப்பதற்கு அஞ்சுகின்றவர் எனப் பொருள்கொள்க.

செய்ய சடையார் திருவேட் களஞ்சென்று
கைதொழுது சொற்பதிகம் பாடிக் கழுமலக்கோன்
வைகி யருளுமிட மங்காக மன்றுடும்
ஐயன் றிருக்கூத்துக் கும்பிட் டணைவுறுநாள். (௧௯௯)

திருவேட்களம்-பண்-தக்கராகம்.
திருச்சிற்றம்பலம்.

அந்தமுமாதியு மாகியவண்ண லாரழலங்கை யமர்ந்திலங்க
மந்தமுழவ மியம்பமலைமகள் காண நின்றாடிச்
சந்தமிலங்கு நகுதலைகங்கை தண்மதியம் மயலேததும்ப
வெந்தவெண் ணீறுமெய்பூசும் வேட்கள நன்னகராரே.

விண்ணியன்மாடம் விளங்கொளிவீதி வெண்கொடியெங்கும் விரிந்திலங்க
நண்ணியசீரவர் காழிநற்றமிழ் ஞான சம்பந்தன்
பெண்ணினல்லாளொரு பாகமமர்ந்து பேணியவேட்கள மேன்மொழிந்த
பண்ணியல் பாடல்வல்லார்கள் பழியொடு பாவமிலாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பாசுபதேசுவரர். தேவியார்-நல்லநாயகி.
திருப்பதிகம்—௨.

கைம்மான் மறியார் கழிப்பாலை யுள்ளணைந்து
மெய்ம்மாலைச் சொற்பதிகம் பாடி விரைக்கொன்றைச்
செம்மாலை வேணித் திருவுச்சி மேவியுறை
யம்மானைக் கும்பிட் டருந்தமிழும் பாடினார். (௧௯௭)

திருக்கழிப்பாலைப்-பண்-இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

புனலாடிய புன்சடை யாயரண
மனலாக விழித்தவ னேயழகார்
கனலாடலி னாய்கழிப் பாலையுளா
யுனவார்கழல் கைதொழு துள்குதுமே.

கழியார்பதி காவல னைப்புகலிப்
பழியாமறை ஞானசம் பந்தன்சொல்
வழிபாடிவை கொண்டடி வாழ்த்தவல்லார்
கெழியாரிமை யோரொடு கேடிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பால்வண்ணநாதர். தேவியார்-வேதநாயகி.
திருப்பதிகம்—அ.

பாடும் பதிகமிசை யாழ்ப்பா ணரும்பயிற்றி
நாடுஞ் சிறப்பெய்த நாளுநடம் போற்றுவார்
நீடுந் திருத்தில்லை யந்தணர்க ணீண்மன்று
ளாடுங் கழற்கணுக்க ராம்பே றதிசயிப்பார். (௧௬௮)

ஆங்கவர்தஞ் சீலத் தளவின் மையுநினைந்தே
யோங்கி யெழுங்காத லொழியாத வுள்ளத்தார்
தேங்கமழுஞ் சோலைத் திருவேட் களங்கடந்து
பூங்கிடங்கு சூழ்புலியூர்ப் புக்கணையும் போழ்தின்கண். (௧௬௯)

அண்டத் திறைவ ரருளா லணிதில்லை
முண்டத் திருநீற்று மூவா யிரவர்களுந்
தொண்டத் தகைமைக் கணநாத ராய்த்தோன்றக்
கண்டப் பரிசுபெரும் பாணர்க்குங் காட்டினார். (௧௭0)

செல்வம் பிரிவறியாத் தில்லைவா ழந்தணரு
மெல்லையில்சீர்ச் சண்பை யிளவே றெழுந்தருளி
யொல்லை யிறைஞ்சா முன்றாமு முடனிறைஞ்சி
மல்ல லணிவீதி மருங்கணைய வந்தார்கள். (௧௭௧)

பொங்கி யெழுங்காதல் புலனாகப் பூசுரர்தஞ்
சிங்க மனையார் திருமுடியின் மேற்குவித்துப்
பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்குஞ்
செங்கையொடுஞ் சென்று திருவாயி லுட்புக்கார். (௧௭௨)

ஓன்றிய சிந்தை யுருக வுயர்மேருக்
குன்றனைய பேரம் பலமருங்கு கும்பிட்டு
மன்று ணிறைந்தாடு மாணிக்கக் கூத்தரெதிர்
சென்றணைந்து தாழ்ந்தார் திருக்களிற் றுப்படிக்கீழ். (௧௭௩)

வேறு.

ஆடினாய்நறு நெய்யொடுபாலயி ரென்றெடுத் தார்வத்தாற்
பாடினார்பின்னு மப்பதிகத்தினிற் பரவிய பாடலொன்றி
னீடுவாழ்தில்லை நான்மறையோர்தமைக் கண்டவ் நிலையெல்லாங்
கூடுமாறுகோத் தவர்தொழுதேத்துசிற் றம்பல மெனக்கூறி. (௧௭௪)

---

திருக்கோயில்-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆடினாய்நறு நெய்யொடுபாலயி ரந்தணர்பிறியாத சிற்றம்பல
நாடினாயிட மாநறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல்கீதமும் பல்சடைப்பனிகால்கதிர்வெண்டிங்கள்
சூடினாயருளாய் சுருங்கவெம தொல்வினையே.

நாறும்பொழி னண்ணியகாழியு ணான்மறைவல்ல ஞானசம்பந்தன்
ஊறுமின்றமி ழாலுயர்ந்தாருறை தில்லைதன்னு
ளேறுதொல்புக ழேந்துசிற்றம்பலத் தீசனையிசையாற்சொன்னபத்திவை
கூறுமாறுவல் லாருயர்ந்தாரொடுங் கூடுவரோ.

திருச்சிற்றம்பலம்.

---

இன்னதன்மையி லின்னிசைப் பதிகமுந் திருக்கடைகாப்பேத்தி
மன்னுமானந்த வெள்ளத்திற்றிளைத்தெதிர் வந்துமுன்னின்றாடும்
பின்னுவார்சடைக் கூத்தர்பேரருள்பெறப் பிரியாதவிடைபெற்றுப் [ல்·
பொன்னினம்பலஞ்சூழ்ந்துதாழ்ந்தெழுந்து போந்தணைந்தனர்புறமுன்றி

அப்புறத்திடை வணங்கியங்கருளுட னணிமணித்திருவாயில்
பொற்புறத்தொழு தெழுந்துடன்போதரப் போற்றியபுகழ்ப்பாணர்
நற்பதந்தொழு தடியனேன்பதிமுத னதிநிவாக்கரைமேய
வொப்பிறானங்கள் பணிந்திடவேண்டுமென் றுரைசெயவதுநேர்வார். ()

பொங்குதெண்டிரைப் புனிதநீர்நிவாக்கரைக் குடதிசை மிசைப்போந்து
தங்குதந்தையா ருடன்பரிசனங்களுந் தவமுனிவருஞ்செல்லச்
செங்கையாழ்த்திரு நீலகண்டப்பெரும் பாணனாருடன்சேர
மங்கையார்புகழ் மதங்கசூளாமணி யாருடன்வரவந்தார். (௧௱௭)

இருந்தடங்களும் பழனமுங்கடந்துபோ யெருக்கத்தம்புலியூரின்
மருங்குசென்றுற நீலகண்டப்பெரும் பாணனார்வணங்கிக்கார்
நெருங்குசோலைசூ ழிப்பதியடியனேன் பதியெனநெடிதின்புற்
றருங்கலைச்சிறு மழவிளங்களிறனா ரங்கணைந்தருள்செய்வார். (௧௱௮)

ஐயர்நீரவ தரித்திடவிப்பதி யளவின்மாதவமுன்பு
செய்தவாறெனச் சிறப்புரைத்தருளியச் செழும்பதியிடங்கொண்ட
மைகொள்கண்டர்தங் கோயிலினுட்புக்கு வலங்கொண்டு வணங்கிப்பா
ருய்யவந்தவர் செழுந்தமிழ்ப்பதிகமங் கிசையுடனுரைசெய்தார். (௧௱௯)

---

திருஎருக்கத்தம்புலியூர்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

படையார் தருபூதப் பகடா ருரிப்போர்வை
யுடையா னுமையோடு முடனா யிடுகங்கைச்
சடையா னெருக்கத்தம் புலியூர்த் தகுகோயில்
விடையா னடியேத்த மேவா வினைதானே.

ஏரா ரெருக்கத்தம் புலியூ ருறைவானைச்
சீரார் திகழ்காழித் திருவார் சம்பந்தன்
ஆரா வருந்தமிழ் மாலையிவை வல்லார்
பாரா ரவரேத்தப் பதிவா னுறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - நீலகண்டநாயகர். தேவியார் - நீலமலர்க்கண்ணி.

திருப்பதிகம்—க.

---

அங்குநின்றெழூந் தருளிமற்றவருட னம்பொன்மா மூலவல்லி, பங்கர்தாமினி துறையுநற்பதிபல பரிவொடும் பணிந்தேத்தித், துங்கவண்டமிழ்த் தொடைமலர்பாடிப் போய்த் தொல்லை வெங்குருவேந்தர், செங்கணேற்றவர் திருமுதுகுன்றினைத் தொழுதுசென்றணை கின்றார். (கஅ0)

மொய்கொண்மாமணி கொழித்துமுத்தாறுசூழ் முதுகுன்றையடைவோமென்,றெய்துசொன்மலர் மாலைவண்பதிகத்தை யிசையொடும் புனைந்தேத்திச், செய்தவத்திரு முனிவருந்தேவருந் திசையெலா நெருங்கப்புக், கையர்சேவடி பணியுமப்பொருப்பினி லாதரவுடன்சென்றார். (கஅக)

---

திருமுதுகுன்றம்-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

மத்தா வரைநிறுவிக் கடல்கடந்தவ் விடமுண்ட
தொத்தார் தருமணிநீண் முடிச்சுடர்வண் ணனதிடமாங்
கொத்தார் மலர்குளிர்சந் தகிலொளிர்குங் குமங்கொண்டு
முத்தா றுவந்தடிவீழ் தருமுதுகுன் றடைவோமே.

தழையார் வடவியவீ தனிற்றவமே புரிசைவ
னிழையா ரிடைமடவா ளொடுமினிதா வுறையிடமா
மழைவா னிடைமுழவவ் வெழில்வளைவா ளுகிரெரிகண்
முழைவா ளரிகுமிறும் முயர்முதுகுன் றடைவோமே.

முகில்சேர் தருமுதுகுன் றுடையானை மிகுதொல்சீர்ப்
புகலின்னகர் மறைஞான சம்பந்த னுரைசெய்த
நிகரில்லன தமிழ்மாலை களிசையோ டிவைபத்தும்
பகரும் மடியவர்கட் கிடர்பாவ மடையாவே.

திருச்சிற்றம்பலம்.

---

வானநாயகர் திருமுதுகுன்றினை வழிபட வலங்கொள்வார்
தூநறுந்தமிழ்ச் சொல்லிருக்குக்குறட் டுணைமலர் மொழிந்தேத்தி
ஞானபோனகர் நம்பர்தங்கோயிலை நண்ணியங் குள்புக்குத்
தேனலம்புதண் கொன்றையார்சேவடி திளைத்தவன் பொடுதாழ்ந்தார்.

திருமுதுகுன்றம்-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நின்றுமலர்தூவி யின்றுமுதுகுன்றை
நன்றுமேத்துவீர்க் கென்றுமின்பமே.

நின்றுமுதுகுன்றை நன்றுசம்பந்தன்
ஒன்றுமுரைவல்லா ரென்றுமுயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

---

தாழ்ந்தெழுந்துமுன் முரசதிர்ந்தெழுமெனுந் தண்டமிழ்த்தொடைசாத்தி
வாழ்ந்துபோந்தங்கண் வளம்பதியதனிடை வைகுவார்மணிவெற்புச்
சூழ்ந்ததண்புனல் சுலவுமுத்தாறுடு தொடுத்தசொற்றொடைமாலை
வீழ்ந்தகாதலாற் பலமுறைவிளம்பியே மேவினர்சிலநாள்கள். ()

---

திருமுதுகுன்றம்-திருமுக்கால்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

முரசதிர்ந்தெழுதிரு முதுகுன்றமேவிய
பரசமர்படையுடையீரே
பரசமர்படையுடை யீருமைப்பரவுவா
ரரசர்களுலகிலாவாரே.

மூடியசோலைசூழ் முதுகுன்றத்தீசனை
நாடியஞானசம்பந்தன்
பாடியஞானசெந்தமிழ்
பாடியவவர்பழியிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பழமலைநாதர். தேவியார்-பெரியநாயகி.

திருப்பதிகம்—கக.

---

ஆங்குநாதனைப் பணிந்துபெண்ணாகட மணைந்தரு மறையோசை
யோங்குதூங்கானை மாடத்துளமர்கின்ற வொருதனிப் பரஞ்சோதிப்
பாங்கணைந்துமுன் வலங்கொண்டுபணிவுற்றுப் பரவுசொற்றமிழ்மாலை
தீங்குநீங்குவீர் தொழுமின்களெனுமிசைப் பதிகமுந் தெரிவித்தார். ()

---

திருத்தூங்கானைமாடம்-பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஒடுங்கும்பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாயவாழ்க்கை யொழியத்தவ, மடங்குமிடங்கருதி நின்றீரெல்லா மடிகளடிநிழற்கீ ழாளாம்வண்ணங், கிடங்குமதிளுஞ்சு லாவியெங்குங் கெழுமனைகடோறு மறையின்னொலி, தொடங்குங்கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானைமாடந் தொழுமின்களே.

மண்ணார்முழவதிரு மாடவீதி வயற்காழிஞானசம் பந்தனல்ல, பெ ண்ணாகடத்துப் பெருங்கோயில்சேர் பிறையுரிஞ்சுந்துங்கானை மாடமே யான், கண்ணார்கழல்பரவு பாடல்பத்துங் தருத்துணரக்கற்றாருங் கேட் டாரும்போய், விண்ணோருலகத்து மேவிவாழும் விதியதுவேயாகும் வி னையுமாயுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சுடர்ச்கொழுந்தீசர். தேவியார்-கடந்தைநாயகி.

திருப்பதிகம்—உ.

---

வேறு.

கருவரைப்பிற் புகாதவர் கைதொழு
மொருவனைத்தொழு துள்ள முவந்துபோய்ப்
பெருவரத்தினிற் பெற்றவர் தம்முடன்
றிருவரத்துறை சேர்துமென் றேகுவார். (௧௮௫)

முந்தைநாள்களா ரோவொரு கான்மூது
தந்தையார்பியன் மேலிருப் பார்தவிர்ந்
தந்தணாள ரவரு கேசெலச்
சிந்தைசெய்விருப் போடுமுன் சென்றனர். (௧௮௬)

ஆதியார்தம ரத்துறை நோக்கியே
காதலாலணை வார்கடி தேகிடத்
தாதையாரும் பரிவுறச் சம்பந்தர்
பாததாமரை நொந்தன பைப்பய. (௧௮௭)

மறையனைத்து மொருவடி வாமென
கிறைமதிப்பிள்ளை நீணிலஞ் சேர்ந்தெனத்
துறையலைக்கங்கை சூடு மரத்துறை
இறைவனைத்தொழு வான்விரைந் தேகினார். (௧௮௮)

பாசமற்றில ராயினும் பார்மிசை
யாசைசங்கரற் காயின தன்மையாற்
றேசுமிக்க திருவுரு வானவ
ரீசனைத்தொழு தேதொழு தேகினார். (௧௮௯)

இந்தமாநிலத் தின்னிரு ணீங்கிட
வந்தவைதிக மாமணி யானவர்
சிந்தையாரமு தாகிய செஞ்சடைத்
தந்தையார்கழ றாழ்ந்தெழுந் தேகினார். (௧௯௦)

மாறன்பாடி யெனும்பதி வந்துற
வாறுசெல்வருத் தத்தி னசைவினால்
வேறுசெல்பவர் வெய்துறப் பிள்ளையா
ரேறுமஞ்செழுத் தோதியங் கெய்திட. (௧௯௧)

உய்யவந்தசம் பந்த ருடன்வந்தார்க்
கெய்துவெம்மை யிளைப்பஞ்சி னன்போலக்
கைகளாயிரம் வாங்கிக் கரந்துபோய்
வெய்யவன்சென்று மேல்கடல் வீழ்ந்தனன். (௧௯௨)

அற்றைநாளிர வப்பதி யின்னிடைச்
சுற்றுநீடிய தொண்டர்கள் போற்றிடப்
பெற்றமூர்ந்தபி ரான்கழல் பேணுவார்
வெற்றிமாதவத் தோருடன் மேவினார். (௧௯௩)

இந்நிலைக்க ணெழில்வளர் பூந்தராய்
மன்னனார்தம் வழிவருத் தத்தினை
யன்னமாடுந் துறைநீ ரரத்துறைச்
சென்னியாற்றர் திருவுளஞ் செய்தனர். (௧௯௪)

ஏறுதற்குச் சிவிகை யிடக்குடை
கூறியூதக் குலவுபொற் சின்னங்கண்
மாறின்முத்தின் படியினுன் மன்னிய
நீறுவந்த நிமல ரருளுவார். (௧௯௫)

நீடுவாழ்பதி யாகுநெல் வாயிலின்
மாடமாமனை தோறுமறை யோர்க்குக்
கூடுகங்குற் கனவிற் குலமறை
தேடுசேவடி தோன்றமுன் சென்றுபின். (௧௯௬)

ஞானசம்பந்த னம்பா லணைகின்றான்
மானமுத்தின் சிவிகை மணிக்குடை
யானசின்னங்கம் பாற்கொண் டருங்கலைக்
கோனவன்பா லணைந்து கொடுமென. (௧௯௭)

அந்தணாளர்க் குரைத்தவப் போழ்தினில்
வந்துகூடி மகிழ்ந்தற் புதமுறுஞ்
சிந்தையோடுஞ் செழுநீ ரரத்துறை
யிந்துசேகரர் கோயில்வந் தெய்தினர். (௧௯௮)

ஆங்குமற்ற வருளடி யாருட்
னேங்குகோயிலுள் ளார்க்குமுண் டாயிட
வீங்கிதென்ன வதிசய மென்பவர்
தாங்களம்மறை யோர்க்குமுன் சாற்றினர். (௧௯௯)

சாலமிக்கவி யப்புறு தன்மையின்
பாலராதலும் பள்ளி யெழுச்சியின்
காலமெய்திடக் காதல் வழிப்படுஞ்
சீலமிக்கார் திருக்காப்பு நீக்கினர். (௨௦௦)

திங்கணீர்மைச் செழுந்திரண் முத்தினுற்
றுங்கவெண்குடை தூய சிவிகையும்
பொங்கவூதும் பொருவருஞ் சின்மு
மங்கணுத ரருளினுற் கண்டனர். (உ0க)

கண்டபின்னவர் கைதலை மேற்குவித்
தெண்டிசைக்கும் விளக்கிவை யாமெனத்
தொண்டரோடு மறையவர் சூழ்ந்தெழுந்
தண்டர்நாடு மறிவுற வார்த்தனர். (உ0உ)

சங்குதுந்துபி தாரை பேரிமுதற்
பொங்குபல்லிய நாதம் பொலிந்தெழ
வங்கணனரு ளாலவை கொண்டுடன்
பொங்குகாத லெதிர்கொளப் போதுவார். (உ0ங)

மாசில்வாய்மைநெல் வாயின் மறையவ
ராசில்சீர்ச்சண்பை யாண்டகை யார்க்கெதிர்
தேசுடைச்சிவி கைமுத லாயின
வீசரின்னரு ளாற்றுங்கி யேகினுர். (உ0ச)

இத்தலையிவ ரின்னண மேகினு
ரத்தலைச்சண்பை நாதர்க்கு மவ்விரா
முத்தநற்சிவி கைமுத லாயின
வுய்த்தளிக்கும் படிமுன் னுணர்த்துவார். (உ0ரு)

அள்ளனீர்வயல் சூழு மரத்துறை
வள்ளலார்நா மகிழ்ந்தளிக்கு மவை
கொள்ளலாகுங்கொண் டுய்த்தல்செய் வாயென
வுள்ளவாறருள் செய்ய வுணர்ந்தபின். (உ0சு)

சண்பையாளியார் தாங்கண்ட மெய்யருட்
பண்புதந்தையார் தம்முடன் பாங்கமர்
தொண்டருக்கருள் செய்து தொழாமுனம்
விண்புலப்பட வீங்கிரு ணீங்கலும். (உ0எ)

மாலையாமம் புலர்வுறும் வைகறை
வேலைசெய்வினை முற்றிவெண் ணீறணி
கோலமேனிய ராய்க்கை மலர்குவித்
தேலவஞ்செழுத் தோதி யெழுந்தனர். (உ0அ)

போதஞானப் புகலிப் புனிதனைச்
சீதமுத்தின் சிவிகைமே லேற்றிடக்
காதல்செய்பவன் போலக் கருங்கடன்
மீதுதேரின்வந் தெய்தினன் வெய்யவன். (உ0கூ)

ஆயபோழ்தி னரவெனு மார்ப்புடன்
றூயமுத்தின் சிவிகை சுடர்க்குடை
மேயசின்னங்கள் கொண்டுமெய் யன்பரோ
டேயவந்தணர் தாமெதிர் தோன்றினார். (உகo)

வந்துதோன்றிய வந்தணர் மாதவர்
கந்தவார்பொழிற் காழிநன் னாடர்முன்
னந்தமில்சீ ரரத்துறை யாதியார்
தந்தபேரரு டாங்குவீ ரென்றனர். (உகக)

என்றுதங்களுக் கீச ரருள்செய்த
தொன்றுமங்கொழி யாமை யுரைத்துமு
னின்றுபோற்றித் தொழுதிட னேர்ந்தது
மன்றுளாரரு ளென்று வணங்கினார். (உகஉ)

எந்தையீச னெனவெடுத் திவ்வருள்
வந்தவாறுமற் றிவ்வண மோவென்று
சிந்தைசெய்யுந் திருப்பதி கத்திசை
புந்தியாரப் புகன்றெதிர் போற்றுவார். (உகங)

மெய்ம்மைபோற்றி விடாத விருப்பினாற்
றம்மையுன்னும் பரிசுதந் தாள்பவர்
செம்மைநித்தில யானச் சிறப்பரு
ளெம்மையாளுவப் பானின் றளித்ததே. (உகச)

---

திருநெல்வாயிலரத்துறை-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

எந்தையீசனெம்பெருமா னேறமர்கடவு ளென்றேத்திச்
சிந்தைசெய்பவர்க்கல்லால் சென்றுகைகூடுவ தன்றாற்
கந்தமாமலருந்திக் கடும்புனனிவாமல்கு கனாமே
லந்தண்சோலைநெல்வாயி லரத்துறையடிகட்ட மருளே.

கறையினார்பொழில்சூழ்ந்த காழியுள்ஞானசம் பந்த
னறையும்பூம்புனல்பரந்த வரத்துறையடிகட மருளை
முறைமையாற்சொன்னபாடன் மொழியுமம்மாந்தர்தம் வினைபோய்ப்
பறையுமையுறவில்லை பாட்டிவைபத்தும்வல் லார்க்கே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அரத்துறைநாதர்.தேவியார்-ஆனந்தநாயகி.

திருப்பதிகம்—ங.

---

ஙிச

பொடியணிந்த புராண னரத்துறை
யடிகட்ம்மரு ளேயிது வாமெனப்
படியிலாதசொன் மாலைகள் பாடியே
நெடிதுபோற்றுப் பதிக நிரப்பினர். (௨௧௫)

சோதிமுத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீதுதாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றோதியாரரு ளாதலி லஞ்செழுத்
தோதியேறினு ருய்ய வுலகெலாம். (௨௧௬)

வேறு.

தொண்டரார்த்தனர் சுருதிகளார்த்தன தொல்லை
யண்டரார்த்தன ரகிலமுமார்ப்புட னெய்தக்
கொண்டலார்த்தன முழவமுமார்த்தன குழூமி
வண்டறுப்பொலி மலர்மழையார்த்தது வானம். (௨௧௭)

வளையுமார்த்தன வயிர்களுமார்த்தன மறையின்
கிளையுமார்த்தன கிளைஞருமார்த்தனர் கெழுவுங்
களைகணார்த்ததோர் கருணையினார்த்தன முத்து
விளையுமாக்கதிர் வெண்குடையார்த்தது மிசையே. (௨௧௮)

பல்குவெண்கதிர்ப் பத்திசேர்நித்திலச் சிவிகை
புல்குநீற்றொளி யுடன்பொலிபுகலிகா வலனு
ரல்குவெள்வளை யலைத்தெழுமணிநிரைத் தரங்க
மல்குபாற்கடல் வளர்மதியுதித்தென வந்தார். (௨௧௯)

நீடுதொண்டர்கண் மறையவரேனையோர் நெருங்கி
மாடுகொண்டெழு மகிழ்ச்சியின்மலர்க்கைமேற் குவித்தே
யாடுகின்றன ரயர்ந்தனரளவிலா னந்தங்
கூடுகின்றகண் பொழிபுனல்வெள்ளத்திற் குளித்தார். (௨௨௦)

செய்யபொன்புனை வெண்டரளத்தணி சிறக்கச்
சைவமாமறைத் தலைவர்பாற்பெறுந்தனிக் காளம்
வையமேழுடன் மறைகளுநிறைதவத் தோரு
முய்யஞானசம் பந்தன்வந்தானென வூத. (௨௨௧)

சுற்றுமாமறைச் சுருதியின்பெருகொலி நடுவே
தெற்றினார்புர மெரித்தவர்தருதிருச் சின்ன
முற்றுமானவன் ஞானமேமுலைசுரந் தூட்டப்
பெற்றபாலறு வாயன்வந்தானெனப் பிடிக்க. (௨௨௨)

புணர்ந்தமெய்த்தவக் குழாத்தொடும்போதுவார் முன்னே
யிணைந்தநித்திலத் திலங்கொளிநலங்கிளர் தாரை
யணைந்தமாமறை முதற்கலையகிலமு மோதா
துணர்ந்தமுத்தமிழ் விரகன்வந்தானென வூத. (௨௨௩)

தெருளுமெய்க்கலை விளங்கவும்பாருளோர் சிந்தை
யிருளுநீங்கவு மெழுதுசொன்மறையளிப் பவர்தாம்
பொருளுஞானமும் போகமும்போற்றியென் பாருக்
கருளுமங்கனார் திருவரத்துறையைவந் தணைந்தார். (உஉச)

வந்துகோபுர மணிநெடுவாயில்சேய்த் தாகச்
சந்தநித்திலச் சிவிகைநின் றிழிந்துதாழ்ந் தெழுந்து
சிந்தையார்வமு மகிழ்ச்சியும்பொங்கிமுன் செல்ல
வந்திநாண்மதி யணிந்தவர்கோயிலுள் ளடைந்தார். (உஉரு)

மன்னுகோயிலை வலங்கொண்டுதிருமுன்பு வந்து
சென்னியிற்கரங் குவித்துவீழ்ந்தன்பொடு திளைப்பா
ரென்னையும்பொரு ளாகவின்னருள்புரிந் தருளும்
பொன்னடித்தலத் தாமரைபோற்றியென் றெழுந்தார். (உஉசு)

வேறு.

சூடினார்கர கமலங்கள்சொரிந்திழி கண்ணீ
ராடினார்திரு மேனியிலரத்துறை விரும்பி
நீடினார்திரு வருட்பெருங் கருணையே நிகழப்
பாடினார்திருப் பதிகமேழிசையொடும் பயில. (உஉஎ)

இசைவிளங்கிட வியல்பினிற்பாடிநின் றேத்தி
மிசைவிளங்குநீர் வேணியாரருளினுன் மீண்டு
திசைவிளங்கிடத் திருவருள்பெற்றவர் சிலநா
ளசைவில்சீர்த்தொண்டர் தம்முடனப்பதி யமர்ந்தார். (உஉஅ)

தேவர்தம்பிரான் றிருவரத்துறையினி லிறைஞ்சி
மேவுநாள்களில் விமலனார்நெல்வெண்ணெய் முதலாத்
தாவிலன்பர்க டம்முடன்றொழுதுபின் சண்பைக்
காவலாரருள் பெற்றுடன்கலந்துமீண் டணைந்தார். (உஉகூ)

விளங்குவேணுபு ரத்திருத்தோணிவீற் றிருந்த
களங்கொள்கண்டர்தங் காதலியாருடன் கூட
வுளங்கொளப்புகுந் துணர்வினில்வெளிப்பட வுருகி
வளங்கொள்பூம்புனற் புகலிமேற்செலமனம் வைத்தார். (உ௩௦)

அண்ணலார்திரு வரத்துறையடிகளை வணங்கி
நண்ணுபேரரு ளால்விடைகொண்டுபோய் நட்டங்கொண்
டுண்ணிறைந்தபூங் கழலிணையுச்சிமேற் கொண்டே
வெண்ணிலாமலர் நித்திலச்சிவிகைமேற் கொண்டார். (உ௩க)

சிவிகைமுத்தினிற் பெருகொளிதிசையெலாம் விரிக்க
கவிகைவெண்மதிக் குளிரொளிகதிர்செய்வான் கலப்பக்
குவிகைமேற்கொண்டு மறையவர்குணலையிட் டாட்ப்
புவிகைமாறின்றிப் போற்றவந்தருவினார் போந்தார். (உ௩உ)

மறைமுழங்கின தழங்கினவண்டமிழ் வயிரின்
குறைநரன்றன முரன்றனவளைக்குலங் காள
முறையியம்பின வியம்பலவொலித்தன முரசப்
பொறைகறங்கின பிறங்கினபோற்றிசெய் யரவம். (உருரு)

உடையபிள்ளையார் வருமெல்லையுள்ளவப் பதியோர்
புடையிரண்டினுங் கொடியொடுபூந்துகில் விதான
நடைசெய்காவணந் தோரணம்பூகநற் கதலி
மிடையுமாலைகள் நிறைகுடம்விளக்கொடு நிரைத்தார். (உருச)

அனையசெய்கையா லெதிர்கொளும்பதிகளா னவற்றின்
வினைதரும்பவந் தீர்ப்பவர்கோயில்கண் மேவிப்
புனையும்வண்டமிழ் மொழிந்தடிபணிந்துபோந் தணைந்தார்
பனைநெடுங்கைமா வுரித்தவர்மகிழ்பெரும் பழுவூர். (உருரு)

வேறு.

அங்கணைந் திளம்பிறை யணிந்த சென்னியார்
பொங்கெழிற் கோபுரந் தொழுது புக்கபின்
றுங்கவீள் விமானத்தைச் சூழ்ந்து வந்துமுன்
பங்கயச் சேவடி பணிந்து பாடுவார். (உருசு)

மண்ணினிற்பொலிகுல மலையர் தாந்தொழு
தெண்ணில்சீர்ப் பணிகள்செய் தேத்துந்தன்மையி
னண்ணிய வகைசிறப் பித்துநாதனைப்
பண்ணினிற் றிகழ்திருப் பதிகம் பாடினார். (உருஎ)

---

திருப்பழுவூர்திருவிராகம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

எண்ணுமோரெழுத்து மிசையின் கிளவிதேர்வார்
கண்ணுமுதலாய கடவுட்கிட மீதென்பர்
மண்ணின்மிசையாடி மலையாளர் தொழுதேத்திப்
பண்ணினொலிகொண்டு பயில்கின்ற பழுவூரே.

அந்தணர்களான மலையாள ரவரேத்தும்
பந்தமலிகின்ற பழுவூரா னையாரச்
சந்தமிகுஞான சம்பந்த னுரைபேணி
வந்தவணமேத்து மவர்வான முடையாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வடமூலநாதர். தேவியார்-அருந்தவநாயகி.

திருப்பதிகம்—க.

பாவின திசைவழி பாடி யங்ககன்
றியாவருந் தொழுதுட னேத்தவெய்தினார்
மூவுல குய்யநஞ் சுண்டமூர்த்தியார்
மேவிய பெருந்திரு விசய மங்கையில். (உநஅ)

அந்தணர் விசயமங் கையி னிலங்கணர்
தந்தனி யாலயஞ் சூழ்ந்து தாழ்ந்துமுன்
வந்தனை செய்து 0 கோ தனத்தை மன்னிய
செந்தமிழ் மாலையிற் சிறப்பித் தேத்தினார். (உநகூ)

---

திருவிசயமங்கை-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கீதமுன் னிசைதரக் கிளரும் வீணையர்
பூதமுன் னியல்வுடைப் புனிதர் பொன்னகர்
கோதனம் வழிபடக் குலவு நான்மறை
வேதியர் தொழுதெழு விசய மங்கையே.

விண்ணவர் தொழுதெழு விசய மங்கையை
நண்ணிய புகலியுள் ஞான சம்பந்தன்
பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லவர்
புண்ணியர் சிவகதி புகுத றிண்ணமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-விசயநாதர். தேவியார்-மங்கைநாயகி.

திருப்பதிகம்—உ.

---

விசயமங் கையினிட மகன்று மெய்யர்தா
ணசைவில்லை காவினி லணைந்து பாடிப்போந்
திசைவளர் ஞானசம் பந்த ரெய்தினார்
திசையுடை யாடையர் திருப் புறம்பயம். (உசo)

---

திருவைகாதிருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

கோழைமிடறாக்கவி கோளுமிலவாகவிசை கூடும்வகையா
லேழையடியாரவர்க ளியாவைசொன்னசொன்மகிழு மீசனிடமாந்
தாழையிளநீர்முதிய காய்கமுகின்வீழநிரை தாறுசிதறி
வாழையுதிரவீழ்கனிக ளூறிவயல்சேறுசெயும் வைகாவிலே.

---

0 கோதனம்-என்பது-பசு.

முற்றுநமையாளுடைய முக்கண்முதல்வன்றிருநல் வைகாவிலதனைச்
செற்றமவினுர்சிர புரத்தலைவன்ஞானசம் பந்தனுரைசெய்
யுற்றதமிழ்மாலையீ ரைந்துமிவைவல்ல வருருத்திரரெனப்
பெற்றமாலோகமிக வானவர்பிரியாரவர் பெரும்புகழோடே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வில்வவனேசர். தேவியார்-பவளக்கைநாயகி.

திருப்பதிகம்—க.

---

புறம்பயத் திறைவரை வணங்கிப் போற்றிசெய்
திறம்புரி நீர்மையிற் பதிகச் செந்தமிழ்
நிறம்பயி லிசையுடன் பாடி நீடிய
வறந்தரு கொள்கையா ரமர்ந்து மேவினர். (உசக)

---

திருப்புறம்பயம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

மறம்பய மலைந்தவர் மதிட்பரி சறுத்தனை
நிறம்பசுமை செம்மையொ டிசைந்துனது நீர்மை
திறம்பய னுறும்பொரு டெரிந்துணரு நால்வர்க்
கறம்பய னுரைத்தனை புறம்பய மமர்ந்தோய்.

கருங்கழி பொருந்திரை கரைக்குலவு முத்தந்
தருங்கழு மலத்திறை தமிழ்க்கிழமை ஞானன்
சுரும்பவிழ் புறம்பய மமர்ந்ததமிழ் வல்லார்
பெரும்பிணி மருங்கற வொருங்குவர் பிறப்பே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சாக்ஷிவரதர். தேவியார்-கரும்படுசொன்னுயகி.

திருப்பதிகம்—ந.

---

அத்திருப் பதிபணிந் தகன்று போயனற்
கைத்தலத் தவர்பதி பிறவுங் கைதொழு
முத்தமிழ் விரகரா முதல்வர் நண்ணினர்
செய்த்தலைப் பணிலமுத் தீனுஞ் சேய்ஞலூர். (உசஉ)

திருமலி புகலிமன் சோலைச் சேய்ஞலூ
ரருமறை யவர்பதி யலங்க ரித்துமுன்
பெருமறை யொடுமுழ வொலி பிறங்கவே
வருமுறை யெதிர்கொள வந்து முந்தினர். (உசங)

ஞானசம் பந்தரு நாயனர் சடைத்
தூநறுந் தொடையன்முன் சூட்டும் பிள்ளையார்
பான்மையில் வரும்பதி யென்று கித்தில
யானமுன் னிழிந்தெதி ரிறைஞ்சி யெய்தினர். (உசச)

மாமறை யாளர்வண் புகலிப் பிள்ளையார்
தாமெழுந் தருளிடத் தங்கள் பிள்ளையார்
காமரும் பதியில்வந் தருளக் கண்டன
ராமகிழ் வுடன்பணிந் தாடி யார்த்தனர். (உசரு)

களித்தனர் புண்ணியக் கரக வாசநீர்
தெளித்தனர் பொரிகளு மலருஞ் சிந்தினர்
துளித்தனர் கண்மழை சுருதி யாயிர
மளித்தவர் கோயிலு ளவர்முன் பெய்தினர். (உசசு)

வெங்குரு வேந்தரும் விளங்கு கோயிலைப்
பொங்கிய விருப்பினுற் புடை வலங்கொடு
செங்கைகள் சென்னிமேற் குவித்துச் சென்றுபுக்
கங்கணர் முன்புற வணங்கு தாழ்ந்தனர். (உசஎ)

வேதியர் சேய்ஞலூர் விமலர் தங்கழல்
காதலிற் பணிந்தவர் கருணை போற்றுவார்
தாதைதா டடிந்ததண் டீசப் பிள்ளையார்
பாதகப் பயன்பெறும் பரிசு பாடினர். (உசஅ)

---

திருச்சேய்ஞலூர்-பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பிரடைந்த பாலதாட்டப் பேணு தவன்றாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமை வகுத்தலென்னே
சீரடைந்த கோயின்மல்கு சேய்ஞலூர் மேயவனே.

சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன் சீர்பரவித்
தோயடைந்த தண்வயல்சூழ் தோணி புரத்தலைவன்
சாயடைந்த ஞானமல்கு சம்பந்த னின்னுரைகள்
வாயடைந்து பாடவல்லார் வானுல காள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சத்தகிரீசர். தேவியார்-சகிதேவிநாயகி.

திருப்பதிகம்—க.

---

இன்னிசை வண்டமிழ் பாடி யேத்தியு
நன்னெடும் பதியுளோர் நயக்க வைகிய
பின்னர்வெண் பிறையணி வேணிப் பிஞ்ஞகர்
மன்னிய திருப்பனந் தாள் வணங்கினார். (உசகூ)

ஆங்கணி சொன்மலர் மாலை சாத்தியப்
பாங்குபந் தணநலூர் பணிந்து பாடிப்போய்த்
தீங்குதீர் மாமறைச் செம்மை யந்தண
ரோங்குமோ மாம்புலி யூர்வந் துற்றனர். (உ௫௦)

---

திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சுரம்-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கண்பொலி நெற்றியி னான்றிகழ் கையிலோர் வெண்மழுவான்
பெண்புணர் கூறுடை யான்மிகு பீடுடை மால்விடையான்
விண்பொலி மாமதி சேர்தரு செஞ்சடை வேதியனார்
தண்பொழில் சூழ்பனந் தாட்டிருத் தாடகை யீச்சுரமே.

தண்வயல் சூழ்பனந் தாட்டிருத் தாடகை யீச்சுரத்துக்
கண்ணய லேபிறை யானவன் றன்னைமுன் காழியர்கோ
னண்ணிய செந்தமி ழான்மிகு ஞானசம் பந்தனல்ல
பண்ணியல் பாடல்வல் லாரவர் தம்வினை பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சடையப்பநாதர். தேவியார்-பெரியநாயகி.

திருப்பதிகம்—க.

---

திருப்பந்தணநல்லூர்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

இட்டினார்கூற்றைப் பொடிசெய்தார்மதிலை யிவைசொலி யுலகெழுந்தேத்தக், கடறினாரவர் காற்றுளாரவர் காதலித் துறைதரு கோயில், கொடிறினார்யாதுங் குறைவிலார்தாம்போய்க் கோவணங் கொண்டு கூத்தாடும், படிறினார்போலும் பந்தணைநல்லூர் நின்றவெம் பசுபதியாரே.

கல்லிசைபூணக் கலையொலியோவாக் கழுமல முதுபதிதன்னில்
நல்லிசையாளன் புல்லிசைகேளா நற்றமிழ் ஞானசம்பந்தன்
பல்லிசைபகுவாய் படுதலையேந்தி மேவிய பந்தண நல்லூர்ச்
சொல்லிசைபாடல் பத்தும்வல்லார்மேற் றொல்வினை சூழகிலாவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பசுபதீசர். தேவியார்-காம்பன்னதோளி.

திருப்பதிகம்—உ.

திருஓமாம்புலியூர்-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

பூங்கொடிமடவா ளுமையொருபாகம் புரிதரு சடைமுடியடிகள்
வீங்கிருணட்ட மாடுமெம்விகிர்தர் விருப்பொடு முறைவிடம்வினவிற்
றேங்கமழ்பொழிலிற் செழுமலர்கோதிச் செறிதரு வண்டிசைபாடு
மோங்கியமறையோ ரோமாம்புலியூ ருடையவர் வடதளியதுவே.

விளைதருவயலுள் வெயில்செறிபவள மெய்திகழ் மெய்புலத்திட்டி
யொளிதரமல்கு மோமாம்புலியூ ருடையசீர் வடதளியானைக்
களிதருநிவப்பிற் காண்டகுசெல்வக் காழியுள் ஞானசம்பந்த
னளிதருபாடல் பத்தும்வல்லார்கள் மாலொகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-துயர்தீர்த்தசெல்வர். தேவியார்-பூங்கொடிநாயகி.

திருப்பதிகம்—௨.

---

மற்றநற் பதிவட தளியின் மேவிய
வற்புத ரடிபணிந் தலர்ந்த செந்தமிழ்ச்
சொற்றொடை பாடியங் ககன்று சூழ்மதிற்
பொற்பதி வாளொளி புற்றூர் புக்கனர். (௨௫௧)

சீர்வளர் கோயிலை யணைந்து தேமலர்க்
கார்வளர் கண்டர்தாள் பணிந்து காண்பவர்
பார்புகழ் பதிகங்கள் பாடி நீடுவார்
வார்பொழிற் கடம்பையும் வணங்கி மீண்டனர். (௨௫௨)

---

திருவாளொளிபுற்றூர்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொடியுடைமார்வினர் போர்விடையேறிப் பூதகணம்புடைசூழக்
கொடியுடையூர் திரிந்தையங் கொண்டுபலபல கூறி
வடிவுடைவாணெடுங் கண்ணுமைபாக மாயவன் வாளொளிபுற்றூர்க்
கடிகமழ்மாமல ரிட்டுக்கறைமிடற் றானடி காண்போம்.

கல்லுயர்மாக்கட னின்றுமுழங்குங் கரைபொரு காழியமூதூர்
நல்லுயர்நான்மறை நாவனற்றமிழ் ஞான சம்பந்தன்
வல்லுயர்சூலமும் வெண்மழுவாளும் வல்லவன் வாளொளிபுற்றூர்ச்
சொல்லியபாடல்கள் வல்லார்துயர் கெடுத லெளிதாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மாணிக்கவண்ணர். தேவியார் - வண்டமர்பூங்குழலாயகி.

திருப்பதிகம்—௩.

---

நம்பரை நலந்திகழ் நாரை யூரினிற்
கும்பிடும் விருப்பொடு குறுகிக் கூடிய
வம்பலர் செந்தமிழ் மாலை பாடிநின்
றெம்பிரான் கவுணியர் தலைவ ரேத்தினார். (உருரு)

---

திருநாரையூர்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

காம்பினைவென்ற மென்றோளிபாகங் கலந்தா னலந்தாங்கு
தேம்புனல்சூழ் திகழ்மாமடு விற்றிருநாரையூர் மேய
பூம்புனல்சேர்புரி புன்சடையான்புலி யின்னுரி தோன்மேற்
பாம்பினைவீக்கிய பண்டரங்கன் பாதம் பணிவோமே.

தண்மதிதாழ்பொழில் சூழ்புகலித்தமிழ் ஞான சம்பந்த
னெண்மதிசேர்சடை யானுறையுந்திரு நாரையூர் தன்மேற்
பண்மதியாற்சொன்ன பாடல்பத்தும் பயின்றார் வினைபோகி
மண்மதியாதுபோய் வான்புகுவர் வானோ ரெதிர்கொளவே.

திருச்சிற்றம்பலம்.

---

தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

கட்டிடைவெங்கடு நஞ்சமுண்ட கடவுள் விடையேறி
யுட்கிடையிற் பொடிப்பூச வல்லானுமையோ டொருபாக
னட்டிடையிற் சிலைதாங்கி யெய்தவம்மா னடியார்மேல்
நட்டலைவினைத்தொகை தீர்த்துகந்தா னிடநாரை யூர்தானே.

பாடியலுந் திரைசூழ் புகலித்திருஞான சம்பந்தன்
சேடியலும் புகழோங்கு செம்மைத்திருநாரை யூரான்மேற்
பாடியதண் டமிழ்மாலை பத்தும்பரவித் திரிந்தாக
வாடியசிந் தையினார்க்கு நீங்குமவலக் கடல்தானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சௌந்தரேசர். தேவியார்-திரிபுரசுந்தரி.

திருப்பதிகம்—ரு.

---

அப்பதி பணிந்தருந் தமிழ் புனைந்துத
மெய்ப்படு விருப்பொடு மேவு நாளரன்
பொற்பதி பலவுமுன் பணிந்து போந்தனர்
பைப்பணி யவர்கருப் பறிய லூரினில். (உருச)

பரமர்தந் திருக்கருப் பறிய லூரினிற்
சிரபுரச் சிறுவர்கை தொழுது செந்தமி
ழுரையிசை பாடியம் மருங்கி னுள்ளவாஞ்
சுரர்தொழும் பதிகளுந் தொழுது பாடினார். (உ௫௫)

---

திருக்கருப்பறியலூர் தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

சுற்றமொடு பற்றவை துயக்கற வறுத்துக்
குற்றமில் குணங்களொடு கூடுமடி யார்கள்
மற்றவரை வானவர்தம் வானுலக மேறக்
கற்றவ னிருப்பது கருப்பறிய லூரே.

நலந்தரு புனற்புகலி ஞானசம் பந்தன்
கலந்தவர் கருப்பறியல் மேயகட வுள்ளைப்
பலந்தரு தமிழ்க்கிளவி பத்துமிவை கற்று
வலந்தரு மவர்க்குவினை வாடலெளி தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-குற்றம்பொறுத்தநாதர். தேவியார்-கோல்வளைநாயகி.

திருப்பதிகம்—க.

---

வேறு.

மண்ணுலகு செய்ததவப் பயனுயுள்ள வள்ளலா ரப்பதிகள் வணங்கியேகி, யெண்ணின்முர சிரங்கியெழப் பணிலமார்ப்ப விலங்கியகாளஞ்சின்ன மெங்குமூதக்,கண்வளர்மென் கரும்புமிடை கதிர்ச்செஞ்சாலி கதலிகமு குடனோங்குங் கழனிநாட்டுத், தெண்ணிலவ சூடியதம் பெருமான்வைகுந் திருப்பிரம புரஞ்சாரச் செல்லும்போது. (உ௫௬)

பிள்ளையா ரெழுந்தருளக் கேட்டசெல்வப் பிரமபுரத் தருமறையோர் பெருகுகாத, லுள்ளமகிழ் சிறந்தோங்கத் தோணிமேவு முமைபாகர் கழல்வணங்கி யுவகைகூர, வெள்ளமறை யொலிபெருகு மறுகுதோறு மிடைமகர தோரணங்கள் கதலிபூகந்,தெள்ளுபுன னிறைகுடங்க டீபதூபஞ் செழுங்கொடிக ணிரைத்தெதிர்கொள் சிறப்பிற்செல்வார். ()

ஆரணங்கண் மதுரவொலி யெழுந்துபொங்க வரசிலையுந் தருப்பையும்பெய் தணிந்தவாசப்,பூரணகும் பங்கணிறை கரகமேந்திப் புதுமலருநறுந்துகளும் பொரியுந்தூவி, வாரணங்கு முலையுமையாள் குழைத்தசெம்பொன் வள்ளத்தி லமுதுண்ட வள்ளலாரைச், சீரணங்கு மணிமுத்தின் சிவிகைமீது செழுந்தரளக் குடைநிழற்கீழ்ச்சென்றுகண்டார். (உ௫அ

கண்டபொழு தெகைகடலை மேற்கொண்டு கண்களிப்ப மனங்களிப்பக் காதல்பொங்கித், தொண்டர்களு மறையவருஞ் சென்றுசூழ்ந்து சொல்லிறந்த மகிழ்ச்சியினாற் றுதித்தவோசை, யெண்டிசையு நிறைவித்தா ராடைவீசி யிருவிசும்பின் வெளிதூர்த்தா ரேறுசீர்த்தி,வண்டமிழ்நாயகருமிழிந் தெதிரேசென்று வணங்கியவ ருடன்கூட மகிழ்ந்துபுக்கார்.()

திங்களணி மணிமாட மிடைந்தவீதி சென்றணைந்து தெய்வமறைக் கற்பின்மாதர்,மங்கலவாழ்த் திசையிரண்டு மருங்குமல்க வானவர்நா யகர்கோயின் மருங்குசார்ந்து, துங்கநிலைக் கோபுரத்தை யிறைஞ்சிப்புக்குச் சூழ்ந்துதிருத் தோணிமிசை மேவினார்க, டங்கடிரு முன்புதாழ்ந் தெழுந்துநின்று தமிழ்வேதம் பாடினார் தாளம்பெற்றார். (உசுo)

பரவுதிருப் பதிகவிசை பாடிநீடும் பரன்கருணைத் திருவருளின் பரிசுபோற்றி, விரவுமலர்க் கண்பனிப்பக் கைகள்கூப்பி வீழ்ந்தெழுந்து புறம்போந்து வேதவாய்மைச், சிரபுரத்துப் பிள்ளையார் செல்லும்போது திருநீல கண்டயாழ்ப் பாணர்பின்னே,வரவவரை வளம்பெருகு மனையிற் போக வருள்செய்து தந்திருமா ளிகையின்வந்தார். (உசுக)

மறையவர்க ளடிபோற்றத் தந்தையாரு மருங்கணைய மாளிகையி லணையும்போதி, னிறைகுடமு மணிவிளக்கு முதலாயுள்ள நீடுமறைக் குலமகளிர் நெருங்கியேந்த, விறைவர்திரு நீற்றுக்காப்பேந்திமுன்சென் றீன்றதா யார்சாத்தி யிறைஞ்சியேத்த, முறைமையவர்க் கருள்செய்து மடத்திற்புக்கார் முதல்வர்பான் மணிமுத்தின் சிவிகைபெற்றார், (உசுஉ)

செல்வநெடு மாளிகையி லமர்ந்துநாளுந் திருத்தோணி மிசையாரைச் சென்றுதாழ்ந்து,மல்குதிருப் பதிகங்கள் பலவும்பாடி மனமகிழ்ந்து போற்றிசைத்து வைகுநாளி, லொல்லைமுறை யுபநயனப் பருவமெய்த வுலகிறந்த சிவஞான முணரப்பெற்றார், தொல்லைமுறை விதிச்சடங்கு மறையோர்செய்யத் தோலொடுநூ றுங்கினார் சுரர்கள்போற்ற. (உசுங)

ஒருபிறப்பு மெய்தாமை யுடையார்தம்மை யுலகியல்பி னுபநயன முறைமையாகு, மிருபிறப்பி னிலைமையினைச் சடங்குகாட்டி யெய்துவிக்கு மறைமுனிவ ரெதிரேநின்று, வருதிறத்தின் மறைநான்குந் தந்தோமென்று மந்திரங்கண் மொழிந்தவர்க்கு மதுரவாக்காற், பொருவிறப்ப வோதினார் புகலிவந்த புண்ணியனா ரெண்ணிறந்த புனிதவேதம்.(உசுச)

சுருதியாயிரமோதி யங்கமான தொல்கலைக ளெடுத்தியம்புந் தோன்றலாரைப், பருதியாயிரகோடி விரிந்தாலென்னப் பரஞ்சோதி யருள்பெற்ற பான்மைமேன்மை, கருதியா தரவோடும் வியப்புற்றேத்துங் கலைமறையோர் கவுணியனார் தம்மைக்கண்முன், வருதியா னப்பொருளென் றிறைஞ்சித்தாமுன் வல்லமறை கேட்டையந் தீர்ந்துவாழ்ந்தார். (உசுரு)

மந்திரங்க ளானவெலா மருளிச்செய்து மற்றவற்றின் வைதிகநூற் சடங்கின்வந்த, சிந்தைமயக் குறுமையந் தெளியவெல்லாஞ் செழுமறை யோர்க் கருளியவர் தெளியுமாற்றான், முந்தைமுதன் மந்திரங்க ளெல் லாந்தோன்று முதலாகு முதல்வனு ரெழுத்தஞ்செனபா, ரந்தியினுண் மந்திரமஞ் செழுத்துமேயென் றஞ்செழுத்தின் றிருப்பதிக மருளிச்செய் தார். (உ௬௬)

ஸ்ரீபஞ்சாக்ஷரப்பதிகம்-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினு
நெஞ்சக நைந்து நினைமி னுடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைப்பன வஞ் செழுத்துமே.

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையு ணின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதிய
ரந்தியுண் மந்திர மஞ் செழுத்துமே.

நற்றமிழ் ஞானசம் பந்த னுன்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
வற்றமிழ் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராகவே.

திருச்சிற்றம்பலம்.

அத்தகைமை பிள்ளையா ரருளிச்செய்ய வந்தணர்க ளருடலைமேற் கொண்டுதொழுந்து, சித்தமகிழ் வொடுசிறப்பத் தாமுந்தெய்வத் திருத்தோ ணி யமர்ந்தாரைச் சென்றுதாழ்ந்து, மெய்த்தவிசைப் பதிகங்கள் கொண் டுபோற்றி விரைமலர்த்தாண் மனங்கொண்டு மீண்டும்போந்து,பத்தருட ணிதமரும் பண்புகூடப் பரமர்தாள் பணிந்தேத்திப் பயிலுநாளில்.()

வேறு.

பந்தணைமெல் விரலாளும் பரமரும்பாய் விடைமீது
வந்துபொன்வள் ளத்தளித்த வரம்பின்ஞானத் தமுதுண்ட
செந்தமிழ்ஞான சம்பந்தர் திறங்கேட்டிறைஞ்சு தற்காக
வந்தணர்பூந்த ராய்தன்னி லணைந்தனர்நா வுக்கரையர். (உ௬அ)

வாக்கின்பெரு விறன்மன்னர் வந்தணைந்தா ரெனக்கேட்டுப்
பூக்கமழ்வா சத்தடஞ்சூழ் புகலிப்பெருந் தகையாரு
மாக்கியநல் வினைப்பேறென் றன்பர்குழாத் தொடுமெய்தி
யேற்கும்பெரு விருப்போடு மெதிர்கொளவெய் தும்பொழுதில். ()

சிந்தையிடை யறுவன்புந் திருமேனி தனிலசைவுங்
* கந்தமிகை யாங்கருத்துங் கையுழவா ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறு
மந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய. (உஎ0)

கண்டகவு ணியக்கன்றுங் கருத்திற்பரவு மெய்க்காதற்
றொண்டர்திரு வேடநேரே தோன்றியதென்று தொழுதே
யண்டரும்போற்ற வணைந்தங் கரசுமெதிர் வந்திறைஞ்ச
மண்டியவார் வம்பெருக மதுரமொழி யருள்செய்தார். (உஎக)

பேரிசைநா வுக்கரசைப் பிள்ளையார்கொண் டுடன்போந்து
போர்விடையார் திருத்தோணிப் பொற்கோயிலுட் புகும்போதி
லார்வம்பெருக வணையுமவ ருடன்கும்பிட் டருளாற்
சீர்வளர்தொண் டரைக்கொண்டு திருமாளிகை தனிற்சேர்ந்தார். (உஎஉ)

அணையுந்திருத் தொண்டர்தம்மோ டாண்டவர சுக்குமன்பா
லிணையிறிரு வமுதாக்கி யியல்பாலமுது செய்வித்துப்
புணரும்பெரு கன்புநண்பும் பொங்கியகா தலிற்கும்பிட்
டுணருஞ்சொன்மா லைகள்சாத்தி யுடன்மகிழ்வெய்தி யுறைந்தார். (உஎங)

அந்நாள்சில நாள்கள்செல்ல வருட்டிருநா வுக்கரையர்
மின்னார்சடை யண்ணலெங்கு மேவிடங்கும் பிடவேண்டிப்
பொன்மார்பின்முந் நூல்புனைந்த புகலிப்பிரா னிசைவோடும்
பின்னுகவெய்த விறைஞ்சிப் பிரியாதநண் பொடுபோந்தார். (உஎச)

வாக்கின்றனி மன்னரேக மாறுத்திரு வுளத்தோடும்
பூக்கமழும் பணைசூழ்ந்த புகலியின்மீண் டும்புகுந்து
தேக்கியமா மறைவெள்ளத் திருத்தோணிவீற் றிருந்தாரைத்
தூக்கின்றமிழ் மாலைபாடித் தொழுதங்குறை கின்றநாளில். (உஎரு)

செந்தமிழ்மா லைவிகற்பச் செய்யுட்களான் மொழிமாற்றும்
வந்தசொற்சீர் மாலைமாற்றும் வழிமொழியெல் லாமடக்குஞ்
சந்தவியமக மேகபாதந் தமிழிருக்குக் குறள்சாத்தி
யெந்தைக்கெழு கூற்றிருக்கை யீரடியீ ரடிவைப்பு. (உஎசா)

திருமொழிமாற்று-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

0 காட்டதணிகலங் காரரவம்பதி காலதனிற்
றோட்டதணிகுவர் சுந்தரக்காதினிற் றூச்சிலம்பர்
வேட்டதணிவர் விசயற்குருவம்வில் லுங்கொடுப்பர்
பீட்டதணிமணி மாடப்பிரம புரத்தாரே.

* கந்தம் - இந்தியம். மிகை - வருத்தம்.

0 காடது-பதி-அணிகலம்-காரரவம்-காலதனிற்-றூச்சிலம்பர்-தோடதணிகுவர்-சுந்தரக்காதினில் - வேடதணிவர்-உருவம் - விசயற்கு வில்லுங்கொடுப்பர் இவ்வாறு மொழிமாற்றத்தக்கது.

கல்லுயர்கழுமல விஞ்சியுண்மேவிய கடவுடன்னை
நல்லுயர்ஞானசம் பந்தன்ஞானத்தமிழி னன்குணரச்
சொல்லுதல்கேட்டல்வல் லோர்தொல்லைவானவர் தங்களோடுஞ்
செல்குவர்சீரரு ளாற்பெறலாஞ்சிவ லோகமதே.

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீகாழி திருமாலைமாற்று.

திருச்சிற்றம்பலம்.

யாமாமா நீயாமாமா
யாழீகா மாகாணுகா
காணுகா மாகாழீயா
மாமாயா னீமாமாயா.

இதன்பொருள்.

யாமாமா என்பது - எனது ஆத்மபோதசேட்டையுங் கருவிகளின் சேட்டையும் இவைகளால் அவைகள் ஆமா றெவ்வாறென்னில், நீயாமாம் - அறிவுக்கறிவாய்நிற்கின்ற நினது சேட்டையொழிந்து வேறென்றற்ற சற்காரியமாயுள்ளவனே, மாயாழீ என்பது - மிகுதிப்பட்டு மேலாயிருந்துள்ள நாதசொரூபமா யிராநின்ற யாழையுடையானே,அத்தன்மை மிகுதிப்பட்டு நலஞ்சிறந்துள்ள யாழை யிடைவிடாமல் தடவி வாசித்தலான் மகா நல்ல வீணைதடவியென்றும் பொருள், கா-இது இடைநிலை, மாகாணுகா என்பது - பரமாகாசத்தைக் கீழ்ப்படுத்தப்பட்டு மலைகளுக்கெல்லாங் குலமலையாகிய ஸ்ரீகயிலாயத்தின் கண்ணே யெழுந்தருளியிருப்பவனே,காணுகா என்பது - என்னுள்ளக் கண்ணுக்குத் தோன்றப்பட்டுள்ள திருமேனியையுடையானே, மாகாழீயா என்பது-ஊழிகாலத்தின்கண்ணும் அழிவின்மையாகிய மேன்மையைப்பொருந்தி யுள்ள காழியையுடையானே, மாம் என்பது - ஈங்குன தருள்பெறுத பேரிழப்பையுடையமாகிய எம்மை, ஆயானீ - இடபவாகனத்தின் கண்ணே யேறிவந் தெனக்குப் பொய்கைக் கரையின்கண்ணே வெளிப்பட்டவனே, மாமாயா என்பது - மாமாயையாகிய குடிலையைக்கொண்ட சுத்தமாயையிலுள்ள தத்துவங்களை யுண்டாக்கிக் கன்மம் பொசித்தல் காரணமாகத் திரோதாயி சத்தியாலே மறைத்துள்ள மயக்கமே யறிவாகப்பெத்தத்தைச் செலுத்தப்பட்டவனே இடையே நிறுத்தின, கா என்பது - அந்த மாயாமயக்கம், எனதறிவிற்சீவியாமல் ஒழித்து, "உன்னை யெனக்குள்ளபடி தந்து என்னை நீ நிகழாமற்கொண்டு இவ்வாறு நீ யிரண்டறவாழ்ந்து இரக்ஷிப்பாயாக—என்றவாறு.

திருச்சிற்றம்பலம்.

---

நேரக ழாமித யாசைழிதா
யேனேநி யேனேநி ளாயுழிகா
காழியு ளாநினே யேநினேயே
தாழிசை யர்தமி ழாகரனே.

இதன்பொருள்.

நேரக ழாமித யாசைழிதா என்பது - மானேக்காட்டி மானேப்பிடிப்பதுபோல வெனற்பால திருமேனி கொண்டருளி யென்னே யொருகாலத்திலும் விட்டு நீங்கப்படாமல் என்னிடத்திலே மிகுதியாகச் சீவிக்கப்பட்ட மலத்திரயங்களாகிய குற்றங்களே அழியாநின்றுள்ளவனே,ஏனேநி என்பது - உனது பரிபூரணமான அணுவுருவநிலேயில் எனக்குண்டான தாசோகநிலேயெல்லா நீயே, ஏனேநிளாயுழி என்பது - என்னிடத்திலே நின்று என்னேயொழித்துக் கோதிலாவமுதாக நீயே வாழப்பட்டு என்னேச் சிறிதுந் தோன்றவிடாமல் இரக்ஷியாநின்றுள்ளவனே, காழியுளா இத்தன்மையான பிரமசா யுச்சியத்தை அடியேற்குப் பிரசாதிப்பான் பொருட்டாக, காழியென்னும் பதியைப் படைத்துளானே என தொரு விண்ணப்பத்தைக் கேட்டருள்வாயாக, நினேயே நினேயே-தாழிசை, உன்னேச் செய்யுட் கருத்தாக வுடைய இம்மாலே மாற்றென்னும் பெயரையுடையதுமாய் விரிந்துள்ள பாடலானது, ஆதமிழாகரனே - ஐயோ தமிழுக்குப் படுதுறையாகியயான்,எனது போதத்தாற்பாடிய பாட்டலென்று உலகத்தா ருரைசெய்வதே யாதலால் நீயறிய யான் பாடியதில்லே யென்கின்ற செய்தி யுனக்கே நிகழுமாதலால்,இப்பாடலேயேத்தத் தவஞ்செய்தாருநீயேயடிமை குலேயாத சாயுச்சியத்தைப் பெறுவார்கள்-என்றவாறு.

திருச்சிற்றம்பலம்.

---

திருவழிமொழித்திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

சுரருலகு நரர்கள்பயில் தரணிதல முரணழிய வரணமதின்முப்
புரமெரிய விரவுவகை சரவிசைகொள் கரமுடைய பரமனிடமாம்
வரமருள வரன்முறையி னிரநிரைகொள் வருசுருதி சிரவுரையினுற்
பிரமனுய ரரனெழில்கொள் சரணவிணே பரவவளர் பிரமபுரமே.

ஒழுகலரி தழிகலியி னுழியுலகு பழிபெருகும் வழியைநினேயா
முழுதுடலி லெழுமயிர்க டழுவுமுனி குழுவினெடு கெழுவுசிவனேத்
தொழுதுலகி லிழுகுமல மழியும்வகை கழுவுமுரை கழுமலநகர்ப்
பழுதிலிறையெழுதுமொழிதமிழ்விரகன்வழிமொழிகள்மொழிதகையவே.

திருச்சிற்றம்பலம்.

---

திருகோமூத்திரி-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பூமகனூர் புத்தேளுக் கிறைவனூர் குறைவிலாப் புகலிபூமேன்
மாமகளூர் வெங்குருநற் றோணிபுரம் பூந்தராய் வாய்ந்தவிஞ்சி
சேமமிகு சிரபுரஞ்சீர்ப் புறவநிறை புகழ்ச்சண்பை காழிகொச்சை
காமனைமுன் காய்ந்தநுதற் கண்ணவனூர் கழுமலநாங் கருதுமூரே.

அம்மான்சேர் கழுமலமாச் சிரபுரம்வெங் குருகொச்சை புறவமஞ்சீர்
மெய்ம்மானத் தொண்புகலி மிகுகாழி தோணிபுரந் தேவர்கோனூர்
அம்மான்மன் னுயர்சண்பை தராயனூர் வழிமடக்கு மாவின்பாய்ச்சல்
தம்மானென் றியஞான சம்பந்தன் றமிழ்கற்போர் தக்கோர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கழுமலம்-இயமகம்.

திருச்சிற்றம்பலம்.

உற்றுமைசேர்வது மெய்யினையே யுணர்வதுநின்னருள் மெய்யினையே
* கற்றவர்காய்வது காமனையே கனல்விழிகாய்வது காமனையே
௦ யற்றமறைப்பது முன்பணியே யமரர்கள்செய்வது முன்பணியே
பெற்றுமுகந்தது கந்தனையே பிரமபுரத்தை யுகந்தனையே.

மற்றவை வெளிப்படை.

பருமதின்மதுரைமன வையெதிரே பதிகமதெழுதிலை யவையெதிரே
வருநதியிடைமிசை வருகரனே வசையொடுமலர்கெட வருகரனே
கருதலிலிசைமுரல் தருமருளே கழுமலமமரிறை தருமருளே
மருவியதமிழ்விர கன்மொழியே வல்லவர்தம்மிடர் திடமொழியே.

இதன்பொருள்.

பருமதின்மதுரைமன வையெதிரே என்பது - பருத்தமதில் சூழ்ந்த மதுரைக்குப் பதியாகிய பாண்டியராசனது சபைக்குமுன்பே, பதிகமது எழுது என்பது-திருப்பதிகம் எழுதப்பட்ட, இலையவை-ஏடுகளானவை, வருநதியிடைமிசை வருகரனே என்பது - வருகின்ற வைகையாற்றினடுவே எதிரிட்டுப்போம் வகைதுணைசெய்து செலுத்திப்போக்கின்ற திருக்கரங்களையுடையவனே, வசையொடும் அலர்கெட என்பது - ஏடெதிர் போக விசயஞ்செய்து சமணரது புறனுரையும் பரிபவச்சொல்லும் கெடு

---

* கற்றவர் காய்வது காமனையே என்பது - உனது சத்தியதரிசனத்தை யலைவறக் கற்றவர்கள் விடப்பட்டது பசுத்துவம்பொருந்திய க்ஷேத்திரமாகிய தேகாதிபிரபஞ்சமே.

௦ அற்றமறைப்பதுமுன்பணியே என்பது - உனதுதிருவாணத்தை மறைப்பது முன்தொங்கலான பாம்புகளே.

வான் பொருட்டாக, அருகு என்பது - சமணரை, அரனே என்பது - கெடுக்கப்பட்டவனே, கருதலிலிசைமுரல் தருமருளே என்பது - கேட் போரது கருத்தையழிக்கும், இசைத்திறத்துக் குரியாருமாய்த் தன்ம சீலருமாகிய மறையோர்வாழ்கின்ற, கழுமலம் அமர் இறைதருமருளே என்பது - திருக்கழுமலத்தின்கண் வீற்றிருக்கும் தம்பிரான் பிரசாதத் திருவருளே, மருவியதமிழ்விர கன்மொழியே என்பது - இடைவிடாமற் பொருந்திய தமிழ்விரகனாகிய யான் பாடியபாடலையே, வல்லவர்தம்மி டர் திடமொழியே என்பது - சொல்கின்றவர்களுடைய பிறவித்துன்ப மானது விட்டுநீங்குமது சத்தியமே—என்றவாறு.

திருச்சிற்றம்பலம்.

---

திருஏகபாதம்-பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்.

இதன்பொருள்.

பிரம புரத்துறை பெம்மா னெம்மான் என்பது - பிரமம்-ஞானாகாச மாகிய பராசத்தியை, புரத்து-அந்தப் பரிபூரணத்தை, உறை-மிகுதியாக வியக்கப்பட்ட, பெம்மான்-பெருமான், எம்மான்-எந்தப்பெரியோன்,—(இனிப்பொழிப்பு.) ஞானாகாசமாகிய பராசத்தியான பரிபூரணத்தை மிகவும் வியந்து அந்தப் பராசத்திக்கு அதீதமாகிய சுகமே வடிவாய், முதல்-நடுவிறுதிகாணாத, வஸ்து-எந்தப்பெரியோன், பிரம புரத்துறை பெம்மா னெம்மான் என்பது - பிரமம்-மேல், புரம்-நிலம், உறை-நீர், பெம்-விருப்பம், மான்-மான்போலும் விழியையுடைய பெண், எம்-எம் மை, நீங்காத - நிலைமையையுடைய, ஆன்-ஆத்மா,—(இனிப்பொழிப்பு.) ஆகாசத்தின்கண்ணே போடுகின்ற கங்காதேவியை விரும்பித் திருமுடி யிலே வைத்தவன், என்னை நீங்காத நிலைமையையுடைய எனதுயிர், பிரம புரத்துறை பெம்மா னெம்மான் - பிரமம் என்பது-பிரமத்துவம், புரம்-சரீரம், உறை-எண்ணுதல், பெம் என்பது-ஆசை, ஆன்-அமையாமை, எம்மான்-என்னை யொக்கவந்தவன்,—(இனிப்பொழிப்பு.) பிரமரூபத்தி லே யெண்ணப்பட்ட என்னை மூத்தியிலே விடுகைக்கு அமையாத இச் சையனாகிவந்தவன் என்னை யொத்ததன்மையன், பிரம புரத்துறை பெம் மா னெம்மான் என்பது - பிரமபுரம் என்கின்ற திருப்பதியிலே யுறை கின்ற கர்த்தாவானவன் என்னுடையசுவாமி—என்றவாறு.

திருச்சிற்றம்பலம்.

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை.

இதன்பொருள்.

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை - கழுமல் என்பது-மிகுதிப்பட்டகுற்றம், அமுது என்பது-நீர், பதிக்க என்பது-விளைவிக்க, உணியன் என்பது-உள்ளநீ, கட்டு என்பது-வடிவாகக்கட்டுண்டல், உரை என்பது-தேய்தல்,—(இனிப்பொழிப்பு.) மிகுதிப்பட்ட தோஷமாயுள்ள சுக்கிலசுரோணிதமாகிய விருநீரின் கண்பதிந்து விளைதற்குள்ள தந்தம்மைக்குலையாம லெக்கண்ணும்விட்டு விளங்குகிற, கழுமல முதுபதிக் கவுணியன்கட்டுரை - கழும் என்பது-மயக்கம், அலம் என்பது-அலக்கண்படுதல், அமுது என்பது-அமுதம், பதி என்பது-கத்தா, க-என்பது-சிரசு, உணியன் என்பது-உண்ணப்பட்டவன், கட்டு என்பது-விளக்கம், உரை என்பது-பொன்,—(இனிப்பொழிப்பு.) மாயாமயக்கத்தின் கண்ணே மயங்கிப் பெத்த முத்தியிரண்டுந் தெரியாமல் திண்டாடப்பட்ட மலபோதர்க்கு அமுதம்போன்ற சித்தாயுள்ளவனுமாய் விட்டு விளங்காநின்ற பொன்னுருவுடையவனுய்ச் சிருட்டிக்குக் கர்த்தாவாகிய பிர்மாவினது கபாலத்திலே பிச்சைகொண்டு நுகருங் கருணையாளன், கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை - கீழ்ச்சொன்ன பதியின்கண் கவுணியகோத்திரத்து வந்த மறையோனுகிய எனது, கட்டு-காட்டாகியபாடலை, உரை-உரைப்பீராக, காட்டு என்பது - கட்டெனக் குறுகிநின்றது,—(இனிப்பொழிப்பு.) திருக் கழுமலமென்னு மூவாப்பழங்கிழமைப் பன்னிருபெயர்பெற்ற அநாதிமூலமாகிய பதியிடத்துக் கவுணிய கோத்திரத்தில் உற்பவமான நான்-நிவேதிக்கப்படுங் காட்டாகிய இப்பாடலைக் கீழ்ச்சொன்னவற்றிலும் மலத்திரயங்களிலும் அழுந்தாநின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரைசெய்வார் உயர்ந்தார்களாதலால் இப்பாடலை இடைவிடாமல் உரைசெய்வீராக—என்றவாறு.

இத்திருவுளக்கருத்துகள் கண்ணுடையவள்ளலார் செய்தருளியவை.

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பிரமபுரம்-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அரனை யுள்குவீர் பிரம னூருளெம்
பரனை யேமனம் பரவி யுய்ம்மினே.

தொழு மனத்தவர் கழு மலத்துறை
பழுதில் சம்பந்தன் மொழிகள் பற்றுமே.

திருச்சிற்றம்பலம்

திருவெழுகூற்றிருக்கை.

திருச்சிற்றம்பலம்.

ஓருருவாயினை மானுங்காரத், தீரியல்பாயொரு விண்முதல்பூதல,
மொன்றியவிருசுட ரும்பர்கள்பிறவும், படைத்தளித்தழிப்பமும் மூத்தி
களாயினை, யிருவரோடொருவ னாகிநின்றனை, யோரால்நீழ லுன்கழலிர
ண்டு, முப்பொழுதேத்திய நால்வர்க் கொளிநெறிகாட்டினை, நாட்டமூன்
றுகக்கோட்டினை, யிருநதியரவமோ டொருமதிசூடினை, யொருதாளீரயின்
மூவிலைச்சூல, நாற்கால்மான்மறி யைந்தலையரவ-மேந்தினை, காய்ந்தநால்
வாய் மும்மதத்திருகோட் டொருகரியீடழித் துரித்தனை, யொருதனு
விருகால் வளையவாங்கி, முப்புரத்தோடு நானிலமஞ்சக், கொன்றுதலத்
துற வவுணரையறுத்தனை, யைம்புலனுலா மந்தக்கரண, முக்குணமிரு
வளி யொருங்கியவானோ-ரேத்தநின்றனை, யொருங்கியமனத்தோ டிருபி
றப்போர்ந்து, முப்பொழுது குறைமுடித்து-நான்மறையோதி, யைவகை
வேள்வி யமைத்தாறங்க-முதலெழுத்தோதி, வரன்முறைபயின்றெழு வா
ன்றனைவளர்க்கும்-பிரமபுரம்பேணினை, யறுபதமுரலும் வேணுபுரம்விரும்
பினை, யிகலியமைந்துணர் புகலியமர்ந்தனை, பொங்குநாற்கடல்சூழ் வெ
ங்குருவிளங்கினை, பாணிமூவுலகும் புதையமேல்மிதந்த-தோணிபுரத்து
றைந்தனை, தொலையாவிருநிதி வாய்ந்தபூந்தரா-யேய்ந்தனை, வரபுரமென்
றுணர் சிரபுரத்துறைந்தனை, யொருமலையெடுத்த விருதிறலரக்கன், விற
ல்கெடுத்தருளினை புறவம்புரிந்தனை, மூந்நீர்த்துயின்றோ னான்முகனறி
யாப், பண்பொடுநின்றனை சண்பையமர்ந்தனை, யையுறுமமணரு மறுவ
கைத்தேரரு, மூழியுமுணராக் காழியமர்ந்தனை, யெச்சனேழிசையோன்
கொச்சையைமெச்சினை, யாறுபதமு மைந்தமர்கல்வியு, மறைமுதனான்கு
மூன்றுகாலமுந்-தோன்றநின்றனை, யிருமையினொருமையு மொருமையும்
பெருமையு-மறுவிலாமறையோர், கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை,
கழுமலமுதுபதிக் கவுணியனறியு, மனையதன்மையை யாதலினின்னை,
நினையவல்லவ ரில்லைநீணிலத்தே.

திருச்சிற்றம்பலம்.

---

ஈரடிமேல்வைப்பு-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தக்கன்வேள்வி தகர்த்தவன் பூந்தராய்
மிக்கசெம்மை விமலன் வியன்கழல்.

சென்றுசிந்தை யில்வைக்க மெய்க்கதி
நன்றதாகிய நம்பன் றானே.

புந்தியால்மிக நல்லவர் பூந்தரா
யந்தமில்லெம தடிகளை ஞானசம்.
பந்தன்மாலைகொண் டேத்தி வாழுநும்
பந்தமார் வினைபா றிடுமே.

திருச்சிற்றம்பலம்.

---

நாலடிமேல் வைப்புமேன்மை நடையின்முடு குமராகஞ்
சால்பினிற்சக் கரமாதி விகற்பங்கள்சாற் றும்பதிக
மூலவிலக் கியமாக வெல்லாப்பொருள் கோளுமுற்ற
ஞாலத்துயர் காழியாரைப் பாடினார்ஞான சம்பந்தர். (௨௭௭)

---

நாலடிமேல்வைப்பு.

திருச்சிற்றம்பலம்.

இயலிசை யெனும்பொரு ளின்றிறமாம்
புயலன மிடறுடைப் புண்ணியனே
கயலன வரிநெடுங் கண்ணியொடு
மயலுல கடிதொழ வமர்ந்தவனே.
கலனுவது வெண்டலைகடிபொழிற் புகலிதன்னு
ணிலநாடொறு மின்புறநிறைமதி யருளினனே.

புண்ணியர் தொழுதெழு புகலிநகர்
விண்ணவ ரடிதொழ விளங்கினானை
நண்ணிய ஞானசம் பந்தன்வாய்மை
பண்ணிய வருந்தமிழ் பத்தும்வல்லார்.
நடலையவையின்றிப் போய்நண்ணுவார் சிவனுலக
மிடரானவை யின்றித்தாமெய்துவர் தவநெறியே.

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சண்பைநகர்திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

எந்தமது சிந்தைபிரி யாதபெரு மானென விறைஞ்சி யிமையோர்
வந்துதுதி செய்யவளர் தூபமொடு தீபமலி வாய்மையதனு
லந்தியமர் சந்திபல வர்ச்சனைகள் செய்யவமர் கின்றவழகன்
சந்தமலி கொந்தளநன் மாதினொடு மேவுபதி சண்பைநகரே.

வாரின்மலி கொங்கையுமை நங்கையொடு சங்கரன் மகிழ்ந்தமருமூர்
சாரின்முரல் தெண்கடல் விசும்புற முழங்கொலிகொள் சண்பைநகர்மேர்
பாரின்மலி கின்றபுகழ் நின்றதமிழ் ஞானசம் பந்தனுரைசெய்
சீரின்மலி செந்தமிழ்கள் செப்புமவர் சேர்வர்சிவ லோகநெறியே.

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சக்கரமாற்று-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம் புகலிவெங் குருமேற்சோலை
வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய் சிரபுரம்வண் புறவமண்மேற்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங் கொச்சைகழு மலமென்றின்ன
விளங்குமரன் றன்னைப்பெற்றிமையவர்தம்பகையெறிவித்திறைவனூரே.

அக்கரஞ்சேர் தருமனூர் புகலிபூந்தராய் தோணிபுர மணிநீர்ப்பொய்கை
புக்கரஞ்சேர் புறவஞ்சீர்ச் சிலம்பனூர் புகழக்காழி சண்பைதொல்லூர்
மிக்கரஞ்சீர்க் கழுமலமே கொச்சைவயம் வேணுபுர மயனூர்மேவிச்
சக்கரஞ்சீர்த்தமிழ்விரகன்றன்சொன்னதமிழ்தரிப்போர்தவஞ்செய்தோரே.

திருச்சிற்றம்பலம்.

---

இன்னிசைபா டினவெல்லாம் யாழ்ப்பெரும்பாண னூர்தாமு
மன்னுமிசை வடிவான மதங்கசூளா மணியாரும்
பன்னியவே ழிசைபற்றிப் பாடப்பதி கங்கள்பாடிப்
பொன்னின்றிருத் தாளம்பெற்றூர் புகலியிற்போற்றி யிருந்தார். (உஎஅ)

அங்கணமர் கின்றநாளி லருந்தமிழ்நா டெத்தினுள்ளுந்
திங்கட்சடை யண்ணலார்தந் திருப்பதியா வையுங்கும்பிட்
டெங்குந்தமிழ் மாலைபாடி யேத்தியிங்கெய் துவனென்று
தங்குலத்தாதை யாரோடுந் தவமுனிவர்க் கருள்செய்தார். (உஎகூ)

பெருகுவிருப் புடனோக்கிப் பெற்றகுலத் தாதையாரு
மருமையாலும் மைப்பயந்த வதனாற்பிரிந் துறைவாற்றே
னிருமைக்கு மின்பமளிக்கும் யாகமும்யான் செயவேண்டு
மொருமையாலின் னஞ்சிலநா ளுடனெய்துவ னென்றுரைத்தார். (உஅ0)

ஆண்டகையாரு மிசைந்தங்கம் பொற்றிருத் தோணிமேவு
நீண்டசடை யாரடிக்கீழ்ப் பணிவுற்றுநீ டருள்பெற்றே
யீண்டுபுகழ்த் தாதையார்பின் னெய்திடயாழ்ப் பாணரோடுங்
காண்டகு காழிதொழுது காதலினூற் புறம்போந்தார். (உஅக)

அத்திருமூ தூரினுள்ளா ரமர்ந்துடன்போ துவார்போத
மெய்த்தவரந் தணர்நீங்கா விடைகொண்டு மீள்வார்கண்மீள
முத்தின்சிவிகை மேல்கொண்டு மொய்யொளித் தாமநிரைத்த
நித்திலவெண் குடைமீது நிறைமதிபோல நிழற்ற. (உஅஉ)

சின்னந்தனிக்கா ளந்தாரை சிரபுரத்தாண் டகைவந்தா
ரென்னுந்தகை மைவிளங்க வேற்றதிருப் பெயர்சாற்ற
முன்னெம்மருங்கு நிரந்தமுர சுடைப்பல் லியமார்ப்ப
மன்னுந்திருத் தொண்டரானூர் வந்தெதிர் கொண்டுவணங்க. (உஅங.)

சங்கநாதங்க ளொலிப்பத் தழங்குபொற் கோடுமுழங்க
மங்கலவாழ்த் துரையெங்கு மல்கமறை முன்னியம்பத்
திங்களும் பாம்புமணிந்தார் திருப்பதியெங்கு முன்சென்று
பொங்கியகா தலிற்போற்றப் புகலிக்கவு ணியர்போந்தார். (உ௮௪)

திருமறைச்சண் பையராளி சிவனார்திருக்கண் ணார்கோயில்
பெருவிருப்பா லணைந்தேத்திப் பிஞ்ஞகர்கோ யில்பிறவு
முருகியவன் பாலிறைஞ்சி யுயர்தமிழ்மாலை கொண்டேத்தி
வருபுனற் பொன்னிவட பாற்குடதிசை நோக்கிவருவார். (உ௮௫)

---

திருக்கண்ணார்கோயில்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

தண்ணார்திங்கட் பொங்கரவந்தாழ் புனல்சூடிப்
பெண்ணாண்ணய பேரருளாளன் பிரியாத
கண்ணார்கோயில் கைதொழுவார்கட் கிடர்பாவ
நண்ணாவாகு நல்வினையாய நணுகும்மே.

காமருகண்ணார் கோயிலுளானைக் கடல்சூழ்ந்த
பூமருசோலைப் பொன்னியன்மாடப் புகலிக்கோ
னாமருதொன்மைத் தன்மையுள்ஞான சம்பந்தன்
பாமருபாடல் பத்தும்வல்லோர்மேற் பழிபோமே.

சுவாமிபெயர்-கண்ணாயிரேசுவரர்-தேவியார்- முருகுவளர்கோதை.

திருப்பதிகம்—க.

திருச்சிற்றம்பலம்.

---

போற்றியகா தல்பெருகப் புள்ளிருக்குந் திருவேளூர்
நாற்றடந்தோ ளுடைமூன்று நயனப்பிரான் கோயினண்ணி
யேற்றவன்பெய்த வணங்கியிருவர் புள்வேந்த ரிறைஞ்சி
யாற்றியபூ சனைசாத்தி யஞ்சொற் பதிகமணிந்தார். (உ௮௬)

---

திருப்புள்ளிருக்கும்வேளூர்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதிய
முள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கும் வேளூரே.

செடியா வுடல்தீர்ப்பான் தீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கும் வேளூராக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொன்
மடியாது சொல்லவல்லார்க் கில்லையா மறுபிறப்பே.

திருச்சிற்றம்பலம்.

---

நீடுதிருநின்றியூ ரினிமலனார் நீள்கழலேத்திக்
கூடியகாதலிற்போற்றிக் கும்பிட்டுவண் டமிழ்கூறி
நாடுசீர்நீடூர்வணங்கி நம்பர்திருப்புன் கூர்நண்ணி
யாடியபாதமிறைஞ்சி யருந்தமிழ்பாடி யமர்ந்தார். (உஅஎ)

---

திருநின்றியூர்-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

சூலம்படைசுண்ணப் பொடிசாந்தஞ் சுடுநீறு
பாலமதிபவளச் சடைமுடிமே லதுபண்டைக்
காலன்வலிகாலி னொடுபோக்கிக் கடிகமழுந்
நீலம்மலர்பொய்கை நின்றியூரின் நிலையோர்க்கே.

குன்றம்மதுவெடுத்தா னுடல்தோளு நெரிவாக
நின்றங்கொருவிரலா லுறவைத்தா னின்றியூரை
நன்றூர்தருபுகலித் தமிழ்ஞானம் மிகுபந்தன்
குன்றாத்தமிழ்சொல்லக் குறைவின்றின் னிறைபுகழே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-லட்சுமீசுவரர். தேவியார்-உலகநாயகி.

திருப்பதிகம்—ச.

---

திருப்புன்கூர்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

முந்தி நின்ற வினைக ளவைபோகச்
சிந்தி நெஞ்சே சிவனார் திருப்புன்கூ
ரந்த மில்லா வடிக ளவர்போலுங்
கந்த மல்கு கழம்புன் சடையாரே.

மாட மல்கும் மதில்சூழ் காழிமன்
சேடர் செல்வ ருறையுந் திருப்புன்கூர்
நாட வல்ல ஞான சம்பந்தன்
பாடல் பத்தும் பரவி வாழ்மினே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சிவலோகநாயகர்.தேவியார்-சொக்கநாயகி.

திருப்பதிகம்—ரு.

---

அங்குநின் றேகியப்பாங்கி லரனூர்மகிழ் கோயிலான
வெங்கணுஞ் சென்றுபணிந்தே யேத்தியிம வான்மடந்தை
பங்கருறை பழமண்ணிப் படிக்கரைக்கோ யில்வணங்கித்
தங்குதமிழ் மாலைசாத்தித் திருக்கொறுக்கைப் பதிசார்ந்தார். (உ௮௮)

திருக்கொறுக்கைப் பதிமன்னித் திருவீரட்டான மமர்ந்த
பொருப்புவில்லா ளரையேத்திப் போந்தன்னியூர் சென்றுபோற்றிப்
பருக்கைவரை யுரித்தார்தம் பந்தணநல் லூர்பணிந்து
விருப்புடன்பா டலிசைத்தார் வேதந்தமி ழால்விரித்தார். (உ௮௯)

அப்பதிபோற்றி யகல்வா ரரனூர் திருமணஞ்சேரி
செப்பருஞ்சீர்த் தொண்டரோடுஞ் சென்றுதொழு திசைபாடி
யெப்பொருளுந் தருமீச ரெதிர்கொள்பாடிப் பதியெய்தி
யொப்பில்பதி கங்கள்பாடி யோங்குவேள்விக் குடியுற்றார். (உ௯௦)

---

திருமணஞ்சேரி-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அயிலாரு மம்பதனாற் புரமூன் றெய்து
குயிலாரு மென்மொழியா ளொருகூ றாகி
மயிலாரு மல்கிய சோலைமணஞ் சேரிப்
பயில்வானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே.

கண்ணாருங் காழியர்கோன் கருத்தார் வித்த
தண்ணார்சீர் ஞானசம் பந்தன்றமிழ் மாலை
மண்ணாரு மாவயல் சூழ்ந்தமணஞ் சேரிப்
பண்ணாரப் பாடவல் லார்க்கில்லை பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வள்ளல்நாயகர். தேவியார்-யாழின்மென்மொழிநாயகி.

திருப்பதிகம்—உ.

---

செழுந்திரு வேள்விக்குடியிற் றிகழ்மணவாள நற்கோலம்
பொழிந்தபுனற் பொன்னிமேவும் புனிதத்துருத்தி யிரவிற்
றழும்பிய தன்மையுங்கூடத் தண்டமிழ்மாலை யிற்பாடிக்
கொழுந்துவெண் டிங்களணிந்தார் கோடிகாவிற் சென்றடைந்தார். ()

---

திருத்துருத்தியும் திரு வேள்விக்குடியும்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

ஓங்கிமேலுழிதரு மொலிபுனற்கங்கையை யொருசடைமேற்
றாங்கினாரிடுபலி தலைகலனாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினாலுமையொடும் பகலிடம்புகலிடம் பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த்துருத்தியா ரிரவிடத்துறைவர்வேள் விக்குடியே.

௫௪

விண்ணுலாம்விரிபொழில் விரைமணற்றுருத்திவேள் விக்குடியு
மொண்ணுலாமொலிகழ லாடுவாரரிவையோ டுறைபதியை
நண்ணுலாம்புகலியு ளருமறைஞானசம் பந்தன்சொன்ன
பண்ணுலாமருந்தமிழ் பாடுவாராடுவார் பழியிலரே.

திருச்சிற்றம்பலம்.

திருத்துருத்தி-சுவாமிபெயர்முத்தாவதேசுரர். தேவியார்-அமிர்தமுகிழாம்பிகை.

திருப்பதிகம்—௩.

திருவேள்விக்குடி-சுவாமிபெயர்-கல்யாணசுந்தரர். தேவியார்-பரிமளசுகந்தநாயகி

திருப்பதிகம்—ச.

---

திருக்கோடிகாவி லமர்ந்ததேவர் சிகாமணிதன்னை
யெருக்கோடிதழியும் பாம்புமிசைந்தணிந் தானைவெள்ளேனப்
பருக்கோடணிந்த பிரானைப்பணிந்துசொன் மாலைகள்பாடிக்
கருக்கோடிநீப்பார்கள் சேருங்கஞ்சனூர் கைதொழச்சென்றார். ()

---

திருக்கோடிகாதிருவிராகம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

இன்றுநன்று நாளைநன் றென்றுநின்ற விச்சையாற்
பொன்றுகின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போதுமின்
மின்றயங்கு சோதியான் வெண்மதி விரிபுனற்
கொன்றைதுன்று சென்னியான் கோடிகாவு சேர்மினே.

கொந்தணி குளிர்பொழிற் கோடிகாவு மேவிய
செந்தழ லுருவனைச் சீர்மிகு திறலுடை
யந்தணர் புகலியு ளாயகேள்வி ஞானசம்
பந்தனஃ தமிழ்வல்லார் பாவமான பாறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கோடிசுரேசுவரர். தேவியார்-வடிவாம்பிகை.

திருப்பதிகம்—௩.

---

கஞ்சனூராண்டதங் கோவைக்கண்ணுற் றிறைஞ்சிமுன்போந்து
மஞ்சணிமாமதில் சூழுமாந்துறை வந்துவணங்கி
யஞ்சொற்றமிழ்மாலை சாத்தியங் ககன்றன்பர் முன்னாகச்
செஞ்சடைவே தியர்மன்னுந் திருமங்கலக் குடிசேர்ந்தார். (உசுகூ)

---

திருமங்கலக்குடி-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சீரினார்மணி யும்மகில்சந்துஞ் செறிவரை
வாரிநீர்வரு பொன்னிவடமங் கலக்குடி
நீரிலமர்முனி வன்னெடுங்கைகொடு நீரதனைப்
பூரித்தாட்டியர்ச் சிக்கவிருந்த புராணனே.

மந்தரமாம்பொழில் சூழ்மங்கலக் குடிமன்னிய
வெந்தையையெழி லார்பொழிற்கா ழியர்காவலன்
சிந்தைசெய்தடி சேரத்திருஞான சம்பந்தன்சொன்
முந்தியேத்தவல் லாரிமையோர் முதலாவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பிராணபதேசுரர். தேவியார்-மங்களநாயகி.

திருப்பதிகம்—உ.

---

வெங்கண்விடை மேல்வருவார் வியலூரடி களைப்போற்றித்
தங்கியவின் னிசைகூடுந் தமிழ்ப்பதிகத் தொடைசாத்தி
யங்கணமர்வார் தம்முன்னே யருள்வேட்ங்காட் டத்தொழுது
செங்கண்மாலுக் கரியார்தந் திருந்துதேவன் குடிசேர்ந்தார். (உகூச)

---

திருவியலூர்-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

குரவங்கமழ்நறு மென்குழலரிவை யவள்வெருவப்
பொருவெங்கரிபட வென்றதனுரிவை யுடலணிவோ
னரவும்மலேபுன லும்மிளமதியுந் நகுதலையும்
விரவுஞ்சடைமுடி கட்கிடம்விரிசீர் வியலூரே.

விளங்கும்பிறைசடை மேலுடைவிகிர்தன் வியலூரைத்
தளங்கொண்டதொர்புக லித்தகுதமிழ்ஞான சம்பந்தன்
றுளங்கில்தமிழ்பர வித்தொழுமடியா ரவரென்றும்
விளங்கும்புகழத னேடுயர்விண்ணு முடையாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-யோகாநந்தேசர். தேவியார்-சவுந்தரநாயகி.

திருப்பதிகம்—க.

---

திருந்துதேவன் குடிமன்னுஞ் சிவபெருமான் கோயிலெய்திப்
பொருந்தியகா தலிற்புக்குப் போற்றிவணங் கிப்புரிவார்
மருந்தொடுமந் திரமாகி மற்றுமிவர் வேடமாமென்
றருந்தமிழ்மா லைபுனைந்தா ரளவில்ஞானத் தமுதுண்டார். (உகூரு)

---

திருந்துதேவன்குடி-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மருந்துவேண் டில்லிவை மந்திரங் கள்ளிவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்ளிவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
வருந்தவத் தார்தொழு மடிகள்வே டங்களே.

சேட்ர்தே வன்குடித் தேவர்தே வன்றனை
மாட்மோங் கும்பொழில் மல்குதண் காழியா
னாட்வல்ல தமிழ்-ஞானசம் பந்தனற்
பாட்ல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே.

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர்-கர்க்கடேசர். தேவியார்-அருமருந்துநாயகி.

திருப்பதிகம்—க.

---

மொய்திகழ்சோலையம் மூதூர்முன்னகன்றந் நெறிசெல்வார்
செய்தருசாலி கரும்புதெங்குபைம்பூ கத்திடைபோய்
மைதிகழ்கண்டர்தங் கோயின்மருங்குள்ளவெல் லாம்வணங்கி
யெய்தினர்ஞானசம் பந்தரின்னம்பரீசர் தங்கோயில். (உசுசு)

இன்னம்பர்மன்னும் பிரானையிறைஞ்சி யிடைமடக்கான்
பன்னுந்தமிழ்த்தொடை மாலைப்பாடல் புனைந்துபரவிப்
பொன்னங்கழலிணை போற்றிப்புறம்போந் தணைந்துபுகுந்தார்
மன்னுந்தட்ங்களைப் பொன்னிவடகுரங் காடுதுறையில். (உசுஎ)

---

திருஇன்னம்பர்-திருமுக்கால்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

எண்டிசைக்கும்புக ழின்னம்பர்மேவிய
வண்டிசைக்குஞ்சடையீரே
வண்டிசைக்குஞ்சடை யீருமைவாழ்த்துவார்
கொண்டிசைக்குந்தொழிலோரே.

ஏட்மர்பொழிலணி யின்னம்பரீசனை
நாட்மர்ஞானசம்பந்த
னாட்மர்ஞானசம் பந்தனற்றமிழ்
பாட்வல்லார்பழியிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-எழுத்தறிந்தநாதர். தேவியார்-பூங்கொம்பனை.

திருப்பதிகம்—ரு.

---

வட்குரங்காடுதுறை யில்வாலியார்தாம் வழிபட்ட
வடைவுந்திருப்பதி கத்திலறியச்சிறப் பித்தருளிப்
புடைகொண்டிறைஞ்சினர் போந்துபுறத்துள்ளதா னங்கள்போற்றிப்
படைகொண்ட்மூவிலை வேலார்பழனத்திருப் பதிசார்ந்தார். (உசுஅ)

---

திருக்குரங்காடுதுறை-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

கோலமாமலரொடு தூபமுஞ்சாந்தமுங் கொண்டுபோற்றி
வாலியார்வழிபடப் பொருந்தினுர்திருந்துமாங் கனிகளுந்தி
யாலமர்காவிரி வடகரையடைகுரங் காடுதுறை
நீலமாமணிமிடற் றடிகளைநினையவல் வினைகள்வீடே.

தாழிளங்காவிரி வடகரையடைகுரங் காடுதுறைப்
போழிளமதிபொதி புரிதருசடைமுடிப் புண்ணியனைக்
காழியானருமறை ஞானசம்பந்தன் கருதுபாடல்
கோழையாயழைக்கிலுங் கூடுவர்நீடுவா னுலகினூடே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அழகுசடைமுடிநாதர். தேவியார்-குவலயநாயகி.

திருப்பதிகம்—உ.

---

பழனத்துமேவிய் முக்கட்பரமேட்டியார் பயில்கோயி
லுழைபுக்கிறைஞ்சிநின் றேத்தியுருகிய சிந்தையராகி
விழைசொற்பதிகம் விளம்பிவிருப்புடன் மேவியகல்வா
0 ரழனக்கபங்கய வாவியையாறுசென் றடைகின்றுர். (உ௯௯)

---

திருப்பழனம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளை யெருதேறிப்
பூதஞ்சூழப் பொலியவருவார் புலியி னுரிதோலார்
நாதாவெனவு நக்காவெனவு நம்பா வெனநின்று
பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழன நகராரே.

வேய்முத்தோங்கி விரைமுன்பரக்கும் வேணு புரந்தன்னு
ளுவய்த்தனைய திறலான்மிக்க ஞான சம்பந்தன்
பேசற்கினிய பாடல்பயிலும் பெருமான் பழனத்தை
வாயிற்பொலிந்த மாலைபத்தும் வல்லார் நல்லாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஆபத்சகாயர். தேவியார்-பெரியநாயகி.

திருப்பதிகம்—ரு.

---

0 அழல்நக்க என்பது-அழல்போல்மலர்ந்த.

வேறு.

மாடநிரை மணிவீதித் திருவையாற் றினில்வாழு மல்குதொண்டர்
நாடிய்யப் புகலிவரு ஞானபோ னகர்வந்து நண்ணினுரொன்
றூடலொடு பாடலறு வணிமூதூ ரடையவலங் காரஞ்செய்து
நீடுமனக் களிப்பினொடு மெதிர்கொள்ள நித்திலயா னத்துநீங்கி. (௩௦௦)

வந்தணைந்து திருத்தொண்டர் மருங்குவர மானேந்து கையர்தம்பா
ணந்திரு வருள்பெற்ற நன்னகரை முன்னிறைஞ்சி நண்ணும்போதி
லைந்துபுல னிலைகலங்கு மிடத்தஞ்ச லென்பார்த மையாறென்று
புந்திநிறை செந்தமிழின் சந்தவிசை போற்றிசைத்தார் புகலிவேந்தர். ()

திருவையாறு-பண்-மேகராகக் குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைமேலுந்தி
யலமந்த போதாக வஞ்சேலென் றருள்செய்வா னமருங்கோயில்
வலம்வந்த மடவார்க ணடமாட முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவையாறே.

அன்னமலி பொழில்புடைசூ ழையாற்றெம் பெருமானை யந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான சம்பந்தன் மருவுபாட
லின்னிசையா லிவைபத்து மிசையுங்கா லீசனடி யேத்துவார்கள்
தன்னிசைவோ டமருலகிற் றவநெறிசென் றெய்துவார் தாழாதன்றே.

திருச்சிற்றம்பலம்.

மணிவீதி யிடங்கடந்து மாலயனுக் கரியபிரான் மன்னுகோயி
லணிநீடு கோபுரத்தை யணைந்திறைஞ்சி யுள்ளெய்தி யளவில்காத [து
றணியாத கருத்தினுடன் றம்பெருமான் கோயில்வலங் கொண்டு தாழ்ந்
பணிசூடு மவர்முன்பு பணிந்துவீழ்ந் தெழுந்தன்பாற் பரவுகின்றார். ()

கோடல்கோங் கங்குளிர்கூ விளமென்னுந் திருப்பதிகக் குலவுமாலை
நீடுபெருந் திருக்கூத்து நிறைந்ததிரு வுள்ளத்து நிலைமைதோன்ற
வாடுமா றதுவல்லா னையாற்றெம் மையனே யென்றுநின்று
பாடினா ராடினார் பண்பினொடுங் கண்பொழிநீர் பரந்துபாய. (௩௦௩)

திருவையாறு-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கோடல்கோங்கங் குளிர்கூவிளமாலை குலாயசீ
ரோடுகங்கை யொளிவெண்பிறைசூடு மொருவனார்
பாடல்வீணை முழவங்குழன்மொந்தை பண்ணாகவே
யாடுமாறுவல் லானுமையாறுடை யையனே.

பலிதிரிந்துழல் பண்டங்கன்மேயவை யாற்றினைக்
கலிகடிந்தகை யான்கடற்காழியர் காவல
னொலிகொள்சம்பந்த னொண்டமிழ்பத்தும்வல் லார்கள்போய்
மலிகொள்விண்ணிடை மன்னியசீர்பெறு வார்களே.

திருச்சிற்றம்பலம்.

---

பலமுறையும் பணிந்தெழுந்து புறம்போந்து பரவுதிருத் தொண்டரோடு
நிலவுதிருப் பதியதன்க ணிகழுநா ணிகரிலா நெடுநீர்க்கங்கை
யலையுமதி முடியார்தம் பெரும்புலியூர் முதலான வணைந்துபோற்றிக்
குலவுதமிழ்த் தொடைபுனைந்து மீண்டணைந்து பெருகார்வங் கூருநாளில்.

---

திருப்பெரும்புலியூர்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மண்ணுமோர் பாகமுடையார் மாலுமோர் பாகமுடையார்
விண்ணுமோர் பாகமுடையார் வேதமுடைய விமலர்
கண்ணுமோர் பாகமுடையார் கங்கைசடை யிற்கரந்தார்
பெண்ணுமோர் பாகமுடையார் பெரும்புலியூர் பிரியாரே.

பிறைவளரு முடிச்சென்னிப் பெரும்புலியூர்ப் பெருமானை
நறைவளரும் பொழிற்காழி நற்றமிழ்ஞான சம்பந்தன்
மறைவளருந் தமிழ்மாலை வல்லவர்தந் துயர்நீங்கி
நிறைவளர்நெஞ் சினராகி நீடுலகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வியாக்கிரபுரேசர். தேவியார்-சௌந்தரநாயகி.

திருப்பதிகம்—க.

---

குடதிசைமேற் போவதற்குக் கும்பிட்டங் கருள்பெற்றுக் குறிப்பினோடும்
படருநெறி மேலணைவார் பரமர்திரு நெய்த்தானப் பதியினண்ணி
யடையுமன முறவணங்கி யருந்தமிழ்மா லைகள்பாடி யங்குநின்றும்
புடைவளர்மென் கரும்பினொடு பூகமிடை மழபாடி போற்றிச்சென்றார்.

---

திருநெய்த்தானம்-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

மையாடிய கண்டன்மலை மகள்பாகம துடையான்
கையாடிய கேடிற்கரி யுரிமூடிய வொருவன்
செய்யாடிய குவளைமலர் நயனத்தவ ளோடு
நெய்யாடிய பெருமானிட நெய்த்தானமெ னீரே.

தலமல்கிய புனற்காழியுட் டமிழ்ஞானசம் பந்த
னிலமல்கிய புகழான்மிகு நெய்த்தானனை நிகரில்
பலமல்கிய பாடல்லிவை பத்தும்மிக வல்லார்
சிலமல்கிய செல்வன்னடி சேர்வார்சிவ கதியே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நெய்யாடியவப்பர். தேவியார்-வாலாம்பிகை.

திருப்பதிகம்—கூ.

---

செங்கைமான் மறியார்தந் திருமழபா டிப்புறத்துச் சேரச்செல்வா
ரங்கையா ரழலென்னுந் திருப்பதிக மெடுத்தருளி யணைந்தபோழ்தின்
மங்கைவாழ் பாகத்தார் மழபாடி தலையினல் வணங்குவார்கள் [க்கார்.
பொங்குமா தவமுடையா ரெனத்தொழுது போற்றிசைத்தே கோயில்பு

---

திருமழபாடி-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அங்கையாரழ லன்னழகார்சடைக்
கங்கையான்கட வுள்ளிடமேவிய
மங்கையானுறை யும்மழபாடியைத்
தங்கையாற்றொழு வார்தகவாளரே.

மந்தமுந்து பொழின்மழபாடியு
ளெந்தைசந்த மினிதுகந்தேத்துவான்
கந்தமார்கடற் காழியுள்ஞானசம்
பந்தன்மாலைவல்லார்க் கில்லையாம்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வச்சிரதம்பநாயகர். தேவியார்-அழகம்மை.

திருப்பதிகம்—கூ.

---

மழபாடி வயிரமணித் தூணமர்ந்து மகிழ்கோயில் வலங்கொண்டெ ய்திச், செழுவாச மலர்க்கமலச் சேவடிக்கீழ்ச் சென்றுதாழ்ந் தெழுந்து நின்று, தொழுதாடிப் பாடிநறுஞ் சொன்மாலைத் தொடையணிந்து துதி த்துப்போந்தே, யொழியாத நேசமுட னுடையவரைக் கும்பிட்டங்கு றைந்தார்சின்னள். (ருளஎ)

அதன்மருங்கு கடந்தருளாற் றிருக்கானூர் பணிந்தேத்தி யான்ற சைவ,முதன்மறையோ ரன்பிலா லந்துறையின் முன்னவனைத் தொழுது போற்றிப், பதநிறைசெந் தமிழ்பாடிச் சடைமுடியார் பயில்பதியும் பணி ந்துபோற்றி, மதகரட வரையுரித்தார் வடகரைமாந் துறையணைந்தார் மணிநூன்மார்பர். (ருஎஅ)

---

திருக்கானூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வானார்சோதி மன்னுசென்னி வன்னிபுனங்கொன்றை
தேனார்போது கானார்கங்கை திங்களொடுசூடி
மானேர்நோக்கி கண்டங்குவப்ப மாலையாடுவார்
கானூர்மேய கண்ணார்நெற்றி யானூர்செல்வரே.

கழுதுதுஞ்சுங் கங்குலாடுங் கானூர்மேயானைப்
பழுதில்ஞான சம்பந்தன்சொற் பத்தும்பாடியே
தொழுதுபொழுது தோத்திரங்கள்சொல்லித் துதித்துநின்
றழுதுநக்கு மன்புசெய்வா ரல்லலறுப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-செம்மேனிநாயகர். தேவியார்-சிவயோகநாயகி.

திருப்பதிகம்—உ.

திருஅன்பிலாலந்துறை-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

கணைநீ டெரிமா லரவம் வரைவில்லா
இணையா வெயில்மூன் றுமெரித்த விறைவர்
பிணையா மயிலுங் குயில்சேர் மடவன்ன
மணையும் பொழிலன்பி லாலந் துறையாரே.

அரவார் புனலன்பி லாலந் துறைதன்மேற்
கரவா தவர்காழி யுள்ஞான சம்பந்தன்
பரவார் தமிழ்பத்தி வைபாட வல்லார்போய்
விரவா குவர்வா னிடைவீ டெளிதாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சத்தியவாகீசர். தேவியார்-சவுந்தரநாயகி.

திருப்பதிகம்—உ.

சென்றுதிரு மாந்துறையிற் றிகழ்ந்துறையுந் துறைநதிவாழ்சென்னியார்த
முன்றில்பணிந் தணிநெடுமா ளிகைவலஞ்செய் துள்புக்கு முன்புதாழ்ந்து
துன்றுகதிர்ப் பரிதிமதி மருத்துக்க டொழுதுவழி பாடுசெய்ய
நின்றநிலை சிறப்பித்து நிறைதமிழின் சொன்மாலை நிகழப்பாடி.

---

திருமாந்துறை-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பெருகுசந்தனங் காரகில்பீலியும் பெருமர நிரந்துந்திப்
பொருதுகாவிரி வடகரைமாந்துறைப் புனிதனெம்பெருமானைப்
பரிவினாலிருந் திரவியுமதியமும் பாரவினர் பணிந்தேத்த
மருதவானவர் வழிபடுமலரடி வணங்குதல் செய்வோமே.

வரைவளங்கவர் காவிரிவடகரை மாந்துறை யுறைவானைச்
சிரபுரம்பதி யுடையவன்கவுணியன் செழுமறை நிறைநாவ
னரவெனும்பணி வல்லவன்ஞானசம் பந்தனன் புறுமாலை
பரவிடுந்தொழில் வல்லவரல்லலும் பாவமு மிலர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஆம்பிரவனேசர். தேவியார்-அழகாலமர்ந்தநாயகி.

திருப்பதிகம்—க.

---

அங்கணகன் றம்மருங்கி லங்கணர்தம் பதிபிறவு மணைந்துபோற்றிச், செங்கமலப் பொதியவிழச் சேல்பாயும் வயன்மதுவாற் சேறுமாறுப், பொங்கொலிநீர் மழநாட்டுப் பொன்னிவட கரைமிசைப்போய்ப் புகலிவேந்தர், நங்கள்பிரான் றிருப்பாச்சி லாச்சிரா மம்பணிய நண்ணும்போதில். (ருக0)

அந்நகரிற் கொல்லிமழ வன்பயந்த வரும்பெறலா ரமுதமென்சொற், கன்னியிள மடப்பிணையாங் காமருகோ மளக்கொழுந்தின் கதிர்செய் மேனி, மன்னுபெரும் பிணியாகு முயலகன்வந் தணைவுறமெய் வருத்தமெய்தித், தன்னுடைய பெருஞ்சுற்றம் புலம்பெய்தத் தானுமனந் தளர்வுகொள்வான். (ருகக)

மற்றுவே றொருபரிசாற் றவிராமை மறிவளருங் கையார்பாதம்
பற்றியே வருங்குலத்துப் பான்மையினு றதலினாற் பரிவுதீரப் [ன்றுஞ்
பொற்றொடியைக் கொடுவந்து போர்க்கோலச் சேவகராய்ப் புரங்கண்மூ
செற்றவர்தங் கோயிலினுட் கொடுபுகுந்து திருமுன்பே யிட்டுவைத்தான்

அவ்வளவி லாளுடைய பிள்ளையா ரெழுந்தருளி யணுகவெய்தச்
செவ்வியமெய்ஞ் ஞானமுணர் திருஞான சம்பந்தன் வந்தானென்றே
யெவ்வுலகுந் துயர்நீங்கப் பணிமாறுந் தனிக்காளத் தெழுந்தவோசை[ன்
வெவ்வுயிர்க்கு மவன்கேளா மெல்லியலை விட்டெடுதிரோ விரைந்துசெல்வா

மாநகர மலங்கரிமின் மகரதோ ரணநாட்டு மணிநீர்வாசத்
தூநறும்பூ ரணகும்பஞ் சோதிமணி விளக்கினொடு தூபமேந்தும்
ஏனையணி பிறவுமெலா மெழில்பெருக வியற்றுமென வேவித்தானும்
வானவர்நா யகர்மகனார் வருமுன்பு தொழுதணைந்தான் மழவர்கோமான்

பிள்ளையா ரெழுந்தருளப் பெற்றேனென் றுளந்தம் பெருகுகாதல், வெள்ளநீர் கண்பொழியத் திருமுத்தின் சிவிகையின்முன் வீழ்ந்தபோது, வள்ளலா ரெழுகவென மறைவிரித்த திருவாக்கான் மலர்க்கைசென்னி, கொள்ளமகிழ்ந் துடன்சென்று குலப்பதியின் மணிவீதி கொண்டுபுக்கான். (ருகரு)

மங்கலதூ ரியமுழங்கு மணிவீதி கடந்துமதிச் சடையார்கோயிற்
பொங்குசுடர்க் கோபுரத்துக் கணித்தாகப் புனைமுத்தின் சிவிகைநின்று
மங்கணிழிந் தருளுமுறை யிழிந்தருளி யணிவாயில் பணிந்துபுக்குத்
தங்கள்பிரான் கோயில்வலங் கொண்டுதிரு முன்வணங்கச் சாருங்காலை.

கன்னியிளங் கொடியுணர்வு கழிந்துநிலன் சேர்ந்ததனைக் கண்டு நோக்கி, யென்னிதுவென் றருள்செய்ய மழவன்று னெதிரிறைஞ்சி யடியேன்பெற்ற, பொன்னிவளை முயலகனும் பொருவிலரும் பிணிபொருந்தப் புனிதர்கோயின், முன்னணையக் கொணர்வித்தே னிதுபுகுந்த படியென்று மொழிந்துநின்றான். (௩௧எ)

வேறு.

அணிகிளர்தா ரவன்சொன்ன மாற்றமுஞ் ளொடுங்கேட்டங் கிலையி னின்றே, பணிவளர்செஞ் சடைப்பாச்சின் மேயபரம் பொருளாயினு ைப்பணிந்து,மணிவளர்கண் டரோமங்கை யைவாட மயல்செய்வ தோ விவர் மாண்பதென்று,தணிவில்பிணி தவிர்க்கும்பதி கத்தண்டமிழ் பாடினார் சண்பைநாதர். (௩௧அ)

---

திருப்பாச்சிலாச்சிராமம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

துணிவளர்திங்க ளொங்கிவிளங்கச் சுடர்ச்சடைசுற்றி முடித்துப்
பணிவளர்கொள்கையர் பாரிடஞ்சூழ வாரிடமும் பலிதேர்வ
ரணிவளர்கோல மெலாஞ்செய்துபாச்சி லாச்சிராமத்துறை கின்ற
மணிவளர்கண்ட ரோமங்கையைவாட மயல்செய்வதோவிவர் மாண்பே.

அகமலியன்பொடு தொண்டர்வணங்க வாச்சிராமத்துறை கின்ற
புகைமலிமாலை புனைந்தழகாய புனிதர்கொலாமிவ ரென்ன
நகைமலிதண்பொழில் சூழ்தருகாழி நற்றமிழ்ஞானசம் பந்தன்
நகைமலிதண்டமிழ் கொண்டிவையேத்தச் சார்கிலாவினை தானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நீலகண்டேசுவரர். தேவியார்-விசாலாக்ஷியம்மை.

திருப்பதிகம்—உ.

---

பன்னுதமிழ்மறை யாம்பதிகம் பாடித்திருக்கடைக் காப்புச்சாத்தி, மன்னுங்கவுணியர் போற்றிநிற்க * மழவன்பயந்த மழலைமென்சொற்,கன்னியுறுபிணி விட்டுநீங்கக் கதுமெனப்பார்மிசை நின்றெழுந்து, பொன்னின்கொடியென வொல்கிவந்து பொருவலித்தாதை புடையணைந்தாள்.

---

* மழவன் மகளுக்குக்கண்ட முயலகன் என்னும் வியாதி, குமரகண்ட வலி யென்றறிக.

வன்பிணிநீங்கு மகளைக்கண்ட மழவன்பெருகு மகிழ்ச்சிபொங்கத்
தன்றனிப்பாவையுந் தானுங்கூடச் சண்பையர்காவலர் தாளில்வீழ
நின்றவருமறைப் பிள்ளையாரு நீரணிவேணி நிமலர்பாத [தார்
மொன்றியசிந்தை யுடன்பணிந்தா ரும்பர்பிரான்றிருத் தொண்டரார்த்

நீடுதிருவாச்சி ராமமன்னு நேரிழைபாகத்தர் தாள்வணங்கிக்
கூடுமருளுடை னங்கமர்ந்து கும்பிடுங்கொள்கைமேற் கொண்டுபோந்தே
யாடல்பயின்றார் பதிபிறவு மணைந்துபணிந்தடி போற்றியேகிச்
சேடர்கள்வாழுந் திருப்பைஞ்ஞீலிச் சிவபெருமானையிறைஞ்சச்சென்றார்

பண்பயில்வண்டிசை பாடுஞ்சோலைப் பைஞ்ஞீலிவாணர் கழல்பணிந்து
மண்பரவுந்தமிழ் மாலைபாடி வைகிவணங்கி மகிழ்ந்துபோந்து
திண்பெருந்தெய்வக் கயிலையில்வாழ் சிவனார்பதிபல சென்றிறைஞ்சிச்
சண்பைவளந்தரு நாடர்வந்து தடந்திருவீங்கோய் மலையைச்சார்ந்தார்.

திருப்பைஞ்ஞீலி-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆரிடம்பாடிவ ரடிகளதாடலா
லோரிடங்குறைவில ருடையகோவண
நீரிடஞ்சடைவிடை யூர்திநிற்றலும்
பாரிடம்பணிசெயும் பணிபைஞ்ஞீலியே.

க்ண்புனல்விளைவயற் காழிக்கற்பகம்
நண்புணருமறை ஞானசம்பந்தன்
பண்பினர்பரவிப்பைஞ் ஞீலிபாடுவார்
உண்பினவுலகினி லோங்கிவாழ்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாற்றறிவரதேசுரர். தேவியார்-பாலசவுந்தரியம்மை.

திருப்பதிகம்—ந.

செங்கட்குறவரைத் தேவர்போற்றுந் திகழ்திருவீங்கோய் மலையின் மேவுங், கங்கைச்சடையார் கழல்பணிந்து கலந்தவிசைப்பதி கம்புனைந்து, பொங்கர்ப்பொழில்சூழ் மலையுமற்றும் புறத்துள்ளதானங்களெல்லாம்போற்றிக், கொங்கிற்குடபுலஞ் சென்றணைந்தார் கோதின்மெய்ஞ்ஞானக் கொழுந்தனையார். (ஙஉங)

திருஈங்கோய்மலை-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வானத்துயர்தண் மதிதோய்சடைமேல் மத்தம் மலர்சூடித்
தேனொத்தனமென் மொழிமான்விழியா டேவி பாகமாகக்
கானத்திரவி லெரிகொண்டாடுங் கடவு ளுலகேத்த
ஏனத்திரள்வந் திழியுஞ்சார லீங்கோய் மலையாரே.

விழவாரொலியு முழவுமோவா வேணு புரந்தன்னு
ளழகார்வண்ணத் தடிகளருள்சே ரணிகொள் சம்பந்த
னெழிலார்சுனையும் பொழிலும்புடைசூ ழீங்கோய் மலையீசன்
கழல்சேர்பாடல் பத்தும்வல்லார் கவலை கழல்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மரகதாசலேசுவரர். தேவியார்-மரகதவல்லியம்மை.

திருப்பதிகம்—க.

---

வேறு.

அண்டர்பிரா னுலயங்க ளம்மருங்குள் ளனபணிந்து
தெண்டிரைநீர்த் தடம்பொன்னித் தென்கரையாங் கொங்கினிடை
வண்டலையும் புனற்சடையார் மகிழ்விடங்க டொழுதணைந்தார்
கொண்டல்பணி நெடும்புரிசைக் கொடிமாடச் செங்குன்றூர். (௩௨௪)

அந்நகரில் வாழ்வாரு மடியவரு மனமகிழ்ந்து
பன்னெடுந்தோ ரணமுதலாப் பயிலணிகள் பலவமைத்து
முன்னுறவந் தெதிர்கொண்டு பணிந்தேத்தி மொய்கரங்கள்
சென்னியுறக் கொண்டணைந்தார் சினவிடையார் செழுங்கோயில். (௩௨௫)

தம்பெருமான் கோயிலினு ளெழுந்தருளித் தமிழ்விரகர்
நம்பரவர் திருமுன்பு தாழ்ந்தெழுந்து நலஞ்சிறக்க
விம்பருமும் பருமேத்த வின்னிசைவண் டமிழ்பாடிக்
கும்பிடுமா தரவுடனக் கோநகரி லினிதமர்ந்தார். (௩௨௬)

---

திருக்கொடிமாடச்செங்குன்றூர்-பண்-வியாழக்குறிஞ்சி.

இது திருச்செங்கோடு என்று வழங்குகின்றது.

திருச்சிற்றம்பலம்.

வெந்தவெண்ணீ றணிந்துவிரி நூறிகழ் மார்பினல்ல
பந்தணவும் விரலா ளொருபாக மமர்ந்தருளிக்
கொந்தணவும் பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர்
நின்றவந்த ணனைத்தொழுவா ரவல மறுப்பாரே.

அலைமலிதண் புனல்சூழ்ந் தழகார்புகலி நகர்ப்பேணுந்
தலைமக னாகிநின்ற தமிழ்ஞான சம்பந்தன்
கொலைமலிமூ விலையான் கொடிமாடச்செங் குன்றூரேத்து
நலமலிபாடல் வல்லார்வினை யான நாசமே.

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமிபெயர்-அர்த்தநாரீசுவரர். தேவியார்-அர்த்தநாரீசுவரி.

திருப்பதிகம்—க.

---

அப்பாலைக் குடபுலத்தி லாறணிந்தா ரமர்கோயி
லெப்பாலுஞ் சென்றேத்தித் திருநணு வினையிறைஞ்சிப்
பைப்பாந்தள் புனைந்தவரைப் பரவிப்பண் டமர்கின்ற
வைப்பான செங்குன்றூர் வந்தணைந்து வைகினார். (௩உஎ)

---

திருநணு-பண்-காந்தாரம்.

இதே * பவானிகூடல் என வழங்குகின்றது.

திருச்சிற்றம்பலம்.

பந்தார் விரலிமட வாள்பாக மாநாகம்பூண் டேறுமேறி
யந்தா ரணிந்தவம் மானிடம் போலு மந்தண்சாரல்
வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டுபாடச்
செந்தேன் றெளியொளிரத் தேமாங் கனியுதிர்க்குந் திருநணுவே.

கல்வித் தகத்தாற் றிரைசூழ் கடற்காழிக் கவுணிசீரார்
நல்வித் தகத்தா லினிதுணரு ஞானசம் பந்தனென்று
சொல்வித் தகத்தா லிறைவன் திருநணு வேத்துபாடல்
வல்வித் தகத்தால் மொழிவார் பழியிலரிம் மண்ணின்மேலே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சங்கமுகநாதேசுரர். தேவியார்-வேதமங்கையம்மை.

திருப்பதிகம்—க.

---

ஆங்குடைய பிள்ளையா ரமர்ந்துறையு நாளின்கட்
டேங்குதுளி முகிற்குலங்கள் சுரந்தபெய லொழிகாலை
வீங்கொலிநீர் வைப்பெல்லாம் வெயில்பெறு விருப்புவரப்
பாங்கர்வரை யுங்குளிரும் பனிப்பருவ மெய்தியதால். (௩உஅ)

அளிக்குலங்கள் சுளிந்தகல வரவிந்த முகம்புலரப்
பளிக்குமணி மரகதவல் லியிற்கோத்த பான்மையெனத்
துளித்தலைமேல் லறுகுபனி தொடுத்தசையச் சூழ்பனியாற்
குளிர்க்குடைந்து வெண்படாம் போர்த்தனைய குன்றுகளும். (௩உகூ)

மொய்யொளிகூர் குளிர்வாடை முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளுங் குலைந்தசையக் குளிர்க்கொதுங்கி
வெய்யவனுங் கரமிமிர்க்க மாட்டான்போல் விசும்பினிடை
யைதுவெயில் விரிப்பதுவு மடங்குவது மாகுமால். (௩௩0)

---

* காவிரிநதி ஒரு புறத்தில் வருகின்றது. மற்றொரு புறத்தில் பவானியென்னும் ஒரு நதிவந்து அந்தக்காவிரியுடன் கூடுகின்றது. அந்தக்காரணத்தினால் பவானிகூடலெனப் பெயர் வழங்குகின்றது.

நீடியவப் பதிகளெலா நிரைமாடத் திறைகடொறும்
பேடையுடன் பவளக்காற் புறவொடுங்கப் பித்திகையிற்
றோடலர்மென் குழன்மடவார் துணைக்கலச வெம்முலையுள்
ஆடவர்தம் பணைத்தோளு மணிமார்பு மடங்குவன. (ருருக)

அரிசனமுங் குங்குமமு மரைத்தமைப்பா ரயலெல்லாம்
பரியவகிற் குறைபிளந்து புகைப்பார்கள் பாங்கெல்லாம்
எரியுமிழ்பேழ் வாய்த் † தோணி யிரும்பேர்ப்பா ரிடையெல்லாம்
விரிமலர்மென் புறவணிந்த மீப்புலத்து வைப்பெல்லாம். (ருருஉ)

அந்நாளிற் கொடிமாடச் செங்குன்றூ ரமர்ந்திருந்த
மெஞ்ஞானப் பிள்ளையா ருடன்மேவும் பரிசனங்கள்
பன்னாளு மந்நாட்டிற் பயின்றதனாற் பனித்த ‡ குளிர்
முன்னான பிணிவந்து மூள்வதுபோன் முடுகுதலும்.

அந்நிலைமை யாளுடைய பிள்ளையார்க் கவர்களெலா
முன்னறிவித் திறைஞ்சுதலு முதல்வனா ரருடொழுதே
யிந்நிலத்தி னியல்பெனினு நமக்கெய்தப் பெறாவென்று
சென்னிமதி யணிந்தாரைத் திருப்பதிகம் பாடுவார்.

வேறு.

அவ்வினைக்கிவ்வினை யென்றெடுத்தைய ரமுதுசெய்த
வெவ்விடமுன் றடுத் தெம்மிடர்நீக்கிய வெற்றியினா
லெவ்விடத்துமடி யாரிடர்காப்பது கண்டமென்றே
செய்வ்வினைதீண்டா திருநீலகண்ட மெனச்செப்பினர். (ருருரு)

---

திருநீலகண்டம்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மதுவறிவீ
ருய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம்பி ரான்கழல் போற்றுது நாமடியேஞ்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்.

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவா
னிறந்த பிறவியுண் டாகி யிமையவர் கோனடிக்கட்
டிறம்பயில் ஞானசம் பந்தன் செந்தமிழ் பத்தும்வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே.

திருச்சிற்றம்பலம்.

---

† தோணியிரும்பு ஆவது - இரும்பினால் தோணிவடிவமாகச்செய்து, தீநிறைக்கப்பட்டுக் குளிரின்பொருட்டுச் சமீபத்தில் இழுத்துக்கொள்வது.

‡ குளிர் முன்னான பிணியாவது - குளிர் முன்னேகண்டு பின்பு சுரங்காணும் நோய் அதாவது - நளிர்சுரம்.

ஆயகுறிப்பினி லாணைநிகழ வருளிச்செய்து
தூயபதிகத் திருக்கடைகாப்புத் தொடுத்தணிய
மேயவப்பொற்பதி வாழ்பவர்க்கேயன்றி மேவுமந்நா
டியபனிப்பிணி யந்நாடடங்கவுந் தீர்ந்ததன்றே. (௩௩௬)

அப்பதியின்க ணமர்ந்துசிலநா ளிலங்ககன்று
துப்புறழ்வேணியர் தானம்பலவுந் தொழுதருளி
முப்புரிநூலுடன் றோலணிமார்பர் முனிவரோடுஞ்
செப்பருஞ்சீர்த்திருப் பாண்டிக்கொடுமுடி சென்றணைந்தார். (௩௩௭)

o பருவமறுப்பொன்னிப் பாண்டிக்கொடுமுடி யார்தம்பாத
மருவிவணங்கி வளத்தமிழ்மாலை மகிழ்ந்துசாத்தி
விரிசுடர்மாளிகை வெஞ்சமாக்கூடல் விடையவர்தம்
பொருவிறனம்பல போற்றிக்குணதிசைப் போதுகின்றார். (௩௩௮)

திருப்பாண்டிக்கொடுமுடி-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமர்மா மேனியினு ரும்பிறைபுல்கு செஞ்சடையாருங்
கண்ணமர்நெற் றியினுருங் கந்தமருங் குழையாரும்
‡ எண்ணமருங் குணத்தாரு மிமையவரேத்த நின்றாரும்
பண்ணமர்பா டலினாரும் பாண்டிக்கொடு முடியாரே.

கலமல்குதண் கடல்சூழ்ந்த காழியுள்ஞான சம்பந்தன்
பலமல்குவெண் டலையேந்திப் பாண்டிக்கொடு முடிதன்னைச்
சொலமல்குபா டல்கள்பத்துஞ் சொல்லவல்லார் துயர்தீர்ந்து
நலமல்குசிந் தையராகி நன்னெறியெய் துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கொடுமுடிநாதர். தேவியார்-பண்மொழியம்மை.
திருப்பதிகம்—௩.

செல்வக்கருவூர் திருவானிலைக்கோயில் சென்றிறைஞ்சி
நல்லிசைவண்டமிழ்ச் சொற்றொடைபாடியங் நாடகன்று
மல்கிய * மாணிக்க வெற்புமுதலா வணங்கிவந்து
பல்குதிரைப்பொன்னித் தென்கரைத்தானம் பலபணிவார். (௩௩௯)

o பருவமறுப்பொன்னி - காலந்தப்பாமல் வெள்ளம்வந்து கொண்டிருக்கிற காவிரியெனப் பொருள் கொள்க.

‡ எண்ணமருங்குணத்தார் - எட்டுக்குணமுடையவர்.

* மாணிக்கவெற்பு என்பது - இரத்தினகிரி.

திருக்கருவூர்த்திருவானிலை-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொண்ட ரெலாமலர் தூவி யேத்தநஞ்
சுண்ட லாலுயி ராய தன்மையர்
கண்ட னார்கரு வூரு ளானிலை
யண்ட னாரரு ளீயு மன்பரே.

கந்த மார்பொழிற் காழி ஞானசம்
பந்தன் சேர்கரு வூரு ளானிலை
யெந்தை யைச்சொன்ன பத்தும் வல்லவர்
சிந்தை யிற்றுய ராய தீர்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பசுபதீசுவரர். தேவியார்-கிருபாநாயகி.

திருப்பதிகம்—க.

---

பன்னெடுங்குன்றும் படர்நெடுங்கானும் பலபதியும்
மன்னிலைத்தானங்க ளாயினவெல்லா மமர்ந்திறைஞ்சி
மன்னுபுகலியில் வைதிகவாய்மை மறையவனார்
பொன்னியல்வேணிப் புனிதர்பராய்த்துறை யுட்புகுந்தார். (௩௯௰)

நீடும்பராய்த்துறை நெற்றித்தனிக்கண்ணர் கோயினண்ணிக்
கூடுங்கருத்தொடு கும்பிட்டுக்கோதி றமிழ்ச்சொன்மாலை
பாடுங்கவுணியர் கண்பனிமாரி பரந்திழியச்
சூடுங்கரதலத் தஞ்சலிகோலித் தொழுதுநின்றார். (௩௯௧)

---

திருப்பராய்த்துறை-பண்-மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீறு சேர்வதோர் மேனியர் நேரிழை
கூறு சேர்வதோர் கோலமாய்ப்
பாறு சேர்தலைக் கையர் பராய்த்துறை
யாறு சேர்சடை யண்ணலே.

செல்வ மல்கிய செல்வர் பராய்த்துறை
செல்வ மேற் சிதையாதன
செல்வன் ஞானசம் பந்தன் செந்தமிழ்
செல்வ மாமிவை செப்பவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-திருப்பராய்த்துறைநாதர். தேவியார்-பொன்மயிலம்பிகை.

திருப்பதிகம்—உ.

---

தொழுதுபுறம்பணேந் தங்குநின்றேகிச் சுரர்பணிவுற்
றெழுதிருவாலந் துறைதிருச்செந்துறையேமுதலா
வழுவில்பல்கோயில்கள் சென்றுவணங்கி மகிழ்ந்தணேவார்
செழுமலர்ச்சோலைத் திருக்கற்குடிமலை சேரவந்தார். (கூசஉ)

வேறு.

கற்குடிமாமலை மேலெழுந்த கனகக்கொழுந்தினேக் கால்வளையப் [து
பொற்றிரண்மேருச் சிலைவளைத்த போர்விடையாளியைப் போற்றிசைத்
நற்றமிழ்மாலை புனேந்தருளி ஞானசம்பந்தர் புலங்களைந்துஞ்
செற்றவர்மூக்கீச் சரம்பணிந்து திருச்சிராப்பள்ளிச் சிலம்பணேந்தார். ()

---

திருக்கற்குடி-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வடந்திகழ்மென் முலையாளைப் பாகமதா கமதித்துத்
தடந்திரைசேர் புனன்மாதைத் தாழ்சடைவைத்த சதுர
ரிடந்திகழ்முப் புரிநூலர் துன்பமொடின் பமதெல்லாங்
கடந்தவர்கா தலில்வாழுங் கற்குடிமா மலையாரே.

காமருவார் பொழில்சூழுங் கற்குடிமா மலையாரை
நாமருவண் புகழ்க்காழி நலந்திகழ்ஞான சம்பந்தன்
பாமருசெந் தமிழ்மாலை பத்திவைபாட வல்லார்கள்
பூமலிவா னவரோடு பொன்னுலகிற் பொலிவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-உச்சிவரதநாயகர். தேவியார்-அஞ்சனுக்ஷியம்மை.

திருப்பதிகம்—௩.

---

திருமூக்கீச்சரம்-பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

சாந்தம்வெண்ணீ றெனப்பூசி வெள்ளஞ் சடைவைத்தவர்
காந்தளாரும் விரலேழை யோடாடிய காரண
மாய்ந்துகொண்டாங் கறியந் நிறைந்தா ரவரார்கொலோ
வேந்தன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்மெய்ம்மையே.

மல்லையார்மும் முடிமன்னர் மூக்கீச் சரத்தடிகளைச்
செல்வராகந் நினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய் வாழ்பவர்காழியுள் ஞானசம் பந்தன்சொல்
வல்லராவா ரவர்வா னுலகாள வும்வல்லரே.

திருச்சிற்றம்பலம்

மூக்கீச்சரம் என்பது-உறையூர்.

சுவாமி-பஞ்சவனநாதர். தேவியார்-காந்திமதியம்மை.

திருப்பதிகம்—க.

---

செம்மணிவாரி யருவிதூங்குஞ் சிராப்பள்ளிமேய செழுஞ்சுடரைக்
கைம்மலையீருரி போர்வைசாத்துங் கண்ணுதலாரைக் கழல்பணிந்து
மெய்ம்மகிழ்வெய்தி யுளங்குளிர விளங்கியசொற்றமிழ் மாலைவேய்ந்து
மைம்மலர்கண்டர்தமானைக்காவை வணங்கும்விருப்பொடுவந்தணைந்தார்.

---

திருச்சிராப்பள்ளி-பண்-குறிஞ்சி.
திருச்சிற்றம்பலம்.

கைம்மகவேந்திக் கடுவனொடூடிக் கழைபாய்வான்
செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி
வெம்முகவேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ
பைம்முகநாக மதியுடன்வைத்தல் பழியன்றே.

தேனயம்பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த
கானசங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்
ஞானசம்பந்த னலமிகுபாட லிவைவல்லார்
வானசம்பந்தத் தவரொடுமன்னி வாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தாயுமானேசுரர். தேவியார்-மட்டுவார்குழலி.
திருப்பதிகம்—௨.

---

விண்ணவர்போற்றிசெ யானைக்காவில் வெண்ணாவல்மேவிய மெய்ப் பொருளை,நண்ணியிறைஞ்சிமுன் வீழ்ந்தெழுந்து நாற்கோட்டுநாகம் பணிந்ததுவு, மண்ணல்கோச்செங்க ணரசன்செய்த வடிமையுமஞ்சொற் றொடையில்வைத்துப், பண்ணுறுசெந்தமிழ் மாலைபாடிப் பரவினின்றேத்தினர் பான்மையினால். (௯௪௫)

---

திருஆனைக்கா-பண்-இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

செங்கட்பெயர் கொண்டவன் செம்பியர்கோன்
அங்கட்கருணை பெரிதாயவனே
வெங்கண்விடை யாயெம்வெண் ணாவலுளா
யங்கத்தவா வாயின ளாயிழையே.

வெண்ணாவ லமர்ந்துறை வேதியனைக்
கண்ணார்கமழ் காழியர் தந்தலைவன்
பண்ணோடிசை பாடிய பத்தும்வல்லார்
விண்ணோரவ ரேத்த விரும்புவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சம்புகேசுவரர். தேவியார்-அகிலாண்டேஸ்வரி.
திருப்பதிகம்—எ.

---

நாரணனுன்முகன் காணுவுண்மை வெண்ணுவலுண்மை மயேந்திரமுஞ்
சீரணிநீடு திருக்கயிலை செல்வத்திருவாரூர் மேயபண்பு
மாரணத்துங்பொரு ளாயினாை யானைக்காவின்கட் புகழ்ந்துபாடி
யேரணியும்பொழில் சூழ்ந்தசண்பை யேந்தலாரெல்லையி லின்பமுற்றார்

---

திருமயேந்திரமும், ஸ்ரீகயிலாயமும், திருவானைக்காவும்,

திருவாரூரும், கூடசதுக்கம்.

திருச்சிற்றம்பலம்.

மண்ணதுவுண்டரிம் மலரோன்காணு
வெண்ணுவல்விரும்பு மயேந்திரருங்
கண்ணதுவோங்கிய கயிலையாரு
மண்ணலாரூராதி யானைக்காவே.

ஏனமாலயனவர் காண்பரியார்
கானமார்கயிலைநன் மயேந்திரரு
மானவாரூராதி யானைக்காவை
ஞானசம்பந்தன் தமிழ்சொல்லுமே.

திருச்சிற்றம்பலம்.

---

கைதொழுதேத்திப் புறத்தணைந்து காமர்பதியதன் கட்சிலநாள்
வைகிவணங்கி மகிழ்ந்தணைவார் மன்னுந்தவத்துறை வானவர்தா [ந்து
ளெய்தியிறைஞ்சி யெழுந்துநின்றே யின்றமிழ்மாலைகொண் டேத்திப்போ
வைதிகமாமணி யம்மருங்கு மற்றுள்ளதானம் வழுத்திச்செல்வார். ()

ஏறுயர்த்தார்திருப் பாற்றுறையு மெறும்பியூர்மாமலை யேமுதலா
வேறுபதிகள் பலவும்போற்றி விரவுந்திருத்தொண்டர் வந்துசூழ
வீறில்புகழ்ச்சண்பை யாளியார்தா மெண்டிசையோருந் தொழுதிறைஞ்ச
நீறணிசெம்பவ ளப்பொருப்பி னெடுங்களமாநகர் சென்றுசேர்ந்தார். ()

---

திருப்பாற்றுறை-பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

காரார்கொன்றை கலந்தமுடியினர்
சீரார்சிந்தை செலச்செய்தார்
பாரார்நாளும் பரவியபாற்றுறை
யாராராதி முதல்வரே.

பத்தர்மன்னிய பாற்றுறைமேவிய
பத்துநூறு பெயரனைப்
பத்தன்ஞானசம் பந்தனதின்றமிழ்
பத்தும்பாடிப் பரவுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-திருமூலநாதேசுவரர். தேவியார்-மோகாம்பிகை.

திருப்பதிகம்—க.

---

நெடுங்களத்தாதியை யன்பானின்பால் நேசஞ்செலாவகை நேர்விலக்கு, மிடும்பைகடீர்த்தருள் செய்வாயென்னு மின்னிசைமாலைகொண்டேத்தியேகி, யடும்பணிசெஞ்சடை யார்பதிக ளனைத்தும்பணிந்து நியமம்போற்றிக், கடுங்கைவரையுரித் தார்மகிழ்ந்த காட்டுப்பள்ளிப்பதி கைதொழுவார். (நசகூ)

---

திருநெடுங்களம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மறையுடையாய் தோலுடையாய் வார்சடை மேல்வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுன்னைப் பேசினல்லாற்
குறையுடையார் குற்றமோராய் கொள்கையி னலுயர்ந்த
நிறையுடையா ரிடர்களையாய் நெடுங்கள மேயவனே.

நீடவல்ல வார்சடையான் மேய நெடுங்களத்தைச்
சேடர்வாழு மாமறுகிற் சிரபுரக் கோனலத்தா
னாடவல்ல பனுவன்மாலை ஞானசம் பந்தன்சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம் பறையுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நித்தியசுந்தரேசுவரர் தேவியார்-ஒப்பிலாநாயகி.

திருப்பதிகம்—க.

---

சென்றுதிகழ்திருக் காட்டுப்பள்ளிச் செஞ்சடைநம்பர்தங் கோயிலெய்தி, முன்றில்வலங்கொண் டிறைஞ்சிவீழ்ந்து மொய்கழற்சேவடி கைதொழுவார், கன்றணையாவின் கருத்துவாய்ப்பக் கண்ணுதலாரை முன் போற்றிசெய்து, மன்றுணின்றூடல் மனத்துள்வைப்பார் வாருமன்னுமுலை பாடிவாழ்ந்தார். (நடுW0)

---

மேலைத்திருக்காட்டுப்பள்ளி-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

வாருமன் னும்முலை மங்கையோர் பங்கின
னூருமன் னும்பலி யுண்பதும் வெண்டலைக்
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தந் நீர்மையே.

பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்ன
னருமறை யவைவல்ல வணிகொள்சம் பந்தன்சொற்
கருமணி மிடற்றினன் கருதுகாட் டுப்பள்ளி
பரவிய தமிழ்சொலப் பறையுமெய்ப் பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தீயாடியப்பர். தேவியார்-வார்கொண்டமுலையம்மை.

திருப்பதிகம்—௨.

---

அங்கப்பதியின் றெழுந்தருளி யணிதிருவாலம் பொழில்வணங்கிப், பொங்குபுனற்பொன்னிப் பூந்துருத்திப் பொய்யிலியாரைப் பணிந்து போற்றி, யெங்குநிகழ்திருத் தொண்டர்குழா மெதிர்கொள்ளவெப்பதி யுந்தொழுது, செங்கயல்பாய்வய லோடைசூழ்ந்த திருக்கண்டியூர்தொழச் சென்றணைந்தார். (௩௫௧)

கண்டியூர்வீரட்டர் கோயிலெய்திக் கலந்தடியாருடன் காதல்பொ ங்கக், கொண்டவிருப்புடன் றாழ்ந்திறைஞ்சிக் குலவுமகிழ்ச்சியின் கொள் கையினுற், றொண்டர்குழாத்தினை நோக்கிநின்று தொடுத்தவிசைத்தமிழ் மாலைதன்னி, லண்டர்பிரான்ற னருளின்வண்ண மடியார்பெருமையிற் கேட்டருளி. (௩௫௨)

வினவியெடுத்த திருப்பதிக மேவுதிருக்கடை காப்புத்தன்னி
லனையவினைவரி யோன்செயலை யடியாரைக்கேட்டு மகிழ்ந்ததன்மை
புனைவுறுபாடலிற் போற்றிசெய்து போந்துபுகலிக் கவுணியனா[டைவார்.
துனைபுனற்பொன்னித் திரைவலங்கொள் சோற்றுத்துறைதொழச் சென்ற

---

திருக்கண்டியூர்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

வினவினேனறி யாமையிலுரை செய்ம்மினீரருள் வேண்டுவீர்
கனைவிலார்புனற் காவிரிக்கரை மேய்கண்டியூர் வீரட்டன்
தனமுனேதனக் கின்மையோர்தம ராயினரண்ட மாளத்தான்
அனனில்வாழ்க்கைகொண் டாடிப்பாடியிவ் வையமாப்பலி தேர்ந்ததே.()

கருத்தனைப்பொழில் சூழுங்கண்டியூர் வீரட்டத்துறை கள்வனை
யருத்தனைத்திற மடியர்பான்மிகக் கேட்டுகந்த வினாவுரை
திருத்தமாந்திகழ் காழிஞானசம் பந்தன்செப்பிய செந்தமி
ழொருத்தராயினும் பலர்களாயினு முரைசெய்வாருயர்ந் தார்களே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வீரட்டானேசுவரர். தேவியார்-மங்களநாயகி.

திருப்பதிகம்—௨.

---

இந்தத்தலத்தில் பிரமன் சிரங்கிள்ளியது.

வேறு.

அப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமென்
றொப்பில் வண்டமிழ் மாலை யொருமையாற்
செப்பி யேசென்று சேர்ந்தனர் சேர்விலார்
முப்புரஞ் செற்ற முன்னவர் கோயின்முன். (௲௫௪)

---

திருச்சோற்றுத்துறை-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

செப்ப நெஞ்சே நெறிகள் சிற்றின்பந்
துப்ப னென்னா தருளே துணையாக
வொப்ப ரொப்பர் பெருமா னொளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே.

அந்தண் சோற்றுத் துறையெம் மாதியைச்
சிந்தை செய்ம்மி னடியீ ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தொலையாச்செல்வேசுவரர். தேவியார்-ஒப்பிலாம்பிகை.

திருப்பதிகம்—எ.

---

தொல்லை நீடிருச் சோற்றுத் துறையுறை
செல்வர் கோயில் வலங்கொண்டு தேவர்க
ளல்ல றீர்க்கநஞ் சுண்டா ரடியிணை
யெல்லை யில்லன்பு கூர விறைஞ்சினார். (௲௫௫)

இறைஞ்சி யேத்தி யெழுந்துநின் றின்னிசை
நிறைந்த செந்தமிழ் பாடி நிலாவியங்
குறைந்து வந்தடி யாருட னெய்தினர்
சிறந்த சீர்த்திரு வேதி குடியினில். (௩௫௬)

வேத வேதியர் வேதி குடியினி
னாதர் கோயி லணைந்து நலந்திகழ்
பாத பங்கயம் போற்றிப் பணிந்தெழுந்
தோதி னார்தமிழ் வேதத்தி னேங்கிசை. (௩௫௭)

---

திருவேதிகுடி-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

நீறுவரி யாடரவோ டாமைமன வென்புநிரை பூண்ப ரிடவ
மேறுவரி யாவரு மிறைஞ்சுகழ லாதிய ரிருந்த விடமாந்
தாறுவிரி பூகமலி வாழைவிரி நாறவிளை வாளை மடுவில்
வேறுபிரி யாதுவிளை யாடவள மாரும்வயல் வேதி குடியே.

கந்தமலி தண்பொழினன் மாடமிடை காழிவளர் ஞான முணர்சம்
பந்தன்மலி செந்தமிழின் மாலைகொடு வேதிகுடி யாதி கழலே
சிந்தைசெய வல்லவர்க ணல்லவர்க ளென்னநிகழ் வெய்தி யிமையோ
ரந்தவுல கெய்தியர சாளுமது வேசரத மாணை நமதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வேதபுரீசர். தேவியார்-மங்கையர்க்கரசியம்மை.

திருப்பதிகம்—உ.

---

எழுது மாமறை யாம்பதி கத்திசை
முழுதும் பாடி முதல்வனைப் போற்றிமுன்
றெழுது போந்துவந் தெய்தினர் சோலைசூழ்
பழுதில் சீர்த்திரு வெண்ணிப் பதியினில். (௩௫அ)

வெண்ணி மேய விடையவர் கோயிலை
நண்ணி நாடிய காதலி னுண்மதிக்
கண்ணி யார்தங் கழலிணை போற்றியே
பண்ணி னீடும் பதிகமுன் பாடினர். (௩௫௯)

---

திருவெண்ணி-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சடையானைச் சந்திரனொடு செங்கணரா
வுடையானை யுடைதலையிற் பலிகொண்டூரும்
விடையானை விண்ணவர்தாந் தொழும்வெண்ணியை
யுடையானை யல்லதுள்கா தென்னுள்ளமே.

முருவாரு மல்குகாழித் திகழ்சம்பந்தன்
றிருவாருந் திகழ்திருவெண் ணியமர்ந்தானை
யுருவாரு மொண்டமிழ்மாலை யிவைவல்லார்
பொருவாகப் புக்கிருப்பார் புவலோகத்தே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வன்னிநாயகர். தேவியார்-அழகியநாயகி.

திருப்பதிகம்—ரு.

---

பாடிநின்று பரவிப் பணிந்துபோ
யாடுமங்கணர் கோயிலங் குள்ளன
மாடுசென்று வணங்கி மகிழ்ந்தனர்
நீடுசண்பை நிறைபுகழ் வேதியர். (௩௬0)

வே று.

மொய்தருஞ் சோலைசூழ் முளரிமுள் ளடவிபோய்
மெய்தரும் பரிவிலான் வேள்வியைப் பாழ்படச்
செய்தசங் கரர்திருச் சக்கரப் பள்ளிமுன்
பெய்தவங் தருளினு ரியலிசைத் தலைவனார். (௩௬௧)

சக்கரப் பள்ளியார் தந்திருக் கோயிலுட்
புக்கருத் தியினுடன் புனைமலர்த் தாள்பணிந்
தக்கரைப் பரமர்பா லன்புறும் பரிவுகூர்
மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார். (௩௬௨)

---

திருச்சக்கரப்பள்ளி-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

படையினார் வெண்மழுப் பாய்புலித் தோலரை
யுடையினா ருமையொரு கூறனா ரூர்வதோர்
விடையினார் வெண்பொடிப் பூசியார் விரிபுனற்
சடையினா ருறைவிடஞ் சக்கரப் பள்ளியே.

தண்வயல் புடையணி சக்கரப் பள்ளியெங்
கண்ணுத லவனடிக் கழுமல வளநகர்
நண்ணிய செந்தமிழ் ஞானசம் பந்தன்சொற்
பண்ணிய லிசைசொலப் பறையுமெய்ப் பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பசுபதிநாயகேசுவரர். தேவியார்-பால்வளைநாயகி.

திருப்பதிகம்—க.

---

தலைவர்தஞ் சக்கரப் பள்ளிதன் னிடையகன்
றலைபுனற் பணைகளி னருகுபோ யருமறைப்
புலனுறுஞ் சிந்தையார் புள்ளமங் கைப்பதிக்
குலவுமா லந்துறைக் கோயிலைக் குறுகினார். (௩௬௩)

மன்னுமக் கோயில்சேர் மான்மறிக் கையர்தம்
பொன்னடித் தலமுறப் புரிவொடுந் தொழுதெழுந்
தின்னிசைத் தமிழ்புனைந் திறைவர்சே லூருடன்
பன்னுபா லைத்துறைப் பதிபணிந் தேகினார். (௩௬௪)

---

திருப்புள்ளமங்கை திருவாலந்துறை-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

பாலுந்துறுதிர ளாயினபரமன் பிரமன்றான்
போலுந்திறலவர் வாழ்தருபொழில்சூழ் புளமங்கைக்
காலன்றிறலறச் சாடியகடவுள் ளிடங்கருதி
லாலந்துறைதொழு வார்தமையடையா வினைதானே.

பொந்தின் னிடைத்தே னூறியபொழில்சூழ் புளமங்கை
யந்தண் புனல்வரு காவிரியாலந் துறையானைக்
கந்தம் மலிமகழ் காழியுட் கலைஞான சம்பந்தன்
சந்தம் மலிபா டல்சொலி யாடத் தவமாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஆலந்தரித்தாஈசுவரர். தேவியார்-அல்லியங்கோதையம்மை.

திருப்பதிகம்—க.

---

காவின்மேன் மூகிலெழுங் கமழ்நறும் புறவுபோய்
வாவிநீ டலவன்வாழ் பெடையுடன் மலர்நறும்
பூவின்மேல் விழைவுறும் புகலியார் தலைவனார்
சேவின்மே லண்ணலார் திருநலூர் நண்ணினார். (௩௬௫)

மன்றலங் கழனிசூழ் திருநலூர் மறைவலோர்
துன்றுமங் கலவினைத் துழனியா லெதிர்கொளப்
பொன்றயங் கொளிமணிச் சிவிகையிற் பொலிவுறச்
சென்றணைந் தருளினார் சிரபுரச் செம்மலார். (௩௬௬)

நித்திலச் சிவிகைமே னின்றிழிந் தருளிய
மொய்த்தவந் தணர்குழா முன்செலப் பின்செலும்
பத்தரும் பரிசனங் களுமுடன் பரவவே
வத்தர்தங் கோபுரந் தொழுதணைந் தருளினார். (௩௬௭)

வெள்ளிமால் வரையைநேர் விரிசுடர்க் கோயிலைப்
பிள்ளையார் வலம்வரும் பொழுதினிற் பெருநீர்
வெள்ளவா னந்தமெய் பொழியமே லெறிநீர்
துள்ளுவார் சடையனைத் தொழுதுமுன் பரவுவார். (௩௬௮)

பரவுசொற் பதிகமுன் பாடினார் பரிவுதான்
வரவயர்த் துருகுநேர் மன்னுடன் புறமணைந்
தரவுடைச் சடையர்பே ரருள்பெறும் பெருமையால்
விரவுமப் பதியமர்ந் தருளியே மேவினார். (௩௬௯)

திருநல்லூர்-திருவிராகம்-பண்-சாதாரி.
திருச்சிற்றம்பலம்.

வண்டிரிய விண்டமலர் மல்குசடை தாழவிடை யேறிப்
பண்டெரிகை கொண்டபரர் மன்பதிய தென்பரத னயலே
நண்டிரிய நாரையிரை தேரவரை மேலருவி முத்தந்
தெண்டிரைகண் மோதவிரி போதுகம ழுந்திருந லூரே.

திரைகளிரு கரையும்வரு பொன்னிநில வுந்திருந லூர்மேற்
பரசுதரு பாணியைந லந்திகழ்செய் தோணிபுர நாத
னுரைசெய்தமிழ் ஞானசம் பந்தனிசை மாலைமொழி வார்போய்
விரைசெய்மலர் தூவவிதி பேணுகதி பேறுபெறு வாரே.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

அன்ன தன்மையி லப்பதி யினிலமர்ந் தருளி
மின் னெடுஞ்சடை விமலர்தாள் விருப்பொடு வணங்கிப்
பன்னு மின்னிசைப் பதிகமும் பலமுறை பாடி
நன் னெடுங்குல நான்மறை யவர்தொழ நயந்தார். (௩௭௦)

திருநல்லூர்-பண்-குறிஞ்சி.
திருச்சிற்றம்பலம்.

கொட்டும் பறைசீராற் குழுமவன லேந்தி
நட்டம் பயின்றாடு நல்லூர்ப் பெருமானை
முட்டின் றிருபோது முனியா தெழுந்தன்பு
பட்ட மனத்தார்க ளறியார் பாவமே.

தண்ணம் புனற்காழி ஞான சம்பந்த
னண்ணும் புனல்வேலி நல்லூர்ப் பெருமானை
வண்ணம் புனைமாலை வைக லேத்துவார்
விண்ணு நிலனுமாய் விளங்கும் புகழோரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பெரியபாண்டேசுவரர். தேவியார்-திரிபுரசுந்தரியம்மை.
திருப்பதிகம்—௫.

நீடுமெப்பதி நீங்குவார் நிகழ்திரு நல்லூ
ராடுவார்திரு வருள்பெற வகன்றுபோந் தங்கண்
மாடுமுள்ளன வணங்கியே பரவிவந் தணைந்தார்
தேடுமாலயற் கரியவர் திருக்கரு காவூர். (ஙஎக)

வந்துபந்தர்மா தவிமணங் கமழ்கரு காவூர்ச்
சந்தமாமறை தந்தவர் கழலிணை தாழ்ந்தே
யந்தமில்லவர் வண்ணமா ரழல்வண்ண மென்று
சிந்தையின்புறப் பாடினார் செழுந்தமிழ்ப் பதிகம். (ஙஎஉ)

---

திருக்கருகாவூர்-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தி லங்குமுறு வல்லுமை யஞ்சவே
மத்த யானைமறு கவ்வுரி வாங்கியக்
கத்தை போர்த்தகட வுள்கரு காவூரெம்
மத்தர் வண்ணமழ லும்மழல் வண்ணமே.

கலவ மஞ்ஞை யுலவுங் கருகாவூர்
நிலவு பாடலுடை யான்றன நீள்கழல்
குலவு ஞானசம் பந்தன் செந்தமிழ்
சொலவ லார் தொல்வினை தீருமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-முல்லைவனேசுவரர். தேவியார்-கரும்பனையாளம்மை.

திருப்பதிகம்—உ.

---

பதிக வின்னிசை பாடிப்போய்ப் பிறபதி பலவு
நதி யணிந்தவர் கோயில்க ணண்ணியே வணங்கி
மதுர முத்தமிழ் வாசக ரணைந்தனர் மன்று
ளதிர் சிலம்படி யார்மகி ழவளிவ ணல்லூர். (ஙஎங)

மன்னு மப்பதி வானவர் போற்றவு மகிழ்ந்த
தன்மை யார்பயில் கோயிலுட் டம்பரி சுடையா
ரென்னு நாமமு நிகழ்ந்திட வேத்திமுன் னிறைஞ்சிப்
பன்னு சீர்ப்பதி பலவுமப் பாற்சென்று பணிவார். (ஙஎச)

---

திருஅவளிவணல்லூர்-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

கொம்பிரிய வண்டுலவு கொன்றைபுரி நூலொடு குலாவித்
தம்பரிசி னோடுசுடு நீறுதட வந்திடவ மேறிக்
கம்பரிய செம்பொனெடு மாடமதிள் கல்வரைவி லாக
வம்பெரிய வெய்தபெரு மானுறைவ தவளிவண லூரே.

ஆனமொழி யாயதிற லோர்பரவு மவளிவண லூர்மேற்
போனமொழி நன்மொழிக ளாயபுகழ் தோணிபுர வூரன்
ஞானமொழி மாலைபல நாடுபுகழ் ஞானசம் பந்தன்
றேனமொழி மாலைபுகழ் வார்துயர்க டையதிலர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சாக்ஷிநாயகேசுரர். தேவியார்-சவுந்தரநாயகியம்மை.

திருப்பதிகம்—உ.

---

பழுதில் சீர்த்திருப் பருதிநன் னியமும் பணிந்தங்
கெழுது மாமறை யாம்பதி கத்திசை போற்றி
முழுது மானவர் கோயில்கள் வணங்கியே முறைமை
வழுவில் சீர்த்திருப் பூவனூர் வணங்கிவந் தணைந்து. (௩௭௫)

---

திருப்பருதிநியமம்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

விண்கொண்டதூ மதிசூடி நீடுபுன் சடைதாழப்
பெண்கொண்ட மார்வில்வெண்ணீறு பூசிப்பேணார் பலிதேர்ந்து
கண்கொண்ட சாயலொடேர் கவர்ந்தகள்வர்க் கிடம்போலும்
பண்கொண்டு வண்டினம்பாடி யாடும்பருதிந் நியமமே.

பையரவம் விரிகாந்தள் விம்முபருதிந் நியமத்துத்
தையலோர் பாகமமர்ந் தவனைத்தமிழ்ஞான சம்பந்தன்
பொய்யிலி மாலைபுனைந்த பத்தும்பரவிப் புகழ்ந்தேத்த
வையுற வில்லைபிறப் பறுத்தவலம் மடையாவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பருதியப்பபேசுரர். தேவியார்-மங்களநாயகி.

திருப்பதிகம்—க.

---

பொங்கு காதலிற் போற்றியங் கருளுடன் போந்து
பங்க யத்தடம் பணைப்பதி பலவுமுன் பணிந்தே
யெங்கு மன்பர்க ளேத்தொலி யெடுக்கவந் தணைந்தார்
அங்க ணர்க்கிட மாகிய பழம்பதி யாவூர். (௩௭௬)

பணியு மப்பதிப் பசுபதீச் சரத்தினி திருந்த
மணியை யுள்புக்கு வழிபடும் விருப்பினுல் வணங்கித்
தணிவில் காதலிற் றண்டமிழ் மாலைகள் சாத்தி
யணி விளங்கிய திருநலூர் மீண்டும்வந் தணைந்தார். (௩௭௭)

---

திருஆவூர்-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

புண்ணியர்பூதியர் பூதநாதர் புடைபடுவார்தம் மனத்தார் திங்கட்
கண்ணியரென்றென்று காதலாளர் கைதொழுதேத்த விருந்தவூராம்
விண்ணுயர்மாளிகை மாடவீதி விரைகமழ்சோலை சுலாவியெங்கும்
பண்ணியல்பாட லறாதவாவூர்ப் பசுபதியீச்சரம் பாடுநாவே.

எண்டிசையாரும் வணங்கியேத்து மெம்பெருமானை யெழில்கொளாவூர்ப், பண்டுரியார்சிலர் தொண்டர்போற்றும் பசுபதியீச்சரத் தாதிதன்மேற், கண்டல்கண்மிண்டிய கானற்காழிக் கவுணியன்ஞானசம் பந்தன்சொன்ன, கொண்டினிதாவிசை பாடியாடிக் கூடுமவருடையார் கள்வானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பசுபதீசுவரர். தேவியார்-மங்களநாயகியம்மை.

திரும்பதிகம்—க.

---

மறை விளங்குமப் பதியினன் மணிகண்டர் பொற்று
ணிறையு மன்பொடு வணங்கியே நிகழ்பவர் சிலவும்
பிறை யணிந்தவ ரருள்பெறப் பிரசமென் மலர்வண்
டறை நறும்பொழிற் றிருவலஞ் சுழியில்வந் தடைந்தார். (௩எஅ)

மதி புனைந்தவர் வலஞ்சுழி மருவுமா தவத்து
முதிரு மன்பர்கண் முத்தமிழ் விரகர்த முன்வந்
தெதிர்கொள் போழ்தினி லிழிந்தவ ரெதிர்செல மதியைக்
கதிர்செய் வெண்முகிற் குழாம்புடை சூழ்ந்தெனக் கலந்தார். ()

கலந்த வன்பர்க டொழுதெழக் கவுணியர் தலைவ
ரலர்ந்த செங்கம லக்கரங் குவித்துட னணைவார்
வலஞ் சுழிப்பெரு மான்மகிழ் கோயில்வந் தெய்திப்
பொலங்கொள் நீள்சுடர்க் கோபுர மிறைஞ்சியுள் புக்கார். (௩அ0)

மருவ லார்புர முனிந்தவர் திருமுன்றில் வலங்கொண்
டுருகு மன்புட னுச்சிமே லஞ்சலி யினராய்த்
திரு வலஞ்சுழி யுடையவர் சேவடித் தலத்திற்
பெருகு மாதர வுடன்பணிந் தெழுந்தனர் பெரியோர். (௩அக)

ஞான போனகர் நம்பர்முன் றொழுதெழு விருப்பா
லான காதலி லங்கண ரவர்தமை வினவு
மூன மில்லிசை யுடன்விளங் கியதிருப் பதிகம்
பான லார்மணி கண்டனைப் பாடினார் பரவி. (௩அஉ)

---

திருவலஞ்சுழி-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து
முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கண்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே.

மாதொர் கூறனை வலஞ்சுழி மருவிய மருந்தினை வயற்காழி
நாதன் வேதியன் ஞானசம் பந்தன்வாய் நவிற்றிய தமிழ்க்கலை
யாத ரித்திசை கற்றுவல் லார்சொலக் கேட்டுகந் தவர்தம்மை
வாதியாவினை மறுமைக்கு மிம்மைக்கும் வருத்தம்வந் தடையாவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கற்பகத்தீசுவரர். தேவியார்-பெரியநாயகியம்மை.

திருப்பதிகம்—௫.

புலன்கொ ளின்றமிழ் போற்றினர் புறத்தினி லணைந்தே
யிலங்கு நீர்ப்பொன்னி சூழ்திருப் பதியினி லிருந்து
நலங்கொள் காதலி னுதர்தா னுடொறும் பரவி
வலஞ்சு ழிப்பெரு மான் றொண்டர் தம்முடன் மகிழ்ந்தார். (௩அ௩)

மகிழ்ந்த தன்றலை வாழுமந் நாளிடை வானிற்
றிகழ்ந்த ஞாயிறு ० துணைப்புண ரோரையுட் சேர்ந்து
நிகழ்ந்த தன்மையி னிலவுமேழ் கடனீர்மை குன்ற
வெகுண்டு வெங்கதிர் பரப்பலின் முதிர்ந்தது வேனில். (௩அச)

தண் புனற்குளிர் கானறுஞ் சந்தனத் தேய்வை
பண்பு நீடிய வாசமென் மலர்பொதி பனிநீர்
நண் புடைத்துணை நகைமணி முத்தணி நாளு
முண்ப மாதுரி யச்சுவை யுலகுளோர் விரும்ப. (௩அ௫)

வேறு.

அறன்மலியுங் கான்யாற்றி னீர்நசையா லணையுமான்
பெறலரிய புனலென்று பேய்த்தேரின் பின்றொடரு
முறையுணவு கொள்ளும்புட் டேம்பவய லிரைதேரும்
பறவைசிறை விரித்தொடுங்கப் பனிப்புறத்து வதியுமால். (௩அ௬)

நீணிலைமா ளிகைமேலு நிலாமுன்றின் மருங்கினிலும்
வாணிழனீள் சோலையிலு மலர்வாவிக் கரைமாடும்
பூணிலவு முத்தணிந்த பூங்குழலார் முலைத்தடத்துங்
காணுமகிழ்ச் சியின்மலர்ந்து மாந்தர்கலந் துறைவரால். (௩அ௭)

---

० துணைப்புணர் ஓரை என்பது-மிதுனராசி.

மயிலொடுங்க வண்டாட மலர்க்கமல முகைவிரியக்
குயிலொடுங்காச் சோலையின்மென் றளிர்கோதிக் கூவியெழத்
துயிலொடுங்கா வுயிரனைத்துந் துயில்பயிலச் சுடர்வானில்
வெயிலொடுங்கா வெம்மைதரும் வேனில்விரி தருநாளில். (௩அஅ)

சண்பைவரும் பிள்ளையார் சடாமகுடர் வலஞ்சுழியை
யெண்பெருகத் தொழுதேத்திப் பழையாறை யெய்துதற்கு
நண்புடைய வடியார்க ளுடன்போத நடந்தருளி
விண்பொருநீண் மதிளாறை மேற்றளிசென் றெய்தினார். (௩அகூ)

திருவாறை மேற்றளியின் வீற்றிருந்த செந்தீயி
னுருவாள னடிவணங்கி யுருகியவன் பொடுபோற்றி
மருவாருங் குழன்மலையாள் வழிபாடு செய்யவரு
டருவார்தந் திருச்சத்தி முற்றத்தின் புறஞ்சார்ந்தார். (௩கூ0)

திருச்சத்தி முற்றத்திற் சென்றெய்தித் திருமலையாள்
அருச்சித்த சேவடிக ளார்வமுறப் பணிந்தேத்திக்
கருச்சுற்றி லடையாமற் காத்தருவார் கழல்பாடி
விருப்புற்றுத் திருப்பட்டீச் சரம்பணிய மேவுங்கால். (௩கூக)

வெம்மைதரு வேனிலிடை வெயில்வெப்பந் தணிப்பதற்கு
மும்மைநிலைத் தமிழ்விரகர் முடிமீதே சிவபூதந்
தம்மையறி யாதபடி தண்டரளப் பந்தரெடுத்
தெம்மைவிடுத் தருள்புரிந்தார் பட்டீச ரென்றியம்ப. (௩கூ௨)

அவ்வுரையு மணிமுத்தின் பந்தருமா காசமெழச்
செவ்வியமெய்ஞ் ஞானமுணர் சிரபுரத்துப் பிள்ளையார்
இவ்வினைதா னீசர்திரு வருளாகி லிசைவதென
மெய்விரவு புளகமுடன் மேதினியின் மிசைத்தாழ்ந்தார். (௩கூ௩)

அதுபொழுதே யணிமுத்தின் பந்தரினை யருள்சிறக்கக்
கதிரொளிய மணிக்காம்பு பரிசனங்கள் கைக்கொண்டார்
மதுரமொழி மறைத்தலைவர் மருங்கிமையோர் பொழிவாசப்
புதுமலரா லப்பந்தர் பூம்பந்த ரும்போலும். (௩கூ௪)

தொண்டர்குழா மார்ப்பெடுப்பச் சுருதிகளின் பெருந்துழனி
யெண்டிசையு நிரைந்தோங்க வெழுந்தருளும் பிள்ளையார்
வெண்டரளப் பந்தர்நிழன் மீதணையத் திருமன்றி
லண்டர்பிரா னெடுத்ததிரு வடிநீழ லெனவமர்ந்தார். (௩கூ௫)

பாரின்மிசை யன்பருடன் வருகின்றார் பன்னகத்தி
னாரமணிந் தவர்தந்த வருட்கருணைத் திறம்போற்றி
யீரமனங் களிதழைப்ப வெதிர்கொள்ள முகமலர்ந்து
சேரவருந் தொண்டருடன் றிருப்பட்டீச் சரமணைந்தார். (௩கூ௬)

சென்றணைந்து திருவாயிற் புறத்திறைஞ்சி யுள்புக்கு
வென்றிவிடை யவர்கோயில் வலங்கொண்டு வெண்கோட்டுப்
பன்றிகிளைத் தறியாத பாததா மரைகண்டு
முன்னெழுது விழுந்தெழுந்து மொழிமாலை போற்றிசைத்தார்.

---

திருப்பட்டீச்சரம்-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

பாடன்மறை சூடன்மதி பல்வளையோர் பாகமதின் மூன்றோர் கணையாற்
கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல் கூடுபொழில் சூழ் பழையையுண்
மாடமழ பாடியுறை பட்டிசர மேயகடி கட்ட ரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டிவினை வீடு மவரே.

மந்தமலி சோலைமழ பாடிநகர் நீடுபழை யாறை யதனிற்
பந்தமுயர் வீடுநல பட்டிசர மேயபடர் புன் சடையனை
யந்தண்மறை யோரினிது வாழ்புகலி ஞானசம் பந்த னணியார்
செந்தமிழ்கள் கொண்டினிது செப்பவல தொண்டர்வினை நிற்ப திலவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பட்டீசுவரர். தேவியார்-பால்வளை.

திருப்பதிகம்—க.

---

அருள்வெள்ளத் திறம்பரவி யளப்பரிய வானந்தப்
பெருவெள்ளத் திடைமூழ்கிப் போராத பெருங்காதற்
றிருவுள்ளப் பரிவுடனே செம்பொன்மலை வல்லியார்
தருவள்ளத் தமுதுண்ட சம்பந்தர் புறத்தணைந்தார். (௩௯௮)

அப்பதியி லமர்கின்ற வாளுடைய பிள்ளையார்
செப்பருஞ்சீர்த் திருவாறை வடதளியிற் சென்றிறைஞ்சி
யொப்பரிய தமிழ்பாடி யுடைமருந் தொண்டருட
னெப்பொருளு மாய்நின்ற ரிரும்பூளை யெய்தினார். (௩௯௯)

தேவர்பிரா னமர்ந்ததிரு விரும்பூளை சென்றெய்தக்
காவணநீ டோரணங்க ளூட்டியுடன் களிசிறப்பப்
பூவணைமா லைகணாற்றிப் பூரணபொற் குடநிரைத்தங்
கியாவர்களும் போற்றிசைப்பத் திருத்தொண்ட ரெதிர்கொண்டார். ()

வண்டமிழின் மொழிவிரகர் மணிமுத்தின் சிவிகையினைத்
தொண்டர்குழாத் தெதிரிழிந்தங் கவர்தொழுத்தா முந்தொழுதே
யண்டர்பிரான் கோயிலினை யணைந்திறைஞ்சி முன்னின்று
பண்டருமின் னிசைப்பதிகம் பரம்பொருளைப் பாடுவார். (௪0௧)

நிகரிலா மேருவரை யணுவாக நீண்டானை
நுகர்கின்ற தொண்டர்தமக் கமுதாகி நொய்யானைத்
தகவொன்ற வடியார்க டமைவினவித் தமிழ்விரகர்
பகர்கின்ற வருமறையின் பொருள்விரியப் பாடினார். (சOஉ)

திருஇரும்பூளை-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சீரார்கழலே தொழுவீரிதுசெப்பீர்
வாரார்முலை மங்கையொடும்முடனாகி
யேராரிரும்பூளை யிடங்கொண்டவீசன்
காரார்கட னஞ்சமுதுண்டகருத்தே.

எந்தையிரும்பூளை யிடங்கொண்டவீசன்
சந்தம்பயில்சண்பை யுள்ஞானசம்பந்தன்
செந்தண்டமிழ் செப்பியபத்திவைவல்லார்
பந்தம்மறுத் தோங்குவர் பான்மையினாலே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-காசியாரண்ணியேசுவரர். தேவியார்-எல்வார்குழலியம்மை.

திருப்பதிகம்—க.

பாடிமரதைப் பெரும் பாழியே முதலாகச்
சேட்டர்பயி றிருச்சேறை திருநாலூர் குடவாயி
னாடியசீர் நறையூர்தென் றிருப்புத்தூர் நயந்திறைஞ்சி
நீடுதமிழ்த் தொடைபுனைந்தங் நெடுநகரி லினிதமர்ந்தார். (சOங)

திருஅரதைப்பெரும்பாழி-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

பைத்தபாம்போடரைக் கோவணம்பாய்புலி
மொய்த்தபேய்கண்முழக் கமுதுகாட்டிடை
நித்தமாகநட மாடிவெண்ணீறணி
பித்தர்கோயில்லர தைப்பெரும்பாழியே.

நீரினார்புன்சடை நிமலனுக்கிடமெனப்
பாரினார்பரவர தைப்பெரும்பாழியைச்
சீரினார்காழியுள் ஞானசம்பந்தன்செய்
யேரினார்தமிழ்வலார்க் கில்லையாம்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பாதாளேசுவரர். தேவியார்-அலங்காரநாயகியம்மை.

திருப்பதிகம்—க.

திருச்சேறைதிருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

முறியுறு நீர்மல்கு முகிழ்முலை மலைமகள் வெருவமுன்
வெறியுறு மதகரி யதள்ப டவுரிசெய் தவிறலினர்
நறியுறு மிதழியின் மலரொடு நதிமதி நகுதலை
செறியுறு சடைமுடி யடிகடம் வளநகர் சேறையே.

கற்றநன் மறைபயி லடியவ ரடிதொழு கவினுறு
சிற்றிடை யவளொடு மிடமென வுறைவதோர் சேறைமேற்
குற்றமில் புகலியு ளிகலறு ஞானசம் பந்தன்
சொற்றக வுறமொழி பவரழி விலர்துயர் தீருமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சந்நிதியப்பேசுவரர். தேவியார்-ஞானவல்லியம்மை.

திருப்பதிகம்—௩.

---

திருநாலூர்மயானம்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

பாலூரு மலைப்பாம்பும் பனிமதியு மத்தமு
மேலூருஞ் செஞ்சடையான் வெண்ணூல்சேர் மார்பினு
னாலூர் மயானத்து நம்பான்ற னடிநினைந்து
மாலூருஞ் சிந்தையர்பால் வந்தூரா மறுபிறப்பே.

ஞாலம் புகழ்காழி ஞானசம் பந்தன்று
னாலு மறையோது நாலூர் மயானத்தைச்
சீலம் புகழாற் சிறந்தேத்த வல்லாருக்
கேலும் புகழ்வானத் தின்பரா யிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பலாசவனேசுவரர். தேவியார்-பெரியாம்பிகையம்மை.

திருப்பதிகம்—க.

---

திருக்குடவாயில்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திகழுந்திரு மாலொடு நான்முகனும்
புகழும்பெரு மானடி யார்புகன்
மகிழும்பெரு மான்குட வாயில்மன்னி
நிகழும்பெருங் கோயினி லாயவனே.

கடுவாய்மலி நீர்க்குட வாயிறனி
னெடுமாபெருங் கோயிணி லாயவனைத்
தடமார்புக லித்தமி ழார்விரகன்
வடமார்தமிழ் வல்லவர் நல்லவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கோணேசுவரர். தேவியார்-பெரியநாயகியம்மை.

திருப்பதிகம்—உ.

திருநறையூர்-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

நேரிய னாகுமல்ல னொருபாலுமேனி யரியான்மு னாயவொளிபா
னீரியல் காலுமாகி நிறைவானுமாகி யுறுதீயு மாயவொருவ
னாரியல் பிச்சைபேணி யுலகங்களேத்த நலகண்டு பண்டுசுடலை
நாரியோர் பாகமாக நடமாடவல்ல நறையூரி னம்பனவனே.

கானலு லாவியோத மெதிர்மல்குகாழி மிகுபந்தன் முந்தியுணர்
ஞானமு லாவுசிந்தை யடிவைத்துகந்த நறையூரி னம்பவனவனை
யீனமி லாதவண்ண மிசையாலுரைத்த தமிழ்மாலை பத்துநினைவார்
வானநி லாவவல்லார் நிலமெங்குநின்று வழிபாடு செய்யுமிகவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சித்தநாதேசுவரர். தேவியார்-அழகாம்பிகை.

திருப்பதிகம்—ச.

திருப்புத்தூர்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வெங்களவிம்மு வெறியார் பொழிற்சோலை
திங்களொடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கைதங்கு முடியா ரவர்போலு
மெங்களுச்சி யுறையும் மிறையாரே.

நல்லகேள்வி ஞான சம்பந்தன்
செல்வர்சேட ருறையுந் திருப்புத்தூர்ச்
சொல்லபாடல் வல்லார் தமக்கென்றும்
அல்லறீரும் மவலம் மடையாவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சொர்ணபுரீசர். தேவியார்-சிங்கேசுவரி.

திருப்பதிகம்—க.

அங்கணினி தமருநா ளடல்வெள்ளே னத்துருவாய்ச்
செங்கணெடு மால்பணியுஞ் சிவபுரத்துச் சென்றடைந்து
கங்கைசடைக் கரந்தவர்தங் கழல்வணங்கிக் காதலினாற்
பொங்குமிசைத் திருப்பதிக முன்னின்று போற்றிசைத்தார். (௪0௪)

திருச்சிவபுரம்-பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

இன்குர லிசைகெழும் யாழ்முரலத்
தன்கர மருவிய சதுரனகர்
பொன்கரை பொருபழங் காவிரியின்
றென்கரை மருவிய சிவபுரமே.

சிவனுறை தருசிவ புரநகரைக்
கவுணியர் குலபதி காழியர்கோன்
றவமிகு தமிழிவை சாற்றவல்லார்
நவமொடு சிவகதி நண்ணுவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பிரமபுரிநாயகர். தேவியார்-பெரியநாயகியம்மை.

திருப்பதிகம்—௪.

போற்றிசைத்துப் புனிதரருள் பெற்றுப்போந் தெவ்வுயிருந்
தோற்றுவித்த வயன்போற்றுந் தோணிபுரத் தந்தணனா
ரேற்றுமிசை யேற்றுவந்த விறைவர்தமை யேத்துதற்கு
நாற்றிசையோர் பரவுதிருக் குடமூக்கு நண்ணினார். (௪0௫)

தேமருவு மலர்ச்சோலைத் திருக்குடமூக் கினிற்செல்வ
மாமறையோர் பூந்தராய் வள்ளலார் வந்தருளத்
தூமறையி னொலிபெருகத் தூரியமங் கலமுழங்கக்
கோமுறைமை யெதிர்கொண்டு தம்பதியுட் கொடுபுக்கார். (௪0௬)

திருஞான சம்பந்தர் திருக்குடமூக் கினைச்சேர
வருவார்தம் பெருமானை வண்டமிழின் றிருப்பதிக
முருகாநின் றுண்மகிழக் குடமூக்கை யுவந்திருந்த
பெருமானெம் மிறையென்று பெருகிசையாற் பாவினார். (௪0௭)

திருக்குடமூக்கு-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அரிவிரி கோட்னீட் லணிகாவிரியாரத் தயலெமா
விரிபோது மவ்வன்மண மல்லிகை கள்ளவிழுங்
குரவிரி சோலைசூழ்ந்த குழகன்குட மூக்கிடமா
விரவிரி திங்கள்சூடி யிருந்தானவ னெம்மிறையே.

வெண்கொடி மாடமோங்கு விறல்வெங்குரு நன்னகரா
னண்பொடு நின்றசிரான் றமிழ்ஞானசம் பந்தனல்ல
தண்குட மூக்கமர்ந்தா னடிசேர்தமிழ் பத்தும்வல்லார்
விண்புடை மேலுலகம் வியப்பெய்துவர் வீடெளிதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கும்பேசுவரர். தேவியார்-மங்கலநாயகியம்மை.

திருப்பதிகம்—உ.

---

வந்தணைந்து திருக்கீழ்க் கோட்டத்திருந்த வான்பொருளைச்
சிந்தைமகிழ் வுறவணங்கித் திருத்தொண்ட ருடன்செல்வா
ரந்தணர்கள் புடைசூழ்ந்து போற்றிசைப்ப வவரோடுங்
கந்தமலர்ப் பொழில்சூழ்ந்த காரோணஞ் சென்றடைந்தார். (ச0அ)

பூமருவுங் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்த
மாமகந்தா னாடுதற்கு வந்துவழி படுங்கோயி
றூமருவு மலர்க்கையாற் றொழுதுவலங் கொண்டணைந்து
காமர்கெட நுதல்விழித்தார் கழல்பணிந்து கண்களித்தார். (ச0கூ)

கண்ணாரு மருமணியைக் காரோணத் தாரமுதை
நண்ணாதார் புரமெரித்த நான்மறையின் பொருளானைப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பணிந்தேத்திப் பிறபதியு
மெண்ணார்ந்த சீரடியா ருடன்பணிவுற் றெழுந்தருளி. (சக0)

---

குடந்தைக்காரோணம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வாரார்கொங்கை மாதோர்பாக மாக வார்சடை
நீரார்கங்கை திங்கள்சூடி நெற்றி யொற்றைக்கண்
கூரார்மழுவொன் றேந்தியந்தண் குழகன் குடமூக்கிற்
காரார்கண்டத் தெண்டோளெந்தை காரோ ணத்தாரே.

கருவார்பொழில்சூழ்ந் தழகார்செல்வக் குடந்தைக்காரோ ணத்தானைத்
திருவார்செல்வ மல்குசண்பை திகழுஞ் சம்பந்த
னுருவார்செஞ்சொன் மாலையிவைபத் துரைப்பா ருலகத்துக்
கருவாரிடும்பைப் பிறப்பறுத்துக் கவலை கழிவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சோமநாதேசுரர். தேவியார்-தேனார்மொழியம்மை.

திருப்பதிகம்—க.

---

திருநாகேச் சரத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைக்
கருநாகத் துரிபுனைந்த கண்ணுதலைச் சென்றிறைஞ்சி
யருஞானச் செந்தமிழின் றிருப்பதிக மருள்செய்து
பெருஞான சம்பந்தர் பெருகார்வத் தின்புற்றார். (௬௧௧)

---

திருநாகேச்சரம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னேர் தருமே னியனே புரியும்
மின்னேர் சடையாய் விரைகா விரியி
னன்னீர் வயனா கேச்சர நகரின்
மன்னே யெனவல் வினைமாய்ந் தறுமே.

கலமார் கடல்சூழ் தருகா ழியர்கோன்
றலமார் தருசெந் தமிழின் விரக
னலமார் தருநா கேச்சரத் தானைச்
சொலமாலை கள்சொல்ல நில்லா வினையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சண்பகாரணியேசுரர். தேவியார்-குன்றமுலைநாயகியம்மை.

திருப்பதிகம்—௭.

---

மாநாக மருச்சித்த மலர்க்கமலத் தாள்வணங்கி
நாணாளும் பரவுவார் பிணிதீர்க்கு நலம்போற்றிப்
பானறு மணிவாயர் பரமர்திரு விடைமருதிற்
பூநாறும் புனற்பொன்னித் தடங்கரைபோய்ப் புகுகின்றார். (௬௧௨)

ஓங்குதிருப் பதிகமோ டேகலனென் றெடுத்தருளித்
தாங்கரிய பெருமகிழ்ச்சி தலைசிறக்குந் தன்மையினால்
ஈங்கெனையா ளுடையபிரா னிடைமருதீ தோவென்று
பாங்குடைய வின்னிசையாற் பாடியெழுந் தருளினார். (௬௧௩)

---

திருஇடைமருது-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஓடே கல னுண்பது மூரிடு பிச்சை
காடே யிட மாவது கல்லால நிழற்கீழ்
வாடா முலை மங்கையுந் தானு மகிழ்ந்
தீடா வுறை கின்ற விடைமரு தீதோ.

கண்ணார் கமழ் காழியுள் ஞானசம் பந்த
னண்ணார் புக ழெந்தை யிடைமரு தின்மேற்
பண்ணோ டிசை பாடிய பத்தும்வல் லார்கள்
விண்ணோ ருல கத்தினில் வீற்றிருப் பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மருதப்பஈசுரர். தேவியார்-நல்முலைநாயகியம்மை.

திருப்பதிகம்—கஉ.

---

அடியவர்க ளெதிர்கொள்ள வெழுந்தருளி யங்கணைந்து
முடிவில்பரம் பொருளானார் முதற்கோயின் முன்னிறைஞ்சிப்
படியில்வலங் கொண்டுதிரு முன்பெய்திப் பார்மீது
நெடிதுபணிந் தெழுந்தன்பு நிறைகண்ணீர் நிரந்திழிய. (சுகச)

பரவுறுசெந் தமிழ்ப்பதிகம் பாடியமர்ந் தப்பதியில்
விரவுவார் திருப்பதிகம் பலபாடி வெண்மதியோ
டரவுசடைக் கணிந்தவர்தந் தாள்போற்றி யார்வத்தா
லுரவுதிருத் தொண்டருடன் பணிந்தேத்தி யுறையுநாள். (சுகரு)

---

திருவிடைமருது-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

விரிதரு புலியுரி விரவிய வரையினர்
திரிதரு மெயிலவை புனைகணை யினிலெய்த
வெரிதரு சடையின ரிடைமரு தடைபுனல்
புரிதரு மனனவர் புகழ்மிக வுளதே.

பொருகட லடைதரு புகலியர் தமிழொடு
விரகினன் விரிதரு பொழிலிடை மருதினை
பரவிய வொருபது பயில வலரிடர்
விரவிலர் வினையொடு வியனுல குறவே.

திருச்சிற்றம்பலம்.

---

நடைமரு திரிபுர மெரியவுண் ணகைசெய்த
படைமரு தழலெழ மழுவல பகவன்
புடைமரு திளமுகில் வளமமர் பொதுளிய
விடைமரு தடையநம் மிடர்கெட லெளிதே.

தடமலி புகலியர் தமிழ்கெழு விரக
னிடைமலி பொழிலிடை மருதினை யிசைசெய்த
படமலி தமிழிவை பரவவல் லார்வினை
கெடமலி புகழொடு கிளரொளி யினரே.

திருச்சிற்றம்பலம்.

மருந்தவன் வானவர் தானவர்க்கும்
பெருந்தகை பிறவினோ டிறவுமானா
னருந்தவ முனிவரோ டானிழற்கீ
ழிருந்தவன் வளநக ரிடைமருதே.

இலைமலி பொழிலிடை மருதிறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
பலமிகு தமிழிவை பத்தும்வல்லா
ருலகுறு புகழினோ டோங்குவரே.

திருச்சிற்றம்பலம்.

---

மருங்குளநற் பதிகள்பல பணிந்துமா நதிக்கரைபோய்க்
குரங்காடு துறையணைந்து குழகனார் குரைகழல்கள்
பெருங்காத லிற்பணிந்து பேணியவின் னிசைபெருக
வருங்கலைநூற் றிருப்பதிக மருள்செய்து பரவினார். (சகசு)

---

குரங்காடுதுறை-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பரவக் கெடும்வல் வினைபா ரிடஞ்சூழ
விரவிற் புறங்காட் டிடைநின் றெரியாடி
யரவச் சடையந் தணன்மேய வழகார்
குரவப் பொழில்சூழ் குரங்காடு துறையே.

நல்லார் பயில்காழி யுள்ஞான சம்பந்தன்
கொல்லே றுடையான் குரங்காடு துறைமேற்
சொல்லார் தமிழ்மாலை பத்துந் தொழுதேத்த
வல்லா ரவர்வா னவரோ டுறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஆபத்சகாயேசுவரர். தேவியார்-பவளக்கொடியம்மை.

திருப்பதிகம்—உ.

---

வேறு.

அம்மலர்த்தடம் பதிபணிந் தகன்றுபோந் தருகு
மைம்மலர்க்களத் திறைவர்தங் கோயில்கள் வணங்கி
நம்மலர்த்துயர் நீங்கவந் தருளிய ஞானச்
செம்மலார்திரு வாவடு துறையினைச் சேர்ந்தார். (சகஎ)

மூவருக்கறி வரும்பொரு ளாகிய மூலத்
தேவர்தந்திரு வாவடு துறைத்திருத் தொண்டர்
பூவலம்புதண் பொருபுனற் றடம்பணைப் புகலிக்
காவலர்க்கெதிர் கொள்ளுமா தரவுடன் கலந்தார். (சகஅ)

வந்தணைந்தவர் தொழாமுன மலர்புகழ்ச் சண்பை
யந்தணர்க்கெலா மருமறைப் பொருளென வந்தார்
சந்தநித்திலச் சிவிகைநின் றிழிந்தெதிர் தாழ்ந்தே
சிந்தையின்புற விறைவர்தங் கோயின்முன் சென்றார். (சகசுகூ)

நீடுகோபுர மிறைஞ்சியுள் புகுந்துநீ ணிலையான
மாடுசூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கி
யாடுமாதியை யாவடு துறையுளா ரமுதை
நாடுகாதலிற் பணிந்தெழுந் தருந்தமிழ் நவின்றார். (சஉ௰)

அன்புநீடிய வருவிகண் பொழியுமா ரவத்தான்
முன்புபோற்றியே புறம்பணை முத்தமிழ் விரகர்
துன்புபோமனத் திருத்தொண்டர் தம்முடன் றொழுதே
யின்பமேவியப் பதியினி லினிதமர்ந் திருந்தார். (சஉக)

மேவியங்குறை நாளினில் வேள்விசெய் வதனுக்
காவதாகிய காலம்வந் தணைவுற வணைந்து
தாவில்சண்பையர் தலைவர்க்குத் தாதையார் தாமும்
போவதற்கரும் பொருள்பெற வெதிர்நின்று புகன்றார். (சஉஉ)

தந்தையார்மொழி கேட்டலும் புகலியார் தலைவர்
முந்தைநாளிலே மொழிந்தமை நினைந்தருண் முன்னி
யந்தமில்பொரு ளாவன வாவடு துறையு
ளெந்தையாரடித் தலங்களன் றேவென வெழுந்தார். (சஉஙு)

சென்றுதேவர்தம் பிரான்மகிழ் கோயின்முன் பெய்தி
நின்றுபோற்றுவார் நீணிதி வேண்டினர்க் கீவ
தொன்றுமற்றிலே னுன்னடி யல்லதொன் றறியே
னென்றுபேரருள் வினவிய செந்தமி ழெடுத்தார். (சஉச)

---

திருஆவடுதுறை-நாலடிமேல்வைப்பு-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

இடரினுந் தளரினு மெனதுறுநோய்
தொடரினு முனகழ றொழுதெழுவேன்
கடறனி லமுதொடு கலந்தநஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே.

யிதுவோவெம்மை யாளுமாறீவ தொன்றில்லையே
யதுவோவுன தின்னருளாவடு துறையானே.

அலைபுன லாவடு துறையமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்மிறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை யருந்தமிழ் மாலைவல்லார்.
வினையாயின நீங்கிப்போய்விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர்நிலமிசை நிலையிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாசிலாமணியீசுவரர். செம்பொற்றியாகர்.
தேவியார்-ஒப்பிலாமுலையம்மை. திருப்பதிகம்—அ.

எடுத்தவண்டமிழ்ப் பதிகமா லடியின்மே லிருசீர்
தொடுத்தவைப்பொடு தொடர்ந்தவின் னிசையினாற் றுதிப்பார்
மடுத்தகாதலில் வள்ளலா ரடியிணை வழுத்தி
யடுத்தசிந்தையா லாதரித்தஞ்சலி யளித்தார். (சஉரு)

நச்சியின்றமிழ் பாடிய ஞானசம் பந்த
ரிச்சையேபுரிந் தருளிய விறைவரின் னருளா
லச்சிறப்பருள் பூதமுன் விரைந்தகன் பீடத்
துச்சிவைத்தது பசும்பொனா யிரக்கிழி யொன்று. (சஉசா)

வைத்தபூதமங் கணைந்துமுன் னின்றுநல் வாக்கா
லுய்த்தவிக்கிழி பொன்னுலவாக்கிழி யுமக்கு
நித்தனாருள் செய்ததென் றுரைக்கநேர் தொழுதே
யத்தனார்திரு வருணினைந் தவனிமேற் பணிந்தார். (சஉஎ)

பணிந்தெழுந்துகை தொழுதுமுன் பனிமலர்ப் பீடத்
தணைந்தவாடகக் கிழிதலைக் கொண்டரு மறைக
டுணிந்தவான்பொருட் கரும்பொரு ளேவாய் மையினாற்
றணிந்தசிந்தைபத் தந்தையார்க் களித்துரை செய்வார். (சஉஅ)

ஆதிமாமறை விதியினா லாறுசூழ் வேணி
நாதனாரைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீதுநீங்கநீர் செய்யவுந் திருக்கழு மலத்து
வேதவேதிய ரனைவருஞ் செய்யவு மிகுமால். (சஉகூ)

என்றுகூறியங் கவர்தம்மை விடுத்தபி னவரு
நன்றுமின்புறு மனத்தொடும் புகலிமே னண்ண
வென்றிஞானசம் பந்தரும் விருப்பொடு வணங்கி
மன்றலாவடு துறையினின் மகிழ்ந்தினி திருந்தார். (சஙo)

அண்ணலார்திரு வாவடு துறையமர்ந் தாரை
யுண்ணிலாவிய காதலி னூற்பணிந் துறைந்து
மண்ணெலாமுய வந்தவர் போந்துவார் சடைமேற்
றெண்ணிலாவணி வார்திருக் கோழம்பஞ் சேர்ந்தார். (சஙக)

கொன்றைவார்சடை முடியரைக் கோழம்பத் திறைஞ்சி
யென்றுமீடிய வின்னிசைப் பதிகமுன் னியம்பி
மன்றுளார்மகிழ் வைகன்மா டக்கோயின் மருங்கு
சென்றுசார்ந்தனர் திருவளர் சிரபுரச் செல்வர். (சஙஉ)

திருக்கோழம்பம்-பண்-இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

நீற்றானை நீள்சடை மேனிறை வுள்ளதோ
ராற்றானை யழகமர் மென்முலை யாளையோர்
கூற்றானைக் குளிர்பொழிற் கோழம்ப மேவிய
வேற்றானை யேத்துமி னும்மிட ரேகவே.

தண்புன லோங்குதண் ணந்தராய் மாநகர்
நண்புடை ஞானசம் பந்தனம் பானுறை
விண்பொழிற் கோழம்ப மேவிய பத்திவை
பண்கொளப் பாடவல் லார்க்கில்லை பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கோகுலேசர். தேவியார்-சௌந்தரநாயகியம்மை.
திருப்பதிகம்—உ.

வைகனீடுமா டக்கோயின் மன்னிய மருந்தைக்
கைகளஞ்சலி கொண்டுதொழுந் தெழுந்துகண் ணருவி
செய்யவின்னிசைச் செந்தமிழ் மாலைகண் மொழிந்து
நையுமுள்ளத்த ராய்த்திரு நல்லத்தி னண்ணி. (சஙங)

திருவைகல்மாடக்கோயில்-பண்-காந்தாரபஞ்சமம்.
திருச்சிற்றம்பலம்.

துளமதி யுடைமறி தோன்று கையின
ரிளமதி யணிசடை யெந்தை யாரிட
முளமதி யுடையவர் வைக லோங்கிய
வளமதி தடவிய மாடக் கோயிலே.

மைந்தன திடம்வைகன் மாடக் கோயிலைச்
சந்தமர் பொழிலணி சண்பை ஞானசம்
பந்தன தமிழ்கெழு பாடல் பத்திவை
சிந்தைசெய் பவர்சிவ லோகஞ் சேர்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கோம்பிலிளங்கோதைநாதர்.
தேவியார்-கொம்பிலிளங்கோதைநாயகி. திருப்பதிகம்—க.

நிலவுமாளிகைத் திருநல்ல நீடுமா மணியை
யிலகுசேவடி யிறைஞ்சியின் றமிழ்கொடு துதித்துப்
பலவுமீசர்தந் திருப்பதி பணிந்துசெல் பவர்தா
மலேபுனற்றிரு வழுந்தூர்மா டக்கோயி லடைந்தார். (௪௩௪)

திருநல்லம்-பண்-குறிஞ்சி.
திருச்சிற்றம்பலம்.

கல்லா னிழல்மேய கறைசேர் கண்டாவென்
றெல்லா மொழியாலு மிமையோர் தொழுதேத்த
வில்லான் மூன்றும் வெந்து விழவெய்த
நல்லா னமையாள்வா னல்லந் நகரானே.

நலமார் தருமறையோர் வாழுநல்லந் நகர்மேய
கொலேசேர் மழுவானேக் கொச்சையமர்ந் தோங்கு
நலமார் தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன
கலேக ளிவைவல்லார் கவலே கழிவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-உமாமகேசுரநாதர். தேவியார்-மங்களநாயகி.
திருப்பதிகம்—உ.

மன்னுமாமட மகிழ்ந்தவான் பொருளினே வணங்கிப்
பன்னுபாடலிற் பதிகவின் னிசைகொடு பரவிப்
பொன்னிமாநதிக் கரையினின் மீண்டுபோந் தணேந்து
சொன்னவாறறி வார்தமைத் துருத்தியிற் றெழுதார். (௪௩௫)

திருஅழுந்தூர்-பண்-இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

தொழுமாறு வல்லார் துயர்தீர நினேந்
தெழுமாறு வல்லா ரிசைபாட விம்மி
யழுமாறு வல்லா ரழுந்தைம் மறையோர்
வழிபாடு செய்மா மடமன் னினேயே.

அருஞானம் வல்லா ரழுந்தைம் மறையோர்
பெருஞான முடைப் பெருமா னவனேத்
திருஞான சம் பந்தன் செந்தமிழ்க
ளொருஞான முண்டா முணர்ந்தார் தமக்கே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வேதபுரீசர். தேவியார்-சவுந்தரநாயகி.
திருப்பதிகம்—க.

திரைத்தடம்புனற் பொன்னிசூழ் திருத்துருத் தியினில்
வரைத்தலைப்பசும் பொன்னெனும் வண்டமிழ்ப் பதிக
முரைத்து மெய்யுறப் பணிந்துபோந் துலவுமந் நதியின்
கரைக்கண்மூவலூர்க் கண்ணுத லார்கழல் பணிந்தார். (௩௩௬)

திருத்துருத்தி-திருவிராகம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

வரைத்தலைப் பசும்பொனோ டருங்கலங் களுந்திவந்
திரைத்தலைச் சுமந்துகொண் டெறிந்திலங்கு காவிரிக்
கரைத்தலைத் துருத்திபுக் கிருப்பதே கருத்தினா
யுரைத்தலைப் பொலிந்துனக் குணர்த்துமாறு வல்லமே.

கற்றுமுற்றி னார்தொழுங் கழுமலத் தருந்தமிழ்
சுற்றுமுற்று மாயினான வன்பகர்ந்த சொற்களாற்
பெற்றமொன் றுயர்த்தவன் பெருந்துருத்தி பேணவே
குற்றமுற்று மின்மையிற் குணங்கள்வந்து கூடுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-முத்தாவதேசுரர். தேவியார்-அமிர்தமுகிழாம்பிகை.

திருப்பதிகம்—௩.

மூவலூருறை முதல்வனைப் பரவிய மொழியான்
மேவுகாதலி லேத்தியே விருப்பொடும் போந்து
பூவலம்புதண் புனற்பணைப் புகலியர் தலைவர்
வாவிசூழ்திரு மயிலாடு துறையினில் வந்தார். (௩௩௭)

மல்குதண்டலை மயிலாடு துறையினின் மருவுஞ்
செல்வவேதியர் தொண்டரோ டெதிர்கொளச் சென்று
கொல்லைமான்மறிக் கையனைக் கோயில்புக் கிறைஞ்சி
யெல்லையில்லதோ ரின்பமுன் பெருகிட வெழுந்தார். (௩௩௮)

உள்ளமின்புற வுணர்வுறும் பரிவுகொண் டுருகி
வெள்ளந்தாங்கிய சடையனை விளங்குசொற் பதிகத்
தெள்ளுமின்னிசைத் தொடைப்பொடும் புறத்தணைந் தருளி
வள்ளலாருமற் றுளபதி மருவுதன் மகிழ்ந்தார். (௩௩௯)

திருமயிலாடுதுறை-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

கரவின்றிநன் மாமலர்கொண்
டிரவும்பக லுந்தொழுவார்கள்
சிரமொன்றிய செஞ்சடையான்வாழ்
வரமாமயி லாடுதுறையே.

நயர்காழியுள் ஞானசம்பந்தன்
மயறீர்மயி லாடுதுறைமேற்
செயலாலுரை செய்தனபத்து
முயர்வாமிவை யுற்றுணர்வார்க்கே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாயூரேசர். தேவியார்-அஞ்சலநாயகி.

திருப்பதிகம்—க.

---

அத்திருப்பதி யகன்றுபோ யணிகிளர் சூலக்
கைத்தலைப்படை வீரர்செம் பொன்பள்ளி கருதி
மெய்த்தகாதலில் விளநகர் விடையவர் பாதம்
பத்தர்தம்முடன் பணிந்திசைப் பதிகமுன் பகர்ந்தார். (சச௦)

---

திருச்செம்பொன்பள்ளி-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மருவார் குழலி மாதோர் பாகமாய்த்
திருவார் செம்பொன் பள்ளி மேவிய
கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவா தவர்மேன் மன்னும் பாவமே.

நறவார் புகலி ஞானசம் பந்தன்
செறுவார் செம்பொன் பள்ளிமே யானைப்
பெறுமா றிசையாற் பாடலிவை பத்து
முறுமாறு சொல்ல வோங்கி வாழ்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சொர்ணபுரியீசுவரர். தேவியார்-சுகந்தவனநாயகி.

திருப்பதிகம்—உ.

---

திருவிளமர்-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

மத்தக மணிபெற மலர்வதோர் மதிபுரை நுதல்கர
மொத்தக நகமணி மிளிர்வதோ ரரவின ரொளிகிள
ரத்தக வடிதொழ வருள்பெறு கண்ணொடு முமையவள்
வித்தக ருறைவது விரிபொழில் வளநகர் விளமரே.

வெந்தவெண் பொடியணி யடிகளை விளமருள் விகிர்தனைச்
சிந்தையு ளிடைபெற வுரைசெய்த தமிழிவை கெழுவிய
வந்தணர் புகலியு ளழகம ரருமறை ஞானசம்
பந்தன மொழியிவை யுரைசெயு மவர்வினை பறையுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பதஞ்சலிமனோகரர். தேவியார்-யாழினுமென்மொழியம்மை

திருப்பதிகம்—க.

---

பாடும்பதி பணிந்துபோய்ப் பறியலூர் மேவுந்
தோடுலாமல ரிதழியுந் தும்பையு மடம்புங்
காடுகொண்டசெஞ் சடைமுடிக் கடவுளர் கருதூ
நீடுவீரட்டம் பணிந்தனர் நிறைமறை வேந்தர். (சசக)

---

திருப்பறியலூர்-பண்-மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கருத்தன் கடவுள் கனலேந்தி யாடி
நிருத்தன் சடைமே னிரம்பா மதியன்
றிருத்தம் முடையார் திருப்பறிய லூரில்
விருத்த னெனத் தகும்வீரட் டத்தானே.

நறுநீரு குங்காழி ஞானசம் பந்தன்
வெறிநீர்த திருப்பறியல் வீரட்டத் தானைப்
பொறிநீ டரவன் புனைபாடல் வல்லார்க்
கறுநீ டவலம் பிறப்புத் தானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வீரட்டேசர். தேவியார்-இளங்கொம்பம்மை.

திருப்பதிகம்—உ.

---

பரமர்தந்திருப் பறியலூர் வீரட்டம் பரவி
விரவுகாதலின் வேலையின் கரையினை மேவி
யரவணிந்தவர் பதிபல வணைந்துமுன் வணங்கிச்
சிரபுரத்தவர் திருத்தொண்ட ரெதிர்கொளச் செல்வார். (சசஉ)

வேறு.

அடியவர்கள்களிசிறப்பத் திருவேட்டக் குடிபணிந்தங்கலைவாய்ப்போகிக்
கடிகமழு மலர்ப்பழனக் கழனிநாட் டகன்பதிகள் கலந்து நீங்கிக்
கொடிமதில்சூழ் தருமபுரங் குறுகினர் குண்டர்சாக் கியர்தங் கொள்கை
படியறியப் பழுதென்றே மொழிந்துய்யு நெறிகாட்டும் புவளவாயர். ()

---

திருவேட்டக்குடி-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வண்டிரைக்கு மலர்க்கொன்றை விரிசடைமேல் வரியரவங்
கண்டிரைக்கும் பிறைச்சென்னிக் காவாலி கழல்கடொண்டிரைத்துத் தொழுதிறைஞ்சத் துளங்கொளிநீர்ச் சுடர்ப்பவளந்
தெண்டிரைகள் கொணர்ந்தெறியுந் திருவேட்டக் குடியாரே.

தெண்டிரைசேர் வயலுடுத்த திருவேட்டக் குடியாரைத்
தண்டலைசூழ் கலிக்காழித் தமிழ்ஞான சம்பந்த
னெண்டமிழ்நூ லிவைபத்து முணர்ந்தேத்த வல்லார்போ
யுண்டுடுப்பில் வானவரோ டுயர்வானத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-திருமேனியழகர். தேவியார்-சுகந்தநாயகி.

திருப்பதிகம்—க.

---

தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமா மதனாற்சார, வருமவர்தஞ் சுற்றத்தார் வந்தெதிர்கொண் டடிவணங்கி வாழ்த்தக்கண்டு, பெருமையுடைப் பெரும்பாண ரவர்க்குரைப்பார் பிள்ளையா ரருளிச்செய்த,வருமையுடைப் பதிகந்தாம் யாழினாற் பயிற்றும்பே றருளிச்செயதார்.

கிளைஞருமற் றதுகேட்டுக் கெழுவுதிருப் பதிகத்திற் கிளர்ந்தவோசை யளவுபெறக் கருவியினி ரமைத்தியற்று மதனாலே யகிலமெல்லாம் வளரவிசை நிகழ்வதென விளம்புதலும் வளம்புகலி மன்னர்பாத முளநடுங்கிப் பணிந்துதிரு நீலகண்டப் பெரும்பாண ருணர்த்துகின்றார்.

அலகிறிருப் பதிகவிசை யளவுபடா வகையிவர்க ளன்றியேயு, முலகிலுளோ ருந்தெரிந்தங் குண்மையினை யறிந்துய்ய வுணர்த்தும்பண்பாற், பலர்புகழுந் திருப்பதிகம் பாடியரு ளப்பெற்றாற் பண்புநீடி,யில்குமிசை யாழின்க ணடங்காமை யான்காட்டப் பெறுவனென்றார். (சசசு)

வேதநெறி வளர்ப்பவரும் விடையவர்முன் றொழுதுதிருப் பதிகத் துண்மை, பூதலத்தோர் கண்டத்துங் ०கலத்தினிலு நிலத்துநூல் புகன்றவேத, நாதவிசை முயற்சிகளா லடங்காத வகைகாட்ட நாட்டுகின்றார், மாதர்மடப் பிடிபாடி வணங்கினார் வானவரும் வணங்கியேத்த. (சசஎ)

---

திருயாழ்மூரி.

திருத்தருமபுரம்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மாதர்மடப்பிடியும் மட வன்னமுமன்னதோர் நடையுடைம் மலைமகள் துணையெனமகிழ்வர், பூதவினப்படைநின் றிசை பாடவுமா டுவர்படர் சடைநெடும் முடியதோர்புனலர்,வேதமோடேழிசைபா டுவ ராழ்கட

---

० கலம் - யாழ்.

ல்வெண் டிரையிரை நுரைகரை பொருதுவிம்மி நின்றயலே,தாதவிழ்புன்னைதயங்கும் மலர்ச்சிறைவண்டறை யெழில்பொழில் குயில்பயி றருமபுரம்பதியே.

பொன்னெடுநன்மணிமாளிகை சூழவிழவம்மலி பொருபுன றிருவமர் புகலியென்றுலகிற், றன்னெடுநேர்பிறவில்பதி ஞானசம்பந்த னவைதுசெந்தமிழ் தடங்கடற் றருமபுரம்பதியைப், பின்னெடுவார்சடையிற் பிறையும்மர வும்முடை யவன்பிணை துணைகழல் பேணுதலுரியா, ரன்னெடு நல்லுல கெய்துவரெய்தியபோ கமும்முறு வர்களிடர் பிணிதுயரணைவிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-யாழ்மூரிநாதேசுவரர். தேவியார்-சதாமதுராம்பிகை.

திருப்பதிகம்—க.

---

வண்புகலி வேதியனார் மாதர்மடப் பிடியெடுத்து வளப்பிற்பாடிப், பண்பயிலுந் திருக்கடைக்காப் புச்சாத்த வணைந்துபெரும் பாணனார்தா, நண்புடையாழ்க் கருவியினின் முன்புபோற் கைக்கொண்டு நடத்தப்புக்கார்க்,கெண்பெருகுமப்பதிகத் திசைநரம்பி லிடவடங்கிற் றில்லையன்றே.

அப்பொழுது திருநீல கண்டவிசைப் பெரும்பாண ரதனைவிட்டு, மெய்ப்பயமும் பரிவுமுறப் பிள்ளையார் கழலிணைவீழ்ந் தெழுந்துநோக்கி, யிப்பெரியோ ரருள்செய்த திருப்பதிகத் திசையாழி லேற்பேனென்னச், செப்பியதிக்கருவியைநான் றொடுதலினன் றேவென்றுதெளிந்துசெய்வார்.

விக்குநரம் புடையாழி னல்விளைந்த திதுவென்றங் கதனைப்போக்க
வோக்குதலுந் தடுத்தருளி யையரே யுற்றவிசை யளவினானீ
ராக்கியவிக் கருவியினைத் தாருமென வாங்கிக்கொண் டவனிசெய்த
பாக்கியத்தின் மெய்வடிவாம் பாலறு வாயர்பணித் தருளுகின்றார். ()

ஐயர்நீர் யாழிதனை முரிக்குமதெ னுளுடையா ளுடனேகூடச்
செய்யசடை யாரளித்த திருவருளின் பெருமையெலாந் தெளியநம்பா
லெய்தியவிக் கருவியினி லளவுபடு மோநந்த மியல்புக்கேற்ப
வையகத்தோ ரறிவுறவிக் கருவியள வையினியற்றல் வழக்கேயென்றார்.

சிந்தையா லளவுபடா விசைப்பெருமை செயலளவி லெய்துமோநீர்,இந்தயா ழினைக்கொண்டே யிறைவர்திருப் பதிகவிசை யிதனிலெய்த, வந்தவா றேபாடி வாசிப்பீ ரெனக்கொடுப்பப் புகலிமன்னர், தந்தயாழினைத்தொழுது கைக்கொண்டு பெரும்பாணர் தலைமேற்கொண்டார். ()

அணைவுறுமக் கிளைஞருடன் பெரும்பாண ராளுடைய பிள்ளையார்தந்
துணைமலர்ச்சேவடிபணிந்து துதித்தருளத் தோணிபுரத் தோன்றலாரும்
இணையில்பெருஞ் சிறப்பருளித் தொண்டருட னப்பதியி லினிதுமேவிப்
பணைநெடுங்கை மதயானை யுரித்தவர்தம் பதிபிறவும் பணியச்செல்வார்.()

பங்கயப்பா சடைத்தடஞ்சூழ் பழனநாட் டகன்பதிகள் பலவுநண்ணி, மங்கையொரு பாகத்தார் மகிழ்கோயி லனைப்பலவும் வணங்கிப் போற்றித், தங்கிசையாழ்ப் பெரும்பாண ருடன்மறையோர் தலைவனார் சென்றுசார்ந்தார், செங்கைமான் மழுவேந்துஞ் சினவிடையா ரமர்ந்தருளுந் திருநள்ளாறு. (௬௯௪)

நள்ளாற்றி லெழுந்தருள நம்பர்திருத் தொண்டர்குழா நயந்துசென்று, கொள்ளாற்றி லெதிர்கொண்டு குலவியுடன் சூழ்ந்தணையக் குறுகிக்கங்கைத்,தெள்ளாற்று வேணியர்தந் திருவளர்கோ புரமிறைஞ்சிச் செல்வக்கோயில்,உள்ளாற்ற வலங்கொண்டு திருமுன்பு தாழ்ந்தெழுந்தாருணர்வின் மிக்கார். (௬௯௫)

உருகியவன் புறுகாத லுள்ளுருகி நனையீரம் பெற்றாற்போல
மருவுதிரு மேனியெலா முகிழ்த்தெழுந்த மயிர்ப்புளகம் வளர்க்குநீரா
யருவிசொரி திருநயனத் தானந்த வெள்ளமிழிந் தலையநின்று
பொருவில்பதி கம்போக மார்த்தபூண் முலையாளென் றெடுத்துப்போற்றி

திருநள்ளாறு-பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்த பூண்முலையா டன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
யாகமார்த்த தோலுடையான் கோவண வாடையின்மே
னாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே.

தண்புனலும் வெண்பிறையுந் தாங் கியசடைய
னண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தனல்ல
பண்புநள்ளா றேத்தும் பாடல்பத்து மிவைவல்லா
ருண்புநீங்கி வானவரோ டுலகி லுறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தெர்ப்பாரண்ணியேசுவரர்.
தேவியார்-போகமார்த்தபூண்முலைநாயகி. திருப்பதிகம்—எ.

யாணரம்பி லாரவிய விசைகூடப் பாடியே யெண்ணில்கற்பச்
சேணளவு படவோங்குந் திருக்கடைக்காப் புச்சாற்றிச் செங்கணாகப்
பூணகலத் தவர்பாதம் போற்றிசைத்துப் புறத்தணைந்து புவனமேத்தும்
பாணனார் யாழிலிடப் பாலறு வாயரருள் பணித்தபோது. (௬௯௭)

பிள்ளையார் திருத்தாளங் கொடுபாடப் பின்புபெரும் பாணனார்தாந்
தெள்ளமுத வின்னிசையின் றேம்பொழிதந் திரியாழைச் சிறக்கவீக்கிக்
கொள்ளவிடும் பொழுதின்கட் குவலயத்தோர் களிகூரக் குலவுசண்டை
வள்ளலார் திருவுள்ள மகிழ்ந்துதிருத் தொண்டருடன் மருவுங்காலை. ( )

மன்னுதிரு நள்ளாற்று மருந்தைவணங் கிப்போந்து வாசநன்னீர்ப், பொன்னிவளந் தருநாட்டுப் புறம்பணைசூழ் திருப்பதிகள் பலவும்போற் றிச், செங்நெல்வயற் செங்கமல முகமலருந் திருச்சாத்த மங்கையூதூர், தன்னிலெழுந் தருளினார் சைவசிகா மணியார்மெய்த் தவத்தோர்சூழ. ()

நிறைசெல்வத் திருச்சாத்த மங்கையினி னீலநக்கர் தாமுஞ்சைவ, மறையவனா ரெழுந்தருளும் படிகேட்டு வாழ்ந்துவழி விளக்கிபெங்குந், துறைமலிதோ ரணங்கதலி கமுகுநிறை குடந்தூப தீபமாக்கி,முறைமை யில்வந் தெதிர்கொள்ள வுடனணைந்து முதல்வனார் கோயில்சார்ந்தார். ()

அயவந்தி யமர்ந்தருளு மங்கணர்தங் கோயின்மருங் கணைந்துவானோ ருயவந்தித்தெழுந்துமுன் றில் புடைவலங்கொண்டுட்புக்காரொழுகுஞ்செ மயவந்தி மதிச்சடையார் முன்றாழ்ந்து மாதவமிவ் வையமெல்லாஞ் [க்கர் செயவந்த வந்தணனார் செங்கைமேற் குவித்தெழுந்து திருமுன்னின்றார்.

போற்றிசைக்கும் பாடலினாற் பொங்கியெழு மாதரவு பொழிந்துவிம்ம வேற்றின்மிசையிருப்பவர்தம் மெதிர்நின்றுதிளைத்துப்போந் தெல்லையில்லா நீற்றுநெறி மறையவர்தா நீலநக்கர் மனையிலெழுந் தருளியன்பா லாற்றும்விருந் தவாமைப்ப வன்பருட னின்புற்றங் கமுதுசெய்தார். ()

நீடுதிருநீலநக்கர் நெடுமனையில் விருந்தமுது செய்துநீர்மைப் பாடும்யாழ்ப் பெரும்பாண ருந்தங்க வங்கிரவு பள்ளிமேவி யாடுமவ ரயவந்தி பணிவதனுக் கன்பருட னணைந்துசென்று நாடியநண் புடைநீல நக்கடிக ளுடனாதர் கழலிற்றாழ்ந்து. (௬௯௫)

கோதிலா வாரமுதைக் கோமளக்கொம் புடன்கூடக் கும்பிட்டேத்தி யாதியா மறைப்பொருளா வருந்தமிழின் றிருப்பதிக மருளிச்செய்வார் நீதியாய் நிகழ்கின்ற நீலநக்கர் தம்பெருஞ்சீர் நிகழவைத்துப் பூதிசா தனர்பரவும் புனிதவிய லிசைப்பதிகம் போற்றிசெய்தார். ()

திருச்சாத்தமங்கை-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

திருமலர்க் கொன்றைமாலை திளைக்குமதி சென்னிவைத்தீ
ரிருமலர்க் கண்ணிதன்னோ டுடனாவது மேற்பதொன்றே
பெருமலர்ச் சோலைமேக முரிஞ்சும்பெருஞ் சாத்தமங்கை
யருமல ராதிமூர்த்தி யயவந்தி யமர்ந்தவனே.

மறையினார் மல்குகாழித் தமிழ்ஞானசம் பந்தன்மன்னு
நிறையினார் நீலநக்கன் னெடுமாநக ரென்றுதொண்ட
ரறையுமூர் சாத்தமங்கை யயவந்திமே லாய்ந்தபத்து
முறைமையா லேத்தவல்லா ரிமையோரிலு முந்துவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அயவந்திசுவரர். தேவியார்-இருமலர்க்கண்ணம்மை.

திருப்பதிகம்—க.

பரவியகா தலிற்பணிந்து பாலரு வாயர்புறத் தணைந்துபண்பு
விரவியகண் புடையடிகள் விருப்புறுகா தலிற்றங்கி மேவுநாளி
லரவணிந்தார் பதிபிறவும் பணியவெழு மாதரவா லணைந்துசெல்வா
ருரவுமனக் கருத்தொன்று முள்ளமுடை யவர்க்குவிடை யுவந்துநல்கி.

வேறு.

மற்றவர்தம் பெருங்கேண்மை மகிழ்ந்துகொண்டு மாலயனுக் கரிய
பிரான் மருவுதானம், பற்பலவுஞ் சென்றுபணிந் தேத்திப்பாடிப் பரமர்
திருத் தொண்டர்குழாம் பாங்கிளெய்தக், கற்றவர்வாழ் கடனாகைக் கா
ரோணத்துக் கண்ணுதலைக் கைதொழுது கலந்தவோசைச், சொற்றமிழ்
மாலைகள்பாடிச் சிலநாள்வைகித் தொழுதகன்றூர் தோணிபுரத் தோன்ற
லார்தாம். (ருகூகூ)

---

திருநாகைக்காரோணம்-பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

கூனற்றிங்கட் குறுங்கண்ணிகான்ற நெடுவெண்ணிலா
வேனற்பூத்தம ராங்கோதையோடும் விரவுஞ்சடை
வானநாட னமரர்பெருமாற் கிடமாவது
கானல்வேலிக் கடல்சூழ்கடனாகைக் காரோணமே.

மல்குதண்பூம் புனல்வாய்ந்தொழுகும் வயற்காழியா
னல்லகேள்வித்தமிழ் ஞானசம்பந்த னல்லார்கண்முன்
வல்லவாறேபுனைந் தேத்துகாரோணத் துவண்டமிழ்
சொல்லுவார்க்கும்மிவை கேட்பவர்க்குந் துயரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - காயாரோகணேசுவரர். தேவியார் - நீலாயதாட்சி.
தமிழ்ப்பெயர்-கருந்தடங்கண்ணம்மை. திருப்பதிகம்—எ.

---

சத்தவிடங்கத்திலொருதலம்-அதாவது-தியாகர்தலம்.

கழிக்கானன் மருங்கணையுங் கடனாகை யதுநீங்கிக் கங்கையாற்றுச்
சுழிக்கானல் வேணியர்தம் பதிபலவும் பரவிப்போய்த் தோகைமார்தம்
விழிக்காவி மலர்பழனக் கீழ்வேளூர் விமலர்கழல் வணங்கியேத்தி
மொழிக்காதற் றமிழ்மாலை புனைந்தருளி யங்ககன்றூர் மூதூர்நின்றும்.

---

திருக்கீழ்வேளூர்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னுலாவிய சடையினர் விடையினர் மிளிர்தரு மாவோடும்
பன்னுலாவிய மறையொலி நாவினர் கறையணி கண்டத்தர்
பொன்னுலாவிய கொன்றையந் தாரினர் புகழ்மிகு கீழ்வேளூ
ருன்னுலாவிய சிந்தையர் மேல்வினை யோடிட வீடாமே.

குருண்டவார்குழற் சடையுடைக் குழகனை யழகமர் கீழ்வேளூர்
திரண்டமாமறை யவர்தொழும் பெருந்திருக் கோயிலெம் பெருமானை
யிருண்டமேதியி னினமிகு வயல்மல்கு புகலிமன் சம்பந்தன்
தெருண்டபாடல்வல் லாரவர் சிவகதி பெறுவது திடமாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அக்ஷயலிங்கேசுவரர். தேவியார் - வனமுலைநாயகியம்மை.

திருப்பதிகம்—உ.

---

அருகணையுந் திருப்பதிக ளானவெலா மங்கணைப் பணிந்து போற்றிப் பெருகியஞா னம்பெற்ற பிள்ளையா ரெழுந்தருளும் பெருமை கேட்டுத் திருமருவு செங்காட்டங் குடிநின்று சிறுத்தொண்ட ரோடிச்சென் றங் குருகுமனங் களிசிறப்ப வெதிர்கொண்டு தம்பதியுட் கொண்டுபுக்கார்.()

சிறுத்தொண்ட ருடன்கூடச் செங்காட்டங் குடியிலெழுந் தருளிச் சீர்த்தி, நிறுத்தெண்டிக் கிலுநிலவுந் தொண்டரவர் நண்பமர்ந்து நீலக ண்டம், பொறுத்தண்ட ருயக்கொண்டார் கணபதீச் சரத்தின்கட் போக மெல்லாம், வெறுத்துண்டிப் பிச்சைநுகர் மெய்த்தொண்ட ருடனணைந் தார் வேதகீதர். (சகூகூ)

அங்கணைந்து கோயில்வலங் கொண்டருளி யரவணிந்தா ரடிக்கீழ் வீழ்ந்து, செங்கணரு விகள்பொழியத் திருமுன்பு பணிந்தெழுந்து செங் கைகூப்பித், தங்கள்பெருந் தகையாரைச் சிறுத்தொண்டர் தொழவிரு ந்த தன்மைபோற்றிப், பொங்கியெழு மிசைபாடிப் போற்றிசைத்தங் கொருபரிசு புறம்புபோந்தார். (சஎ0)

---

திருச்செங்காட்டங்குடி-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே.

செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்ட னவன்வேண்ட
வந்தண்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவுஞ்
சந்தங்கொள் சம்பந்தன் றமிழுரைப்போர் தக்கோரே.

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலத்தில் - ஆலயத்துக்குக் - கணபதீச்சரமென்றுபெயர்.

சுவாமிபெயர்-கணபதீசுவரர். தேவியார்-திருக்குழல்நாயகி.

திருப்பதிகம்—ங.

---

போந்துமா மாத்திரர் தம் போரேற்றின் றிருமனையிற் புகுந்துசிந்தை
வாய்ந்தமா தவரவர்தா மகிழ்ந்தருள வமர்ந்தருளி மதில்கண்மூன்றுங்
காய்ந்தமால் விடையார்தங் கணபதீச் சரம்பரவு காதல்கூர
வேந்துநூ லணிமார்ப ரின்புற்றங் கன்பருட னிருந்தநாளில். (சஎக)

திருமருக னகரின்க ணெழுந்தருளித் திங்களுடன் செங்கட்பாம்பு, மருவுநெடுஞ் சடைமவுலி மாணிக்க வண்ணர்கழல் வணங்கிப்போற்றி, யுருகியவன் புறுகாத லுள்ளலைப்பத் தெள்ளுமிசை யுடனேகூடப், பெருகுதமிழ்த் தொடைசாத்தி யங்கிருந்தார் பெரும்புகலிப் பிள்ளையார்தாம்.

வேறு.

அந்நாளி லொருவணிகன் 0 பதிகனாகி யன்னவனோர் கன்னியையு முடனேகொண்டு,பொன்னார்மே ருச்சிலையார் கோயின்மாடு புறத்திலொரு மடத்திரவு துயிலும்போது, மின்னார்வெள் ளெயிற்றரவு கவ்வுதலுங் கிளர்ந்த விடவேகங் கடிதுதலை மீக்கொண்டேறத்,தன்னாவி நீங்குமவன் றன்மைகண்டு சாயலிளங் கன்னிகலை தளர்ந்து சோர்வாள். (சஎங)

வாளரவு தீண்டவுந்தான் றீண்டகில்லாண் மறுமாற்ற மற்றொருவர் கொடுப்பாரின்றி, யாளரியே றனையானை யணுகவீழ்ந்தே யசைந்தமலர்க் கொடிபோல்வா ளரற்றும்போது, கோளுருமும் புள்ளரசு மனையாரெல் லாக் கொள்கையினு லுந்தீர்க்கக் குறையாதாக,நீளிரவு புலர்காலை மாலை வாச நெறிகுழலா ணெடிதயர்ந்து புலம்புகின்றாள். (சஎச)

அன்னையையுமத்தனையும் பிரிந்துநின்னை யடைவாக வுடன்போந்தே னரவால்வீடி, யென்னையும்விட் டிங்ககன்ற யானென்செய்கே னிவ்விடுக் கண் டீர்க்கின்றார் யாருமில்லை, மன்னியசீர் வணிகர்குல மணியேயானும் வாழேனென்றென்றயர்வாண் மதியினாலே,சென்னியிளம் பிறையணிவார் கோயில்வாயிற் றிசைநோக்கித் தொழுதழுதாள் செயலொன்றில்லாள்.()

அடியாரா மிமையவர்தங் கூட்டமுய்ய வலைகடல்வாய் நஞ்சுண்ட வமுதேசெங்க, ணெடியானு நான்முகனுங் காணக்கோல நீலவிட வரவணிந்த நிமலாவெந்து,பொடியான காமனுயி ரிரதிவேண்டப் புரிந்தளித்த புண்ணியனே பொங்கர்வாசக், கடியாரு மலர்ச்சோலை மருங்குசூழுங் கவின்மருகற் பெருமானே காவாயென்றும். (சஎகூ)

வந்தடைந்த சிறுமறையோ னுயிர்மேற்சீறி வருங்காலன் பெருங்கால வலயம்போலுஞ், செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரியகோலஞ் சிதைந்துருள வுதைத்தருளுஞ் செய்யதாளா, யிந்தவிடக் கொடுவேக நீங்குமாறும் யானிடுக்கட்குழிநின்று மேறுமாறு மந்திமதிக் குழவிவளர் செய்யவேணி யணிமருகற் பெருமானே யருளாயென்றும். (சஎஎ)

இத்தன்மை சிவனருளே சிந்தித்தேங்கு மிளங்கொடிபோ னுடங்கு மிடை யேழையேத்து, மத்தன்மை யோசையெழுந் தெங்கள்சண்பை

0 பதிகன் என்பது-வழிச்செல்வோன்.

யாண்டகையார் கும்பிடவந் தணைகின்றார்தம், மெய்த்தன்மை விளங்கு திருச்செவியிற்சார மேவுதலுந்திருவுள்ளக் கருணைமேன்மேல், வைத்தன் னமெனவயர்வாண் மாடநீடு மாதவத்தோர்சூழவெழுந் தருளிவந்தார். ()

சிரபுரத்துமறையவனார் சென்றுநின்று சிவபெருமா னருள்போற்றிச் சிந்தைநைந்து, பரிவுறுவா டனைநோக்கிப் பயப்படேனீ பருவரலு நும்ப ரிசும் பகர்வாயென்னக், கரமலர்க ளுச்சியின்மேற் குவித்துக்கொண்டு கண்ணருவி சொரிந்திழியக் காழிவேதப்,புரவலனார் சேவடிக்கீழ் வீழ்ந்து தாங்கள் போந்ததுவும் புகுந்ததுவும் புகலலுற்றாள். (சஎக)

வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன் றாமனெந்தை மருமகன்மற் றிவனவற்கு மகளிர்நல்ல, விளம்பிடியா ரோரெழுவ ரவரின்மூத்தா ளிவ னுக்கென் றுரைசெய்தே யேதிலானுக், குளம்பெருகத் தனம்பெற்றுக் கொடுத்தபின்னு மோரொருவராகவெனை யொழியவிந்தான்,றளர்ந்தழியு மிவனுக்காத்தகவுசெய்தங் கவரைமறைத்திவனையே சார்ந்துபோந்தேன்.

மற்றிவனும் வாளரவந் தீண்டமாண்டான் மறிகடலிற் கலங்கவிழ்த்தார் போலநின்றேன், சுற்றத்தா ரெனவந்து தோன்றியென்பாற் றுய ரெலா நீங்கவருள் செய்தீரென்னக், கற்றவர்கள் தொழுதேத்துங் காழி வேந்தர் கருணையினாற் காரிகையா டனக்குநல்கப், பற்றியவா ளரவுவிடந் தீருமாறு பணைமருகற் பெருமானைப் பாடலுற்றார். (சஅக)

சடையானையெவ்வுயிர்க்குந் தாயானானைச் சங்கரனைச்சசிகண்ட மவு லியானை,விடையானை வேதியனை வெண்ணீற்றானை விரவாதார் புரமூன்று மெரியச்செற்ற, படையானைப் பங்கயத்து மேவினானும் பாம்பணையிற் றுயின்றவனும் பரவுங்கோல, முடையானை யுடையானே தகுமோவிந்த வொள்ளிழையா ளுண்மெலிவென் றெடுத்துப்பாட. (சஅஉ)

---

திருமருகல்விஷந்தீர்த்த-திருப்பதிகம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமான்
மடையார் குவளை மலரும் மருக
லுடையாய் தகுமோ விவளுண் மெலிவே.

வயஞானம் வல்லார் மருகற் பெருமா
னுயர்ஞான முணர்ந் தடியுள் குதலா
லியல்ஞான சம்பந் தனபாடல் வல்லார்
வியன்ஞால மெல்லாம் விளங்கும் புகழே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாணிக்கவண்ணமயேசுவரர். தேவியார்-வண்டுவார்குழலியம்மை.

திருப்பதிகம்—ரு.

பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றுன்சூழ்ந்த பொருவிறுத் தொண்டர்குழாம் பொலியவார்ப்ப, வங்கையினை யுச்சியின்மேற் குவித் துக்கொண்டங் கருட்காழிப் பிள்ளையா ரடியில்வீழ்ந்த,நங்கையவ ளனை யந்த நம்பியோடு நானிலத்தி லின்புற்று வாழும்வண்ண, மங்குறவழ் சோலைமலி புகலிவேந்தர் மணம்புணரும் பெருவாழ்வு வகுத்துவிட்டார்.

மற்றவர்க்கு விடைகொடுத்தங் கமருநாளின் மருகனக ரினில்வந்து வலியபாசஞ், செற்றபுகழ்ச் சிறுத்தொண்டர் வேண்டமீண்டுஞ் செங்கா ட்டங் குடியிலெழுந் தருளவேண்டிப், பற்றியெழுங் காதன்மிக மேன் மேற்சென்று பரமனூர் திறத்துன்னிப் பாங்கரெங்குஞ், சுற்றுமருந் தவ ரோடுங் கோயிலெய்திச் சுடர்மழுவாண் டவர்பாதந் தொழுவான்புக்கார்.

புக்கிறைஞ்சி யெதிர்நின்று போற்றுகின்றூர் பொங்குதிரை நதிப்பு னலும் பிறையுஞ்சேர்ந்த, செக்கர்முடிச் சடைமவுலி வெண்ணீற்றூர்தந் திருமேனி யொருபாகம் பசுமையாக, மைக்குலவு கண்டத்தர் மருகற் கோயின் மன்னுநிலை மனங்கொண்டு வணங்குவார்முன், கைக்கனலார் கணபதீச் சரத்தின்மேவுங் காட்சிகொடுத் தருளுவான்காட்டக்கண்டார்.

வேறு.

மருகலமர்ந்து நிறைந்தகோல மல்குசெங்காட்டங் குடியின்மன்னிப்
பெருகுகணபதி யீச்சரத்தாற் பீடுடைக்கோலமே யாகித்தோன்ற
வுருகியகாதலு மீதுபொங்க வுலகர்முன்கொள்ளு முணர்வுநீட
வருவிகண்வார்வுறப் பாடலுற்று ரங்கமும்வேதமு மென்றெடுத்து. ()

திருச்செங்காட்டங்குடியும்-திருமருகலும்-வினுவுரை.

பண் - நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

அங்கமும்வேதமு மோதுநாவ ரந்தணர்நாளு மடிபரவ
மங்குன்மதிதவழ் மாடவீதி மருகனிலாவிய மைந்தசொல்லாய்
செங்கயலார்புனற் செல்வமல்கு சீர்கொள்செங்காட்டங் குடியதனுட்
கங்குல்விளங்கெரி யெல்லியாடுங் கணபதியீச்சரங் காமுறவே.

நாலுகுலைக்கமு கோங்குகாழி ஞானசம்பந்த னலந்திகழு
மாலின்மதிதவழ் மாடமோங்கு மருகலின்மற்றதன் மேன்மொழிந்த
சேலுங்கயலுந் திளைத்தகண்ணூர் சீர்கொள்செங்காட்டங் குடியதனுட்
சூலம்வல்லான்கழ லோதுபாடல் சொல்லவல்லார்வினை யில்லையாமே.

திருச்சிற்றம்பலம்.

---

கண்டிபோற்றி வினவிப்பாடிக் கணபதியீச்சரங் காதலித்த
வண்டர்பிரானை வணங்கிவைகு மப்பதியிற்சில நாள்கள்போற்றித்
தொண்டருடனருள் பெற்றுமற்றத் தொல்லைத்திருப்பதி யெல்லைநீங்கிப்
புண்டரிகத்தடஞ் சூழ்பழனப் பூம்புகலூர்தொழப் போதுகின்றூர். ()

சீரின்மலர்ந்த சிறப்பின்மேவுஞ் சிறுத்தொண்டர் நண்புடன் செல்ல நல்ல, வேறிநறுந்தொங்கன் மற்றவரும் விடையருளப்பெற்று மீண்டபி ன்பு, நீரின்மலிந்த சடையர்மேவி நிகழும்பதிகள் பலபணிந்து, பாரின்ம லிந்து நிறைந்தசெல்வம் பயில்புகலூர்நகர்ப் பாங்கணைந்தார். (சஅஅ)

திருப்புகலூர்த்திருத் தொண்டரோடுஞ் செம்மைமுருகனர் மெய்ம கிழ்ந்த, விருப்பொடு சென்றெதிர் கொள்ளவந்து வேதமுதல்வர்தங் கோ யிலெய்திப், பொருப்புறழுகோபுரத் துட்புகுந்து பூமலிமுன்றில் புடை வலங்கொண், டொருப்படுசிந்தையொ டுள்ளணைந்தா ரோதாதுஞான மெலாமுணர்ந்தார். (சஅகூ)

புக்கெதிர்தாழ்ந்து விழுந்தெழுந்து பூம்புகலூர்மன்னு புண்ணியனை நெக்குருகுஞ்சிந்தை யன்புபொங்க நிறைமலர்க்கண்ணீ ரருவிசெய்ய மிக்கதமிழ்த்தொடை மாலைசாத்தி மேவியவேழிசை பாடிப்போந்து திக்குநிறைசீர் முருகர்முன்பு செல்லவவர்மடஞ் சென்றுபுக்கார். ()

---

திருப்புகலூர்-பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

வாழ்ந்தநாளும் மினிவாழுநாளும் மிவையறிதிரேல்
வீழ்ந்தநாளெம் பெருமானையேத்தா விரகில்லிகாள்
போழ்ந்ததிங்கட் புரிசடையினன்றன் புகலூரையே
சூழ்ந்தவுள்ளம் முடையீர்களுங்க டுயர்தீருமே.

புந்தியார்ந்த பெரியோர்களேத்தும் புகலூரதனுள்
வெந்தசாம்பற் பொடிபூசவல்லவ் விடையூர்தியை
யந்தமில்லா வனலாடலானை யணிஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாடியாடக் கெடும்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆங்கவர்போற்றுஞ் சிறப்பின்மேவி யப்பதிதன்னி லமருநாளில்,வா ங்குமலைச்சிலை யார்மகிழ்ந்த வர்த்தமானீச்சரந் தான்வணங்கி, யோங்கிய வன்பின் முருகனார்தம் முயர்திருத் தொண்டு சிறப்பித்தோங்கும், பாங் குடைவண்டமிழ் பாடிநாளும் பரமர்தம்பாதம் பணிந்திருந்தார். (சகூக)

---

திருப்புகலூர்-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

ஈசனேறமர்கடவு ளின்னமுதெந்தை யெம்பெருமான்
பூசுமாசில் வெண்ணீறர் பொலிவிடைப்பூம் புகலூரின்
மூசுவண் டறைகொன்றை முருகன்முப்போது செயமுடிமேல்
வாசமா மலருடையார் வர்த்தமானீச் சரத்தாரே.

பொங்குதண் புனல்சூழ்ந்து போதணிபொழிற் புகலூரின்
மங்குன்மா மதிதவழும் வர்த்தமானீச் சரத்தாரைத்
தங்குசீர்த் தமிழ்ஞான சம்பந்தன்றண் டமிழ்பத்து
மெங்குமேத்த வல்லார்க ளெய்துவரிமை யவருலகே.

திருச்சிற்றம்பலம்.

---

மற்றத்திருப்பதி வைகுநாளில் வாக்கின்பெருவிறன் மன்னனார்தாம், புற்றிடங்கொண்டாரை வந்திறைஞ்சிப் பொன்மதிலாரூர்ப் புகழ்ந்து போற்றிச், சிற்றிடைப் பொற்றொடிப் பங்கர்தங்கும் திருப்புகலூர்தொழச் சிந்தைசெய்து, கொற்றவனாரருள் பெற்றதொண்டர் குழாத்தினுடனவ்வூர் குறுகவந்தார். (சகூஉ)

நாவுக்கரச ரெழுந்தருளு நல்லதிருவார்த்தை கேட்டபோதே,சேவிற்றிகழ்ந்தவர் மைந்தரான திருஞானசம்பந்தர் சிந்தையன்பு, மேவுற்ற காதன் மிகப்பெருக விரைந்தெதிர்கொள்ளமெய் யன்பரோடும், பூவிற் பொலிபொய்கை சூழ்புகலூர்ப் புறம்பணையெல்லை கடந்துபோந்தார். ()

அங்கணராரூர் வணங்கிப்போந்த வரைசுமெதிர்வந் தணையவாசம்
பொங்குபுனற்றண் புகலிவந்த பூசுரர்சிங்கமும் பொற்பினெய்தித்
தங்களிலன்பின் முறைமையாலே தாழ்ந்துவணங்கித் தனித்தனியே
மங்கலமாகிய நல்வரவின் வாய்மைவிளம்பி மகிழும்போது. (சகூச)

மெய்த்திருஞானசம் பந்தர்வாக்கின் வேந்தரைநோக்கி விருப்பினாலே,யப்பரையிங்கணை யப்பெரும்பே ரருளுடையோம்யாமு மந்தணாரூ, ரெப்பரிசாற்றொழு துய்ந்ததென்று வினவிடவீறில் பெருந்தவத்தோர், செப்பியவண்டமிழ் மாலையாலே திருவாதிரைநிகழ் செல்வஞ்சொன்னார்.

அரசருளிச்செய்த வாய்மைகேட்ட வப்பொழுதேயருள் ஞானமுண்ட,சிரபுரவேந்தருஞ் சிந்தையின்கட் டென்றிருவாரூர் வணங்குதற்கு, விரவியகாதலிற் சென்றுபோற்றி மீண்டும்வந்தும்முடன் மேவுவனென், றரவுகட்றகன் மிதப்பின்வந்தார்க் குரைத்துடம்பாடுகொண் டொல்லைப்போந்தார். (சகூரு)

சொற்பெருவேந்தருந் தோணிமூதூர்த் தோன்றல்பின்காத றொட்ரத்தாழும், பொற்புகலூர்தொழச் சென்றணைந்தார் புகலிப்பிரானும் புரிந்தசிந்தை, விற்குடிவீரட்டஞ் சென்றுமேவி விடையவர்பாதம் பணிந்துபோற்றிப், பற்பலவாயிரந் தொண்டரோடும் பாடலனுன்மறை பாடிப்போந்தார். (சகூள)

---

திருவாரூர்-பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பாட்டலனுள் மறையன்படி பட்டகோலத் தன்றிங்கள்
சூட்டலன் மூவிலைய சூலம் வலனேந்தி
கூட்டலர்மூ வெயிலுமெரி யுண்ணக்கூரெரி கொண்டெல்லி
யாட்டல னதிரைய னரூ ரமர்ந்தானே.

நல்லபுனற் புகலித்தமிழ் ஞானசம் பந்தனல்ல
வல்லி மலர்க் கழனி யாரூ ரமர்ந்தானை
வல்லதோ ரிச்சையினல் வழிபாடிவைபத்தும் வாயாரச்
சொல்லுதல் கேட்டல்வல்லார் துன்பந் துடைப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவிற்குடிவீரட்டம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

வடிகொள்மேனியர் வானமாமதியினர் மதுவார்ந்த
கடிகொள்கொன்றைபஞ் சடையினர்கொடியின ருடைபுலியதளார்ப்பர்
விடையதேறுமெம் மானமர்ந்தினிதுறை விற்குடிவீரட்டம்
மடியராகிநின் றேத்தவல்லார்தமை யருவினையடையாவே.

விலங்கலேசிலை யிடமெனவுடையனை விற்குடிவீரட்டத்
திலங்குசோதியை யெம்பெருமான்றனை யெழிறிகழ்கழல்பேணி
நலங்கொள்வாழ்பொழிற் காழியுள்ஞானசம் பந்தனற்றமிழ்மாலை
வலங்கொடேயிசை மொழியுமின்மொழிந்தக்கால் மற்றதுவரமாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வீரட்டானேசுரர். தேவியார்-மைவார்குழலியம்மை.

திருப்பதிகம்—க.

---

சலந்தராசுரனை-வதைத்ததலம்.

துணரிணர்ச்சோலையுஞ் சாலிவேலித் துறைநீர்ப்பழனமுஞ் சூழ்கரு
ம்பின்,மணமலிகானமு ஞானமுண்டார் மருங்குறநோக்கி மகிழ்ந்தருளி,
யணிபவரள்ள லங்கழனியாரூ ரடைவோமெனமொழிந் தன்புபொங்கப்,
புணரிசைச் செந்தமிழ் கொண்டுபோற்றிப் பொன்மதி லாரூர்ப் புறத்த
ணைந்தார். (௪௬௮)

---

திருவாரூர்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

உள்ளமோ ரிச்சையினா லுகந்தேத்தித் தொழுமின் றொண்டீர்மெய்யே
கள்ள மொழிந் திடுமின் கரவா திருபொழுதும்
வெள்ளமோர் வார்சடைமேற் கரந்திட்ட வெள்ளேற் றான்மேய
அள்ளல் கொள்கழனி யாரூ ரடைவோமே.

நல்ல புனற் புகலித் தமிழ் ஞானசம் பந்தனல்ல
வல்லி மலர்க்கழனி யாரூ ரமர்ந்தானை
வல்லதோ ரிச்சையினால் வழிபாடிவை பத்தும் வாய்க்கச்
சொல்லுதல் கேட்டல்வல்லார் துன்பந் துடைப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வானுயர்செங்கதிர் மண்டலத்து மருங்கணையுங்கொடி மன்னுமாரூர், தானொருபொன்னுல கென்னத்தோன்றுந் தயங்கொளிமுன்கண்டு சண்பைவந்த, பானிறநீற்றர் பருக்கையானைப் பதிகத்தமிழிசை பாடிப்பாடித், தேனொடும்வண்டு முரலுஞ்சோலைத் திருப்பதிமற்றத னெல்லைசேர்ந்தார். (சகக)

---

திருவாரூர்-திருவிராகம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பருக்கையானை மத்தகத் தரிக்குலத் துகிர்ப்புகந்
நெருக்கிவாய நித்திலந் நிரக்குநீள் பொருப்பனூர்
கருக்கொள்சோலை சூழநீடு மாடமாளி கைக்கொடி
யருக்கன்மண் டலத்தளாவு மந்தணாரூ ரென்பதே.

வல்லிசோலை சூதநீடு மன்னுவீதி பொன்னுலா
வல்லிமா தமர்ந்திருந்த வந்தணாரூ ராதியை
நல்லசொல்லு ஞானசம் பந்தனாவி னின்னுரை
வல்லதொண்டர் வானமாள வல்லர்வாய்மை யாகவே.

திருச்சிற்றம்பலம்.

---

பொங்கியசிந்தை விருப்பின்வெள்ளம் பொழிந்துபுவிமேற் பொலிவதென்ன, எங்குங்குளிரொளி விசுமுத்தி னிலங்குசிவிகை யிழிந்தருளிச் செங்கைநிறைமலர் கொண்டுதூவித் திருவிருக்குக்குறள் பாடியேத்தித் தங்கள்பிரானரு சாரூமாரூர் தனைப்பணிவுற்றார் தமிழ்விரகர். (ருoo)

---

திருவாரூர்-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சித்தந் தெளிவீர்கா ளத்த னாரூரைப்
பத்தி மலர்தூவ முத்தி யாகுமே.
சீரூர் சம்பந்த னாரூரைச் சொன்ன
பாரூர் பாடலார் பேரா ரின்பமே.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

படியில் ஞானமுண் டருளிய பிள்ளையாரைப் பணிதற்
கடியர் சென்றெதிர் கொளவெழுந் தருளுமஞ்ஞான்று
வடிகொள் சூலத்தர் மன்னிய பொன்மதி லாரூர்க்
கடிகொள் பேரணிப் பொலிவையார் முடிவுறக் காண்பார். (௫0௧)

கான மான்மத களிர்பெறுஞ் சேற்றிடை நறும்பொற்
றூ நறுந்துகள் சொரிதலிற் சுடரொளிப் படலை
யான வீதிக ளடிவலித் தவைகளைந் தலைய
வான மாரியிற் பொழிந்தது மதுமலர் மாரி. (௫0௨)

ஆட னீடுவ துகிற்கொடி யணிகுழற் கொடிக
டோடு சூழ்வன சுரும்பொடு தமனியத் தசும்பு
காடு கொண்டன கதலிதோ ரணநிரைக் கமுகு
மாட மாளிகை மண்டபங் களின்மருங் கெல்லாம். (௫0௩)

மாலைசூழ்புறங் கடைகளின் மணிநிரை விளக்கின்
கோல நீள்சுட ரொளியுடன் கோத்திடை தூக்கு
நீல மாமணி நிழல்பொர நிறம்புகர் படுக்கும்
பால வாயின பவளவே திகைமலர்ப் பந்தர். (௫0௪)

தழை மலர்த்தடஞ் சாலைக டெற்றிகள் சதுக்கங்
குழை முகத்தவ ராடரங் கிமையவர் குழாமும்
விழை சிறப்பின வியலிட மியாவையு மிடைந்து
மழை முழக்கென வியம்பின மங்கல வியங்கள். (௫0௫)

விரவு பேரணி வேறுவே றின்னன விளங்கும்
பிரச மென்மலர்ச் சோலைசூழ் பெருந்திரு வாரூ
ரர சளிப்பவ ரருளினு லடியவர் குழுவும்
பரி சனங்களும் புறத்தணைந் தெதிர்கொளும் பொழுது. (௫0௬)

வந் திறைஞ்சுமெய்த் தொண்டர்தங் குழாத்தெதிர் வணங்கிச்
சந்த முத்தமிழ் விரகராஞ் சண்பையர் தலைவ
ரந்த மாயுல காதியாம் பதிகமங் கெடுத்தே
யெந்தை தானெனை யென்றுகொள் ளுங்கொலென் றிசைத்தார். (௫0௭)

திருவாரூர்-பண்-கவுசிகம்.
திருச்சிற்றம்பலம்.

அந்த மாயுல காதியு மாயினன்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தை யேபுகுந் தான்றிரு வாரூரெம்
எந்தை தானெனை யேன்றுகொ ளுங்கொலோ.

வன்னி கொன்றை மதியொடு கூவிளஞ்
சென்னி வைத்த பிரான்றிரு வாரூரை
மன்னு காழியுள் ஞானசம் பந்தன்வாய்ப்
பன்னு பாடல்வல் லாக்கில்லை பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆன வத்திருப் பதிகமும் பாடிவந் தணையு
ஞான வித்தகர் மெய்த்தவர் சூழவந் நகரார்
தூநறுஞ் சுண்ண மலர்பொரி தூய்த்தொழு தேத்த
வான நாயகர் கோயில்வா யிலின்மருங் கணைந்தார். (ருoஅ)

மன்னு தோரண வாயின்முன் வணங்கியுள் புகுவார்
தன்னு ளெவ்வகைப் பெருமையுந் தாங்கிய தகைத்தாம்
பன் னெடுஞ்சுடர்ப் படலையின் பரப்பினைப் பார்த்துச்
சென்னி தாழ்ந்துதே வாசிர யன்றெரு தெழுந்தார். (ருoகூ)

மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கிக்
கூடு காதலிற் கோபுரம் பணிந்துகை குவித்துத்
தேடு மாலயர்க் கரியராய்ச் செழுமணிப் புற்றி
னீடு வார்முன்பு நிலமுறப் பலமுறை பணிந்தார். (ருகo)

பணிந்து வீழ்ந்தனர் பதைத்தனர் பரப்பியபுளக
மணிந்த மேனியோ டாடினர் பாடின ரறிவிற்
றுணிந்த மெய்ப்பொரு ளானவர் தமைக்கண்டு துதிப்பார்
தணிந்த சிந்தையின் விரைந்தெழு வேட்கையிற் றாழ்ந்தார். (ருகக)

செஞ்சொல் வண்டமிழ்த் திருப்பதி கத்திசை யெடுத்து
நஞ்சு போனக மாக்கியநம்பர்முன் பாடி
மஞ்சு சூழ்திரு மாளிகைவாயிலின் புறம்போந்
தஞ் செழுத்தின்மெய் யுணர்ந்தவர் திருமடத் தணைந்தார். (ருகஉ)

அங்க ணைந்தமர்ந் தருளுவார் ० அரனெறி யமர்ந்த
செங்க ணேற்றவர் சேவடி வணங்கிமுன் றிளைத்துப்
பொங்கு பேரொளிப் புற்றிடங் கொண்டவர் புனிதப்
பங்க யப்பதந் தொழுதுகா லந்தொறும் பணிந்தார். (ருகங)

---

० சுவாமிபெயர்-அகிலேசர். தேவியார்-அகிலேசுவரி.
திருப்பதிகம்—உ.

புற்றி டங்கொளும் புனிதனைப் போற்றிசை பெருகப்
பற்று மன்பொடு பணிந்திசைப் பதிகங்கள் பாடி
நற்ற வத்திருத் தொண்டர்க ளுடனலஞ் சிறக்க
மற்ற வண்பதி தன்னிடை வைகுமந் நாளில். (ருகச)

மல்ல னீடிய வலிவலங் கோளிலி முதலாத்
தொல்லை நான்மறை முதல்வர்தம் பதிபல தொழுதே
யெல்லை யிற்றிருப் பதிகங்க ளாற்பணிந் தேத்தி
யல்ல றீர்ப்பவர் மீண்டுமா ரூர்தொழ வணைந்தார். (ருகரு)

---

திருவலிவலம்-திருவிராகம்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பூவியல் புரிகுழல் வரிசிலை நுகர்நுத
லேவியல் கணைபிணை யெதிர்விழி யுமையவண்
மேவிய திருவுரு வுடையவன் விரைமலர்
மாவியல் பொழில்வலி வலமுறை யிறையே.

மன்னிய வலிவல நகருறை யிறைவனை
யின்னிய கழுமல நகரிறை யெழின்மறை
தன்னியல் கலைவல தமிழ்விர கனதுரை
யுன்னிய வொருபது முயர்பொரு டகுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மனத்துணைநாதேசுவரர். தேவியார்-வாளையங்கண்ணியம்மை.

திருப்பதிகம்—ச.

---

திருக்கோளிலி-பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

நாளான போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
யாளாய வன்புசெய்வோ மடநெஞ்சே யரனாமங்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே.

நம்பனைநல் லடியார்க ளுமுடைமா டென்றிருக்குங்
கொம்பனையாள் பாகனெழிற் கோளிலியெம் பெருமானை
வம்பமருந் தண்காழிச் சம்பந்தன் வண்டமிழ்கொண்
டின்பமர வல்லார்க ளெய்துவர்க ளீசனையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கோளிலியப்பர். தேவியார்-வண்டமர்பூங்குழலம்மை.

திருப்பதிகம்—ச.

---

ஊறு காதலி லொளிவளர் புற்றிடங் கொண்ட
வாறு லாவிய சடைமுடி யையரைப் பணிந்து
நீறு வாழ்வென நிகழ்திருத் தொண்டர்க ளோடு
மீறி லாத்திரு ஞானசம் பந்தரங் கிருந்தார். (ருகசு)

அங்கு நன்மையில் வைகுமந் நாள்சில வகல
நங்க டந்திரு நாவினுக் கரைசரை நயந்து
பொங்கு சீர்ப்புக லூர்தொழ வருளினுற் போவார்
தங்கு மப்பதிப் புறம்பணை சார்ந்தருள் செய்வார். (ருகஎ)

வேறு.

புவனவா ரூரினிற் புறம்புபோந் ததனையே நோக்கிநின்றே
யவமிலா நெஞ்சமே யஞ்சனீ யுய்ப்புமா றறிதியன்றே
சிவனதா ரூர்தொழல் நீமற வாதென்று செங்கைகூப்பிப்
பவனமாய்ச் சோடையா யெனுந்திருப் பதிகமுன் பாடினரே. (ருகஅ)

---

திருவாரூர்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்டவுண்டு
சிவனதாள் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கினுயே
கவனமாய்ப் பாய்வதோ ரேறுகந் தேறிய காளகண்ட
னவனதா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே.

பல்லிதழ் மாதவி யல்லிவண் டியாழ்செயுங் காழியூர
னல்லவே சொல்லிய ஞான சம்பந்த னூரு
ரெல்லியம் போதெரி யாடுமெம் மீசனை யெத்துபாட்டல்
சொல்லவே வல்லவர் தீதில ரோதநீர் வையகத்தே.

திருச்சிற்றம்பலம்.

---

காழியார் வாழவந் தருள்செயுங் கவுணியப் பிள்ளையார்தா
மாழியா னறியொணு வண்ணலா ரூர்பணிந் தரிதுசெல்வார்
பாழிமா லியானையின் னுரிபுனைந் தார்பனை யூர்பணிந்து
வாழிமா மறையிசைப் பதிகமும் பாடியப் பதியில்வைகி. (ருகக)

---

திருப்பனையூர்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

அரவச்சடை மேன்மதிமத்தம்
விரவிப்பொலி கின்றவனூரா
நிரவிப்பல தொண்டர்கணளும்
பரவிப்பொலி யும்பனையூரே.

பாரார்விடை யான்பணியூர்மேற்
சீரார்தமிழ் ஞானசம்பந்த
னாரற்சொன்ன மாலைகள்பத்து
மூரார்வினை வாருயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சவுந்தரேசர். தேவியார்-பெரியநாயகியம்மை.

திருப்பதிகம்—௨.

---

அங்குநின் றரிதெழுந் தருளுவா ரகிலகா ரணமுமானார்
தங்குநற் பதிகளும் பிறபணிந் தருளிவண் டமிழ்புனைந்தே
யெங்குமெய்த் தவர்சூழ மெதிர்கொளத் தொழுதெழுந் தருளிவந்தார்
பொங்குதண் பாசடைப் பங்கயப் புனல்வயற் புகலூர்சார. (௫௨0)

நாவினுக் கரசரு நம்பிசீர் முருகரு மற்றுநாமச்
சேவுகைத் தவர்திருத் தொண்டரா னவர்கண்முன் சென்றுசீதப்
பூவினிற் பொலிபுனற் புகலியார் போதகத் தெதிர்பணிந்தே
மேவுநற் றவருடன் கூடவே விமலர்கோ யிலையடைந்தார். (௫௨௧)

வேறு.

தேவர்தந் தலைவனார் கோயில்புக் கனைவருஞ் சீர்நிலத் துறவணங்கிப்
பாவருந் தமிழிசைப் பதிகமுன் பாடிமுன் பரவுவார் புறம்பணைந்தே
தாவில்சீர் முருகனார் திருமனைக் கெய்தியத் தனிமுதற் றொண்டர்தாமே
யாவையுங் குறைவறுத் திடவமர்ந் தருளுவா ரினிதினங் குறையுநாளில்.()

நீலநக் கடிகளு நிகழ்சிறுத் தொண்டரு முடனணைந் தெய்துநீர்மைச்
சீலமெய்த் தவர்களுங் கூடவே கும்பிடுஞ் செய்கைநேர் நின்றுவாய்மைச்
சாலமிக் குயர்திருத் தொண்டினுண் மைத்திறந் தன்னையே தெளியநாடிக்
காலமுய்த் தவர்களோ டளவளா விக்கலந் தருளினார் காழிநாடர்.(௫௨௩)

கும்பிடுங் கொள்கையிற் குறிகலந் திசையெனும் பதிகமுன் னனபாட
றம்பெருந் தலைமையால் நிலைமைசால் பதியதன் பெருமைசால் புறவிளம்
யும்பரும் பரவுதற் குரியசொற் பிள்ளையா ருள்ளமெய்க் காதல்கூர [பி
நம்பர்தம் பதிகளா யினவெனைப் பலவுமு னண்ணியே தொழநயந்தார்.()

---

திருப்புகலூர்-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

குறி கலந்தவிசை பாடலினனசை யாலிவ் வுலகெல்லா
நெறி கலந்ததொரு சீர்மையனுயெரு தேறும் பலிபேணி
முறி கலந்ததொரு தோலரைமேலுடை யானிட மெய்ம்மலரின்
பொறி கலந்தபொழில் சூழ்ந்தயலேபுய லாரும் புகலூரே. (௫௨௫)

புற்றில்வா ழும்மர வம்மரையார்த்தவன் மேவும் புகலூரைக்
கற்ற நல்லவர் காழியுள்ஞானசம் பந்தன் றமிழ்மாலை
பற்றியென் றும்மிசை பாடியமாந்தர் பரமன் னடிசேர்ந்து
குற்றமின் றிக்குறை பாடொழியாப்புக ழோங்கிப் பொலிவாரே.(ருஉசு)

வேறு.

புள்ளலம்புதண் புனற்புகலூருறை புனிதனாருள்பெற்றுப்
பிள்ளையாருட னவினுக்கரசர்தம் மருங்குவிட்டகலாதே
வள்ளணித்திலச் சிவிகையும்பின்வர வழிக்கொளவுறுங்காலை
யெண்ணில்சீர்த்திரு நாவினுக்கரைசரு மற்றவர்க்கிசைக்கின்றார். (ருஉஎ)

நாயனாருமக் களித்தருள்செய்தவிந் நலங்கிளரொளிமுத்தின்
றூயயானத்தின் மிசையெழுந்தருளுவீ ரென்றலுஞ்சுடர்த்திங்கண்
மேயவேணியா ரருளுமிவ்வாறெனில் விரும்புதொண்டர்களோடு
போயதெங்குநீ ரங்குயான்பின்வரப் போவதென்றருள்செய்தார்.(ருஉஅ)

என்றுபிள்ளையார் மொழிந்தருள்செய்திட விருந்தவத்திறையோரு
நன்றுநீரருள் செய்ததேசெய்வனென் றருள்செய்து நயப்புற்ற
அன்றைநாண்முத லுடன்செலுநாளெலா மவ்வியல்பினிற்செல்வார்
சென்றுமுன்னுறத் திருவம்பரணைந்தனர் செய்தவக்குழாத்தோடும். ()

சண்பைமன்ன்ருந் தம்பிரானருள்வழி நிற்பதுதலைச்செல்வார்
பண்புமேம்படு பனிக்கதிர்நித்திலச் சிவிகையிற்பணிந்தேறி
வண்பெரும்புக லூரிணைக்கடந்துபோய் வரும்பரிசனத்தோடுந்
திண்பெருந்தவ ரணைந்ததெங்கென்றுபோய்த் திருவம்பர்நகர்புக்கார். ()

அம்பர்மாநக ரணைந்துமாகாளத்தி லண்ணலாரமர்கின்ற
செம்பொன்மாமதிற் கோயிலைவலங்கொண்டு திருமுன்புபணிந்தேத்தி
வம்புலாமலர் தூவிமுன்பரவிய வண்டமிழிசைமாலை
யும்பர்வாழநஞ் சுண்டவர்தமைப்பணிந் துருகுமன்பொடுதொழ்ந்தார். ()

திருஅம்பர்மாகாளம்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அடையார் புரமூன்று மனல்வாய் விழவெய்து
மடையார் புனலம்பர் மாகா ளம்மேய
விடையார் கொடியெந்தை வெள்ளைப் பிறைசூடுஞ்
சடையான் கழலேத்தச் சாரா வினைதானே.

வெருநீர் கொளவோங்கு வேணுபுரந் தன்னுட்
டிருமா மறைஞான சம்பந்தன் சேணுர்
பெருமான் மலியம்பர் மாகாளம் பேணி
யுருகா வுரைசெய்வா ருயர்வா னடைவாரே.

திருச்சிற்றம்பலம்

திருஅம்பர்மாகாளம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

படையுளார் விடையினர் பாய்புலித் தோலினர் பாவநாசர்
பொடிகொண்மா மேனியர் பூதமார் படையினர் பூணநூல
ரடிகொள்மா மலரிடு மடியினர் பிடிநடை மங்கையோடு
மடிகளா ரருள்புரிந் திருப்பிட மம்பர்மா காளந்தானே.

செம்பொன்மா மணிகொழித் தெழுதிரை வருபுன லரிசில்சூழ்ந்த
வம்பர்மா காளமே கோயிலா வணங்கினோ டிருந்தகோனைக்
கம்பினூர் நெடுமதிட் காழியுள் ஞானசம் பந்தன்சொன்ன
நம்பிரான் மொழிபவர்க் கில்லையாம் வினைநலம் பெறுவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-காளகண்டேசுவரர். தேவியார்-மாதேவியம்மை.

திருப்பதிகம்—ங.

---

தாழ்ந்துநாவினுக் கரைசுடன்றம்பிரான் கோயின்முன்புறமெய்திச்
சூழ்ந்ததொண்டரோ டப்பதியமர்பவர் சுரநதிமுடிமீது
வீழ்ந்தவேணியார் தமைப்பெறுங் காலங்கள் விருப்பினூற்கும்பிட்டு
வாழ்ந்திருந்தனர் காழியார்வாழவந் தருளியமறைவேந்தர். (ருகூ0)

பொருவிலாதசொற் புல்குபொன்னிறமுதற் பதிகங்களாற்போற்றித்
திருவினூர்ந்தகோச் செங்கணானகர்ச் செய்தகோயிலைச்சேர்ந்து
மருவுவாய்மைவண் டமிழ்மலர்மாலையவ் வளவனைச்சிறப்பித்துப்
பெருகுகாதலிற் பணிந்துமுன்பரவினூர் பேணியவுணர்வோடும். ()

---

திருஅம்பர்மாகாளம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

புல்குபொன்னிறம் புரிசடைநெடுமுடிப் போழிளமதிசூழப்
பில்குதேனுடை நறுமலர்க்கொன்றையும் பிணையல்செய்தவர்மேய
மல்குதண்டுறை யரிசிலின்வருபுனல் வடகரைமாகாள
மல்லுநண்பக லுந்தொழுமடியவர்க் கருவினையடையாவே.

மாறுதன்னொடு மண்மிசையில்லது வருபுனன்மாகாளத்
திறுமாதியு மாகியசோதியை யேறமர்பெருமானை
நாறுபூம்பொழிற் காழியுள்ஞானசம் பந்தன்தமிழ்மாலை
கூறுவாரையுங் கேட்கவல்லாரையுங் குற்றங்கள்குறுகாவே.

திருச்சிற்றம்பலம்.

---

திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில்-பண் -காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மைய கண்மலை மகள்பாக மாயிருள்
கைய தோர்கன லெரிகன லாடுவ
ளைய்நன் பொருப்புன லம்பர்ச் செம்பியன்
செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே.

அழகனா யடிகளை யம்பர் மேவிய
நிழறிகழ் சடைமுடி நீல கண்டனை
யுமிழ்திரை யுலகினி லோது வீர்கொண்மின்
றமிழ்கெழு விரகினன் றமிழ்செய் மாலையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பிரமபுரநாதர். தேவியார்-பவளவன்னப்பூங்குழலம்மை.

திருப்பதிகம்—க.

---

இன்னவாறுசொன் மாலைகளாற்றுதித் திறைஞ்சியங்கமர்நாளிற்
கன்னிமாமதிற் றிருக்கடவூர்தொழக் காதல்செய்தருளிப்போய்
மன்னுகோயில்கள் பிறபதிவணங்கியே வாக்கின்மன்னவரோடு
மங்நெடும்பதி யணைவுறக்கலயரோ டடியவரெதிர்கொண்டார். (ருகஉ)

மற்றவண்பதி யணைந்துவிரட்டத்து மழவிடையார்கோயிற்
சுற்றுமாளிகை வலங்கொண்டுகாலனை யுதைத்துருட்டியசெய்ய
பொற்சிலம்பணி தாமரைவணங்கிமுன் போற்றியுய்ந்தெதிர்நின்று
பற்றறுப்பவர் சடையுடையானெனும் பதிகவின்னிசைபாடி. (ருகச)

---

திருக்கடவூர்-திருவீரட்டானம்-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

சடையுடையானு நெய்யாடலானுஞ் சரிகோவண
வுடையுடையானு மையார்ந்தவொண்கண் ணுமைகேள்வனுங்
கடையுடைநன்னெடு மாடமோங்குங்கட வூரதனில்
விடையுடையண்ணலும் வீரட்டத் தானல்லனே.

வெந்தவெண்ணீறணி வீரட்டா னத்துறை
வெந்தனையந்தணர்தங் கடவூருள்ளானை யணிகாழியான்
சந்தமெல்லாமடிச் சார்த்தவல்லமறை ஞானசம்
பந்தனசெந்தமிழ் பாடியாடக் கெடும்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அமிர்தகடேசர், தேவியார்-அபிராமித்தாய்.

திருப்பதிகம்—உ.

---

காலசங்காரஞ்செய்ததலம்.

பரவியேத்தியங் கரிதினிற்போந்துபார் பரவுசீரரசோடு
விரவுநண்புடைக் குங்கிலியப்பெருங் கலயர்தம்மனைமேவி
கரையில்காதன்மற் றவரமைத்தருளிய விருந்தினிதமர்ந்தங்குச்
சிரபுரத்தவர் திருமயானமும்பணிந் திருந்தனர்சிறப்பெய்தி. (௫௩௫)

---

திருக்கடவூர்மயானம்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வரியமறையார் பிறையார்மலையோர் சிலையாவணக்கி
யெரியமதில்க ளெய்தாரெறியு முசலமுடையார்
கரியமிடறு முடையார்கடவூர் மயானமமர்ந்தார்
பெரியவிடைமேல் வருவாரவரெம் பெருமானடிகளே.

மரவம்பொழில்சூழ் கடவூர்மன்னு மயானமமர்ந்த
வரவமசைத்த பெருமானகல மறியலாகா
பரவுமுறையே பயிலும்பந்தன் செஞ்சொன்மாலை
யிரவும்பகலும் பரவிநினைவார் வினைகளிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பிரமபுரீசர். தேவியார்-மலர்க்குழல்நாயகி.

திருப்பதிகம்—௨.

---

சிறப்புடைத்திருப் பதியதனிடைச்சில நாளமர்ந்தருளோடும்
விறற்பெருங்கரி யுரித்தவர்கோயில்கள் விருப்பொடுந்தொழச்செல்வார்
மறைப்பெருந்திருக் கலயருமுடன்பட வணங்கியமகிழ்வோடு
மறப்பெரும்பய னணையவத்தொண்டரோ டணைந்தனர்திருவாக்கூர். ()

தக்கவந்தணர் மேவுமப்பதிதனிற் றான்றோன்றிமாடத்துச்
செக்கர்வார்சடை யண்ணலைப்பணிந்திசைச் செந்தமிழ்த்தொடைபாடி
மிக்ககோயில்கள் பிறவுடன்றொழுதுபோய் மீயச்சூர்பணிந்தேத்திப்
பக்கம்பாரிடம் பரவநின்றாடுவார் பாம்புரநகர்சேர்ந்தார். (௫௩௭)

---

திருஆக்கூர்-தான்தோன்றிமாடம்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

அக்கிருந்த வாரமு மாடரவு மாமையுந்
தொக்கிருந்த மார்பினான் றோலுடையான் வெண்ணீற்றான்
புக்கிருந்த தொல்கோயில் பொய்யிலா மெய்ந்நெறிக்கே
தக்கிருந்தா ராக்கூரிற் றான்றோன்றி மாடமே.

ஆட லமர்ந்தானை யாக்கூரிற் றான்றோன்றி
மாட மமர்ந்தானை மாடஞ்சேர் தண்காழி
நாடற் கரியசீர் ஞானசம் பந்தன்சொற்
பாட லிவைவல்லார்க் கில்லையாம் பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சுயம்புநாதர். தேவியார்-கட்கநேத்திரதேவியம்மை.

திருப்பதிகம்—உ.

திருமீயச்சூர்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

காயச்செவ்விக் காமற்காய்ந்த கங்கையைப்
பாயப்படர்புன் சடையிற்பதித்த பரமேட்டி
மாயச்சூர னன்றறுத்தமைந் தன்றாதைதன்
மீயச்சூரே தொழுதும்வினையை வீட்டுமே.

வேடமுடைய பெருமானுறையு மீயச்சூர்
நாடும்புகழார் ஞான சம்பந்தன்
பாடலாய தமிழீரைந்து மொழிந்துள்கி
யாடுமடியா ரகல்வானுலக மடைவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-முயற்சிநாயகர். தேவியார்-சுந்தரநாயகியம்மை.

திருப்பதிகம்—க.

பாம்புரத்துறை பரமனைப்பணிந்துநற் பதிகவின்னிசைபாடி
வாம்புனற்சடை முடியினார்மகிழ்விட மற்றுமுள்ளனபோற்றிக்
காம்பினிற்றிகழ் கரும்பொடுசெந்நெலின் கழனியம்பணைநீங்கித்
தேம்பொழிற்றிரு விழிமாமிழலையின் மருங்குறச்செல்கின்றார். (ருங-அ)

திருப்பாம்புரம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

சீரணி திகழ்திரு மார்பில்வெண் ணூலர் திரிபுர மெரிசெய்த செல்வர்
வாரணி வனமுலை மங்கையோர் பங்கர் மான்மறி யேந்திய மைந்தனார்
காரணி மணிதிகழ் மிடறுடை யண்ணல் கண்ணுதல் விண்ணவ ரேத்தும்
பாரணி திகழ்தரு நான்மறை யாளர் பாம்புர நன்னக ராரே.

பார்மலிந் தோங்கிப் பருமதில் சூழ்ந்த பாம்புர நன்னக ராரைக்
கார்மலிந் தழகார் கழனிசூழ் மாடக் கழுமல முதுபதிக் கவுணிய
னார்மலிந் தோங்கு நான்மறை ஞான சம்பந்தன் செந்தமிழ் வல்லார்
சீர்மலிந் தழகார் செல்வம தோங்கிச் சிவனடி நண்ணுவர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பாம்புரேசர். தேவியார்-வண்டமர்பூங்குழல்நாயகியம்மை.

திருப்பதிகம்—க,

வேறு.

அப்பொழுதி லாண்ட வரசை யெதிர்கொண்ட
மெய்ப்பெருமை யந்தணர்கள் வெங்குருவாழ் வேந்தனார்
பிற்படவந் தெய்தும் பெரும்பேறு கேட்டுவப்பா
ரெப்பரிசி னால்வந் தணைந்தங் கெதிர்கொண்டார். (௫௩௯)

நிறைகுடந் தூபதீப நீட நிரைத்தேந்தி
நறைமலர்ப் பொற்சுண்ண நறும்பொரி யுந்தூவி
மறையொலி போய்வா னளப்பமா முரசமார்ப்ப
விறைவர்திரு மைந்தர்தமை யெதிர்கொள்வர வேற்றார். (௫௪0)

வந்து திருவீழி மிழலை மறைவல்ல
வந்தணர்கள் போற்றிசைப்பத் தாமுமணி முத்தின்
சந்தமணிச் சிவிகையின் றிழிந்துதாழ்ந் தருளி
யுய்ந்தமறை யோர்தம்முட னணைந்தங்குள் புகுவார். (௫௪௧)

அப்போ தரையார் விரிகோ வணவாடை
யொப்போ தரும்பதிகத் தோங்கு மிசைபாடி
மெய்ப்போதப் போதமர்ந்தார் தங்கோயின் மேவினார்
கைப்போது சென்னியின்மேற் கொண்டு கவுணியனார். (௫௪௨)

---

திருவீழிமிழலை-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

அரையார் விரிகோ வணவாடை
நரையார் விடையூர்தி நயந்தான்
விரையார் பொழில்வீ ழிம்மிழலை
யுரையா லுணர்வா ருயர்வாரே.

நளிர்காழி யுள்ஞான சம்பந்தன்
குளிரார் சடையா னடிகூற
மிளிரார் பொழில்வீ ழிம்மிழலை
கிளர்பாடல் வல்லார்க் கில்லைகேடே.

திருச்சிற்றம்பலம்.

---

நாவின் றனிமன்னர் தாமு முடனண்ண
மேவிய விண்ணிழிந்த கோயில்வலங் கொள்வார்
பூவியலு முந்தியான் போற்றப் புவிக்கிழிந்த
தேவியலு மெய்கண்டு சிந்தைவியப் பெய்தினார். (௫௪௩)

வலங்கொண்டு புக்கெதிரே வான நதியின்
சலங்கொண்ட வேணித் தனிமுதலைத் தாழ்ந்து
நிலங்கொண்ட மேனியராய் நீடுபெருங் காதல்
புலங்கொண்ட சிந்தையினாற் பொங்கிப் பொழிந்தெழுந்தார். (௫௪௪)

போற்றிச் சடையார் புனலுடையா னென்றெடுத்துச்
சாற்றிப் பதிகத் தமிழ்மாலை சந்தவிசை
யாற்ற மிகப்பாடி யானந்த வெள்ளத்தி
னீற்றழகர் சேவடிக்கீழ் நின்றலைந்து நீடினார். (ருசரு)

---

திருவிழிமிழலை-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

சடையார் புனலுடையா னொருசரிகோ வணமுடையான்
படையார் மழுவுடையான் பலபூதப் படையுடையான்
மடமான் விழியுமைமா திடமுடையா னெனையுடையான்
விடையார் கொடியுடையா னிடம்வீழி மிழலையே.

வீழிம் மிழலைமே வியவிகிர்தன் றனைவிரைசேர்
காழிந் நகர்க்கலைஞான சம்பந்தன் றமிழ்ப்பத்தும்
யாழின் னிசைவல்லார் சொல்லக்கேட் டாரவரெல்லா
மூழின் வலிவினைபோ யிடவுயர்வா னடைவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் விழியழகர். தேவியார்-சுந்தரகுசாம்பிகை.

திருப்பதிகம்—உச.

---

நீடியபே ரன்புருகி யுள்ளலைப்ப நேர்நின்று
பாடி யெதிராடிப் பரவிப் பணிந்தெழுந்தே
யாடிய சேவடிக ளார்வமுற வுட்கொண்டு
மாடுயர் கோயிற் புறத்தரிது வந்தணைந்தார். (ருசசு)

வந்தணைந்து வாழ்ந்து மதிற்புறத்தோர் மாமடத்துச்
செந்தமிழ்ச்சொல் வேந்தருஞ் செய்தவருஞ் சேர்ந்தருளச்
சந்தமணிக் கோபுரத்துச் சார்ந்துவட பாற்சண்பை
யந்தணர்சூ ளாமணியா ரங்கோர் மடத்தமர்ந்தார். (ருசஎ)

அங்க ணமர்வா ரரனா ரடியிணைக்கீழ்த்
தங்கிய காதலினாற் காலங்க ளடப்பாமே
பொங்கு புகழ்வாகீ சருங்கூடப் போற்றிசைத்தே
யெங்கு மிடர்தீர்ப்பா ரின்புற் றமர்கின்றார். (ருசஅ)

ஓங்கு புனற்பேணு பெருந்துறையு முள்ளிட்ட
பாங்கார் திலதைப் பதிமுற்ற மும்பணிந்து
வீங்கொலி நீர்வீழி மிழலையினின் மீண்டுமணைந்
தாங்கினிது கும்பிட் டமர்ந்தொழுகு மந்நாளில். (ருசகூ)

வேறு.

சேணுயர்மாடப் புகலியுள்ளார் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைக்
காணும்விருப்பிற் பெருகுமாசை கைமிகுகாதல் கரையிகப்பப்
பூணுமனத்தொடுதோணிமேவும் பொருவிடையார்மலர்ப்பாதம்போற்றி
வேணுபுரத்தை யகன்றுபோந்து வீழிமிழலையுள் வந்தணைந்தார். (ருருo)

ஊழிமுடிவி லுயர்ந்தவெள்ளத் தோங்கியகாழி யுயர்பதியில், வாழி மறையவர் தாங்களெல்லாம் வந்துமருங்கணைந் தார்களென்ன, வீழிமிழலையுள் வேதியர்கள் கேட்டுமெய்ஞ்ஞானமுண் டாரைமுன்னு, வேழிசைச் சூழ்மறை யோரையெய்தி யெதிர்கொண்முறைமையிற் கொண்டுபுக்கார்.

சண்பைத்திருமறை யோர்களெல்லாந் தம்பிரானுரைப் பணிந்துபோந்து, நண்பிற்பெருகிய காதல்கூர்ந்த ஞானசம்பந்தர் மடத்தினெய்திப், பண்பிற்பெருகுங் கழுமலத்தார் பிள்ளையார்பாதம் பணிந்துபூண்டே,யெண்பெற்றதோணி புரத்திலெம்மோ டெழுந்தருளப்பெற வேண்டுமென்றார். (ருருஉ)

என்றவர்விண்ணப்பஞ் செய்தபோதி வீறில்சிவஞானப் பிள்ளையாரு
நன்றிதுசாலவுந் தோணிமேவு நாதர்கழலிணை நாமிறைஞ்ச
வின்றுகழிந்து மிழலைமேவு மிறைவரருள்பெற்றுப் போவதென்றே
யன்றுபுகலி யருமறையோர்க் கருள்செய்தவர்க்கு முகமளித்தார். ()

மேற்பட்டவந்தணர் சண்பைமேவும் வேதியர்க்காய விருந்தளிப்பப், பாற்பட்டசிந்தைய ராய்மகிழ்ந்து பரம்பொருளானார் தமைப்பரவுஞ், சீர்ப்பட்டவெல்லை யினிதுசெல்லத் திருத்தோணிமேவிய செல்வர்தாமே, கார்ப்பட்டவண்கைக் கவுணியர்க்குக் கனவிடைமுன்னின் றருள்செய்கின்றார். (ருருச)

தோணியினமங் கிருந்தவண்ணந் தூமறைவீழி மிழலைதன்னுட்,சேணுயர்விண்ணின் றிழிந்தவிந்தச் சீர்கொள்விமானத் துக் காட்டுகின்றோம், பேணும்படியா லறிதியென்று பெயர்ந்தருள்செய்யப் பெருந்தவங்கள், வேணுபுரத்தவர் செய்யவந்தார் விரவும்புளகத் தொடுமுணர்ந்தார். ()

அறிவுற்றசிந்தைய ராயெழுந்தே யதிசயித்துச்சிமே லங்கைகூப்பி, வெறியுற்றகொன்றையி னார்மகிழ்ந்த விண்ணிழிகோயிலிற் சென்றுபுக்கு, மறியுற்றகையனைத் தோணிமேன்முன் வணங்கும்படியங்குக்கண்டுவாழ்ந்து,குறியிற்பெருகுந் திருப்பதிகங் குலவியகொள்கையிற் பாடுகின்றார்.

மைம்மருபூங்குழ லென்றெடுத்து மாறில்பெருந்திருத் தோணிதன்மேற்,கொம்மைமுலையினள் கூடநீடு கோலங்குலவு மிழலைதன்னிற்,செம்மைதருவிண் ணிழிந்தகோயிற் றிகழ்ந்தபடியிது வென்கொலென்று,மெய்ம்மைவிளங்குந் திருப்பதிகம் பாடிமகிழ்ந்தனர் வேதவாயர். (ருருஎ)

ஸ்ரீபுகலியுந்-திருவீழிமிழலையும்-வினவுரை-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

மைம்மருபூங்குழற் கற்றைதுற்ற வாணுதல்மான்விழி மங்கையோடும், பொய்ம்மொழியாமறை யோர்களேத்தப் புகலிநிலாவிய புண்ணியனே, யெம்மிறையேயிமை யாதமுக்க ணீசவனேகவி தென்கொல்சொல்லாய், மெய்ம்மொழிநான்மறை யோர்மிழலை விண்ணிழிகோயில் விரும்பியதே.

விண்ணிழிகோயில் விரும்பிமேவும் வித்தகமென்கொலி தென்றுசொல்லிப், புண்ணியனைப்புக லிந்நிலாவு பூங்கொடியோடிருந் தானைப்போற்றி, நண்ணியகீர்த்தி நலங்கொள்கேள்வி நான்மறைஞானசம் பந்தன்சொன்ன, பண்ணியல்பாடல்வல் லார்களிந்தப் பாரொடுவிண்பரி பாலகரே.

திருச்சிற்றம்பலம்.

---

செஞ்சொன்மலர்ந்த திருப்பதிகம் பாடித்திருக்கடை காப்புச்சாற்றி
யஞ்சலிகூப்பி விழுந்தெழுவா ரானந்தவெள்ள மலையப்போந்து
மஞ்சிவர்சோலைப் புகலிமேவு மாமறையோர்தமை நோக்கிவாய்மை
நெஞ்சுநிறைந்த குறிப்பில்வந்த நீர்மைத்திறத்தைய ருள்செய்கின்றார். ()

பிரமபுரத்தி லமர்ந்தமுக்கட் பெரியபிரான்பெரு மாட்டியோடும்,விரவியதானங்க ளெங்குஞ்சென்று விரும்பியகோயில் பணிந்துபோற்றி, வருவதுமேற்கொண்ட காதல்கண்டங் கமர்ந்தவகையிங்களித்ததென்று, தெரியவுரைத்தருள் செய்துநீங்கள் சிரபுரமாநகர் செல்லுமென்றார். ()

என்றுகவுணியப் பிள்ளையார்தா மியம்பப்பணிந்தரு ளேற்றுக்கொண்டே, யொன்றியகாதலி னுள்ளமங்க ணொழியவொருவா றகன்றுபோந்து, மன்றுணடம்புரிந் தார்மகிழ்ந்த தானம்பலவும் வணங்கிச்சென்று, நின்றபுகழ்த்தோணி நீடுவாரைப் பணியுநியதிய ராயுறைந்தார். (ருசு0)

சிரபுரத்தந்தணர் சென்றபின்னைத் திருவீழிமேவிய செல்வர்பாதம்
பரவுதல்செய்து பணிந்துநாளும் பண்பின்வழாத்திருத் தொண்டர்சூழ
வுரவுத்தமிழ்த்தொடை மாலைசாத்தி யோங்கியநாவுக் கரசரோடும்
விரவிப்பெருகிய நண்புகூர மேவியினிதங் குறையுநாளில். (ருசுக)

வேறு.

மண்ணின்மிசை வான்பொய்த்து நதிகடப்பி மன்னுயிர்கள் கண்சாம்பி யுணவுமாறி, விண்ணவருஞ் சிறப்பில்வரும் பூசையாற்றால் மிக்கபெரும் பசியுலகில் விரவக்கண்டு, பண்ணமரு மொழியுமையாண் முலையின்ஞானப் பாலறு வாயருட னரசும்பார்மேற், கண்ணுதலான் றிருநீற்றுச் சார்வினோர்க்குங் கவலைவரு மோவென்று கருத்திற்கொண்டார் (

வானாகி நிலனாகி யனலுமாகி மாருதமா யிருசுடராய் நீருமாகி
யூனாகி யுயிராகி யுணர்வுமாகி யுலகங்களனைத்துமா யுலகுக்கப்பா
னானாத வடிவாகி நின்றார்செய்ய வடிபரவி யன்றிரவு துயிலும்போது
கானாடுகங்காளர்மிழலைமூதூர்காதலித்தார்கனவிலணைந்தருளிச்செய்வார்

உலகியல்பு நிகழ்ச்சியா லணைந்ததீய வுறுபசிநோயுமையடையா தெனினுமும்பா, னிலவுசிவ நெறிசார்ந்தோர் தம்மைவாட்ட நீக்குதற்கு நித்தமொரோர் காசுநீடு, மிலகுமணிப் பீடத்துக் குணக்குமேற்கும் யாமளித்தோ முமக்கிந்தக் காலந்தீர்ந்தால், அலகில்புக ழீர்தவிர்வ தாகுமென்றே யருள்புரிந்தார் திருவீழி மிழலையையர். (௫௯௪)

தம்பிரா னருள்புரிந்து கனவினீங்கச் சண்பையா ரிளவேறு தாமுணர்ந்து, நம்பிரா னருளிருந்த வண்ணமென்றே நாவின்மிசை யரசரொடுங் கூடநண்ணி, வம்புலா மலரிதழி விழிநாதர் மணிக்கோயில் வலஞ்செய்யப் புகுந்தவேலை, யம்பிகா பதியருளாற் பிள்ளையார்தா * மபிமுகத்துப் பீடிகைமேற் காசுகண்டார். (௫௯௫)

காதலொடுந் தொழுதெடுத்துக் கொண்டுநின்று கைகுவித்துப் பெருமகிழ்ச்சி கலந்துபொங்க, நாதர்விரும் படியார்க ளானநாளு நல்விருந்தா யுண்பதற்கு வருகவென்று, தீதில்பறை நிகழ்வித்துச் சென்றதொண்டர் திருவமுது கறிநெய்பா றயிரென்றின்ன, வேதமுறா தினிதுண்ணவூட்டியங்க ணிருதிறத்துப் பெருந்தவரு மிருந்தநாளில். (௫௯௬)

நாவினுக்கு வேந்தர்திரு மடத்திற்றொண்டர் நாட்கூறு திருவமுது செய்யக்கண்டு, சேவுகைத்தா ரருள்பெற்ற பிள்ளையார்தந் திருமடத்திலமுதாக்கு வாரைநோக்கித், தீவினைக்கு நீரென்று மடைவிலாதீர் திருவமுது காலத்தாலாக்கியிங்கு, மேவுமிக்க வடியவருக் களியாவண்ணம் விளைந்தவா றென்கொலோ விளம்புமென்றார். (௫௯௭)

திருமறையோர் தலைவர்தா மருளிச்செய்பத் திருமடத்தி லமுதமைப்போர் செப்புவார்க, ளொருபரிசு மறிந்திலோ மிதனையும்மை யுடையவர்பாற் பெறும்படிக்கா சொன்றுங்கொண்டு, கருதியவெல் லாங்கொள்ள வேண்டிச்சென்றாற் காசுதனை ० வாசிபட வேண்டுமென்பர், பெருமுனிவர் வாகீசர் பெற்றகாசு பேணியே கொள்வரிது பிற்பாடென்றார் (௫௯௮)

திருஞான சம்பந்த ரதனைக்கேட்டுச் சிந்திப்பார் சிவபெருமா னமக்குத்தந்த, வொருகாசு வாசிபட மற்றக்காசு நன்றாகி வாசிபடாதொழிவானந்தப், பெருவாய்மைத் திருநாவுக் கரசர்தொண்டாற் பெறுங்காசா மாதலினாற் பெரியோன்றன்னை, வருநாள்க டருங்காசு வாசிதீரப் பாடுவனென் றெண்ணியது மனத்துட்கொண்டார். (௫௯௯)

---

* அபிமுகத்துப்பீடிகைசுவாமிசந்நிதிக்கெதிரிலிருக்கும்பலிபீடம்.

० வாசி என்பது - வட்டம்.

மற்றைநாட் டம்பிரான் கோயில்புக்கு வாசிதீர்த் தருளுமெனப் பதிகம்பாடிப், பெற்றபடி நற்காசு கொண்டுமாந்தர் பெயர்ந்துபோயாவணவீ தியினிற்காட்ட, நற்றவத்தீ ரிக்காசு சாலநன்று வேண்டுவன நாந் தருவோ மென்றுநல்க, அற்றைநாட் டொடங்கிநாட் கூறுதன்னி லடியவரை யமுதுசெய்வித் தார்வமிக்கார். (ருஎ0)

திருவீழிமிழலை திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வாசிதீரவே காசுநல்குவீர்
மாசின்மிழலையீ ரேசலில்லையே.

காழிமாநகர் வாழிசம்பந்தன்
வீழிமிழலைமேற் றாழுமொழிகளே.

திருச்சிற்றம்பலம்.

அருவிலையிற் பெறுங்காசு மவையேயாகி யமுதுசெய்யத் தொண்டரள விறந்துபொங்கி, வருமவர்க ளெல்லார்க்கும் வந்தாருக்கு மகிழ்ந்துண்ண வின்னடிசின் மாளாதாகத், திருமுடிமேற் றிங்களொடு கங்கைசூடுஞ் சிவபெருமா னருள்செய்யச் சிறப்பின்மிக்க, பெருமைதரு சண்பைநகர் வேந்தர்நாவுக் கரசரிவர் பெருஞ்சோற்றுப் பிறங்கலீந்தார். (ருஎக)

அவனிமிசை மழைபொழிய வுணவுமல்கி யனைத்துயிருந் துயர்நீங்கி யருளினாலே,புவனமெலாம் பொலிவெய்துங் காலமெய்தப் புரிசடையார் கழல்பலநாள் போற்றிவைகித், தவமுனிவர் சொல்வேந்த ரோடுங்கூடத் தம்பிரா னருள்பெற்றுத் தலத்தின்மீது, சிவன்மகிழுந் தானங்கள் வணங்கிப்போவார் தென்றிருவாஞ் சியமூதூர் சென்றுசேர்ந்தார். (ருஎஉ)

நீடுதிரு வாஞ்சியத்தி லமர்ந்தமுக்க ணீலமிடற் றருமணியை வணங்கிப்போற்றிப்,பாடொலிநீர்த் தலையாலங் காடுமாடு பரமர்பெரு வேளூரும் பணிந்துபாடி, நாடுபுகழ்த் தனிச்சாத்தங் குடியினண்ணி நம்பர்திருக் கரவீர நயந்துபாடித்,தேடுமறைக் கரியார்தம் விளமர்போற்றித் திருவாரூர் தொழநினைந்து சென்றுபுக்கார். (ருஎந)

திருவாஞ்சியம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

வன்னிகொன்றை மதமத்த மெருக்கொடு கூவிளம்
பொன்னியனற்சடையிற் பொலிவித்த புராணனார்
தென்னவென்று வரிவண் டிசைசெய் திருவாஞ்சிய
மென்னையாள் வுடையா னிடமாக வுகந்ததே.

தென்றான்று பொழில்சென் றணையுந் திருவாஞ்சியத்
தென்றுநின்ற விறையானை யுணர்ந்தடி யேத்தலா
னன்றுகாழி மறைஞான சம்பந்தன் செந்தமி
ழொன்று முள்ளமுடையா ரடைவாருயர் வானமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சுகவாஞ்சிநாயகர். தேவியார்-வாழவந்தநாயகியம்மை.

திருப்பதிகம்—௩.

திருப்பெருவேளூர்-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அண்ணாவுங் கழுக்குன்று மாயமலை யவையாள்வார்
விண்ணோரு மண்ணோரும் வியந்தேத்த வருள்செய்வார்
கண்ணாவ ருலகுக்குக் கருதாரூர் புரமெரித்த
பெண்ணாளும் பெருமானார் பெருவேளூர் பிரியாரே.

பைம்பொன்சீர் மணிவாரிப் பலவுஞ்சேர் கனியுந்தி
யம்பொன்சேய் மடவரலா ரணிமல்கு பெருவேளூர்
நம்பன்றன் கழல்பரவி நவில்கின்ற மறைஞான
சம்பந்தன் றமிழ்வல்லார்க் கருவினைநோய் சாராவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பிரியாதநாயகர். தேவியார்-மின்னனையாளம்மை.

திருப்பதிகம்—௨.

திருக்கரவீரம்-பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

அரியும்நம்வினை யுள்ளனவாசற
வரிகொள்மாமணி போற்கண்டக்
கரியவன்றிகழுங் கரவீரத்தெம்
பெரியவன்கழல் பேணவே.

வீடிலான்விளங் குங்கரவீரத்தெஞ்
சேடன்மேற்பரி வாற்றமிழ்
நாடிஞானசம் பந்தன்சொல்லிவை
பாடுவார்க் கில்லைபாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கரவீரேசுவரர். தேவியார்-பிரத்தியக்ஷநாயகியம்மை.

திருப்பதிகம்—௧.

திருவிளமர்-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

மத்தக மணிபல மலர்வதோர் மதிபுரை நுதல்கர
மொத்தக நகமணி மிளிர்வதோ ரரவின ரொளிகிள
ரத்தக வடிதொழ வருள்பெறு கணனொடு முமையவள்
வித்தக ருறைவது விரியொழில் வளநகர் விளமரே.

வெந்தவெண் பொடியணி யடிகளை விளமருள் விகிர்தனைச்
சிந்தையு ளிடைபெற வுரைசெய்த தமிழிவை கெழுவிய
வந்தணர் புகலியு ளழகம ரருமறை ஞான
சம்பந்தன் மொழியிவை யுரைசெயு மவர்வினை பறையுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பதஞ்சலிமனோகரர். தேவியார்-யாழினுமென்மொழியம்மை

திருப்பதிகம்—க.

---

நம்பர்மகிழ் திருவாரூர் வணங்கிப்போந்து நலங்கொடிருக் காறாயி னண்ணியேத்திப், பைம்புனன்மென் பணைத்தேவூ ரணைந்துபோற்றிப் பரமர்திரு நெல்லிக்காப் பணிந்துபாடி, யும்பர்பிரான் கைச்சினமும் பரவித்தெங்கூ ரோங்குபுகழ்த் திருக்கொள்ளிக் காடும்போற்றிச், செம்பொன்மதிட் கோட்டூரும் வணங்கியேத்தித் திருமலிவெண் டுறைதொழுவான் சென்றுசேர்ந்தார். (ருஎச)

---

திருக்காறாயில்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நீரானே நீள்சடைமேலோர் நிரைகொன்றைத்
தாரானே தாமரைமேலயன் றான்றொழுஞ்
சீரானே சீர்திகழுந் திருக்காறாயி
லூரானே யென்பவரூன மிலாதாரே.

ஏய்ந்தசீ ரொழிறிகழுந் திருக்காறாயி
லாய்ந்தசீரா னடியேத்தி யருள்பெற்ற
பாய்ந்தநீர்க் காழியுள்ஞானசம் பந்தன்சொல்
வாய்ந்தவா றேத்துவார்வானுல காள்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கண்ணாயிரநாதர். தேவியார்-கயிலாசநாயகியம்மை.

திருப்பதிகம்—க.

---

திருத்தேவூர்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பண்ணி லாவிய மொழியுமை பங்கனெம் பெருமான்
விண்ணில் வானவர் கோன்விம லன்விடை யூர்தி
தெண்ணி லாமதி தவழ்தரு மாளிகைத் தேவூ
ரண்ணல் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே.

அல்ல லின்றிவிண் ணுள்வர்கள் காழியர்க் கதிப
னல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம் பந்த
னெல்லை யில்புகழ் மல்கிய வெழில்வளர் தேவூர்த்
தொல்லை நம்பனைச் சொல்லிய பத்தும்வல் லோரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தேவூர்-பண்-திருவிராகம்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

காடுபயல் வீடுமுடை யோடுகலன் மூடுமுடை யாடைபுலிதோல்
கேடுபலி யூணதுடை வேடமிகு வேதியர் திருந்துபதிதா
னீடகம தாடபஞ்ஞை பாடவரி கோடல்கை மறிப்பநலமார்
சேடுமிகு வேடையென மூடிமகிழ் மாடமிடை தேவூரதுவே.

துங்கமிகு பொங்கரவு தங்குசடை நங்களிறை துன்றுகுழலார்
செங்கயல்கண் மங்கையுமை நங்கையொரு பங்கனமர் தேவூரதன்மேற்
பைங்கமல மங்கணிகொ டண்புகலி ஞானசம் பந்தனுரைசெய்
சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிசை வல்லவர்கள் சங்கையிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருநெல்லிக்கா-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அறத்தா லுயிர்கா வலமர்ந் தருளி
மறத்தான் மதின்மூன் றுடன்மாண் பழித்த
திறத்தாற் றெரிவெய் தியதீ வெண்டிங்க
ணிறத்தா னெல்லிக் காவுணி லாயவனே.

புகரே துமிலாத புத்தே ளுலகி
னிகரா நெல்லிக் காவுணி லாயவனை
நகரா னலஞான சம்பந்தன் சொன்ன
பகர்வா ரவர்பாவ மிலாதவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நெல்லிவனநாதர். தேவியார்-மங்களநாயகியம்மை.

திருப்பதிகம்—க.

திருக்கைச்சினம்-பண்-சீகாமரம்.
திருச்சிற்றம்பலம்.

தையலோர் கூறுடையான் றண்மதிசேர் செஞ்சடையான்
மையுலா மணிமிடற்றான் மறைவிளங்கு பாடலா
னெய்யுலா மூவிலைவே லேந்திநிவந் தோளிசேர்
கையுடையான் மேவியுறை கைச்சினமே.

தண்வயல்சூழ் காழித் தமிழ்ஞான சம்பந்தன்
கண்ணுதலான் மேவி யுறைகோயில் கைச்சினத்தைப்
பண்ணிசையா லேத்திப் பயின்ற விசைவல்லார்
விண்ணவரா யோங்கி வியனுலக மாள்வாரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தெங்கூர்-பண்-பியந்தைக்காந்தாரம்.
திருச்சிற்றம்பலம்.

புரைசெய்வல் வினைதீர்க்கும் புண்ணியர்பண் ணவர்போற்றக்
கரைசெய்மால் கடனஞ்சை யுண்டவர்கரு தலர்புரங்க
ளிரைசெய்தா ரழலூட்டி யுழல்பவரிடு பலிக்கெழில்சேர்
விரைசெய்பூம் பொழிற்றெங்கூர் வெள்ளியங்குன் றமர்ந்தாரே.

வெந்தநீற் றினர்தெங்கூர் வெள்ளியங்குன் றமர்ந்தாரைக்
கந்தமார் பொழில்சூழ்ந்த காழியுள்ஞான சம்பந்தன்
சந்தமா யினபாடல் வண்டமிழ்பத் தும் வல்லார்மேற்
பந்தமா யினபாவம் பாறுதலே றுதல்பயனே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வெள்ளிமலைநாதர். தேவியார்-பெரியநாயகியம்மை.
திருப்பதிகம்—க.

---

திருக்கொள்ளிக்காடு-பண்-காந்தாரபஞ்சமம்.
திருச்சிற்றம்பலம்.

நிணம்படு சுடலையி னீறுபூசிநின்
றிணங்குவர் பேய்களோ டிடுவர்மாநட
முணங்கல்வெண் டலைதனி லுண்பராகிலும்
கணம்பெரி துடையர்நங் கொள்ளிக்காடரே.

நற்றவர் காழியுள் ஞானசம்பந்தன்
குற்றமில் பெரும்புகழ்க் கொள்ளிக்காடரைச்
சொற்றமி ழின்னிசை மாலைசோர்வின் றிக்
கற்றவர் சிவனடி காணவல்லரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கோட்டூர்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நீலமார்தரு கண்டனே நெற்றியோர் கண்ணனே யொற்றைவிரிசடைச்
சூலமார்தரு கையனே துன்றுபைம்பொழில் சூழ்ந்தழகாய்க்
கோலமாமலர் மணங்கமழ்கோட்டூர் நற்கொழுந்தேயென் றெழுவார்கள்
சாலநீடலத் திடைப்புகழ்மிகத் தாங்குவர் பாங்காலே.

பந்துலாவிரற் பவளவாய்த்தேன்மொழிப் பாவையோ ருருவாருங்
கொந்துலாமலர் விரிபொழிற்கோட்டூர் நற்கொழுந்திணைச்செழும் பவளம்
வந்துலாவிய காழியுள்ஞானசம் பந்தன்வாய்ந் துரைசெய்த
சந்துலாந்தமிழ் மாலைகள்வல்லவர் தாங்குவர் புகழாலே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கொழுந்தீசர். தேவியார்-மதுரவசனியம்மை.

திருப்பதிகம்—௧.

---

திருவெண்டுறை-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆதியன்றிரைய னனலாடிய வாரழகன்
பாதியோர்மாதினேடும் பயிலும் பரமர்பரமன்
போதியலும்முடிமேற் புனலோடர வும்புனைந்த
வேதியன்மாதிமையால் விரும்புமிடம் வெண்டுறையே.

திண்ணமரும்புரிசைத் திருவெண்டுறை மேயவனைத்
தண்ணமரும்பொழில்சூழ் தருசண்பையர் தந்தலைவ
னெண்ணமர்பல்கலையா னிசைஞானசம் பந்தன்சொன்ன
பண்ணமர்பாடல்வல்லார் வினையாயின பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வெண்டுறைநாதர். தேவியார்-வேனெடுங்கண்ணியம்மை.

திருப்பதிகம்—௧.

---

மற்றவலூர் தொழுதேத்தி மகிழ்ந்துபாடி மாலயனுக் கரியபிரான் மருவுந்தானம, பற்பலவுஞ் சென்றுபணிந் தேத்திப்பாடிப் பரவுதிருத் தொண்டர்குழாம் பாங்கினெய்தக், கற்றவர்வாழ் தண்டலைநீ ணெறியுள் ளிட்ட கனகமதிட் டிருக்களருங் கருதார்வேள்வி, செற்றவர்சேர் பதிபிற வுஞ் சென்றுபோற்றித் திருமறைக்கா டதன்மருங்கு சென்றுசேர்ந்தார்.

---

திருத்தண்டலைநீணெறி-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

விரும்புந் திங்களுங் கங்கையும் விம்மவே
சுரும்பினந் துஞ்சியுஞ் சூழசடை யார்க்கிடங்
கரும்புஞ் செந்நெலுங் காய்கமு கின்வளந்
நெருங்குந் தண்டலை நீணெறி காண்மினே.

நீற்றர் தண்டலை நீணெறி நாதனைத்
தோற்று மேன்மையர் தோணி புரத்துறை
சாற்று ஞானசம் பந்தனற் றமிழ்வல்லார்
மாற்றில் செல்வர் மறப்பர் பிறப்பையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நீணெறிநாதேசுவார். தேவியார்-ஞானநாயகி.

திருப்பதிகம்—க.

---

திருக்களர்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

நீருளார்கயல் வாவிசூழ்பொழில் நீண்டமாவய லீண்டுமாமதில்
தேரினர் மறுகில் விழாமல்கு திருக்களரு
ளூருளாரிடு பிச்சைபேணு மொருவனேயொளி செஞ்சடைமதி
யாரநீன் றவனே யடைந்தார்க் கருளாயே.

இந்துவந்தெழு மாடவீதி யெழில்கொள்காழிந் நகர்க்கவுணியன்
செந்திநேர் மொழியா ரவர்சேருந் திருக்களரு
ளந்தியன்னதோர் மேனியானை யமரர்தம்பெரு மானைஞான
சம்பந்தன் சொல்லிவை பத்தும்பாடத் தவமாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-களரிளமுளையீசர். தேவியார்-அழகம்மை.

திருப்பதிகம்—க.

---

காரமண்வெஞ் சுரமருளாற் கடந்தார்தாமுங் கடற்காழிக் கவுணியர்தந் தலைவர்தாமுஞ், சேரவெழுந் தருளியவப் பேறுகேட்டுத் திருமறைக்கா டகன்பதியோர் சிறப்பிற்பொங்கி,யூரடைய வலங்கரித்து விழவுகொள்ள வுயர்கமுகு கதலிநிறை குடந்தீபங்கள, வாரமுரச மங்கலநா தங்கணமல்க வெதிர்கொள்ள வடியருடன் மகிழ்ந்துவந்தார். (ருளகூ)

முன்னணைந்த திருநாவுக் கரசர்தம்மை முறைமையா லெதிர்கொண்டு களிப்பின்மூழ்கிப்,பின்னணைய வெழுந்தருளும் பிள்ளையார்தம் பெருகியபொற் காளத்தினோசைகேட்டுச்,சென்னிமிசைக் கரங்குவித்து முன்புசென்று சேணிலத்து வணங்குதலுந் திருந்துசண்பை,மன்னவரு மணிமுத்தின் சிவிகைநின்று வந்திழிந்து வணங்கியுடன் மகிழ்ந்தெழுந்தார்.()

சொல்லரச ருடன்கூடப் பிள்ளையார்தாந் தூமணிநீர் மறைக்காட்டுத் தொல்லைமூதூர், மல்குதிரு மறுகின்கட் புகுந்தபோது மாதவர்கண மறையவர்கண் மற்றுமுள்ளோ, ரெல்லையில்லா வகையரவென் றெடுத்த வோசை யிருவிசும்புந் திசையெட்டு நிறைந்துபொங்கி, யொல்லொலிநீர் வேலையொலி யடக்கிவிண்மே லும்பர்நாட் டப்புறத்து முற்றவன்றே. ()

அடியவரும் பதியவரு மருங்குபோற்ற வணிமறுகி னூடெய்தி யருகுதாழ்ந்து, கொடிநுடங்கு செழுந்திருமா ளிகையின்முன்னர்க் கோபுரத்தைத் தாழ்ந்திறைஞ்சிக் குறுகிப்புக்கு, முடிவிலிமை யவர்முனிவர் நெருங்குந்தெய்வ முன்றில்வலங் கொண்டுநேர் சென்றுமுன்னுட், படியின்மறை யருச்சித்துக் காப்புச்செய்த பைம்பொன்மணித் திருவாயிற் பாங்குவந்தார். (௩௭௯)

அருமறைக டிருக்காப்புச் செய்துவைத்த வக்கதவந் திறந்திடவம் மறைகளோதும், பெருகியவன் புடையடியா ரணைந்துநீக்கப் பெறுமையினாலன்றுமுத லாகப்பின்னை,யொருபுடையோர்வாயிலமைத் தொழுகுந் தன்மை யுள்ளபடி கேட்டருளி யுயர்ந்தசண்பைத், திருமறையோர் தலைவர்வியப் பெய்திநின்று திருநாவுக்கரசருக்குச் செப்புகின்றார். (௩௮௰)

அப்பரோ வேதவனத் தையர்தம்மை யபிமுகத்துத் திருவாயி லறிந்துபுக்கே, யெப்பரிசும் நாமிறைஞ்ச வெண்டுநீரோ யிவ்வாயி றிருக்காப்பு நீங்குமாறு, மெய்ப்பொருள்வண் டமிழ்பாடி யருளுமென்ன விளங்குமொழி வேந்தரது மேற்கொண்டென்னை, யிப்பரிசு நீரருளிச் செய்தீராகி லிதுசெய்வே னெனப்பதிக மெடுத்துப்பாட. (௩௮௧)

பாடியவப் பதிகப்பாட் டானபத்தும் பாடணிரம் பியபின்னும் பைம்பொன்வாயிற். சேடுயர்பொற் கதவுதிருக் காப்புநீங்காச் செய்கையினால் வாகீசர் சிந்தைநொந்து,நீடுதிருக் கடைக்காப்பி லரிதுவேண்டி நின்றெடுக்கத் திருக்கதவு நீங்கக்காட்ட, வாடியசே வடியார்த மடியார்விண்ணோரார்ப்பெழுந்த தகிலாண்ட மனைத்துமூழ்க. (௩௮௨)

வேறு.

மற்றது கண்டபோதே வாக்கின்மன் னவரைநோக்கிப்
பொற்புக லியர்தமன்னர் போற்றிட வவரும்போற்றி
யற்புத நிலையினார்க ளணிதிரு மறைக்காடாளுங்
கொற்றவர் கோயில்வாயி னேர்வழி குறுகிப்புக்கார். (௩௮௩)

கோயிலுட் புகுவாருச்சி குவித்தசெங் கைகளோடுந்
தாயிலு மினியதங்க டம்பிரா னரைக்கண்டார்
பாயுநீ ரருவிகண்க ளேங்கிடப் படியின்மீது
மேயின மெய்யராகி விதிர்ப்புற்று விழாவின்வீழ்ந்தார். (௩௮௪)

அன்பினுக் களவுகாணு ரானந்த வெள்ளமூழ்கி
யென்புநெக் குருகநோக்கி யிறைஞ்சிநேர் விழுந்துநம்பர்
முன்புநிற் பதுவுமாற்றா மொழிதடு மாறவேத்தி
மின்புரை சடையார்தம்மைப் பதிகங்கள் விளம்பிப்போந்தார். (௫௮௫)

புறம்புவந் தணைந்தபோது புகலிகா வலனைநோக்கி
நிறங்கிளர் மணிக்கபாட நீங்கவு மடைப்புநிற்கத்
திறந்தவா றடைக்கப்பாடி யருளுநீ ரென்றார்தீய
மறம்புரி யமணர்செய்த வஞ்சனை கடக்கவல்லார். (௫௮௬)

அன்றர சருளிச்செய்ய வருமறைப் பிள்ளையாரும்
வென்றிவெள் விடையார்தம்மை விருப்பினாற் சதுரமென்று
மின்றமிழ்ப் பதிகப்பாட லிசைத்திட விரண்டுபாலு
நின்றவக் கதவுகாப்பு நிரம்பிட வடைத்ததன்றே. (௫௮௭)

திருமறைக்காடு-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சதுரம் மறைதான் றுதிசெய்து வணங்கு
மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
விதுநன் கிறைவைத் தருள்செய்க வெனக்குன்
கதவந் திருக்காப் புக்கொளுங் கருத்தாலே.

காழிந் நகரான் கலைஞான சம்பந்தன்
வாழிம் மறைக்கா டனைவாய்ந் தறிவித்த
வேழின் னிசைமாலை யீரைந் திவைவல்லார்
வாழி யுலகோர் தொழவா னடைவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மறைக்காட்டீசுவரர். தேவியார்-யாழைப்பழித்தமொழியம்
திருப்பதிகம்—௰௧. [மை.

அடைத்திடக் கண்டுசண்பை யாண்டகை யாருமஞ்சொற்
றொடைத்தமி ழாளியாருந் தொழுதெழத் தொண்டரார்த்தார்
புடைப்பொழிந் திழிந்தவெங்கும் பூமழை புகலிவேந்தர்
நடைத்தமிழ்ப் பதிகமாலை நிரம்பிட நவின்றுபோற்றி. (௫௮௮)

அத்திரு வாயிறன்னி லற்றைநா டொடங்கிநேரே
மெய்த்திரு மறைகள்போல மேதினி புக்குப்போற்ற
வைத்தெதிர் வழக்கஞ்செய்த வரம்பிலாப் பெருமையோரைக்
கைத்தலங் குவித்துத்தாழ்ந்து வாழ்ந்தது கடல்சூழ்வையம். (௫௮௯)

அருமறை யானவெல்லா மகலிரு விசும்பிலார்க்குப்
பெருமையின் முழங்கப்பஞ்ச நாதமும் பிறங்கியோங்க
இருபெருந் தகையோர்தாமு மெதிரெதி ரிறைஞ்சிப்போந்து
திருமடங் களின்முன்புக்கார் செழும்பதி விழவுகொள்ள. (௫௯௰)

வேதங்க ளெண்ணில்கோடி மிடைந்துசெய் பணியைமிக்க
ஏதங்க ளம்பாலிப்ப ரிருவருஞ் செப்புமைத்தார்
நாதங்கொள் வடிவாய்நின்ற நதிபொதி சடையார்செய்ய
பாதங்கள் போற்றுமேலோர் பெருமையார் பகருநீரார். (௫௯௧)

திருமறை நம்பர்தாமுன் பருள்செய்த வதனைச்செப்பும்
ஒருமையி னின்றதொண்டர் தம்பிரா னூர்பாலொக்க
வருமருட் செய்கைதாமே வகுத்திட வல்லோரென்றும்
பெருமறை யுடன்மெய்த்தொண்டர்க் கிடையீடு பெரிதாமன்றே. (௫௯௨)

இவ்வகைத் திருமறைக்காட் டிறையவ ரருளேபுன்னி
மெய்வ்வகை தெரிந்தவாக்கின் வேந்தர்தாந் துயிலும்போதின்
மைவ்வளர் கண்டசைவ வேடத்தால் வந்துவாய்மூ
ரவ்விடை யிருத்துமங்கே வாவென்றங் கருளிப்போக. (௫௯௩)

கண்டவப் போதேகைகள் குவித்துடன் கடிதுசெல்வார்
மண்டிய காதலோடு மருவுவார் போன்றுங்காணு
ரெண்டிசை நோக்குவாருக் கெய்துவார் போலவெய்தா
வண்டர்தம் பிரானுர்தம்பின் போயினா ரார்வத்தோடும். (௫௯௪)

அங்கவ ரேகச்சண்பை யாண்டகை யாருமப்ப
ரெங்குற்ற தென்றுகேட்ப வெய்தினார் திருவாய்மூரிற்
பொங்கிய காதலாலென் னுரைத்திடப் போனதன்மை
சங்கையுற் றென்கொலென்று தாமுமங் கணையப்போந்தார். (௫௯௫)

அங்கிலே யணைந்தபோதி லம்பிகை யுடனேகூட
மன்னிய வாடல்காட்டத் தளரிள வளரும்பாடிச்
சென்னியால் வணங்கிவாய்மூ ரரசொடுஞ் சென்றுபுக்கங்
கின்னியல புறமுன்கூடி யிருவரும் போற்றிசெய்தார். (௫௯௬)

---

திருவாய்மூர்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

தளரிளவளரென வுமைபாடத் தாளம்மிடவோர் கழல்வீசிக்
கிளரிளமணி யரவரையார்த் தாடும்வேடக் கிறிமையார்
விளரிளமுலையவர்க் கருணல்கி வெண்ணீறணிந்தோர் சென்னிமேல்
வளரிளமதிய மோடிவார்நீர் வாய்மூரடிகள் வருவாரே.

திங்களோடருவரைப் பொழிற்சோலைத் தேனலங்கானலந் திருவாய்மூர்
அங்கமோடருமறை யொலிபாட லழனிறவண்ணர்த மடியரவி
னங்கடம்வினைகெட மொழியவல்ல ஞானசம்பந்தன் றமிழ்மாலை
தங்கியமனத்தினாற் றொழுதெழுவார் தவநெறியுலகுக்கோர் தவநெறியே.

திருச்சிற்றம்பலம்.

---

நீடுசீர்த் திருவாய்மூரி னிலவிய சிவனார்தம்மைப்
பாடுசேர் பதிகந்தன்னாற் பரவிப் பதியில்வைகக்
கூடுமெய் யன்புபொங்க விருவருங் கூடமீண்டு
தேடுமா மறைகள்கண்டார் திருமறைக் காடுசேர்ந்தார். (ருகூஎ)

சண்பைநா டுடையபிள்ளை தமிழ்மொழித் தலைவரோடு
மண்பயில் கீர்த்திச்செல்வ மாமறைச் காடுவைகிக்
கண்பயி னெற்றியார்தங் கழலிணை பணிந்துபோற்றிப்
பண்பயில் பதிகம்பாடிப் பரவியங் கிருந்தாரன்றே. (ருகூஅ)

---

திருமறைக்காடு-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பொங்குவெண்மணற் கானற் பொருகடற் றிரைதவழ் முத்தங்
கங்குலாரிருள் போழுங் கலிமறைக் காடமர்ந் தார்தா
திங்கள்சூடின ரேனுந் திரிபுர மெரித்தா ரேனு
மெங்குமெங்கள்பி ரானார் புகழல திகழ்பழி யிலரே.

மையுலாம்பொழில் சூழ்ந்த மாமறைக் காடமர்ந் தாரைக்
கையினாற்றொழு தெழுவான் காழியுள் ஞானசம் பந்தன்
செய்தசெந்தமிழ் பத்துஞ் சிந்தையுட் சேர்த்தன வல்லார்
பொய்யில்வானவ ரோடும் புகவலர் கொளவலர் புகழே.

திருச்சிற்றம்பலம்.

---

இவ்வகை யிவர்களங்க ணிருந்தன ராகவிப்பாற்
செய்வ்வகை யிடையேதப்புந் தென்னவன் பாண்டிநாட்டு
மெய்வ்வகை நெறியினில்லா வினையமண் சமயமிக்குக்
கைவ்வகை முறைமைத்தன்மை கழியமுன் கலங்குங்காலை. (ருகூகூ)

தென்னவன் றானுமுன்செய் தீவினைப் பயத்தினாலே
யந்நெறிச் சார்வுதன்னை யறமென நினைந்துநிற்ப
மன்னிய சைவவாய்மை வைதிக வழக்கமாகு
நன்னெறி திரிந்துமாறி நவைநெறி நடந்ததன்றே. (சு00)

பூழியர் தமிழ்நாட்டுள்ள பொருவில்சீர்ப் பதிகளெல்லாம்
பாழியு மருகர்மேவும் பள்ளிகள் பலவுமாகிச்
சூழிருட் குழுக்கள்போலத் தொடைமயிற் பீலியோடு
மூழிநீர் கையிற்பற்றி யமணரே யாகிமொய்ப்ப. (௯0௧)

பறிமயிர்த் தலையும்பாயும் பீலியுந் தடுக்குமேனி
செறியுமுக் குடையுமாகித் திரிபவ ரெங்குமாகி
யறியுமச் சமயநூலி னளவினி லடங்கிச்சைவ
நெறியினிற் சித்தஞ்செல்லா நிலைமையி னிகழுங்காலை. (௯0௨)

வரிசிலைத் தென்னவன்றா னுய்தற்கு வளவர்கோமான்
திருவுயிர்த் தருளுஞ்செல்வப் பாண்டிமா தேவியாருங்
குரைகழ லமைச்சனாராங் குலச்சிறை யாருமென்னு
மிருவர்தம் பாங்குமன்றிச் சைவமங் கெய்தாதாக. (௯0௩)

ஆங்கவர் தாங்களங்க ணரும்பெறற் றமிழ்நாடுற்ற
தீங்கினுக் களவுதேற்றாச் சிந்தையிற் பரிவுகொண்டே
யோங்கிய சைவவாய்மை யொழுக்கத்தி னின்றதன்மை
பூங்கழற் செழியன்முன்பு புலப்படா வகைகொண்டுய்த்தார். (௯0௪

இந்நெறி யொழுகுகின்றா ரேழுல குய்யவந்த
மன்னிய புகலிவேந்தர் வைதிக வாய்மைச்சைவச்
செந்நெறி விளக்குகின்றார் திருமறைக் காடுசேர்ந்த
நன்னிலை கன்னிநாட்டு நல்வினைப் பயத்தாற்கேட்டார். (௯0௫)

கேட்டவப் பொழுதேசிந்தை கிளர்ந்தெழு மகிழ்ச்சிபொங்க
நாட்பொழு தலர்ந்தசெந்தா மரைநகை முகத்தராகி
வாட்படை யமைச்சனாரு மங்கையர்க் கரசியாருஞ்
சேட்படு புலத்தாரேனுஞ் சென்றடி பணிந்தாரொத்தார். (௯0௬)

காதலான் மிக்கோர்தாங்கள் கைதொழுங் கருத்தினாலே
போதவிழ் சோலைவேலிப் புகலிகா வலனார்செய்ய
பாதங்கள் பணிமினென்று பரிசன மாக்கடம்மை
மாதவஞ் சுருதிசெய்த மாமறைக் காட்டில்விட்டார். (௯0௭)

ஆங்கவர் விடமுன்போந்த வறிவுடை மாந்தரங்க
ணீங்கிவண் டமிழ்நாட்டெல்லை பிற்பட நெறியினேகி
ஞாங்கர்நீர் நாடுங்காடு நதிகளுங் கடந்துவந்து
தேங்கமழ் கைதைநெய்தற் றிருமறைக் காடுசேர்ந்தார். (௯0௮)

திருமறைக் காடுநண்ணிச் சிரபுர நகரில்வந்த
வருமறைத் தலைவனாரங் கமர்ந்திருந் தருளுஞ்செல்வம்
பெருமடத் தணையவந்து பெருகிய விருப்பிற்றாங்கள்
வருமுறைத் தன்மையெல்லாம் வாயில்கா வலர்க்குச்சொன்னார். (௯0௯)

மற்றவர் சென்றுபுக்கு வளவர்கோன் மகளார்தென்னர்
கொற்றவன் றேவியாருங் குலச்சிறை யாருமேவப்
பொற்கழல் பணியவந்தா மெனச்சிலர் புறத்துவந்து
சொற்றன ரென்றுபோற்றித் தொழுதவிண் ணப்பஞ்செய்தார். (சுகo)

புகலிகா வலர்தாங்கேட்டுப் பொருவிலா வருண்முன்கூர
வகமலர்ந் தவர்கடம்மை யழைபுமென் றருளிச்செய்ப
ககைமுகச் செவ்விநோக்கி நற்றவ மாந்தர்கூவத்
தகவுடை மாந்தர்புக்குத் தலையினால் வணங்கிநின்றார். (சுகக)

நின்றவர் தம்மைநோக்கி நிகரில்சீர்ச் சண்பைமன்னர்
மன்றலங் குழலியாரா மானியார் தமக்குமானக்
குன்றென் நின்றமெய்ம்மைக் குலச்சிறை யார்தமக்கு
நன்றுதான் வினவக்கூறி நற்பதம் போற்றுவார்கள். (சுகஉ)

கன்னிநா டமணர்தம்மாற் கட்டழிந் திழிந்துதங்கண்
மன்னனு மவர்கண்மாயத் தழுந்தமா தேவியாருங்
கொன்னவி லயில்வேல்வென்றிக் குலச்சிறை யாருங்கூடி
யிங்கிலே புகலிவேந்தர்க் கியம்புமென் றிறைஞ்சிவிட்டார். (சுகங)

வேறு.

என்றவர்கள் விண்ணப்பஞ் செய்தபின்ன ரேறுயர்த்த சிவபெரு மான் றொண்டரெல்லாம், நன்றுநமை யாளுடைய நாதன்பாத நண்ணாத வெண்ணிலமண் குண்டர்தம்மை, வென்றருளிவேதநூ னெறியேபாசி வெண்ணீறு வேந்தனையு மிடுவித்தங்கு, நின்றசெயல் சிவனடியார் செய லேயாக நினைந்தருளவேண்டுமென நின்றுபோற்ற (சுகச)

மற்றவர்கட் கருள்புரிந்து பிள்ளையாரும் வாகீசமுனிவருடன் கூட ச்சென்று, பெற்றமுயர்த் தவர்பாதம் பணிந்துபோந்து பெரியதிருக்கோ புரத்து ளிருந்துதென்னு, டுற்றசெயல் பாண்டிமா தேவியாரு மூரிலமைய மைச்சருமுரைத்து விட்டவார்த்தை, சொற்றனியன் னவருக்குப் புகலி மன்னர் சொல்லியெழுந் தருளுதற்குத் துணிந்தபோது. (சுகரு)

அரசருளிச் செய்கின்றார் பிள்ளாய்அந்த வமண்கையர்வஞ்சனைக்கோ ரவதியில்லை, யுரைசெய்வ துளதுறுகோ டாளுநதிப வெழுந்தருள் வுடன் படுவ தொண்ணுதென்னப், பரசுவது நம்பெருமான் கழல்களென்றாற் பழுதணையாதெனப்பகர்ந்து பரயர்செய்ப, விரைசெய்மலர்த் தாள்போற் றிப் புகலிவேந்தர் வேயுறுதோளிபங்கயெடுத்து விளம்பினரே, (சுகசு)

வேயுறுதோளி-பண்-பியந்தைக்காந்தாரம்.
திருச்சிற்றம்பலம்.

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன் மிகநல்ல வீணைதடவி
மாசறு திங்கள்கங்கை முடிமேலணிந்தெ னுளமேபுகுந்தவதனா
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
யாசறு நல்லநல்ல வவைநல்லநல்ல வடியாரவர்க்குமிகவே.

தேனமர் பொழில்கொ ளாலைவிளைசெந்நெ றுன்னிவளர் செம்பொ னெங்குநிகழ, நான்முக னாதியாய பிரமாபுரத்து மறைஞான ஞானமுனி வன்,தானுறு கோளுநாளு மடியாரைவந்து நலியாதவண்ண முரைசெய், யானசொன்மாலையோது மடியார்கள்வானி லரசாள்வ ராணைநமதே.

திருச்சிற்றம்பலம்.

---

சிரபுரத்துப் பிள்ளையா ரருளிச்செய்த திருப்பதிகங் கேட்டதற்பின் றிருநாவுக் கரசுமதற்குடன்பாடு செய்துதாமு மவர்முன்னே யெழு ந்தருள வமைந்தபோது, புரமெரித்தார் திருமகனாரப்பரிந்தப் புனநாட் டிலெழுந்தருளி யிருப்பீரென்று, கரகமலங் குவித்திறைஞ்சித் தவிர்ப்ப வாக்கின் காவலருந்தொழுதரிதாங் கருத்தினேர்ந்தார். (௬௧௭)

வேதம்வளர்க்கவுஞ் சைவம்விளக்குதற்கும் வேதவனத்தருமணி யை மீண்டும்புக்குப், பாதமுறப் பணிந்தெழுந்து பாடிப்போற்றிப்பரசி யருள் பெற்றுவிடை கொண்டுபோந்து, மாதவத்துவாகீசர் மறுதவண் ணம் வணங்கியருள்செய்துவிடை கொடுத்துமன்னுங்,காதலினா லருமை யுறக் கலந்துநீங்கிக் கதிர்ச்சிவிகை மருங்கணைந்தார் காழிநாதர். (௬௧௮)

திருநாவுக் கரசருமங் கிருந்தாரிப்பாற் றிருஞானசம்பந்தர் செழுநீ ர்முத்தின், பெருநாமச்சிவிகையின்மீ தேறிப்பெற்ற முயர்த்தவர் தாள்செ ன்னியின்மேற் பேணுமுள்ளத், தொருநாமத் தஞ்செழுத்து மோதிவெ ண்ணீற் றொளிவிளங்குந்திருமேனி தொழுதார்நெஞ்சில், வருநாமத்தன் புருகுங் கடலாமென்ன மாதவரார்ப் பொலிவைய நிறைந்ததன்றே. ()

வேறு.

பொங்கியெழுந் திருத்தொண்டர் போற்றெடுப்பார் நாற்றிசையு
மங்கலதூ ரியந்தழங்க மறைமுழங்க மழைமுழங்குஞ்
சங்கபட கம்பேரி தாரைகா ளந்தாள
மெங்குமெழுந் தெதிரியம்ப விருவிசும்பு கொடிதூர்ப்ப. (௬௨௦)

மலர்மாரி பொழிந்திழிய மங்கலவாழ்த் தினிதிசைப்ப
வலர்வாசப் புனற்குடங்க ளணிவிளக்குத் தூபமுட
னிலைநீடு தோரணங்க ணிரைத்தடியா ரெதிர்கொள்ளக்
கலைமாலை மதிச்சடையா ரிடம்பலவுங் கைதொழுவார். (௬௨௧)

தெண்டிரைசூழ் கடற்கானற் றிருவகத்தி யான்பள்ளி
யண்டர்பிரான் கழல்வணங்கி யருந்தமிழ்மா மறைபாடிக்
கொண்டல்பயின் மணற்கோடு சூழ்கோடிக் குழகர்தமைத்
தொண்டருடன் றொழுதணைந்தார் தோணிபுரத் தோன்றலார். (௬௨௨)

திருஅகத்தியான்பள்ளி-பண்-காந்தாரம்,

திருச்சிற்றம்பலம்.

வாடியவெண் டலைமாலை சூடி மயங்கிரு
ணீடியர் கொள்ளி விளக்கு மாகநிவந்தெரி
யாடியவெம் பெருமா னகத்தியான் பள்ளியைப்
பாடிய சிந்தையினார்கட் கில்லையாம் பாவமே.

ஞாலமல்குந் தமிழ் ஞானசம்பந்தன் மாமயி
லாலுஞ்சோலை புடைசூழ் அகத்தியான் பள்ளியுட்
சூலநல்ல படையா னடி தொழுதேத்திய
மாலைவல்லா ரவர் தங்கள் மேல் வினைமாயுமே,

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அகத்தீசுவரர். தேவியார்-மங்கைநாயகி.

திருப்பதிகம்—க.

கண்ணார்ந்த திருநுதலார் மகிழ்ந்தகடிக் குளமிறைஞ்சி
யெண்ணார்ந்த திருவிடும்பா வனமேத்தி யெழுந்தருளி
மண்ணார்ந்த பதிபிறவு மகிழ்தருமன் பால்வணங்கிப்
பண்ணார்ந்த தமிழ்பாடிப் பரவியேசெல்கின்றார். (௬௨௩)

திருக்கடிக்குளம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொடிகொண்மேனி வெண்ணூலினர் தோலினர்புலியுரி யதளாடை
கொடிகொளேற்றினர் மணிகிணினெனவரு குரைகழல் சிலம்பார்க்கக்
கடிகொள்பூம்பொழில் சூழ்தருகடிக்குளத் துறையுங் கற்பகத்தைத்
முடிகள்சாய்த்தடி வீழ்தருமடியரை முன்வினை மூடாவே.

தனமலிபுகழ் தயங்குபூந்தரா யவர்மன்னனற்சம் பந்தன்
மனமலிபுகழ் வண்டமிழ்மாலைகண் மாலதாய் மகிழ்வோடுங்
கனமலிகட லோதம்வந்துதவிய கடிக்குளத் தமர்வானை
யினமலிந்திசை பாடவல்லார்கள்போ யிறைவனோ டுறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கற்பகேசுவரர். தேவியார்-சவுந்தரநாயகி.

திருப்பதிகம்—௧.

---

திருஇடும்பாவனம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

மனமார்தரு மடவாரொடு மகிழ்மைந்தர்கள் மலர்தூய்த்
தனமார்தரு சங்கக்கடல் வங்கத்திர ளுந்திச்
சினமா த ந திறல்வா ளெயிற் றரக்கன்மிகு குன்றி
லினமாதவ ரிறைவர்க்கிட மிடும்பாவன மிதுவே.

கொடியார் நெடுமாடக்குன்ற ளூரிற்கரைக் கோல
விடியார்கட லடிவீழ்தரு மிடும்பாவனத் திறையை
யடியாயுமந் தணர்காழியு ளணிஞானசம் பந்தன்
படியாற்சொன்ன பாடல்சொலப் பறையும்வினை தானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சற்குணநாதர். தேவியார்-மங்களநாயகி.

திருப்பதிகம்—௧.

---

திருவுசாத் தானத்துத் தேவர்பிரான் கழல்பணிந்து
மருவியசெந் தமிழ்ப்பதிக மால்போற்றும் படிபாடி
யிருவினையும் பற்றறுப்பா ரெல்லையிறந்த தொண்டருடன்
பெருகுவியப் பினராகிப் பிறபதியும் பணிந்தணைந்தார். (௯௨௪)

---

திருஉசாத்தானம்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்பு
வான்பொருபடைச் சுக்கிரீவன் னனுமான் றொழுக்
காரிடங் கொண்டுகாத் தருள் செய்தவெந்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே.

வரைத்திரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
றிரைதிரிந் தெறிகடற் றிருவுசாத் தானனை
யுரைதெரிந் துணருஞ்சம பந்தனொண் டமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே.

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமிபெயர்-மந்தரபுரீசர். தேவியார்-பெரியநாயகியம்மை.

திருப்பதிகம்—௧.

கருங்கழி வேலைப்பாலைக் கழிநெய்தல் கடந்தருளித்
திருந்தியசீர்ப் புனனாட்டுத் தென்மேல்பாற் றிசைநோக்கி
மருங்குமிடை தடஞ்சாலி மாடுசெறி குலைத்தெங்கு
நெருங்கிவளர் கமுகுடுத்த நிறைமருத வழிச்சென்றார். (௬௨௫)

சங்கங்கள் வயலெங்குஞ் சாலிகளைக் கரும்பெங்குங்
கொங்கெங்கு நிறைகமலக் குளிர்வாசத் தடமெங்கு
மங்கங்கே யுழவர்குழா மார்க்கின்ற வொலியெங்கு
மெங்கெங்கு மலர்ப்படுகரிவைகழிய வெழுந்தருளி. (௬௨௬)

தடமெங்கும் புனற்குடையுந் தையலார் தொய்யினிற
மிடமெங்கு மந்தணர்க ளோதுகிடை யாகிலை
மடமெங்குந் தொண்டர்குழா மனையெங்கும் புனைவதுவை
நடமெங்கு மொலிபோவா நற்பதிக ளவைகடந்து. (௬௨௭)

நீர்நாடு கடந்தருளி நெடும்புறவிற் குறும்புதல்கள்
கார்நாடு முகைமுல்லைக் கடிநாறு நிலங்கடந்து
போர்நாடுஞ் சிலைமறவர் புன்புலவைப் பிடைபோகிச்
சீர்நாடு தென்பாண்டி நன்னாடு சென்றணைவார். (௬௨௮)

மன்றன்மலர்ப் பிறங்கன்மருங் கெறிந்துவரு நதிகள்பல
சென்றணைந்து கடந்தேறித் திரிமருப்பின் கலைபுணர்மான்
கன்றுதெறித் தனவுகைக்குங் கானவதர் கடந்தணைந்தார்
கொன்றைநறுஞ் சடைமுடியார் மகிழ்ந்ததிருக் கொடுங்குன்றம். (௬௨௯)

கொடுங்குன்றத் தினிதமர்ந்த கொழும்பவளச் செழுங்குன்றை
யடுங்குறை முரித்தானை வணங்கியருந் தமிழ்பாடி
நெடுங்குன்றும் படர்கானு நிறைநாடுங் கடந்துநதி
தொடுங்குன்ற பதின்மதுரைத் தொன்னகர்வந் தணைகின்றார். (௬௩௰)

திருக்கொடுங்குன்றம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

வானிற் பொலிவெய்தும் மழைமேகங் கிழித்தோடிக்
கானற் பிறைசேருங் குளிர்சாரற் கொடுங்குன்றம்
ஆனிற் பொலிவைந்து மமர்ந்தாடி யுலகேத்தத்
தேனிற் பொலிமொழியா ளொடுமேயான் றிருநகரே.

கூனற் பிறைசடைமேல் மிகவுடையான் கொடுங்குன்றைக்
கானற் கழுமலமா நகர்த்தலைவன் ஞானசம்பந்த னலங்கொள் தமிழ்வல்லா
ரூனத் துயர்தீர்ந் துலகேத்தும் மேழிலோரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கொடுங்குன்றேசுவரர். தேவியார்குயிலமுதநாயகி.

திருப்பதிகம்—க.

---

வேறு.

இங்கிலை யிவர்வந்தெய்த வெண்பெருங் குன்றமேவு
மங்கிலை யமணர்தங்கட் கழிவுமுன் சாற்றலுற்றுப்
பன்முறை வெருக்கொண்டுள்ளம் பதைப்பத்தீக் கனாக்களோடுந்
துன்னிமித் தங்களங்கு நிகழ்ந்தன சொல்லலுற்றும். (௬௩௧)

பள்ளிகண் மேலுமாடு பயில்மண் பாழிமேலும்
ஒள்ளித ழசோகின்மேலு முணவுகொள் கவளங்கையிற்
கொள்ளுமண் டபங்கண்மேலுங் கூகையோ டாந்தைதீய
புள்ளின மானதம்மிற் பூசலிட் டழிவுசாற்றும். (௬௩௨)

பீலியுந் தடுக்கும்பாயும் பிடித்தவை வழுவிவீழக்
கால்களுந் தடுமாறிக் கண்களு மிடமேயாடி
மேல்வரு மழிவுக்காக வேறுகாரணமுங் காணார்
மாலுழந் தறிவுகெட்டு மயங்கின ரமணரெல்லாம். (௬௩௩)

கந்தியர் தம்மிற்றாமே கனன்றெழு கலாங்கள்கொள்ள
வந்தவா றமணர்தம்மின் மாறுகொண் டுறுசெய்ய
முந்தைய வுரையிற்கொண்ட பொறைமுத லவையும்விட்டுச்
சிந்தையிற் செற்றமுன்னுந் தீக்குணந் தலைநின்றார்கள். (௬௩௪)

இப்படி யமணர்வைகு மெப்பெயர்ப் பதியுமெய்து
மொப்பிலுற் பாதமெல்லா மொருவரி னொருவர்கூறி
மெய்ப்படு தீக்கனாவும் வேறுவே றாகக்கண்டு
செப்புவான் புறத்துளோருந் தென்னவன் மதுரைசேர்ந்தார். (௬௩௫)

அங்கவர் தன்னில்வாழ்வார் புறம்புநின் றணைவார்கூடி
மன்னவன் றனக்குங்கூறி மருண்டவுள் ளத்தராகித்
துன்னிய வழுக்குமெய்யிற் றூசிலார் பலருமீண்டி
பின்னதாங் கனவுகண்டே மெனவெடுத் தியம்பலுற்றார். (௬௩௬)

சீர் மலி யசோகுதன்கீ ழிருந்தனந் தேவர்மேலே
வேரொடு சாய்ந்துவீழக் கண்டன மதன்பின்னாக
வேர்கொண்மூக் குடையுந்தாமு மெழுந்துகை நாற்றிப்போக
ஊருளோ ரோடிக்காணக் கண்டன மென்றுரைப்பார், (௬௩௭)

குண்டிகை தகர்த்துப்பாயும் பீறியோர் குரத்தியோடப்
பண்டிதர் பாழிநின்றுங் கழுதைமேற் படர்வார்தம்மி
னெண்டொடி யியக்கியாரு மூளையிட்டுப் புலம்பியோடக்
கண்டன மென்றுசொன்னார் கையறு கவலையுற்றார். (௬௩௮)

கானிடை நட்டமாடுங் கண்ணுத றொண்டரெல்லா
மீனவன் மதுரைதன்னில் விரவிடக் கண்டோமென்பார்
கோனவன் றானும்வெய்ய கொழுந்தழன் முழுகக்கண்டோ
மானபி னெழவுங்கண்டோ மதிசய மிதுவாமென்பார். (௬௩௯)

மழவிடை யிளங்கன்றொன்று வந்துநங் கழகந்தன்னை
யுழறிடச் சிதறியோடி யொருவருந் தடுக்கவஞ்சி
விழவொரு புகலுமின்றி மேதினி தன்னைவிட்டு
நிழலிலா மரங்களேறி நின்றிடக் கண்டோமென்பார், (௬௪0)

ஆவதென் பாவிகாளிக் கனாத்திற மடிகண்மார்க்கு
மேவிய தீங்குதன்னை விளைப்பது திடமேயென்று
நோவுறு மனத்தராகி நுகர்பெறும் பதமுங்கொள்ளார்
யாவது செயலென்றெண்ணி யிடருழன் றழுங்கினார்கள். (௬௪௧)

அவ்வகை யவர்களெல்லா மந்நிலை மையர்களாகச்
சைவநன் மரபில்வந்த தடமயின் மடமென்சாயற்
பைவ்வள ரரவேரல்குற் பாண்டிமா தேவியார்க்கு
மெய்வ்வகை யமைச்சனார்க்கும் விளங்குநன் னிமித்தமென்மேல். ()

அளவிலா மகிழ்ச்சிகாட்டு மரும்பெரு நிமித்தமெய்த
வுளமகிழ் வுணருங்காலை யுலகெலா முய்யவந்த
வளரொளி ஞானமுண்டார் வந்தணைந் தருளும்வார்த்தை
கிளர்வுறு மோதைகூறி வந்தவர் மொழியக்கேட்டார். (௬௪௩)

அம்மொழி விளம்பினோர்க்கு வேண்டுவ வடையநல்கி
மெய்ம்மையில் விளங்குகாதல் விருப்புறு வெள்ளமோங்கத்
தம்மையு மறியாவண்ணங் கைமிக்குத் தழைத்துப்பொங்கி
விம்மிய மகிழ்ச்சிகூர மேவிய சிறப்பின்மிக்கார். (௬௪௪)

மங்கையர்க் கரசியார்பால் வந்தடி வணங்கிநின்ற
கொங்கலர் தெரியலாராங் குலச்சிறை யாரைநோக்கி
நங்கடம் பிரானாராய ஞானபோ னகர்முன்பெய்தி
யிங்கெழுந் தருளவுய்ந்தோ மெனவெதிர் கொள்ளுமென்றார். (௬௪௫)

மன்றலங் குழலினுளை வணங்கிப்போந் தமைச்சனாரும்
வென்றிவே லரசனுக்கு முறுதியே யெனவிரைந்து
பொன்றிகழ் மாடவீதி மதுரையின் புறத்துப்போகி
யின்றமிழ் மறைதந்தானை யெதிர்கொள வெய்துங்காலே. (௬௪௬)

அம்புய மலராள்போல்வா ளாலவா யமர்ந்தார்தம்மைக்
கும்பிட வேண்டுமென்று கொற்றவன் றனக்குங்கூறித்
தம்பரி சனங்கள்சூழத் தனித்தடை யோடுஞ்சென்று
நம்பரை வணங்கித்தாமு நல்வர வேற்றுநின்றார். (௬௪௭)

வேறு.

திருநிலவு மணிமுத்தின் சிவிகையின்மேற் சேவித்து
வருநிலவு தருமதிபோல் வளரொளிவெண் குடைநிழற்றப்
பெருகொளிய திருநீற்றுத் தொண்டர்குழாம் பெருகிவர
வருள்பெருக வருஞானத் தமுதுண்டா ரணைகின்றார். (௬௪௮)

துந்துபிகண் முதலாய தூரியங்கள் கிளராமே
யந்தணரா மாதவர்க ளாயிரமா மறையெடுப்ப
வந்தெழு மங்கலநாத மாதிரமுட் படமுழங்கச்
செந்தமிழ்மா ருதமெதிர்கொண் டெம்மருங்குஞ் சேவிப்ப. (௬௪௯)

பண்ணியவஞ் சனைத்தவத்தாற் பஞ்சவனாட் டிடைப்பரந்த
எண்ணிலமண் ணெனும்பாவ விருஞ்சேனை யிரிந்தோட
மண்ணுலக மேயன்றி வானுலகஞ் செய்தபெரும்
புண்ணியத்தின் படையெழுச்சி போலெய்தும் பொலிவெய்த. (௬௫௦)

துன்னுமுழு வுடற்றுகளாற் சூழுமுணர் வினிற்றுகளா
லன்னெறியிற் செறிந்தடைந்த வமண்பாசு கழுவுதற்கு
மன்னியொளிர் வெண்மையினாற் றூய்மையினால வழுதியர்தங்
கன்னிநாட் டிடைக்கங்கை யணைந்ததெனுங் கவின்காட்ட. (௬௫௧)

பானல்வயற் றமிழ்நாடு பழிநாடும் படிபரந்த
மானமிலா வமணென்னும் வல்லிருள்போய் மாய்வதனுக்
கானபெரு சொளிப்பரப்பா லண்டமெலாங் கொண்டதொரு
ஞானமணி விளக்கெழுந்து வருவதென நலம்படைப்ப. (௬௫௨)

புரசைவயக் கடகளிற்றுப் பூழியர்வண் டமிழ்நாட்டுத்
தரைசெய்தவப் பயன்விளங்கச் சைவநெறி தழைத்தோங்க
வுரைசெய்திருப் பேர்பலவு மூதுமணிச் சின்னமெல்லாம்
பரசமயக் கோளரிவந் தானென்று பணிமாற. (௬௫௩)

வேறு.

இப்பரி சனையுஞ் சண்பையர்பெருமா னெழுந்தருளும்பொழு தி
சைக்கு,மொப்பினித் திலப்பொற் றனிப்பெருங்காள முலகுய்ய வொலி
த்தெழு மோசை, செப்பரும் பெருமைக் குலச்சிறையார்தஞ் செவிநிறை
யமுதெனத் தேக்க,வப்பொழு தறிந்து தலத்தின்மேற் பணிந்தே யளப்
பருங்களிப்பின ரானார். (௬௫௪)

அஞ்சலிகுவித்த காங்களுந்தலைமே லணைந்திடக் கடிதுசென்றணைவார்
நஞ்சணி கண்டர் தந்திருமகனா ருடன்வரு நற்றவக் கடலை
நெஞ்சினி னிறைந்த வார்வமுன்செல்லக் கண்டுநீணிலத் திடைத்தாழ்ந்து
பஞ்சவர் பெருமான் மந்திரித்தலைவர் பாங்குற வணைந்துமுன் பணிந்தார்

நிலமிசைப் பணிந்த குலச்சிறையாரை நீடியபெருந்தவத் தொண்டர்
பலருமுன் னணைந்துவணங்கிமற் றவர்தாம்படியினின்றெழாவகைகண்டு
மலர்மிசைப் புத்தேள் வழிபடும்புகலி வைதிகச் சேகரர் பாதங்
குலவியங் கணைந்தார் தென்னவ னமைச்சர் குலச்சிறையாரெனக் கூற.

சிரபுரச் செல்வ ரவருரைகேட்டுத் திருமுகத் தாமரை மலர்ந்து,விர
வொளி முத்தின் சிவிகைநின் றிழிந்து விரைந்துசென்றவர் தமை யணை
ந்து, கரகம லங்கள்பற்றியே யெடுப்பக் கைதொழுதவருமுன் னிற்ப,வ
ரமிகு தவத்தா லவரையேநோக்கி வள்ளலார் மதுரவாக் களிப்பார். ()

செம்பியர் பெருமான் குலமகளார்க்குந் திருந்திய சிந்தையீ ருமக்கு
நம்பெரு மான்றன் றிருவருள்பெருகு நன்மைதான் வாலிதேயென்ன
வம்பல ரலங்கன் மந்திரியாரு மண்மிசைத் தாழ்ந்தடி வணங்கித்
தம்பெருந் தவத்தின் பயனனையார்க்குத் தன்மையா நிலையுரைக்கின்றார்.

சென்றகா லத்தின் பழுதிலாத்திறமு மினியெதிர்காலத்தின் சிறப்பு
மின்றெழுந் தருளப் பெற்றபேறிதனா லெற்றைக்குந் திருவருளுடையோ
ம், நன்றியி னெறியி லழுந்தியநாடு நற்றமிழ்வேந்தனு முய்ந்து,வென்றி
கொ டிருநீற் றொளியினில்விளங்கு மேன்மையும் படைத்தனமென்பார்

இங்கெழுந் தருளும் பெருமைகேட்டருளி யெய்துதற் கரியபே றெய்தி
மங்கையர்க் கரசியாரு நம்முடையவாழ் வெழுந்தருளிய தென்றே [வம்
பங்குநீ ரெதிர்சென் றடிபணிவீரென் றருள்செய்தா ரெனத்தொழு தார்
பொங்கிய களிப்பான் மீளவும்பணிந்து போற்றினார் புரவல ரமைச்சர்.()

ஆங்கனம் போற்றி யடிபணிந்தவர்மே லளவிலா வருள்புரிகருணை
தாங்கிய மொழியாற் றகுவனவிளம்பித் தலையளித் தருளுமப் பொழுதி,
லோங்கெயில் புடைசூழ் மதுரைதோன் றுதலு முயர்தவத் தொண்ட
ரைநோக்கி, யீங்குநம் பெருமான் றிருவாலவாய்மற் றெம்மருங் கினதெ
ன வினவ. (௬௬௧)

அன்பரா யவர்முன் பணிந்தசிரடியா ரண்ணலா ரடியினை வணங்கி முன்புநின் றெடுத்த கைகளாற்காட்டி முருகலர்சோலைகள் சூழ்ந்து, மின்பொலி விசும்பை யளக்குநீள் கொடிசூழ் வியனெடுங் கோபுரந்தோன்று மென்பணி யணிவா ரினிதமர்ந் தருளுந் திருவாலவா யதுவென்றார். ()

தொண்டர்தாம் போற்றிக் காட்டிடக்கண்டு துணர்மலர்க்கரங் குவித்தருளி,மண்டுபே ரன்பான் மண்மிசைப் பணிந்து மங்கையர்க் கரசியென்றெடுத்தே,யெண்டிசை பரவு மாலவாயாவ திதுவேயென் றிருவர்தம்பணியுங், கொண்டமை சிறப்பித் தருளிநற் பதிகம்பாடினார் குவலயம் போற்ற. (சுசுந)

---

திருஆலவாய்-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக்கைம்மட மானி
பங்கயச்செல்வி பாண்டிமாதேவி பணிசெய்துநாடொறும் பரவப்
பொங்கழலுருவன் பூதநாயகனால் வேதமும்பொருள்களு மருளி
யங்கயற்கண்ணி தன்னொடுமமர்ந்த வாலவாயாவது மிதுவே.

வெற்றவேயடியா ரடிமிசைவீழும் விருப்பினன்வெள்ளிநீ றணியுங்
கொற்றவன்றனக்கு மந்திரியாய குலச்சிறைகுலாவிநின் றேத்தும் [திட்
மொற்றைவெள் விடையனும்பரார்தலைவ னுலகினிலியற்கையையொழித்
டற்றவரகத்துச் சிவனுறைகின்ற வாலவாயாவது மிதுவே.

பன்னலம்புணரும் பாண்டிமாதேவி குலச்சிறையெனுமிவர் பணியு
மன்னலம்பெறுசீ ராலவாயீசன் றிருவடியாங்கவை போற்றிக்
கன்னலம்பெரிய காழியுள்ஞான சம்பந்தன்செந்தமி ழிவைகொண்
டின்னலம்பாட வல்லவரிமையோ ரேத்தவீற்றிருப்பவ ரினிதே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடும்பதிகம் பரவியேவந்து பண்புடை யடியவரோடுந்
தேடுமாலயனுக் கரியவர்மகிழ்ந்த திருவாலவாய் மருங்கணைந்து
நீடுயர்செல்வக் கோபுரமிறைஞ்சி நிறைபெருவிருப்புடன் புக்கு
மாடுசூழ்வலங் கொண்டுடையவர்கோ யின்மந்திரியாருடன் புகுந்தார்.

வேறு.

ஆளு மங்கண ராலவா யமர்ந்தினி திருந்த
காள கண்டரைக் கண்களின் பயன்பெறக் கண்டு
நீளவந் தெழு மன்பினாற் பணிந்தெழ நிறையார்
மீளவும் பல முறைநில முறவிழுந் தெழுவார். (சுசுடு)

அங்க மெட்டினு மைந்தினு மளவின்றி வணங்கிப்
பொங்கு காதலின் மெய்மயிர்ப் புளகமும் பொழியுஞ்
செங்க ணீர்தரு மருவியுந் திகழ்திரு மேனி
யெங்கு மாகிநின் றேத்தினர் புகலிய ரிறைவர். (சாசாசா)

நீலமா மிடற் றாலவா யானென நிலவு
மூல மாகிய திருவிருக் குக்குறண் மொழிந்து
சீல மாதவத் திருத்தொண்டர் தம்மொடுந் திளைத்தார்
சாலு மேன்மையிற் றலைச்சங்கப் புலவனார் தம்முன். (சாசாஎ)

---

திருஆலவாய்-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீலமாமிடற் றாலவாயிலான்
பாலதாயினார் ஞாலமாள்வரே
அடிகளாலவாய் படிகொள்சம்புந்தன்
முடிவிலின்றமிழ் செடிகணீக்குமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சொக்கநாதர். தேவியார்-மீனாட்சியம்மை.

திருப்பதிகம்—கக.

---

சேர்த்து மின்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்புச்
சாத்தி நல்லிசைத் தண்டமிழ்ச் சொன்மலர் மாலை
போர்த்து மின்புறப் பாடிவெண் பிறையணி சென்னி
மூர்த்தி யார்கழல் பரவியே திருமுன்றி லணைய. (சாசாஅ)

பிள்ளையா ரெழுந்தருளி முன்புகுது மப்பொழுது
வெள்ளநீர்பொதி வேணியார் தமைத்தொழும் விருப்பா
லுள்ளணைந்திட வெதிர்செலாதொரு மருங் கொதுங்குந்
தெள்ளுநீர்விழித் தெரிவையார் சென்றுமுன் பெய்த. (சாசாகூ)

மருங்கின்மந் திரியார் பிள்ளையார்கழல் வணங்கிக்
கருங்குழற் கற்றைமேற் குவிகைத்தளி ருடையார்
பருங்கை யானைவாழ் வளவர்கோன் பாவையாரென்னப்
பெருங்களிப் புடன்விரைந் தெதிர்பிள்ளை யாரணைந்தார். (சாஎ0)

தென்னவன் பெருந் தேவியார்சிவக் கன்றின் செய்ய
பொன்னடிக் கமலங்களிற் பொருந்தமுன் விழுந்தார்
மன்னுசண்பையர் வள்ளலார் மகிழ்சிறந் தளிக்கு
மின்னருட் பெருஞ்சிறப் பொடுந்திருக்கையா லெடுத்தார். (சாஎக)

ஞானபோனக ரெதிர்தொழு தெழுந்தநற் றவத்து
மாணியார்மனக் கருத்து முற்றியதென மதித்தே
பானலங்கண்கணீர் மல்கப் பவளவாய் குழறி
யானுமென் பதியுஞ் செய்ததவமென்கொ லென்றார். (சுஎஉ)

யாழின்மென் மொழியார் மொழிந்தெதிர் கழல் வணங்கக்
காழிவாழவந் தருளிய கவுணியர் பிரானுஞ்
சூழுமாகிய பரசமயத் திடைத் தொண்டு
வாழுநீர் மையீருமைக்காண வந்தன மென்று. (சுஎங)

இன்னவா றருள்செய்திடத் தொழுகடி வீழ்ந்தார்
மன்னுமந் திரியார் வருதிறமெலா மொழிய
வன்னமென் னடையார் தமக்கருள் செய்துபோக்கித்
துன்னுமெய்த் தொண்டர் சூழவந்தருளுமப் பொழுது. (சுஎச)

செல்வமல்கிய திருவால வாயினிற் பணிசெய்
தல்குதொண்டர்கள் பிள்ளையார் மருங்கணைந் திறைஞ்சி
மல்குகா ரமணிருள் கெடவீங்கு வந்தருள
வெல்லையிற் றவஞ்செய் தனமெனவெடுத் திசைத்தார். (சுஎரு)

அத்திருத் தொண்டர்தங்க ளுக்கருண்முக மளித்து
மெய்த்த காதலி னவரொடும் புறத்தினின் மேவிச்
சித்தமின்புறு மமைச்சனார் திருமடங் காட்டப்
பத்தர் போற்றிடப் பரிசனத்தொடுமினி தமர்ந்தார். (சுஎசு)

பாவுகாதலிற் பாண்டிமா தேவியா ரருளால்
விரவுநண்பொடு குலச்சிறை யார்விருந் தளிப்பச்
சிரபுரத்துவந் தருளிய செல்வரங் கிருந்தா
ரிரவிமேற்கட லணைந்தன னெல்லிவந் தணைய. (சுஎஎ)

வழுதிமாநக ரதனிடை மாமறைத் தலைவர்
பழுதில்சீ ரடியா ருடன்பகல்வரக் கண்ட
கழுதுபோல்வருங் காரமண் குண்டர்கள் கலங்கி
யிழுதுமெய் யிருட்கிருளென வீண்டினரொரு பால். (சுஎஅ)

அங்கண்மேவிய சமணர்கள் பிள்ளையா ரமர்ந்த
துங்கமாமடந் தன்னிடைத் தொண்டர்தம் குழாங்க
ளெங்குமோதிய திருப் பதிகத்திசை யெடுத்த
பொங்கு பேரொலி செவிப்புலம்புக்கிடப் பொறாராய். (சுஎகூ)

மற்றிவ் வான்பதி மன்னவன்மாறனை யெய்திச்
சொற்று மென்றுதஞ் சூழ்ச்சியுமொருபடி துணிவார்
கொற்றவன் கடைக் காவலர்முன்சென்று குறுகி
வெற்றி வேலவர்க் கெங்களைவிளம்புவி ரென்றார். (சுஅ0)

வாயில் காவலர் மன்னவன் றனையெதிர் வணங்கி
யாயமாகிவந் தடிகண்மா ரணைந்தன ரென்ன
வேயினனணைவா ரெனவவருஞ் சென் றிசைத்தார்
பாயினாலுடல் மூடுவார் பதைப்புடன் புக்கார். (௬௮௧)

புக்கபோதவ ரழிவுறு மனத்திடைப் புலர்ச்சி
மிக்கதன்மையை வேந்தனுங் கண்டெதிர் வினவி
யொக்கநீர்திரண் டணைவதற் குற்றதென் னென்னத்
தக்கதல்லதீங் கடுத்தது சாற்றுதற் கென்றார். (௬௮௨)

ஆவதேனுமக் கடுத்தது கூறுவீ ரென்று
காவலன்பரிந் துரைத்தலுங் காரமண் கையர்
மாவலாயுன்றன் மதுரையிற் சைவவே தியர்தா
மேவலாலின்று கண்டுமுட்டியா மென்று விளம்ப. (௬௮௩)

என்றுகூறலுங் கேட்டு முட்டியானுமென் றியம்பி
நன்றுநல்லறம் புரிந்தவா நானென்று நகுவான்
கன்றுமுள் ளத்தனாகியக் கண்ணுத லடியா
ரின்றுமா நகரணைந்த தெவ்வனவர்கள்யா ரென்றான். (௬௮௪)

மாலைவெண்குடை வளவர்சோ ணாட்டுவண் புகலிச்
சூலபாணிபான் ஞானம்பெற் றானென்று சுருதிப்
பாலனன்பர்தங் குழாத்தொடும் பணிமுத்தின் சிவிகை
மேலணைந்தன னெங்களை வாதினில் வெல்ல. (௬௮௫)

என்றுகூறுவா ரித்திற முன்புதா மறிந்த
தொன்றுமங் கொழியாவகை யுரைத்தலுந் தென்னன்
மன்றலம்பொழிற் சண்பையார் வள்ளலார் நாமஞ்
சென்றுதன்செவி நிறைத்தலுஞ் செயிர்த்துமுன் சொல்வான். (௬௮௬)

மற்றமாமறை மைந்தனிம் மருங்கணைந் தானே
லுற்றசெய்தொழி லியாதுசெய் கோமென வுரைப்பச்
செற்றமீக்கொண்ட சிந்தையுஞ் செய்கையு முடையோர்
கொற்றமன்னவன் மொழிக்கெதிர் குறித்துரை செய்வார். (௬௮௭)

வந்தவந்தணன் றன்னைநாம் வலிசெய்துபோக்குஞ்
சிந்தையன்றியச் சிறுமறையோ னுறை மடத்தில்
வெந்தழற்பட விஞ்சைமந் திரத்தொழில் விளைத்தா
லந்தநன்னக ரிட்டிரா னேகுமென் றிசைத்தார். (௬௮௯)

வேறு.

ஆவதொன் றிதுவேயாகி லதனையே விரைந்துசெய்யப்
போவதென் றவரைப்போக்கிப் பொய்மையே பொருளாக்கொண்டான்
யாவது முரையாடாதே யெண்ணத்திற் கவலையோடும்
பூவணை யமளிபுக்கான் பொங்கெழிற் றேவிசேர்ந்தாள். (சுஅகூ)

மன்னவ னுரைப்பதின்றி யிருக்கமா தேவியார்தா
மென்னுயிர்க் குயிராயுள்ள விறைவநீ யுற்றதென்னோ
முன்னுள மகிழ்ச்சியின்றி முகம்புலர்ந் திருந்தாயின்று
பன்னிய வுள்ளத்தெய்தும் பருவர லருள்செயென்றார். (சுகூ0)

தேவியார் தம்மைநோக்கித் தென்னவன் கூறுகின்றான்
காவிநீள் கண்ணினாய் கேள்காவிரிநாட் டின்மன்னுந
தாவில்சீர்க் கழுமலத்தான் சங்கர னருள்பெற்றிங்கு
மேவினனடி கண்மாரை வாதினில் வெல்லவென்று. (சுகூக)

வெண்பொடி பூசுந்தொண்டர் விரவினா ரவரையெல்லாங்
கண்டுமுட்டடி கண்மார்கள்கேட்டு முட்டியா னுங்காதல்
வண்டுணத் துதைந்த கோதைமானியே யிங்குவந்த
பண்புமற்றிதுவே யாரும்பரிசுவே றில்லையென்றான். (சுகூ௨)

மன்னவ னுரைப்பக்கேட்டு மங்கையர்க் கரசியார்தா
நின்னிலை யிதுவேயாகி னீடியதெய்வத் தன்மை
யன்னவர் வாதுசெய்தால் வென்றவர் பக்கஞ்சேர்ந்து
துன்னுவ துறுதியாகுஞ் சுழிவுறேன் மன்னவென்றார். (சுகூ௩)

சிந்தையிற் களிப்புமிக்குத் திருக்கழு மலத்தார்வேந்தன்
வந்தவா றெம்மையாள வெனவரு மகிழ்ச்சியோடுங்
கொந்தலர் குழலாள்போதக் குலச்சிறையா ரங்கெய்த
விந்தநன் மாற்றமெல்லா மவர்க்குரைத் திருந்தபின்னர். (சுகூ௪)

கொற்றவ னமைச்சனாருங் கைதலை குவித்துநின்று
பெற்றனம் பிள்ளையாரிங் கணைந்திடப் பெரும்பேறென்பா
ரிற்றைநா ளீசனன்பர் தம்மைநா மிறைஞ்சப்பெற்றோ
மற்றினிச் சமணர்செய்யும் வஞ்சனை யறிவோமென்றார். (சுகூ௫)

மானியர் தாமுமஞ்சி வஞ்சரிப் புலையர்தாங்க
ளீனமே புரியவல்லார் செய்வதென் னாமென்றெண்ணி
ஞானசம் பந்தர்தம்பா னன்மையல் லாதுசெய்யு
மூனம்வந் தடையில்யாமு முயிர்துறந் தொழிவமென்றார். (சுகூசு)

இவர்நிலை யிதுவேயாக விலங்குவேற் றென்னனனை
வுவனிலை யதுவாமங்கா ளருகர்தந் நிலையாதென்னிற்
றவமறைந் தல்லசெய்வார் தங்கண்மந் திரத்தாற்செந்தீ
சிவநெறி வளர்க்கவந்தார் திருமடஞ் சேரச்செய்தார். (சுகூ௭)

வேறு.

ஆதிமந்திர மஞ்செழுத் தோதுவார் நோக்கு
மாதிரத் தினுமற்றை மந்திர விதிவருமே
பூதிசாதனர் மடத்திற்றும் புனைந்த சாதனைகள்
சாதியா வகைகண்ட மண்குண்டர்க டளர்ந்தார். (சுகூஅ)

தளர்ந்து மற்றவர்தாஞ் செய்ததீத்தொழில் சரியக்
கிளர்ந்தவச்சமுங் கெழுமிய கீழ்மையோர் கூடி
விளங்கு நீண்முடிவேந்தனீ தறியினம் மேன்மை
யுளங்கொளானமர் விருத்தியு மொழிக்குமென் றுணர்வார். (சுகூகூ)

மந்திரச் செயல்வாய்த் திலமற் றினிச்செய்யும்
புந்தியாவ திங்கிதுவெனப் பொதிதழல் கொடுபுக்
கந்தண் மாதவர் திருமடப்புறத்தய விருள்போல்
வந்துதந் தொழில்புரிந் தனர்வஞ்சனை மனத்தோர். (எ00)

திருமடப் புறஞ்சுற்றினிற் றீயபா தகத்தோர்
மருவு வித்தவத் தொழில்வெளிப் படுதலுமறுகிப்
பரிசனத்தவர் பதைப்பொடுஞ் சிதைத்தது நீக்கி
யருகரித் திறம்புரிந் தமைதெளிந்து சென்றணைவார். (எ0க)

கழுமலப்பதிக் கவுணியர் கற்பகக் கன்றைத்
தொழுதுநின்ற மண்குண்டர் செய்தீங் கினைச்சொன்ன
பொழுது மாதவர் துயிலுமித் திருமடப்புறம்பு
பழுது செய்வதோ பாவிகாளெனப் பரிந்தருளி. (எ0உ)

என்பொருட் டவர்செய்த தீங்கா யினுமிறையோ
னன்பருக் கெய்துமோ வென்று பின்னையுமச்ச
முன்புறப் பின்புமுனி வுறமுத் தமிழ்விரகர்
மன்புரக்கு மெய்முறை வழுவென மனங்கொண்டார். (எ0ங)

வெய்யதீங் கிதுவேந்தன்மேற் றெனும்விதி முறையாற்
செய்யனே திருவாலவா யெனுந் திருப்பதிகஞ்
சைவர்வாழ் மடத்தமணர்க ளிட்டதீத் தழல்போய்ப்
பையவேசென்று பாண்டியற் காகெனப் பணித்தார். (எ0ச)

---

திருவாலவாய்-பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

செய்யனே திருவாலவாய் மேவிய
வையனே யஞ்சலென்றருள் செய்யெனைப்
பொய்யரா மமணர் கொளுவுஞ்சுடர்
பையவே சென்றுபாண்டியற் காகவே.

அப்பனுல வாயாதி யருளினல்
வெப்பந் தென்னவன்மே லுறமேதினிக்
கொப்ப ஞானசம்பந்த னுரைபத்தும்
செப்ப வல்லவர்தீதிலாச் செல்வரே.

திருச்சிற்றம்பலம்'

---

வேறு.

பாண்டிமாதேவியார் தமதுபொற்பிற் பயிலுநெடு மங்கலநாண் பாதுகாத்து மாண்டகையார் குலச்சிறையா ரன்பினுலு மரசன்பால பராத முறுதலாலு, மீண்டுசிவநெறியடையும் விதியினுலும் வெண்ணீறு வெப்பகலப் புகலிவேந்தர்,தீண்டியிடப் பேறுடைய னுதலாலுந் தீப்பிணியை ப்பையவே செல்லவென்றார். (எ0௫)

வேறு.

திருந்திசைப் பதிகத்தொடை திருவாலவாயின்
மருந்தினைச் சண்பைமன்னவர் புனைந்திடவருளால்
விரிந்தவெந்தழல் வெம்மைபோய்த் தென்னனைமேவிப்
பெருந்தழற்பொதி வெதுப்பெனப்பெயர் பெற்றதன்றே. (எ0௬)

செய்யமேனியர் திருமகனுருறை மடத்தி
னையுமுள்ளத்தராய மங்கையர் தானணுகிக்
கையினலெரியிட வுடன்படுமெல்லி கரப்ப
வெய்யவன்குணகட லிடையெழுந்த னன்மீது. (எ0எ)

இரவுபாதகர் செய்ததீங்கிரவிதன் மரபிற்
குரவவோதியார் குலச்சிறையாருடன் கேட்டுச்
சிரபுரப்பிள்ளை யாரை யித்தீ யவர்நாட்டு
வரவழைத்தநா மாயவதேயென மனமயங்கி. (எ0அ)

பெருகுமச்சமோ டாருயிர்பதைப்பவர் புன்பு
திருமடப்புற மருங்குதீதின்மையிற் றெளிந்து
கருமுருட்டமணைகயர் செய்தீங்கிது கடைக்கால்
வருவதெப்படியா மெனமனங் கொளும்பொழுது. (எ0௯)

அரசனுக்குவெப்படுத்த தென்றருகு கஞ்சுகிக
ளுரைசெயப்பதைத் தொருதனித்தேவியார் புகுத
விரையுமச்சமுமேற் கொளக்குலச்சிறை யாரும்
வரைசெய்பொற்புய மன்னவன்மருங்குவந் தணைந்தார். (எக0)

வங்கருக்குமெய் விதிர்ப்புறவெதுப்புறு வெம்மை
தாங்குவெந்தழற் கணமெனமெய்யெலாங் கவர்ந்து
போந்தமாளிகைப் புறத்துநின்றார்களும் புலர்ந்து
நீங்குபோம்படி யெழுந்ததுவிழுந்துட றிரங்க. (எகக)

உணர்வுமாவிபு மொழிவதற்கொருபுடை யொதுங்க
லணையணுற்றவ ரருகுதூரத்திடை யகலப்
புணரிலங்கத லிக்குருத்தொடுதளிர் புடையே
கொணரினுஞ்சுருக் கொண்டவை நுண்டுக ளாக. (எகஉ)

மருந்துநாலவர் தங்கள்பல்கலைகளில் வகுத்த
திருத்தகுந்தொழில் யாவையுஞ்செய்யவ மேன்மே
லுருத்தெழுந்தவெப் புயிரையுமுருக்குவ தாகக்
கருத்தொழிந்துளை மறந்தனன் கௌரியர் தலைவன். (எகங)

ஆனவன்பிணி நிகழ்வுழியமணர்க ளெல்லா
மீனவன்செயல் கேட்டலும்வெய்துயிர்த் தழிந்து
போனதங்கலுட் புகுந்ததின்விளைவுகொ லென்பார்
மானமுந்தெரி யாவகைமன்னன்மாட் டணைந்தார். (எகச)

வேறு.

மால்பெருக்குஞ் சமண்கையர் மருங்குசூழ்ந்து வழுதிநிலை கண்டழிந்து வந்தநோயின், மூலநெறி யறியாதே தங்கடேவர் மொழிநவின்மந்திரங்கொண்டு முன்னும்பின்னும்,பீலிகொடு தைவருதற் கெடுத்தபோது, பிடித்தபீ லிகள்பிரம்பி னோடுந்தீந்து,மேலெரியும் பொரிசிதறி வீழக்கண்டு வெப்பினதி சயநோக்கி வெருவின்மிக்கார். (எகரு)

கருகியமா சுடையாக்கைத் தீயோர்தங்கள் கைத்தூங்கு குண்டிகைநீர் தெளித்துக்காவா, யருகனே யருகனே யென் றென்றோதி யடல்வழுதி மேற்றெளிக்க வந்நீர்பொங்கிப்,பெருகுமெரி தழல்சொரிந்த நெய்போலாகிப் போர்த்துமொரு தழலதன்மேற் பெய்தாற்போல,வொருவருமிங் கிருமருங்கு மிராதுபோமென் றமணரைப்பார்த் துரைத்தரச னுணர்வு சோர்ந்தான். (எகசா)

வேறு.

பாண்டிமா தேவியாரும் பயமெய்தி யமைச்சர்பாரம்
பூண்டவர் தம்மைநோக்கிப் புகலியில் வந்துநம்மை
யாண்டுகொண் டவர்பாற்கங்கு லமணர்தாஞ் செய்ததீங்கு
மூண்டவா றினையதாகி முடிந்ததோ வென்றுகூற. (எகஎ)

கொற்றவ னமைச்சனாராங் குலச்சிறை யாருந்தாழ்ந்து
மற்றிதன் கொடுமையிந்த வஞ்சகர் மதில்கண்மூன்றுஞ்
செற்றவ ரன்பர்தம்பாற் செய்ததீங் கரசன்பாங்கு
முற்றியதிவர்கடூர்க்கின் முதிர்வதே யாவதென்பார். (எகஅ)

இருதிறத் தவருமன்ன னெதிர்பணிந் திந்தவெப்பு
வருதிறம் புகலிவந்த வள்ளலார் மதுரைநண்ண
வருகர்கள் செய்ததீய வனுசித மதனால்வந்து
பெருகிய திதற்குத்தீர்வு பிள்ளையா ரருளேயென்று. (எகக)

காயமு மனமுமாசு கழுவுதல் செய்யார்செய்யு
மாயமு மிந்தநோயை வளர்ப்பதே வளர்வெண்டிங்கண்
மேயவே ணியர்பான்ஞானம் பெற்றவர் விரும்பிநோக்கத்
தீயவிப் பிணியேயன்றிப் பிறவியுந் தீருமென்றார், (எ௨௦)

மீனவன் செவியினூடு மெய்யுணர் வளிப்போர்கூற
ஞானசம் பந்தரென்னு நாமமந் திரமுஞ்சொல்ல
வானபோ தயர்வுதன்னை யகன்றிட வமணராகு
மானமில் லவரைப்பார்த்து மாற்றமொன் றுரைக்கலுற்றான். (எ௨௧)

மன்னவ னவரைநோக்கி மற்றிவர் செய்கையெல்லா
மின்னவா றெய்துநோய்க்கே யேதுவா யினவென்றெண்ணி
மன்னிய சைவநீதி மாமறைத் தலைவர்வந்தா
லன்னவ ரருளாலிந்நோ யகலுமே லறிவேனென்பான். (எ௨௨)

என்றுமுன் கூறிப்பின்னும் யானுற்ற பிணியைத்தீர்த்து
வென்றவர் பக்கஞ்சேர்வன் விரகுண்டே லழையுமென்ன
வன்றவ ருவகைபொங்கி யார்வத்தா லணையைநூக்கிச்
சென்றநீர் வெள்ளம்போலுங் காதல்வெள் ளத்திற்செல்வார். (எ௨௩)

பாயுடைப் பாதகத்தோர் திருமடப் பாங்குசெய்த
தீவினைத் தொழிலைநோக்கி யுள்ளழி திருவுள்ளத்தான்
மேயவத் துயரநீங்க விருப்புறு விரைவினோடு
நாயகப் பிள்ளையார்த நற்பதம் பணிவாராகி. (எ௨௪)

மன்னவ னிடும்பைதீர மற்றவன் பணிமேற்கொண்டே
யன்னமென் னடையினாரு மணிமணிச் சிவிகையேறி
மின்னிடை மடவார்சூழ வேற்படை யமைச்சனாரு
முன்னணைந் தேகச்சைவ முதல்வனார் மடத்தைச்சார்ந்தார். (எ௨௫)

திருமடஞ் சாரச்சென்று சேயரிக் கண்ணினார்முன்
வருபரி யிழிந்துநின்ற வமைச்சனார் வந்தபான்மை
சிரபுரப் பிள்ளையார்க்கு விண்ணப்பஞ் செய்வீரென்னப்
பரிசனத் தவரும்புக்குப் பதமறிந் துணர்த்துகின்றார். (எ௨௬)

பாண்டிமா தேவியாரும் பரிவுடை யமைச்சனாரு
மீண்டுவந் தணைந்தாரென்று விண்ணப்பஞ் செய்யச்சண்பை
யாண்டகை யாருமீண்ட வழையுமென் றருளிச்செய்ய
மீண்டுபோந் தழைக்கப்புக்கார் விரைவுறும் விருப்பின்மிக்கார். (எ௨எ)

வேறு.

ஞானத்தின் றிருவுருவை நான்மறையின் றனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தி னெழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள். (எஉஅ)

கண்டபொழு தமண்கொடியோர் செய்தகடுந் தொழிநினைந்தே
மண்டியகண் ணருவிநீர் பாயமலர்க் கைகுவித்துப்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில முறவீழ்ந்தார்
கொண்டகுறிப் போடுநெடி துயிர்த்தழிந்த கொள்கையராய். (எஉகூ)

உரைகுழறி மெய்நடுங்கி யொன்றுமறிந் திலர்தம்மைத்
தரையின்மிசைப் புரண்டயர்ந்து சரணகம லம்பற்றிக்
கரையில்கவ லைக்கடற்கோர் கரைபற்றி னூர்போன்று
விரைவுறுமெய் யன்பினுல் விடாதொழிவார் தமைக்கண்டு. (எகூ0)

அருமறைவாழ் பூம்புகலி யண்ணலா ரடிபூண்ட
விருவரையுந் திருக்கையா லெடுத்தருளித் தேற்றிடவுந்
தெருமந்து தெளியார்தா தமைநோக்கிச் சிறப்பருளித்
திருவுடையீ ருங்கள்பாற் றீங்குளதோ வெனவினவ. (எகூக)

வெஞ்சமணர் முன்செய்த வஞ்சனைக்கு மிகவழிந்தே
யஞ்சினேந் திருமேனிக் கடாதென்றே யதுதீர்ந்தோம்
வஞ்சகர்மற் றவர்செய்த தீத்தொழில்போய் மன்னவன்பா
லெஞ்சலிலாக் கொடுவெதுப்பா யெழாநின்ற தெனத்தொழுது. (எகூஉ)

வெய்யதொழி லமண்குண்டர் விளைக்கவரும் வெதுப்பவர்தாஞ்
செய்யுமதி மாயைகளாற் றீராமைத் தீப்பிணியா
மையலுறு மன்னவன்முன் மற்றவரை வென்றருளி
யுய்யுமெம துயிருமவ னுயிருமென வுரைத்தார்கள். (எகூகூ)

வேறு.

என்றவ ருரைத்தபோதி லெழில்கொள்பூம் புகலிவேந்த
ரொன்றுநீ ரஞ்சவேண்டா வுணர்விலா வமணர்தம்மை
யின்றுநீ ருவகையெய்த யாவருங் காணவாதில்
வென்றுமீ னவனைவெண்ணீ றணிவிப்பன் விதியாலென்றூர். (எகூச)

மொழிந்தருள வதுகேட்டு முன்னிறைஞ்சி முகமலர்வா
ரழுந்துமிடர்க் கடலிடைநின் றடியோமை யெடுத்தருளச்
செழுந்தரளச் சிவிகையின்மேற் றென்னாடு செய்தவத்தா
லெழுந்தருளப் பேறுடையோ மென்பெறுே மெனத்தொழுலும். (எகூரு)

வேறு.

ஆவது மழிவதெல்லா மவர்செய லமைவாகும்
பாவகா ரிகளைநோக்கும் பழுதுட னீங்கவெல்லச்
சேவுயர் கொடியினுர்தங் திருவுள்ள மறிவேனென்று
பூவலர் பொழில்சூழ்சண்பைப் புரவலர் போதுகின்றுர், (எ௬௬)

வையக முய்யவந்த வள்ளலார் மடத்தினின்று
மெய்யணி நீற்றுத்தொண்டர் வெள்ளமும் தாமும்போந்து
கையிணை தலையின்மீது குவியக்கண் மலர்ச்சிகாட்டச்
செய்யவார் சடையார்மன்னுங் திருவால வாயுட்புக்கார். (எ௬எ)

நோக்கிட விதியிலாரை நோக்கியான் வாதுசெய்யத்
தீக்கனன் மேனியானே திருவுள மேயென்றெண்ணில்
பாக்கியப் பயனுயுள்ள பாலரு வாயர்மெய்மை
நோக்கிவண் டமிழ்செய்மாலைப் பதிகந்தா னுவலலுற்றுர். (எ௬அ)

கானிடை யாடுவாரைக் காட்டுமா வுரிமுன்பாடித்
தேனலர் கொன்றையார்தங் திருவுள நோக்கிப்பின்னு
மூனமில் வேதவேள்வி யென்றெடுத் துரையின்மாலை
மானமி லமணர்தம்மை வாதில்வென் றழிக்கப்பாடி. (எ௬௯)

ஆலமே யமுதமாக வுண்டுவா னவர்க்களித்துக்
காலனை மார்க்கண்டற்காக் காய்ந்தனை யடியேற்கின்று
ஞாலநின் புகழேயாக வேண்டுநான் மறைகளேத்துஞ்
சீலமே யாலவாயிற் சிவபெரு மானேயென்றுர். (எஎ0)

---

திருவாலவாய்-பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

காட்டுமாவ துரித்துரி போர்த்துட
ஞட்டமூன் றுடை யாயுரைசெய்வனுன்
வேட்டுவேள்விசெய் யாவமண்கையரை
யோட்டிவாதுசெ யத்திருவுள்ளமே.

செந்தேனுமுர லுந்திருவால்வாய்
மைந்தனேயென்று வல்லமணுசறச்
சந்தமார்தமிழ் கேட்டமெய்ஞ்ஞானசம்
பந்தன்சொற்பக ரும்பழிநீங்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவாலவாய்-நாலடிமேல்வைப்பு.

திருச்சிற்றம்பலம்.

வேதவேள்வியை நிந்தனைசெய்துழ
லாதமில்லி யமணொடுதேரரை
வாதில்வென் றழிக்கத்திருவுள்ளமே
பாதிமாதுட னாயபரமனே
ஞாலநின் புகழேவேண்டுந்தென்
னாலவாயி லுறையுமெம்மாதியே.

கூடலாலவாயக் கோனைவிடைகொண்டு
வாடன்மேனி யமணரைவாட்டிட
மாடக்காழிச்சம் பந்தன்மதித்தவிப்
பாடல்வல்லவர் பாக்கியவாளரே.

திருச்சிற்றம்பலம்.

---

நாதர்தம் மருண்முன்பெற்று நாடிய மகிழ்ச்சிபொங்கப்
போதுவார் பணிந்துபோற்றி விடைகொண்டு புனிதநீற்றின்
மேதகு கோலத்தோடும் விருப்புறு தொண்டர்சூழ
மூதெயிற் கவாடநீடு முதற்றிரு வாயில்சார்ந்தார். (௭௪௧)

அம்மலர்க் குழலினார்க்கு மமைச்சர்க்கு மருளவேண்டிச்
செம்மணிப் பலகைமுத்தின் சிவிகைமேற் கொண்டபோதில்
எம்மருங் கினிலுந்தொண்ட ரெடுத்தார்ப் பெல்லையின்றி
மும்மைநீ டுலகமெல்லா முழுதுட னிறைந்ததன்றே (௭௪௨)

பல்லிய நாதம்பொங்கப் படர்திரு நீற்றின்சோதி
நல்லொளி வட்டமாகி நண்ணிமேல் வருவதென்ன
வில்வளர் தரளக்கோவை வெண்குடை நிழற்றவெவ்வே
றெல்லையின் முத்தின்காளந் தாரைசங் கெங்குமொத்த. (௭௪௩)

கண்ணினுக் கணியாயுள்ளா ரெழுச்சியிற் காட்சிபெற்றார்
நண்ணிய சமயம்வேறு நம்பின ரெனினுமுன்பு
பண்ணிய தவங்களென்கொல் பஞ்சவன் றஞ்சமேவிப்
புண்ணிய மூர்த்திவந்து மதுரையிற் புகுதவென்றார். (௭௪௪)

தென்னவன் றேவியாருந் திருமணிச் சிவிகைமீது
பின்வர வமைச்சர்முன்பு பெருந்தொண்டர் குழாத்துச்செல்லப்
பொன்னணி மாடவீதி யூடெழுந் தருளிப்புக்கார்
கன்னிநா டுடையான்கோயில் காழிநா டுடையபிள்ளை. (௭௪௫)

கொற்றவன் றன்பான்முன்பு குலச்சிறை யார்வந்தெய்திப்
பொற்றட மதில்சூழ்சண்பைப் புரவலர் வரவுகூற
முற்றுயர் சிறிதுநீங்கி முழுமணி யணிப்பொற்பீட
மற்றவன் முடியின்பக்கத் திடுகென வல்லானான்; (எசசு)

மந்திரி யாரைப்பின்னு மெதிர்செல மன்னவேவச்
சிந்தையுண் மகிழ்ந்துபோந்தார் செயலையான் சமயத்துள்ளோர்
பைந்துண ரலங்கன்மன்னன் பரிசுகண் டிதுவோவண்பா
ணந்தனிச் சமயந்தன்னை நாட்டுமா றென்றுபின்னும். (எசஎ)

தின்னற நெறியைநீயே காத்தருள் செய்தியாகி
லன்னவர் தம்மையிங்கே யழைத்தனை யவரும்யாமு
முன்னுற வொக்கத்தீர்க்க மொழிந்துமற் றவராற்றீர்ந்த
தென்னினு மியாமுந்தீர்த்தோ மாகவு மிசைவாயென்றார். (எசஅ)

பொய்தவ மாகக்கொண்ட புன்றலைச் சமணர்கூறச்
செய்தவப் பயன்வந்தெய்துஞ் செவ்விமுன் னுறுதலாலே
யெய்திய தெய்வச்சார்வா லிருதிறத் தீருந்தீருங்
கைதவம் பேசமாட்டே னென்றுகை தவனுஞ்சொன்னான். (எசகூ)

என்றவ னுரைப்பக்குண்ட ரெண்ணங்கெட் டிருந்தவெல்லைத்
தென்றமிழ் நாடுசெய்த செய்தவக் கொழுந்து போல்வார்
வன்றனிப் பவனமுன்னர் வாயிலு ளணைந்துமாடு
பொன்றிகழ் தரளப்பத்திச் சிவிகைநின் றிழிந்துபுக்கார். (எருo)

குலச்சிறை யார்முன்பெய்தக் கொற்றவன் றேவியாருந்
தலத்திடை யிழிந்துசென்றார் தண்டமிழ் நாட்டுமென்ன
னிலத்திடை வானினின்று நீளிரு ளகங்கவந்த
கலைச்செழுந் திங்கள்போலுங் கவுணியர் தம்மைக்கண்டான். (எருக)

கண்டவப் பொழுதேவேந்தன் கையெடுத் தெய்தநோக்கித்
தண்டுணர் முடியின்பாங்கர் தமனியப் பீடங்காட்ட
வண்டமிழ் விரகர்மேவி யதன்மிசை யிருந்தார்மாயை
கொண்டவல் லமணரெல்லாங் குறிப்பினு ளச்சங்கொண்டார். (எருஉ)

செழியனும் பிள்ளையார்தந் திருமேனி காணப்பெற்று
விழியுற நோக்கலாலே வெம்மைநோய் சிறிதுநீங்கி
யழிவுறு மனநேர்நிற்க வந்தணர் வாழ்வைநோக்கிக்
கெழுவுறு பதியாதென்று விருப்புடன் கேட்டபோது. (எருங)

வேறு.

பொன்னிவளந் தருநாட்டுப் புனற்பழனப் புறம்பணைசூழ்
கன்னிமதிற் கழுமலநாங் கருதுமூ ரெனச்சிறந்த
பன்னிரண்டு பெயர்பற்றும் பரவியசொற் றிருப்பதிகந்
தென்னவன்முன் பருள்செய்தார் திருஞான சம்பந்தர். (எருச)

திருப்பிரமபுரம்-திருச்சக்கரமாற்று.
திருச்சிற்றம்பலம்.

பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த்தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ்சண்பை
யரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங் காதியாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலநாம் பரவுமூரே.

காவி மலர்புரையுங் கண்ணார்கழுமலத்தின் பெயரைநாளும்
பாவியசீர்ப் பன்னிரண்டு நன்னூலாப் பத்திமையாற் பனுவன்மாலை
நாவினலம் புகழ்சீர் நான்மறையான் ஞானசம் பந்தன்சொன்ன
மேவியிசை மொழிவார் விண்ணவரி லெண்ணுதலை விருப்புளாரே.

திருச்சிற்றம்பலம்,

---

பிள்ளையார் செம்பொன்மணிப் பீடத்தி லிருந்தபொழு
துள்ளநிறை பொறுமையினு லுழையிருந்த காரமணர்
கொள்ளுமனத் திடையச்ச மறைத்துமுகங் கோபத்தீத்
துள்ளியெழ மெனக்கண்கள் சிவந்துபல சொல்லுவார். (எருரு)

காலையெழுங் கதிரவனைப் புடைசூழுங் கருமுகில்போற்
பீலியொடு சமணையர் பிள்ளையார் தமைச்சூழ்வா
ரோலவே வாதினல் வெல்வதனுக் கெண்ணித்தாங்
கோலுறு லெடுத்தோதித் தலைதிமிர்ப்பக் குரைத்தார்கள். (எருசு)

பிள்ளையா ரதுகேளாப் பேசுதிர் நும் பொருளெல்லை
யுள்ளவா றென்றருள வூற்றைவாய்ப் பறிதலையர்
துள்ளியெழுந் தனேகராய்ச் சூழ்ந்துபத றிக்கதற
வொள்ளிழையா ரதுகண்டு பொறுராகி யுண்ணடுங்கி. (எருஎ)

வேறு.

தென்னவன் றன்னைநோக்கித் திருமேனி யெளியர்போலு
மின்னருட் பிள்ளையார்மற் றிவருவ ரெண்ணிலார்கண்
மன்னநின் மயக்கமெங்கள் வள்ளலார் தீரநல்கும்
பின்னையிவ் வமணர்மூள்வார் வல்லரேற் பேசவென்றார். (எருஅ)

மாறனு மவரைநோக்கி வருந்தனீ யென்றுமற்று
வேறுவா தென்கொலென்மேல் வெப்பொழித் தருகர்நீரு
மாறணி சடையினருக் கன்பரா மிவருநீங்க
டேறிய தெய்வத்தன்மை யென்னிடைத் தெரிப்பீரென்றான். (எருகூ)

ஞானவா ரமுதமுண்டார் நற்றவத் திருவையொத்த
மானினேர் விழியினய்கேண் மற்றெனைப் பாலனென்று
நீநனி யஞ்சவேண்டா நிலைபிலா வமணர்க்கென்றும்
யானெளி யெனலேனென் றெழுந்திருப் பதிகம்பாடி. (எகூ0)

---

திருவாலவாய்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மானினேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலனீங்கிவ னென்றுநீபரி வெய்திடேல்
ஆனைமாமலை யாதியாய விடங்களிற்பல வல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்றிரு வாலவாயா னிற்கவே.

எக்கராமமண் கையருக்கெளி யேனலேன் றிருவாலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்கவேதுளங் கும்முடித்தென்னன் முன்னிவை
தக்கசீர்ப்புக லிக்குமன்றமிழ் நாதன்ஞான சம்பந்தன்வா
யொக்கவேயுரை செய்தபத்து முரைப்பவர்க்கிட ரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

---

பெற்றியா லருளிச்செய்த பிள்ளையார் தமக்குமுன்னஞ்
சுற்றுநின் றழைத்தலோவா வருகர்க்குந் தென்னர்கோமா
னிற்றைநா ளென்னையுற்ற பிணியைநீ ரிகலித்தீருந்
தெற்றெனத் தீர்த்தார்வாதில் வென்றவ ரென்றுசெப்ப. (எசுக)

மன்னவன் மாற்றங்கேட்டு வடிவுபோன் மனத்துமாசு
துன்னிய வமணர்தென்னர் தோன்றலை நோக்கிநாங்க
ளுன்னுடம் பதனில்வெப்பை யொருபுடை வாமபாக
முன்னமந் திரித்துத்தெய்வ முயற்சியாற் றீர்த்துமென்றார். (எசுஉ)

யாதுமொன் றறிவிலாதா ரிருளென வணையச்சென்று
வாதினின் மன்னவன்றன் வாமபா கத்தைத்தீர்ப்பார்
மீதுதம் பீலிகொண்டு தடவிட மேன்மேல் வெப்புத்
தீதுறப் பொறுதுதென்னன் சிரபுரத் தவரைப்பார்த்தான். (எசுங)

தென்னவ னோக்கங்கண்டு திருக்கழு மலத்தார்செல்வ
ரன்னவன் வலப்பால்வெப்பை யாலவா யண்ணனீறே
மன்னுமந் திரமுமாகி மருந்துமாய்த் தீர்ப்பதென்று
பன்னிய மறைகளேத்திப் பகர்திருப் பதிகம்பாடி. (எசுச)

---

திருவாலவாய்-திருநீற்றுப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறு சமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமை பங்கன் றிருவாலவாயான்றிருநீறே.

ஆற்றலடல்விடையேறு மாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவு பூசுரன்ஞானசம்பந்தன்
தேற்றித்தென்னனுடலுற்ற தீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும் வல்லவர்நல்லவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவளர் நீறுகொண்டு திருக்கையாற் றடவத்தென்னன்
பெருவரு வெப்புநீங்கிப் பொய்கையிற் குளிர்ந்ததப்பான்
மருவிய விடப்பான்மிக்க வழலெழ மண்டுதீப்போ
லிருபுடை வெப்புங்கூடி யிடங்கொளா தென்னப்பொங்க. (எசுரு)

உறியுடைக் கையர்பாயி னுடுக்கையர் நடுக்கமெய்திச்
செறிமயிற் பீலிதீயத் தென்னன்வெப் புறுதீத்தம்மை
யெறியமா சுடலுங்கன்றி யருகுவிட் டேறநிற்பா
ரறிவுடை யாரையொத்தா ரறிவிலா நெறியினின்றார். (எசுசு)

பலர்தொழும் புகலிமன்ன ரொருபுடை வெப்பைமாற்ற
மலர்தலை யுலகின்மிக்கார் வந்ததி சயித்துச்சூழ
விலகுவேற் றென்னன்மேனி வலமிட மெய்திநீடு
முலகினிற் றண்மைவெம்மை யொதுங்கினு லொத்ததன்றே. (எசுஎ)

மன்னவன் மொழிவனென்னே மதித்தவிக் காலமொன்றில்
வெந்நர கொருபாலாகும் வீட்டின்ப மொருபாலாகுந்
துன்னுநஞ் சொருபாலாகுஞ் சுவையமு தொருபாலாகு
மென்வடி வொன்றிலுற்றே னிருதிறத் தியல்புமென்பான். (எசுஅ)

வெந்தொழி லருகர்தோற்றீ ரென்னைவிட் டகலநீங்கும்
வந்தெனை யுய்யக்கொண்ட மறைக்குல வள்ளலாரே
யிந்தவெப் படையநீங்க வெனக்கருள் புரிவீரென்று
சிந்தையாற் றெழுதுசொன்னான் செல்கதிக் கணியனானான். (எசுக)

திருமுகங் கருணைகாட்டத் திருக்கையி னீறுகாட்டிப்
பெருமறை துதிக்குமாற்றாற் பிள்ளையார் போற்றிப்பின்னு
மொருமுறை தடவவங்க ணொழிந்துவெப் பகன்றுநீங்கி
மருவுதீப் பிணியுநீங்கி வழுதியு முழுதுமுய்ந்தான். (எஎ0)

கொற்றவன் றேவியாருங் குலச்சிறை யாருந்தீங்கு
செற்றவர் செய்யபாத தாமரை சென்னிசேர்த்திப்
பெற்றனம் பெருமையின்று பிறந்தனம் பிறவாமேன்மை
யுற்றனன் மன்னனென்றே யுளங்களித் துவகைமிக்கார். (எஎக)

மீனவன் றன்மேலுள்ள வெப்பெலா முடனேமாற
வானபே ரின்பமெய்தி யுச்சிமே லங்கைகூப்பி
மானமொன் றில்லார்முன்பு வன்பிணி நீக்கவந்த
ஞானசம் பந்தர்பாத நண்ணினா னுய்ந்தேனென்றான். (எஎ௨)

வேறு.

கந்துசிறு மாலியானை மீனவன் கருத்துநேர்
வந்துவாய்மை கூரமற்று மாசுமேனி நீசர்தா
முந்தைமந் திரத்துவிஞ்சை முற்றுமெஞ்ச வஞ்சியே
சிந்தைசெய்து கைவருந் திறந்தெரிந்து தேடுவார். (எஎ௩)

சைவமைந்தர் சொல்லின்வென்றி சந்தவின்சொன் மாலையாற்
கைதவன்றன் வெப்பொழித்த தன்மைகண் டறிந்தன
மெய்தெரிந்த தர்க்கவாதம் வெல்லலாவ தன்றுவே
றெய்துதீயி னீரில்வெல்வ தென்றுதம்மி லெண்ணினர். (எஎ௪)

பிள்ளையாரு முங்கள்வாய்மை பேசுமின்க ளென்றலுந்
தள்ளுநீர்மை யார்கள்வேறு தர்க்கவாதி னுத்தரங்
கொள்ளும்வென்றி யன்றியே குறித்தகொள்கை யுண்மைதா
னுள்ளவாறு கட்புலத்தி லுய்ப்பதென்ன வொட்டினர். (எஎ௫)

என்றுவாது கூறலு மிருந்ததென்னர் மன்னனுங்
கன்றியென் னுடம்பொடுங்க வெப்புநோய் கவர்ந்தபோ
தொன்றுமங் கொழித்திலீர்க ளென்னவா துமக்கெனச்
சென்றுபின்னு முன்னுமின்று சில்லிவாய்பர் சொல்லுவார். (எஎ௬)

என்னவாது செய்வதென் றுரைத்ததேவி யுவெனச்
சொன்னவாச கந்தொடங்கி யேடுகொண்டு சூழ்ச்சியான்
மன்னுதம் பொருட்கருத்து வாய்மைதீட்டி மாட்டினல்
வெந்நெருப்பின் வேவுறாமை வெற்றியாவ தென்றனர். (எஎஎ)

என்றபோது மன்னனென் றியம்புமுன்பு பிள்ளையார்
நன்றுநீ ருரைத்தவாறு நாடுதீயி லேடுதான்
வென்றிடிற் பொருட்கருத்து மெய்ம்மையாவ தென்றிரேல்
வன்றனிக்கை யானைமன்னன் முன்புவம்மி னென்றனர். (எஎஅ)

வேறு.

அப்படிக்கெதி ரமணருமணைந்துறு மளவி
லொப்பில்வண்புகழ்ச் சண்பையர்காவல ருளையாற்
செப்பருந்திறன் மன்னனுந்திருந்தவை முன்னர்
வெப்புறுந்தழ லமைக்கென வினைஞரை விடுத்தான். (எஎ௯)

ஏயமாந்தரு மிந்தனங்குறைத்துட னடுக்கித்
தீயமைத்தலுஞ் சிகைவிடுபுகையொழிந் தெழுந்து
காயும்வெவ்வழற் கடவுளும்படரொளி காட்ட
வாயுமுத்தமிழ் விரகருமணையவர் தருளி. (எஅ0)

செங்கணேற்றவ ரேபொருளென்றுதாந் தெரிந்த
பொங்கிசைத்திருப் பதிகமுன்முறையினைப் போற்றி
யெங்களுதனே பரம்பொருளெனத்தொழு தெடுத்தே
யங்கையான்முடி மிசைக்கொண்டு காப்புநா ணவிழ்த்தார். (எஅக)

சாற்றுமெய்ப்பொரு டருந்திருமுறையினைத் தாமே
நீற்றுவண்கையான் மறித்தலும்வந்துநேர்ந் துளதால்
காற்றடம்புயத் தண்ணலார்மருவுநள் ளாறு
போற்றுமப்பதி கம்போகமார்த்தபூண் முலையாள். (எஅஉ)

---

திருநள்ளாறு-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்த பூண்முலையா டன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
யாகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே.

தண்புனலும் வெண்பிறையுந் தாங்கிய சடைய
னண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தனல்ல
பண்புநள்ளா றேத்தும் பாடல்பத்து மிவைவல்லா
ருண்புநீங்கிய வானவ ரோடுலை குறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

அத்திருப்பதி கத்தினையமர்ந்துகொண் டருளி
மைத்தவெங்கடு மிடற்றுநள்ளாறரை வணங்கி
மெய்த்தநற்றிரு வேட்டினைக்கழற்றிமெய்ம் மகிழ்ந்து
கைத்தலத்திடைக் கொண்டனர்கவுணியர் தலைவர். (எஅஙு)

நன்மையுய்க்குமெய்ப் பதிகத்தினுதனென் றெடுத்தும்
என்னையாளுடை யீசன்றனுமமே யென்று
மன்னுமெய்ப்பொரு ளாமெனக்காட்டிட வன்னி
தன்னிலாகெனத் தளிரிளவளரொளி பாடி. (எஅச)

---

திருநள்ளாறு-திருவிராகம்*பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

தளிரிள வளரொளி தனதெழில் தருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலில்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்த நாமமே
மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலை மெய்ம்மையே.

சிற்றிடை யரிவைதன் வனமுலை யிணையொடு செறிதரு
நற்றிற முறுகழு மலநகர் ஞானசம் பந்தன்
கொற்றவ னெதிரிடை யெரியினி லிடவிவைகூறிய
சொற்றெரி யொருபது மறிபவர் துயரிலர் தூயரே.

திருச்சிற்றம்பலம்.

---

செய்யதாமரை யகவிதழினுமிகச் சிவந்த
கையிலேட்டினைக் கைதவன்பேரவை காண
வெய்யதீயினில் வெற்றரை யவர்சிந்தை வேவ
வையமுய்ந்திட வந்தவர்மகிழ்ந்துமுன் னிட்டார். (எஅரு)

இட்டவேட்டினி லெழுதியசெந்தமிழ்ப் பதிக
மட்டுலாங்குழல் வனமுலைமலைமகள் பாகத்
தட்டமூர்த்தியைப் பொருளெனவுடைமையா லமர்ந்து
பட்டதீயிடைப் பச்சையாய்விளங்கிய தன்றே. (எஅசு)

மையனெஞ்சுடை யமணருந்தம்பொருள் வரைந்த
கையிலேட்டினைக் கதுவுசெந்தீயினி லிடுவா
ருய்யுமோவிது வெனவுமங்கவரவ ருணர்வால்
நையுநெஞ்சின ராகியேநடுங்கிநின் றிட்டார். (எஅஎ)

அஞ்சுமுள்ளத்த ராகியுமறிவிலா வமணர்
வெஞ்சுடர்ப்பெருந் தீயினில்விழுத்திய வேடு
பஞ்சுதீயினிற் பட்டதுபடக்கண்டு பயந்தால
நெஞ்சுசோரவும் பின்னைசோர்ந்திலர் நின்றார். (எஅஅ)

மானமன்னவ னவையின்முன்வளர்த்தசெந் தீயின்
ஞானமுண்டவ ரிட்டவேடசைத்துநா ழிகையி
லீனமின்மைகண் டியாவருமவியப்புற வெடுத்தார்
பான்மைமுன்னையிற் பசுமையும்புதுமையும் பயப்ப. (எஅகூ)

எடுத்தவேட்டினை யவையின்முன்காட்டியம் முறையி
லடுத்தவண்ணமே கோத்தலுமதிசயித் தரசன்
றொடுத்தபூசன்முன் றூக்கியகையரை நோக்கிக்
கடுத்துநீரிட்ட வேட்டினைக் காட்டுமி னென்றான். (எகூ0)

வேறு.

அருகர்தா மிட்டவேடு வாங்கச்சென் றணையும்போதிற்
பெருகுதீக் கதுவவெந்து பேர்ந்தமை கண்டமன்னன்
றருபுனல் கொண்டுசெந்தீத் தணிப்பித்தான் சமணரங்குக்
கருகிய சாம்பலோடுங் கரியலான் மற்றென்காண்பார். (எசுக)

செய்வதொன் றறிகிலாதார் திகைப்பினற் றிரண்டசாம்பல்
கையினற் பிசைந்துதூற்றிப் பார்ப்பது கண்டமன்ன
னெய்திய நகையினோடு மேடின்ன மரித்துக்காணும்
பொய்யினன் மெய்ம்மையாக்கப் புகுந்தநீர் போமினென்றான். (எசுஉ)

வெப்பெனுந் தீயில்யான்முன் வீடுபெற் றுய்யநீங்க
ளப்பொழு தழுந்துதோற்றீ ராதலா லதுவாறாக
விப்பொழு தெரியிலிட்ட வேடுய்ந்த தில்லையென்றாற்
றப்புர வுடையீர்நீங்கள் தோற்றிலீர் போலுமென்றான். (எசுங)

தென்னவ னகையுட்கொண்டு செப்பிய மாற்றந்தேரார்
சொன்னது பயனக்கொண்டு சொல்லுவார் தொடர்ந்தவாது
முன்னுற விருகாற்செய்தோ முக்காலி லொருக்கால்வெற்றி
யென்னினு முடையோமெய்ம்மை யினியொன்று காண்பதென்றார். ()

தோற்கவு மாசைநீங்காத் துணிவிலார் சொல்லக்கேட்டிம்
மாற்றமென் னுவதென்று மன்னவன் மறுத்தபின்னும்
நீற்றணி விளங்குமேனி நிறைபுகழ்ச் சண்பைமன்னர்
வேற்றுவா தினியென்செய்வ தென்றலு மேற்கோளேற்பார். (எசுரு)

நீடுமெய்ப் பொருளினுண்மை நிலைபெறுந் தன்மையெல்லா
மேடுற வெழுதிமற்ற வேட்டினை யாறுநீரு
மோடுநீ ராற்றிலிட்டா லொழுகுதல் செய்யாதங்கே
நாடிமுன் றங்குமேடு நற்பொருள் பரிப்பதென்றார். (எசுசு)

என்றமண் கையர்கூற வேறுசீர்ப் புகலிவேந்தர்
நன்றது செய்வோமென்றங் கருள்செய நணுகவந்து
வென்றிவே லமைச்சனார்தாம் வேறினிச் செய்யுமிவ்வா
தொன்றினுந் தோற்றார்செய்வ ௦ தொட்டியே செய்வதென்றார். (எசுஎ)

அங்கது கேட்டுநின்ற வமணரு மவர்மேற்சென்ற
பொங்கிய வெகுளிகூரப் பொறாமைகா ரணமேயாகத்
தங்கள்வாய் சோர்ந்துதாமே தனிவாதி லழிந்தோமாகில்
வெங்கழு வேற்றுவானிவ் வேந்தனே யென்றுசொன்னார். (எசுஅ)

---

௦ ஓட்டல்-உடன்படல்.

மற்றவர் சொன்னவார்த்தை கேட்டலு மலையமன்னன்
செற்றத்தா லுரைத்திருநாளை செங்கையு மறந்தீரென்று
பற்றிய பொருளினோடு பட்டபுனல் வைகையாற்றிற்
பொற்புற விடுவதற்குப் போதுவ தென்று கூற. (௭௯௯)

பிள்ளையார் முன்னம்வையைப் பெருந்துறை யிழிந்துபோகத்
தெள்ளுநீர்த் தரளப்பத்தர்ச் சிவிகைமே லேறிச்சென்றார்
வள்ளலா ரவர்தம்பின்பு மன்னவன்மா வேறிச்சென்று
உள்ளவா றறிவிலாதா ருணர்வுபோ லேறிச்சென்றார். (௮௦௦)

தென்னவன் வெப்புத்தீர்ந்த செழுமணிக் கோயினீங்கிப்
பின்னுற வணைந்தபோது பிள்ளையார் பெருகுசெல்வ
மன்னிய மதுரைமூதூர் மறுகில்வந் தருளக்கண்டு
துன்னிய மாதர்மைந்தர் தொழுதுமே லிசையசொன்னார். (௮௦௧)

மீனவன் கொண்டவெப்பை நீக்கிநம் விழுமந்தீர்த்த
ஞானசம் பந்தரிந்த நாயனார் காணுமென்பார்
பானறுங் குதலைச்செய்ய பவளவாய்ப் பிள்ளையார்தா
மானசீர்த் தென்னனாடு வாழவந் தணைந்தாரென்பார். (௮௦௨)

எரியிடை வாதிற்றோற்ற திவர்க்குநம் மருகரென்பார்
புரிசடை யண்ணலேற பொருளெனக் கண்டோமென்பார்
பெருகொளி முத்தின்பைம்பொற் சிவிகைமேற் பிள்ளையார்தாம்
வருமழ கென்னேயென்பார் வாழ்ந்தன கண்களென்பார். (௮௦௩)

ஏதமே வந்ததிந்த வடிகண்மா ரியல்பாலென்பார்
காதனு மாலவாயி னமயனே காணுமென்பார்
போதமா வதுவுமக்கட் புராணனை யறிவதென்பார்
வேதமு நீறுமாகி விளங்கிடு மெங்குமென்பார். (௮௦௪)

அடிகண்மார் முகங்களெல்லா மழிந்தன பாரீரென்பார்
கொடியவஞ் சனைகளெல்லாங் குலைந்தன போலுமென்பார்
வடிகொள்வேன் மாறன்காதன் மாறினை வண்ணமென்பார்
விடிவதாய் முடிந்ததிந்த வெஞ்சம ணிருளுமென்பார். (௮௦௫)

நெருப்பினிற் றோற்றார்தாங்க ணீரில்வெல் வார்களோவென்பா
ரிருப்புநெஞ் சடையரோனும் பிள்ளையார்க் கெதிரோவென்பார்
பருப்பொரு ளுணர்ந்தார்தாங்கள் படுவன பாரீரென்பா
மருப்புடைக் கழுக்கோல்செய்தார் மந்திரி யார்தாமென்பார். (௮௦௬)

ஏடுகள் வைகைதன்னி லிடுவதற் கிசைந்தாரென்பா
ரோடுநீ ருடன்செலாது நிற்குமோ வோலையென்பார்
நீடிய ஞானம்பெற்றார் நிறுத்தவும் வல்லரென்பார்
நாடெலாங் காணவிங்கு நண்ணுவர் காணீரென்பார். (௮௦௭

தோற்றவர் கழுவிலேறத் துணிவதே யருகரென்பா
ராற்றிய வருளின் மென்மைப் பிள்ளையார்க் கழகிதென்பார்
நீற்றினாற் றென்னன் றீங்கு நீங்கிய வண்ணங்கண்டார்
போற்றுவா ரெல்லாஞ்சைவ நெறியினைப் போற்றுமென்பார். (௮௦௮)

இன்னன விரண்டுபாலு மீண்டின ரெடுத்துச்சொல்ல
மின்னொளி மணிப்பொற்கொம்பின் வெண்குடை மீதுபோதப்
பன்மணிச் சிவிகைதன்மேற் பஞ்சவ னாட்டுளோர்க்கு
நன்னெறி காட்டவந்தார் நான்மறை வாழவந்தார். (௮௦௯)

தென்றமிழ் விளங்கவந்த திருக்கழு மலக்கோன்வந்தான்
மன்றுளா ரளித்தஞான வட்டில்வண் கையன்வந்தான்
வென்றுல குய்யமீள வைகையில் வெல்வான்வந்தா
னென்றுபன் மணிச்சின்னங்க ளெண்டிசை நெருங்கியேங்க. (௮௧௦)

பன்மணி முரசஞ்சூழ்ந்த பல்லிய மியம்பப்பின்னே
தென்னனுந் தேவியாரு முடன்செல்லத் திரண்டுசெல்லும்
புன்னெறி யமணர்வேறோர் புடைவரப் புகலிவேந்தர்
மன்னிய வைகையாற்றின் கரைமிசை மருவவந்தார். (௮௧௧)

கார்கெழு பருவம்வாய்ப்பக் காமுறு மகளிருள்ளஞ்
சீர்கெழு கணவன்றன்பால் விரவுறச் செல்லுமாபோ
னீர்கெழு பௌவநோக்கி நிரைதிரை யிரைத்துச்செல்லும்
பார்கெழு புகழின்மிக்க பண்புடை வைகையாறு. (௮௧௨)

ஆற்றினீர் கடுகவோடு மருங்குற வரசனோக்கி
நீற்றணி திகழ்ந்தமேனி நிறைமதிப் பிள்ளையாரும்
வேற்றுரு வருகர்நீரும் விதித்தவே டுகவென்றான்
தோற்றவர் தோலாரென்று முன்னுறத் துணிந்திட்டார்கள். (௮௧௩)

படுபொரு ளின்றிநெல்லிற் பதடிபோ லுள்ளிலார்மெய்
யடுபவர் பொருளை * யத்தி காத்தியென் றெழுதியாற்றிற்
கடுகிய புனலைக்கண்டு மவாவினாற் கையிலேடு
விடுதலும் விரைந்துகொண்டு வேலைமேற் படர்ந்ததன்றே. (௮௧௪)

ஆறுகொண் டோடுமேட்டைத் தொடர்ந்தெதி ரணைப்பார்போலத்
தேறுமெய் யுணர்விலாதார் கரைமிசை யோடிச்சென்றார்
பாறுமப் பொருண்மேற்கொண்ட பட்டிகை யெட்டாதங்கு
நூறுவிற் கிடக்கைமுன்னே போனது நோக்கிச்சென்றார். (௮௧௫)

காணவு மெய்தாவண்ணங் கடலின்மேற் செல்லுமேடு
நாணிலா வமணர்தம்மை நட்டாற்றில் விட்டுப்போகச்
சேணிடைச் சென்றுநின்றார் சிதறினார் திகைத்தார்மன்ன
னாணையில் வழுவமாட்டா தஞ்சுவா ரணையமீண்டார். (௮௧௬)

* அத்திநாத்தி என்பது - அருகர்கூறும் உண்மைப்பொருள்.

வேறொரு செயலிலாதார் வெருவுற்று நடுங்கித்தம்பால்
ஈறுவந் தெய்திற்றென்றே மன்னவ னெதிர்வந்தெய்தி
யூறுடை நெஞ்சிலச்சம் வெளிப்பட வொளிப்பார்போன்று
மாறுகொண் டுருமிட்டால் வந்தது காணுமென்றார். (௮௪௭)

மாசுசே ரமணரெல்லா மதியினின் மயங்கிக்கூற
வாசிலா நெறியிற்சேர்ந்த வரசனு மவரைவிட்டுத்
தேசுடைப் பிள்ளையார்தந் திருக்குறிப் பதனைநோக்கப்
பாசுரம் பாடலுற்றார் பரசம யங்கள்பாற. (௮௪௮)

தென்னவன் மாறன்றானுஞ் சிரபுரத் தலைவர்தீண்டிப்
பொன்னவில் கொன்றையார்தந் திருநீறு பூசப்பெற்று
முன்னைவல் வினையும்நீங்க முதல்வனை யறியுந்தன்மை
துன்னினான் வினைகளொத்துத் துலையென நிற்றலாலே. (௮௪௯)

வேறு.

உலகியல் வேதநூ லொழுக்க மென்பது
நிலவுமெய்ந் நெறிசிவ நெறியே யென்பதுங்
கலதிவா யமணர்காண கிலார்க ளாயினும்
பலர்புகழ் தென்னவ னறியும் பான்மையால். (௮௫0)

அலரும் விரைசூழ்பொழிற் காழியு ளாதிஞான
மலருந் திருவாக்குடை வள்ளலா ருள்ளவண்ணம்
பலரு முணர்ந்துய்யப் பகர்ந்து வரைந்தியாற்றி
னிலவுந் திருவேடு திருக்கையா னிட்டியிட்டார். (௮௫௧)

---

திருப்பாசுரம்-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வாழ்கவந்தணர் வானவரானினம்
வீழ்கதண்புனல் வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல் லாமரனாமமே
சூழ்கவையக முந்துயர்தீர்கவே.

அரியகாட்சிய ராய்த்தமதங்கைசே
ரெரியரேறுகந் தேறுவர்கண்டமுங்
கரியர்காடுறை வாழ்க்கையராயினும்
பெரியராரறி வாரவர்பெற்றியே.

வெந்தசாம்பல் விரையெனப்பூசியே
தந்தையாரொடு தாயிலர்தம்மையே
சிந்தியாவெழு வார்வினைதீர்ப்பரா
லெந்தையாரவ ரெவ்வகையார்கொலோ.

ஆட்பாலவர்க்கருளும் வண்ணமு மாதிமாண்புங்
கேட்பான்புகி லளவில்லை கிளக்கவேண்டா
கோட்பாலனவும் வினையுங்குறு காமையெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கதக்கார்.

ஏதுக்களாலு மெடுத்தமொழி யாலுமிக்குச்
சோதிக்கவேண்டா சுடர்விட்டுள னெங்கள்சோதி
மாதுக்கநீங்க லுறுவீர்மனம் பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீ ரிறையேவந்து சார்மின்களே.

ஆடும்மெனவும் மருங்கூற்றமு தைத்துவேதம்
பாடும்மெனவும் புகழல்லது பாவநீங்கக்
கேடும்பிறப்பும் மறுக்கும்மெனக் கேட்டீராகில்
நாடுந்திறத்தார்க் கருளல்லது நாட்டலாமே.

கடிசேர்ந்தபோது மலர்ானகை கொண்டுநல்ல
படிசேர்ந்தபால்கொண் டங்காட்டிடத் தாதைபண்டு
முடிசேர்ந்தகாலை யறவேட்டிட முக்கண்மூர்த்தி
யடிசேர்ந்தவண்ண மறிந்தார்சொலக் கேட்டுமன்றே.

வேதம்முதல்வன் முதலாக விளங்கிவைய
மேதப்படாமே யுலகத்தவ ரேத்தல்செய்யப்
பூதம்முதல்வன் முதலேமுத லாப்பொலிந்த
சூதன் ஒலி மாலையென்றேகலிக் கோவைசொல்லே.

பாராழிவட்டம் பகையானலிந் தாட்டவாடிப்
பேராழியான திடர்கண்டருள் செய்தல்பேணி
நீராழிவிட்டேறி நெஞ்சிடங் கொண்டவற்குப்
போராழியீந்த புகழும்புக ழுற்றதன்றே.

மாலாயவனும் மறைவல்ல நான்முகனும்
பாலாயதேவர் பகரில்லமு தூட்டல்பேணிக்
காலாயமுந்நீர் கடைந்தார்க்கரி தாயெழுந்த
வாலாலமுண்டங் கமரர்க்கருள் செய்ததாமே.

அற்றன்றியந்தண் மதுரைத்தொகை யாக்கினானுந்
தெற்றென்றுதெய்வந் தெளியார்கரைக் கோலைதெண்ணீர்
பற்றின்றிப்பாங் கெதிர்வினவும் பண்புநோக்கிற்
பெற்றென்றுயர்த்த பெருமான்பெரு மானுமன்றே.

---

ஒலிமாலை என்பது-புராணம்.

கல்லார்கள்சேர்புகலி ஞானசம் பந்தனல்ல
வெல்லார்களும்பரவு மீசனை யேத்துபாடல்
பல்லார்களுமதிக்கப் பாசுரஞ் சொன்னபத்தும்
வல்லார்கள்வானோ ருலகாளவும் வல்லரன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

அந்தணர்தேவரா னினங்கள்வாழ்கவென்,
றிந்தமெய்ம்மொழிப்பய னுலகமின்புறச்
சந்தவேள்விகள்முதல் சங்கரர்க்குமுன்
வந்தவர்ச்சனைவழி பாடுமன்னவாம். (அஉஉ)

வேள்விநற்பயன் வீழ்புனலாவது
நாளுமர்ச்சனை நல்லுறுப்பாதலால்
ஆளுமன்னனை வாழ்த்தியதர்ச்சனை
மூளுமற்றிவை காக்குமுறைமையால். (அஉங)

ஆழ்கதீயதென் றோதிற்றயனெறி
வீழ்கவென்றது வேறல்லாமரன்பெயர்
சூழ்கவென்றது தொல்லுயிர்யாவையும்
வாழியஞ்செழுத் தோதிவளர்கவே. (அஉச)

சொன்னவையக முந்துயர்தீர்கவே
யென்னுநீர்மை யிகபரத்திற்றுயர்
மன்னிவாழுல கத்தவர்மாற்றிட
முன்னஞானசம் பந்தர்மொழிந்தனர். (அஉ௫)

அரியகாட்சிய ரென்பதவ்வாதியைத்
தெரியலாநிலை யாற்றெரியாரென
வுரியவன்பினிற் காண்பவர்க்குண்மையாம்
பெரியநல்லடை யாளங்கள்பேசினர். (அஉசு)

ஆயினும்பெரி யாரவரென்பது
மேயவிவ்வியல் பேயன்றிவிண்முதல்
பாயபூதங்கள் பல்லுயிரண்டங்க
ளேயும்யாவு மிவர்வடிவென்றதாம். (அஉஎ)

பின்புமாரறி வாரிவர்பெற்றியை
யென்பதியாருணர் வாலுஞ்சென்றெட்டொணு
மன்பெருந்தன்மை யாரெனவாழ்த்தினு
ரன்புசூழ்சண்பை யாண்டகையாரவர். (அஉஅ)

வெந்தசாம்பல் விரையென்பதுதம
தந்தமில்லொளி யல்லாவொளியெல்லாம்
வந்துவெந்தற மற்றப்பொடியணி
சந்தமாக்கொண்ட வண்ணமுஞ்சாற்றினார். (அஉகூ)

தமக்குத்தந்தையர் தாயிலரொன்பது
மமைத்திங்கியாவையு மாங்கவைவிந்தபோ
திமைத்தசோதி யடக்கிப்பின்னீதலா
லெமக்குநாதர் பிறப்பிலரென்றதாம். (அநூ0)

தம்மையேசிந்தி யாவெனுந்தன்மைதான்
மெய்ம்மையாகி விளங்கொளிதாமென
விம்மையேயினை வார்தம்மிருவினைப்
பொய்ம்மைவல்லிருள் போக்குவரென்றதாம். (அநூக)

எந்தையாரவ ரெவ்வகையார்கொலென்
றிந்தவாய்மைமற் றெப்பொருட்கூற்றினு
முந்தையோரையே கூற்றின்மொழிவதென்
றந்தண்பூந்தராய் வேந்தருளினார். (அநூஉ)

ஆதியாட்பா லவர்க்கருளுந்திற
நாதன்மாட்சிமை கேட்கவிலுங்கால்
ஓதுமெல்லை யுலப்பிலவாதலின்
யாதுமாராய்ச்சி யில்லையாமென்றதாம். (அநூந)

அன்னவாதலி லாதியார்தாளடைக்
கின்னகேட்கவே யேற்றகோட்பாலவு
முன்னைவல்வினை யும்முடிவெய்துமத்
தன்மையார்க்கென் றனர்சண்டைகாவலர். (அநூச)

மன்னுமேதுக்க ளாலெனும்வாய்மைதா
றன்னதொப்புவே றின்மையிற்சங்கரு
னின்னதன்மையை யேதுவெடுத்துக்காட்
டன்னவற்று ளளப்பிலனென்றதாம். (அநூரு)

தோன்றுகாட்சி சுடர்விட்டுளனென்ப
தான்றவங்கி புறத்தொளியாயன்பில்
லூன்றவுள்ளெழுஞ் சோதியாய்நின்றன
னேன்றுகாண்பார்க் கிதுபொருளென்றதாம். (அநூசு)

வேறு.

மாதுக்கநீங்க லுறுவீர்மனம் பற்றுமென்ப
தாதிச்சுடர்ச் சோதியையன்பி னகத்துள்ளாக்கிப்
போதித்தநோக்குற் றொழியாமற் பொருந்திவாழ்ந்து
பேதித்தபந்தப் பிறப்பின்னெறி பேர்மினென்றும். (அநூஎ)

ஈண்டுசாதுக்க ளென்றெடுத் தோதிற்று
வேண்டும்வேட்கைய வெல்லாம் விமலர்தாள்
பூண்டவன்பினிற் போற்றுவீர் சார்மினென்
றுண்டசண்பை யரச ரருளினர். (அஙஅ)

வேறு.

ஆடும்மெனவாந் திருப்பாட்டினமைத்தமூன்று
நீடும்புகழோ பிறர் துன்பநீத்தற்கோவென்று
தேடுமுணர்வி ருலகுக்கிவைசெய்தநீசர்
கூடுங்கருணைத் திறமென்றனர்கொள்கைமேலோர். (அஙகூ)

கருதுங்கடிசேர்ந்த வெனுந்திருப்பாட்டிலீசர்
மருவும்பெரும்பூசை மறுத்தவர்க்கோறன்முத்தி
தருதன்மையதா தறண்டீசர்தஞ்செய்கைதக்கோர்
பெரிதுஞ்சொலக்கேட்டன மென்றனர்பிள்ளையார்தாம். (அசo)

வேதமுதல்வனென்னும் மெய்த்திருப்பாட்டினினே
ராதியுலகோரிடர் நீங்கிடவேத்தவாடும்
பாதமுதலாம் பதினெண்புராணங்களென்றே
யோதென்றுரைசெய்தனர் யாவுமோதாதுணர்ந்தார். (அசக)

பாவுற்றபாராழி வட்டத்திருப்பாட்டினுண்மை
காவற்றெழிலானெனுங் கண்ணனுங்காவல்பெற்ற
தியாவர்க்குமேலாய வீசனருளாழிபெற்று
மேவுற்றசீருற்றது வென்றனர்வேதவாயர். (அசஉ)

மாலாயவனென்ன வருந்திருப்பாட்டின்மாலுந்
தோலாமறைநான் முகனுந்தொடர்வாமமர
ரேலாவகைசுட்ட நஞ்சுண்டிறவாமைகாத்த
மேலாங்கருணைத் திறம்வெங்குருவேந்தர்வைத்தார். (அசங)

ஆனவற்றன்றியென் றெடுத்தவத்திருப்பாட்டிற்கூடன்
மாநகர்ச்சங்கம் வைத்தவன்றேறத்தெரு
வீனர்களெல்லைக்கிட்ட வேடுநீரெதிர்ந்துசெல்லில்
ஞானமீசன்பாலன்பே யென்றனர்ஞானமுண்டார். (அசச)

வெறியார்பொழிற்சண்பையர் வேந்தர்மெய்ப்பாசுரத்தைக்
குறியேறியவெல்லை யறிந்துகும்பிட்டேனல்லேன்
சிறியேனறிவுக் கவர்தந்திருப்பாதந்தந்த
நெறியேசிறிதுயா னறிநீர்மைகும்பிட்டேன்னன்பால். (அசரு)

வேறு.

திருவுடைப் பிள்ளையார்தந் திருக்கையா லிட்டவேடு
மருவுறும் பிறவியாற்றின் மாதவர் மனஞ்சென்றுற்போற்
பொருபுனல் வைகையாற்றி லெதிர்ந்துநீர் கிழித்துப்போகு
மிருநி... தோர்கட்கெல்லா மிதுபொரு ளென்றுகாட்டி. (அசகூ)

எம்பிரான் சிவனேயெல்லாப் பொருளுமென் றெழுதுமேட்டிற்
றம்பிரா னருளால்வேந்தன் றன்னைமுன் னுேங்கப்பாட
வம்புய மலராள்மார்ப னனபாய னென்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோலென்னத் தென்னன்கூ னிமிர்ந்ததன்றே. (அசஎ)

ஏடுநீ ரெதிர்ந்துசெல்லும் பொழுதிமை யோர்களெல்லாம்
நீடிய வாழ்த்திற்போற்றி நிமிர்ந்தபூ மாரிதூர்த்தா
ராடியல் யானைமன்ன னற்புத மெய்திநின்றான்
பாடுசே ரமணரஞ்சிப் பறைதப்புடன் பணிந்துநின்றார். (அசஅ)

ஆற்றின்மேற் செல்லுமேடு தொடர்ந்தெடுப் பதற்குவேண்டி
காற்றினுங் கடுகச்செல்லுங் கடும்பரி யேறிக்கொண்டு
கோற்றொழி றிருத்தவல்ல குலச்சிறை யார்பின்சென்றார்
ஏற்றுயர் கொடியினுனைப் பாடினு ரேடுதங்க. (அசகூ)

ஏடகம் பிள்ளையார்தாம் வன்னியென் றெடுத்துப்பாடக்
கூடிய நீரிலேடு குலச்சிறை யாருங்கூடிக்
காடிட மாகவாடுங் கண்ணுதல் கோயின்மாடு
நீடுநீர் நடுவுட்புக்கு நின்றவே டெடுத்துக்கொண்டார். (அரு0)

---

அஉஉ-முதல்-அசஊ-வரையில் திருப்பாச்சுரத்தின்-வியாக்கியானம்.

---

திருஏடகம்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

வன்னிய மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னிய திருவடி புதுமல ரதுகொடு
மன்னிய மறையவர் வழிபட வடியவ
ரின்னிசை பாடல ரேடகத் தொருவனே.

கோடுசெங் தனமகில் கொண்டிழி வைகைநீ
ரேடுசென் றணைதரு மேடகத் தொருவனை
நாடுதென் புகலியுள் ஞானசம் பந்தன்
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

தலைமிசை வைத்துக்கொண்டு தாங்கரு மகிழ்ச்சிபொங்க
வலைபுனற் கரையிலேறி யங்கினி தமர்ந்துமேருச்
சிலையுடை யவர்தாள்போற்றி மீண்டுசென் றணைவார்தெய்வ
மலைமகள் குழைத்தஞான முண்டவர் தம்பால்வந்தார். (அருக)

மற்றவர் பிள்ளையார்தம் மலரடி வணங்கிப்போற்றிக்
கொற்றவன் முதலாயுள்ளோர் காணமுன் கொணர்ந்தவேடு
பற்றிய கையிலேந்திப் பண்பினு லியார்க்குங்காட்ட
வற்றருள் பெற்றதொண்ட ரரவொலி யெழுந்ததன்றே. (௮௫௨)

மன்னவன் மாறன்கண்டு மந்திரி யாரைநோக்கித்
துன்னிய வாதிலொட்டித் தோற்றவிச சமணர்தாங்கண்
முன்னமே பிள்ளையார்பா லனுசித முற்றச்செய்தார்
கொன்னுனைக் கழுவிலேற்றி முறைசெய்க வென்றுகூற. (௮௫௩)

புகலியில் வந்தஞானப் புங்கவ ரதனைக்கேட்டு
மிகலில ரெனினுஞ்சைவ ரிருந்துவாழ் மடத்திற்றீங்கு
தகவிலாச் சமணர்செய்த தன்மையாற் சாலுமென்றே
மிகையிலா வேந்தன்செய்கை விலக்கிடா திருந்தவேலை. (௮௫௪)

பண்புடை யமைச்சனாரும் பாருளோ ரறியுமாற்றாற்
கண்புடை பட்டுநீண்ட கழுத்தறி நிரையிலேற்ற
நண்புடை ஞானமுண்டார் மடத்துத்தீ நாடியிட்ட
வெண்பெருங் குன்றத்தெண்ணா யிரவரு மேறினர்கள். (௮௫௫)

தோற்றவர் கழுவிலேறித் தோற்றிடத் தோற்றுந்தம்ப
மாற்றிடை யமணரெல்லை யழிவினு லார்ந்தகம்பம்
வேற்றொரு தெய்வமின்மை விளக்கிய பதாகைத்தம்பம்
போற்றுசீர்ப் பிள்ளையார்தம் புகழ்செய்த தம்பமாகும். (௮௫௬)

தென்னவன் றனக்குநீறு சிரபுரச் செல்வரிந்தார்
முன்னவன் பணிந்துகொண்டு முழுவது மணிந்துநின்றான்
மன்னனீ றணிந்தானென்று மற்றவன் மதுரைவாழ்வார்
துன்னிநின் றார்களெல்லாந் தூயநீ றணிந்துகொண்டார். (௮௫௭)

பூதிமெய்க் கணிந்துவேந்தன் புனிதனா யுயர்ந்தபோது
நீதியும் வேதநீதி யாகியே நிகழ்ந்ததெங்கும்
மேதினி புனிதமாக வெண்ணீற்றின் விரிந்தசோதி
மாதிரந் தூய்மைசெய்ய வமணிருண் மாய்ந்ததன்றே. (௮௫௮)

மீனவற் குயிரைநல்கி மெய்ந்நெறி காட்டிமிக்க
வூனமாஞ் சமணைநீக்கி யுலகெலா முய்யக்கொண்ட
ஞானசம் பந்தர்வாய்மை ஞாலத்திற் பெருகியோங்கத்
தேனவில் கொன்றையார்தந் திருநெறி நடந்ததன்றே. (௮௫௯)

மறையவர் வேள்விசெய்ய வானவர் மாரிநல்க
விறைவனன் னெறியிலோங்க விகந்தனி லவனியின்பங்
குறைவில தெனினுங்கூற்றை யுதைத்தவர் நாமங்கூறி
நிறைகடற் பிறவித்துன்ப நீங்கிடப் பெற்றதன்றே. (௮௬0)

அங்கயற் கண்ணிதன்னோ டாலவா யமர்ந்தவண்ணல்
பங்கயச் செய்யபாதம் பணிவனென் றெழுந்துசென்று
பொங்கொளிச் சிவிகையேறிப் புகலியர் வேந்தர்போந்தார்
மங்கையர்க் கரசியாரு மன்னனும் போற்றிவந்தார். (அகூக)

எண்ணரும் பெருமைத்தொண்டர் யாவரு மகிழ்ச்சியெய்திப்
புண்ணியப் பிள்ளையாரைப் புகழ்ந்துடன் போற்றிப்போத
மண்ணெலா முய்யவந்த வள்ளலார் தம்மைக்கண்டு
கண்ணினாற் பயன்கொண்டார்கள் கன்னிநாட் டவர்களெல்லாம். (அகூஉ)

ஆலவா யண்ணல்கோயி லங்கண்முன் றோன்றக்கண்டு
பாலரு வாயர்மிக்க பண்பினாற் றொழுதுசென்று
மாலுநான் முகனும்போற்ற மன்னினார் கோயில்வாயிற்
சீலமா தவத்தோர்முன்பு சிவிகைநின் றிழிந்துபுக்கார். (அகூங)

தென்னவன் றானுமெங்கள் செம்பியன் மகளார்தாமும்
நன்னெறி யமைச்சனாரும் ஞானசம் பந்தர்செய்ய
பொன்னடிக் கமலம்போற்றி யுடன்புகப் புனிதர்கோயில்
தன்னைமுன் வலங்கொண்டுள்ளாற் சண்பையர் தலைவர்புக்கார். (அகூச)

கைகளுந் தலைமீதேறக் கண்ணிலா னந்தவெள்ள
மெய்யெலாம் பொழியவேத முதல்வனைப் பணிந்துபோற்றி
யையனே யடியனேனை யஞ்சலென் றருளவல்ல
மெய்யனே யென்றுவீட லாலவாய் விளம்பலுற்றார். (அகூரு)

திருவாலவாய்-திருவிராகம்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதிட்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே.

போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தனல்ல பண்பினா
லாயசொல்லின் மாலைகொண் டாலவாயி லண்ணலைத்
தீயதீர வெண்ணுவார்கள் சிந்தையார்வர் தேவரே.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுவே றுணர்வுமில்லே னொளிவற நிறைந்தகோலம்
மன்றினுள் மறைகளேத்த மானிட ருய்யவேண்டி
நின்றுநீ யாடல்செய்கை நினைப்பதே நியமமாகு
மென்றுபூம் புகலிமன்ன ரின்றமிழ்ப் பதிகம்பாட. (அகூசு)

தென்னவன் பணிந்துநின்று திருவால வாயின்மேவு
மன்னனே யமணர்தங்கண் மாய்கையான் மயங்கியானு
முன்னையா னறிந்திலேனை யுறுபிணி தீர்த்தாட்கொள்ள
வின்னருட் பிள்ளையாரைத் தந்தனை யிறைவவென்றான். (அ௬எ)

சீருடைப் பிள்ளையாருஞ் சிறப்புடை யடியாரோடுங்
காரினிற் பொலிந்தகண்டத் திறைவர்தாள் வணங்கிக்காத
லாரருள் பெற்றுப்போற்றி யங்குநின் றரிதுநீங்கி
யேரியன் மடத்திலுள்ளா லினிதெழுந் தருளிப்புக்கார். (அ௬அ)

நீடுசீர்த் தென்னர்கோனு நேரியன் பாவையாரு
மாடுசென் றிறைஞ்சிநோக்கி மாளிகை தன்னிற்போகக்
கூடிய மகிழ்ச்சிபொங்கக் கும்பிடும் விருப்பினாலே
நாடியங் கிருந்துதங்க ளுதனைப் பாடலுற்றார். (அ௬௯)

திருவிய மகத்திலுள்ளுந் திருநீல கண்டப்பாணர்க்
கருளிய திறமும்போற்றி யவரொடு மளவளாவித்
தெருளுடைத் தொண்டர்சூழத் திருத்தொண்டி னுண்மைநோக்கி
யிருள்கெட மண்ணில்வந்தா ரினிதமர்ந் திருந்தாரன்றே. (அஎ0)

---

திருவாலவாய்-திருவியமகம்.

திருச்சிற்றம்பலம்.

ஆலநீழ லுகந்ததிருக்கையே யானபாட லுகந்ததிருக்கையே
பாலினேர்மொழி யாளொருபங்கனே பாதமோதலர் சேர்புரபங்கனே
கோலநீறணி மேதகுபூதனே கோதிலார்மன மேவியபூதனே
யாலநஞ்சமு துண்டகளத்தனே யாலவாயுறை யண்டர்களத்தனே.

ஈனஞானிக டம்மொடுவிரகனே யேறுபல்பொருண் முத்தமிழ்விரகனே
யானகாழியுள் ஞானசம்பந்தனே யாலவாயினின் மேயசம்பந்தனே
யானவானவர் வாயினுளத்தனே யன்பரானவர் வாயினுளத்தனே
நானுரைத்தன செந்தமிழ்பத்துமே வல்லவர்க்கிவை நற்றமிழ்பத்துமே.

திருச்சிற்றம்பலம்.

---

பூழியன் மதுரையுள்ளார் புறத்துளா ரமணர்சேரும்
பாழியு மருகர்மேவும் பள்ளியு மானவெல்லாங்
கீழுறப் பறித்துப்போக்கிக் கிளரொளித் தூய்மைசெய்தே
வாழியப் பதிகளெல்லா மங்கலம் பொலியச்செய்தார். (அஎக)

மீனவன் றேவியாருங் குலச்சிறை யாருமிக்க
ஞானசம் பந்தர்பாத நாடொறும் பணிந்துபோற்ற
வானசண் பையர்கோனுரு மாலவா யமர்ந்தார்பாத
மூனமர்ந் துருகவேத்தி யுளங்களித் துறையுநாளில். (அஎ௨)

வேறு.

செய்தவத்தாற் சிவபாத விரதயர்தாம் பெற்றெடுத்த
வைதிகசூ ளாமணியை மாதவத்தோர் பெருவாழ்வை
மைதிகழுந் திருமிடற்று ரருள்பெற்ற வான்பொருளை
யெய்தியபூம் புகலியிலே யிருந்தநாண் மிகநிலைந்தார். (அஎங)

ஆனபுகழ்த் திருநாவுக் கரசர்பா லவஞ்செய்த
மானமிலா வமணருடன் வாதுசெய்து வெல்வதற்கு
மீனவன்ற னுடைய்ய வெண்ணீறு பெருகுதற்கும்
போனவர்பாற் புகுந்தபடி யறிவனெனப் புறப்படுவார். (அஎச)

துடியிடையா டன்னுடைந் தோணியில்வீற் றிருந்தபிரா
னடிவணங்கி யலர்சண்பை யதனின்றும் வழிக்கொண்டு
படியின்மிசை மிக்குளவாம் பரன்கோயில் பணிந்தேத்தி
வடிநெடுவேன் மீனவன்றன் வளநாடு வந்தணைந்தார். (அஎரு)

மாமறையோர் வளம்பதிக ளிடைத்தங்கி வழிச்செல்வார்
தேமருவு நறும்பைந்தார்த் தென்னவன்றன் றிருமதுரை
தாமணைந்து திருவால வாயமர்ந்த தனிநாதன்
பூமருவு சேவடிக்கீழ்ப் புக்கார்வத் தொடும்பணிந்தார். (அஎசு)

அங்கணரைப் பணிந்துபோந் தருகணைந்தார் தமைவினவ
விங்கெம்மைக் கணவிடுத்த காழியா ரிளவேறு
தங்குமிடந் திருநீற்றுத் தொண்டர்குழாஞ் சாருமிடஞ்
செங்கமலத் திருமடமற் றிதுவென்றே தெரிந்துரைத்தார். (அஎஎ)

செப்புதலு மதுகேட்டுத் திருமடத்தைச் சென்றெய்த
வப்பரெழுந் தருளினா ரெனக்கேட்டோ ரடிவணங்கி
யொப்பில்புகழ்ப் பிள்ளையார்த மக்கோகை யுணர்செய்ய
வெப்பொழுது வந்தருளிற் றென்றெதிரோ யெழுந்தருள். (அஎஅ)

சிவபாத விரதயர்தா முன்றொழுது சென்றணையத்
தவமான நெறியணையுந் தாதையா ரெதிர்தொழுவா
ரவர்சார்வு கண்டருளித் திருத்தோணி யமர்ந்தருளிப்
பவபாச மறுத்தவர்தம் பாதங்க ணினைவுற்றார். (அஎகு)

இருந்தவத்தோ ரவர்முன்னே யிணைமலர்க்கை குவித்தருளி
யருந்தவத்தீ ரெனையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட
பெருந்தகையெம் பெருமாட்டி யுடனிருந்த தேயென்று
பொருந்துபுகழப் புகலியின்மேற் றிருப்பதிகம் போற்றிசைத்தார். ()

மண்ணினல்ல வென்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிட்சி
யுண்ணிறைந்த காதலினாற் கண்ணருவி பாய்ந்தொழுக
வண்ணலார் தமைவினவித் திருப்பதிக மருள்செய்தார்
தண்ணறும்பூஞ் செங்கமலத் தாரணிந்த தமிழ்விரகர். (அஅக)

திருக்கழுமலம்-பண்-கொல்லி.
திருச்சிற்றம்பலம்.

மண்ணினல்லவண்ணம் வாழலாம்வைகலு
மெண்ணினல்லகதி யாதுமோர்குறைவிலை
கண்ணினல்லதுறுங் கழுமலவளநகர்ப்
பெண்ணினல்லாளொடும் பெருந்தகையிருந்ததே.

கருந்தடந்தேன்மல்கு கழுமலவளநகர்ப்
பெருந்தடங்கொங்கையோ டிருந்தவெம்பிரான்றனை
யருந்தமிழ்ஞானசம் பந்தன்செந்தமிழ்
விரும்புவாரவர்கள்போய் விண்ணுலகாள்வரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பதிகந் திருக்கடைகாப் புச்சாத்திச் சிறப்பின்மிகு
விருப்பினு லவர்தமக்கு விருந்தளித்து மேவுநா
ளருப்புறுமெய்க் காதல்புரி யடியவர்க டம்மோடும்
பொருப்புறுகைச் சிலையார்சேர் பிறபதியுந் தொழப்போவார். (௮௮௨)

ஆலின்கீழ் நால்வர்க்கு கறமுரைத்த வங்கணனை
நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானைக்
காலம்பெற் றினிதிறைஞ்சிக் கைதொழுது புறம்போந்தார்
சீலங்கொ டென்னவனுந் தேவியரு முடன்போத. (௮௮௩)

வேறு.

தேனிலவு பொழின்மதுரைப் புறத்தும்போந்த தென்னவனார் தேவியா ரமைச்சர்சிந்தை, யூனெகிழும் படியழிந்தங் கொழுகுகண்ணீர் பாய்ந்திழிய வுணர்வின்றி வீழக்கண்டே,யானும்மைப் பிரியாத வண்ணமிந் நாட் டிறைவர்பதி யெனைப்பலவும் பணிவீரென்று, ஞானமுணர் வாரருள வவரும்போத நம்பர்திருப் பரங்குன்றை நண்ணினாரே. (௮௮௪)

ஆறணிந்தார் தமைவணங்கி யங்குப்போற்றி யணியாப்ப னூரணைந்து பணிந்துபாடி, நீறணிந்த செல்வர்பதி பிறவுஞ்சேர்ந்து நிலவுதிருப் பதிகங்க ணிகழப்பாடிச், சேறணிந்த வயற்பழனக் கழனிசூழ்ந்த சிரபுரத்து வந்தருளுஞ் செல்வர்செங்க, ணேறணிந்த வெல்கொடியார் திருப்புத்தூரை யினிதிறைஞ்சிச் சிலநாளங் கிருந்தாரன்றே. (௮௮௫)

---

திருப்பரங்குன்றம்-பண்-குறிஞ்சி.
திருச்சிற்றம்பலம்.

நீடலர்சோதி வெண்பிறையொடு நிரைகொன்றை
சூடலனந்திச் சுடரெரியேந்திச் சுடுகானி
லாடலனஞ்சொ லணியிழையாளை யொருபாகம்
பாடலன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே.

தடமலிபொய்கைச் சண்பைமன்ஞான சம்பந்தன்
படமலிநாக மரைக்கசைத்தான்றன் பரங்குன்றைத்
தொடைமலிபாடல் பத்தும்வல்லார்தங் துயர்போகி
விடமலிகண்ட னருள்பெறுநன்மை மிக்கோரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பரங்கிரிநாயகர். தேவியார்-ஆளுடையநாயகியம்மை.

திருப்பதிகம்—உ.

---

திருஆப்பனூர்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

முற்றுஞ் சடைமுடிமேன் முதிரா விளம்பிறைய
னொற்றைப் படவரவ மதுகொண் டரைக்கணிந்தான்
செற்றமிகு சீரானைத் திருவாப்ப னூரானைப்
பற்றுமன முடையார் வினைப்பற் றறுப்பாரே.

அந்தண் புனல்வைகை யணியாப்ப னூர்மேய
சந்த மலர்க்கொன்றை சடைமே லுடையானை
நந்தி யடிபரவு நலஞான சம்பந்தன்
சந்த மிவைவல்லார் தமொற்ற மறுப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஆப்பனூர்க்காரணர். தேவியார்-அம்பிகையம்மை.

திருப்பதிகம்—க.

---

திருப்புத்தூர்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்மு வெறியார் பொழிற்சோலை
திங்களோடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கைதங்கு முடியா ரவர்போலு
மெங்களுச்சி யுறையு மிறையாரே.

நல்லகேள்வி ஞானசம் பந்தன்
செல்வர்சேட ருறையுந் திருப்புத்தூர்ச்
சொல்லல்பாடல் வல்லார் தமக்கென்று
மல்லல்தீரு மவலம் மடையாவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-திருப்புத்தீசர். தேவியார்-சிவகாமித்தாயம்மை.

திருப்பதிகம்—ந.

---

பற்றூர்தம் புரங்கண்மலைச் சிலையாற்செற்ற பரமனூர் திருப்புத்தூர் பணிந்துபோந்து, புற்றுரும் பணிபூண்ட புனிதனூர்தம் பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்துபாடிக், கற்றூர்க டொழுதேத்துங் கானப்பெருங் கைதொழுது தமிழ்பாடிச் சுழியல்போற்றிக், குற்றாலங் குறும்பலாக் கும்பிட்டேத்திக் கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகினூரோ. (அ௮௬)

---

திருப்பூவணம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அறையார்புனலு மாமலரு மாடர வார்சடைமேற்
குறையார்மதியுஞ் சூடிமாதோர் கூறுடை யானிடமா
முறையார்முடிசேர் தென்னர்சேரர் சோழர் கடாம்வணங்குந்
திறையாரொளிசேர் செம்மையோங்கு தென்றிருப் பூவணமே.

திண்ணூர்புரிசை மாடமோங்கு தென்றிருப் பூவணத்துப்
பெண்ணூர்மேனி யெம்மிறையைப் பெரிய வின்றமிழா
னண்ணூருட்கக் காழிமல்கு ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணூர்பாடல் பத்தும்வல்லார் பயில்வது வானிடையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பூவணநாதர். தேவியார்-மின்னம்மை.

திருப்பதிகம்—௪.

---

திருக்கானப்பேர்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

பிடியெலாம் பின்செல்லப் பெருங்கைமா மலைதழீஇ
விடியலே தடமூழ்கி விதியினூல் வழிபடூஉங்
கடியுலாம் பூம்பொழிற் கானப்பே ரண்ணனின்
னடியலா லடைசர ணுடையரோ வடியரோ.

காட்டகத் தாடலான் கருதிய கானப்பேர்
கோட்டகத் திளவரால் குதிகொளுங் காழியா
னூட்டகத் தோங்குசீர் ஞானசம் பந்தன்
பாட்டகத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-காளைக்காளை. தேவியார்-மகமாயிஅம்மை.

திருப்பதிகம்—௨.

---

திருக்குற்றாலம்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வம்பார்குன்ற நீடுயர்சாரல் வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக் கோலவண்டியாழ் செய்குற்றால
மம்பானெய்யோ டாடலமர்ந்தா னலர்கொன்றை
நம்பான்மேய நன்னகர்போலுந் நமரங்காள்.

மாடவீதி வருபுனற்காழி யார்மன்னன்
கோடலீன்று கொழுமுளைகூம்புங் குற்றால
நாடவல்ல நற்றமிழ்ஞான சம்பந்தன்
பாடல்பத்தும் பாடநம்பாவம் பறையுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - குறும்பலாநாதர். குற்றாலநாதர் என்பதுமாம்.

தேவியார்-குழல்வாய்மொழியம்மை. திருப்பதிகம்—உ.

---

திருக்குறும்பலா-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

திருந்தமதிசூடித் தெண்ணீர்சடைக்கணிந்து தேவிபாகம்
பொருந்திப்பொருந்தாத வேடத்தாற்காடுறைதல் புரிந்தசெல்வ
ரிருந்தவிடம்வினவி லேலங்கமழ்சோலையின் வண்டியாழ்செய்
குருந்தமணநாறுங் குன்றிடஞ்சூழ்தண்சாரற் குறும்பலாவே.

கொம்பார்பூஞ்சோலைக் குறும்பலாமேவிய கொல்லேற்றண்ண
லம்பானடிபரவு நான்மறையான்ஞானசம் பந்தன்சொன்ன
வின்பாயபாட லிவைபத்தும்வல்லார் விரும்பிக்கேட்பார்
தம்பாசதீவினைகள் போயகலுநல்வினைகள் தளராவன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

புண்ணியனூர் நெல்வேலி பணிந்துபோற்றிப் புரிசடையார் திருப்பதிகள் பிறவுஞ்சென்று, நண்ணியினி தமர்ந்தங்கு நயந்துபாடி நற்றொண்ட ருடனும் போற்றிச்செல்வார், விண்ணவரைச் செற்றுகந்தா னிலங்கைசெற்ற மிக்கபெரும் பாதகத்தை நீக்கவேண்டித், திண்ணியபொற் சிலைத்தடக்கை யிராமன்செய்த திருவிராமேச்சுரத்தைச்சென்றுசேர்ந்தார்.

---

திருநெல்வேலி-திருவிராகம்-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மருந்தவைமந்திரம் மறுமைநன்னெறியவை மற்றுமெல்லா
மருந்துயர்கெடுமவர் நாமமேசிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண்புறவினிற் கொன்றைபொன்சொரிதரத் துன்றுதண்பூஞ்
செருந்திசெம்பொன்மலர் திருநெல்வேலியுறை செல்வர்தாமே.

பெருந்தண்மாமலர்மிசை யயனவனனையவர் பேணுகல்வித்
திருந்துமாமறையவர் திருநெல்வேலியுறை செல்வர்தம்மைப்
பொருந்துநீர்த்தடமல்கு புகலியுள்ஞானசம் பந்தன்சொன்ன
வருந்தமிழ்மாலைகள் பாடியாடக்கெடு மருவினையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வேணுநாதர். நெல்லையப்பரென்பதுமாம்.

தேவியார்-காந்திமதியம்மை. திருப்பதிகம்—க.

---

செங்கண்மால் வழிபட்ட கோயினண்ணித் திருமுன்பு தாழ்ந்தெ ழுந்து தென்னனொடு, மங்கையர்க்கு நாயகியார் தாமுமெய்ம்மை மந்திரி யா ருஞ்சூழ மணிநீள்வாயிற், பொங்கியெழும் விருப்பினு லுடனேபுக் குப் புடைவலங்கொண் டுள்ளணைவார் போற்றிசெய்து, பங்கயச்செங் கைகுவித்துப் பணிந்துநின்று பாடினார் மன்னவனும் பரவியேத்த. ()

---

திருஇராமேச்சுரம்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அலைவளர்தண்மதி யோடயலே யடக்கியுமை
முலைவளர்பாகம் முயங்கவல்லமு தலவன்முனி
யிலைவளர்தாழைகள் விம்முகான லிராமேச்சுரந்
தலைவளர்கோல நன்மாலையன்று ணிருந்தாட்சியே.

பகலவன்மீதி யங்காமைக்காத்த பதியொன்றனை
யிகலழிவித்தவ னேத்துகோயி லிராமேச்சுரம்
புகலியுள்ஞான சம்பந்தன்சொன்ன தமிழ்புந்தியா
லகலிடமெங்கு நின்றேத்தவல்லார்க் கில்லையல்லலே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் -- இராமநாதர். பர்வதவர்த்தனி - தமிழில்பெயர்.

தேவியார்-மலைவளர்காதலியம்மை. திருப்பதிகம்—ந.

---

சேதுவின்கட் செங்கண்மால் பூசைசெய்த சிவபெருமான் றனைப் பாடிப் பணிந்துபோந்து, காதலுட னங்கரி லினிதுமேவிக் கண்ணுத லான் றிருத்தொண்ட ரானர்க்கெல்லாங், கோதில்புகழ்ப் பாண்டிமா தேவியார்மெய்க் குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச்செல்ல,நாதர் தமை நாடோறும் வணங்கியேத்தி நளிர்வேலைக் கரையினயந் திருந்தா ரன்றே. (அஅகூ)

அங்ககரி லமர்ந்தங்க ணினிதுமேவி யாழிபுடை சூழ்ந்தொலிக்கும் * ஈழம்தன்னின், மன்னுதிருக் கோணமலை மகிழ்ந்தசெங்கண் மழவிடையார் தமைப்போற்றி வணங்கிப்பாடிச், சென்னிமதி புனைமாட மாந்தோட்டத்திற் றிருக்கேதீச் சரத்தண்ணல் செய்யபாத, முன்னிமிகப் பணிந்தேத்தி யன்பரோடு முலவாத கிழிபெற்று ருவகையுற்றார். (அகூ0)

---

திருக்கோணமாமலை-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

நிரைகழலரவஞ் சிலம்பொலியலம்பு நிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர் பாகமாப்புணர்ந்த வடிவினர்கொடியணிவிடையர்
கரைகெழுசந்துங் காரகிற்பிளவு மளப்பருங்கனமணிவரன்றிக்
குரைகடலோட நித்திலங்கொழிக்குங் கோணமாமலையமர்ந்தாரே.

குற்றமிலாதார் குரைகடல்சூழ்ந்த கோணமாமலையமர்ந்தாரைக்
கற்றுணர்கேள்விக் காழியர்பெருமான் கருத்துடைஞானசம்பந்த
னுற்றசெந்தமிழார் மாலையீரைந்து முரைப்பவர்கேட்பவருயர்ந்தோர்
சுற்றமுமாகித்தொல்வினையடையார்தோன்றுவார்வானிடைப்பொலிந்தே

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கோணீசுவரர். தேவியார்-மாதுமையம்மை.

திருப்பதிகம்—க.

இந்தத்தலத்துக்கு இக்காலத்தில் திருக்கணாமலையெனப் பெயர் வழங்குகின்றது. மலையிருக்கின்றது, ஆலயமில்லை.

---

திருக்கேதீச்சரம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

விருதுகுன்றமா மேருவினாணர வாவனலெரியம்பாற்
பொருதுமூவெயில் செற்றவன்பற்றிநின் றுறைபதியெந்நாளுங்
கருதுகின்றவூர் கனைகடற்கடிகமழ் பொழிலணிமாதோட்டங்
கருதநின்றகே தீச்சரங்கைதொழக் கடுவினையடையாவே.

மாடெலாமண முரைசெனக்கடலினி தொலிகடன்மாதோட்டத்
தாடலேறுடை யண்ணல்கேதீச்சரத் தடிகளையணிகாழி
நாடுளார்க்கிறை ஞானசம்பந்தன்சொன் னவின்றெழுபாமாலை
பாடலாயின பாடுமின்பத்தர்கள் பரகதிபெறலாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கேதீச்சுவரர். தேவியார்-கௌரியம்மை.

திருப்பதிகம்—உ.

இந்தத்தலங் காடுகொண்டிருக்கின்றது.

---

* ஈழம் என்பது - யாழ்ப்பாணம்.

அப்பதியைத் தொழுதுவட திசைமேற்செல்வா ரங்கையன றரித்த பிரா னமருங்கோயில், புக்கிறைஞ்சிப் பலபதியுந் தொழுதுபோற்றிப் புணரிபொரு தலைகளாவா யொழியப்போந்தே, செப்பரிய புகழ்த்திருவா டானைசேர்ந்து செழுந்தமிழ்மா லைகள்சாத்திச் சிவனூர்மன்னு,மொப்பரிய புனவாயில் போற்றிசெய்து வணங்கினு ருலகுய்ய ஞானமுண்டார். ()

---

திரு ஆடானை-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

மாதோர்கூறுகந் தேறதேறிய
வாதியானுறை யாடானை
போதினற்புனைந் தேத்துவார்தமை
வாதியாவினை மாயுமே.

வீடினார்மலி வேங்கடத்துநின்
றாடினானுறை யாடானை
நாடிஞானசம் பந்தன்செந்தமிழ்
பாடநோய்பிணி பாறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ரத்தினநாயகர். தேவியார்-நல்லாயியம்மை.

திருப்பதிகம்—க.

---

திருப்புனவாயில்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னியல்செஞ்சடை வெண்பிறையன் விரிநூலினன்
பன்னியநான்மறை பாடியாடிப் பலவூர்கள்போ
யன்னமன்ன நடையாளொடு மமருமிடம்
புன்னைநன்மாமலர்ப் பொன்னுதிர்க்கும் புனவாயிலே.

பொற்றொடியாளுமை பங்கன்மேவும் புனவாயிலைக்
கற்றவர்தாந்தொழு தேத்திநின்றக டற்காழியா
னற்றமிழ்ஞானசம் பந்தன்சொன்ன தமிழ்நன்மையா
லற்றமில்பாடல்பத் தேத்தவல்லா ரருள்சேர்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பழம்பதிநாயகர். தேவியார்-பரங்கருணையம்மை.

திருப்பதிகம்—உ.

---

பதிநிலவு பாண்டிநா டதனின்முக்கட் பரமனார் மகிழ்விடங்கள் பலவும்போற்றி, விதிநிலவு வேதநா னெறியேயாக்கி வெண்ணீற்றின் சார்வினான் மிக்குயர்ந்த, கதிபருளிக் காழிநகர் வாழவந்தார் கண்ணுதலான் றிருத்தொண்டர் பலருஞ்சூழ,மதிநிலவு குலவேந்தன் போற்றிச்செல்ல மந்திரியார் பதிமணமேற் குடியில்வந்தார். (அகூஉ)

அங்ககரி லினிதமர்வா ரருகுசூழ்ந்த பதிகளினி டங்கணர்தங் கோயிறூழ்ந்து, மன்னுதிருத் தொண்டருடன் மீண்டுசேர்ந்து மன்னவனு மங்கையருக் கரசியாருங், கொன்னவில்வேற் குலச்சிறையார் தாமுங்கூடிக் குனைகழல்கள் பணிந்துகுறை கொண்டுபோற்றச், சென்னிவளர் மதியணிந்தார் பாதம்போற்றிச் சிரபுரத்துச் செல்வரினி திருந்தநாளில். (அகூங)

பொங்குபுனற் காவிரிநா டதனின்மீண்டு போதுதற்குத் திருவுள்ளமாகப்பெற்று, மங்கையருக் கரசியார் தாமுந்தென்னர் மன்னவனு மந்திரியார் தாமுங்கூட, வங்கவர்தந் திருப்பாதம் பிரியலாற்று துடன்போகவொருப்படுமவ் வளவுநோக்கி,யிங்குநான் மொழிந்ததனுக் கிசைந்தீராகிலீசர்சிவ நெறிபோற்றி யிருப்பிரென்று. (அகூச)

சாலமிகத் தளர்வாரைத் தளராவண்ணந் தகுவனமற்றவர்க்கருளிச் செய்தபின்பு, மேலவர்தம் பணிமறுக்க வவருமஞ்சி மீள்வதனுக் கிசைந்துதிரு வடியில்வீழ்ந்து, ஞாலமுய்ய வந்தருளும் பிள்ளையாரைப் பிரியாதவன்பினொடுந் தொழுதுநின்று, ராலவிட முண்டவரை யடிகள்போற்றவந்நாட்டை யகன்றுமீண் டணையச்செல்வார். (அகூரு)

பொன்னிவளந் தருநாடு புகுந்துமிக்க பொருவில்சீர்த் திருத்தொண்டர் குழாத்தினோடும்,பன்னகப்பூ ணணிந்தவர்தங் கோயிறோறும் பத்தருடன் பதியுள்ளோர் போற்றச்சென்று, கன்னிமதிற் றிருக்களரும் போற்றிக்கண்டங் கறையணிந்தார் பாதாளீச் சுரமும்பாடி, முன்னணைந்த பதிபிறவும் பணிந்துபோற்றி முள்ளிவாய்க் கரையணைந்தார் மூந்நூண்மார்பர். (அகூகூ)

---

திருப்பாதாளீச்சரம்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மின்னியல்செஞ் சடைமேல் விளங்குமதி மத்தமொடுநல்ல
பொன்னியல் கொன்றையினுன் புனல்சூடிப் பொற்பமரு
மன்னமன்ன நடையா ளொருபாக மமர்ந்தருளிநாளும்
பன்னிய பாடலினு னுறைகோயில் பாதாளே.

பன்மலர் வைகுபொழில் புடைசூழ்ந்த பாதாளைச்சேர்
பொன்னியன் மாடமல்கு புகலிந் நகர்மன்னன்
றன்னெளிமிக் குயர்ந்ததமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
வின்னிசை பத்தும்வல்லா ரெழில்வானத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சர்ப்பபுரேசர். தேவியார்-அமிர்தநாயகி.

திருப்பதிகம்—க.

---

மலைவளர்சந் தனமகிலுந் தேக்குமுந்தி மலர்ப்பிறங்கல் வண்டிரைப்பச் சுமந்துபொங்கி, யலைபெருகி யாளியங்கா வணணமாறு பெருகுதலா லத்துறையி லணையுமோட, நிலைபுரியு மோடக்கோ னிலையிலாமை நீர்வாழ்நர் கரையின்க ணிறுத்திப்போகக், கலைபயிலுங் கவுணியர்கோ னதனைக்கண்டக் கரையின்க ணெழுந்தருளி நின்றகாலை. (அகூஎ)

வேறு.

தேவர்பிரா னமர்ந்ததிருக் கொள்ளம்பூது ரெதிர்தோன்றத் திருவுள்ளம் பணியச்சென்று மேவுதலா லோடங்கள் விடுவாரின்றி யொழிந்திடவு மிக்கதோர் விரைவாற்சண்பைக், காவலனு ரோடத்தின் கட்டவிழ்த்துக் கண்ணுதலான் திருத்தொண்டர் தம்மையேற்றி, நாவலமே கோலாக வதன்மேனின்று நம்பர்தமைக் கொட்டமென நவின்றுபாட. ()

உம்பருய்ய நஞ்சுண்டா ரருளாலோடஞ் செலச்செல்ல வுந்துதலாலூடுசென்று, செம்பொனேர் சடையார்தங் கொள்ளம் பூதூர் தனைச்சேர வக்கரையிற் சேர்ந்தபின்பு, நம்பரவர் தமைவணங்க ஞானமுண்டபிள்ளையார் நற்றொண்ட ருடனிழிந்து, வம்பலரு நறுங்கொன்றை நயந்தார்கோயில் வாயிலின்முன மகிழ்ச்சியொடு வந்துசார்ந்தார். (அகூகூ)

---

திருக்கொள்ளம்பூதூர்-ஈரடிமேல்வைப்பு-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கொட்டமேகமழுங் கொள்ளம்பூதூர்
நட்டமாடிய நம்பனையுளகச்
செல்லவுந்துக சிந்தையார்தொழ
நல்குமாறரு ணம்பனே.

கொன்றைசேர்சடை யான்கொள்ளம்பூதூர்
நன்றுகாழியுள் ஞானசம்பந்த
னின்சொன்மாலைகொ ண்டேத்தவல்லார்போ
யென்றும்வானவ ரோடிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வில்வனநாதர். தேவியார்-சவுந்தரநாயகி.

திருப்பதிகம்—க.

---

நீணிலைக்கோ புரமதனை யிறைஞ்சிப்புக்கு நிகரிலாத் தொண்டருட னெருங்கச்சென்று, வாணிலவு கோயிலினை வலங்கொண்டெய்தி மதிச்சடையார் திருமுன்பு வணங்கிநின்று, தாணுவே யாற்றின்கண் ணேடமுய்க்குந் தன்மையா லருடந்த தலைவாநாகப்,பூணினாய் களிற்றுரிவை போர்த்தமுக்கட் புனிதனே யெனப்பணிந்து போற்றிசெய்தார். (கூ௦0)

போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையுநாளிற் பூழியன்முன்புன் சமயத் தமணர்தம்மோ,டேற்றபெரு வாதின்க ணெரியின்வேவாப் பதிகமுடை யிறையவரை யிறைஞ்சவேண்டி, யாற்றவுமங் கருள்பெற்றுப் போந்துமுன்ன மணைந்தபதி களுமிறைஞ்சி யன்பர்சூழ, நாற்றிசையும் பரவுதிரு நள்ளாறெய்தி நாடுடைநா யகர்கோயி னண்ணினாரே. (கூ௦க)

நீடுதிருத் தொண்டர்புடை சூழவங்க ணித்திலயா னத்திடைநின் றிழிந்துசென்று, பீடுடைய திருவாயில் பணிந்துபுக்குப் பிறையணிந்த சென்னியார் மன்னுங்கோயின், மாடுவலங் கொண்டுள்ளான் மகிழ்ந்துபுக்கு மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி வள்ளலாரைப்,பாடகமெல் லடியெடுத்துப் பாடிநின்று பரவினார் கண்ணருவி பரந்துபாய. (கூ௦உ)

---

திருநள்ளாறுந் திருவாலவாயும்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

பாடகமெல்லடிப் பாவையோடு படுபிணக்காட்டிடம் பற்றிநின்று
நாடகமாடுநள் ளாறுடைய நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்
சூடகமுன்கை மடந்தைமார்க டுணைவரொடுந்தொழு தேத்திவாழ்த்த
வாடகமாட நெருங்குகூட லாலவாயின்க ணமர்ந்தவாறே.

அன்புடையானை யரனைக்கூட லாலவாய்மேவிய தென்கொலென்று
நன்பொனைநாதனை நள்ளாற்றானை நயம்பெறப்போற்றி நலங்குலாவு
பொன்புடைசூழ்தரு மாடக்காழிப் பூசுரன்ஞானசம் பந்தன்சொன்ன
வின்புடைப்பாடல்கள் பத்தும்வல்லா ரிமையவரேத்த விருப்பர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தருமப்புரேசர். தேவியார். போகமார்த்தபூண்முலைநாயகி.

திருப்பதிகம்—எ.

---

தென்னவர்கோன் முன்னமணர் செய்தவாதிற் றீயின்க ணிடுமேடு பச்சையாக்கி,யென்னுள்ளத் துணையாகி யாலவாயி லமர்ந்திருந்த வாறென்கொ லெந்தாயென்று,பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவிப்போந்து பண்பினிய தொண்டருட னங்குவைகி,மன்னுபுகழ்ப் பதிபிறவும் வணங்கச்சண்பை வள்ளலார் நள்ளாறு வணங்கிச்செல்வார். (கூ௦ங)

சீர்நிலவு திருத்தெளிச்சே ரியினைச்சேர்ந்து சிவபெருமான் றனைப்ப ரவிச்செல்லும்போது,சார்வறியாச் சாக்கியர்தம் போதிமங்கை சார்தலு மற் றதுவறிந்த சைவரெல்லா,மார்கலியின் கிளர்ச்சியெனச் சங்குதாரை யளவிறந்த பல்லியங்கண் முழக்கியார்த்துப், பார்குலவு தனிக்காளஞ் சின்னமெல்லாம் பரசமயக்கோளரிவந் தானென்றூத. (௬௦௪)

---

திருத்தெளிச்சேரி-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பூவலர்ந்தன கொண்டுமுப்போது மும்பொற்கழ
றேவர்வந்து வணங்குமிகு தெளிச்சேரியீர்
மேவருந்தொழி லாளொடுகேழல் பின்வேடனும்
பாவகங்கொடு நின்றதுபோலு நும்பான்மையே.

திக்குலாம்பொழில் சூழ்தெளிச்சேரி யெஞ்செல்வனை
மிக்ககாழியுள் ஞானசம்பந்தன் விளம்பிய
தக்கபாடல்கள் பத்தும்வல்லார் கடடமுடி
தொக்கவானவர் சூழவிருப்பவர் சொல்லிலே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பார்வதீசுவரர். தேவியார்-அருந்தோளம்மை.

திருப்பதிகம்—க.

---

புல்லறிவிற் சாக்கியர்க ளறிந்தார்கூடிப் புகலியர்தம் புரவலனார் புகுந்துதங்க,ளெல்லையினி லெழுந்தருளும் பொழுதுதொண்ட ரெடுத்தவார்ப் பொலியாலு மெதிர்முன்சென்று, மல்கியெழுந் திருச்சின்ன வொலிகளாலு மனங்கொண்ட பொறாமையினன் மருண்டுதங்கள்,கல்வியினின் மேம்பட்ட புத்தநந்தி முதலானதேரர்க்குங் கனன்றுசொன்னார். ()

மற்றவர்கள் வெவ்வுரையும் பிள்ளையார்முன் வருசின்னப் பெருகொலியு மன்னுந்தொண்டர், பொற்புடைய வார்ப்பொலியுஞ் செவியினூடு புடைத்தநா ராசமெனப் புக்கபோது. செற்றமிகு முள்ளத்துப் புத்தநந்தி செயிர்த்தெழுந்து தேரர்குழாஞ் சூழச்சென்று, வெற்றிபுனை சின்னங்கள் வாதிலெம்மை வென்றன்றோ பிடிப்பதென வெகுண்டுசொன்னான்

புத்தரினம் புடைசூழப் புத்தநந்தி பொருவில்ஞா னப்புனிதர் திருமுன்பூது,மெய்த்தவிறற் சின்னங்கள் விலக்குங்காலை வெகுண்டெழுந்த திருத்தொண்டர் வேறுநோக்கி, யித்தகைய செயற்கிவனைத் தடிதல்செய்யா திதுபொறுக்கிற் றங்கணிலை யேற்பரென்று,முத்துநிரைச் சிவிகையின்மேன் மணியைவந்து முறைபணிந்து புகுந்தபடி மொழிந்துநின்றார்.()

வருமிடத்தி லழகிதா நமக்குவாதின் மற்றிவர்தம் பொருணிலைமை மறுதவண்ணம்,பொருமிடத்திலறிகின்றோம் புத்தநந்தி பொய்மேற்சோ ளெனப்புகலி வேந்தர்கூற,வருமுறைசொற் றிருப் * பதிக மெழுதுமன் பர் 0 ஆளுடைய பிள்ளையார் திருவாக்காலே, யுருமிடித்து விழப்புத்த னுத்தமாங்க முருண்டுவிழு கெனப்பெறு வுரைமுன்விட்டார். (கூ0அ)

ஏறுயர்த்தார் சைவநெறி யாணையுய்க்க வெதிர்விலக்கு மிடையூற் றை யெறிந்துநீக்கு, மாறில்வலி மந்திரமா மசனிபோல வாய்மையுரைத் திருத்தொண்டர் வாக்கினாலே, வேறுமொழிப் போரேற்பான் வந்தபுத் தன் மேனியையுந் தலையினையும் வெவ்வேறாகக்,கூறுபட நூறியிடப் புத் தர்கூட்டங் குலைந்தோடி விழுந்துவெருக் கொண்டதன்றே. (கூ0கூ)

மற்றவர்க ணிலைமையையும் புத்தநந்தி வாக்கின்போ ரேற்றவன்றன் றலையுமெய்யு, மற்றுவிழ † அத்திரவாக் கதனாலன்ப ரறுத்ததுவுங் கண்ட வர னடியாரெல்லாம், வெற்றிதரும் பிள்ளையார் தமக்குச்சென்று விண் ணப்பஞ் செயவெதிர்ந்த விலக்குநீங்க, வுற்றவிதி யதுவேயா மரவென் றெல்லா மோதுமென வவ்வொலிவா னுற்றதன்றே. (கூக0)

---

திருச்சிற்றம்பலம்.

புத்தர்சமண்கழுக் கையர்பொய்கொளாச்
சித்தத்தவர்க டெளிந்துதேறின
வித்தகநீறணி வார்வினைப்பகைக்கு
அத்திரமாவன வஞ்செழுத்துமே.

திருச்சிற்றம்பலம்

இந்தத்தேவாரஞ் சொன்னவளவில் இடிவிழுந்து புத்தநந்தி இறந்தான்.

---

அஞ்சியகன் றோடியவப் புத்தரெல்லா மதிசயித்து மீண்டுமுடனணை ந்துகூடி,வஞ்சனையோ விதுதான்மற் றவர்தஞ்சைவ வாய்மையோவென மருண்டு மனத்திற்கொள்வா, ரெஞ்சலின்மந் திரவாத மன்றியெஃமோ டெதிர்ந்துபொருட் பேசுவதற் கிசைவதென்று, தஞ்செயலின் மிக்குள்ள சாரிபுத்தன் றன்னையே முன்கொண்டு பின்னுஞ்சார்ந்தார். (கூகக)

---

* பதிகம எழுதுமன்பர்பெயர் - சம்பந்தசரணாலயர். இவர் சுவாமிகளுடைய நல் லம்மான்.

0 ஆளுடைய பிள்ளையார் திருவாக்காலே என்பதற்குத் - திருஞானசம்பந்தசுவா மிகள் அருளிச்செய்த தேவாரத்தினாலே யெனப்பொருள்கொள்க. அதனை அடுத்த திருப்பாட்டில் விளங்கக்கூறினர்.

† அத்திரவாக்கு என்பது - திருஞானசம்பந்தசுவாமிகள் அருளிச்செய்த தேவா ரம் - அதாவது,

அத்தன்மை கேட்டருளிச் சண்பைவந்த வடலேறு திருவுள்ளத் தழகிதென்று, மெத்தமகிழ்ச் சியினோடும் விரைந்துசென்று வெண்டரளச் சிவிகையினின் றிழிந்துவேறோர், சத்திரமண் டபத்தின்மிசை யேறிநீடு சைவருட னெழுந்தருளி யிருந்துசாரும், புத்தர்களை யழைக்கவெனத் திருமுன்னின்றார் புகலிகாவலரோவல போற்றிச்சென்றார். (௬௧௨)

சென்றவர்கடேரர்குழா மணைந்துநீங்கள் செப்பிவரும்பொருணிலைமை தெரிக்கவெங்கள், வென்றிமழ விளங்களிறு சண்பையாளி வேதபாலகனும்மைத் தமிழின்வேந்த,னன்றுமகிழ்ந் தழைக்கின்றா னிண்டநீரு நண்ணுமெனக் கூறுதலு நன்மைசாராத், தன்றகைமைப் புத்தருடன் சாரிபுத்தன் சத்திரமண் டபமுன்பு சாரவந்தான். (௬௧௩)

அங்கணைந்து மண்டபத்துப் புத்தரோடும் பிள்ளையா ரருகணைய நின்றபோதி, லெங்குநிகழ் திருச்சின்னந் தடுத்தபுத்த னிருஞ்சிரத்தைப் பொடியாக்கு மெதிரிலன்பர், பொங்குபுகழ்ப் புகலிகா வலர்தம்பாதம் போற்றியரு ளாற்சாரி புத்தன்றன்னை, யுங்கடலை வனும்பொருளு முரைக்கவென்ன வுற்றவா தினைமேற்கொண் டுரைசெய்கின்றார். (௬௧௪)

கற்பங்க ளனைத்தினிலும் பிறந்துவிந்து கதிமாறுங் கணபங்க வியல்புதன்னிற், பொற்புடைய தானமே தவமேதன்மை புரிந்தநிலை யோகமே பொருந்தச்செய்ய, வுற்பவிக்கு மொழிவின்றி யுரைத்தஞானத் தொழியாத பேரின்ப முத்திபெற்றான், பற்பலரும் பிழைத்துய்ய வறமுன் சொன்ன பான்மையான் யாங்கடொழும் பரமனென்றான். (௬௧௫)

என்றுரைத்த சாரிபுத்த னெதிர்வந்தேற்ற விருந்தவத்துப் பெருந்தன்மை யன்பர்தாமு, நன்றுமது தலைவன்றான் பெற்றானென்று நாட்டுகின்ற முத்திதான் யாவதென்றார், நின்றவுரு வேதனையே குறிப்புச்செய்கை நேர்நின்ற ஞானமென நிகழ்ந்தவைந்து, மொன்றியகந் தத்தவிவே முத்தியென்ன வுரைசெய்தான் ௦ பிடகத்தி னுணர்வுமிக்கான். (௬௧௬)

ஆங்கவன்றா னுரைத்தமொழி கேட்டவன்ப ரதனையனுவாதஞ்செய் தவனைநோக்கித், தாங்கியஞா னத்துடனுங் கந்தமைந்துந் தாம்விந்து கெட்டனவேற் றலைவன்றானு, மீங்குளனென் றவனுக்கு விடயமாக யாவையுமு னியற்றுதற்கு விகாரமேசெய், தோங்குவடி வமைத்துவிழ வெடுக்கும்பூசை கொள்வாரா ருரைக்கவென வுரைக்கலுற்றான். (௬௧௭)

கந்தமாம் வினையுடம்பு நீங்கவெங்கோன் கலந்துளன்முத் தியிலென்றா னென்னக்காணு, மிந்திரியங் கண்முதலாங் கரணந்தானு மில்லையே யவனுணர்ச்சி யில்லையென்றார், முந்தையறி விலனாகி யுறங்கினானை நிந்தித்து மொழிந்துடன்மீ தாடினார்க்கு, வந்தவினைப் பயன்போல வழிபட்டார்க்கும் வருமன்றோ நன்மையென மறுத்துச்சொன்னான். (௬௧௮)

---

௦ பிடகம்-என்பது-பௌத்தநூல்.

சொன்னவுரை கேட்டருளி யன்பர்தாமுந் தொடர்ந்தவழி பாடுபல கொள்கின்றானுக், கன்னவற்றி னுடன்பாடு மெதிர்வுமில்லை யானபோ தவன்பெறுத லில்லையென்றார், முன்னவற்றி னுடன்பாடு மெதிர்வுமின்றி முறுகுதுயி லுற்றானை முனிந்துகொன்றால், வின்னுயிர்போய்க் கொலையாகி முடிந்ததன்றோ விப்படியா லெம்மிறைவற் கெய்துமென்றார். (கூகக)

இப்படியா லெய்துமென விசைந்துநீயிங் கெடுத்துக்காட் டியதுயி லு மியல்பினன்போன், மெய்ப்படிய கரணங்க ளுயிர்தாமிங்கு வேண்டு தியா னும்மிறைவற் கானபோது, செப்பியவக் கந்தத்தின் விளைவின்றா கித் திரிவில்லா முத்தியிற்சென் றிலனுமானா, னப்படியக் கந்தத்து ளறிவுங்கெட்டா லம்முத்தி யுடனின்ப மணையாதென்றார். (கூஉ0)

அவ்வுரைகேட் டெதிர்மாற்ற மறைவதின்றி யணைந்துளனம் முத்தி யெனு மதுவும்பாழாங், கவ்வையினின் றவனையெதிர் நோக்கிஞானக் கடலமுத மணையவர்தங் காதலன்பர்,பொய்வகையே முத்தியினிற் போனான் முன்பே பொருளெல்லா முணர்ந்துரைத்துப் போனானென்று, யெவ்வகையா லவனெல்லா முணர்ந்ததீது மில்லதுரைப் பாயெனினு மேற்போமென்றார். (கூஉக)

உணர்வுபொதுச் சிறப்பென்ன விரண்டின்முன்ன துளவான மரப்பொதுமை யுணர்த்தலேனைப், புணர்சிறப்பு மரங்களில்வைத் தின்னதென்ற விப்படியால் வரம்பில்லாப் பொருள்களெல்லாங், கொணரும்விறகினைக்குவைசெய் திடினும்வேறு குறைத்தவற்றைத் தனித்தனியே யிடினும்வெந்தீத், துணர்கதுவிச் சுடவல்ல வாறுபோலத் தொகுத்தும்விரித் துந்தெரிக்குந் தொல்லோனென்றான். (கூஉஉ)

எடுத்துரைத்த புத்தனெதி ரியம்புமன்ப ரெரியுணர்வுக் கெடுத்துக் காட் டாகச்சொன்னா, லடுத்தவுணர் வுருவுடைய தன்றுசொன்ன வனல்வடிவிற் றுமதுவு மறிதிநுங்கோன், றொடுத்தநிகழ் காலமே யன்றியேனைத் தொடர்ந்தவிரு காலமுந்தொக் கறியுமாகிற், கடுத்தவெரி நிகழ்காலத் திட்டதல்லாற் காணாத காலத்துக் கதுவாதென்றார். (கூஉங)

ஆதலினா லுன்னிறைவன் பொருள்களெல்லா மறிந்ததுநும்முத்திபோலாயிற்றன்றே, யேதமா மிவ்வறிவா லுரைத்தநூலு மென்றவனுக் கேற்குமா றருளிச்செய்ய, வாதமா றென்றின்றித் தோற்றான்புத்தன் மற்றவனை வென்றருளிப் புகலிமன்னர், பாததா மரைபணிந்தா ரன்பர்தங்கள் பான்மையழி புத்தர்களும் பணிந்துவீழ்ந்தார். (கூஉச)

புந்தியினா லவருரைத்த பொருளின்றன்மை பொருளன்றும் படியன்பர் பெருந்தக்கூற, மந்தவுணர் வுடையவரை நோக்கிச்சைவ மல்லாது மற்றென்று மில்லையென்றே, யந்தமில்சீர் மறைகளாக மங்களேனை யகிலகலைப் பொருளுணர்ந்தா ரருளிச்செய்யச், சிந்தையினி லதுதெளிந்து புத்தர்சண்பைத் திருமறையோர் சேவடிக்கீழ்ச் சென்றுதாழ்ந்தார். ()

அன்றவர்க்குக் கவுணியர்கோன் கருணைநோக்க மணைதலினு லறிவின்மை யகன்றுநீங்கி, முன்னெழுது விழுந்தெழுந்து சைவரானுர் முனைகமலர்மா ரியின்வெள்ளம் பொழிந்ததெங்கு, நின்றனவுஞ் சரிப்பனவுஞ் சைவமேயா நிலைமையவர்க் கருள்செய்து சண்பைவேந்தர், சென்றுசிவனுர்பதிகள் பணியவேண்டித் திருக்கடவூ ரதன்மருங்கு சேரவந்தார். ()

வேறு.

அங்ககரி லடியார்க ளெதிர்கொள்ளப் புக்கருளிக்
கொன்னவிலுங் கூற்றுதைத்தார் குரைகழல்கள் பணிந்தேத்தி
மன்னியமர்ந் துறையுநாள் வாகீச மாமுனிவ
ரெங்ககரி லெழுந்தருளிற் றென்றடியார் தமைவினவ. (௯௨௭)

அங்கவரு மடிபோற்றி யாண்டவர செழுந்தருளிப்
பொங்குபுனற் பூந்துருத்தி நகரின்கட் போற்றிசைத்துத்
தங்குதிருத் தொண்டுசெயு மகிழ்ச்சியினுற் சார்ந்தருளி
யெங்குநிகழ்ந் திடவிருந்த படியெல்லா மியம்பினுர். (௯௨௮)

அப்பரிசங் கவர்மொழிய வாண்டவர சினைக்காணு
மொப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க வொளிபொருகு
மைப்பொருவு கறைக்கண்டர் கழல்வணங்கி யருள்பெற்றுச்
செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார் செல்கின்றுர். (௯௨௯)

பூவிரியுந் தடஞ்சோலை புடைபரப்பப் புனல்பரக்குங்
காவிரியின் றென்கரைபோய்க் கண்ணுதலார் மகிழ்ந்தவிட
மேவியினி தமர்ந்திறைஞ்சி விருப்புறுமெய்த் தொண்டரொடு
நாவரச ருழைச்சண்பை நகரரசர் நண்ணுவார். (௯௩௦)

அந்தணர் சூளாமணியார் பூந்துருத்திக் கணித்தாக
வந்தருளும் பெருவார்த்தை வாகீசர் கேட்டருளி
நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது
முந்தைவினைப் பயனென்று முகமலர வகமலர்வார். (௯௩௧)

எதிர்சென்று பணிவனென வெழுகின்ற பெருவிருப்பா
னதிதங்கு சடைமுடியார் நற்பதங்க டொழுதகந்தப்
பதிநின்றும் புறப்பட்டுப் பரசமயஞ் சிதைத்தவர்பான்
முதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்த வந்தணைந்தார். (௯௩௨)

திருச்சின்னம் பணிமாறக் கேட்டநாற் றிசையுள்ளோர்
பெருக்கின்ற வார்வத்தாற் பிள்ளையார் தமைச்சூழ்ந்த
நெருக்கினிடை யவர்காணு வகைநிலத்துப் பணிந்துள்ள
முருக்கியெழு மனம்பொங்கத் தொண்டர்குழாத் துடனணைந்தார். ()

வந்தணைந்த வாகீசர் வண்புகலி வாழ்வேந்தர்
சந்தமணித் திருமுத்தின் சிவிகையினைத் தாங்கியே
சிந்தைகளிப் புறவந்தார் திருஞான சம்பந்தர்
புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார். (கூ௩ச)

அப்பர்தா மெங்குற்ற ரிப்பொழுதென் றருள்செய்ய
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவா
ரொப்பரிய தவஞ்செய்தே னதலினு லும்மடிக
ளிப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யானென்றார். (கூ௩ரு)

அவ்வார்த்தை கேட்டஞ்சி யவனியின்மே விழ்ந்தருளி
யிவ்வாறு செய்தருளிற் றென்னுமென் றிறைஞ்சுதலுஞ்
செவ்வாறு மொழிநாவர் திருஞான சம்பந்தர்க்
கெவ்வாறு செயத்தகுவ தென்றெதிரே யிறைஞ்சுதலும். (கூ௩கூ)

சூழ்ந்துமிடைந் தருகணையுந் தொண்டரெல்லா மதுகண்டு
தாழ்ந்துநில முறவணங்கி யெழுந்துதம கைகுவித்து
வாழ்ந்துமனக் களிப்பினராய் மற்றிவரை வணங்கப்பெற்
றாழ்ந்தபிறப் புய்ந்தோமென் றண்டமெல்லா முறவார்த்தார். (கூ௩எ)

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர்தமைப்
பெருகார்வத் தொடுமணைந்து தழீஇக்கொள்ளப் பிள்ளையார்
மருவாரு மலரடிகள் வணங்கியுடன் வந்தணைந்தார்
பெருவாரும் புனற்சடையார் மகிழ்ந்ததிருப் பூந்துருத்தி. (கூ௩அ)

அன்பர்குழாத் தொடுஞ்செல்வா ரானெற்றார் மகிழ்கோயின்
முன்பணித்தா கச்சென்று கோபுரத்தை முன்னிறைஞ்சித்
துன்பமிலாத் திருத்தொண்ட ருடன்றெழுது புக்கருளி
யென்புருக வலங்கொண்டு பணிந்தேத்தி யிறைஞ்சினார். (கூ௩கூ)

பொய்யிலியா ரைப்பணிந்து போற்றியே புறத்தணைவார்
செய்யசடை யார்கோயிற் றிருவாயின் முன்னாக
மையறுசீர்த் தொண்டர்குழாம் வந்துபுடை சூழ்வுல
குய்யவரு வார்தங்க ளுடன்மகிழ்ந்தங் கினிதிருந்தார். (கூச0)

வேறு.

வாக்கின் றனிமன்னர் வணபுகலி வேந்தர்தமைப்
போக்கும் வரவும் வினவப் புகுந்ததெல்லாந்
தூக்கின் றமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை
தேக்குந் திருவாயாற் செப்பி யருள்செய்தார். (கூசக)

காழி யினில்வந்த கவுணியர்தம் போரேற்றை
யாழிமிசைக் கன்மிதப்பின் வந்தா ரடிவணங்கி
வாழிதிருத் தொண்டென்னும் வான்பயிர்தா னோங்குதற்குச்
சூழும் பெருவேலி யானீ ரெனத்தொழுதார். (கூச௨)

பிள்ளையார் தாமுமவர் முன்றெழுது போனபின்
வெள்ள மனையபுகழ் மானியார் மேன்மையையுங்
கொள்ளும் பெருமைக் குலச்சிறையார் தொண்டினையு
முள்ள பரிசெல்லா மொழிந்தங்கு வந்திருந்தார். (௯௪௩)

தென்னற் குயிரோடு நீறளித்துச் செங்கமலத்
தன்ன மனையார்க்கு மமைச்சர்க்கு மன்பருளித்
துன்னுநெறி வைதிகத்தின் றூனெறியே யாக்குதலான்
மன்னுபுகழ் வாகீசர் கேட்டு மனமகிழ்ந்தார். (௯௪௪)

சொல்லின் பெருவேந்தர் தொண்டைவள நாடெய்தி
மல்கும் புகழ்க்காஞ்சி யேகாம் பரமன்னு
செல்வர் கழல்பணிந்து சென்றதெல்லாஞ் செப்புதலும்
புல்குநூன் மார்பரும் போற்ற மனம்புரிந்தார். (௯௪௫)

அங்கணனைப் போற்றி யெழுந்தாண்ட வரசமர்ந்த
பொங்கு திருமடத்திற் புக்கங் கினிதமர்ந்து
திங்கட் பகவணியுஞ் சென்னியார் சேவடிக்கீழ்த்
தங்கு மனத்தோடு தாள்பரவிச் செல்லுநாள். (௯௪௬)

வாகீச மாமுனிவர் மன்னுதிரு வாலவாய்
நாக மமைக்கசைத்த நம்பர் கழல்வணங்கப்
போகும் பெருவிருப்புப் பொங்கப் புகலியின்மே
லேகும் பெருங்காதல் பிள்ளையா ரேற்றெழுவார். (௯௪௭)

பூந்துருத்தி மேவும் புனிதனைப் புக்கிறைஞ்சிப்
போந்து திருவாயிற் புறத்தணைந்து நாவினுக்கு
வேந்தர் திருவுள்ள மேவவிடை கொண்டருளி
யேந்தலா ரெண்ணிறந்த தொண்டருட னேகினார். (௯௪௮)

மாடு புனற்பொன்னி யிழிந்து வடகரையி
னீடுதிரு நெய்த்தா னமையாறு நேர்ந்திறைஞ்சிப்
பாடுதமிழ் மாலைகளுஞ் சாத்திப் பரவிப்போ
யாடல் புரிந்தார் திருப்பழனஞ் சென்றணைந்தார். (௯௪௯)

செங்கண் விடையார் திருப்பழனஞ் சேர்ந்திறைஞ்சிப்
பொங்கிய காதலின்முன் போற்றும் பதிபிறவுந்
தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் தனிப்பொருப்பின்
மங்கை திருமுலைப்பா லுண்டருளும் வள்ளலார். (௯௫௰)

தென்னாட் டமணு சறுத்துத் திருநீறே
யந்நாடு போற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்
டெந்நாள் பணிவதென வேற்றெழுந்த மாமறையோர்
முன்னாக வேத முழங்க வெதிர்கொண்டார். (௯௫௧)

வேறு.

போதநீடுமா மறையவரெதிர்கொளப் புகலிகாவலருந்தஞ்
சீதமுத்தணி சிவிகைநின்றிழிந்தெதிர் செல்பவர் திருத்தோணி
நாதர்கோயின்முன் றோன்றிடநகைமலர்க் கரங்குவித்திறைஞ்சிப்போ
யோதநீரின்மே லோங்குகோயிலின்மணிக் கோபுரஞ்சென்றுற்றார். ()

அங்கமாநிலத் தெட்டுறவணங்கிப்புக் கஞ்சலிமுடியேறப் [தித்
பொங்குகாதலிற் புடைவலங் கொண்டுமுன் பணிந்துபோற்றெடுத்தோ
துங்கநீள்பெருந் தோணியாங்கோயிலே யருளினாற்றொழுதேறி
மங்கையோடுடன் வீற்றிருந்தருளினார் மலர்க்கழலபணிவுற்றார். ()

முற்றுமெய்யெலாம் புளகங்கண்முகிழ்த்தெழ முகந்துகண் களிகூரப்
பற்றுமுள்ளமுள் ளலைத்தெழுமானந்தம் பொழிதரப்பணிந்தேத்தி
யுற்றுமைசேர்வ தெனுந்திருவியமக முவகையாலெடுத்தோதி
வெற்றியாக்மீ னவனவையெதிர்நதி மிசைவருகரனென்பார். (கூடுச)

---

திருக்கழுமலம்-திரு-இயமகம்.

திருச்சிற்றம்பலம்.

உற்றுமை சேர்வது மெய்யினையே யுணர்வது நின்னருள் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே கனல்விழி காய்வது காமனையே
யற்ற மறைப்பது முன்பணியே யமரர்கள் செய்வது முன்பணியே
பெற்று முகந்தது கந்தனையே பிரம புரத்தை யுகந்தனையே.

"உணர்வது நின்னருள் மெய்யினையே"—(இதன் கருத்து.) நின் அருளாகிய சத்தியத்தையே யா னுணர்ந்துகொண்டிருப்பது.

"கற்றவர் காய்வது காமனையே"—(இதன் கருத்து.) கற்றுணர்ந்தவர்களால்விடப்பட்டது. பசுத்துவம்பொருந்திய க்ஷேத்திரமாகிய தேகாதிபிரபஞ்சமே.

"அற்ற மறைப்பது முன்பணியே"—(இதன் கருத்து) உனது திருவாணத்தைமறைப்பது, முன் தொங்கலாகிய பாம்புகளே. மற்றவை வெளிப்படை.

---

பருமதிள் மதுரைம னவையெதிரே பதிகம தெழுதிலை யவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே வசையொடு மலர்கெட வருகரனே
கருதலி லிசைமுர றருமருளே கழுமல மமரிறை தருமருளே
மருவிய தமிழ்விர கன்மொழியே வல்லவர் தம்மிடர் திடமொழியே.

திருச்சிற்றம்பலம்.

"பதிகம தெழுதிலே யவை"—(இதன் கருத்து.) திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளவை, வருநதி யிடைமிசை - வருகின்ற வைகையாற்றினிடத்திலே, எதிர்வரு கரனே - எதிரிட்டுப்போம்படி துணைசெய்த ஸ்ரீ அத்தங்களையுடையவனே, வசையொடும்-சமணருடைய வசைச்சொல்லும், அலர்-பரிபவச்சொல்லும், கெட-கெடும்பொருட்டாக, அருகு அரனே-சமண்குலத்தைக் கெடுக்கப்பட்டவனே, கருதலில்-கேட்போர்கள்கருத்தை அழிக்கத்தக்க, இசைமுரல்-இசைக்குரியோருமாய், தருமர் உள்-தருமசீலருமாகிய பிராமணர்கள் வாழ்கின்ற, உள் எனற்பாலது விகாரவகையால் உள் என நின்றது. கழுமலம் அமர்இறை தரும்அருளே மருவிய தமிழ்விர கன் - திருக்கழுமலத்தி லிராநின்ற தம்பிரானார் பிரசாதித்தருளிய திருவருளை யிடைவிடாமற்பொருந்திய தமிழவிரகனுகிய யான். மற்றவை வெளிப்படை.

---

சீரின்மல்கிய திருப்பதிகத்தினிற் றிருக்கடைகாப்பேற்றி
வாரின்மல்கிய வனமுலையாளுடன் மன்னினார்தமைப்போற்றி
யாருமின்னருள் பெற்றுமீண்டணைபவ ரங்கையாற்றொழுதேத்தி
யேரின்மல்கிய கோயின்முன்பணிந்துபோந் திறைஞ்சினர்மணிவாயில்.()

தாதையாருமங் குடன்பணிந்தணைந்திடச் சண்பையார்தனியேறு
மூதெயிற்றிரு வாயிலைத்தொழுதுபோய் முகைமலர்க்குழலார்க
ளாதரித்துவாழ்த் துரையிருமருங்கெழ வணிமறுகிடைச்சென்று
காதலித்தவர்க் கருள்செய்துதந்திரு மாளிகைக்கடைசார்ந்தார். (கூ௫சு)

நறவமார்பொழிற் புகலியினண்ணிய திருஞானசம்பந்தர்
விறலியாருட னீலகண்டப்பெரும் பாணர்க்குமிகநல்கி
யுறையுளாமவர் மாளிகைச்செலவிடுத் துள்ளணைதரும்போதி
லறலினேர்குழ லார்மணிவிளக்கெடுத் தெதிர்கொளவணைவுற்றார். (கூ௫எ)

அங்கணைந்தரு மறைக்குலத்தாயர்வந் தடிவணங்கிடத்தாமுந்
துங்கநீள்பெருந் தோணியிற்றுயர்தாண மனங்கொளத்தொழுவாராய்த்
தங்குகாதலி னங்கமர்ந்தருளுநாட் டம்பிரான்கழற்போற்றிப்
பொங்குமின்னிசைத் திருப்பதிகம்பல பாடினார்புகழ்ந்தேத்த. (கூ௫அ)

நீலமாவிடந் திருமிடற்றடக்கிய நிமலனைநேரெய்துங்
காலமான்வை யனைத்தினும்பணிந்துடன் கலந்தவன்பர்களோடுஞ்
சாலநாள்களங் குறைபவர்தையலா டழுவிடக்குழைகம்பர்
கோலமார்தரக் கும்பிடுமாசைகொண் டெழுங்குறிப்பினரானார். (கூ௫௯)

தண்டகத்திரு நாட்டினைச்சார்ந்துவந் தெம்பிரான்மகிழ்கோயில்
கண்டுபோற்றிராம் பணிவதென் றன்பருக் கருள்செய்வார்காலம்பெற்
றண்டருக்கறி வரும்பெருந்தோணியி லிருந்தவரருள்பெற்றுத் [ய்வார்.
தொண்டர்சூழ்ந்துடன் புறப்படத்தொடர்ந்தெழுந் தாதையார்க்குரைசெ

அப்பர்நீரினி யிங்கொழிந்தருமறை யங்கிவேட்டன்போடுந்
துப்புநேர்சடை யார்தமைப்பரவியே தொழுதிருமெனச்சொல்லி
மெய்ப்பெருந்தொண்டர்மீள்பவர்தமக்கெலாம்விடைகொடுத்தருளிப்போ
யொப்பிலாதவர் தமைவழியிடைப்பணிந் தருகூமன்பொடுசெல்வார். ()

செல்வமல்கிய தில்லைமூதூரினிற் றிருநடம்பணிந்தேத்திப்
பல்பெருந்தொண்ட ரெதிர்கொளப்பரமர்தந் திருத்தினைநகர்பாடி
யல்குதொண்டர்க டம்முடன் றிருமாணி குழியினையணைந்தேத்தி
மல்குவார்சடை யார்திருப்பாதிரிப் புலியூரைவந்துற்றார். (சூகூஉ)

---

திருமாணிகுழி-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

பொன்னியல் பொருப்பரையன் மங்கையொரு பங்கர்புன றங்குசடைமே
வன்னியொடு மத்தமலர் வைத்தவிறல் வித்தகர் மகிழ்ந்துறைவிடங் [ல்
கன்னியிள வாளைகுதி கொள்ளவிளை வள்ளைபட ரள்ளல்வயல்பாய்
மன்னியிள மேதிகள் படிந்துமனை சேருதவி மாணிகுழியே.

உந்திவரு தண்கெடில மோடுபுனல் சூழுதவி மாணிகுழிமே
லந்திமதி சூடியவெம் மானையடி சேருமணி காழிநகரான்
சந்தநிறை தண்டமிழ் தெரிந்துணரு ஞானசம் பந்தனதுசொன்
முந்தியிசை செய்துமொழி வார்களுடை யார்கணெடு வானகிலனே.

திருச்சிற்றமபலம்.

சுவாமிபெயர்-மாணிக்கவரதேசுவரர். தேவியார்-மாணிக்கவல்லியம்மை.

திருப்பதிகம்—க.

---

கன்னிமாவனங் காப்பெனவிருந்தவர் கழலிணைபணிந்தங்கு
முன்னமாமுடக் கான்முயற்கருள்செய்த வண்ணமுமொழிந்தேத்தி
மன்னுவார்பொழிற் றிருவடுகூரினை வந்தெய்திவணங்கிப்போய்ப்
பின்னுவார்சடை யார்திருவக்கரை பிள்ளையாரணைவுற்றார். (சூகூங)

---

திருப்பாதிரிப்புலியூர்-பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

முன்னநின்றம்முடக் கால்முயற்கருள் செய்துநீள்
புன்னைநின்றுகமழ் பாதிரிப்புலி யூருளான்
றன்னைநின்றுவணங் குந்தனைத்தவ மில்லிகள்
பின்னைநின்றபிணி யாக்கையைப்பெறு வார்களே.

அந்தணல்லாரகன் காழியுள்ளணி ஞானசம்
பந்தனல்லார்பயில் பாதிரிப்புலி யூர்தனுட்
சந்தமாலைத்தமிழ் பத்திவைதரித் தார்கண்மேல்
வந்துதீயவ்வடை யாமையால்வினை மாயுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தோன்றாத்துணையீசர். தேவியார்-தோகையம்பிகை.

திருப்பதிகம்—உ.

---

திருவடுகூர்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சுடுகூரெரிமாலை யணிவர்சுடர்வேலர்
கொடுகூர்மழுவாளொன் றுடையார்விடையூர்வர்
கடுகூர்பசிகாமங் கவலைபிணியில்லார்
வடுகூர்புனல்சூழ்ந்த வடுகூரடிகளே.

படிநோன்பவையாவர் பழியில்புகழான
கடிநாணிகழ்சோலைக் கமழும்வடுகூரைப்
படியானமுந்தை மொழியார்சம்பந்த
னடிஞானம்வல்லா ரடிசேர்வார்களே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வடுகேசுவரர். தேவியார்-வடுவகிர்க்கண்ணம்மை.

திருப்பதிகம்—க.

---

வக்கரைப்பெருமான்றனைவணங்கியங் கமருநாளருளாலே
செக்கர்வேணியா ரிரும்பைமாகாளமுஞ் சென்றுதாழ்ந்துடன்மீண்டு
மிக்கசீர்வள ரதிகைவீரட்டான மேவுவார்தம்முன்பு [ற்றார்.
தொக்கமெய்த்திருத் தொண்டர்வந்தெதிர்கொளத் தொழுதெழுந்தணைவு

---

திரு-இரும்பைமாகாளம்-பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

மண்டுகங்கை சடையிற் கரந்தும்மதி சூடிமான்
கொண்டகையாற் புரமூன் றெரித்தகுழ கன்னிட
மெண்டிசையும் புகழ்போய் விளங்கும் மிருப்பைதனுள்
வண்டுகீதம் முரல்பொழில் சுலாகின்ற மாகாளமே.

எந்தைபெம்மா னிடம்மெழில்கொள் சோலையிருப் பையதனுள்
மந்தமாரும் பொழில்சூழ் தழகாய மாகாளத்தி
லந்தமில்லா வனலாடு வானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாட வல்லார் பழிபோகுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாகாளேசுவரர். தேவியார்-குயின்மொழியம்மை.

திருப்பதிகம்—க.

---

ஆதிதேவரங் கமர்ந்தவீரட்டானஞ் சென்றணைபவர்முன்னே
பூதம்பாடநின் றுவோர்திருநட்டம் புலப்படும்படிகாட்ட
வேதபாலகர் பணிந்துமெய்யுணர்வுட னுருகியவிருப்போடுங்
கோதிலாவிசை குலவுகுண்டைக்குறட் பூதமென்றெடுத்தேத்தி. (கூசுரு)

---

திரு அதிகைவீரட்டானம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

குண்டைக் குறட்பூதங் குழுமவன லேந்திக்
கெண்டை பிறழ்தெண்ணீர் கெடிலவட பக்கம்
வண்டு மருள்பாட வளர்பொன் விரிகொன்றை
விண்ட தொடையல னுடும்வீரட் டானத்தே.

நாழல் கமழ்காழி ஞானசம் பந்தன்
வேழம் பொருதெண்ணீ ரதிகைவீ ரட்டானத்துச்
சூழுங் கழலானைச் சொன்ன தமிழ்மாலை
வாழுந் துணையாக நினைவார் வினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

பரவியேத்திய திருப்பதிகத்திசை பாடினார் பணிந்தங்கு
விரவுமன்பொடு மகிழ்ந்தினிதுறைபவர் விமலனைவணங்கிப்போ
யரவகீர்ச்சடை யங்கணர்தாமகிழ் துறைதிருவாமாத்தூர்
சிரபுரத்துவர் தருளியசிறுமறைச் சிறுவர்சென் றணைவுற்றார். (கூசுசு)

வெம்புந் தியகதிரோ னொளிவிலகும் விரிசார
லம்புந்தி மூவெயிலெய்திய வண்ணு மலையதனைக்
கொம்புந் துவகுயிலா லுவகுளிர்கா ழியுள்ஞான
சம்பந் தனதமிழ்வல் லவரடிபே ணுதறவமே.

திருச்சிற்றம்பலம்

அங்கணணைவார் பணிந்தெழுந்து போற்றிசெய்தம் மலைமீது
தங்குவிருப்பில் வீற்றிருந்தார் தாட்டாமரைக டம்முடிமேற்
பொங்குமார்வத் தொடும்புனைந்து புளகமலர்ந்த திருமேனி
யெங்குமாகிக் கண்பொழியு மின்பவருவி பெருக்கினார். (௬௭௧)

ஆதிமூர்த்தி கழல்வணங்கி யங்கணினிதி னமருநாட்
பூதநாத ரவர்தம்மைப் பூவார்மலராற் போற்றிசைத்துக்
காதலாலத் திருமலையிற் சிலநாள்வைகிக் கமழ்கொன்றை
வேதகீதர் திருப்பதிகள் பிறவும்பணியும் விருப்புறுவார். (௬௭௨)

திருவண்ணாமலை-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பூவார்மலர்கொண் டடியார்தொழுவார் புகழ்வார்வானோர்கண்
* மூவார்புரங்க ளெரித்தவன்று 0 மூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின் றதிரவெருவித் தொறுவினிரையோடு
மாமாம்பிணைவந் தணையுஞ்சார லண்ணாமலையாரே.

அல்லாடரவ மியங்குஞ்சார லண்ணாமலையானை
நல்லார்பரவப் படுவான்காழி ஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்த பாடலான பத்தும்மிவைகற்று
வல்லாரெல்லாம் வானோர்வணங்க மன்னிவாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்.

மங்கைபாகர் திருவருளால் வணங்கிப்போந்து வடதிசையிற்
செங்கண்விடையார் பதிபலவும் பணிந்துபுகலிச் செம்மலார்
துங்கவரைக டாம்பலவுங் கடந்துதொண்டைத் திருநாட்டிற்
றிங்கண்முடியா ரினிதமருந் திருவோத்தூரைச் சேர்வுற்றார். (௬௭௩)

தேவர்முனிவர்க் கோத்தளித்த திருவோத்தூரிற் றிருத்தொண்டர்
தாவில்சணபைத் தமிழ்விரகர் தாமங்கணையக் களிசிறந்து
மேவுங்கதலி தோரணங்கள் விளக்குநிறைத்து நிறைகுடமும்
பூவும்பொரியுஞ் சுண்ணமுமுன் கொண்டுபோற்றி யெதிர்கொண்டார்.()

* மூன்று புரங்களாவன-இரும்பு, வெள்ளி, பொன் இவைகளாலியன்ற மதில்களை யுடையதுகள். இப்புரங்களிலிருந்து அரசுசெய்த 0 மூவர்கள்பெயர்-வித்யுன்மாலி, தாருகாக்ஷன், கமலாக்ஷன் என்பனவாம்.

சண்பைவேந்தர் தண்டரளச் சிவிகைநின்று மிழிந்தருளி
நண்பின்மிக்க சீரடியார் சூழநம்பர் கோபுரஞ்சூழ்
விண்பினாக முன்னோங்கும் வியன்பொற்புரிசை வலங்கொண்டு
பண்புநீடிப் பணிந்தெழுந்து பரமர்கோயி லுள்ளடைந்தார். (கூஎரு)

வாரணத்தி னுரிபோர்த்த மைந்தருமையாண் மணவாள
ராரணத்தி னுட்பொருளாய் நின்றார்தம்மு னணைந்திறைஞ்சி
நாரணற்கும் பிரமற்கு நணணற்கரிய கழல்போற்றுங்
காரணத்தின் வருமின்பக் கண்ணீர்பொழியக் கைதொழுதார். (கூஎசா)

தொழுதுவிழுந்து பணிந்தெழுந்து சொன்மாலைகளாற் றுதிசெய்து
முழுதுமரனா ரருள்பெற்றுப் போந்துவைகி முதல்வர்தமைப்
பொழுதுதோறும் புக்கிறைஞ்சிப் போற்றிசெய்தங் கமர்வார்முன்
னழுதுவணங்கி யொருதொண்ட ரமணர்திறத்தொன் றறிவிப்பார். ()

அங்கையனலேற் றவர்க்கடியே னாக்கும்பனைக ளானவெலா
மங்குலுறநீண் டாண்பனையாய்க் காயாதாகக் கண்டமண
ரிங்குநீரிட் டாக்குவன காய்த்தற்கடைவுண் டோவென்று
பொங்குநகைசெயி திழித்துரைத்தா ரருள்வேண்டு மெனப்புகல. (கூஎஅ)

பரமனார்தந் திருத்தொண்டர் பண்புநோக்கிப் பரிவெய்தி
விரவுகாத லொடும்விரைந்து விமலர்கோயில் புக்கருளி
யரவுமதியும் பகைதீர வணிந்தார்தம்மை யடிவணங்கி
யிரவுபோற்றித் திருப்பதிக மிசையிற்பெருக வெடுத்தருளி. (கூஎகூ)

விரும்புமேன்மைத் திருக்கடைகாப் பதனில்விமல ரருளாலே
குரும்பையாண்பெண் பனையீனு மென்னும்வாய்மை குலவுதலா
னெருங்கும் o ஏற்றுப் பனையெலலா நிறைந்தகுலைக ளாயக்குரும்பை
யரும்புபெண்ணை யாகியிடக் கண்டோரெல்லா மதிசயித்தார். (கூஅ0)

---

திருவோத்தூர் ஆண்பனை பெண்பனையான-திருப்பதிகம்.

பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பூத்தொத்தாயின கொண்டுநின்பொன்னடி
யேத்தாதாரில்லை யெண்ணுங்கா
லோத்தூர்மேய வொளிமழுவாளங்கை
கூத்தீரும்ம குணங்களே.

---

o ஏற்றுப்பனை-என்பது-ஆண்பனை.

குரும்பையாண்பனை யீன்குலையொத்து
ரரும்புகொன்றை யடிகளைப்
பெரும்புகலியுண் ஞானசம்பந்தன்சொல்
விரும்புவார் வினைவீடே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் வேதநாதேசுவரர். தேவியார்-இளமுலையம்மை.
திருப்பதிகம்—க. ஒத்து-என்பது-வேதம்.

---

சீரின்மன்னுந் திருக்கடைக்காப் பேற்றிச்சிவனு ரருள்பெற்றுப்
பாரினீடு மப்பனைமுன் காய்த்துப்பழுக்கும் பண்பினு
னேருமன்பர் தங்கருத்து நேரேமுடித்துக் கொடுத்தருளி
யாருமுவகைத் திருதொண்டர் போற்றவங்க ணினிதமர்ந்தார். (கூஅக)
தென்னாட்டமணு சறுத்தார்தஞ் செய்கைகண்டு திகைத்தமண
ரங்நாட்டதனை விட்டகல்வார் சிலர்தங்கையிற் குண்டிகைக
ளென்னுவமைற் றிவையென்று தகர்ப்பாரிறைவ னேறுயர்த்த
பொன்னூர்மேனிப் புரிசடையா னன்றேயென்று போற்றினர். (கூஅஉ)
பிள்ளையார்தந் திருவாக்கிற் பிறத்தலாலே தாலமுமுன்
புள்ளபாசம் விட்டகல வொழியாப்பிறவி தனையொழித்துக்
கொள்ளுநீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவாம்
வள்ளலார்மற் றவரருளின் வாய்மைகூறின் வரம்பென்னும். (கூஅங)
அங்கணமரர் பெருமானைப் பணிந்துபோந்தா டரவினுடன்
பொங்குகங்கை முடிக்கணிந்தார் மகிழும்பதிகள் பலபோற்றி
மங்கைபாக ரமர்ந்தருளும் வயன்மாகறலை வழுத்திப்போய்க்
கொங்கு மலர்நீர்க் குரங்கணின்முட் டத்தைச்சென்று குறுகினர். (

---

திருமாகறல்-திருவிராகம்-பண்-சாதாரி.
திருச்சிற்றம்பலம்.

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள் பாடல்விளை யாடலரவம்
மங்குலொடு நீள்கொடிகள் மாடமலி நீடுபொழின் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர் திங்களணிசெஞ்சடையினன்
செங்கண்விடை யண்ணலடி சேர்பவர்க டீவினைக டீருமுடனே.
கடைகொணெடு மாடமிக வோங்குகமழ் வீதிமலி காழியவர்கோ
னடையும்வகை யாற்பரவி யரனையடி கூடுசம் பந்தனுரையான்
மடைகொள்புன லோடுவயல் கூடுபொழின் மாகறலு ளானடியையே
யுடையதமிழ் பத்துமுணர் வாரவர்க டொல்வினைக ளொல்குமுடனே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கலகங்காத்தவரதேசுவரர். தேவியார்-புவனநாயகியம்மை.
திருப்பதிகம்—க.

---

ஆதிமுதல்வர் குரங்கணின்முட் டத்தையணைந்து பணிந்தேத்தி
நீதிவாழுந் திருத்தொண்டர் போற்றநிகரில் சண்பையினில்
வேதமோடு சைவநெறி விளங்கவந்த கவுணியனார்
மாதோர்பாகர் தாமன்னு மதில்சூழ்காஞ்சி மருங்கணைந்தார். (௬௮௫)

குரங்கணின்முட்டம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

விழுநீர் மழுவாட் படையண்ணல் விளங்குங்
கழுநீர் குவளைம் மலரக் கயல்பாயுங்
கொழுநீர் வயல்சூழ்ந்த குரங்கணின் முட்டந்
தொழுநீர் மையர்தீ துறுதுன்ப மிலரே.

கல்லார் மதிட்காழி யுள்ஞான சம்பந்தன்
கொல்லார் மழுவேந்தி குரங்கணின் முட்டஞ்
சொல்லார் தமிழ்மாலை செவிக்கினி தாக
வல்லார்க் கெளிதாம் பிறவா வகைவீடே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வாலீசுவரர். தேவியார்-இறையார்வளையம்மை.

திருப்பதிகம்—க.

வாலி அணில்-காக்கை-பூசித்ததலம்.

வேறு.

நீடுகாஞ்சி வாழ்நரு நிலவுமெய்ம்மை யன்பரு
மாடுசண்பை வள்ளலார் வந்தணைந்த வோகையாற்
கூடுகின்ற வின்பநேர் குலாவுவீதி கோலினார்
காடுகொண்ட பூகம்வாழை காமர்தோ ரணங்களால். (௬௮௬)

கொடிநிரைத்த வீதியிற் கோலவேதி கைப்புறங்
கடிகொண்மாலை மொய்த்தபந்தர் கந்தநீர்த்த சும்புடன்
மடிவில்பொன் விளக்கெடுத்து மாதர்மைந்தர் மல்குவார்
படிவிளங்கு மன்பரும் பரந்தபண்பி லீண்டுவார். (௬௮௭)

கோதைமாத ராடலுங் குலாவுதொண்டர் பாடலும்
வேதகீத நாதமும் மிக்கெழுந்து விம்மவே
காதனீடு காஞ்சிவாழ்நர் கம்பலைத் தெழுந்துபோய்
மூதெயிற் புறம்புசென் றணைந்துமுன் வணங்கினார். (௬௮௮)

சண்பையாளு மன்பர்முன்பு தொண்டர்வந்து சார்தலும்
பண்புநீடி யானமுன் பிழிந்திறைஞ்சு பான்மைகண்
டெண்பெருக்கு மிக்கதொண்ட ரஞ்சலித் தெழுந்தசொன்
மண்பரக்க விழ்ந்தெழுந்து வானமுட்ட வார்த்தனர். (௬௮௯)

சேணுயர்ந்த வானநீடு சீர்கொள்சண்பை மன்னனார்
வாணிலாவு நீற்றணி விளக்கிட மனத்தினுற்
பூணுமன்பர் தம்முடன் புகுந்திடப் புறத்துளோர்
காணுமாசை யிற்குவித்த கைந்நிரை யெடுத்தனர். (௬௬௦)

வியனெடுக் தெருவினூடு மிக்கதொண்ட ரார்ப்பெழக்
கயனெடுங்கண் மாதருங் காதனீடு மாந்தரும்
புயல்பொழிந்த தாமெனப் பூவினோடு பொற்சுண
மியலுமாறு வாழ்த்தெடுத் திருமருங்கும் வீசினார். (௬௬௧)

இன்னவண்ண மியாவரு மின்பமெய்த வெய்துவார்
பின்னுவார் சடைமுடிப் பிரான்மகிழ்ந்த கோயில்கண்
முன்னுறப் பணிந்துபோய் மொய்வரைத் திருமகண்
மன்னுபூ சனைமகிழ்ந்த மன்னர்கோயின் முன்னினார். (௬௬௨)

கம்பவாழ்நர் கோயில்வாயில் கண்டுகை குவித்தெடுத்
தும்பரோங்கு கோபுரத்தின் முன்னிறைஞ்சி யுள்ளணைந்
தம்பொன்மாளி கைப்புறத்தி லன்பரோடு சூழவந்
திம்பர்ஞால முய்யவந்த பிள்ளையா ரிறைஞ்சுவார். (௬௬௩)

வேறு.

செம்பொன்மலைக் கொடிதழுவக் குழைந்தருளுந் திருமேனிக்
கம்பரைவந் தெதிர்வணங்குங் கவுணியர்தங் காவலனார்
பம்புதுளிக் கண்ணருவி பாய்ந்துமயிர்ப் புளகம்வரத்
தம்பெருகு மனக்காத றள்ளநிலமிசைத் தாழ்ந்தார். (௬௬௪)

பலமுறையும் பணிந்தெழுந்து பங்கயச்செங் கைமுகிழ்ப்ப
மலருமுக மளித்ததிரு மணிவாயான் மறையானென்
றுலகுய்ய வெடுத்தருளி யுருகியவன் பென்புருக்க
நிலவுமிசை முதற்றுள நிரம்பியசீர் மையினிகழ. (௬௬௫)

---

திரு எகம்பம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொ டாணாகிய பெம்மானை
யிறையானை யேர்கொள்கச் சித்திரு வேகம்பத்
துறைவானை யல்லதுள் காதென துள்ளமே.

அந்தண்பூங் கச்சியே கம்பனை யம்மானைக்
கந்தண்பூங் காழியூ ரன்கவிக் கோவையாற்
சந்தமே பாடவல்ல தமிழ்ஞான சம்
பந்தன் சொற்பாடி யாடக் கெடும்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடினர் பணிவுற்றார் பரிவுறுமா னந்தக்கூத்
தாடினு ரகங்குழைந்தா ரஞ்சலிதஞ் சென்னியின்மேற்
சூடினர் மெய்முகிழ்த்தார் சூகரமு மன்னமுமாய்த்
தேடினு ரிருவர்க்குந் தெரிவரியார் திருமகனர். (கூகூசு)

மருவியவே ழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பாற்
பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையா
ருருகியவன் புள்ளலைப்ப வுமைதழுவக் குழைந்தவனைப்
பருகியமெய் யுணர்வினெடும் பரவியே புறத்தணைந்தார். (கூகூஎ)

புறத்தணைந்த தொண்டருடன் போந்தமைந்த திருமடத்திற்
பெறற்கரும்பே றுலகுய்யப் பெற்றருளும் பிள்ளையார்
மறப்பரிய காதலுடன் வந்தெய்தி மகிழ்ந்துறைவார்
அறப்பெருஞ்செல் வக் * காமக் கோட்டமணைந் திறைஞ்சினர். (கூகூஅ)

திருவேகாம் பரத்தமர்ந்த செழுஞ்சுடரைச் சேவடியி
லொருபொழுதுந் தப்பாதே யுள்ளுருகிப் பணிகின்றார்
மருவுதிரு வியமகமும் வளரிருக்குக் குறண்மற்றும்
பெருகுமிசைத் திருப்பதிகத் தொடைபுனைந்தார் பிள்ளையார். (கூகூகூ)

---

திருவேகம்பம்-திருஇயமகம்.

திருச்சிற்றம்பலம்.

பாயுமால்விடை மேலொருபாகனே பாவைதன்னுரு மேலொருபாகனே
தூயவானவர் வேதத்துவனியே சோதிமாலெரி வேதத்துவனியே
யாயுநன்பொரு ளுண்பொருளாதியே யாலநீழ லரும்பொருளாதியே
காயவன்மதன் பட்டதுகம்பமே கண்ணுதற்பர மற்கிடங்கம்பமே.

"பாயுமால்விடை மேலொருபாகனே"—(இதன்கருத்து.) வானளவுந்தத்தப்பட்ட பெரிய ரிஷபத்தின்மேலேறிச் செலுத்துகைக்கு ஒப்பில்லாத பாகனுயுள்ளவனே.

"பாவைதன்உரு மேல்ஒருபாகனே"—(இதன்கருத்து.) பரமேசுவரியினுடைய திருமேனியினை, உனது திருவடிவின் ஒருபாதியிலே வைத்தவனே.

"தூயவானவர் வேதத்துவனியே"—(இதன்கருத்து.) நின்மலரானவானவரது, துதியாகிய வேதங்களினுடைய நாதசொரூபமாயிருக்கின்றவனே.

"சோதிமால்எரிவு எது அத்துவனியே"—(இதன்கருத்து.) பிரகாசத்தையுடைத்தாய் மிகுதிப்பட்டு அஞ்சத்தீயினுடைய பிரகாசம் எப்படியிருக்கும், அப்படித்தான் வழியாயுள்ளவனே.

---

* காமக்கோட்டம் என்பது - காமாட்சியம்மை ஆலயம்.

"ஆயுகன்பொருள் நுண்பொருளாதியே"—(இதன்கருத்து.) மன போதத்தா லுணரப்பட்ட அத்தங்களுக்கெல்லாங் கிட்டுதற்கரிதாகிய சூனியமாயுள்ள மூலவத்துவாயிருப்பவனே.

"ஆலநீழ லரும்பொருளாதியே"—(இதன்கருத்து.) கீழ்ச்சொன்ன பொருளை, வட விருக்ஷத்தின்கீழ் எழுந்தருளியிருந்து,ஆத்மபோதத்தால் உணர்தற்கரிய பொருளென வுணர்த்தி யப்பொருளைத் தெருட்சிபட ஆயாநின்றனையே.

"காயவன்மதன் பட்டதுகம்பமே"—(இதன்கருத்து.) உனது நெற் றிவிழியாலே தகனஞ்செய்ய, யாவராலுஞ் செயித்தற்கரிய காமன்பட்ட வாறு, அங்கமெடாத நடுக்கமே.

"கண்ணுதற்பர மற்கிடங்கம்பமே"—(இதன்கருத்து.) இவ்வாறு காமன்வடிவு அழிய நுதற்கண்விழித்த கருணையாளனாகிய சிவனுக்கிட மேதென்னில், திருவேகம்பமென்னுந் திருப்பதியே என்க.

---

கந்தமார்பொழில் சூழ்தருகம்பமே காதல்செய்பவர் தீர்த்திடுகம்பமே
புந்திசெய்து விரும்பிப்புகலியே பூசுரன்றன் விரும்பிப்புகலியே [டுமே
யந்தமில்பொரு ளாயினகொண்டுமே யண்ணனின்பொரு ளாயினகொண்
பந்தனின்னியல் பாடியபத்துமே பாடவல்லவ ராயினபத்துமே.

திருச்சிற்றம்பலம்.

---

"கந்தம்ஆர்பொழில் சூழ்தருகம்பமே"—(இதன்கருத்து.) மணம் பொருந்திய சோலைசூழ்ந்த திருவேகம்பத்தை.

"காதல்செய்பவர் தீர்த்திடுகம்பமே"—(இதன்கருத்து.) இடைவி டாமற்காதலித்து நினைப்பவரது சென்மநடுக்கத்தை யொழிக்கப்பட்ட வனே.

"புந்திசெய்து விரும்பிப்புகலியே பூசுரன்றன் விரும்பிப்புகலியே" (இதன்கருத்து.) இத்தன்மை காதலித்தாரது சென்மநடுக்கத்தை யொழி ப்பையென்பதை யானுமுணர்ந்து கனகமாடங்கள் சூழப்பட்ட புகலியெ ன்கிற பதியின்கண் வாழ்கின்ற இந்த மறையோனாகிய யான், அத்தன்மை கருணையாளனாகிய தன்னை, யானுங் காதலித்துரைத்த தமிழ்மாலையை.

"அந்தமில்பொரு ளாயினகொண்டுமே"—(இதன்கருத்து.) முடிவி ல்லாத அத்தங்களில் எனக்குத்தோன்றின மதியாதியைக்கொண்டு.

"அண்ணனின்பொரு ளாயினகொண்டுமே, பந்தனின்னியல் பாடி யபத்துமே"—(இதன்கருத்து.) கத்தாவாகிய நினது சிவானந்தாது அறி வினுள்ளே தோன்றப்பட்ட சிவானந்தம்,ஏகமாகிய விசேடத்தையுடைய நின்னை இரண்டறத்தழுவப்பட்ட ஞானசம்பந்தனவன் இனிய தமிழா கப்பாடிய இம்மாலைபத்துமே.

"பாடவல்லவ ராயினபத்துமே." (இதன்கருத்து.) இம்மாலையைக் கொண்டு நின்னைப் பாடுவோர்க்கு ஆகுவதேதென்னில், அழகாகிய பக்தி ஞானவைராக்கியங்கள் என்க.

மேலொருபாகனே மேலொருபாகனே என இரட்டைப்பிள்ளைகள் போல ஓரே தன்மையாயிருப்பதினால் யமகமெனச் சொல்லப்பட்டதென்று சான்றோர் சொல்லக்கேள்வி.

---

ஷ திருவிருக்குறள்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கருவார் கச்சித், திருவே கம்பத்
தொருவா வென்ன, மருவா வினையே.
கொச்சை வேந்தன், கச்சிக்கம்ப
மெச்சுஞ் சொல்லை, நச்சும்புகழே.

திருச்சிற்றம்பலம்.

---

திருநெறிக்காரைக்காடு - திருமேற்றளி - அநேகதங்காவதம் - திருவோணகாந்தன்றளி - இந்தத்தலங்கள் - காஞ்சிபுரத்துக் குள்ளிருக்கின்றவைகள் - தனித்தனிப்பதிக மிருக்கின்றது. ஷ தல புராணத்தில் சொல்லப்படுகிற தலங்கள் அநேக மிருக்கின்றன. அவைகளுக்குள் கச்சிமயானமென்னும் ஆலயம் - ஏகாம்பரநாத ராலயத்துக் குள்ளிருக்கின்றது. இவைகளுக்குத் தனித்தனியாகப் பதிகங்களில்லை- ஆயினும்" மைப்படியுங் கண்ணியுந்தானுங்கச்சி மயானத்தான்,, என்றும், ,,கச்சிப்பலதளியுங் கயிலாயநாதனையே காணலாமே,, என்றும், "கள்ளக்கம்பனை யெங்கள்பிரானைக்காணக் கண்ணடியேன் பெற்றவாறே,,யென்றும், தேவாரங்களிலிருப்பதினால் காஞ்சிபுரத்தெல்லைக் குட்பட்ட தலங்க ளெல்லாம் பாடல்பெற்றன வென்றே கொள்ளவேண்டும். ஏகம்பம் - நல்லகம்பம் வெள்ளக்கம்பம் - என்னு மூன்று மூர்த்திகளுடன் கள்ளக் கம்பமென ஒரு மூர்த்தமிருக்கின்றது.

---

நீடுதிருப் பொலிகாஞ்சி நெறிக்காரைக் காட்டிறைஞ்சிச்
சூடுமதிக் கண்ணியார் துணைமலர்ச்சே வடிபாடி
யாடுமவ ரினிதமரு மனேகதங்கா வதம்பரவி
மாடுதிருத் தானங்கள் பணிந்தேத்தி வைகுநாள். (௧000)

---

திருநெறிக் காரைக்காடு-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வாரணவும் முலைமங்கை பங்கினரா யங்கையிற்
போரணவும் மழுவொன்றங் கேந்திவெண் பொடியணிவார்
காரணவு மணிமாடங் கடைநவின்ற கலிக்கச்சி
நீரணவு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே.

கண்ணாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டுறையும்
பெண்ணாருந் திருமேனிப் பெருமான தடிவாழ்த்தித்
தண்ணாரும் பொழிற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
பண்ணாருந் தமிழ்வல்லார் பரலோகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-காரைத்திருநாதர்.

திருப்பதிகம்—க.

---

எண்டிசையும் போற்றிசைக்குந் திருப்பதிமற் றதன்புறத்துத்
தொண்டருட னினிதேத்தித் தொல்லைவிட முண்டிருண்ட
கண்டர்மகிழ் மேற்றளியு முதலான கலந்தேத்தி
மண்டுபெருங் காதலினால் வணங்கிமீண் டணைந்திருந்தார். (௧௦௦௧)

அப்பதியில் விருப்பினொடு மங்கணரைப் பணிந்தமர்வார்
செப்பரிய புகழ்பரவித் திருநதியின் றென்கரைபோய்
மைப்பொலியுங் கண்டர்திரு மாற்பேறு மகிழ்ந்திறைஞ்சி
முப்புரஞ்செற் றவர்தம்மை மொழிமாலை சாத்தினார். (௧௦௦௨)

---

திருமாற்பேறு-பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஊறி யார்தரு நஞ்சினை யுண்டுமை
நீறுசேர்திரு மேனியர்
சேறுசேர்வயற் றென்றிரு மாற்பேற்றின்
மாறிலாமணி கண்டரே.

மன்னிமாலொடு சோமன் பணிசெயு
மன்னுமாற்பேற் றடிகளை
மன்னுகாழியுள் ஞானசம் பந்தன்சொற்
பன்னவேவினை யாறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மால்வணங்குமீசர். தேவியார்-கருணைநாயகி.

திருப்பதிகம்—கூ.

---

திருமாற்பே றுடையவர்தந் திருவருள்பெற் றெழுந்தருளிக்
கருமாலுங் கருமாவாய்க் காணபரிய கழலுங்கி
மருவாற்றன் மழவிடையார் திருவல்லம் வணங்கித்தம்
பெருமாற்குத் திருப்பதிகப் பெரும்பிணைய லணிவித்தார். (கூ00கூ)

---

திருவல்லம்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

எரித்தவன் முப்புர மெரியின்மூழ்கத்
தரித்தவன் கங்கையைத் தாழ்சடைமேல்
விரித்தவன் வேதங்கள் வேறுவேறு
தெரித்தவ னுறைவிடந் திருவல்லமே.

கற்றவர் திருவல்லங் கண்டுசென்று
நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
குற்றமில் செந்தமிழ் கூறவல்லார்
பற்றுவ ரீசன்பொற் பாதங்களே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வல்லநாதர். தேவியார்-வல்லாம்பிகை.

திருப்பதிகம்—க.

---

அங்குள்ள பிறபதியி லரிக்கரியார் கழல்வணங்கிப்
பொங்குபுனற் பால்யாற்றின் புடையில்வட பாலிறைவ
ரெங்குமுறை பதிபணிவா ரிலம்பயங்கோட் டூரிறைஞ்சி
செங்கண்விடை யுகைத்தவரைத் திருப்பதிகம் பாடினார். (கூ00ச)

---

திருஇலம்பயங்கோட்டூர்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மலையினார் பருப்பதத் துருத்திமாற் பேறு மாசிலாச் சீர்மறைக் காடு நெய்த் தானத், திலையினா னைனதுறை தனதுறை யாக நீறணிந்தேறுகந் தேறிய நிமலன், கலையினார் மடப்பிணை துணையொடுந் துயிலக் கானவம் பெடைபுல்கிக் கணமயிலாலு, மிலையினார் பைம்பொழி லிலம்பயங் கோட்டூ ரிருக்கையாப் பேணியெ னெழில்கொள்வ தியல்பே.

கந்தனை மலிகனை கடலொலி யோதங் கானலங் கழிவளர் கழுமலமென்னு, நந்தியாருறைபதி நான்மறை நாவனற்றமிழ்க் கின்றுணை ஞான சம்பந்த, னெந்தையார் வளநக ரிலம்பயங் கோட்டூ ரிசையொடு கூடிய பத்தும்வல் லார்போய், வெந்துயர் கெடுகிட விண்ணவ ரோடும் வீடுபே றின்மையில் வீடெளிதாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சந்திரசேகரேசுவரர்தேவியார் - கோடேந்துமுலையம்மை.

திருப்பதிகம்—க.

---

திருத்தொண்டர் பலர்சூழத் திருவிற்கோ லமும்பணிந்து
பொருட்பதிகத் தொடைமாலை புரமெரித்த படிபாடி
யருட்புகலி யாண்டகையார் தற்கோல முணைந்தருளி
விருப்பினொடுந் திருவூறன் மேவினார் தமைப்பணிந்தார். (௧௦௦௫)

---

திருவிற்கோலம்-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

உருவினா ருமையொடு மொன்றி நின்றதோர்
திருவினான் வளர்சடைத் திங்கள் கங்கையான்
வெருவிவா னவர்தொழ வெகுண்டு நோக்கிய
செருவினா னுறைதருந் திருவிற் கோலமே.

கோட்டல்வெண் பிறையனைக் கூக மேவியே
சேட்டன செழுமதிட் டிருவிற் கோலத்தை
நாட்டவல் லஃதமிழ் ஞானசம் பந்தன்
பாட்டவல் லார்களுக் கில்லை பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-திரிபுராந்தகேசுவரர்.தேவியார்-புராந்தகியம்மை.

திருப்பதிகம்—க.

---

தொழுதுபல முறைபோற்றிச் சுரர்குருவுக் கிளையமுனி
வழுவிறவம் புரிந்தேத்த மன்னினர் தமைமலர்ந்த
பழுதில்செழுந் தமிழ்மாலைப் பதிகவிசை புனைந்தருளி
முழுதுமளித் தவரருளாற் போந்தனர்முத் தமிழ்விரகர். (க௦௦௬)

---

திரு ஊறல்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மாறிலவுண ரரணம்மவை மாயவோர் வெங்கணை யானறு
நீறெழ வெய்த வெங்கணி மலனிடம் வினவிற்
றேற விரும்பொழி லுந்திகழ்செங்கயல் பாய்வயலுஞ் சூழ்ந்த
வூற லமர்ந்த பிரானொலி யார்கழ லுள்குதுமே.

கோட லிரும்புறவிற் கொடிமாடக் கொச்சையர் மனமெச்ச
வோடு புனல்சடைமேல் கரந்தான் றிருவூறல்
நாட லரும்புகழான் மிகுஞான சம்பந்தன் சொன்ன நல்ல
பாடல்கள் பத்தும்வல்லார் பரலோகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-உமாபதீசுவரர். தேவியார்-உமையம்மை.

திருப்பதிகம்—க.

இதில் எக்காலமும் நீரூறல் நந்திவாய் வழியாக ஊறிக் கொண்டே யிருக்கின்றது.

---

குன்றநெடுஞ் சிலையாளர் குலவியபல் பதிபிறவும்
நின்றவிருப் புடனிறைஞ்சி நீடுதிருத் தொண்டருடன்
பொன்றயங்கு மணிமாடப் பூந்தராய்ப் புரவலனார்
சென்றணைந்தார் பழையனூர்த் திருவாலங் காட்டருகு. (க௦௦௭)

வேறு.

இம்மையிலே புவியுள்ளோர் யாருங்காண வேழுலகும் போற்றிசைப்ப வெம்மையாளு, மம்மைதிருத் தலையாலே நடந்துபோற்று மம்மையப்பர் திருவாலங் காடாமென்று, தம்மையுடை யவர்மூதூர் மிதிக்கவஞ்சிச் சண்பைவருஞ் சிகாமணியார் சாரச்சென்றார், செம்மைநெறி வழுவாத பதியின்மாடோர் செழும்பதியி லன்றிரவு பள்ளிசேர்ந்தார். ()

மாலையிடை யாமத்துப் பள்ளிகொள்ளு மறையவனார் தம்முன்பு கனவிலேவந், தாலவனத் தமர்ந்தருளு மப்பர்நம்மை யயர்த் தனையோ பாடுதற்கென் றருளிச்செய்ய, ஞாலமிரு ணீங்கவரும் புகலிவேந்தர் நடுவிடையா மத்தினிடைத் தொழுதுணர்ந்து, வேலைவிட முண்டவர்தங் கருணைபோற்றி மெய்யுருகித் திருப்பதிகம் விளம்பலுற்றார். (க௦௦௯)

துஞ்சவரு வாறென்றே யெடுத்தவோசைச் சுருதிமுறை வழுவாமற் றொடுத்தபாட ,லெஞ்சலிலா வகைமுறையே பழையனூரா ரியம்புமொழி காத்தகதைச் சிறப்பித்தேத்தி,யஞ்சனமா கரியுரித்தா ரருளாமென்றேயரு ளும்வகை திருக்கடைகாப் பமையச்சாற்றிப்,பஞ்சுரமாம் பழையதிறங்கி ழமைகொள்ளப் பாடினார் பாரெலா முய்யவந்தார். (௧௦௧௦)

திருஆலங்காடு-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

துஞ்ச வருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூ ராலங்காட்டெம் மடிகளே.

போழம் பலபேசிப் போதுசாத்தித் திரிவாரும்
வேழம் வருமளவும் வெயிலெதுற்றித் திரிவாருங்
கேழல் வினைபோகக் கேட்பிப்பாருங் கேடிலா
வாழ்வர் பழையனூ ராலங்காட்டெம் மடிகளே.

சாந்தங் கமழ்மறுகிற் சண்பைஞான சம்பந்த
னாந்தண் பழையனூ ராலங்காட்டெம் மடிகளை
வேந்த னருளாலே விரித்தபாட லிவைவல்லார்
சேர்ந்த விடமெல்லாந் தீர்த்தமாகச் சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஊர்த்ததாண்டவர்.தேவியார்-வண்டார்குழலி.

திருப்பதிகம்—௪.

நீடுமிசைத் திருப்பதிகம் பாடிப்போற்றி நெடுங்கங்கு லிருணீங்கு நிகழ்ந்தகாலை, மாடுதிருத் தொண்டர்குழா மணைந்தபோது மாலையினிற் றிருவால வனத்துமன்னி,யாடுமவ ரருள்செய்தபடியையெல்லா மருளிச் செய் தகமலரப் பாடியேத்திச், சேடர்பயி றிருப்பதியைத் தொழுது போந்து திருப்பாசூ ரதன்மருங்கு செல்லலுற்றார். (௧௦௧௧)

திருப்பாசூ ரணைந்தருளி யங்குமற்றச் செழும்பதியோ ரெதிர்கொள் ளச்சென்றுபுக்குப்,பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகத்துப் புரா தனர்வே யிடங்கொண்ட புனிதர்கோயில், விருப்பினுடன் வலங்கொண் டு புக்குத்தாழ்ந்து விழ்ந்தெழுந்து மேனியெலா முகிழ்ப்பநின்றே, யருட் கருணைத் திருவாள னுமஞ்சிந்தை யிடையாரென் றிசைப்பதிக மருளிச் செய்தார். (௧௦௧௨)

திருப்பாசூர்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்தையிடையார் தலையின் மிசையார் செஞ்சொலார்
வந்துமாலை வைகும் போழ்தென் மனத்துளார்
மைந்தர்மணாளரென்னமகிழ்வா ரூர்போலும்
பைந்தண்மாதவி சோலைசூழ்ந்த பாசூரே.

ஞானமுணர்வான் காழிஞான சம்பந்தன்
தேனும்வண்டு மின்னிசைபாடுந் திருப்பாசூர்க்
கானமுறைவார் கழல்சேர்பாட லிவைவல்லா
ரூனமிலரா யும்பர்வானத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பாசூர்நாதர். தேவியார்-பசுபதிநாயகி.

திருப்பதிகம்—௩.

---

மன்னுதிருப் பதிகவிசை பாடிப்போற்றி வணங்கிப்போந் தப்பதியில் வைகிமாடு, பிஞ்ஞகர்தம் வெண்பாக்க முதலாயுள்ள பிறபதிகள் பணிந்தணைவார் பெருகுமன்பர், முன்னிறைந்த திருவாய்மஞ் சனநீராட்டு முதல்வேடர் கண்ணப்ப நாயனாரை, யுன்னியொளிர் காளத்தி மலைவணங்க வுற்றபெரு வேட்கையுட னுவந்துசென்றார். (௧௦௧௩)

மிக்கபெருங் காதலுடன் றொண்டர்சூழ மென்புனனாட் டினையகன்று வெற்புங்கானுந், தொக்கபெரு வன்புலக்கா னடைந்துபோகிச் சூலகபா லக்கரத்துச் சுடருமேனி, முக்கண்முதற் றலைவனிட மாகியுள்ள முகினெருங்கு காரிகரை முன்னர்ச்சென்று, புக்கிறைஞ்சிப் போற்றிசைத்தப் பதியில்வைகிப் பூதியரோ டுடன்மகிழ்ந்தார் புகலிவேந்தர். (௧௦௧௪)

இறைவர்திருக் காரிகரை யிறைஞ்சியப்பா லெண்ணில்பெரு வரைகளிரு மருங்குமெங்கும், நிறையருவி நிரைபலவாய் மணியும்பொன்னும் நிறைதுவலை புடைசிதறி நிகழ்பவாகி, யறைகழல்வா னவர்க்கிறைவன் குலிசவேற்று லற்றசிறை பெற்றவன்மே லெழுவதற்குச், சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்தபோலுஞ் சிலைநிலத்தி லெழுந்தருளிச் செல்லாநின்றார். (௧௦௧௫)

மாதவர்க ணெருங்குகுழாம் பரந்துசெல்ல மணிமுத்தின் பரிச்சின்னம் வரம்பின்றாகப், பூதிநிறை கடலணைவ தென்னச்சண்பைப் புரவல னெழுந்தருளும் பொழுதுசின்னத், தீதிலொலி பலமுறையும் பொங்கியெங்குந் திருஞான சம்பந்தன் வந்தானென்று, நாதநிறை செவியினவாய் மாக்களெல்லா நலமருவு நினைவொன்றாய் மருங்குநண்ண. (௧௦௧௬)

காணவர்தங் குலமூலகு போற்றவந்த கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத்தோய, மானவரிச் சிலைவேட்டை யாடுங்கானும் வான்மறைய கிலைபெரிய மாமுந்தூறு,மேனையிமை யோர்தாமு மிறைஞ்சியேத்தி யெய் தவரும் பெருமையவா மெண்ணிலாத, தானமுமற் றவைகடந்து திருக் காளத்தி சாரவெழுந் தருளினார் சண்பைவேந்தர். (௧0௧௭)

அம்பொன்மலைக் கொடிமுலைப்பால் குழைத்தஞானத் தமுதுண்ட பிள்ளையா ரணைந்தாரென்று, செம்பொன்மலை வில்லியார் திருக்காளத்தி சேர்ந்ததிருத் தொண்டர்குழா மடையவீண்டிப், பம்புசடைத் திருமுனிவர் கபாலக்கையர் பலவேடச் சைவர்குல வேடர்மற்று, மும்பர்தவம் புரிவாரப் பதியிலுள்ளோ ருடன்விரும்பி யெதிர்கொள்ள வுழைச் சென் றுற்றார். (௧0௧அ)

திசையனைத்து நீற்றினொளி தழைப்பமண்மேற் சிவலோக மணைந்த தெனச் சென்றபோது, மிசைவிளங்கு மணிமுத்தின் சிவிகை நின்றும் வேதபா லகரிழிந்து வணங்கிமிக்க, வசைவில்பெருந் தொண்டர்குழாந் தொழுதுபோற்றி யரவெனுமோ சையிலண்ட நிறைப்பவன்பா,லிசைவி ளங்குந் தமிழ்விரகர் திருக்காளத்தித் திருமலையிம் மலைகளில்யா தென்று கேட்டார். (௧0௧௯)

வந்தணைந்த மாதவத்தோர் வணங்கிவாழ்ந்து மறைவாழ்வே சைவ சிகா மணியேதோன்று, மிந்தமலை காளனொ டத்திதம்மி லிகலிவழி பாடு செய விறைவர்மேவு,மந்தமில்சீர்க் காளத்தி மலையாமென்ன வவனிமேற் பணிந்தெழுந்தஞ் சலிமேற்கொண்டு, சிந்தைகளி மகிழ்ச்சிவரத் திருவிரா கம் வானவர்க டானவரென் றெடுத்துச்செல்வார் (௧0௨0)

---

திருக்காளத்தி-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

வானவர்க டானவர்கள் வாதைபட வந்ததொரு மாகடல்விடந்
தானமுது செய்தருள் புரிந்தசிவன் மேவுமலை தன்னைவினவி
லேனமின மானினொடு கிள்ளைதினை கொள்ளவெழி லார்கவணினாற்
கானவர்த மாமகளிர் கனகமணி யிலகுகா ளத்திமலையே.

காடதிட மாகநட மாடுசிவன் மேவுகா ளத்திமலையை
மாடமொடு மாளிகைக ணீடுவளர் கொச்சைவய மன்னுதலைவன்
னாடுபல நீடுபுகழ் ஞானசம் பந்தனுணர் நல்லதமிழின்
பாடலொடு பாடுமிசை வல்லவர்க ணல்லர்பர லோகமெளிதே.

திருச்சிற்றம்பலம்.

திருந்தியலின் னிசைவகுப்புத் திருக்கண்ணப்பர் திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப்பாடிப், பொருந்துபெருந் தவர்கூட்டம் போற்ற வந்து பொன்முகலிக் கரையணைந்து தொழுதுபோகி, யருந்தவர்க, ளெம்மருங்கு மடைந்துசெல்ல வாளுடைய பிள்ளையா ரயன்மாறேடு, மருந்துவெளி யேயிருந்த திருக்காளத்தி மலையடிவா ரஞ்சார வந்துதாழ்ந்தார். ()

தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுதுகொண்டே தடஞ்சிலாதலசோபா னத்தாலேறி, வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள்வாயின் மருங்கிறைஞ்சி யுட்புகுந்து வளர்பொற்கோயில், சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன்பெய்தித் தொழுதுதலை மேற்கொண்ட செங்கைபோற்றி, வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன் காண்பார்போன் மெய்வேடர் பெருமானைக் கண்டுவீழ்ந்தார். (௧௦௨௩)

உள்ளத்திற் றெளிகின்ற வன்பின்மெய்ம்மை யுருவினையு மவ்வன்பினுள்ளேமன்னும், வெள்ளைச்செஞ்சடைக்கற்றை நெற்றிச்செங்கண் விமலனையுமுடன்கண்ட விருப்பும்பொங்கிப், பள்ளத்திலிழிபுனல்போற்பரந்துசெல்லப் பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்தசெம்பொன், வள்ளத்தில் ஞானவா ரமுதமுண்டார் மகிழ்ந்தெழுந்து பலமுறையும்வணங்குகின்றார்.()

பங்கயக்கண் ணருவிநீர் பாயநின்று பரவுமிசைத் திருப்பதிகம் பாடி யாடித், தங்குபெருங் களிகாதல் தகைந்துதட்பத் தம்பெருமான் கழல்போற்றுந் தன்மைநீட, அங்கரிதிற் புறம்போந்தங் கயன்மால்போற்ற வரியார்தந் திருமலைக்கீ ழணைந்திறைஞ்சிப், பொங்குதிருத் தொண்டர் மடங் காட்டவங்குப் புக்கருளி யினிதமர்ந்தார் புகலிவேந்தர் (௧௦௨௫)

யாவர்களு மறிவரிய விறைவன்றன்னை யேழுலகு முடையானை யெண்ணிலாத, தேவர்கடம் பெருமானைத் திருக்காளத்தி மலையின்மிசை வீற்றிருந்த செய்யகோனைப், பூவலரும் பொழில்புடைசூழ் சண்பையாளும் புரவலனார் காலங்க டோறும்புக்குப், பாமலர்கொண் டடிபோற்றிப் பருகியார்ந்து பண்பினிய திருப்பதியிற் பயிலுநாளில். (௧௦௨௬)

அங்கண்வட திசைமேலுங் குடக்கின்மேலு மருந்தமிழின் வழக்கங்கு நிகழாதாகத், திங்கள்புனை முடியார்தந் தானந்தோறுஞ் சென்றுதமிழ்ப் பாடலுறுஞ் செய்கைபோல, மங்கையுடன் வானவர்கள் போற்றிசைப்ப வீற்றிருந்தார் வடகயிலை வணங்கிப்பாடிச், செங்கமல மலர்வாவித் திருக்கேதாரந் தொழுதுதிருப் பதிகவிசை திருந்தப்பாடி. (௧௦௨௭)

---

ஸ்ரீகயிலாசம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பொடிகொளுருவர் புலியினதளர் புரிநூல் திகழ்மார்விற்
கடிகொள்கொன்றை கலந்தநீரார் கறைசேர் கண்டத்த
ரிடியகுரலா லரியுமடங்க லுடங்கு முழைச்சாரற்
கடியவிடைமேற் கொடியென்றுடையார் கயிலை மலையாரே.

போரார்கட்லிற் புனல்சூழ்காழிப் புகழ்வார் சம்பந்தன்
காரார்மேகங் குடிகொள்சாரற் கயிலை மலையார்மேற்
றோராதுரைத்த செஞ்சொன்மாலை செப்பு மடியார்மேல்
வாராபிணிகள் வானோருலகின் மருவு மனத்தாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பரமசிவம். தேவியார்-பார்வதிதேவியார்.

திருப்பதிகம்—எ.

---

திருக்கேதாரம்-பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

தொண்டரஞ்சுக ளிறுமடக்கிச் சுரும்பரார்மல
ரிண்டைகட்டிவ் வழிபாடு செய்யுமிட மென்பரால்
வண்டுபாடம் மயிலால மான்கன்று துள்ளவ்வரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே.

வாய்ந்தசெந்நெல் விளைகழனி மல்கும்வயற் காழியா
னேய்ந்தநீர்க்கோட் டிமையோருறை கின்றகே தாரத்தை
யாய்ந்துசொன்னவ் வருந்தமிழ்கள் பத்தும்மிசை வல்லவர்
வேந்தராகி யுலகாண்டு வீடுகெதி பெறுவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கேதாரேசுவரர். தேவியார்-கவுரியம்மை.

திருப்பதிகம்—உ.

---

கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம்பாடிக் குலவுதிருப் பருப்பதத்தின் கொள்கைபாடி,யேற்றின் மிசைவருவா ரிந்திரநீல பருப்பதமும் பாடிமகிழ்ந் திறைவர்தானம், போற்றியசொன் மலர்மாலை பிறவும்பாடிப் புகலியர்தம் பெருந்தகையார் புனிதமாகு, நீற்றினணி கோலத்துத் தொண்டர்சூழ நெடிதுமகிழ்ந் தப்பதியி னிலவுகின்றார். (கoஉஅ)

---

திருக்கோகரணம்-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

என்றுமரி யானயல் வர்க்கிய லிசைப்பொருள்க ளாகியெனதுள
நன்றுமொளி யானொளி சிறந்தபொன் முடிக்கடவு ளண்ணுமிடமா
மொன்றிய மனத்தடியர் கூடியிமை யோர்பரவு நீடரவமார்
குன்றுக ணெருங்கிவிரி தண்டலை மிடைந்துவளர் கோகரணமே.

கோட்டலா வினும்விரி சாரன்மு னெருங்கிவளர் கோகரணமே
யீட்மினி தாகவுறை வானடிகள் பேணியணி காழிநகரா
னூடிய தமிழ்க்கிளவி யின்னிசைசெய் ஞானசம் பந்தன்மொழிகள்
பாடவல பத்தரவ ரெத்திசையு மாள்வர்பர லோகமெளிதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மகாபலலிங்கநாதர். தேவியார்-சோகரணநாயகி.

திருப்பதிகம்—உ.

---

திருஇந்திரநீலப்பருப்பதம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

குலவுபாரிடம் போற்றவீற்றிருந்த
விலகுமாமழு வேந்துமங்கையர்
நிலவுமிந்திர நீலபர்ப்பதத்
துல்விணடி யுள்கநல்குமே.

கந்தமார்பொழில் சூழ்ந்தகாழியா
னிந்திரன்றொழு நீலபர்ப்பதத்
தந்தமில்லியை யேத்துஞானசம்
பந்தன்பாடல்கொண் டோதிவாழ்மினே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நீலாசலநாதர். தேவியார்-நீலாம்பிகை.

திருப்பதிகம்—க.

---

திருப்பருப்பதம்-வியாளக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

சுடுமணி யுமிழ்நாகஞ் சூழ்தர வரைக்கசைத்தா
னிடுமணி யெழிலானை யெறல னெருதேறி
விட்மணி மிடறுடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமணி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே.

வெண்செநெல் விளைகழனி விழவொலி கழுமலத்தான்
பண்சொலப் பலபாட லிசைமுரல் பருப்பதத்தை
நன்சொலி னுற்பரவு ஞானசம் பந்தனல்ல
வொண்சொலி னிவைமாலை யுருவெணத் தவமாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபேயர்-பருப்பதேசுவரர். தேவியார்-பருப்பதமங்கை.

திருப்பதிகம்—ந.

---

திருவனேகதங்காவதம்-பண்-இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

நீடல்மேவு நிமிர்புன்சடைமே லோர்நிலாமுளை
சூடல்மேவு மறையின்முறையா லோர்சுலாவழ
லாடன்மேவு மவர்மேயவனே கதங்காவதம்
பாடல்மேவு மனத்தார்வினைபற் றறுப்பார்களே.

தொல்லையூழிப் பெயர்தோன்றிய தோணிபுரத்துறை
நல்லகேள்வித் தமிழ்ஞான சம்பந்த னல்லார்கண்மு
னல்லல்தீர வுரைசெய்தவனே கதங்காவதஞ்
சொல்லநல்ல வடையும்மடையா சுடுதுன்பமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-காவதேசுவரர். தேவியார்-காமாக்ஷியம்மை.
திருப்பதிகம்—க.

---

தென்றிசையிற் கயிலையெனுந் திருக்காளத்தி போற்றியினி தமர்கின்றார் திரைசூழ்வேலை, யொன்றுதிரு வொற்றியூ ருறைவார்தம்மை யிறைஞ்சுவது திருவுள்ளத் துன்னியங்க, ணின்றமிழின் விரகருள் பெற்றும்ள்வா ரெந்தையா ரிணையடியென் மனத்தவென்று, பொன்றரளங் கொழித்திழிபொன்முகலிகூடப் புணர்ந்ததிருப்பதிகவிசைபோற்றிப்போந்தார்.

---

திருக்காளத்தி-பண்-கொல்லி.
திருச்சிற்றம்பலம்.

சந்தமா ரகிலொடு சாதிதேக் கும்மர
முந்துமா முகலியின் கரையினி லுமையொடு
மந்தமார் பொழில்வளர் மல்குகாளத்தி
யெந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே.

அட்டமா சித்திக ளணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயலணி காழியான்
சிட்டநான் மறைவல்ல ஞானசம் பந்தன்சொ
லிட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-காளத்தீசுவரர். தேவியார்-ஞானப்பூங்கோதை.
திருப்பதிகம்—ச.

---

மன்னுபுகழ்த் திருத்தொண்டர் குழாத்தினொடு மறைவாழ வந்தவர் தா மலையுங்கானு, முன்னணைந்த பதிபிறவுங் கடந்துபோந்து முதல்வனுருறைபதிகள் பலவும்போற்றிப், பன்மணிகள் பொன்வ ரன்றி யகிலுஞ்சந்தும் பொருதலைக்கும் பாலிவட கரையினீடு, சென்னிமதி யணிவார்தந் திருவேற்காடு சென்றணைந்தார் திருஞான முண்டசெல்வர். (௧௦௩௦)

திருவேற்கா டமர்ந்தசெழுஞ் சுடர்பொற்கோயில் சென்றணைந்து பணிந்துதிருப் பதிகம்பாடி, வருவேற்று மனத்தவுணர் புரங்கள்செற்றார் வலிதாயம் வந்தெய்தி வணங்கிப்போற்றி, யுருவேற்றா ரமர்ந்துறையு மோதவேலை யொற்றியூர் கைதொழச்சென் றுற்றபோது, பெருவேட்கை தருவாழ்வு பெற்றதொண்டர் பெரும்பதியோ ரெதிர்கொள்ளப் பேணி வந்தார். (கoகூக)

---

திருவேற்காடு-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

ஒள்ளிதுள்ளக் கதிக்காமிவனொளி
வெள்ளியா னுறைவேற்காடு
வுள்ளியாருயர்ந் தாரிவ்வுலகினிற்
றெள்ளியா ரவர்தேவரே.

விண்டமாம்பொழில் சூழ்தருவேற்காடு
கண்டுநம்பன் கழல்பேணிச்
சண்பைஞானசம் பந்தன்செந்தமிழ்
கொண்டுபாடக் குணமாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வேற்காட்டீசுவரர். தேவியார்-வேற்கண்ணியம்மை.

திருப்பதிகம்—க.

---

மிக்கதிருத் தொண்டர்தொழு தணையத்தாமுந் தொழுதிழிந்துவிடையவனென் றெடுத்துப்பாடி, மைக்குலவு கண்டத்தார் மகிழ்ந்தகோயின் மன்னுதிருக் கோபுரத்து வந்துதாழ்ந்து, தக்கதிருக் கடைக்காப்புச் சாற்றித்தேவர் தம்பெருமான் றிருவாயி லூடுசென்று, புக்கருளி வலங்கொண்டு புனிதர்முன்பு போற்றெடுத்துப் படியின்மேற் பொருந்தவீழ்ந்தார். (கoகூஉ)

---

திருவொற்றியூர் - பண்.

திருச்சிற்றம்பலம்.

விடையவன் விண்ணுமண்ணுந் தொழநின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோ லுடைகோவணம் பல்கரந்தைச்
சடையவன் சாமவேத னச்சிதங்கிய சங்கவெண்டோ
டுடையவன் னூன்மில்லி யுறையும்மிட மொற்றியூரே.

ஒண்பிறை மல்குசென்னி யிறைவன்னுறை யொற்றியூரைச்
சண்பையர் தந்தலைவன் றமிழ்ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்பத்தும் பரவிப்பணிந் தேத்தவல்லார்
விண்புனை மேலுலகம் விருப்பெய்துவர் வீடெளிதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாணிக்கத்தியாகர். தேவியார்-வடிவுடையம்மை.

படம்பக்கநாதர்-பலகைநாதரென்றும்பெயர்.

திருப்பதிகம்—அ.

பொற்றிரள்கள் போல்புரிந்த சடையார்தம்பாற் பொங்கியெழுங் காதன்மிகப் பொழிந்துவிம்மிப், பற்றியெழு மயிர்ப்புளக மெங்குமாகிப் பரந்திழியுங் கண்ணருவி பாயநின்று, சொற்றிகழுந் திருப்பதிகம் பாடி யேத்தித் தொழுதுபுறத் தணைந்தருளித் தொண்டரோடும், ஒற்றிநகர் காதலித்தங் கினிதுறைந்தா ருலகுய்ய வுலவாத ஞானம்பெற்றார்.

வேறு.

இன்னதன்மையிற் பிள்ளையாரிருந்தன ரிப்பாற்
பன்னுதொல்புகழ்த் திருமயிலாபுரிப் பதியின்
மன்னுசீர்ப்பெரு வணிகர்தந்தோன்றலார் திறத்து
முன்னமெய்திய தொன்றினைநிகழ்ந்தவா மொழிவாம். (௧௦௩௪)

அருநிதித்திறம் பெருக்குதற்கருங்கலம் பலவும்
பொருகடற்செலப் போக்கியபொருட்குவை நிரம்ப
வருமரக்கல மனைப்படப்பணைக்கரை நிரைக்கு
மிருநிதிப்பெருஞ் செல்வத்தினெல்லையின் வளர்ந்தார். (௧௦௩௫)

தம்மையுள்ளவா றறிந்தபின்சங்கரற் கடிமை
மெய்ம்மையேசெயும் விருப்புடன்மிக்கதோ ரன்பாற்
பொய்ம்மைநீக்கிமெய்ப் பொருளிதுவெனக்கொள்ளு முள்ளச்
செம்மையேபுரி மனத்தினர் சிவநேச ரென்பார். (௧௦௩௬)

கற்றைவார்சடை முடியினாரடியவர் கலப்பி
லுற்றசெய்கையி லொழிவின்றியுருகிய மனமும்
பற்றிலாநெறிப் பரசமயங்களைப் பாற்றுஞ்
செற்றமேவிய சீலமுமுடையராய்த் திகழ்வார். (௧௦௩௭)

ஆனநாள்செல வருமறைக்கவுணியர் பெருமான்
ஞானபோனக நுகர்ந்ததுநாநில முய்ய
வேனைவெஞ்சமண் சாக்கியமிழித்தழித் ததுவு
மூனமில்புக ழடியார்பாற்கேட்டுவந் துளராய். (௧௦௩௮)

செல்வமல்கிய சிரபுரச்சிறுவர்சே வடிக்கீழ்
எல்லையில்லதோர் காதலினிடை யறா வுணர்வா
லல்லுநண்பக லும்புரிந்தவரருட் டிறமே
சொல்லவுஞ்செயல் கேட்கவுந்தொழிலின ரானார். (௧௦௩௯)

நிகழுமாங்கவர் நிதிப்பெருங்கிழவனின் மேலாய்த்
திகழுநீடிய திருவினிற்சிறந்துள ராகிப்
புகழுமேன்மையி லுலகினிற்பொலிந்துளா ரெனினு
மகவிலாமையின் மகிழ்மனைவாழ்க்கையின் மருண்டு. (௧௦௪௦)

அரியநீர்மையி லருந்தவம்புரிந்தர னடியார்க்
குரியவர்ச்சனை யுலப்பிலசெய்தவ நலத்தால்
வரியவாங்குழன் மனைவியார்வயிற்றினுங் கமலத்
துரியபூமக ளெனவொருபெண்கொடி யுதித்தாள். (௧௦௪௧)

நல்லநாள்பெற வோரையினலமிக வுதிப்பப்
பல்பெருங்கிளை யுடன்பெருவணிகர்பார் முழுது
மெல்லையிற்றன மூகந்துகொண்டியாவரு முவப்ப
மல்லலாவண மறுகிடைப்பொலிந்துள மகிழ்ந்தார். (௧௦௪௨)

ஆறுசூடிய முடியினாரடியவர்க் கன்பி
னீறிலாதபூ சனைகளியாவையு மிகச்செய்து
மாறிலாமறை யவர்க்குவேண்டினவெலா மளித்துப்
பேறுமற்றிது வெனும்படிபெருங்களி சிறந்தார். (௧௦௪௩)

சூதநல்வினை மங்கலத்தொழின்முறை தொடங்கி
வேதநீதியில் விதியுளவளர்வகை விரியச்
சாதகத்தொடு சடங்குகள்தசதினஞ் செல்லக்
காதன்மேவிய சிறப்பினிற்கடிவிழா வயர்ந்தார். (௧௦௪௪)

யாவரும்பெரு மகிழ்ச்சியாலின்புறப் பயந்த
பாவைநல்லுறுப் பணிகிளர்பண்பெலா நோக்கிப்
பூவினாளென வருதலிற்பூம்பாவை யென்றே
மேவுநாமமும் விளம்பினர்புவியின் மேல்விளங்க. (௧௦௪௫)

திங்கடோறுமுன் செய்யுமத்திருவளர் சிறப்பின்
மங்கலம்புரி நல்வினைமாட்சியிற் பெருக
வங்கண்மாநக ரமைத்திடவாண்டெதி ரணைந்து
தங்குபேரொளிச் சீறடிதளர்நடை பயில. (௧௦௪௬)

தளருமின்னினங் குரமெனத்தமனியக் கொடியின்
வளரிளந்தளிர்க் கிளையெனமணிகிள ரொளியி
னளவிலஞ்சுடர்க் கொழுந்தெனவணைவுறும் பருவத்
திளவளம்பிணை யனையவர்க்கேழியாண் டெய்த. (௧௦௪௭)

அழகின்முன்னிளம் பதமெனவணிவிளக் கென்ன
விழவுகொண்டெழும் பேதையருடன்விளை யாட்டிற்
சுழலொடம்மனை கந்துகமென்றுமற் றினைய
மழலைமென்கிளிக் குலமெனமனையிடை யாடி. (௧0௪௮)

பொற்றொடிச்சிறு மகளிராயத்தொடும் புணர்ந்து
சிற்றின்முற்றவு மிழைத்துட னடுந்தொழிற் சிறுசோ
றுற்றவுண்டிகள் பயின்றொளிமணியூச லாடி
மற்றுமின்புற வண்டலாட்டயர் வுடன்வளர. (௧0௪௯)

தந்தையாருமத் தளரிளங்கொம்பனு டகைமை
யிந்தவையகத் தின்மையிலின்புறு களிப்பு
வந்தசிந்தையின் மகிழ்ந்துமற் றிவண்மணம் பெறுவா
னந்தமில்லென தருநிதிக்குரியனென் றறைந்தார். (௧0௫0)

ஆயநாள்களி லமண்பயில்பாண்டிநா டதனைத்
தூயஞானமுண் டருளியதோன்றலா ரணைந்து
மாயவல்லமண் கையரைவாதில்வென் றதுவு
மேயவெப்பிடர் மீனவன்மேலொழித் ததுவும். (௧0௫௧)

நெருப்பிலஞ்சினர் தங்களைநீரிலோட் டியபின்
மருப்புநீள்கழுக் கோலின்மற்றவரையேற் றியதும்
விருப்பினாற்றிரு நீறுமீனவற்களித் தருளிப்
பொருப்புவில்லியார் சாதனம்போற்றுவித் ததுவும். (௧0௫௨)

இன்னவாறெலா மறிந்துளாரெய்தியங் கிசைப்பச்
சொன்னவர்க்கெலா மிருநிதிதூசுட னளித்து
மன்னுபூந்தராய் வள்ளலார்தமைத்திசை நோக்கிச்
சென்னிமேற்கரங் குவித்துவீழ்ந்தெழுந்துசெந் நின்று (௧0௫௩)

சுற்றநீடிய கிளையெலாஞ்சூழ்ந்துடன் கேட்பக்
கற்றமாந்தர்வாழ் காழிநாடுடையவர்க் கடியேன்
பெற்றெடுத்தபூம் பாவையும்பிறங்கிய நிதியு
முற்றுமென்னையுங் கொடுத்தனன்யானென்று மொழிந்தார். (௧0௫௪)

எல்லையில்பெருங் களிப்பினாலிப்பரி சியம்பி
முல்லைவெண்ணகை முகிழ்முலையாருடன் முடியா
மல்குசெல்வத்தின் வளமையுமறையவர் புகலிச்
செல்வரேயுடை யாரெனுஞ்சிந்தையான் மகிழ்ந்தார். (௧0௫௫)

ஆற்றுநாள்களி லணங்கனார்கன்னிமா டத்தின்
பாற்றடம்பொழின் மருங்கினிற்பனிமலர் கொய்வான்
போற்றுவார்குழற் சேடியருடன்புறம் போந்து
கோற்றொடித்தளிர்க் கையினான்முகைமலர் கொய்ய. (௧0௫௬)

அன்பரன்புறு மார்வத்தினளித்தபாங் கல்லாற்
பொன்பிறங்குசீர்ப் புகலிகாவலர்க்கிது புணரா
தென்பதுட்கொண்ட பான்மையயோவெயிற்றிளம் பணியாய்
முன்பணைந்தது போலவோர்முள்ளெயிற் றரவம். (௧௦௫௭)

மௌவன்மாதவிப் பந்தரின்மறைந்துவந் தெய்திச்
செவ்விநாண்முகை கவர்பொழுதினின்மலர்ச் செங்கை
நவ்விவாள்விழி நறுநுதற்செறிநெறி கூந்தற்
கொவ்வைவாயவண் முகிழ்விரல்கவர்ந்தது குறித்து. (௧௦௫௮)

நாலுதந்தமு மென்புறக்கவர்ந்துநஞ் சுகுத்து
மேலெழும்பணம் விரித்துநின்றுடிவே றடங்க
நீலவல்விடந் தொடர்ந்தெழுநேரிழை மென்பூ
மாலைதீயிடைப் பட்டதுபோன்றுள மயங்கி. (௧௦௫௯)

தரையில்வீழ்தரச் சேடியர்வெருக்கொண்டு தாங்கி
வரைசெய்மாடத்தி னுட்கொடுபுகுந்திட வணிக
ருரையுமுள்ளமு நிலையழிந்துறுதுயர் பெருகக்
கரையில்சுற்றமுந் தாமுமுன்கலங்கினர் கலுழ்ந்தார். (௧௦௬௦)

விடந்தொலைத்திடும் விஞ்சையிற்பெரியரா மேலோ
ரடர்ந்ததீவிட மகற்றுதற்கணைந்துளா ரனேகர்
திடங்கொண்மந்திரந் தியான்பாவகநிலை முட்டித்
தொடர்ந்தசெய்வினை தனித்தனித்தொழிலராய்ச் சூழ்வார். (௧௦௬௧)

மருந்துமெண்ணில மாறிலசெய்யவும் வலிந்து
பொருந்துவல்விட மெழுவேகமுமுறை பொங்கிப்
பெருந்தடங்கண்மென் கொடியனுடலமிசைப் பிறங்கித்
திரிந்துசெய்வினை யாவையுங்கடந்துதீர்ந் திலதால். (௧௦௬௨)

ஆவிதங்குபல் குறிகளுமடைவில வாக
மேவுகாருட விஞ்சைவித்தகரிது விதியென்
றேவும்வேலையி லுறுபெருஞ்சுற்றமு மலறிப்
பாவைமேல்விழுந் தழுதனர்படரொலிக் கடல்போல். (௧௦௬௩)

சிந்தைவெந்துய ருறுசிவநேசருந் தெளிந்து
வந்தசெய்வினை யின்மையில்வையகத் துள்ளோ
ரிந்தவெவ்விட மொழிப்பவர்க்கீவனென் னுடைய
வந்தமின்னிதிக் குவையெனப்பறையறை வித்தார். (௧௦௬௪)

முரசியம்பிய மூன்றுநாளகவையின் முற்ற
வரசர்பாங்குளோ ருட்படவவனிமே லுள்ள
கரையில்கல்வியோர் யாவருமணைந்துதங் காட்சிப்
புரையில்செய்கையிற் றீர்ந்திடாதொழிந்திடப் போனார். (௧௦௬௫)

சீரின்மன்னிய சிவநேசர்கண்டுள மயங்கிக்
காரின்மல்கிய சோலைசூழ்கழுமலத் தலைவர்
சாருமவ்வள வும்முடலழலினுடை யடக்கிச்
சேரவென்பொடு சாம்பல்சேமிப்பது தெளிவார். (க0சுசு)

உடையபிள்ளையார்க் கெனவிவட்னையுளாத் ததனு
லடைவுதுன்புறு வதற்கில்லையாகமக் கென்றே
யிடரொழிந்தபின் னடக்கியவென்பொடு சாம்பல்
யுடைபெருத்தகும் பத்தினிற்புகப்பெய்து வைப்பார். (க0சுஎ)

கன்னிமாடத்தின் முன்புபோற்காப்புற வமைத்துப்
பொன்னுமுத்துமே லணிகலன்பூந்துகில் சூழ்ந்து
பன்னுதூவியின் பஞ்சணைவிரைப்பள்ளி யதன்மேன்
மன்னுபொன்னரி மாலைகளணிந்துவைத் தனரால். (க0சுஅ)

மாலைசாந்தொடு மஞ்சனநாடொறும் வழாமைப்
பாலினேர்தரும் போனகம்பல்வினைக் கினைய
சாலுநன்மையிற் றருவனநாடொறுஞ் சமைத்தே
யேலுமாசெய யாவரும்வியப்பெய்து நாளில். (க0சுகூ)

சண்பைமன்னவர் திருவொற்றியூர்நகர் சார்ந்து
பண்புபெற்றநற் றொண்டர்களுடன்பணிந் திருந்த
நண்புமிக்கநல் வார்த்தையந்நற்பதி யுள்ளோர்
வண்புகழ்ப்பெரு வணிகர்க்குவந்துரை செய்தார். (க0எ0)

சொன்னவர்க்கெலாந் தூசொடுகாசுபொன் னளித்தே
யின்னதன்மையா ரெனவொணுமகிழ்சிறந் தெய்தச்
சென்னிவாழ்மதி யார்திருவொற்றியூ ரளவுந்
துன்னுநீணடைக் காவணந்துகில்விதா னித்து. (க0எக)

மகரதோரணம் வண்குலைக்கமுகொடு கதலி
நிகரில்பல்கொடித் தாமங்களணிபெற நிரைத்து
நகரநீண்மறு கியாவையுநலம்புனை பணியாற்
புகரில்பொன்னுல கிழிந்ததாமெனப்பொலி வித்தார். (க0எஉ)

இன்னவாறணி செய்துபல்குறைவறுப் பேவி
முன்னமொற்றியூர் நகரிடைமுத்தமிழ் விரகர்
பொன்னடித்தலந் தலைமிசைபுனைவனென் றெழுவா
ரந்நகர்ப்பெருந் தொண்டருமுடன்செல வணைந்தார். (க0எங)

ஆயவேலையி லருமறைப்புகலியர் பிரானு
மேயவொற்றியூர் பணிபவர்வியனக ரகன்று
காயல்சூழ்கரைக் கடன்மயிலாபுரி நோக்கித்
தூயதொண்டர்தங் குழாத்தொடுமெதிர்வந்து தோன்ற. (க0எச)

மாறில்வண்பெரு வணிகருந்தொண்டரு மலர்ந்த
நீறுசேர்தவக் குழாத்தினைநீளிடைக் கண்டே
யாறுசூடினார் திருமகனாரணைந் தாரொன்
றீறிலாததோர் மகிழ்ச்சியினால்விழுந் திறைஞ்ச. (௧௦௭௫)

காழிநாடருங் கதிர்மணிச்சிவிகைநின் றிழிந்து
சூழிரும்பெருந் தொண்டர்முன்றொழுதெழுந் தருளி
வாழிமாதவர் வணிகர்செய்திறஞ்சொலக் கேட்டே
வாழிசூழ்மயி லாபுரித்திருநக ரணைந்தார். (௧௦௭௬)

அத்திறத்துமுன் னிகழ்ந்ததுதிருவுள்ளத் தடைத்துச்
சித்தமின்புறு சிவநேசர்தஞ்செயல் வாய்ப்பப்
பொய்த்தவச்சமண் சாக்கியர்புறத்துறை யழிய
வைத்தவப்பெருங் கருணைநோக்கால்மகிழ்ந் தருளி. (௧௦௭௭)

கங்கைவார்சடை யார்கபாலீச்சரத் தணைந்து
துங்கநீள்சுடர்க் கோபுரந்தொழுதுபுக் கருளி
மங்கைபங்கர்தங் கோயிலைவலங்கொண்டு வணங்கிச்
செங்கைசென்னிமேற் குவித்திடத்திருமுன்பு சேர்ந்தார். (௧௦௭௮)

தேவதேவனைத் திருக்கபாலீச்சரத் தமுதைப்
பாவைபாகனைப் பரிவுறுபண்ணினிற் பரவி
மேவுகாதலின் விரும்பியவிளைவினால் விழுந்து
நாவின்வாய்மையிற் போற்றினார்ஞானசம் பந்தர். (௧௦௭௯)

போற்றிமெய்யருட் டிறம்பெறுபரிவுடன் வணங்கி
நீற்றின்மேனியி னிறைமயிர்ப்புளகங்க ணெருங்கக்
கூற்றடர்த்தவர் கோயிலின்புறம்புபோந் தருளி
யாற்றுமின்னருள் வணிகர்மேற்செலவருள் செய்வார். (௧௦௮௦)

ஒருமையுய்த்தநல் லுணர்வினருலகவ ரறிய
வருமையாற்பெறு மகளென்புநிறைத்தவக் குடத்தைப்
பெருமயானத்து நடம்புரிவார்பெருங் கோயிற்
றிருமதிற்புற வாய்தலிற்கொணர்கென்று செப்ப. (௧௦௮௧)

அந்தமில்பெரு மகிழ்ச்சியாலவணிமேற் பணிந்து
வந்துதந்திரு மனையினின்மேவியம் மருங்கு
கந்தவார்பொழிற் கன்னிமாடத்தினிற் புக்கு
வெந்தசாம்பலோ டென்புசேர்குடத்தைவே றெடுத்து. (௧௦௮௨)

மூடுபன்மணிச் சிவிகையுட்பெய்துமுன் போத
மாடுசேடிய ரினம்புடைசூழ்ந்துவந் தணைய
வாடன்மேவினார் திருக்கபாலீச்சர மணைந்து
நீடுகோபுரத் தெதிர்மணிச்சிவிகையை நீக்கி. (௧௦௮௩)

அங்கணாளர்த மபிமுகத்தினிலடி யுறைப்பான்
மங்கையென்புசேர் குடத்தினைவைத்துமுன் வணங்கிப்
பொங்குநீள்புனற் புகலிகாவலர்புவ னத்துத்
தங்கிவாழ்பவர்க் குறுதியாகிலமைசா றிப்பார். (௧0அச)

மாடமோங்கிய மயிலைமாநகருளார் மற்று
நாடுவாழ்பவர் நன்றியில்சமயத்தி னுள்ளோர்
மாடுசூழ்ந்துகாண் பதற்குவந்தெய்தியே மலிய
நீடுதேவர்க ளேனையோர்விசும்பிடை நெருங்க. (௧0அரு)

தொண்டர்தம்பெருங் குழாம்புடைசூழ்தரத் தொல்லை
யண்டர்நாயகர் கோபுரவாயிலே ரணைந்து
வண்டுவார்குழ லாளென்புநிறைந்தமட் குடத்தைக்
கண்டுதம்பிரான் கருணையின்பெருமையே கருதி. (௧0அசு)

இந்தமாநிலத் திறந்துளோரென்பினைப் பின்னு
நந்துநன்னெறிப் படுத்திடநன்மையாந் தன்மை
யந்தவென்பொடு தொடர்ச்சியாமெனவரு ளோக்காற்
சிந்துமங்கமங் குடையபூம்பாவைநேர் செப்பி. (௧0அஎ)

மண்ணினிற்பிறந் தார்பெறும்பயன்மதி சூடு
மண்ணலாரடி யார்தமையமுதுசெய் வித்தல்
கண்ணினாலவர் நல்விழாப்பொலிவுகண் டார்த
லுண்மையாமெனி னுலகர்முன்வருகென வுரைப்பார். (௧0அஅ)

மன்னுவார்சடை யாரைமுன்றேழுதுமட் டிட்ட
வென்னுநற்பதி கத்தினிற்போதியோ வென்னு
மன்னமெய்த்திரு வாக்கெனுமமுதமவ் வங்கந்
துன்னவந்துவந் துருவமாய்த்தொக்கதக் குடத்துள் (௧0அகூ)

ஆனதன்மையி னத்திருப்பாட்டினி னடைவே
போனவாயுவும் வடிவமும்பொலிவொடு நிரம்பி
யேனையக்குடத் தடங்கிமுன்னிருந்தெழு வதன்முன்
ஞானபோனகர் பின்சமண்பாட்டினை நவில்வார். (௧0கூ0)

தேற்றமில்சமண் சாக்கியத்திண்ணரிச் செய்கை
யேற்றதன்றென வெடுத்துரைப்பர்களென்ற போது
கோற்றொடிச்செங்கை தோற்றிடக்குடமுடைந் தெழுவாள்
போற்றுதாமரைப் போதவிழ்ந்தெழுந்தனள் போன்றாள். (௧0கூ௧)

எடுத்தபாட்டினில் வடிவுபெற்றிருநான்கு திருப்பாட்
டடுத்தவம்முறைப் பன்னிரண்டாண்டள வணைந்து
தொடுத்தவெஞ்சமண் பாட்டினிற்றோன்றிடக்கண்டு
விடுத்தவேட்கையர் திருக்கடைகாப்புமேல் விரித்தார். (௧0கூஉ)

திருமயிலைப்பூம்பாவைதிருப்பதிகம்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தா
னெட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்.

கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
றேனமர்பூம்பாவை பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்த னலம்புகழ்ந்த பத்தும்வல்லார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்கபாலீசர், தேவியார் கற்பகவல்லியம்மை.

திருப்பதிகம்—க.

---

வேறு.

ஆங்கண் மெழுந்துநின்ற வணங்கினை நோக்குவார்க
ளீங்கிது காணீரென்ன வற்புத மெய்தும்வேலைப்
பாங்குசூழ் தொண்டராணே ரரகர வென்னப்பார்மே
லோங்கிய வோசையும்பர் நாட்டினை யுற்றதன்றே. (க0௬௩)

தேவரு முனிவர்தாமுந் திருவருட் சிறப்புநோக்கிப்
பூவரு விரைகொண்மாரி பொழிந்தன ரொழிந்தமண்ணோர்
யாவரு மிருந்தவண்ண மெம்பிரான் கருணையென்றே
மேவிய கைகளுச்சி மேற்குவித் திறைஞ்சிவீழ்ந்தார். (க0௬௪)

அங்கவ ருருவங்காண்பா ரதிசய மிகவுமெய்திப்
பங்கமுற் றுரோபோன்றூர் பரசம யத்தினுள்ளோ
ரெங்குள செய்கைதான்மற் றென்செய்த வாறிதென்று
சங்கையா முணர்வுகொள்ளுஞ் சமணர்தள் ளாடிவீழ்ந்தார். (க0௬௫)

கன்னிதன் வனப்புத்தன்னைக் கண்களான் முடியக்காணூர்
முன்னுறக் கண்டார்க்கெல்லா மொய்கருங் குழலின்பார
மன்னிய வதனசெந்தா மரையினிற் கரியவண்டு
துன்னிய வொழுங்குதுற்ற சூழல்போ லிருண்டுதோன்ற. (க0௬௬)

பாங்கணி சுரும்புமொய்த்த பனிமல ரளகப்பந்தி
தேங்கம ழாரஞ்சேருந் திருநுதல் விளக்கம்நோக்கிற்
பூங்கொடிக் கழகின்மாரி பொழிந்திடப் புயற்கீழிட்ட
வாங்கிய வானவில்லின் வளரொளி வனப்புவாய்ப்ப. (க0௬௭)

புருவமென் கொடிகள்பண்டு புரமெரித் தவர்தநெற்றி
யொருவிழி யெரியினீறு யருள்பெற வுளதாங்காமன்
செருவெழுந் தனுவதொன்றுஞ் சேமவில் லொன்றுமாக
வருபெருஞ் சிலைகண்முன்கொண் டெழுந்தன போலவொப்ப. (கoகூஅ)

மண்ணிய மணியின்செய்ய வளரொளி மேனியாடன்
கண்ணிணை வனப்புக்காணிற் காமரு வதனத் திங்கட்
டண்ணளி விரிந்தசோதி வெள்ளத்திற் றகைவினீள
வொண்ணிறக் கரியசெய்ய கயலிரண் டொத்துலாவ. (கoகூகூ)

பணிவள ரல்குற்பாவை நாசியும் பவளவாயு
நணியபே ரொளியிற்றோன்று நலத்தினை நாடுவார்க்கு
மணிநிறக் கோபங்கண்டு மற்றது வவ்வத்தாழு
மணிநிறக் காமரூபி யணைவதா மழகுகாட்ட. (ககoo)

இளமயி லனையசாய லேந்திழை குழைகொள்காது
வளமிகு வனப்பினாலும் வடிந்ததா ளுடைமையாலுங்
கிளரொளி மகரவேறு கெழுமிய தன்மையாலு
மளவில்சீ ரனங்கன்வென்றிக் கொடியிரண் டணையவாக. (ககoக)

விற்பொலி தரளக்கோவை விளங்கிய கழுத்துமீது
பொற்பமை வதனமாகும் பதுமநன் னிதியம்பூப்ப
நற்பெரும் பணிலமென்னு நன்னிதி யொன்றுதோன்றி
யற்பொலி கண்டர்தந்த வருட்கடை யாளங்காட்ட. (ககoஉ)

எரியவிழ் காந்தண்மென்பூத் தலைதொடுத் திசையவைத்துத்
திரள்பெறச் சுருக்குஞ்செச்சை மாலையோ தெரியின்வேறு
கருநெடுங் கயற்கண்மங்கை கைகளாற் காந்திவெள்ள
மருகிழிந் தனவோவென்னு மதிசயம் வடிவிற்றோன்ற. (ககoந)

ஏர்கெழு மார்பிற்பொங்கு மேந்திளங் கொங்கைநாகக்
கார்கெழு விடத்தைநீக்குங் கவுணியர் தலைவர்நோக்கா
லார்திரு வருளிற்பூரித்த டங்கிய வமுதகும்பச்
சீர்கெழு முகிழைக்காட்டுஞ் செவ்வியிற் றிகழ்ந்துதோன்ற. (ககoச)

காமவே ளென்னும்வேட னுந்தியிற் கரந்துகொங்கை
நேமியம் புட்கடம்மை யகப்பட நேரிதாய
தாமநீள் கண்ணிசேர்த்த சலாகைதூக் கியதேபோலும்
மாமமே கலைசூழ்வல்லி மருங்கின்மே லுரோமவல்லி. (ககoரு)

பிணியவிழ் மலர்மென்கூந்தற் பெண்ணமு தனையாள்செம்பொன்
அணிவள ரல்குறங்க ளரவுசெய் பிழையாலஞ்சி
மணிகிளர் காஞ்சிசூழ்ந்து வனப்புடை யல்குலாகிப்
பணியுல காளுஞ்சேடன் பணம்விரித் தடைதல்காட்ட. (ககoசு)

வருமயி லனையசாயன் மங்கைபொற் குறங்கின்மாமை
கரியிளம் பிடிக்கைவென்று கதலிமென் றண்டுகாட்டத்
தெரிவுறு மவர்க்குமென்மைச் செழுமுழந் தாளின்செவ்வி
புரிவுறு பொற்பங்கென்னப் பொலிந்தொளி விளங்கிப்பொங்க. (கக0எ)
பூவலர் நறுமென்கூந்தற் பொற்கொடி கணைக்கால்காம
னுவகா ழிகையேபோலு மழகினின் மேன்மையெய்த
மேவிய செம்பொற்றட்டின் வனப்பினை மீதிட்டென்று
மோவியர்க் கெழுதவொண்ணுப் பரட்டொளி யொளிவுற்றோங்க. ()
கற்பக மீன்றசெவ்விக் காமரு பவளச்சோதிப்
பொற்றிரள் வயிரப்பத்திப் பூந்துணர் மலர்ந்தபோலு
நற்பதம் பொலிவுகாட்ட ஞாலமும் விசும்புமெல்லா
மற்புத மெய்தத்தோன்றி யழகினுக் கணியாய்நின்றாள். (கக0கூ)
எண்ணிலாண் டெய்தும்வேதாப் படைத்தவ ளெழிலின்வெள்ள
நண்ணுநான் முகத்தாற்கண்டா னவளினு நல்லாடன்பாற்
புண்ணியப் பதினாறுண்டு பேர்பெறும் புகலிவேந்தர்
கண்ணுதல் கருணைவெள்ள மாயிர முகத்தாற்கண்டார். (கககo)

வே று.

இன்னணம் விளங்கிய வேர்கொள் சாயலா
டன்னைமுன் கண்ணுறக் கண்ட தாதையார்
பொன்னணி மாளிகைப் புகலி வேந்தர்தாள்
சென்னியிற் பொருந்தமுன் சென்று வீழ்ந்தனர். (கககக)
அணங்கினு மேம்படு மன்ன மன்னவள்
பணம்புரி யரவரைப் பரமர் முன்பணிந்
திணங்கிய முகின்மதிற் சண்பை யேந்தலை
வணங்கியே நின்றனண் மண்ணு ளோர்தொழ. (கககஉ)
சீர்கெழு சிவநேசர் தம்மை முன்னமே
கார்கெழு சோலைசூழ் காழி மன்னவ
ரோர்கெழு சிறப்பினும் மகளைக் கொண்டினிப்
பார்கெழு மனையினிற் படர்மி னென்றலும். (கககங)
பெருகிய வருள்பெறும் வணிகர் பிள்ளையார்
மருவுதா மரையடி வணங்கிப் போற்றிநின்
றருமையா லடியனேன் பெற்ற பாவையைத்
திருமணம் புணர்ந்தருள் செய்யு மென்றலும். (கககச)
மற்றவர் தமக்குவண் புகலி வாணர்நீர்
பெற்றபெண் விடத்தினல் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை காண்வர
உற்பவிப் பித்தலா லுனாத காதென. (கககரு)

வணிகருஞ் சுற்றமு மயங்கிப் பிள்ளையா
ரணிமல ரடியில்வீழ்ந் தரற்ற வாங்கவர்
தணிவினிள் பெருந்துயர் தணிய வேதநூற்
றுணிவினை யருள்செய்தார் தூய வாய்மையார். (ககக்சு)

தெள்ளுநீ தியின்முறை கேட்ட சீர்க்கிளை
வெள்ளமும் வணிகரும் வேட்கை நீத்திடப்
பள்ளநீர்ச் செலவெனப் பரமர்கோயிலி
னுள்ளெழுந் தருளினு ருடைய பிள்ளையார். (கககள)

பான்மையால் வணிகரும் பாவை தன்மனை
மேனையோர்க் கிசைகிலே னென்று கொண்டுபோய்
வானுயர் கன்னிமா டத்து வைத்தனர்
தேனமர் கோதையுஞ் சிவத்தை மேவினுள். (கககஅ)

வே று.

தேவர்பிரா னமர்ந்தருளுந் திருக்கபா லீச்சரத்து
மேவியஞா னத்தலைவர் விரிஞ்சன்முத லெவ்வுயிர்க்குங்
காவலனுர் பெருங்கருணை கைதந்த படியென்று
பாவலர்செந் தமிழ்பாடிப் பன்முறையும் பணிந்தெழுவார். (ககககூ)

தொழுதுபுறம் போந்தருளித் தொண்டர்குழாம் புடைசூழப்
பழுதில்புகழ்த் திருமயிலைப் பதியிலமர்ந் தருளுநாண்
முழுதுலகுந் தருமிறைவர் முதற்றனம் பலவிறைஞ்ச
வழுதுலகை வாழ்வித்தா ரப்பதியின் மருங்ககல்வார். (ககஉ0)

திருத்தொண்ட ரங்குள்ளார் விடைகொள்ளச் சிவநேசர்
வருத்தமகன் றிடமதுர மொழியருளி விடைகொடுத்து
நிருத்தருறை பிறபதிகள் வணங்கிப்போய் நிறைகாத
லருத்தியொடுந் திருவான்மி யூர்பணிய வணைவுற்றார். (ககஉக)

திருவான்மி யூர்மன்னுந் திருத்தொண்டர் சிறப்பெதிர
வருவார்மங் கலவணிகண் மறுகுநிறைத் தெதிர்கொள்ள
வருகாக விழிந்தருளி யவர்வணங்கத் தொழுதன்பு
தருவார்தங் கோயின்மணித் தடநெடுங்கோ புரஞ்சார்ந்தார். (ககஉஉ)

மிக்குயர்ந்த கோபுரத்தை வணங்கியுன் றிருமுன்றில்
புக்கருளிக் கோயிலினைப் புடை வலங்கொண் டுள்ளணைந்து
கொக்கிறகு மதிக்கொழுந்துங் குளிர்புனலு மொளிர்கின்ற
செக்கர்நிகர் சடைமுடியார் சேவடியின் கீழ்த்தாழ்ந்தார். (ககஉங)

தாழ்ந்துபல முறைபணிந்து தம்பிரான் முன்னின்று
வாழ்ந்துகளி வரப்பிறவி மருந்தான பெருந்தகையைச்
சூழ்ந்தவிசைத் திருப்பதிகச் சொன்மாலை விளைவுணயால்
வீழ்ந்தபெருங் காதலுடன் சாத்திமிக வின்புற்றார். (ககஉச)

திருவான்மியூர்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கரையுலாங்கட லிற்பொலிசங்கம் வெளிப்பிவன்
றிரையுலாங்கழி மீனுகளுந்திரு வான்மியூ
ருரையுலாம்பொரு ளாயுலகாளுடை யீர்சொலீர்
வரையுலாமட மாதுடனாகிய மாண்பதே.

மாதொர்கூறுடை நற்றவனைத்திரு வான்மியூ
ராதியெம்பெரு மானருள்செய்யவி னாவுரை
போதியென்றெழு காழியுள்ஞானசம் பந்தன்சொல்
நீதியானினை வார்நெடுவானுல காள்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மருந்தீசுவரர். தேவியார்.திரிபுரசுந்தரி.

திருப்பதிகம்—௩.

---

பரவிவரு மானந்த நிறைந்ததுளி கண்பனிப்ப
விரவுமயிர்ப் புளகங்கண் மிசைவிளங்கப் புறத்தணைவுற்
றரவநெடுந் திரைவேலை யணிவான்மி யூரதனுட்
சிரபுரத்துப் புரவலனார் சிலநாளங் கினிதமர்ந்தார். (௧௧௨௫)

அங்கணமர் வாருலகா ளுடையாரை யருந்தமிழின்
பொங்குமிசைப் பதிகங்கள் பலபோற்றிப் போந்தருளிக்
கங்கையணி மணிமுடியார் பதிபலவுங் கலந்திறைஞ்சிச்
செங்கண்விடைக் கொடியார்தம் மிடைச்சுரத்தைச் சேர்வுற்றார். ()

சென்னியிள மதியணிந்தார் மருவுதிரு விடைச்சுரத்து
மன்னுதிருத் தொண்டர்குழா மெதிர்கொள்ள வந்தருளி
நன்னெடுங்கோ புரமிறைஞ்சி யுள்புகுந்து நற்கோயி
றன்னைவலங் கொண்டணைந்தார் தம்பிரான் றிருமுன்பு. (௧௧௨௭)

கண்டபொழு தேகலந்த காதலாற் கைதலைமேற்
கொண்டுதல முறவிழுந்து குலவுபெரு மகிழ்ச்சியுடன்
மண்டியபே ரன்புருகி மயிர்முகிழ்ப்ப வணங்கியெழுந்
தண்டர்பிரான் றிருமேனி வண்ணங்கண் டதிசயித்தார். (௧௧௨௮)

திருந்தவிடைச் சுரமேவு மிவர்வண்ண மென்னேயென்
றருந்தமிழின் றிருப்பதிகத் தலர்மாலை கொடுபரவித்
திருந்துமனங் கரைந்துருகத் திருக்கடைகாப் புச்சாத்திப்
பெருந்தனிவாழ் வினைப்பெற்றார் பேருலகின் பேறானார். (௧௧௨௯)

---

திருஇடைச்சுரம்-பண்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வரிவள ரவிரொளி யரவரை தாழ வார்சடை முடிமிசை வளர்மதிசூ டிக்,கரிவளர் தருகழல் கால்வல னேந்திக் கனலெரி யாடுவர் காடரங்காக, விரிவளர் தருபொழி லிளமயிலால வெண்ணிறத் தருவிக டிண்ணென வீழ,மெரிவள ரினமணி புனமணிச் சாரலிடைச் சுரமேவிய விவர்வண மென்னே.

மடைச்சுரமறிவன வாளையுங் கயலு மருவிய வயறனில் வரும்பு னற் காழிச், சடைச்சுரத் துறைவதோர் பிறையுடை யண்ணல் சரிதைகள் பரவிசின் றுருகுசம் பந்தன், புடைச்சுரத் தருவரைப் பூக்கமழ் சா ரற் புணர்மட நடையவர் புடையிடை யார்ந்த, விடைச்சுர மேத்தியவி சையொடு பாட லிவைசொல வல்லவர் பிணியிலர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-இடைச்சுரநாதர். தேவியார்-இமயமடக்கொடி.

திருப்பதிகம்—க.

---

நிறைந்தார்வ வேட்கையினு னின்றிறைஞ்சிப் புறம்போந்தங்
குறைந்தருளிப் பணிகின்று ருமைபாக ரருள்பெற்றுச்
சிறந்ததிருத் தொண்டருட னெழுந்தருளிச் செந்துருத்தி
யறைந்தளிகள் பயில்சாரற் றிருக்கழுக்குன் றினையணைந்தார். (ககஙு0)

சென்றணையும் பொழுதின்கட் டிருத்தொண்ட ரெதிர்கொள்ளப்
பொன்றிகழு மணிச்சிவிகை யிழிந்தருளி யுடன்போந்து
மன்றல்விரை நறுஞ்சோலைத் திருமலையை வலங்கொண்டு
மின்றயங்குஞ் சடையாரை விருப்பினுடன் பணிகின்றார். (ககஙுக)

திருக்கழுக்குன் றத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைப்
பெருக்கவளர் காதலினாற் பணிந்தெழுந்து பேராத
கருத்தினுடன் காதல்செயுங் கோயில்கழுக் குன்றென்று
திருப்பதிகம் புனைந்தருளிச் சிந்தைநிறை மகிழ்வுற்றார். (ககஙுஉ)

---

திருக்கழுக்குன்றம்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையா னொருகாதிற் றூய குழைதாழ
வேடுடையான் றலைகல னாக விரந்துண்ணு
நாடுடையா னள்ளிரு ளேம நடமாடுங்
காடுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே.

கண்ணுதலான் காதல்செய் கோயில் கழுக்குன்றை
நண்ணியசீர் ஞானசம் பந்தன் றமிழ்மாலை
பண்ணியல்பாற் பாடிய பத்தும் மிவைவல்லார்
புண்ணியராய் விண்ணவ ரோடும் புகுவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வேதகிரீசுரர். தேவியார்-பெண்ணினல்லாள்.

திருப்பதிகம்—ந.

---

இன்புற்றங் கமர்ந்தருளி யிறில்பெருந் தொண்டருடன்
மின்பெற்ற வேணியினா ரருள்பெற்றுப் போந்தருளி
யென்புற்ற வணிமார்ப ரெல்லையிலா வாட்சிபுரிந்
தன்புற்று மகிழ்ந்ததிரு வச்சிறுபாக் கத்தணைந்தார். (ககநந)

ஆதிமுதல் வரைவணங்கி யாட்சிகொண்டா ரெனமொழியுங்
கோதில்திருப் பதிகவிசை குலாவியபா டலிற்போற்றி
மாதவத்து முனிவருடன் வணங்கி மகிழ்ந்தின்புற்று
தீதகற்றுஞ் செய்கையினார் சிலநாளங் கமர்ந்தருளி. (ககநச)

---

திருஅச்சிறுபாக்கம்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பொன்றிரண்டன்ன புரிசடைபுரளப் பொருகடற்பவளமோ டழ னிறம்புரையக், குன்றிரண்டன்ன தோளுடையகலங் குலாயவெண்ணூ லொடு கொழும்பொடியணிவர், மின்றிரண்டன்ன நுண்ணிடையரிவை மெல்லியாளையோர் பாகமாப்பேணி, யன்றிரண்டுருவ மாயவெம்மடிக ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே.

* மைச்செறிகுவளை தவளைவாய்நிறைய மதுமலர்ப்பொய்கையிற் புது மலர்கிழியப்,பச்சிறவெறிவயல் வெறிகமழ்காழிப் பதியவரதிபதிகவுணிய ர்பெருமான், கைச்சிறுமறியவன் கழலலாற்பேணுக் கருத்துடைஞானச ம் பந்தன்றமிழ்கொண், டச்சிறுபாக்கத் தடிகளையேத்து மன்புடையடி யவ ருருவினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பாக்கபுரேசர். தேவியார்-அதிசுந்தரமின்னாள்.

திருப்பதிகம்—க.

---

ஏறணிந்த வேல்கொடியா ரினிதமர்ந்த பதிபிறவு
நீறணிந்த தொண்டருட னெதிர்கொள்ள நேர்ந்திறைஞ்சி
வேறுபல நதிகானங் கடந்தருளி விரிசடையி
லாறணிந்தார் மகிழ்ந்ததிரு வரசிலியை வந்தடைந்தார். (ககநரு)

அரசிலியை யமர்ந்தருளு மங்கணரை சைப்பணிந்து
பரசியெழு திருப்புறவார் பனங்காட்டூர் முதலாய
விரைசெய்மலர்க் கொன்றையினர் மேவுபல பதிவணங்கித்
திரைசெய்நெடுங் கடலுடுத்த திருத்தில்லை நகரணைந்தார். (௧௧௩௬)

---

திருஅரசிலி-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பாடல் வண்டறை பான்மதி பாய்புனற் கங்கை
கோடல் கூவிளமாலை மத்தமுஞ்செஞ்சடை குலாவி
வாடல் வெண்டலை மாலைமருவிட வல்லியந் தோண்மே
லாடன் மாசுண மசைத்த வடிகளுக் கிடமர சிலியே.

அல்லி நீள்வயல் சூழ்ந்த வரசிலி யடிகளைக் காழி
நல்ல ஞானசம் பந்தனற் றமிழ் பத்திவை நாளுஞ்
சொல்ல வல்லவர் தம்மைச் சூழ்ந் தமரர் தொழுதேத்த
வல்லர் வானுல கேத்தவைகலு மகிழ்ந்திருப் பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அரசிலிநாதர். தேவியார்-பெரியநாயகி.

திருப்பதிகம்—௧.

---

எல்லையின்ஞா னத்தலைவ ரெழுந்தருள வெதிர்கொள்வார்
தில்லையில்வா ழந்தணர்மெய்த் திருத்தொண்டர் சிறப்பினொடு
மல்கியெதிர் பணிந்திறைஞ்ச மணிமுத்தின் சிவிகையிழிந்
தல்குபெருங் காதலுட னஞ்சலிசெய் தணைகின்றார். (௧௧௩௭)

திருவெல்லை யிற்பணிந்து சென்றணைவார் சேண்விசும்பை
மருவிவிளங் கொளிதழைக்கும் வடதிசைவா யிலைவணங்கி
யுருகுபெருங் காதலுட னுட்புகுந்து மறையினொலி
பெருகிவளர் மணிமாடப் பெருந்திருவீ தியையணைந்தார். (௧௧௩௮)

நலமலியுந் திருவீதி பணிந்தெழுந்து நற்றவர்தங்
குலநிறைந்த திருவாயில் குவித்தமலர்ச் செங்கையொடு
தலமுறமுன் றாழ்ந்தெய்தித் தமனியமா ளிகைமருங்கு
வலமுறவந் தோங்கியபே ரம்பலத்தை வணங்கினார். (௧௧௩௯)

வணங்கிமிக மனமகிழ்ந்து மாலயனுந் தொழும்பூத
கணங்கண்மிடை திருவாயில் பணிந்தெழுந்து கண்களிப்ப
வணங்குதனிக் கண்டருள வம்பலத்தே யாடுகின்ற
குணங்கடந்த தனிக்கூத்தர் பெருங்கூத்துக் கும்பிடுவார். (௧௧௪௦)

தொண்டர்மனம் பிரியாத திருப்படியைத் தொழுதிறைஞ்சி
மண்டுபெருங் காதலினா னோக்கிமுக மலர்ந்தெழுவா
ரண்டமெலா நிறைந்தெழுந்த வானந்தத் துள்ளலைந்து
கண்டபே ரின்பத்தின் கரையில்லா நிலையணைந்தார். (௧௧௪௧)

அந்நிலைமை யடைந்துதிளைத் தாங்கெய்தாக் காலத்தின்
மன்னுதிரு வம்பலத்தை வலங்கொண்டு போந்தருளிப்
பொன்னணிமா ளிகைவீதிப் புறத்தமர்ந்து போதுதொறு
மின்னிசைவண் டமிழ்பாடிக் கும்பிட்டங் கினிதிருந்தார். (௧௧௪௨)

திருந்தியசீர்த் தாதையார் சிவபாத விரதயரும்
பொருந்து திருவளர் புகலிப்பூசுரரு மாதவரும்
பெருந்திரு மாலயன் போற்றும்பெரும் பற்றப்புலியூரி
லிருந்தமிழாக ரரணைந்தாரெனக் கேட்டுவந் தணைந்தார். (௧௧௪௩)

ஆங்கவரைக் கண்டுசிறப் பளித்தருளி யவரோடுந்
தாங்கரிய காதலினாற் றம்பெருமான் கழல்வணங்க
வோங்குதிருத் தில்லைவா ழந்தணரு முடனாகத்
தேங்கமழ்கொன் றைச்சடையார் திருச்சிற்றம் பலமணைந்தார். (௧௧௪௪)

தென்புகலி யந்தணருந் தில்லைவா ழந்தணரு
மன்புநெறி பெருகுவித்த வாண்டகையா ரடிபோற்றிப்
பொன்புரிசெஞ் சடைக்கூத்த ரருள்பெற்றுப் போந்தருளி
யின்புறுதோ ணியினமர்ந்தார் தமைவணங்க வெழுந்தருள. (௧௧௪௫)

நற்றவத் தார்குழாத்தோடு நம்பர்திரு நடஞ்செய்யும்
பொற்பதியின் திருவெல்லை பணிந்தருளிப் புறம்போந்து
பெற்றமுயர்த் தவரமர்ந்த பிறபதியும் புக்கிறைஞ்சிக்
கற்றவர்கள் பரவுதிருக் கழுமலமே சென்றடைவார். (௧௧௪௬)

பல்பதிகள் கடந்தருளிப் பன்னிரண்டு பேர்படைத்த
தொல்லைவளம் பூந்தராய் தூரத்தே தோன்றுதலு
மல்குதிரு மணிமுத்தின் சிவிகையிழிந் தெதிர்வணங்கிச்
செல்வமிகு பதியதன்மேற் றிருப்பதிக மருள்செய்வார். (௧௧௪௭)

மன்னுமிசை மொழிவண்டார் குழலரிவை யென்றெடுத்து
மின்னுசுடர் மாளிகைவிண் டாங்குவபோல் வேணுபுர
மென்னுமிசைச் சொன்மாலை யெடுத்தியம்பி யெழுந்தருளிப்
புன்னைமணங் கமழ்புறவப் புறம்பணையில் வந்தணைந்தார். (௧௧௪௮)

திருவேணுபுரம்-பண்-நட்டபாடை.
திருச்சிற்றம்பலம்.

வண்டார் குழலரிவை யொடுபிரியா வகைபாகம்
பெண்டான் மிகவானான் பிறைச்சென்னிப் பெருமானூர்
தண்டா மரைமலரா ளுறைதவளந் நெடுமாடம்
விண்டாங் குவபோலும் மிகுவேணு புரமதுவே.

வேதத்தொலி யானமிகு வேணுபுரந் தன்னைப்
பாதத்தி னின்மனம்வைத் தெழுபந்தன் னுரைபாட
லேதத் தினையில்லா விவைபத்தும் மிசைவல்லார்
கேதத் தினையில்லார் சிவகெதியைப் பெறுவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வாழிவளர் புறம்பணையின் மருங்கணைந்து வரிவண்டு
சூழுமலர் நறுந்தீப தூபங்க ளுடன்றொழுது
காழிநகர் சேர்மினெனக் கடைமுடிந்த திருப்பதிக
மேழிசையி னுடன்பாடி யெயின்மூதா ருட்புகுந்தார். (௧௧௪௯)

---

ஸ்ரீகாழி-திருவிராகம்-பண்-நட்டராகம்.
திருச்சிற்றம்பலம்.

நம்பொருண மக்களென்று நச்சியிச்சை செய்துநீ
ரம்பரம டைந்துசால வல்லலுய்ப் பதன்முன
மும்பர்நாத னுத்தமன் னொளிமிகுத்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே.

தக்கனார் தலையரிந்த சங்கரன் றனக்கரா
யக்கினோ டரவசைத்த வந்திவண்ணன் காழியை
யொக்கஞான சம்பந்த னுரைத்தபாடல் வல்லவர்
மிக்கவின்ப மெய்திவீற் றிருந்துவாழ்தன் மெய்ம்மையே.

திருச்சிற்றம்பலம்.

---

சேணுயர்ந்த திருத்தோணி வீற்றிருந்த சிவபெருமான்
றாணிணைந்த வாதரவின் றலைப்பாடு தனையுன்னி
நீணிலைக்கோ புரமணைந்து நேரிறைஞ்சிப் புக்கருளி
வாணிலவு பெருங்கோயில் வலங்கொண்டு முன்பணிந்தார். (௧௧௫0)

முன்னிறைஞ்சித் திருவருளின் முழுநோக்கம் பெற்றேறிப்
பொன்னிமயப் பாவையுடன் புணர்ந்திருந்த புராதனரைச்
சென்னிமிசைக் குவித்தகரங் கொடுவிழுந்து திளைத்தெழுந்து
மன்னுபெரு வாழ்வெய்தி மனங்களிப்ப வணங்குவார். (௧௧௫௧)

பரவுதிருப் பதிகங்கள் பலவுமிசை யினிற்பாடி
விரவியகண் ணருவிநீர் வெள்ளத்திற் குளித்தருளி
யரவணிந்தா ரருள்பெருகப் புறம்பெய்தி யன்பருடன்
சிரபுரத்துப் பெருந்தகையார் தந்திருமாளிகை சேர்ந்தார். (௧௧௫௨)

மாளிகையி னுள்ளணைந்து மறையவர்கட் கருள்புரிந்து
தாள்பணியும் பெருங்கிளைக்குத் தகுதியினாற் றலையளிசெய்
தாளுடைய தம்பெருமா னடியவர்க ளுடனமர்ந்து
நீளவரும் பேரின்ப மிகப்பெருக நிகழுநாள். (௧௧௫௩)

காழிநா டுடையபிரான் கழல்வணங்கி மகிழ்வெய்த
வாழியினு மிகப்பெருகு மாசையுடன் றிருமுருகர்
வாழிதிரு நீலநக்கர் முதற்றொண்டர் மற்றெனையோர்
சூழுநெடுஞ் சுற்றமுடன் றோணிபுரந் தொழுதணைந்தார். (௧௧௫௪)

வந்தவரை யெதிர்கொண்டு மனமகிழ்ந்து சண்பையர்கோ
னந்தமில்சீ ரடியார்க ளவரோடு மினிதமர்ந்து
சுந்தரவா ரணங்கினுடன் றோணியில்வீற் றிருந்தாரைச்
செந்தமிழின் பந்தத்தாற் றிருப்பதிகம்பலபாடி. (௧௧௫௫)

பெருமகிழ்ச்சி யுடன்செல்லப் பெருந்தவத்தாற் பெற்றவரு
மருவுபெருங் கிளையான மறையவரு முடன்கூடித்
திருவளர் ஞானத்தலைவர் திருமணஞ்செய் தருளுதற்குப்
பருவமிது வென்றெண்ணி யறிவிக்கும் பாங்கணைந்தார். (௧௧௫௬)

நாட்டுமறை முறையொழுக்க ஞானபோ னகருக்குங்
கூட்டுவது மனங்கொள்வார் கோதின்மறை நெறிச்சடங்கு
காட்டவரும் வேள்விபல புரிவதற்கோர் கன்னிதனை
வேட்டருள வேண்டுமென விண்ணப்பஞ் செய்தார்கள். (௧௧௫௭)

மற்றவர்த மொழிகேட்டு மாதவத்தின் கொழுந்தனையார்
சுற்றமுறு பெரும்பாசத் தொடர்ச்சிவிடு நிலைமையராய்ப்
பெற்றமுயர்த்தவ ருண்முன் பெற்றதினு லிசையாது
முற்றியதா யினுங்கூடா தென்றவர்முன் மொழிந்தருள. (௧௧௫௮)

அருமறையோ ரவர்பின்னுங் கைதொழுதங் கறிவிப்பா
ரிருநிலத்து மறைவழக்க மெடுத்தீர்நீ ராதலினால்
வருமுறையா லறுதொழிலின் வைதிகமா நெறியொழுகுந்
திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யுமென. (௧௧௫௯)

மறைவாழ வந்தணர்தம் வாய்மையொழுக்கம் பெருகுந்
துறைவாழச் சுற்றத்தார் தமக்கருளி யுடன்பட்டும்
பிறைவாழுந் திருமுடியிற் பெரும்புனலோ டரவணிந்த
கறைவாழுங் கண்டத்தார் தமைத்தொழுது மனங்களித்தார். (௧௧௬௦)

திருஞான சம்பந்தர் திருவுள்ளஞ் செய்ததற்குத்
தருவாய்மை மறையவருந் தாதையருந் தாங்கரிய
பெருவாழ்வு பெற்றாராய்ப் பிஞ்ஞகனை ரருளென்றே
யுருகாநின் றின்பமுறு முள்மகிழ்ச்சி யெய்துவார். (ககசுக)

ஏதமில்சீர் மறையவரி லேற்றகுலத் தோடிசைவால்
நாதர்திருப் பெருமணத்து நம்பாண்டார் நம்பிபெறுங்
காதலியைக் காழிநா டுடையபிரான் கைப்பிடிக்கப்
போதுமவர் பெருந்தன்மை யெனப்பொருந்த வெண்ணினார். (ககசுஉ)

திருஞான சம்பந்தர் சீர்பெருக மணம்புணரும்
பெருவாழ்வு திருத்தொண்டர் மறையவர்கண் மிகப்பேணி
வருவாரும் பெருஞ்சுற்ற மகிழ்சிறப்ப மகட்பேசத்
தருவார்தண் பணைநல்லூர் சார்கின்றார் தாதையார். (ககசுங)

மிக்கதிருத் தொண்டர்களும் வேதியரு முடனேகத்
திக்குநிகழ் திருநல்லூர்ப் பெருமணத்தைச் சென்றெய்தத்
தக்கபுகழ் நம்பாண்டார் நம்பிதா மதுகேட்டுச்
செக்கர்முடிச் சடையார்தந் திருப்பாதந் தொழுதெழுவார். (ககசுச)

ஒப்பரிய பேருவகை யோங்கியெழுமுள்ளத்தா
லப்புநிறை குடம்விளக்கு மறுகெல்லா மணிபெருக்கிச்
செப்பரிய வார்வமிகு பெருஞ்சுற்றத் தொடுஞ்சென்றே
யெப்பொருளு மெய்தினே னெனத்தொழுதங் கெதிர்கொண்டார். ()

எதிர்கொண்டு மணிமாடத் தினிதெய்தி யின்பமுறு
மதுரமொழி பலமொழிந்து வரன்முறையாற் சிறப்பளித்துச்
சதுர்முகனின் மேலாய சண்பைவரு மறையவரு
முதிருணர்வின் மாதவரு மணைந்ததிற மொழிகின்றார். (ககசுசு)

ஞானபோ னகருக்கு நற்றவத்தி னொழுக்கத்தா
லூனமில்சீ லத்தும்பான் மகட்பேசி வந்ததென்ன
வானபே றந்தணர்பா லருளுடைமை யாமென்று
வானளவு நின்றபெரு மனமகிழ்ச்சி யொடுமொழிவார். (ககசுஎ)

உம்முடைய பெருந்தவத்தா லுலகனைத்து மீன்றளித்த
வம்மைதிரு முலைப்பாலிற் குழைத்தவா ரமுதுண்டார்க்
கெம்முடைய குலக்கொழுந்தை யாமுய்யத் தருகின்றேம்
வம்மினென வுரைசெய்து மனமகிழ்ந்து செலவிடுத்தார். (ககசுஅ)

பேருவகை யாலிசைவு பெற்றவர்தா மீண்டணைந்து
காருலவு மலர்ச்சோலைக் கழுமலத்தை வந்தெய்திச்
சீருடைய பிள்ளையார்க் கவர்நேர்ந்த படிசெப்பிப்
பார்குலவுந் திருமணத்தின் பான்மையினைத் தொடங்குவார். (ககசுக)

திருமணஞ்செய் கலியாணத் திருநாளுந் திகழ்சிறப்பின்
மருவியவோ ரையுங்கணித மங்கலநூ லவர்வகுப்பப்
பெருகுமண நாளோலை பெருஞ்சிறப்பி னுடன்போக்கி
யருள்புரிந்த நன்னாளி லணிமுளைப்பா லிகைவிதைத்தார். (கஎ0)

செல்வமலி திருப்புகலிச் செழுந்திருவீ திகளெல்லா
மல்குநிறை குடம்விளக்கு மகரதோ ரணநிரைத்தே
யெல்லையிலா வொளிமுத்து மாலைகளெங் கணும்நாற்றி
மல்குபெருந் திருவோங்க வணிசிறக்க வலங்கரித்தார். (கஎக)

அருந்தவத்தோ ரந்தணர்க ளயலுள்ளோர் தாமுய்யப்
பொருந்துதிரு நாளோலை பொருந்துவித்தார் கொண்டணையத்
திருந்துபுகழ் நம்பாண்டார் நம்பிசிறப் பெதிர்கொண்டு
வருந்தவத்தான் மகட்கொடுப்பார் வதுவைவினை தொடங்குவார். ()

மன்னுபெருஞ் சுற்றத்தா ரெல்லாரும் வந்தீண்டி
நன்னிலைமைத் திருநாளுக் கெழுநாளா நன்னாளிற்
பன்மணிமங் கலமுரசம் பல்லியங்க ணிறைந்தார்ப்பப்
பொன்மணிப்பா லிகைமீது புனிதமுளை பூரித்தார். (கஎங)

சேணுயரு மாடங்க டிருப்பெருகு மண்டபங்க
ணீணிலைய மாளிகைக ணிகரிலணி பெறவிளக்கிக்
காண்வருகை வினைவண்ணங் கவினோங்கும் படியெழுதி
வாணிலவு மணிக்கடைக்கண் மங்கலக்கோ லம்புனைந்து. (கஎச)

நீடுநிலைத் தோரணங்க ணீண்மறுகு தொறுநிரைத்து
மாடுயருங் கொடிமாலை மணிமாலை யிடைபோக்கிச்
சேடுயரும் வேதிகைகள் செழுஞ்சாந்து கொடுநீவி
பீடுகெழு மணிமுத்தின் பெரும்பந்தர் பலபுனைந்தார். (கஎரு)

மன்றல்வினைத் திருமுளைநா டொடங்கிவரு நாளெல்லா
முன்றிற்றொறும் வீதிதொறு முகநெடுவா யில்கடோறு
நின்றெரிரு மணிவிளக்கு நிறைவாசப் பொற்குடங்க
டுன்றுசுடர்த் தாமங்க டேங்கடுதைவித்தார். (கஎசு)

எங்கணுமெய்த் திருத்தொண்டர் மறையவர்க ளேனையோர்
மங்கலநீண் மணவினைநாள் கேட்டுமிக மகிழ்வெய்திப்
பொங்குதிருப் புகலிதனி னுடோறும் புகுந்தீண்டி
யங்கணைந்த வர்க்கெல்லாம் பெருஞ்சிறப்பு மிகவளித்தார். (கஎஎ)

மங்கலதூ ரியநாத மறுகுதொறு நின்றியம்பப்
பொங்கியநான் மறையோசை கடலோசை மிகப்பொலியத்
தங்குநறுங் குறையகிலின் றழைத்தசெழும் புகையினுடன்
செங்கனலா குதிப்புகையுந் தெய்வவிரை மணம்பெருக. (கஎஅ)

எண்டிசையி லுள்ளோரு மீண்டுவளத் தொடுநெருங்கப்
பண்டநிறை சாலைகளும் பலவேறு விதம்பயில
மண்டுபெரு நிதிக்குவைகண் மலைப்பிறங்க லெனமலிய
வுண்டிவினைப் பெருந்துழனி யோவாத வொலியோங்க. (௧௧எ௯)

மாமறைநூல் விதிச்சடங்கில் வகுத்தமுறை நெறிமரபின்
றூமணநல் லுபகரணஞ் சமைப்பவர்தந் தொழிறுவன்றத்
தாமரையோ னனையபெருந் தவமறையோர் தாமெடுத்த
பூமருவு பொற்கலசப் புண்ணியநீர் பொலிவெய்த. (௧௧அ௦)

குங்குமத்தின் செழுஞ்சேற்றின் கூட்டமைப்போ ரினங்குழுமப்
பொங்குவிரைப் புதுக்கலவைப் புகையெடுப்போர் தொகைவிரவத்
துங்கநறுங் கர்ப்பூரச் சுண்ணமிடிப் போர்நெருங்க
வெங்குமலர்ப் பிணைபுனைவோ ரீட்டங்கண் மிகப்பெருக. (௧௧அ௧)

இனையபல வேறுதொழி லெம்மருங்கு நிரைத்தியற்று
மனைவளரு மறுகெல்லா மணவணிசெய் மறைமூதூர்
நினைவரிய பெருவளங்க ணெருங்குதலா னிதிக்கோமான்
றனையிறைவர் தாமேவச் சமைத்ததுபோ லமைந்துளதால். (௧௧அ௨)

வேறு.

மாறிலாநிறை வளந்தருபுகலியின் மணமீக்
கூறுநாளின்முன் னாளினில்வேதியர் குழாமு
நீறுசேர்திருத் தொண்டருநிகரிலா தவருக்
காறுசூடின ரருட்டிருக்காப்புநா ணணிவார். (௧௧அ௩)

வேதவாய்மையின் விதியுளிவினையினால் விளங்க
வோதநீருல கின்முறையொழுக்கமும் பெருகக்
காதனீடிருத் தொண்டர்கண் மறையவர் கவினார்
மாதர்மைந்தர்பொற் காப்புநாணகர்வலஞ் செய்தார். (௧௧அ௪)

நகர்வலஞ்செய்து புகுந்தபினவமணி யணிந்த
புகரில்சித்திர விதானமண்டபத்தினிற் பொலியப்
பகரும்வைதிக விதிச்சமாவர்த்தனப் பான்மை
திகழமுற்றிய செம்மலார்திருமுன்பு சேர்ந்தார். (௧௧அ௫)

செம்பொனின்பரி கலத்தினிற்செந்நெல்வெண் பரப்பின்
வம்பணிந்தநீண் மாலைசூழ்மருங்குற வமைத்த
வம்பொன்வாசநீர்ப் பொற்குடமரசிலை தருப்பை
பம்புநீள்சுடர் மணிவிளக்கொளிர்தரும் பரப்பில். (௧௧அ௬)

நாதமங்கல முழக்கொடுநற்றவ முனிவர்
வேதகீதமும் விம்மிடவிரைகமழ் வாசப்
போதுசாந்தணி பூந்துகில்புனைந்தபுண் ணியம்போன்
மீதுபூஞ்சய னத்திருந்தவர்முன்பு மேவி. (௧௧அ௭)

ஆர்வமிக்கெழு மன்பினுன்மலரய னனைய
சீர்மறைத்தொழிற் சடங்குசெய்திருந்துநூன் முனிவர்
பார்வழிப்பட வருமிருவினைகளின் பந்தச்
சார்பொழிப்பவர் திருக்கையிற்காப்புநாண் சாத்த. (கஎஅஅ)

கண்டமாந்தர்கள் கடிமணங்காணவந் தணைவார்
கொண்டவல்வினைப் பரப்பவிழ்கொள்கைய வான
தொண்டர்சிந்தையும் வதனமுமலர்ந்தன சுருதி
மண்டுமாமறைக் குலமெழுந்தார்த்தன மகிழ்ந்தே. (கஎஅகூ)

நிரந்தகங்குலி னிதிமழைவிதிமுறை யெவர்க்கும்
புரந்தஞானசம் பந்தர்தாம்புன்னெறிச் சமய
வரந்தைவல்லிரு ளகலமுன்னவதரித் தாற்போற்
பரந்தபேரிரு ளிரந்துவந்தெழுந்தனன் பகலோன். (கஎகூ0)

அஞ்சிறைச்சுரும் பறைபொழிற்சண்பையாண் டகையார்
தஞ்சிவத்திரு மணஞ்செயத்தவஞ்செய்கா லென்று
மஞ்சனத்தொழில் புரிந்தெனமாசிருள் கழுவிச்
செஞ்சுடர்க்கெதிர் பேரணியணிந்தன திசைகள். (கஎகூக)

பரம்புதம்வயி னெங்கணுமுள்ளபல் வளங்க
ணிரம்பமுன்கொணர்ந் தெண்டிசையவர்நெருங் குதலாற்
றரங்கடந்தவர் தந்திருக்கல்லியா ணத்தின்
வரம்பிறன்பயன் காட்டுவதொத்தது வையம். (கஎகூஉ)

தங்கள்வாழ்வென வருந்திருஞானசம் பந்தர்
மங்கலத்திரு மணவெழுச்சியின்முழக் கென்னத்
துங்கவெண்டிரைச் சுரிவளையார்ப்பொடு சூழ்ந்து
பொங்குபேரொலி முழக்குடனெழுந்தது புணரி. (கஎகூஙு)

அளக்கரேழுமொன் றாமெனும்பெருமையெவ் வுலகும்
விளக்குமாமணி விழாவுடன்விரைந்துசெல் வனபோற்
றுளக்கில்வேதிய ராகுதிதொடங்கிடா முன்னம்
வளர்க்கும் வேதியில் வலஞ்சுழித்தெழுந்தது வன்னி. (கஎகூச)

சந்தமென்மலர்த் தாதணிநீறுமெய் தரித்துக்
கந்தமேவுவண் டொழுங்கெனுங்கண்டிகை பூண்டு
சிந்தைதூய வன்பர்களுடன்திரு மணம்போத
மந்தசாரியின் மணங்கொணர்ந்தெழுந்தது மருத்து. (கஎகூரு)

எண்டிசைத்திறத் தியாவரும் புகலிவந் தெய்தி
மண்டுமத்திரு மணவெழுச்சியினணி வாய்ப்பக்
கொண்டவெண்ணிறக் குரூஉச்சுடர்க்கொண்டல்க ளென்ன
வெண்டுகிற்கொடி நிரைத்ததுபோன்றது விசும்பு. (கஎகூசா)

ஏலவின்நலம் யாவையுமெழுச்சிமுன் காட்டுங்
காலசெய்வினை முற்றியகவுணியர் பெருமான்
மூலமாகிய தோணிமேன்முதல்வனை வணங்கிச்
சீலமார்திரு வருளினான்மணத்தின்மேற் செல்வார். (௧௧௯௭)

காழிமாநகர் வேதியர்குழாத்தொடுங் கலந்து
சூழுமன்பர்க ளேனையோர்துதைந்துமுன் செல்லப்
பாழிமாமறை முழங்கிடவளம்பதி வணங்கி
நீளவெண்சுடர் நித்திலச்சிவிகைமேற் கொண்டார். (௧௧௯௮)

ஆனவாகன மேறுவார்யாருமேல் கொள்ள
கானமாகிய தொங்கல்பிச்சங்குடைக் கவரி
மேனெருங்கிட விசும்பினுநிலத்தினு மெழுந்த
வானதுந்துமி முழக்குடன்மங்கல வியங்கள். (௧௧௯௯)

வே று.

சங்கொடு தாரைசின்னந் தனிப்பெருங் காளந்தாளம்
வங்கிய மேனைமற்று மலர்துளைக் கருவியெல்லாம்
பொங்கிய வொலியினோங்கிப் பூசுரர் வேதநாத
மெங்கணு மெழுந்துமல்கத் திருமண மெழுந்ததன்றே. (௧௨௦௦)

கோதையர் குழல்சூழ்வண்டின் குழாத்தொலி யொருபாற்கோல
வேதியர் வேதவாய்மை மிகுமொலி யொருபான்மிக்க
வேதமில் விபஞ்சிவீணை யாழொலி யொருபாலேத்து
நாதமங் கலங்கள்கீத நயப்பொலி யொருபாலாக. (௧௨௦௧)

விண்ணினை விழுங்கமிக்க வெண்டுகிற் பதாகைவெள்ளங்
கண்வெறி படைசெய்மிக்க கதிர்விரி கவரிக்கான
மண்ணிய மணிப்பூணீடு மாசன மலிந்தவெற்பி
னெண்ணிலா வண்ணத்தூசின் பொதிப்பரப் பெங்குநண்ண. (௧௨௦௨)

சிகையொடு மான்றோலுங்குங் கிடையுமா சானுஞ்செல்வார்
* புகைவிடும் வேள்விச்செந்தீ யில்லுடன் கொண்டுபோவார்
தகைவிலா விருப்பின்மிக்க பதிகங்கள் விளம்பிச்சார்வார்
○ வகையறு பகையுஞ்செற்ற மாதவ ரியல்பின்மல்க. (௧௨௦௩)

* வேள்விச்செந்தீ யில்லுடன் கொண்டுபோவார் என்னுமிவர்கள் நித்தியாகுதியுடனு மனைவியுடனும் வனத்திற்சென்று அம்மனைவி பணிவிடைசெய்யத் தவஞ் செய்துகொண்டிருக்கும் வானப்பிரஸ்தாச்சிரம முள்ளவர்கள். இல் என்பது-மனைவி.

○ வகையறு பகையென்னும்பதத்தை அறுவகைப் பகையென மாற்றிக்கொள்க.

அறுவகை விளங்குஞ்சைவத் தளவிலா விரதஞ்சாரு
நெறிவழி நின்றவேட நீடிய தவத்தினுள்ளோர்
மறுவறு மனத்திலன்பின் வழியினால் வந்தயோகக்
குறியிலே பெற்றதொண்டர் குழாங்குழா மாகியேக. (கஉ0ச)

விஞ்சைய ரியக்கர்சித்தர் கின்னரர் மிடைந்ததேவ
ரஞ்சன நாட்டவிட்டத் தரம்பைய ருடனுயுள்ளோர்
தஞ்சுடர் விமானமேறித் தழைத்தவா தரவினோடு
மஞ்சுறை விசும்பின்மீது மணவணி காணச்சென்றார். (கஉ0ரு)

மற்றிவர் மிடைந்துசெல்லு மங்கல வனப்பின்காட்சி
முற்றவித் தலத்தினுள்ளோர் மொய்த்துடன் படரும்போதி
லற்புத நிகழ்ச்சியெய்த வணிதலான் மணமேற்செல்லும்
பொற்பமை மணத்தின்சாயை போன்றுமுன் பொலியச்செல்ல.(கஉ0சு)

தவவர சாளவுய்க்குந் தனிக்குடை நிழற்றச்சாரும்
பவமறுத் தாளவல்லார் பாதமுள் ளத்துக்கொண்டு
புவனங்கள் வாழவந்த பூந்தராய் வேந்தர்போந்து
சிவனமர்ந் துறையும்நல்லூர்த் திருப்பெரு மணத்தைச்சேர்ந்தார். கஉ0எ

பெருமணக் கோயிலுள்ளார் மங்கலம் பெருகுமாற்றால்
வருமணத் திறத்தின்முன்னர் வழியெதிர் கொள்ளச்சென்று
திருமணம் புணரவெய்துஞ் சிரபுரச் செம்மலார்தா
மிருண்மறைத் திலங்குகண்டத் திறைவர்தங் கோயில்புக்கார். (கஉ0அ)

நாதனைப் பணிந்துபோற்றி நற்பொருட் பதிகம்பாடிக்
காதன்மெய் யருண்முன்பெற்றுக் கவுணியர் தலைவர்போந்து
வேதியர் வதுவைக்கோலம் புனைந்திட வேண்டுமென்னப்
பூதநா யகர்தங்கோயிற் புறத்தொரு மடத்திற்புக்கார். (கஉ0கூ)

பொற்குட நிறைந்தவாசப் புனிதமஞ் சனநீராட்டி
விற்பொலி வெண்பட்டாடை மேதக விளங்கச்சாத்தி
நற்றிரு வுத்தரீய நறுந்துகில் சாத்திநானப்
பற்பல கலவைச்சாந்தம் பான்மையி னணிந்தபின்னர். (கஉக0)

திருவடி மலர்மேற்பூத்த செழுநகைச் சோதியென்ன
மருவிய தரளக்கோவை மணிச்சரி யணையச்சாத்தி
விரிசுடர்ப் பட்டின்மீது விளங்குபொற் சரட்டிற்கோத்த
பெருகொளி முத்தின்றாமம் பிறங்கிய தொங்கல்சாத்தி. (கஉகக)

தண்சுடர்ப் பரியமுத்துத் தமனிய நாணிற்கோத்த
கண்கவர் கோவைப்பத்திக் கதிர்க்கடி சூத்திரத்தை
வெண்சுடர்த் தரளமாலை விரிசுடர்க் கொடுக்கின்மீது
வண்டிரு வனாயினிடு வனப்பொலி வளரச்சாத்தி. (கஉகஉ)

ஒளிகதிர்த் தரளக்கோவை யுதரபந் தனத்தின்மீது
தளியொளி துளும்புமுத்தின் சனனவீ ரத்தைச்சாத்திக்
குளிர்நில வெறிக்குமுத்தின் பூணநூற் கோவைசாத்தி
நளிர்கதிர் முத்துமாலை நற்சுட ராரஞ்சாத்தி. (கஉகங)

வாள்விடு வயிரக்கட்டு மணிவிர லாழிசாத்தித்
தாளுறு தடக்கைமுத்தின் றண்டை யு நாணுஞ்சாத்தி
நீளொளி முழங்கைப்பொட்டு நிரைசுடர் வடமுஞ்சாத்தித்
தோள்வளைத் தரளப்பைம்பூண் சுந்தரத் தோண்மேற்சாத்தி. (கஉகச)

திருக்கழுத் தாரந்தெய்வக் கண்டிகை மாலைசேரப்
பருத்தமுத் தொழுங்குகோத்த படரொளி வடமுஞ்சாத்திப்
பெருக்கிய வனப்பின்செவ்வி பிறங்கிய திருவார்காதில்
வருக்கவெண் டரளத்தொத்தின் வடிக்குழை விளங்கச்சாத்தி. (கஉகரு)

நீற்றொளி தழைத்துப்பொங்கி நிறைதிரு நெற்றிமீது
மேற்பட விரிந்தசோதி வெண்சுட ரெழுந்ததென்னப்
பாற்படு முத்தின்பாரப் பனிச்சுடர்த் திரளைசாத்தி
யேற்பவைத் தணிந்தமுத்தி னெழில்வளர் மகுடஞ்சேர்த்தார். (கஉகசு)

இவ்வகை நம்மையாளு மேர்வளர் தெய்வக்கோலங்
கைவ்வினை மறையோர்செய்யக் கடிகொள்செங் கமலத்தாதின்
செவ்விநீ டாமமார்பர் திருவடை யாளமாலை
யெவ்வுல கோருமேத்தத் தொழுதுதா மெடுத்துப்பூண்டார். (கஉகஎ)

அழகினுக் கணியாம்வெண்ணீ றஞ்செழுத் தோதிச்சாத்திப்
பழகிய வன்பர்சூழப் படரொளி மறுகிலெய்தி
மழவிடை மேலோர்தம்மை மனங்கொள வணங்கிவந்து
முழவொலி யெடுப்பமுத்தின் சிவிகைமேல் கொண்டபோது. (கஉகஅ)

எழுந்தன சங்கநாத மியம்பின வியங்களெங்கும்
பொழிந்தன விசும்பில்விண்ணோர் கற்பகப் புதுப்பூமாரி
தொழுந்தகை முனிவர்தொண்டர் சுருதியின் வாழ்த்துப்பொங்கி
வழிந்தன திசைகண்மீது மலர்ந்தன வுலகமெல்லாம். (கஉகக)

படர்பெருந் தொங்கல்பிச்சம் பைங்கதிர்ப் பீலிப்பந்த
ரடர்புனை செம்பொற்பாண்டி லணிதுகிற் சதுக்கமல்குக்
கடலின்மீ தெழுந்துநிற்குங் கதிர்நிறை மதியம்போல
வடநிரை யணிந்தமுத்தின் மணிக்குடை நிழற்றவந்தார். (கஉஉ0)

சீரணி தெருவினூடு திருமணஞ் செல்லமுத்தி
னேரணி காளஞ்சின்ன மிலங்கொளித் தாரையெல்லாம்
பேரொலி பெருகமுன்னே பிடித்தன மறைகளோடு
தாரணி யுய்யஞான சம்பந்தன் வந்தானென்று. (கஉஉக)

மண்ணினுக் கிடுக்கண்டீர வந்தவர் திருக்ரமங்க
ளெண்ணில பலவுமேத்திச் சின்னங்க ளெழுந்தபோதவ்
வண்ணலார் வதுவைசெய்ய வலங்கரித் தணையப்பெற்ற
புண்ணிய மறையோர்மாட மங்கலம் பொழிந்துபொங்க. (௧௨௨௨)

முற்றுமெய்ஞ் ஞானம்பெற்ற மூர்த்தியார் செங்கைபற்ற
நற்பெருந் தவத்தினீர்மை நலம்படைத் தெழுந்ததெய்வக்
கற்பகப் பூங்கொம்பன்னார் தம்மையுங் காப்புச்சேர்த்துப்
பொற்புறு சடங்குமுன்னர்ப் புரிவுடன் செய்தவேலை. (௧௨௨௩)

செம்பொன்செய் வாசிச்சூட்டுந் திருமணிப் புனைபூண்செல்வப்
பைம்பொனின் மாலைவேய்ந்த பவளமென் கொடியொப்பாரை
நம்பன்ற னருளேவாழ்த்தி நல்லெழில் விளங்கச்சூட்டி
யம்பொன்செய் தீபமென்ன வழகலங் கரித்துவைத்தார். (௧௨௨௪)

மாமறை மைந்தரெல்லா மணத்தெதிர் சென்றுமன்னுந்
தூமலர்ச் செம்பொற்சுண்ணந் தொகுநவ மணியும்வீசித்
தாமரை மலரோன்போல்வா ரரசிலை தருப்பைதோய்ந்த
காமர்பொற் கலசநன்னீ ரிருக்குடன் கலந்துவீச. (௧௨௨௫)

விண்ணவர் மலரின்மாரி விசும்பொளி தழைப்பவீச
மண்ணக நிறைந்தகந்த மந்தமா ருதமும்வீசக்
கண்ணொளி விளக்கமிக்கார் காமர்தோ ரணங்களூடு
புண்ணிய விளைவுபோல்வார் பூம்பந்தர் முன்புசார்ந்தார். (௧௨௨௬)

பொன்னணி சங்கின்வெள்ளம் பொலிவுடன் முழங்கியார்ப்ப
மன்னிய தாளப்பத்தி வளர்மணிச் சிவிகைநின்றும்
பன்மலர் நறும்பொற்சுண்ணம் பரந்தபா வாடைமீது
முன்னிழிந் தருளிவந்தார் மூவுல கேத்தவந்தார். (௧௨௨௭)

மறைக்குல மனையில்வாழ்க்கை மங்கல மகளிரெல்லா
நிறைத்தநீர்ப் பொற்குடங்க ணிரைமணி விளக்குத்தூப
நறைக்குல மலர்சூழ்மாலை நறுஞ்சுடர் முளைப்பொற்பாண்டி
லுறைப்பொலி கலவையேந்தி யுடனெதி ரேற்றுநின்றார். (௧௨௨௮)

ஆங்குமுன் னிட்டசெம்பொ னணிமணிப் பீடந்தன்னி
லோங்கிய ஞானவெள்ள முண்ணிறைந் தொழுவதென்னத்
தாங்கிய முத்தின்பைம்பூண் டண்ணிலா வெறிப்பவேறிப்
பாங்கொளி பரப்பிநின்றார் பரசம யங்கள்வீழ்த்தார். (௧௨௨௯)

எதிர்வர வேற்றசாய லிளமயி லனையமாதர்
மதுரமங் கலமுன்னை வாழ்த்தொலி யெடுப்பவந்து
கதிர்மணிக் கரகவாசக் கமழ்புன லொழுக்கிக்காதல்
விதிமுறை வலங்கொண்டெய்தி மேவுநல் வினைகள்செய்தார். (௧௨௩௦)

மங்கலம் பொலியவேந்தி மாதரார் முன்புசெல்லக்
கங்கையின் கொழுந்துசெம்பொ னிமவரை கலந்ததென்ன
வங்கவர் செம்பொன்மாடத் 0 தாதிபூ மியினுட்புக்கா
ரெங்களை வாழமுன்னு ளேடுவை கையினுளிட்டார். (கஉ௲க)

அகினறுங் தூபம்விம்மி யணிகிளர் மணியால்வேய்ந்த
துகில்புனை விதானநீழற் றூமலர்த் தவிசின்மீது
நகிலணி முத்துமாலை நகைமுக மடவார்வாழ்த்த
தகலில்சீர் மறையோர்சூழ வினிதினங் கிருந்தவேலை. (கஉ௲உ)

திருமகட் கொடுக்கப்பெற்ற செழுமறை முனிவர்தாமு
மருமையான் முன்செய்மெய்ம்மை யருந்தவ மனைவியாரும்
பெருமகிழ்ச் சியினுற்பாதம் விளக்குவார் பிள்ளையார்மு
னுரிமையால் வெண்பாற்றூநீ ருடனெடுத் தேந்திவந்தார். (கஉ௲௲)

வந்துமுன் னெய்தித்தாமுன் செய்தமா தவத்தினன்மை
நந்துநம் பாண்டார்நம்பி ஞானபோ னகர்பொற்பாதங்
கந்தவார் குழலினுர்பொற் கரகநீ ரெடுத்துவார்ப்பப்
புந்தியா னினைதியானம் புரிசடை யானென்றுன்னி. (சஉ௲ச)

விருப்பினுல் விளக்கிமிக்க புனிதநீர் தலைமேற்கொண்டு
பொருப்புறு மாடத்துள்ளும் புறத்துள்ளுந் தெளித்தபின்ன
ருருப்பொலி யுதரத்துள்ளும் பூரித்தா ருவகைபொங்கி
யருப்புறு கிளைஞர்மேலுந் தெளித்தன ரார்வத்தோடும். (கஉ௲ரு)

பெருகொளி ஞானமுண்ட பிள்ளையார் மலர்க்கைதன்னின்
மருவுமங் கலநீர்வாசக் கரகமுன் னேந்திவார்ப்பார்
தருமறைக் கோத்திரத்தின் றங்குலஞ் செப்பியன்ற
னருநிதிப் பாவையாரைப் பிள்ளையார்க் களித்தேனென்றூர். (கஉ௲சு)

நற்றவக் கன்னியார்கை ஞானசம் பந்தர்செங்கை
பற்றுதற் குரியபண்பிற் பழுதினற் பொழுதுநண்ணப்
பெற்றவ ருடன்பிறந்தார் பெருமணப் பிளளையாரைச்
சுற்றமுன் சூழ்ந்துபோற்றக் கொண்டுமுன் றுன்னினுர்கள். (கஉ௲எ)

ஏகமாஞ் சிவமெய்ஞ்ஞான மிசைந்தவர் வலப்பாலெய்தி
நாகமார் பணப்பேரல்கு னற்றவக் கொழுந்தனுரை
மாகமார் சோதிமல்க மன்னிவீற் றிருந்தவெள்ளை
மேகமோ டிசையுமின்னுக் கொடியென விளங்கவைத்தார். (கஉ௲அ)

புனிதமெய்க் கோலநீடு புகலியார் வேந்தர்தம்மைக்
குனிசிலைப் புருவமென்பூங் கொம்பனு ருடனேகூட
நனிமிகக் கண்டபோதி னல்லமங் கலங்கள்கூறி
மனிதருந் தேவரானுர் கண்ணிமை யாதுவாழ்த்தி. (கஉ௲கூ)

---

0 ஆதிபூமி-என்பது விவாகஞ்செய்யுமிடம்.

பத்தியிற் குயிற்றும்பைம்பொற் பவளக்காற் பந்தர்நாப்பண்
சித்திர விதானத்தின்கீழ்ச் செழுந்திரு நீலநக்கர்
முத்தமிழ் விரகர்முன்பு முதன்மறை முறையினோடு
மெய்த்தநம் பெருமான்பாத மேவுமுள் ளத்தாற்செய்ய. (கஉசo)

மறையொலி பொங்கியோங்க மங்கல வாழ்த்துமல்க
நிறைவளைச் செங்கைபற்ற நேரிழை யவர்முனந்தப்
பொறையணி முந்நூன்மார்பர் புகரில்வெண் பொரிகையட்டி
யிறைவரை யேத்தும்வேலை யெரிவலங் கொள்ளவேண்டி. (கஉசக)

அருப்புமென் முலையினார்த மணிமலர்க் கைப்பிடித்தங்
கொருப்படு முடையபிள்ளை யார்திரு வுள்ளந்தன்னில்
விருப்புறு மங்கிபாவார் விடையுயர்த் தவரேயென்று
திருப்பெரு மணத்தைமேவுஞ் சிந்தையிற் றெளிந்துசெல்வார். (கஉசஉ)

மந்திர முறையாலுய்த்த வெரிவல மாகமாதர்
தந்திருக் கையைப்பற்றுந் தாமரைச் செங்கையாள
ரிந்தவில் லொழுக்கம்வந்து சூழ்ந்ததே யிவடன்னோடு
மந்தமில் சிவன்றாள்சேர்வ னென்னுமா தரவுபொங்க. (கஉசந)

மலர்பெருங் கிளையுந்தொண்டர் கூட்டமு மல்கிச்சூழ
வலகின்மெய்ஞ் ஞானத்தெல்லை யடைவுறுங் குறியாலங்க
ணுலகினெம் மருங்குநீங்க வுடனணைந் தருளவேண்டிக்
குலமணம் புரிவித்தார்தங் கோயிலை நோக்கிவந்தார். (கஉசச)

சிவனமர்ந் தருளுஞ்செல்வத் திருப்பெரு மணத்துளெய்தித்
தவநெறி வளர்க்கவந்தார் தலைப்படுஞ் சார்புநோக்கிப்
பவமற வென்னைமுன்னா ளாண்டவப் பண்புகூட
நவமலர்ப் பாதங்கூட்டு மென்னுநல் லுணர்வுநல்க. (கஉசரு)

காதன்மெய்ப் பதிகநல்லூர்ப் பெருமண மெடுத்துக்கண்டோர்
தீதறு பிறவிப்பாசந் தீர்த்தல்செம் பொருளாக்கொண்டு
நாதனே நல்லூர்மேவும் பெருமண நம்பனேயுன்
பாதமெய்ந் நீழல்சேரும் பருவமீ தென்றுபாட. (கஉசசு)

---

நல்லூர்ப்பெருமணம்-பண்-அந்தாளிக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணம் சூட லரோதொண்டர்
நல்லூர்ப் பெருமண மேய நம்பானே.

நறும்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
யுறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவ மவமி லாரே.

திருச்சிற்றம்பலம்.

---

தேவர்கள் தேவர்தாமுந் திருவருள் புரிந்துநீயும்
பூவையன் னாளுமிங்குன் புண்ணிய மணத்தின்வந்தார்
யாவரு மென்பாற்சோதி யிதனுள்வந் தெய்துமென்று
மூவுல கொளியால்விம்ம முழுச்சுடர்த் தாணுவாகி. (கஉசஎ)

கோயிலுட் படமேலோங்குங் கொள்கையாற் பெருகுஞ்சோதி
வாயிலை வகுத்துக்காட்ட மன்னுசீர்ப் புகலிமன்னர்
பாயின வொளியானீடு பரஞ்சுடர்த் தொழுதுபோற்றி
மாயிரு ஞாலமுய்ய வழியினை யருளிச்செய்வார். (கஉசஅ)

ஞானமெய்ந் நெறிதான்யார்க்கும் நமச்சிவா யச்சொலாமென்
றானசீர் நமச்சிவாயத் திருப்பதி கத்தையங்கண்
வானமு நிலனுங்கேட்க வருள்செய்திம் மணத்தில்வந்தோர்
ஈனமாம் பிறவிதீர யாவரும் புகுகவென்ன. (கஉசகு)

---

நமச்சிவாயப்பதிகம்-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
யோதுவார்தமை நன்னெறிக் குய்ப்பதும்
வேதநான்கினு மெய்ப்பொரு ளாவதும்
நாதநாம நமச்சி வாயவே.

நந்திநாம நமச்சி வாயவெனுஞ்
சந்தையாற்றமிழ் ஞானசம் பந்தன்சொற்
சிந்தையால்மகிழ்ந் தேத்தவல் லார்கள்மேற்
பந்தபாச மறுக்கவல் லார்களே.

திருச்சிற்றம்பலம்.

---

வருமுறைப் பிறவிவெள்ளம் வரம்புகா ணாதழுந்தி
யுருவெனுந் துயரக்கூட்டி லுணர்வின்றி மயங்குவார்க
டிருமணத் துடன்சேவித்து முன்செலுஞ் சிறப்பினாலே
மருவிய பிறவிநீங்க மன்னுசோ தியினுட்புக்கார். (கஉ௫0)

வேறு.

சீர்பெருகு நீலநக்கர் திருமுருகர் முதற்றொண்ட
ரேர்கெழுவு சிவபாத விரதயர்நம் பாண்டார்சி
ரார்திருமெய்ப் பெரும்பாணர் மற்றெனையோ ரணைந்துளோர்
பார்விலவு கிளைசூழப் பன்னிகளோ டுடன்புக்கார். (கஉடுக)

அணிமுத்தின் சிவிகைமுத லணிதாங்கிச் சென்றோர்கள்
மணிமுத்த மாலைபுனை மடவார்மங் கலம்பெருகும்
பணிமுற்று மெடுத்தார்கள் பரிசனங்கள் வினைப்பாசந்
துணிவித்த வுணர்வினராய்த் தொழுதுடன்புக் கொடுங்கினார். (கஉடுஉ)

ஆறுவகைச் சமயத்தி லருந்தவரு மடியவருங்
கூறுமறை முனிவர்களுங் கும்பிடவந் தணைந்தாரும்
வேறுதிரு வருளினால் வீடுபெற வந்தாரு
மீறில்பெருஞ் சோதியினு ளெல்லாரும் புக்கதற்பின். (கஉடுங)

காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலங் கொண்டருளித்
தீதகற்ற வப்பொழுது, திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியத னுட்புகுவார்
போதநிலை முடிந்தவழி புக்கொன்றி யுடனானார். (கஉடுச)

பிள்ளையா ரெழுந்தருளிப் புக்கதற்பின் பெருங்கூத்தர்
கொள்ளநீ டியசோதிக் குறிநிலையவ் வழிகரப்ப
வள்ளலார் தம்பழைய மணக்கோயில் தோன்றுதலுந்
தெள்ளுநீ ருலகத்துப் பெற்றிலார் தெருமந்தார். (கஉடுரு)

கண்ணுதலார் திருமேனி யுடன்கூடக் கவுணியனார்
நண்ணியது தூரத்தே கண்டுநனு கப்பெறு
விண்ணவரு முனிவர்களும் விரிஞ்சனே முதலானோ
ரெண்ணியவ ரேசறவு தீரவெடுத் தேத்தினார். (கஉடுசா)

அருந்தமிழா கரர்சரிதை யடியேனுக் கவர்பாதந்
தரும்பரிசா லறிந்தபடி துதிசெய்தேன் றாணிமேற்
பெருங்கொடையுந் திண்ணனவும் பேருணர்வுந் திருத்தொண்டால்
வருந்தகைமைக் கலிக்காம னார்செய்கை வழுத்துவேன். (கஉடுஎ)

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப்பெயரையுடைய சீர்காழியிலே, பிராமணகுலத்திலே, வேதங்களிலே மகா... ...ணசம்பந்தமூர்த்தி... ...டைய கௌணியர் கோத்திரத்திலே, சிவபாதவிருதயரெ.

இருந்தார். அவர்மனைவியார் கற்பிலே தமக்கு உயர்வொப்பில்லாத பக
வதியாரென்பவர். அவ்விருவருடைய தாய்மரபு தந்தைமரபு என்னும
இருமரபுஞ் சைவநெறி வழிவந்தனவேயாம். அவர்கள், அநாதிமலமுத்
தபதியாகிய பரமசிவனையேயன்றி, அவிவேகிகளாலே பதிகளெனத் திரி
த்துணரப்பட்ட பசுக்களைத் தெய்வமென்று கருதாத மெய்யறிவினையும்
உண்மாசைநீக்கும் பெருமையையுடையதென்று வேதசிரசுகளாகிய உப
நிடதங்களினாலே உணர்த்தப்பட்ட அருமருந்தாகிய விபூதிமேல் வைத்த
பேரன்பைப் பரிபாலிக்குந் தன்மையையும் உடையர்களாகி, இல்லறத்
திலே சிறந்து வாழ்ந்திருந்தார்கள்.

அப்படியிருக்கும்பொழுது, சிவகாருண்ணியமே திரண்டு ஒரு
வடிவெடுத்தாற்போல விளங்குகின்ற சிவபாதவிருதயர், தமிழ் நாடெங்
குஞ் சமணரும் பௌத்தருமாகிய இவ்விருவகைப்பதிதர்கள் போதிக்
குந் துர்ப்போதனையினாலே அவர்கள் அநுட்டிக்கின்ற கபடமார்க்கமாகிய
ஆருகதமும் பௌத்தமுமே பெருக, அதிபரமாப்தராகிய சிவபெருமான்
அருளிச்செய்த வேதசிவாகமங்களால் உணர்த்தப்...நின்ற சற்சமயமாகிய
சைவசமயம் அருகி, விபூதிசாதன விளக்கங் குன்றிசாலாமை...ண்டு, கவலை
கொண்டு, நிகழ்காலத்தும் எதிர்காலத்துமுள்ள ...ர்ண மாக்களும் உய்
தல்வேண்டுமென்பதைத் திருவுளத்தடைத்து, ஒரு திவ்விய புத்திரரைப்
பெறல்வேண்டுமென்னும் பேராசையினாலே, இல்லறத்திலிருந்துகொண்
டே சர்வாபீஷ்டவரதராகிய தோணியப்பரையும் பெரியநாயகியாரையும்
நோக்கி, பரசமயநிராகரணம்பண்ணிச் சைவசமயஸ்தாபனஞ்செய்ய வல்
ல உயர்வொப்பில்லாத ஒரு சற்புத்திரரைப் பெறும்பொருட்டு, மிகுந்த
அன்பினோடு தவஞ்செய்தார். அங்ஙனஞ்செய்த தபோபலம்பற்றி,
தோணியப்பருடைய பெருங்கருணையினாலே, உலகமெல்லாம் உய்யும்
படி, பகவதியாருடைய அருமைத் திருவயிற்றிலே, கர்ப்போற்பத்தியா
கிய பெரும்பேறு உளதாயிற்று. சிவபாதவிருதயர் அதனை உணர்ந்து,
திருவருளைத் துதித்து, மூளுகின்ற மகிழ்ச்சியோடு, தங்கள் வேதவிதிப்
படி செய்யவேண்டுஞ் சடங்குகளைப் பத்துமாசங்களினும் சுற்றத்தார்க
ளோடு சிறக்கச் செய்து, பேரின்பத்தை நுகரு நாளிலே; சூரியன்முதலிய
கிரகங்கள் உச்சங்களிலே மிக்கவலியுடன் நிற்க, திவ்வியலக்கினம் எழ,
திருவாதிரைநக்ஷத்திரத்திலே, பரசமயத்தருக்கு நீங்கவும், வைதிகமார்க்
கமும் சைவமார்க்கமுந் தழைத்தோங்கவும் பிராமணர்களுடைய ஆகுதி
...ள் பெருகவும், எம்மொழிகளினுந் தமிழ்மொழியே உயர்ச்சியடையவும்,
வ...வுலகங்களுள்ளே... பூலோகமும் அப்பூலோகத்துள் பலநாடுகளுள்
யுஞ்...ழ்நாடுமே சிறக்கவும், பிள்ளையார் திருவவதாரஞ்செய்தருளினார்.
...தகர்மம், நாமகரணம், அன்னப்பிராசனம், ...சௌளம் என்
டிருமணத் ... கள் உரிய காலங்களிலே மிகுந்த சிறப்போடு செய்யப்
மருவிய பிற...

பிள்ளையார், மூன்றும் ஆண்டிலே, தம்முடைய தந்தையாராகிய சிவபெருமான் தம்மைச் சிவபாதவிருதயருக்குப் புத்திரராகக்கொடுக்க அவரைப் பிரிந்தமையால், ஒரோர்கால் அப்பிரிவு உள்ளத்திற்றோன்ற வெருக்கொண்டாற்போலக் குறிப்பயிலாய் அழுவர். இங்ஙனநிகழுநாளிலே, வேறொருநாள், தந்தையாராகிய சிவபாதவிருதயர் ஸ்நானம்பண்ணுதற்குப் போம்பொழுது, பிள்ளையார், பரமசிவனுடைய திருவருள் கூட, அவரைத் தொடர்ந்து அழுதுகொண்டு பின்சென்றார். பின்சென்ற பிள்ளையாரைத் தந்தையார் திரும்பிப் பார்த்து. கோபமுடையவர்போல விலக்குதலும், பிள்ளையார் கால்கொட்டி மீளாராக; தந்தையார் "உன்செய்கை இது வாயில் வா" என்று, கொண்டு சென்று, ஆலயத்தினுள்ளிருக்கின்ற தீர்த்தத்தை அடைந்து, அப்பிள்ளையாரைக் கரையிலே வைத்துவிட்டு, தாங் தீர்த்தத்தினுள்ளே இறங்கி நின்றுகொண்டு சங்கற்பம் அகமருஷணசூக்தபடனமுதலியன செய்தார். அப்பொழுது பிள்ளையார் பார்த்துக்கொண்டிருந்தார். பின்பு தந்தையார் ஸ்நானம பண்ணும்பொழுது, பிள்ளையார் அவரைக்காணாது இறையளவாயினுந் தரியார் என்னும் நிலைமை தலைக்கீடாக, பரமசிவனுடைய திருவடிகளை வழிபட்ட முன்னுணர்ச்சி மூள, கரையினின்று கண்களைக் கண்ணீர் ததும்பும்படி கைகளினாலே பிசைந்து, அதரந்துடிக்க, எவ்வுலகங்களும் குதூகலிக்க, பொருமி அழுதார். தம்முடைய முற்சார்பை அறிந்தோ, பிள்ளைமையானோ, சுவாமியுடைய திருத்தோணிச்சிகரத்தைப் பார்த்து, "அம்மே அப்பா" என்று அழைத்தழைத்து அழுதார். அப்பொழுது சுத்தசாட்குண்ணிய பரிபூரணராகிய தோணியப்பர் அவருடைய முற்றிருத்தொண்டை நினைந்து, அவருக்கு அருள்செய்தற்குத் திருவுளங்கொண்டு பார்வதிதேவியாரோடும் இடபாரூடராய் எழுந்தருளி, தீர்த்தக்கரையை அடைந்து, உலகமாதாவாகிய உமாதேவியாரை நோக்கி, "உன்னுடைய முலைப்பாலைப் பொன்வள்ளத்திலே கறந்து இவனுக்கு ஊட்டு" என்று அருளிச்செய்தார். பரிபக்குவர்களாகிய ஆன்மாக்களிடத்திலே சகசமாயுள்ள மலத்தை நீக்கி அவர்களைச் சிவத்தோடு இரண்டறக் கலப்பித்தருளும் பராசத்தியாகிய உமாதேவியார் சென்றணைந்து, தம்முடையதிருமுலைப்பாலைப் பொன்வள்ளத்திலே கறந்து, சிவஞானத்தைக் குழைத்து பிள்ளையாருடைய கண்ணீரைத் துடைத்து, கையிலே கொடுத்து ஊட்ட, சிவபெருமான் அழுகை தீர்த்து அநுக்கிரகஞ் செய்தருளினார். அப்பிள்ளையார் சருவான்மாக்களுக்கும் பரமபிதாமாதாக்களாகிய சிவன் சத்தி இருவராலும் ஆளப்பட்டமையினாலே ஆளுடைய பிள்ளையார் என்னும் பெயரும், அரிபிரமேந்திராதிதேவர்களுக்கும் முனிவர்களுக்கும் எட்டாத சிவஞானத்தோடு சம்பந்தஞ்செய்தலினாலே திருஞானசம்பந்தமூர்த்தி என்னும் பெயரும் உடையாராயினார்.

சிவபாதவிருதயர் சிறிதுபொழுதிலே தம்முடைய நியமங்களை முடித்துக்கொண்டு கரையிலேறி, பரஞானக்கண்ணினாலே சிவத்தைத் தரிசித்து அதில் அதீதப்பட்டுநின்ற ஆளுடையபிள்ளையாரை நோக்கி, "நீயார் தந்த பாலை உண்டாய்" என்று கோபித்து, "எச்சில் மயங்க உனக்கு இதனைத் தந்தவரைச் காட்டு" என்று சொல்லி, கையில் எடுத்த ஒருசிறிய மாறுகொண்டோச்ச; பிள்ளையார் ஆனந்தபாஷ்பஞ்சொரிய, உச்சியின்மேல் எடுத்தருளிய ஒரு திருக்கைவிரலினாலே சுட்டி, ஆகாயத்திலே இடபாரூடராகி உமாதேவியாரோடு நின்றருளிய பரமசிவனைக் காட்டி, உள்ளே நிறைந்து எழுந்த சத்தியஞானத்திருமொழியினாலே, எல்லையில்லாத வேதத்தினுட்சிறந்த தாற்பரியங்களெல்லாவற்றையும் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டுத் தமிழினாலே திருவாய்மலர்ந்தருளுதற்குத் திருவுளங்கொண்டு, அவ்வேதத்திற்கு ஆதியாகிய அக்ஷரத்தை மெய்யொடு புணர்த்தி, தம்முடைய பாடல் சிவபெருமானுடைய திருச்செவியில் ஏறும்பொருட்டு முன்னர் அத்திருச்செவியையே சிறப்பித்து, "தோடுடைய செவி யன்விடையேறியோர் தூவெண் மதிசூடிக்—காடுடை யசுடலைப் பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வ—னேடுடை யமல ரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த—பீடுடையபிர மாபுர மேவிய பெம்மானிவனன்றே" என்று பாடத்தொடங்கியருளினார். சிவபெருமான் தமக்குப் பிழைசெய்த ஆன்மாக்களும் பின் தம்மை வந்தடையின் அவர்களுக்கு அநுக்கிரகஞ் செய்வாரென்பதை விளக்கும்பொருட்டு, தம்மை மதியாமல் தாம் வீற்றிருக்கின்ற திருக்கைலாசத்தை எடுத்துத் தன்வலியிழந்த இராவணன் பின் தம்மேல் இசைபாட அவனுக்கு அருள்புரிந்த திறத்தை எட்டாந்திருப்பாட்டிலும், எவ்வகைப்பட்ட சிறப்பினரும் சிவபெருமானை அன்போடு வழிபடினன்றி அவரை அடையார்கள் என்பதை விளக்கும்பொருட்டு, சிவபெருமான் தம்மை வணங்குகின்றவர்களுக்கே அருள்செய்வரென நினைந்து அவரை வணங்காது வழுவாகிய மானத்தை மேற்கொண்டு மயங்கிய பிரம விட்டுணுக்கள் இழிவாகிய பன்றியும் அன்னமுமாய்த் தேடியும் அடையாதவர்களாகிப் பின்பு திருவைந்தெழுத்தைத் துதித்தே உய்ந்த திறத்தை ஒன்பதாந் திருப்பாட்டிலும், வேதகாரணராகிய கடவுளை அடையுநெறியை அறிந்து உய்யாத சமணரும் புத்தருமாகிய கையர்களுடைய சமயங்கள் கபடமார்க்கங்கள் என்னுந்திறத்தைப் பத்தாந்திருப்பாட்டிலும், அமைத்துப் பாடியருளினார். இங்ஙனந்திருப்பதிகத்தை நிறைவித்து, திருக்கடைக்காப்புச்சாத்தித் தொழுதுகொண்டு நின்றார். சிவபெருமானுடைய பெருங்கருணையைக் கண்டு ஆகாயத்திலே தேவர்களெல்லாரும் புஷ்பமழை பொழிந்தார்கள். சிவபெருமான் தேவதுந்துபிகள் முழங்க, கந்தருவர்களும் கின்னரர்களும் கீதவொலிசெய்ய, அரிபிரமேந்திராதி தேவர்களெல்லாருஞ் ஸ்தோத்திரம் பண்ண, சிவகணநாதர்கள் ஹரஹர என்று சொல்லும்மா[illegible] தலைக்க

முனிவர்கள் வேதகோஷத்தோடு பக்கத்திலே சூழ, பார்வதியாரோடு திருத்தோணிக்கு எழுந்தருளினார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அதைக்கண்டு, அவரைத் தொடர்ந்து எழுகின்ற அன்புமேலீட்டினாலே, தம்முடைய கண்வழியே சென்ற கருத்து நீங்காமற் கலந்து செல்ல, சிவபிரான் எழுந்தருளிய திருக்கோயிலினுள்ளே பிரவேசித்தார். அநந்த கோடி சிவபுண்ணியங்களைச்செய்து அப்பிள்ளையாருக்குப் பிதாவாயிருக்கப் பெற்றுக்கொண்ட சிவபாதவிருதயர் கைகுவித்து ஆனந்தக்கூத்தாடி, வெருட்சியும் வியப்பும் விருப்பும் அடைந்து, அவர் திருவாய் மலர்ந்தருளிய திருநெறித் தமிழின்பொருளை உணர்ந்தார். பரமசிவனைத் தனியே கண்டு தொடர்ந்த பிள்ளையாரைப்போலக் காணப்பெற்றிலராயினும், அங்கு நிகழ்ந்த அற்புதத்தைக் கண்டு, அதுதோணியப்பருடைய திருவருளெனத் துணிந்து, பேரானந்தத்தோடும் முன்சென்ற பிள்ளையாருக்குப் பின் சென்றார். அப்பொழுது அங்கே நிகழ்ந்ததைக் கேள்வியுற்ற பிராமணர்களெல்லாரும் உரோமப்புளகங்கொண்டு, "இதற்கு ஒப்பாகிய அற்புதம் எங்கே நிகழ்ந்தது" என்று சொல்லிக்கொண்டு, திருக்கோயில்வாயிற்புறத்திலே வந்துசூழ்ந்தார்கள். பிள்ளையார் திருத்தோணியில் வீற்றிருந்தருளிய சிவபிரானை அடைந்து திருப்பதிகம் பாடி, திருக்கோயிலினின்றும் புறப்பட்டார். அது கண்ட பிராமணர்களும் மற்றையோர்களும் எதிர்கொண்டுவந்து நின்று, தோத்திரம்பண்ணி, பூமியிலே விழுந்து அவருடைய திருவடிகளை நமஸ்கரித்து எழுந்தார்கள். சிவபாதவிருதயர் பிள்ளையாரை எடுத்து, தோளின் மேலே வைத்துக்கொண்டு, மங்கலவாத்தியங்கள் ஒலிக்க, பிராமணர்கள் வேதகோஷஞ்செய்ய, சிவனடியார்களெல்லாரும் ஸ்தோத்திரம்பண்ண, சீர்காழியை வலஞ்செய்துகொண்டு, தம்முடைய திருமாளிகையை அடைந்தார்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார், மற்றநாள் பிராதக்காலத்திலே ஆலயத்திற்சென்று, தம்முடைய பிதாமாதாக்களாகிய பரமசிவனையும் பார்வதியாரையும் வணங்கித் துதித்து, அருள் பெற்று, திருக்கோலக்காவென்னுந் திருப்பதியை அடைந்து, திருக்கோயிலை வலஞ்செய்து முன்னின்று, கையினாலே ஒத்தறுத்துத் திருப்பதிகம் பாடத்தொடங்கினார். பாடும்பொழுது, சிவபெருமானுடைய திருவருளினாலே ஸ்ரீபஞ்சாக்ஷரம் எழுதப்பட்டிருக்கின்ற பொற்றாளம் உலகமெல்லாம் உய்யும்படி பிள்ளையாருடைய திருக்கரத்தே வந்திருந்தது. பிள்ளையார் அதைக் கண்டு, திருவருளை வியந்து, களிகூர்ந்து, ஏழிசையும் தழைத்தோங்க, திருப்பதிகத்தைப் பாடிமுடித்து, திருக்கடைக் காப்புச்சாத்தினின்றார். அவர் பாடும்பொழுதிலே விண்ணுலகமும் அதிசயிக்கும்படி ஓங்கிய அதிமதுரநாதத்தை நோக்கித் தும்புரு நாரதர் முதலாகிய சங்கீ

தவித்துவான்கள் ஸ்தோத்திரஞ்செய்து, புஷ்பமாரி பொழிந்தார்கள். வேதசிவாகமங்கள் வாழும்படி திருவவதாரஞ் செய்தருளிய பிள்ளையார் மீண்டு சீர்காழிக்குப் போம்படி நடந்தார். நடக்கும்பொழுது, சிவபாதவிருதயர் தரிக்கலாற்றாமையால் தோளின்மேலே தரித்துக்கொள்ள, பிள்ளையார் அத்தோளின்மேல் எழுந்தருளி, சீர்காழியிலிருக்கின்ற திருக்கோயிலை அடைந்து, வலஞ்செய்து, சந்நிதானத்திலே நின்று திருப்பதிகம் பாடி வணங்கிக்கொண்டு, தம்முடைய திருமாளிகையை அடைந்து அந்தச் சீர்காழியில் வாழுகின்றவர்களெல்லாரும் வாழும்பொருட்டுத் தம்முடைய இளந்திருக்கோலக்காட்சியைக் கொடுத்து விற்றிருந்தருளினார். அப்படியிருக்கும்பொழுது, அவருடைய தாயாராகிய பகவதியார்பிறந்த திருநனிபள்ளியில் இருக்கின்ற பிராமணர்கள் எல்லாரும் பெருமகிழ்ச்சியோடு அவ்விடத்திற்கு வந்து சேர்ந்து,அவரை வணங்கப்பெற்று இருந்தார்கள். பிள்ளையார் உலகமெல்லாம் உய்யும்படி சிவஞானம்பெற்ற பெருவார்த்தையைக் கேள்வியுற்று, சமீப ஸ்தலங்களிலிருக்கின்ற பிராமணர்களும் திருத்தொண்டர்களும் மற்றையனைவரும் அதிசயித்துத் திரண்டு வந்து, பிள்ளையாரைவணங்கி உய்ந்தார்கள்.

இங்ஙனநிகழுநாளிலே, திருநனிபள்ளியிற் பிராமணர்கள் பிள்ளையாரை வணங்கி, "அடியேங்களெல்லாரும் உய்யும்படி திருவவதாரஞ் செய்தருளிய பரமகிருபாலுவாகிய சுவாமீ, அடியேங்களுடைய வாசஸ்தானமாகிய திருநனிபள்ளியில் விற்றிருக்குஞ் சிவபெருமானை வணங்கும்பொருட்டு அவ்விடத்திற்கு எழுந்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். சிவானுபூதிப் பெருவாழ்வாகிய பிள்ளையார் அதற்குஇசைந்து, தோணியப்பரை வணங்கி, அருள்பெற்று, பிறதலங்களையும் வணங்கச் சென்றார். செந்தாமரைமலரினுஞ் சிறந்த அருமைத்திருவடிகள் தரையின்மேற் செல்வதையும் பிறரொருவர் தாங்குவதையும் பொறாத அன்பினையுடைய சிவபாதவிருதயர் வந்து எடுத்துத் தோளின்மேலே வைத்துக்கொண்டு சென்றார். திருநனிபள்ளிக்குச் சமீபித்தபொழுது, பிள்ளையார் "அந்தச்சோலை தோன்றும் பதி யாது" என்று வினவியருள; தந்தையார் "திருநனிபள்ளி" என்றார். அது கேட்டு, திருப்பதிகம் பாடிக்கொண்டு, திருக்கோயிலை அடைந்து சுவாமியை வணங்கிக்கொண்டு, அந்தஸ்தலத்தில் இருந்தார். பின் அவ்விடத்தினின்று நீங்கி, தலைச்சங்காடு, திருவலம்புரம், பல்லவனீச்சரம், திருச்சாய்க்காடு,திருவெண்காடு, திருமுல்லைவாயில் என்னுந்தலங்களுக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து, திருப்பதிகம் பாடிக்கொண்டு, மீண்டு சீர்காழியை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து கொண்டிருந்தார். இருக்குநாளிலே, திருமயேந்திரப்பள்ளி, திருக்குருகாவூர் முதலிய ஸ்தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடினார்.

இப்படி நிகழுங்காலத்திலே, திருநீலகண்டப்பெரும்பாணர் ஆளுடைய பிள்ளையாரைத் தரிசிக்கும்பொருட்டு, விறலியாரோடு யாழ்கொண்டு, சீர்காழியிலே வந்துசேர்ந்தார். பிள்ளையார் அவருடைய வரவை அறிந்து, அவரை எதிர்கொள்ள; அவர் பிள்ளையாருடைய திருவடிகளை நமஸ்கரித்து, ஸ்தோத்திரஞ் செய்தார். பிள்ளையார் அவரை அழைத்துக்கொண்டு, திருக்கோயிற்புறமுன்றிலிலே சென்று, கும்பிடுவித்து, அவரை நோக்கி, "நீர் இங்கே சுவாமிக்கு யாழ்வாசியும்" என்றார். திருநீலகண்டப்பெரும்பாணர் பிள்ளையாரை வணங்கிக்கொண்டு பரமசிவன் மேலதாகிய பாணியை விறலியாரோடும் பாடி, யாழ் வாசிக்க; பிள்ளையார் மகிழ்ச்சியடைந்தார். திருநீலகண்டப்பெரும்பாணர் யாழ் வாசித்தபின், பிள்ளையார் அவரைக் கொண்டுபோய், அவருக்கு உறைவிடங்கொடுத்து, விருந்து செய்தார். திருநீலகண்டப்பெரும்பாணர் சுவாமிமேலே பிள்ளையார் பாடிய திருப்பதிகங்களைக் கேட்டு, பெருமகிழ்ச்சிகொண்டு, அவைகளின் இசைகளை யாழிலே இட்டு வாசித்தார். பின் பிள்ளையாரை நோக்கி, "சுவாமீ, இன்னுந் தேவரீர் அருளிச்செய்யுந் திருப்பதிகங்களின் இசையை அடியேன் யாழிலே இட்டு வாசித்துக்கொண்டு தேவரீரைப் பிரிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்து தொழுதார். பிள்ளையார் திருவுளமகிழ்ந்து அதற்கிசைந்தருளினார். திருநீலகண்டப்பெரும்பாணர் அற்றைநாட்டொடங்கிப் பிள்ளையார் பாடுந் திருப்பதிகத்தினிசைகளை யாழிலே இட்டு வாசித்துக்கொண்டு என்றுமகலாத நண்புடனிருந்தார்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் பூமிக்குச் சுழுமுனாநாடியாகிய தில்லையில் விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்திலே திருநிருத்தஞ்செய்தருளும் சபாநாயகரைத் தரிசனஞ்செய்தற்கு விரும்பி, தந்தையாரோடும், திருநீலகண்டப்பெரும்பாணரோடும் அடியார்கள் பக்கத்திலே சூழ, சீர்காழியைக் கடந்து சென்று, சிதம்பரத்தினது திருவெல்லையை அடைந்து நமஸ்கரித்துக்கொண்டு, அந்தத்திருப்பதியைச் சூழ்ந்த திருமதிலினது தெற்குவாயிலை அடைந்து, தில்லைவாழந்தணர்களும் மற்றையடியார்களும் மகா அலங்காரத்தோடும் எதிர்கொள்ளப்போய், திருவீதியைத் தொழுது, தூலலிங்கமாகிய கோபுரத்தை நமஸ்கரித்து, எழுந்து உள்ளே புகுந்து, திருமாளிகையை வலஞ்செய்து, பேரம்பலத்தை வணங்கிக்கொண்டு, கனகசபையை அடைந்தார். ஆயிரம் ஆதித்தப்பிரகாசம் கூடிய மண்டலம்போலக் குறைவற நிறைந்த ஞானசபையிலே, திருவருளே திருமேனியாகக்கொண்டு ஆனந்ததாண்டவஞ் செய்தருளுகின்ற சபாநாயகரைத் தரிசனம்பண்ணினார். உடனே, அவயவத்திலே யாதொரு சேட்டையுமின்றி, வாதனையினாலே திருக்கரங்கள் சிரசின் மேலேறிக் குவிய, உரோமாஞ்சங்கொள்ள, நாத்தழும்ப, விழிநீர்த்தாரை

கொள்ள, சிவானந்தசாகரத்தில் அமிழ்ந்தி நின்று, "கற்றாங்கெரி" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினர். பின்பு திருமாளிகையை வலஞ்செய்து புறப்பட்டு, திருமுன்றிலிலே நமஸ்கரித்து எழுந்து, கோபுரவாயிலைக் கடந்து பணிந்து, நான்கு திருவிதிகளையுந்தொழுது, அங்கே எழுந்தருளியிருத்தற்கு அஞ்சி, திருவேட்களத்தை அடைந்து சுவாமி தரிசனஞ்செய்து, திருப்பதிகம் பாடிக்கொண்டு அவ்விடத்தில் எழுந்தருளியிருந்தார். அங்கெழுந்தருளியிருந்துகொண்டே, சிதம்பரத்துக்கும் வந்து சபாநாயகரைத் தரிசிப்பார். அப்படியிருக்கு நாளிலே, திருக்கழிப்பாலைக்குப் போய், சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடினர். அவர்பாடுந் திருப்பதிகவிசைகளை யாழ்ப்பாணரும் யாழிலிட்டு வாசிப்பாராயினர். ஒருநாள் பிள்ளையார் திருவேட்களத்தைக் கடந்து சிதம்பரத்தை அடைந்தபொழுது, சபாநாயகருடைய திருவருளினலே, தில்லைவாழந்தணர் மூவாயிரரும் சிவகணநாதராய்த் தோன்றக் கண்டு, அத்தன்மையைத் திருநீலகண்டப்பெரும்பாணருக்குங் காட்டினர். தில்லைவாழந்தணர்கள் பிள்ளையாரைக் கண்டவுடனே வணங்க; பிள்ளையார் அவர்கள் வணங்குமுன் தாமும் வணங்கி, திருக்கோயிலிற் பிரவேசித்து, சபாநாயகரை வணங்கி, "ஆடினய் நறுநெய்யொடு பாறயிர்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடினர். அந்தத் திருப்பதிகத்திலே "நீலத்தார் கரியமிடற்றர்" என்னுந் திருப்பாட்டிலே தில்லைவாழந்தணரைத் தாங்கண்டபடி கூறி, அவர்கள் "தொழுதேத்து சிற்றம்பலம்" என்று அருளிச்செய்தார். பின்பு திருக்கோயிலினின்றும் புறப்பட்டபொழுது திருநீலகண்டப்பெரும்பாணர் பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கி நின்று, "சுவாமீ, அடியேனுடைய ஜன்மஸ்தலமாகிய திருவெருக்கத்தம்புலியூர் முதலாக நிவாவென்னும் நதிக்கரையில் இருக்கின்ற தலங்களை வணங்குதற்கு எழுந்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

ஆளுடையபிள்ளையார் அதற்கிசைந்தருளி, தந்தையார்முதலிய சமஸ்தரோடும், திருநீலகண்டப்பெரும்பாணர் திருவவதாரஞ் செய்த திருவெருக்கத்தம்புலியூருக்கும் திருமுதுகுன்றுக்கும் போய், சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, பெண்ணுகடத்தை அடைந்தார். அங்கே திருத்தூங்கானைமாடம் என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற சுவாமியைத் தரிசனஞ்செய்துகொண்டு, திருநெல்வாயிலரத்துறைக்குப் போக விரும்பி, தந்தையாருடைய தோண்மேலிருத்தலை ஒழிந்து, அவர்மனம் வருந்தும்படி, பிராமணர்முதலியோர் சூழ்ந்து செல்ல, திருவடித்தாமரைகோவ பையப்பைய நடந்து, மாறன்பாடி என்னும் பதி வந்தவுடனே, வழிச்சென்ற வருத்தத்தினலே ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு, அப்பதியிற்சென்றார். அப்பொழுது சூரியன் அஸ்தமயனமாயிற்று.

அன்றிரவு பிள்ளையார் அடியார்களோடும் அந்தப்பதியிலேயேதங்கினார். திருவரத்துறையில் வீற்றிருக்கின்ற கடவுள் தம்முடைய திருக்குமாரராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய வழி வருத்தத்தைத் திருவுளத்தடைத்து, அவர் ஏறுதற்கு முத்துச்சிவிகையும், அவருக்கு நிழற்றுதற்கு முத்துக்குடையும், ஊதுதற்கு முத்துச்சின்னங்களுங் கொடுத்தருளத் திருவுளங்கொண்டு, அந்த ஸ்தலத்திலிருக்கின்ற பிராமணர்களெல்லாருக்கும் தனித்தனியே சொப்பனத்திலே தோன்றி, "ஞானசம்பந்தன் நம்மிடத்துக்கு வருகின்றான், நீங்கள் முத்துச்சிவிகையும் முத்துக்குடையும் முத்துச்சின்னங்களும் நம்மிடத்தில் எடுத்து அவனிடத்திற்குக் கொண்டுபோய்க் கொடுங்கள்" என்று ஆஞ்ஞாபித்து மறைந்தருளினார். உடனே பிராமணர்கள் விழித்தெழுந்து, மகிழ்ந்து, அற்புதமெய்திய சிந்தையோடும் ஆலயத்திலே வந்து கூடி, திருப்பள்ளியெழுச்சிக்காலம் வர, திருக்காப்பை நீக்கி, முத்துச்சிவிகையையும் முத்துக்குடையையும் முத்துச்சின்னங்களையுங்கண்டு, ஆனந்தங்கொண்டு, துந்துபி முதலிய வாத்தியங்கள் ஒலிப்ப, சிவனடியார்களோடு, அந்தச் சிவிகை முதலாயினவற்றைத் தாங்கிக்கொண்டு, ஆளுடையபிள்ளையாரிடத்திற்குப் போனார்கள். அதற்குமுன் பரமசிவன் ஆளுடைய பிள்ளையாருக்கும் சொப்பனத்திலே தோன்று, "நாம் உனக்கு முத்துச் சிவிகையும் முத்துக்குடையும் முத்துச்சின்னங்களும் அனுப்புகின்றோம். நீ அவைகளை ஏற்றுக்கொள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். பிள்ளையார் விழித்தெழுந்து, தாங்கண்ட சொப்பனத்தைத் தந்தையாருக்கும் அடியார்களுக்கும் அருளிச்செய்து, வைகறையிலே விபூதி தரித்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதிக்கொண்டு எழுந்தருளினார். சூரியோதயகாலத்திலே பிராமணர்கள் சிவனடியார்களோடு ஹரஹர என்னும் ஓசையுடனே முத்துச்சிவிகை முதலியனவற்றைக் கொண்டு எதிரே வந்து, பிள்ளையாரை வணங்கிநின்று, "இவை திருவரத்துறையில் வீற்றிருக்கின்ற கடவுள் தந்த பொருள்கள், ஏற்றருளும்" என்றார்கள். பிள்ளையார் அதைக் கேட்டு, அக்கடவுளுடைய திருவருளை "எந்தையீசனெம்பெருமான்" என்னுந் திருப்பதிகத்தினாலே பாடி, திருவருள்வடிவாகிய முத்துச்சிவிகையை வலஞ்செய்து, பூமியிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதிக்கொண்டு, உலகமெல்லாம் உய்யும்படி, அதில் ஏறியருளினார். அப்பொழுது சிவனடியார்களெல்லாரும் ஆரவாரித்தார்கள். பிராமணர்கள் சமஸ்தரும் வேதகோஷஞ் செய்தார்கள். இந்திராதிதேவர்கள் ஆரவாரித்துப் புஷ்பமாரி பொழிந்தார்கள். பலவகைப்பட்ட மங்கலவாத்தியங்கள் ஒலித்தன. முத்துச்சிவிகையிலே ஏறியருளிய பரமகருணாநிதியாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், மேலே முத்துக்குடை நிழற்றவும், சிவனடியார்களும் பிராமணர்களும் நெருங்கி ஆனந்தமேலீட்டினாலே கூத்தாடித் தங்கள்

கண்களினின்றும் பொழிகின்ற ஆனந்த வெள்ளத்தினுள்ளேகுளிக்கவும், முத்துச்சின்னங்கள் "சமஸ்த லோகங்களும் சிவனடியார்களும் வேதங்களும் உய்யும்படி சைவசிகாமணி வந்தார்; சிதசித்துப் பிரபஞ்சங்களெங்கும் வியாபித்திருக்கின்ற உமாதேவியார் ஞானப்பாலூட்ட உண்ட திருஞானசம்பந்தமூர்த்தி வந்தார்; வேதாகமாதி சமஸ்தசாத்திரங்களையும் ஓதாதுணர்ந்த முத்தமிழ்விரகர் வந்தார்" என்று ஊதவும்,சென்று திருவரத்துறையை அடைந்து, கோபுரவாயிலுக்குத் தூரத்திலே முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, நமஸ்கரித்து எழுந்து, திருக்கோயிலினுள்ளே பிரவேசித்து, வலஞ்செய்து சந்நிதானத்திலே நமஸ்கரித்து, திருப்பதிகம் பாடி, சிலநாள் அந்தஸ்தலத்தில் எழுந்தருளியிருந்தார். இருக்குநாளிலே, திருநெல்வெண்ணெய்முதலிய தலங்களுக்குப்போய், சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு திரும்பினார்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், சில நாளாயினபின், சீர்காழிக்குத் திரும்பும்படி திருவுளங்கொண்டு, அத்திருவரத்துறையில் வீற்றிருக்குங்கடவுளை வணங்கி விடைபெற்று, முத்துச்சிவிகையில் ஏறிச் சென்று, திருப்பழுவூர், திருவிசயமங்கை, திருவைகா, திருப்புறம்பயம் என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு,திருச்சேய்ஞலூரின் எல்லையை அடைந்து, அது சண்டேசுரநாயனார் திருவவதாரஞ்செய்த திருப்பதியாதலால் முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, அத்திருப்பதியினுள்ளே நடந்துபோய், ஆலயத்திலே பிரவேசித்து, சுவாமிதரிசனஞ்செய்து "பிரமடைந்த பாலதாட்ட" என்னுந் திருப்பதிகம்பாடினார். பின்பு, திருப்பனந்தாள், திருப்பந்தணநல்லூர், திருவோமாம்புலியூர், திருவாளொளிபுற்றூர், திருக்கடம்பூர், திருநாரையூர், திருக்கருப்பறியலூர் என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு, சீர்காழிக்குச் சமீபத்திலே போனார். போம்பொழுது, சீர்காழியிலிருக்கின்ற பிராமணர்களெல்லாரும் அவருடைய வரவைக் கேள்வியுற்று, மிகுந்த மகிழ்ச்சிகொண்டு, திருவீதிகளை அலங்கரித்து, எதிர்கொள்ளும்படி திரண்டுசென்று,திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரை, முத்துச்சிவிகையின்மேலே, முத்துக்குடை நிழலின்கீழே,தரிசித்தார்கள். தரிசித்தவுடனே, கைகள் சிரசின்மேலேறிக் குவிய, கண்ணும் மனமுங் களிக்க, அவரைச் சூழ்ந்து ஸ்தோத்திரம்பண்ணினார்கள். பிள்ளையார் முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, அவர்களோடு கூடச்சென்று, திருக்கோயிலை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, திருப்பதிகம் பாடிக்கொண்டு, புறப்பட்டுச்சென்றார். செல்லும்பொழுது, திருநீலகண்டப்பெரும்பாணர் பின்னே வர, அவருக்கு வீட்டுக்குப் போம்படி விடைகொடுத்து, தாம் தம்முடைய திருமாளிகைக்கு எழுந்தருளினார். எழுந்தருளும்பொழுது, பார்ப்பனிகள் நெருங்கி, [illegible]குடம் தீபம் முதலாயின ஏந்த, தாயாராகிய பகவதியார்வந்து, திருநீற்றுக்காப்புச்சாத்தி, வணங்

இத் துதிக்க; பிள்ளையார் அவருக்கு அருள்செய்து, திருமாளிகையினுள்ளே பிரவேசித்தார்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் தினந்தோறுந் தோணியப்பரைத் தரிசனஞ்செய்து, திருப்பதிகம் பாடிக்கொண்டிருக்குநாளிலே; உபநயனப்பருவம் வர, பிராமணர்கள் வேதவிதிப்படி உபநயனச்சடங்கு செய்ய, சிவானுபூதிப்பெருஞ்செல்வராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், தமக்கு அது வேண்டுவதன்றாயினும், உலகத்திலே வைதிககர்மத்தை நாட்டல் வேண்டுமெனத் தமது திருவுளத்திலே மூகிழ்த்த பெருங்கருணையினாலே, அதற்கிசைந்து, யஞ்ஞோபவீததாரணஞ் செய்தருளினார். பின்பு பிராமணர்கள் "உமக்கு நான்குவேதத்திற்கும் அதிகாரந்தந்தோம்" என்று சொல்லி, மந்திரோபதேசஞ்செய்யப் புகும்பொழுது, பிள்ளையார் எண்ணிறந்தவேதங்களை ஓதி, அவற்றிற்கு அங்கமாகிய பலகலைகளையும், எடுத்துச் சொல்லியருளினார். பிராமணர்கள் அவர் பரமசிவனுடைய திருவருள் பெற்றமையை நினைந்து வியந்து, அவரை நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ்செய்து, தாங்கள் முன் பயின்றவேதங்களை அவரிடத்திற்கேட்டு, ஐயந்திரிபற உணர்ந்தார்கள். பரமாசாரியராகிய ஆளுடையபிள்ளையார் அந்தப் பிராமணருடைய சந்தேகந்தீரும்படி எல்லாவற்றையும் அருளிச்செய்து, பின் சகல மந்திரங்களுக்கும் வித்து ஸ்ரீபஞ்சாக்ஷரம் என்பதை அவர்களுக்கும் மற்றையாவருக்கும் விளக்கும்பொருட்டு, "துஞ்சலுந் துஞ்ச லிலாத போழ்தினும்" என்னும் பஞ்சாக்ஷரத்திருப்பதிகத்தைப் பாடியருளினார். அந்தத் திருப்பதிகத்திலே "வேதியர்க்—கந்தியுண் மந்திர மஞ்செழுத்துமே" என்றருளிச்செய்தார். பிராமணர்கள் அதைக் கேட்டு மனமகிழ்ந்து, அவருடைய திருவருளைத் தலைமேற்கொண்டு, வணங்கித் துதித்து உய்ந்தார்கள்.

ஆளுடையபிள்ளையார் தினந்தோறுந் தோணியப்பரை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு, அடியார்களோடும் இருக்குநாளிலே; திருநாவுக்கரசுநாயனார் அவருடைய மகிமையைக் கேள்வியுற்று, அவரை வணங்குதற்கு நினைந்து, சீர்காழிக்குச் சமீபத்திலே வந்தருளினார். பிள்ளையார் அதைக்கேட்டுத் திருவுளமகிழ்ந்து, அடியார் கூட்டத்தோடும் அவரை எதிர்கொள்ளப் போனார். எதிரேவந்த திருநாவுக்கரசுநாயனார் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரை வணங்க; திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் அவரை வணங்கித் திருக்கோயிலுக்கு அழைத்துக்கொண்டு போய், சுவாமிதரிசனஞ் செய்வித்து, தம்முடைய திருமாளிகையிற்கொண்டு சென்று, திருவமுதுசெய்வித்தார். சிலநாளாயினபின், திருநாவுக்கரசுநாயனார் பிறதலங்களை வணங்கும்படி செல்ல; திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருக்கோலக்காவரைக்கும் அவரோடுசென்று, சீர்காழிக்குத் திரும்பிவிட்டார். அங்கே தோணியப்பர்மேலே பலவகைப்பட்ட

அப்படியே செய்வோம், வாருங்கள்" என்று சொல்லியருளினார். பிள்ளையாருடைய ஆஞ்ஞையினாலே பாண்டியர் சபைமுன்னே அக்கினி அமைக்கும்படி ஏவலாளர்களை ஏவ; அவர்களும் அக்கினி அமைத்தார்கள். பிள்ளையார் சமீபத்திலே எழுந்தருளி வந்து, பரமசிவனே மெய்ப்பொருள் என்று தாம் பாடியருளிய தமிழ்வேதத்திருமுறையை ஸ்தோத்திரஞ்செய்து, "நம்முடைய சிவபெருமானே பரம்பொருள்" என்று சொல்லி வணங்கி, திருக்கரத்தினால் எடுத்து, சிரசின்மேற்கொண்டு, திருக்காப்பிட்ட கயிற்றை அவிழ்த்து, அத்திருமுறையைத் தமது திருக்கரத்தினால் மறிக்க; திருநள்ளாற்றின் மேலதாகிய "போகமார்த்தபூண்முலையாள்" என்னுந் திருப்பதிகம் வந்து நேர்ந்தது. பிள்ளையார் அத் திருப்பதிகத்தையே விரும்பி, திருநள்ளாறரை வணங்கி, அது எழுதப்பட்ட திருவேட்டைக் கழற்றி, திருக்கரத்திலே கொண்டு, பரமசிவனே மெய்ப்பொருள் என்பதைச் சமஸ்தருக்கும் உணர்த்தும்பொருட்டு, "இவை அக்கினியில் இடப்படுமாயிற் பழுதில்லை. இது சத்தியம்" என்னுங் கருத்தையுடைய "தளிரிளவளரொளி" என்னுந் திருப்பதிகத்தைப் பாடி, அங்குள்ளார்களெல்லாருங்காண, சமணர்களுடைய சிந்தை வேவ, அவ்வக்கினியிலே அவ்வேட்டை இட்டருளினார். இட்ட ஏட்டில் எழுதப்பட்ட திருப்பதிகம், பரஞானம் அபரஞானம் என்கின்ற இருதனங்களையுடைய உமாதேவி பாகரும் அட்டமூர்த்தியுமாகிய பரமசிவனையே பொருளென உடைமையால், மிகச்சுவாலிக்கின்ற அக்கினியிலே பச்சையாய் விளங்கிற்று. சமணர்களும் தங்கள் நூற்பொருளை எழுதிய ஏட்டை, "இது உய்யுமோ" என்கின்ற கவலையோடு, நடுங்கி நின்று, அக்கினியிலே இட்டார்கள். அது தகிக்கப்பட்டொழிந்தது. அது கண்டு பயத்தினாலே மனஞ்சோர்ந்து நின்றார்கள். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தாம் அக்கினியில் இட்ட ஏட்டை, குறித்த நாழிகையிலே ஈனமின்றி இருக்கக் கண்டு, யாவரும் வியக்கும்படி எடுத்தருளினார். அது முன்னையிற்றாலும் [illegible]மையும் புதுமையும் உடைத்தாய் விளங்கிற்று. பிள்ளையார் [illegible] கோத் [illegible]டைச் சபைமுன்னே காட்டி, திருமுறையிலே முன்போலக் [illegible]னார். அரசர் அத்தியந்த ஆச்சரியம் அடைந்து, சமணர்களை நோக்கி [illegible]ங்கள் இட்ட ஏட்டைக் காட்டுங்கள்" என்றார். சமணர்கள் [illegible]ட ஏட்டை எடுக்கும்படி சென்றணையும்போது, அக்கினி சுவாலிகச் சுவ[illegible]தலைக் கண்டு, திரும்பிவிட்டார்கள், அது கண்ட அரசர் [illegible] ஜலத்தினா[illegible] அக்கினியைத் தணிப்பித்தார். சமணர்கள் அங்கே சாம்[illegible]பி, மற்றொன்றுங் காணார்களாகி, செய்வதொன்றறியாது, [illegible]ரண்ட சாம்பரைக் கையினாலே பிசைந்து தூற்றிப் பார்[illegible]தார்கள். [illegible] கண்ட அரசர் புன்முறுவல் செய்து, "ஏட்டை இன்[illegible] பாருங்கள். பொய்ந்நெறியையே மெய்ந்நெறியாகக் [illegible]வர்களே, போங்கள். முன் நான் வெப்பாகிய தீயி

னின்றும் உய்ய, நீங்கள் அப்பொழுது தோற்றீர்கள். ஆதலால், அதுவே வழியாக இப்பொழுது அக்கினியில் இடப்பட்ட ஏடு உய்ந்ததில்லை யென்றால், நீங்கள் தோற்றிலீர்கள்போலும்" என்றார்.

சமணர்கள் பாண்டியர் நகை உட்கொண்டு சொல்லிய சொற்பொருளை அறியாராகி, திரித்துணர்ந்து, "முன்னே இரண்டுதரம் வாதுசெய்தோம். இன்னும் ஒருதரம் செய்யவேண்டும். மூன்றுதரத்தில் ஒருதரமாயினும் வெற்றிபெறுவோம்" என்றார்கள். பாண்டியர் "இது என்னவார்த்தை" என்று மறுத்தபின்னும்; பிள்ளையார் சமணர்களை நோக்கி, "இனி என்னவாது செய்வோம்" என்று வினவியருள; சமணர்கள் "நாங்கள் இருபக்ஷத்தேமும் எங்கள் எங்கள் சமயவுண்மையை எழுதிய ஏட்டை ஓடுகின்ற வைகையாற்றிலே இடுவோம். எதிர்ந்து செல்லும் ஏடே மெய்ப்பொருளையுடையது" என்றார்கள். பிள்ளையாரும் "அப்படியே செய்வோம்" என்று அருளிச்செய்தார். அப்பொழுது குலச்சிறைநாயனார் சமீபத்தில் வந்து, "இனிச் செய்யப்படும் இவ்வாதிலே தோற்றவர்கள் செய்வது யாது" என்றார். அதைக் கேட்ட சமணர்கள் அவர்மேற் கோபங்கொண்டு, பொறாமை காரணமாக, தங்கள் வாய்சோர்ந்து, "நாங்கள் வாதிலே தோற்றோமாயின், எங்களை இவ்வரசர் கழுவில் ஏற்றக்கடவர்" என்றார்கள். அதைக் கேட்ட அரசர் "வைகையாற்றிலே ஏடு இடும்பொருட்டுப் புறப்படுங்கள்" என்று சொல்ல; முன்னே பிள்ளையார் இரத்தினாசனத்தினின்றும் இறங்கிப் போய், முத்துச் சிவிகைமேற்கொண்டு சென்றார். அவர்பின்னே பாண்டியர் குதிரைமேற்கொண்டு சென்றார். சமணர்கள் மயக்கமேற் ... ண்டு சென்றார்கள். சமுத்திரத்தை நோக்கித் திரைபெறிந்து ... தடத்துடன் பாய்கின்ற வைகையாற்றின்கரையை அடைந்தவுடன் ... பாண்டியர் "இருபக்ஷத்தாரும் தங்கள் தங்கள் சமயவுண்மை ... ஏட்டை இடக்கடவர்கள்" என்றார். அரிசியாகிய உள்ளீ ... பதர்போல அறிவாகிய உள்ளீடு இல்லாத மக்கட்பதராகி ... "அத்திநாத்தி" என்று எழுதிய ஏட்டை, நதி அதிவேக ... தலைக் கண்டும், அவாவின்மேலீட்டினாலே இடுதலும்; ... கொண்டு கடலை நோக்கி ஓடிற்று. சமணர்கள், ஆற ... ஏட்டைத் தொடர்ந்து எதிரே அணைப்பவர்போலக் கரை ... னார்கள். அவ்வேடு நாழிகைக்கு அப்பாற்சென்ற ... காணுதற்கும் கூடாதவர்களாகி, வேறொருசெயலுமி ... நாசகாலம் வந்தது என்று அஞ்சி நடுநடுங்கி, அரசரு ... தங்கள் நெஞ்சில் அச்சம் வெளிப்பட ஒளிப்பார்போ ... நோக்கி, "நீரும் உம்முடைய ஏட்டை இட்டால் அ ... கள். பாண்டியராஜா அவர்களை விட்டு, பிள்ளைய ...

ழுகி யால்; ண ... கிளிய ... சிற ... ணார்கள் ... ன் பாய் மயது ... விரைந்து ருக்க ... னடோடும் ரங்க ... ஓடிப்போ வாம் ... பால், அதைக் டை ... தங்களுக்கு வாது ... எதிரே வந்து, றன ... பிள்ளையாரை ங்க ... லாம்" என்றா வே ... டைய திருக்குறி ... தி

ப்பைநோக்க; தம்மை அடைந்த அன்பர்களுடைய சனன மரணங்களுக்கு ஏதுவாய் இருக்கின்ற மலமாயாகர்மங்களை நீக்கியருளுந்தேசிகோத்தமராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், பாண்டியராஜர் தம்முடைய அருமைத்திருக்கரத்தினாலே தீண்டி விபூதி பூசப்பெற்று மலபரிபாகமும் இருவினையொப்பும் உற்று நிற்றலால், அவருக்கும் அவர்போலப் பக்குவப்படும் சர்வான்மாக்களுக்கும் சைவசமயத் துணைமைப்பொருளை விளக்கும் உபதேசமொழியாகிய "வாழ்கவந்தணர்" என்னுந் திருப்பாசுரத்தைப் பாடி, ஏட்டில் எழுதி, அத்திருவேட்டைத் தமது திருக்கரத்தினாலே வைகைநதியில் இட்டருளினார். அத்திருவேடு நதியிலே எதிர்ந்து, ஜலத்தைக் கிழித்துக்கொண்டு, சர்வான்மாக்களுக்கும் இதுவே மெய்ப்பொருள் என்று காட்டிக்கொண்டு சென்றது. பரமசிவனே எல்லாப்பொருளும் என்று எழுதிய திருவேட்டிலே "வேந்தனுமோங்குக" என்று பாடியருளியபடியால், பாண்டியராஜருடைய கூன் நிமிர்ந்தது. ஏடு எதிர்ந்து செல்லும்பொழுது, தேவர்களெல்லாரும் ஸ்தோத்திரஞ்செய்து, புஷ்பமாரி பெய்தார்கள். பாண்டியர் அற்புதங்கொண்டு நின்றார். சமணர்களெல்லாரும் அஞ்சிப் பதைபதைத்துத் தலை குனிந்து நின்றார்கள். குலச்சிறைநாயனார் அத்திருவேட்டைத் தொடர்ந்து எடுத்தற்கு விரும்பி, காற்றைப்போல அதிவேகத்தோடு செல்கின்ற குதிரைமேல் ஏறிக்கொண்டு, பின் சென்றார். பிள்ளையார் அவ்வேடு தங்கும்பொருட்டு, "வன்னியுமத்தமும்" என்னுந் திருப்பதிகம் பாட; குலச்சிறைநாயனார் சிவாலயத்துக்குப் பக்கத்தில் இருக்கின்ற நீர் நடுவிலே புகுந்து, அங்கே தங்கிய ஏட்டை எடுத்துச் சிரமேற்கொண்டு, பெருமகிழ்ச்சி பொங்க, கரையில் ஏறி. திருவேடகத்தில் எழுந்தருளியிருக்குங் கடவுளை வணங்கித் துதித்து, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சந்நிதியில் வந்து அவருடைய திருவடிகளை வணங்கிக்கொண்டு, பாண்டியர் முதலாயினோரெல்லாருக்குங்காட்ட; அடியார்கள் எல்லாரும் அத்தியந்த ஆனந்தத்துடனே ஹரஹர என்று ஆரவாரித்தார்கள்.

பாண்டியராஜர் கண்டு, குலச்சிறைநாயனாரை நோக்கி, "வாதிலே ஒட்டித் தோற்ற இந்தச்சமணர்கள் முன்னே எங்கள் பரமாசாரியராகிய சுவாமிகளிடத்திலே அநுசிதஞ் செய்தவர்கள். ஆதலால் இவர்களைக் கழுவிலே ஏற்றுக" என்று ஆஞ்ஞாபித்தார். கருணாகரராகிய பிள்ளையார் அதைக் கேட்டும், தாம் அவர்கண்மேற் சிறிதும் பகையிலராயினும், அவர்கள் சிவனடியார்கள் வாழுந்திருமடத்திலே செய்த தீங்கு அதிபாதகமாதலாலும், அதிபாதகஞ்செய்தார் யாவராயினும் அவரைக் கொல்லல்வேண்டுமென்பது சிவாகமநூற்றுணிவாதலாலும், பாண்டியருடைய குற்றமற்ற செய்கையை விலக்காதிருந்தார். திடபத்தியையுடைய குலச்சிறைநாயனார், கழுத்தறிகளை நிரையாக நாட்டுவித்து அவைகளில் ஏற்ற,

அதிபாதகர்களாகிய சமணர்கள் எண்ணாயிரரும் ஏறினார்கள். பிள்ளையார் பாண்டியராஜருக்கு விபூதி கொடுத்தருள, அவர் அவருடைய ஸ்ரீபாதங்களை விழுந்து நமஸ்கரித்து எழுந்து வாங்கி, அணிந்து நின்றார். பாண்டிநாட்டிலுள்ள சமஸ்தரும் விபூதி அணிந்துகொண்டார்கள். அரசர் சைவராயினமையால், சமணசமயம் பாழாக, சைவசமயமே தழைத்தோங்கிற்று. திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய திருப்புகழே எங்கும் பரந்தது. பிள்ளையார் சொக்கநாதசுவாமியைத் தரிசிக்கவேண்டும் என்று எழுந்து சென்று, முத்துச்சிவிகைமேற்கொண்டு போனார். பாண்டியரும் மங்கையர்க்கரசியாரும் அவரை ஸ்தோத்திரஞ்செய்துகொண்டு, உடன் சென்றார்கள். அடியார்கள் சமஸ்தரும் பெருமகிழ்ச்சி பொங்க, பிள்ளையாரைத் துதித்துக்கொண்டு கூடிப்போனார்கள். பிள்ளையார் திருக்கோயிலை அணைந்து, முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, பாண்டியராஜரும் மாதேவியாரும் மந்திரியாரும் தம்மைத் தோத்திரஞ்செய்துகொண்டு உடன் புகப் புகுந்து, வலஞ்செய்து சந்நிதானத்தை அடைந்து, சொக்கநாதசுவாமியை வணங்கி "வீடலால வாயிலாய்" என்னுந் திருப்பதிகம் பாடினார். பாண்டியர் சொக்கநாதசுவாமியை நமஸ்கரித்து நின்று, "திருவாலவாயில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே, சமணர்களுடைய மாயையினாலே மயங்கித் தேவரீரை அறியாதிருந்த சிறியேனைப் பிணிநீக்கி ஆட்கொள்ளும்பொருட்டுத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரைத் தந்தருளிய பெருங்கருணையை என்னென்றுபேசுவேன்" என்று தோத்திரம்பண்ணினார். பிள்ளையார் சுவாமியை வணங்கி அருள்பெற்று, அங்குநின்று அரிதினீங்கித் திருமடத்திற்சென்று, எழுந்தருளியிருந்தார். பாண்டியரும் மாதேவியாரும் பிள்ளையாரை வணங்கி, அநுமதி பெற்றுக்கொண்டு, தங்கள் மாளிகைக்குப்போனார்கள். பிள்ளையார் "ஆலநீழலுகந்த திருக்கையே" என்னுந் திருவியமகத்திருப்பதிகத்திலே திருநீலகண்டப்பெரும்பாணருக்கு அருளிய திறத்தையும் துதித்து, அவரோடும் அளவளாவியிருந்தார்.

பிள்ளையார், பாண்டியரும் மாதேவியாரும் குலச்சிறைநாயனாரும் தினந்தோறும் வந்து தம்முடைய திருவடிகளைவணங்கித் துதிக்க, தாம் சொக்கநாதசுவாமியை வணங்கித் துதித்துக்கொண்டு எந்தருளியிருக்குநாளிலே; சீர்காழியிலிருந்த சிவபாதவிருதயர் "சமணர்களுடன் வாதுசெய்து வெல்லுதற்கும் பாண்டிநாடெங்கும் விபூதியைப் பரப்புதற்கும் போயருளிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரிடத்தில் நிகழ்ந்தவற்றை அறிவேன்" என்று புறப்பட்டு, மதுரையை அடைந்து, திருவாலவாயிற் சென்று, சொக்கநாதசுவாமியை வணங்கிக்கொண்டு, பிள்ளையார் எழுந்தருளியிருக்கின்ற திருமடத்தை அணைந்தார். பிள்ளையார் தந்தையார் வந்தமையை அடியார்கள் சொல்லக் கேட்டு, திருவுளமகிழ்ந்து எழுந்

தருள; சிவபாதவிருதயர் தொழுதுகொண்டு முன்சென்றணைய; பிள்ளையார் அவரை எதிர்தொழுது,தமக்குச் சிவஞானம் அருளிய திருத்தோணியப்பரை நினைந்து, சீர்காழிமேலே "மண்ணினல்லவண்ணம்" என்னுந் திருப்பதிகம் பாடியருளினார்.

சிலநாளாயினபின், பிள்ளையார் அடியார்களோடு பிறதலங்களையும் வணங்கும்பொருட்டுப் புறப்பட்டு,பாண்டியரும் மாதேவியாரும் குலச்சிறைநாயனாரும் பிரிவாற்றாமையால் உடன் செல்லச் சென்று, திருப்பரங்குன்றம், திருவாப்பனூர், திருப்புத்தூர், திருப்பூவணம், திருக்கானப்பேர்,திருச்சுழியல்,திருக்குற்றாலம், திருக்குறும்பலா,திருநெல்வேலி என்னுந் தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு, இராமேச்சுரத்தை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடி, அங்கே இருந்தருளினார். அங்கிருந்தே, ஈழமண்டலத்தில் உள்ள திருக்கோணமலை, திருக்கேதீச்சரம் என்னுந் தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடியருளினார். சிலநாட்சென்றபின் இராமேச்சுரத்தை நீங்கி,திருவாடானை, திருப்புனவாயில் என்னுந் தலங்களை வணங்கி, குலச்சிறைநாயனாருடைய ஊராகிய மணமேற்குடியை அடைந்து,அங்கே எழுந்தருளியிருந்தார். இருக்குநாளிலே அதற்குச் சமீபத்திலுள்ள சிவஸ்தலங்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ்செய்துகொண்டு திரும்பிவிட்டார். சிலநாளாயினபின், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சோழநாட்டுக்கு மீண்டு செல்லுதற்குத் திருவுளங்கொண்டருள; பாண்டியரும் மாதேவியாரும் குலச்சிறைநாயனாரும் அவருடைய திருவடிகளைப் பிரியலாற்றாமையால் அவருடன் போதற்கு ஒருப்பட்டார்கள். பிள்ளையார் அது கண்டு, "அன்பர்களே, நீங்கள் நம்முடைய சொல்லை மறாமல்,சைவசமயத்தைப் பரிபாலனஞ் செய்துகொண்டு உங்கள் நகரத்திலேயே இருங்கள்" என்று அருளிச்செய்தார். அவர்கள் பிள்ளையாருடைய ஆஞ்ஞையை மறுத்தற்கு அஞ்சி, அவருடைய ஸ்ரீ பாதங்களை நமஸ்கரித்து, அநுமதி பெற்றுத் திரும்பி மதுரையை அடைந்து,அவரை ஒருபொழுதும் மறவாத சிந்தையுடன் சைவசமயபரிபாலனஞ் செய்துகொண்டிருந்தார்கள்.

பிள்ளையார் திருக்கூட்டத்தோடு பாண்டிநாட்டைக் கடந்து,சோழநாட்டை அடைந்து, திருக்களர், திருப்பாதாளீச்சரம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, முள்ளிவாய்க்கரையை அணைந்தார். அங்கே ஆறு மிகப் பெருகுதலால், நீர்வாணர்கள் ஓடத்தை ஓடக்கோல் நிலையில்லாமை பற்றிக் கரையிலே நிறுத்திப் போய்விட்டார்கள். பிள்ளையார் அது கண்டு, கரையிலே எழுந்தருளி நின்றபோது,திருக்கொள்ளம்பூதூர் எதிரே தோன்ற; அங்கே சென்று சுவாமி தரிசனஞ்செய்தற்குத் திருவுளம் விரும்புதலால், அதிசீக்கிரம் ஓடத்தின் கட்டை அவிழ்த்து, சிவனடியார்களை அதிலே ஏற்றி, நாவலமேகோலாக அதன்மேல் நின்று,

"கொட்டமே கமழும்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். பரமசிவனுடைய திருவருளினால் ஓடஞ் சென்று மற்றக்கரையை அடைந்தது. பிள்ளையார் அடியார்களுடனே இறங்கித் திருக்கோயிலை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்து, அங்கே எழுந்தருளியிருந்தார்.

சிலநாளாயினபின், வாதிலே அக்கினியில் வேவாத திருப்பதிகத்தையுடைய கடவுளை வணங்க விரும்பி, திருக்கொள்ளம்பூதூரை நீங்கி, திருநள்ளாற்றை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, "பாடகமெல்லடி" என்னும் வினவுரைப்பதிகம் பாடி, சிலநாள் அங்கெழுந்தருளியிருந்தார்.

பின்பு பிள்ளையார் திருத்தெளிச்சேரியை அடைந்து சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு செல்லும்போது, பௌத்தர்கள் இருக்கின்ற போதிமங்கை சமீபிக்க, அதனை அறிந்த அடியார்களெல்லாரும் கடலொலிபோலச் சங்கு தாரை முதலிய பலவகைப்பட்ட வாத்தியங்களையும் முழக்கி ஆரவாரித்தார்கள். முத்துச் சின்னங்களெல்லாம் "பரசமயகோளரி வந்தார்" என்று ஊதின. பௌத்தர்கள் ஒருங்கு கூடி பிள்ளையார் தங்கள் எல்லையில் எழுந்தருளும்போது அடியார்களெடுத்த ஆரவாரத்தினாலும் திருச்சின்னவொலியினாலும் பொறாமைகொண்டு, தங்கள் சமயநூலிலே மகாபாண்டித்தியமுள்ள புத்தநந்தி முதலியோருக்குச் சொன்னார்கள். அவர்களுடைய சொல்லும் பிள்ளையார்முன் வருகின்ற திருச்சின்னவொலியும் அடியார்களுடைய ஆரவாரமும் காதினுள்ளே புகுத்திய நாராசம்போலப் புகுந்தபோது, புத்தநந்தி மிகக் கோபித்து எழுந்து, பௌத்தர் கூட்டஞ்சூழச் சென்று, சிவனடியார்களை அணைந்து, "நீங்கள் எங்களைத் தருக்கத்தில் வென்றன்றோ வெற்றிச் சின்னங்கள் ஊதல்வேண்டும்" என்று கோபங்கொண்டு விலக்கினான். அப்பொழுது திருத்தொண்டர்கள் மிகக்கோபித்து, "இந்தக் கொடுஞ் செயலுக்கு இவர்களைக் கொல்லாது பொறுக்கின், இவர்கள் தங்கள் நிலையெடுப்பார்கள்" என்று முத்துச் சிவிகைமேல் எழுந்தருளியிருக்கின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையாரை அடைந்து வணங்கி நிகழ்ந்ததை விண்ணப்பஞ் செய்தார்கள். பிள்ளையார் "நாம் வருமிடத்திலே இது நமக்கு அழகிதாய் இருக்கின்றது. புத்தநந்தி வாதுசெய்யப் புகுமிடத்து அவனுடைய பொய்ம்மேற்கோளை அறிகின்றோம்" என்று அருளிச்செய்தார். அதற்குமுன்னே, தேவாரத் திருமுறை எழுதும் அடியவர் பொறாமல், தேவாரத்திலே "புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்—சித்தத் தவர்க டெளிந்து தேறின—வித்தக நீறணிவார்வினைப்பகைக்—கத்திர மாவன வஞ்செ ழுத்துமே" என்னுந் திருப்பாட்டை ஓதி, "இப்புத்தனுடைய சிரம் உருண்டு விழும்படி இடியிடித்து விழக்கடவது" என்று சொல்லியருளினார். உடனே இடியிடித்துப் புத்தநந்தியுடைய சரீரத்தையும் தலையையும் வேறாகக் கூறுபடுத்

தியது. அது கண்ட பௌத்தர் கூட்டம் அஞ்சிக் குலைந்தோடிற்று. பௌத்தர்களுடைய நிலைமையையும், புத்தநந்தியுடைய சரீரமும் தலையும் அற்று விழும்படி. தமிழ்வேதலேககர் தேவாரத்திருப்பாட்டினால் அறுத்ததையுங் கண்டு அடியார்களெல்லாரும் ஓடிப்போய், பிள்ளையாருக்கு விண்ணப்பஞ்செய்தார்கள். பிள்ளையார் "அங்ஙனம் எதிர்ந்த விலக்கை நீக்கும் முறை அதுவேயாம். நீங்களெல்லீரும் ஹரஹர என்று ஆரவாரியுங்கள்" என்று அருளிச்செய்ய; அவ்வொலிமிக்கோங்கிற்று. அஞ்சி ஓடிய பௌத்தர்களெல்லாரும் ஆச்சரியங்கொண்டு, மீண்டும் ஒருங்கு கூடி, "இச்செய்கை வஞ்சனையோ அவர்களுடைய சைவசமயத்து உண்மையோ" என மருண்டு, "நீங்கள் எங்களோடு மந்திரவாதமின்றி, எதிர்ந்து தருக்கம் பேச வாருங்கள்" என்று, தங்களுக்குள்ளே தலைவனாகிய சாரிபுத்தனையே முன்கொண்டு, பின்னும் வந்தார்கள். பிள்ளையார் அதைக் கேட்டுத் திருவுளமிகமகிழ்ந்து, விரைந்து சென்று, முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, ஒரு சத்திரமண்டபத்தின்மேல் ஏறி, சைவர்கள் சூழ் வீற்றிருந்துகொண்டு, திருமுன்னே நின்ற அடியார் சிலரை நோக்கி, "தருக்கம் பேச விரும்பிய பௌத்தர்களை இங்கே அழையுங்கள்" என்று ஆஞ்ஞாபித்தருளினார். அவ்வடியார்கள் அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டு, பௌத்தர் கூட்டத்தை அணைந்து, "வேதசிவாகமாதி சமஸ்தசாத்திரங்களையும் ஓதாதுணர்ந்தவரும், முத்தமிழ்வேந்தரும், பரசமயகோளரியும், எங்கள் பரமாசாரியருமாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் உங்கள் விருப்பத்தின்படி வாது செய்தற்கு உங்களை மகிழ்ச்சியோடும் அழைக்கின்றார். வாருங்கள்" என்றார்கள். அது கேட்ட சாரிபுத்தன் பௌத்தர்களோடு வந்து, மண்டபத்திலே பிள்ளையாருக்குச் சமீபத்தில் நின்றான். அப்பொழுது திருச்சின்னத்தைத் தடுத்த புத்தநந்தியினுடைய சிரசைப் பொடிபடுத்திய தமிழ்வேதலேககர் பிள்ளையாருடைய திருவடிகளைவணங்கித் துதித்து, சாரிபுத்தனோடு வாதுசெய்து பௌத்தசமயத்தை நிராகரணம்பண்ணி, அவனை வென்று, பிள்ளையாருடைய திருவடிகளை நமஸ்கரித்தார். பௌத்தர்கள்தோற்று, தங்கள் சமயம் பொய்ந்நெறியென்று கண்டு, பிள்ளையாரை விழுந்து நமஸ்கரித்தார்கள். பிள்ளையார் சைவசமயமே சற்சமயமென்பதை அவர்களுக்கு ஐயந்திரிபற உணர்த்தியருள; அவர்கள் அவருடைய கருணைநோக்கம் பெற்றமையால், அதனை இனிதுணர்ந்து, அவரை வணங்கி, சைவர்களாயினார்கள்.

பிள்ளையார் அவ்விடத்தினின்று நீங்கி, திருக்கடவூரிலேசென்று, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, அங்கே எழுந்தருளியிருந்தார். சிலநாளாயினபின், திருநாவுக்கரசுநாயனார் திருப்பூந்துருத்தியில் இருத்தலைக் கேள்வியுற்று, அவரைக் காணவிரும்பிப் புறப்பட்டுச் சென்று, திருப்

பூந்துருத்திக்குச் சமீபித்தார். அதைத் திருநாவுக்கரசுநாயனர் கேட்டு, மனமகிழ்ந்து, அவரை எதிர்கொண்டு வணங்கும்படி சென்று, அவர்வரும் எல்லையை அடைந்து, திருச்சின்னத்தின் ஓசையைக் கேட்டு அவரைத் தரிசிக்கும்படி சூழ்ந்த சனங்களுடைய நெருக்கத்தினாலே, தம்மை ஒருவரும் காணாதபடி உட்புகுந்து, அவர் ஏறிவரும் முத்துச்சிவிகையைத் தாங்குகின்றவர்களோடு தாமும் ஒருவராய்த் தாங்கிக்கொண்டு வந்தார். பிள்ளையார் திருப்பூந்துருத்திக்கு மிகச் சமீபித்தவுடனே "அப்பர் எங்குற்றார்" என்று வினவ; அதைக் கேட்ட அப்பமூர்த்தி "அடியேன் தேவரீரைத் தாங்கிவரும் பெருவாழ்வைப் பெற்று இங்குற்றேன்" என்றார். உடனே பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி, மனப்பதைப்போடும் அப்பமூர்த்தியை வணங்க, அப்பமூர்த்தியும் தம்மை அவர் வணங்குதற்கு முன் தாம் அவரை வணங்க; அது கண்ட அடியார்களெல்லாரும் வணங்கி ஆனந்தகோஷஞ் செய்தார்கள். பிள்ளையார் அப்பமூர்த்தியோடும் திருப்பூந்துருத்தியிற் சென்று, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டிருந்தார். பிள்ளையார் தாம் பாண்டிநாட்டிற்சென்று சமணர்களை வாதில் வென்றதையும், பாண்டியனுடைய கூனை நிமிர்த்ததையும், அந்நாடெங்கும் விபூதியை வளர்த்ததையும், மங்கையர்க்கரசியார் குலச்சிறைநாயனர் என்கின்ற இருவருடைய பெருமையையும், அப்பமூர்த்திக்குச் சொல்லியருளினர். அப்பமூர்த்தி தாந் தொண்டைநாட்டுக்குச் சென்று அங்குள்ள சிவஸ்தலங்களை வணங்கியதைப் பிள்ளையாருக்குச் சொல்லியருளினர். அப்பமூர்த்தி விடைபெற்றுக்கொண்டு, பாண்டிநாட்டுக்குப்புறப்பட; பிள்ளையார் காவேரிக்கு வடகரையிற்சென்று, திருநெய்த்தானம், திருவையாறு, திருப்பழனம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, சீர்காழியை அடைந்து, சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடிக்கொண்டிருந்தார்.

நெடுநாட் சென்றபின், பிள்ளையார் தொண்டைமண்டலத்துக்கு யாத்திரை செய்யத் திருவுளங்கொண்டு, தோணியப்பரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, அடியார்களோடு புறப்பட்டு, தம்மோடு உடன்வருதற்குத் துணிந்த தந்தையாராகிய சிவபாதவிருதயரை நோக்கி, "அப்பரே, நீர் இங்கேதானே யாகஞ்செய்து சிவதரிசனம் பண்ணிக்கொண்டிரும்" என்று சொல்லிச் சென்று, சிதம்பரம், திருத்தினைநகர், திருமாணிகுழி, திருப்பாதிரிப்புலியூர், திருவடுகூர், திருவக்கரை, திருவிரும்பைமாகாளம், திருவதிகை, திருவாமாத்தூர், திருக்கோவலூர், திருவறையணிநல்லூர், திருவண்ணாமலை என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு, தொண்டைநாட்டை அடைந்தார். அங்கே திருவோத்தூரிற்சென்று, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார். இருக்குநாளிலே, அந்தத்தலத்திலே உள்ள சிவனடியார் ஒருவர் வந்து, பிள்ளையாரை

வணங்கி நின்று, "பரசமயங்களைப் பாற்றிச் சைவஸ்தாபனஞ் செய்த ருளும் எம்பெருமானே, மெய்க்கடவுளாகிய பரமசிவனுக்கு அடியேன் ஆக்கும் பனைகளெல்லாம் மிக உயர்வாக வளர்ந்தும், ஆண்பனைகளாகி, காயாவாயின. அது கண்ட சமணர்கள் 'நீர் ஆக்கும் ஆண்பனைகளெல்லாவற்றையும் காய்க்கப்பண்ணுதல் கூடுமோ' என்று நகைசெய்து இகழ்ந்து சொன்னூர்கள். தேவரீர் திருவருள்செய்யவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்தார். பிள்ளையார் அது கேட்டுப் பரிந்தருளி, எழுந்து விரைந்து திருக்கோயிலிற்சென்று, சுவாமியை வணங்கி, "பூந்தொக்காயின" என்னுந் திருப்பதிகம் பாடியருளினூர். அத்திருப்பதிகத்தின் திருக்கடைக் காப்பிலே "குரும்பை யாண்பனை யின்குலை யோத்தூர்" என்று அருளிச்செய்தார். அதனூல் ஆண்பனைகளெல்லாம் குரும்பைக் குலைகளையுடையனவாய்ப் பெண்பனைகளாயின. அதனைக் கண்டவர்களெல்லாரும் ஆச்சரியங்கொண்டார்கள். பிள்ளையார் ஆண்பனைகள் காய்த்துப் பழுக்கும்படி அன்பருக்கு அருள்செய்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு அங்கே எழுந்தருளியிருந்தார். சமணர்கள் பரசமய கோளரியாராகிய பிள்ளையாருடைய செய்கையைக் கண்டு, அந்நாட்டை விட்டு ஓடினூர்கள். அவர்களிற்சிலர் பரமசிவனே மெய்க்கடவுள் என்று துணிந்து, சைவர்களாகி உய்ந்தார்கள். பிள்ளையாருடைய திருவாக்கிலே பிறத்தலால், அப்பனைகளெல்லாம் தங்கள் காலத்தைக் கழித்து, ஒழியாபபிறவியை ஒழித்துச் சிவத்தை அடைந்தன.

பிள்ளையார், சிலநாளாயினபின், அத்திருப்பதியை நீங்கி, திருமாகறல், திருக்குறங்கணின்முட்டம் என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு காஞ்சிபுரத்தை அடைந்தார். அங்கே திருவேகம்பம், திருக்கச்சிநெறிக்காரைக்காடு, திருவனேகதங்காவதம், திருக்கச்சிமேற்றளி என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு அங்கெழுந்தருளியிருந்தார். பின்பு புறப்பட்டு, திருமாற்பேறு, திருவல்லம், திருவிலம்பயங்கோட்டூர், திருவிற்கோலம், திருவூறல் முதலாகிய தலங்களை வணங்கிக்கொண்டு, பழையனூர்த் திருவாலங்காட்டுக்குச் சமீபத்திலே போனூர். அது காரைக்காலம்மையார் திருத்தலையாலே நடந்த திருப்பதியாதலால், அதை மிதிக்க அஞ்சி, அதற்குச் சமீபத்திலே உள்ள ஓரூரிலே அன்றிரவு பள்ளிகொண்டருளினூர். திருவாலங்காட்டில் எழுந்தருளியிருக்குங் கடவுள் அர்த்தயாமத்திலே அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நம்மைப் பாடுதற்கு மறந்தனையோ" என்று அருளிச்செய்ய; உடனே பிள்ளையார் விழித்து எழுந்து, திருவருளைத் துதித்து, "துஞ்சவருவாரும்" என்னுந் திருப்பதிகம் பாடியருளினூர். மற்றநாள் உதயத்திலே, திருக்கூட்டம் தம்மை அணைந்தபொழுது, இரவிலே நிகழ்ந்ததை அவர்களுக்குச்சொல்லியருளினூர். பின்பு திருப்பாசூர், திருவெண்பாக்கம், திருக்காரி

களை முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, திருக்காளத்தி மலைக்குச் சமீபித்து, அதன்மேலே கண்ணப்ப நாயனாருடைய திருத்தொண்டைச் சிறப்பித்து "வானவர்கடானவர்கள்" என்னுந்திருப்பதிகம் பாடிக்கொண்டு சென்று, மலைமேல் ஏறி, சந்நிதானத்தை அடைந்து, சுவாமியை வணங்கினார். அவ்வணக்கத்தாற் பெற்றபயனைக் காண்பார்போல அன்புருவமாகிய கண்ணப்பநாயனாரைக் கண்டு, ஆனந்தவருவி சொரியவிழுந்து நமஸ்கரித்தார். பின் மலையினின்றும் இறங்கி,ஒரு திருமடத்தில் எழுந்தருளியிருந்தார். காலந்தோறும் திருக்காளத்தியப்பரை வணங்கிக்கொண்டு அங்கே எழுந்தருளியிருக்குநாளிலே வடதிசையிலும் மேற்றிசையிலும் தமிழ்மொழிவழக்கு இன்மையால், உத்தரகைலாசம், திருக்கேதாரம், திருக்கோகர்ணம், திருப்பருப்பதம், இந்திரநீலபருப்பதம் முதலிய தலங்களை அங்கிருந்தே வணங்கித் திருப்பதிகம்பாடினார். சிலதினங்கழிந்தபின், திருக்காளத்தியை நீங்கி, திருவேற்காடு, திருவலிதாயம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, திருவொற்றியூரை அடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார். அது நிற்க.

திருமயிலாப்பூரிலே, வைசியர் குலத்திலே, சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்தவரும், பரசமயங்களைப் பாற்றல் வேண்டும் என்னுஞ் சிந்தையுடையவரும், பெருஞ்செல்வருமாகிய சிவநேசரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் ஞானப்பால் உண்டமையையும்,உலகம் உய்யும்பொருட்டுத் திருப்பதிகங்களிலே ஆருகதத்தையும் பௌத்தத்தையும் இழித்துரைத்தலையும், சிவனடியார்கள் சொல்லக் கேள்வியுற்று, மனமிகமகிழ்ந்து, அவருடைய திருவடிகளிலே பேரன்புடையராகி, அகோராத்திரம் அவருடைய திருவருட்டிறங்களையே பேசல் கேட்டலாகிய தொழிலினராயினார். அவர் பெருஞ்செல்வமும் பெருங்கீர்த்தியும் உடையராயினும், பிள்ளைப்பேறின்மையால் மிகக்கவலையுற்று, சிவபூசை மாகேசுரபூசைகள் செய்து, ஒரு பெண்பிள்ளையைப் பெற்றார். அப்பெண் செந்தாமரையாசனியாகிய இலக்குமிபோல மகாசௌந்தரியம் உடையளாதலால், அவளுக்குப் பூம்பாவை என்னும் பெயர் கொடுக்கப்பட்டது. அவளுக்குப் பெதுமபைப்பருவம் வந்தபின், தந்தையார் அவளுடைய குணாதிசயங்களைக் கண்டு வியப்புற்று, மனமகிழ்ந்து, "இவளை விவாகஞ்செயபவரோ என்னுடைய அளவிறந்த திரவியங்களுக்கு உரியவர்" என்றார். அந்நாட்களிலே, திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாண்டிநாட்டிற்சென்று செய்தருளிய திருவருட்டிறங்களெல்லாவற்றையும், அறிந்தவர்கள் வந்து, சிவநேசருக்குச் சொன்னார்கள். சிவநேசர் அதைக்கேட்டு மனமகிழ்ந்து, அவர்களெல்லாருக்கும் அளவிறந்த திரவியங்களைக் கொடுத்து, பிள்ளையா

ளைத் திக்குநோக்கி நமஸ்கரித்து, எழுந்து நின்று, தம்முடைய சுற்ற த்தார்கள் சமஸ்தருங்கேட்க; "அடியேன் என்னுடைய புத்திரியாகிய பூம்பாவையையும் திரவியங்களையும் என்னையும் திருஞானசம்பந்தமூர் த்திநாயனாருக்குக் கொடுத்துவிட்டேன்" என்று சொல்லிப் பேரானந் தம் அடைந்தார். ஒருநாள், பூம்பாவை சேடியரோடு கன்னிமாடத் துக்குப் பக்கத்தில் இருக்கின்ற பூஞ்சோலையிற் சென்று பூக்கொய்யும் பொழுது, ஒரு பாம்பு மல்லிகைப்பந்தரிலே மறைந்து வந்து, அவளு டைய விரலிலே காளி காளாத்திரி யமன் யமதூதி என்னும் நான்கு தந்தங்களும் எலும்பிலே தாவக் கடித்து, நஞ்சை உகுத்து, மேலே படத்தை விரித்து நின்றாடி, அடங்கிற்று. பூம்பாவை மயங்கி விழ; சேடியர்கள் அச்சுற்று அவளைத் தாங்கி, கன்னிமாடத்தினுள்ளே கொ ண்டுபோனார்கள். சிவநேசர் சுற்றத்தாரோடு மனங்கலங்கி அழுதார். விஷவைத்தியர்கள் அநேகர் தனித்தனியே மந்திர தியானபாவகங்கள் செய்தும், எண்ணிறந்த ஔஷதங்களைப் பிரயோகித்தும், விஷம் நீங் காமல் ஏழுவேகமும் முறையே பொங்கித் தலைக்கொண்டது. ஆவி தங்குதற்கு உரிய குறிகள் இல்லாமையால் விஷவைத்தியர்கள் கைவிட; சுற்றத்தார்கள் அவண்மேல் விழுந்து, அலறி அழுதார்கள், சிவநேசர் ஒருவாறு தெளிந்து, "இந்தவிஷத்தை நீக்கினவர்களுக்கு என்னுடைய அளவிறந்த திரவியங்களைக் கொடுப்பேன்" என்று பறையறைவித்தார். மூன்று நாளளவும் அரசரிடத்துள்ளோர் முதலாகிய மந்திரவாதிகள் சமஸ்தரும் வந்து, தங்கள் செய்கையினாலே தீராமையால் திரும்பி விட் டார்கள். சிவநேசர் அது கண்டு மயங்கி, பின்பு, "இவளைப் பிள்ளையா ருக்கு என்று சொல்லியதனால் நான் துன்புறவேண்டுவதில்லை" என்று துன்பநீங்கி, "பிள்ளையார் வருமளவும் இவ்வுடலைத் தகனஞ்செய்து, எலும்பையும் சாம்பரையும் சேமித்து வைப்பேன்" என்றுதுணிந்து, அப்படியே தகனஞ்செய்து, எலும்பையும் சாம்பரையும் ஓர்குடத்தில் இட்டு, கன்னிமாடத்திலே வஸ்திரஞ்சாத்தி ஆபரணங்கள் அணிந்து,பஞ் சணைமேல் வைத்தார். தினந்தோறுந் தவறாமல் மஞ்சனம், மாலை, சந் தனம், அன்னம், விளக்கு முதலியவைகளை அமைத்தார். அதனை அறி ந்த யாவரும் வியப்புற்றார்கள்.

இப்படி நிகழுநாளிலே, "பிள்ளையார் திருக்கூட்டத்தோடு திரு வொற்றியூரில் எழுந்தருளிவந்து சுவாமிதரிசனஞ்செய்துகொண்டிருக்கி ன்றார்" என்று அவ்வூரவர்கள் பலர் வந்து சிவநேசருக்குச் சொன்னார் கள். அவர் அவர்கள் எல்லாருக்கும் வஸ்திரங்களையும் பொன்களை யும் கொடுத்து, பெருங்களிப்புடையராகி, திருவொற்றியூர் வரைக்கும் நடைப்பந்தல் இட்டு,வஸ்திரங்களால் விதானித்து, கமுகுகளும் வாழை களும் நாட்டி, தோரணங்கள் நிரைத்து, கொடிகள் கட்டி, மாலைகள் தூ

க்கி அலங்கரிப்பித்தார். பின்பு "திருவொற்றியூரிற் சென்று திருஞானசம்பந்தப்பிள்ளையாருடைய திருவடிகளை வணங்குவேன்" என்றுஎழுந்து, அத்திருமயிலாப்பூரில் இருக்கின்ற சிவனடியார்களும் உடன்செல்லச்சென்று, திருவொற்றியூருக்குச் சமீபித்தார். அப்பொழுது பிள்ளையாரும் திருவொற்றியூரை அகன்று, திருமயிலாப்பூரை நோக்கி, அடியார் கூட்டத்தோடும் எழுந்தருளிவந்தார். சிவநேசரும் சிவனடியார்களும் அடியார் திருக்கூட்டத்தைத் தூரத்திலேகண்டு, சிவகுமாரராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் எழுந்தருளிவருகின்றார் என்று அளவில்லாத மகிழ்ச்சிகொண்டு, விழுந்து நமஸ்கரித்தார்கள். பிள்ளையார் முத்துச்சிவிகையினின்றுமிறங்கி அவர்களெதிரே தொழுதுகொண்டெழுந்தருளி, சிவநேசருடைய செய்கையை அடியார்கள் சொல்லக் கேட்டு,திருமயிலாப்பூரை அடைந்தார்.

ஆளுடையபிள்ளையார் சிவநேசரிடத்து நிகழ்ந்ததைத் திருவுளத்தடைத்து, அவருடைய கருத்தை முற்றுவித்தற்கும் ஆருகத சமயத்தையும் பௌத்தசமயத்தையும் அழித்தற்கும் திருவுளங்கொண்டு, கபாலீச்சரம் என்னும் ஆலயத்திற் பிரவேசித்து, சிவபெருமானை வலஞ்செய்து, நமஸ்கரித்து, ஸ்தோத்திரஞ்செய்துகொண்டு, திருக்கோயிலுக்குப் புறத்திலே வந்து, சிவநேசரை நோக்கி, "உம்முடைய மகளினது எலும்பை நிறைத்த குடத்தைத் திருக்கோயிற் புறமதிற்றிருவாயிலிலே கொண்டுவாரும்" என்று அருளிச்செய்தார். சிவநேசர் பெருங்களிப்புடையராகி, விழுந்து நமஸ்கரித்து எழுந்து,தம்முடைய வீட்டை அடைந்து, கன்னிமாடத்திலே புகுந்து,வெந்த சாம்பரும் எலும்பும் நிறைந்த குடத்தை எடுத்து, மூடுகின்ற இரத்தினச் சிவிகையினுள்ளே வைத்து,சேடியர்கள் சூழ்ந்து செல்லும்படி, எடுப்பித்துக்கொண்டு வந்து, திருக்கோபுரத்துக்கு எதிரே சிவிகையை நீக்கி, அக்குடத்தை எடுத்து, சிவலிங்கப்பெருமானுக்கு அபிமுகத்திலே வைத்து, நமஸ்காரம்பண்ணினார். திருமயிலாப்பூரில் இருக்கின்றவர்களும், மற்றையூர்களில் உள்ளவர்களும், சமணர்முதலாகிய புறச்சமயிகளும், பார்க்கும்பொருட்டுப் பக்கத்திலே வந்து சூழ்ந்தார்கள். தேவர்கள் முதலியோர் ஆகாயத்திலே வந்து நெருங்கினார்கள். பசுகரணமின்றிச் சிவகரணமுடைய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சர்வான்மாக்களுக்கும் உறுதி பயப்பித்தற்பொருட்டு, அடியார் திருக்கூட்டம் பக்கத்திலே தம்மைச் சூழ்ந்து வரும்படி திருக்கோபுரவாயிலின் நேரே வந்து, பூம்பாவையினது அத்தியிருக்கின்ற மட்குடத்தைக் கண்டு சுத்தசாட்குண்ணிய பரிபூரணராகிய பரமசிவனுடைய திருவருளின் பெருமையைச் சிந்தித்து, இப்பூமியிலே இறந்தவர்களுடைய எலும்பைப் பின்னும் நன்னெறிப்படுத்த அந்நன்மை அவ்வெலும்போடு தொடர்ச்சியாகும் என்று, திருவருணோக்கி

னாலே "பூம்பாவாய்" என்றுவிளித்து, "பூமியிலே மானுடப்பிறப்பு எடு த்தவர்கள் பெறும் பயன் அன்புடனே சிவபெருமானுடைய அடியார்க ளைத் திருவமுதுசெய்வித்தலும், சைவாகமவிதிப்படி செய்யப்படுகின்ற அவருடைய திருவிழாவைத் தரிசித்து ஆனந்தம் அடைதலுமே என்பது சத்தியமாயின், நீ இவ்வுலகர்முன் வருவாய்" என்று, "மட்டிட்டபுன்னை என்னுந் திருப்பதிகத்தை எடுத்தருளினார். அதில் அருளிச்செய்யப்ப ட்ட "போதியோ" என்னுந்திருவாக்காகிய அமிர்தம் அவ்வங்கத்திலே பொருந்த; அது குடத்தினுள்ளே சரீரமாய்ப் பரிணமித்தது. பூம்பா வை முதற்றிருப்பாட்டிலே வடிவு பெற்று, வேறெட்டுப் பாட்டிலே பன்னிரண்டு வயசடைந்து, குடத்தினுள் அடங்கியிருந்தனள். பின்பு பிள்ளையார், சமணர்களும் பௌத்தர்களும் இச்செய்கையை ஏற்றத ன்று என்று எடுத்துச்சொல்வார்கள் என்னுங் கருத்தினாற் பத்தாந்தி ருப்பாட்டை அருளிச்செய்தார். அப்பொழுது பூம்பாவை தன்கை வெளியே தோன்ற, குடமுடைந்து எழுந்தாள். அதுகண்டு பிள்ளை யார் திருக்கடைக்காப்புச் சாத்தியருளினார். அங்ஙனம் எழுந்துநின்ற பூம்பாவையைக் கண்டவர்களெல்லாரும் அற்புதம் எய்தினார்கள். சிவ னடியார்களெல்லாரும் ஹரஹர என்றுசொல்லும் ஓசை மிக்கோங்கி ற்று. தேவர்களும் முனிவர்களும் திருவருட்சிறப்பை நோக்கி, புஷ் பமாரி பொழிந்தார்கள். பூமியில் உள்ளவர்கள் "இது எம்பெருமானு டைய பெருங்கருணையே" என்று, கைகள் சிரசின்மேல் ஏறிக்குவிய ஆனந்தபராயணராய் வீழ்ந்தார்கள். அவ்வற்புதத்தைக் கண்டசமண ர்கண்முதலிய புறச்சமயிகளெல்லாரும் ஏங்கித் தள்ளாடி விழுந்தார் கள். எண்ணில்லாத வயசையுடைய பிரமதேவர், தம்மாலே படைக் கப்பட்ட திலோத்தமையினிடத்தே, அவளினது அழகின்வெள்ளத்தை நான்குமுகத்தினாலே கண்டார்; பதினாறு வயசையுடைய திருஞான சம்பந்தமூர்த்திநாயனாரோ, அத்திலோத்தமையினும் பார்க்க மிகுந்த சௌந்தரியத்தையுடைய தம்மாலே படைக்கப்பட்ட பூம்பாவையினி டத்தே, பரமசிவனது பெருங்கருணைவெள்ளத்தை ஆயிரமுகத்தினாலே கண்டார். பூம்பாவையைக் கண்ட தந்தையாராகிய சிவநேசர் பிள்ளை யாருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்தார். பூம்பாவை சிவ பெருமானைவணங்கி,பின்பு பிள்ளையாரை நமஸ்கரித்து எழுந்து நின்றாள்.

பிள்ளையார் சிவநேசரைநோக்கி, "இனி உம்முடைய புத்திரியை வீட்டிற்குக் கொண்டுபோம்" என்று திருவாய்மலர்ந்தருளினார். சிவ நேசர் பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கித் துதித்து, "சுவாமீ அடியேன் அருமையாகப் பெற்ற இப்புத்திரியைத் தேவரீர் திருமண ஞ்செய்தருள்வேண்டும்" என்று பிரார்த்திக்க; பிள்ளையார் அவரை நோக்கி, "நீர் பெற்ற பெண்விஷத்தினால் இறந்தபின், நாம் சர்வான் மாக்களும் உய்யும்படி அவர்களுக்குச் சிவபெருமானது திருவருண்

மகிமை விளங்கும்பொருட்டு உற்பவிப்பித்தமையால் இவ்வார்த்தை
தகாது" என்று மறுத்தருளினார். அது கேட்டுச் சிவநேசரும் அவர்
சுற்றத்தார்களும் மயங்கி, பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து
அழ; பிள்ளையார் அவர்களுடைய பெருந்துயரம் தணியும்பொருட்டு,
வேதசிவாகமத்துணிவை அவர்களுக்கு எடுத்துப் போதித்தருளினார்.
அதுகேட்ட சிவநேசரும் சுற்றத்தார்களும் கவலைநீங்கினார்கள். பிள்ளை
யார் திருக்கோயிலினுள்ளே எழுந்தருளினார். சிவநேசர் "பூம்பாவை
யை வேறொருவருக்கும் விவாகஞ்செய்து கொடுப்பதில்லை" என்று
கொண்டுபோய், கன்னிமாடத்தில் வைத்தார். அவள் சிவத்தை அடை
ந்தனள். திருக்கோயிலினுள்ளே எழுந்தருளிய பிள்ளையார் சுவாமியை
வணங்கி, திருவருளைத் துதித்து, திருப்பதிகம் பாடிக்கொண்டு, புறம்
போந்து எழுந்தருளியிருந்தார்.

சிலநாளாயினபின், பிள்ளையார் திருமயிலாப்பூரை அகன்று, அங்
குள்ள திருத்தொண்டர்கள் விடைகொள்ள, சிவநேசருக்கு வருத்தநீ
ங்கும்படி மதுரமொழி அருளி, விடைகொடுத்துச் சென்று, திருவா
ன்மியூர், திருவிடைச்சுரம், திருக்கழுக்குன்று, திருவச்சிறுபாக்கம், திரு
வரசிலி, திருப்புறவார், பனங்காட்டூர் முதலாகிய தலங்களை வணங்கி
க்கொண்டு, சிதம்பரத்தை அடைந்து, காலந்தோறும் சபாநாயகரைத்
தரிசனஞ்செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார். சிவபாதவிருதயரும்
சீர்காழியில் உள்ள மற்றைப்பிராமணர்களும் அடியார்களும் "பிள்ளை
யார் சிதம்பரத்தில் வந்து எழுந்தருளியிருக்கின்றார்" என்று கேள்வியு
ற்று, வந்துசேர்ந்தார்கள். பிள்ளையார் அவர்களோடு சபாநாயகரை
வணங்கி அருள் பெற்று, சிதம்பரத்தை அகன்று, சீர்காழியை அடை
ந்து, காலந்தோறும் தோணியப்பரை வணங்கிக்கொண்டு எழுந்தருளி
யிருந்தார். இருக்குநாளிலே, முருகநாயனார் திருநீலநக்கநாயனார் முத
லாகிய திருத்தொண்டர்கள் சுற்றத்தார்களோடு சீர்காழியில் வந்து, பிள்
ளையாரைச் சேவித்துக்கொண்டிருந்தார்கள்.

சிவபாதவிருதயரும் அவர் சுற்றத்தார்களும் ஒருங்கு கூடி, "திரு
ஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருக்கல்யாணஞ் செய்தருளுதற்கு இது
வே பருவம்" என்று எண்ணி, பிள்ளையாரை அணைந்து, "சுவாமீ,
தேவரீர் வைதிகச்சடங்கைப் பிறருக்குக் காட்டும்பொருட்டு, ஓர்கன்
னியை விவாகஞ்செய்தருளல் வேண்டும்" என்று விண்ணப்பஞ்செ
ய்தார்கள். பிள்ளையார் "அது கூடாது" என்று மறுத்தருள; பிராம
ணர்கள் பின்னுங்கைதொழுது, "தேவரீர் இப்பூமியின்கண்ணே வேத
நெறியை ஸ்தாபிக்கப் புகுந்தீர். ஆதலால் அவ்வேதவிதிப்படி திரு
மணஞ் செய்தருளுதற்குத் திருவுளஞ்செய்தல்வேண்டும்" என்றார்கள்.
பிள்ளையார் வேதநெறி நிலைப்படும்பொருட்டு அதற்கு உடன்பட்டருளி

னார். அது கண்ட தந்தையாரும், மற்றைப்பிராமணர்களும் "இது சிவ பெருமானுடைய திருவருள்" என்று உருகி மனமகிழ்ந்து, திருநல்லூரிலிருக்கின்ற பிராமணருள் நம்பாண்டார்நம்பி என்பவருடைய புத்திரியே திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு மனைவியாதற்குத் தகுதியுடையவள்" என்று எண்ணினார்கள். தந்தையாராகிய சிவபாதவிருதயர் பிராமணர்களோடும் திருத்தொண்டர்களோடும் விவாகம்பேசுதற்குத் திருநல்லூரைச் சமீபித்து, அங்குநின்று சுற்றத்தாரோடு வந்து தம்மை எதிர்கொண்டு வணங்கிய நம்பாண்டார் நம்பியோடு அவர் வீட்டை அடைந்தார். நம்பாண்டார்நம்பி சிவபாதவிருதயரையும் மற்றையோரையும் உபசரித்து, "நீங்கள் இங்கே எழுந்தருளிவந்தது என்னை என்றுவினவ; அவர்கள் நம்பாண்டார்நம்பியை நோக்கி, "நாங்கள் திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு உம்முடைய புத்திரியை விவாகம் பேசி வந்தோம்" என்று சொல்ல; நம்பாண்டார் நம்பி பெருங்களிப்புடையராகி, சிவபாதவிருதயரை நோக்கி, "சுவாமீ, தேவரீருடைய பெருந்தவத்தினாலே திருவவதாரஞ் செய்தவரும், உலகமாதாவாகிய உமாதேவியாருடைய திருமுலைப்பாலை உண்டவருமாகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு அடியேன் யானும் என்குலமும் உய்யும்பொருட்டு, என்குலக்கொழுந்தை விவாகஞ்செய்து கொடுத்தற்கு என்னதவஞ் செய்தேனோ" என்றார். அதுகேட்ட சிவபாதவிருதயர் மற்றவர்களோடு மகிழ்ச்சியுடன் சீர்காழிக்கு மீண்டு சென்று, பிள்ளையாருக்கு அதனைத் தெரிவித்து, சோதிடர்களைக்கொண்டு விவாகத்திற்குச் சுபதினமும் சுபமுகூர்த்தமும் நிச்சயிப்பித்து, எங்குந்திருக்கல்யாணபத்திரம் பெருஞ்சிறப்பினோடு அனுப்பி, திருக்கல்யாணத்துக்கு வேண்டும் முயற்சிகளைச் செய்வித்தார். நம்பாண்டார்நம்பியும் விவாகத்துக்கு வேண்டும் முயற்சிகளைச் செய வித்தார்.

ஆளுடைய பிள்ளையார், திருக்கல்யாணதினத்துக்கு முதற்றினத்திலே சமாவர்த்தனம்பண்ணி, ரக்ஷாபந்தனஞ்செய்து, மற்றைநாட்காலையில் நித்தியகருமங்களைச் செய்து, திருத்தோணியப்பரை வணங்கிக்கொண்டு, முத்துச்சிவிகைமேல் ஏறி, திருக்கல்யாணந்தரிசிக்க வந்த சமஸ்தருஞ்சூழ, மங்கலவாத்தியங்கள் ஒலிக்க, குடைகள் சாமரங்கள் ஆலவட்டங்கள் முதலியன நெருங்க, முத்துக்குடை நிழற்ற, மகாஅலங்காரத்தோடு சென்று, திருநல்லூரைச் சமீபித்து, அங்கிருந்து வந்து அநேகர் எதிர்கொள்ளப் போய, அங்குள்ள திருப்பெருமணம் என்னும் ஆலயத்திற் பிரவேசித்து, சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு, பிராமணர்களுடைய வேண்டுகோளின்படி திருக்கோயிலுக்குப் புறத்தில் இருக்கின்ற ஒரு திருமடத்தின்மேல புகுந்தருளினார். பிராமணர்கள் பிள்ளையாரைப் பத்துத்துவரையும் ஓமாலிகை முப்பத்திரண்டும்

விரை ஐந்துமாகிய இருவகை வாசனைத் திரவியங்களையும் வெவ்வேறு சேர்த்து அரைத்துத் திருமேனியிலே பூசி, திருமஞ்சனநீராட்டி, விலைமதிப்பில்லாத வஸ்திராபரணங்களாலே திருக்கோலஞ்செய்தார்கள். பின்பு பிள்ளையார் பரமசிவனது திருக்கண்ணினின்றும் உதிக்குந்திருவருட்குறியாகிய உருத்திராக்ஷமாலையைச் சர்வலோகத்தாரும் துதிக்கும்படி வணங்கித் தாமே எடுத்துத் தரித்து, பசுமலநீக்கத்துச் சிவத்துவக்குறியாகி அழகுக்கு அணியாய் விளங்குகின்ற திருவெண்ணீற்றைத் திருவைந்தெழுத்தோதிச் சாத்திக்கொண்டு,மிக அலங்கரிக்கப்பட்ட திருவீதியிலே எழுந்தருளி வந்து, பரமசிவனை வணங்கி, முத்துச்சிவிகைமேல் ஏறியருளினர். அப்பொழுது பலவகைப்பட்ட வாத்தியங்களும் ஒலித்தன. ஆகாயத்திலுள்ள தேவர்கள் கற்பகப்பூமாரி பெய்தார்கள். பிராமணர்கள் வேதகோஷஞ் செய்தார்கள். பிள்ளையார் முத்துக்குடை நிழற்ற, முத்துச்சின்னங்களெல்லாம் தம்முடைய எண்ணில்லாத திருநாமங்களை எடுத்து ஊத, எழுந்தருளிவந்தார். பூம்பந்தருக்குமுன் வந்தவுடனே, முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, பூக்களும் பொற்சுண்ணமும் பரந்த பாவாடைமேல் நடந்து, திருக்கல்யாண மண்டபத்துட்சென்று, இரத்தினாசனத்தின்மேல் வீற்றிருந்தருளினர் அப்பொழுது நம்பாண்டார்நம்பி, தம்முடைய மனைவியார் பசுப்பாலும் சுத்தஜலமும் ஏந்திப் பின் வர வந்து, பிள்ளையாரைப் பரமசிவனாகப் பாவித்து, தம்முடைய மனைவியார் கரகநீரை வார்க்க, அவருடைய ஸ்ரீபாதங்களை விளக்கி, அங்ஙனஞ்செய்த தீர்த்தத்தைத் தம்முடைய சிரசின்மேலே புரோக்ஷித்து, உள்ளும் பூரித்து, சுற்றத்தார்கண்மேலுந்தெளித்தார், பிள்ளையாருடைய திருக்கரத்திலே ஜலத்தைவார்த்து, தம்முடைய கோத்திரத்தைச் சொல்லி, "என்னுடைய புத்திரியைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்குக் கொடுத்தேன்" என்றார். விவாகமுகூர்த்தம் வர; மணமகளைக் கொண்டுவந்து பிள்ளையாருக்கு வலப்பக்கத்தில் இருத்தினர்கள். திருநீலநக்கநாயனார் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருமுன்பே பரமசிவனைத்தியானித்துக்கொண்டு, வேதவிதிப்படி சடங்கு செய்ய; வேதங்கள் ஒலிக்க, திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமங்கிலியத்தைச் சாத்தி, பாணிக்கிரகணம்பண்ணி, பொரியை அக்கினியில் இட்டு, பரமசிவனைத துதித்து,அக்கினியை வலஞ்செய்யவேண்டி, "அக்கினியாவார் பரமசிவனே" என்று திருவுளங்கொண்டு, திருப்பெருமணம் என்னும் சிவாலயத்திற் செல்லக் கருதி, வேதவிதிப்படி வளர்க்கப்பட்ட அக்கினியை வலஞ்செய்து, "இந்த இல்லொழுக்கம் வந்துசூழ்ந்ததே. நான் இவளோடு சிவபெருமானது திருவடியையடைவேன்" என்று திருவுளங்கொண்டு, சமஸ்தருஞ் சூழும்படி, மனைவியாரோடு சென்று அச்சிவாலயத்திற்பிரவேசித்து, தம்முடைய திருமணத்தைத் தரிசித்தவர்களுடைய பாசத்தை நீக்கத்திருவுளங்கொண்டு, "திருநல்லூர்ப்

பெருமணத்தில் எழுந்தருளியிருக்குங் கடவுளே, தேவரீருடைய திருவடிகளை அடையும் பதம் இது" என்று, "கல்லூர்ப்பெருமணம்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

அப்பொழுது கருணாநிதியாகிய சிவபெருமான் "நீயும் உன்மனைவியும் உன்னுடைய விவாகத்தைக் காண வந்தவர்கள் சமஸ்தரும் இந்தச்சோதியினுள்ளே வந்து நம்மை அடையுங்கள்" என்று அருளிச்செய்து, திருக்கோயில் உட்பட மேலோங்கிய சுத்தசோதிவடிவமாகி,அச்சோதிக்கு ஒருதிருவாயிலை வகுத்துக் காட்டியருளினார். கிருபாசமுத்திரமாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சோதிவடிவாய் நின்றகடவுளை வணங்கித் துதித்து, உலகம் உய்யும்பொருட்டு அதனை அடையும் நெறியை அருளிச்செய்யத் திருவுளங்கொண்டு, யாவருக்கும் ஞான மெய்ந்நெறி நமச்சிவாய என்கின்ற மந்திரம் என்னுங்கருத்தையுடைய "காதலாகிக் கசிந்து" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தைச் சமஸ்தருங் கேட்க அருளிச்செய்து, "இக்கலியாணங் காணவந்த எல்லீரும் உங்கள் சனனநோய் தீரும்பொருட்டு, இந்தச்சோதியினுள்ளே பிரவேசியுங்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். பிறவிக்கடலிலே கரைகாணாது அழுந்தி அறிவின்றி மயங்குகின்றவர்கள், பிள்ளையாருடைய திருமணத்தைச் சேவிக்கப்பெற்றமையால், அந்தச்சோதியினுள்ளே புகுந்தார்கள். திருநீலநக்கநாயனார், முருகநாயனார், சிவபாதவிருதயர், நம்பாண்டார்நம்பி, திருநீலகண்டப்பெரும்பாணர் முதலிய திருத்தொண்டர்கள் தங்கள் தங்கள் மனைவியரோடும் சுற்றத்தாரோடும் புகுந்தார்கள். பிள்ளையாருடைய முத்துச்சிவிகைமுதலியவற்றைத் தாங்கிச் சென்றவர்களும் மற்றைப்பரிசனங்களும் தொழுது புகுந்தார்கள். சைவர், பாசுபதர்,மகாவிரதர், காளாமுகர், வாமர், வைரவர் என்கின்ற அறுவகை உட்சமயிகளும் வைதிகசைவர்களும் சைவசித்தாந்திகளும் ஆகிய சமஸ்தரும் அந்தச்சுத்தசோதியினுள்ளே புகுந்தபின், சர்வான்மாக்களையும் உய்விக்கும்பொருட்டுத் திருவவதாரஞ்செய்தருளிய சைவசித்தாந்த சமயாசாரியராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தம்முடைய மனைவியாரைக் கைப்பற்றிக்கொண்டு, அந்தச்சோதியை வலஞ்செய்து, அதனுள்ளேபுகுந்து, சிவசாயுச்சியம் அடைந்தார். அதன்பின் அந்தச்சோதிமறைந்துவிட, திருப்பெருமணமாகிய திருக்கோயில் தோன்றுதலும், உலகத்திலேபேறில்லாதவர்களெல்லாருங் கவலைகொண்டார்கள். பிள்ளையார் சோதியுட்புகுந்தமையைத் தூரத்தே கண்டு நணுகப்பெறாத அரிபிரமேந்திராதிதேவர்களும் முனிவர்களும் கவலை நீங்க எடுத்துத் தோத்திரம்பண்ணினார்கள்.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணமுற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணம்.

நீடுவண்புகழ்ச் சோழர்நீர்நாட்டிடை நிலவு
மாடுபொன்பொழி காவிரிவடகரைக் கீழ்பா
லாடுபூங்கொடி மாடநீடியவணி நகர்தான்
பீடுதங்கிய திருப்பெருமங்கலப் பெயர்த்தால். (௧)

இஞ்சிசூழ்வன வெந்திரப்பந்திசூழ் ஞாயின்
மஞ்சுசூழ்வன வரையெனவுயர்மணி மாட
நஞ்சுசூழ்வன நயனியர்களினமெல் லடிச்செம்
பஞ்சுசூழ்வன காளையர்குஞ்சியின் பரப்பு. (௨)

விழவறாதன விளங்கொளிமணிநெடு வீதி
முழவறாதன மொய்குழலியர்நட வரங்க
மழவறாதன மங்கலம்பொலிமணி முன்றி
லுழவறாதனல் வளத்தனவோங்கிருங் குடிகள். (௩)

நீறினிற்பொலி சடைமுடிநெற்றிநாட் டத்துக்
காரினிற்றிகழ் கண்டர்தங்காதலோர் குழுமிப்
பாரின்மிக்கதோர் பெருமையாற்பரமர்தாள் பரவுஞ்
சீரின்மிக்கது சிவபுரியெனத்தகுஞ் சிறப்பால். (௪)

இன்னவாழ்பதி யதனிடையேயர்கோக் குடிதான்
மன்னிநீடிய வளவர்சேனாபதிக் குடியாந்
தொன்மைமேவிய தொடர்ச்சியானிகழ்வது தூய
பொன்னிநாட்டுவே ளாண்மையிலுயர்ந்தபொற் பினதால். (௫)

அங்கண்மிக்கவக் குடியினிலவதரித் துள்ளார்
கங்கைவாழ்முடி யார்தொண்டர்கலிக்காம ரென்பார்
தங்கணாயக ரடிபணிவாரடிச் சார்ந்து
பொங்குகாதலி னவர்பணிபோற்றுதல் புரிந்தார். (௬)

புதியநாண்மதிச் சடைமுடியார்திருப் புன்கூர்க்
கதிகமாயின திருப்பணியனேகமுஞ் செய்து
நிதியமாவன நீறுவந்தார்கழ லென்று
துதியினாற்பர வித்தொழுதின்புறு கின்றார். (௭)

நாவலூர்முன்னர் நாதனைத்தூதுவிட் டதனுக்
கியாவரிச்செயல் புரிந்தனரென்றவ ரிழிப்பத்
தேவர்தம்பிரா னவர்திறந்திருத்திய வதற்கு
மேவவந்தவச் செயலினைவிளம்புவா னுற்றேன். (அ)

வேறு.

திருத்தொண்டத் தொகையருளித் திருநாவ லூராளி
கருத்தொன்று காதலினாற் கணகமதிற் றிருவாரூ
ரொருத்தர்கழன் முப்பொழுது முருகியவன் பொடுபணிந்து
பெருத்தெழுமெய் யன்பினாற் பிரியாதங் குறையுநாள். (௯)

த்தாளாண்மை யுழவுதொழிற் றன்மைவளந் தலைசிறந்த
வேளாளர் குண்டையூர்க் கிழவரெனு மேதக்கோர்
வாளார்வெண் மதியணிந்தார் மறையவனாய் வழக்கினில்வென்
றுளாகக் கொண்டவர்தா ளடைந்தன்பா லொழுகுவார். (௧0)

செந்நெல்லும் பொன்னன்ன செழும்பருப்புந் தீங்கரும்பி
னின்னல்ல வமுதமுத லெண்ணில்பெரும் பலவளங்கண்
மன்னியசீர் வன்றொண்டர்க் கமுதாக வழுவாமற்
பன்னெடுநாள் பரவையார் மாளிகைக்குப் படிசமைத்தார். (௧௧)

ஆனசெய லன்பின்வரு மார்வத்தான் மகிழ்ந்தாற்ற
வானமுறை வழங்காமன் மாநிலத்து வளஞ்சுருங்கப்
போனகநெற் படிநிரம்ப வெடுப்பதற்குப் போதாமை
மானமழி கொள்கையினான் மனமயங்கி வருந்துவார். (௧௨)

வன்றொண்டர் திருவாரூர் மாளிகைக்கு நெல்லெடுக்க
இன்றுகுறை யாகின்ற தென்செய்கே னெனநினைந்து
துன்றுபெருங் கவலையினாற் றுயரெய்தி யுண்ணாதே
யன்றிரவு துயில்கொள்ள வங்கணர்வந் தருள்புரிவார். (௧௩)

ஆரூரன் றனக்குன்பா னெற்றந்தோ மென்றருளி
நீரூருஞ் சடைமுடியார் நிதிக்கோமான் றனையேவப்
பேரூர்மற் றதனெல்லை யடங்கவுநென் மலைநிறங்கக்
காரூரு நெடுவிசும்புங் கரக்கநிறைந் தோங்கியதால். (௧௪)

அவ்விரவு புலர்காலை யுணர்ந்தெழுவா ரதுகண்டே
யெவ்வுலகி னென்மலைதா னிதுவென்றே யதிசயித்துச்
செவ்வியபொன் மலைவளைத்தார் திருவருளின் செயல்போற்றிக்
கொவ்வைவாய்ப் பரவையார் கொழுநனையே தொழுதெழுவார். (௧௫)

வேறு.

நாவலூர் மன்னனார்க்கு நாயனா ரளித்தநெல்லிங்
கியாவரா லெடுக்கலாகு மிச்செய லவர்க்குச்சொல்லப்
போவன்யா னென்றுபோந்தார் புகுந்தவா றருளிச்செய்து
தேவர்கள் பெருமானேவ நம்பியு மெதிரேசென்றார். (௧௬)

குண்டையூர்க் கிழவர்தாமு மெதிர்கொண்டு கோதில்வாய்மைத்
தொண்டனார் பாதந்தன்னிற் றொழுதுவீழ்ந் தெழுந்துநின்று
பண்டெலா மடியேன்செய்த பணியெனக் கின்றுமுட்ட
வண்டர்தம் பிரானார்தாமே நென்மலை யளித்தாரென்று. (கஎ)

மனிதரா லெடுக்குமெல்லைத் தன்றுநென் மலையினுக்க
மினியெனாற் செய்யலாகும் பணியன்றி தென்னக்கேட்டுப்
பனிமதி முடியாரன்றே யுமக்குநெல் லளித்தாரென்றே
யினியன மொழிந்துதாமுங் குண்டையூ ரெய்தவந்தார். (கஅ)

விண்ணினை யளக்குநெல்லின் வெற்பினை நம்பிநோக்கி
யண்ணலைத் தொழுதுபோற்றி யதிசய மிகவுமெய்தி
யெண்ணில்சீர்ப் பரவையில்லத் திந்நெல்லை யெடுக்கவாளுந்
தண்ணில வணிந்தார்தாமே தரிலன்றி யொண்ணாதென்று. (கக)

வேறு.

ஆளிட வேண் டிக்கொள்வா ரருகுதிருப் பதியான
கோளிலியிற் றம்பெருமான் கோயிலினை வந்தெய்தி
வாளனகண் மடவாள் வருந்தாமே யெனும்பதிக
மூளவருங் காதலுடன் முன்றொழுது பாடுதலும். (உ0)

திருக்கோளிலி-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நீள நினைந்தடி யேனுமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மட வாளவள் வாடி வருந்தாமே
கோளிலி யெம்பெரு மான்குண்டை யூர்ச்சில நெல்லுப்பெற்றே
னாளிலை யெம்பெரு மானவை யட்டித் தரப்பணியே.

கொல்லை வளம்புற விற்றிருக் கோளிலி மேயவனை
நல்லவர் தாம்பர வுந்திரு நாவ லூரனவ
னெல்லிட வாட்கள் வேண்டி நினைந்தேத்திய பத்தும்வல்லா
ரல்லல் களைந்துலகி லண்டர் வானுல காள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கோளிலிநாதர். தேவியார்-வண்டமர்பூங்குழலி.

திருப்பதிகம்—ச.

பகற்பொழுது கழிந்ததற்பின் பரவைமனை யளவன்றி
மிகப்பெருகு நெல்லுலகில் விளங்கியவா ரூர்நிறையப்
புகப்பெய்து தருவனம் பூதங்க ளெனவிசும்பி
னிகர்ப்பரிய தொருவாக்கு நிகழ்ந்ததுநின் மலனருளால். (உக)

தம்பிரா னருள்போற்றித் தரையின்மிசை விழுந்தெழுந்தே
யும்பரா லுணர்வரிய திருப்பாதந் தொழுதேத்திச்
செம்பொனேர் சடையானைப் பிறபதியுந் தொழுதுபோய்
நம்பரா ரூரணைந்தார் நாவலூர் காவலனார். (உ௨)

பூங்கோயின் மகிழ்ந்தருளும் புராதனரைப் புக்கிறைஞ்சி
நீங்காத பெருமகிழ்ச்சி யுடனேத்திப் புறம்போந்து
பாங்கானார் புடைசூழ்ந்து போற்றிசைக்கப் பரவையா
ரோங்குதிரு மாளிகையி னுள்ளணைந்தா ராரூரர். (உ௩)

கோவைவாய்ப் பரவையார் தாமகிழும் படிகூடி
மேவியவர் தம்மோடு மிகவின்புற் றிருந்ததற்பின்
சேவின்மே லுமைபோடும் வருவார்தந் திருவருளி
னேவலினா லவ்விரவு பூதங்கள் மிக்கெழுந்து. (உ௪)

குண்டையூர் நென்மலையைக் குறட்பூதப் படைகவர்ந்து
வண்டுலாங் குழற்பரவை மாளிகையை நிறைவித்தே
யண்டர்பிரான் றிருவாரூ ரடங்கவுநென் மலையாக்கிக்
கண்டவரற் புதமெய்துங் காட்சிபெற வமைத்தனவால். (உ௫)

அவ்விரவு புலர்காலை யாரூரில் வாழ்வார்கண்
டெவ்வுலகில் விளைந்தநென் மலையிவையென் றதிசயித்து
நவ்விமதர்த் திருநோக்கி னங்கைபுகழ்ப் பரவையார்க்
கிவ்வுலகு வாழவரு நம்பியளித் தனவென்பார். (உ௬)

நீக்கரிய நெற்குன்று தனைநோக்கி நெறிபலவும்
போக்கரிதா யிடக்கண்டு மீண்டுந்தம் மில்புகுவார்
பாக்கியத்தின் றிருவடிவாம் பரவையார்க் கிந்நெல்லும்
போக்குமிட மரிதாகு மெனப்பலவும் புகல்கின்றார். (உ௭)

வன்றொண்டர் தமக்களித்த நெற்கண்டு மகிழ்சிறப்பார்
* இன்றுங்கண் மனையெல்லைக் குட்படுநெற் குன்றெல்லாம்
பொன்றங்கு மாளிகையிற் புகப்பெய்து கொள்கவென
வென்றிமுர சறைவித்தார் மிக்கபுகழ்ப் பரவையார். (உ௮)

அணியாரூர் மறுகதனி லாளியங்கப் பறையறைந்த
பணியாலே மனைநிறைத்துப் பாங்கெங்கு நெற்கூடு
கணியாமற் கட்டிநகர் களிகூரப் பரவையார்
மணியாரம் புனைமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார். (உ௯)

---

* இந்தத் திருவிருத்தத்தின்கருத்து. உங்கள் வீட்டு முன்றிலின் எல்லை யெதுவரைக்குமோ அதுவரையிலிருக்கும் நெல் அம்பாரத்தை - உங்கள் வீட்டுக்குள்சேர்த்துக் கொள்ளுங்களென்று பறைசாற்றும்படி பரவைநாச்சியார் உத்தரவுசெய்தருளினார் என்பதாம்.

நம்பியா ரூரர்திரு வாரூரி னயந்துறைநாட்
செம்பொற்புற் றிடங்கொண்டு வீற்றிருந்த செழுந்தேனைத்
தம்பெரிய விருப்பினொடுந் தாழ்ந்துணர்வி னற்பரவி
யிம்பருட னும்பர்களு மதிசயிப்ப வேத்தினார். (௩௰)

குலவுபுகழ்க் கோட்புலியார் குறையிரந்து தம்பதிக்க
ணலகில்புக ழாரூர ரெழுந்தருள வடிவணங்கி
நிலவியவன் றொண்டரது விசைந்ததற்பி னேரிறைஞ்சிப்
பலர்புகழும் பண்பினார் மீண்டுந்தம் பதியணைந்தார். (௩௧)

வேறு.

தேவரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ்செல்வத் திருவாரூர்
காவல்கொண்டு தனியாளுங் கடவுட்பெருமான் கழல்வணங்கி
நாவலூர ரருள்பெற்று நம்பர்பதிகள் பிறநண்ணிப்
பாவைபாகர் தமைப்பணிந்து பாடும்விருப்பிற் சென்றணைவார். (௩௨)

மாலுமயனு முணர்வரியார் மகிழும்பதிகள் பலவணங்கி
ஞாலநிகழ்கோட் புலியார்தம் நாட்டியத்தான் குடிநண்ண
வேலும்வகையா லலங்கரித்தங் கவருமெதிர்கொண் டினிதிறைஞ்சிக்
கோலமணிமா ளிகையின்க ணார்வம்பெருகக் கொடுபுக்கார். (௩௩)

ஆண்டநம்பி யுடன்வந்த வன்பரோடும் புறத்தணைந்து
நீண்டமதிட்கோ புரங்கடந்து நிரைமாளிகைவீ தியிற்போந்து
பூண்டகாதன் மிகுதியினாற் புனைமங்கலதூ ரியமொலிப்ப
ஈண்டுபுகழ்க் கோட்புலியார் மாளிகையெய்தி யுள்ளணைந்தார். (௩௪)

தூயமணிப்பொற் றவிசிலெழுந் தருளியிருக்கத் தூநீராற்
சேயமலர்ச்சே வடிவிளக்கித் தெளித்துக்கொண்ட செழும்புனலான்
மேயசுடர்மா ளிகையெங்கும் விளங்கவிசி யுளங்களிப்ப
ஏயசிறப்பி லர்ச்சனைக ளெல்லாமியல்பின் முறைபுரிவார். (௩௫)

பூந்தண்பனிநீர் கொடுசமைத்த பொருவில்விரைச்சந் தனமெனவே
வாய்ந்தவகிலி னறுஞ்சாந்து வாசநிறைமான் மதச்சேறு
தோய்ந்தபுகைநா வியினறுநெய் தூயபசுங்கர்ப் பூரமுதல்
ஏய்ந்தவடைக்கா யமுதினைய வெண்ணின்மணிப்பா சனத்தேந்தி. (௩௬)

வே று.

வேறுவேறு திருப்பள்ளித் தாமப்பணிகண் மிகவெடுத்து
மாறிலாத மணித்திருவா பரணவருக்கம் பலதாங்கி
யீறில்விதத்துப் பரிவட்ட மூழினிரைத்தே யெதிரிறைஞ்சி
யாறுபுனைந்தா ரடித்தொண்ட ரளவில்பூசை கொளவளித்தார். (௩௭)

செங்கோலரச னருளுரிமைச் சேனபதியாங் கோட்புலியார்
கங்கோமானை நாவலூர் நகரார்வேந்தை நண்பினுற்
றங்கோமனையிற் றிருவமுது செய்வித்திறைஞ்சித் தலைசிறந்த
பொங்கோதம்போற் பெருங்காதல் புரிந்தார்பின்னும் போற்றுவார் (நஅ)

ஆனவிருப்பின் மற்றவர்தா மருமையான்முன் பெற்றெடுத்த
தேனார்கோதைச் சிங்கடியார் தமையுமவர்பின் றிருவுயிர்த்த
மானார்நோக்கின் வனப்பகையார் தமையுங்கொணர்ந்து வன்றொண்டர்
தூநாண்மலர்த்தாள் பணிவித்துத் தாமுந்தொழுது சொல்லுவார். (நகூ)

அடியேன்பெற்ற மக்களிவ ரடிமையாகக் கொண்டருளிக்
கடிசேர்மலர்த்தா டொழுதுய்யக் கருணையளிக்க வேண்டுமெனத்
தொடிசேர்தளிர்க்கை யிவரெனக்குத் தூயமக்க ளெனக்கொண்டப்
படியேமகண்மை யாக்கொண்டார் பரவையார்தங் கொழுநனார். (சo)

கோதைசூழ்ந்த குழலாரைக் குறங்கின்வைத்துக் கொண்டிருந்து
காதனிறைந்த புதல்வியராங் கருத்துட்கசிவா லணைத்துச்சி
மீதுகண்ணீர் விழமோந்து வேண்டுவனவுங் கொடுத்தருளி
நாதர்கோயில் சென்றடைந்தார் நம்பிதம்பி ரான்றோழர். (சக)

வென்றிவெள்ளே றுயர்த்தருளும் விமலர்திருக்கோ புரமிறைஞ்சி
யொன்றுமுள்ளத் தொடுமன்பா லுச்சிகுவித்த கரத்தோடுஞ்
சென்றுபுக்குப் பணிந்துதிருப் பதிகம்பூண னென்றெடுத்துக்
கொன்றைமுடியா ரருளுரிமை சிறப்பித்தார்கோட் புலியாரை. (சஉ)

---

திருநாட்டியத்தான்குடி-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பூணணவதோரரவங் கண்டஞ்சேன் புறங்காட்டாடல் கண்டிகழேன்
பேணீராகிலும் பெருமையையுணர்வன் பிறவேனாகிலுமறவேன்
காணீராகிலுங் காண்பனென்மனத்தாற் கருதீராகிலுங்கருதி
நானேலும்மடி பாடுதலொழியே னாட்டியத்தான்குடிநம்பி.

கூடாமன்னரைக் கூட்டத்துவென்ற கொடிறன்கோட்புலிசென்னி
நாடார்தொல்புகழ் நாட்டியத்தான்குடி நம்பியைநாளும்மறவாச்
சேடார்பூங்குழற் சிங்கடியப்பன் றிருவாரூரனுரைத்த
பாடீராகிலும் பாடுமின்றொண்டீர் பாடநும்பாவம்பாறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ரத்தினகிரிநாதர். தேவியார் மலர்மங்கை.

திருப்பதிகம்—க.

---

சிறப்பித்தருளுந் திருக்கடைக்காப் பதனின்கட்சிங் கடியாரைப்
பிறப்பித்தெடுத்த பிதாவாகத் தம்மைநினைந்த பெற்றியினால்
மறப்பில்வகைச்சிங் கடியப்ப னென்றேதம்மை வைத்தருளி
நிறப்பொற்புடைய விசைபாடி நிறைந்தவருள்பெற் றிறைஞ்சுவார். (௪௨)

அங்குநின்று மெழுந்தருளி யளவிலன்பி னுள்மகிழச்
செங்கணுதலார் மேவுதிரு வலிவலத்தைச் சேர்ந்திறைஞ்சி
மங்கைபாகர் தமைப்பதிகம் வலிவலத்தைக் கண்டேனென்
றெங்குநிகழ்ந்த தமிழ்மாலை யெடுத்துத்தொடுத்த விசைபுனைவார். (௪௩)

திருவலிவலம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஊனங்கைத் துயிர்ப்பா யுயிர்க்கெல்லா மோங்காரத் துருவாகி நின்றானை
வானங்கைத் தவர்க்கும் மளப்பரிய வள்ளலை யடியார்க டம்முள்ளத்
தேனங்கத் தமுதாகி யுள்ளூறுந் தேனைத் தினைத்தற் கினியானை
மானங்கைத் தலத்தேந்த வல்லானை வலிவலந் தனில்வந்து கண்டேனே.

நல்லிசை ஞானசம் பந்தனுநா வினுக்கரையனும் பாடியநற் றமிழ்மாலை, சொல்லியவே சொல்லியேத் துகப்பானைத் தொண்டனே னறியாமை யறிந்து, கல்லியன் மனத்தைக் கசிவித்துக் கழலடி காட்டியென் வினைகளையறுக்கும், வல்லியல் வானவர் வணங்கநின் றானை வலிவலந்தனில் வந்து கண்டேனே.

கலிவலங்கெட வாரழலோம்புங் கற்றநான்மறை முற்றனலோம்ப, வலிவலந்தனில் வந்துகண்டே மனமன்னுநாவலா ரூரன்வன்றொண்டன், னொலிகொளின்னிசைச் செந்தமிழ்பத்து முள்ளத்தாலுகந் தேத்தவல்லார்போய், மெலிவில்வானுல கத்தவரேத்த விரும்பிவிண்ணுல கெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மனத்துணைநாதர். தேவியார்-மாழையங்கண்ணி.

திருப்பதிகம்—௧.

நன்றுமகிழுஞ் சம்பந்தர் நாவுக்கரசர் பாட்டுவந்தீ
ரென்றுசிறப்பித் திறைஞ்சிமகிழ்ந் தேத்தியருள்பெற் றெழுந்தருளி
மன்றினிடையே நடம்புரிவார் மருவுபெருமைத் திருவாரூர்
சென்றுகுறுகிப் பூங்கோயிற் பெருமான்செம்பொற் கழல்பணிந்து. (௪௪)

இறைஞ்சிப்போந்து பரவையார் திருமாளிகையி லெழுந்தருளி
நிறைந்தவிருப்பின் மேவுநா ணீடுசெல்வத் திருவாரூர்ப்
புறம்பணிய கோயில்களும் பணிந்துபோற்றிப் புற்றிடமா
வுறைந்தபெருமான் கழல்பிரியா தொழுகின்ப முற்றிருந்தார். (௪௫)

செறிபுன்சடையார் திருவாரூர்த் திருப்பங்குனியுத் திரத்திருநாள்
குறுகவாலும் பரவையார் கொடைக்குவிழாவிற் குறைவறுக்க
நிறையும்பொன்கொண் டணைவதற்கு நினைந்துநம்பி திருப்புகலூ
ரிறைவர்பாதம் பணியவெழுந் தருளிச்சென்றங் கெய்தினார். (௪௭)

சென்றுவிரும்பித் திருப்புகலூர்த் தேவர்பெருமான் கோயின்மணி
முன்றில்பணிந்து வலங்கொண்டு முதல்வர்முன்பு வீழ்ந்திறைஞ்சித்
தொன்றுமரபி னடித்தொண்டு தோய்ந்தவன்பிற் றுதித்தெழுந்து
நின்றுபதிக விசைபாடி நினைந்தகருத்து நிகழ்விப்பார். (௪௮)

சிறிதுபொழுது கும்பிட்டுச் சிந்தைமுன்ன மங்கொழிய
வறிதுபுறம்போந் தருளியயன் மடத்திலணையார் வன்றொண்ட
ரறிவுகூர்ந்த வன்பருட னணிமுன்றிலிலே யருகிருப்ப
மறிவண்கையா ரருளேயோ மலர்க்கண்டுயில்வந் தெய்தியதால். (௪௯)

துயில்வந்தெய்தத் தம்பிரான் றோழராங்குத் திருப்பணிக்குப்
பயிலுஞ்சுடுமட் பலகைபல கொணர்வித்துயரம் பண்ணித்தே
னயிலுஞ்சுரும்பார் மலர்ச்சிகழி முடிமேலணியா வுத்தரிய
வெயிலுக்கியவெண் பட்டதன்மேல் விரித்துப்பள்ளி மேவினார். (௫௦)

சுற்றுமிருந்த தொண்டர்களுந் துயிலுமளவிற் றுணைமலர்க்கண்
பற்றுந்துயினீங் கிடப்பள்ளி புணர்ந்தபரவை கேள்வனார்
வெற்றிவிடையா ரருளாலே வேமண்கல்லே விரிசுடர்ச்செம்
பொற்றிண்கனக மாக்கண்டு புகலூரிறைவ ரருள்போற்றி. (௫௧)

தொண்டருணர மகிழ்ந்தெழுந்து துணைக்கைக்கமல முகைதலைமேற்
கொண்டுகோயி லுட்புக்குக் குறிப்பிலடங்காப் பேரன்பு
மண்டுகாத லுறவணங்கி வாய்த்தமதுர மொழிமாலை
பண்டங்கிசையிற் றம்மையே புகழ்ந்தென்றெடுத்துப் பாடினார். (௫௨)

---

திருப்புகலூர்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

தம்மையேபுகழ்ந் திச்சைபேசினுஞ் சார்வினுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதேயெந்தை புகலூர்பாடுமின் புலவீர்கா
ளிம்மையேதருஞ் சோறுங்கூறையு மேத்தலாமிடர் கெடலுமா
மம்மையேசிவ லோகமாள்வதற் கியாதுமையுற வில்லையே.

செறுவினிற்செழுங் கமலமோங்குதென் புகலூர்மேவிய செல்வனை
நறவம்பூம்பொழில் நாவலூரன் வனப்பகையப்பன் சடையன்றன்
சிறுவன்வன்றொண்ட னூரன்பாடிய பாடல்பத்திவை வல்லவ
ரறவனாரடிச் சென்றுசேர்வதற் கியாதுமையுற வில்லையே.

திருச்சிற்றம்பலம்.

பதிகம்பாடித் திருக்கடைக்காப் பணிந்துபரவிப் புறம்போந்
தெதிரிலின்ப மிம்மையே தருவாரருள்பெற் றெழுந்தருளி
நிதியின்குவையு முடன்கொண்டு நிறையுநதியுங் குறைமதியும்
பொதியுஞ்சடையார் திருப்பனையூர் புகுவார்புரிநூன் மணிமார்பர். (ருங)

செய்யசடையார் திருப்பனையூர்ப் புறத்துத்திருக்கூத் தொடுங்காட்சி
யெய்தவருள வெதிர்சென்றங் கெழுந்தவிருப்பால் விழுந்திறைஞ்சி
யையர்தம்மை யரங்கிலாட வல்லாரவரோ யழகியரென்
றுய்யவுலகு பெறும்பதிகம் பாடியருள்பெற் றுடன்போந்தார். (ருச)

---

திருப்பனையூர்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மாடமாளிகை கோபுரத்தொடு மண்டபம்வளரும் வளர்பொழிற்
பாடல்வண்டறையும் பழனத்திருப்பனையூர்
தோடுபெய்தொரு காதினிற்குழை தூங்கத்தொண்டர்க ளுள்ளிப்
பாடநின்றுமொறுவல்லரா யவரேயழகியரே.

வஞ்சிநுண்ணிடை மங்கைபங்கினர் மாதவர்வளரும் வளர்பொழிற்
பஞ்சின்மெல்லடியார் பயிலுந்திருப்பனையூர்
வஞ்சியுவ்வளர் நாவலூரன் வனப்பகையப்பன் வன்றொண்டன்
செஞ்சொற்கேட்டுகப்பா ரவரோயழகியரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சவுந்தரேசர். தேவியார்-பெரியநாயகி.

திருப்பதிகம்—உ.

---

வளமல்கியசீர்த் திருப்பனையூர் வாழ்வாரேத்த வெழுந்தருளி
யளவில்செம்பொ னிட்டிகைக ளாண்மேனெருங்கி யணியாரூர்த்
தளவமுறுவற் பரவையார் தம்மாளிகையிற் புகத்தாமு
முளமன்னியதம் பெருமானுர் தம்மைவணங்கி யுவந்தணைவார். (ருரு)

வந்துபரவைப் பிராட்டியார் மகிழவைகி மருவுநா
ளந்தணரூர் மருங்கணிய கோயில்பலவு மணைந்திறைஞ்சிச்
சிந்தைமகிழ விருப்பினொடுந் தெய்வப்பெருமா டிருவாரூர்
முந்திவணங்கி யினிதிருந்தார் முனைப்பாடியர்தங் காவலனர். (ருசு)

பலநாளமர்வார் பரமர்திரு வருளாலிங்கு நின்றும்போய்ச்
சிலைமாமேரு வீரனர் திருநன்னிலத்துச் சென்றெய்தி
வலமாவந்து கோயிலினுள் வணங்கிமகிழ்ந்து பாடினர்
தலமார்கின்ற தண்ணியல்வெம் மையினனென்னுந் தமிழ்மாலை. (ருஎ)

---

திருநன்னிலத்துப்பெருங்கோயில்-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தண்ணியல்வெம்மையி னான்றலையிற்கடை தோறும்பலி
பண்ணியன்மென்மொழி யாரிடக்கொண்டுழல் பண்டரங்கன்
புண்ணியநான்மறை யோர்முறையாலடி போற்றிசைப்ப
நண்ணியநன்னிலத் துப்பெருங்கோயி னயந்தவனே.

கோடுயர்வெங்களிற் றுத்திகழ்கோச்செங்க ணான்செய்கோயி
லாடியநன்னிலத் துப்பெருங்கோயி னயந்தவனைச்
சேடியல்சிங்கி தந்தைசடையன் றிருவாரூரன்
பாடியபத்தும்வல் லார்புகுவார்பர லோகத்துள்ளே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பிரகேசுவரர். தேவியார்-பிரகேசுவரி.

திருப்பதிகம்—க.

பாடியங்கு வைகியபின் பரமர்வீழி மிழலையினி
னீடுமறையான் மேம்பட்ட வந்தணாளர் நிறைந்தீண்டி
நாடுமகிழ வவ்வளவு நடைக்காவணம்பா வாடையுடன்
மாடுகதலி பூகநிரை மல்கமணித்தோ ரணநிரைத்து. (௫அ)

வந்துநம்பி தம்மையெதிர் கொண்டுபுக்கார் மற்றவருஞ்
சிந்தைமலர்ந்து திருவீழி மிழலையிறைஞ்சிச் சேணவிசும்பின்
முந்தையிழிந்த மொய்யொளிசேர் கோயிறன்னை முன்வணங்கிப்
பந்தமறுக்கு நம்பெருமான் பாதம்பரவிப் பணிகின்றார். (௫௯)

படங்கொளரவிற் றுயில்வோனும் பதுமத்தோனும் பரவரிய
விடங்கன்விண்ணோர் பெருமானை விரவும்புளக முடன்பரவி
யடங்கல்வீழி கொண்டிருந்தீ ரடியேனுக்கு மருளுமெனத்
தடங்கொள்செஞ்சொற் றமிழ்மாலை சாத்தியங்குச் சாருநாள். (௬0)

திருவீழிமிழலை-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

விடங்கொண்மாமிடற்றீர் வெள்ளைச்சுருளொன்றிட்டுவிட்டகாதினீரெ
திடங்கொள்சிந்தையினார் கலிகாக்குந் திருமிழலை [ன்று
மடங்கல்பூண்ட விமானமுமண்மிசை வந்திழிச்சிய வானநாட்டையு
மடங்கல்வீழிகொண் டீரடியேற்கு மருளுதிரோ.

வேதவேதியர் வேதநீதிய ரோதுவார்விரி நீர்மிழலையு
ளாதிவீழிகொண் டீரடியேற்கு மருளுகென்று
நாதகீதம்வண் டோதுவார்பொழி னாவலூரன்வன் றொண்டன்றமிழ்
பாடல்பத்தும் வல்லார்பரனோடு கூடுவரே.

திருச்சிற்றம்பலம்.

வாசியறிந்து காசளிக்க வல்லமிழலை வாணர்பாற்
றேசமிக்க திருவருண்முன் பெற்றுத்திருவாஞ் சியத்தடிகள்
பாசமறுத்தாட் கொள்ளுந்தாள் பணிந்துபொருவ னாரென்று
மாசில்பதிகம் பாடியமர்ந் தரிசிற்கரைப்புத் தூரணைந்தார். (௬௬)

---

திருவாஞ்சியம்-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பொருவனார்புரிநூலர் புணர்முலையுமையவளோடு
மருவனார்மருவார்பால் வருவதுமில்லைநம்மடிக
ளிருவனார்பணிந்தேத்துந் திருவாஞ்சியத்துறையு
மொருவனாரடியாரை யூழ்வினைநலியவொட்டாரே.

செந்நெலங்கழனித் திகழ்திருவாஞ்சியத்துறையு
மின்னலங்கலஞ்சடையெம் மிறைவனதறைகழல்பரவும்
பொன்னலங்கலநன்மாடப் பொழிலணிநாவலூரான்
பன்னலங்கலநன்மாலை பாடுமின்பத்தருளீரே.

திருச்சிற்றம்பலம்.

---

செழுநீர்நறையூர் நிலவுதிருச் சித்தீச்சரமும் பணிந்தேத்தி
விழுநீர்மையினிற் பெருந்தொண்டர் விருப்பினோடு மெதிர்கொள்ள
மழுநீடிளமான் கரதலத்தி லுடையார்திருப்புத் தூர்வணங்கித்
தொழுநீர்மையினிற் றுதித்தேத்தித் தொண்டர்சூழ வுறையுநாள். (௬௭)

---

திருநறையூர்ச்சித்தீச்சரம்-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

நீரும்மலருந் நிலவுஞ்சடைமே
லூரும்மரவம் முடையானிடமாம்
வாரும்மருவி மணிபொன்கொழித்துச்
சேருந்நறையூர்ச் சித்தீச்சரமே.

போரார்புரமெய் புனிதன்னமருஞ்
சீரார்நறையூர்ச் சித்தீச்சரத்தை
யாரூரன்சொல் லிவைவல்லவர்க
ளோரார்இமையோ ருலகெய்துவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சித்தநாதேசுரர். தேவியார்-அழகாம்பிகை.

திருப்பதிகம்—௪.

புனிதனார்முன் புகழ்த்துணையார்க் கருளுந்திறமும் போற்றிசைத்து
முனிவர்போற்ற வெழுந்தருளி மூரிவெள்ளக் கங்கையினிற்
பனிவெண்டிங்க ளணிசடையார் பதிகள்பலவும் பணிந்துபோந்
தினியகிளைவி லெய்தினா ரிறைவர்திருவா வடுதுறையில். (௬௩)

அரிசிற்கரைப்புத்தூர்-பண்-இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

அகத்தடிமைசெய்ய மந்தணன்றா னரிசிற்புனல்கொண்டுவந் தாட்டுகின்றான், மிகத்தளர்வெய்திக் குடத்தையுநம் முடிமேல்விழுத்திட்டு நடுங்குதலும், வகுத்தவனுக்குநித் தற்படியும் வருமென்றொருகாசினை நின்றநன்றிப், புகழ்த்துணைகைபுகச் செய்துகந்தீர் பொழிலார் திருப்புத்தூர் புனிதரீரே.

காரூர்மழைபெய்து பொழியருவிக் கழையோடகிலுந்திட் டிருகரையும், போரூரன்புனல்சேர் * அரிசிற்றென் கரைப்பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதர்தம்மை, யாரூரனருந்தமி ழைந்திணொடைந் தழகாலுரைப்பார்களுங் கேட்பவருஞ்,சீரூர்தருதேவர் கணங்களொடு மிணங்கிச் சிவலோகமதெய்துவரே.

திருச்சிற்றம்பலம்.

விளங்குந்திருவா வடுதுறையின் மேயார்கோயில் புடைவலங்கொண்
டுளங்கொண்டுருகு மன்பினுட னுள்புக்கிறைஞ்சி யேத்துவார்
வளங்கொள்பதிக மறையவனென் றெடுத்துவளவன் செங்கணான்
றளங்கொள்பிறப்புஞ் சிறப்பித்துத் தமிழ்ச்சொன்மாலை சாத்தினார்.(௬௪)

திருவாவடுதுறை-பண்-தக்கேசி.
திருச்சிற்றம்பலம்.

மறையவனொரு மாணிவந்தடைய வாரமாயவ னாருயிர்நிறுத்தக், கறைகொள்வேலுடைக் காலனைக்காலாற் கடந்தகாரணங் கண்டுகண்டடியே, னிறைவனெம்பெரு மானென்றெப்போது மேத்தியேத்திநின் றஞ்சலிசெய்து,னறைகொள்சேவடிக் கன்பொடுமடைந்தே னாவடுதுறை யாதியம்மானே.

தெருண்டவாயிடை நூல்கொண்டுசிலந்தி சித்திரப்பந்தர் சிக்கென வியற்றச், சுருண்டசெஞ்சடை யாயதுதன்னைச் சோழனாக்கிய தொடர்ச்சிகண்டடியேன், புரண்டுவீழ்ந்துநின் பொன்மலர்ப்பாதம் போற்றிபோற்றியென் றன்பொடுபுலம்பி, யருண்டென்மேல்வினைக் கஞ்சிவந்தடைந்தே னாவடுதுறை யாதியம்மானே.

திருச்சிற்றம்பலம்.

---

* அரிசொல்லவந்த நதியாதலால் அரிசொல்நதியென்று கும்பகோண தலபுராணத்திற்சொல்லுகின்றது புத்தகங்களில் அரிசிலென்று வழங்குகின்றது.

சாத்தியங்கு வைகுகாட் டயங்குமன்ப ருடன்கூடப்
பேர்த்துமிறைஞ்சி யருள்பெற்றுப் பெண்ணோர்பாகத் தண்ணலார்
தீர்த்தப்பொன்னித் தென்கரைமேற் றிகழும்பதிகள் பலபணிந்து
மூர்த்தியார்தம் மிடைமருதை யடைந்தார்முனைப்பா டித்தலைவர். (௬௫)

மன்னுமருதி னமர்ந்தவரை வணங்கிமதுரச் சொன்மலர்கள்
பன்னிப்புனைந்து பணிந்தேத்திப் பரவிப்போந்து தொண்டருடன்
அந்நற்பதியி லிருந்தகல்வா ரரனூர்திருநா கேச்சரத்தை
முன்னிப்புக்கு வலங்கொண்டு முதல்வர்திருத்தாள் வணங்குவார். (௬௬)

திருவிடைமருது-பண்-தக்கேசி.
திருச்சிற்றம்பலம்.

கழுதைகுங்குமந் தான்சுமந்தெய்த்தாற் கைப்பர்பாழ்புக மற்றதுபோலப்
பழுதுநானுழன் றுளந்தடுமாறிப் படுசுழித்தலைப் பட்டனனெந்தா
யழுதுநீயிருந் தென்செய்திமனனே யங்கணாவ னேயெனமாட்டா
விழுதையெனுக்கோருய்வகையருளா யிடைமருதுறையெந்தைபிரானே.

அரைக்குஞ்சந்தனத் தோடகிலுந்தி யைவனஞ்சுமந் தார்த்திருபாலு
மிரைக்குங்காவிரித் தென்கரைதன்மே லிடைமருதுறை யெந்தைபிரானை
யுரைக்குமூர னொளிதிகழ்மாலை யுள்ளத்தாலுகந் தேத்தவல்லார்க
ளரைப்புழுப்பொடு நடலையுமின்றி நாதன்சேவடி நண்ணுவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

பெருகும்பதிசும் பிறையணிவா ணுதலாள்பாடிப் பெயர்ந்துநிறை
திருவின்மலியுஞ் சிவபுரத்துத் தேவர்பெருமான் கழல்வணங்கி
யுருகுஞ்சிந்தை யுடன்போந்தே யுமையோர்பாகர் தாமகிழ்ந்து
மருவும்பதிகள் பிறபணிந்து கலையநல்லூர் மருங்கணைந்தார். (௬௭)

திருநாகேச்சரம்-பண்-பஞ்சமம்.
திருச்சிற்றம்பலம்.

பிறையணிவாணுத லாளுமையாளவள் பேழ்கணிக்க
நிறையணிநெஞ்சனுங்க நீலமால்விட முண்டதென்னே
குறையணிகொல்லை முல்லையளைந்து குளிர்மாதவிமேற்
சிறையணிவண்டு தார்ப்பண்செய்திரு நாகேச்சரத்தானே.

கொங்கணைவண்ட ரற்றக்குயிலும் மயிலும்பயிலுந்
தெங்கமழ்பூம்பொழில் சூழ்திருநாகேச் சரத்தானை
வங்கமலிகடல் சூழ்வயனாவல் லூரன்சொன்ன
பங்கமில்பாடல்வல் லாரவர்தம்வினை பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சண்பகாரணியர். தேவியார்-குன்றமுலைநாயகி.
திருப்பதிகம்—௬.

செம்மைமறையோர் திருக்கலைய நல்லூரிறைவர் சேவடிக்கீழ்
மும்மைவணக்கம் பெறவிறைஞ்சி முன்புபரவித் தொழுதெழுவார்
கொம்மைமருவு குரும்பைமுலை யுமையாளென்னுந் திருப்பதிக
மெய்ம்மைப்புராணம் பலவுமிகச் சிறப்பித்திசையின் விளம்பினார். (சுஅ)

---

திருக்கலையநல்லூர்-பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங்கண்டு குறிப்பினொடு சென்றவடன் குணத்தினைநன்கறிந்து, விரும்புமவரங் கொடுத்தவளை வேட்டருளிச்செய்த விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர்வினவி, லரும்பருகே சுரும்பருவ வறுபதம்பண்பாட வணிமயில்க ணட மாடு மணிபொழில்சூழயலின், கரும்பருகே கருங்குவளை கண்வளருங்கழனிக் கமலங்கண் முகமலருங் கலையநல்லூர்தானே.

தண்புனலும் வெண்மதியுந் தாங்கியசெஞ்சடையன் றருமனையான் றலைகலனாகக் காமரமுன்பாடி, யுண்பலிகொண் டுழல்பரம னுறையு மூர் நிறைநீ ரொழுகுபுன லரிசிலின்றென் கலையநல்லூரதனை, நண்புடைத்தன் சடையனிசை ஞானிதஞ்சிறுவ னாவலர்கோ னாரூர னவின்றந்துரைசெய், பண்பயிலும் பத்துமிவை பத்திசெய்துபாட வல்லவர்க ளல்லலொடு பாவமிலர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அமுதகலைநாதர். தேவியார்-அமுதவல்லியம்மை.

திருப்பதிகம்—க.

---

அங்குநின்று திருக்குடமூக் கணைந்துபணிந்து பாடிப்போய்
மங்கைபாகர் வலஞ்சுழியை மருவிப்பெருகு மன்புருகத்
தங்குகாத லுடன்வணங்கித் தமிழாற்பரசி யரசினுக்குத்
திங்கண்முடியா ரடியளித்த திருநல்லூரைச் சென்றணைந்தார். (சுகூ)

நல்லூரிறைவர் கழல்போற்றி நவின்றுநடுவு நம்பர்பதி
யெல்லாமிறைஞ்சி யேத்திப்போற் றிசைபாற்பரவுந் தம்முடைய
சொல்லூதியமா வணிந்தவர்தாஞ் சோற்றுத்துறையின் மருங்கெய்தி
யல்லூர்கண்டர் கோயிலினு ளடைந்துவலங்கொண் டடிபணிவார். (எ0)

அழனீரொழுகி யனையமெனு மஞ்சொற்பதிக மெடுத்தருளிக்
கழனீடியவன் பினிற்போற்றுங் காதல்கூரப் பரவியபின்
கெழுநீர்மையினி லருள்பெற்றுப் போந்துபரவை யார்கேள்வர்
முழுநீறணிவா ரமர்ந்தபதி பலவும்பணிந்து முன்னுவார். (எக)

---

சோற்றுத்துறை-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அழனீரொழுகி யனையசடையு
முழையீருரியும் முடையானிடமாங்
கழைநீர்முத்துங் கனகக்குவையுஞ்
சுழனீர்ப்பொன்னிச் சோற்றுத்துறையே.

சுற்றார்தருநீர்ச் சோற்றுத்துறையுண்
முற்றாமதிசேர் முதல்வன்பாதத்
தற்றாரடியா ரடிநாவூரன்
சொற்றுணிவைகற் றார்துன்பிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தொலையாச்செல்வர். தேவியார்-ஒப்பிலாம்பிகை.

திருப்பதிகம்—எ.

---

தேவர்பெருமான் கண்டியூர் பணிந்துதிருவை யாறதனை
மேவிவணங்கிப் பூந்துருத்தி விமலர்பாதந் தொழுதிறைஞ்சிச்
சேவில்வருவார் திருவாலம் பொழிலிற்சேர்ந்து தாழ்ந்திரவு
பாவுசயனத் தமர்ந்தருளிப் பள்ளிகொள்ளக் கனவின்கண். (எஉ)

மழபாடியினில் வருவதற்கு நினைக்கமறந்தா யோவென்று
குழகாகியதங் கோலமெதிர் காட்டியருள்க் குறித்துணர்ந்து
நிழலார்சோலைக் கரைப்பொன்னி வடபாலேறி நெடுமாட
வழகார்வீதி மழபாடி யணைந்தார்நம்பி யாரூரர். (எங)

அணைந்துதிருக்கோ புரமிறைஞ்சி யன்பர்சூழ வுடன்புகுந்து
பணங்கொளரவ மணிந்தார்முன் பணிந்துவிழுந்து பரங்கருணை
குணங்கொளருளின் றிறம்போற்றிக் கொண்டபுளகத் துடனுருகிப்
புணர்ந்தவிசையாற் றிருப்பதிகம் பொன்னார்மேனி யென்றெடுத்து. ()

---

திருமழபாடி-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார் மேனியனே புலித்தோ லரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுண் மாணிக்கமே
யன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே.

ஏரார் முப்புரமு மெரியச்சிலை தொட்டவனை
வாரார் கொங்கையுடன் மழபாடியுள் மேயவனைச்
சீரார் நாவலர்கோ னூரா னுரைத்ததமிழ்
பாரோ ரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வச்சிரத்தம்பநாயகர். தேவியார்-அழகம்மை.
திருப்பதிகம்—௬.

---

அன்னேயுன்னை யல்லாலியா னாநினைக்கே னெனவேத்தித்
தன்னேரில்லாப் பதிகமலர் சாத்தித்தொழுது புறம்பணைந்து
மன்னும்பதியிற் சிலநாள்கள் வைகித்தொண்ட ருடன்மகிழ்ந்து
பொன்னிக்கரையி னிருமருங்கும் பணிந்துமேல்பாற் போதுவார். (எரு)

செய்யசடையார் திருவானைக் காவிலணைந்து திருத்தொண்ட
ரெய்தமுன்வந் தெதிர்கொள்ள விறைஞ்சிக்கோயி லுடன்புகுந்தங்
கையர்கமலச் சேவடிக்கீ ழார்வம்பெருக வீழ்ந்தெழுந்து
மெய்யுமுகிழ்ப்பக் கண்பொழிநீர் வெள்ளம்பரப்பி விம்முவார். (எசு)

மறைகளாய நான்குமென மலர்ந்தசெஞ்சொற் றமிழ்ப்பதிக
நிறையுங்காத லுடனெடுத்து நிலவுமன்பர் தமைநோக்கி
யிறையும்பணிவா ரெம்மையுமா ளுடையாரென்றென் றேத்துவா
ருறையூர்ச்சோழன் மணியாரஞ் சாத்துந்திறத்தை யுணர்ந்தருளி. (எஎ)

---

திருவானைக்கா-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மறைகளா யினநான்கும் மற்றுளபொருள் களுமெல்லாந்
துறையுந்தோத் திரத்திறையுந் தொன்மையுநன் மையுமாய
வறையும்பூம் புனலானைக் காவுடையா தியைநாளு
மிறைவனென் றடிசேர்வ ரெம்மையுமா ளுடையாரே.

தாரமா கியபொன்னித் தண்டுறையா டிவிழுத்து
நீரினின் றடிபோற்றி நின்மலாகொள் ளெனவாங்கே
யாரங்கொண் டவெம்மானைக் காவுடையா தியைநாளு
மீரமுள் ளவர்நாளு மெம்மையுமா ளுடையாரே.

ஆழியார்க் கருளானைக் காவுடையாதி பொன்னடியி
னீழலே சரணாக நின்றருள்கூ ரநினைந்து
வாழவல்ல வன்றொண்டன் வண்டமிழ்மாலை வல்லார்போ
யேழுமா பிறப்பற் றெம்மையுமா ளுடையாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வளவர்பெருமான் றிருவாரஞ் சாத்திக்கொண்டு வரும்பொன்னிக்
கிளருந்திரைநீர் முழுகுதலும் வழுவிப்போகக் கேதமுற
வளவிறிருமஞ் சனக்குடத்து ளதுபுக்காட்ட வணிந்தருளித்
தளருமவனுக் கருள்புரிந்த தன்மைசிறக்கச் சாற்றினார். (எஅ)

சாற்றியங்குத் தங்குநாட் டயங்கும்பவளத் திருமேனி
நீற்றர்கோயி லெம்மருங்குஞ் சென்றுதாழ்ந்து நிறைவிருப்பார்
போற்றியங்கு நின்றும்போய்ப் பொருவிலன்பர் மருவியதொண்
டாற்றும்பெருமைத் திருப்பாச்சி லாச்சிராமஞ் சென்றடைந்தார். (எகூ)

சென்றுதிருக்கோ புரமிறைஞ்சித் தேவர்மலிந்த திருந்துமணி
முன்றில்வலங்கொண் டுள்ளணைந்து முதல்வர்முன்னம் வீழ்ந்திறைஞ்சி
நன்றுபெருகும் பொருட்காத லயப்புப்பெருக நாதரெதிர்
நின்றும்பரவி நினைந்தபொரு ளருளாதொழிய நேர்நின்று. (அ௦)

அன்புநீங்கா வச்சமுட னடுத்ததிருத்தோ ழமைப்பணியாற்
பொன்பெறாத திருவுள்ளம் புழுங்கவழுங்கிப் புறம்பொருபான்
முன்புநின்ற திருத்தொண்டர் முகப்பேமுறைப்பா டுடையார்போ
லென்புகரைந்து பிரானார்மற் றில்லையென்ன வெடுக்கின்றார். (அக)

---

திருப்பாச்சிலாச்சிராமம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வைத்தனன்றனக்கே தலையுமென்னுவு நெஞ்சமும்வஞ்சமொன் றின்றி
யுய்த்தனன்றனக்கே திருவடிக்கடிமை யுரைத்தக்காலுபமனே யெய்க்கும்
பைத்தபாம்பார்த்தோர்கோவணத்தோடு பாச்சிலாச்சிராமத்தெம்பரமர்
பித்தரோவொத்தோர் நச்சிலராகி லிவரல்லாதில்லையோ பிரானார்.

ஏசினவல்ல விகழ்ந்தனவல்ல வெம்பெருமானென் றெப்போதும்
பாசினபுகழான் பாச்சிலாச்சிராமத் தடிகளையடிதொழப் பன்னாள்
வாயினாற்கூறி மனத்தினானினைவான் வளவயனுவலா ரூரன்
பேசினபேச்சைப் பொருத்திலராகி லிவரல்லாதில்லையோ பிரானார்.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

நித்தமுநீங்கா நிலைமையினீங்கி நிலத்திடைப் புலங்கெழும் பிறப்பா,
லுய்த்தகாரணத்தை யுணர்ந்துநொந்தடிமை யொருமையா மெழுமையு
முணர்த்தி, யெத்தனையருளா தொழியினும்பிரானா ரிவரல்லாதில்லையே
யென்பார்,வைத்தனன்றனக்கே தலையுமென்னுவு மெனவமுத்தினார்வழித்
தொண்டர். (அஉ)

இவ்வகைபரவித் திருக்கடைக்காப்பு மேசினைவல்லவென் றிசைப்ப
மெய்வகைவிரும்பு தம்பெருமானுர் வீழிமிழிக்குவையளித் தருள
மைவளர்கண்டர் கருணையேபரவி வணங்கியப்பதியிடை வைகி
யெவ்வகைமருங்கு மிறைவர்தம்பதிக ளிறைஞ்சியங்கிருந்தனர் சிலநாள்.

அப்பதிநீங்கி யருளினுற்போகி யாவினஞ்சாடுவார் நீடு
மெய்பெயர்ப்பதியு மிருமருங்கிறைஞ்சி யிறைவர்பைஞ்ஞீலியையெய்திப்
பைப்பணியணிவார் கோபுரமிறைஞ்சிப் பாங்கமர்புடைவலங் கொண்டு
துப்புறழ்வேணியார்கழற்றெழுவார் தோன்றுகங்காளனைக் கண்டார். ()

கண்டவர்கண்கள் காதனீர்வெள்ளம் பொழிதரக்கைகுவித் திறைஞ்சி
வண்டறைகுழலார் மனங்கவர்பலிக்கு வருந்திருவடிவுகண் டவர்கள்
கொண்டதோர்மயலால் வினவுகூற்றாகக் குலவுசொற்காருலா வியவென்
றண்டர்நாயகனைப் பரவியாரணிய விடங்கராமருந்தமிழ் புனைந்தார்.அ௫

திருப்பைஞ்ஞீலி-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

காருலாவிய நஞ்சையுண்டிருள் கண்டவெண்டலை யோடுகொண்
டூரெலாந்திரிந் தென்செய்வீர்பலி யோரிடத்திலே கொள்ளுநீர்
பாரெலாம்பணிந் தும்மையேபர விப்பணியுப்பைஞ் ஞீலியி
ராரமாவது நாகமோசொலு மாரணீய விடங்கரே.

அன்னஞ்சேர்வயல் சூழ்பைஞ்ஞீலியி லாரணீய விடங்கனை
மின்னுநுண்ணிடை மங்கைமார்பலர் வேண்டிக்காதன் மொழிந்தசொன்
மன்னுதொல்புகழ் நாவலூரன்வன் றொண்டன்வாய்மொழிப் பாடல்பத்
துன்னியின்னிசை பாடுவாருமை கேள்வன்சேவடி சேர்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மெய்ஞ்ஞானநீலகண்டேசுவரர். தேவியார்-விசாலாட்சியம்மை.

திருப்பதிகம்—ஙு.

பரவியப்பதிகத் திருக்கடைக்காப்புச் சாத்திமுன்பணிந்தருள் பெற்றுக்
கரவிலன்பர்கட் கூட்டமுந்தொழுது கலந்தினிதிருந்துபோந் தருளி
விரவியவீங்கோய் மலைமுதலாக விமலர்தம்பதிபல வணங்கிக்
குரவலர்சோலை யணிதிருப்பாண்டிக் கொடுமுடியணைந்தனர் கொங்கில்.

கொங்கினிற்பொன்னித் தென்கரைக்கறையூர்க் கொடுமுடிக்கோயின்
முன் குறுகிச், சங்கவெண்குழைய ருழைவலஞ்செய்து சார்ந்தடியன்பி
னிற் றாழ்ந்து,பொங்கியவேட்கை பெருகிடத்தொழுது புனிதர்பொன்மே
னியை நோக்கி, யிங்கிவர்தம்மை மறக்கவொண்ணுதென் றெழுந்தமெய்க்
குறிப்பினி லெடுப்ப, (அள)

அண்ணலாரடிகண் மறக்கினுநாம வஞ்செழுத்தறியவெப் பொழுது
மெண்ணியநாவே யின்சுவைபெருக விடையறாதியம்புமென் றிதனைத்
திண்ணியவுணர்விற் கொள்பவர்மற்றுப் பற்றிலேனெனச்செழுந்தமிழா
னண்ணியவன்பிற் பிணிப்புறநவின்றார் நமச்சிவாயத்திருப் பதிகம்.(அ௯)

திருப்பாண்டிக்கொடுமுடி-பண்-பழம்பஞ்சரம்.

திருச்சிற்றம்பலம்.

மற்றுப்பற்றெனக் கின்றிநின் றிருப் பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேனினிப்பிற வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநாநமச்சி வாயவே.

கோணியபிறை சூடியைக்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
பேணியபெரு மானைப்பிஞ்ஞகப் பித்தனைப்பிறப் பில்லியைப்
பாணுலாவரி வண்டறைகொன்றைத் தாரனைப்படப் பாம்பரை
நாணனைத்தொண்ட னூரன்சொல்லிவை சொல்லுவார்க்கில்லைதுன்பமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நெறிக்காட்டுநாயகர். தேவியார்-புரிகுழலாள்.

திருப்பதிகம்—௩.

உலகெலாமுய்ய வுறுதியாம்பதிக முரைத்துமெய்யுணர்வறா வொருமை,
நிலவியசிந்தை யுடன்றிருவருளா னீங்குவார்பாங்குறு பதிகள் [பைக்
பலவுமுன்பணிந்து பரமர்தாள்போற்றிப் போந்துதண்பனிமலர்ப்படப்
குலவுமிக்கொங்கிற் காஞ்சிவாய்ப்பேரூர் குறுகினார்முறுகுமா தரவால்.()

அத்திருப்பதியை யணைந்துமுன்னம்மை யாண்டவர்கோயிலுட் புகுந்து
மெய்த்தவர்சூழ வலங்கொண்டுமுன்பு மேவுவார்தம்மெதிர் விளங்கி
நித்தனார்தில்லை மன்றுணின்றாட னீடியகோலநேர் காட்டக்
கைத்தலங்குவித்துக் கண்களானந்தக் கலுழிநீர்பொழிதரக் கண்டார். ()

காண்டலுந்தொழுது வீழ்ந்துடனெழுந்து கரையிலன்பென்பினை யுருக்கப், பூண்டவைம்புலனிற் புலப்படாவின்பம் புணர்ந்துமெய்யுணர்வினிற் பொங்கத், தாண்டவம்புரியுந் தம்பிரானாைத் தலைப்பட்க்கிடைத்தபின் சைவ, வாண்டகையாருக் கடுத்தவந்நிலைமை விளைவையாரளவறிந் துரைப்பார். (௯௧)

அங்கிலைநிகழ்ந்த வாரருள்பெற்ற வன்பனாரின்பவெள் ளத்து
மன்னியபாடன் மகிழ்ந்துடன்பாவி வளம்பதியதனிடை மருவிப்
பொன்மணிமன்று ளெடுத்தசேவடியார் புரிநடங்கும்பிட்ப் பெற்றார்[வார்
லென்னினிப்புறம்போ யெய்துவதென்று மீண்டெழுந்தருளுதற் கெழு

ஆயிடைநீங்கி யருளினாற்செல்வா ரருவரைச்சுரங்களும் பிறவும்
பாயுநீர்நதியும் பலபலகடந்து பரமர்தம்பதிபல பணிந்து
மேயவண்டமிழால் விருப்பொடும்பரவி வெஞ்சமாக்கூடலும் பணிந்து
சேயிடைகழியப் போந்துவந்தடைந்தார் தென்றிசைக்கற்குடி மலையில்.

திருவெஞ்சமாக்கூடல்-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

எறிக்குங்கதிர்வே யுதிர்முத்தமோ டேலமிலவங்கந் தக்கோலமிஞ்சி, செறிக்கும்புனலுட்பெய்து கொண்டுமண்டித் திளைத்தெற்றுசிற்றாறதன் கீழ்க்கரைமேன், முறிக்குந்தளைமாமுடப் புன்னைநாழல் குருக்கத்திகண்மேற்குயில் கூவலறா, வெறிக்குங்கலைமா வெஞ்சமாக்கூடல் விகிர்தாவடியேனையும் வேண்டுதியே.

வஞ்சிநுண்ணிடையார்மயிற் சாயனல்லார் வடிவேற்கணல்லார்பலர் வந்திறைஞ்சும், வெஞ்சமாக்கூடல்விகிர்தா வடியேனையும் வேண்டுதியேயென்று தான்விரும்பி, வஞ்சியாதளிக்கும்வய லூரர்கோன் வனப்பகையப்பன்வன் றொண்டன்சொன்ன, செஞ்சொற்றமிழ்மாலைகள் பத்தும்வல்லார் சிவலோகத்திருப்பது திண்ணமன்றே.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

வீடுதருமிக் கற்குடியில் விழுமியாரைப் பணிந்திறைஞ்சி
நீடுவிருப்பிற் றிருப்பதிக நிறைந்தசிந்தை யுடன்பாடிப்
பாடும்விருப்பிற் றொண்டருடன் பதிகள்பலவு மணைந்திறைஞ்சித்
தேடுமிருவர் காண்பரியார் திருவாறைமேற்றளி சென்றணைந்தார். (௯௪)

திருக்கற்குடி-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

விடையாருங் கொடியாய் வெறியார்மலர்க் கொன்றையினாய்
படையார் வெண்மழுவா பரமாய பரம்பரனே
கடியார் பூம்பொழில்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
வடிகேளெம் பெருமா னடியேனையு மஞ்சலெனே.

அலையார் தண்புனல்சூழ்ந் தழகாகி விழவமருங்
கலையார் மாதவர்சேர் திருக்கற்குடிக் கற்பகத்தைச்
சிலையார் வாணுதலாள் நல்லசிங்கடி யப்பனுரை
[illegible]ார் மாலைவல்லார் வியன்மூவுல காள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

செம்பொன்மேருச் சிலைவளைத்த சிவனாராறை மேற்றளியி
னம்பர்பாதம் பணிந்திறைஞ்சி நாளுமகிழ்வார்க் கருள்கூட
வும்பர்போற்றுந் தானங்கள் பலவும்பணிந்து போந்தணைவா
ரிம்பர்வாழ வின்னம்பர் நகரைச்சேர வெய்தினார். (௯௫)

ஏரின்மருவு மின்னம்பர் மகிழ்ந்தவீசர் கழல்வணங்கி
யாருமன்பிற் பணிந்தேத்தி யாராவருளா லங்கமர்வார்
போரின்மருவுங் கரியுரித்தார் மருவும்புறம் பயம்போற்றிச்
சேருமுள்ள மிக்கெழமெய்ப் பதிகம்பாடிச் செல்கின்றார். (௯௬)

வேறு.

அங்கமோதியோ ராறைமேற்றளி யென்றெடுத்தமர் காதலிற்
பொங்குமின்றமி ழால்விரும்பு புறம்பயந்தொழப் போதுமென்
றெங்குமன்னிய வின்னிசைப்பதி கம்புனைந்துட னெய்தினார்
திங்கள்சூடிய செல்வர்மேவு திருப்புறம்பயஞ் சேரவே. (௯௭)

திருப்புறம்பயம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

அங்கமோதியோ ராறைமேற்றளி நின்றுபோந்துவந் தின்னம்பர்
தங்கினோமையு மின்னதென்றில ரீசனாரெழு நெஞ்சமே
கங்குலேமங்கள் கொண்டுதேவர்க ளோதவானவர் தாந்தொழும்
பொங்குமால்விடை யேறிசெல்வப் புறம்பயந்தொழப் போதுமே.

துஞ்சியும்பிறந் துஞ்சிறந்துந் துயக்கறாத மயக்கிவை
யஞ்சியூரன் திருப்புறம்பயத் தப்பனைத்தமிழ்ச் சீரினால்
நெஞ்சினாலே புறம்பயந்தொழு துய்துமென்று நினைத்தன
வஞ்சியாதுரை செய்யவல்லவர் வல்லர்வானுல காளவே.

திருச்சிற்றம்பலம்.

அப்பதிக்க ணமர்ந்ததொண்டரு மன்றுவெண்ணெய்நல் லூரினி
லொப்பருந்தனி வேதியன்பழ வோலைகாட்டிநின் றாண்டவ
ரிப்பதிக்கண்வந் தெய்தவென்ன தவங்களென்றெதிர் கொள்ளவே
முப்புரங்க ளெரித்தசேவகர் கோயில்வாயிலின் முன்னினார். (௯௮)

நீடுகோபுர முன்பிறைஞ்சி நிலாவுதொண்டரொ டுள்ளணைந்
தாடன்மேவிய வண்ணலாரடி போற்றியஞ்சலி கோலிநின்
றேடுலாமலர் தூவியெட்டினொ டைந்துமாகுமு றுப்பினாற்
பீடுநீடு நிலத்தின்மேற்பெரு கப்பணிந்து பரவினார். (௯௯)

அங்குநீடருள் பெற்றுளார்வ மிகப்பொழிந்தெழு மன்பினாற்
பொங்குநாண்மலர்ப் பாதமுன்பணிந் தேத்திமீண்டு புறத்தணைந்
தெங்குமாகி நிறைந்துநின்றவர் தாமகிழ்ந்த விடங்களிற்
றங்குகோலமி றைஞ்சுவாரருட் டாவிலன்பரோ டெய்தினார். (௧௦௦)

வேறு.

வம்புநீ டலங்கன்மார்பின் வன்றொண்டர் வன்னிகொன்றை
தும்பைவெள் ளடம்புதிங்க ளேநீ றணிந்தசென்னித்
தம்பிரா னமர்ந்ததானம் பலபல சார்ந்துதாழ்ந்து
கொம்பனா ராடனீடு கூடலை யாற்றூர்சார. (௪0௧)

செப்பரும் பதியிற்சேரார் திருமுது குன்றநோக்கி
யொப்பரும் புகழாற்செல்லு மொருவழி யுமையாளோடு
மெய்ப்பரம் பொருளாயுள்ளார் வேதிய ராகிநின்றார்
முப்புரி நூலுந்தாங்கி நம்பியா ரூரர்முன்பு. (௪0௨)

நின்றவர் தம்மைநோக்கி நெகிழ்ந்தசிந் தையராய்த்தாழ்வா
ரின்றியா முதுகுன்றெய்த வழியெமக் கியம்புமென்னக்
குன்றவில் லாளியாருங் கூடலை யாற்றூரேறச்
சென்றதிவ் வழிதானென்று செல்வழித் துணையாய்ச்செல்ல. (௪0௩)

கண்டவர் கைகள்கூப்பித் தொழுதுபின் றொடர்வார்காணார்
வண்டலர் கொன்றையானை வடிவுடை மழுவென்றேத்தி
யண்டர்தம் பெருமான்போந்த வதிசய மறியேனென்று
கொண்டெழு விருப்பினோடுங் கூடலை யாற்றூர்புக்கார். (௪0௪)

---

திருக்கூடலையாற்றூர்-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

வடிவுடை மழுவேந்தி மதகரி யுரிபோர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடுங்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரி
லடிகளிவ் வழிபோந்த வதிசய மறியேனே.

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடு
மாடக லுந்தானை யதிசய மிதுவென்று
நாடிய வின்றமிழால் நாவல வூரன்சொற்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

---

கூடலை யாற்றூர்மேவுங் கொன்றைவார் சடையினார்தம்
பீடுயர் கோயில்புக்குப் பெருகிய வார்வம்பொங்க
வாடகப் பொதுவிலாடு மறைகழல் வணங்கிப்போற்றி
நீடருள் பெற்றுப்போந்து திருமுது குன்றிலேணர்ந்தார். (௪0௫)

தடவிலைக் கோபுரத்தைத் தாழ்ந்துமுன் னிறைஞ்சிக்கோயில்
புடைவலங் கொண்டுபுக்குப் போற்றினர் தொழுதுவீழ்ந்து
நடநவில் வாரைநஞ்சி யிடையெனுஞ் செஞ்சொன்மாலைத்
தொடைநிகழ் பதிகம்பாடித் தொழுதுகை சுமந்துநின்று. (க0சு)

திருமுதுகுன்றம்-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

நஞ்சியிடையின்று நாளையென்றுமை நச்சுவார்
துஞ்சியிட்டாற்பின்னைச் செய்வதென் னடிகள்சொலீர்
பஞ்சியிடப்புட்டில் கீறுமோபணி யீரருள்
முஞ்சியிடைசங்கமார்க் குஞ்சீர்முது குன்றரே.

முத்திமுத்தாறு வலஞ்செயும்முது குன்றனைப்
பித்தனைப்பானடித் தொண்டனூ ரன்பிதற்றி
வைத்ததுஞானிக ளானூர்தடு மாற்றிலா
ரெத்தவத்தோர்களு மேத்துவார்க்கிட ரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

நாதர்பாற் பொருட்டாம்வேண்டி நண்ணிய வண்ணமெல்லாங்
கோதறு மனத்துட்கொண்ட குறிப்பொடும் பாவும்போது
தாதவிழ் கொன்றைவேய்ந்தார் தரவருள் பெறுவார்சைவ
வேதியர் தலைவர்மீண்டு மெய்யில்வெண் பொடியும்பாட. (க0எ)

நம்பியென்ற-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

மெய்யைமுற்றப்பொடிப் பூசியோர்நம்பி வேதநான்கும்விரித் தோதியோர்நம்பி,கையிலோர்வெண்மழு வேந்தியோர்நம்பி கண்ணும்மூன்றுமுடை யாயொருநம்பி, செய்யநம்பிசிறுச் செஞ்சடைநம்பி திரிபுரந்தீயெழச் சேற்றதோர்வில்லா, லெய்தநம்பியென்னை யாளுடைநம்பி யெழுபிறப்புமெங்க ணம்பிகண்டாயே.

காத்தினம்பி கசியாதவர்வம்மைக் கசிந்த
வாக்கிம்மையோ டம்மையிலின்பம் பெருக்குநம்பி பெருக்கருத்தா.

திருச்சிற்றம்பலம்.

பனிமதிச் சடையார்தாமும் பன்னிரண் டாயிரம்பொன்
னனியருள் கொடுக்குமாற்று னல்கிட வுடையநம்பி
தனிவரு மகிழ்ச்சிபொங்கத் தாழ்ந்தெழுந் தருகுசென்று
கனிவிட மிடற்றினார்முன் பின்னுமொன்று கழறலுற்றார். (க0அ)

அருளுமிக் கனகமெல்லா மடியனேற் காரூருள்ளோர்
மருளுற வியப்பவங்கே வரப்பெற வேண்டுமென்னத்
தெருளுற வெழுந்தவாக்காற் செழும்மணி முத்தாற்றிட்டிப்
பொருளினை முழுதுமாரூர்க் குளத்திற்போய்க் கொள்கவென்றார். (க0கூ)

என்றுதம் பிரானார்நல்கு மின்னருள் பெற்றபின்னர்
வன்றொண்டர் மச்சம்வேண்டிக் கைக்கொண்டு மணிமுத்தாற்றிற்
பொன்றிர ளெடுத்துநீருட் புகவிடப் போதுகின்றா
ரன்றெனை வலிந்தாட்கொண்ட வருளிதி லறிவேனென்று. (கக0)

மேவிய காதற்றொண்டு விரவுமெய் விருத்திபெற்றார்
ஆவியின் விருத்தியான வந்தணர் புலியூர்மன்றிற்
காவியங் கண்டர்கூத்துக் கண்டுகும் பிடுவதென்று
வாவிசூழ் தில்லைமூதூர் வழிக்கொள்வான் வணங்கிப்போந்தார். (ககக)

மாடுள பதிகள்சென்று வணங்கிப்போய் மங்கைபாகர்
நீடிய கடம்பூர்போற்றி நிறைந்தவா னந்தக்கூத்த
ராடிய தில்லைமூதூ ரணைந்தணி வாயில்புக்குச்
சேடியர் மாடமன்னுஞ் செழுந்திரு வீதிசார்ந்தார். (ககஉ)

பொற்றிரு வீதிதாழ்ந்து புண்ணிய விளைவாயோங்கு
நற்றிரு வாயினண்ணி நலமலி யலங்கன்மார்பர்
மற்றதன் முன்புமண்மேல் வணங்கியுள் புகுந்துபைம்பொற்
சுற்றுமா ளிகைசூழ்வந்து தொழுதுகை தலைமேற்கொள்வார். (ககங)

ஆடிய திருமுன்பான வம்பொனின் கோபுரத்தி
னூடுபுக் கிறைஞ்சியோங்கு மொளிவளர் கனகமன்றி
னூடகச் செய்யதாளை நண்ணுற வுண்ணிறைந்து
நீடுமா னந்தவெள்ளக் கண்கணீர் நிரந்துபாய. (கக௪)

பரவுவாய் குளறிக்காதல் படிதிருப் படியைத்தாழ்ந்து
விரவுமெய் யங்கமைந்து மெட்டினும் வணங்கும்வேட்கை
யுரனுறு திருக்கூத்துள்ள மார்தரப் பெருகிநெஞ்சிற்
கரவிலா தவனைக்கண்ட நிறைவுதங் கருத்திற்கொள்ள. (கக௫)

வேறு.

மடித்தாடு மடிமைக்க ளன்றெடுத்து மன்னுயிர்கட் கருளுமாற்றா
லடித்தாற்று நன்னெறிக்க ணின்றாலும் வழுவினர்க ளணையாவண்ணந்
தடுப்பானைப் பேரூரிற் கண்டநிலை சிறப்பித்துத் தனிக்கூத்தென்று
நடிப்பானை நாமனமே பெற்றவா றெனுங்களிப்பா னயந்துபாடி. (கககூ)

கோயில்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மடித்தாடு மடிமைக்க ளன்றியே மனனேநீ வாழுநாளிற்
றடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கிலிடும்போது தடுத்தாட்கொள்வான்
கடுத்தாடு கரதலத்திற் றமருகமு மெரியகலுங் கரியபாம்பும்
பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றாமன்றே.

பாரூரு மரவல்கு லுமைநங்கை யவள்பங்கன் பைங்கணேற்ற
னூரான் றருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட்கொள்வா
னாரூரன் றம்பிரா னாரூரன் மீகொங்கி லணிகாஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றாமன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

மீளாத வருள்பெற்றுப் புறம்போந்து திருவீதி மேவித்தாழ்ந்தே
யாளான வன்றொண்ட ரந்தணர்க டாம்போற்ற வமர்ந்துவைகி
மாளாத பேரன்பாற் பொற்பதியை வணங்கிப்போய் மறலிவீழத் [தார்.
தாளாண்மை கொண்டவர்தங் கருப்பறிய லூர்வணங்கிச் சென்றுதாழ்ந்

வேறு.

கூற்றுதைத்தார் திருக்கொகுடிக் கோயினண்ணிக் கோபுரத்தைத் தொழுதுபுகுந் தன்பர்சூழ, வேற்றபெருங் காதலின் விறைஞ்சியேத்தி யெல்லையிலாப் பெருமகிழ்ச்சி மனத்திலெய்தப், போற்றிசைத்துப் புறத்தணைந்தப் பதியின்வைகிப் புனிதரவர் தமைநினையு மின்பங்கூறிச்,சாற்றியமெய்த் திருப்பதிகஞ் சிம்மாந்தென் னுந் தமிழ்மாலை புனைந்தங்குச் சாருநாளில். (௧௧௮)

---

திருக்கருப்பறியலூர்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து திறம்பாவண்ணங், கைம்மாவி னுரிவைபோர்த் துமைவெருவக் கண்டானைக் கருப்பறியலூர்க்கொ, யம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட மயிலாடுங் கொகுடிக்கோயி, லெம்மானை மனத்தினா னினைந்தபோ தவர்நமக் கினியவாறே.

கலைமலிந்த தென்புலவர் கற்றோர்தம் மிடர்தீர்க்குங் கருப்பறியலூர்க்
குலைமலிந்த கோட்டெங்கு மட்டொழுகும் பூஞ்சோலைக்கொகுடிக்கோயி
லிலைமலிந்த மழுவானை மனத்தினா லன்றுசெய் தின்பமெய்து
மலைமலிந்த தோளூரன் வனப்பகையப்ப னுரைத்தவண் டமிழ்களே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வீரட்டேசர். தேவியார்-இளங்கொம்பம்மை.

திருப்பதிகம்—உ.

---

கண்ணுதலார் விரும்புகருப் பறியலூரைக் கைதொழுது நீங்கிப் போய்க் கயல்கள்பாயு, மண்ணிவளம் படிக்கரையை நண்ணியங்கு மா தொருபா கத்தவர்தாள் வணங்கிப்போற்றி, யெண்ணில்புகழ்ப் பதிகமு முன் னவனென்றேத்தி யேகுவார் வாழ்கொளிபுத் தூரெய்தாது, புண ணியனார் போம்பொழுது நினைந்துமீண்டு புகுகின்றார் தலைக்கலனென் றெடுத்துப்போற்றி. (கககூ)

---

திருமண்ணிப்படிக்கரை-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

முன்னவ னெங்கள்பிரான் முதல்காண்பரி தாயபிரான்
சென்னியி லெங்கள்பிரான் திருநீலமிடற் றெம்பிரான்
மன்னிய வெங்கள்பிரான் மறைநான்குங்கல் லாநிழற்கீழ்ப்
பன்னிய வெங்கள்பிரான் பழமண்ணிப் படிக்கரையே.

பல்லுயிர் வாழுந்தெண்ணீர்ப் பழமண்ணிப் படிக்கரையை,
யல்லியந் தாமரைத்தா ரரூர னுரைத்ததமிழ்
சொல்லுதல் கேட்டவல்லா ரவர்க்குந்தமக் குங்கிளைக்கு
மெல்லியு நண்பகலும் மிடர்கூருத லில்லையன்றே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நீலகண்டேசர். தேவியார்-முக்காவல்லியம்மை.

திருப்பதிகம்—க.

---

திருவாழ்கொளிபுத்தூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

தலைக்கலன்றலை மேற்றரித்தானைத் தன்னையென்னைநினைக் கத்தருவானைக்,கொலைக்கையானையுரி போர்த்துகந்தானைக் கூற்றுதைத்தகுரை சேர் கழலானை, யலைத்தசெங்கண்விடை யேறவல்லானை யாவடியே னடிநா யேன், மலைத்தசெந்நெல்வயல் வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தைமறந் தென்னினைக்கேனே.

வளங்கிளர்பொழில் வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தைமறந் தென் னினைக்கேனென், றுளங்குளிர்தமி ழூரன்வன்றொண்டன் சடையன்காத லன் வனப்பகையப்ப, னலங்கிளர்வய லுவலர்வேந்த னங்கைசிங்கடி தந் தைபயந்த,பலங்கிளர்தமிழ் பாடவல்லார்மேற் பறையுமாஞ்செய்த பாவ ங்கடாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாணிக்கவண்ணர். தேவியார்-வண்டமர்பூங்குழல்நாயகி.

திருப்பதிகம்—உ.

---

திருப்பதிகம் பாடியே சென்றங்கெய்தித் தேவர்பெரு மானார்தங் கோயில்வாயி, லுருப்பொலியு மயிர்ப்புளகம் விரவத்தாழ்ந்தே யுள்ளணைந்து பணிந்தேத்தி யுருகுமன்பாற், பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாலானைப் போற்றிசைத்துப் புறம்போந்து தங்கிப்பூமென், கருப்புவயல் வாழ்கொளிபுத் தூரைநீங்கிக் கானாட்டு முள்ளூரிற் கலந்தபோது. ()

கானாட்டு முள்ளூரைச் சாரும்போது கண்ணுதலா ரெதிர்காட்சி கொடுப்பக்கண்டு, தூநாண்மென் மலர்க்கொன்றைச் சடையார்செய்ய துணைப்பாத மலர்கண்டு தொழுதேனென்று, வானாளுந் திருப்பதிகம் வள்வாயென்னும் வண்டமிழின் றொடைமாலை மலரச்சாத்தித், தேனாரு மலர்ச்சோலை மருங்குசூழ்ந்த திருவெதிர்கொள் பாடியினை யெய்தச்செல்வார். (கஉக)

---

திருக்கானாட்டுமுள்ளூர்-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

வள்வாய மதிமிளிரும் வளர்சடையினானை மறையவனை வாய்மொழியை வானவர்தங்கோவைப், புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கியுமிழ்ந்தானைப் பொன்னிறத்தின் முப்புரிநூ லான்முகத்தினானை, முள்வாய மடற்றாழை முடத்தாழையீன்று மொட்டலர்ந்து விரைநாறு முருகுவிரி பொழில்சூழ்,கள்வாய கருங்குவளை கண்வளருங்கழனிக் கானாட்டுமுள்ளூரிற் கண்டுதொழுதேனே.

திரையினார் கடல்சூழ்ந்த தென்னிலங்கைக்கோனைச் செற்றவனைச் செஞ்சடைமேல் வெண்மதியினானை, நுரையினார் கரைதழுவு கொள்ளிடத்தின்கரைமேற் கானாட்டுமுள்ளூரிற் கண்டெழுதொழுது, உரையினார் மதயானை நாவலாரூ ரனுரிமையா லுரைசெய்த வொண்டமிழ்கள்வல்லார், வரையினார் வகைஞால மாண்டவர்க்குத்தாம்போய் வானவர்க்குந் தலைவராய் நிற்பரவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பதஞ்சலியீசர். தேவியார்-கானார்குழலம்மை.

திருப்பதிகம்—க.

---

எத்திசையுந் தொழுதேத்த மத்தயானை யெடுத்தெதிர்கொள் பாடியினை யடைவோமென்னுஞ், சித்தநிலைத் திருப்பதிகம் பாடிநைந்து செல்வமிகு செழுங்கோயி லிறைஞ்சிநண்ணி, யத்தர்தமை யடிவணங்கி யங்குவைகி யருள்பெற்றுத் திருவேள்விக் குடியிலெய்தி, முத்திதரும் பெருமானைத் துருத்திகூட மூப்பதில யெனும்பதிக மொழிந்துவாழ்ந்தார். ()

---

திருஎதிர்கொள்பாடி-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மத்தயானை யேறிமன்னர் சூழ வருவீர்காள்
செத்தபோதெ லாருமில்லைச் சிந்தையுள் வைம்மின்கள்
வைத்தவுள்ள மாற்றவேண்டா வம்மின் மனத்தீரே
யத்தர்கோயி லெதிர்கொள்பாடி யென்ப தடைவோமே.

முத்துநீற்றுப் பவளமேனிச் செஞ்சடை யானுறையும்
பத்தர்பந்தத் தெதிர்கொள்பாடிப் பரமனை யேபணியச்
சித்தம்வைத்த தொண்டர்தொண்டன் சடைய னவன்சிறுவன்
பத்தனூரன் பாடல்வல்லார் பாதம் பணிவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அயிராபதேசர். தேவியார்-வாசமலர்க்குழல்நாயகி.

திருப்பதிகம்—க.

---

மூப்பதுமில்லை-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

மூப்பதுமில்லை பிறப்பதுமில்லை யிறப்பதில்லைச்
சேர்ப்பதுகாட்டகத் தூரிலுமாகச் சிந்திக்கிலல்லாற்
காப்பதுவேள்விக் குடிதண்டுருத்தியெங் கோனரைமே
லார்ப்பதுநாக மறிந்தோமேநாமிவர்க் காட்பட்டோமே.

கூடலர்மன்னன் குலநாவலூர்க்கோ னலத்தமிழைப்
பாடவல்லபரம னடியார்க்கடி மைவழுவார்
நாடவல்லதொண்ட னூரனூட்படு மாறுசொல்லிப்
பாடவல்லார் பரலோகத்திருப்பது பண்டமன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

காட்டுநல் வேள்விக்கோலங் கருத்துற வணங்கிக்காத
லூட்டிய வுள்ளத்தோடு நம்பியா ரூரர்போற்றி
யீட்டிய தவத்தோர்சூழ வங்குநின் றேகியன்பு
பூட்டியாட் கொண்டார்மன்னுந் தானங்க ளிறைஞ்சிப்போந்து. (கஉ௩)

வேறு.

எஞ்சாத பேரன்பிற் றிருத்தொண்ட ருடனெய்தி
நஞ்சாருங் கறைமிடற்று ரிடம்பலவு நயந்தேத்தி
மஞ்சாரும் பொழிலுடுத்த மலர்த்தடங்கள் புடைசூழுஞ்
செஞ்சாலி வயன்மருதத் திருவாரூர் சென்றடைந்தார். (கஉ௪)

செல்வமலி திருவாரூர்த் தேவரொடு முனிவர்களு
மல்குதிருக் கோபுரத்து வந்திறைஞ்சி யுள்புக்கங்
கெல்லையிலாக் காலமிக வெடுத்தமலர்க் கைகுவித்துப்
பல்குதிருத் தொண்டருடன் பரமர்திரு முன்னணைந்தார். (கஉரு)

மூவாத முதலாகி நடுவாகி முடியாத
சேவாருங் கொடியானைத் திருமூலட் டானத்து
ளோவாத பெருங்காத லுடனிறைஞ்சிப் புறம்போந்து
தாவாத புகழ்ப்பரவை யார்திருமா ளிகைச்சார்ந்தார். (கஉசு)

பொங்குபெரு விருப்பினொடு புரிகுழலார் பலர்போற்றப்
பங்கயக்கட் செங்கனிவாய்ப் பரவையா ரடிவணங்கி
யெங்களையு நினைந்தருளிற் றெனவியம்ப வினிதளித்து
மங்கைநல்லா ரவரோடு மகிழ்ந்துறைந்து வைகுவார். (கஉஎ)

நாயனார் முதுகுன்றர் நமக்களித்த நன்னிதியந்
தூயமணி முத்தாற்றிற் புகவிட்டேந் துணைவரவர்
கோயிலின்மா ளிகைமேல்பாற் குளத்திலவ ரருளாலே
போயெடுத்துக் கொடுபோதப் போதுவா யெனப்புகல. (கஉஅ)

என்னவதி சயமிதுதா னென்சொன்ன வாறென்று
மின்னிடையார் சிறுமுறுவ லுடன்விளம்ப மெய்யுணர்ந்தார்
நன்னுதலா யென்னுடைய நாதனரு ளாற்குளத்திற்
பொன்னடைய வெடுத்துனக்குத் தருவதுபொய் யாதென்று. (கஉகூ)

ஆங்கவரு முடன்போத வளவிறந்த விருப்பினுடன்
பூங்கோயி லுண்மகிழ்ந்த புனிதர்கழல் புக்கிறைஞ்சி
யோங்குதிரு மாளிகையை வலம்வந்தங் குடன்மேலைப்
பாங்குதிருக் குளத்தணைந்தார் பரவையார் தனித்துணைவர். (கங0)

மற்றதனின் வடகீழ்பாற் கரைமீது வந்தருளி
முற்றிழையார் தமைநிறுத்தி முனைப்பாடித் திருநாடர்
கற்றைவார் சடையானைக் கைதொழுது குளத்திலிருந்
தற்றைநா ளிட்டெடுப்பார் போலங்குத் தடவுதலும். (கஙக)

நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினினின்று
மாற்றுறுசெம் பொன்குளத்து வருவியா தொழிந்தருள
வாற்றினிலிட் டுக்குளத்திற் றேடுவா ரருளிதுவோ
சாற்றுமெனக் கோற்றொடியார் மொழிந்தருளத் தனித்தொண்டர். ()

முன்செய்த வருள்வழியே முருகலர்பூங் குழற்பரவை
தன்செய்ய வாயினகை தாராமே தாருமென
மின்செய்த நூன்மார்பின் வேதியர்தா முதுகுன்றிற்
பொன்செய்த மேனியனே யெனப்பதிகம் போற்றிசைத்து. (கஙங)

திருமுதுகுன்றம்-பண்-நட்டராகம்.
திருச்சிற்றம்பலம்.

பொன்செய்த மேனியினீர் புலித்தோலை யரைக்கசைத்தீர்
முன்செய்த மூவெயிலு மெரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவையிவ டன்முகப்பே
யென்செய்த வாறடிக ளடியேன் * இட் டளங்கெடவே.

பிறையாருஞ் சடையெம் பெருமானரு ளாயென்று
முறையால் வந்தமரர் வணங்கும்முது குன்றர்தம்மை
மறையார்தங் குரிசில்வயல் நாவலா ரூரன்சொன்ன
விறையார் பாடல்வல்லார்க் கெளிதாஞ்சிவ லோகமதே.

திருச்சிற்றம்பலம்.

---

முட்டிமை யோரறிய முதுகுன்றிற் றந்தபொருள்
சட்டநான் பெறுதொழிந்த தளர்வினாற் கையறவா
யிட்டளத்தை யிவளெதிரே கெடுத்தருளு மெனுந்திருப்பாட்
டெட்டளவும் பொன்காட்டா தொழிந்தருள வேத்துவார். (கநச)

வத்தாதே யிருந்தறியே னெனுந்திருப்பாட் டெவ்வுலகுங்
காத்தாடு மம்பலத்துக் கண்ணுளனுங் கண்ணுதலைக்
கூத்தாதந் தருளாயிக் கோமளத்தின் முன்னென்று
நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும். (கநரு)

---

மேற்பதிகத்தைச்சேர்ந்த தேவாரம்.

எத்தா திருந்தறியே னிமையோர்தனி நாயகனே
மூத்தா யுலகுக்கெலா முதுகுன்ற மமர்ந்தவனே
பூத்தாருங் குழலாள் பரவையிவ டன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கொடியேனிட் டளங்கெடவே.

திருச்சிற்றம்பலம்.

---

கொந்தவிழ்பூங் கொன்றைமுடிக் கூத்தனார் திருவருளால்
வந்தெழுபொன் றிரளெடுத்து வருமுறையாற் கரையேற்ற
வந்தரத்து மலர்மாரி பொழிந்திழிந்த தவனியுள்ளோ
ரிந்தவதி சயமென்னே யார்பெறுவா ரெனத்தொழுதார். (கநசு)

ஞாலம்வியப் பெய்தவரு நற்கனக மிடையெடுத்து
மூலமெனக் கொடுபோந்த 0 ஆணியின்முன் னுரைப்பிக்க
நீலமிடற் றவரருளா லுரைதாழப் பின்னுமெடு
மாலயனுக் கரியகழல் வழுத்தினார் வன்றொண்டர். (கநஎ)

---

* இட்டளம் என்பது-துன்பம்.
0 ஆணி என்பது - பொன்மாற்றறியும் உரையாணி.

மீட்டுமவர் பரவுதலு மெய்யன்ப ரன்பில்வரும்
பாட்டுவந்து கூத்துவந்தார் படி * வாசி முடிவெய்து
0 மோட்டறுசெம் பொன்னெக்க வொருமாவுங் குறையாமல்
காட்டுதலு மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை யேறினார். (கநஅ)

கரையேறிப் பரவையா ருடன்கனக மானதெலா
நிரையாளிற் சுமையேற்றி நெடுங்கிலேமா ளிகைபோக்கித்
திரையேறும் புனற்சடிலத் திருமூலட் டானத்தார்
விரையேறு மலர்ப்பாதந் தொழுதணைந்தார் விதியினில். (கநகூ)

வந்துதிரு மாளிகையி னுட்புகுந்து மங்கலவாழ்த்
தந்தமிலா வகையேத்து மளவிறந்தா ரொலிசிறப்பச்
சிந்தைநிறை மகிழ்ச்சியுடன் சேயிழையா ருடனமர்ந்தார்
கந்தமலி மலர்ச்சோலை நாவலர்தங் காவலனார். (கச0)

அணியாரூர் மணிப்புற்றி னமர்ந்தருளும் பரம்பொருளைப்
பணிவாரங் கொருநாளிற் பாராட்டுந் திருப்பதிகந்
தணியாத வானந்தந் தலைசிறப்பத் தொண்டருடன்
றுணிவாய்பே ரருள்வினவித் தொழுதாடிப் பாடுவார். (கசக)

பண்ணிறையும் வகைபாறு தாங்கியென வெடுத்தருளி
யுண்ணிறையு மனக்களிப்பா லுறுபுளக மயிர்முகிழ்ப்பக்
கண்ணிறையும் புனல்பொழியக் கரையிகந்த வானந்த
மெண்ணிறைந்த படிதோன்ற வேத்திமகிழ்ந் தின்புற்றார். (கசஉ)

திருவாரூர்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பாறுதாங்கிய காடரோபடு தலையரோமலைப் பாவையோர்
கூறுதாங்கிய குழகரோகுழைக் காதரோகுறுங் கோட்டிள
வேறுதாங்கிய கொடியரோசுடு பொடியரோவிலங் கும்பிறை
யாறுதாங்கிய சடையரோநமக் கடிகளாகிய வடிகளே.

மடிசெய்சீர்மையிற் பத்தர்காள்பணிந் தேத்தினேன்பணி யீரருள்
வடிவிலான்றிரு நாவலூரன் வனப்பகையப்பன் வன்றொண்டன்
செடியனாகிலுந் தீயனாகிலுந் தம்மையேமனஞ் சிந்திக்கு
மடியனூரனை யாள்வரோநமக் கடிகளாகிய வடிகளே.

திருச்சிற்றம்பலம்.

---

* வாசி என்பது - வட்டம்.

0 ஓட்டறுசெம்பொன் என்பது - மாற்றுயர்ந்தபொன் ஓடவிட்ட செம்பொன் என்றும் வழங்குகின்றது.

இன்புற்றங் கமர்நாளி லீறிலரு மறைபரவும்
வன்புற்றி லரவணிந்த மன்னவனை ரருள்பெற்ற
வன்புற்ற காதலுட னளவிறந்த பிறபதியும்
பொன்புற்கென் றிடவொளிருஞ் சடையாரைத் தொழப்போவார். ()

பரிசனமு முடன்போதப் பாங்கமைந்த பதிகடொறுங்
கரியுரிவை யுரித்தார்தங் கழறொழுது மகிழ்ந்தேத்தித்
துரிசறுநற் பெருந்தொண்டர் நள்ளாறு தொழுவதற்குப்
புரிவுறுமெய்த் திருத்தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கணைந்தார். (கசச)

விண்டடவு கோபுரத்தைப் பணிந்துகர மேற்குவித்துக்
கொண்டுபுகுந் தண்ணலார் கோயிலினை வலஞ்செய்து
மண்டியபே ரன்பினொடு மன்னுதிரு நள்ளாறர்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில மிசைப்பணிந்தார். (கசரு)

அங்கணரைப் பணிந்தேத்தி யருளினாற் றொழுதுபோய்
மங்குலணி மணிமாடத் திருக்கடவூர் வந்தெய்தித்
திங்கள்வளர் முடியார்தந் திருமயான மும்பணிந்து
பொங்குமிசைப் பதிகமரு வார்கொன்றை யெனப்போற்றி. (கசசு)

---

திருநள்ளாறு-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பூவில்வாசத்தைப் பொன்னினைமணியைப் புவியைக்காற்றினைப் புனலனல்வெளியைச், சேவின்மேல்வருஞ் செல்வனைச்சிவனைத் தேவதேவனைத் தித்திக்குந்தேனைக், காவியங்கண்ணி பங்கனைக்கங்கைச் சடையனைக்காம ரத்திசைபாட, நாவிலூறுநள் ளாறனையமுதை நாயினேன்மறந் தென்னினைக்கேனே.

செறிந்தசோலைகள் சூழ்ந்தநள்ளாற்றெஞ் சிவனைநாவலூர்ச் சிங்கடிதந்தை,மறந்துநான்மற்று நினைப்பதென்னென்று வனப்பகையப்ப னூரன்வன்றொண்டன், சிறந்தமாலைக ளஞ்சினொடஞ்சுஞ் சிந்தையுள்ளுருகிச் செப்பவல்லார்க், கிறந்துபோக்கில்லை வரவில்லையாகி யின்பவெள்ளத்து ளிருப்பர்களினிதே.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கடவூர்மயானம்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

மருவார்கொன்றை மதிசூடி மாணிக்கத்தின் மலைபோல
வருவார்விடைமேல் மாதோடு மகிழ்ந்துபூதப் படைசூழத்
திருமால்பிரம னிந்திரற்குந் தேவர்நாகர் தானவர்க்கும்
பெருமான்கடவூர் மயானத்துப் பெரியபெருமா னடிகளே.

மாடமல்கு கடவூரின் மறையோரேத்து மயானத்துப்
பிடைதீர வடியாருக் கருளும்பெருமா னடிகள்சீர்
நாடிநாவ லாரூர னம்பிசொன்ன நற்றமிழ்கள்
பாடுமடியார் கேட்பார்மேற் பாவமான பறையுமே.

திருச்சிற்றம்பலம்.

திருவீரட் டானத்துத் தேவர்பிரான் சினக்கூற்றின்
பொருவீரந் தொலைத்தகழல் பணிந்துபொடி யார்மேனி
மருவிரத் தமிழ்மாலை புனைந்தேத்தி மலைவளைத்த
பெருவீரர் வலம்புரத்துப் பெருகார்வத் தொடுஞ்சென்றார். (கசஎ)

திருக்கடவூர்வீரட்டம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொடியார் மேனியனே புரிநூலொரு பால்பொருந்த
வடியார் மூவிலைவேல் வளரங்கையி னங்கையொடுங்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
மடிகே ளென்னமுதே யெனக்கார்துணை நீயலதே.

காராரும் பொழில்சூழ் கடவூர்திரு வீரட்டத்து
ளோராரும் மிறையைத் துணையாவெழில் நாவலர்கோ
னூரன் னடியா னடித்தொண்ட னுரைத்ததமிழ்
பாரோரேத்த வல்லார் பரலோகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

வரையோடு நிகர்புரிசை வலம்புரத்தார் கழல்வணங்கி
யுரையோசைப் பதிகமெனக் கினியோதிப் போய்ச்சங்க
நிரையோடு மித்தூப மணித்தீப நித்திலப்பூந்
திரையோதங் கொண்டிறைஞ்சுந் திருச்சாய்க்கா டெய்தினார். (கசஅ)

திருவலம்புரம்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
பனைக்கனிப் பழம்படு பரவையின் கரைமே
லெனக்கினி யவன்றமர்க் கினியவ னெழுமையு
மனக்கினி யவன்றன திடம்வலம் புரமே.

வருங்கல மும்பல பேணுதல் கருங்கட
லிருங்குலப் பிறப்பர்த மிடம்வலம் புரத்தினை
யருங்குலத் தருந்தமி ழூரன்வன் றொண்டன்சொற்
பெருங்குலத் தவரொடு பிதற்றுதல் பெருமையே.

திருச்சிற்றம்பலம்.

தேவர்பெரு மான்றன்னைத் திருச்சாய்க்காட் டினிற்பணிந்து
பாவலர்செந் தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடிப்போய்
மேவலர்தம் புரமெரித்தார் வெண்காடு பணிந்தேத்தி
காவலர்கா வலரடைந்தார் நனிபள்ளித் திருநகரில். (௧௪௯)

நனிபள்ளி யமர்ந்தபிரான் கழல்வணங்கி நற்றமிழின்
புனிதநறுந் தொடைபுனைந்து திருச்செம்பொன் பள்ளிமுதற்
பனிமதிசேர் சடையார்தம் பதிபலவும் பணிந்துபோய்த்
தனிவிடைமேல் வருவார்தந் திருநின்றி யூர்சார்ந்தார். (௧௫0)

---

திருநனிபள்ளி-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆதியனாதிரை யன்னயன்மாலறி தற்கரிய
சோதியன்சொற்பொரு ளாய்ச்சுருங்காமறை நான்கினையு
மோதியனும்பர்தங் கோனுலகத்தினு ளெவ்வுயிர்க்கு
* நாதியலகம்பெரு மானண்ணுமூர்நனி பள்ளியதே.

காலமு நாள்கழியு நனிபள்ளி மனத்தினுள்கிக்
கோலம தாயவனைக் குளிர்நாவல வூரன்சொன்ன
மாலை மதித்துரைப்பார் மண்மறந்து வானோருலகிற்
சாலநல் லின்பமெய்தித் தவலோகத் திருப்பவரே.

திருச்சிற்றம்பலம்.

---

நின்றியூர் மேயானை நேசத்தாற் புக்கிறைஞ்சி
யொன்றியவன் புள்ளுருகிப் பாடிவா ருடையவர
சென்றுமுல கிடர்நீங்கப் பாடியவே ழெழுநூறு
மன்றுசிறப் பித்தஞ்சோற் றிருப்பதிக மருள்செய்தார். (௧௫௧)

---

திருநின்றியூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அணிகொளாடையம் பூணணிமாலை யமுதுசெய்தமு தம்பெறுசண்டி, யிணைகொளேழெழுநூ றிரும்பனுவ லீன்றவன்றிரு நாவுக்கரையன், கணைகொள்கண்ணப்ப னென்றிவர்பெற்ற காதலின்னரு ளாதரித்தடைந்தேன், றிணைகொள்செந்தமிழ் பைங்கிளிதெரியுஞ் செல்வத்தென்றிரு நின்றியூரானே.

---

* நாதஇயல் எனப் பிரிக்குமிடத்து நாதன் என்பது - நாத என நின்றதாகத் தோற்றுகின்றது.

இரவிநீள்சுட ரெழுவதன்முன்ன மெழுந்துதன்முலைக் கலசங்களே ந்திச், சுரவிபால்சொரிந் தாட்டியுன்பாதந் தொடர்ந்தவார்த்தை திடம் பெறக்கேட்டுப், பரவியுள்கிவன் பாசத்தையறுத்துப் பரமவந்துநின் பா தத்தையடைந்தே, னிரவிநித்தில மத்தகுசெம்பொ னளிக்குந்தென்றிரு நின்றியூரனே.

திருச்சிற்றம்பலம்.

---

இந்தப்பதிகத்தில்-ஏழுதேவாரம் இருக்கின்றது.

அப்பதியி லன்பருட னமர்ந்தருள்வா ரகலிடத்திற்
செப்பரிய புகழ்நீடூர் பணியாது செல்பொழுதி
லொப்பரிய வுணர்வினு னினைந்தருளித் தொழலுறுவார்
மெய்ப்பொருள்வண் டமிழ்மாலை விளம்பியே மீண்டணைந்தார். (கூஉ)

மடலாரும் புனனீடூர் மருவினர்தாள் வணங்காது
விடலாமே யெனுங்காதல் விருப்புறுமத் திருப்பதிக
மடலார்சூ லப்படையார் தீமைப்பாடி யடிவணங்கி
யுடலாரு மயிர்ப்புளக மிகப்பணிந்தங் குறைகின்றார். (கூரு)

---

திருநீடூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஊர்வதோர்விடை யொன்றுடையானை யொண்ணுதற்றனிக் கண் ணுதலானைக், காரதார்கறை மாமிடற்றானைக் கருதலார்புர மூன்றெரித்தா னை, நீரில்வாளைவ ரால்குதிகொள்ளு நிறைபுனற்றுழ னிச்செல்வநீடூர்ப், பாருளார்பர வித்தொழநின்ற பரமனைப்பணி யாவிடலாமே.

பேரோராயிர மும்முடையானைப் பேசினற்பெரி தும்மினியானை
நீரூர்வார்சடை நின்மலன்றன்னை நீடூர்நின்றுகந் திட்டபிரானை
யாரூரன்னடி காண்பதற்கன்பா யாதரித்தழைத் திட்டவிம்மாலை
பாரூரும்பர வித்தொழவல்லார் பத்தராய்முத்தி தாம்பெறுவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்கணினி தமர்ந்தருளாற் றிருப்புன்கூ ரணைந்திறைஞ்சிக்
கொங்கலரு மலர்ச்சோலைத் திருக்கோலக் காவணையக்
கங்கைசடைக் கரந்தவர்தா மெதிர்காட்சி கொடுத்தருளப்
பொங்குவிருப் பாற்றொழுது திருப்பதிகம் போற்றிசைப்பார். (கூசு)

திருஞான சம்பந்தர் திருக்கைக ளாலொத்திப்
பெருகார்வத் துடன்பாடப் பிஞ்ஞகனர் கண்டிரங்கி
யருளாலே திருத்தாள மளித்தபடி சிறப்பித்துப்
பொருண்மாலைத் திருப்பதிகம் பாடியே போற்றிசைத்தார். (கூரு)

திருக்கோலக்கா-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

நாளுமின்னிசை யாற்றமிழ்பரப்பு ஞானசம்பந்த னுக்குலகவர்முன்
றாளமீந்தவன் பாடலுக்கிரங்குந் தன்மையாளனை யென்மனக்கருத்தை
யாளும்பூதங்கள் பாடநின்றாடு மங்கணன்றனை யெண்கணமிறைஞ்சுங்
கோளிலிப்பெருங்கோயிலுளானைக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே

கோடரம்பயில் சடையுடைக்கரும்பைக் கோலக்காவுளெம் மானை மெய்மானைப், பாடரங்குடி யடியவர்விரும்பப் பயிலுநாவலா ரூரன்வன்றொண்ட, னாடிரங்கிமுன் னறியுமந்நெறியா னவின்றபத்திவை விளம்பி யமரந்தர், காடரங்கென நடநவின்றான்பாற் கதியுமெய்துவர் பதியவர்க்கதுவே.

திருச்சிற்றம்பலம்.

---

மூவாத முழுமுதலார் முதற்கோலக் காவகன்று
தாவாத புகழ்ச்சண்பை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி
நாவார்முத் தமிழ்விரகர் நற்பதங்கள் பரவிப்போய்
மேவார்தம் புரஞ்செற்றார் குருகாவூர் மேவுவார். (கடுசு)

உண்ணீரின் வேட்கையுட னுறுபசியான் மிகவருந்திப்
பண்ணீர்மை மொழிப்பரவை யார்கொழுநர் வரும்பாங்கர்க்
கண்ணீடு திருநுதலார் காதலவர் கருத்தறிந்து
தண்ணீரும் பொதிசோறுங் கொண்டுவழிச் சார்கின்றார். (கடுஎ)

வேனிலுறு வெயில்வெம்மை தணிப்பதற்கு விரைகுளிர்மென்
பானன்மலர்த் தடம்போலும் பந்தரொரு பாலமைத்தே
யானமறை வேதியரா யருள்வேடங் கொண்டிருந்தார்
மானமருந் திருக்கரத்தார் வன்றொண்டர் தமைப்பார்த்து. (கடுஅ)

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் றோழர்திருத் தொண்டருடன்
வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பாற்
பெருகார்வஞ் செலவிருந்தார் சிவாயநம வெனப்பேசி. (கடுகூ)

ஆலநிழற் கீழிருந்தா ரவர்தம்மை யெதிர்நோக்கிச்
சாலமிகப் பசித்தீரிப் பொதிசோறு தருகின்றேன்
காலமினித் தாழாமே கைக்கொண்டிங் கினிதருந்தி
யேலநறுங் குளிர்தண்ணீர் குடித்திளைப்புத் தீருமென. (கசுo)

வன்றொண்ட ரதுகேட்டு மறைமுனிவர் தரும்பொதிசோ
றின்றுநமக் கெதிர்விலக்க லாகாதென் றிசைந்தருளிப்
பொன்றங்கு நூன்மார்பர் தரும்பொதிசோ றதுவாங்கிச்
சென்றதிருத் தொண்டருடன் றிருவமுது செய்தருளி. (கசுக)

எண்ணிறைந்த பரிசனங்க ளெல்லாரு மினிதருந்தப்
பண்ணியபின் னம்மருங்கு பசித்தணைந்தார் களுமருந்த
உண்ணிறைந்த வாரமுதா யொருகாலு முலவாதே
புண்ணியனார் தாமளித்த பொதிசோறு பொலிந்ததால். (௧௬௨)

சங்கரனார் திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து
பொங்கிவரு மாதரவா லவர்நாமம் புகழ்ந்தேத்தி
யங்கயர்வாற் பள்ளியமர்ந் தருகணைந்தார் களுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தாரப் பந்தரொடுந் தாங்கரந்தார். (௧௬௩)

சித்தநிலை திரியாத திருநாவ லூர்மன்ன
ரத்தகுதி யிளிற்பள்ளி யுணர்ந்தவரைக் காணாமை
யித்தனையா மாற்ற மறிந்திலே னெனவெடுத்து
மெய்த்தகைய திருப்பதிகம் விளம்பியே சென்றடைந்தார். (௧௬௪)

---

திருக்குருகாவூர்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

இத்தனையா மாற்ற மறிந்தில னெம்பெருமான்
பித்தரை யென்றும்மைப் பேசுவார் பிறரொல்லா
முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

வளங்கனி பொழின்மல்கு வயலணிந் தழகாய்
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானை
யிளங்கிளை யாரூரன் வனப்பகைய வளப்ப
னுளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே.

திருச்சிற்றம்பலம்.

---

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகனார் கோயிலினுக்
கருகார்பொற் கோபுரத்தை யணைந்திறைஞ்சி யுள்புக்கு
வருகாதல் கூரவலங் கொண்டுதிரு முன்வணங்கிப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகினார். (௧௬௫)

கண்ணார்ந்த வின்னமுதைக் கையாரத் தொழுதிறைஞ்சி
பண்ணார்ந்த திருப்பதிகம் பாடியே பணிந்தேத்தி
யுண்ணாடும் பெருங்காத லுடையவர்தாம் புறத்தெய்தி
நண்ணார்வத் தொண்டருட னங்கினிது நயந்திருந்தார். (௧௬௬)

அந்நாளிற் றம்பெருமா னருள்கூரப் பணிந்தகன்று
மின்னார்செஞ் சடைமுடியார் விரும்புமிடம் பலவணங்கிக்
கண்ணாடு மெயில்புடைசூழ் கழிப்பாலை தொழுதேத்தித்
தென்னாவ லூர்மன்னர் திருத்தில்லை வந்தடைந்தார். (௧௬௭)

சீர்வளருந் திருத்தில்லைத் திருவீதி பணிந்துபுகுந்
தேர்வளர்பொற் றிருமன்று ளெடுத்தசே வடியிறைஞ்சி
பார்வளர மறைவளர்க்கும் பதியதனிற் பணிந்துறைவார்
பேர்வளர்மே ருச்சிலையார் திருத்தினைமா நகர்புகுந்தார். (கசுஅ)

திருத்தினைமா நகர்மேவுஞ் சிவக்கொழுந்தைப் பணிந்துபோய்
நிருத்தனா ரமர்ந்தருளு நிறைபதிகள் பலவணங்கிப்
பொருத்தமிகுந் திருத்தொண்டர் போற்றுதிருநாவலூர்
கருத்தில்வரு மாதரவாற் கைதொழச்சென் றெய்தினார். (கசுக)

திருநாவ லூர்மன்னர் சேர்கின்றா ரெனக்கேட்டுப்
பெருநாமப் பதியோருந் தொண்டர்களும் பெருவாழ்வு
வருநாளென் றலங்கரித்து வந்தெதிர்கொண் டுள்ளணையச்
செருநாகத் துரிபுனைந்தார் செழுங்கோயி லுள்ளணைந்தார். (கஎ0)

மேவியவத் தொண்டர்குழா மிடைந்தரவென் றெழுமோசை
மூவுலகும் போயொலிப்ப முதல்வனார் முன்பெய்தி
யாவியினு மடைவுடையா ரடிக்கமலத் தருள்போற்றிக்
கோவலனான் முகனெடுத்துப் பாடியே கும்பிட்டார். (கஎக)

---

திருவெண்ணெய்நல்லூரும்திருநாவலூரும்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன் வானவர்கோனுங்குற் றேவல்செய்ய
மேவலர்முப்புரந் தீயெழுவித்தவ னோரம்பினா
லேவலனார்வெண்ணெய் நல்லூரில்வைத்தெம்மை யாளுங்கொண்ட
நாவலனார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே.

நாதனுக்கூர்நமக் கூர்நரசிங்க முனையரைய
னாதரித்தீசனுக் காட்செய்யுமூரணி நாவலூரென்
றோதநற்றவத்தவன் றொண்டனாரூர னுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங் கேட்பவர்கடிவினை கட்டறுமே.

திருச்சிற்றம்பலம்.

---

நலம்பெருகு மப்பதியி னுடியவன் பொடுபணிந்து
குலம்பெருகுந் திருத்தொண்டர் குழாத்தொடு மினிதமர்ந்து
சலம்பெருகுஞ் சடைமுடியார் தாள்வணங்கி யருள்பெற்றுப்
பொலம்புரிநூன் மணிமார்பர் பிறபதியுந் தொழப்போவார். (கஎஉ)

தண்டகமாந் திருநாட்டுத் தனிவிடையார் மகிழ்விடங்க
டொண்டரெதிர் கொண்டணையத் தொழுதுபோய்த் தூயநதி
வண்டறைபூம் புறவுமலை வளமருதம் பலகடந்தே
யெண்டிசையோர் பரவுதிருக் கழுக்குன்றை யெய்தினார். (கஎங)

தேனார்ந்த மலர்ச்சோலைத் திருக்கழுக்குன் றத்தடியா
ராளுத விருப்பினொடு மெதிர்கொள்ள வடைந்தருளித்
தூநாள்வெண் மதியணிந்த சுடர்க்கொழுந்தைத் தொழுதிறைஞ்சிப்
பானொடு மின்னிசையின் றிருப்பதிகம் பாடினார். (கஎச)

---

திருக்கழுக்குன்றம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

கொன்றுசெய்த கொடுமையாற்பல சொல்லவே
நின்றபாவம் வினைகடாம்பல நீங்கவே
சென்றுசென்று தொழுமின்றேவர்பி ரானிடங்
கன்றினொடுபிடி சூழ்தண்கழுக் குன்றமே.

பல்லில்வெள்ளைத் தலையன்றான்பயி லும்மிடங்
கல்லில்வெள்ளை யருவித்தண்கழுக் குன்றினை
மல்லின்மல்கு திரடோளூரன் வனப்பினாற்
சொல்லச்சொல்லித் தொழுவாரைத்தொழு மின்களே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடியவப் பதியின்க ணினிதமர்ந்து பணிந்துபோய்
நாடியநல் லுணர்வினொடுந் திருக்கச்சூர் தனைநண்ணி
யாடகமா மதில்புடைசூ ழாலக்கோயி லின்னமுதைக்
கூடியமெய் யன்புருகக் கும்பிட்டுப் புறத்தணைந்தார். (கஎரு)

அணைந்தருளு மவ்வேலை யமுதுசெய்யும் பொழுதாகக்
கொணர்ந்தமுது சமைத்தளிக்கும் பரிசனமுங் குறுகாமைத்
தணந்தபசி வருத்தத்தாற் றம்பிரான் றிருவாயிற்
புணர்ந்தமதிற் புறத்திருந்தார் முனைப்பாடிப் புரவலனார். (கஎசு)

வன்றொண்டர் பசிதீர்க்க மலையின்மேன் மருந்தானார்
மின்றங்கு வெண்டலையோ டொழிந்தொருவேற் றுருவேந்தி
யன்றங்கு வாழ்வாரோ ரந்தணராய்ப் புறப்பட்டுச்
சென்றன்பர் முகநோக்கி யருள்கூரச் செப்புவார். (கஎஎ)

மெய்ப்பசியான் மிகவருந்தி யிளைத்திருந்தீர் வேட்கைவிட
விப்பொழுதே சோறிரந்திங் கியானுமக்குக் கொணர்கின்றே
னப்புறநீ ரகலாதே சிறிதுபொழு தமருமெனச்
செப்பியவர் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்றிரப்பார். (கஎஅ)

வெண்டிருநீற் றணிதிகழ விளங்குநூ லொளிதுளங்கக்
கண்டவர்கண் மனமுருகக் கடும்பகற்போ திடும்பலிக்குப்
புண்டரிகக் கழல்புவிமேற் பொருந்தமனை தொறும்புக்குக்
கொண்டுதாம் விரும்பியாட் கொண்டவர்முன் கொடுவந்தார். (கஎகூ)

இரந்துதாங் கொடுவந்த வின்னடிசி லுங்கறியு
மரந்தைதரும் பசிதீர வருந்துவீ ரெனவளிப்பப்
பெருந்தகையார் மறையவர்தம் பேரருளின் றிறம்பேணி
யிரந்தபெருங் காதலினா னேர்தொழுது வாங்கினார். (கஅ0)

வாங்கியவத் திருவமுது வன்றொண்டர் மருங்கணைந்த
வோங்குதவத் தொண்டருட னுண்டருளி யுவந்திருப்ப
வாங்கருகு நின்றார்போ லவர்தம்மை யறியாமே
நீங்கினா ரெப்பொருளும் நீங்காத நிலைமையினார். (கஅக)

திருநாவ லூராளி சிவயோகி யார்நீங்க
வருநாம மறையவனா ரிறையவனா ரெனமதித்தே
பெருநாதச் சிலம்பணிசே வடிவருந்தப் பெரும்பகற்க
ணுருநாடி யெழுந்தருளிற் றென்பொருட்டா மெனவுருகி. (கஅஉ)

வேறு.

முதுவாயோரி யென்றெடுத்து முதல்வனார்தம் பெருங்கருணை
யதுவாமிதுவென் றதிசயம்வந் தெய்தக்கண்ணீர் மழையருவிப்
புதுவார்புனலின் மயிர்ப்புளகம் புதையப்பதிகம் போற்றிசைத்து
மதுவாரிதழி முடியானைப் பாடிமகிழ்ந்து வணங்கினார். (கஅங)

---

திருக்கச்சூராலக்கோயில்-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

முதுவாயோரிக தறமுதுகாட் டெரிகொண் டாட்டன் முயல்வானே
மதுவார்கொன்றைப் புதுவீசூடும் மலையான்மகடன் மணவாளா
கதுவாய்த்தலையிற் பலிநீகொள்ளக் கண்டாலடியார் கவலாரே
யதுவேயாமா றிதுவோகச்சூ ராலக்கோயி லம்மானே.

அன்னமன்னும் வயல்சூழ்கச்சூ ராலக்கோயி லம்மானை
யுன்னமுன்னு மனத்தாரூர னாரூரன்பேர் முடிவைத்த
மன்னுபுலவன் வயனாவலர்கோன் செஞ்சொனாவன் வன்றொண்டன்
பன்னுதமிழ்நூன் மாலைவல்லா ரவரென்றலைமேற் பயில்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-விருந்திட்டநாதர்; தேவியார்-கன்னியுமைமாது

திருப்பதிகம்—க.

வந்தித்திறைவ ரருளாற்போய் மங்கைபாகர் மகிழ்ந்தவிட
முந்தித்தொண்ட ரெதிர்கொள்ளப் புக்குமுக்கட் பெருமானைச்
சிந்தித்திட்டவ் தருள்செய்கழல் பணிந்துசெஞ்சொற் றொடைபுனைந்தே
யந்திச்செக்கர்ப் பெருகொளியா ரமருங்காஞ்சி மருங்கணைந்தார். (கஅச)

அன்றுவெண்ணெய் நல்லூரி லரியுமயனுந் தொடர்வரிய
வென்றிமழவெள் விடையுயர்த்தார் வேதமுதல்வ ராய்வந்து
நின்றுசபைமுன் வழக்குரைத்து நேரேதொடர்ந்தாட் கொண்டவர்தா
மின்றிங்கெய்தப் பெற்றோமென் றெயில்சூழ்காஞ்சி நகர்வாழ்வார்.(கஅரு)

மல்குமகிழ்ச்சி மிகப்பெருக மறுகுமணித்தோ ரணநாட்டி
யல்குதீப நிறைகுடங்க ளகிலின்றூபங் கொடியெடுத்துச்
செல்வமனைக ளலங்கரித்துத் தெற்றியாடன் முழவதிரப்
பல்குதொண்ட ருடன்கூடிப் பதியின்புறம்போ யெதிர்கொண்டார். ()

ஆண்டநம்பி யெதிர்கொண்ட வடியார்வணங்க வெதிர்வணங்கி
நீண்டமதிட்கோ புரங்கடந்து நிரைமாளிகைவீ தியிற்போந்து
பூண்டகாதல் வாழ்த்தியுடன் புனைமங்கலதூ ரியமொலிப்ப
விண்டொண்டர் பெருகுதிரு வேகாம்பரஞ்சென் றெய்தினர். (கஅஎ)

ஆழிநெடுமா லயன்முதலா மமரர்நெருங்கு கோபுரமுன்
பூழியுறமண் மிசைமேனி பொருந்தவணங்கிப் புகுந்தருளிச்
சூழுமணிமா ளிகைபலவுந் தொழுதுவணங்கி வலங்கொண்டு
வாழிமணிப்பொற் கோயிலினுள் வந்தாரணுக்க வன்றொண்டர். (கஅஅ)

கைகள்கூப்பி முன்னணைவார் கம்பையாறு பெருகிவர
வையர்தமக்கு மிகவஞ்சி யாரத்தழுவிக் கொண்டிருந்த
மையுலாவுங் கருநெடுங்கண் மலையாளென்றும் வழிபடுபூஞ்
செய்யகமலச் சேவடிக்கீழ்த் திருந்துகாத லுடன்வீழ்ந்தார். (கஅகூ)

வீழ்ந்துபோற்றிப் பரவசமாய் விம்மியெழுந்து மெய்யன்பால்
வாழ்ந்தசிந்தை யுடன்பாடி மாறுவிருப்பிற் புறம்போந்து
சூழ்ந்ததொண்ட ருடன்மருவு நாளிற்றொல்லைக் கச்சிநகர்த்
தாழ்ந்தசடையா ராலயங்கள் பலவுஞ்சார்ந்து வணங்குவார். (ககூ0)

சீரார்காஞ்சி மன்னுதிருக் காமக்கோட்டஞ் சென்றிறைஞ்சி
நீரார்சடையா ரமர்ந்தருளு நீடுதிருமேற் றளிமேவி
யாராவன்பிற் பணிந்தேத்து மளவில்கொந்தா வொண்சுடராம்
பாரார்பெருமைத் திருப்பதிகம் பாடிமகிழ்ந்து பரவினர். (ககூக)

திருமேற்றளி-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நொந்தா வொண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமே புகுந்துநின்ற
சிந்தா யெந்தைபிரான் றிருமேற் றளியுறையு
மெந்தா யுன்னையல்லா லினியேத்த மாட்டேனே.

பாரூர் பல்லவனூர் மதிட்காஞ்சி மாநகர்வாய்ச்
சீரூரும் புறவிற் றிருமேற் றளிச்சிவனை
யாரூரன் னடியா னடித்தொண்ட னாரூரன்சொன்ன
சீரூர்பாட வல்லார் சிவலோகஞ் சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-திருமேற்றளிநாயகர்.

திருப்பதிகம்—உ.

---

ஓணகாந்தன் றளிமேவு மொருவர்தம்மை யுரிமையுடன்
பேணியமைந்த தோழமையாற் பெருகுமடிமைத் திறம்பேசி
காணமோடு பொன்வேண்டி நெய்யும்பாலுங் கலைவிளங்கும்
யாணர்ப்பதிக மெடுத்தேத்தி யெண்ணிறிபெற் றினிதிருந்தார்.(கசூஉ)

---

திருஓணகாந்தன்றளி-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நெய்யும்பாலுந் தயிருங்கொண்டு நித்தல்பூசனை செய்யலுற்றார்
கையிலொன்றுங் காணமில்லை கழலடிதொழு துய்யினல்லா
லைவர்கொண்டிங் காட்டவாடி யாழ்குழிப்பட் டழுந்துவேற்
குய்யுமாறென் றருளிச்செய்யீ ரோணகாந்தன் றளியுளீரே.

ஓவணமேலெரு தொன்றேறு மோணகாந்தன் றளியுளார்தா
மாவணஞ்செய் தாளுங்கொண்டா துகிலொடு பட்டுவீக்கிக்
கோவணமேற் கொண்டவேடங் கோவையாக வாரூரன்சொன்ன
பாவணத்தமிழ் பத்தும்வல்லார் பறையுந்தாஞ்செய்த பாவந்தானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஓணகாந்தேசுவரர்.

திருப்பதிகம்—க.

---

அங்கணமாவ ரனேகதங்கா வதத்தையெய்தி யுள்ளணைந்து
செங்கண்விடையார் தமைப்பணிந்து தேனெய்புரிந்தென்றெடுத்ததமிழ்
தங்குமிடமா மெனப்பாடித் தாழ்ந்துபிறவுந் தானங்கள்
பொங்குகாத லுடன்போற்றிப் புரிந்தப்பதியிற் பொருந்துநாள். (கககூ)

---

திருக்கச்சிஅனேகதங்காவதம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தேனெய்புரிந்துழல் செஞ்சடையெம்பெரு மானதிடந்திக ழைங்கணைக்
கோனையெரித்தெரி யாடியிடங்குல வானதிடங்குறை யாமறையா
மானையிடத்ததோர் கையனிடமத மாறுபடப்பொழி யும்மலைபோ
லானையுரித்தபி ரானதிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே.

வீடுபெறப்பல வூழிகணின்று நினைக்குமிடம்வினை தீருமிடம்
பீடுபெறப்பெரி யோரதிடங்கலிக் கச்சியனேகதங் காமனிடம்
பாடுமிடத்தடி யான்புகழூர னுரைத்தவிம்மாலைகள் பத்தும்வல்லார்
கூடுமிடஞ்சிவ லோகனிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-காவதேசுவரர்.

திருப்பதிகம்—க.

---

பாடலிசையும் பணியினாற் பாவைதழுவக் குழைகம்பர்
ஆடன்மருவுஞ் சேவடிகள் பரவிப்பிரியா தமர்கின்றார்
நீடூழுதூர்ப் புனற்புறத்தி னிலவும்பதிக டொழவிருப்பான்
மாடநெருங்கு வன்பார்த்தான் பனங்காட்டூரில் வந்தடைந்தார். (ககூச)

செல்வமல்கு திருப்பனங்காட் டூரிற்செம்பொற் செழுஞ்சுடரை
யல்லலறுக்கு மருமருந்தை வணங்கியன்பு பொழிகண்ணீர்
மல்கநின்று விடையின்மேல் வருவாரெனும்வண் டமிழ்ப்பதிக
நல்லவிசையி னுடன்பாடிப் போந்துபுறம்பு நண்ணுவார். (ககூரு)

---

திருப்பனங்காட்டூர்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
யடையிலன் புடையானை யாவர்க்கு மறிவொண்ணா
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற் கங்கைவைத்தானைச் சாராதார் சார்வென்னே.

பாரூரும் பனங்காட்டூர்ப் பவளத்தின் படியானைச்
சீரூருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
வாரூரா னடித்தொண்ட னடியன்சொ லடிநாய்ச்சொ
லூரூரன் றமிழ்மாலைசெய் வாருயர்வானத் துயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பனங்காட்டீசர். தேவியார்-அமுதவல்லியம்மை.

திருப்பதிகம்—க.

---

மன்னுதிருமாற் பேறணைந்து வணங்கிப்பரவித் திருவல்லந்
தன்னுளெய்தி யிறைஞ்சிப்போய்ச் சாருமேல்பாற் சடைக்கற்றைப்
பின்னன்முடியா ரிடம்பலவும் பேணிவணங்கிப் பெருந்தொண்டர்
சென்னிமுகிறோய் தருங்குவட்டுத் திருக்காளத்தி மலைசேர்ந்தார். ()

தடுக்கலாகாப் பெருங்காத றலைநின்றருளுங் கண்ணப்ப
ரிடுக்கண்களைந்தாட் கொண்டருளு மிறைவர்மகிழ்ந்த காளத்தி
யடுக்கல்சேர வணைந்துபணிந் தருளாலேறி யன்பாறு
மடுப்பத்திருமுன் சென்றெய்தி மலைமேன்மருந்தை வணங்கினார். (ககள)

வணங்கியுள்ளங் களிகூர மகிழ்ந்துபோற்றி மதுரவிசை
யணங்குசெண்டா டெனும்பதிகம் பாடியன்பாற் கண்ணப்பர்
மணங்கொள்மலர்ச்சே வடிபணிந்து வாழ்ந்துபோந்து மன்னுபதி
யிணங்குதொண்ட ருடன்கெழுமி யின்புற்றிருக்கு மந்நாளில். (ககஅ)

---

திருக்காளத்தி-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

செண்டாடும் விடையாய் சிவனேயென் செழுஞ்சுடரே
வண்டாடுங் குழலா ளுமைபாக மகிழ்ந்தவனே
கண்டார்கா தலிக்குங் கணநாதனெங் காளத்தியா
யண்டாவுன்னை யல்லா லறிந்தேத்த மாட்டேனே.

காருரும் பொழில்சூழ் கணநாதனெங் காளத்தியுள்
ளாராவின் னமுதையணி நாவலாரூ ரன்சொன்ன
சீரூர்செந்தமிழ்கள் செப்புவார் வினையாயினபோய்ப்
பேராவிண் ணுலகம் பெறுவர்பிழைப் பொன்றிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

வடமாதிரத்துப் பருப்பதமுந் திருக்கேதார மலைமுதலா
விடமாவரனார் தாமுவந்த வெல்லாமிங்கே யிருந்திறைஞ்சி
நடமாடியசே வடியாரை நண்ணினார்போ லுண்ணிறைந்து
திடமாங்கருத்திற் றிருப்பதிகம் பாடிக்காதல் சிறந்திருந்தார். (ககக)

---

ஸ்ரீபருப்பதம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

மானும் மரையினமும் மயிலினமுங் கலந்தெங்குந்
தாமே மிகமேய்ந்து தடஞ்சுனைநீர் களைப்பருகிப்
பூமா மரமுரிஞ்சிப் பொழிலூடே சென்றுபுக்குத்
தேமாம் பொழில்நீழற் றுயில்சீபர்ப் பதமலையே.

நல்லா ரவர்பலர்வாழ் திருவயல்நா வலவூரன்
செல்ல லுறவரிய சிவன்சீபர்ப் பதமலையை
யல்ல லவைதீரச் சொன்னதமிழ் மாலைகள்வல்லா
ரொல்லை சிலவுயர்வா னகமாண்டங் கிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கேதாரம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாதறஞ் செய்ம்மின்றடங் கண்ணான்மல ரோனுங்
கீழ்மேலுற நின்றான்றிருக் கேதாரமெ னீரே.

நாவின்மிசை யரையன்னொடு தமிழ்ஞானசம் பந்த
னுவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்திருக் கேதாரத்தை யூரனுரை செய்த
பாவின்றமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்குசிலநாள் வைகிப்பின் னருளாற்போந்து பொருவிடையார்
தங்குமிடங்க ளனைப்பலவுஞ் சார்ந்துதாழ்ந்து தமிழ்பாடிப்
பொங்குபுணரிக் கரைமருங்கு புவியுட்சிவலோ கம்போலத்
திங்கண்முடியா ரமர்ந்ததிரு வொற்றியூரைச் சென்றடைந்தார். (௨00)

அண்ணறொடர்ந்தா வணங்காட்டி யாண்டநம்பி யெழுந்தருள
வெண்ணில்பெருமை யாதிபுரி யிறைவரடியா ரெதிர்கொள்வார்
வண்ணவீதி வாயிறொறும் வாழைகமுகு தோரணங்கள்
சுண்ணநிறைபொற் குடந்தூப தீபமெடுத்துத் தொழவெழுங்கால். ௨0௧

வரிமங்கலநல் லியமுழங்க வாசமாலை யணியரங்கிற்
புரமங்கையர்க ணடமாடப் பொழியும்வெள்ளப் பூமாரி
யரமங்கையரு மமரர்களும் விசவன்ப ருடன்புகுந்தார்
பிரமன்றலையிற் பலியுவந்த பிரானார்விரும்பு பெருந்தொண்டர். (௨0௨)

ஒற்றியூரி னுண்மையோடுங் கூடநின்றா ருயர்தவத்தின்
பற்றுமிக்க திருத்தொண்டர் பரந்தகடல்போல் வந்தீண்டிச்
சுற்றுமணைந்து துதிசெய்யத் தொழுதுதம்பி ரானன்பர்
கொற்றமழவே றுடையவர்தங் கோயில்வாயி லெய்தினார். (௨0௩)

வானையளக்குங் கோபுரத்தை வந்துபணிந்து புகுந்துவளர்
கூனலிளவெண் பிறைச்சடையார் கோயில்வலங்கொண் டெதிர்குறுகி
யூனுமுயிருங் கரைந்துருக வுச்சிகுவித்த கையினுட
னானாத னுடன்வீழ்ந்தா ராராவன்பி னாரூரர். (௨0௪)

ஏட்டுவரியி லொற்றியூர் நீங்கவென்ன வெழுத்தறியு
நாட்டமலருந் திருநுதலார் நறும்பொற்கமலச் சேவடியிற்
கூட்டுமுணர்வுங் கொண்டெழுந்து கோதிலமுத விசைகூடப்
பாட்டும்பாடிப் பரவியெனும் பதிகமெடுத்துப் பாடினார். (௨0௫)

---

திருவொற்றியூர்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பாட்டும்பாடிப் பரவித்திரிவா
ரீட்டும்வினைக டீர்ப்பான்கோயில்
காட்டுங்கலமுந் திமிலுங்கரைக்கே
யோட்டுந்திரைவா யொற்றியூரே.

ஒற்றியூரு மரவும்பிறையும்
பற்றியூரும் பவளச்சடையா
னொற்றியூர்மே லூரனுரைத்த
கற்றுப்பாடக் கழியும்வினையே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடியறிவு பரவசமாம் பரிவுபற்றப் புறம்போந்து
நீடிவிருப்பிற் பெருங்காத னிறைந்தவன்பர் பலர்போற்றத்
தேடுமயனுந் திருமாலு மறிதற்கரிய திருப்பாதங்
கூடுங்காலங் களிலணைந்து பரவிக்கும்பிட் டினிதிருந்தார். (௨0௬)

இந்தநிலைமை யாரிவரிங் கிருந்தார்முன்பே யிவர்க்காக
வந்தண்கயிலை மலைநீங்கி யருளாற்போந்த வநிந்திதையார்
வந்துபுவிமே லவதரித்து வளர்ந்துபின்பு வன்றொண்டர்
சந்தவிரைசூழ் புயஞ்சேர்ந்த பரிசுதெரியச் சாற்றுவாம். (௨0௭)

நாலாங்குலத்திற் பெருகுநல முடையார்வாழும் ஞாயிற்றின்
மேலாங்கொள்கை வேளாண்மை மிக்கதிருஞா யிறுகிழவர்
பாலாதரவு தருமகளா ராகிப்பார்மே லவதரித்தா
ராலாலஞ்சேர் கறைமிடற்ற ராரூரான்முன்னை யநிந்திதையார். (௨0௮)

மலையான்மடந்தை மலர்ப்பாத மறவாவவள்பால் வந்தநெறி
தலையாமுணர்வு வந்தணையத் தாமேயறிந்த சங்கிலியா
ரலையார்வேற்கட் சிறுமகளி ராயத்தோடும் விளையாட்டு
நிலையாயினவப் பருவங்க டோறுநிகழ நிரம்புவார். (உ0கூ)

சீர்கொண்மரபில் வருஞ்செயலே யன்றித்தெய்வ நிகழ்தன்மை
பாரிலெவரு மதிசயிக்கும் பண்பில்வளரும் பைந்தொடியார்
வாருமணிய வணியாவாம் வளர்மென்முலைக ளிடைவருத்தச்
சாரும்பதத்திற் றந்தையார் தங்கண்மனைவி யார்க்குரைப்பார். (உக0)

வடிவுங்குணமு நம்முடைய மகட்குமண்ணு ளோர்க்கிசையும்
படிவமன்றி மேற்பட்ட பரிசாம்பான்மை யறிகிலோங்
கடிசேர்மணமு மினிநிகழுங் காலமென்னக் கற்புவளர்
கொடியேயனைய மனைவியா ரேற்குமாற்றாற் கொடுமென்றார். (உகக)

தாயரோடுந் தந்தையார் பேசக்கேட்ட சங்கிலியா
ரேயுமாற்ற மன்றிதுவெம் பெருமானீசன் றிருவருளே
மேயவொருவர்க் குரியதியான் வேறென்விளையு மெனவெருவுற்
றாயவுணர்வு மயங்கிமிக வயர்ந்தேயவனி மேல்விழுந்தார். (உகஉ)

பாங்குநின்ற தந்தையார் தாயார்பதைத்துப் பரிந்தெடுத்தே
யேங்குமுள்ளத் தினராகி யிவளுக்கென்னோ வுற்றதெனத்
தாங்கிச்சீத விரைப்பனிநீர் தெளித்துத்தைவந் ததுநீங்க
வாங்குநுசுப்பு நுதலாளை வந்ததுனக்கிங் கென்னென்றார். (உகங)

என்றுதம்மை யீன்றெடுத்தார் வினவமறைவிட் டியம்புவா
ரின்றென்றிறத்து நீர்மொழிந்த விதுவென்பரிசுக் கிசையாது
வென்றிவிடையா ரருள்செய்தா ரொருவர்க்குரியன் யானினிமேற்
சென்றுதிருவொற்றி யூரணைந்து சிவனாரருளிற் செல்வனென. (உகச)

அந்தமாற்றங் கேட்டவர்தா மயர்வும்பயமு மதிசயமும்
வந்தவுள்ளத் தினராகி மற்றமாற்ற மறைத்தொழுகப்
பந்தநீடு மிவர்குலத்து நிகராமொருவன் பரிசறியான்
சிந்தைவிரும்பி மகட்பேசி விடுத்தார்சிலருஞ் சென்றிசைத்தார். (உகரு)

தாதையாரு மதுகேட்டுத் தன்மைவிளம்பத் தகாமையினு
லேதமெய்தா வகைமொழிந்து போக்கவவராங் கெய்தாமுன்
றீதங்கிழைத்தே யிறந்தான்போற் செல்லவிடுத்தா ருடன்சென்றார்
மாதராளைப் பெற்றார்மற் றதனைக்கேட்டு மனமருண்டார். (உகசு)

தையலார்சங் கிலியார்தந் திறத்துப்பேசத் தகாவார்த்தை
யுய்யவேண்டு நினைவுடையா ருரையாரொன்றங் குலகறியச்
செய்யவிதிபோ லதுநிகழச் சிறந்தார்க்குள்ள படிசெப்பி
யையுமுள்ளத் துட்னஞ்சி நங்கைசெயலே யுட்ன்படுவார். (உகள)

அணங்கேயாகு மிவள்செய்கை யறிந்தோர்பேச வஞ்சுவரால்
வணங்கியீசர் திறமன்றி வார்த்தையறியாண மற்றென்று
குணங்களிவைபா மினியிவடான் குறித்தபடியே யொற்றிநகர்ப்
பணங்கொளரவச்சடையார்தம் பாற்கொண்டணைவோமெனப்பகர்வார்.

பண்ணார்மொழிச்சங் கிலியாரை நோக்கிப்பயந்தா ரொடுங்கிளைஞர்
தெண்ணீர்முடியார் திருவொற்றி யூரிற்சேர்ந்து செல்கதியுங்
கண்ணார்நுதலார் திருவருளா லாகிக்கன்னி மாடத்துத்
தண்ணார் தடஞ்சூழ்நகரிற் றங்கிப்புரிவீர் தவமென்று. (உகக)

பெற்றதாதை சுற்றத்தார் பிறைசேர்முடியா ரருளாலே
மற்றுச்செயலொன் றறியாது மங்கையார்சங் கிலியார்தாஞ்
சொற்றவண்ணஞ் செயத்துணிந்து துதைந்தசெல்வத் தொடும்புரங்கள்
செற்றசிலையார் திருவொற்றி யூரிற்கொண்டு சென்றணைந்தார். (உஉ0)

சென்னிவளர்வெண் பிறையணிந்த சிவனார்கோயி லுட்புகுந்து
துன்னுஞ்சுற்றத் தொடும்பணிந்து தொல்லைப்பதியோ ரிசைவினாற்
கன்னிமாட மருங்கமைத்துக் கடிசேர்முறைமைக் காப்பியற்றி
மன்னுஞ்செல்வந் தகவகுத்துத் தந்தையார்வந் தடிவணங்கி. (உஉக)

யாங்களுமக்குப் பணிசெய்ய வீசற்கேற்ற பணிவிரும்பி
யோங்குகன்னி மாடத்தி லுறைகின்றீரென் றுரைக்கின்றார்
தாங்கற்கரிய கண்கணீர்த் தாரையொழுகத் தரியாதே
யேங்குசுற்றத் தொடுமிறைஞ்சிப் போனாரெயில்சூழ் தம்பதியில். உஉஉ

காதல்புரிந்து தவம்புரியுங் கன்னியாரங் கமர்கின்றார்
பூதநாதர் கோயிலினிற் காலந்தோறும் புக்கிறைஞ்சி
நீதிமுறைமை வழுவாது தமக்குநேர்ந்த பணிசெய்யச்
சீதமலர்ப்பூ மண்டபத்துத் திரைசூழொருபாற் சென்றிருந்து. (உஉ௩)

பண்டுகயிலைத் திருமலையிற் செய்யும்பணியின் பான்மைமனங்
கொண்டவுணர்வு தலைசிறப்பக் குலவுமலர்மென் கொடியனையார்
வண்டுமருவுந் திருமலர்மென் மாலைகாலங் களுக்கேற்ப
வண்டர்பெருமான் முடிச்சாத்த வமைத்துவணங்கி யமருநாள்.(உஉச)

அந்திவண்ணத் தொருவர்திரு வருளால்வந்த வாரூரர்
கந்தமாலைச் சங்கிலியார் தம்மைக்காதன் மணம்புணர
வந்தபருவ மாதலால் வகுத்ததன்மை வழுவாத
முந்தைவிதியால் வந்தொருநாண் முதல்வர்கோயி லுட்புகுந்தார்.(உஉரு)

அண்டர்பெருமா னந்தணரா யாண்டநம்பி யங்கணரைப்
பண்டைமுறைமை யாற்பணிந்து பாடிப்பரவிப் புறம்போந்து
தொண்டுசெய்வார் திருத்தொழில்கள் கண்டுதொழுது செல்கின்றார்
புண்டரீகத் தடகிகர்பூந் திருமண்டபத்தி னுட்புகுந்தார். (உஉசா)

அன்புநாரா வஞ்செழுத்து நெஞ்சுதொடுக்க வலர்தொடுத்தே
யென்புள்ளுருக்கு மடியாரைத் தொழுதுநீங்கி வேறிடத்து
முன்புபோலத் திரைநீக்கி முதல்வர்சாத்தும் பணிகொடுத்து
மின்போன்மறையுஞ் சங்கிலியார் தம்மைவிதியாற் கண்ணுற்றார். (உஉஎ)
கோவாமுத்துஞ் சுரும்பேறாக் கொழுமென்முகையு மனையாரைச்
சேவார்கொடியார் திருத்தொண்டர் கண்டபோது சிந்தைநிறை
காவாதவர்போற் போய்விழத் தம்பாற்காம னார்துரந்த
பூவாளிகளவர் துறவிழத் தரியார்புறமே போந்துரைப்பார். (உஉஅ)
இன்னபரிசென் றறிவரிதா லீங்கோர்மருங்கு திரைக்குள்ளாற்
பொன்னுமணியு மலர்ந்தவொளி யமுதிலளாவிப் புதியமதி
தன்னுணீர்மை யாற்குழைத்துச் சமைத்தமின்னுக் கொடிபோல்வா
ளென்னையுள்ளந் திரிவித்தாள் யார்கொலென்றங் கியம்புதலும். (உஉகூ)
அருகுநின்றார் விளம்புவா ரவர்தாநங்கைச் சங்கிலியார்
பெருகுந்தவத்தா லீசர்பணி பேணுங்கன்னி யாரென்ன
விருவராலிப் பிறவியையெம் பெருமானருளா லெய்துவித்தார்
மருவும்பரவை யொருத்தியிவண் மற்றையவளா மெனமருண்டார். ()
மின்னார்சடையார் தமக்காளாம் விதியால்வாழு மெனைவருத்தித்
தன்னாரருளால் வரும்பேறு தவத்தாலணையா வகைதடுத்தே
யென்னாருயிரு மெழின்மலருங் கூடப்பிணைக்கு மிவடன்னைப்
பொன்னாரிதழி முடியார்பாற் பெறுவேனென்று போய்ப்புக்கார். (உஙக)
மலர்மேலயனு நெடுமாலும் வானுநிலனுங் கிளைத்தறியா
நிலவுமல்குந் திருமுடியு நீடுங்கழலு முடையானை
யுலகமெல்லாந் தாமுடையா ராயுமொற்றி யூரமர்ந்த
விலகுசோதிப் பரம்பொருளை யிறைஞ்சிமுன்னின் றேத்துவார். (உஙஉ)
மங்கையொருபான் மகிழ்ந்ததுவு மன்றிமணிநீண் முடியின்கட்
கங்கைதன்னைக் கரந்தருளுங் காதலுடையீ ரடியேனுக்
கிங்குநுமக்குத் திருமாலை தொடுத்தெனுள்ளத் தொடையவிழ்த்த
திங்கள்வதனச் சங்கிலியைத் தந்தென்வருத்தந் தீருமென. (உஙங)
அண்ணலார்முன் பலவுமவ ரறியவுணர்த்திப் புறத்தணைந்தே
யெண்ணமெல்லா முமக்கடிமை யாமாறெண்ணு மென்னெஞ்சிற்
றிண்ணமெல்லா முடைவித்தாள் செய்வதொன்று மறியேன்யான்
றண்ணிலாமின் னொளிர்பவளச் சடையீரருளு மெனத்தளர்வார். (உஙச)
மதிவாண்முடியார் மகிழ்கோயிற் புறத்தோர்மருங்கு வந்திருப்பக்
கதிரோன்மேலைக் கடல்காண மாலைக்கடலைக் கண்டயர்வார்
முதிராமுலையார் தம்மைமணம் புணர்க்கவேண்டி 0 முளரிவளை
நிதியானன்பர் தமக்கருளு நண்பானினைந்து நினைந்தழிய. (உஙரு)

0 முளரிவளைநிதியான அன்பர் பதுமநிதி சங்கநிதியுள்ள குபேரனுக்கு நண்பரா கிய பரமசிவன் எனக்கொள்க.

உம்பருய்ய வுலகுய்ய வோலவேலை விடமுண்ட
தம்பிரானார் வன்றொண்டர் தம்பாலெய்திச் சங்கிலியை
யிம்பருலகில் யாவருக்கு மெய்தவொண்ணு விருந்தவத்துக்
கொம்பையுனக்குத் தருகின்றோங் கொண்டகவலை யொழிகென்ன. ()

அன்றுவெண்ணெய் நல்லூரில் வலியவாண்டு கொண்டருளி
யொன்றுமறியா நாயேனுக் குறுதியளித்தீ ருயிர்காக்க
வின்றுமிவளை மணம்புணர்க்க வேன்றுநின்றீ ரெனப்போற்றி
முன்றன்மலர்ச்சே வடியிணைக்கீழ் வணங்கிமகிழ்ந்தார் வன்றொண்டர். ()

ஆண்டுகொண்ட வந்தணனா ரவருக்கருளிக் கருணையினு
னீண்டகங்குல் யாமத்து நீங்கிவானி னிறைமதியந்
தீண்டுகன்னி மாடத்துச் சென்றுதிகழ்சங் கிலியாராந்
தூண்டுசோதி விளக்கனையார் தம்பாற்கனவிற் றோன்றினார். (௨௩௮)

தோற்றும்பொழுதிற் சங்கிலியார் தொழுதுவிழுந்து பரவசமா
யாற்றவன்பு பொங்கியெழுந் தடியேனுய்ய வெழுந்தருளும்
பேற்றுக்கெனையான் செய்வதெனப் பெரியகருணை பொழிந்தனைய
நீற்றுக்கோல வேதியரு நேர்நின்றருளிச் செய்கின்றார். (௨௩௯)

சாருந்தவத்துச் சங்கிலிகேள் சாலவென்பா லன்புடையான்
மேருவரையின் மேம்பட்ட தவத்தான்வெண்ணெய் நல்லூரி
லியாருமறிய யானாள வுரியானுன்னை யெனையிரந்தான்
வார்கொண்முலையாய் நீயவனை மணத்தாலணைவாய் மகிழ்ந்தென்றார். ()

ஆதிதேவர் முன்னின்றங் கருளிச்செய்த பொழுதின்கண்
மாதரார்சங் கிலியாரு மாலுமயனு மறிவரிய
சீதமலர்த்தா மரையடிக்கீழ்ச் சேர்ந்துவீழ்ந்து செங்கின்று
வேதமுதல்வர் முன்னடுக்க மெய்தித்தொழுது விளம்புவார். (௨௪௧)

எம்பிரானே நீரருளிச் செய்தார்க்குரியேன் யானிமையோர்
தம்பிரானே யருடலைமேற் கொண்டேனறக்க விதிமணத்தா
னம்பியாரூ ரருக்கென்னை நல்கியருளும் பொழுதிமயக்
கொம்பினுகங் கொண்டீர்க்குக் கூறுந்திறமொன் றுளதென்பார். (௨௪௨)

பின்னும்பின்னன் முடியார்முன் பெருகநாணித் தொழுதுரைப்பார்
மன்னுந்திருவா ரூரின்க ணவர்தாமிகவு மகிழ்ந்துறைவ
தென்னுந்தன்மை யறிந்தருளு மெம்பிராட்டி திருமுலைதோய்
மின்னும்புரிநூ லணிமார்பீ ரென்றார்குன்று விளக்கனையார். (௨௪௩)

வேறு.

மற்றவர்தம் முன்கொண்டு வன்றொண்டர் நிலைமையினை
யொற்றிநக ரமர்ந்தபிரா னுணர்ந்தருளி யுரைசெய்வார்
பொற்றொடியா யுனையிகந்து போகாமைக் கொருசபத
மற்றமுறு நிலைமையினு லவன்செய்வா னெனவருளி. (௨௪௪)

வேயனைய தோளியார் பானின்று மீண்டருளித்
தூயமன மகிழ்ந்திருந்த தோழனர் பாலணைந்து
நீயவளை மணம்புணரு நிலையுரைத்தோ மதற்கவள்பா
லாயதொரு குறையுன்னா லமைப்பதுள தென்றருளி. (உ௪௫)

வன்றொண்டர் மனங்களித்து வணங்கியடி யேன்செய்ய
நின்றகுறை யாதென்ன நீயவளை மணம்புணர்தற்
கொன்றியுட னேநிகழ வொருசபத மவண்முன்பு
சென்றுகிடைத் திவ்விரவே செய்கவென வருள்செய்தார். (உ௪௬)

என்செய்தா லிதுமுடியு மதுசெய்வன் யானதற்கு
மின்செய்த புரிசடையீ ரருள்பெறுதல் வேண்டுமென
முன்செய்த முறுவலுடன் முதல்வரவர் முகநோக்கி
யுன்செய்கை தனக்கினியென் வேண்டுவதென் றுரைத்தருள. (உ௪௭)

வம்பணிமென் முலையவர்க்கு மனங்கொடுத்த வன்றொண்டர்
நம்பரிவர் பிறபதியும் நயந்தகோ லஞ்சென்று
கும்பிடவே கடவேனுக் கிதுவிலக்கா மெனக்குறிப்பாற்
றம்பெருமான் றிருமுன்பு தாம்வேண்டுங் குறையுரைப்பார். (உ௪அ)

சங்கரர்தாள் பணிந்திருந்து தமிழ்வேந்தர் மொழிகின்றார்
மங்கையவ டனைப்பிரியா வகைசபதஞ் செய்வதனுக்
கங்கவளோ டியான்வந்தா லப்பொழுது கோயில்விடத்
தங்குமிடந் திருமகிழ்க்கீழ்க் கொளவேண்டு மெனத்தாழ்ந்தார். (உ௪௯)

தம்பிரான் றோழரவர் தாம்வேண்டிக் கொண்டருள
வும்பர்நா யகருமதற் குடன்பாடு செய்வாராய்
நம்பிநீ சொன்னபடி நாஞ்செய்து மென்றருள
வெம்பிரா னேயரிய தினியெனக்கென் னெனவேத்தி. (உ௫0)

அஞ்சலிசென் னியின்மன்னி யருள்பெற்றுப் புறம்போதச்
செஞ்சடையா ரவர்மாட்டுத் திருவிளையாட் டினைமகிழ்ந்தோ
வஞ்சியிடைச் சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ
துஞ்சிருண்மீ ளவுமணைந்தா ரவர்க்குறுதி சொல்லுவார். (உ௫௧)

சங்கிலியார் தம்மருங்கு முன்போலச் சார்ந்தருளி
நங்கையுனக் காரூர னயந்துகூ றுறக்கடவ
னங்குநமக் கெதிர்செய்யு மதற்குநீ யிசையாதே
கொங்கலர்பூ மகிழின்கீழ்க் கொள்வதெனக் குறித்தருள. (உ௫உ)

மற்றவருங் கைகுவித்து மாலயனுக் கறிவரியீ
ரற்றமெனக் கருள்புரிந்த வதனிலடி யேனுகப்
பெற்றதியா னெனக்கண்கள் பெருந்தாரை பொழிந்திழிய
வெற்றிமழ விடையார்தஞ் சேவடிக்கீழ் வீழ்ந்தெழுந்தார். (உ௫௩)

தையலார் தமக்கருளிச் சடாமகுட ரெழுந்தருள
வெய்தியபோ ததிசயத்தா லுணர்ந்தெழுந்தவ் விரவின்கட்
செய்யசடை யாரருளின் றிறநினைந்தே கண்டுயிலா
ரையமுட னுருகுதுயில் சேடியரை யணைந்தெழுப்பி. (உ௫௪)

நீங்குதுயிற் பாங்கியர்க்கு நீங்கலெழுத் தறியுமவர்
தாங்கனவி லெழுந்தருளித் தமக்கருளிச் செய்ததெல்லாம்
பாங்கறிய மொழியவவர் பயத்தினுட னதிசயமுந்
தாங்குமகிழ்ச் சியுமெய்தச் சங்கிலியார் தமைப்பணிந்தார். (உ௫௫)

சேயிழையார் திருப்பள்ளி யெழுச்சிக்கு மலர்தொடுக்குந்
தூயபணிப் பொழுதாகத் தொழில்புரிவா ருடன்போதக்
கோயிலின்முன் காலமது வாகவே குறித்தணைந்தா
ராயசப தஞ்செய்ய வரவுபார்த் தாரூரர். (உ௫௬)

நின்றவரங் கெதிர்வந்த நேரிழையார் தம்மருங்கு
சென்றணைந்து தம்பெருமான் றிருவருளின் றிறங்கூற
மின்றியங்கு நுண்ணிடையார் விதியுடன்பாட் டெதிர்விளம்பா
ரொன்றியநா ணொடுமடவா ருடனொதுங்கி யுட்புகுந்தார். (உ௫௭)

அங்கவர்தம் பின்சென்ற வாரூர ராயிழையீ
ரிங்குநான் பிரியாமை யுமக்கிசையும் படியியம்பத்
திங்கண்முடி யார்திருமுன் போதுவீ ரெனச்செப்பச்
சங்கிலியார் கனவுரைப்பக் கேட்டதா தியர்மொழிவார். (உ௫௮)

எம்பெருமா னிதற்காக வெழுந்தருளி யிமையவர்கள்
தம்பெருமான் றிருமுன்பு சாற்றுவது தகாதென்ன
நம்பெருமான் வன்றொண்டர் நாதர்செய லறியாதே
கொம்பனையீர் யான்செய்வ தெங்கென்று கூறுதலும். (உ௫௯)

மாதரவர் மகிழ்க்கீழே யமையுமென மனமருள்வா
ரீதலரா கிலுமாகு மிவர்சொன்ன படிமறுக்கி
லாதலினா லுடன்படவே யமையுமெனத் துணிந்தாகிற்
போதுவீ ரெனமகிழ்க்கீ ழவர்போதப் போயணைந்தார். (உ௬0)

தாவாத பெருந்தவத்துச் சங்கிலியா ருங்காண
மூவாத திருமகிழை முக்காலும் வலம்வந்து
மேவாதிங் கியானகலே னெனநின்று விளம்பினர்
பூவார்தண் புறம்பொய்கை முனைப்பாடிப் புரவலனார். (உ௬௧)

மேவியசீ ராரூரர்மெய்ச் சபதவினை முடிப்பக்
காவியினேர் கண்ணாருங் கண்டுமிக மனங்கலங்கிப்
பாவியே னிதுகண்டேன் றம்பிரான் பணியாலென்
றாவிசோர்ந் தழிவாரங் கொருமருங்கு மறைந்தயர்ந்தார். (உ௬௨)

திருநாவ லூராளி தம்முடைய செயன்முற்றிப்
பொருநாகத் துரிபுனைந்தார் கோயிலினுட் புகுந்திறைஞ்சி
யருளுளுந் தரவிருந்தீர் செய்தவா றழகிதெனப்
பெருநாம மெடுத்தேத்திப் பெருமகிழ்ச்சி யுடன்போந்தார். (உ௬௩)

வார்புனையும் வனமுலையார் வன்றொண்டர் போனதற்பின்
ரூர்புனையு மண்டபத்துத் தம்முடைய பணிசெய்து
கார்புனையு மணிகண்டர் செயல்கருத்திற் கொண்டிறைஞ்சி
யேர்புனையுங் கன்னிமா டம்புகுந்தா ரிருள்புலர. (உ௬௪)

அன்றிரவே யாதிபுரி யொற்றிகொண்டா ராட்கொண்ட
பொன்றிகழ்பூண் வன்றொண்டர் புரிந்தவினை முடித்தருள
நின்றபுகழ்த் திருவொற்றி யூர்நிலவு தொண்டர்க்கு
மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள வுணர்த்துவார். (உ௬௫)

நம்பியா ரூரனுக்கு நங்கைசங் கிலிதன்னை
யிம்பர்ஞா லத்திடைநம் மேவலினுன் மணவினைசெய்
தும்பர்வா ழுலகறிய வளிப்பீரென் றுணர்த்துதலுந்
தம்பிரான் றிருத்தொண்ட ரருடலைமேற் கொண்டெழுவார். (உ௬௬)

மண்ணிறைந்த பெருஞ்செல்வத் திருவொற்றி யூர்மன்னு
மெண்ணிறைந்த திருத்தொண்ட ரெயிற்பதியோ ருடனீண்டி
யுண்ணிறைந்த மகிழ்ச்சியுட னும்பர்பூ மழைபொழியக்
கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கலியாணஞ் செய்தளித்தார். (உ௬௭)

பண்டுநிகழ் பான்மையினாற் பசுபதிதன் னருளாலே
வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட தூநலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றமர்ந்திருந்தார் காதலினால். (உ௬௮)

யாழின்மொழி யெழின்முறுவ லிருகுழைமேற் கடைபிறழு
மாழைவிழி வனமுலையார் மணியல்குற் றுறைபடிந்து
வீழுமவர்க் கிடைதோன்றி மிகுபுலவிப் புணர்ச்சிக்கண்
ணூழியா மொருகணந்தா னவ்வூழி யொருகணமாம். (உ௬௯)

இங்கிலையிற் பேரின்ப மினிதமர்வா ரிறையுறையு
மன்னுபுக ழொற்றியூ ரதனின்மகிழ் சிறப்பினாற்
சென்னிமதி புனைவார்தந் திருப்பாதந் தொழுதிருந்தார்
முன்னியகா லங்கள்பல முறைமையினால் வந்தகல. (உ௭0)

பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின்
கொங்கணைந்து குளிர்சார லிடைவளர்ந்த கொழுந்தென்ற
லங்கணையத் திருவாரூ ரணிவீதி யழகரவர்
மங்கலநாள் வசந்தமெதிர் கொண்டருளும் வகைநினைந்தார். (உ௭௧)

வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங் கப்பெருமா
னொண்ணுதலார் புடைபரந்த வோலக்க மதனிடையே
பண்ணமரு மொழிப்பரவை யார்பாட லாடறனைக்
கண்ணுறமுன் கண்டுகொண் டார்போலக் கருதினார். (௨௭௨)

பூங்கோயி லமர்ந்தாரைப் புற்றிடங்கொண் டிருந்தாரை
நீங்காத காதலினா னினைந்தானை நினைவாரைப்
பாங்காகத் தாமுன்பு பணியவரும் பயனுணர்வா
ரீங்குநான் மறந்தேனென் றேசறவான் மிகவழிவார். (௨௭௩)

மின்னொளிச்செஞ் சடையானை வேதமுத லானானை
மன்னுபுகழ்த் திருவாரூர் மகிழ்ந்தானை மிகநினைந்து
பன்னியசொற் பத்திமையு மடிமையையுங் கைவிடுவா
னென்னுமிசைத் திருப்பதிக மெடுத்தியம்பி யிரங்கினார். (௨௭௪)

திருவாரூர் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

பத்திமையு மடிமையையுங் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தே போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனே
னெத்தனைநாள் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே.

பேரூரு மதகரியி னுரியானைப் பெரியவர்தஞ்
சீரூருந் திருவாரூர்ச் சிவனடியே திறம்விரும்பி
யாரூர னடித்தொண்ட னடியன்சொ லகலிடத்தி
லாரூர னிவைவல்லா ருலகவர்க்கு மேலாரே.

திருச்சிற்றம்பலம்.

பின்னொருநா டிருவாரூர் தனைப்பெருக நினைந்தருளி
யுன்னவினி யார்கோயில் புகுந்திறைஞ்சி யொற்றிநகர்
தன்னையக லப்புக்கார் தாஞ்செய்த சபதத்தான்
முன்னடிக டோன்றாது கண்மறைய மூர்ச்சித்தார். (௨௭௫)

செய்வதனை யறியாது திகைத்தருளி நெடிதுயிர்ப்பார்
மைவிரவு கண்ணார்பாற் சூளுறவு மறுத்ததனா
லிவ்வினைவந் தெய்தியதா மெனநினைந்தெம் பெருமானை
யெய்தியவித் துயர்நீங்கப் பாடுவே னெனநினைந்து. (௨௭௬)

வேறு.

அழுக்குமெய்கொடென் றெடுத்தசொற்பதிக மாதிநீள்புரி யண்ணலையோதி,வழுத்துநெஞ்சொடு தாழ்ந்துநின்றுரைப்பார் மாதோர்பாகனார் மலர்ப்பதமுன்னி, யிழுக்குநீக்கிட வேண்டுமென்றிரந்தே யெய்துவெந்துயர்க் கையறவினுக்கும்,பழிக்கும்வெள்கிலல் லிசைகொடுபரவிப் பணிந்துசாலவும் பலபலநினைவார். (உஎஎ)

திருவொற்றியூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அழுக்குமெய்கொடுன் றிருவடியடைந்தே னதுவுநான்படப் பாலதொன்றுளதே, பிழுக்கைவாரியும் பால்கொள்வரடிகேள் பிழைப்பனாகிலுந் திருவடிப்பிழையேன், வழுக்கிவீழினுந் திருப்பெயரல்லான் மற்றுநானறி யேன்மறுமாற்ற, மொழுக்கவென்கணுக் கொருமருந்துரையா யொற்றியூரெனு மூருறைவானே.

ஓதம்வந்ுலவுங்கரைதன்மே லொற்றியூருறை செல்வனைநாளு
ஞாலந்தான்பரவப்படுகின்ற நான்மறையங்க மோதியநாவன்
சீலந்தான்பெரிதும்மிகவல்ல சிறுவன்வன்றொண்ட னூரனுரைத்த
பாடல்பத்திவை வல்லவர்தாம்போய்ப் பரகதிதிண்ண நண்ணுவர்தாமே

திருச்சிற்றம்பலம்.

அங்குநாதர்செய் யருளதுவாக வங்கைகூப்பியா ரூர்தொழநினைந்தே, பொங்குகாதன்மீ ளாநிலைமையினாற் போதுவார்வழி காட்டமுன்போந்து, திங்கள்வேணியார் திருமுல்லைவாயில் சென்றிறைஞ்சினீ டிருந்திருப்பதிகஞ், சங்கிலிக்காக வென்கணைமறைத்தீ ரென்றுசாற்றிய தன்மையிற்பாடி. (உஎஅ)

திருமுல்லைவாயில்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

திண்பணிந்தேத்தும் வேதியாமாதர் வெருவிடவேழமொன்றுரித்தாய்
செண்பகச்சோலை சூழ்திருமுல்லை வாயிலாய்தேவர்தமரசே
தண்பொழிலொற்றி மாநகருடையாய் சங்கிலிக்காகவென்கண்கொண்ட
பண்பநின்னடியேன் படுதுயர்களையாய் பாசுபதாபரஞ்சுடரே.

விரைதருமலர்மே லயனெடுமாலும் வெருவிடநீண்டவெம்மானைத்
திரைதருபுனல்சூழ் திருமுல்லைவாயிற் செல்வனைநாவலாரூர
னுரைதருமாலையோ ரைந்தினோடைஞ்சு முள்குளிர்ந்தேத்தவல்லார்க
ணரைதிரைமூப்பு நடலையுமின்றி நண்ணுவர்விண்ணவர்க்கரசே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பாசுபதேசுவரர். தேவியார்-கொடியிடையம்மை.

திருப்பதிகம்—க.

தொண்டைமானுக்கன் றருள்கொடுத்தருளுந் தொல்லைவன்புகழ் முல்லைநாயகரைக்,கொண்டவெந்துயர் களைகெனப்பரவிக் குறித்தகாதலி னெறிகொளவருவார், வண்டுலாமலர்ச் சோலைகள்சூழ்ந்து மாடமாளிகை நீடுவெண்பாக்கங், கண்டதொண்டர்க ளெதிர்கொளவணங்கிக் காயுநாகத்தர் கோயிலையடைந்தார். (உஎ௯)

அணைந்ததொண்டர்க ளுடன்வலமாக வங்கணாயகர் கோயின்முன்னெய்திக், குணங்களேத்தியே பரவியஞ்சலியாற் குவித்தகைதலை மேற்கொண்டுநின்று, வணங்கிநீர்மகிழ் கோயிலுளீரோ வென்றவன்றொண்டர்க் கூன்றுகோலருளி, யிணங்கிலாமொழி யாலுளோம்போகீ ரென்றியம்பின ரேதிலார்போல. (உஅ0)

---

திருவெண்பாக்கம்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

மான்றிகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாந்
தோன்றவருள் செய்தளித்தா யென்றுரைக்க வுலகமெல்லா
மீன்றவனே வெண்கோயி லீங்கிருந்தா யேயென்ன
வூன்றுவதோர் கோலருளி யுளோம்போகீ ரென்றானே.

பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியென் பிழைத்தக்காற்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயிலுளா யேயென்ன
வுழையுடையா னுள்ளிருந்து ளோம்போகீ ரென்றானே.

ஏராரும் பொழில்நிலவு வெண்பாக்க மிடங்கொண்ட
காராரு மிடற்றானைக் காதலித்திட் டன்போடுஞ்
சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
வாரூரன் றமிழ்வல்லார்க் கடையாவல் வினைதானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வெண்பாக்கநாதர். தேவியார்-கனிவாய்மொழியம்மை.

திருப்பதிகம்—க.

---

வேறு.

பிழையுளன பொறுத்திடுவ ரென்றெடுத்துப் பெண்பாகம்
விழைவடிவிற் பெருமானை வெண்பாக்க மகிழ்ந்தானை
யிழையெனமா சுணமணிந்த விறையானைப் பாடினார்
மழைதவழு நெடும்புரிசை நாவலூர் மன்னவனார். (உஅ௧)

முன்னின்று முறைப்பாடு போன்மொழிந்த மொழிமாலைப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடியபின் பற்றுய
வென்னுடைய பிரானருளிங் கித்தனைகொ லாமென்று
மன்னுபெருந் தொண்டருடன் வணங்கியே வழிக்கொள்வார். (உஅஉ)

அங்கணர்தம் பதியதனை யகன்றுபோ யன்பருடன்
பங்கயப்பூந் தடம்பணைசூழ் பழையனூ ருழையெய்தித்
தங்குவா ரம்மைதிருத் தலையாலே வலங்கொள்ளுந்
திங்கண்முடி யாராடுந் திருவாலங் காட்டினயல். (உஅங)

முன்னின்று தொழுதேத்தி முத்தாவென் றெடுத்தருளிப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடிமகிழ்ந் தேத்துவா
ரங்கின்று வணங்கிப்போய்த் திருவூற லமர்ந்திறைஞ்சி
கன்னிமதின் மணிமாடக் காஞ்சிமா நகரணைந்தார். (உஅச)

---

திருஆலங்காட்டுப்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தாமுத்தி தரவல்ல முகிழ்மென்முலையா ளுமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டுஞ் சிவனேதேவர் சிங்கமே
பத்தாபத்தர் பலர்போற்றும் பரமாபழைய னூர்மேய
வத்தாவாலங் காடாவுன் னடியார்க்கடியே னுவேனே.

பத்தர்சித்தர் பலரேத்தும் பரமன்பழைய னூர்மேய
வத்தனாலங் காடன்ற னடிமைத்திறமே யன்பாகிச்
சித்தர்சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவனூர னொண்டமிழ்கள்
பத்தும்பாடி யாடுவார் பரமனடிபோய்ப் பணிவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தி
லூனில்வள ருயிர்க்கெல்லா மொழியாத கருணையினு
லானதிரு வறம்புரக்கு மம்மைதிருக் கோயிலின்முன்
வானில்வளர் திருவாயில் வணங்கினர் வன்றொண்டர். (உஅரு)

தொழுதுவிழுந் தெழுந்தருளாற் றுதித்துப்போய்த் தொல்லுலக
முழுதுமளித் தழித்தாக்கு முதல்வர்திரு வேகம்பம்
பழுதிலடி யார்முன்பு புகப்புக்குப் பணிகின்று
ரிழுதையேன் றிருமுன்பே யென்மொழிவே னென்றிறைஞ்சி. (உஅசு)

விண்ணுள்வா ரமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணுளா கச்சியே கம்பனே கடையானே
னெண்ணாத பிழைபொறுத்தின் றியான்காண வெழிற்பவள
வண்ணாகண் ணளித்தருளா யெனவிழ்ந்து வணங்கினர். (உஅஎ)

பங்கயச்செங் கைத்தளிராற் பனிமலர்கொண் டர்ச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியவன் பொடுபரவிப் போற்றியவா ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தவிடக் கண்கொடுத்தார். (உஅஅ)

ஞாலந்தா னிடந்தவனு நளிர்விசும்பு கடந்தவனு
மூலந்தா னறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்
தாலந்தா னுவந்தவனென் றெடுத்தாடிப் பாடினார். (உஅகூ)

திருவேகம்பம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஆலந்தானுவந் தமுதுசெய்தானை யாதியையமரர் தொழுதேத்துஞ்
சீலந்தான்பெரி தும்முடையானைச் சிந்திப்பாரவர் சிந்தையுளானை
யேலவார்குழ லாளுமைநங்கை யென்றுமேத்தி வழிபடப்பெற்ற
காலகாலனைக் கம்பனெம்மானைக் காணக்கண்ணடி யேன்பெற்றவாறே.

பெற்றமேறுகந் தேறவல்லானைப் பெரியவெம்பெருமா னென்றெப் போதுங், கற்றவர்பர வப்படுவானைக் காணக்கண்ணடி யேன்பெற்றதென்று, கொற்றவன்கம்பன் கூத்தனெம்மானைக் குளிர்பொழிற்றிரு நாவலூரா, னற்றமிழிவை யீரைந்தும்வல்லார் நன்னெறியுல கெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

பாடிமிகப் பரவசமாய்ப் பணிவார்க்குப் பாவையுட
னீடியகோ லங்காட்ட நிறைந்தவிருப் புடனிறைஞ்சிச்
சூடியவஞ் சலியினராய்த் தொழுதுபுறம் போந்தன்பு
கூடியமெய்த் தொண்டருடன் கும்பிட்டங் கினிதமர்வார். (உகூ0)

மாமலையாண் முலைச்சுவடும் வளைத்தழும்பு மணிந்தம்பிப்
பூம்லிவார் சடையாரைப் போற்றியரு ளதுவாகத்
தேமலர்வார் பொழிற்காஞ்சித் திருநகரங் கடந்தகல்வார்
பாமலர்மா லைப்பதிகந் திருவாரூர் மேற்பரவி. (உகூக)

அந்தியுநண் பகலுமென வெடுத்தார்வத் துடனசைவா
லெந்தைபிரான் திருவாரூ ரென்றுகொலெய் துவதென்று
சந்தவிசை பாடிப்போய்த் தாங்கரிய வாதரவு
வந்தணைய வன்பருடன் மகிழ்ந்துவழிக் கொள்கின்றார். (உகூஉ)

திருவாரூர்-பண்-புறநீர்மை.
திருச்சிற்றம்பலம்.

அந்தியுநண்பகலு மைஞ்சுபதஞ்சொல்லி
முந்தியெழும்பழைய வல்வினைமூடாமுன்
சிந்தைபராமரியாத் தென்றிருவாரூர்புச்
செந்தைபிரானாரை யென்றுகொலெய்துவதே.

மின்னெடுஞ்சடையான் மேவியவாரூரை
நன்னெடுங்காதன்மையா னாவலர்கோனூரன்
பன்னெடுஞ்சொன்மலர்கொண் டிட்டனபத்தும்வல்லார்
பொன்னுடைவிண்ணுலகம் நண்ணுவர்புண்ணியரே.

திருச்சிற்றம்பலம்.

---

மன்னுதிருப் பதிகடோறும் வன்னியொடுங் கூவிளமுஞ்
சென்னிமிசை வைத்துவந்தார் கோயிலின்முன் சென்றிறைஞ்சிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவியே போந்தணைந்தா
ரன்னமலி வயற்றடங்கள் சூழ்ந்ததிரு வாமாத்தூர். (௨௬௩)

அங்கணனை யாமாத்தூ ரழகர்தமை யடிவணங்கித்
தங்குமிசைத் திருப்பதிகம் பாடிப்போய்த் தாரணிக்கு
மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு கடந்தணைவார்
செங்கணவள வன்பிறந்த சீர்நாடு திருநாடு. (௨௬௪)

அந்நாட்டின் மருங்குதிரு வரத்துறையிற் சென்றெய்தி
மின்னாரும் படைமழுவார் விரைமலர்த்தாள் பணிந்தெழுந்து
சொன்மாலை மலர்க்கல்வா யகிலென்னுந் தொடைசாத்தி
மன்னார்வத் திருத்தொண்ட ருடன்மகிழ்ந்து வைகினார். (௨௬௫)

---

திருநெல்வாயில்அரத்துறை-பண்-இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

கல்வாயகிலுங் கதிர்மாமணியுங் கலந்துந்திவருந்நிவ வின்கரை மேல், நெல்வாயிலரத்துறை நீடுறையு நிலவெண்மதிசூடிய நின்மலனே, நல்வாயில்செய்தார் நடந்தாருடுத்தார் நரைத்தாரிறந்தாரென நானிலத்திற்,செல்வாய்க்கழிகின்ற தறிந்தடியேன் தொடர்ந்தேனுயப்போவதோர் சூழல்சொல்லே.

நீரூருநெடுவயல் சூழ்புரவி னெல்வாயிலரத்துறை நின்மலனை
தேரூர்நெடுவீதிநன் மாடமலி தென்னாவலர்கோனடித் தொண்டனணி
யாரூரனுரைத்தனநற் றமிழின்மிகு மாலையோர்பத்திவை கற்றுவல்லார்
காரூர்களிவண்டறை யானைமன்ன ரவராகியோர்விண்முழு தாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

பரமர்திரு வரத்துறையைப் பணிந்துபோய்ப் பலபதிகள்
விரவிமழ விடையுயர்த்தார் விரைமலர்த்தா டொழுதேத்தி
யுரவுநீர்த் தடம்பொன்னி யடைந்தன்ப ருடனடி
யரவணிந்தா ரமர்ந்ததிரு வாவடுதண் டுறையணைந்தார். (உ௯௬)

அங்கணைவார் தமையடியா ரெதிர்கொள்ளப் புக்கருளிப்
பொங்குதிருக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
கங்கைவாழ் சடையாயோர் கண்ணிலே னெனக்கவல்வா
ரிங்கெனக்கா ருறவென்னுந் திருப்பதிக மெடுத்திசைத்தார். (உ௯௭)

---

திருவாவடுதுறை-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

கங்கைவாழ்சடை யாய்கணநாதா காலகாலனே காமனுக்கனலே
பொங்குமாகடல் விடமிடற்றுளே பூதநாதனே புண்ணியாபுனிதா
செங்கண்மால்விடை யாய்தெளிதேனே தீர்த்தனேதிரு வாவடுதுறையு
ளங்கணாவெனை யஞ்சலென்றருளா யாரெனக்குற வமரர்களேறே.

வெண்டலைப்பிறை கொன்றையுமரவும் வேரிமத்தமும் விரவிமுன் முடித்த, விண்டைமாமலர்ச் செஞ்சடையானை யீசனைத்திரு வாவடுதுறையு, ளண்டவாணனைச் சிங்கடியப்ப னணுக்கவன்றொண்ட னூர்வத்தா லுரைத்த, தண்டமிழ்மலர் பத்தும்வல்லார்கள் சாதலும்பிறப்பு மறுப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பதிகங் கொடுபரவிப் பணிந்துதிரு வருளாற்போய்
விருப்பினொடுந் திருத்துருத்தி தனைமேவி விமலர்கழ
லருத்தியினாற் புக்கிறைஞ்சி யடியேன்மே லுற்றபிணி
வருத்தமெனை யொழித்தருள வேண்டுமென வணங்குவார். (உ௯௮)

பரவியே பணிந்தவர்க்குப் பரமர்திரு வருள்புரிவார்
விரவியவிப் பிணியடையத் தவிர்ப்பதற்கு வேறாக
வரமலர்வண் டறைதீர்த்த வடகுளத்துக் குளியென்னக்
கரவிறுத் தொண்டர்தாங் கைதொழுது புறப்பட்டார். (உ௯௯)

மிக்கபுனற் றீர்த்தத்தின் முன்னணைந்து வேதமெல்லாந்
தொக்கவடி வாயிருந்த துருத்தியார் தமைத்தொழுது
புக்கதனின் முழுகுதலும் புதியபிணி யதுநீங்கி
யக்கணமே மணியொளிசேர் திருமேனி யாயினார். (௩00)

கண்டவர்க ளதிசயிப்பக் கரையேறி யுடைபுனைந்து
மண்டுபெருங் காதலினாற் கோயிலினை வந்தடைந்து
தொண்டரெதிர் மின்னுமா மேகமென்னுஞ் சொற்பதிக
மெண்டிசையு மறிந்துய்ய வேழிசையா லெடுத்திசைத்தார். (௩௦௧)

திருத்துருத்தியும்திருவேள்விக்குடியும்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னுமாமேகங்கள் பொழிந்திழிந்தருவி வெடில்படக்கரையொடு திரைகொணர்ந்தெற்று, மன்னமாங்காவிரி யகன்கரையுறைவா ரடியிணை தொழுதெழு மன்பராமடியார், சொன்னவாறறிவார் துருத்தியார்வேள் விக் குடியுளாரடிகளைச் செடியனேனாயே,னென்னைநான்மறக்குமா றெம் பெருமானை யென்னுடம்படுபிணி யிடர்கெடுத்தானே.

மங்கையோர்கூறுகந் தேறுகந்தேறி மாற்றலார்திரிபுர நீறெழச்செ ற்ற, வங்கையான்கழலடி யன்றிமற்றறியா னடியவர்க்கடியவன் றொழு வனாரூரன்,கங்கையார்காவிரித் துருத்தியார்வேள்விக் குடியுளாரடிகளைச் சேர்த்தியபாடற், றங்கையாற்றொழுதுதங் காவின்மேற்கொள்வார் தவநெ றிச்சென்றம ருலகமாள்வாரே.

திருச்சிற்றம்பலம்.

பண்ணிறைந்த தமிழ்பாடிப் பரமர்திரு வருண்மறவா
ரெண்ணிறைந்த தொண்டருடன் பணிந்தங்க ணுறைந்தேகி
யுண்ணிறைந்த பதிபிறவு முடையவர்தாள் வணங்கிப்போய்க்
கண்ணிறைந்த திருவாரூர் முன்றோன்றக் காண்கின்றார். (௩௦௨)

அன்றுதிரு நோக்கொன்றா லாரக்கண் டின்புற்றா
ரின்றுநில மிசைவீழ்ந்து நெடிதுயிர்த்து நேரிறைஞ்சி
வன்றொண்டர் திருவாரூர் மயங்குமா லையிற்புகுந்து
துன்றுசடைத் தூவாயர் தமைமுன்னந் தொழவணைந்தார். (௩௦௩)

பொங்குதிருத் தொண்டருட னுள்ளணைந்து புக்கிறைஞ்சித்
துங்கவிசைத் திருப்பதிகந் தூவாயா வெனவெடுத்தே
யிங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டாயென்
றங்கணர்த முன்னின்று பாடியருந் தமிழ்புனைந்தார். (௩௦௪)

திருவாரூர்-பரவையுண்மண்டளி-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தூவாயாதொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயே கண்டுகொண் டாரைவர்க் காகிலும்
நாவாயா லுன்னையே நல்லன சொல்லுவேற்
காவாவென் பரவையுண் மண்டளி யம்மானே.

கரந்தையும் வன்னியு மத்தமுங் கூவிளம்
பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி யம்மானை
நிரம்பிய வூர னுரைத்தன பத்திவை
விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மண்டலேசுவரர். தேவியார்-பஞ்சினுமெல்லடியம்மை.

திருப்பதிகம்—க.

---

ஆறணியுஞ் சடையானைத் தொழுதுபுறம் போந்தங்கண்
வேறிருந்து திருத்தொண்டர் விரவுவா ருடன்கூடி
யேறுயர்த்தார் திருமூலட் டானத்து ளிடைதெரிந்து
மாறிரு வத்தயா மத்திறைஞ்ச வந்தணைந்தார். (கூ0ரு)

ஆதிதிரு வன்பரெதி ரணையவவர் முகநோக்கிக்
கோதிலிசை யாற்குருகு பாயவெனக் கோத்தெடுத்தே
யேதிலார் போல்வினவி யேசறவாற் றிருப்பதிகங்
காதல்புரி கைக்கிளையாற் பாடியே கலந்தணைவார். (கூ0சு)

---

திருவாரூர்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

குருகுபாயக்கொழுங் கரும்புகணெரிந்தசா
றருகுபாயும்வய லந்தணாரூரரைப்
பருகுமாறும்பணிந் தேத்துமாறுந்நினைந்
துருகுமாறும்மிவை யுணர்த்தவல்லார்களே.

நித்தமாகநினைந் துள்ளமேத்தித்தொழு
மத்தனம்பொற்கழ லடிகளாரூரரைச்
சித்தம்வைத்தபுகழ்ச் சிங்கடியப்பன்மெய்ப்
பத்தனூரன்சொன்ன பாடுமின்பத்தரே.

திருச்சிற்றம்பலம்.

---

சீர்பெருகுந் திருத்தேவா சிரயனைமுன் சென்றிறைஞ்சிக்
கார்விரவு கோபுரத்தைக் கைதொழுதே யுட்புகுந்து
தார்பெருகு பூங்கோயி றனைவணங்கிச் சார்ந்தணைவா
ரார்வமிகு பெருங்காத லாலவனி மேல்வீழ்ந்தார். (கூ0எ)

வீழ்ந்தெழுந்து கைதொழுது முன்னின்று விம்மியே
வாழ்ந்தமலர்க் கண்ணொன்று லாரமன் மனமழிவா
ராழ்ந்ததுயர்க் கடலிடைநின் றடியேனை யெடுத்தருளித்
தாழ்ந்தகருத் தினைநிரப்பிக் கண்டாரு மெனத்தாழ்ந்தார். (கூ0அ)

திருநாவ லூர்மன்னர் திருவாரூர் வீற்றிருந்த
பெருமானைத் திருமூலட் டானஞ்சேர் பிஞ்ஞகனைப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு
மருவார்வத் துடன்மற்றைக் கண்டாரீ ரெனவணங்கி. (௩0௯)

வேறு.

மீளாவடிமை யெனைவெடுத்து மிக்கதேவர் குலமெல்லா
மாளாமேநஞ் சுண்டருளி மன்னியிருந்த பெருமானைத்
தாளாதரிக்கு மெய்யடியார் தமக்காமிடர்நீர் தரியீரென்
றுளாந்திருத்தோ ழமைத்திறத்தா லஞ்சொற்பதிகம் பாடினார். (௩௧0)

---

திருவாரூர்-செந்துருத்தி.

திருச்சிற்றம்பலம்.

மீளாவடிமை யுமக்கேயாளாய்ப் பிறரைவேண்டாதே
மூளாத்தீப்போ லுள்ளேகனன்று முகத்தான் மிகவாடி
யாளாயிருக்கு மடியார்தங்க ளல்லல்சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்துபோதீரே.

காரூர்கண்டத் தெண்டோண்முக்கண் கலைகள்பலவாகி
யாரூர்த்திரு மூலட்டானத்தே யடிப்பேராரூரன்
பாரூரறிய வென்கண்கொண்டீர் நீரேபழிப்பட்டீர்
வாரூர்முலையாள் பாகங்கொண்டீர் வாழ்ந்துபோதீரே.

திருச்சிற்றம்பலம்.

---

பூதமுதல்வர் புற்றிடங்கொண் டிருந்தபுனிதர் வன்றொண்டர்
காதல்புரிவே தனைக்கிரங்கிக் கருணைத்திருநோக் களித்தருளிச்
சீதமலர்க்கண் கொடுத்தருளச் செவ்வேவிழித்து முகமலர்ந்து
பாதமலர்கண் மேற்பணிந்து வீழ்ந்தாருள்ளம் பரவசமாய். (௩௧௧)

விழுந்துமெழுந்தும் பலமுறையான் மேவிப்பணிந்து மிகப்பரவி
யெழுந்தகளிப்பி னலாடிப் பாடியின்ப வெள்ளத்தி
லழுந்தியிரண்டு கண்ணாலு மம்பொற்புற்றி னிடையெழுந்த
செழுந்தண்பவளச் சிவக்கொழுந்தி னருளைப்பருகித் திளைக்கின்றார். ()

காதனிரம்பத் தொழுதேத்திக் கனகமாளி கைக்கோயின்
ஞாலமுய்ய வருநம்பி நலங்கொள்விருப்பால் வலங்கொண்டு
மாலுமயனு முறையிருக்கும் வாயில்கழியப் புறம்போந்து
சீலமுடைய வன்பருடன் றேவாசிரயன் மருங்கணைந்தார். (௩௧௩)

சங்கைபரவை யார்தம்மை நம்பிபிரிந்து போனதற்பின்
றங்குமணிமா ளிகையின்கட் டனிமைகூரத் தளர்வார்க்குக்
கங்குல்பகலாய்ப் பகல்கங்கு லாகிக்கழியா நாளெல்லாம்
பொங்குகாதன் மீதூரப் புலர்வார்சிலநாள் போனதற்பின். (௩௧௪)

செம்மைநெறிசேர் திருநாவ லூாரரொற்றி யூர்சேர்ந்து
கொம்மைமுலையார் சங்கிலியார் தம்மைக்குலவு மணம்புணர்ந்த
மெய்ம்மைவார்த்தை தாமவர்பால் விட்டார்வந்து கட்டுரைப்பத்
தம்மையறியா வெகுளியினற் றரியாநெஞ்சி னெடிந்தளர்வார். (நூகரு)

மென்பூஞ்சயனத் திடைத்துயிலு மேவார்விழித்து மினிதமரார்
பொன்பூந்தவிசின் மிசையிரார் நில்லார்சொல்லார் புறம்பொழியார்
மன்பூவாளி மழைகழியார் மறவார்நினையா ரென்செய்வா
ரென்பூடுருக்கும் புலவியோ பிரிவோவிரண்டி னிடைப்பட்டார். (நூகசு)

ஆனகவலைக் கையறவா லழியுநாளி லாரூரர்
கூனலிளவெண் பிறைக்கண்ணி முடியார்கோயின் முன்றாகப்
பானல்விழியார் மாளிகையிற் பண்டுசெல்லும் பரிசினாற்
போனபெருமைப் பரிசனங்கள் புகுதப்பெறாது புறநின்றார். (நூகஎ)

நின்றநிலைமை யவர்கள்சிலர் நிலவுதிருவா ரூரரெதிர்
சென்றுமொழிவார் திருவொற்றி யூரினிகழ்ந்த செய்கையெல்லா
மொன்றுமொழியா வகையறிந்தங் குள்ளார்தள்ள மாளிகையி
லின்றுபுறமுஞ் சென்றெய்தப் பெற்றிலோமென் றிறைஞ்சினார். (நூகஅ)

மற்றமாற்றங் கேட்டொழிந்த மனத்தராகி வன்றொண்ட
ருற்றவிதனுக் கினியென்னோ செயலென் றுணர்வா ருலகியல்பு
கற்றமாந்தர் சிலர்தம்மைக் காதற்பரவை யார்கொண்ட
செற்றநிலைமை யறிந்தவர்க்குத் தீர்வுசொல்லச் செலவிட்டார். (நூகசு)

நம்பியருளாற் சென்றவரு நங்கைபரவை யார்தமது
பைம்பொன்மணிமா ளிகையணைந்து பண்புபுரியும் பாங்கினால்
வெம்புபுலவிக் கடலழுந்து மின்னேரிடையாண் முன்னெய்தி
யெம்பிராட்டிக் கிதுதகுமோ வென்றுபலவு மெடுத்துரைப்பார். (நூஉ0)

பேதநிலைமை நீதியினாற் பின்னும்பலவுஞ் சொன்னவர்முன்
மாதரவரு மறுத்துமனங் கொண்டசெற்ற மாற்றாரா
யேதமருவு மவர்திறத்தி லிந்தமாற்ற மியம்பிலுயிர்
போதலொழியா தெனவுரைத்தா ரவருமஞ்சிப் புறம்போந்தார். (நூஉக)

போந்துபுகுந்த படியெல்லாம் பூந்தண்பழன முனைப்பாடி
வேந்தர்தமக்கு விளம்புதலும் வெருவுற்றயர்வார் துயர்வேலை
நீந்தும்புணையாந் துணைகாணார் நிகழ்ந்தசிந்தா குலநெஞ்சிற்
காந்தவழிந்து தோய்ந்தெழார் கங்குலிடையா மக்கடலுள். (நூஉஉ)

அருகுசூழ்ந்தார் துயின்றுதிரு வத்தயாமம் பணிமடங்கிப்
பெருகுபுவனஞ் சலிப்பின்றிப் பேயுமுறங்கும் பிறங்கிருள்வாய்
முருகுவிரியு மலர்க்கொன்றை முடிமேலரவு மிளமதியுஞ்
செருகுமொருவர்த் தொழாதுதனி வருந்தியிருந்து சிந்திப்பார். (நூஉந)

முன்னைவினையா லிவ்வினைக்கு மூலமானாள் பரவையை
வென்னையுடையாய் நினைந்தருளா யிந்தயாமத் தெழுந்தருளி
யன்னமனையாள் புலவியினை யகற்றிலுய்ய லாமன்றிப்
பின்னையில்லைச் செயலென்று பெருமானடிக டமைநினைந்தார். (௩௨௪)

அடியாரிடுக்கண் டரியாதா ராண்டுகொண்ட தோழர்குறை
முடியாதிருக்க வல்லரோ முற்றுமளித்தாள் பொற்றளிர்க்கைத்
தொடியார்தழும்பு முலைச்சுவடு முடையார்தொண்டர் தாங்காணும்
படியாலணைந்தார் நெடியோனுங் காணாவடிகள் படிதோய. (௩௨௫)

தம்பிரானா ரெழுந்தருளத் தாங்கற்கரிய மகிழ்ச்சியினாற்
கம்பியாநின் றவயவங்கள் கலந்தபுளக மயிர்முகிழ்ப்ப
நம்பியாரூ ரருமெதிரே நளினமலர்க்கை தலைக்குவிய
வம்பிசாவல் லவர்செய்ய வடித்தாமரையின் கீழ்வீழ்ந்தார். (௩௨௬)

விழுந்துபரவி மிக்கபெரு விருப்பினோடு மெதிர்போற்றி
யெழுந்தநண்பர் தமைநோக்கி யென்னீயுற்ற தென்றருளத்
தொழுந்தங்குறையை விளம்புவார் யானேதொடங்குந் துரிசிடைப்பட்
டழுந்துமென்னை யின்னமெடுத் தாளவேண்டு முமக்கென்று. (௩௨௭)

அடியேனுக்குத் திருவொற்றி யூரினீரே யருள்செய்ய
வடிவேலொண்கட் சங்கிலியை மணஞ்செய்தணைந்த திறமெல்லாங்
கொடியேரிடையாள் பரவைதா னறிந்துதன்பால் யான்குறுகின்
முடிவேனென்று துணிந்திருந்தா ளென்னான்செய்வ தெனமொழிந்து. ()

நாயனீரே நானுமக்கிங் கடியேனாகி னீரெனக்குத்
தாயினல்ல தோழருமாந் தம்பிரானா ரேயாகி
லாயவறிவு மிழந்தழிவே னயர்வுநோக்கி யவ்வளவும்
போயிவ்விரவே பரவையுறு புலவிதீர்த்துத் தாருமென. (௩௨௯)

அன்புவேண்டுந் தம்பெருமா னடியார்வேண்டிற் றேவேண்டி
முன்புநின்று விண்ணப்பஞ் செய்தநம்பி முகநோக்கித்
துன்பமொழிநீ யாமுனக்கோர் தூதனாகி யிப்பொழுதே
பொன்செய்மணிப்பூண் பரவைபாற் போகின்றோமென் றருள்செய்தார்.

எல்லையில்லாக் களிப்பினா லிறைவர்தாளில் வீழ்ந்தெழுந்து
வல்லபரிசெல் லாந்துதித்து வாழ்ந்துநின்ற வன்றொண்டர்
முல்லைமுகைவெண் ணகைப்பரவை முகில்சேர்மாடத் திடைசெல்ல
நில்லாதீண்ட வெழுந்தருளி நீக்கும்புலவி யெனத்தொழுதார். (௩௩௧)

அண்டர்வாழக் கருணையினா லாலகால மமுதாக
வுண்டநீலக் கோலமிடற் றொருவரிருவர்க் கறிவரியார்
வண்டுவாழு மலர்க்கூந்தற் பரவையார்மா ளிகைநோக்கித்
தொண்டனார்தந் துயர்நீக்கத் தூதனாரா யெழுந்தருள. (௩௩௨)

தேவாசிரயன் முறையிருக்குந் தேவரெல்லாஞ் சேவித்துப்
போவார்தம்மில் வேண்டுவார் போதவொழிந்தார் புறத்தொழிய
வோவாவணுக்கச் சேவகத்தி லுள்ளோர்பூத கணநாதர்
மூவாமுனிவர் யோகிகளின் முதலானார்கண முன்போக. (கூகூ)

அருகுபெரிய தேவருட னணைந்துவருமவ் விருடிகளு
மருவுநண்பு நிதிக்கோனு முதலாயுள்ளோர் மகிழ்ந்தேத்தத்
தெருவும்விசும்பு நிறைத்துவிரைச் செழும்பூமாரி பொழிந்தலையப்
பொருவிலன்பர் விடுந்தூதர் புனிதவீதி யினிற்போத. (கூகூச)

மாலுமயனுங் காணாதார் மலர்த்தாள்பூண்டு வந்திறைஞ்சுங்
காலமிதுவென் றங்கவரை யழைத்தாலென்னக் கடல்விளைத்த
வாலமிருண்ட கண்டத்தா னடித்தாமரைமேற் சிலம்பொலிப்ப
நீலமலர்க்கட் பரவையார் திருமாளிகையை நேர்நோக்கி. (கூகூரு)

இறைவர்விரைவி னெழுந்தருள வெய்துமவர்கள் பின்றொடர
வறைகொடிரைநீர் தொடர்சடையி லரவுதொடர வரியவிளம்
பிறைகொளருகு நறையிதழிப் பிணையல்சுரும்பு தொடரவுடன்
மறைகடொடர வன்றொண்டர் மனமுந்தொடர வரும்பொழுது.(கூகூசு)

பெருவிரையினு மிகமுழங்கிப் பிறங்குமதகுஞ் சரமுரித்து
மருவிருரிவை புனைந்தவர்தம் மருங்குசூழ்வார் நெருங்குதலாற்
றிருவீதியினி லழகரவர் மகிழுஞ்செல்வத் திருவாரூ
ரொருவீதியிலே சிவலோக முழுதுங்காண வுளதாமால். (கூகூஎ)

ஞாலமுய்ய வெழுந்தருளு நம்பிதூதர் பரவையார்
கோலமணிமா ளிகைவாயில் குறுகுவார்முன் கூடத்தம்
பாலங்கணைந்தார் புறநிற்பப் பண்டேதம்மை யர்ச்சிக்குஞ்
சீலமுடைய மறைமுனிவ ராகித்தனியே சென்றணைந்தார். (கூகூஅ)

சென்றுமணிவா யிற்கதவஞ் செறியவடைத்த வதன்முன்பு
நின்றுபாவாய் திறவாயென் றழைப்பநெறிமென் குழலாரு
மொன்றுந்துயிலா துணர்ந்தயர்வா ருடையபெருமான் பூசனைசெய்
துன்றும்புரிநூன் மணிமார்பர் போலுமழைத்தா ரெனத்துணிந்து. கூகூகூ

பாதிமதிவாழ் முடியாரைப் பயில்பூசனையின் பணிபுரிவார்
பாதியிரவி லிங்கணைந்த தென்னோவென்று பயமெய்திப்
பாதியுமையா டிருவடிவிற் பரமராவ தறியாதே
பாதிமதிவா ணுதலாரும் பதைத்துவந்து கடைதிறந்தார். (கூச0)

மன்னுமுரிமை வன்றொண்டர் வாயிற்றூதர் வாயிலிடை
முன்னின்றாரைக் கண்டிறைஞ்சி முழுதுமுறங்கும் பொழுதின்க
ணென்னையாளும் பெருமானிங் கெய்தியருளி னாரென்ன
மின்னுமணிநூ லணிமார்ப ரெய்தவேண்டிற் றென்னென்றார். (கூசக)

வேறு.

கங்கைநீர் கரந்தவேணி கரந்தவ ரருளிச்செய்வார்
நங்கைநீ மறுதுசெய்யி னுன்வந்த துரைப்பனென்ன
வங்கயல் விழியினுரு மதனைநீ ரருளிச்செய்தா
லிங்கெனக் கிசையுமாகி லிசையலா மென்றுசொல்லி. (௩சஉ)

என்னினைந் தணைந்ததென்பா லின்னதென் றருளிச்செய்தாற்
பின்னைய தியலுமாகி லாமெனப் பிரானுர்தாமு
மின்னிடை மடவாய்நம்பி வரவிங்கு வேண்டுமென்ன
நன்னுத லாருஞ்சால நன்றுநம் பெருமையென்பார். (௩சௗ)

பங்குனித் திருநாளுக்குப் பண்டுபோல் வருவாராகி
யிங்கெனைப் பிரிந்துபோகி யொற்றியூ ரெய்தியங்கே
சங்கிலித் தொடக்குண்டாருக் கிங்கொரு சார்வுண்டோநீர்
கங்குலின் வந்துசொன்ன காரிய மழகிதென்றுர். (௩சச)

நாதரு மதனைக்கேட்டு நங்கைநீ நம்பிசெய்த
வேதங்கண் மனத்துக்கொள்ளா தெய்திய வெகுளிநீங்கி
கோதங்க ளொழிதற்கன்றே நுன்னையான் வேண்டிக்கொண்ட
தாதலின் மறுத்தல்செய்ய வடாதென வருளிச்செய்தார். (௩சரு)

அருமறை முனிவரான வையரைத் தையலார்தாங்
கருமமீ தாகநீரிக் கடைத்தலை வருகைமற்றும்
பெருமைக்குத் தகுவதன்றே லொற்றியூ ருறுதிபெற்றுர்
வருவதற் கிசையெனீரும் போமென மறுத்துச்சொன்னுர். (௩சசு)

நம்பர்தா மதனைக்கேட்டு நகையுமுட் கொண்டுமெய்ம்மைத்
தம்பரி சறியக்காட்டார் தனிப்பெருந் தோழனுர்தம்
வெம்புறு வேட்கைகாணுந் திருவிளை யாட்டின்மேவி
வம்பலர் குழலினுர்தா மறுத்ததே கொண்டுமீண்டார். (௩சஎ)

தூதனைப் போகவிட்டு வரவுபார்த் திருந்ததொண்டர்
நாதனை யறிவிலாதே நன்னுதல் புலவிநீக்கிப்
போதரத் தொழுதேனென்று புலம்புவார் பரவையாரைக்
காதலி லிசைவுகொண்டு வருவதே கருத்துட்கொள்வார். (௩சஅ)

போயவண் மனையினண்ணும் புண்ணிய ரென்செய்தாரோ
நாயனுர் தம்மைக்கண்டா னன்னுதன் மறுக்குமோதா
னாயவென் னயர்வுதன்னை யறிந்தெழுந் தருளினுர்தாஞ்
சேயிழை துனிதீர்த்தன்றி மீள்வதுஞ் செய்யாரென்று. (௩சகூ)

வழியெதிர் கொள்ளச்செல்வர் வரவுகா ணுதுமீள
அழிவுற மயங்கிநிற்ப ரசைவுட னிருப்பர்நெற்றி
விழியவர் தாழ்த்தாரென்று மீளவு மெழுவர்மாரன்
பொழிமலர் மாரிவீழ வொதுங்குவார் புன்கணுற்றுர். (௩ரு0)

பரவையார் தம்பானம்பி தூதராம் பாங்கிற்போன
வரவணி சடையார்மீண்டே யறியுமா றணையும்போதி
லிரவுதான் பகலாய்த்தோன்ற வெதிரெழுந் தணையைவிட்டு
வுரவுநீர் வெள்ளம்போல வோங்கிய களிப்பிற்சென்றார். (௩௫௧)

சென்றுதம் பிரானைத்தாழ்ந்து திருமுக முறுவல்செய்ய
வொன்றிய விளையாட்டோரா ருறுதிசெய் தணைந்தாரென்றே
யன்றுநீ ராண்டுகொண்ட வதனுக்குத் தகவேசெய்தீ
ரின்றிவள் வெகுளியெல்லாந் தீர்த்தெழுந் தருளியென்றார். (௩௫௨)

அம்மொழி விளம்பிநம்பிக் கையர்தா மருளிச்செய்வார்
நம்மைநீ சொல்லநாம்போய்ப் பரவைதன் னில்லநண்ணிக்
கொம்மைவெம் முலையினாட்குன் றிறமெலாங் கூறக்கொள்ளாள்
வெம்மைதான் சொல்லிநாமே வேண்டவு மறுத்தாளென்றார். (௩௫௩)

அண்ணலா ரருளிச்செய்யக் கேட்டவா ரூரர்தாமுந்
துண்ணென நடுக்கமுற்றே தொழுதுநீ ரருளிச்செய்த
வண்ணமு மடியாளான பரவையே மறுப்பாளுங்க
ளெண்ணவா ரடிமைக்கென்ப தின்றறி வித்தீரென்று. (௩௫௪)

வானவ ருய்யவேண்டி மறிகட னஞ்சையுண்டீர்
தானவர் புரங்கள்வேவ மூவரைத் தவிர்த்தாட்கொண்டீர்
நான்மறைச் சிறுவர்க்காகக் காலனைக் காய்ந்துநட்டீர்
யான்மிகை யுமக்கின்றானா லென்செய்வீர் போதாதென்றார். (௩௫௫)

ஆவதே செய்தீரின்றெ னடிமைநீர் வேண்டாவிட்டாற்
பாவியேன் றன்னையன்று வலியவாட் கொண்டபற்றென்
னேவுமென் னழிவுங்கண்டீர் நுடங்கிடை யவள்பாலின்று
மேவுதல் செய்யீராகில் விடுமுயி ரென்றுவீழ்ந்தார். (௩௫௬)

தம்பிரா னதனைக்கண்டு தரியாது தளர்ந்து வீழ்ந்த
நம்பியை யருளானோக்கி நாமின்ன மவள்பாற்போயக்
கொம்பினை யிப்போதேநீ குறுகுமா கூறுகின்றோம்
வெம்புறு துயர்நீங்கென்றார் வினையெல்லாம் விளைக்கவல்லார். (௩௫௭)

மயங்கிய நண்பருய்ய வாக்கெனு மதுரவாய்மை
நயங்கிள ரமுதநல்க நாவலூர் மன்னர்தாமு
முயங்கிய கலக்கநீங்கி யும்மடித் தொழும்பனேனைப்
பயங்கெடுத் திவ்வாறன்றே பணிகொள்வ தென்றுபோற்ற. (௩௫௮)

அன்பர்மேற் கருணைகூர வாண்டவர் மீண்டுஞ்செல்லப்
பின்புசென் றிறைஞ்சிநம்பி பேதுற வோடுமீண்டார்
முன்புடன் போதாதாரு முறைமையிற் சேவித்தேகப்
பொன்புரி சடையார்மாதர் புனிதமா ளிகையிற்சென்றார். (௩௫௯)

மதிநுதற் பரவையார்தா மறையவர் போனபின்பு
முதிர்மறை முனியாய்வந்தா ராளுடை முதல்வராகு
மதிசயம் பல்வுந்தோன்ற வறிவுற்றே யஞ்சிக்கேட்டே
னெதிர்மொழி யெம்பிரான்முன் னென்செய மறுத்தேனென்பார். (௩௯௦)

கண்டுயி லெய்தார்வெய்ய கையற வெய்தியீங்கின்
றண்டர்தம் பிரானார்தோழர்க் காகவர்ச் சிப்பார்கோலங்
கொண்டணங் கவளையாளுட் கொண்டிலேன் பாவியேனென்
றொண்சுடர் வாயிலேபார்த் துழையரோ டழியும்போதில். (௩௯௧)

வெறியுறு கொன்றைவேணி விமலருந் தாமாந்தன்மை
யறிவுறு கோலத்தோடு மளவில்பல் பூதநாதர்
செறிவுறு தேவர்யோக முனிவர்கள் சூழ்ந்துசெல்ல
மறுவில்சீர்ப் பரவையார்தம் மாளிகை புகுந்தார்வந்து. (௩௯௨)

பாரிடத் தலைவர்முன்னும் பல்கண நாதர்தேவர்
நேர்வுறு முனிவர்சித்த ரியக்கர்க ணிறைதலாலே
பேரரு ளாளரெய்தப் பெற்றமா ளிகைதான்றென்பாற்
சீர்வளர் கயிலைவெள்ளித் திருமலை போன்றதன்றே. (௩௯௩)

ஐயரங் கணைந்தபோதி லகிலலோ கத்துள்ளாரு
மெய்தியே செறிந்துசூழ வெதிர்கொண்ட பரவையார்தா
மெய்யுறு நடுக்கத்தோடு மிக்கெழு மகிழ்ச்சிபொங்கச்
செய்யதா ளிணைமுன்சேர விரைவினற் சென்றுவீழ்ந்தார். (௩௯௪)

அரியயற் கரியார்தாமு மாயிழை யாரைநோக்கி
யுரிமையா லூரனேவ மீளவு முன்பால்வந்தோ
முருகலர் குழலாயின்ன முன்புபோன் மறுதேலின்பாற்
பிரிவுற வருந்துகின்றான் வரப்பெற வேண்டுமென்றார். (௩௯௫)

பெருந்தடங் கண்ணினாரும் பிரான்முன்பு மிகவுமஞ்சி
வருந்திய வுள்ளத்தோடு மலர்க்கரங் குழன்மேற்கொண்டே
யருந்திரு மறையோராகி யணைந்திர்முன் னடியேன்செய்த
விருந்தவப் பயனுமென்ன வெய்திய நீரோவென்பார். (௩௯௬)

துளிவளர் கண்ணீர்வாரத் தொழுதுவிண் ணப்பஞ்செய்வா
ரொளிவளர் செய்யபாதம் வருந்தவோ ரிரவுமாறு
தளிவரு மன்பர்க்காக வங்கொடிங் குழல்வீராகி
யெளிவரு விருமானு லென்செய்கே னிசையாதென்றார். (௩௯௭)

நங்கைநின் றன்மைக்கேற்கு நன்மையே மொழிந்தாயென்று
மங்கையோர் பாகம்வைத்த வள்ளலார் விரைந்துபோகத்
திங்கள்வா ணுதலினாருஞ் சென்றுபின் னிறைஞ்சிமீண்டா
ரெங்களை யாளுநம்பி தூதர்மீண் டேகுகின்றார். (௩௯௮)

வேறு.

ஆதியுமேலு மாலயனாட்ற் கருளாதார்
தூதினிலேகித் தொண்டரையாளுந் தொழில்கண்டே
வீதியிலாடிப் பாடிமகிழ்ந்தே மிடைகின்றார்
பூதியினீடும் பல்கணநாதர் புகழ்வீரர். (௩௬௯)

அன்னவர்முன்னும் பின்னுமருங்கு மணைவெய்த
மின்னிடையாள்பா லன்பனையுய்க்கும் விரைவோடுஞ்
சென்னியினீடுங் கங்கைததும்பத் திருவாரூர்
மன்னவனாரம் மறையவனார்பால் வந்துற்றார். (௩௭௦)

அன்பருமென்பா லாவியளிக்கும் படிபோனு
ரென்செய்துமீள்வா ரின்னமுமென்றே யிடர்கூரப்
பொன்புரிமுந்நூன் மார்பினர்செல்லப் பொலிவீதி
முன்புறநேருங் கண்ணிணைதானு முகிழாரால். (௩௭௧)

அங்கிலைமைக்கண் மன்மதன்வாளிக் கழிவார்தம்
மன்னுயிர்நல்குந் தம்பெருமானார் வந்தெய்த
முன்னெதிர்சென்றே மூவுலகுஞ்சென் றடையுந்தாள்
சென்னியில்வைத்தென் சொல்லுவரென்றே தெளியாதார். (௩௭௨)

எம்பெருமானி ரென்னுயிர்காவா திடர்செய்யுங்
கொம்பனையாள்பா லென்கொடுவந்தீர் குறையென்னத்
தம்பெருமானுந் தாழ்குழல்செற்றந் தணிவித்தோம்
நம்பியினிப்போய் மற்றவடன்பா லணுகென்ன. (௩௭௩)

நந்திபிரானார் வந்தருள்செய்ய நலமெய்துஞ்
சிந்தையுளார்வங் கூர்களியெய்தித் திகழ்கின்றார்
பந்தமும்வீடு நீரருள்செய்யும் படிசெய்தீ
ரெந்தைபிரானே யென்னினியென்பா லிடரென்றார். (௩௭௪)

என்றடிவீழு நண்பர்தமன்புக் கெளிவந்தார்
சென்றணிநீயச் சேயிழைபாலென் றருள்செய்து
வென்றுயர்சேமேல் வீதிவிடங்கப் பெருமாள்தம்
பொன்றிகழ்வாயிற் கோயில்புகுந்தார் புவிவாழ. (௩௭௫)

வேறு.

தம்பிரானார் பின்சென்று தாழ்ந்தெழுந் தருளான்மீள்வா
ரெம்பிரான் வல்லவாறென் றெய்திய மகிழ்ச்சியோடும்
வம்பலர் குழலார்செம்பொன் மாளிகை வாயினேக்கி
நம்பியாரூரர்காத லயந்தெழுந் தருளும்போது. (௩௭௬)

மூன்றுயி லுணர்ந்துசூழ்ந்த பரிசன மருங்குமொய்ப்ப
மின்றிகழ் பொலம்பூமாரி விண்ணவர் பொழிந்துவாழ்த்த
முன்றல்செய் மதுரகீத சிகரங் கொண்டுமந்தத்
தென்றலு மெதிர்கொண்டெய்துஞ் சேவக முன்புகாட்ட. (௩௭௭)

மாலைதண் கலவைச்சேறு மான்மதச் சாந்துபொங்குங்
கோலநற் பசுங்கற்பூரங் குங்கும முதலாயுள்ள
சாலுமெய்க் கலங்கள்கூடச் சாத்தும்பூ ணாரவர்க்கம்
பாலன பிறவுமேந்தும் பரிசன முன்புசெல்ல. (௩எஅ)

இவ்வகை யிவர்வந்தெய்த வெய்திய விருப்பினோடு
மைவளர் நெருங்கண்ணாரு மாளிகை யடையமன்னுஞ்
செய்வினை யலங்காரத்துச் சிறப்பணி பலவுஞ்செய்து
நெய்வளர் விளக்குத்தூப நிறைகுட நிரைத்துப்பின்னும். (௩எகூ)

பூமலிந் தம்பொற்றாமம் புனைமணிக் கோவைநாற்றிக்
காமர்பொற் சுண்ணம்வீசிக் கமழ்நறுஞ் சாந்துநீவித்
தூமலர் வீதிசூழ்ந்த தோகையர் வாழ்த்தத்தாமு
மாமணி வாயின்முன்பு வந்தெதி ரேற்றுநின்றார். (௩அ0)

வண்டலாங் குழலார்முன்பு வன்றொண்டர் வந்துகூடக்
கண்டபோ துள்ளக்காதல் வெள்ளத்தின் கரைகாணாது
கொண்டநா ணச்சங்கூர வணங்கவக் குரிசிலாருந்
தண்டளிர்ச் செங்கைபற்றிக் கொண்டுமா ளிகையுட்சார்ந்தார். (௩அக)

இருவருந் தம்பிரானார் தாமிடை யாடிச்செய்த
திருவருட் கருணைவெள்ளத் திறத்தினைப் போற்றிச்சிந்தை
மருவிய வின்பவெள்ளத் தழுந்திய புணர்ச்சிவாய்ப்ப
வொருவரு ளொருவர்மேவு நிலைமையி னுயிரொன்றானார். (௩அஉ)

ஆரணங் கமலக்கோயின் மேவிப்புற் றிடங்கொண்டாண்ட
நீரணி வேணியாரை நிரந்தரம் பணிந்துபோற்றிப்
பாரணி விளக்குஞ்செஞ்சொற் பதிகமா லைகளுஞ்சாத்தித்
தாரணி மணிப்பூண்மார்பர் தாமகிழ்ந் திருந்தநாளில். (௩அ௩)

வேறு.

நம்பியாரூரர்நெஞ்சி னடுக்கமொன் றின்றிநின்று
தம்பிரா னாைத்தூது தையல்பால் விட்டாரென்னு
மிம்பரின் மிக்கவார்த்தை யேயர்கோ னார்தாங்கேட்டு
வெம்பினா ரதிசயித்தார் வெருவினார் விளம்பலுற்றார். (௩அச)

நாயனை யடியானேவுங் காரிய நன்றுசால
வேயுமென் றிதனைச்செய்வான் றொண்டனா மென்னேபாவம்
பேயனேன் பொறுக்கவொண்ணாப் பிழையினைச் செவியாற்கேட்ப
தாயின பின்னுமாயா திருந்ததென் னாவியென்பார். (௩அ௫)

காரிகை தன்பாற்செல்லுங் காதலா லொருவனேவப்
பாரிடை நடந்துசெய்ய பாததா மரைகணோவத்
தேரணி வீதியூடு செல்வது வருவதாகி
யோரிர வெல்லாந்தூதுக் குழல்வரா மொருவனொன்று. (௩அ௬)

நம்பர்தா மடிமையாற்று ராகியே நண்ணினாரோ
லும்பரார் கோனுமாலு மயனுமெ ருணரவொண்ணு
வெம்பிரா னிசைந்தாலேவப் பெறுவதே யிதனுக்குள்ளங்
கம்பியா தவனையான்முன் காணுமா ளெக்காளென்று. (நஅஎ)

அரிவைகா ரணத்தினாலே யாளுடைப் பரமர்தம்மை
யிரவினிற் றூதுபோக வேவியங் கிருந்தான்றன்னை
வரவெதிர் காண்பேனாகில் வருவதென் னாங்கொலென்று
விரவிய செற்றம்பற்றி விள்ளுமுள் ளத்தராகி. (நஅஅ)

ஈறிலாப் புகழினோங்கு மேயர்கோ னார்தமெண்ணப்
பேறிது பெற்றார்கேட்டுப் பிழையுடன் படுவாராகி
வேறினி யிதற்குத்தீர்வு வேண்டுவார் விரிபூங்கொன்றை
யாறிடு சடையனாருக் கதனைவிண் ணப்பஞ்செய்து. (நஅகூ)

நாடோறும் பணிந்துபோற்ற நாதரு மதனைக்கேட்டு
நீடிய தொண்டர்தம்மு ளிருவரு மேவுநீர்மை
கூடுதல் புரிவாரேயர் குரிசிலார் தம்பான்மேனி
வாடுறு சூலைதன்னை யருளினார் வருந்துமாற்றால். (நகூ0)

ஏதமில் பெருமைச்செய்கை யேயர்தம் பெருமான்பக்க
லாதியா ரேவுஞ்சூலை யனல்செய்வேல் குடைவதென்ன
வேதனை மேன்மேற்செய்ய மிகவதற் குடைந்துவீழ்ந்து
பூதநா யகர்தம்பொற்றாள் பற்றியே போற்றுகின்றார். (நகூக)

சிந்தையால் வாக்காலன்பர் திருந்தடி போற்றிசெய்ய
வெந்தமை யாளுமேயர் காவலர் தம்பாலீசர்
வந்துனை வருத்துஞ்சூலை வன்றொண்டன் றீர்க்கிலன்றி
முந்துற வொழியாதென்று மொழிந்தருள் செய்யக்கேட்டு. (நகூஉ)

எம்பிரா னெந்தைதந்தை தந்தையெங் கூட்டமெல்லாந்
தம்பிரா னீரேயென்று வழிவழி சார்ந்துவாழு
மிம்பரின் மிக்கவாழ்க்கை யென்னைநின் றீருஞ்சூலை
வம்பென வாண்டுகொண்டா னொருவனே தீர்ப்பான்வந்து. (நகூந)

மற்றவன் றீர்க்கிற்றீரா தொழிந்தெனை வருத்தனன்றாற்
பெற்றமே லுயர்த்தீர்செய்யும் பெருமையை யறிந்தார்யாரே
யுற்றவன் றொண்டர்க்கேயா முறுதியே செய்தீரென்னக்
கற்றைவார் சடையார்தாமு மவர்முன்பு கரந்தாரன்றே. (நகூச)

வன்றொண்டர் தம்பாற்சென்று வள்ளலா ரருளிச்செய்வா
ரின்றுநம் மேவலாலே யேயர்கோ னுற்றசூலை
சென்றுநீ தீர்ப்பாயாகென் றருள்செயச் சிந்தையோடு
நன்றுமெய் மகிழ்ந்துபோற்றி வணங்கினார் நாவலூரர். (நகூரு)

மாலைதல்லா ரருளிச்செய்து நீங்கவா ரூரர்தாமும்
விண்ணவர் தம்பிரானா ரேவலால் விரைந்துசெல்வார்
கண்ணிய மனத்தின்மேவுங் காதலாற் கலிக்காமர்க்குத்
திண்ணிய சூலைதீர்க்க வருதிறஞ் செப்பிவிட்டார். (௩௯௬)

நாதர்தம் மருளானண்ணுஞ் சூலையு மவர்பாற்கேட்ட
கேதமும் வருத்தமீண்டும் வன்றொண்டர் வரவுகேட்டுத்
தூதனா யெம்பிரானை யேவினான் சூலைதீர்க்கு
மேதமிங் கெய்தவெய்தில் யான்செய்வ தென்னாமென்பார். (௩௯௭)

மற்றவ னிங்குவந்து தீர்ப்பதன் முன்னான்மாயப்
பற்றிநின் றென்னைநீங்காப் பாதகச் சூலைதன்னை
யுற்றவிவ் வயிற்றினோடுங் கிழிப்பனென் றுடைவாட்டன்னாற்
செற்றிட வுயிரினோடுஞ் சூலையுந் தீர்ந்ததன்றே. (௩௯௮)

கருதரும் பெருமைநீர்மைக் கலிக்காமர் தேவியாரும்
பொருவருங் கணவரோடு போவது புரியுங்காலை
மருவியிங் கணைந்தார்நம்பி யென்றுமுன் வந்தார்கூற
வொருவரு மழுதல்செய்யா தொழிகவென் றுரைத்துப்பின்னர். (௩௯௯)

கணவர்தஞ் செய்கைதன்னைக் கரந்துகா தலாநம்பி
யணைவுறும் பொழுதுசால வலங்கரித் தெதிர்போமென்னப்
புணர்நிலை வாயிற்றீபம் பூரண கும்பம்வைத்துத்
துணர்மலர் மாலைதூக்கித் தொழுதெதிர் கொள்ளச்சென்றார். (௪00)

செம்மைசேர் சிந்தைமாந்தர் சென்றெதிர் கொண்டுபோற்ற
நம்மையா ளுடையநம்பி நகைமுக மவர்க்குநல்கி
மெய்ம்மையாம் விருப்பினோடு மேவியுட் புகுந்துமிக்க
மொய்ம்மலர்த் தவிசின்மீது முகமலர்ந் திருந்தபோது. (௪0௧)

பான்மையர்ச் சனைகளெல்லாம் பண்பினில் வழாமையெய்த
நான்மறை தொடர்ந்தவாய்மை நம்பியா ரூரர்கொண்டிங்
கியான்மிக வருந்துகின்றே னேயர்கோ னார்தாமுற்ற
வூனவெஞ் சூலைநீக்கி யுடனிருப் பதனுக்கென்றார். (௪0௨)

மாதர்த மேவலாலே மனைத்தொழின் மாக்கண்மற்றிங்
கேதமொன் றில்லையுள்ளே பள்ளிகொள் கின்றாரென்னத்
தீதனை யில்லையேனு மென்மனந் தெருளாதின்ன
மாதலா லவரைக்காண வேண்டுமென் றருளிச்செய்வார். (௪0௩)

வன்றொண்டர் பின்னுங்கூற மற்றவர் தம்மைக்காட்டத்
துன்றிய குருதிசோரத் தொடர்குடர் சொரிந்துளாவி
பொன்றியே கிடந்தார்தம்மைக் கண்டபின் புகுந்தவாறு
நன்றென மொழிந்துநானு நண்ணுவே னிவர்முன்பென்பார். (௪0௪)

கோளுறு மனத்தராகிக் குற்றுடை வாளைப்பற்ற
வாளுடைத் தம்பிரானா ரருளினா லவருமுய்ந்து
கேளிரே யாகிக்கெட்டே னெனவிரைந் தெழுந்துகையில்
வாளினைப் பிடித்துக்கொள்ள வன்றொண்டர் வணங்கிவீழ்ந்தார். (ச0ரு)

மற்றவர் வணங்கிவீழ வாளினை மாற்றியேயர்
கொற்றவ னாருநம்பி குரைகழல் பணிந்துவீழ்ந்தா
ரற்றைநா ளிகழ்ந்தவிந்த வதிசயங் கண்டுவானோர்
பொற்றட மலரின்மாரி பொழிந்தனர் புவனம்போற்ற. (ச0சு)

இருவரு மெழுந்துபுல்லி யிடைவிடா நண்பினாலே
பொருவரு மகிழ்ச்சிபொங்கத் திருப்புன்கூர்ப் புனிதர்பாத
மருவினர் போற்றிநின்று வன்றொண்டர் தம்பிரானா
ரருளினை நினைந்தேயந்த ணாளனென் றெடுத்துப்பாடி. (ச0எ)

---

திருப்புன்கூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அந்தணாளனுன் னடைக்கலம்புகுத வவனைக்காப்பது காரணமாக, வந்தகாலன்ற னாருயிரதனை வவ்வினாய்க்குன்றன் வண்மைகண்டடியேன், எந்தைநீயெனை நமன்றமர்நலியி லிவன்மற்றென்னடி யானெனவிலக்குஞ், சிந்தையால்வந்துன் றிருவடியடைந்தேன் செழும்பொழிற்றிருப் புன்கூருளானே.

கம்பமாகளிற் றின்னுரியானைக் காமற்காய்ந்ததோர் கண்ணுதலானைச், செம்பொனேயொக்குந் திருவுருவானைச் செழும்பொழிற்றிருப் புன்கூருளானை, யும்பரானையு மையவள்கோனை யூரன்வன்றொண்ட னுள்ளத்தாலுகந், தன்பினாற்சொன்ன வருந்தமிழைந்தொ டைந்தும்வல்லவ ரருவினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

சிலபகல் கழிந்தபின்பு திருமுனைப் பாடிநாடர்
மலர்புகழ் திருவாரூரின் மகிழ்ந்துடன் வந்தவேயர்
குலமுதற் றலைவனாருங் கூடவே குளிர்பூங்கோயி
னிலவினார் தம்மைக்கும்பிட் டுறைந்தனர் நிறைந்தநண்பால். (ச0அ)

அங்கினி தமர்ந்துநம்பி யருளினான் மீண்டும்போந்து
பொங்கிய திருவின்மிக்க தம்பதி புகுந்துபொற்பிற்
றங்குநா ளேயர்கோனார் தமக்கேற்ற தொண்டுசெய்தே
செங்கண்மால் விடையார்பாதஞ் சேர்ந்தனர் சிறப்பினோடும், (ச0கூ)

நள்ளிரு ளயனாைத் தூதுவிட் டவர்க்கோ கண்பாம்
வள்ளலா ரேயர்கோனா் மலரடி வணங்கிப்புக்கே
னுள்ளுணர் வானஞான முதலிய வொருநான்குண்மை
தெள்ளுதீந் தமிழாற்கூறுந் திருமூலர் பெருமைசெப்ப. (சகo)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணத் திருவிருத்தம்-கஉடுஎ.
ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணத் திருவிருத்தம்-சகo.
ஆ திருவிருத்தம் - கசுகூஎ.

---

திருமயிலை. சுப்பராயஞானியார் அச்சிட்ட பெரியபுராணம் ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணத்தில் (கூகூ) வது பாட்டின்கீழ் "ஆண்டநம்பி யுடன்வந்த" என்கிறபாட்டு விட்டிருக்கிறபடியால் அதை இப்புராணத்தில் சேர்த்திருக்கிறோம்.

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலே, திருப்பெருமங்கலத்திலே, வேளாளர்குலத்திலே, சோழராஜாக்களிடத்திலே பரம்பரையாகச் சேனாதிபதித்தொழில் பூண்ட ஏயர்குடியிலே, கலிக்காமநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் குரு லிங்க சங்கமபத்தியிலே சிறந்தவர். திருப்புன்கூரிலுள்ள சிவாலயத்திலே அளவில்லாத திருப்பணிகள்செய்தவர்.

அவர் சுந்தரமூர்த்திநாயனார் சிவபெருமானைப் பரவையாரிடத்திற்குத் தூதாக அனுப்பிய சமாசாரத்தைக் கேள்வியுற்று,வெம்பி மிகக்கோபித்து, "நாயனை அடியான் ஏவுங்காரியம் மிகநன்று. இப்படிச்செய்பவன் தொண்டனாம். இது என்னபாவம்! பொறுக்கவொண்ணாத இந்தப் பெரும்பாதகத்தைக் கேட்டும் உயிரோடிருக்கின்றேனே" என்றார். "ஒருவன் பெண்ணாசைமேலீட்டினால் ஏவ ஒப்பில்லாத கடவுள் தூதராய் ஓரிரவுமுழுதும் போக்குவரவு செய்து உழன்றாராம். அரிபிரமேந்திராதி தேவர்களாலும் அறியப்படாத கடவுள் இசைந்தாராயினும், அவன் அவரை ஏவலாமா! இதற்கு மனநடுங்காத அந்தத்துரோகியை நான் காணுநாள் எந்நாளோ! பெண்பொருட்டுக் கடவுளை இரவிலே தூதனுப்பிய பாதகனைக் காண்பேனாயின் யாது சம்பவிக்குமோ" என்று சொல்லி மிகச்செற்றங்கொண்டிருந்தார்.

சுந்தரமூர்த்திநாயனார் அதனைக் கேள்வியுற்று அடியார்க்கெளியராகிய பரமசிவனுக்கு விண்ணப்பஞ்செய்ய; பரமசிவன் இருவரையும் கூட்டுதற்குத் திருவுளங்கொண்டு, கலிக்காமநாயனாரிடத்திலே சூலநோயை ஏவ; அது அக்கினியிலே காய்ச்சப்பட்ட வேல் குடைதல்போல மிக்கவேதனை செய்ய; கலிக்காமநாயனார் அதனால் மிகவருந்தி வீழ்ந்து, உயிர்த்துணையாகிய பரமசிவனுடைய திருவடிகளைச் சிந்தித்துத் துதித்தார். அப்பொழுது பரமசிவன் அவரிடத்தில் எழுந்தருளி, "சுந்தரனலன்றி இந்நோய் தீராது" என்று அருளிச்செய்ய; அவர் "எம்பெருமானே;

பரம்பரையாகத் தேவரீரே மெய்க்கடவுளென்று துணிந்து தேவரீருக்குத் திருத்தொண்டுகள் செய்துவருகின்ற குடியிலுள்ளேனாகியவென்னை வருத்துகின்ற சூலைநோயை, நூதனமாக ஆண்டு கொள்ளப்பட்ட ஒருவனா வந்து தீர்ப்பான். அவனாலே தீர்க்கப்படுதலினும் தீரா தொழிந்து என்னை வருத்துதலே நன்று, தேவரீர் செய்யும் பெருமையை அறிந்தவர் யாவர்! வன்றொண்டனுக்கு ஆகும் உறுதியையே செய்யும்" என்றார். உடனே பரமசிவன் அவர் முன்னே மறைந்து, சுந்தரமூர்த்திநாயனாரிடத்திற்சென்று, "நம்முடைய ஏவலாலே கலிக்காமனை வருத்துகின்ற சூலையை நீபோய்த் தீர்ப்பாய்" என்றார். சுந்தரமூர்த்திநாயனார் அதைக் கேட்டுத் திருவுளமகிழ்ந்து, கலிக்காமநாயனாரிடத்திற்குப் போம்படி புறப்பட்டு, சூலை தீர்க்கும்படி தாம் வருஞ்சமாசாரத்தை அவருக்குத் தெரிவித்தற்கு முன்னே ஆள் அனுப்பினார். அவ்வாளினாலே சுந்தரமூர்த்திநாயனாருடைய வரவை அறிந்த கலிக்காமநாயனார் "எம்பெருமானைத் தூதனுப்பியவன் சூலைநோய் தீர்த்தற்கு வந்தால் நான்செய்வது என்னும்! அவன் இங்கே வந்து தீர்த்தற்கு முன்னே இச்சூலையை வயிற்றினோடுங் கிழிப்பேன்" என்று உடைவாளினாலே தம்வயிற்றைக் கிழித்துக்கொண்டு இறந்துபோனார். அது கண்ட அவர் மனைவியாரும் அநுமரணஞ் செய்யப்புகுந்தார். அப்போது, "சுந்தரமூர்த்திநாயனார் சமீபத்தில் எழுந்தருளிவந்துவிட்டார்" என்று முன் வந்தோர் சொல்ல; மனைவியார் "ஒருவரும் அழாதொழிக" என்று சொல்லி, பின்பு தம்முடைய நாயகரது செய்கையை மறைத்து, சுந்தரமூர்த்திநாயனாரை எதிர் கொள்ளும்பொருட்டுத் தங்கள் சுற்றத்தார்களை ஏவ; அவர்கள்போய் எதிர்கொண்டு வணங்கினார்கள்.

சுந்தரமூர்த்திநாயனார் அவர்களுக்கு அருள்செய்து வந்து, கலிக்காமநாயனார் வீட்டிற்புகுந்து, ஆசனத்தில் எழுந்தருளியிருந்து, தமக்குச் செய்யப்பட்ட அருச்சனைகளை ஏற்றுக்கொண்டு, "கலிக்காம நாயனாருடைய சூலையை நீக்கி அவருடன் இருத்தற்கு மிக வருந்துகின்றேன்" என்றார். அப்பொழுது மனைவியாரது ஏவலால் வீட்டுவேலைக்காரர்வணங்கி நின்று, "சுவாமீ, அவருக்குத் தீங்கு ஒன்றும் இல்லை. உள்ளேபள்ளிகொள்கின்றார்" என்று விண்ணப்பஞ் செய்ய; சுந்தரமூர்த்திநாயனார் "தீங்கு ஒன்றும்இல்லை என்றீர். ஆயினும், என்மனந்தெளிந்திலது. ஆதலால் அவரை நான் காணல் வேண்டும்" என்றார். அவர்கள் அது கேட்டு கலிக்காமநாயனாரைக் காட்ட; சுந்தரமூர்த்திநாயனார் இரத்தஞ்சோரக் குடர்சொரிந்து உயிர் பொன்றிக் கிடந்தவரைக் கண்டு "புகுந்தவாறு நன்று. நானும் இவர்போல இறந்துபோவேன்" என்று சொல்லி, உடைவாளை எடுத்தார். உடனே பரமசிவனது திருவருளினால் கலிக்காமநாயனார் உயிர்த்து எழுந்து, அவர்கையில் வாளைப் பிடித்துக்கொள்ள; அவர் விழு

ந்து நமஸ்கரித்தார். கலிக்காமநாயனாரும் சுந்தரமூர்த்தி நாயனாரை நமஸ்கரித்தார்.

அதன்பின் இருவரும் அதிக நண்புள்ளவர்களாகித் திருப்புன்கூருக்குப் போய், சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு,சிலநாட்சென்றபின்பு, திருவாரூரை அடைந்தார்கள். கலிக்காமநாயனார் சிலநாள் அங்கே சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்து, பின்பு சுந்தரமூர்த்திநாயனாரிடத்திலே அநுமதிபெற்றுக்கொண்டு,தம்முடைய ஊருக்குத் திரும்பிவந்து திருத்தொண்டு செய்துகொண்டிருந்து, சிவபதம் அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருமூலநாயனார்புராணம்.

அந்தியிளம் பிறைக்கண்ணி யண்ணலார் கயிலையினின்
முந்தைநிகழ் கோயிலுக்கு முதற்பெருநா யகமாகி
யிந்திரன்மா லயன்முதலா மிமையவர்க்கு நெறியருளு
நந்திதிரு வருள்பெற்ற நான்மறையோ கிகளொருவர். (க)

மற்றவர்தா மணுமாதி வருஞ்சித்தி பெற்றுடையார்
கொற்றவனார் திருக்கயிலை மலைநின்றுங் குறுமுனிபா
லுற்றதொரு கேண்மையினா லுடன்சிலநா ளுறைவதற்கு
நற்றமிழின் பொதியமலை நண்ணுதற்கு வழிக்கொண்டார். (உ)

மன்னுதிருக் கேதாரம் வழிபட்டு மாமுனிவர்
பன்னுபுகழ்ப் பசுபதிநே பாளத்தைப் பணிந்தேத்தித்
துன்னுசடைச் சங்கரனா ரேற்றதூ நீர்க்கங்கை
யன்னமலி யகன்றுறைநீ ரருங்கரையின் மருங்கணைந்தார். (ங)

கங்கைநீ டுறையாடிக் கருத்துறைநீள் கடலேற்று
மங்கணர்தா மகிழ்ந்தருளு மவிமுத்தம் பணிந்தேத்தி
மங்குல்வளர் வரைவிந்த மன்னுபருப் பதமிறைஞ்சித்
திங்களணி சடையர்திருக் காளத்தி மலைசேர்ந்தார். (ச)

நீடுதிருக் காளத்தி நிலவுதா ணுவைவணங்கி
யாடுதிரு வரங்கான வாலவனந் தொழுதேத்தித்
தேடுமிரு வர்க்கரியார் திருவேகாம் பரம்பணிந்து
மாடுயர்மா மணிக்காஞ்சி வளநகருள் வைகினார். (ரு)

நற்பதியங் கமர்யோக முனிவர்களை நயந்துபோய்க்
கற்புரிசைத் திருவதிகை கலந்திறைஞ்சிக் கறைக்கண்ட
ரற்புதக்கூத் தாடுகின்ற வம்பலஞ்சூழ் திருவீதிப்
பொற்பதியாம் பெரும்பற்றப் புலியூரில் வந்தணைந்தார். (சு)

எவ்வுலகு முய்யவெடுத் தருளியசே வடியாரைச்
செவ்வியவன் புறவணங்கிச் சிந்தைகளி வரத்திளைத்து
வவ்வியமெய் யுணர்வின்கண் வருமானந் தக்கூத்தை
யவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை யமர்ந்திருந்தார். (எ)

தடநிலைமா ளிகைப்புலியூர் தன்னிலுறைந் திறைஞ்சிப்போ
யுடல்விடையின் மேல்வருவா ரமுதுசெய வஞ்சாதே
விடமளித்த தெனக்கருதி மேதினிக்கு வளநிறைத்தே
கடல்வயிறு நிறையாத காவிரியின் கரையணைந்தார். (அ)

காவிரியி னீர்த்தீர்த்தங் கலந்தாடிக் கடந்தேறி
யாவினருங் கன்றுறையு மாவடுதண் டுறையணைந்து
சேவில்வரும் பசுபதியார் திகழ்கோயில் வலம்வந்து
மேவுபெருங் காதலினுற் பணிந்தங்கு விருப்புறுவார். (கூ)

அந்நிலைமைத் தானத்தை யகலாத தொருகருத்து
முன்னியெழுங் குறிப்பினுன் மூளுமா தரவெய்தப்
பின்னுமகன் றேகுவார் பேணவருங் கோக்குலங்கள்
பொன்னிநதிக் கரைப்புறவிற் புலம்புவன வெதிர்கண்டார். (க0)

அந்தணர்தஞ் சாத்தனூ ராமேய்ப்பார் குடித்தோன்றி
முந்தைமுறை நிரைமேய்ப்பான் மூலனெனும் பெயருடையோன்
வந்துதனி மேய்க்கின்றான் வினைமாள வாணாளை
வெந்தொழில்வன் கூற்றுண்ண வீடிநிலத் திடைவீழ்ந்தான். (கக)

மற்றவன்ற னுடம்பினையக் கோக்குலங்கள் வந்தணைந்து
சுற்றிமிகக் கதறுவன சுழல்வனமோப் பனவாக
நற்றவயோ கிகள்காணு நம்பரரு ளாலேயா
வுற்றதுய ரிவைநீங்க வொழிப்பனென வுணர்கின்றார். (கஉ)

இவனுயிர்பெற் றெழிலன்றி யாக்களிடர் நீங்காவென்
றவனுடலிற் றம்முயிரை யடைவிக்க வருள்புரியுந்
தவமுனிவர் தம்முடம்புக் கரண்செய்து தாமுயன்ற
பவனவழி யவனுடலிற் றம்முயிரைப் பாய்த்தினர். (கந)

பாய்த்தியபின் றிருமூல ராயெழலும் பசுக்களெலா
நாத்தழும்ப நக்கிமோந் தணைந்துகனைப் பொடுநயந்து
வாய்த்தெழுந்த களிப்பினால் வாலெடுத்துத் துள்ளியபி
னீத்ததுய ரினவாகி நிரைந்துபோய் மேய்ந்தனவால். (கச)

ஆவினிரை மகிழ்வுறக்கண் டளிகூர்ந்த வருளினராய்
மேவியவை மேய்விடத்துப் பின்சென்று மேய்ந்தவைதாங்
காவிரிமுன் றுறைத்தண்ணீர் கலந்துண்டு கரையேறப்
பூவிரிதண் புறவினிழ லினிதாகப் புறங்காத்தார். (௧௫)

வெய்யசுடர்க் கதிரவனு மேல்பாலை மலையணையச்
சைவநெறி மெய்யுணர்ந்தோ ரானினங்க டாமேமுன்
பையகடப் பனகன்றை நினைந்துபடர் வனவாகி
வையநிகழ் சாத்தனூர் வந்தெய்தப் பின்போனார். (௧௬)

போனவர்தாம் பசுக்களெல்லாம் மனைதோறும் புகுகின்றார்
மானமுடை மனையாளும் வைகியபின் றாழ்த்தாரென்
றானபயத் துடன்சென்றே யவர்நின்ற வழிகண்டா
ளீனமிவர்க் கடுத்ததென மெய்தீண்ட வதற்கிசையார். (௧௭)

அங்கவளு மக்களுட னருஞ்சுற்ற மில்லாதா
டங்கிவெரு வுறமயங்கி யென்செய்தீ ரெனத்தளர
விங்குனக்கென் னுடனணைவொன் றில்லையென வெதிர்மறுத்து
பொங்குதவத் தோராங்கோர் பொதுமடத்தி னுட்புகுந்தார். (௧௮)

இல்லாள னியல்புவே றானமைகண் டிரவெல்லாஞ்
சொல்லாட்டா திருந்தவர்பா லணையாது துயிலாதாள்
பல்லார்முன் பிற்றைநா ளிவர்க்கடுத்த பரிசுரைப்ப
நல்லார்க ளவர்திறத்து நாடியே நயந்துரைப்பார். (௧௯)

பித்துற்ற மயலன்று பிறிதொருசார் வுளதொன்று
சித்தவிகற் பங்களைந்து தெளிந்தசிவ யோகத்தில்
வைத்தகருத் தினராகி வரம்பில்பெரு மையிலிருந்தா
ரித்தகைமை யளப்பரிதால் யாராலு மெனவுரைப்பார். (௨௦)

பற்றறுத்த வுபதேசப் பரமர்பதம் பெற்றார்போன்
முற்றுமுணர்ந் தனராகு முன்னைநிலை மையிலுங்கள்
சுற்றவியல் பினுக்கெய்தா ரென்றுரைப்பத் துயரெய்தி
மற்றவளு மையலுற மருங்குள்ளார் கொண்டகன்றார். (௨௧)

இந்தநிலை மையிலிருந்தா ரெழுந்திருந்தாங் கானிரைகள்
வந்தநெறி யேசென்று வைத்தகாப் பினிலுய்த்த
முந்தையுடற் பொறைகாணார் முழுதுணர்ந்த மெய்ஞ்ஞானச்
சிந்தையினில் வந்தசெய லாராய்ந்து தெளிகின்றார். (௨௨)

தண்ணிலவார் சடையார்தாந் தந்தவா கமப்பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினாற் றமிழ்வகுப்பக்
கண்ணியவத் திருவருளா லவ்வுடலைக் கரப்பிக்க
எண்ணிறந்த வுணர்வுடையா ரீசரரு ளெனவுணர்ந்தார். (௨௩)

சுற்றியவக் குலத்துள்ளார் தொடர்ந்தார்க்குத் தொடர்வின்மை
முற்றவே மொழிந்தருள வவர்மீண்டு போனதற்பின்
பெற்றமீ துயர்த்தவர்தாள் சிந்தித்துப் பெருகார்வச்
செற்றமுதல் கடிந்தவர்தா மாவடுதண் டுறைசேர்ந்தார். (உச)

ஆவடுதண் டுறையணைந்தங் கரும்பொருளை யுறவணங்கி
மேவுவார் புறக்குடபான் மிக்குயர்ந்த வாசின்கீழ்த்
தேவிருக்கை யமர்ந்தருளிச் சிவயோகந் தலைநின்று
பூவலரு மிதயத்துப் பொருளோடு முணர்ந்திருந்தார். (உரு)

ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுத னான்குமலர் நற்றிருமந் திரமாலை
பான்மைமுறை யோராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
மேனவெயி றணிந்தாரை யொன்றவன்றா னெனவெடுத்து. (உசு)

---

திருமந்திரமாலை.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றவன்றானே யிரண்டவனின்னரு
ணின்றனன்மூன்றினு ணான்குணர்ந்தானைந்து
வென்றனனாறு விரித்தனனேழுபார்
சென்றனன்றானிருந் தானுணர்ந்தெட்டே.

நீருநிலனும் விசும்பங்கிமாருத
கூருமுடம்புறு சோதியுமங்குளன்
பேரும்பராபரன் பிஞ்ஞகனெம்மிறை
யூருஞ்சகல னுலப்பிலிதானே.

திருச்சிற்றம்பலம்.

---

முன்னியவப் பொருண்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேன் மகிழ்ந்திருந்து
சென்னிமதி யணிந்தார்தந் திருவருளால் திருக்கயிலை
தன்னிலணைந் தொருக்காலும் பிரியாமைத் தாளடைந்தார். (உஎ)

நலஞ்சிறந்த ஞானயோ கக்கிரியா சரியையிவை
மலர்ந்தமொழித் திருமூல தேவர்மலர்க் கழல்வணங்கி
யலர்ந்தபுகழ்த் திருவாரூ ரமணர்கலக் கங்கண்ட
தலங்குலவு விறற்றண்டி யடிகடிறஞ் சாற்றுவாம். (உஅ)

ஆ. திருவிருத்தம் — சகசுரு.

---

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாசத்திலே, சிவபெருமானது ஆலயத்துக்குமுதற்பெரு நாயகராகிய திருநந்திதேவருடைய திருவருளைப் பெற்ற மாணுக்கர்களாகிய சிவயோகிகளுள் ஒருவர், அகத்திய மகாமுனிவரிடத்தே பொருந்திய நண்பினாலே அவருடன் சிலநாள் இருத்தற்கு, அவர் எழுந்தருளியிருக்கும் பொதியமலையை அடைதற்பொருட்டு,திருக்கைலாசத்தை அகன்று வழிக்கொண்டு, திருக்கேதாரம், பசுபதிநேபாளம், காசி,ஸ்ரீசைலம்,திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சீபுரம், திருவதிகை, சிதம்பரம் என்னுந் தலங்களை வணங்கிக்கொண்டு, திருவாவடுதுறையை அடைந்து, அங்கே சுவாமிதரிசனஞ்செய்து கொண்டிருந்தார்.

ஒருநாள் அந்தத்தலத்தை அகன்று செல்லும்பொழுது, காவிரியாற்றங்கரையிலுள்ள வனத்திலே பசுக்கூட்டங்கள் அழுதலை எதிரே கண்டார். சாத்தனூரில் இருக்கின்ற இடையனாகிய மூலனென்பவன் ஒருவன் அவைகளை மேய்க்கின்றவன். அவன் அத்தினத்திலே அவ்விடத்தில் இறந்து கிடந்தான். அப்பசுக்கூட்டங்கள் அவனுடைய சரீரத்தை வந்தணைந்து, சுற்றி மிகக் கதறிச் சுழன்று மோப்பனவாக;சிவயோகியார் கண்டு, "பரமசிவனது திருவருளினாலே இப்பசுக்களுடைய துயரத்தை நீக்கல்வேண்டும்" என்று ஆலோசித்து, "இவ்விடையன் உயிர்பெற்றெழுந்தாலன்றிப் பசுக்கள் துயரநீங்கா" என்று திருவுளங்கொண்டு, தம்முடைய திருமேனிக்குக் காவல் செய்து, தாம் அவ்விடையனுடைய சரீரத்தினுள்ளே பிரவேசித்து, திருமூலராய் எழுந்தார். எழுதலும், பசுக்களெல்லாம் நாத்தழும்ப நக்கிமோந்து, கனைத்து,மிகுந்த களிப்பினாலேவாலெடுத்துத் துள்ளி, பின்பு போய் மேய்ந்தன. திருமூலநாயனார் அது கண்டு திருவுளமகிழ்ந்து, அவைகள் மேயுமிடத்திற் சென்று, அவைகளை நன்றாக மேய்த்தார். சூரியன் அஸ்தமயனமாக; பசுக்கள் தத்தங்கன்றுகளை நினைந்து, தாமே முன் பையநடந்து, சாத்தனூரை அடைந்தன, சிவயோகியார் அப்பசுக்களுக்குப் பின் சென்று, அவைகளெல்லாம் வீடுகடோறும் போகத்தாம் வெளியிலே நின்றார்.

மூலனுடையமனைவி "நாயகர் இன்றைக்கு மிகத்தாழ்த்தார்"என்று பயங்கொண்டு சென்று, சிவயோகியார்நின்ற இடத்தை அடைந்து,"இவருக்கு ஈனம் அடுத்ததுபோலும்" என்று, அவருடைய திருமேனியைத் தீண்ட; அவர் அதற்கு இசையராயினர். அவள் அச்சுற்று மயங்கி,"என்செய்தீர்" என்று தளர; திருமூலநாயனார் "உனக்கு என்னோடியாதொரு சம்பந்தமும் இல்லை" என்று மறுத்து, ஒரு பொதுமடத்தினுள்ளே புகுந்து, சிவயோகத்தில் இருந்தார். மனைவி அவ்விரவு முழுதிலும் நித்திரைசெய்யாது கவலைகொண்டிருந்து, மற்றநாள் அதனை விவேகிகள்

பலருக்குத் தெரிவிக்க; அவர்கள் வந்துபார்த்து, அவளை நோக்கி, "இது பைத்தியமன்று, வேறுசார்புள்ளதுமன்று. இவர்கருத்துச் சிவயோகத்தினிடத்ததேயாம். இனி இவர் உங்கள் சுற்றவியல்போடு கூடார்" என்றார்கள். அவள் அதுகேட்டுத் துயரம் எய்தி மயங்க; அவர்கள் அவளைக் கொண்டு போய்விட்டார்கள்.

சிவயோகத்தில் இருந்த திருமூலநாயனார் எழுந்து, முதனாளிலே பசுக்கள் வந்த வழியே சென்று, தாஞ்சேமித்த சரீரத்தைக்காணாது, மெய்ஞ்ஞானத்தையுடைய சிந்தையினால் ஆராய்ந்து, "சிவபெருமான் ஆதிகாலத்திலே தம்முடைய பஞ்சவத்திரத்தினின்றும் தோற்றுவித்தகாமிகமுதலிய சைவாகமங்களிலே பேசப்பட்ட மெய்ப்பொருளைத் தமிழ்நாட்டிலஉள்ளவர்களுக்கு உபயோகமாகும்பொருட்டுத் தமியேனைக்கொண்டு தமிழினாலே ஒருநூல் செய்வித்தற்பொருட்டு அச்சரீரத்தை மறைத்தருளினார்" என்று தெளிந்து, திருவருளைத் துதித்து, திருவாவடுதுறையை அடைந்து, அங்குள்ள சிவாலயத்திலே பிரவேசித்து, சிவபெருமானை வணங்கி, அதற்குமேற்குப் பக்கத்தில் இருக்கின்ற அரசின் கீழேபோய், சிவயோகத்தில் இருந்தார். அவர் மூவாயிரம் வருஷமளவு அங்ஙனம் இருந்து, ஒவ்வொரு வருஷத்திற்கு ஒவ்வொருதிருப்பாட்டாக மூவாயிரந் திருப்பாட்டினால் சைவாகமங்களின் உணர்த்தப்பட்ட ஞானம் யோகம் கிரியை சரியை என்னு நான்கு பாதங்களையும் பேசுகின்ற திருமந்திரமென்னுந் தமிழ்நூலைப் பாடியருளி, பின் திருக்கைலாசத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

திருமூலநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## தண்டியடிகணாயனார்புராணம்.

தண்டியடிக டிருவாரூர்ப் பிறக்கும்பெருமைத் தவமுடையா
ரண்டவாணர் மறைபாட வாடுஞ்செம்பொற் கழன்மனத்துக்
கொண்டகருத்தின் கண்ணேக்குங் குறிப்பேயன்றிப் புறநோக்குங்
கண்டவுணர்வு துறந்தார்போற் பிறந்தபொழுதே கண்காணார். (க)

காணுங்கண்ணாற் காண்பதுமெய்த் தொண்டேயான கருத்துடையார்
பேணுஞ்செல்வத் திருவாரூர்ப் பெருமானடிக டிருவடிக்கே
பூணுமன்பி னாற்பரவிப் போற்றுகிலேமை புரிந்தமரர்
சேணுமறிய வரியதிருத் தொண்டிற்செறியச் சிறந்துள்ளார். (உ)

பூவார்சடிலத் திருமுடியார் மகிழ்ந்ததெய்வப் பூங்கோயிற்
றேவாசிரயன் முன்னிறைஞ்சி வலஞ்செய்வாராய்ச் செம்மைபுரி
நாவாலின்ப முறுங்காத னமச்சிவாய நற்பதமே
யோவாவன்பி லெடுத்தோதி யொருநாள்போல வருநாளில். (௩)

செங்கண்விடையார் திருக்கோயிற் குடபாற்றீர்த்தக் குளத்தின்பாங்
கெங்குமமணர் பாழிகளா யிடத்தாற்குறைபா டெய்துதலா
லங்கந்நிலைமை தனைத்தண்டி யடிகளறிந்தே யாதரவா
லிங்குநானிக் குளம்பெருகக் கல்லவேண்டு மென்றெழுந்தார். (௪)

குழிவாயதனிற் குறிநட்டுக் கட்டுங்கயிறு குளக்குலையி
னிழிவாய்ப்புறத்து நடுத்தறியோ டிசையக்கட்டி யிடைதடவி
வழியால்வந்து மண்கல்லி யெடுத்துமறித்துந் தடவிப்போ
யொழியாமுயற்சி யாலுய்த்தா ரோதுமெழுத்தஞ் சுடனுய்ப்பார். (௫)

நண்ணிநாளு நற்றொண்டர் நயந்தவிருப்பான் மிகப்பெருகி
யண்ணறீர்த்தக் குளங்கல்லக் கண்டவமணர் பொறாராகி
யெண்ணித்தண்டி யடிகள்பா லெய்திமுன்னின் றியம்புவார்
மண்ணைக்கல்லிற் பிராணிபடும் வருந்தவேண்டா வென்றுரைத்தார். (௬)

மாசுசேர்ந்த முடையுடலார் மாற்றங்கேட்டு மறுமாற்றந்
தேசுபெருகுந் திருத்தொண்டர் செப்புகின்றார் திருவிலிகாள்
பூசுநீறு சாந்தமெனப் புனைந்தபிரானுக் கானபணி
யாசிலாநல் லறமாவ தறியவருமோ வுமக்கென்றார். (எ)

அந்தமில்லா வறிவுடையா ருரைப்பக்கேட்ட வறிவில்லார்
சிந்தித்திந்த வறங்கேளாய் செவியுமிழந்தா யோவென்ன
மந்தவுணர்வும் விழிக்குருடுங் கேளாச்செவியு மற்றுமக்கே
யிந்தவுலகத் துள்ளனவென் றன்பர்பின்னு மியம்புவார். (அ)

வில்லாலெயின்மூன் றெரித்தபிரான் விரையார்கமலச் சேவடிக
ளல்லால்வேறு காணேன்யா னதுநீரறிதற் காரென்பார்
நில்லாநிலையீர்க் குணர்வின்றி நுங்கண் குருடா யென்கணுல
கெல்லாங்காண்பான் யான்கண்டா லென்செய்வீரென் றெடுத்துரைத்தார்.

அருகாதுகேட் டுன்றெய்வத் தருளாற்கண்ணீ பெற்றாயேற்
பெருகுமிவ்வூ ரினிநாங்கள் பின்னையிருக்கி லோமென்று
கருகுமுருட்டுக் கைகளாற் கொட்டைவாங்கிக் கருத்தின்வழித்
தருகைக்கயிறுந் தறியுமுடன் பறித்தார்தங்க டலைபறித்தார். (௧௦)

வெய்யதொழிலார் செய்கையின்மேல் வெகுண்டதண்டி யடிகடா
மைகொள்கண்டர் பூங்கோயின் மணிவாயிலின்முன் வந்திறைஞ்சி
யையனேயின் றமணர்கடா மென்னையவமா னஞ்செய்ய
நைவதானே னிதுதீர நல்குமடியேற் கெனவீழ்ந்தார். (௧௧)

பழுதுதீர்ப்பார் திருத்தொண்டர் பரவிவிண் ணப்பஞ்செய்து
தொழுதுபோந்து மடம்புகுந்து தூயபணி செய்யப்பெறா
தழுதுகங்கு லவர்துயிலக் கனவிலகில லோகங்கண்
முழுதுமளித்த முதல்வனார் முன்னின் றருளிச் செய்கின்றார். (கஉ)

நெஞ்சின்மருவுங் கவலையினை யொழிநீநின் கண்விழித்தந்த
வஞ்சவமணர் தங்கண்கண் மறையுமாறு காண்கின்றா
யஞ்சவேண்டா வென்றருளி யவர்பானீங்கி யவ்விரவே
துஞ்சுமிருளி னரசன்பாற் றோன்றிக்கனவி லருள்புரிவார். (கஙு)

தண்டிநமக்குக் குளங்கல்லக் கண்டவமணர் தரியாராய்
மிண்டுசெய்து பணிவிலக்க வெகுண்டானவன்பா னீமேவிக்
கொண்டகுறிப்பா லவன்கருத்தை முடிப்பாயென்று கொளவருளித்
தொண்டரிடுக்க ணீங்கவெழுந் தருளினாரத் தொழிலுவப்பார். (கச)

வேந்தனதுகண் டப்பொழுதே விழித்துமெய்யின் மயிர்முகிழ்ப்பப்
பூந்தண்கொன்றை வேய்ந்தவரைப் போற்றிப்புலரத் தொண்டர்பாற்
சார்ந்துபுகுந்த படிவிளம்பத் தம்பிரானா ரருணினைந்தே
யேய்ந்தமன்னன் கேட்பவிது புகுந்தவண்ண மியம்புவார். (கரு)

மன்னகேளியான் மழவிடையார் மகிழுந்தீர்த்தக் குளங்கல்லத்
துன்னுமமண ரங்கணைந்தீ தறமன்றென்று பலசொல்லிப்
பின்னுங்கயிறு தடவுதற்கியான் பிணித்ததறிக ளவைவாங்கி
யென்னைவலிசெய் தியான்கல்லுங் கொட்டைப்பறித்தா ரென்றியம்ப.()

அந்தனை வுனக்கறிவு மில்லையென்றா ரியானதனுக்
கெந்தைபெருமா னருளாலியான் விழிக்கிலென்செய் வீரென்ன
விந்தவூரி லிருக்கிலோ மென்றேயொட்டி னாரிதுமேல்
வந்தவாறுகண்டிந்த வழக்கை முடிப்ப தெனமொழிந்தார். (கஎ)

அருகர்தம்மை யரசனுமங் கழைத்துக்கேட்க வதற்கிசைந்தார்
மருவுந்தொண்டர் முன்போக மன்னன்பின்போய் மலர்வாவி
யருகுநின்று விறற்றண்டி யடிகடம்மை முகநோக்கிப்
பெருகுந்தவத்தீர் கண்ணருளாற் பெறுமாகாட்டு மெனப்பெரியோர். ()

ஏய்ந்தவடிமை சிவனுக்கியா னென்னிலின்றெங் கண்பெற்று
வேந்தனெதிரே திருவாரூர் விரவுஞ்சமணர் கண்ணிழப்பா
ராய்ந்தபொருளுஞ் சிவபதமே யாவதென்று மஞ்செழுத்தை
வாய்ந்ததொண்ட ரெடுத்தோதி மணிநீர்வாவி முழுகினார். (கக)

தொழுதுபுனன்மே லெழுந்தொண்டர் தூயமலர்க்கண் பெற்றெழுந்தார்
பொழுதுதெரியா வகையமரர் பொழிந்தார் செழுந்தண்பூமாரி
யிழுதையமணர் விழித்தேகண் ணிழந்துதடுமா றக்கண்டு
பழுதுசெய்த வமண்கெட்ட தென்றுமன்னன் பகர்கின்றான். (உ0)

தண்டியடிக டம்முடனே யொட்டிக்கெட்ட சமண்குண்ட
ரண்டர்போற்றுந் திருவாரூர் நின்றுமகன்று போய்க்கழியக்
கண்டவமணர் தமையெங்குங் காணவண்ணந் துரக்கவென
மண்டிவயவர் சாடுதலுங் கண்கள்காணர் மனங்கலங்கி. (உக)

குழியில்விழுவார் நிலைதளர்வார் கோலுமில்லை யெனவுரைப்பார்
வழியீதென்று தூறடைவார் மாண்டோமென்பார் மதிகெட்டு
ரழியும்பொருளை வட்டித்திங் கழிந்தோமென்பா ரரசனுக்குப்
பழியீதாமோ வென்றுரைப்பார் பாய்களிழப்பார் பறிதலையர். (உஉ)

பீலிதடவிக் காணது பெயர்வார்நின்று பேதுறுவார்
காலினோடு கைமுறியக் கன்மேலிடறி விழ்வார்கள்
சாலநெருங்கி யெதிரெதிரே தம்மிற்றாமே முட்டிடுவார்
மாலுமனமு மழிந்தோடி வழிகளறியார் மயங்குவார். (உந)

அன்னவண்ண மாரூரி லமணர்கலக்கங் கண்டவர்தாஞ்
சொன்னவண்ண மேய்வரை யோட்டத்தொடர்ந்து துரந்ததற்பின்
பன்னும்பாழி பள்ளிகளும்பறித்துக் குளஞ்சூழ் கரைபடுத்து
மன்னனவனு மனமகிழ்ந்து வந்துதொண்ட ரடிபணிந்தான். (உச)

மன்னன்வணங்கிப் போயினபின் மாலுமயனு மறியாத
பொன்னங்கழல்கள் போற்றிசைத்துப் புரிந்தபணியுங் குறைமுடித்தே
யுன்னுமனத்தா லஞ்செழுத்து மோதிவழுவா தொழுகியே
மின்னுஞ்சடையா ரடிநீழன் மிக்கசிறப்பின் மேவினார் (உரு)

கண்ணின்மணிக ளவையின்றிக் கயிறுபிடித்துக் குளந்தொட்ட
வெண்ணில்பெருமைத் திருத்தொண்டர் பாதமிறைஞ்சி யிடர்நீங்கி
விண்ணில்வாழ்வார் தாம்வேண்டப் புரங்கள்வெகுண்டார் வேற்காட்டூ
ருண்ணிலாவும் புகழ்த்தொண்டர் மூர்க்கர்செய்கை யுரைக்கின்றாம்.(உசூ)

ஆ. திருவிருத்தம் - ௲எ௱உக.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, திருவாரூரிலே, தண்டியடிகணாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பிறவிக்குருடர். அவர் தம்முடைய அகக்கண்ணினாலே சிவபெருமானைத் தரிசித்துத் தோத்திரம்பண்ணுகின்றவர். எப்பொழுதும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை மிகுந்த அன்பினோடு ஜபிக்கின்றவர். அந்தத்திருப்பதியிலுள்ள பூங்கோயிலைக் காலந்தோறும் வலஞ்செய்து வணங்குகின்றவர்.

இப்படியிருக்கு நாளிலே, அவ்வாலயத்துக்கு மேற்றிசையில் இருக்கின்ற திருக்குளம் பக்கமெங்கும் சமணர்களுடைய பாழிகளாகி இடத்தினாலே குறைவடைந்தமையால், தண்டியடிகள் அதனை அறிந்து, அத்தி

ருக்குளத்தைத் தாம் பெருகக் கல்லல்வேண்டும் என்று நினைந்து, அவ்விடத்திற் சென்று, திருக்குளத்தினுள்ளே கல்லுமிடத்தில் ஒருதறிநட்டு, அதிலே கயிறு கட்டி, கரையிலும் தறி நட்டு, அக்கயிற்றினுனியை அதனில் இசையக் கட்டி, மண்வெட்டியையுங் கூடையையும் எடுத்து, அக்கயிற்றைத் தடவிக்கொண்டு சென்று, மண்ணைக் கல்லிக் கூடையில் எடுத்துக்கொண்டு, மீண்டும் அக்கயிற்றைத் தடவிப் போய்க் கரையிலேபோடுவார். இப்படித் தினந்தோறும் மிகுந்த விருப்பத்துடன் திருக்குளங் கல்லும்பொழுது, சமணர்கள் பொறாமைகொண்டு அவரை அணைந்து "மண்ணைக் கல்லிற்பிராணிகள் இறந்துபோம்; வருத்தல்வேண்டாம்" என்று சொல்ல; தண்டியடிகள் "அவிவேகிகளே, இது மெய்க்கடவுளாகிய பரமசிவனுக்குச் செய்யுங்குற்றமற்ற புண்ணியம். இதனருமை உங்களுக்கு விளங்குமா" என்றார். அதுகேட்ட சமணர்கள் "நாஞ்சொன்ன தருமமுறையைக் கேட்டாயில்லை. நீ கண்ணையன்றிக் காதினையும் இழந்தனையோ" என்று சொல்ல; தண்டியடிகள் "மந்தபுத்தியும் காணுக்கண்ணும் கேளாச்செவியும் உங்களுக்கே உள்ளன" என்று சொல்லி, "திரிபுரதகனஞ்செய்த கடவுளுடைய திருவடிகளையேயன்றி வேறொன்றையும் நான் காணேன். அதனையறிதற்கு நீங்கள் யார்; அக்கடவுளுடைய திருவருளினால் உலகமெல்லாம் அறியும்படி என்கண் காணவும் உங்கள்கண் குருடாகவும் பெற்றால், நீங்கள் யாது செய்வீர்கள்" என்றார். சமணர்கள் "நீ உன்கடவுளது அருளினால் கண் பெற்றாயாகில், நாங்கள் இவ்வூரில் இரோம்" என்று சொல்லி, அவருடைய மண்வெட்டியைப் பறித்து, குறித்தறிகளைப் பிடுங்கி எறிந்தார்கள். தண்டியடிகள் மிகக்கோபங்கொண்டு, திருக்கோயில் வாயிலிலே சென்று நமஸ்கரித்து, "எம்பெருமானே தேவரீரை நிந்தனைசெய்யும் அதி பாதகர்களாகிய சமணர்கள் இன்றைக்குத் திருக்குளங்கல்லுதலாகிய சிவபுண்ணியத்தையும் அதனைச் செய்யப்பெற்ற அடியேனையும் அவமானஞ் செய்தமையால், அடியேன் அது பொறாது மிகவருந்துகின்றேன். சர்வசாமர்த்தியமுடைய தேவரீர் இவ்வருத்தத்தை நீக்கியருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்து, நமஸ்காரஞ்செய்து, தம்முடைய திருமடத்திற்சென்று, அழுது கொண்டிருந்தார்.

அன்றிரவு அவர் நித்திரை செய்யும்பொழுது, பரமசிவன் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "தண்டியே உன்கவலையை ஒழி. நாளைக்கு உன்கண் காணவும் அந்தச் சமணர்களுடைய கண்கள் மறையவும் அருள்செய்வோம். பயப்படாதொழி" என்று அருளிச்செய்து, சோழராஜாவுக்கும் சொப்பனத்திலே தோன்றி, "தண்டியென்பவன் நமக்குக் குளங்கல்ல, சமணர்கள் அது கண்டு பொறாது, அப்பணிக்கு விக்கினஞ் செய்தனர். நீ அவனிடத்திலே சென்று அவன் கருத்தை முடிப்பாய்" என்று ஆஞ்ஞாபித்து மறைந்தருளினார். சோழராஜா விழித்து எழுந்து

பரமசிவனைத் தோத்திரஞ்செய்து, சூரியன் உதித்தபின் தண்டியடிகளை அடைந்து, தான்கண்ட சொப்பனத்தைச்சொல்ல; தண்டியடிகள் "மஹாராஜாவே, நான் திருக்குளங்கல்லும்போது, சமணர்கள் வந்து, அதுதருமமன்றென்று பல சொல்லி, நான் நட்டகுறித்தறிகளைப் பிடுங்கி, என்னை வலிசெய்து, மண்வெட்டியைப் பறித்துக்கொண்டார்கள். இன்னும் 'நீ கண்ணேயன்றிக் காதினையும் இழந்தனையோ' என்றார்கள். அதற்குநான் நம்முடைய சிவபெருமானது திருவருளினால் என்கண் காணவும் உங்கள் கண்கள் மறையவும் பெற்றால் நீங்கள் யாது செய்வீர்கள் என்றுகேட்க; 'நாங்கள் இந்தவூரில் இரோம்,' என்று ஓட்டினார்கள். இனி நிகழ்வதைக் கண்டு; நீர் இந்தவழக்கை முடித்தல்வேண்டும்" என்றார். அப்பொழுது அரசன் சமணர்களை அங்கே அழைத்துக் கேட்க; அவர்கள் அதற்கு உடன்பட்டார்கள். அது கண்டு தண்டியடிகள் முன் செல்ல; அரசன் பின்சென்று திருக்குளக்கரையிலே நின்று, தண்டியடிகளை நோக்கி, "சிவபத்தரே, நீர் பரமசிவனது திருவருளினாலே கண்பெறுதலைக் காட்டும்" என்று சொல்ல; தண்டியடிகள் "சிவபெருமானே மெய்க்கடவுளும் சிறியேன் அவருக்கு அடியானுமாயின், இவ்வரசனுக்கு முன்னே நான் கண் பெற்றுச் சமணர்கள் கண் இழப்பர்கள்" என்றுசொல்லி, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு, திருக்குளத்திலே முழுகிக்கண்பெற்றெழுந்தார். சமணர்களோ கண்ணிழந்து தடுமாறினார்கள். அது கண்ட அரசன் தன்னேவலாளரை நோக்கி, "தண்டியடிகளுடனே ஓட்டிக்கெட்ட சமணர்களைத் திருவாரூரினின்றும் அகன்று போம்படி துரத்துங்கள்" என்று ஆஞ்ஞாபிக்க; அவர்கள் அவ்வாறே துரத்தலும், சமணர்கள் கண் காணாமையால் மனங்கலங்கிக் குழியிலே விழுவார்கள்; "கோலும் இல்லையே" என்பார்கள்; இது வழி என்றுதூற்றை அடைவார்கள்; "பொய்ப்பொருளை மெய்ப்பொருளெனக்கொண்டு அழிந்தோம்" என்பார்கள்; பாய்களைஇழப்பார்கள்; பீலிகளைத் தடவிக் காணாமல்திரும்புவார்கள்; மயங்கி நிற்பார்கள்; காலும் கையும் முறியக் கற்களின்மேல் இடறிவிழுவார்கள்; மிகநெருங்கி ஒருவரை ஒருவர் முட்டிக்கொள்வார்கள்; ஓடுதற்கு வழியறியாது மயங்குவார்கள்.

இந்தப்பிரகாரம் சமணர்கலக்கங்கண்டு அவர்களை ஓடத்துரத்திய பின்னர், சோழராஜா சமணர்களுடைய பாழிகளையும் பள்ளிகளையும் பறித்து, திருக்குளத்துக்குக் கரை கட்டி, மனமகிழ்ந்து, தண்டியடிகளை வணங்கிக்கொண்டு போயினான். அவர் பரமசிவனைத் தியானித்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஜபித்து, திருத்தொண்டு செய்துகொண்டிருந்து, சிவபதம் அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

தண்டியடிகணாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மூர்க்கநாயனார் புராணம்.

மன்னிப்பெருகும் பெருந்தொண்டை வளநாடதனில் வயல்பரப்பு
நன்னித்திலவெண் டிரைப்பாலி நதியின்வடபால் நலங்கொள்பதி
யன்னப்பெடைகள் புடைவாவி யலர்புக்காட வரங்கினிடை
மின்னுக்கொடிக டுகிற்கொடிகள் விழவிற்காடு வேற்காடு. (க)

செம்பொற்புரிசைத் திருவேற்கா டமர்ந்தசெய்ய சடைக்கற்றை
நம்பர்க்கும்பர்க் கமுதளித்து நஞ்சையமுது செய்தவருக்
கிம்பர்த்தலத்தில் வழியடிமை யென்றுங்குன்றா வியல்பில்வருந்
தம்பற்றுடைய நிலைவேளாண் குலத்திற்றலைமை சார்ந்துள்ளார். (உ)

கோதின்மரபிற் பிறந்துவளர்ந் தறிவுகொண்ட நாடொட்டங்கி
யாதிமுதலாந் திருநீற்றி னடைவேபொருளென் றறிந்தானார்
காதலடியார்க் கமுதாக்கி யமுதுசெய்யக் கண்டுண்ணும்
நீதிமுறைமை வழுவாத நியதிபூண்ட நிலைமையார். (ங)

தூயவடிசில் நெய்கன்னல் சுவையின்கறிக ளவையமைத்து
மேயவடியார் தமைப்போற்றி விருப்பாலமுது செய்வித்தே
யாயபொருளு மவர்வேண்டும் படியாலுதவி யன்புமிக
வேயுமாறு நாடோறு மினையபணிசெய் தின்புற்றார். (ச)

இன்னசெயலி னொழுகுநா ளடியார்மிகவு மெழுந்தருள
முன்னமுடைமை யானபொருண் முழுதுமாள வடிமையுடன்
மன்னுகாணி யானநில மற்றுமுள்ள திறம்விற்றே
யன்னமளித்து மேன்மேலு மாராமனத்தா ராயினார் (ரு)

அங்கணவ்வூர் தமக்கொருபற் றடியார்தங்கட் கமுதாக
வெங்குங்காணு வகைதோன்ற விலம்பாடெய்தி யலந்தயர்வார்
தங்கும்வகையாற் றன்முன்பு கற்றதன்மை நற்சூதாற்
பொங்குபொருளாக் கவுமங்குப் பொருவாரின்மை யினிற்போவார். (சு)

பெற்றமேறிப் பலிக்குவரும் பெருமானமருந் தானங்க
ளுற்றவன்பாற் சென்றெய்தி யுருகுமுள்ளத் தொடும்பணிந்து
கற்றசூதா னியதியாங் கருமமுடித்தே கருதாரூர்
செற்றநிலையார் திருக்குடந்தை யடைந்தார்வந்து சிலநாளில். (எ)

வேறு.

இருளாரு மணிகண்ட ரடியார்க்கின் னமுதளிக்கப்
பொருளாய மெய்துதற்குப் புகழ்க்குடந்தை யம்பலத்தே
யுருளாயச் சூதாடி யுறுபொருள்வென் றன்நம்ப
ரருளாக வேகொண்டங் கமுதுசெய்வித் தின்புறுவார். (அ)

முற்சூது தாந்தோற்று முதற்பணைய மவர்கொள்ளப்
பிற்சூது பலமுறையும் வென்றுபெரும் பொருளாக்கிச்
சொற்சூதான் மறுத்தாரைச் சுரிகையுரு விக்குத்தி
நற்சூதர் மூர்க்கரெனும் பெயர்பெற்றார் நானிலத்தில். (கூ)

சூதினில்வென் றெய்துபொரு ளிசற்ற நல்லுணர்விற்
றீதகல வமுதாக்கு வார்கொள்ளத் தாந்தீண்டார்
காதலுட னடியார்க ளமுதுசெய்யக் கடைப்பந்தி
யேதமிலா வகைதாமு மமுதுசெய்தங் கிருக்குநாள். (க0)

நாதன்ற னடியார்க்கு நல்லடிசி லூட்டோறு
மாதரவி னலமுது செய்வித்தங் கருளாலே
யேதங்கள் போயகல விவ்வுலகை விட்டதற்பின்
பூதங்க ளிசைபாட வாடுவார் புரம்புக்கார். (கக)

வல்லார்கள் தமைவென்று சூதினல் வந்தபொரு
ளெல்லாருங் கறைக்கண்ட ரடியவர்க டமக்காக்கும்
நல்லார்நற் சூதாடு மூர்க்கர்கழல் நாம்வணங்கிச்
சொல்லார்சீர்ச் சோமாசி மாறர்திறஞ் சொல்லுவாம். (கஉ)

ஆ திருவிருத்தம் - களஙங.

---

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலே, திருவேற்காட்டிலே, வேளாளர்குலத்திலே தலைமைபெற்ற ஒருவர், தினந்தோறும் சிவனடியார்களைச்சிவனென வணங்கித் துதித்துத் திருவமுதுசெய்வித்துப் பின்பு தாம் உண்பவரும், அவர்கள் விரும்பும் பொருள்களையும் கொடுப்பவருமாய் இருந்தார். இப்படியிருக்குநாளிலே, அடியார்கள் அநேகர் எழுந்தருளி வருகின்றமையால், அவர் தம்மிடத்துள்ள திரவியங்களெல்லாஞ் செலவாகிவிட; அடிமை நிலம் முதலியனவற்றை விற்றும், மாகேசுரபூசையை வழுவாதுமன மகிழ்ச்சியோடு செய்துவந்தார். அதன்பின், மாகேசுரபூசைச் செலவுக்குப் பொருள் இன்மையாற் கவலைகொண்டு, தாம் முன்னே பயின்ற சூதினாலே பொருள் சம்பாதிக்க நினைந்து, அவ்வூரிலே சூதாடுவோர் இல்லாமைபற்றி அவ்வூரை அகன்று, சிவஸ்தலங்க டோறுஞ்சென்று, சுவாமி தரிசனஞ்செய்து, சூதாடலால் வரும்பொருளினாலே தம்முடையரிய

தியை முடித்து, சிலநாளிலே கும்பகோணத்தை அடைந்தார். அங்கே சூதாடிப் பொருள் தேடி மாகேசுரபூசை செய்தார். சூதிலே முதலாட்டத்திலே தாந்தோற்று, பின்னாட்டங்களிலே பலமுறையும் வென்று, அதனாலே பொருள் ஆக்கி, சூதிலே மறுத்தவர்களை உடைவாளை உருவிக்குத்தி நற்சூதர் மூர்க்கர் என்னும் பெயர்களைப் பெற்றார். சூதினாலே வரும் பொருளைத் திருவமுதாக்குவோர்கள். கொள்ள; தாந்தீண்டார். அடியார்கள் திருவமுது செய்தபின், தாங் கடைப்பந்தியிலே அமுது செய்வாராயினர். இவர் இப்படிச் சிலகாலம் மாகேசுரபூசை செய்துகொண்டிருந்து, அந்தமகத்தாகிய சிவபுண்ணியத்தினாலே சிவபதம் அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

மூர்க்கநாயனார்புராண முற்றியது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சோமாசிமாறநாயனார்புராணம்.

சூதம்பயிலும் பொழிலம்பரிற் றூயவாய்மை
வேதம்பயிலு மறையாளர் குலத்தின்மேலோ
ரேதம்புரியு மெயிலெய்தவர்க் கன்பர்வந்தாற்
பாதம்பணிந்தா ரமுதூட்டுநற் பண்பின்மிக்கார். (க)

யாழின்மொழியா டனிப்பாகரைப் போற்றும்யாகம்
ஊழின்முறைமை வழுவாதுல கங்களான
வேழுமுவப்பப் புரிந்தின்புறச் செய்தபேற்றால்
வாழுந்திற மீசர்மலர்க்கழல் வாழ்த்தலென்பார். (உ)

எத்தன்மைய ராயினுமீசருக் கன்பரென்றா
லத்தன்மைய ராம்நம்மையாள்பவ ரென்றுகொள்வார்
சித்தந்தெளியச் சிவனஞ்செழுத் தோதுவாய்மை
நித்தந்நியம மெனப்போற்று நெறியினின்றார். (ங)

சீருந்திருவும் பொழியுந்திரு வாரூரெய்தி
யாரந்திகழ் மார்பினனுக்கவன் றொண்டர்க்கன்பாற்
சாரும்பெரு நண்புசிறப்ப வடைந்துதங்கிப்
பாரும்விசும்பும் பணியும்பதம் பற்றியுள்ளார். (ச)

துன்றும்புல னைந்துட்ணூறு தொகுத்தகுற்றம்
வென்றிங்கிது நன்னெறிசேரும் விளக்கமென்றே
வன்றொண்டர் பாதந்தொழுதான சிறப்புவாய்ப்ப
வென்றுங்கிலவுஞ் சிவலோகத்தி லின்பமுற்றார். (ரு)

வேறு.

பணையுந்தடமும் புடைசூழு மொற்றியூரிற் பாகத்தோர்
துணையுந்தாமும் பிரியாதார் தோழத்தம்பி ரானுரை
யிணையுங்கொங்கைச் சங்கிலியா ரெழின்மென்பணைத்தோ ளெய்துவிக்க
வணையுமொருவர் சரணமே யரணமாக வடைந்தோமே. (சு)

ஆ திருவிருத்தம் - களஙகூ.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, திருவம்பரிலே, பிராமண குலத்திலே,சோமாசிமாறநாயனுரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனது ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை மிகுந்த அன்பினேடு ஜபித்தலை நித்தியநியமமெனக் கொண்டவர்.எந்தக்குலத்தினராயினும்,எந்தக்குணத்தினராயினும்பரமசிவன் மேல் அன்புடையர்களாயின், அவர்களே நம்மை ஆள்பவர் என்னும் மெய்யறிவினையுடையவர். அவ்வன்பர்கள் தம்முடைய வீட்டுக்கு எழுந்தருளி வந்தால், அவர்களை எதிர்கொண்டு வணங்கித் திருவமுதுசெய்விப்பவர். பரமசிவனுக்குப் பிரீதியாகியயாகங்களை,புகழ் பயன் முதலியனகருதாது நிஷ்காமியமாக வேதவிதிப்படி செய்பவர். அவர் திருவாரூரிற்சென்று, சைவசமயாசாரியராகிய சுந்தரமூர்த்தி நாயனுரை அடைந்து, அவருடைய திருவடிகளிலே பத்திபண்ணி, அதனுலே சிவபதத்தைப் பெற்றுர்.

திருச்சிற்றம்பலம்.

வம்பறுவரிவண்டுச்சருக்கமுற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஆறுவது

# வார்கொண்டவனமுலையாள்சருக்கம்.

---

## சாக்கியநாயனுர்புராணம்.

அறுசமயத் தலைவராய் நின்றவருக் கன்பராய்
மறுசமயச் சாக்கியர்தம் வடிவினல் வருந்தொண்ட
ருறுதிவரச் சிவலிங்கங் கண்டுவந்து கல்லெறிந்து
மறுவில்சரண் பெற்றதிற மறிந்தபடி வழுத்துவாம். (க)

தாளாளர் திருச்சங்க மங்கையினிற் றகவுடைய
வேளாளர் குலத்துதித்தார் மிக்கபொரு டெரிந்துணர்ந்து
கேளாகிப் பல்லுயிர்க்கு மருளுடைய ராய்க்கெழுமி
நீளாது பிறந்திறக்கு நிலையொழிவே னெனநிற்பார். (உ)

அந்நாளி லெயிற்காஞ்சி யணிநகரஞ் சென்றடைந்து
நன்ஞான மடைவதற்குப் பலவழியு நாடுவார்
முன்னாகச் சாக்கியர்தா மொழியறத்தின் வழிச்சார்ந்து
மன்னாத பிறப்பறுக்குந் தத்துவத்தின் வழியுணர்வார். (௩)

அந்நிலைமைச் சாக்கியர்த மருங்கலைநூ லோதியது
தன்னிலையும் புறச்சமயச் சார்வுகளும் பொருளல்ல
வென்னுமது தெளிந்தீச ரருள்கூர விறில்சிவ
நன்னெறியே பொருளாவ தெனவுணர்வு நாட்டுவார். (௪)

செய்வினையுஞ் செய்வானு மதன்பயனுங் கொடுப்பானு
மெய்வகையா னான்காகும் விதித்தபொரு ளெனக்கொண்டே
யிவ்வியல்பு சைவநெறி யல்லவருக் கில்லையென
வுய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே யுணர்ந்திருந்தார். (௫)

எந்நிலையி னின்றாலு மெக்கோலங் கொண்டாலு
மன்னியசீர்ச் சங்கரன்றா ண் மறவாமை பொருளென்றே
துன்னியவே டந்தன்னைத் துறவாதே தூயசிவந்
தன்னைமிகு மன்பினான் மறவாமை தலைநிற்பார். (௬)

வேறு.

எல்லாமுடைய வீசனே யிறைவனென்ன வறியாதார்
பொல்லாவேடச் சாக்கியரோ யாகிப்புல்ல ராகுவா
ரல்லார்கண்டர் தமக்கிந்த வகிலமெல்லா மாளென்ன
வல்லாரிவரவ் வேடத்தை மாற்றாதன்பின் வழிநிற்பார். (௭)

வேறு.

காணாத வருவினுக்கு முருவினுக்குங் காரணமாய்
நீணாக மணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்க
நாணாது நேடியமா லுன்முகனுங் காணநடுச
சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய். (௮)

நாடோறுஞ் சிவலிங்கங் கண்டுண்ணு மதுநயந்து
மாடோர்வெள் ளிடைமன்னுஞ் சிவலிங்கங் கண்டுமன
நீடோடு களியுவகை நிலைமைவரச் செயலறியார்
பாடோர்கற் கண்டதனைப் பதைப்போடு மெடுத்தெறிந்தார். (௯)

அகநிறைந்த பேருவகை யடங்காத வாதரவான்
மகவுமகிழ்ந் துவப்பார்கள் வன்மைபுரி செயலினு
நிகழ்வனவே செய்தாலு மிளம்புதல்வர்க் கின்பமே
நிகழுமது போலதற்கு நீள்சடையோர் தாமகிழ்வார். (௧௦)

அன்றுபோய்ப் பிற்றைநா ளன்னியதிக் கணையுங்காற்
கொன்றைமுடி யோர்மேற்றுங் கல்லெறிந்த குறிப்பதனை
நின்றுணர்வா ரெனக்கப்போ திதுநிகழ்ந்த தவரருளே
யென்றதுவே தொண்டாக வென்றுமது செயநினைந்தார். (௧௧)

தொடங்கியநா ளருளியவத் தொழிலொழியா வழிதொடருங்
கடன்புரிவா லதுகண்டு கல்லெறிவார் துவராடைப்
படம்புனைவே டந்தவிரார் பசுபதியார் தஞ்செயலே
யடங்கலுமென் பதுதெளிந்தா ராதலினுன் மாதவர்தாம். (௧௨)

இந்நியதி பரிவோடும் வழுவாம லிவர்செய்ய
முன்னுதிருத் தொண்டர்நிலை முடிந்தபடி தான்மொழியிற்
றுன்னியமெய் யன்புடனே யெழுந்தவினை தூயவர்க்கு
மன்னுமிகு பூசனையே யாமன்பு வழக்கினுல். (௧௩)

கல்லாலே யெறிந்ததுவு மன்பான படிகாணில்
வில்வேடர் செருப்படியுந் திருமுடியின் மேவிற்றால்
கல்லார்மற் றவர்செய்கை யன்பாலே நயந்ததனை
யல்லாதார் கல்லென்பா ரரனார்க்கஃ தலராமால். (௧௪)

அங்கொருநா ளருளாலே யயர்த்துண்ணப் புகுகின்றா
ரெங்கள்பிரான் றனையெறியா தயர்த்தேன்யா னெனவெழுந்து
பொங்கியதோர் காதலுடன் மிகவிரைந்து புறப்பட்டு
வெங்கரியி னுரிபுனைந்தார் திருமுன்ன மேவினார். (௧௫)

கொண்டதொரு கல்லெடுத்துக் குறிகூடும் வகையெறிய
வுண்டிவினை யொழிந்தஞ்சி யோடிவரும் வேட்கையொடுங்
கண்டருளுங் கண்ணுதலார் கருணைபொழி திருநோக்காற்
றொண்டரெதிர் நெடுவிசும்பிற் றுணைவியொடுந் தோன்றுவார். (௧௬)

மழவிடைமே லெழுந்தருளி வந்ததொரு செயலாலே
கழலடைந்த திருத்தொண்டர் கண்டுகரங் குவித்திறைஞ்சி
விழவருளோக் களித்தருளி மிக்கசிவ லோகத்திற்
பழவடிமைப் பாங்கருளிப் பரமரெழுந் தருளினார். (௧௭)

வேறு.

ஆதியார் தம்மைநாளுங் கல்லெறிந் தணுகப்பெற்ற
கோதில்சீர்த் தொண்டர்கொண்ட குறிப்பினை யவர்க்குநல்குஞ்
சோதியா ரறிதலன்றித் துணிவதென் னவர்தாள்சூடித்
தீதினை நீக்கலுற்றேன் சிறப்புலி யாரைச்செப்பி. (௧௮)

ஆகதிருவிருத்தம் - ௧௭௫௰.

திருச்சிற்றம்பலம்.

திருச்சங்கமங்கையிலே, வேளாளர் குலத்திலே உதித்த ஒருவர் சனனமரணத்துன்பங்களை நினைந்து நினைந்து கவலைகொண்டு, அவைகளினின்று நீங்கு நெறி யாது என்று ஆராய்வாராயினர். அந்நாளிலே காஞ்சிபுரத்தை அடைந்து, பௌத்தர்களை அணுகி, அவர்கள் அநுட்டிக்கும் பௌத்தசமயத்திலே பிரவேசித்து, அச்சமயநூல்களை ஓதி, அவற்றின் பொருள்களை ஆராய்ந்தார். ஆராய்ந்தபொழுது, அச்சமயம் சற்சமயமன்றென்பது அவருக்குத் தெள்ளிதிற்புலப்பட்டது. அதுபோல மற்றைச்சமயநூல்களையும் ஆராய்ந்து, அவைகளும் மெய்யல்லவெனத் தெளிந்து, பரமசிவனது திருவருள் கூடுதலால், அறிவிக்க அறியும் சித்தாகிய ஆன்மாக்களும் அவ்வான்மாக்களினாலே செய்யப்படுஞ்சடமாகிய புண்ணியம் பாவம் என்னுங் கர்மங்களும் அக்கர்மங்களாலே பெறப்படுஞ் சுகம் துக்கம் என்னும் பலங்களும் அப்பலங்களைக் கொடுக்கின்றதானே அறியுஞ் சித்தாகிய பதியும் எனப் பொருள்கள் நான்கு என்றும், அவைகளைப் பூர்வோத்தரவிரோதமின்றி யதார்த்தமாக உணர்த்தும் நூல் சைவசமயநூலே என்றும், அந்நூல் உணர்த்தும் பதி பரமசிவனே என்றும், அறிந்துகொண்டார். எந்தநிலையிலே நின்றாலும் எந்த வேஷத்தை எடுத்தாலும் பரமசிவனுடைய திருவடிகளை மறவாமையே பொருள் என்று கருதி, தாம் எடுத்த பௌத்தவேஷத்தைத் துறவாமல்,பரமசிவனை மிகுந்த அன்பினோடு இடைவிடாது தியானஞ்செய்வாராயினர்.

சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம்,கர்மசாதாக்கியம் என்னும் பஞ்சசாதாக்கியங்களுள், கர்மசாதாக்கியமாகிய சிவலிங்கத்தின் மகிமையை உணர்ந்து, தினந்தோறும் சிவலிங்கதரிசனஞ் செய்துகொண்டே போசனம் பண்ணல்வேண்டும் என்று விரும்பி, சமீபத்தில் ஓர்வெள்ளிடையிலிருக்கின்ற சிவலிங்கத்தைத் தரிசித்து, பேரானந்தம் உள்ளவராகி, தாஞ்செய்யுஞ் செயல்இதுவென அறியாது,அருகிலேகிடந்த ஒருசெங்கல்லைக் கண்டு,அதைப்பதைப்பினுடனே எடுத்து, அச்சிவலிங்கத்தின்மேல் எறிந்தார். சிறுபிள்ளைகள் செய்யும் இகழ்வாகிய செய்கைகளும் தந்தையர்களுக்குப் பிரீதியாமாறுபோல,அந்தச் சாக்கியநாயனருடைய செய்கையும் பரமசிவனுக்குப் பிரீதியாயிற்று. அந்நாயனர் அன்று போய் மற்றைநாள் அந்நியமத்தை முடித்தற்கு அணைந்தபொழுது, முதனாளிலே தாஞ்சிவலிங்கத்தின்மேற் கல்லெறிந்த குறிப்பை நின்று ஆலோசித்து,"நேற்று எனக்குஇவ்வெண்ணம் வந்தது பரமசிவனது திருவருளே" என்று துணிந்து, அதனையே திருத்தொண்டாக நினைந்து, எப்பொழுதும் அப்படியே செய்யக் கருதினர். எல்லாச்செயல்களுஞ் சிவன்செயல் என்றே தெளிந்தமையால், அந்

கியதிலைத் தினந்தோறும் வழுவாமல் அன்பினுடன் செய்ய, அது ஆன்மாக்கடோறும் வியாபித்திருந்து எல்லாவற்றையும் உணருஞ் சிவபெருமானுக்கு மிகச்சிறந்த திருத்தொண்டாகி முடிந்தது. ஒருநாள் அந்நாயனார் திருவருளினாலே மறந்து போசனஞ்செய்யப் புகும்பொழுது, "இன்றைக்கு எம்பெருமானை எறியாமல் மறந்துவிட்டேன்" என்று எழுந்து, அத்தியந்த ஆசையுடன் மிகவிரைந்து புறப்பட்டு, சிவலிங்கத்தை அணைந்து, ஒருகல்லை எடுத்து அதன்மேல் எறிய; பத்திவலையிற்படுவாராகிய பரமசிவன் உமாதேவியாரோடும் இடபாரூடராய் ஆகாயத்திலேதோன்றி அவரைத் தமதுதிருவடியிலே சேர்த்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.

சாக்கியநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சிறப்புலிநாயனார்புராணம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னிநீர் நாட்டுநீடு பொற்பதி புவனத்துள்ளோர்
இன்மையா லிரந்துசென்றார்க் கில்லையென் றுரையீயுந்
தன்மையா ரென்றுநன்மை சார்ந்தவே தியரைச்சண்பை
மன்னனா ரருளிச்செய்த மறைத்திரு வாக்கூராக்கூர். (க)

தூமலர்ச் சோலைதோறுஞ் சுடர்தொடு மாடந்தோறு
மாமழை முழக்கந்தாழ மறையொலி முழக்கமெங்கும்
பூமலி மறுகிலிட்ட புகையகிற் றூபந்தாழ
ஓமநல் வேள்விச்சாலை யாகுதித் தூபமோங்கும். (உ)

ஆலைசூழ் பூகவேலி யத்திரு வாக்கூர்தன்னில்
ஞாலமார் புகழின்மிக்கார் நான்மறைக் குலத்தினுள்ளார்
நீலமார் கண்டத்தெண்டோ ளிருத்தர்தந் திருத்தொண்டேற்ற
சீலராய்ச் சாலுமீகைத் திறத்தினிற் சிறந்தசீரார். (௩)

ஆளுமங் கணருக்கன்ப ரணைந்தபோ தடியிற்றாழ்ந்து
மூளுமா தரவுபொங்க முன்புநின் றினியகூறி
நாளுநல் லமுதமூட்டி நயந்தன வெல்லாநல்கி
நீளுமின் பத்துட்டங்கு நிதிமழை மாரிபோன்றார். (௪)

அஞ்செழுத் தோதியங்கி வேட்டுநல் வேள்வியெல்லா
நஞ்சணி கண்டர்பாத நண்ணிடச் செய்துஞாலத்
தெஞ்சலி லடியார்க்கென்று மிடையறு வன்பால்வள்ளற்
றஞ்செயல் வாய்ப்பவீசர் தண்ணிழற் றங்கினாரே. (ரு)

அறத்தினின் மிக்கமேன்மை யந்தண ராக்கூர்தன்னின்
மறைப்பெரு வள்ளலார்வண் சிறப்புலி யார்தாள்வாழ்த்திச்
சிறப்புடைத் திருச்செங்காட்டங் குடியினிற் செம்மைவாய்த்த
விறற்சிறுத் தொண்டர்செய்த திருத்தொழில் விளம்பலுற்றேன். (சா)

ஆ திருவிருத்தம் - களசுரு.

---

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலே, திருவாக்கூரிலே, பிராமணகுலத்திலே, சிறப்புலிநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்கள் எழுந்தருளிவந்தபொழுது, அவர்களை நமஸ்கரித்து இன்சொற்களைச் சொல்லி, அவர்களைத் திருவமுது செய்வித்து, அவர்களுக்கு வேண்டுந் திரவியங்களெல்லாவற்றையுங் கொடுப்பவர். ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை அன்பினோடு ஜபிப்பவர். பரமசிவனைக்குறித்து யாகங்கள் செய்பவர். அவர் இன்னும் பலசிவபுண்ணியங்களைச் செய்துகொண்டிருந்து, சிவபதம் அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

சிறப்புலிநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறுத்தொண்டநாயனார் புராணம்.

---

உருநாட்டுஞ் செயல்காம னொழியவிழி பொழிசெந்தீ
வருநாட்டத் திருநுதலார் மகிழ்ந்தருளும் பதிவயலிற்
கருநாட்டக் கடைசியர்தங் களிகாட்டுங் காவேரித்
திருநாட்டு வளங்காட்டுஞ் செங்காட்டங் குடியாகும். (க)

நிலவியவத் திருப்பதியி னெடுஞ்சடையார் நீற்றடைவா
லுலகில்வள ருயிர்க்கெல்லா முயர்காவற் றொழில்பூண்டு
மலர்புகழ்மா மாத்திரர்தங் குலம்பெருக வந்துள்ளார்
பலர்புகழுந் திருநாமம் பரஞ்சோதி யாரென்பார். (உ)

ஆயுள்வே தக்கலையு மலகில்வட நூற்கலையுந்
தூயபடைக் கலத்தொழிலுந் துறைநிரம்பப் பயின்றுள்ளார்
பாயுமத குஞ்சரமும் பரியுமுகைக் கும்பண்பு
மேயதொழில் விஞ்சையினு மேதினியின் மேலானார். (௩)

உள்ளநிறை கலைத்துறைக ளொழிவின்றிப் பயின்றவற்றாற்
றெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலிற் செறிவென்றே
கொள்ளுமுணர் வினின்முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாயென்றும் பயின்றுவரும் பண்புடையார். (௪)

ஈசனடி யார்க்கென்று மியல்பான பணிசெய்தே
யாசில்புகழ் மன்னவன்பா லணுக்கரா யவற்காகப்
பூசல்முனைக் களிறுகைத்துப் போய்வென்று பொருமரசர்
தேசங்கள் பலகொண்டு தேர்வேந்தன் பாற்சிறந்தார். (௫)

மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியு நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையு
மின்னனவெண் ணிலகவர்ந்திங் கியலரசன் முன்கொணர்ந்தார். (௬)

கதிர்முடிமன் னனுமிவர்தங் களிற்றுரிமை யாண்மையினை
யதிசயித்துப் புகழ்ந்துரைப்ப வறிந்தவமைச் சர்களுரைப்பார்
மதியணிந்தார் திருத்தொண்டு வாய்த்தவலி யுடைமையினா
லெதிரிவருக் கிவ்வுலகி லில்லையென வெடுத்துரைத்தார். (௭)

தம்பெருமான் றிருத்தொண்ட ரெனக்கேட்ட தார்வேந்த
னும்பர்பிரா னடியாரை யுணராதே கெட்டொழிந்தேன்
வெம்புகொடும் போர்முனையில் விட்டிருந்தே னெனவெருவுற்
றெம்பெருமா னிதுபொறுக்க வேண்டுமென விறைஞ்சினான். (௮)

இறைஞ்சுதலு முன்னிறைஞ்சி யென்னுரிமைத் தொழிற்கடுத்த
திறம்புரிவே னதற்கென்னோ தீங்கென்ன வாங்கவர்க்கு
நிறைந்தநிதிக் குவைகளுட னிபவிருத் திகளளித்தே
யறம்புரிசெங் கோலரச னஞ்சலிசெய் துரைக்கின்றான். (௯)

உம்முடைய நிலைமையினை யறியாமை கொண்டுய்த்தீ
ரெம்முடைய மனக்கருத்துக் கினிதாக விசைந்துமது
மெய்ம்மைபுரி செயல்விளங்க வேண்டியவா றேசரித்துச்
செம்மைநெறித் திருத்தொண்டு செய்யுமென விடைகொடுத்தான். (௧௦)

மன்னவனை விடைகொண்டு தம்பதியின் வந்தடைந்து
பன்னுபுகழ்ப் பரஞ்சோதி யார்தாமும் பனிமதிவாழ்
சென்னியரைக் கணபதீச் சரத்திறைஞ்சித் திருத்தொண்டு
முன்னைநிலை மையில்வழுவா முறையன்பிற் செய்கின்றார். (௧௧)

வேதகா ரணரடியார் வேண்டியமெய்ப் பணிசெய்யத்
தீதில்குடிப் பிறந்ததிரு வெண்காட்டு நங்கையெனுங்
காதன்மனைக் கிழத்தியார் கருத்தொன்ற வரும்பெருமை
நீதிமனை யறம்புரியு நீர்மையினை நிலைநிற்பார். (கஉ)

நறையிதழித் திருமுடியா ரடியாரை நாடோறு
முறைமையினிற் றிருவமுது முன்னூட்டிப் பின்னுண்ணு
நிறையுடைய பெருவிருப்பா னியதியாக் கொள்ளுந்
துறைவழுவா வகையொழுகுந் தூயதொழிற் றலைநின்றார். (கந)

தூயதிரு வமுதுகனி கன்னலறு சுவைக்கறிநெய்
பாய்தயிர் பாலினிய பண்ணியமுண் ணீரமுத
மேயபடி யாலமுது செய்விக்க மிசைந்தடியார்
மாயிருஞா லம்போற்ற வருமிவர்பா னமகிழ்ந்தார். (கச)

சீதமதி யரவினுடன் செஞ்சடைமேற் செறிவித்த
நாதனடி யார்தம்மை நயப்பாட்டு வழிபாட்டான்
மேதகையா ரவர்முன்பு மிகச்சிறிய ராயடைந்தா
ராதலினாற் சிறுத்தொண்ட ரெனநிகழ்ந்தா ரவனியின்மேல். (கரு)

கண்ணுதலார் கணபதீச் சரத்தின்கட் கருத்தமர
வுண்ணிறையன் பிற்பணிசெய் தொழுகுவார் வழுவின்றி
யெண்ணில்பெருஞ் சீரடியா ரிடைவிடா தமுதுசெய
நண்ணியபே ருவகையுட னயந்துறையு நாளின்கண். (கசு)

நீராருஞ் சடைமுடியா ரருளினா னிறைதவத்துப்
பேராள ரவர்தமக்குப் பெருகுதிரு மனையறத்தின்
வேராகி விளங்குதிரு வெண்காட்டு நங்கைபாற்
சீராள தேவரெனுந் திருமைந்த ரவதரித்தார். (கள)

அருமையினிற் றனிப்புதல்வர் பிறந்தபொழு தலங்கரித்த
பெருமையினிற் கிளைகளிப்பப் பெறற்கரிய மணிபெற்று
வருமகிழ்ச்சி தாதையார் மனத்தடங்கா வகைவளரத்
திருமலிநெய் யாடல்விழாச் செங்காட்டங் குடியெடுப்ப. (கஅ)

மங்கலநல் லியமுழக்க மறைமுழக்கம் வானளப்ப
வங்கணர்தஞ் சீரடியார்க் களவிறந்த நிதியளித்துத்
தங்கண்மர பினிலுரிமைச் சடங்குதச தினத்தினிலும்
பொங்குபெரு மகிழ்ச்சியுடன் புரிந்தகாப் பணிபுனைந்தார். (ககூ)

ஆர்வநிறை பெருஞ்சுற்ற மகமலர வளித்தவர்தாம்
பார்பெருகு மகிழ்ச்சியுடன் பருவமுறைப் பாராட்டுச்
சீர்பெருகச் செய்யவளர் திருமகனார் சீரடியிற்
றார்வளர்கிண் கிணியசையத் தளர்நடையின் பதஞ்சார்ந்தார். (உ0)

சுருளுமயிர் நுதற்சுட்டி துணைக்காதின் மணிக்குதம்பை
மருவுதிருக் கண்டநாண் மார்பினிலைம் படைகையிற்
பொருவில்வயி ரச்சரிகள் பொன்னரைஞாண் புனைசதங்கை
தெருவிலொளி விளங்கவளர் திருவிளையாட் டினிலமர்ந்தார். (உக)

வந்துவளர் மூவாண்டின் மயிர்வினைமங் கலஞ்செய்து
தந்தையா ரும்பயந்த தாயாருந் தனிச்சிறுவர்
சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம்
பந்தமற வந்தவனைப் பள்ளியினி லிருத்தினார். (உஉ)

அந்நாளிற் சண்பைநக ராண்டகையா ரெழுந்தருள
முன்னாக வெதிர்கொண்டு கொடுபுகுந்து முன்னூல்சேர்
பொன்மார்பிற் சிறுத்தொண்டர் புகலிகா வலனார்த
நன்னாமச் சேவடிகள் போற்றிசைத்து நலஞ்சிறந்தார். (உங)

சண்பையர்தம் பெருமானுந் தாங்கரிய பெருங்காதற்
பண்புடைய சிறுத்தொண்ட ருடன்பயின்று மற்றவரை
மண்பரவுந் திருப்பதிகத் தினில்வைத்துச் சிறப்பித்து
நண்பருளி யெழுந்தருளத் தாமினிது நயப்புற்றார். (உச)

இத்தன்மை நிகழுநா ளிவர்திருத்தொண் டிருங்கயிலை
யத்தர்திரு வடியிணைக்கீழ்ச் சென்றணைய வவருடைய
மெய்த்தன்மை யன்புநுகர்ந் தருளுதற்கு விடையவர்தாஞ்
சித்தமகிழ் வயிரவராய்த் திருமலையின் றணைகின்றார். (உரு)

மடல்கொண்ட மலரிதழி நெடுஞ்சடையை வனப்பெய்தக்
கடன்மண்டி முகந்தெழுந்த காளமேகச் சுருள்போற்
றொடர்பங்கி சுருண்டிருண்டு தூறிநெறித் தசைந்துசெறி
படர்துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமா கப்பரப்பி. (உசு)

அஞ்சனமஞ் சனஞ்செய்த தனையவணி கிளர்பம்பை
மஞ்சினிடை யிடையெழுந்த வானமீன் பரப்பென்னப்
புஞ்சநிரை வண்டுதேன் சுரும்புபுடை படர்ந்தார்ப்பத்
துஞ்சினுனித் தனிப்பரப்புந் தும்பைநறு மலர்தோன்ற. (உஎ)

அருகுதிரு முடிச்செருகு மந்தியிளம் பிறைதன்னைப்
பெருகுசிறு மதியாக்கிப் பெயர்த்துஞ்சாத் தியதென்ன
விரிசுடர்ச்செம் பவளவொளி வெயில்விரிக்கும் விளங்குசுடர்த்
திருநுதன்மேற் றிருநீற்றுத் தனிப்பொட்டுந் திகழ்ந்திலங்க. (உஅ)

வெவ்வருக்கன் மண்டலமும் விளங்குமதி மண்டலமு
மவ்வனற்செய் மண்டலமு முடனணைந்த தெனவழகை
வவ்வுதிருக் காதின்மணிக் குழைச்சங்கு வளைத்ததனுட்
செவ்வரத்த மலர்செறித்த திருத்தோடு புடைசிறக்க. (உகூ)

களங்கொள்விட மறைத்தருளக் கடலமுதக் குமிழிநிரைத்
துளங்கொளிவெண் டிரட்கோவைத் தூயவட மணிந்ததென
வுளங்கொள்பவர் கரைந்துடலு முயிருமுரு கப்பெருக
விளங்குதிருக் கழுத்தினிடை வெண்பளிங்கின் வடந்திகழ. (௩0)

செம்பரிதி கடலளித்த செக்கரொளி யிளையந்தி
பம்புமிருள் செறிபொழுது படர்ந்தணைந்து சூழ்வதெனத்
தம்பழைய கரியுரிவை கொண்டுசமைத் துச்சாற்று
மம்பவளத் திருமேனிக் கஞ்சுகத்தி னணிவிளங்க. (௩௧)

மிக்கெழுமன் பர்களன்பு திருமேனி விளைந்ததென
வக்குமணி யாற்சன்ன வீரமுமா ரமும்வடமுங்
கைக்கணிகொள் வளைச்சரியு மரைக்கடிசூத் திரச்சரியுந்
தக்கதிருக் காற்சரியுஞ் சாத்தியவொண் சுடர்தயங்க. (௩௨)

பொருவிறிருத் தொண்டர்க்குப் புவிமேல்வந் தருள்புரியும்
பெருகருளின் றிறங்கண்டு பிரானருளே பேணுவீர்
வருமன்பின் வழிசிறப்பீ ரெனமறைபூண் டறைவனபோற்
றிருவடிமேற் றிருச்சிலம்பு திசைமுழுதுஞ் செலவொலிப்ப. (௩௩)

அயன்கபா லந்தரித்த விடத்திருக்கை யாலணைத்த
வயங்கொளிமூ விலைச்சூல மணித்திருத்தோண் மிசைப்பொலியத்
தயங்குசுடர் வலத்திருக்கைத் தமருகத்தி னொலிதழைப்பப்
பயன்றவத்தாற் பெறும்புவியும் பாததா மரைசூட. (௩௪)

அருள்பொழியுந் திருமுகத்தி னணிமுறுவ னிலவெறிப்ப
மருள்பொழியும் மலஞ்சிதைக்கும் வடிச்சூலம் வெயிலெறிப்பப்
பொருள்பொழியும் பெருகன்பு தழைத்தோங்கிப் புவியேத்தத்
தெருள்பொழிவண் டமிழ்நாட்டுச் செங்காட்டங் குடிசேர்ந்தார். (௩௫)

தண்டாத தொருவேட்கைப் பசியுடையார் தமைப்போலக்
கண்டாரைச் சிறுத்தொண்டர் மனைவினவிக் கடிதணைந்து
தொண்டனார்க் கெந்நாளுஞ் சோறளிக்குந் திருத்தொண்டர்
வண்டாருந் தாரினார் மனைக்குள்ளா ரோவென்ன. (௩௬)

வந்தணைந்து வினவுவார் மாதவரே யாமென்று
சந்தனமாந் தையலார் முன்வந்து தாள்வணங்கி
யந்தமில்சீ ரடியாரைத் தேடியவர் புறத்தணைந்தா
ரெந்தமையா ளுடையவரோ யகத்துளெழுந் தருளுமென. (௩௭)

மடவரலை முகநோக்கி மாதரார் தாமிருந்த
விடவகையிற் றனிபுகுதோ மென்றருள வதுகேட்டு
விடவகல்வார் போலிருந்தா ரெனவினவி விரைந்துமனைக்
கடனுடைய திருவெண்காட் டம்மைகடைத் தலையெய்தி. (௩௮)

அம்பலவ ரடியாரை யமுதுசெய்விப் பாரிற்றைக்
கெம்பெருமான் யாவரையுங் கண்டிலர்தே டிப்போனர்
வம்பெனகீ ரெழுந்தருளி வருந்திருவே டங்கண்டாந்
நம்பெரிய பேறென்றே மிகமகிழ்வ ரினித்தாழார். (நகூ)

இப்பொழுதே வந்தணைவ ரெழுந்தருளி யிருமென்ன
வொப்பின்மனை யறம்புரப்பீ ருத்தரா பதியுள்ளோஞ்
செப்பருஞ்சீர்ச் சிறுத்தொண்டர் தமைக்காணச் சேர்ந்தனம்யா
மெப்பரிசு மவரொழிய விங்கிரோ மென்றருளி. (ச0)

கண்ணுதலிற் காட்டாதார் கணபதீச் சரத்தின்கண்
வண்ணமல ராத்தியின்கீ ழிருக்கின்றோ மற்றவர்தா
நண்ணினு மிருந்த பரிசுரைப்பீ ரென்றருளி
யண்ணலார் திருவாத்தி யணைந்தருளி யமர்ந்திருந்தார். (சக)

வேறு.

நீரார்சடையா னடியாரை நேடியெங்குங் காணது
சீரார்தவத்துச் சிறுத்தொண்டர் மீண்டுஞ்செல்வ மனையெய்தி
யாராவின்ப மனைவியார்க் கியம்பியழிவெய் திடவவரும்
பாராதரிக்குந் திருவேடத் தொருவர்வந்த படிபகர்ந்தார். (சஉ)

அடியேனுய்ந்தே னெங்குற்றா ருரையாயென்ன வவர்மொழிவார்
வடிசேர்கபால சூலத்தர் வடதேசத்தோ மென்றூர்வண்
டுடிசேர்கரத்துப் பயிரவர்யாஞ் சொல்லவிங்கு மிராதேபோய்க்
கடிசேர்திருவாத் தியினிழற்கீ ழிருந்தார்கணப தீச்சரத்து. (சந)

என்றுமனைவி யாரியம்ப வெழுந்தவிருப்பால் விரைந்தெய்திச்
சென்றுகண்டு திருப்பாதம் பணிந்துநின்றார் சிறுத்தொண்டர்
நின்றதொண்டர் தமைநோக்கி நீரோபெரிய சிறுத்தொண்ட
ரென்றுதிருவாய் மலர்ந்தருள விறைவர்தம்மைத் தொழுதுரைப்பார். ()

பூதியணிசா தனத்தவர்முன் போற்றப்போதே னாயிடினு
நாதனடியார் கருணையினா லருளிச்செய்வர் நானென்று
கோதிலன்பர் தமையமுது செய்விப்பதற்குக் குலப்பதியிற்
காதலாலே தேடியுமுன் காணேன்றவத்தா னுமைக்கண்டேன். (சரு)

அடியேன்மனையி லெழுந்தருளி யமுதுசெய்ய வேண்டுமென
நெடியோனறியா வடியார்தா நிகழுந்தவத்தி ருமைக்காணும்
படியால்வந்தோ முத்தரா பதியோமெம்மைப் பரிந்தூட்ட
முடியாதுமக்குச் செய்கையரி தொண்ணாதென்று மொழிந்தருள. (சசா)

எண்ணாதடியேன் மொழியேனீ ரமுதுசெய்யு மியல்பதனைக்
கண்ணார்வேட நிறைதவத்தீ ரருளிச்செய்யுங் கடிதமைக்கத்
தண்ணாரிதழி முடியார்த மடியார்தலைப்பட் டாற்றேட்
டொண்ணாதனவு முளவாகு மருமையில்லை யெனவுரைத்தார். (சஎ)

அரியதில்லை யெனக்கேட்ட பொழுதினழகு பொழிகின்ற
பெரியபயிர வக்கோலப் பெருமானருளிச் செய்வாரியாம்
பரியுந்தொண்டர் மூவிருது கழித்தாற்பசுவீழ்த் திடவுண்ப
துரியநாளு மதற்கின்று ஆட்டவரிதா முமக்கென்றார். (௪௮)

சாலநன்று முங்கிளையு முடையேன்றாழ்வி ங்கெனக்கில்லை
யாலமுண்டா ரன்பருமக் கமுதாம்பசுத்தா னின்னதென
வேலவருளிச் செயப்பெற்றால் யான்போயமுது கடிதமைத்துக்
காலந்தப்பா மேவருவே னென்றுமொழிந்து கைதொழுதார். (௪௯)

பண்புமிக்க சிறுத்தொண்டர் பரிவுகண்டு பயிரவரு
நண்புமிக்கீர் நாமுண்ணப் படுக்கும்பசுவு நரப்பசுவா
முண்பதஞ்சு பிராயத்து ளுறுப்பின்மறுவின் றேலின்னம்
புண்செய்நோவில் வேலெறிந்தாற் போலும்புகல்வ தொன்றென்றார். ()

யாதுமரிய தில்லையினி யீண்டவருளிச் செய்யுமென
நாதன்றானு மொருகுடிக்கு நல்லசிறுவ னொருமகனைத்
தாதையரியத் தாய்பிடிக்கும் பொழுதிற்றம்மின் மனமுவந்தே
யேதமின்றி யமைத்தகறி யாமிட்டுண்ப தெனமொழிந்தார். (௫௧)

அதுவுமுனிவர் மொழிந்தருளக் கேட்டதொண்ட ரடியேனுக்
கிதுவுமரிதன் றெம்பெருமா னமுதுசெய்யப் பெறிலென்று
கதுமென்விரைவி லவரிசையப் பெற்றுக்களிப்பாற் காதலொடு
மதுமென்கமல மலர்ப்பாதம் பணிந்துமனையில் வந்தணைந்தார். (௫௨)

அன்பின்மிக்க பெருங்கற்பி னணங்குதிருவெண் காட்டம்மை
முன்புவந்து சிறுத்தொண்டர் வரவுநோக்கி முன்னின்றே
யின்பம்பெருக மலர்ந்தமுகங் கண்டுபாத மிசையிறைஞ்சிப்
பின்புகணவர் முகநோக்கிப் பெருகுந்தவத்தோர் செயல்வினவ. (௫௩)

வள்ளலாரு மனையாரை நோக்கிவந்த மாதவர்தா
முள்ளமகிழ வமுதுசெய்ய விசைந்தார்குடிக்கோர் சிறுவனாய்க்
கொள்ளும்பிராய மைந்துளனா யுறுப்பிற்குறைபா டின்றித்தாய்
பிள்ளைபிடிக்க வுவந்துபிதா வரிந்துசமைக்கப் பெறிலென்றார். (௫௪)

அரியகற்பின் மனைவியா ரவரைநோக்கி யுரைசெய்வார்
பெரியபயிர வத்தொண்ட ரமுதுசெய்யப் பெறுமதற்கிங்
குரியவகையா லமுதமைப்போ மொருவனாகி யொருகுடிக்கு
வருமச்சிறுவன் றனைப்பெறுமா றெங்ஙனென்று வணங்குதலும். (௫௫)

மனைவியார்தம் முகநோக்கி மற்றித்திறத்து மைந்தர்தமை
நினைவுநிரம்ப நிதிகொடுத்தாற் றருவாருளரோ நேர்நின்று
தனையன்றன்னைத் தந்தைதா யரிவாரில்லைத் தாழாமே
யெனையிங்குய்ய நீபயந்தான் றன்னையழைப்போ மியாமென்றார். (௫௬)

என்றுகணவர் கூறுதலு மதனுக்கிசைந்தெம் பிரான்றொண்ட
ரின்றுதாழா தமுதுசெய்யப் பெற்றிங்கவர்த மலர்ந்தமுக
நன்றுகாண்பதெனநயந்து நம்மைக்காக்க வருமணியைச்
சென்றுபள்ளி யினிற்கொண்டு வாருமென்றார் திருவனையார். (௫௭)

காதன்மனையார் தாங்கூறக் கணவனாருங் காதலனை
யேதமகலப் பெற்றபே றெல்லாமெய்தி னார்போல
நாதர்தமக்கங் கமுதாக்க நறுமென்குதலை மொழிப்புதல்வ
னோதவணைந்த பள்ளியினி லுடன்கொண் டெய்தக் கடிதகன்றார். (௫௮)

பள்ளியினிற்சென் றெய்துதலும் பாதசதங்கை மணியொலிப்பப்
பிள்ளையோடி வந்தெதிரே தழுவவெடுத்துப் பியலின்மேற்
கொள்ளவணைத்துக் கொண்டுமீண் டில்லம்புகுதக் குலமாதர்
வள்ளலார்த முன்சென்று மைந்தன்றன்னை யெதிர்வாங்கி. (௫௯)

குஞ்சிதிருத்தி முகந்துடைத்துக் கொட்டையரைநாண் டுகணீக்கி
மஞ்சளழிந்த வதற்கிரங்கி மையுங்கண்ணின் மருங்கொதுக்கிப்
பஞ்சியஞ்சு மெல்லடியார் பரிந்துதிருமஞ் சனமாட்டி
யெஞ்சலில்லாக் கோலஞ்செய் தெடுத்துக்கணவர் கைக்கொடுத்தார். ()

அச்சமெய்திக் கறியமுதா மென்னுமதனா லரும்புதல்வ
னுச்சிமோவார் மார்பின்க ணணைத்தேமுத்தந் தாமுண்ணார்
பொச்சமில்லாத் திருத்தொண்டர் புனிதர்தமக்குக் கறியமைக்க
மெச்சுமனத்தா லடுக்களையின் மேவார்வேறு கொண்டணைவார். (௬௧)

ஒன்றுமனத்தா ரிருவர்களு முலகரறியா ரெனமறைவிற்
சென்றுபுக்குப் பிள்ளைதனைப் பெற்றதாயார் செழுங்கலன்க
ணன்றுகழுவிக் கொடுசெல்ல நல்லமகனை யெடுத்துலகை
வென்றதாதை யார்தலையைப் பிடிக்கவிரைந்து மெய்த்தாயர். (௬௨)

இனியமழலைக் கிண்கிணிக்கா லிரண்டுமடியின் புடையிடுக்கிக்
கனிவாய்மைந்தன் கையிரண்டுங் கையாற்பிடிக்கக் காதலனு
நனிநீடுவகை யுறுகின்றா ரென்றுமகிழ்ந்து நகைசெய்யத்
தனிமாமகனைத் தாதையார் கருவிகொண்டு தலையரிவார். (௬௩)

பொருவில் பெருமைப்புத்திரன்மெய்த் தன்மையளித்தா னெனப்பொ [லிந்து
மருவுமகிழ்ச்சி யெய்தவவர் மனைவியாருங் கணவனா
ரருமையுயிரை யெனக்களித்தா னென்றுமிகவு மகமலர
விருவர்மனமும் பேருவகை யெய்தியரிய வினைசெய்தார். (௬௪)

அறுத்ததலையி னிறைச்சிதிரு வமுதுக்காகா தெனக்கழித்து
மறைத்துநீக்கச் சந்தனத்தார் கையிற்கொடுத்து மற்றையுறுப்
பிறைச்சியெல்லாங் கொத்தியறுத் தெலும்புமூளை திறந்திட்டுக்
கறிக்குவேண்டும் பலகாய மரைத்துக்கூட்டிக் கடிதமைப்பார். (௬௫)

மட்டுவிரியுங் குழன்மடவா ரடுப்பிலேற்றி மனமகிழ்ந்தே
யட்டகறியின் பதமறிந்தங் கிழிச்சிச்சோறே டடுங்கலத்துப்
பட்டநறையாற் றுளித்துப் பலவுமற்றுங் கறிசமைத்துச்
சட்டவிரைந்து போனகமுஞ் சமைத்துக்கணவர் தமக்குரைத்தார்.(சுசு)

உடையநாத ரமுதுசெய வுரைத்தபடியே யமைத்தவதற்
கடையுமின்ப முன்னையினு மார்வம்பெருகிக் களிகூர
விடையில்வருவார் தொண்டர்தாம் விரைந்துசென்று மென்மலரின்
புடைவண்டறையு மாத்தியின்கீ ழிருந்தபுனிதர் முன்சென்றார். (சுஎ)

அண்ணறிருமுன் பணிந்திறைஞ்சி யன்பர்மொழிவா ரடியேன்பா
னண்ணிநீரிங் கமுதுசெய வேண்டுமென்று நான்பரிவு
பண்ணினேனுய்ப் பசித்தருளத் தாழ்த்ததெனினும் பணிசமைத்தே
னெண்ணம்வாய்ப்ப வெழுந்தருள வேண்டுமென்றங் கெடுத்துரைத்தார்

இறையுந்தாழா தெழுந்தருளி யமுதுசெய்யு மென்றிறைஞ்சக்
கறையுங்கண்டத் தினின்மறைத்துக் கண்ணுநுதலிற் காட்டாதார்
நிறையும்பெருமைச் சிறுத்தொண்டர் போதுமென்ன நிதியிரண்டுங்
குறைவனொருவன் பெற்றுவந்தாற் போலக்கொண்டு மனைபுகுந்தார். ()

வந்துபுகுந்து திருமனையின் மனைவியார்தா மாதவரை
முந்தவெதிர்சென் றடிவணங்கி முழுதுமழகு செய்தமனைச்
சந்தமலர்மா லைகள்முத்தின் றாமநாற்றித் தவிசடுத்த
கந்தமலரா சனங்காட்டிக் கமழ்நீர்க்கரக மெடுத்தேந்த. (எ0)

தூயநீராற் சிறுத்தொண்டர் சோதியார்தங் கழல்விளக்கி
யாயபுனிதப் புனறங்க டலைமேலாரத் தெளித்தின்ப
மேயவில்ல மெம்மருங்கும் வீசிவிரைமென் மலர்சாந்த
மேயுந்தூப தீபங்கண் முதற்பூசனைசெய் திறைஞ்சுவார். (எக)

பனிவெண்டிங்கட் சடைவிரித்த பயில்பூங்குஞ்சிப் பயிரவராம்
புனிதர்தம்மைப் போனகமுங் கறியும்படைக்கும் படிபொற்பின்
வனிதையாருங் கணவருமுன் வணங்கிக்கேட்ப மற்றவர்தா
மினியவண்ண முடன்கறிக ளெல்லாமொக்கப் படைக்கவென. (எஉ)

பரிசுவிளங்கப் பரிகலமுந் திருத்திப்பாவா டையிலேற்றித்
தெரியும்வண்ணஞ் செஞ்சாலிச் செழும்போனகமுங் கறியமுதும்
வரிசையினின்முன் படைத்தெடுத்து மன்னும்பரிக லக்கான்மேல்
விரிவெண்டுகிலின் மிசைவைக்க விமலர்பார்த்தங் கருள்செய்வார். (எங)

சொன்னமுறையிற் படுத்தபசுத் தொடர்ந்தவுறுப்பெல் லாங்கொண்டு
மன்னுசுவையிற் கறியாக்கி மாணவமைத்தீ ரேயென்ன
வன்னமனையார் தலையிறைச்சி யமுதுக்காகா தெனக்கழித்தே
னென்னவதுவுங் கூடாநா முண்பதென்று ரிடர்தீர்ப்பார். (எச)

சிந்தைகலங்கிச் சிறுத்தொண்டர் மனையாரோடுந் திகைத்தயரச்
சந்தனத்தா ரெனுந்தாதி யார்தாமந்தத் தலையிறைச்சி
வந்தகொண்ட ரமுதுசெயும் பொழுதுநினைக்க வருமென்றே
முந்தவமைத்தேன் கறியமுதென் றெடுத்துக்கொடுக்க முகமலர்ந்தார். ()

வாங்கிமகிழ்ந்து படைத்ததற்பின் வணங்குஞ்சிறுத்தொண் டரைநோக்கி
யீங்குநமக்குத் தனியுண்ண வொண்ணாதீச னடியாரிப்
பாங்குநின்றார் தமைக்கொணர்வீ ரென்றுபரமர் பணித்தருள
வேங்கிக்கெட்டே னமுதுசெய்ய விடையூறிதுவோ வெனநினைவார் (எசு)

அகத்தின்புறத்துப் போயருளா லெங்குங்காணா ரழிந்தணைந்து
முகத்தில்வாட்ட மிகப்பெருகப் பணிந்துமுதல்வர்க் குரைசெய்வா
ரிகத்தும்பரத்து மினியாரைக் காணேன்யானுந் திருநீறு
சகத்திலிடுவார் தமைக்கண்டே யிடுவேனென்று தாழ்ந்திறைஞ்ச. (எஎ)

உம்மைப்போல நீறிட்டா ருளரோவுண்பீர் நீரென்று
செம்மைக்கற்பிற் றிருவெண்காட் டம்மைதம்மைக் கலந்திருத்தி
வெம்மையிறைச்சிச் சோறுதனின் மீட்டுப்படையு மெனப்படைத்தார்
தம்மையூட்ட வேண்டியவ ருண்ணப்புகலுந் தடுத்தருளி. (எஅ)

ஆறுதிங்க ளொழிந்துண்போ முண்ணுமளவுந் தரியாது
சோறுநாளு முண்பீர்முன் னுண்பதென்னம் முடன்றுய்ப்ப
மாறின்மகவு பெற்றீரேன் மைந்தன்றன்னை யழையுமென
வீறுமுதலு மில்லாதார்க் கிப்போதுதவா னவனென்றார். (எகூ)

நாமிங்குண்ப தவன்வந்தா லுடியழையு மென்னம்பர்
தாமங்கருளிச் செயத்தரியார் தலைவரமுது செய்தருள
யாமிங்கென்செய் தாலாகு மென்பார்வினாவுற் றெழுந்தருளாற்
பூமென்குழலார் தம்மோடும் புறம்போயழைக்கப் புகும்பொழுது. (அ0)

வையநிகழுஞ் சிறுத்தொண்டர் மைந்தாவருவா யெனவழைத்தார்
தையலாருந் தலைவர்பணி தலைநிற்பாராய்த் தாமழைப்பார்
செய்யமணியே சீராளா வாராய்சிவனா ரடியார்யா
முய்யும்வகையா லுடனுண்ண வழைக்கின்றாரென் றோலமிட. (அக)

பரமரருளாற் பள்ளியினின் றோடிவருவான் போல்வந்த
தரமில்வனப்பிற் றனிப்புதல்வன் றன்னையெடுத்துத் தழுவித்தங்
கரமுன்னணைத்துக் கணவனார் கையிற்கொடுப்பக் களிகூர்ந்தார் [ல்
புரமுன்றெரித்தார் திருத்தொண்டருண்ணப்பெற்றே மெனும்பொலிவா

வந்தமகனைக் கடிதிற்கொண் டமுதுசெய்விப் பான்வந்தார்
முந்தவேயப் பயிரவரா முதல்வரங்கண் மறைந்தருளச்
சிந்தைகலங்கிக் காணாது திகைத்தார்வீழ்ந்தார் தெருமந்தார்
வெந்தவிறைச்சிக் கறியமுதுங் கலத்திற்காணார் வெருவுற்றார். (அ௩)

செய்யமேனிக் கருங்குஞ்சிச் செழுங்கஞ்சுகத்துப் பயிரவர்யா
முய்யவமுது செய்யாதே யொளித்ததெங்கே யெனத்தேடி
மையல்கொண்டு புறத்தணைய மறைந்தவவர்தா மலைபயந்த
தையலோடுஞ் சரவணத்துத் தநயரோடுந் தாமணைவார். (அ௪)

தனிவெள்விடைமே னெடுவிசும்பிற் றலைவர்பூத கணநாதர்
முனிவரமரர் விஞ்சையர்கண் முதலாயுள்ளோர் போற்றிசைப்ப
இனியகறியுந் திருவமுது மமைத்தார்காண வெழுந்தருளிப்
பனிவெண்டிங்கண் முடிதுளங்கப் பரந்தகருணை நோக்களித்தார். (அ௫)

அன்பின்வென்ற தொண்டரவர்க் கமைத்தமனைவி யார்மைந்தர்
முன்புதோன்றும் பெருவாழ்வை முழுதுங்கண்டு பரவசமா
யென்புமனமுங் கரைந்துருக விழுந்தாரெழுந்தா ரேத்தினர்
பின்புபரமர் தகுதியினாற் பெரியோரவருக் கருள்புரிவார் (அ௬)

கொன்றைவேணி யார்தாமும் பாகங்கொண்ட குலக்கொடியும்
வென்றிநெடுவேள் மைந்தருந்தம் விரைப்பூங்கமலச் சேவடிக்கீழ்
நின்றதொண்டர் மனைவியார் நீடுமகனார் தாதியா
ரென்றும்பிரியா தேயிறைஞ்சி யிருக்கவுடன்கொண் டேகினர். (அ௭)

ஆறுமுடிமே லணிந்தவருக் கடியாரொன்று கறியமுதா
யூறிலாத தனிப்புதல்வன் றன்னையரிந்தங் கமுதூட்டப்
பேறுபெற்றார் சேவடிக டலைமேற்கொண்டு பிறவுயிர்கள்
வேறுகழறித் தறிவார்தம் பெருமைதொழுது விளம்புவாம். (அஅ)

ஆ திருவிருத்தம் - ௧அ௫௧.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, திருச்செங்காட்டங்குடியிலே, மகாமாத்திரர் குலத்திலே, பரஞ்சோதியாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஆயுள்வேதங்களிலும் படைக்கலத் தொழில்களிலும் குதிரையேற்றம் யானையேற்றங்களிலும் மிகச்சிறந்தவர். வேதமுதலிய நூல்களை மெய்ப்பொருளை அறிதல்வேண்டுமென்னும் அவாவினோடு திருவருளை முன்னிட்டு ஓதியுணர்ந்தமையால், பரமசிவனே மெய்க்கடவுள் என்றும், அவருடைய திருவடிகளை அடைதலே முத்திநெறியென்றுந் தெளிந்து அவருடைய திருவடிகளை அகோராத்திரம் இடைவிடாது அன்பினோடு தியானிப்பவராயினர். சிவனடியார்களுக்கு எக்காலமுந் திருத்தொண்டுசெய்பவர்.

அவர் அரசனிடத்திலே அணுக்கராகி, அவன்பொருட்டு யானைசெலுத்திக்கொண்டு சென்று, அவனோடு மாறுபட்ட பலவரசர்களைவென்று, அவர்கள் தேசங்களைக் கைப்பற்றி, அவனால் நன்கு மதிக்கப்பட்டவர். ஒருமுறை உத்தரதேசத்திலே வாதாவியென்னும் நகரத்திற்சென்று அதனை வென்று, பலவகையிரத்தினங்களும் நிதிக்குவைகளும் யானைக்கூட்டங்களும் குதிரைக்கூட்டங்களும் அரசனுக்கு முன் கொண்டுவந்தார். அது கண்டு, அரசன் அவருடைய யானையேற்றத்தின் வலிமையை அதிசயித்துப் புகழ்ந்துபேச; அவரை அறிந்த மந்திரிகள் அரசனைநோக்கி, "மஹாராஜாவே, இவர் பரமசிவனுக்குத் திருத்தொண்டு செய்கையால் இவ்வுலகத்திலே இவருக்கு எதிராவார் ஒருவருமில்லை" என்றார்கள். அரசன் அதைக் கேட்டு, அஞ்சி நடுநடுங்கி, இரண்டுகண்களினின்றுஞ் சோகபாஷ்பஞ்சொரிய, "இவர் நமது கடவுளாகிய பரமசிவனுடைய திருத்தொண்டர் என்பதை உணராது, கொடியபோர்முனையிலே விட்டிருந்தேன், ஐயையோ; இது எவ்வளவு கொடியபாவம்" என்று சொல்லி, பின்புபரஞ்சோதியாரை நோக்கி, "சுவாமீ, இக்குற்றத்தைப் பொறுத்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்து நமஸ்கரித்தான். பரஞ்சோதியார் அரசன் தம்மை நமஸ்கரித்தற்கு முன் தாம் அவனை நமஸ்கரித்து, "மஹாராஜாவே நான், எனது உரிமைத்தொழிற்கு அடுத்த திறத்தைச்செய்வேன். அதனாலே என்ன தீங்கு" என்றார். அரசன் அவருக்கு நிறைந்த நிதிக்குவைகளையும் விருத்திகளையுங்கொடுத்து, "நீர் உம்முடைய நிலைமையை நான் அறியாவண்ணம் நடத்திக்கொண்டு வந்தீர். இனி என் மனக்கருத்துக்கு இசைந்து, எனக்குப் பணிசெய்தலை ஒழிந்து, நீர் விரும்பியவாறேசிவபெருமானுக்கும் சிவனடியார்களுக்கும் வெளிப்படத் திருத்தொண்டுசெய்யும்" என்று விடை கொடுத்தான். பரஞ்சோதியார் விடைபெற்றுக்கொண்டு, தம்முடைய திருப்பதியிற்சென்று, கணபதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற கடவுளை வணங்கி, அவருக்குத் திருத்தொண்டுகளைவழுவாது செய்வாராயினர். திருவெண்காட்டு நங்கையாரென்னும் மங்கையாரோடு கூடி, இல்லறத்தில் வாழ்ந்திருந்து, நாடோறும் முன்னே சிவனடியார்களைத் திருவமுது செய்வித்து, பின் தாம் உண்பார். சிவனடியார்களை மிகுந்த அன்பினோடு வழிபட்டு, அவர்கள் திருமுன்பே மிகச்சிறியராம் ஒழுகுகின்றமையால், அவருக்குச் சிறுத்தொண்டரென்னும் பெயர் கொடுக்கப்பட்டது. கணபதீச்சுரருடைய திருவருளினாலே அவருக்குத் திருவெண்காட்டு நங்கையாரிடத்திலே, சீாளதேவரென்னும் புத்திரர் அவதரித்தார். அப்பிள்ளைக்கு ஐந்துவயசிலே வித்தியாரம்பஞ்செய்வித்தார். அந்நாளிலே அத்திருப்பதிக்கு எழுந்தருளி வந்ததிருஞானசம்பந்தப் பிள்ளையாரை எதிர்கொண்டு அழைத்து, அவரை வணங்கித் துதித்து, அவராலே திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடியருளப்பட்டார்.

சிவபெருமான் சிறுத்தொண்டநாயனாருடைய மெய்யன்பை நுகர்ந்தருளுதற்குத் திருவுளங்கொண்டு, உட்சமயங்களாறனுள் ஒன்றாகிய வைரவத்துக்கு உரிய திருவேடங்கொண்டு, திருக்கைலாசத்தினின்றும் நீங்கி, திருச்செங்காட்டங்குடியை அடைந்து, சிறுத்தொண்டநாயனாருடைய வீட்டுவாயிலிற் சென்று, "சிறுத்தொண்டர் வீட்டில் இருக்கின்றாரோ" என்று வினவ; தாதியாராகிய சந்தனநங்கையார் முன் வந்து வணங்கி, "சுவாமி,அவர் சிவனடியார்களைத் தேடிப் புறத்தே போய்விட்டார். தேவரீர் உள்ளே எழுந்தருளும்" என்றார். அதற்கு வைரவர் "பெண்கள் இருக்கும் இடத்தில் நாம் தனியே புகோம்" என்று அருளிச்செய்ய; திருவெண்காட்டு நங்கையார் அதைக் கேட்டு, "இவ்வடியவர் போய்விடுவார்போலும்" என்று பயந்து, விரைந்து வந்து, "சுவாமி, அடியேனுடைய நாயகர் எப்போதும் சிவனடியாரைத் திருவமுது செய்விப்பவர். இன்றைக்கு ஒருவரையுங் காணாமையால் தேடிப்போயினார். தேவரீருடைய திருவேடத்தைக் கண்டாராயின் மிகமகிழ்வர். இனித்தாழ்க்கார் இப்பொழுதே வந்து விடுவார். எழுந்தருளியிரும்" என்று விண்ணப்பஞ் செய்தார். வைரவர் "நாம் உத்தரதேசத்தி லுள்ளேம். சிறுத்தொண்டரைக் காண வந்தேம். எப்படியும் அவர் இல்லாதபோது நாம் இங்கே இரேம். கணபதீச்சரத்தில் உள்ள திருவாத்தி மரத்தின்கீழ் இருக்கின்றேம். அவர் வந்தமாத்திரத்தே அவருக்குத் தெரிவியுங்கள்" என்று சொல்லி, திருவாத்தியை அணைந்து, அதன்கீழ் இருந்தருளினார்.

சிறுத்தொண்டநாயனார் சிவனடியார்களைத் தேடிஎங்குங்காணாது, வீட்டுக்குத் திரும்பி வந்து, மனைவியாருக்குச்சொல்லித் துக்கித்தார். மனைவியார் "உத்தரதேசவாசியாகிய ஒரு வைரவர் இங்கு வந்து,நாங்கள் இங்கே எழுந்தருளியிருக்கும்படி சொல்ல, அதுகேளாது கணபதீச்சரத்தில் உள்ள திருவாத்தியின்கீழே போய் இருக்கின்றனர்" என்றார்.உடனே சிறுத்தொண்டநாயனார் மிகுந்த விருப்பத்தினோடு விரைந்து சென்று, அவரைக் கண்டு வணங்கிநிற்க; அவர் "பெரியசிறுத்தொண்டர் நீரோ" என்று திருவாய்மலர்ந்தருளினார். சிறுத்தொண்டநாயனார் அவரை வணங்கி, "சுவாமி, சிவனடியார்கள். தங்கள் கருணைமேலீட்டினாலே அடியேனையே அப்படி அருளிச்செய்வர்கள். அது நிற்க. இன்றைக்குத் திருவமுதுசெய்வித்தற்குச் சிவனடியார்களைத் தேடியுங்கண்டிலேன். இப்போது அடியேன் செய்த புண்ணியத்தினாலே தேவரீரைக் கண்டேன். தேவரீர் அடியேன் வீட்டுக்கு எழுந்தருளித் திருவமுதுசெய்யவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்தார். வைரவர் "அன்பரே, நாம் உத்தரதேசத்தில் உள்ளேம். உம்மைக் காண வந்தோம். நம்மை அமுதுசெய்வித்தல் உம்மால் முடியாது. அது மிக அருமை" என்றார். சிறுத்தொண்டநாயனார் "தேவரீர் திருவமுதுசெய்தருளும் இயல்பை அருளிச்செய்யும் சீக்கிரம் பாகம் பண்ணுவிப்பேன். சிவனடியார்கள் தலைப்பட்டால் தே

தெற்கு அரியனவும் எளியனவாம்" என்று விண்ணப்பஞ்செய்ய; வைரவர் "நாம் ஆறுமாசத்துக்கு ஒருமுறை பசுவைக் கொன்று உண்போம். அதற்கு உரிய நாளும் இந்நாளேயாம். அப்படியூட்டுதல் உம்மாலியலாது என்றார். சிறுத்தொண்டநாயனார் "மிகநன்று. அடியேன் அநேகபசுக்களையுடையேன். தேவரீருக்குப் பிரீதியாகிய பசு இன்னது என்றருளிச்செய்வீராகில், அடியேன் விரைந்து சென்று பாகம்பண்ணுவித்துக் காலந்தாழ்க்காமல் வருவேன்" என்று சொல்ல; வைரவர் "நாம்உண்பது நரபசு. அது ஐந்து வயசினையுடையதாயும், அவயவப்பழுதில்லாததாயும், ஒருகுடிக்குத் தான் ஒன்றேயாயும் இருக்கவேண்டும். அவ்வியல்புடைய சிறுவனை மனமகிழ்ச்சியோடு தாய் பிடிக்கத் தந்தை அரிதல்வேண்டும். இப்படிச் சமைக்கப்பட்ட கறியே நாம் இட்டு உண்பேம்" என்றார். சிறுத்தொண்டநாயனார் "தேவரீர் திருவமுது செய்வீராகில், அடியேனுக்கு இதுவும் அரிதன்று" என்று சொல்லி, அவரை வணங்கிவிடை பெற்றுக்கொண்டு வீட்டுக்குப் போயினார்.

சிறுத்தொண்ட நாயனாருடைய வரவை நோக்கி நின்ற மனைவியார் அவருடைய மலர்ந்த முகத்தைக் கண்டு, அவரை வணங்கி, அடியாருடைய செய்கையை வினவ, அவர் மனைவியாரை நோக்கி, "ஒருகுடிக்கு ஓரே சிறுவனாகி ஐந்துவயசுடையனுமாய் அவயவப் பழுதில்லாதவனுமாய் இருக்கும் பிள்ளையை மனமகிழ்ச்சியோடு தாய்பிடிக்கத் தந்தையரிந்து சமைத்தால் திருவமுதுசெய்தற்கு உடன்பட்டருளினர்" என்றார். அப்பொழுது மனைவியார் "அவ்வடியவரை அவர் விரும்பியபடி திருவமுது செய்விக்கும்பொருட்டுஒருகுடிக்கு ஒருவனுஞ் சிறுவனைப்பெறுவது எப்படி" என்றுசொல்ல; சிறுத்தொண்ட நாயனார் "என் பிராணநாயகியே இத்திறத்துச்சிறுவனை வேண்டிய திரவியங்களைக் கொடுத்தால் தருவாருளராயினும், நேர்நின்று அச்சிறுவனை அரியத்துணியுந் தந்தை தாயரோ இல்லை. இனித் தாழ்க்காது நாம் பெற்ற சிறுவனையே அழைப்போம்" என்றார். மனைவியார் அதற்கு இசைந்து, "நம்மைக் காக்கும்பொருட்டு அவதரித்த புதல்வனைப் பள்ளிக்கூடத்தினின்றும் அழைத்துக்கொண்டு வாரும்" என்று சொல்ல; சிறுத்தொண்டநாயனார் மனமகிழ்ச்சியோடு பள்ளிக்கூடத்துக்கு விரைந்து சென்று, தம்முடைய புதல்வராகிய சீராளதேவரை எடுத்துத் தோண்மேல் வைத்துக்கொண்டு, வீட்டுக்குத் திரும்பி வந்தார். மனைவியார் எதிர்வந்து புதல்வரைவாங்கி, திருமஞ்சனமாட்டி, கோலஞ்செய்து, நாயகர் கையிற்கொடுத்தார். அவர் அடுக்களையிற்செல்லாது உலகத்தவர்கள் அறியாவண்ணம்ஓர் மறைவிடத்திற்கொண்டுபோனார். அப்பிள்ளையைப் பெற்ற தாயார் பாத்திரங்களைக் கழுவிக்கொண்டு வந்தார். தந்தையார் புதல்வரை எடுத்து அவருடைய தலையைப் பிடிக்க; தாயார் அப்புதல்வருடைய இரண்டு கால்களையுந் தம்முடைய மடியிலே இடுக்கி, அவர் கைகள் இரண்டையும் தம்முடைய கைகளினாலே பிடிக்க, அப்புதல்வர் தம்முடைய தந்தைதாயர் மிகமகிழ்கின்றனரென்று

மகிழ்ந்து நகைசெய்ய, தந்தையார் மனமகிழ்ச்சியோடு ஆயுதத்தினாலேஅவருடைய தலையை அரிதலாகிய அரிய செய்கையைச் செய்தார். திருவெண்காட்டு நங்கையார் அறுத்ததலையின் இறைச்சி திருவமுதுக்குஆகாது என்று கழித்து, அதனை மறைத்து நீக்கும்பொருட்டுச் சந்தனநங்கையார் கையிற்கொடுத்துவிட்டு, மற்றையுறுப்புக்களின் இறைச்சிகளெல்லாவற்றையும் அறுத்துப்பாகம்பண்ணி, வேறுகறிகளும் அமைத்து, சோறுஞ்சமைத்துக்கொண்டு, நாயகருக்குத் தெரிவித்தார்.

நாயகராகிய சிறுத்தொண்டநாயனார் பெருங்களிப்புடையராகி, விரைந்து சென்று, திருவாத்தியின்கீழ்இருந்த வைரவரை வணங்கி, "சுவாமீ, தேவரீர் பிரீதிப்படி பாகம்பண்ணுவித்தேன். எழுந்தருளிவந்து திருவமுது செய்தருளல்வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்து, அவரை வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய், ஆசனத்தில் இருத்தி, அவருடைய திருவடிகளை ஜலத்தினால் விளக்கி, அந்தத்தீர்த்தத்தைத் தங்கள் சிரசின் மேலே தெளித்து, வீடெங்கும் புரோக்ஷித்து, அவரைப் புஷ்பங்களினால் அருச்சித்துத் தூபதீபங்காட்டி வணங்கினார். வணங்கியபின், நாயனாரும் மனைவியாரும் வைரவரை நோக்கி, "சுவாமீ, திருவமுது படைக்கும்வகை எப்படி" என்று கேட்க; வைரவர் "அன்னத்துடன் கறிகளெல்லாம்ஒருங்கே படைக்கவேண்டும்" என்றார். மனைவியாராகிய திருவெண்காட்டு நங்கையார் பரிகலந்திருத்தி, அன்னமுங் கறியமுதும் படைத்தார். வைரவர் அதைப் பார்த்து, "நாஞ்சொல்லிய முறையே கொன்ற பசுவினது உறுப்புக்களெல்லாவற்றையும் பாகம்பண்ணினீரா" என்று வினாவ; திருவெண்காட்டுநங்கையார் "தலையிறைச்சிமாத்திரம் திருவமுதுக்கு ஆகாது என்று கழித்துவிட்டோம்', என்றார். வைரவர் "அதுவும்நாம் உண்பது" என்றார். அதுகேட்டுச் சிறுத்தொண்டநாயனார் மனைவியாரோடுந் திகைத்து அயர; சந்தனநங்கையார் "நான் அத்தலையிறைச்சியை அடியவர் திருவமுதுசெய்யும்பொழுது நினைக்கவரும் என்று முன்னமே பாகம்பண்ணிவைத்தேன்" என்று சொல்லி எடுத்துக் கொடுக்க, திருவெண்காட்டுநங்கையார் முகமலர்ந்து, வாங்கிப் படைத்தார். அதன்பின் வைரவர் சிறுத்தொண்டநாயனாரை நோக்கி "நாந் தனியே உண்ணோம். சிவனடியார்களைக் கொண்டுவாரும்" என்று அருளிச்செய்ய; சிறுத்தொண்டநாயனார் ஏங்கி, "ஐயோ; அடியவர் திருவமுது செய்தற்கு இடையூறு இதுவோ" என்று நினைந்து, வீட்டுக்குப் புறத்திலே போய், சிவனடியார்களைத் தேடிக் காணாது, துக்கத்தோடு திரும்பி வந்து, வைரவரை வணங்கி, "சுவாமீ, சிவனடியார்களைக் காணேன். அடியேனும் திருநீறிடுவோரைக் கண்டு அன்னங்கொடுப்பேன்" என்று விண்ணப்பஞ்செய்ய; வைரவர் சிறுத்தொண்டநாயனாரை நோக்கி, "உம்மைப்போலத் திருநீறிட்டார் உளரோ? நீர் இருந்து உண்ணும்" என்று சொல்லி, பின் திருவெண்காட்டுநங்கையாரைநோக்கி, "இவருக்கு வேறொருபரிகலந்திருத்தி, அன்

ணமும் இறைச்சியும் நமக்குப் படைத்ததில் எடுத்துப்படையும்" என்று அருளிச்செய்ய; அவரும் அப்படியே எடுத்துப் படைத்தார். சிறுத்தொண்டநாயனர் வைரவரை ஊட்டவேண்டி, உண்ணப்புகலும்; வைரவர் தடுத்தருளி, "ஆறுமாசத்துக்கு ஒருமுறை உண்ணுகின்ற நாம்உண்ணுமளவும் தரியாமல், எப்பொழுதும் உண்கின்ற நீர் முன் உண்பதுஎன்னே; நம்முடன் உண்ணும் பொருட்டு உமக்குப் புத்திரன் உண்டேல் அழையும்" என்றார். சிறுத்தொண்டநாயனர் "இப்போது அவன்உதவான்" என்று சொல்ல; வைரவர் "அவன் வந்தாற்றான் நாம் உண்போம். தேடி அழையும்" என்றார். சிறுத்தொண்டநாயனர் தரியாது எழுந்து, மனைவியாரோடு விரைந்து வீட்டுக்குப் புறத்திலேபோய்,"புதல்வனே வா, என்றுஅழைக்க; மனைவியாரும் நாயகரது பணியில் நிற்பாராகி, "சீராளனே சிவனடியார் அடியேங்கள் உய்யும்பொருட்டு உடனுண்ண உன்னை அழைக்கின்றார், வா" என்று அழைத்தார். அப்பொழுது அப்புதல்வர்பரமசிவனதுதிருவருளினாலே பள்ளிக்கூடத்தினின்றும்ஓடி வருபவர்போலவந்தார். தாயார் அவரை எடுத்துத் தழுவி நாயகர்கையிற்கொடுக்க; அவர் "இனிச் சிவனடியார் திருவமுதுசெய்யப்பெற்றோம்" என்று மனமிக மகிழ்ந்து, அப்புதல்வரை விரைவிற்கொண்டு அடியவரைத்திருவமுதுசெய்வித்தற்கு உள்ளே வந்தார். அதற்குமுன் வைரவர் மறைந்தருள; சிறுத்தொண்டநாயனர் அவரைக்காணுமையால் மனங்கலங்கித் திகைத்துவிழுந்தார். கலத்திலே இறைச்சிக்கறியமுதைக் காணுமையால் அச்சமுற்றார். "வைரவர் அடியேங்கள் உய்யும்பொருட்டுத் திருவமுதுசெய்யாமல் எங்கே ஒளித்தனரோ" என்று தேடி மயக்கங்கொண்டு, புறத்திற் செல்ல; அச்சிறுத்தொண்டநாயனர் செய்தது நிஷித்தாநுட்டானமாயினும், அவர் சிவானந்தானுபவமேலிட்டு நிற்கையால் கருவிகரணங்கள் தற்போதச் சீவிப்பாய் நின்று செய்யாது சிவபோதச் சீவிப்பாய்எழுந்து செய்தமைபற்றி அதனை விகிதா நுட்டானமாகவே கொண்டருளிய சிவபெருமான் அரிபிரமேந்திராதிதேவர்கள் முனிவர்கள் முதலாயினோர்சேவிக்க, உமாதேவியாரோடும் சுப்பிரமண்ணியசுவாமியோடும் இடபாரூடராய் ஆகாயத்திலே தோன்றியருளினர். சிறுத்தொண்டநாயனரும் மனைவியாரும் புதல்வரும் தாதியாருமாகிய நால்வரும் அவர்களைத் தரிசித்து ஆனந்தவருவிசொரிய, எலும்பும் மனமும் நெக்குநெக்குருக, பரவசர்களாய் விழுந்து நமஸ்கரித்து, எழுந்து அஞ்சலியஸ்தர்களாகி நின்று,தோத்திரம் பண்ணினர்கள். பின்பு பரமசிவனும் பார்வதியம்மையாரும் சுப்பிரமணியசுவாமியும், அவர்கள் நால்வரையும், தங்களை எக்காலமும் பிரியாது வணங்கிப் பேரின்பத்தை நுகர்ந்துகொண்டிருக்கும்பொருட்டு, உடன்கொண்டு திருக்கைலாசத்தை அடைந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

சிறுத்தொண்டநாயனர்புராண முற்றியது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கழறிற்றறிவார் நாயனார் புராணம்.

மாவிற்றிருந்த பெருஞ்சிறப்பின் மன்னுந்தொன்மை மலைநாட்டுப்
பாவீற்றிருந்த பல்புகழார் பயிலுமியல்பிற் பழம்பதிதான்
சேவீற்றிருந்தார் திருவஞ்சைக் களமுநிலவிச் சேரர்குலக்
கோவீற்றிருந்து முறைபுரியுங் குலக்கோமூதூர் கொடுங்கோளூர். (௧)

காலையெழும்பல் கலையினொலி களிற்றுக்கன்று வடிக்குமொலி
சோலையெழுமென் சுரும்பினொலி துரகச்செருக்காற் சுலவுமொலி
பாலைவியஞ்சி பயிலுமொலி பாடலாடன் முழவினொலி
வேலையொலியை விழுங்கியெழ விளங்கியோங்கும் வியப்பினதால். (௨)

மிக்கசெல்வ மனைகடொறும் விழையுமின்பம் விளங்குவன
பக்கநெருங்கு சாலைதொறும் பயில்சட்டறங்கள் பல்குவன
தக்கவணிகொண் மடங்கடொறுஞ் சைவமேன்மை சாற்றுவன
தொக்கவளங்கொ ளிடங்கடொறு மடங்கநிதியந் துவன்றுவன. (௩)

வேதநெறியின் முறைபிறழா மிக்கவொழுக்கந் தலைநின்ற
சாதிநான்கு நிலைதிளைக்குந் தன்மைத்தாகித் தடமதில்சூழ்
சூதவகுள சரளநிரை துதையுஞ்சோலை வளநகர்தான்
கோதையரசர் மகோதையெனக் குலவுபெயரு முடைத்துலகில். (௪)

முருகுவிரியு மலர்ச்சோலை மூதூரதன்கண் முறைமரபி
னருகியழியுங் கலிநீக்கி யறங்கொள்சைவத் திறந்தழைப்பத்
திருகுசினவெங் களியானைச் சேரர்குலமு முலகுஞ்செய்
பெருகுதவத்தா லரனருளாற் பிறந்தார்பெருமாக் கோதையார். (௫)

திருமாநகரந் திருவவதா ரஞ்செய்விழவின் சிறப்பினால்
வருமாகளிகூர் செய்பாட லெடுப்பவான மலர்மாரி
தருமாவிசும்பின் மிகநெருங்கத் தழங்குமொலிமங் கலந்தழைப்பப்
பெருமாநிலத்தி லெவ்வுயிரும் பெருகுமகிழ்ச்சி பிறங்கினவால். (௬)

மண்மேற்சைவ நெறிவாழ வளர்ந்துமுன்னை வழியன்பாற்
கண்மேல்விளங்கு நெற்றியினார் கழலேபேணுங் கருத்தினரா
யுண்மேவிபவன் பினராகி யுரிமையரசர் தொழில்புரியார்
தெண்ணீர்முடியார் திருவஞ்சைக் களத்திற்றிருத்தொண் டேபுரிவார். ()

உலகினியல்பு மரசியல்பு முறுதியல்ல வெனவுணர்வார்
புலரியெழுந்து புனன்மூழ்கிப் புனிதவெண்ணீற் றினுமுழுகி
நிலவுதிருநந் தனவனத்து நீடும்பணிகள் பலசெய்து
மலருமுகையுங் கொணர்ந்துதிரு மாலைசாத்த மகிழ்ந்தமைத்து. (௮)

திருமஞ்சனமுங் கொணர்ந்துதிரு வலகுமிட்டுத் திருமெழுக்கு
வருமன்புடனின் புறச்சாத்தி மற்றுமுள்ள திருப்பணிகள்
பெருமைபிறங்கச் செய்தமைத்துப் பேணும்விருப்பிற் றிருப்பாட்டு
மொருமைநெறியி னுணர்வுவர வோதிப்பணிந்தே யொழுகுநாள். (௯)

நீரின்மலிந்த கடலகழி நெடுமால்வரையின் கொடிமதில்சூழ்
சீரின்மலிந்த திருநகர மதனிற்செங்கோற் பொறையனெனுங்
காரின்மலிந்த கொடைநிழன்மேற் கவிக்குங்கொற்றக் குடைநிழற்கீழ்த்
தாரின்மலிந்த புயத்தரசன் றரணிநீத்துத் தவஞ்சார்ந்தான். (௧௦)

வந்தமரபி னரசளிப்பான் வனஞ்சார்தவத்தின் மருவியபின்
சிந்தைமதிநூ றேரமைச்சர் சிலநாளாய்ந்து தெளிந்தநெறி
முந்தைமரபின் முதல்வர்திருத் தொண்டுமுயல்வார் முதற்றாக
விந்துமுடியார் திருவஞ்சைக் களத்திலவர்பா லெய்தினார். (௧௧)

எய்தியவர்த மெதிரிறைஞ்சி யிருந்தண்சாரன் மலைநாட்டுச்
செய்திமுறைமை யாலுரிமைச் செங்கோலரசு புரிவதற்கு
மைதீர்நெறியின் முடிசூடி யருளுமரபால் வந்ததெனப்
பொய்தீர்வாய்மை மந்திரிகள் போற்றிப்புகன்ற பொழுதின்கண். (௧௨)

இன்பம்பெருகுந் திருத்தொண்டுக் கிடையூறாக விவர்மொழிந்தா
ரன்புநிலைமெய் வழுவாமை யரசுபுரக்கு மருளுண்டே
லென்புமரவும் புனைந்தாரை யிடைபெற்றறிவே னெனப்புக்கு
முன்புதொழுது விண்ணப்பஞ் செய்தார்முதல்வ ரருளினால். (௧௩)

மேவுமுரிமை யரசளித்தே விரும்புகாதல் வழிபாடும்
யாவும்யாருங் கழறினவு மறியுமுணர்வு மீறிலாத்
தாவில்விறலுந் தண்டாத கொடையும்படைவா கனமுதலாங்
காவன்மன்னர்க் குரியனவு மெல்லாங்கைவந் துறப்பெற்றார். (௧௪)

ஆனவருள்கொண் டஞ்சலிசெய் திறைஞ்சிப்புறம்போந் தரசளித்த
ஞானமாகுந் திருத்தொண்டுக் கெனினுமுடையா னருளாலே
மேன்மைமகுடந் தாங்குதற்கு வேண்டுமமைச்சர்க் குடன்படலு
மானவமைச்சர் தாள்பணிந்தவ் வினைமேற்கொண்டு மகிழ்ந்தெழுந்தார்.

உரிமைநாளி லோரைநல னெய்தமிக்க வுபகரணம்
பெருமைசிறக்க வேண்டுவன வெல்லாம்பிறங்க மங்கலஞ்செய்
திருமையுலகுக் கொருமைமுடி கவித்தாரெல்லா வுயிருமகிழ்ந்
தருமைநிலைமை யறிந்துபுவி தாங்குங்கழறிற் றறிவார்தாம். (௧௬)

தம்பிரானார் கோயில்வலங் கொண்டுதிருமுன் றாழ்ந்தெழுந்து
கும்பயானை மேல்கொண்டு கொற்றக்குடையுஞ் சாமரையு
நம்புமுரிமை யவர்தாங்க நலங்கொணகர்சூழ் வலங்கொள்வார்
மொய்ம்பிலுவரின் பொதிசுமந்தோர் வண்ணான்முன்னே வரக்கண்டார்.

மழையிற்கரைந்தங் குவருறி மேனிவெளுத்த வடிவினு
லுழையிற்பொலிந்த திருக்கரத்தா ரடியார்வேட மென்றுணர்ந்தே
யிழையிற்செறிந்த வோடைநுதல் யானைக்கழுத்தி னின்றிழிந்து
விழைவிற்பெருகுங் காதலினால் விரைந்துசென்று கைதொழுதார். (௧௮)

சேரர்பெருமான் றொழக்கண்டு சிந்தைகலங்கி முன்வணங்கி
யாரென்றடியே னைக்கொண்ட தடியேனடிவண் ணானென்னச்
சேரர்பிரானு மடிச்சேர னடியேனென்று திருநீற்றின்
வாரவேட நினைப்பித்தீர் வருந்தாதேகு மெனமொழிந்தார். (௧௯)

மன்னர்பெருமான் றிருத்தொண்டு கண்டுமதி நீடமைச்சரொலாஞ்
சென்னிமிசையஞ் சலிசெய்து போற்றச்சினமால் களிறேறி
மின்னுமணிப்பூண் கொடிமாட வீதிமூதூர் வலங்கொண்டு
பொன்னின்மணிமா ளிகைவாயில் புக்கார்புனைமங் கலம்பொலிய. (௨௦)

யானைமிசைநின் றிழிந்தருளி யிலகுமணிமண் டபத்தின்கண்
மேன்மையரியா சனத்தேறி விளங்குங்கொற்றக் குடைநிழற்றப்
பானல்விழியார் சாமரைமுன் பணிமாறப்பன் மலர்தூவி
மானவரசர் போற்றவீற் றிருந்தார்மன்னர் பெருமானார். (௨௧)

உலகுபுரக்குங் கொடைவளவ ருரிமைச்செழிய ருடன்கூட்
நிலவுபெருமுக் கோக்களாய் நீதிமனுநூ னெறிநடத்தி
யலகிலரசர் திறைகொணர வகத்தும்புறத்தும் பகையறுத்து
மலருந்திருநீற் றொளிவளர மறைகள்வளர மண்ணளிப்பார். (௨௨)

நீடுமுரிமைப் பேரரசா னிகழும்பயனு நிறைதவமுந்
தேடும்பொருளும் பெருந்துணையுந் தில்லைத்திருச்சிற் றம்பலத்து
ளாடுங்கழலே யெனத்தெளிந்த வறிவாலெடுத்த திருப்பாதங்
கூடுமன்பி லர்ச்சனைமேற் கொண்டார்சேரர் குலப்பெருமாள். (௨௩)

வாசத்திருமஞ் சனம்பள்ளித் தாமஞ்சாந்த மணித்தூபந்
தேசிற்பெருகுஞ் செழுந்தீப முதலாயினவுந் திருவமுது
மீசர்க்கேற்ற பரிசினா லர்ச்சித்தருள வெந்நாளும்
பூசைக்கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார்சிலம்பி னொலியளித்தார். (௨௪)

நம்பர்தாளின் வழிபாட்டா னாளுமின்புற் றமர்கின்று
ரிம்பருலகி லிரவலர்க்கும் வறியோரெவர்க்கு மீகையினாற்
செம்பொன்மழையா மெனப்பொழிந்து திருந்துவென்றியுடன்பொருந்தி
யும்பர்போற்றத் தம்பெருமாற் குரியவேள்வி பலசெய்தார். (௨௫)

இன்னவண்ண மிவரொழுக வெழில்கொள்பாண்டி நன்னாட்டு
மன்னுமதுரைத் திருவால வாயிலிறைவர் வருமன்பாற்
பன்னுமிசைப்பா டலிற்பரவும் பாணனார்பத் திரனார்க்கு
நன்மைநீடு பெருஞ்செல்வ நல்கவேண்டி யருள்புரிவார். (உசு)

இரவுகனவி லெழுந்தருளி யென்பாலன்பா லெப்பொழுதும்
பரவுசேரன் றனக்குனக்குப் பைம்பொன்காணம் பட்டாடை
விரவுகதிர்செய் நவமணிப்பூண் வேண்டிற்றெல்லாங் குறைவின்றித்
தரநம்மோலை தருகின்றோந் தாழாதேகி வருகென்று. (உஎ)

வேறு.

அதிர்கழ லுதியர்வேந்தற் கருள்செய்த பெருமையாலே
வெதிரில் செல்வத்துக் கேற்றவிருநிதி கொடுக்கவென்று
மதிமலி புரிசையென்னும் வாசகம் வரைந்த வாய்மை
கதிரொளி விரிந்தவோட்டுத் திருமுகங் கொடுத்தார் காண. (உஅ)

---

சொக்கநாதசுவாமி-திருமுகப்பாசுரம்.

திருச்சிற்றம்பலம்.

மதிமலிபுரிசை மாடக்கூடற்
பதிமிசைநிலவு பானிறவரிச்சிறை
யன்னம்பயில்பொழி லாலவாயின்
மன்னியசிவன்யா மொழிதருமாற்றம்
பருவக்கொண்மூப் படியெனப்பாவலர்க்
குரிமையினுரிமையி னுதவியொளிதிகழ்
குருமாமதிபுரை குலவியகுடைக்கீழ்ச்
செருமாவுகைக்குஞ் சேரலன்காண்க
பண்பால்யாழ்பயில் பாணபத்திரன்
றன்போ லென்பாலன்பன் றன்பால்
காண்பதுகருதிப் போந்தனன்
மாண்பொருள்கொடுத்து வரவிடுப்பதுவே

திருச்சிற்றம்பலம்.

---

சங்கப்புலவர் திருமுகந்தந் தலைமேற்கொண்டு பத்திரனா
ரங்கப்பொழுதே புறப்பட்டு மலைநாடணைய வந்தெய்தித்
துங்கப்புரிசைக் கொடுங்கோளூர் தன்னிற்புகுந்து துன்னுகொடி
மங்குற்றோடக்கு மாளிகைமுன் வந்துமன்னர்க் கறிவித்தார். (உகூ)

கேட்டபொழுதே கைதலைமேற் கொண்டுகிளர்ந்தபேரன்பா
னாட்டம்பொழிநீர் வழிந்திழிய வெழுந்துநடுக்க மிகவெய்தி
யோட்டத்தம்பொன் மாளிகையின் புறத்திலுருகுஞ் சிந்தையுடன்
பாட்டின்றலைமைப் பாணனார் பாதம்பலகாற் பணிகின்றார். (௩௰)

அடியேன்பொருளாத் திருமுகங்கொண் டணைந்ததென்ன வவர்தாமுங்
கொடிசேர்விடையார் திருமுகங்கைக் கொடுத்துவணங்கக் கொற்றவனார்
முடிமேற்கொண்டு கூத்தாடி மொழியுங்குழறிப் பொழிகண்ணீர்
பொடியார்மார்பிற் பரந்துவிழப் புவிமேற்பலகால் விழ்ந்தெழுந்தார். ()

பரிவிற்போற்றித் திருமுகத்தைப் பலகாற்றொழுது படியெடுக்க
வுரியவகையா லெடுத்தோதி யும்பர்பெருமா னருள்போற்றி
விரிபொற்சுடர்மா ளிகைபுக்கு மேவுமுரிமைச் சுற்றமெல்லாம்
பெரிதுவிரைவிற் கொடுபோந்து பேணுமமைச்சர்க் கருள்செய்வார். ()

நங்கள்குலமா ளிகையிதனு ளலத்தின்மிக்க நிதிக்குவையாய்ப்
பொங்கிநிறைந்த பலவேறு வகையிற்பொலிந்த பண்டார
மங்கணெனறு மொழியாமை யடையக்கொண்டு புறப்பட்டுத்
தங்கும்பொதிசெய் தாளின்மேற் சமையவேற்றிக் கொணருமென.(௩௩)

சேரர்பெருமா னருள்செய்யத் திருந்துமதிநூன் மந்திரிகள்
சாருமணிமா ளிகையுள்ளாற் றனங்களெல்லா நிறைந்தபெருஞ்
சீர்கொணிதிய மெண்ணிறந்த வெல்லாம்பொதிசெய் தாளின்மேற்
பாரினெருங்க மிசையேற்றிக் கொண்டுவந்து பணிந்தார்கள். (௩௪)

பரந்தநிதியின் பரப்பெல்லாம் பாணனார்பத் திரனார்க்கு
நிரந்ததனங்கள் வெவ்வேறு நிரைத்துக்காட்டி மற்றிவையு
முரந்தங்கியவெங் கரிபரிகண் முதலாவுயிருள் ளனதனமும்
புரந்தவரசுங் கொள்ளுமென மொழிந்தார்பொறையர் புரவலனார். (௩௫)

பாணனார்பத் திரனாரும் பைம்பொன்மௌலிச் சேரலனார்
காணக்கொடுத்த விவையெல்லாங் கண்டுமகிழ்வுற் றதிசயித்துப்
பேணவெனக்கு வேண்டுவன வடியேன்கொள்ளப் பின்னுகனு
ராணையரசு மரசுறுப்புங் கைக்கொண்டருளு மெனவிறைஞ்ச. (௩௬)

இறைவராணை மறுப்பதனுக் கஞ்சியிருந்தா ரிகல்வேந்தர்
நிறையுநிதியின் பரப்பெல்லா நிலத்தைநெளிய வுடன்கொண்டே
யறைமும்மதத்துக் களிறுபரி யுள்ளிட்டனவேண் டுவகொண்டோர்
பிறைவெண்கோட்டுக் களிற்றுமேல் கொண்டுபோந்தார் பெரும்பாணர்.

பண்புபெருகும் பெருமாளும் பாணனார்பத் திரனார்பின்
கண்கள்பொழிந்த காதனீர் வழியக்கையாற் றொழுதணைய
நண்புசிறக்கு மவர்தம்மை நகரின்புறத்து விடைகொண்டு
திண்பொற்புரிசைத் திருமதுரை புக்கார்திருந்து மிசைப்பாணர். (௩௮)

வானவரம்பர் குலம்பெருக்கு மன்னனருமறித்தேகிக்
கூனலிளவெண் பிறைக்கண்ணி முடியாரடிமை கொண்டருளும்
பான்மையருளின் பெருமையினை நினைந்துபலகாற் பணிந்தேத்தி
மேன்மைவிளங்கு மாளிகைமண் டபத்துளாக வீற்றிருந்தார். (௩௯)

அளவில்பெருமை யகிலயோ னிகளுங்கழறிற் றறிந்தவற்றி
னுளமன்னியமெய் யுறுதுயர மொன்றுமொழியா வகையகற்றிக்
களவுகொலைகண் முதலான கடந்துகழறிற் றறிவார்தாம்
வளவர்பெருமா னுடன்செழியர் மகிழுங்கலப்பில் வைகுநாள். (௪0)

வானக்கங்கை நதிபொதிந்த மல்குசடையார் வழிபாட்டுத்
தூநற்சிறப்பி னர்ச்சனையாந் தொண்டுபுரிவார் தமக்கொருநாட்
டேனக்கலர்ந்த கொன்றையினு ராடற்சிலம்பி னொலிமுன்போன்
மானப்பூசை முடிவின்கட் கேளாதொழிய மதிமயங்கி. (௪௧)

பூசைகடிது முடித்தடியே னென்னேபிழைத்த தெனப்பொருமி
யாசையும்பான் மற்றினிவே றடையுமின்ப மியாதென்று
தேசில்விளங்கு முடைவாளை யுருவித்திருமார் பினினாட்ட
வீசர்விரைந்து திருச்சிலம்பி னோசைமிகவு மிசைப்பித்தார். (௪௨)

ஆடற்சிலம்பி னொலிகேளா வுடைவாளகற்றி யங்கைமலர்
கூடத்தலைமேற் குவித்தருளிக் கொண்டுவிழுந்து தொழுதெழுந்து
நீடப்பரவி மொழிகின்றார் நெடுமால்பிரம னருமறைமுன்
றேடற்கரியாய் திருவருண்முன் செய்யாதொழிந்த தென்னென்றார். ()

என்றபொழுதி லிறைவர்தா மெதிர்நின்றருளா தெழுமொலியான்
மன்றினிடைநங் கூத்தாடல் வந்துவணங்கி வன்றொண்ட
னென்றுமுணர்வா னமைப்போற்றி யுரைசேர்பதிகம் பாடுதலா
னின்றுகேட்டு வரத்தாழ்த்தோ மென்றாரவரை நினைப்பிப்பார். (௪௪)

என்னேயடியார்க் கிவரருளுங் கருணையிருந்த வாறென்று
பொன்னேர்சடையார் திருநடஞ்செய் புலியூர்ப்பொன்னம்பலமிறைஞ்சித்
தன்னேரில்லா வன்றொண்டர் தமையுங்காண்ப னெனவிரும்பி
நன்னீர்நாட்டுச் செலநயந்தார் நாமச்சேரர் கோமானார். (௪௫)

பொன்னார்மௌலிச் சேரலனார் போற்றுமமைச்சர்க் கீதியம்பி
நன்னாட்கொண்டு பெரும்பயண மெழுகவென்று நலஞ்சாற்ற
மின்னாரயில்வேற் குலமறவர் வென்றிநிலவுஞ் சிலைவீர
ரந்நாட்டுள்ளா ரடையநிரந் தணைந்தார்வஞ்சி யகநகர்வாய். (௪௬)

இட்டநன்னா ளோரையினி லிறைவர்திருவஞ் சைக்களத்து
மட்டுவிரிபூங் கொன்றையினார் தம்மைவலங்கொண் டிறைஞ்சிப்போய்ப்
பட்டநுதல்வெங் களியானைப் பிடர்மேற்கொண்டு பனிமதியந்
தொட்டகொடிமா ளிகைமூதூர் கடந்தாருதியர் தோன்றலார். (௪௭)

யானையணிகள் பரந்துவழி யெங்குநிரந்து செல்லுவன
மானமலைநாட் டினின்மலிந்த மலைகளுடன்போ துவபோன்ற
சேனைவீரர் புடைபரந்து செல்வாரங்கண் மலைசூழ்ந்த
கானமடைய வுடன்படர்வ போலுங்காட்சி மேவினதால். (௪௮)

புரவித்திரள்க ளாயோகப் பொலிவினசைவிற் போதுவன
வரவச்சேனைக் கடற்றரங்க மடுத்துமேன்மே லடர்வனபோல்
விரவிப்படர்ந்து சென்றனவான் ० மிசையுமவனு மொன்றாக
விரவிப்படர்ந்த நெடுஞ்சேனை நேமிநெளியச் சென்றனவால். (சகூ)

அந்நாட்டெல்லை கடந்தணைய வமைச்சர்க்கெல்லாம் விடையருளி
மின்னார்மணிப்பூண் மன்னவனார் வேண்டுவாரை யுடன்கொண்டு
கொன்னாரயில்வேன் மறவர்பயில் கொங்கர்நாடு கடந்தருளிப்
பொன்னாட்டவரு மணைந்தாடும் பொன்னிநீர்நாட் டிடைப்போவார். (ருo)

சென்றதிசையிற் சிவனடியார் சிறப்பினோடு மெதிர்கொள்ளக்
குன்றுங்கானு முடைக்குறும்ப ரிடங்கடோறுங் குறைவறுப்பத்
துன்றுமுரம்புங் கானியாறுந் துறுகற்சுரமும் பலகடந்து
வென்றிவிடையா ரிடம்பலவு மேவிப்பணிந்து செல்கின்றார். (ருக)

பொருவில்பொன்னித் திருநதியின் கரைவந்தெய்திப் புனிதநீர்
மருவுதீர்த்த மகிழ்ந்தாடி மருங்குவடபாற் கரையேறித்
திருவிற்பொலியுந் திருப்புலியூர்ச் செம்பொன்மன்று ளாட்டம்போற்ற
வுருகுமனத்தி னுடன்சென்று ரொழியாவன்பின் வழிவந்தார். (ருஉ)

வந்துதில்லை மூதூரி னெல்லைவணங்கி மகிழ்ச்சியினு
லந்தணாளர் தொண்டர்குழா மணைந்தபோதி னெதிர்வணங்கிச்
சந்தவிரைப்பூந் திருவீதி யிறைஞ்சித்தலைமேற் கரமுகிழ்ப்பச்
சிந்தைமகிழ வெழுநிலைக்கோ புரத்தையணைந்தார் சேரலனார் (ருங)

நிலவும்பெருமை யெழுநிலைக்கோ புரத்தின்முன்னர் நிலத்திறைஞ்சி
மலருங்கண்ணீர் துளிததும்பப் புகுந்துமணிமா ளிகைவலங்கொண்
டுலகுவிளங்குந் திருப்பேரம் பலத்தைவணங்கி யுள்ளணைந்தா
ரலகிலண்ட மளித்தவர்நின் றாடுந்திருச்சிற் றம்பலமுன். (ருச)

அளவிலின்பப் பெருங்கூத்த ராடவெடுத்த கழல்காட்டி
வுளமும்புலமு மொருவழிச்சென் றுருகப்போற்றி யுய்கின்றார்
களனில்விடம்வைத் தளித்தவமு தன்றிமன்றிற் கழல்வைத்து
வளருந்திருக்கூத் தமுதுலகுக் களித்தகருணை வழுத்தினர். (ருரு)

ஆராவாசை யானந்தக் கடலுட்டிளைத்தே யமர்ந்தருளாற்
சீரார்வண்ணப் பொன்வண்ணத் திருவந்தாதி திருப்படிக்கீழ்ப்
பாராதரிக்க வெடுத்தேத்திப் பணிந்தார்பருவ மழைபொழியுங்
காரானிகர்க்க வரியகொடைக் கையார்கழறிற் றறிவார்தாம். (ருசு)

---

०மிசையும்-அவனும்-என்பது-மேலும்,பள்ளமும்.

சேரமான்பெருமான் அருளிச்செய்த-பொன்வண்ணத்தந்தாதி.

திருச்சிற்றம்பலம்

பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமேனி பொலிந்திலங்கு
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம்வீழ்சடை வெள்ளிக்குன்றந்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமால்விடை தன்னைக்கண்ட
வென்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமாகிய வீசனுக்கே. (க)

மாயனன் மாமணி கண்டன்வளர்சடை யாற்கடிமை
யாயின தொண்டர் துறக்கம்பெறுவது சொல்லுடைத்தே
காய்சின வானை வளருங்கனக மலையருகே
போயின காக்கையு மன்றேபடைத்தது பொன்வண்ணமே. (க00)

---

திருச்சிற்றம்பலம்

தம்பிரானுர்க் கெதிர்நின்று தமிழ்ச்சொன்மாலை கேட்பிக்க
வும்பர்வாழ நட்டமாடு மொருவரதற்குப் பரிசிலெனச்
செம்பொன்மணிமன் றினிலெடுத்த செய்யபாதத் திருச்சிலம்பி
னிம்பர்நீட வெழுந்தவொலி தாமுமெதிரே கேட்பித்தார். (ருஎ)

ஆட்டிசிலம்பி னொலிகேட்பா ரளவிலின்ப வானந்தங்
கூடப்பெற்ற பெரும்பேற்றின் கொள்கைவாய்ப்பக் கும்பிடுவார்
நீடப்பணியுங் காலமெலா நின்றுதொழுது புறம்போந்து
மாடத்திருமா ளிகைவீதி வணங்கிப்புறத்து வைகினார். (ருஎ)

பரவுந்தில்லை வட்டத்துப் பயில்வார்பைம்பொ னம்பலத்து
ளரவும்புனலுஞ் சடையாட வாடுவார்கூத் தாராமை
விரவுங்காதன் மிக்கோங்க வேதம்படியுந் திருப்படிக்கீ
ழிரவும்பகலும் பணிந்தேத்தி யின்பஞ்சிறக்கு மந்நாளில். (ருஅ)

ஆடும்பெருமான் பாடல்கேட் டருளித்தாழ்த்த படிதமக்குக்
கூடும்பரிசான் முன்பருளிச் செய்தநாவ லூர்க்கோவை
நீடும்பெருங்கா தலிற்காண நிறைந்தநினைவு நிரம்பமா
றேடும்பாத ரருளினுற் றிருவாரூர்மேற் செலவெழுந்தார். (ருகூ)

அறிவினெல்லை யாயதிருத் தில்லையெல்லை யமர்ந்திறைஞ்சிப்
பிறிவிலாத திருவடியைப் பெருகுமுள்ளத் தினிற்பெற்றுச்
செறியுஞான போனகர்வந் தருளும்புகலி சென்றிறைஞ்சி
மறிசேர்கரத்தார் கோயில்பல வணங்கிமகிழ்ந்து வழிக்கொள்வார். (சுo)

வழியிற்குழியிற் செழுவயலின் மதகின்மலர்வா விகளின்மடுச்
சுழியிற்றாளந் திரைசொரியுந் துறைநீர்ப்பொன்னி கடந்தேறி
விழியிற்றிகழுந் திருநுதலார் விரும்புமிடங்க ளிறைஞ்சியுகக்
கழிவிற்பெருவெள் ளமுங்கொள்ளாக் கழனியாரூர் கண்ணுற்றார். (சுக)

நம்பிதாமு முன்னாட்போய் நாகைக்காரோ ணம்பாடி
யம்பொன்மணிப்பூ ணவமணிக ளாடைசாந்த மடற்பரிமா
பைம்பொற்சுரிகை முதலான பெற்றுமற்றும் பலபதியிற்
றம்பிரானைப் பணிந்தேத்தித் திருவாரூரிற் சார்ந்திருந்தார். (சுஉ)

வந்துசேரர் பெருமானார் மன்னுந்திருவா ரூரெய்த
அந்தணாளர் பெருமானு மரசர்பெருமான் வரப்பெற்றுச்
சிந்தைமகிழ வெதிர்கொண்டு சென்றுகிடைத்தார் சேரலனார்
சந்தவிரைத்தார் வன்றொண்டர் முன்புவிருப்பி னுடன்றாழ்ந்தார். (சுங)

முன்புபணிந்த பெருமாளைத் தாமும்பணிந்து முகந்தெடுத்தே
அன்புபெருகத் தழுவவிரைந் தவருமார்வத் தொடுதழுவ
வின்பவெள்ளத் திடைநீந்தி யேறமாட்டா தலைவார்போ
லென்புமுருகி யுயிரொன்றி யுடம்புமொன்று மெனவிசைந்தார். (சுச)

ஆனநிலைமை கண்டதிருத் தொண்டரளவின் மகிழ்வெய்த
மானச்சேரர் பெருமானார் தாமும்வன்றொண் டருங்கலந்த
பான்மைநண்பாற் சேரமான் றோழரென்று பார்பரவு
மேன்மைநாம முனைப்பாடி வேந்தர்க்காகி விளங்கியதால். (சுரு)

ஒருவரொருவ ரிற்கலந்த வுணர்வாலின்ப மொழியுரைத்து
மருவவினியார் பாற்செய்வ தென்னுமென்னு மகிழ்ச்சியினாற்
பருவமழைச்செங் கைபற்றிக் கொண்டுபரமர் தாள்பணியத்
தெருவுநீங்கிக் கோயிலினுட் புகுந்தார்சேர மான்றோழர். (சுசு)

சென்றுதேவா சிரியனமுன் னிறைஞ்சித்திருமா ளிகைவலங்கொண்
டொன்றுமுள்ளத் தொடும்புகுவா ருடையநம்பி முன்னாக
நின்றுதொழுது கண்ணருவி வீழநிலத்தின் மிசைவீழ்ந்தே
யென்றுமினிய தம்பெருமான் பாதமிறைஞ்சி யேத்தினார். (சுஎ)

தேவர்முனிவர் வந்திறைஞ்சுந் தெய்வப்பெருமாள் கழல்வணங்கி
மூவர்தமக்கு முதலாகு மவரைத்திருமும் மணிக்கோவை
நாவலூரர் தம்முன்பு நன்மைவிளங்கக் கேட்பித்தார்
தாவில்பெருமைச் சேரலனார் தம்பிரானார் தாங்கொண்டார் (சுஅ)

அங்கணருள்பெற் றெழுவாரைக் கொண்டுபுறம்போந் தாரூரர்
நங்கைபரவை யார்திருமா ளிகையினண்ண நன்னுதலார்
பொங்குவிளக்கு நிறைகுடமும் பூமாலைகளும் புகையகிலு
மெங்குமடவா ரெடுத்தேந்த வணைந்துதாமு மெதிர்கொண்டார். (சுகூ)

சோதிமணிமா ளிகையின்கட் சுட்டும்பசும்பொற் காலமளி
மீதுபெருமா ட்டமையிருத்தி நம்பிமேவி யுடனிருப்பக்
கோதில்குணத்துப் பரவையார் கொழுநனார்க்குந் தோழற்கு
நீதிவழுவா வொழுக்கத்து நிறைபூசனைகண் முறையளித்தார். (எ0)

தாண்டுபுரவிச் சேரர்குலப் பெருமாட்டமக்குத் திருவமுது
தூண்டுசோதி விளக்கனையா ரமைக்கத்துணைவர் சொல்லுதலும்
வேண்டும்பரிசு வெவ்வேறு விதத்துக்கறியும் போனகமு
மீண்டுசமைப்பித் துடன்வந்தார்க் கெல்லாமியல்பின் விருந்தமைத்தார்.

அரசர்க்கமைத்த சிறப்பினுமே லடியார்க்கேற்கும் படியாக
விரவிப்பெருகு மன்பினுடன் விரும்புமமுது சமைத்ததற்பின்
புரசைக்களிற்றுச் சேரலனார் புடைசூழ்ந்தவரோ டமுதுசெய்யப்
பரவைபிறந்த திருவனைய பரவையார்வந் தறிவித்தார். (எ௨)

சேரர்பெருமா னெழுந்தருளி யமுதுசெய்யச் செய்தவத்தால்
தாரின்மலிபூங் குழன்மடவாய் தாழாதமுது செய்வியெனப்
பாரின்மலிசீர் வன்றொண்ட ரருளிச்செய்யப் பரிகலங்க
ளேரின்விளங்கத் திருக்கரத்தி லிரண்டுபடியா வேற்றுதலும். (எ௩)

ஆண்ட நம்பி பெருமானை யுடனேயமுது செய்தருள
வேண்டுமென்ன வாங்கவரும் விரைந்துவணங்கி வெருவுறலும்
நீண்டதடக்கை பிடித்தருளி மீண்டுநேரே குறைகொள்ள
விண்டவமுது செய்வதனுக் கிசைந்தார்பொறையர்க் கிறையவனார். (எ௪)

ஒக்கவமுது செய்தருள வுயர்ந்ததவத்துப் பரவையார்
மிக்கவிருப்பி லமுதுசெய்வித் தருளிமேவும் பரிசனங்கள்
தக்கவகையா லறுசுவையுந் தாம்வேண்டியவா றினிதருந்தத்
தொக்கமகிழ்ச்சி களிசிறப்பத் தூயவிருந்தின் கடன்முடித்தார். (எ௫)

பனிநீர்விரவு சந்தனத்தின் பசுங்கர்ப்பூர விரைக்கலவை
வனிதையவர்கள் சமைத்தெடுப்பக் கொடுத்துமகிழ்மான் மதச்சாந்தும்
புனிதநறும்பூ மாலைகளும் போற்றிக்கொடுத்துப் பொற்கொடியா
ரினியபஞ்ச வாசமுட னடைக்காயமுது மேந்தினார். (எ௬)

ஆயசிறப்பிற் பூசனைக ளளித்தவெல்லா மமர்ந்தருளித்
தூயநீறு தங்கடிரு முடியில்வாங்கித் தொழுதணிந்து
மேயவிருப்பி னுடனிருப்பக் கழறிற்றறிவார் மெய்த்தொண்டின்
சேயநீர்மை யடைந்தாராய் நம்பிசெம்பொற் கழல்பணிந்தார். (எஎ)

மலைநாட்டரசர் பெருமானார் வணங்கவணங்கி யெதிர்தழுவிக்
கலைநாட்பெருகு மதிமுகத்துப் பரவையார்தங் கணவனார்
சிலைநாட்டியவெல் கொடியாரைச் சேரத்தந்தா ரெனக்கங்கை
யலைநாட்கொன்றை முடிச்சடையா ரருளேபோற்றி யுடனமர்ந்தார். ()

செல்வத்திருவா ரூர்மேவுஞ் செம்பொற்புற்றி லினிதமர்ந்த
வில்வெற்புடையார் கழல்வணங்கி வீதிவிடங்கப் பெருமானை
மல்லற்பவனி சேவித்து வாழ்ந்துநாளு மனமகிழ்ந்து
சொல்வித்தகர்தா மிருவர்களுந் தொடர்ந்தகாத லுடன்சிறந்தார். (எகூ)

இவ்வாறெழுநாளின்க ணிலங்குமணிப்பூண் வன்றொண்டர்
மைவ்வாழ்களத்து மறையவனார் மருவுமிடங்கள் பலவணங்கச்
செய்வார்கன்னித் தமிழ்நாட்டுத் திருமாமதுரை முதலான
மொய்வார்சடையார் மூதூர்க ளிறைஞ்சமுறைமை யானினைந்தார். (அ0)

சேரர்பிரானு மாரூரர் தம்மைப்பிரியாச் சிறப்பாலு
மார்வம்பெருகத் தமக்கன்று மதுரையால வாயமர்ந்த
வீரரளித்த திருமுகத்தால் விரும்புமன்பின் வணங்குதற்குச்
சாரவெழுந்த குறிப்பாலுந் தாமுமுடனே செலத்துணிந்தார். (அக)

இருவர்திருவுள் ளமுமிசைந்த பொழுதிலெழுந்து திருவாரூ
ரொருவர்திருத்தாள் புக்கிறைஞ்சி யுடன்பாட்டருளாற் போந்தருளி
மருவுமுரிமைப் பெருஞ்சுற்றம் வரம்பில்பணிகள் வரகனங்கள்
பொருவில்பண்டா ரங்கொண்டு போதுவார்க ளுடன்போத. (அஉ)

சேவித்தணையும் பரிசனங்கள் சூழத்திருவா ரூரிறைஞ்சிக்
காவிற்பயிலும் புறம்பணையைக் கடந்துபோந்து கீழ்வேளூர்
மேவிப்பரமர் கழல்வணங்கிப் போந்துவேலைக் கழிக்கானற்
பூவிற்றிகழும் பொழில்நாகை புகுந்துகாரோ ணம்பணிந்தார். (அங)

திருக்காரோணத் திருப்பிரா யென்னுமன்பர் சிந்தையினை
யுருக்கார்வச்செந் தமிழ்மாலை சாத்திச்சிலநா ளுறைந்துபோய்ப்
பெருக்காறுலவு சடைமுடியா ரிடங்கள்பலவும் பணிந்தேத்தி
யருட்காரணர்தந் திருமறைக்கா டணைந்தார்சேர ராரூரர். (அச)

---

திருநாகைக்காரோணம்-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தூர்புக் கிரந்துண்டுபல பதிகம்பாடிப் பாவையரைக் கிறிபேசிப் படிறுடித் திரிவீர், செத்தார்த மெலும்பணிந்து சேவேறித்திரிவீர் செல்வத்தை மறுத்துவைத் தீரெனக்கொரு நாளிரங்கீர், முத்தாரமிலங்கி மிளிர் மணிவயிரக்கோவை யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங் கத்தூரி கமழ்சாந்து பணித்தருளவேண்டுங் கடனாகைக்காரோண மேவி யிருந்தீரே.

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கு மெனக்கும் பற்றாய பெருமானே மற்றாரை யுடையே, னுண்மயத்த வுமக்கடியேன் குறைதீர்க்கவேண்டு மொளிமுத்தம் பூணா மொண்பட்டும் பூவுங், கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டுங் கடனாகைக் காரோணமேவி யிருந்தீரென் றண்மயத்தா லணிநாவ லாரூரன்சொன்ன வருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

மூந்நீர்வலங்கொண் மறைக்காட்டு முதல்வர்கோயில் சென்றிறைஞ்சிச்
செந்நீர்வாய்மைத் திருநாவுக் கரைசும்புகலிச் சிவக்கன்று
மந்நேர்திறக்க வடைக்கவெனப் பாடுந்திருவா யிலேயணைந்து
நன்னீர்பொழியும் விழியினராய் நாயன்மாரை நினைந்திறைஞ்சி. (அரு)

நிறைந்தமறைக ளர்ச்சித்த நீடுமறைக்காட் டருமணியை
யிறைஞ்சிவிழ்ந்து பணிந்தெழுந்து போற்றியாழைப் பழித்தென்னு
மறைந்தபதிகத் தமிழ்மாலை நம்பிசாத்த வருட்சேரர்
சிறந்தவந்தா தியிற்சிறப்பித் தனவேயோதித் திளைத்தெழுந்தார். (அசு)

---

திருமறைக்காடு.

திருச்சிற்றம்பலம்.

யாழைப்பழித் தன்னம்மொழி மங்கையொரு பங்கன்
பேழைச்சடை முடிமேற்பிறை வைத்தானிடம் பேணிற்
றாழைப்பொழி லூடேசென்று பூழத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங் குண்ணு மறைக்காடே.

பாரூர்வன புடைசூழ்வன வயல்நாவலர் வேந்தன்
வாரூர்வன முலையாளுமை பங்கன்மறைக் காட்டை
யாரூரன தமிழ்மாலைகள் பாடும்மடித் தொண்டர்
நீரூர்தரு நிலனேடுயர் புகழாகுவர் தானே.

திருச்சிற்றம்பலம்.

---

எழுந்துபணிந்து புறத்தெய்தி யிருவர்பெருந்தொண் டருஞ்சிலநாட்
செழுந்தண்பழனப் பதியதனு ளமர்ந்துதென்பாற் றிரைக்கடளஞ்
சமுந்துமிடற்று ரகத்தியான் பள்ளியிறைஞ்சி யவிர்மதியக்
கொழுந்துவளர்செஞ் சடைக்குழகர் கோடிக்கோயில் குறுகினர். (அஎ)

கோடிக்குழகர் கோயிலயர் குடிகளொன்றும் புறத்தெங்கு
நாடிக்காணு துள்புக்கு நம்பர்பாதந் தொழுதுள்ளம்
வாடிக்கடிதாய்க் கடற்காற்றென் றெடுத்துமலர்க்கண் ணீர்வாரப்
பாடிக்கரடு காள்புணர்ந்த பரிசும்பதிகத் திடைவைத்தார். (அஅ)

---

திருக்கோடிக்குழகர்-பண்-கொல்லி

திருச்சிற்றம்பலம்.

கடிதாய்க்கடற் காற்றுவந்தெற்றக் கரைமேற்
குடிகானயலே யிருந்தார் குற்றமாமோ
கொடியேன் கண்கள்கண்டன கோடிக்குழகீ
ரடிகேளுமக் கார்துணையாக விருந்தீர்.

பாரூர்மலிசூழ் மறைக்காட்டதன் றென்பா
லேரார்பொழில் சூழ்தருகோடிக் குழகை
யாரூரனுரைத் தனபத்திவை வல்லார்
சீரூர்சிவ லோகத்திருப்பவர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அமுதகடநாதர். தேவியார்-மையார்தடங்கண்ணம்மை.

திருப்பதிகம்—க.

---

அங்குவைகிப் பணிந்தருளாற் போவாரகன்சோ ணாட்டானர்
தங்குமிடங்கள் வணங்கிப்போய்ப் பாண்டிநாடு தனைச்சார்ந்து
திங்கண்முடியார் திருப்புத்தூ ரிறைஞ்சிப்போந்து சேண்விளங்கு
மங்குறவழு மணிமாட மதுரைமூதூர் வந்தணைந்தார். (அக)

வேறு.

சேரமான் றோழருமச் சேரனு ரும்பணிப்பூ
ணாரமார் பரைமதுரை யாலவாயினில் வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமா நகர்கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார். (கூ0)

தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்க ணினிதிருந்த சோழனு
ரன்னவர்க ளுடன்கூட வணையவவ ருங்கூடி
மன்னுதிரு வாலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார். (கூக)

திருவால வாயமர்ந்த செஞ்சடையார் கோயில்வலம்
வருவார்முன் வீழ்ந்திறைஞ்சி வன்றொண்டர் வழித்தொண்டு
தருவாரைப் போற்றிசைத்துத் தாழ்ந்தெழுந்து வாழ்ந்ததமிழ்ப்
பெருவாய்மை மலர்புனைந்து பெருமகிழ்ச்சி பிறங்கினார். (கூ௨)

படியேறு புகழ்ச்சேரர் பெருமானும் பார்மிசைவீழ்ந்
தடியேனைப் பொருளாக வளித்ததிரு முகக்கருணை
முடிவேதென் றறிந்திலே னெனமொழிக டடுமாறக்
கடிபேறு கொன்றையார் முன்பரவிக் களிகூர்ந்தார். (கூ௩)

செம்பியனு ருடன்செழியர் தாம்பணிந்து சேரருட
னம்பியுமுன் புறத்தணைய நண்ணியபே ருவகையா
லும்பர்பிரான் கோயிலினின் றுடன்கொடுபோ யிருவர்க்கும்
பைம்பொன்மணி மாளிகையிற் குறைவறுத்தார் பஞ்சவனார். (கூ௪)

உளமகிழக் கும்பிட்டங் குறையுநா ளுதியருடன்
கிளரொளிப்பூண் வன்றொண்டர் தாமிருந்த விடங்கெழுமி
வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோ
டளவளா வியவிருப்பா னமர்ந்துகலத் தினிதிருந்தார். (கூ௫)

அந்நாளின் மதுரைநகர் மருங்கரனு ரமர்பதிகள்
பொன்னூர மணிமார்பிற் புரவலர்மூ வரும்போதச்
செந்நாவின் முனைப்பாடித் திருநாடர் சென்றிறைஞ்சிச்
சொன்மாலை களுஞ்சாத்தித் தொழத்திருப்பூ வணத்தணைந்தார். (௯௯)

நீடுதிருப் பூவணத்துக் கணித்தாக நேர்செல்ல
மாடுவருந் திருத்தொண்டர் மன்னியவப் பதிகாட்டத்
தேடுமறைக் கரியாரைத் திருவுடையா ரென்றெடுத்துப்
பாடிசையிற் பூவணமீ தோவென்று பகர்ந்தணைந்தார். (௯எ)

---

திருப்பூவணம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திருவுடை யார்திரு மாலய னாலு
முருவுடை யாருமை யாளையோர் பாகம்
பரிவுடை யாரடை வார்வினை தீர்க்கும்
புரிவுடை யாருறை பூவண மீதே.

சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவண
மார விருப்பிட மாவுறை வானை
யூர னுரைத்தசொன் மாலைகள் பத்திவை
பாரி லுரைப்பவர் பாவ மறுப்பரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பூவணநாதர். தேவியார்-மின்னம்மை.

திருப்பதிகம்—ச.

---

சென்றுதிருப் பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோயின்
முன்றில்வலங் கொண்டிறைவர் முன்வீழ்ந்து பணிந்தெழுந்து
நின்றுபர விப்பாடி நேர்நீங்கி யுடன்பணிந்த
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினர். (௯அ)

அப்பதியி லமர்ந்திறைஞ்சிச் சிலநாளி லாரூரர்
முப்பெருவேந் தர்களோடு முதன்மதுரை நகரெய்தி
மெய்ப்பரிவிற் றிருவால வாயுடையார் விரைமலர்த்தா
ளெப்பொழுதும் பணிந்தேத்தி யின்புற்றங் கமர்கின்றார். (௯௯)

செஞ்சடையார் திருவாப்ப னூர்திருவே டகமுதலா
நஞ்சணியுங் கண்டரவர் தாநயந்த பதிநண்ணி
யெஞ்சலிலாக் காதலினு லினிதிறைஞ்சி மீண்டணைந்து
மஞ்சணையு மதின்மதுரை மாநகரின் மகிழ்ந்திருந்தார். (௧00)

பரமர்திருப் பரங்குன்றிற் சென்றுபார்த் திபரோடு
புரமெரித்தார் கோயில்வலங் கொண்டுபுகுந் துள்ளிறைஞ்சிச்
சிரமலிமா லைச்சடையார் திருவடிக்கீ ழாட்செய்யு
மருமையினேந் தஞ்சுதுமென் றூரூரர் பாடுவார். (௧0௧)

கோத்திட்டை யெனவெடுத்துக் கோதிறிருப் பதிகவிசை
மூர்த்தியார் தமைவணங்கி முக்கோக்க டம்முன்பே
யேத்தியவண் டமிழ்மாலை யின்னிசைபா டிப்பரவிச்
சாத்தினார் சங்கரனார் தங்குதிருப் பரங்குன்றில். (௧0௨)

---

திருக்கோத்திட்டையுங் கோவலும்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கோத்திட்டையுங் கோவலுங் கோயில்கொண் டீருமைக் கொண் டெழல்கிறதோர் கொல்லைச்சில்லை, சேர்த்திட்டக் குத்தித் தெருவேதிரியுஞ் சிலபூதமுநீருந் திசைதிசையன, சோத்திட்டு விண்ணோர் பலருந்தொழ நும் மரைக்கோவணத்தோ டொருதோல்புடைசூழ்ந், தார்த்திட்ட தும் பரம் புகைக்கொண்டதும் பாம்படிகேளுமக் காட்செயவஞ்சுதுமே.

அடிகேளுமக்காட் செயவஞ்சுதுமென் றமரர்பெருமானை யாரூரனஞ்சி, முடியாலுலகாண் டமூவேந்தர்முன்னே மொழிந்தாறு மோர்நான்கு மோரொன்றினையும், படியாவிவைகற்று வல்லவடியார் பரங்குன்ற மேய பரமனடிக்கே, குடியாகிவரனோர்க்கு மோர்கோவுமாகிக் குலவேந்தராய் விண்முழு தாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

---

இறைவர்திருத் தொண்டுபுரி யருமையினை யிருநிலத்து
முறைபுரியு முதல்வேந்தர் மூவர்களுங் கேட்டிறைஞ்சி
மறைமுந்நூன் மணிமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோ ரப்பாலு நிருத்தர்பதி தொழநினைந்தார். (௧0௩)

அந்நாட்டுத் திருப்பதிகள் பிறவுமணைந் திறைஞ்சிமலை
நன்னாட்டு வேந்தருட னம்பிதா மெழுந்தருள
மின்னாட்டும் பன்மணிப்பூண் வேந்தரிரு வருமீள்வார்
தென்னாட்டு வேண்டுவன செய்தமைப்பார் தமைவிடுத்தார். (௧0௪)

இருபெருவேந் தருமியல்பின் மீண்டதற்பி னெழுந்தருளும்
பொருவருஞ்சீர் வன்றொண்டர் புகழ்ச்சேர ருடன்புனிதர்
மருவியதா னம்பலவும் பணிந்துபோய் மலைச்சாரற்
குருமணிகள் வெயிலெறிக்குங் குற்றாலஞ் சென்றணைந்தார். (௧0௫)

குற்றாலத் திடையமர்ந்த கூத்தர்குரை கழல்வணங்கிச்
சொற்றம மலர்புனைந்து குறும்பலாத் தொழுதிப்பான்
முற்றுவெண் மதிமுடியார் பதிபணிந்து மூவெயில்கள்
செற்றார்மன் னியசெல்வத் திருநெல்வே லியையணைந்தார். (கoசு)

நெல்வேலி நீற்றழகர் தமைப்பணிந்து பாடிநிகழ்
பல்வேறு பதிபிறவும் பணிந்தன்பால் வந்தணைந்தார்
வில்வேட ராய்வென்றி விசயனெதிர் பன்றிப்பின்
செல்வேத முதல்வரமர் திருவிரா மேச்சுரத்து. (கoஎ)

மன்னுமிரா மேச்சுரத்து மாமணியை முன்வணங்கிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பயில்கின்றார் பாம்பணிந்த
சென்னியர்மாந் தோட்டத்துத் திருக்கேதீச் சரஞ்சார்ந்து
சொன்மலர்மா லைகள்சாத்தித் தூரத்தே தொழுதமர்ந்தார். (கoஅ)

---

திருக்கேதீச்சரம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

நத்தார்புடை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்த மணவாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேற்
செத்தாரெலும் பணிவான்றிருக் கேதீச்சரத் தானே.

கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருட்
சிறையார்பொழில் வண்டாழ்செய்யுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரன்னடித் தொண்டன்னுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே.

---

திருச்சிற்றம்பலம்

திருவிரா மேச்சுரத்துச் செழும்பவளச்சுடர்க் கொழுந்தைப்
பரிவினாற் றொழுதகன்று பரமர்பதி பிறபணிந்து
பெருவிமா னத்திமையோர் வணங்குபெருந் திருச்சுழியன்
மருவினார் வன்றொண்டர் மலைவேந்த ருடன்கூட. (கoகூ)

திருச்சுழிய லிடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையாரைக்
கருச்சுழியின் வீழாமைக் காப்பாரைக் கடல்விடத்தி
னிருட்சுழியு மிடற்றாரை யிறைஞ்சியெதி ரிதழிமலர்ப்
பருச்சுழியத் தடனுனு யுயிரொனும்பா மலர்புனைந்தார். (ககo)

---

திருச்சுழியல்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

ஊனாயுயிர் புகலாயக லிடமாய்முகில் பொழியும்
வானாயதன் மதியாய்விதி வருவானிடம் பொழிலின்
றேனாதரித் திசைவண்டின மிழற்றுந்திருச் சுழிய
லானாவித னினைவார்தமை நலியார்நமன் றமரே.

நீரூர்தரு நிமலன்றிரு மலையார்க்கய லருகே
தேரூர்தரு மூர்க்கன்சிர நெரித்தான்றிருச் சுழியல்
பேரூரென வுறைவானடிப் பெயர்நாவலர் கோமா
னாரூரன தமிழ்மாலைபத் தறிவார்துய ரிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்கணனைப் பணிந்துறையு மாரூரர்க் கவ்வூரிற்
கங்குலிடைக் கனவின்கட் காளையாந் திருவடிவாற்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுட
னெங்குமிலாத் திருவேட மென்புருக முன்காட்ட. (கககா)

கானப்பேர் யாமிருப்ப தெனக்கழறிக் கங்கையெனும்
வானப்பே ராறுலவு மாமுடியார் தாமகல
ஞானப்பே ராளருணர்ந் ததிசயித்து நாகமுட
னேனப்பே ரெயிறணிந்தா ரருளிருந்த பரிசென்பார். (ககஉ)

கண்டருளும் படிகழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரிகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போ
யண்டர்பிரான் றிருக்கானப் பேரணைவா ராரூரர்
தொண்டரடி தொழலுமெனுஞ் சொற்பதிகத் தொடைதொடுத்தார். ()

---

திருக்கானப்பேர்-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

தொண்டரடித்தொழலுஞ் சோதியிளம்பிறையுஞ் சூதனமென்முலையாள் பாகமுமாகிவரும்,புண்டரிகப்பரிசா மேனியும்வானவர்கள் பூசலிடக்கடனஞ் சுண்டகருத்தமருங்,கொண்டலெனத்திகழுங் கண்டமுமெண்டோளுங் கோலநறுஞ்சடைமேல் வண்ணமுங்கண்குளிரக், கண்டுதொழப்பெறுவ தென்றுகொலோவடியேன் கார்வயல்சூழ்கானப் பேருறைகாளையையே.

கன்னலையின்னமுதைக் கார்வயல்சூழ்கானப் பேருறைகாளையை யொண் சீருறைதண்டமிழா,லுன்னிமனத்தயரா வுள்ளுருகிப்பரவு மொண்பொழில்நாவலர்கோ னாகியவாரூரன்,பன்னுமிசைக்கிளவி பத்திவைபாடவல்லார் பத்தர்குணத்தினராயெத்திசையும்புகழ,மன்னியிருப்பவர்கள் வானிலிழிந்திடினும் மண்டலநாயகராய் வாழ்வதுநிச்சயமே.

திருச்சிற்றம்பலம்

---

காளையார் தமைக்கண்டு தொழப்பெறுவ தென்றென்று
தாளானு ளும்பரவத் தருவார்பாற் சார்கின்று
ராளாநீ ளிடைக்காண வஞ்சியநீர் நாயயலே
வாளைபாய் நுழைப்பழன முனைப்பாடி வளநாடர். (கககச)

மன்னுதிருக் கானப்பேர் வளம்பதியில் வந்தெய்திச்
சென்னிவளர் மதியணிந்தார் செழுங்கோயில் வலங்கொண்டு
முன்னிறைஞ்சி யுள்ளணைந்து முதல்வர்சே வடிதாழ்ந்து
பன்னுசெழுந் தமிழ்மாலை பாடினர் பரவினர். (கககரு)

ஆராத காதலுட னப்பதியிற் பணிந்தேத்திச்
சீராருந் திருத்தொண்டர் சிலநாளங் கமர்ந்தருளிக்
காராரு மலர்ச்சோலைக் கானப்பேர் கடந்தணைந்தார்
போரானேற் றூர்கயிலைப் பொருப்பர்திருப் புனவாயில். (கககசு)

புனவாயிற் பதியமர்ந்த புனிதரா லயம்புக்கு
மனுமார்வ முறச்சித்த நீடுமென மென்றெடுத்து
வினவான தமிழ்பாடி வீழ்ந்திறைஞ்சி யப்பதியிற்
சின்வானை யுரித்தணிந்தார் திருப்பாதந் தொழுதிருந்தார். (கககஎ)

---

திருப்புனவாயில்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

சித்தநீநினை யென்னொடு சூளறும்வைகலு
மத்தயானையி னீருரிபோர்த்தம ணாளனூர்
பத்தர்தாம்பலர் பாடிநின் றாடும்பழம்பதி
பொத்திலாந்தைகள் பாட்டறாப் புனவாயிலே.

பொடியாடு மேனியன்பொன் புனஞ்சூழ் புனவாயிலை
யடியா ரடியென்னு வலவூர னுரைத்தன
மடியாதுகற் றிவையேத்த வல்லார்வினை மாய்ந்துபோய்க்
குடியாகப் பாடிநின் றாடவல்லார்க் கில்லைகுற்றமே.

திருப்புனவா யிற்பதியி லமர்ந்தசிவ னார்மகிழும்
விருப்புடைய கோயில்பல பணிந்தருளான் மேவினார்
பொருப்பினொடு கானகன்று புனற்பொன்னி நாடணைந்து
பருப்பதவார் சிலையார்தம் பாம்பணிமா நகர்தன்னில். (௧௧௮)

பாதாளீச் சரமிறைஞ்சி யதன்மருங்கு பலபதியும்
வேதாதி நாதர்கழல் வணங்கிமிகு விரைவினுடன்
சூதாருந் துணைமுலையார் மணிவாய்க்குத் தோற்றிரவு
சேதாம்பல் வாய்திறக்குந் திருவாரூர் வந்தணைந்தார். (௧௧௯)

திருநாவ லூர்வேந்தர் சேரர்குல வேந்தருடன்
வருவாரைத் திருவாரூர் வாழ்வார்க ளெதிர்கொள்ளத்
தருகாத லுடன்வணங்கித் தம்பெருமான் கோயிலினுட்
பெருகார்வத் தொடுவிரும்பும் பெரும்பேறு பெறப்புகுந்தார். (௧௨௦)

வாசமலர்க் கொன்றையார் மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுற முன்னிறைஞ்சி நெடிதுபொழு தெலாம்பரவி
யேசறவாற் றிருப்பதிகமெடுத்தேத்தி யெழுந்தருளாற்
பாசவினைத் தொடக்கறுப்பார் பயில்கோயில் பணிந்தணைவார். (௧௨௧)

பரவையார் மாளிகையிற் பரிசனங்கண் முன்னெய்த
விரவுபே ரலங்கார விழுச்செல்வ மிகப்பெருக
வரவெதிர்கொண் டடிவணங்க வன்றொண்டர் மலைநாட்டுப்
புரவலனா ரையுங்கொண்டு பொன்னணிமா ளிகைபுகுந்தார். (௧௨௨)

பரவியே பரவையார் பரிந்துடனே பணிந்தேத்தி
விரவியபோ னகங்கறிகள் விதம்பலவா கச்சமைத்துப்
பரிகலமும் பாவாடை பகல்விளக்கு முடனமைத்துத்
திருவமுது செய்வித்தார் திருந்தியதேன் மொழியினார். (௧௨௩)

மங்கலமாம் பூசனைகள் பரவையார் செயமகிழ்ந்து
தங்கியினி தமர்கின்றார் தம்பிரான் கோயிலினுட்
பொங்குபெருங் காலமெலாம் புக்கிறைஞ்சிப் புறத்தணைந்து
நங்கள்பிரான் றமரவர்க ணல்விளையாட் டினைநயந்தார். (௧௨௪)

நிலைச்செண்டும் பரிச்செண்டும் விசித்த மகிழ்வெய்தி
விலக்கரும்போர்த் தகர்ப்பாய்ச்சல் கண்டருளி வென்றிபெற
மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி
யலைக்குமறப் பலபுள்ளி னமர்விரும்பி யமர்கின்றார். (௧௨௫)

வேறு.

விரவுகாதன் மீக்கூர மேவுநாள்கள் பலசெல்லக்
கரவிலீகைக் கேரளனார் தங்கள்கடல்சூழ் மலைநாட்டுப்
பரவையார்தங் கொழுநனார் தம்மைப்பணிந்து கொண்டணைவா
னிரவும்பகலும் தொழுதிரக்க விசைந்தாரவரு மெழுந்தருள. (௧௨௬)

நங்கள்பரவை யாருள்ளத் திசைவாணம்பி யெழுந்தருளத்
திங்கண்முடியார் திருவருளைப் பரவிச்சேர மான்பெருமா
ளெங்குமுள்ள வடியாருக் கேற்றபூசை செய்தருளிப்
பொங்குமுயர்ச்சி யிருவரும்போய்ப் புக்கார்புனிதர் பூங்கோயில் (கஉஎ)

தம்பிரானைத் தொழுதருளாற் போந்துதொண்டர் சார்ந்தணைய
நம்பியாரூ ரருஞ்சேரர் நன்னாட்டரச ரானாய
பைம்பொன்மணிநீண் முடிக்கழறிற் றறிவார்தாமும் பயணமுடன்
செம்பொனிடு மதிளாரூர் தொழுதுமேல்பாற் செல்கின்றார். (கஉஅ)

வேறு.

பொன்பரப்பி மணிவரன்றிப் புனல்பரக்குங் காவேரித்
தென்கரைபோய்ச் சிவன்மகிழ்ந்த கோயில்பல சென்றிறைஞ்சி
மின்பரப்புஞ் சடையண்ணல் விரும்புதிருக் கண்டியூ
ரன்புருக்குஞ் சிந்தையுடன் பணிந்துபுறத் தணைந்தார்கள். (கஉகூ)

வடகரையிற் றிருவையா றெதிர்தோன்ற மலர்க்கரங்க
ளுடலுருக வுள்ளுருக வுச்சியின்மேற் குவித்தருளிக்
கடல்பரந்த தெனப்பெருகுங் காவிரியைக் கடந்தேறித்
தொடர்வுடைய திருவடியைத் தொழுவதற்கு நினைவுற்றார். (கஙo)

வேறு.

ஐயாறதனைக் கண்டுதொழு தருளாரூரர் தமைநோக்கிச்
செய்யாள்பிரியாச் சேரமான் பெருமாளருளிச் செய்கின்றார்
மையார்கண்டர் மருவுதிரு வையாறிறைஞ்ச மனமுருகி
நையாநின்ற திவ்வாறு கடந்துபணிவோ மாமென்ன. (கஙக)

ஆறுபெருகி யிருகரையும் பொருதுவிசும்பி லெழுவதுபோல்
வேறுநாவா யோடங்கண் மீதுசெல்லா வகைமிகைப்ப
நீறுவிளங்குந் திருமேனி நிருத்தர்பாதம் பணிந்தன்பி
னாறுநெறியாச் செலவரியார் தரியாதழைத்துப் பாடுவார். (கஙஉ)

பரவும்பரிசென் றெடுத்தருளிப் பாடுந்திருப்பாட் டின்முடிவி
லரவம்புனைவார் தமையையா றுடையவடிக ளோவென்று
விரவுவேட்கை யுடனழைத்து விளங்கும்பெருமைத் திருப்பதிக
நிரவுமிசையில் வன்றொண்டர் நின்றுதொழுது பாடுதலும் (கஙங)

---

திருவையாறு-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பரவும்பரிசொன் றறியேனான் பண்டேயும்மைப் பயிலாதே
யிரவும்பகலும் நினைந்தாலு மெய்தநினைய மாட்டேனான்
கரவிலருவி கமுகுண்ணத் தெங்கங்குலைக்கீழ்க் கருப்பாலை
யிரவந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ.

கூடியடியா ரிருந்தாலுங் குணமொன்றில்லீர் குறிப்பிலீ
ரூடியிருந்து முணர்கிலே னும்மைத்தொண்ட னூரனேன்
றேடியெங்குங் காண்கிலேன் றிருவாரூரோ சிந்திப்ப
னாடுந்திருக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ.

திருச்சிற்றம்பலம்.

---

மன்றினிறைந்து நடமாட வல்லார்தொல்லை யையாற்றிற்
கன்றுதடையுண் டெதிரழைக்கக் கதறிக்கனைக்கும் புனிற்றுப்போ
லொன்றுமுணர்வாற் சராசரங்க ளெல்லாங்கேட்க வோலமென
நின்றுமொழிந்தார் பொன்னிமா நதியுநீங்கி நெறிகாட்ட. (கரு௪)

விண்ணின்முட்டும் பெருக்காறு மேல்பாற்பளிக்கு வெற்பென்ன
நண்ணிநிற்கக் கீழ்பானீர் வடிந்தநடுவு நல்லவழிப்
பண்ணிக்குளிர்ந்த மணற்பரப்புக் கண்டதொண்டர் பயின்மாரி
கண்ணிற்பொழிந்து மயிர்ப்புளகங் கலக்கக்கையஞ் சலிகுவித்தார். ()

நம்பிபாதஞ் சேரமான் பெருமாள்பணிய நாவலூர்ச்
செம்பொன்முந்நூன் மணிமார்பர் சேரர்பெருமா னெதிர்வணங்கி
யும்பர்நாத ருமக்களித்த தன்றேவென்ன வுடன்மகிழ்ந்து
தம்பிரானைப் போற்றிசைத்துத் தடங்காவேரி நடுவணைந்தார். (கருசு)

செஞ்சொற்றமிழ வலர்கோனுஞ் சேரர்பிரானுந் தம்பெருமா
னெஞ்சலில்லா நிறையாற்றி னிடையேயளித்த மணல்வழியிற்
றஞ்சமுடைய பரிசனமுந் தாமுமேறித் தலைச்சென்று
பஞ்சநதிவா ணரைப்பணிந்து விழுந்தாரெழுந்தார் பரவினார். (கருஎ)

அங்கணரனார் கருணையினை யாற்றாதாற்றித் திளைத்திறைஞ்சித்
தங்கள்பெருமான் றிருவருளாற் றாழ்ந்துமீண்டுந் தடம்பொன்னிப்
பொங்குநதியின் முன்வந்த படியேநடுவு போந்தேறத்
துங்கவரைபோ னின்றநீர் துரந்துதொடரப் பெருகியதால். (கருஅ)

ஆயசெயலி னதிசயத்தைக் கண்டக்கரையி லையாறு
மேயபெருமா னருள்போற்றி வீழ்ந்துதாழ்ந்து மேல்பாற்போய்த்
தூயமதிவாழ் சடையார்தம் பதிகள்பிறவுந் தொழுதேத்திச்
சேயகொங்கர் நாட்டணைந்தார் திருவாரூரர் சேரருடன். (கருகூ)

கொங்குநாடு கடந்துபோய்க் குலவுமலைநாட் டெல்லையுற
நங்கள்பெருமான் றோழனார் நம்பிதம்பி ரான்றோழ
ரங்கணுடனே யணையவெழுந் தருளாநின்ற தனும்விருப்பா
லெங்குமந்நாட் டுள்ளவர்க ளெல்லாமெதிர்கொண் டின்புறுவார். (௧௬0)

பதிகளெங்குந் தோரணங்கள் பாங்கரெங்கும் பவளங்கள்
வதிகளெங்குங் குளிர்ப்பந்தர் மனைகளெங்கு மகிற்புகைக்கார்
நதிகளெங்கு மலர்ப்பிறங்கன் ஞாங்கரெங்கு மோங்குவள
நிதிகளெங்கு முழவினொலி நிலங்களெங்கும் பொலஞ்சுடர்ப்பூ. (௧௬௧)

திசைகடோறும் வரும்பெருமை யமைச்சர்சேனைப் பெருவெள்ளங்
குசைகொள்வாசி நிரைவெள்ளங் கும்பயானை யணிவெள்ள
மிசைகொள்பண்ணும் பிடிவெள்ள மேவுஞ்சோற்று வெள்ளங்கண்
டிசைவினின்பப் பெருவெள்ளத் தமர்ந்துகொடுங்கோ ளூரணைந்தார். ()

கொடுங்கோளூரின் மதில்வாயி லணிகோடித்து மறுகிலுடுத்
தொடுங்கோபுரங்கண் மாளிகைகள் சூளிகுளிர்சா லைகடெற்றி
நெடுங்கோநகர்க ளாடரங்கு நிரந்தமணித்தா மங்கமுகு
விடுங்கோதைப்பூந் தாமங்க ணிரைத்து வெவ்வே றலங்கரித்து. (கசங)

நகரமாந்த ரெதிர்கொள்ள நண்ணியெண்ணி லரங்குதொறு
மகரக்குழைமா தர்கள்பாடி யாடிமணிவீ தியிலணைவார்
சிகரநெடுமா ளிகையணைவார் சென்றுதிருவஞ் சைக்களத்து
நிகரின்றொண்டர் தமைக்கொண்டு புகுந்தாருதியர் நெடுந்தகையார். (கசச)

இறைவர்கோயின் மணிமுன்றில் வலங்கொண்டிறைஞ்சி யெதிர்புக்கு
நிறையுங்காத லுடன்வீழ்ந்து பணிந்துநேர்நின் றாரூரர்
முறையில்விளம்புந் திருப்பதிக முடிப்பதுகங்கை யென்றெடுத்துப்
பிறைகொண்முடியார் தமைப்பாடிப் பரவிப்பெருமா ளுடன்றொழுதார்

---

முடிப்பதுகங்கை-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

முடிப்பதுகங் கையுந்திங்களுஞ் செற்றதுமூவெயில்
நொடிப்பதுமாத் திரைநீறெழக் கணைநூறினர்
கடிப்பதுமேறு மென்றஞ்சுவன் றிருக்கைகளாற்
பிடிப்பதுபாம் பன்றியில்லையோ வெம்பிரானுக்கே.

காசினமால் விடைமாணிக்கத் தெங்கறைக்கண்டத்
தீசனையூ ரெட்டோடிரண்டும் விரும்பிய
வாயினசீர்ப் பகைஞானியப் பண்டித்தொண்டன்றூ
ரேசினபேசுமின் றொண்டர்க ளெம்பிரானையே.

திருச்சிற்றம்பலம்.

---

தொழுதிளைத்துப் புறம்போந்து தோன்றப்பண்ணும் பிடிமேற்பார்
முழுதுமேத்த நம்பியைமுன் பேற்றிப்பின்பு தாமேறிப்
பழுதின்மணிச்சா மரைவீசிப் பைம்பொன்மணிமா ளிகையில்வரும்
பொழுதுமறுகி லிருபுடையு மிடைந்தார்வாழ்த்திப் புகல்கின்றார். (கசசா)

நல்லதோழர் நம்பெருமா டமக்குநம்பி யிவரென்பா
ரெல்லையில்லாத் தவமுன்பென் செய்தோமிவரைத் தொழவென்பார்
செல்வமினியென் பெறுவதினிச் சிலம்புநாட்டுக் கெனவுரைப்பார்
சொல்லுந்தரமோ பெருமாள்செய் தொழிலைப்பாரீ ரெனத்தொழுவார். (

பூவும்பொரியும் பொற்சுகளும் பொழிந்துபணிவார் பொருவிலிவர்
மேவும்பொன்னித் திருநாடே புவிக்குத்திலத மெனவியப்பார்
பாவுந்துதிக ளெம்மருங்கும் பயிலவந்து மாளிகையின்
மாவுங்களிறு நெருங்குமணி வாயில்புகுந்து மருங்கிழிந்தார். (௧௪௮)

கழறிற்றறியுந் திருவடியுங் கலைநாவலர்தம் பெருமானு
முழுவிற்பொலியுந் திருநெடுந்தோண் முனைவர்தம்மை யுடன்கொண்டு
விழவிற்பொலிய மாளிகையில் விளங்குசிங்கா சனத்தின்மிசை
நிழறிக்கொளிரும் பூணரை யிருத்தித்தாமு நேர்நின்று. (௧௪௯)

செம்பொற்கரக வாசநீர் தேவிமார்க ளெடுத்தேந்த
வம்பொற்பாதந் தாம்விளக்கி யருளப்புகலு மாரூரர்
தம்பொற்றுளை வாங்கியிது தகாதென்றருளத் தரணியில்வீழ்ந்
தெம்பெற்றிமையாற் செய்தனவிங் கெல்லாமிசைய வேண்டுமென. ()

பெருமாள்வேண்ட வெதிர்மறுக்க மாட்டாரன்பிற் பெருந்தகையார்
திருமாநெடுந்தோ ளுதியர்பிரான் செய்தவெல்லாங் கண்டிருந்தா
ரருமானங்கொள் பூசனைக ளடைவேயெல்லா மளித்ததற்பி
னொருமாமதிவெண் குடைவேந்த ருடனேயமுது செய்துவந்தார். (௧௫௧)

சேரவுடனே திருவமுது செய்தபின்பு கைகோட்டி
யாரநறுமென் கலவைமான் மதச்சாந்தாடை யணிமணிப்பூ
ணீரவிரைமென் மலர்ப்பணிக ளினையமுதலா யினவருக்கஞ்
சாரவெடுத்து வன்றொண்டர் சாத்திமிக்க தமக்காக்கி. (௧௫௨)

பாடலாட லின்னியங்கள் பயிறன்முதலாம் பண்ணையினில்
நீடுமினிய விநோதங்கள் நெருங்குகாலந் தொறுநிகழ
மாடுவிரைப்பூந் தருமணஞ்செ யாராமங்கள் வைகுவித்துக்
கூடமுனைப்பா டியர்கோவைக் கொண்டுமகிழ்ந்தார் கோதையார். (௧௫௩)

வேறு.

சென்றாடுந் தொழின்மகிழ்வுஞ் சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்
வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டுந்
தண்டாமும் மதகும்பத் தடமலைப்போர் சலமற்போர்
கண்டாரா விருப்பெய்தக் காவலனுர் காதல்செய்தார். (௧௫௪)

நாவலர்தம் பெருமானுந் திருவாரூர் நகராளுந்
தேவர்பிரான் கழலொருநாண் மிகநினைந்த சிந்தையரா
யாவியையா ரூரானை மறக்கலுமா மேயென்னு
மேவியசொற் றிருப்பதிகம் பாடியே வெருவுற்றார். (௧௫௫)

திருவாரூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பொன்னுமெய்ப்பொருளுந் தருவானைப் போகமுந்திருவும் புணர்ப்பானைப், பின்னையென்பிழையைப் பொறுப்பானைப் பிழையெல்லாந்தவிரப் பணிப்பானை, யின்னதன்மையனென் றறிவொண்ணா வெம்மானையெளி வந்தபிரானை, யன்னம்வைகும்வயற் பழனத்தணியா ரூரானைமறக்கலு மாமே.

ஒருரொன்றுல கங்களுக்கெல்லா முரைக்கலாம்பொரு ளாயுடன்கூடிக் காருருங்கமழ் கொன்றைநன்மாலை முடியன்காரிகை காரணமாக வாரூரைமறத் தற்கரியானை யம்மான்றன்றிருப்பேர் கொண்டதொண்டனாரூரன்னடிநா யுரைவல்லார் மாலோகத்திருப் பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவாரூர் தனைநினைந்து சென்றுதொழு வேனென்று
மருவார்வத் தொண்டருடன் வழிக்கொண்டு செல்பொழுதி
லொருவாநண் புள்ளுருக வுடனெழுந்து கைதொழுது
பெருவான வன்பினுற் பிரிவாற்றுர் பின்செல்வார். (கறுசு)

வன்றொண்டர் முன்னெய்தி மனமகிழ்ந்த வுணர்வினரா
யின்றுமது பிரிவாற்றே னென்செய்கேன் யானென்ன
வொன்றுநீர் வருந்தாதே யுமதுபதி யின்கணிருந்
தன்றினுர் முனைமுருக்கி யரசாளு மெனமொழிந்தார். (கறுஎ)

ஆருரர் மொழிந்தருள வதுகேட்ட வருட்சேரர்
பாரோடு விசும்பாட்சி யெனக்குமது பாதமலர்
தேருருநெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள
நேருரு மனக்காத லீக்கவுமஞ் சுவனென்றுர். (கறுஅ)

மன்னவனு ரதுமொழிய வன்றொண்ட ரெதிர்மொழிவா
ரென்னுயிருக் கின்னுயிரா மெழிலாரூர்ப் பெருமானை
வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன் மதியணிந்தா
ரின்னருளா லரைசளிப்பீர் நீரிருப்பீ ரெனவிறைஞ்சி. (கறுகூ)

மற்றவரும் பணிந்திசைந்தே மந்திரிக டமையழைத்துப்
பொற்புநிறை தொன்னகரி விற்றைக்கு முன்புகுந்த
நற்பெரும்பண் டாரநா னுவருக்க மானவெலாம்
பற்பலவா ளின்மிசை யேற்றிவரப் பண்ணுமென. (கசூ0)

ஆங்கவரு மன்றுவரை யாயமா கியதனங்க
ளோங்கியபொ னவமணிக ளொளிர்மணிப்பூண் டுகில்வருக்க
ஞாங்கர்நிறை விரையுறுப்ப வருக்கமுத லலஞ்சிறப்பத்
தாங்குபொதி வினைஞர்மேற் றலமலியக் கொண்டணைந்தார். (கசூக)

மற்றவற்றின் பரப்பெல்லாம் வன்றொண்டர் பரிசனத்தின்
முற்படவே செலவிட்டு முனைப்பாடித் திருநாடர்
பொற்பதங்கள் பணிந்தவரைத் தொழுதெடுத்துப் புனையலங்கல்
வெற்புயர்தோ ளுறத்தழுவி விடையளித்தார் வன்றொண்டர். (௧௬௨)

ஆரூர ரவர்தமக்கு விடையருளி யங்ககன்று
காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமு
நீரூருங் கான்யாறு நெடுங்கானும் பலகழியச்
சீரூருந் திருமுருகன் பூண்டிவழிச் செலவணைந்தார். (௧௬௩)

திருமுருகன் பூண்டியயற் செல்கின்ற பொழுதின்கட்
பொருவிடையார் நம்பிக்குத் தாமேபொன் கொடுப்பதலா
லொருவர்கொடுப் பக்கொள்ள வொண்ணாமைக் கதுவாங்கிப்
பெருகருளாற் றாங்கொடுக்கப் பெறுவதற்கோ வதுவறியோம். (௧௬௪)

வென்றிமிகு பூதங்கள் வேடர்வடி வாய்ச்சென்று
வன்றொண்டர் பண்டாரங் கவரவருள் வைத்தருள
வன்றினார் புரமெரித்தா ரருளால்வேட் டுவப்படையாய்ச்
சென்றவர்தாம் வருவழியி லிருபாலுஞ் செயிர்த்தெழுந்து. (௧௬௫)

வில்வாங்கி யலகம்பு விசைநாணிற் சந்தித்துக்
கொல்வோமிங் கிட்டுப்போ மெனக்கோபத் தாற்குத்தி
யெல்லையில்பண் டாரமெலாங் கவர்ந்துகொள விரிந்தோடி
யல்லலுடன் பதியுண்டா ராரூரர் மருங்கணைந்தார். (௧௬௬)

ஆரூரர் தம்பாலவ் வேடுவர்சென் றணையாதே
நீரூருஞ் செஞ்சடையா ரருளினா னீங்கவவர்
சேரூராந் திருமுருகன் பூண்டியினிற் சென்றெய்திப்
போரூரு மழவிடையார் கோயிலினா டிப்புக்கார். (௧௬௭)

அங்கணர்தங் கோயிலினை யஞ்சலிகூப் பித்தொழுது
மங்குலுற நீண்டதிரு வாயிலினை வந்திறைஞ்சிப்
பொங்குவிருப் புடன்புக்கு வலங்கொண்டு புனிதநதி
திங்கண்முடிக் கணிந்தவர்தந் திருமுன்பு சென்றணைந்தார். (௧௬௮)

உருகியவன் பொடுகைகள் குவித்துவிழுந் துமைபாக
மருவியதம் பெருமான்முன் வன்றொண்டர் பாடினார்
வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தி லெத்துக்கிங்
கருகிருந்தீ ரெனக்கொடுகு வெஞ்சிலையஞ் சொற்பதிகம். (௧௬௯)

---

திருமுருகன்பூண்டி-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

கொடுகுவெஞ் சிலைவடுக வேடுவர்விர வலாமைசொல்லித்
திடுகுமொட் டெனக்குத்திக் கூறைகொண்டா றலைக்குமிடம்
முடுகுநாறிய வடுகர்வாழ் முருகன்பூண்டி மாநகர்வா
யிடுகுநுண்ணிடை மங்கைதன்னொடு மெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே.

முந்திவானவர் தாந்தொழுமுருகன் பூண்டிமா நகர்வாய்ப்
பந்தணைவிரற் பாவைதன்னையொர் பாகம் வைத்தவனைச்
சிந்தையிற்சிவ தொண்டனூர னுரைத்தன பத்துங்கொண்
டெந்தம்மடிக ளீரேயத்து வாரிடரொன்றுந் தாமிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஆவுடையநாயகர். தேவியார்-ஆவுடையநாயகி.

திருப்பதிகம்—க.

---

பாடியவர் பரவுதலும் பரம்பொருளா மவரருளால்
வேடுவர்தாம் பறித்தபொரு ளவையெல்லாம் விண்ணெருங்க
நீடுதிரு வாயிலின்முன் குவித்திடலு நேரிறைஞ்சி
யாடுமவர் திருவருளா லப்படியே கைக்கொண்டார். (௬௭௦)

கைக்கொண்டு கொடுபோமக் கைவினைஞர் தமையேவி
மைக்கொண்ட மிடற்றாரை வணங்கிப்போய்க் கொங்ககன்று
மெய்க்கொண்ட காதலினல் விரைந்தேகி மென்கரும்புஞ்
செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் திருவாரூர் சென்றணைந்தார். (௬௭௧)

நாவலர்மன் னவரருளால் விடைகொண்ட நரபதியார்
ஆவியினொன் றாநண்பி னாரூரர் தமைநினைந்து
மாவலரு மலர்ச்சோலை மகோதையினின் மன்னிமலைப்
பூவலயம் பொதுநீக்கி யரசுரிமை புரிந்திருந்தார். (௬௭௨)

இந்நிலைமை யுதியர்பிரா னெம்பிரான் வன்றொண்டர்
பொன்னிவள நாடகன்று மகோதையினின் மேற்புகுந்தால்
மன்னுதிருக் கயிலையினின் மதவரைமே லெழுந்தருள
முன்னர்வயப் பரியுகைக்குந் திருத்தொழில்பின் மொழிகின்றாம். (௬௭௩)

மலைமலிந்த திருநாட்டு மன்னவனார் மாகடல்போற்
சிலைமலிந்த கொடித்தானைச் சேரலனார் கழல்போற்றி
நிலைமலிந்த மணிமாட நீண்மறுகு மாளிகைசூழ்
தலைமலிந்த புகழ்க்காழிக் கணநாதர் திறமுரைப்பாம். (௬௭௪)

ஆ திருவிருத்தம் - ௨௦௨௫.

---

திருச்சிற்றம்பலம்.

மலைநாட்டிலே, இராஜதானியாகிய மகோதையென்னும் பெயரை யுடைய கொடுங்கோளூரிலே, சேரர்குடியிலே, பெருமாக்கோதையாரென்னும் பெயரையுடைய ஒரு சற்புத்திரர் சைவநெறி வாழும்படி அவதரித்தார். அவர் பாலியதசையிலேதானே, வியாதிபீடையினால் வருஞ் சனனவைராக்கியம், தன்னுடைய தேகதோஷத்தைக் கண்டுவருந் தேகவைராக்கியம், சகலசம்பத்துக்களையுங் குறைவற அனுபவித்து இனிப்போதும் என்றுவரும் ஐசுவரியவைராக்கியம், ஆன்மிக தைவிக ஆதிபௌதிகங்களினாலே வரும் பிரபஞ்ச வைராக்கியம், அருத்தத்தைத் தேடுதலினாலுங் காத்தலினாலுங் கள்ளர் கொண்டுபோதலினாலும் உண்டாகுந் துக்கம்பற்றி வருந் திரவியவைராக்கியம், தாய் தந்தை மனைவி மைந்தர் சுற்றத்தார் நண்பர் முதலாயினாரைப் பிரிந்த துக்கத்தினாலே கூட்டமெல்லாம் பிரிந்த காலத்திலே துக்கத்துக்கு ஏதுவென்று வருஞ்சங்கவைராக்கியம், காமுகனாயிருக்கின்றவன் தான் மோகிக்கப்பெற்ற ஸ்திரீயினிடத்திலே குணத்திலாயினும் தேகத்திலாயினும் வைராக்கிய கேதுவாகிய ஒருதோஷத்தைக் கண்டபோது வரும் ஸ்திரீவைராக்கியம், அன்னபானாதிகள் ஒருபொழுது இல்லாதிருக்கினும் தேகம் நில்லாது எத்தனைநாள் எத்தனை வகையாகப் புசித்தாலும் திருத்தியடையாதுஎன்று வரும் போசனவைராக்கியம், தானத்துக்குப்போய்த் தள்ளுண்டதனால் வரும் பிரதிக்கிரகவைராக்கியம், இகத்திலே இப்படிப்பட்டதொரு ஏதுவுமின்றிப் பூர்வஜன்ம சிவபூஜா புண்ணியபலத்தினாலே தேகாதியாகிய சர்வவஸ்துக்களினும் வரும் வைராக்கியம் என்னும் பத்துவகை வைராக்கியங்களுள் இறுதியில் நின்ற நிருகேதுகமாகிய உத்தமவைராக்கியத்தை யுடையவராகி, சிவபெருமானுடைய திருவடியை அடைதல்வேண்டுமெனக் கருதி, இராஜபுத்திரருக்குரிய தொழில்களைச் செய்தலின்றி, திருவஞ்சைக்களமென்னுஞ் சிவஸ்தலத்தை அடைந்து, "பரமசிவன் சுவதந்திரர், நாம் பரதந்திரர்" என்று உணர்ந்து, சிவாதீனமாய் நின்று தினந்தோறும் பிராமமுகூர்த்தத்தில் எழுந்து, ஸ்நானம்பண்ணி அநுட்டானஞ் செய்துகொண்டு திருநந்தனவனம் வைத்தல், பூக்கள் பறித்தல், திருமாலை கட்டல், திருவலகிடல், திருமெழுக்கிடல், திருப்பாட்டுப்பாடல் முதலிய திருத்தொண்டுகளைச் செய்வாராயினார்.

இப்படிநிகழுங்காலத்திலே, செங்கோற்பொறையன் என்னுஞ்சேரமகாராஜனுக்கு இதுநித்தியம் இதுஅநித்தியம் என்கின்றபகுத்தறிவும் அநித்தியமாகிய இம்மை மறுமை யின்பங்களில் வெறுப்பும், பிறவித்துன்பங்களும், அவன்செய்த புண்ணிய பலத்தினாலே தோன்றின. அவை தோன்றவே, நித்தியமாகிய மோக்ஷத்திலே ஆசை உண்டாயிற்று. அதனால் அவன் பிறவிக்குக் காரணமாகிய வினைமுயற்சிகளை விட்டு,மோக்ஷ

த்திற்குக் காரணமாகிய யோகமுயற்சியைச் செய்யல்வேண்டு மென்று தெளிந்து, அரசியற்றுதலினின்று நீங்கி, தவஞ்செய்யும் பொருட்டுத் தபோவனத்தை அடைந்தான்.

மந்திரிமார்கள் சிலநாள் ஆலோசித்துத் தெளிந்து, திருவஞ்சைக்களத்திலே திருத்தொண்டு செய்துகொண்டிருக்கின்ற அச்சேரர் மரபிற்கு முதல்வராகிய பெருமாக்கோதையாரிடத்திலே போய், அவரைவணங்கி நின்று, "இம்மலைநாட்டை நீரே முடிசூடி அரசியற்றல்வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாக்கோதையார் "இவர்கள்வார்த்தை இன்பமயமாகிய திருத்தொண்டுக்கு இடையூறாயிருக்கின்றது. சிவபத்தியிலே சிறிதும் வழுவாது அரசியற்றுதற்குத் திருவருள் உளதாயின், இதனை எம்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்து அறிவேன்" என்று ஆலயத்தினுள்ளே பிரவேசித்து, சிவபெருமானை வணங்கி விண்ணப்பஞ்செய்து, அவருடைய திருவருளினாலே அவரிடத்தே வைத்தபத்திவழுவாது அரசியற்றுஞ்சத்தியையும், யாரும் யாவும் கழறினவைகளனைத்தையும் அறியும் அறிவையும், நாசமில்லாத மகாபராக்கிரமத்தையும், பெருங்கொடையையும், அரசருக்கு உரியபடை வாகனமுதலிய வெல்லாவற்றையுங்கை வரப்பெற்று, நமஸ்கரித்துக்கொண்டு, புறத்தணைந்து, மந்திரிமார்களுடைய வேண்டுகோளுக்கு உடன்பட்டார். மந்திரிமார்கள் பெருங்களிப்புடையர்களாகி, அவரை நமஸ்கரித்தார்கள்.

கழறிற்றறிவாராகிய அப்பெருமாக்கோதையார், ஆன்மாக்களெல்லாம் உய்யும்பொருட்டுச் சுபதினத்திலே சுபமுகூர்த்தத்திலே முடிசூடி சிவாலயத்தை வலஞ்செய்து, சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்தெழுந்து, யானைமேற்கொண்டு, கொற்றக்குடையும் வெண்சாமரமும் உரியவர்கள் தாங்க, மகா அலங்காரத்தோடு நகரிவலஞ்செய்தார். செய்யும்பொழுது, ஒருவண்ணான் தோளிலே உவர்ப்பொதி சுமந்துகொண்டு தமக்கு முன்னே வரக்கண்டு, அவனுடைய சரீரம் மழையினாலே கரைந்த உவர் ஊறப்பெற்று வெளுத்திருத்தலால், விபூதியை உத்தூளனஞ்செய்த சிவனடியாரது திருவேடம்போலுதலை உணர்ந்து, அந்தக்ஷணத்திலேதானே யானையினின்றும் இறங்கி, பேராசையோடு விரைந்து சென்று, கைதொழுதார். அது கண்டவுடனே அவ்வண்ணான் மனங்கலங்கி, அவரைவிழுந்து நமஸ்கரித்து, "அடியேனை யார் என்றுகொண்டது! அடியேன் அடிவண்ணான்" என்று சொல்ல; சேரமான் பெருமாணாயனாரும் "அடியேன் அடிச்சேரன். தேவரீர் திருநீற்றுவேடத்தை நினைப்பித்தீர். வருந்தாதே போம்" என்று சொல்லியருளினார். மந்திரிமார்கள் முதலாயினோரெல்லாரும் சேரமான்பெருமாணாயனாருடைய சங்கமபத்தி மிகுதியைக்கண்டு, ஆச்சரியமடைந்து, சிரசின்மேலே அஞ்சலிசெய்து தோத்திரம் பண்ணினார்கள். சேரமான்பெருமாணாயனார் யானைமேலேறி, நகரியை வலஞ்

கொண்டு, மாளிகைவாயிலிலே புகுந்து, யானையினின்றும் இறங்கி, மண்டபத்தை அடைந்து, இரத்தின சிங்காசனத்திலேறி, வெண்கொற்றக்குடை நிழற்ற, வெண்சாமரம் வீச, அரசர்கள் மலர்தூவி வணங்கித்துதிக்க வீற்றிருந்தருளினார். இங்ஙனமிருந்து, மனுநீதிநெறியை நடத்தி, எண்ணிறந்த அரசர்கள் திறைகொணர அகத்தும் புறத்தும் பகையை அறுத்து, சைவசமயம் அபிவிருத்தியாகும்படி அரசியற்றுவாராயினார்.

அந்நாயனார், தில்லையின்கணுள்ள திருச்சிற்றம்பலத்திலே ஆனந்த தாண்டவஞ் செய்தருளுஞ் சபாநாயகருடைய திருவடித்தாமரைகளே தாந்தேடும்பொருளும் தமக்குரிய பெருந்துணையுமென்று தெளிந்தமெய்யறிவினாலே, அத்திருவடியை மிகுந்த அன்பினோடு சைவாகமவிதிப்படி எந்நாளும் பூசிப்பாராயினார். பூசைமுடிவிலே சபாநாயகர் அவரைத் தமது திருச்சிலம்பொலியைக் கேட்பிப்பாராயினார். சேரமான்பெருமாணாயனார் சிவனடியார்களுக்குந் தரித்திரர்களுக்குங் கனகமாரி பொழிகின்றவராகி, பரமசிவனுக்கு உரிய பலயாகங்களைச் செய்தார்.

இப்படி நிகழுங்காலத்திலே, பாண்டிநாட்டிலே மதுரையில் எழுந்தருளியிருக்குஞ் சோமசுந்தரக்கடவுள் தம்மை அன்பினோடும் இசைப்பாட்டினாலே துதிக்கின்ற பாணபத்திரருக்குப் பெருஞ் செல்வத்தைக் கொடுத்தருளுதற்குத் திருவுளங்கொண்டு, இரவில் அவருக்குச்சொப்பனத்திலேதோன்றி, "உனக்குப் பொன் இரத்தினம் பட்டாடை முதலியவைகளெல்லாவற்றையும் நீ வேண்டியபடி குறைவின்றித் தரும்பொருட்டு,நம்மேல் எப்பொழுதும் அன்புடையனாகிய சேரனுக்கு ஓலை தருவோம். தாழ்க்காமற்போய்வா" என்று அருளிச்செய்து, "மதிமலி புரிசைமாடக் கூடற்—பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற—கன்னம் பயில்பொழி லால வாயின்—மன்னிய சிவன்யான் மொழிதருமாற்றம்—பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்—குரிமையி னுரிமையி னுதவியொளிதிகழ்—குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்—செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க—பண்பா லியாழ்பயில்பாண பத்திரன்—றன்போ லென்பா லன்பன் றன்பாற்—காண்பது கருதிப் போந்தனன்—மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே" என்னுந் திருப்பாசுரத்தை வரைந்த திருமுகத்தைக் கொடுத்தருளினார்.

பாணபத்திரர் அத்திருமுகத்தைத் தலைமேற்கொண்டு, அப்பொழுதே புறப்பட்டு, மலைநாட்டிற்சென்று, கொடுங்கோளூரை அடைந்து, மாளிகைக்கு முன் வந்து, சேரமான்பெருமாணாயனாருக்கு அறிவித்தார் உடனே அவர் சிரசின்மேலே கைகுவித்து, மிகுந்த அன்பினோடுங் கண்ணீர் சொரிய, எழுந்து மாளிகைக்குப் புறத்தில் வந்து, பாணபத்திரரைப் பலமுறை வணங்கி, "சுவாமீ, தேவரீர் அடியேனை ஒருபொரு

ளென மதித்துத் திருமுகங்கொண்டு வந்தீரோ" என்றார். அப்பொழுது பாணபத்திரர் சிவபிரானுடைய திருமுகத்தைக் கையிலே கொடுத்து வணங்க, சேரமான்பெருமாணாயனார் அதனை முடிமேற்கொண்டு கூத்தாடி, மொழி குழற, ஆனந்தவருவி சொரிய,பரவசராய்ப் பூமியிலே பலமுறை விழுந்தார். திருமுகத்தைப் பலதரம் வணங்கி, அதனை வாசித்து, திருவருளைத் துதித்து, மாளிகையினுள்ளே புகுந்து, மந்திரிமார்களை நோக்கி, "நம்முடைய குலமாளிகையில் இருக்கின்ற பண்டாரமுழுதையும் பொதிசெய்து ஆளின்மேல் ஏற்றிக்கொண்டு வாருங்கள்" என்று ஆஞ்ஞாபிக்க; அவர்கள் ஏற்றிக்கொண்டுவந்து வணங்கினார்கள். சேரமான்பெருமாணாயனார் பாணபத்திரருக்கு அந்தத்தனங்களை வெவ்வேறாகக் காட்டி, "சுவாமீ, தேவரீர் இவைகளையும் யானை குதிரை தேர் காலாள் என்னுஞ் சதுரங்கங்களையும் அடியேனுடைய அரசையுங் கைக்கொண்டருளும்" என்று சொல்ல, பாணபத்திரர் தமக்குச் சேரமான் பெருமாணாயனார் தந்த தனங்களெல்லாவற்றையுங்கண்டு, மனமகிழ்ந்து, அதிசயித்து, அவரை நோக்கி, "சுவாமீ, அடியேன் எனக்கு வேண்டுவனவற்றை மாத்திரங்கொள்ளும் பொருட்டே சிவாஞ்ஞை. அரசையும் அரசுறுப்பையும் தேவரீரே கைக்கொண்டருளும்" என்று சொல்லி வணங்கினார். சேரமான்பெருமாணாயனாரும் சிவாஞ்ஞையை மறுத்தற்கு அஞ்சி, அதற்கு உடன்பட்டார். பாணபத்திரர் தனங்களெல்லாவற்றையும் யானை குதிரை உள்ளிட்டனவற்றுள் வேண்டுவனவற்றையுங்கொண்டு, ஓர்யானைமேல் ஏறிக்கொண்டு போனார். சேரமான்பெருமாணாயனார் பாணபத்திரருக்குப் பின், கண்ணீர் சொரிய, கைதொழுதுகொண்டு செல்ல, பாணபத்திரர் நகர்ப்புறத்தில் அவரிடத்திலே விடைபெற்றுக்கொண்டு போய், மதுரையை அடைந்தார்.

சேரமான்பெருமாணாயனார், ஒருநாள் முன்போலப் பூஜாந்தத்திலே சபாநாயகருடைய திருச்சிலம்பொலி தமக்குக்கேளாதொழிய, மனமயங்கி, "அடியேன் யாது பிழை செய்தேனோ" என்றுபொருமி, "இனி இந்தத்தேகத்தினால் அடையும் வேறின்பம் யாது" என்று உடைவாளை உருவித் தமது மார்பிலேநாட்ட, சபாநாயகர் விரைந்து திருச்சிலம்பொலியைக் கேட்பித்தார். உடனே நாயனார் உடைவாளை அகற்றி நமஸ்காரம்பண்ணித் தோத்திரஞ்செய்து, "எம்பெருமானே, இத்திருவருளைமுன் செய்யாதொழிந்தது என்னை" என்றார். அப்பொழுது சபாநாயகர் சைவசமயாசாரியாராகிய சுந்தரமூர்த்திநாயனாரை நினைப்பிக்கும்பொருட்டு, எதிர்நின்றருளாது, "வன்றொண்டனாகிய சுந்தரன் கனகசபையின் கண்ணே நமது ஆனந்தநிருத்தத்தை வந்துவணங்கிப் பதிகம் பாடுதலால், நாம் நின்று அதனைக் கேட்டு வரத் தாழ்த்தோம்" என்னுந் திருவாக்கை அருளிச்செய்தார். சேரமான் பெருமாணாயனார் "அடியார்களுக்கு இவர் அருளுங்கருணை இருந்தவாறு என்னை" என்றுவியந்து

கனகசபையை வணங்கி வன்றொண்டரையும் தரிசித்தல்வேண்டும் என்று விரும்பி, சுபதினத்திலே திருவஞ்சைக்களத்தில் எழுந்தருளியிருக்குங்கடவுளை வணங்கிக்கொண்டு, சேனைகளோடு புறப்பட்டுப் போய்ச் சிதம்பரத்தை அடைந்து, கனகசபையிலே திருநிருத்தஞ்செய்தருளுஞ் சபாநாயகரை வணங்கி, சிவானந்தக்கடலுள் அமிழ்ந்தி, பொன்வண்ணத்தந்தாதி பாடியருளினார். சபாநாயகர் அதற்குப் பரிசிலாகத் தமது குஞ்சிதபாதத்தினது திருச்சிலம்பின் ஓசையை எதிரே கேட்பித்தார். சேரமான் பெருமாணாயனார் காலந்தோறுஞ் சபாநாயகரைத் தரிசனஞ்செய்துகொண்டு அத்திருப்பதியில் இருந்தார்.

சிலநாளாயினபின், சுந்தரமூர்த்திநாயனாரைத் தரிசித்து வணங்குதற்கு விரும்பிப் புறப்பட்டு, இடையில் உள்ள சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, திருவாரூரை அடைந்து, தம்மை எதிர்கொண்ட சுந்தரமூர்த்திநாயனாரை நமஸ்கரித்து, அவரோடு திருக்கோயிலிற்சென்று, வன்மீகநாதரை வணங்கி, திருமும்மணிக்கோவை பாடி, பரவையார்வீட்டிலேபோய் சுந்தரமூர்த்திநாயனாரோடும் இருந்தார். சிலதினஞ்சென்றபின், சுந்தரமூர்த்திநாயனாரோடு திருவாரூரை அகன்று,வேதாரணியத்தைஅடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, திருவந்தாதி பாடினார். அதன்பின் பாண்டிநாட்டிற்சென்று, அங்குள்ள மதுரை முதலாகிய திருப்பதிகளை வணங்கிக்கொண்டு, சுந்தரமூர்த்திநாயனாரோடுந் திருவாரூருக்குத் திரும்பிவந்து, அவரோடுஞ் சுவாமிதரிசனஞ்செய்துகொண்டிருந்தார். பலநாட்சென்றபின், சுந்தரமூர்த்திநாயனாரைத் தம்முடைய ஊருக்குவரும்படி பிரார்த்தித்து, அழைத்துக்கொண்டு சென்று, தம்முடைய கொடுங்கோளூரை அடைந்து, அவரோடும் இருந்தார். ஒருநாள் சுந்தரமூர்த்திநாயனார் வன்மீகநாதரை நினைந்து உருகி, திருவாரூருக்குப் போம்படி எழுந்துசெல்ல சேரமான்பெருமாணாயனார் பிரிவாற்றாதவராகி, எழுந்து அவரைப் பின்றொடர்ந்து, போகாதபடிதடுத்து, அதற்கு அவர் உடன்படாமை கண்டு மந்திரிகளைக்கொண்டு தம்முடைய திருமாளிகையில் உள்ளபண்டார முழுதையும் பொதிசெய்து ஆட்களின்மேலே ஏற்றுவித்து, சுந்தரமூர்த்திநாயனாருக்கு முன் செல்லும்படி அனுப்பி, அந்நாயனாரை விழுந்து நமஸ்கரித்தார். சுந்தரமூர்த்திநாயனார் சேரமான்பெருமாணாயனாரைத் தழுவி விடைகொடுத்துச் சென்று, திருவாரூரை அடைந்தார். சுந்தரமூர்த்திநாயனாரிடத்திலே விடைபெற்ற சேரமான்பெருமாணாயனார் சுந்தரமூர்த்திநாயனாரை மறவாத சிந்தையோடு, கொடுங்கோளூரிலே அரசுசெய்துகொண்டிருந்தார்.

நெடுநாளாயினபின், சுந்தரமூர்த்திநாயனார் பின்னுங்கொடுங்கோளூருக்கு வந்து, சேரமான்பெருமாணாயனாரோடும் எழுந்தருளியிருந்தார். பலநாளாயினபின், ஒருநாள் சேரமான்பெருமாணாயனார் ஸ்நா

ணம்பண்ணும்பொழுது, சுந்தரமூர்த்திநாயனார் திருவஞ்சைக்களத்துக்குப் போய், சுவாமிதரிசனஞ்செய்து, திருக்கைலாசத்தினின்றும் சிவபெருமானால் அனுப்பப்பட்ட வெள்ளையானையின்மேல் ஏறி, தம்முடைய தோழராகிய சேரமான்பெருமாணாயனாரை நினைத்துக்கொண்டு சென்றார். சேரமான்பெருமாணாயனார் சுந்தரமூர்த்திநாயனாருடையசெயலை அறிந்து அந்தக்ஷணத்தில் அருகிலே நின்ற ஓர் குதிரையில் ஏறிக்கொண்டு திருவஞ்சைக்களத்துக்குப்போய், வெள்ளையானையின்மேற்கொண்டு ஆகாயத்திற் செல்லுஞ் சுந்தரமூர்த்திநாயனாரைக் கண்டு, தாம் ஏறியகுதிரையின் செவியிலே ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதியருளினார். உடனே அந்தக்குதிரையானது ஆகாயத்திலே பாய்ந்து,சுந்தரமூர்த்திநாயனாருடைய வெள்ளையானையை அடைந்து, அதனை வலஞ்செய்து, அதற்கு முன்னாகச் சென்றது. சேரமான்பெருமாணாயனாருடைய படைவீரர்கள் குதிரையிற்செல்லும்அந்நாயனாரைத் தங்கள் கண்ணுக்குப் புலப்படும் எல்லைவரைக்கும் ஆகாயத்திலே கண்டு, பின் காணாமையால், மிகுந்த திடபத்தியினாலே உருவிய உடைவாட்களினால் தங்கள் தங்கள் தேகத்தை வீழ்த்தி, வீரயாக்கையைப் பெற்றுப் போய், சேரமான்பெருமாணாயனாருக்கு முற்பட்டு, அவரைச் சேவித்துக்கொண்டு சென்றார்கள். சேரமான்பெருமாணாயனாரும் சுந்தரமூர்த்திநாயனாரும், திருக்கைலாசத்தின் தெற்குவாயிலுக்கு முன்போனவுடனே, குதிரையினின்றும் யானையினின்றும் இறங்கி, பலவாயில்களையும் கடந்து, திருவணுக்கன்றிருவாயிலை அடைந்தார்கள். அங்கே சேரமான்பெருமாணாயனார் தடைப்பட்டு நிற்க; சுந்தரமூர்த்திநாயனார் உள்ளே போய்ச் சிவசந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து, ஸ்தோத்திரம்பண்ணி, "சுவாமீ, தேவரீருடைய திருவடிகளை அடையும்பொருட்டுச் சேரமான்பெருமாள் திருவணுக்கன்றிருவாயிலின் புறத்திலே வந்து நிற்கின்றார்" என்று விண்ணப்பஞ்செய்தார். பரமசிவன் சேரமான்பெருமாணாயனாரை உள்ளே அழைப்பிக்க; அவர் விரைந்து வந்து, சந்நிதானத்திலே நமஸ்கரித்துத் தோத்திரம்பண்ணினார். பரமசிவன்திருமுறுவல்செய்து, "இங்கே நாம் அழையாதிருக்க, நீ வந்ததென்னை" என்று அருளிச்செய்ய; சேரமான்பெருமாணாயனார் அஞ்சலிசெய்து நின்று, "சுவாமீ, சுந்தரமூர்த்திநாயனாருடைய திருவடிகளைத் துதித்து அவர் ஏறிய வெள்ளையானைக்குமுன் அவரைச்சேவித்துக்கொண்டு வந்தேன், தேவரீர் பொழிகின்ற பெருங்கருணை வெள்ளம் முன்கொண்டு புகுதலால், திருமுன்பு வரப்பெற்றேன். இனி ஒரு விண்ணப்பம் உண்டு. அரிபிரமேந்திராதி தேவர்களாலும் முனிவர்களாலும் வேதங்களாலும் துதிக்கப்படுதற்கு அரிய பெருமையையுடைய தேவரீர் மேல் அன்பினாலே தேவரீரது திருவருள்கொண்டு திருவுலாப்பாடினேன். அதனைத் தேவரீர் திருச்செவிசாத்தல்வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்தார். அப்பொழுது சிவபெருமான் "சேரனே, அவ்வுலாவைச் சொல்லு" என்று

திருவாய்மலர்ந்தருள; சேரமான்பெருமாணாயனாரும் அதனைக் கேட்பித்தார். சிவபெருமான் அதற்கு அருள்செய்து, "நம்முடைய கணங்களுக்கு நாதனாய் இரு" என்று திருவாய்மலர்ந்தருளினார். சேரமான்பெருமாணாயனார் சிவகணநாதராகிச் சுவாமியைச்சேவிப்பாராயினார். அவர் அருளிச்செய்த திருக்கைலாசஞானவுலாவைத் திருக்கைலாசகிரியிலே அன்று கேட்ட மாசாத்தரானவர் அதனைத் தரித்து,தமிழ்நாட்டில் உள்ள திருப்பிடவூரிலே வெளிப்படச் சொல்லி, பூமியிலே விளங்கும்பொருட்டு காட்டியருளினார்.

திருச்சிற்றம்பலம்.

கழறிற்றறிவார்நாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கணநாதநாயனார் புராணம்.

ஆழிமாநிலத் தகிலமீன்றளித்தவ டிருமுலையமுதுண்ட
வாழிஞானசம் பந்தர்வந்தருளிய வளப்பினதளப்பில்லா
வூழிமாகடல் வெள்ளத்துமிதந்துல கினுக்கொருமுதலாய
காழிமாநகர்த் திருமறையவர்குலக் காவலர்கணநாதர். (க)

ஆயவன்பர்தா மணிமதிற்சண்பையி னமர்பெருந்திருத்தோணி
நாயனார்க்குநற் றிருப்பணியாயின நாளுமன்பொடுசெய்து
மேயவத்திருத் தொண்டினில்விளங்குவார் விரும்பிவந்தணைவார்க்குத்
தூயகைத்திருத் தொண்டினிலவர்தமைத் துறைதோறும்பயில்விப்பார்.()

நல்லநந்தன வனப்பணிசெய்பவர் நறுந்துணர்மலர்கொய்வோர்
பன்மலர்த்தொடை புனைபவர்கொணர்திரு மஞ்சனப்பணிக்குள்ளோ
ரல்லுநண்பக லுந்திருவலகிட்டுத் திருமெழுக்கமைப்போர்க
ளெல்லையில்விளக் கெரிப்பவர்திருமுறை யெழுதுவோர்வாசிப்போர். (ந)

இனையபஃறிருப் பணிகளிலணைந்தவர்க் கேற்றவத்திருத்தொண்டின்
வினைவிளங்கிட வேண்டியகுறையெல்லா முடித்துமேவச்செய்தே
மனையறத்திறம் புரிதலிற்றெண்டனா யாக்கியன்புறுவாய்மை
மனையறம்புரக் தடியவர்க்கின்புற வழிபடுந்தொழின்மிக்கார். (ச)

இப்பெருஞ்சிறப் பெய்தியதொண்டர்கா மேறுசீர்வளர்காழி
மெய்ப்பெருந்திரு ஞானபோனகர்கழன் மேவியவிருப்பாலே
முப்பெரும்பொழு தருச்சனைவழிபாடு மூளுமன்போடுநாளு
மொப்பில்காதல்கூ ருங்களிசிறந்திட வொழுகினார்வழுவாமல். (ரு)

ஆனதொண்டினி லமர்ந்தபேரன்பரு மகலிடத்தினிலென்று
ஞானமுண்டவர் புண்டரீகக்கழ லருச்சனைநலம்பெற்றுத்
தூநறுங்கொன்றை முடியவர்சுடர்நெடுங் கயிலைமால்வரையெய்தி
மானநற்பெருங் கணங்கட்குநாதராம் வழித்தொண்டினிலைபெற்றார். (சு)

உலகமுய்யநஞ் சுண்டவர்தொண்டினி னுறுதிமெய்யுணர்வெய்தி
யலகிறுண்டருக் கறிவளித்தவர்திற மவனியின்மிசையாக்கு
மலர்பெரும்புகழ்ப் புகலியில்வருங்கண நாதனார்கழல்வாழ்த்திக்
குலவுநீற்றுவண் கூற்றுவனார்திறங் கொள்கையின்மொழிகின்றாம். (எ)

ஆ. திருவிருத்தம் - கஎகூ௲.

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, சீர்காழியிலே, பிராமணகுலத்திலே, கண நாதநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருத்தோணியப்பருக்கு மிகுந்த அன்பினோடு தினந்தோறும் திருப்பணிகள் செய்பவர். தம்மை விரும்பி வந்து அடைபவர்களை, திருநந்தனவனம் வைத்தல், பூக்கொய்தல், திருமாலைகட்டல், திருமஞ்சனமெடுத்தல், திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கேற்றல், திருமுறையெழுதல், திருமுறைவாசித்தல் முதலாகிய திருத்தொண்டுகளுள் அவரவர்க்கு ஏற்ற திருத்தொண்டுகளிலே பயில்வித்து, அவர்களைச் சிவனடியார்களாக்குவார். கிருகத்தாச்சிரமத்தில் இருந்து சிவனடியார்களை வழிபடுவார். சமயகுரவராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரைத் தினந்தோறும் முப்பொழுதினும் பேராசையோடு விதிப்படி பூசைசெய்துகொண்டுவந்தார். அந்தப் பூசாபலத்தினாலே திருக்கைலாசமலையை அடைந்து, சிவகணங்களுக்கு நாதராயினார்.

திருச்சிற்றம்பலம்.

கணநாதநாயனார்புராண முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## கூற்றுவநாயனார்புராணம்.

துன்னார்முனைகடோள்வலியால் வென்றுகுலப் படையார்த
நன்னமந்திருநாவி னுருவிலு நலமிக்கார்
பன்னுளீசரடியார்தம் பாதம்பரவிப் பணிந்தேத்த
முன்னாகியநற் றிருத்தொண்டின் முயன்றார்களந்தை முதல்வனார். (க)

அருளின்வழியா லரசொதுங்க வவனியெல்லா மடிப்படுப்பார்
பொருளின்முடிவுங் காண்பரிய வகையாற்பொலிவித் திகல்சிறக்க
மருளுங்களிறு பாய்புரவி மணித்தேர்படைஞர் முதன்மாற்றார்
வெருளுங்கருவி நான்குநிறை வீரச்செருக்கின் மேலானர். (உ)

வென்றிவினையின் மீக்கூர வேந்தர்முனைகள் பலமுருக்கிச்
சென்றுதும்பைத் துறைமுடித்துஞ் செருவில்வாகைத் திறங்கமழு
மன்றன்மாலை மிலைந்தவர்தம் வளநாடெல்லாங் கவர்ந்துமுடி
யொன்றுமொழிய வரசர்திரு வெல்லாமுடைய ராயினர். (ங)

மல்லன்ஞாலம் புரக்கின்றார் மணிமாமவுலி புனைவதற்குத்
தில்லைவாழந் தணர்தம்மை வேண்டவவருஞ் செம்பியர்தந்
தொல்லைநீடுங் குலமுதலோர்க் கன்றிச்சூட்டோ முடியென்று
நல்காராகிச் சேரலன்றன் மலைநாடணைய நண்ணுவார். (ச)

ஒருமையுரிமைத் தில்லைவாழந் தணர்கடம்மி லொருகுடியப்
பெருமைமுடியை யருமைபுரி காவல்பேணும் படியிருத்தி
யிருமைமரபுந் தூயவர்தாஞ் சேரர்நாட்டி லெய்தியபின்
வருமையுறவான் மனந்தளர்ந்து மன்றுளாடுங் கழல்பணிவார். (ரு)

அற்றைநாளி லிரவின்க ணடியேன்றனக்கு முடியாகப்
பெற்றபேறு மலர்ப்பாதம் பெறவேவேண்டு மெனப்பரவும்
பற்றுவிடாது துயில்வோர்க்குக் கனவிற்பாத மலரளிக்க
வுற்றவருளா லவைதாங்கி யுலகமெல்லாந் தனிபுரந்தார். (சு)

அம்பொனீடு மம்பலத்து ளாராவமுதத் திருநடஞ்செய்
தம்பிரானர் புவியின்மகிழ் கோயிலெல்லாந் தனித்தனியே
யிம்பர்ஞாலங் களிகூர வெய்தும்பெரும்பூ சனையியற்றி
யும்பர்மகிழ வரசளித்தே யுமையாள்கணவ னடிசேர்ந்தார். (எ)

தேனுங்குழலும் பிழைத்ததிரு மொழியாள்புலவி தீர்க்கமதி
தானும்பணியும் பகைதீர்க்குஞ் சடையார்தூது தருந்திருநாட்
கூனுங்குருடுந் தீர்த்தேவல் கொள்வார்குலவு மலர்ப்பாதம்
யானும்பரவித் தீர்க்கின்றே னேழுபிறப்பின் முடங்குகூன். (அ)

காதற்பெருமைத் தொண்டினிலைக் கடல்சூழ்வையங் காத்தளித்துக்
கோதங்ககல முயல்களந்தைக் கூற்றனர்தங் கழல்வணங்கி
நாதமறைதந் தளித்தாரை நடைநூற்பாவி னவின்றேத்தும்
போதமருவிப் பொய்படிமை யில்லாப்புலவர் செயல்புகல்வாம். (கூ)

ஆகதிருவிருத்தம் - கஎஎஉ.

---

திருச்சிற்றம்பலம்.

களந்தையென்னும் பதியிலே, குறுநிலமன்னர் குலத்திலே, கூற்றுவநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை விதிப்படி உச்சரிப்பவர். சிவனடியார்களுக்குத் திருத்தொண்டு செய்பவர். அவர் திருவருள்வலியினாலே பெருஞ்செல்வமுடையராகி, கச ரத துரக பதாதியென்னுஞ் சதுரங்கங்கள் நிறைந்த வீரச்செருக்கில் மேலாயினார். பலவரசர்களோடு யுத்தஞ்செய்து, அவர்களை வென்று, அவர்களுடைய நாடுகளெல்லாவற்றையுங் கவர்ந்து, அரசர் திருவில் முடி ஒன்று தவிர மற்றவைகளெல்லாவற்றையும் உடையராயினார். உலகத்தை ஆளுதற்குத் தமக்கு முடிசூட்டும்பொருட்டுத் தில்லைவாழந்தணர்களை வேண்ட; அவர்கள் "நாங்கள் சோழகுலத்தாருக்கேயன்றி மற்றவர்களுக்கு முடி சூட்டோம்" என்று மறுத்து, தங்களுள் ஒருகுடியை முடியைக் காத்துக் கொள்ளும்படி இருத்தி, சேரமண்டலத்துக்குப் போயினார்கள்.

கூற்றுவநாயனார் ஐயுறவினாலே மனந்தளர்ந்து, சபாநாயகரைப் பணிந்து, அற்றைநாள் இரவிலே "எம்பெருமானே, அடியேனுக்குத் திருவடியையே முடியாகத் தந்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டு நித்திரை செய்ய; சபாநாயகர் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, தம்முடைய திருவடிகளை முடியாகச் சூட்டியருளினார். கூற்றுவநாயனார் அவைகளையே முடியாகச் சூடி, பூமி முழுதையும் பொதுநீக்கி ஆண்டார். சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற முக்கியஸ்தலங்களெங்குஞ் சென்று வணங்கி, திருப்பணிகள் செய்து, சிவபதம் அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

கூற்றுவநாயனார்புராண முற்றிற்று.

---

ஆறுவது,

வார்கொண்டவனமுலையாள்சருக்க முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது,

# பொய்யடிமையில்லாதபுலவர்சருக்கம்.

## பொய்யடிமையில்லாதபுலவர் புராணம்.

செய்யுணிகழ் சொற்றெளிவுஞ் செவ்வியநூல் பலநோக்கு
மெய்யுணர்வின் பயனிதுவே யெனத்துணிந்து விளங்கியொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானார்
பொய்யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார். (க)

பொற்பமைந்த வரவாரும் புரிசடையார் தமையல்லாற்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறி தலைநின்ற
பெற்றியினின் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையா ரறிந்துரைக்க வல்லார்கள். (உ)

ஆங்கவர்த மடியிணைக டலைமேற்கொண் டவனியெலாந்
தாங்கியவெண் குடைவளவர் குலஞ்செய்த தவமனையா
ரோங்கிவளர் திருத்தொண்டி னுண்மையுணர் செயல்புரிந்த
பூங்கழலார் புகழ்ச்சோழர் திருத்தொண்டு புகல்கின்றாம். (ந)

ஆ திருவிருத்தம் - கஎஎடு.

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலே சிறந்து விளங்குகின்ற துவாதசாந்தபுரமாகிய மதுராபுரியிலே, சோமசுந்தரக்கடவுளிடத்திலே, சதுரமாய் இரண்டுசாணளவினதாகி மெய்ப்புலவர்களுக்கெல்லாம் முழம் வளர்ந்து இருத்தற்கு இடங்கொடுக்கின்ற சங்கப்பலகையைப் பெற்று, அதனில் இருந்துகொண்டு தமிழ்மொழியை வளர்த்த கடைச் சங்கப்புலவர்கள் கபிலர், பரணர், நக்கீரர் முதலாக நாற்பத்தொன்பதின்மர். அவர்கள் விபூதி ருத்திராக்ஷதரர்களாய், ஸ்ரீபஞ்சாக்ஷரஜபபரர்களாகி, அகத்தியம் தொல்காப்பியம் என்னும் இலக்கணநூல்களின்படி, ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்னு நாற்கவிகளினாலும் மெய்யன்போடு பரமசிவனையே பாடி, பொய்யடிமையில்லாத புலவர்கள் எனப்பெயர்பெற்று, சிவபதம் அடைந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

பொய்யடிமையில்லாதபுலவர்புராண முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புகழ்ச்சோழநாயனார் புராணம்.

குலகிரியின் கொடுமுடிமேற் கொடிவேங்கைக் குறியெழுதி
நிலவுதரு மதிக்குடைக்கீழ் நெடுநிலங்காத் தினிதளிக்கு
மலர்புகழ்வண் டமிழ்ச்சோழர் வளநாடு மாமூதூ
ருலகில்வள ரணிக்கெல்லா முள்ளுறையூ ராமுறையூர். (க)

அளவில்பெரும் புகழ்நகர மதனிலணி மணிவிளக்கு
மிளவெயிலின் சுடர்ப்படலை யிரவொழிய வெறிப்பனவாய்க்
கிளரொளிசேர் நெடுவானப் பெயர்யாற்றுக் கொடிகெழுவும்
வளரொளிமா ளிகைநிரைகண் மருங்குடைய மறுகெல்லாம். (உ)

நாகதலத் தும்பிலத்து நானிலத்து நலஞ்சிறந்த
போகமனைத் தினுக்குறுப்பாம் பொருவிறந்த வளத்தினவாய்
மாகநிறைத் திடமலிந்த வரம்பில்பல பொருள்பிறங்கு
மாகரமொத் துளவளவி லாவணவீ திகளெல்லாம். (ங)

பார்நனைய மதம்பொழிந்து பனிவிசும்பு கொளமுழங்கும்
போர்முகவெங் கறையடியும் புடையினமென் றடையவருஞ்
சோர்மழையின் விடுமதத்துச் சுடருநெடு மின்னோடைக்
கார்முகிலும் பலதெரியா களிற்றினிரைக் களமெல்லாம். (ச)

படுமணியும் பரிச்செருக்கு மொளிகிளரப் பயில்புரவி
நெடுநிரைமுன் புல்லுணவாய் நீர்த்தரங்க நுரைநிவப்ப
விடுசுடர்மெய் யுறையடுக்கன் முகில்படிய விளங்குதலாற்
றொடுகடல்க ளனையபல துரங்கசா லைகளெல்லாம். (ரு)

துளைக்கையிரா பதக்களிறுந் துரங்கவர சுந்திருவும்
விளைத்தவமு துந்தருவும் விழுமணியுங் கொடுபோத
வுளைத்தகட லிவற்றென்று பெறவேண்டி யும்பரூர்
வளைத்ததுபோன் றுளதங்கண் மதில்சூழ்ந்த மலர்க்கிடங்கு. (சு)

காரோறுங் கோபுரங்கள் கதிரேறு மலர்ச்சோலை
தேரேறு மணிவீதி திசையேறும் வசையிலணி
வாரேறு முலைமடவார் மருங்கேறு மலர்க்கணையோன்
பாரேறும் புகழுறைந்தைப் பதியின்வளம் பகர்வரிதால். (எ)

அந்நகரிற் பாரளிக்கு மடலரச ராகின்றார்
மன்னுதிருத் தில்லைநகர் மணிவீதி யணிவிளக்குஞ்
சென்னிநீ டனபாயன் றிருக்குலத்து வழிமுதலோர்
பொன்னிநதிப் புரவலனார் புகழ்ச்சோழ ரெனப்பொலிவார். (அ)

ஒருகுடைக்கீழ் மண்மகளை யுரிமையினின் மணம்புணர்ந்து
பருவரைத்தோள் வென்றியினாற் பார்மன்னர் பணிகேட்பத்
திருமலர்த்தும் பேருலகுஞ் செங்கோலின் முறைநிற்ப
வருமறைச்சை வந்தழைப்ப வரசளிக்கு மந்நாளில். (கூ)

பிறைவளருஞ் செஞ்சடையார் பேணுசிவா லயமெல்லா
நிறைபெரும்பூ சனைவிளங்க நீடுதிருத் தொண்டர்தமைக்
குறையிரந்து வேண்டுவன குறிப்பின்வழி கொடுத்தருளி
முறைபுரிந்து திருநீற்று முதனெறியே பாலிப்பார். (க0)

அங்கணினி துறையுநா ளரசிறைஞ்ச வீற்றிருந்து
கொங்கரொடு குடபுலத்துக் கோமன்னர் திறைகொணரத்
தங்கள்குல மரபின்முதற் றனிநகராங் கருவூரின்
மங்கலநா ளரசுரிமைச் சுற்றமுடன் வந்தணைந்தார். (கக)

வந்துமணி மதிற்கருவூர் மருங்கணைவார் வானவர்சூ
ழிந்திரன்வந் தமரர்புரி யெய்துவா னெனவெய்திச்
சிந்தைகளி கூர்ந்தரனார் மகிழ்திருவா னிலைக்கோயின்
முந்துறவந் தணைந்திறைஞ்சி மொய்யொளிமா ளிகைபுகுந்தார். (கஉ)

மாளிகைமுன் னத்தரணி மண்டபத்தின் மணிபுனைபொற்
கோளரியா சனத்திருந்து குடபுலமன் னவர்கொணர்ந்த
யோளிநெடுங் களிற்றினணி யுலப்பில்பரி துலைக்கனக
நீளிடைவில் விலகுமணி முதனிறையுந் திறைகண்டார். (கங)

திறைகொணர்ந்த வரசற்குச் செயலுரிமைத் தொழிலருளி
முறைபுரியுந் தனித்திகிரி முறைநில்லா முரணரச
ருறையரண முளவாகிற் றெரிந்துரைப்பீ ரெனவுணர்வு
நிறைமதிநீ டமைச்சர்க்கு மொழிந்தருளி நிகழுநாள். (கச)

சென்றுசிவ காமியார் கொணர்திருப்பள் ளித்தாம
மன்றுசித றுங்களிற்றை யறவெறிந்து பாகரையுங்
கொன்றவெறி பத்தரெதி ரென்னையுங்கொன் றருளுமென
வென்றவடி வாள்கொடுத்துத் திருத்தொண்டின் மிகச்சிறந்தார். (கரு)

விளங்குதிரு மதிக்குடைக்கீழ் வீற்றிருந்து பாரளிக்குந்
துளங்கொளிநீண் முடியார்க்குத் தொன்முறைமை நெறியமைச்ச
ரளந்ததிறை முறைகொணரா வரசனுள னொருவனென
வுளங்கொள்ளும் வகையுரைப்ப வுறுவியப்பான் முறுவலிப்பார். (கசா)

ஆங்கவன்யா ரென்றருள வதிகனவ னணித்தாக
வோங்கெயில்சூழ் மலையரணத் துள்ளுறைவா னெனவுரைப்ப
வீங்குநுமக் கெதிர்நிற்கு மாறுளதோ படையெழுந்தப்
பாங்கரணந் துகளாகப் பற்றறுப்பீ ரெனப்பகர்ந்தார். (கஎ)

அடல்வளவ னாணையினா லமைச்சர்களும் புறம்போந்து
கடலனைய நெடும்படையைக் கைவகுத்து மேற்செல்வார்
படர்வனமு நெடுங்கிரியும் பயிலரணும் பொடியாக
மிடலுடைநாற் கருவியுற வெஞ்சமத்தை மிகவிளைத்தார். (கஅ)

வளவனார் பெருஞ்சேனை வஞ்சிமலர் மலைந்தேற
வளவிலர ணக்குறும்பி லதிகர்கோ னடற்படையு
முளநிறைவெஞ் சினந்திருகி யுயர்காஞ்சி மலைந்தேறக்
கிளர்கடல்க ளிரண்டென்ன விருப்படையுங் கிடைத்தனவால். (கசு)

வேறு.

கயமொடுகயமெதிர் குத்தின, வயமுடனயமுனை முட்டின
வயவரும்வயவரு முற்றனர், வியனமர்வியவிட மிக்கதே. (உ0)

மலையொடுமலைகண் மலைந்தென, வலைமதவருவி கொழிப்பொடு
சிலையினர்விசையின் மிசைத்தெறு, கொலைமதகரிகொலை யுற்றதே. (உக)

வேறு.

குறைமாருத மொத்தெதி, ரேறுபாய்பரி வித்தகர்
வேறுவேறு தலைப்பெய்து, சீறியாவி செகுத்தனர். (உஉ)

மண்டுபோரின் மலைப்பவர், துண்டமாயிட றுற்றெதிர்
கண்டராவி கழித்தன, ருண்டசோறு கழிக்கவே. (உங)

வீடினாருட லிற்பொழி, நீடுவார்குரு திப்புன
லோடும்யாறென வொத்தது, கோடுபோல்வ பிணக்குவை. (உச)

வானிலாவு கருங்கொடி, மேனிலாவு பருந்தின
மேனைநீள்கழு கின்குல, மானவூனொ டெழுந்தவே. (உரு)

வேறு.

வருவிற் கதைசக் கரமுற் காம்வாள்
சுரிகைப் படைசத் திகழுக் கடைவே
லெரிமுத் தலைகப் பணமெற் பயில்கோன்
முரிவுற் றனதுற் றதமொய் களமே. (உசு)

வடிவே லதிகள் படைமா ளவரைக்
கடிசூ ழரணக் கணவாய் நிரவிக்
கொடிமா மதினீ டுகுறும் பொறையூர்
முடிநே ரியனார் படைமுற் றியதே. (உஎ)

முற்றும் பொருசேனை முனைத் தலையிற்
கற்றிண் புரிசைப் பதிகட் டழியப்
பற்றுந் துறைநொச் சிபரிந் துடையச்
சுற்றும் படைவீரர் துனித் தனரே. (உஅ)

மாறுற்ற விறற் படைவா ளதிக
னூறுற்ற பெரும்படை நூழில் படப்
பாறுற்ற வெயிற் பதிபற் றறவிட்
டேறுற்றன னோடி யிருஞ் சுரமே. (உகூ)

அதிகன் படைபோர் பொருதற் றதலைப்
பொதியின் குவையெண் ணிலபோ யினபி
னிதியின் குவைமங் கையர்நீள் பரிமா
வெதிருங் கரிபற் றினரொண் ணிலரோ. (௩0)

அரண்முற்றி யெதிர்ந்த வமைச்சர் கடா
மிரணத் தொழில்விட் டெயில்சூழ் கருவூர்
முரணுற்ற சிறப்பொடு முன்னி னர்நீ
டரணித் தலைவன் கழல்சார் வுறவே. (௩க)

மன்னுங் கருவூர் நகர்வா யிலின்வாய்
முன்வந் தகருந் தலைமொய் குவைதான்
மின்னுஞ் சுடர்மா முடிவேல் வளவன்
றன்முன்பு கொணர்ந்தனர் தானை யுளோர். (௩உ)

மண்ணுக் குயிரா மெனுமன் னவனு
மெண்ணிற் பெருகுந் தலையா வையினு
நண்ணிக் கொணருந் தலையொன் றினடுக்
கண்ணுற்ற தோர்புன் சடைகண் டனரோ. (௩௩)

வேறு.

கண்டபொழு தேநடுங்கி மனங்கலங்கிக் கைதொழுது
கொண்டபெரும் பயத்தினுடன் குறித்தெதிர்சென் றதுகொணர்ந்த
திண்டிறலோன் கைத்தலையிற் சடைதெரியப் பார்த்தருளிப்
புண்டரிகத் திருக்கண்ணீர் பொழிந்திழியப் புரவலனார். (௩ச)

முரசுடைத்திண் படைகொடுபோய் முதலமைச்சர் முனைமுருக்கி
யுரைசிறக்கும் புகழ்வென்றி யொன்றேழிய வொன்றுமற்
றிரைசரித்த கடலுலகிற் றிருநீற்றி னெறிபுரிந்தியா
னரசளித்த படிசால வழகிதென வழிந்தபர்வார். (௩ரு)

தார்தாங்கிக் கடன்முடித்த சடைதாங்குந் திருமுடியார்
நீர்தாங்குஞ் சடைப்பெருமா னெறிதாங்கண் டவரானார்
சீர்தாங்கு மிவர்வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும்
பார்தாங்க விருந்தேனோ பழிதாங்கு வேனென்றார். (௩சு)

என்றருளிச் செய்தருளி யிதற்கிசையும் படிதுணிவார்
நின்றநெறி யமைச்சர்க்கு நீணிலங்காத் தரசளித்து
மன்றினடம் புரிவார்தம் வழித்தொண்டின் வழிநிற்ப
வென்றிமுடி யென்குமரன் றனைப்புனைவீ ரெனவிதித்தார். (௩௭)

அம்மாற்றங் கேட்டழியு மமைச்சரையு மிடரகற்றிக்
கைம்மாற்றுஞ் செயலுமே கடனாற்றுங் கருத்துடையார்
செம்மார்க்கந் தலைநின்று செந்தீமுன் வளர்ப்பித்துப்
பொய்ம்மாற்றுந் திருநீற்றுப் புனைகோலத் தினிற்பொலிந்தார். (௩௮)

கண்டசடைச் சிரத்தினையோர் கனகமணிக் கலத்தேந்திக்
கொண்டுதிரு முடித்தாங்கிக் குலவுமெரி வலங்கொள்வா
ரண்டர்பிரான் றிருநாமத் தஞ்செழுத்து மெடுத்தோதி
மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி யுள்புக்கார். (௩௯)

புக்கபொழு தலர்மாரி புவிநிறையப் பொழிந்திழிய
மிக்கபெரு மங்கலதூ ரியம்விசும்பின் முழக்கெடுப்பச்
செக்கர்நெடுஞ் சடைமுடியார் சிலம்பலம்பு சேவடியி
னக்கருணைத் திருநிழற்கீ ழாராமை யமர்ந்திருந்தார். (௪0)

முரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன்
பிரசங்கொ ணறுந்தொடையற் புகழ்ச்சோழர் பெருமையினைப்
பரசுங்குற் றேவலினு லவர்பாதம் பணிந்தேத்தி
நரசிங்க முனையர்திறம் நாமறிந்த படியுரைப்பாம். (௪௧)

ஆ. திருவிருத்தம் - ௪அ௧௯.

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலே, உறையூரிலே, புகழ்ச்சோழநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் மற்றையரசர்கள் பணிகேட்க, உலகந்தம்முடைய செங்கோலின் முறை நிற்க, சைவசமயந்தழைக்க, அரசியற்றினர். சிவாலயங்களெல்லாவற்றிலும் நித்திய நைமித்திகங்களை வழுவின்றி நடத்துவிப்பார். சிவனடியார்களுக்கு வேண்டுவனவற்றைக் குறிப்பறிந்து கொடுப்பார்.

இப்படியிருக்குநாளிலே, கொங்கதேசத்தரசரும், குடகதேசத்தரசரும் தருந்திறையை வாங்கும்பொருட்டு, தங்கள் குலத்தார்களுக்கு உரிய கருவூர் என்னும் இராஜதானியிலே அரசுரிமைச்சுற்றத்தோடு வந்தணைந்தார். அங்குள்ள ஆனிலை என்னுந் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பரமசிவனை வணங்கி, மாளிகையிலே புகுந்து, அத்தாணிமண்டபத்திலே சிங்காசனத்தில் வீற்றிருந்துகொண்டு, கொங்கதேசத்தர

சர்களும் குடகதேசத்தரசர்களுங்கொணர்ந்த திறைகளைக் கண்டு, அவர்களுக்கு அருள்புரிந்து, மந்திரிமாரை நோக்கி, "நம்முடைய ஆஞ்ஞாசக்கரத்துக்கு அமையாத அரசர்கள் இருக்கின்ற அரணங்கள் உளவாகில், தெரிந்து சொல்லுங்கள்" என்றார். இப்படி நிகழுநாளிலே, சிவகாமியாண்டார் கொணர்கின்ற புஷ்பங்களைச் சிதறிய தம்முடைய யானையையும் பாகர்களையும் கொன்ற எறிபத்தநாயனாரை அணைந்து, "என்னையுங்கொன்றருளும்" என்று, தமது வாளைக் கொடுத்து,திருத்தொண்டிலே மிகச் சிறந்து விளங்கினார்.

மந்திரிமார்கள் புகழ்ச்சோழநாயனாரை வணங்கி, "திறைகொணராத அரசன் ஒருவன் உளன்" என்று சொல்ல, புகழ்ச்சோழநாயனார் வியப்பினாலே புன்முறுவல் செய்து, "அவன் யாவன்" என்று வினவ, மந்திரிமார் "அவன் அதிகன் என்பவன். அவன் சமீபத்திலே மலையரணத்துள்ளே இருப்பவன்" என்றார்கள். அதுகேட்ட புகழ்ச்சோழநாயனார் "நீங்கள் படைகொண்டு சென்று அவ்வரணத்தைத் துகளாகப் பற்றறுத்து வாருங்கள்" என்று ஆஞ்ஞாபிக்க, மந்திரிமார் சேனையோடு சென்று, அம்மலையரணைப்பொடிபடுத்து, அதிகனுடைய சேனைகளை வதைத்தார்கள். அதிகன் அஞ்சி, ஓடிப்போய்ச்சுரத்தில் ஒளித்துவிட்டான். புகழ்ச்சோழநாயனாருடைய படைவீரர்களிற் பலர் அதிகனுடைய படைவீரர்களின் தலைகளையும், மற்றவர்கள் நிதிக்குவைகளையும் யானை குதிரைகளையுங்கொண்டு, மந்திரிமாரோடு கருவூரிலே வந்து சேர்ந்தார்கள். புகழ்ச்சோழநாயனார் தமக்கு முன்னே படைவீரர்கள் கொண்டுவந்த தலைக்குவைகளுள் ஒருதலையின் நடுவிலே ஒரு புன்சடையைக் கண்டார். கண்டபொழுதே நடுங்கி,மனங்கலங்கி, கைதொழுது, பெரும்பயத்தினுடனே எதிர்சென்று, அத்தலையிற் சடையைத் தெரியப்பார்த்து, கண்ணீர் சொரிய அழுது, "நான் சைவநெறியைப் பரிபாலித்து அரசியற்றியபடி மிக அழகிது. சடைமுடியையுடையவர் பரமசிவன் அருளிச்செய்த மெய்ந்நெறியைக் கண்டவர். அவருடைய சடைத்தலையைத் தாங்கிவரக் கண்டும் அதிபாதகனாகிய நான் பூமியைத் தாங்குதற்கு இருந்தேனோ" என்று சொல்லி, ஒன்றுசெய்யத் துணிந்து, மந்திரிமாரை நோக்கி, "பூமியைக் காத்து அரசளித்துப் பரமசிவனுக்கு வழித்தொண்டு செய்யும் பொருட்டு என்னுடைய குமாரனுக்கு முடிசூட்டுங்கள்" என்று விதித்து, அதனைக் கேட்டு அயரும் மந்திரிகளைத் தேற்றி அக்கினி வளர்ப்பித்து, விபூதியை உத்தூளனஞ்செய்து, சடைச்சிரத்தை ஒரு பொற்கலத்தில் ஏந்தி, தம்முடைய திருமுடியிலே தாங்கி, அவ்வக்கினியை வலஞ்செய்து, உயிர்த்துணையாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை எடுத்து ஓதிக்கொண்டு, அதனுள்ளே புகுந்து, பரமசிவனது திருவடி நிழலிலே அமர்ந்திருந்தார்.

திருச்சிற்றம்பலம்.

புகழ்ச்சோழநாயனார்புராண முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நரசிங்கமுனையரையநாயனார் புராணம்.

கோட்டாத நெறிவிளங்குங் குலமரபி னரசளித்து
மாடாக மணிகண்டர் திருநீறே மனங்கொள்வார்
தேடாத பெருவளத்திற் சிறந்ததிரு முனைப்பாடி
நாடாளுங் காவலனார் நரசிங்க முனையரையர். (௧)

இம்முனையர் பெருந்தகையா ரிருந்தரசு புரந்துபோய்த்
தெம்முனைகள் பலகடந்து தீங்குநெறிப் பாங்ககல
மும்முனைநீ ளிலைச்சூல முதற்படையார் தொண்டுபுரி
யம்முனைவ ரடியடைவே யரும்பெரும்பே றெனவடைவார். (௨)

சினவிடையார் கோயிறொறுந் திருச்செல்வம் பெருக்குநெறி
யனவிடையா ருயிர்துறக்க வருமெனினு மவைகாத்து
மனவிடையா மைத்தொடைய லணிமார்பர் வழித்தொண்டு
கனவிடையா கிலும்வழுவாக் கடனாற்றிச் செல்கின்றார். (௩)

ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநா டோறுமென்றும்
வேறுநிறை வழிபாடு விளங்கியபூ சனைமேவி
நீறணியுந் தொண்டரணைந் தார்க்கெல்லா நிகழ்பசும்பொ
னூறுகுறை யாமலளித் தின்னமுது நுகர்விப்பார். (௪)

ஆனசெயன் முறைபுரிவா ரொருதிருவா திரைநாளின்
மேன்மைநெறித் தொண்டர்க்கு விளங்கியபொன் னிடும்பொழுதின்
மானநிலை யழிதன்மை வருங்காமக் குறிமலர்ந்த
ஊனநிகழ் மேனியரா யொருவர்நீ றணிந்தணைந்தார். (௫)

மற்றவர்தம் வடிவிருந்த படிகண்டு மருங்குள்ளா
ருற்றவிகழ்ச் சியராகி யொதுங்குவார் தமைக்கண்டு
கொற்றவனா ரெதிர்நின்று கைகுவித்துக் கொடுபோந்தப்
பெற்றியினார் தமைமிகவுங் கொண்டாடிப் பேணுவார். (௬)

சீலமில ரேயெனினுந் திருநீறு சார்ந்தாரை
ஞாலமிகழ்ந் தருநரக நண்ணாம லெண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படியிரட்டிப் பொன்கொடுத்து
மேலவரைத் தொழுதினிய மொழிவிளம்பி விடைகொடுத்தார். (௭)

இவ்வகையே திருத்தொண்டி னருமைநெறி யெந்நாளுஞ்
செவ்வியவன் பினிலாற்றித் திருந்தியசிந் தையராகிப்
பைவ்வளர்வா ளரவணிந்தார் பாதமலர் நிழற்சேர்ந்து
மெய்வ்வகைய வழியன்பின் மீளாத நிலைபெற்ருர். (அ)

விடநாக மணிந்தபிரான் மெய்த்தொண்டு விளைந்தநிலை
யுடனுரு நரசிங்க முனையர்பிரான் கழலோதித்
தடநாக மதஞ்சொரியத் தலஞ்சொரியுங் கலஞ்சேருங்
கடனுகை யதிபத்தர் கடனுகைக் கவினுரைப்பாம். (௯)

ஆ. திருவிருத்தம் - ௲௮௨௫.

---

திருச்சிற்றம்பலம்.

திருமுனைப்பாடிநாட்டிலே, குறுநிலமன்னர்குலத்திலே, நரசிங்கமுனையரையநாயனுரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் தமக்குப் பெருஞ்செல்வமாவது விபூதியே என்னுஞ்சிந்தையுடையவர். சிவனடியார்களது திருவடியை அடைதலே தமக்குப் பெரும்பேறெனத் துணிந்தவர். அநித்தியமுந் துக்கமுமாகிய அரசியற்கையில் வைத்த விருப்பத்தாலன்று, சர்வான்மாக்களுஞ் சற்சமயமாகிய சைவத்தைக் கைக்கொண்டு முத்தியின்பத்தை அடைதல்வேண்டுமென்னும் பெருங்கருணையினுலே பலசத்துருமுனைகளைக் கடந்து, சைவநெறி வாழும்படி திருவருளை முன்னிட்டு நின்று அரசாள்வார். சிவாலயங்கடோறும் நித்திய நைமித்திகங்களை ஒழுங்குபெற நடத்துவிப்பார். திருவாதிரை நக்ஷத்திரந்தோறும் விசேஷபூசை செய்வித்து, தம்மிடத்தில் எழுந்தருளிவரும் சிவனடியார்களைத் திருவமுதுசெய்வித்து, அவர்களுக்குத் தனித்தனியே நூறுபொன் கொடுப்பார்.

ஒரு திருவாதிரை நக்ஷத்திரத்திலே அப்படியே அடியார்களுக்குப் பொன் கொடுக்கும்பொழுது, தூர்த்தவேடமுள்ள ஒருவர் விபூதி அணிந்துகொண்டு வந்தார். அவருடைய வடிவு இருந்தபடியைக் கண்டு, பக்கத்தில் உள்ளவர்கள் இகழ்ந்து ஒதுங்க; நரசிங்கமுனையரையர் அது கண்டு, எதிரே சென்று, அவரை அஞ்சலிசெய்து, அழைத்துக்கொண்டு போய், அவரை மிக உபசரித்து, சீலம் இல்லாதவர்களாயினும் விபூதியை அணிந்தவர்களை உலகத்தார் இகழ்ந்து நரகத்தில் வீழாவண்ணம் அவருக்கு இருநூறுபொன்கொடுத்து, அவரை வணங்கி, இன்சொற்சொல்லி, விடைகொடுத்து அனுப்பினுர். இந்தப்பிரகாரம் அருமையாகிய திருத்தொண்டுகள் பலவற்றைச் செய்து, சிவபதமடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

நரசிங்கமுனையரையநாயனுர்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அதிபத்தநாயனார்புராணம்.

மன்னிநீடிய செங்கதிரவன்வழி மரபின்
றொன்மையாமுதற் சோழர்தந்திருக்குலத் துரிமைப்
பொன்னிநாடெனுங் கற்பகப்பூங்கொடி மலர்போ
னன்மைசான்றது நாகபட்டணத்திரு நகரம். (௧)

தாமநித்திலக் கோவைகள்சரிந்திடச் சரிந்த
தேமலர்க்குழன் மாதர்பந்தாடுதெற் றிகள்சூழ்
காமர்பொற்சுடர் மாளிகைக்கருங்கடன் முகந்த
மாமுகிற்குல மலையெனவேறுவ மருங்கு. (௨)

பெருமையிற்செறி பேரொலிபிறங்கலிற் சிறந்து
திருமகட்குவாழ் சேர்விடமாதலில் யாவுந்
தருதலிற்கட றன்னினும்பெரிதெனத் திரைபோற்
கரிபரித்தொகை மணிதுகில்சொரிவதாங் கலத்தால். (௩)

நீடுதொல்புகழ் நிலம்பதினெட்டினு நிறைந்த
பீடுதங்கிய பலபொருண்மாந்தர்கள் பெருகிக்
கோடிநீடனக் குடியுடன்குவலயங் காணு
மாடிமண்டலம் போல்வதவ்வணிகிளர் மூதூர். (௪)

அந்நெடுந்திரு நகர்மருங்கலைகடல் விளிம்பிற்
பன்னெடுந்திரை துறைதவழ்பாங்கரின் ஞாங்கர்
மன்னுதொன்மையின் வலைவளத்துணவினின் மலிந்த
தன்மைவாழ்குடி மிடைந்ததுதட் நுளைப் பாடி. (௫)

புயலளப்பன வெனவலைப்புறம்பணைக் குரம்பை
யயலளப்பன மீன்விலைப்பசும்பொனி னடுக்கல்
வியலளக்கரில் விடுந்திமில்வாழ்நர்கள் கொணர்ந்த
கயலளப்பன பரத்தியர்கருநெடுங் கண்கள். (௬)

உணங்கன்மீன்கவர் வுறுநசைக்குருகுட னணைந்த
கணங்களோதிமங் கருஞ்சினைப்புன்னையங் கான
லணங்குநுண்ணிடை நுளைச்சியரணிநடைக் கழிந்து
மணங்கொள்கொம்பரின் மருங்குநின் றிழியல மருளும். (௭)

வலைநெடுந்தொடர் வடம்புடைவலிப்பவ ரொலியும்
விலைநுளைச்சியர் பகர்ந்துமீன்குவைகொடுப் பவர்விளியொலியுந்
தலைசிறந்தவெள் வளைசொரிபவர்தழங் கொலியு
மலைநெடுங்கட லதிரொலிக்கெதிரொலி யனைய. (அ)

அனையதாகிய வந்நுளைப்பாடியி லமர்ந்து
மனைவளம்பொலி நுளையர்தங்குலத்தினில் வந்தார்
புனையிளம்பிறை முடியவரடித்தொண்டு புரியும்
வினைவிளங்கிய வதிபத்தரெனநிகழ் மேலோர். (௯)

ஆங்கவன்பர்தா நுளையர்தந்தலைவரா யவர்க
ளேங்குதெண்டிரைக் கடலிடைப்பலபட வியக்கிப்
பாங்குசூழ்வலை வளைத்துமீன்படுத்துமுன் குவிக்கு
மோங்குபல்குவை யுலப்பிலவுடையரா யுயர்வார். (௧0)

முட்டின்மீன்கொலைத் தொழில்வளத்தவர்வலை முகந்து
பட்டமீன்களி லொருதலைமீன்படு தோறு
நட்டமாடிய நம்பருக்கெனநளிர் முந்நீர்
விட்டுவந்தனர் விடாதவன்புடனென்றும் விருப்பால். (௧௧

மாருசேர்வலை நாளொன்றின்மீனொன்று வரினு
மேகநாயகர் தங்கழற்கெனவிடு மியல்பா
லாகுநாள்களி லனேகநாளடுத்தொரு மீனே
மேகநீர்படி வேலையிற்படவிட்டு வந்தார். (௧௨)

மீன்விலைப்பெரு குணவினின்மிகுபெருஞ் செல்வந்
தான்மறுத்தலி னுணவின்றியருங்கிளை சாம்பும்
பான்மைபற்றியும் வருந்தலர்பட்டமீ னொன்று
மான்மறிக்கரத் தவர்கழற்கெனவிட்டு மகிழ்ந்தார். (௧௩)

சாலநாள்களிப் படிவரத்தாமுண வயர்த்துக்
கோலமேனியுந் தளரவுந்தந்தொழில் குறையாச்
சீலமேதலை நின்றவர்தந்திறந் தெரிந்தே
யாலமுண்டவர் தொண்டரன்பெனுமமு துண்பார். (௧௪)

ஆனநாளொன்றி லவ்வொருமீனுமங் கொழித்துத்
தூநிறப்பசுங் கனகநற்சுடர்நவ மணியான்
மீனுறுப்புற வமைத்துலகடங்கலும் விலையாம்
பான்மையற்புதப் படியதொன்றிவலைப் படுத்தார். (௧௫)

வாங்குநீள்வலை யலைகடற்றிரையில்வந் தேற
வோங்குசெஞ்சுட ருதித்தெனவுலகெலாம் வியப்பத்
தாங்குபேரொளி தழைத்திடக்காண்டலு மெடுத்துப்
பாங்குநின்றவர் மீனொன்றுபடுத்தன மென்றார். (௧௬)

என்றுமற்றுளோ ரியம்பவுமேறுசீர்த் தொண்டர்
பொன்றிரட்சுடர் நவமணிபொலிந்தமீ னுறுப்பா
லொன்றுமற்றிது வென்னையாளுடையவர்க் காகுஞ்
சென்றுபொற்கழல் சேர்கெனத்திரையொடுந் திரித்தார். (கஎ)

அகிலலோகமும் பொருண்முதற்றுமெனு மீளவிற்
புகலுமப்பெரும் பற்றினைப்புனையற வெறிந்த
விகலில்மெய்த்திருத் தொண்டர்முன்னிறைவர்தாம் விடைமேன்
முகில்விசும்பிடை யணைந்தனர்பொழிந்தனர் முகைப்பூ. (கஅ)

பஞ்சநாதமு மெழுந்தனவதிபத்தர் பணிந்தே
யஞ்சலிக்கரஞ் சிரமிசையணைத்துநின் றவனா
நஞ்சுவாண்மணி மிடற்றவர்சிவலோக நண்ணி
யஞ்சிறப்புடை யடியர்பாங்குறத்தலை யளித்தார். (க௯)

தம்மறம்புரி மரபினிற்றகும்பெருந் தொண்டு
மெய்ம்மையேபுரி யதிபத்தர்விளங்குதாள் வணங்கி
மும்மையாகிய புவனங்கண்முறைமையிற் போற்றுஞ்
செம்மைநீதியார் கலிக்கம்பர்திருத்தொண்டு பகர்வாம். (உ0)

ஆ திருவிருத்தம் - கஅசரு.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, நாகபட்டணத்திலே, சமுத்திரதீரத்திலே உள்ள நுளைப்பாடியிலே, பரதவர்குலத்திலே, அதிபத்தநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரதவர்களுக்குத் தலைவராகி, அவர்கள் வலைப்படுத்துக் குவிக்கும் மீன்குவைகளைப் பெற்று வாழ்வார். சிவபத்தியின் மிகச்சிறந்தவராதலால், அகப்படும் மீன்களிலே ஒரு தலைமீனை "இது பரமசிவனுக்கு" என்று மிகுந்த அன்பினோடு எப்பொழுதும் விட்டு வந்தார். ஒருநாளிலே ஒருமீனே வரினும், அதனைப் பரமசிவனுக்கு என்றே விடுவார். இப்படி ஒழுகுநாட்களிலே, அடுத்தடுத்து அநேகநாட்களில் ஒவ்வொருமீனே அகப்பட; அதனைக் கடலிலே விட்டுவந்தார். மீன்விலையினாலே மிகுஞ்செல்வம் மறுத்தமையால், தம்முடைய சுற்றத்தார்கள் உணவின்றி வருந்தவும்; தாம் வருந்தாது பட்டமீனைப் பரமசிவனுக்கு என்றே விட்டு மகிழ்ந்தார். இப்படி நெடுநாள் வர; உணவின்மையால் திருமேனி தளரவும் தம்முடைய தொழிலிலே நிலைநின்றமையைப் பரமசிவன் அறிந்து, அவரது அன்பென்னும் அமுதை உண்பாராயினர்.

இப்படி நிகழுநாளிலே, வேறு ஒருநாள் பரதவர்கள் அவ்வொருமீனையும் அவ்வாறே விட்டு, விலைமதிப்பில்லாத மகா திவ்வியப்பிரகாசங்கொண்ட நவரத்தினங்களால் உறுப்பமைந்த அற்புதமயமாகிய ஒரு

பொன்மீனை வலைப்படுத்து, கரையில் ஏறியபோது, அம்மீன் சூரியன் உதித்தாற்போல உலகமெல்லாம் வியக்கும்படி மிகப் பிரகாசிக்கக் கண்டு, அதனை எடுத்து, "ஒருமீன் படுத்தோம்" என்றார்கள். அதிபத்தநாயனார் அம்மீனைக் கண்டு, "இது இரத்தினங்களால் உறுப்பமைந்த பொன்மீனாதலால், என்னை ஆட்கொண்டருளிய பரமசிவனுக்கு ஆகும்" என்று கடலிலே விட்டார். அப்பொழுது பரமசிவன் இடபாரூடராய் ஆகாயத்திலே தோன்றியருள; அதிபத்தநாயனார் ஆனந்தவருவி சொரிய மனங் கசிந்துருகி நமஸ்கரித்து, சிரசின்மேலே அஞ்சலி செய்தார். சிவபெருமான் தமது உலகத்திலே அடியார்களோடு இருக்கும்படி அவருக்கு அருள்செய்தார்.

திருச்சிற்றம்பலம்.

அதிபத்தநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## கலிக்கம்பநாயனார் புராணம்.

உரிமையொழுக்கந் தலைநின்ற வுயர்தொன்மரபி னீடுமனைத்
தருமநெறியால் வாழ்குடிக டழைத்துவளருந் தன்மையதாய்
வருமஞ்சுறையு மலர்ச்சோலை மருங்குசூழ்ந்த வளம்புறவிற்
பெருமையுலகு பெறவிளங்கு மேல்பாற்பெண்ணா கடமூதூர். (௧)

மற்றப்பதியி னிடைவாழும் வணிகர்குலத்து வந்துதித்தார்
கற்றைச்சடையார் கழற்காத லுடனேவளர்ந்த கருத்துடையா
ரற்றைக்கென்று தூங்கானை மாடத்தமர்ந்தா ரடித்தொண்டு
பற்றிப்பணிசெய் கலிக்கம்ப ரென்பார்மற்றோர் பற்றில்லார். (௨)

ஆனவன்பர் தாமென்று மரனாரன்பர்க் கமுதுசெய
மேன்மைவிளங்கு போனகமும் விரும்புகறிநெய் தயிர்தீம்பா
றேனினினிய கனிகட்டி திருந்தவமுது செய்வித்தே
யேனைநிதியம் வேண்டுவன வெல்லாமின்ப முறவளித்தார். (௩)

அன்னவகையாற் றிருத்தொண்டு புரியுநாளி லங்கொருநாண்
மன்னுமனையி லமுதுசெய வந்ததொண்டர் தமையெல்லாந்
தொன்மைமுறைமை யமுதுசெயத் தொடங்குவிப்பா ரவர்தம்மை
முன்னரழைத்துத் திருவடிக ளெல்லாம்விளக்க முயல்கின்றார். (௪)

திருந்துமனையார் மனையெல்லாந் திகழவிளக்கிப் போனகமும்
பொருந்துசுவையிற் கறியமுதும் புனிதத்தண்ணீ ருடன்மற்று
மருந்துமியல்பி னுள்ளனவு மமைத்துக்கரக நீரளிக்க
விரும்புகணவர் பெருந்தவர்தா ளெல்லாம்விளக்கும் பொழுதின்கண். (௫)

முன்புதமக்குத் தொழில்செய்யுந் தமராயேவன் முனிந்துபோ
யென்புமரவு மணிந்தபிரா னடியாராகி யங்கெய்து
மன்பருடனே திருவேடந் தாங்கியணைந்தா ரொருவர்தாம்
பின்புவந்து தோன்றவவர் பாதம்விளக்கும் பெருந்தகையார். (சு)

கையாலவர்த மடிபிடிக்கக் காதன்மனையார் முன்பேவல்
செய்யாதகன்ற தமர்போலு மென்றுதேரும் பொழுதுமலர்
மொய்யார்வாசக் கரகநீர் வார்க்கமுட்ட முதற்றொண்டர்
மையார்கூந்தன் மனையாரைப் பார்த்துமனத்துட் கருதுவார். (எ)

வெறித்தகொன்றை முடியார்த மடியாரவர்முன் மேவுநிலை
குறித்துவெள்கி நீர்வாரா தொழிந்தாளென்று மனங்கொண்டு
மறித்துநோக்கார் வடிவாளை வாங்கிக்கரகம் வாங்கிக்கை
தறித்துக்கரக நீரெடுத்துத் தாமேயவர்தாள் விளக்கினார். (அ)

விளக்கியமுது செய்வதற்கு வேண்டுவனதா மேசெய்து
துளக்கில்சிந்தை யுடன்றொண்டர் தம்மையமுது செய்வித்தா
ரளப்பில்பெருமை யவர்பின்னு மடுத்ததொண்டின் வழிநின்று
களத்தினஞ்ச மணிந்தவர்தா ணிழற்கீழடியா ருடன்கலந்தார். (கூ)

ஓதமலிநீர் விடமுண்டா ரடியார்வேட மென்றுணரா
யாதரார்கை தடிந்தகலிக் கம்பர்மலர்ச்சே வடிவணங்கிப்
பூதநாதர் திருத்தொண்டு புரிந்துபுவனங் களிற்பொலிந்த
காதலன்பர் கலிநீதி யார்தம்பெருமை கட்டுரைப்பாம். (க0)

ஆ திருவிருத்தம் - கஅருரு.

---

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டிலே, திருப்பெண்ணாகடத்திலே, வைசியர்குலத்திலே, கலிக்கம்பநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் அந்தத்திருப்பதியில் உள்ள திருத்தூங்கானைமாடமென்னுந் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் பரமசிவனுக்குத் திருத்தொண்டு செய்பவர். சிவலிங்கத்தை வழிபடினும் சிவனடியார்களை வழிபடாதொழியின் அவ்வழிபாடு சிறிதும் பயன்படாது என்று சிவாகமஞ் செப்புதலால், தினந்தோறுஞ் சிவனடியார்களைப் பேராசையோடு திருவமுது செய்வித்து, அவர்களுக்கு வேண்டுந் திரவியங்களெல்லாவற்றையுங்கொடுப்பார்.

இப்படி யொழுகுநாளிலே, ஒருநாள் தமது வீட்டிலே திருவமுது செய்ய வந்த சிவனடியார்களெல்லாரையும் பழைய முறைப்படி திருவமுதுசெய்யத் தொடங்குவித்தற்கு, அவர்களை முன்பு அழைத்து, தமது மனைவியார் கரகநீர் வார்க்க அவர்களுடைய திருவடிகளை விளக்கும்பொழுது; முன்பு தமக்குப் பணிவிடைக்காரராய் இருந்து பணிவிடையை

வெறுத்துச் சென்ற ஒருவர் சிவவேடந்தாங்கி வர; அவருடைய திருவடிகளையும் விளக்கப்புகுந்தார். மனைவியார் "இவர் எங்களிடத்திலே பணிவிடைக்காரராய் இருந்து போனவர்போலும்" என்று சிந்தித்தலால் கரகநீர் வார்க்கத் தாழ்க்க; கலிக்கம்பநாயனார் அது கண்டு, "இவள் இந்தச் சிவனடியாருடைய முந்திய நிலையைக் குறித்து வெள்கி நீர் வாராதொழிந்தாள்" என்று துணிந்து, வாளை எடுத்து, அம்மனைவியார்கையிற் கரகத்தைவாங்கி வைத்துவிட்டு, அக்கையைத் தறித்து, அக்கரகநீரை எடுத்து, தாமே அவருடைய திருவடிகளை விளக்கி, அத்தியந்த ஆசையோடு தாமே வேண்டுவனவெல்லாஞ்செய்து, அவ்வடியார்களைத் திருவமுதுசெய்வித்தார். அந்நாயனார் பின்னுஞ்சிலகாலந் திருத்தொண்டின் வழி நின்று, சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

கலிக்கம்பநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## கலியநாயனார் புராணம்.

பேருலகி லோங்குபுகழ்ப் பெருந்தொண்டை நன்னாட்டு
நீருலவுஞ் சடைக்கற்றை நிருத்தர்திருப் பதியாகுங்
காருலவு மலர்ச்சோலைக் கன்னிமதில் புடைசூழச்
சீருலவு நெடுவீதி சிறந்ததிரு வொற்றியூர். (க)

பன்னுதிருப் பதிகவிசைப் பாட்டோவா மண்டபத்து
ளன்னநடை மடவார்க ளாட்டோவா வணியரங்கு
பன்முறைதூ ரியமுழக்கும் விழவோவா பயில்வீதி
செந்நெலடி சிற்பிறங்க லுணவோவா திருமடங்கள். (உ)

கெழுமலர்மா தவிபுன்னை கிளைஞாழ றளையவிழுங்
கொழுமுகைய சண்பகங்கள் குளிர்செருந்தி வளர்கைதை
முழுமணமே முந்நீருங் கமழமலர் முருகுயிர்க்குஞ்
செழுநிலவின் றுகளனைய மணற்பரப்புந் திருப்பரப்பு. (ந)

எயிலணையு முகின்முழக்கு மெறிதிரைவே லையின்முழக்கும்
பயிறருபல் லியமுழக்கு முறைதெரியாப் பதியதனுள்
வெயிலணிபன் மணிமுதலா விழுப்பொருளா வனவிளக்குந்
தயிலவினைத் தொழின்மரபிற் சக்கரப்பா டித்தெருவு. (ச)

அக்குலத்தின் செய்தவத்தா லவனிமிசை யவதரித்தார்
மிக்கபெருஞ் செல்வத்து மீக்கூர விளங்கினார்
தக்கபுகழ்க் கலியனா ரெனுநாமந் தலைநின்றார்
முக்கணிறை வர்க்குரிமைத் திருத்தொண்டி னெறிமுயல்வார். (௫)

எல்லைபல கோடிதனத் திறைவரா யிப்படித்தாஞ்
செல்வநெறிப் பயனறிந்து திருவொற்றி யூரமர்ந்த
கொல்லைமழ விடையார்தங் கோயிலினுள் ளும்புறம்பு
மல்லுநெடும் பகலுமிடுந் திருவிளக்கி னணிவிளைத்தார். (௬)

எண்ணிறந்த விளக்குநெடு நாளெல்லா மெரித்துவரப்
புண்ணியமெய்த் தொண்டர்செயல் புலப்படுப்பா ரருளாலே
யுண்ணிறையும் பெருஞ்செல்வ முயர்த்தும்வினைச் செயலோவி
மண்ணிலவ ரிருவினைபோன் மாண்டதுமாட் சிமைத்தாக. (எ)

திருமலிசெல் வத்துழனி தேய்ந்தழிந்த பின்னையுந்தம்
பெருமைநிலைத் திருப்பணியிற் பேராத பேராளர்
வருமரபி லுள்ளோர்பா லெண்ணெய்மா றிக்கொணர்ந்து
தருமியல்பிற் கூலியினாற் றமதுதிருப் பணிசெய்வார். (அ)

வளமுடையார் பாலெண்ணெய் கொடுபோய்மா றிக்கூறிக்
கொளமுயலுஞ் செய்கையுமற் றவர்கொடாமை யின்மாறத்
தளருமன முடையவர்தாஞ் சக்கரவெந் திரம்புரியுங்
களனில்வரும் பணிசெய்து பெறுங்கூலி காதலித்தார். (கூ)

செக்குநிறை யெள்ளாட்டிப் பதமறிந்து திலதயிலம்
பக்கமெழ மிகவுழந்தும் பாண்டில்வரு மெருதுய்த்துந்
தக்கதொழிற் பெறுங்கூலி தாங்கொண்டு தாழாமை
மிக்கதிரு விளக்கிட்டார் விழுத்தொண்டு விளக்கிட்டார். (கo)

அப்பணியால் வரும்பேறு மவ்வினைஞர் பலருளரா
யெப்பரிசுங் கிடையாத வகைமுட்ட விடருழந்தே
யொப்பின்மனை விற்றெரிக்கு முறுபொருளு மாண்டதற்பின்
செப்பருஞ்சீர் மனையாளை விற்பதற்குத் தேடுவார். (கக)

மனமகிழ்ந்து மனைவியார் தமைக்கொண்டு வளநகரிற்
றனமளிப்பார் தமையெங்குங் கிடையாமற் றளர்வெய்திச்
சினவிடையார் திருக்கோயிற் றிருவிளக்குப் பணிமுட்டக்
கனவினுமுன் பறியாதார் கையறவா லெய்தினார். (கஉ)

பணிகொள்ளும் படம்பக்க நாயகர்தங் கோயிலினு
ளணிகொள்ளுந் திருவிளக்குப் பணிமாறு மமையத்தின்
மணிவண்ணச் சுடர்விளக்கு மாளிலியான் மாள்வனெனத்
துணிவுள்ளங் கொளநினைந்தவ் வினைமுடிக்கத் தொடங்குவார். (கந)

திருவிளக்குத் திரியிட்டங் ககல்பரப்பிச் செயனிரம்ப
வொருவியவெண் ணெய்க்குடலா வுடலுதிரங் கொடுநிறைக்கக்
கருவியினுன் மிடறரிய வக்கையைக் கண்ணுதலார்
பெருகுதிருக் கருணையுட னேர்வந்து பிடித்தருளி. (கச)

மற்றவர்த முன்னாக மழவிடைமே லெழுந்தருள
உற்றவூ றதுநீங்கி யொளிவிளங்கு முச்சியின்மேற்
பற்றியவஞ் சலியினராய் நின்றவரைப் பரமர்தாம்
பொற்புடைய சிவபுரியிற் பொலிந்திருக்க வருள்புரிந்தார். (கரு)

தேவர்பிரான் றிருவிளக்குச் செயன்முட்ட மிடறரிந்து
மேவரிய வினைமுடித்தார் கழல்வணங்கி வியனுலகில்
யாவரெனு தரனடியார் தமையிகழ்ந்து பேசினரை
நாவரியுஞ் சத்தியார் திருத்தொண்டி னலமுரைப்பாம். (கசு)

ஆ. திருவிருத்தம் - கஅஎக.

திருச்சிற்றம்பலம்.

தொண்டைமண்டலத்திலே, திருவொற்றியூரிலே உள்ள சக்கரப்பாடியிலே, செக்கார் குலத்திலே, கலியநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பெருஞ்செல்வராகி, செல்வ நிலையாமையையும் யாக்கை நிலையாமையையும் உணர்ந்து, சிவபுண்ணியஞ் செய்தல்வேண்டும் எனத் தெளிந்து, அந்தத் திருப்பதியில் உள்ள சிவாலயத்தின் உள்ளும் புறம்பும் அல்லும் பகலும் எண்ணிறந்த திருவிளக்கு ஏற்றுவாராயினர்.

பரமசிவன் நெடுங்காலம் இத்திருத்தொண்டைச் செய்துவரும் அவ்வடியாருடைய பத்திவலிமையைப் பிறர்க்குப் புலப்படுத்தும்பொருட்டு, அவரிடத்து உள்ள செல்வமெல்லாங் குன்றும்படி அருள்செய்தார். அவர் தாம் வறுமையெய்தியும், தமது மரபில் உள்ளோர் தரும் எண்ணெயை வாங்கிக் கூறிவிற்றுக் கொணர்ந்து, கூலி பெற்று, தாஞ்செய்யுந் திருத்தொண்டை வழுவாது செய்தார். சிலநாளாயினபின் அவர்கள் கொடாதொழிய; அவர் மனந்தளர்ந்து, எண்ணெயாட்டும் இடத்திற் சென்று, தொழில் செய்து கூலிவாங்கி, திருவிளக்கிட்டார். பின்பு அத்தொழில் செய்வோர்கள் பலராய்ப் பெருகினமையால், அத்தொழிலால் வரும் பேறுங் கிடையாதுமுட்ட; ஒருநாள் கவலைகொண்டு, தம்முடைய மனைவியாரை விற்பதற்கு நகரெங்குங்கூறி, வாங்குவார் இன்மையால் மனந்தளர்ந்து, ஆலயத்தை அடைந்து, திருவிளக்கேற்றுஞ்சமயத்திலே, "திருவிளக்குப்பணி மாறில் நான் இறந்து விடுவேன்" என்று துணிவுகொண்டு, திரியிட்ட அகல்களைப் பரப்பி, எண்ணெய்க்குப் பிரதியாகத் தமது இரத்தத்தை நிறைக்கும்பொருட்டு ஆயுதத்தினாலே கழுத்தை அரிந்தார். அப்பொழுது கிருபாசமுத்திரமாகிய பரமசிவன் நேர் வந்து,

அவருடைய கையைப் பிடித்து, அவருக்குமுன்னே இடபாரூடராய்த் தோன்றியருள; அவர் தாம் உற்ற ஊறு நீங்கி, சிரசின்மேல் அஞ்சலி செய்துகொண்டு நின்றார். சிவபெருமான் அவரைத் தமது திருவடியிலே சேர்த்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.

கலியநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சத்திநாயனார் புராணம்.

களமர்கட்ட கமலம்பொழிந்ததேன்
குளநிறைப்பது கோலொன்றிலெண்டிசை
யளவுமாணைச் சயத்தம்பநாட்டிய
வளவர்காவிரி நாட்டுவரிஞ்சியூர். (க)

வரிஞ்சியூரினில் வாய்மைவேளாண்குலம்
பெருஞ்சிறப்புப் பெறப்பிறப்பெய்தினார்
விரிஞ்சன்மான்முதல் விண்ணவரெண்ணவு
மருஞ்சிலம்பணி சேவடிக்காட்செய்வார். (உ)

அத்தராகிய வங்கணரன்பரை
யித்தலத்தி லிகழ்ந்தியம்புமுரை
வைத்தநாவை வலித்தரிசத்தியார்
சத்தியாரெனு நாமந்தரித்துளார். (ங)

தீங்குசொற்ற திருவிலர்நாவினை
வாங்கவாங்குதண் டாயத்தினால்வலித்
தாங்கயிற்கத்தி யாலரிந்தன்புட
னோங்குசீர்த்திருத் தொண்டினுயர்ந்தனர். (ச)

அன்னதாகிய வாண்மைத்திருப்பணி
மன்னுபேருல கத்தில்வலியுடன்
பன்னெடும்பெரு நாள்பரிவாற்செய்து
சென்னியாற்றினர் செந்நெறியாற்றினர். (ரு)

ஐயமின்றி யரியதிருப்பணி
மெய்யினாற்செய்த வீரத்திருத்தொண்டர்
வையமுய்ய மணிமன்றுளாடுவார்
செய்யபாதத் திருநிழல்சேர்ந்தனர். (சு)

நாயனர்தொண் டரைநலங்கூறலார்
சாயநரவரி சத்தியார்தாள்பணிந்
தாயமாதவத் தையடிகளெனுந்
தூயகாடவர் தந்திறஞ்சொல்லுவாம். (எ)

ஆ திருவிருத்தம் - கஅஎஅ.

---

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலே, வரிஞ்சியூரிலே, வேளாளர்குலத்திலே, சத்திநாயனரென்பவரொருவர் இருந்தார். அவர் பரமசிவனுடைய திருவடித்தாமரைகளைச் சிறிதும் மறவாது திருத்தொண்டுசெய்பவர். அவர் சிவனடியார்களை இகழ்ந்து பேசும் அதிபாதகிகளுடைய நாக்கைத் தண்டாயத்தால் இடுக்கித் தமது கையிற் கத்தியினல் அரிதலாகிய அருமைப்பெருமைத் திருத்தொண்டை நெடுங்காலம் அன்பினேடு செய்துகொண்டிருந்து, பரமசிவனுடைய திருவடிநீழலை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

சத்திநாயனர்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஐயடிகள்காடவர்கோனயனர் புராணம்.

வையநிகழ் பல்லவர்தங் குலமரபின் வழித்தோன்றி
வெய்யகலி யும்பகையு மிகையொழுகும் வகையடக்கிச்
செய்யசடை யவர்சைவத் திருநெறியா லரசளிப்பா
ரையடிக ணீதியா லடிப்படுத்துஞ் செங்கோலார். (க)

திருமலியும் புகழ்விளங்கச் சேணிலத்தி லெவ்வுயிரும்
பெருமையுட னினிதமரப் பிறபுலங்க ளடிப்படுத்துத்
தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேற் சைவமுட
னருமறையின் றுறைவிளங்க வரசளிக்கு மந்நாளில். (உ)

மன்னவரும் பணிசெய்ய வடநூறென் றமிழ்முதலாம்
பன்னுகலை பணிசெய்யப் பாரளிப்பா ரரசாட்சி
யின்னலென விகழ்ந்ததனை யெழிற்குமரன் மேலிழிச்சி
நன்மைநெறித் திருத்தொண்டு நயந்தளிப்பா ராயினர். (ங)

தொண்டுரிமை புரக்கின்றார் சூழ்வேலை யுலகின்க
ணண்டர்பிரா னமர்ந்தருளு மாலயங்க ளானவெலாங்
கண்டிறைஞ்சித் திருத்தொண்டின் கடனேறப் பணிசெய்தே
வண்டமிழின் மொழிவெண்பா வோரொன்று வழுத்துவார். (ச)

பெருந்தெழுகா தலில்வணங்கிப் பெரும்பற்றத் தண்புலியூர்த்
திருச்சிற்றம் பலத்தாடல் புரிந்தருளுஞ் செய்யசடை
விருத்தனர் திருக்கூத்து நேர்ந்திறைஞ்சி நெடுந்தகையார்
விருப்பினுடன் செந்தமிழின் வெண்பாமென் மலர்புனைந்தார். (௫)

---

கோயில் வெண்பா.

ஓடுகின்ற நீர்மை யொழிதலுமே யுற்றாருங்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று—நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமு னன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்.

உய்யு மருந்திதனை யுண்மினென வுற்றாருங்
கையிற் பிடித்தெதிரே காட்டியக்காற்—பைய
வெழுந்திருமி யான்வேண்டே னென்னாமு னன்னெஞ்சே
செழுந்திரு மயானமே சேர்.

திருச்சிற்றம்பலம்.

---

அவ்வகையா லருள்பெற்றங் கமர்ந்துசில நாள்வைகி
யிவ்வுலகிற் றம்பெருமான் கோயில்களெல் லாமெய்திச்
செவ்வியவன் பொடுபணிந்து திருப்பணியேற் றனசெய்தே
யெவ்வுலகும் புகழ்ந்தேத்து மின்றமிழ்வெண் பாமொழிந்தார். (௬)

இந்நெறியா லரனடியா ரின்பமுற விசைந்தபணி
பன்னெடுநா ளாற்றிப்பின் பரமர்திரு வடிநிழற்கீழ்
மன்னுசிவ லோகத்து வழியன்பர் மருங்கணைந்தார்
கன்னிமதிள் சூழ்காஞ்சிக் காடவரை யடிகளார். (௭)

உளத்திலொரு துளக்கமிலோ முலகுய்ய விருண்டதிருக்
களத்துமுது குன்றர்தரு கனகமாற் றினிவிட்டு
வளத்தின்மலிந் தேழுலகம் வணங்குபெருந் திருவாரூர்க்
குளத்திலெடுத் தார்வினையின் குழிவாய்நின் றெனையெடுத்தார். (௮)

பையரவ மணியார மணிந்தார்க்குப் பாவணிந்த
வையடிகள் காடவனு ரடியிணைத்தா மரைவணங்கிக்
கையணிமான் மழுவுடையார் கழல்பணிசிந் தையுடைய
செய்தவத்துக் கணம்புல்லர் திருத்தொண்டு விரித்துரைப்பாம். (௯)

ஆ திருவிருத்தம் - கஅ௭.

---

திருச்சிற்றம்பலம்.

தொண்டைமண்டலத்திலே, காஞ்சிபுரத்திலே, பல்லவர்குலத்தி லே, சைவத்திருநெறி வாழும்படி அரசியற்றும் ஐயடிகள் காடவர்கோ னுயனரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் எவ்வுயிர்களும் இம்மை

மறுமையின்பங்களையும் முத்தியையும் அடைதல்வேண்டும் என விரும்பி, பிறதேசங்களையுந் தமக்கு அதீனப்படுத்தி, சைவந்தழைத்தோங்க அரசர்களும் பணிசெய்ய அரசியற்றினர். சிலகாலஞ்சென்றபின், அரசாட்சி துன்பமயமெனக் கருதி, அதனை வெறுத்து, அப்பாரத்தை இறக்கித் தம்முடைய புத்திரன்மேல் ஏற்றி, பூமியிலுள்ள சிதம்பரமுதலாகிய சிவஸ்தலங்கடோறுஞ்சென்று, சுவாமிதரிசனம்பண்ணி, திருப்பணிசெய்து, ஒவ்வொரு திருவெண்பாப் பாடினர். இந்தப்பிரகாரம் நெடுங்காலந் திருத்தொண்டு செய்துகொண்டிருந்து, சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

ஐயடிகள்காடவர்கோனயனர்புராண முற்றிற்று.

---

ஏழாவது,

பொய்யடிமையில்லாதபுலவர்சருக்க முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது,

# கறைக்கண்டன்சருக்கம்.

## கணம்புல்லநாயனர் புராணம்.

திருக்கிளர்சீர் மாடங்க டிருந்துபெருங் குடிநெருங்கிப்
பெருக்குவட வெள்ளாற்றுத் தென்கரைப்பாற் பிறங்குபொழில்
வருக்கைநெடுஞ் சுளைபொழிதேன் மடுநிறைந்து வயல்விளைக்கு
மிருக்குவே ளூரென்ப திவ்வுலகில் விளங்குபதி. (க)

அப்பதியிற் குடிமுதல்வர்க் கதிபரா யளவிறந்த
வெப்பொருளு முடிவறியா வெய்துபெருஞ் செல்வத்தா
ரொப்பில்பெருங் குணத்தினா லுலகின்மேற் படவெழுந்தார்
மெய்ப்பொருளா வனவீசர் கழலென்னும் விருப்புடையார். (உ)

தாவாத பெருஞ்செல்வந் தலைநின்ற பயனிதுவென்
றோவாத வொளிவிளக்குச் சிவன்கோயி லுள்ளெரித்து
நாவாரப் பரவுவார் நல்குரவு வந்தெய்தத்
தேவாதி தேவர்பிரான் றிருத்தில்லை சென்றடைந்தார். (ங)

தில்லைநகர் மணிமன்று ளாடுகின்ற சேவடிக
ளல்கியவன் புடனிறைஞ்சி யமர்கின்றார் புரமெரித்த
வில்லியார் திருப்புலீச் சரத்தின்கண் விளக்கெரிக்க
வில்லிடையுள் ளனமாறி யெரித்துவரு மந்நாளில். (ச)

ஆயசெயன் மாண்டதற்பி னயலவர்பா லிரப்பஞ்சிக்
காயமுயற் சியிலரிந்த கணம்புல்லுக் கொடுவந்து
மேயவிலைக் குக்கொடுத்து விலைப்பொருளா னெய்மாறித்
தூயதிரு விளக்கெரித்தார் துளக்கறுமெய்த் தொண்டனார். (ரு)

இவ்வகையாற் றிருந்துவிளக் கெரித்துவர வங்கொருநாண்
மெய்வ்வருந்தி யரிந்தெடுத்துக் கொடுவந்து விற்கும்பு
லெவ்விடத்தும் விலைபோகா தொழியவுமிப் பணியொழியா
ரவ்வரிபுல் லிணைமாட்டி யணிவிளக்கா யிடவெரிப்பார். (சு)

முன்புதிரு விளக்கெரிக்கு முறையாமங் குறையாமன்
மென்புல்லு விளக்கெரிக்கப் போதாமை மெய்யான
வன்புபுரி வாரடுத்த வினைக்குத்தந் திருமுடியை
யென்புருக மடுத்தெரித்தா ரிருவினையின் றொடக்கெரித்தார். (எ)

தங்கள்பிரான் றிருவுள்ளஞ் செய்துதலைத் திருவிளக்குப்
பொங்கியவன் புடனெரித்த பொருவிறிருத் தொண்டர்க்கு
மங்கலமாம் பெருங்கருணை வைத்தருளிச் சிவலோகத்
தெங்கள்பிரான் கணம்புல்ல ரினிதிறைஞ்சி யமர்ந்திருந்தார். (அ)

சூரியார் கலியுலகின் முடியிட்ட திருவிளக்குப்
பேரியா றணிந்தாருக் கெரித்தார்தங் கழல்பேணி
வேரியார் மலர்ச்சோலை விளங்குதிருக் கடவூரிற்
காரியார் தாஞ்செய்த திருத்தொண்டு கட்டுரைப்பாம். (கூ)

ஆ திருவிருத்தம் - கஅகூசு.

---

திருச்சிற்றம்பலம்.

வடவெள்ளாற்றுக்குத் தென்கரையில் உள்ள இருக்குவேளூரிலே, சிவபத்தியிற்சிறந்தவரும் பெருஞ்செல்வருமாகிய ஒருவர் இருந்தார். அவர் செல்வம் பெற்றதினால் அடையும்பயன் இதுவே என்று, சிவாலயத்தினுள்ளே திருவிளக்கேற்றித் தோத்திரம்பண்ணுவாராயினர். நெடுங்காலஞ்சென்றபின், வறுமை எய்தி, சிதம்பரத்தை அடைந்து, சபாநாயகரைத் தரிசனஞ்செய்துகொண்டு, தம்முடைய வீட்டில் உள்ள பொருள்களை விற்று, அங்குள்ள திருப்புலீச்சரமென்னும் ஆலயத்திலே திருவிளக்கேற்றி வந்தார்.

இப்படி யொழுகுநாளிலே, வீட்டுப்பொருள்களும் ஒழிந்துவிட; கணம்புல்லுக்களை அரிந்துகொண்டுவந்து விற்று நெய் வாங்கித் திருவிளக்கெரித்தார். அதனால் அவருக்குக் கணம்புல்லநாயனார் என்னும் பெயர் உண்டாயிற்று. ஒருநாள் தாம் அரிந்துகொண்டுவந்த புல்லு விலைப்படாதொழியவும்; தம்முடைய பணி தவறாமல் அப்புல்லையே மாட்டி விளக்கெரித்தார். முன்பு விளக்கெரிக்கும் யாமம்வரையும் எரித்தற்கு அப்புல்லுப் போதாமையால், அடுத்த விளக்கிலே தம்முடைய திருமுடியை மடுத்து எரித்தார். அப்பொழுது பரமசிவன் பெருங்கருணை செய்தருள; கணம்புல்லநாயனார் சிவலோகத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

கணம்புல்லநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## காரிநாயனார் புராணம்.

மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்டமிழின்
றுறையான பயன்றெரிந்து சொல்விளங்கிப் பொருண்மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயராற் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பாற்பயில்வார். (க)

அங்கவர்தா மகிழும்வகை யடுத்தவுரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பாற் பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கணரா வொடுகிடந்து விளங்குமிளம் பிறைச்சென்னிச்
சங்கரனு ரினிதமருந் தானங்கள் பலசமைத்தார். (உ)

யாவர்க்கு மனமுவக்கு மின்பமொழிப் பயனியம்பித்
தேவர்க்கு முதற்றேவர் சீரடியா ரெல்லார்க்கு
மேவுற்ற விருநிதிய மிகவளித்து விடையவர்தாங்
காவுற்ற திருக்கயிலை மறவாத கருத்தினராய். (௩)

ஏய்ந்தகடல் சூழுலகி லெங்குந்தம் மிசைநிறுத்தி
யாய்ந்தவுணர் விடையறு வன்பினரா யணிகங்கை
தோய்ந்தநெடுஞ் சடையார்த மருள்பெற்ற தொடர்பினால்
வாய்ந்தமனம் போலுடம்பும் வடகயிலை மலைச்சார்ந்தார். (ச)

வேரியார் மலர்க்கொன்றை வேணியா ரடிபேணுங்
காரியார் கழல்வணங்கி யவரளித்த கருணையினால்
வாரியார் மதயானை வழுதியர்த மதிமரபிற்
சீரியார் நெடுமாறர் திருத்தொண்டு செப்புவாம். (ரு)

ஆ திருவிருத்தம் – ௲௱௰க.

---

திருச்சிற்றம்பலம்.

திருக்கடவூரிலே, தமிழ்மொழியிலே மிகவல்ல காரிநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் சொல்விளங்கிப் பொருண்மறைந்து கிடக்கும்படி தம்பெயரினாலே தமிழ்க்கோவை பாடி, தமிழ்நாட்டு மூவேந்தரிடத்துஞ்சென்று, அவர்கள் மகிழும்படி அதற்குப்பொருள் விளங்கச் சொல்லி, அவர்களிடத்திற் பெற்ற திரவியங்களைக்கொண்டு, சிவாலயங்கள் பலவற்றைக் கட்டுவித்தும், சிவனடியார்களுக்கு வேண்டுந்திரவியங்களைக் கொடுத்தும், திருக்கைலாசமலையை மறவாத கருத்தினராகி, உலகமெங்குந் தம்முடைய சிவகீர்த்தியை நிறுத்தி,பரமசிவனது திருவருளைப் பெற்று,மனம்போல உடம்புந் திருக்கைலாசமலையை அடையப்பெற்றார்.

திருச்சிற்றம்பலம்.

காரிநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## நெடுமாறநாயனார் புராணம்.

தடுமாறு நெறியதனைத் தவமென்று தம்முடலை
யடுமாறு செய்தருளு மவர்வலையி லகப்பட்டு
விடுமாறு தமிழ்விரகர் வினைமாறுங் கழலடைந்த
நெடுமாற னார்பெருமை யுலகேழு நிகழ்ந்ததால். (௧)

அந்நாளி லாளுடைய பிள்ளையா ரருளாலே
தென்னாடு சிவம்பெருகச் செங்கோலுய்த் தறமளித்துச்
சொன்னாம நெறிபோற்றிச் சுரர்நகர்க்கோன் றனைக்கொண்ட
பொன்னார மணிமார்பிற் புரவலனார் பொலிகின்றார். (௨)

ஆயவர சளிப்பார்பா லமர்வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வரெதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடன்முடுகும் பரிமாவின் பெருவெள்ளங்
காயுமதக் களிற்றினிரை பரப்பியமர் கடக்கின்றார். (௩)

எடுத்துடன்ற முனைனாட்பி னிருபடையிற் பொருபடைஞர்
படுத்தநெடுங் கரித்துணியும் பாய்மாவி னறுகுறையு
மடுத்தமர்செய் வயவர்கருந் தலைமலையு மலைச்செந்நீர்
மடுத்தகடன் மீளவுந்தாம் வடிவேல்வாங் கிடப்பெருக. (௪)

வயப்பரியின் களிப்பொலியு மறவர்படைக் கலவொலியுங்
கயப்பொருப்பின் முழக்கொலியுங் கலந்தெழுபல் லியவொலியும்
வியக்குமுகக் கடைநாளின் மேகமுழக் கெனமூளச்
சயத்தொடர்வல் லியுமொன்று தாமமைக்கும் படிதயங்க. (௫)

தீயுமிழும் படைவழங்குஞ் செருக்களத்து முருக்குமுட்
ரேயுநெடுங் குருதிமடுக் குளித்துசிணந் துய்த்தாடிப்
போயபரு வம்பணிகொள் பூதங்க ளேயன்றிப்
பேயுமரும் பணிசெய்ய வுணவளித்த தெனப்பிறங்க. (௬)

இனையகடுஞ் சமம்விளைய விகலுழந்த பறந்தலையிற்
பனைநெடுங்கை மதயானைப் பஞ்சவனர் படைக்குடைந்து
முனையழிந்த வடபுலத்து முதன்மன்னர் படைசரியப்
புனையுநறுந் தொடைவாகை பூழியர்வேம் புடன்புனைந்து. (எ)

வளவர்பிரான் றிருமகளார் மங்கையருக் கரசியார்
களபமணி முலைதிளைக்குந் தடமார்பர் கவுரியனு
ரிளவளவெண் பிறையணிந்தார்க் கேற்றதிருத் தொண்டெல்லா
மளவில்புகழ் பெறவிளக்கி யருள்பெருக வரசளித்தார். (அ)

திரைசெய்கட லுலகின்கட் டிருநீற்றி னெறிவிளங்க
வுரைசெய்பெரும் புகழ்விளக்கி யோங்குநெடு மாறனு
ரரசுரிமை நெடுங்கால மளித்திறைவ ரருளாலே
பரசுபெருஞ் சிவலோகத் தின்புற்றுப் பணிந்திருந்தார். (௯)

பொன்மதில்சூழ் புகலிகா வலரடிக்கீழ்ப் புனிதராந்
தென்மதுரை மாறனர் செங்கமலக் கழல்வணங்கிப்
பன்மணிக டிரையோதம் பரப்புநெடுங் கடற்பட்பைத்
தொன்மயிலை வாயிலார் திருத்தொண்டி னிலைதொழுவாம். (௧0)

ஆ திருவிருத்தம் - ௧௬௧௧.

---

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலே, மதுராபுரியிலே, கூன்பாண்டியரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் சமணர்களுடைய துர்ப்போதனையினலே பொய்ம்மார்க்கமாகிய ஆருகதமதத்திலே பிரவேசித்தும், சோழராஜாவுடைய புத்திரியாருஞ் சைவசிகாமணியுமாகிய மங்கையர்க்கரசியாரை மனைவியாராகவும் குலச்சிறைநாயனரை மந்திரியாராகவும் பெற்றிருந்தமையால், சமயகுரவராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் திருக்கரத்தினலே தீண்டி விபூதிசாத்தப்பட்டு, அவர் அருளிய மெய்யுபதேசத்தைப் பெற்று, கூன் நிமிர்ந்து, நெடுமாறநாயனரெனப் பெயர்பெற்ருர். தம்மோடு பொரவந்த வடபுலத்தரசர்களோடு திருநெல்வேலிப் போர்க்களத்திலே யுத்தஞ்செய்து வென்று, சைவசமயம் அபிவிருத்தியாகும்படி நெடுங்காலம் அரசியற்றிக்கொண்டிருந்து, சிவபதம் அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

நெடுமாறநாயனர்புராண முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வாயிலார்நாயனார் புராணம்.

சொல்விளங்குசீர்த் தொண்டைநன்னாட்டிடை
மல்லனீடிய வாய்மைவளம்பதி
பல்பெருங்குடி நீடுபெரம்பூனாச்
செல்வமல்கு திருமயிலாபுரி. (க)

நீடுவேலைதன் பானிதிவைத்திடத்
தேடுமெப்பெருஞ் சேமவைப்பாமென
வாடுபூங்கொடி மாளிகையப்பதி
மாடுதள்ளு மரக்கலச்செப்பினால். (உ)

கலஞ்சொரிந்த கரிக்கருங்கன்றுமுத்
தலம்புமுந்நீர் படிந்தணைமேகமு
நலங்கொண்மேதிநன் னாகுந்தெரிக்கொணு
சிலம்புதெண்டிரைக் கானலின்சேணெலாம். (ங)

தவளமாளிகைச் சாரன்முடங்கிறைத்
துவள்பதாகை நுழைந்தணைதூமதி
பவளவாய்மட வார்முகம்பார்த்தஞ்சி
யுவளகஞ்சேர்ந் தொதுங்குவதொக்குமால். (ச)

வீதியெங்கும் விழாவணிகாளையர்
தூதியங்குஞ் சுரும்பணிதோகைய
ரோதியெங்கு மொழியாவணிநிதி
பூதியெங்கும் புனைமணிமாடங்கள். (ரு)

மன்னுசீர்மயி லைத்திருமாநகர்த்
தொன்மைநீடிய சூத்திரத்தொல்குல
நன்மைசான்ற நலம்பெறத்தோன்றினார்
தன்மைவாயிலா ரென்னுந்தபோதனர். (சு)

வாயிலாரென நீடியமாக்குடித்
தூயமாமர பின்முதற்றோன்றியே
நாயனார்திருத் தொண்டினயப்புறு
மேயகாதல விருப்பின்விளங்குவார். (எ)

வேறு.

மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
யுறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
யிறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
யறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார். (அ)

அகமலர்ந்த வர்ச்சனையி லண்ணலார் தமைநாளு
நிகழவரு மன்பினா னிறைவழிபா டொழியாமே
திகழநெடு நாள்செய்து சிவபெருமா னடிநிழற்கீழ்ப்
புகலமைத்துத் தொழுதிருந்தார் புண்ணியமெய்த் தொண்டனார். (கூ)

நீராருஞ் சடையாரை நீடுமன வாலயத்து
ளாராத வன்பினா லர்ச்சனைசெய் தடியவர்பாற்
பேராத நெறிபெற்ற பெருந்தகையார் தமைப்போற்றிச்
சீராருந் திருநீடூர் முனையடுவார் திறமுரைப்பாம். (கய)

ஆ திருவிருத்தம் - ககஉக.

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலே, திருமயிலாப்பூரிலே, வேளாளர்குலத்திலே, வாயிலார்நாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனை ஒருபொழுதும் மறவாத மனமாகிய ஆலயத்துள் இருத்தி, ஞானமாகிய திருவிளக்கை ஏற்றி, ஆனந்தமாகிய திருமஞ்சனமாட்டி, அன்பாகிய திருவமுதை நிவேதித்தலாகிய ஞானபூசையை நெடுங்காலஞ்செய்துகொண்டிருந்து, சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

வாயிலார்நாயனார்புராண முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## முனையடுவார்நாயனார் புராணம்.

மாறுகடிந்து மண்காத்த வளவர்பொன்னித் திருநாட்டு
நாறுவிரைப் பூஞ் சோலைகளி னனைவாய்திறந்து பொழிசெழுந்தே
னாறுபெருகு வெள்ளமிடு மள்ளல்வயலின் மள்ளருழுஞ்
சேறுநறுவா சங்கமழுஞ் செல்வநீடூர் திருநீடூர். (க)

விளங்கும்வண்மை மிக்குள்ள வேளாண்டலைமைக் குடிமுதல்வர்
களங்கொள்மிடற்றுக் கண்ணுதலார் கழலிற்செறிந்த காதன்மிகு
முளங்கொடிருத்தொண் டுரிமையினி லுள்ளார்நள்ளார் முனையெறிந்த
வளங்கொடிறைவ ரடியார்க்கு மாறாதளிக்கும் வாய்மையார். (உ)

மாற்றார்க்கமரி லழிந்துள்ளோர் வந்துதம்பால் மாநிதிய
மாற்றும்பரிசு பேசினா லதனைநடுவு நிலைவைத்துக்
கூற்றமொதுங்கு மாள்வினையாற் கூலியேற்றுச் சென்றெறிந்து
போற்றும்வென்றி கொண்டிசைந்த பொன்னுங்கொண்டு மன்னுவார். (௩)

இன்னவகையாற் பெற்றநிதி யெல்லாமீச னடியார்கள்
சொன்னசொன்ன படிநிரம்பக் கொடுத்துத்தூய போனகமுங்
கன்னனறுநெய் கறிதயிர்பால் கனியுள்ளுறுத்த கலந்தளித்து
மன்னுமன்பி னெறிபிறழா வழித்தொண்டாற்றி வைகினர். (௪)

மற்றிந்நிலைமை பன்னெடுநாள் வையநிகழச் செய்துவழி
யுற்றவன்பின் செந்நெறியா லுமையாள்கணவன் றிருவருளாற்
பெற்றசிவலோ கத்தமர்ந்து பிரியாவுரிமை மருவினர்
முற்றவுழந்த முனையடுவா ரென்னுநாம முன்னுடையார். (௫)

யாவரெனினு மிகலெறிந்தே யீசனடியார் தமக்கின்ப
மேவவளிக்கு முனையடுவார் விரைப்பூங்கமலக் கழல்வணங்கித்
தேவர்பெருமான் சைவநெறி விளங்கச்செங்கோன் முறைபுரியுங்
காவல்பூண்ட கழற்சிங்கர் தொண்டினிலைமை கட்டுரைப்பாம். (௬)

செறிவுண்டென்று திருத்தொண்டிற் சிந்தைசெல்லும் பயனுக்குங்
குறியுண்டன்றா கிலுங்குறையொன் றில்லோநிறையுங் கருணையினால்
வெறியுண்சோலைத் திருமுருகன் பூண்டிவேடர் வழிபறிக்கப்
பறியுண்டவரெம் பழவினைநோய் பறிப்பாரென்னும் பற்றாலே. (௭)

ஆ திருவிருத்தம் - ௧௧௨௮.

---

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலே, திருநீடூரிலே, வேளாளர்குலத்திலே சிவனடியார்களிடத்தே மிகுந்த பத்தியுடைய ஒருபெரியவர் இருந்தார். அவர் சத்துருக்களுடைய போர்முனையிலே தோற்றவர்கள் தம்மிடத்தில் வந்து கூலி பேசினால், அவர்களுக்காகப் போய்ப் போர்செய்து வென்று, பொருள் சம்பாதித்து, சிவனடியார்களுக்குச் சொன்னசொன்னபடியே நிரம்பக்கொடுத்து, அவர்களைத் திருவமுது செய்வித்துக்கொண்டிருந்தார். அதனால் அவருக்கு முனையடுவார்நாயனரென்னுந் திருநாமம் உண்டாயிற்று. அவர் நெடுங்காலம் இவ்வருமையாகிய திருத்தொண்டைச் செய்துகொண்டிருந்து, சிவபதம்பெற்றார்.

திருச்சிற்றம்பலம்.

முனையடுவார்நாயனர்புராண முற்றிற்று.

---

எட்டாவது,

கறைக்கண்டன்சருக்க முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது,

# கடல்சூழ்ந்த சருக்கம்.

## கழற்சிங்கநாயனார் புராணம்.

படிமிசை நிகழ்ந்ததொல்லைப் பல்லவர் குலத்துவந்தார்
கடிமதின் மூன்றுஞ்செற்ற கங்கைவார் சடையார்செய்ய
அடிமல ரன்றிவேறொன் றறிவினுட் குறியாநீர்மைக்
கொடிநெடுந் தானைமன்னர் கோக்கழற் சிங்கரென்பார். (க)

காடவர் குரிசிலாராங் கழற்பெருஞ் சிங்கர்தாமு
மாடக மேருவில்லா ரருளினா லமரிற்சென்று
கூடலர் முனைகள்சாய வடபுலங் கவர்ந்துகொண்டு
நாடற நெறியில்வைக நன்னெறி வளர்க்குநாளில். (உ)

குவலயத் தரனார்மேவுங் கோயில்கள் பலவுஞ்சென்று
தவலரு மன்பிற்றாழ்ந்து தக்கமெய்த் தொண்டுசெய்வார்
சிவபுரி யென்னமன்னுந் தென்திரு வாரூரெய்திப்
பவமறுத் தாட்கொள்வார்தங் கோயிலுட் பணியப்புக்கார். (ங)

அரசிய லாயத்தோடு மங்கணர் கோயிலுள்ளான்
முரசுடைத் தானைமன்னன் முதல்வரை வணங்கும்போதில்
விரைசெறி மலர்மென்கூந்த லுரிமைமெல் லியலார்தம்மு
ளுரைசிறந் துயர்ந்தபட்டத் தொருதனித் தேவிமேவி. (ச)

கோயிலை வலங்கொண்டங்கட் குலவிய பெருமையெல்லாஞ்
சாயன்மா மயிலேபோல்வா டனித்தனி கண்டுவந்து
தூயமென் பள்ளித்தாமந் தொடுக்குமண் டபத்தின்பாங்கர்
மேயதோர் புதுப்பூவங்கு விழுந்ததொன் றெடுத்துமோந்தாள். (ரு)

புதுமலர் மோந்தபோதிற் செருத்துணைப் புனிதத்தொண்ட
ரிதுமலர் திருமுற்றத்து ளெடுத்துமோந் தனளாமென்று
கதுமென வோடிச்சென்று கருவிகைக் கொண்டுபற்றி
மதுமலர்த் திருவொப்பாடன் மூக்கினைப் பிடித்துவார்ந்தார். (சு)

வார்ந்திழி குருதிசோர மலர்க்கருங் குழலுஞ்சோரச்
சோர்ந்துவீழ்ந் தரற்றுந்தோகை மயிலெனத் துளங்கிமண்ணிற்
சேர்ந்தயர்ந் துரிமைத்தேவி புலம்பிடச் செம்பொற்புற்று
ளார்ந்தபே ரொளியைக்கும்பிட் டரசனு மணையவந்தான். (எ)

வந்தணை வுற்றமன்னன் மலர்ந்தகற் பகத்தின்வாசப்
பைந்தளிர்ப் பூங்கொம்பொன்று பார்மிசை வீழ்ந்ததென்ன
நொந்தழிந் தரற்றுவாளை நோக்கியிவ் வண்டத்துள்ளோ
ரிந்தவெவ் வினையஞ்சாதே யார்செய்தா ரென்னுமெல்லை. (அ)

அங்கிலை யணையவந்து செருத்துணை யாராமன்பர்
முன்னுறு நிலைமையங்குப் புகுந்தது மொழிந்தபோது
மன்னனு மவரைநோக்கி மற்றிதற் குற்றதண்டந்
தன்னையவ் வடைவேயன்றோ தடிந்திடத் தகுவதென்று. (கூ)

கட்டிய வுடைவாடன்னை யுருவியக் கமழ்வாசப்பூத்
தொட்டுமுன் னெடுத்தகையா முற்படத் துணிப்பதென்று
பட்டமு மணிந்துகாதல் பயில்பெருந் தேவியான
மட்டவிழ் குழலாள்செங்கை வளையொடுந் துணித்தா னன்றே. (க0

ஒருதனித் தேவிசெங்கை யுடைவாளாற் றுணித்தபோது
பெருகிய தொண்டரார்ப்பின் பிறங்கொலி புவிமேற்பொங்க
விருவிசும் படையவோங்கு மிமையவ ரார்ப்பும்விம்மி
மருவிய தெய்வவாச மலர்மழை பொழிந்ததன்றே. (கக)

அரியவத் திருத்தொண்டாற்று மரசனு ரளவில்கால
மருவிய வுரிமைதாங்கி மாலயற் கரியார்மன்னும்
திருவருட் சிறப்பினுலே செய்யசே வடியிநீழற்
பெருகிய வுரிமையாகும் பேரரு ளெய்தினரே. (கஉ)

வையக நிகழக்காதன் மாதேவி தனதுசெய்ய
கையினைத் தடிந்தசிங்கர் கழலிணைத் தொழுதுபோற்றி
யெய்திய பெருமையன்ப ரிடங்கழி யாரென்றேத்து
மெய்யரு ளுடையதொண்டர் செய்வினை விளம்பலுற்றும். (கங)

ஆ. திருவிருத்தம் - கக௬சக.

---

திருச்சிற்றம்பலம்.

காடவர்குலத்திலே, பரமசிவனுடைய திருவடிகளையேயன்றி மற்றொன்றையும் அறியாத கழற்சிங்கநாயனரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனது திருவருள் வலிமையினல் வடபுலத்தரசர்களைப் போரிலே வென்று, அவர்கள் நாடுகளைக் கவர்ந்து, எங்குஞ் சைவசமயந் தழைத்தோங்கும்படி அரசாண்டார்.

இப்படி யொழுகுநாளிலே மாதேவியோடு சிவஸ்தலங்கடோறுஞ் சென்று, சுவாமிதரிசனம் பண்ணித் திருத்தொண்டுசெய்வாராகி,திருவாரூரை அடைந்து திருக்கோயிலிலே பிரவேசித்துச் சுவாமியை வணங்கினார். அப்பொழுது அவருடைய மாதேவி திருக்கோயிலை வலஞ்செய்து, அங்குள்ள சிறப்புக்களெல்லாவற்றையுந் தனித்தனியே பார்த்துக்கொண்டுவந்து, திருமாலைகட்டும் மண்டபத்தின் பக்கத்திலே விழுந்து கிடந்த ஒரு புதுப்பூவை எடுத்து மோந்தாள். உடனே செருத்துணைநாயனார் இதனைப் புஷ்ப மண்டபத்துள் எடுத்து மோந்தாள் என்று நினைத்து, விரைந்து ஓடிவந்து, அவளைக் கூந்தலிலே பிடித்து இழுத்து வீழ்த்தி, அவளுடைய மூக்கைப் பிடித்துக் கத்தியினாலே அரிந்தார். அவள் சோர்ந்து புலம்பினாள். அப்பொழுது கழற்சிங்கநாயனாரும் சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, அவளுக்குச் சமீபத்தில் வந்து,அவளைப்பார்த்து, மிகக்கோபித்து, "சிறிதும் அஞ்சாமல் இந்தக் கொடுஞ்செய்கையைச் செய்தவர் யாவர்" என்று வினாவ; செருத்துணைநாயனார் "இவள் சுவாமிக்குச் சாத்தற்பாலதாகிய புஷ்பத்தை எடுத்து மோந்தமையால் நானே இப்படிச்செய்தேன்" என்றார். அப்பொழுது கழற்சிங்கநாயனார் அவரை நோக்கி, "புஷ்பத்தை எடுத்த கையையன்றோ முன் துணிக்கவேண்டும்" என்று சொல்லி, கட்டிய உடைவாளை உருவித் தம்முடைய மாதேவியினது புஷ்பமெடுத்த கையைத் துணித்தார். அது கண்டு, தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். இவ்வரிய திருத்தொண்டைச்செய்த கழற்சிங்கநாயனார் நெடுங்காலஞ்சைவநெறி தழைத்தோங்க அரசியற்றிக்கொண்டிருந்து, பரமசிவனுடைய திருவடிநீழலை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

கழற்சிங்கநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இடங்கழிநாயனார் புராணம்.

எழுந்திரைமா கடலாடை யிருநிலமா மகண்மார்பி
லழுந்துபட வெழுதுமிலைத் தொழிற்றொய்யி லணியினவாஞ்
செழுந்தளிரின் புடைமறைந்த பெடைகளிப்பத் தேமாவின்
கொழுந்துணர்கோ திக்கொண்டு குயினாடு கோனாடு. (க)

முருகுறுசெங் கமலமது மலர்துதைந்த மொய்யளிகள்
பருகுறுந்தெண் டிரைவாவிப் பயில்பெடையோ டிரையருந்தி
வருகுறுதண் டுளிவாடை மறையமா தவிச்சூழற்
குருகுறங்குங் கோனாட்டுக் கொடிநகரங் கொடும்பாளூர். (உ)

அங்கரத் தினிலிருக்கும் வேளிர்குலத் தரசளித்து
மன்னியபொன் னம்பலத்து மணிமுகட்டிற் பாக்கொங்கிற்
பன்னுதுலைப் பசும்பொன்னாற் பயில்பிழம்பர் மிசையணிந்த
பொன்னெடுந்தோ ளாதித்தன் புகழ்மரபிற் குடிமுதலோர். (௩)

இடங்கழியா ரெனவுலகி லேறுபெரு நாமத்தா
ரடங்கலர்முப் புரமெரித்தா ரடித்தொண்டி னெறியன்றி
முடங்குநெறி கனவினிலு முன்னுதா ரெந்நாளுந்
தொடர்ந்தபெருங் காதலினாற் றொண்டர்வேண் டியசெய்வார். (௪)

சைவநெறி வைதிகத்தின் றருமநெறி யொடுந்தழைப்ப
மைவளருந் திருமிடற்றார் மன்னியகோ யில்களெங்கு
மெய்வழிபாட் டர்ச்சனைகள் விதிவழிமேன் மேல்விளங்க
மொய்வளர்வண் புகழ்பெருக முறைபுரியு மந்நாளில். (௫)

சங்கரன்ற னடியாருக் கமுதளிக்குந் தவமுடையா
ரங்கொருவ ரடியர்தமக் கமுதொருநா ளாக்கவுட
லெங்குமொரு செயல்காணு தெய்தியசெய் தொழின்முட்டப்
பொங்கியெழும் பெருவிருப்பாற் புரியும்வினை தெரியாது. (௬)

அரசரவர் பண்டாரத் தந்நாட்டி னெற்கூட்டி
னிறைசெறிந்த புரியலவா நிலைக்கொட்ட காரத்திற்
புறைசெறிநள் ளிருளின்கட் புக்குமுகந் தெடுப்பவரை
முரசெறிகா வலர்கண்டு பிடித்தரசன் முன்கொணர்ந்தார். (௭)

மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேன்மன்னர் வினவுதலு
மத்தனடி யாரையா னமுதுசெய்விப் பதுமுட்ட
வித்தகைமை செய்தேனென் றியம்புதலு மிகவிரங்கிப்
பத்தரைவிட் டிவரன்றோ பண்டார மெனக்கென்பார். (௮)

நிறையழிந்த வுள்ளத்தா னெற்பண்டா ரமுமன்றிக்
குறைவிலிநிதிப் பண்டார மானவெலாங் கொள்ளைமுகந்
திறைவனடி யார்கவர்ந்து கொள்கவென வெம்மருங்கும்
பறையறையப் பண்ணுவித்தார் படைத்தநிதிப் பயன்கொள்வார். (௯)

எண்ணில்பெரும் பண்டார மீசனடி யார்கொள்ள
வுண்ணிறைந்த வன்பினு லுறுகொள்ளை மிகவூட்டி
தண்ணளியா னெடுங்காலந் திருநீற்றி னெறிதழைப்ப
மண்ணிலருள் புரிந்திறைவர் மலரடியி னிழற்சேர்ந்தார். (௧௦)

மைதழையு மணிமிடற்றார் வழித்தொண்டின் வழிபாட்டி
லெய்துபெருஞ் சிறப்புடைய விடங்கழியார் கழல்வணங்கி
மெய்தருவார் நெறியன்றி வேறொன்று மேலறியாச்
செய்தவராஞ் செருத்துணையார் திருத்தொண்டின் செயன்மொழிவாம். ()

ஆ திருவிருத்தம் - ௩௬௫௰௨.

திருச்சிற்றம்பலம்.

கோனாட்டிலே கொடும்பாளூரிலே, குறுநிலமன்னர்குலத்திலே, கனகசபையின் முகட்டைக் கொங்கிற்செம்பொன்னால் வேய்ந்த ஆதித்தன்குடியிலே, இடங்கழிநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் சைவநெறியும் வைதிகநெறியுந்தழைக்க, சிவாலயங்களெங்கும் நித்திய நைமித்திகங்கள் சிவாகமவிதிப்படி நடக்க, அரசியற்றுங்காலத்திலே; சிவனடியார்களைத் திருவமுதுசெய்விக்கும் ஓரடியவர் ஒருநாள் திருவமுதுசெய்வித்தற்குப் பொருள் எங்கும் அகப்படாமையால் மனந்தளர்ந்து, மாகேசுரபூசைமேல் வைத்த அத்தியந்த ஆசையினால் விழுங்கப்பட்டமையால் செயற்பாலது இது என்பது தெரியாமல், அவ்விடங்கழிநாயனாருடைய பண்டாரத்திலே நெற்கூட்டு நிரைகள் நெருங்கிய கொட்டகாரத்தில் அத்தராத்திரியிலே புகுந்து முகந்து எடுத்தார். காவலாளர்கள் அதைக்கண்டு, அவரைப் பிடித்து, இடங்கழிநாயனாருக்கு முன் கொண்டுவந்தார்கள். இடங்கழிநாயனார் அவ்வடியவரைப் பார்த்து, "நீர் ஏன் நம்முடைய நெற்பண்டாரத்தைக் கவர்ந்தீர்" என்று வினவ; அவ்வடியவர் "நான் சிவனடியார்களைத் திருவமுதுசெய்வித்தற்குப்பொருள் இன்மையால் இங்ஙனஞ்செய்தேன்" என்றார். இடங்கழிநாயனார் அது கேட்டு மிக இரங்கி, "எனக்கு இவரன்றோ பண்டாரம்" என்று சொல்லி, "சிவனடியார்களெல்லாரும் நெற்பண்டாரத்தை மாத்திரமன்றி மற்றை நிதிப் பண்டாரங்களையும் எடுத்துக்கொள்க" என்று எங்கும் பறையறைவித்தார். பின்னும் நெடுங்காலம் திருநீற்றின் நெறி தழைக்கும்படி தண்ணளியோடு அரசியற்றிக்கொண்டிருந்து, சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

இடங்கழிநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## செருத்துணைநாயனார் புராணம்.

உள்ளும்புறம்புங் குலமரபி னொழுக்கம்வழுக்கா வொருமைநெறி
கொள்ளுமியல்பிற் குடிமுதலோர் மலிந்தசெல்வக் குலப்பதியாந்
தெள்ளுந்திரைகண் மதகுதொறுஞ் சேலுங்கயலுஞ் செழுமணியுந்
தள்ளும்பொன்னி நீர்நாட்டு மருகனாட்டுத் தஞ்சாவூர். (க)

சீரின்விளங்கு மப்பதியிற் றிருந்துவேளாண் குடிமுதல்வர்
நீரின்மலிந்த செய்யசடை நீற்றர்கூற்றி னெஞ்சிடித்த
வேரிமலர்ந்த பூங்கழல்சூழ் மெய்யன்புடைய சைவரெனப்
பாரினிகழ்ந்த செருத்துணையார் பரவுந்தொண்டி னெறிநின்றார். (உ)

ஆனவன்பர் திருவாரூ ராழித்தேர்வித் தகர்கோயின்
ஞானமுனிவ ரிமையவர்க ணெருங்குநலஞ்சேர் முன்றிலினுண்
மானநிலவு திருப்பணிகள் செய்துகாலங் களின்வணங்கிக்
கூனலிளவெண் பிறைமுடியார் தொண்டுபொலியக் குலவுநாள். (ங)

உலகுநிகழ்ந்த பல்லவர்கோச் சிங்கருரிமைப் பெருந்தேவி
நிலவுதிருப்பூ மண்டபத்து மருங்குநீங்கிக் கிடந்ததொரு
மலரையெடுத்து மோந்ததற்கு வந்துபொறாமை வழித்தொண்ட
ரிலகுசுடர்வாய்க் கருவியெடுத் தெழுந்தவேகத் தாலெய்தி. (ச)

கடிதுமுற்றி மற்றவட்ன் கருமென்கூந்தல் பிடித்தீர்த்துப்
படியில்வீழ்த்தி மணிமூக்கைப் பற்றிப்பரமர் செய்யசடை
முடியிலேறுந் திருப்பூமண் டபத்துமலர்மோந் திடுமூக்கைத்
தடிவனென்று கருவியினு லரிந்தார்தலைமைத் தனித்தொண்டர். (ரு)

அடுத்ததிருத்தொண் டுலகறியச் செய்தவட்லே றனையவர்தாந்
தொடுத்ததாம மலரிதழி முடியாரடிமைத் தொண்டுகட
லுடுத்தவுலகி னிகழச்செய் துய்யச்செய்ய பொன்மன்று
ளெடுத்தபாத நிழலடைந்தே யிறவாவின்ப மெய்தினர். (சா)

செங்கண்விடையார் திருமுன்றில் விழுந்ததிருப்பள் ளித்தாம
மங்கணெடுத்து மோந்தவதற் கரசனுரிமைப் பெருந்தேவி
துங்கமணிமூக் கரிந்தசெருத் துணையார்தூய கழலிறைஞ்சி
யெங்குநிகழ்ந்த புகழ்த்துணையா ருரிமையடிமை யெடுத்துரைப்பாம். (எ)

ஆக திருவிருத்தம் - ௪௧௬௩௪.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, மருகனாட்டிலே, தஞ்சாவூரிலே, வேளாளர்குலத்திலே, சைவசிரோமணியாகிய செருத்துணைநாயனரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருவாரூரை அடைந்து, காலந்தோறும் வன்மீகநாதரை வணங்கித் திருத்தொண்டுகள் செய்துகொண்டிருந்தார். இருக்குநாளிலே, அங்கே சுவாமிதரிசனஞ்செய்ய வந்த கழற்சிங்கநாயனருடைய மாதேவி பூமாலை கட்டும் மண்டபத்தின் பக்கத்திலே விழுந்து கிடந்த ஒருபூவை எடுத்து மோந்ததைக் கண்டு, அம்மண்டபத்திற் பூவை எடுத்து மோந்தாள் என்று நினைந்து, கத்தியினாலே அவளுடைய மூக்கை அரிந்தார். பின்னும் நெடுங்காலந் திருத்தொண்டின் வழி நின்று சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

செருத்துணைநாயனர்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புகழ்த்துணை நாயனார் புராணம்.

செருவிலிபுத் தூர்மன்னுஞ் சிவமறையோர் திருக்குலத்தா
ரருவிவரை வில்லாளிக் ககத்தடிமை யாமதனுக்
கொருவர்தமை நிகரில்லா ருலகத்துப் பரந்தோங்கிப்
பொருவரிய புகழ்நீடு புகழ்த்துணையா ரெனும்பெயரார். (௧)

தங்கோனைத் தவத்தாலே தத்துவத்தின் வழிபடுநாட்
பொங்கோத ஞாலத்து வற்கடமாய்ப் பசிபுரிந்து
மெங்கோமான் றனைவிடுவே னல்லேனென் றிராப்பகலுங்
கொங்கார்பன் மலர்கொண்டு குளிர்புனல்கொண் டர்ச்சிப்பார். (௨)

மாலயனுக் கரியானை மஞ்சனமாட் டும்பொழுது
சாலவுறு பசிப்பிணியால் வருந்திநிலை தளர்வெய்திக்
கோலநிறை புனறாங்கு குடந்தாங்க மாட்டாமை
யாலமணி கண்டத்தார் முடிமீது வீழ்த்தயர்வார். (௩)

சங்கரன்ற னருளாலோர் துயில்வந்து தமையடைய
வங்கணனுங் கனவின்க ணருள்புரிவா னருந்துணவு
மங்கியநாட் கழிவளவும் வைப்பதுநித் தமுமொருகா
சிங்குனக்கு நாமென்ன விடர்நீங்கி யெழுந்திருந்தார். (௪)

பெற்றமுகந் தேறுவார் பீடத்தின் கீழொருகா
சற்றமடங் கிடவளிப்ப வன்பருமற் றதுகைக்கொண்
டுற்றபெரும் பசியதனா லுணங்குமுடம் புடனுவந்து
முற்றுணர்வு தலைநிரம்ப முகமலர்ந்து களிகூர்ந்தார். (௫)

அந்நாள்போ லெந்நாளு மளித்தகா சதுகொண்டே
யின்னாத பசிப்பிணிவந் திறுத்தநா ணீங்கியபின்
மின்னார்செஞ் சடையார்க்கு மெய்யடிமைத் தொழில்செய்து
பொன்னாட்டி னமரர்தொழப் புனிதரடி நிழற்சேர்ந்தார். (௬)

பந்தணையு மெல்விரலாள் பாகத்தர் திருப்பாதம்
வந்தணையு மனத்துணையார் புகழ்த்துணையார் கழல்வாழ்த்திச்
சந்தணியு மணிப்புயத்துத் தனிவீர ராந்தலைவர்
கொந்தணையு மலரலங்கற் கோட்புலியார் செயலுரைப்பாம். (௭)

ஆ திருவிருத்தம் - ௧௯௬௬.

திருச்சிற்றம்பலம்.

செருவிலிபுத்தூரிலே, ஆதிசைவர்குலத்திலே, புகழ்த்துணை நாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவாகமவிதிப்படி பரமசிவனை அருச்சனைசெய்துவருங் காலத்திலே, பஞ்சம் உண்டாயினமையால் பசி மிகப் பெற்றும், "அருச்சனையை விடுவேனல்லேன்" என்று, அல்லும் பகலும் அருச்சிப்பார். ஒருநாள் திருமஞ்சனமாட்டும்பொழுது, மிகுந்த பசிநோயினால் கைசோர்ந்து கலசந் திருமுடிமேல் விழ, தாந் திருவடியிலே விழுந்து அயர்ந்து, திருவருளினாலே நித்திரை அடைந்தார். அப்பொழுது பரமசிவன் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "பஞ்சம் நீங்கும் வரைக்கும் உனக்குத் தினந்தோறும் இங்கே ஒவ்வொருகாசு வைப்போம்" என்று அருளிச்செய்தார். புகழ்த்துணைநாயனார் விழித்து எழுந்து, பீடத்தின்கீழே ஒருகாசு இருக்கக் கண்டு, அதனைக்கைக்கொண்டுவாழ்ந்தார். அந்நாளிலேபோல எந்நாளிலும் அப்படியே ஒவ்வொரு காசு பெற்று,பஞ்சநீங்கியபின்னும் நெடுங்காலம் மெய்யடிமைத்தொழில் செய்து, பரமசிவனது திருவடிநீழலை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

புகழ்த்துணைநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## கோட்புலிநாயனார் புராணம்.

நலம்பெருகுஞ் சோணாட்டு நாட்டியத்தான் குடிவேளாண்
குலம்பெருக வந்துதித்தார் கோட்புலியா ரெனும்பெயரார்
தலம்பெருகும் புகழ்வளவர் தந்திரியா ராய்வேற்றுப்
புலம்பெருகத் துயர்விளையப் போர்விளைத்துப் புகழ்விளைப்பார். (க)

மன்னவன்பாற் பெறுஞ்சிறப்பின் வளமெல்லா மதியணியும்
பின்னுகர்தங் கோயிறொறுந் திருவமுதின் படிபெருகச்
செந்நெல்மலைக் குவடாகச் செய்துவருந் திருப்பணியே
பன்னெடுநாள் செய்தொழுகும் பாங்குபுரிந் தோங்குநாள். (உ)

வேந்தனே வலிற்பகைஞர் வெம்முனைமேற் செல்கின்றார்
பாந்தள்பூ ணணவணிந்தார் தமக்கமுது படியாக
வேந்தலார் தாமெய்து மளவும்வேண் டுஞ்செந்நெல்
வாய்ந்தகூ ட்டைகட்டி வழிக்கொள்வார் மொழிகின்றார். (௩)

தந்தமர்க ளாயினர் தமக்கெல்லாந் தனித்தனியே
யெந்தையார்க் கமுதுபடிக் கேற்றியநெல் லிவையழிக்கச்
சிந்தையாற் றாகினைவார் திருவிளையாக் கலியென்று
வந்தனையா லுரைத்தகன்றார் மன்னவன்மாற் றார்முனைமேல். (ச)

மற்றவர்தாம் போயினபின் சிலநாளில் வற்கால
முற்றலுமச் சுற்றத்தா ருணவின்றி யிறப்பதனிற்
பெற்றமுயர்த் தவரமுது படிகொண்டா கிலும்பிழைத்துக்
குற்றமறப் பின்கொடுப்போ மெனக்கூடு குலைத்தழித்தார். (ரு)

மன்னவன்றன் றெம்முனையில் வினைவாய்த்து மற்றவன்பா
னன்னிதியின் குவைபெற்ற நாட்டியத்தான் குடித்தலைவ
ரங்கரிற் றமர்செய்த பிழையறிந்த தறியாமே
துன்னினர் சுற்றமெலாந் துணிப்பனெனுந் துணிவினராய். (சா)

எதிர்கொண்ட தமர்க்கெல்லா மினியமொழி பலமொழிந்து
மதிதங்கு சுடர்மணிமா ளிகையின்கண் வந்தணைந்து
பதிகொண்ட சுற்றத்தார்க் கெல்லாம்பைந் துகினிதிய
மதிகந்தந் தளிப்பதனுக் கழைமின்க ளென்றுரைத்து. (எ)

எல்லாரும் புகுந்ததற்பி னிருநிதிய மளிப்பார்போ
னல்லார் * தம் பேரோன்முன் கடைக்காக்க நாதன்றன்
வல்லாணை மறுத்தமுது படியழித்த மறக்கிளையைக்
கொல்லாதே விடுவேனோ வெனக்கனன்று கொலைபுரிவார். (அ)

தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்
பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியு
மெந்தையார் திருப்படிமற் றுண்ணவிசைந் தார்களையுஞ்
சிந்தவாள் கொடுதுணித்தார் தீயவினைப் பவந்துணிப்பார். (கூ)

பின்னங்குப் பிழைத்ததொரு பிள்ளையைத்தம் பெயரோனவ்
வன்னந்துய்த் திலதுகுடிக் கொருபுதல்வ னருளுமெனை
விக்கெல்லுண் டாண்முலைப்பா லுண்டதென வெடுத்தெறிந்து
மின்னல்ல வடிவாளா லிருதுணியாய் விழவேற்றார். (க0)

அங்கிலையே சிவபெருமா னன்பரெதிர் வெளியேகின்
றுன்னுடைய கைவாளா லுறுபாச மறுத்தகிளை
பொன்னுலகின் மேலுலகம் புக்கணையப் புகழோய்நீ
யிங்கிலேநம் முடனணைகென் றேவியெழுந் தருளினர். (கக)

அத்தனா யன்னையா யாருயிரா யமிர்தாகி
முத்தனா முதல்வன்றா ளடைந்துகிளை முதறடிந்த
கொத்தலர்தார்க் கோட்புலியா ரடிவணங்கிக் கூட்டத்திற்
பத்தராய்ப் பணிவார்தம் பரிசினையாம் பகருவாம். (கஉ)

* தம்பெயரோன் என்பவன் - கோட்புலியென்னும்பெயருள்ள காவலாளன்.

மேவரிய பெருந்தவம்யான் முன்புவிளைத் தனவென்றோ
யாவதுமோர் பொருளல்லா வென்மனத்து மன்றியே
காவலர்கா வலர்பெருகு நதிகழிய வழிநடந்த
சேவடிப்போ தெப்போதுஞ் சென்னியினு மலர்ந்தனவால். (கங.)

ஆ திருவிருத்தம் - ககளசூ.

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலே, நாட்டியத்தான்குடியிலே, வேளாளர்குலத்திலே, சிவபத்தியிற்சிறந்த கோட்புலிநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் அரசனிடத்திலே சேனாதிபதித்தொழில் பூண்டு, அதனாலே தமக்குக் கிடைக்கும் வேதனத்தைக்கொண்டு சிவாலயங்களுக்குத் திருவமுதின் பொருட்டு நெல்லுவாங்கிக் கட்டுதலாகிய திருப்பணியை நெடுங்காலஞ் செய்துவந்தார்.

இப்படியொழுகுநாளிலே, அரசனது ஏவலினால் போர்முனையிற் செல்லவேண்டி, சுவாமிக்குத் திருவமுதின்பொருட்டுத் தாந்திரும்பி வரும்வரைக்கும் வேண்டும் நெல்லைக் கட்டி, தம்முடைய சுற்றத்தார்களெல்லாருக்குந் தனித் தனியே அதில் எடுத்துச் செலவழியாதிருக்கும்படி ஆணையிட்டுக்கொண்டு, போருக்குப் போயினார். சிலநாளிலே பஞ்சம் வந்தமையால், அந்தச்சுற்றத்தார்கள் "நாங்கள் உணவின்றி இறப்பதினுஞ் சுவாமிக்குத் திருவமுதின் பொருட்டுக் கட்டப்பட்ட இந்நெல்லைக்கொண்டாயினும் பிழைத்து, பின் கொடுத்துவிடுவோம்" என்று, நெல்லைக் கூடு குலைத்து எடுத்துச் செலவழித்தார்கள். கோட்புலிநாயனார் அரசனுடைய பகைஞரைப் போர்முனையிலே வென்று அவனிடத்திலே நிதிக்குவைபெற்றுக்கொண்டு, தம்முடைய ஊரை அடைந்து, தம்முடைய சுற்றத்தார்கள் அதிபாதகஞ்செய்தமையை உணர்ந்து, ஒன்றுசெய்யத் துணிந்து, தம்முடைய வீட்டிலே புகுந்து, அவர்களெல்லாரையும் அழைப்பித்து, தமது கோட்புலியென்னும் பெயரையுடைய காவலாளன் கடை காக்க, சிவத்திரவியத்தை எடுத்துச் செலவழித்த அதிபாதகிகளாகிய தந்தை, தாய், உடன்பிறந்தார், மனைவி முதலிய சுற்றத்தாரெல்லாரையும் பணிவிடைக்காரரையும் வாளினாலே துணித்தார். அப்பொழுது காவலாளன் அங்கே பிழைத்த ஒரு ஆண்பிள்ளையைப்பார்த்து, "இக்குழந்தை அவ்வன்னத்தை உண்டதன்று. இது இக்குடிக்கு ஒருபிள்ளை; இதனைக் கொல்லாதருள்செய்யும்" என்று வேண்ட; கோட்புலிநாயனார் "இது இந்நெல் உண்டவளுடைய முலைப்பாலை உண்டது" என்று, அதை எடுத்து எறிந்து, வாளினாலே துணித்தார். உடனே சிவபெருமான் கோட்புலிநாயனாருக்குத் தோன்றி, "அன்பனே,

உன்கைவாளினாலே தங்கள் பாவத்தினின்றும் நீங்கிய உன் சுற்றத்தார்கள் சுவர்க்கத்தை அடைய, நீ இந்தப்படியே நம்முடன் வருவாய்" என்று கருணைசெய்து எழுந்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.

கோட்புலிநாயனார்புராண முற்றிற்று.

---

ஒன்பதாவது,

கடல்சூழ்ந்தசருக்க முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தாவது,

# பத்தராய்ப்பணிவார் சருக்கம்.

## பத்தராய்ப்பணிவார் புராணம்.

ஈசருக்கே யன்பானார் யாவரையுந் தாங்கண்டாற்
கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற்
றாசையினா லாவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து
பேசுவன பணிந்தமொழி யினியனவே பேசுவார். (க)

தாவரிய வன்பினாற் சம்புவினை யெவ்விடத்தும்
யாவர்களு மர்ச்சிக்கும் படிகண்டா லினிதுவந்து
பாவனையா னோக்கினாற் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய வன்பினான் மேலவர்க்கு மேலானார். (உ)

அங்கணனை யடியாரை யாராத காதலினாற்
பொங்கிவரு முவகையுடன் றான்விரும்பிப் பூசிப்பார்
பங்கயமா மலர்மேலான் பாம்பணையா னென்றிவர்க
டங்களுக்குஞ் சார்வரிய சரண்சாருந் தவமுடையார். (ங)

யாதானு மிவ்வுடம்பாற் செய்வினைக ளேறுயர்த்தார்
பாதார விந்தத்தின் பாலாக வெனும்பரிவாற்
காதார்வெண் குழையவர்க்காம் பணிசெய்வார்க் கருக்குழியிற்
போதார்க ளவர்புகழ்க்குப் புவனமெலாம் போதாவால். (ச)

சங்கரனைச் சார்ந்தகதை தான்கேட்குந் தன்மையரா
யங்கணனை மிகவிரும்பி யயலறியா வன்பினால்
கங்கைநதி மதியிதழி காதலிக்குந் திருமுடியார்
செங்கமல மலர்ப்பாதஞ் சேர்வதனுக் குரியார்கள். (ரு)

ஈசனையே பணிந்துருகி யின்பமிகக் களியெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே யுடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார். (௬)

நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலு
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு
மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமைக்
குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார். (௭)

சங்கரனுக் காளான தவங்காட்டித் தாமதனாற்
பங்கமறப் பயன்றுய்ப்பார் படிவிளக்கும் பெருமையினா
ரங்கணனைத் திருவாரு ராள்வானை யடிவணங்கிப்
பொங்கியெழுஞ் சித்தமுடன் பத்தராய்ப் போற்றுவார். (அ)

ஆ. திருவிருத்தம் - ௯௲அஎ.

---

திருச்சிற்றம்பலம்.

சிவனடியார்களைக் கண்டால் அவர்களுடைய சாதியை விசாரியாமல் அவர்களைச் சிவபிரானெனப் பாவித்து நமஸ்கரித்து, குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்ந்து அத்தியந்த ஆசையுடன் பசுவுக்குப் பின் கன்று அணைதல்போல அணைந்து, அவர்களுடன் பேசுங்காலத்து அவர்களைப் பேசும் பூச்சிய வசனமும் தங்களைப் பேசும் நைச்சியவசனமுந் தப்புமோ என்னுங் கூச்சத்துடனே பேசி, அவர்களுக்கு வேண்டுங் கருமமே தங்களுக்கு வேண்டுங் கருமமாகச் செய்தலும், சிவபெருமானை மிகுந்த அன்பினோடு எவ்விடத்தும் யாவர்களும் விதிப்படி அருச்சித்தலைக் கண்டால் மனமகிழ்தலும், சிவபெருமானையும் அவருடைய அடியார்களையும் தெவிட்டாத விருப்பத்தோடு சைவாகமவிதிப்படி அருச்சித்தலும், தங்கள் உடம்பினாலே செய்யும் புண்ணியங்களெல்லாவற்றையும் சிவபெருமானது திருவடிக்கே கொடுத்தலும், சிவசரித்திரங்களையே அன்பினோடு கேட்டலும் சிவபெருமானையே வணங்கி மன நெக்குநெக்குருகிச் சரீரநடுக்குற்று உரோமப்புளகம் உண்டாக மதகினிற் புறப்படுஞ்சலம்போல ஆனந்தபாஷ்பம் பொழிய நாத்தழும்பப் பரவசமாதலும், நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் உண்டாலும் துயின்றாலும் விழித்தாலும் சிவபெருமானை ஒருபோதும் மறவா திருத்தலும், (சிவவேடந்தரித்துத் திருத்தொண்டர் போல் நடித்து அதனாற் சீவனஞ்செய்யாமையும், ) ஆகிய இவ்வெட்டினையும் உடையவர்களே பத்தராய்ப்பணிவாரென்று சொல்லப்படுவார்கள்.

திருச்சிற்றம்பலம்.

பத்தராய்ப்பணிவார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பரமனையேபாடுவார் புராணம்.

புரமூன்றுஞ் செற்றானைப் பூணாக மணிந்தானை
யுரனில்வரு மொருபொருளை யுலகனைத்து மானானைக்
கரணங்கள் காணாமற் கண்ணார்ந்து நிறைந்தானைப்
பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம். (௧)

தென்றமிழும் வடகலையுந் தேசிகமும் பேசுவன
மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக
வொன்றியமெய் யுணர்வோடு முள்ளுருகிப் பாடுவார்
பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார். (௨)

ஆக திருவிருத்தம் - ௧௲௮௬.

---

திருச்சிற்றம்பலம்.

சம்ஸ்கிருதம் தமிழ் என்னும் பாடைகளைக் கற்று வல்லர்களாகி, சனன மரணப்பட்டு உழல்கின்ற பசுக்களாகிய பிரமவிட்டுணுமுதலிய தேவர்களையும் மனிதர்களையும் மதித்து அவர்களுக்குக் கர்மாநுகுணமாகக் கிடைத்த அநித்தியமுந் துக்கமுமாகிய வாழ்வை மெய்யெனக் கருதி அவர்களைப் பாடி வாணாளை வீணாளாகப் போக்காது, பதியாகிய சிவபெருமானது மகிமையை வேதசிவாகமபுராணவழியால் உள்ளபடி அறிந்து அவருடைய திருவடிகளை அடைந்து, மனங்கசிந்துருக உரோமஞ்சிலிர்ப்ப ஆனந்தவருவி சொரிய அவரையே மெய்யன்போடு பாடி, "நாம் சுவதந்திரராகிய பரமசிவனுக்கே ஆளாயினோம். பரதந்திரராகிய மற்றுள்ளோர்களில் ஒருவருக்கும் குடியல்லேம். அவர்களெல்லாருக்கும் மேலானோம்" என்று இறுமாப்பு அடைந்து திரிகின்றவர்களே பரமனையே பாடுவார் என்று சொல்லப்படுவார்கள்.

திருச்சிற்றம்பலம்.

பரமனையேபாடுவார்புராண முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார் புராணம்.

காரணபங் கயமைந்தின் கடவுளர்தம் பதங்கடந்து
பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத்
தாரணையாற் சிவத்தடைந்த சித்தத்தார் தனிமன்று
ளாரணகா ரணக்கூத்த ரடித்தொண்டின் வழியடைந்தார். (க)

ஆ. திருவிருத்தம் - ககூகூ0.

திருச்சிற்றம்பலம்.

உச்சுவாசம் நிச்சுவாசம் இரண்டையும் அடக்கி, சுழுமுனைமார்க்கத்திலே பிராணவாயுவை நிறுத்தி, விஷயங்களின் வழி மனசைப் போகவொட்டாமல் திருப்பி, ஒருகுறிப்பிலே நிறுத்தி, மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என்னும், ஆறுதாரங்களின் அந்தர்மாதிருகாக்கிரமத்தை அறிந்து, அவ்வவ்வாதாரங்களின் அதிதேவதைகளைத் தியானித்து, அவ்வாறுதாரங்களினும் அசபாசத்தி சிவான்மிகையாய் நிற்கும் முறைமையைப் பார்த்து, மூலாதாரந்தொடங்கி விநாயகர் முதலாகிய தேவதைகளைப்பொருந்தி அபிமுகம் பண்ணிக்கொண்டு ஆறுதாரத்துக்கும் மேலாகிய பிரமரந்திரமளவும் அசபையுடன் சென்றணைந்து, அந்தப்பிரமரந்திரத்திலே அதோமுகமாய்ச் சகஸ்ரதளமாய் இருக்கிறதாமரை முகையைச் சோதிசோதிபதோச்சாரணத்தாலே உதிக்குஞ் சிவார்க்கனாலே அலரச் செய்து, அந்தத் தாமரைப்பூவின் கேசராக்கிரத்திலே உள்ள சந்திரமண்டலத்தை ஆகுஞ்சனஞ்செய்தலினாலே மூலாக்கினியை அக்கினிபீசாக்கர உச்சாரணத்தினாலே எழுப்பி, நாடிசக்கரத்தைப் பேதித்து, அவ்வக்கனியினாலே சந்திரமண்டலத்தை இளகப்பண்ணி, அந்த அமிர்தத்தைச் சர்வநாடிவழியாக நிரப்பி அவ்விடத்தில் உண்டாகிய சுகோதயத்தில் அந்த மயமான ஞானமிர்தாவத்தையை அடைந்து நின்று, சோமசூரியாக்கினிப் பிரகரசாதிகளாகிய பிரத்தியேகப்பிரகாசங்களெல்லாஞ் சூரியோதயத்திலே நக்ஷத்திராதிப்பிரகாசங்கள் அடங்கினாற்போலத் தன்னிடத்தடங்கச் சர்வதோமுகமாய் ஸ்வயபரப்பிரகாசகமாய் இருக்கின்ற பூரணப்பிரகாசத்தைப் பாவிக்கின்றவர்களே சித்தத்தைச் சிவன்பாலே வைத்தாரென்று சொல்லப்படுவார்கள்.

திருச்சிற்றம்பலம்.

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்புராண முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர்ப்பிறந்தார் புராணம்.

அருவாகி யுருவாகி யனைத்துமாய் நின்றபிரான்
மருவாருங் குழலுமையாண் மணவாளன் மகிழ்ந்தருளுந்
திருவாரூர்ப் பிறந்தார்க டிருத்தொண்டு தெரிந்துரைக்க
வொருவாயாற் சிறியேனு லுரைக்கலாந் தகைமையதோ. (க)

திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் றிருக்கணத்தார்
பெருக்கியசீர்த் திருவாரூர்ப் பிறந்தார்க ளாதலினாற்
றருக்கியவைம் பொறியடக்கி மற்றவர்தந் தாள்வணங்கி
யொருக்கியநெஞ் சுடையவர்க்கே யணித்தாகு முயர்நெறியே. (உ)

ஆ திருவிருத்தம் - கககூஉ.

திருச்சிற்றம்பலம்.

பூர்வஜன்மத்திலே செய்த புண்ணியத்தினாலே திருவாரூரென்னுஞ் சிவஸ்தலத்திலே சைவமரபினராய்ப் பிறந்தவர்கள் பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்னும் நான்குவருணத்தாராயினும், சங்கரசாதியாராயினும், பரமசிவனுடைய திருவருளை அடைதலால், சிவகணநாதர்களாய் இருப்பர்கள். திருவாரூர்ப்பிறந்தாரெல்லாருஞ் சிவகணநாதர்கள் என்று சிவபெருமானே நமிநந்தி யடிகணாயனாருக்கு அருளிச்செய்தனர். அந்நாயனாரும் அவர்களெல்லாருஞ் சிவகணநாதவடிவினராய்த் தோன்றக் கண்டனர்.

திருச்சிற்றம்பலம்.

திருவாரூர்ப்பிறந்தார்புராண முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார் புராணம்.

எப்போது மினியபிரா னின்னருளா லதிகரித்து
மெய்ப்போத நெறிவந்த விதிமுறைமை வழுவாமே
யப்போதைக் கப்போது மார்வமிகு மன்பினராய்
முப்போது மர்ச்சிப்பார் முதற்சைவ ராமுனிவர். (க)

தெரிந்துணரின் முப்போதுஞ் செல்கால நிகழ்காலம்
வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்
விரும்பியவர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே புரியகலப்
பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ. (உ)

வேறு.

நாரணற்கு நான்முகற்கு மறியவொண்ணு நாதனையெம் பெருமானை ஞானமான, வாரணத்தி னுட்பொருள்க ளனைத்துமாகு மன்னவலையெண்ணியகால மூன்றுமன்பின், காரணத்தா லர்ச்சிக்கு மறையோர்தங்கள் கமலமலர்க் கழல்வணங்கிக் கசிந்துநிந்தைப், பூரணத்தான் முழுநீறு பூசி வாழும் புனிதர்செய லறிந்தவா புகலலுற்றேன். (௩)

ஆ திருவிருத்தம் - ௪௧௯௬.

திருச்சிற்றம்பலம்.

சிருட்டிகாலத்திலே அநாதிசைவராகிய சதாசிவமூர்த்தியுடைய சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்னும் பஞ்சவத்திரத்தினின்றுந் தோன்றிய கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியர் என்னும் பஞ்சருஷிகோத்திரத்திலே ஜனித்த சிவப்பிராமணர்கள் ஆதிசைவரென்று சொல்லப்படுவார்கள். அவர்களுள்ளே சமயதீக்ஷை விசேஷதீக்ஷை நிருவாணதீக்ஷை ஆசாரியாபிஷேகங்களைப் பெற்றவர்களே சர்வாதிகாரிகளென்றும், உத்தமோத்தமசிவாசாரியர்களென்றும், சிவாகமங்கள் செப்பும். பரார்த்தப்பிரதிட்டை பரார்த்த பூசைகள் செய்தற்கு அவர்களே உரியவர்கள். மற்றையர்கள் உரியர்களல்லர். அதனால் அவர்களே சிவாகமவிற்பன்னர்களாகிக் கிருதகிருத்தியர்களாய் முப்பொழுதினுஞ் சிவலிங்கத்தை அருச்சிப்பார்கள். ஆதலால், அவர்களே முப்பொழுதுந் திருமேனி தீண்டுவாரென்று சொல்லப்படுவார்கள்.

திருச்சிற்றம்பலம்.

முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்புராண முற்றிற்று.

---

௭

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## முழுநீறுபூசியமுனிவர் புராணம்.

ஆதார மாயனைத்து மாகிநின்ற வங்கணனெம் பெருமானீ றணிந்த வேணிக், காதார்வெண் டிருக்குழையா னருளிச்செய்த கற்பமநு கற்பமுப கற்பந்தானு,மாகாதென் றங்குரைத்த வகற்பநீக்கி யாமென்று முன்மொழிந்த மூன்றுபேத, மோகாதி குற்றங்க ளறுக்குநீற்றை மொழிவதுநம் மிருவினைகள் கழிவதாக. (௧)

அம்பலத்தே யுலகுய்ய வாடுமண்ண லுவந்தாடு மஞ்சினையு மளித்த வாக்க, ளிம்பர்மிசை யனுமயமா யிருந்தபோதி லீன்றணிய கோமயமந் திரத்தினலேற், றும்பர்தொழ வெழுஞ்சிவமந் திரவோமத்தா லுற்பவித்த சிவாங்கிதனி லுணர்வுக்கெட்டா, வெம்பெருமான் கழனினைந்தங் கிட்ட தாநீ றிதுகற்ப மென்றெடுத்திங் கேத்தலாகும். (உ)

ஆரணியத் துலர்ந்தகோ மயத்தைக்கைக்கொண் டழகுறநுண் பொடியாக்கி யாவின்சுத்த, நீரணிவித் தத்திரமந் திரத்தினலே நிசையமுறப் பிடித்தோம நெருப்பிலிட்டுச், சீரணியும் படிவெந்து கொண்டசெல்வத் திருநீறு மநுகற்பந் தில்லைமன்றுள், வாரணியு முலையுமையாள் காணவாடு மாணிக்கக் கூத்தர்மொழி வாய்மையாலே. (ங)

அடவிபடு மங்கியினல் வெந்தநீறு மானிலைக ளனறெரிக்க வெந்தநீறு, மிடவகைக ளெரிகொளுவ வெந்தநீறு மிட்டிகைகள் சுட்டவெரி பட்டநீறு, முடனன்றி வெவ்வேறே யாவினீரா லுரைதிகழு மந்திரங்கொண் டுண்டையாக்கி, மடமதனிற் பொலிந்திருந்த சிவாங்கிதன்னல் வெந்ததுமற் றுபகற்ப மரபினுகும். (ச)

இந்தவகை யாலமைத்த நீறுகொண்டே யிருதிறமுஞ் சுத்திவரத் தெறித்தபின்ன, ரந்தமிலா * ஆனங்கி யாறுமெய்ம்மை யறிவித்த குருநன்மை யல்லாப்பூமி, முந்தவெதி ரணியாதே யணியும்போது முழுவதுமெய்ப் புண்டரஞ்சந் திரனிற்பாதி, நந்தியெரி தீபநிகழ் வட்டமாக நாதரடி யாரணிவர் நன்மையாலே. (ரு)

சாதியினிற் றலையான தருமசீலர் தத்துவத்தி னெறியுணர்ந்தோர் தங்கள்கொள்கை, நீதியினிற் பிழையாது நெறியினிற்பார் நித்தநிய மத்துநிக ழங்கிதன்னிற், பூதியினைப் புகியபா சனத்துக்கொண்டு புலியதளினுடையானைப் போற்றிநீற்றை, யாதிவரு மும்மலமு மறுத்தவாய்மை யருமுனிவர் முழுவதுமெய் யணிவரன்றே. (சு)

ஆக திருவிருத்தம் - உ00க.

---

திருச்சிற்றம்பலம்.

உற்பத்தியினலே கற்பம் அநுகற்பம் உபகற்பம் என மூவகைப்படும் விபூதியையாயினும், நித்தியாக்கினியில் எடுத்த விபூதியையாயினும், சிவபெருமான் முன்னும் அக்கினிமுன்னும் குருமுன்னும் அசுத்த நிலத்தும் வழிநடக்கும்போதும் பூசாது, உத்தூளனம் திரிபுண்டரம் பிறைவடிவம் முக்கோணம் வட்டமாகச் சிவாகமவிதிப்படி அன்போடு பூசுகின்றவர்கள் முழுநீறுபூசியமுனிவரென்று சொல்லப்படுவார்கள்.

திருச்சிற்றம்பலம்.

முழுநீறுபூசியமுனிவர்புராண முற்றிற்று.

---

* சிவத்துக்கெதிரிலும், அக்கினிக்கெதிரிலும், குருவுக்கெதிரிலும், நடக்கும்வழியிலும், அசுத்தமான இடத்திலிருந்தும் விபூதி யணிந்துகொள்ளலாகாது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்.

மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக்கப்பான் முதல்வனு ரடிச்சார்ந்த முறைமையோரு, நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற்கூறு நற்றொ ண்டர் காலத்து முன்னும்பின்னும், பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்பு தும்பை புதியமதி நதியிதழி பொருந்தவைத்த,சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந்தார்கள் செப்பியவப் பாலுமடிச் சார்ந்தார்தாமே. (௧)

செற்றார்தம் புரமெரித்த சிலையார்செல்வத் திருமுருகன் பூண்டியி னிற் செல்லும்போதிற், சுற்றருஞ் சிலைவேடர் கவர்ந்துகொண்ட தொகு நிதியின் பரப்பெல்லாஞ் சுமந்துகொண்டு, முற்றாத முலையுமையாள் பா கன்பூத முதற்கணமே யுடன்செல்ல முடியாப்பேறு, பெற்றார்தங் கழல் பரவ வடியேன்முன்னைப் பிறவியினிற் செய்ததவம் பெரியவாறே. (௨)

ஆ. திருவிருத்தம் - ௨௦௦௩.

திருச்சிற்றம்பலம்.

சேரசோழபாண்டியர் என்னும் மூவேந்தருக்கும் உரிய தமிழ்நா ட்டுக்கு அப்புறத்திலே சிவபெருமானுடைய திருவடிகளை அடைந்தவ ர்களும், சுந்தரமூர்த்திநாயனுருடைய திருத்தொண்டத் தொகையிலே சொல்லப்பட்ட திருத்தொண்டர்களுடைய காலத்துக்கு முன்னும் பின் னும் சிவபெருமானுடைய திருவடிகளை அடைந்தவர்களும், அப்பாலும டிச்சார்ந்தாரென்று சொல்லப்படுவார்கள்.

திருச்சிற்றம்பலம்.

அப்பாலுமடிச்சார்ந்தார்புராண முற்றிற்று.

பத்தாவது,

பத்தராய்ப்பணிவார்சருக்க முற்றுப்பெற்றது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினோராவது,

# மன்னியசீர்ச் சருக்கம்.

## பூசலார்நாயனார் புராணம்.

அன்றினர் புரமெரித்தார்க் காலய மெடுக்கவெண்ணி
யொன்றுமங் குதவாதாக வுணர்வினு லெடுக்குந்தன்மை
நன்றென மனத்தினுலே நல்லவா லயந்தான்செய்த
நின்றவூர்ப் பூசலார்த நினைவினை யுரைக்கலுற்றும். (க)

உலகினி லொழுக்கமென்று முயர்பெருந் தொண்டைநாட்டு
நலமிகு சிறப்பின்மிக்க நான்மறை விளங்குமூதூர்
குலமுதற் சீலமென்றுங் குறைவிலா மறையோர்கொள்கை
நிலவிய செல்வமல்கி நிகழ்திரு நின்றவூராம். (உ)

அருமறை மரபுவாழ வப்பதி வந்துசிந்தை
தருமுணர் வானவெல்லாந் தம்பிரான் கழன்மேற்சார
வருநெறி மாறுவன்பு வளர்ந்தெழ வளர்ந்துவாய்மைப்
பொருள்பெறு வேதநீதிக் கலையுணர் பொலிவின்மிக்கார். (ங)

அடுப்பது சிவன்பாலன்பர்க் காம்பணி செய்தலென்றே
கொடுப்பதெவ் வகையுந்தேடி யவர்கொளக் கொடுத்துக்கங்கை
மடுப்பொதி வேணியையர் மகிழ்ந்துறை வதற்கோர்கோயி
லெடுப்பது மனத்துக்கொண்டா ரிருநிதி யின்மையெண்ணார். (ச)

மனத்தினுற் கருதியெங்கு மாநிதி வருந்தித்தேடி
யெனைத்துமோர் பொருட்பேறின்றி யென்செய்கே னென்றுநைவார்
நினைப்பினு லெடுக்கநேர்ந்து நிகழ்வுறு நிதியமெல்லாந்
தினைத்துணை முதலாத்தேடிச் சிந்தையாற் றிரட்டிக்கொண்டார். (ரு)

சாதனத் தோடுதச்சர் தம்மையு மனத்தாற்றேடி
நாதனுக் காலயஞ்செய் நலம்பெறு நன்னாட்கொண்டே
யாதரித் தாகமத்தா லடிநிலை பாரித்தன்பாற்
காதலிற் கங்குற்போதுங் கண்படா தெடுக்கலுற்றார். (சு)

அடிமுத லுபானமாதி யாகிய படைகளெல்லாம்
வடிவுறுந் தொழில்கண்முற்ற மனத்தினல் வகுத்துமான
முடிவுறு சிகரந்தானு முன்னிய முழத்திற்கொண்டு
நெடிதுநாள் கூடக்கோயி னிரம்பிட நினைவாற்செய்தார். (எ)

தூபியு நட்டுமிக்க சுதையுநல் வினையுஞ்செய்து
கூவலு மமைத்துமாடு கோயில்சூழ் மதிலும்போக்கி
வாவியுந் தொட்டுமற்றும் வேண்டுவ வகுத்துமன்னுந்
தாபரஞ் சிவனுக்கேற்க விதித்தநாள் சாருநாளில். (அ)

காடவர் கோமான்கச்சிக் கற்றளி யெடுத்துமுற்ற
மாடெலாஞ் சிவனுக்காகப் பெருஞ்செல்வம் வகுத்தல்செய்வா
னாடமா லறியாதாரைத் தாபிக்கு மந்நாண்முன்னா
ளேடலர் கொன்றைவேய்ந்தா ரிரவிடைக் கனவிலெய்தி. (க)

நின்றவூர்ப் பூசலன்ப னெடிதுநா ளினைந்துசெய்த
நன்றுநீ டாலயத்து நாளைநாம் புகுவோநீயிங்
கொன்றிய செயலைநாளை யொழிந்துபின் கொள்வாயென்று
கொன்றைவார் சடையார்தொண்டர் கோயில்கொண் டருளப்போந்தார்.

தொண்டரை விளக்கத்தூயோ னருள்செயத் துயிலைநீங்கித்
திண்டிறன் மன்னனந்தத் திருப்பணி செய்தார்தம்மைக்
கண்டுநான் வணங்கவேண்டு மென்றெழுங் காதலோடுந்
தண்டலைச் சூழல்சூழ்ந்த நின்றவூர் வந்துசார்ந்தான். (கக)

அப்பதி யணைந்துபூச லன்பரிங் கமைத்தகோயி
லெப்புடை யதுவென்றங்க ணெய்தினர் தம்மைக்கேட்கச்
செப்பிய பூசல்கோயில் செய்ததொன் றில்லையென்றார்
மெய்ப்பெரு மறையோரெல்லாம் வருகவென் றுரைத்தான்வேந்தன். ()

பூசுர ரெல்லாம்வந்து புரவலன் றன்னைக்காண
மாசிலாப் பூசலார்தா மாரென மறையோரெல்லா
மாசில்வே தியனிவ்வூரா னென்றவ ரழைக்கவொட்டா
னீசனு ரன்பர்தம்பா லெய்தினன் வெய்யவேலான். (கங)

தொண்டரைச் சென்றுகண்ட மன்னவன் றொழுதுநீரிங்
கெண்டிசை யோருமேத்த வெடுத்தவா லயந்தான்யாதிங்
கண்டர்நா யகரைத்தாபித் தருளுநா ளின்றென்றும்மைக்
கண்டடி பணியவந்தேன் கண்ணுத லருள்பெற்றென்றான். (கச)

மன்னவ னுரைப்பக்கேட்ட வன்பர்தா மருண்டுநோக்கி
யென்னையோர் பொருளாக்கொண்டே யெம்பிரா னருள்செய்தானேல்
முன்வரு நிதியிலாமை மனத்தினால் முயன்றகோயி
லின்னதா மென்றுசிந்தித் தெடுத்தவா றெடுத்துச்சொன்னார். (கரு)

அரசனு மதனைக்கேட்டங் கதிசய மெய்தியென்னே
புரையறு சிந்தையன்பர் பெருமையென் றவரைப்போற்றி
விரைசெறி மாலைதாழ நிலமிசை வீழ்ந்துதாழ்ந்து
முரசெறி தானையோடு மீண்டுதன் மூதூர்ப்புக்கான். (கசு)

அன்பரு மமைத்தசிந்தை யாலயத் தரனார்தம்மை
நன்பெரும் பொழுதுசாரத் தாபித்து நலத்தினோடும்
பின்பூச னைகளெல்லாம் பெருமையிற் பலநாட்பேணிப்
பொன்புனை மன்றுளாடும் பொற்கழ னிழல்புக்கார். (கஎ)

நீண்டசெஞ் சடையினார்க்கு நினைப்பினாற் கோயிலாக்கிப்
பூண்டவன் பிடையறாத பூசலார் பொற்றாள்போற்றி
யாண்டகை வளவர்கோமா னுலகுய்ய வளித்தசெல்வப்
பாண்டிமா தேவியார்தம் பாதங்கள் பரவலுற்றேன். (கஅ)

ஆ திருவிருத்தம் - உ௦உக.

---

திருச்சிற்றம்பலம்.

தொண்டைமண்டலத்திலே, திருநின்றவூரிலே, பிராமணகுலத்திலே, பூசலார்நாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்களுக்கு வேண்டுவனவற்றை எப்படியுந்தேடிக் கொடுத்து, பரமசிவனுக்கு ஓராலயங்கட்டுதற்கு விரும்பி, எங்கும் வருந்திப் பொருள் தேடி, அற்பமுங்கிடையாமையால் நைந்து, "இதற்கு யாதுசெய்வேன்" என்று ஆலோசித்து, மனோபாவனையினாலே ஆலயங்கட்டத் துணிந்து, மனசினாலே அதற்கு வேண்டுந்திரவியங்களையும் உபகரணங்களையும் சிற்பரையுந்தேடி, சுபதினத்திலே அடிநிலை பாரித்து, இரவிலும் நித்திரையின்றி, நெடுநாட்கூடக் கோயில் கட்டிமுடித்து, பிரதிட்டை செய்தற்கு உரிய சுபதினத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அது நிற்க.

காடவராஜாவானவர் காஞ்சிபுரத்திலே ஒருசிவாலயங்கட்டுவித்தார். அதிலே பிரதிட்டை செய்ய நிச்சயித்த சுபதினத்துக்கு முதற்றினத்திலே பரமசிவன் பூசலார்நாயனாருடைய அன்பை விளக்கும்பொருட்டு அவ்வரசருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நின்றவூரில் இருக்கின்ற பூசலென்பவன் நமக்கு ஒருகோயில் கட்டியிருக்கின்றான். அதிலே நாளைக்கு நாம் போவோம். உன்கோயிலில் பிரதிட்டையை நாளை ஒழிந்து பின் கொள்வாய்" என்று அருளிச்செய்து மறைந்தருளினார். காடவராஜா விழித்து எழுந்து, அந்தப் பூசலார் நாயனாரை வணங்குதற்கு விரும்பி, திருநின்றவூரை அடைந்து, அங்கு வந்தார் சிலரை நோக்கி, "பூசலார்நாயனார் கட்டிய திருக்கோயில் எவ்விடத்தது" என்று வினவ; அவர்கள் "அவர் இங்கே கோயில் கட்டிற்றிலர்" என்றார்கள். உடனே காடவராஜா அவ்வூர்ப்பிராமணர்களை அழைப்பித்து, "பூசலார் நாயனார் என்பவர்யாவர்" என்று வினவ; அவர்களெல்லாரும் "அவர் பிராமணர், இவ்வூரார்" என்றுசொல்லி, அவரை அழைத்தற்குப் புறப்பட்டார்கள். அப்பொழுது காடவராஜா அவரை அழைக்கவொட்டா

மல், தாமே அவரிடத்திற் சென்று அவரைவணங்கி, "சுவாமீ, நீர் ஒருசி வாலயங்கட்டியிருக்கின்றீர் என்றும், பிரதிட்டை செய்யும் நாள் இன்று என்றும், சிவபெருமாஞல் அறிந்து, உம்மைத் தரிசித்து வணங்குதற்கு வந்தேன் அவ்வாலயம் யாது" என்று விண்ணப்பஞ்செய்ய; பூசலார் நாயஞர் மருண்டு நோக்கி, "சிவபெருமான் என்னை ஒருபொருளாகக் கொண்டு அருளிச்செய்தது நான் திரவியம் இல்லாமையால் மஞேபாவ னையிஞலே கட்டிய கோயிலையே" என்று நினைந்து, நிகழ்ந்ததை எடுத் துச் சொன்ஞர். காடவராஜா அதைக்கேட்டு வியந்து, அவரைச் சா ஷ்டாங்கமாக நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்து, அநுமதி பெற்றுக்கொ ண்டு, தமது ஊருக்குத்திரும்பி விட்டார். பூசலார்நாயஞர் தாம் மன சிஞலே கட்டிய திருக்கோயிலிலே சுபமுகூர்த்தத்திலே பரமசிவனைப் பி ரதிட்டை செய்து, நெடுங்காலம் பூசைசெய்துகொண்டிருந்து, சிவபதத் தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

பூசலார்நாயஞர்புராண முற்றிற்று.

---

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மங்கையர்க்கரசியார் புராணம்.

மங்கையர்க்குத் தனியரசி யெங்கடெய்வ வளவர்திருக் குலக்கொ ழுந்து வளைக்கைமானி,செங்கமலத் திருமடந்தை கன்னிநாடா டென்னர் குலப் பழிதீர்த்த தெய்வப்பாவை,யெங்கள்பிரான் சண்பையர்கோ னரு ளிஞலே யிருந்தமிழ்நா டுற்றவிடர் நீக்கித்தங்கள், பொங்கொளிவெண் டிருநீறு பரப்பிஞைப் போற்றுவார் கழலெம்மாற் போற்றலாமே (க)

பூசுரர்சூ ளாமணியாம் புகலிவேந்தர் போனகஞா னம்பொழிந்த புனிதவாக்காற், றேசுடைய பாடல்பெறுந் தவத்திஞைச் செப்புவதியா மென்னறிந்து தென்னர்கோமான், மாசில்புகழ் நெடுமாறன் றனக்குச் சைவ வழித்துணையாய் நெடுங்கால மன்னிப்பின்னை, யாசினெறி யவரோ டுங் கூடவீச ரடிநிழற்கீ ழமர்ந்திருக்க வருளும்பெற்ருர். (உ)

வருநாளென் றும்பிழையாத் தெய்வப்பொன்னி வளம்பெருக வள வர்குலம் பெருக்குந்தங்க, டிருநாடு போற்செழியர் தென்ஞடுவிளக்குஞ் சீர்விளக்கின் செய்யசீ றடிகள்போற்றி, யொருநாளுந் தன்செயலில் வழு வாதன்பர்க் குடைகீளுங் கோவணமு நெய்துநல்கும், பெருநாமச் சாலி யர்தங் குலத்தில்வந்த பெருந்தகையார் நேசர்திறம் பேசலுற்ரும். (ங)

ஆ திருவிருத்தம் - உ௦உச.

---

திருச்சிற்றம்பலம்.

மதுரையில் இருந்த நெடுமாறநாயனாருக்கு மனைவியார் சோழராஜாவுடைய புத்திரியாராகிய மங்கையர்க்கரசியார். அவர் சமயகுரவராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரால் திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப்பட்டவர். அந்தப் பரமாசாரியருடைய திருவருளினாலே நெடுங்காலம் தம்முடைய நாயகருக்குச் சைவவழித்துணையாகி, பாண்டிநாடெங்கும் சைவத்திருநெறியைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருந்து, அந்நாயகரோடு சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசியார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நேசநாயனார் புராணம்.

சீர்வளர் சிறப்பின்மிக்க செயன்முறை யொழுக்கங்குன்றா
நார்வளர் சிந்தைவாய்மை நன்மையார் மன்னிவாழும்
பார்வளர் புகழின்மிக்க பழம்பதி மதிதோய்நெற்றிக்
கார்வளர் சிகரமாடக் காம்பிலி யென்பதாகும். (௧)

அந்நக ரதனில்வாழ்வா ரறுவையர் குலத்துவந்தார்
மன்னிய தொழிலிற்றங்கண் மரபின்மேம் பாடுபெற்றார்
பன்னகா பரணற்கன்பர் பணிதலைக் கொண்டுபாதஞ்
சென்னியிற் கொண்டுபோற்றுந் தேசினார் நேசரென்பார். (௨)

ஆங்கவர் மனத்தின்செய்கை யரனடிப் போதுக்காக்கி
யோங்கிய வாக்கின்செய்கை யுயர்ந்தவஞ் செழுத்துக்காக்கி
தாங்குகைத் தொழிலின்செய்கை தம்பிரா னடியார்க்காகப்
பாங்குடை யுடையுங்கீளும் பழுதில்கோ வணமுநெய்வார். (௩)

உடையொடு நல்லகீளு மொப்பில்கோ வணமுநெய்து
விடையவ ரடியார்வந்து வேண்டுமா றீயுமாற்றா
லிடையறா தளித்துநாளு மவர்கழ லிறைஞ்சியேத்தி
யடைவுறு நலத்தராகி யரனடி நீழல்சேர்ந்தார். (௪)

வேறு.

கற்றைவேணி முடியார்தங் கழல்சேர்வதற்குக் கலந்தவினை
செற்றநேசர் கழல்வணங்கிச் சிறப்பான்முன்னைப் பிறப்புணர்ந்து
பெற்றமுயர்த்தார்க் காலயங்கள் பெருகவமைத்து மண்ணாண்ட
கொற்றவேந்தன் கோச்செங்கட் சோழன்பெருமை கூறுவாம். (௫)

ஆக திருவிருத்தம் - உ0உகூ.

---

திருச்சிற்றம்பலம்.

காம்பிலிநகரத்திலே, சாலியர் குலத்துக்குத் தலைவராகிய நேச நாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் தம்முடைய மனத்தின் செய்கையைப் பரமசிவனுடைய திருவடிக்கு ஆக்கி, வாக்கின் செய்கையை ஸ்ரீபஞ்சாக்ஷரத்துக்கு ஆக்கி, கையின்செய்கையைச் சிவனடியார்களுக்கு ஆக்குவாராகி, வஸ்திரமுங் கீளுங்கோவணமும் செய்து, தம்மிடத்தில் வருஞ் சிவனடியார்களுக்கு இடையறாதுகொடுத்து, நாடோறும் அவர்களை வணங்கித் துதித்துக்கொண்டிருந்து, சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

நேசநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## கோச்செங்கட்சோழநாயனார் புராணம்.

தலையிற்புறவி னிறையளித்த சோழருரிமைச் சோணாட்டி
லலையிற்றரள மகிலொடுசந் தணிநீர்ப்பொன்னி மணிகொழிக்குங்
குலையிற்பெருகுஞ் சந்திரதீர்த் தத்தின்மருங்கு குளிர்சோலை
நிலையிற்பெருகுந் திருமிடைந்த நெடுந்தண்கான மொன்றுளதால். (க)

அப்பூங்காவில் வெண்ணாவ லதன்கீழ்முன்னா ளரிதேடு
மெய்ப்பூங்கழலார் வெளிப்படலு மிக்கதவத்தோர் வெள்ளானை
கைப்பூம்புனலு முகந்தாட்டிக் கமழ்பூங்கொத்து மணிந்திறைஞ்சி
மைப்பூங்குவளைக் களத்தாரை நாளும்வழிபட் டொழுகுமால். (உ)

ஆனசெயலாற் றிருவானைக் காவென்றதற்குப் பெயராக
ஞானமுடைய வொருசிலந்தி நம்பர்செம்பொற் றிருமுடிமேற்
கானல்விரவுஞ் சருகுதிரா வண்ணங்கலந்த வாய்நூலான்
மேனற்றிருமேற் கட்டியென விரிந்துசெறியப் புரிந்துளதால். (ங)

நன்றுமிழைத்த சிலம்பிவலைப் பரப்பைநாத னடிவணங்கச்
சென்றயானை யனுசிதமென் றதனைச்சிதைக்கச் சிலம்பிதா
னின்றுகளிற்றின் கரஞ்சுலவிற் றென்றுமீள விழைத்ததனை
யன்றுகழித்த பிற்றைநா ளடல்வெள்ளானை யழித்ததால். (ச)

எம்பிரான்றன் மேனியின்மேற் சருகுவிழாமை யான்வருந்தி
யும்பரிழைத்த நூல்வலய மழிப்பதேயென் றுருத்தெழுந்து
வெம்பிச்சிலம்பி துதிக்கையினிற் புக்குக்கடிப்ப வேகத்தாற்
கும்பயானை கைநிலத்தின் மோதிக்குலைந்து வீழ்ந்ததால். (ரு)

துறையிற்புடைப்பக் கைபுக்க சிலம்பிதானு முயிர்நீங்க
மறையிற்பொருளுந் தருமாற்றான் மதயானைக்கும் வரங்கொடுத்து
முறையிற்சிலம்பி தனைச்சோழர் குலத்துவந்து முன்னுதித்து
நிறையிற்புவனங் காத்தளிக்க வருள்செய்தருள நிலத்தின்கண். (சு)

வேறு.

தொன்மைதரு சோழர்குலத் தரசனுஞ் சுபதேவன்
றன்னுடைய பெருந்தேவி கமலவதி யுடன்சார்ந்து
மன்னுபுகழ்த் திருத்தில்லை மன்றாடு மலர்ப்பாதஞ்
சென்னியுறப் பணிந்தேத்தித் திருப்படிக்கீழ் வழிபடுநாள். (எ)

மக்கட்பே றின்மையினான் மாதேவி வரம்வேண்டச்
செக்கர்நெடுஞ் சடைக்கூத்தர் திருவுள்ளஞ் செய்தலினான்
மிக்கதிருப் பணிசெய்த சிலம்பிகுல வேந்துமகி
ழக்கமல வதிவயிற்றி னணிமகவாய் வந்தடைய. (அ)

வேறு.

கழையார்தோளி கமலவதி தன்பாற்கருப்ப நாணிரம்பி
விழையார்மகவு பெறவடுத்த வேலையதனிற் காலமுணர்
பழையாரொருநா ழிகைகழித்துப் பிறக்குமேலிப் பசுங்குழவி
யுழையார்புவன மொருமூன்று மளிக்குமென்ன வொள்ளிழையார். (கூ)

பிறவாதொருநா ழிகைகழித்தென் பிள்ளைபிறக்கும் பரிசென்கா
லுறவார்த்தெடுத்துத் தூக்குமென வுற்றசெயன்மற் றதுமுற்றி
யறவாணர்கள்சொல் லியகால மணையப்பிணிவிட் டருமணியை
யிறவாதொழிவாள் பெற்றெடுத்தென் கோச்செங்கண்ணனோவென்றாள்

தேவிபுதல்வற் பெற்றிறக்கச் செங்கோற்சோழன் சுபதேவ
னாவியனைய வரும்புதல்வன் றன்னைவளர்த்தங் கணிமகுட
மேவுமுரிமை முடிகவித்துத் தானும்விரும்பு பெருந்தவத்தின்
றாவினெறியைச் சென்றடைந்து தலைவர்சிவலோ கஞ்சார்ந்தான். (கக)

கோதைவேலான் கோச்செங்கட் சோழன்றனிக் குவலயத்தில்
ஆதிமூர்த்தி யருளான்முன் னறிந்துபிறந்து மண்ணாள்வான்
பூதநாதன் றான்மகிழ்ந்து பொருந்தும்பெருந்தண் சிவாலயங்கள்
காதலோடும் பலவெடுக்குந் தொண்டுபுரியுங் கடன்பூண்டான். (கஉ)

ஆனைக்காவிற் றான்முன்ன மருள்பெற்றதனை யறிந்தங்கு
மானைத்தரித்த திருக்கரத்தார் மகிழுங்கோயில் செய்கின்றான்
ஞானச்சார்வாம் வெண்ணாவ லுடனேகூட நலஞ்சிறக்கப்
பானற்களத்துத் தம்பெருமா னமருங்கோயிற் பணிசமைத்தான். (கங)

வேறு.

மந்திரிக ளுடையேவி வள்ளல்கொடை யனபாயன்
முந்தைவருங் குலமுதலோ னுயமுதற் செங்கணு
னந்தமில்சீர்ச் சோணுட்டி லகனுடு தொறுமணியார்
சந்திரசே கரனமருந் தானங்கள் பலசமைத்தான். (கச)

அக்கோயிற் றுஞ்சிவனுக் கமுதுபடி முதலான
மிக்கபெருஞ் செல்வங்கள் விருப்பினுன் மிகவமைத்துத்
திக்கனைத்துந் தன்செங்கோன் முறைநிறுத்தித் தேர்வேந்தன்
முக்கண்முத னடமாடு முதற்றில்லை முன்னினுன். (சரு)

திருவார்ந்த செம்பொன்னி னம்பலத்தே நடஞ்செய்யும்
பெருமானை யடிவணங்கிப் பேரன்பு தலைசிறப்ப
வுருகாசின் றுளங்களிப்பத் தொழுதேத்தி யுறையுநாள்
வருவாய்மை மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தான். (கசா)

தேவர்பிரான் றிருத்தொண்டிற் கோச்செங்கட் செம்பியர்கோன்
பூவலயம் பொதுநீக்கி யாண்டருளிப் புவனியின்மே
லேவியநற் றெண்டுபுரிந் திமையவர்க ளடிபோற்ற
மேவினுன் றிருத்தில்லை வேந்தர்திரு வடிநிழற்கீழ். (கஎ)

வேறு.

கருநில மிடற்றூர்செய்ப கழலடி நீழல்சேர
வருநீர்மை யுடையசெங்கட் சோழன்றன் மலர்த்தாள்வாழ்த்தித்
தருநீர்மை யோசையாழின் றலைவரா யுலகமேத்துந்
திருநீல கண்டப்பாணர் திறமினிச் செப்பலுற்றேன். (கஅ)

ஆ திருவிருத்தம் - உ0சஎ.

---

திருச்சிற்றம்பலம்.

சோழமண்டலத்திலே, சந்திரதீர்த்தத்தின் பக்கத்திலே ஒருவனம் இருந்தது. அதிலே நின்ற ஒரு வெண்ணுவன் மரத்தின் கீழே ஒரு சிவலிங்கம் வெளிப்படலும், ஒருவெள்ளானை அதைக் கண்டு, நாடோறும் புழைக்கையினுலே தீர்த்தம் முகந்து ஆட்டி, புஷ்பங்களைச் சாத்தி, வழிபட்டு ஒழுகுவதாயிற்று. அதனுல் அந்தஸ்தலத்துக்குத் திருவானைக்கா என்று பெயராயிற்று. அறிவினையுடைய ஒரு சிலந்தி, அந்தச்சிவலிங்கத்தின்மேலே சருகு உதிராவண்ணம், தன் வாய்நூலினுலே மேற்கட்டி செய்தது. சிவலிங்கத்தை வணங்க வந்த வெள்ளானை அதைக் கண்டு, அது அநுசிதம் என்று நினைந்து, அதைச் சிதைக்க; சிலந்தி மீளவும் மேற்கட்டி செய்தது. வெள்ளானை மற்றநாளும் அதைச் சிதைத்தது. அது கண்டு சிலந்தி "எம்பெருமான்மேலே சருகு உதிராவண்ணம் நான் வருந்திச் செய்த மேற்கட்டியை இது அழிக்கலாமா" என்று

கோபித்து, வெள்ளானையினது புழைக்கையினுள்ளே புகுந்து கடிக்க வெள்ளானை கையைநிலத்திலே மோதிக்கொண்டு விழுந்து இறந்தது. கையை மோதியபோது, அதனுள்ளே புகுந்த சிலந்தியும் இறந்தது. வெள்ளானை சிவகணநாதராகித் திருக்கைலாசமலையை அடைந்து, சிவபெருமானைச் சேவித்துக்கொண்டிருந்தது.

சுபதேவனென்னுஞ் சோழமகாராஜன் தன் மனைவியாகிய கமலவதியுடன் சிதம்பரத்தை அடைந்து, சபாநாயகரை உபாசனைசெய்துகொண்டிருக்குநாளிலே; கமலவதி புத்திரபாக்கியம் இன்மையால் வரம் வேண்ட, அந்தச்சிலந்தி சபாநாயகரது திருவருளினாலே அவளுடைய வயிற்றிலே மகவாய் வந்து அடைந்தது. கமலவதிக்குப் பிரசவகாலம் அடுத்தபொழுது, சோதிடர்கள் "இப்பிள்ளை ஒருநாழிகை கழித்துப் பிறக்குமாகில், முப்புவனங்களையும் அரசாளும்" என்றார்கள். கமலவதி "என்பிள்ளை இப்போது பிறவாமல் ஒருநாழிகை கழித்துப் பிறக்கும்படி என்னைத் தலை கீழாகக் கட்டித்தூக்குங்கள்" என்று சொல்ல; அங்குள்ளவர்கள் அங்ஙனங்கட்டித் தூக்கி, சோதிடர்கள் குறித்த காலம் அணையக் கட்டவிழ்த்து விட்டார்கள். கமலவதி பிள்ளையைப்பெற்று, அது பிறக்குங்காலந் தாழ்த்தமையாற் சிவந்த கண்களையுடையதாய் இருத்தல் கண்டு, "என்கோச்செங்கண்ணனோ" என்றுசொல்லிக்கொண்டு, உடனே இறந்துவிட்டாள். சுபதேவன் அப்புதல்வரை வளர்த்து முடிசூட்டி, அரசை அவரிடத்தில் ஒப்பித்து, தான் தவஞ்செய்து சிவலோகத்தை அடைந்தான்.

கோச்செங்கட்சோழநாயனார் பரமசிவனது திருவருளினாலே பூர்வசன்மவுணர்ச்சியோடு பிறந்து, சைவத்திருநெறி தழைக்க அரசியற்றுவாராகி, சிவாலயங்கள் பலவற்றைக் கட்டுவிக்கத் தொடங்கினார். திருவானைக்காவிலே தாம் முன்னே அருள் பெற்றதை அறிந்து, அங்கே வெண்ணாவலுடன் பரமசிவனுக்குத் திருக்கோயில் கட்டுவித்தார். மந்திரிகளை ஏவி, சோழநாட்டில் வெவ்வேறிடங்களிலே சிவாலயங்கள் கட்டுவித்து, அவ்வாலயங்கடோறும் பூசைமுதலியவற்றிற்கு நிபந்தங்கள் அமைத்தார். பின்பு சிதம்பரஸ்தலத்தை அடைந்து, சபாநாயகரைத் தரிசித்து வணங்கி, தில்லைவாழந்தணர்களுக்குத் திருமாளிகைகள் கட்டுவித்து, பின்னும் பலதிருத்தொண்டுகளைச் செய்துகொண்டிருந்து, சபாநாயகருடைய திருவடி நீழலை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

கோச்செங்கட்சோழநாயனார்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் புராணம்.

எருக்கத்தம் புலியூர்மன்னி வாழ்பவ ரிறைவன்றன்சீர்
திருத்தகும் யாழிலிட்டுப் பரவுவார் செழுஞ்சோணாட்டில்
விருப்புறு தானமெல்லாம் பணிந்துபோய் விளங்குகூடற்
பருப்பதச் சிலையார்மன்னு மாலவாய் பணியச்சென்றார். (௧)

ஆலவா யமர்ந்தார்கோயில் வாயிலை யடைந்துநின்று
பாலையீ ரேழுகோத்த பண்ணினிற் கருவிவீக்கிக்
காலமா தரித்தபண்ணிற் கைபல முறையுமாராய்ந்
தேலவார் குழலார்பாகர் பாணிகள் யாழிலிட்டார். (௨)

மற்றவர் கருவிப்பாடன் மதுரைநீ டாலவாயிற்
கொற்றவன் றிருவுள்ளத்துக் கொண்டுதன் றொண்டர்க்கெல்லா
மற்றைநாட் கனவிலேவ வருட்பெரும் பாணனாரைத்
தெற்றினார் புரங்கள்செற்றார் திருமுன்பு கொண்டுபுக்கார். (௩)

அன்பர்கள் கொண்டுபுக்க பொழுதினி லரிவைபாகன்
றன்பெரும் பணியாமென்று தமக்குமெய் யுணர்தலாலே
மன்பெரும் பாணராகு மாமறை பாடவல்லார்
முன்பிருந் தியாழிற்கூடன் முதல்வனைப் பாடுகின்றார். (௪)

திரிபுர மெரித்தவாறுந் தேர்மிசை நின்றவாறுங்
கரியினை யுரித்தவாறுங் காமனைக் காய்ந்தவாறு
மரியயற் கரியவாறு மடியவர்க் கெளியவாறும்
பரிவினாற் பாடக்கேட்டுப் பரமனா ரருளினாலே. (௫)

அந்தரத் தெழுந்தவோசை யன்பினிற் பாணர்பாடுஞ்
சந்தயாழ் தரையிற்சீதந் தாக்கில்வீக் கழியுமென்று
சுந்தரப் பலகைமுன்னீ ரிடுமெனத் தொண்டரிட்டார்
செந்தமிழ்ப் பாணனாருந் திருவருள் பெற்றுச்சார்ந்தார். (௬)

தமனியப் பலகையேறித் தந்திரிக் கருவிவாசித்
துமையொரு பாகர்வண்மை யுலகெலா மறியவேத்தி
யிமையவர் போற்றவேகி யெண்ணினா றானங்கள்கும்பிட்
டமரர்நாட்டாளாதாரூ ராண்டவராரூர்சேர்ந்தார். (௭)

வேறு.

கோயில்வாயின் முன்னடைந்து கூற்றஞ்செற்ற பெருந்திறலுந்
தாயினல்ல பெருங்கருணை யடியார்க்களிக்குந் தன்மையளியு
மேயுங்கருவி யிற்றொடுத்தங் கிட்டுப்பாடக் கேட்டங்கண்
வாயில்வேறு வடதிசையில் வகுப்பப்புகுந்து வணங்கினார். (அ)

மூலத்தானத் தெழுந்தருளி யிருந்தமுதல்வன் றனைவணங்கிச்
சாலக்கால மங்கிருந்து தம்பிரான்றன் றிருவருளாற்
சீலத்தார்கள் பிரியாத திருவாரூரி னின்றுபோ
யாலத்தார்ந்த கண்டத்தா ரமருந்தானம் பலவணங்கி. (கூ)

ஆழிசூழுந் திருத்தோணி யமர்ந்தவம்மா னருளாலே
யாழின்மொழியா ளுமைஞான மூட்டவுண்ட வெம்பெருமான்
காழிநாடன் கவுணியர்கோன் கமலபாதம் வணங்குதற்கு
வாழிமறையோர் புகலியினில் வந்தார்சந்த விசைப்பாணர். (க0)

ஞானமுண்டார் கேட்டருளி நல்லவிசையாழ்ப் பெரும்பாணர்க்
கானபடியாற் சிறப்பருளி யமருநாளி லவர்பாடு
மேன்மைப்பதிகத் திசையாழி லிடப்பெற்றுடனே மேவியபின்
பானற்களத்தார் பெருமணத்தி லுடனேபரமர் தாளடைந்தார். (கக)

வரும்பான்மையினிற் பெரும்பாணர் மலர்த்தாள்வணங்கி வயற்சாலிக்
கரும்பார்கழனித் திருநாவ லூரிற்சைவக் கலைமறையோ
ரரும்பாகின்ற வணிநிலவும் பணியுமணிந்தா ரருள்பெற்ற
சுரும்பார்தொங்கற் சடையனார் பெருமைசொல்ல லுறுகின்றாம். (கஉ)

ஆ. திருவிருத்தம் - உ0ருகூ.

---

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டிலே, திருவெருக்கத்தம்புலியூரிலே. திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுடைய திருப்புகழை யாழில் இட்டுப் பாடுவாராகி, சோழநாட்டில் உள்ள சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு சென்று, பாண்டிநாட்டிற் சேர்ந்து, மதுரையில் இருக்கின்ற சொக்கநாதசுவாமியினுடைய திருக்கோயில்வாயிலை அடைந்து நின்று, பரமசிவன் மேலனவாகிய பாணிகளை யாழில் இட்டு வாசித்தார். சொக்கநாதசுவாமி அதனைத் திருவுள்ளத்துக்கொண்டு, அன்றிரவிலே தம்முடைய அடியார்களெல்லாருக்கும் சொப்பனத்திலே தோன்றி ஆஞ்ஞாபிக்க; அவர்கள் மற்றநாள் திருநீலகண்டப்பெரும்பாணரைச்சுவாமிக்குத் திருமுன்பேகொண்டுவந்தார்கள் திருநீலகண்டப்பெரும்பாணர் அதுசுவாமியுடைய ஆஞ்ஞை என்றுதெளிந்து திருமுன்பேஇருந்து யாழ் வாசித்தார். அப்பொழுது "இந்தப்பாணர் அன்பினோடு பாடுகின்ற யாழ் பூமியிலே உள்ள சீதம் தாக்கினால் வீக்கு

அழியும். "ஆதலால் இவருக்குப் பொற்பலகை இடுங்கள்" என்று ஆகாயத்தினின்றும் ஓரசரீரிவாக்கு எழுந்தது. அதைக் கேட்ட அடியார்கள் பொற்பலகையை இட; திருநீலகண்டப்பெரும்பாணர் அதில் ஏறி, யாழ் வாசித்தார்.

பின்பு பலதலங்களையும் வணங்கிக்கொண்டு, திருவாரூரிற்சேர்ந்து, திருக்கோயில்வாயிலை அடைந்து, யாழ் வாசிக்க; பரமசிவன் வடதிசையிலே ஒருதிருவாயில் வகுக்க; திருநீலகண்டப் பெரும்பாணர் அதன்வழியாகப் புகுந்து, திருமூலட்டானப்பெருமானாகிய வன்மீகநாதரை வணங்கினர். நெடுநாளாயினபின், அவ்விடத்தினின்றும் நீங்கி சீர்காழியை அடைந்து, சமயகுரவராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனருடைய திருவடிகளை வழிபட்டு, அவரை ஒருபொழுதும் பிரியாது அவர் பாடியருளுந் திருப்பதிகங்களை யாழில் இட்டு வாசிக்கும் பெரும் பேற்றைப் பெற்று, திருநல்லூர்ப்பெருமணத்திலே அவருடனே சிவபதத்தை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர்புராண முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சடையநாயனர் புராணம்.

தம்பிரானைத் தோழமைகொண் டருளித்தமது தடம்புயஞ்சேர்
கொம்பனார்பா லொருதூது செல்லவேவிக் கொண்டருளு
மெம்பிரானைச் சேரமான் பெருமாளிணையிற் றுணைவரா
நம்பியாரூ ரைப்பயந்தார் ஞாலமெல்லாங் குடிவாழ. (௧)

ஆ திருவிருத்தம் - ௨௦௬௦.

---

திருச்சிற்றம்பலம்.

திருநாவலூரிலே, ஆதிசைவ குலத்திலே, சடையனரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் உலகமெல்லாம் மெய்ஞ்ஞானவொளியைப் பெற்று உய்யும்படி சமயகுரவராகிய சுந்தரமூர்த்திநாயனரைப் புத்திரராகப் பெற்ற பெரும்பேற்றை உடையவர்.

திருச்சிற்றம்பலம்.

சடையநாயனர்புராண முற்றிற்று.

---

வ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இசைஞானியார் புராணம்.

ஒழியாப்பெருமைச் சடையனா ரூரிமைச்செல்வத் திருமனையா
ரழியாப்புரங்க ளெய்தழித்தா ராண்டநம்பி தனைப்பயந்தா
ரிழியாக்குலத்தி னிசைஞானிப் பிராட்டியாரை யென்சிறுபுன்
மொழியாற்புகழ முடியுமோ முடியாதெவர்க்கு முடியாதால். (௧)

ஆ திருவிருத்தம் - ௨0௬௧.

திருச்சிற்றம்பலம்.

சடையநாயனாருடைய மனைவியார் இசைஞானியாரென்பவர். எம்பிரான்றோழராகிய சுந்தரமூர்த்திநாயனாரைப் பெற்றருளிய அவருடைய பெரும்புகழைச் சிறியேனுடைய புன்மொழியினாலே புகழ முடியுமோ! முடியாது.

திருச்சிற்றம்பலம்.

இசைஞானியார்புராண முற்றிற்று.

பதினோராவது,

மன்னியசீர்ச்சருக்க முற்றுப்பெற்றது.

# வெள்ளானைச் சருக்கம்.

மூலமான திருத்தொண்டத் தொகைக்குமுதல்வ ராயிந்த
ஞாலமுய்ய வெழுந்தருளு நம்பிதம்பி ரான்றோழர்
காலைமலர்ச்செங் கமலக்கட் கழறித்தறிவா ருடன்கூட
வாலமுண்டார் திருக்கயிலை யணைந்ததறிந்த படியுரைப்பாம். (௧)

படியினீடும் பத்திமுத லன்புநீறிற் பணைத்தோங்கி
வடிவுநம்பி யாரூரர் செம்பொன்மேனி வளப்பாகக்
கடியவெய்ய விருவினையின் களைகட்டெழுந்து கதிர்பரப்பி
முடிவிலாத சிவபோக முதிர்ந்துமுறுகி விளைந்ததால். (௨)

ஆரமுரக மணிந்தபிரா னன்பரணுக்க வன்றொண்ட
ரீரமதுவார் மலர்ச்சோலை யெழிலாரூரி லிருக்குநாட்
சேரர்பெருமா டனைநினைந்து தெய்வப்பெருமாள் கழல்வணங்கிச்
சாரன்மலைநா டணைவதற்குத் தவிராவிருப்பி னுடன்போந்தார். (௩)

நன்னீர்ப்பொன்னித் திருநாட்டு நாதர்மகிழுந் திருப்பதிகண்
முன்னியிறைஞ்சி யகன்றுபோய் முல்லைப்படப்பைக் கொல்லைமான்
றுன்னியுகைக்குங் குடக்கொங்கி லணைந்துதூய மதிவானீர்
சென்னிமிசைவைத் தவர்செல்வத் திருப்புக்கொளியூர் சென்றடைந்தார்.()

மறையோர்வாழ மப்பதியின் மாடவீதி மருங்கணைவார்
நிறையுஞ்செல்வத் தெதிர்மனைக ளிரண்டினிகழ்மங் கலவியங்க
ளறையுமொலியொன் றினிலொன்றி லழுகையொலிவந் தெழுதலுமங்
குறையுமறையோர் களையிரண்டு முடனேநிகழ்வ தென்னென்றார். (௫)

அந்தணாளர் வணங்கியரும் புதல்வரிரு வரையாண்டு
வந்தபிராயத் தினர்குளித்த மடுவின்முதலை யொருமகவை
முந்தவிழுங்கப் பிழைத்தவனை முந்நூலணியுங் கலியாண
மிந்தமனைமற் றந்தமனை யிழந்தாரழுகை யென்றுரைத்தார். (௬)

இத்தன்மையினைக் கேட்டருளி யிரங்குந்திருவுள் ளத்தினரா
மொய்த்தமுகைத்தார் வன்றொண்டர் தம்மைமுன்னே கண்டிறைஞ்ச
வைத்தசிந்தை மறையோனு மனைவிதானு மகவிழந்த
சித்தசோகந் தெரியாமே வந்துதிருத்தா ளிறைஞ்சினார். (௭)

துன்பமகல முகமலர்ந்து தொழுவார்தம்மை நோக்கியந்த
வின்பமைந்தன் றனையிழந்தீர் நீரோவென்ன வெதிர்வணங்கி
முன்புபுகுந்து போனத்து முன்னேவணங்க முயல்கின்றே
மன்புபழுதா காமலெழுந் தருளப்பெற்றே மெனத்தொழுதார். (அ)

மைந்தன்றன்னை யிழந்ததுயர் மறந்துநான்வந் தணைந்ததற்கே
சிந்தைமகிழ்ந்தார் மறையோனு மனைவிதானுஞ் சிறுவனையா
னந்தமுதலை வாய்நின்று மழைத்துக்கொடுத்தே யவிநாசி
யெந்தைபெருமான் கழல்பணிவே னென்றார்சென்று ரிடர்களைவார். (௯)

இவ்வாறருளிச் செய்தருளி யிவர்கள்புதல்வன் றனைக்கொடிய
வெவ்வாய்முதலை விழுங்குமடு வெங்கேயென்று வினவிக்கேட்
டவ்வாழ்பொய்கைக் கரையிலெழுந் தருளியவனை யன்றுகவர்
வெவ்வாளெயிற்று முதலைகொடு வருதற்கெடுத்தார் திருப்பதிகம். (௧௦)

உரைப்பாருரையென் றெடுத்ததிருப் பாட்டுமுடியா முன்னுயர்ந்த
வரைப்பான்மையினீ டடம்புயத்து மறலிமைந்த னுயிர்கொணர்ந்து
திரைப்பாய்புனலின் முதலைவயிற் றுடலிற்சென்ற வாண்டுகளுந்
தரைப்பால்வளர்ந்த தெனநிரம்ப முதலைவாயிற் றருவித்தான். (௧௧)

தேவாரம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

உரைப்பாருரையுகந் துள்கவல்லார்தங்க ளுச்சியா
யரைக்காடரவா வாதியுமந்தமு மாயினாய்
புரைக்காடுசோலைப் புக்கொளியூரவி நாசியே
கரைக்கான்முதலை யைப்பிள்ளை தரச்சொல்லு காலனையே.

நீரேறவேறு நிமிர்சடைநின்மல மூர்த்தியைப்
போரேறதேறியைப் புக்கொளியூரவி நாசியைக்
காரேறுகண்டனைத் தொண்டனா ரூரன்கருதிய
சீரேறுபாடல்கள் சொல்லவல்லார்க்கில்லை துன்பமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அவிநாசியப்பர். தேவியார்-பெருங்கருணைநாயகி.
இது கொங்குநாட்டிலுள்ளது. திருப்பதிகம்—௧.

---

பெருவாய்முதலை கரையின்கட் கொடுவந்துமிழ்ந்த பிள்ளைதனை
யுருகாநின்ற தாயோடி யெடுத்துக்கொடுவந் துயிரளித்த
திருவாளன்றன் சேவடிக்கீழ்ச் சீலமறையோ னெடுவீழ்த்தாண்
மருவார்தருவின் மலர்மாரி பொழிந்தார்விசும்பில் வானோர்கள். (௧௨)

மண்ணுளோர்க ளதிசயித்தார் மறையோரெல்லா முத்தரியம்
விண்ணிலேற விட்டார்த்தார் வேதநாத மிக்கெழுந்த
தண்ணலாரு மவிநாசி யரனார்தம்மை யருமறையோன்
கண்ணின்மணியாம் புதல்வனையுங் கொண்டுபணிந்தார் காசினிமேல். ()

பரவும்பெருமைத் திருப்பதிகம் பாடிப்பணிந்து போந்தன்பு
விரவுமறையோன் காதலனை வெண்ணூல்பூட்டி யண்ணலார்
முரசமியம்பக் கல்லியாண முடித்துமுடிச்சே ரலர்தம்பாற்
குரவமலர்ப்பூந் தண்சோலை குலவுமலைநா டணைகின்றார். (௧௪)

சென்றசென்ற குடபுலத்துச் சிவனாரடியார் பதிகடொறு
நன்றுமகிழ்வுற் றின்புற்று நலஞ்சேர்தலமுங் கானகமு
துன்றுமணிநீர்க் கானியாறுந் துறுகற்சுரமுங் கடந்தருளிக்
குன்றவளநாட் டகம்புகுந்தார் குலவுமடியே னகம்புகுந்தார். (௧௫)

முன்னாண்முதலை வாய்ப்புக்க மைந்தன்முன்போல் வரமீட்டுத்
தென்னாரூர ரெழுந்தருளா நின்றாரென்று சேரர்பிரார்க்
கந்நாட்டரா ரடியார்கண் முன்னேயோடி யறிவிப்பப்
பொன்னார்கிழியு மணிப்பூணுங் காசுந்தூசும் பொழிந்தளித்தார். (௧௬)

செய்வதொன்று மறியாது சிந்தைமகிழ்ந்து களிகூர்ந்தே
ஐயனணைந்தா னெனையாளு மண்ணலணைந்தா னாரூரிற்
சைவனணைந்தா னென்றுணையாந் தலைவனணைந்தான் றரணியெலா
முய்யவணைந்தா னணைந்தானென் றோகைமுரசஞ் சாற்றுவித்தார். (௧௭)

பெருகுமதிநா லமைச்சர்களை யழைத்துப்பெரியோ ரெழுந்தருளப்
பொருவினகர மலங்கரித்துப் பண்ணிப்பயணம் புறப்படுவித்
தருவிமதமால் யானையினை யணைந்துமிசைகொண் டரசர்பெருந்
தெருவுகழிய வெதிர்வந்தார் சேரர்குலமுய்ந் திடவந்தார். (௧௮)

மலைநாட்டெல்லை யுட்புகுத வந்தவன்றொண் டரைவரையிற்
சிலைநாட்டியவெல் கொடித்தானைச் சேரர்பெருமா னெதிர்சென்று
தலைநாட்கமலப் போதனைய சரணம்பணியத் தாவில்பல
கலைநாட்டமுத வாரூரர் தாமுந்தொழுது கலந்தனரால். (௧௯)

சிந்தைமகிழுஞ் சேரலனார் திருவாரூர ரெனுமிவர்க
டந்தமணிமே னிகள்வேறா மெனினுமொன்றாந் தன்மையராய்
முந்தவெழுங்கா தலிற்றழுவி முயங்கியுதியர் முதல்வேந்த
ரெந்தைபெருமான் றிருவாரூர்ச் செல்வம்வினவி யின்புற்றார். (௨0)

ஒருவரொருவ ரிற்கலந்து குறைபாடின்றி யுயர்காத
லிருவர்நண்பின் செயல்கண்ட விரண்டுதிறத்து மாந்தர்களும்
பெருகுமகிழ்ச்சி கலந்தார்த்தார் பெருமாட்டமிழின் பெருமாளை
வருகைவரையின் மிசையேற்றித் தாம்பின்மதிவெண் குடைகவித்தார். ()

உதியர்பெருமாள் பெருஞ்சேனை யோதங்கிளர்ந்த தெனவார்ப்பக்
கதிர்வெண் டிருநீற் றன்பர்குழாங் கங்கைகிளர்ந்த தெனவார்ப்ப
வெதிர்வந்திறைஞ்சு மமைச்சர்குழா மேறுமிவுளித் துகளார்ப்ப
மதிதங்கியமஞ் சணியிஞ்சி * வஞ்சிமணிவா யிலையணைந்தார். (௨௨)

வேறு.

ஆரணமொழிகண் முழங்கிட வாடினர்குணலை களந்தணர்
வாரணமதமழை சிந்தின வாசிகள்கிளரொளி பொங்கின
பூரணகலச மலிந்தன பூமழைமகளிர் பொழிந்திடுந்
தோரணமறுகு புகுந்தது தோழர்கணடவிய குஞ்சரம். (௨௩)

அரிவையர்தெருவி னடம்பயி லணிகிளர்தளிரடி தங்கிய
பரிபுரவொலிகள் கிளர்ந்தன பணைமுரசொலிகள் பரந்தன
சுரிவளைநிரைகண் முரன்றன துணைவர்களிருவரும் வந்தணி
விரிதருபவன நெடுங்கடை விறன்மதகரியி னிழிந்தனர். (௨௪)

* வஞ்சியென்பது - சேரமான்பெருமாளுடைய நகரம்.

தூநறுமலர்தா ளம்பொரிதூவி முனிருபுடையின் கணு
நான்மறை முனிவர்கண் மங்கலநாமன் மொழிகள் விளம்பிட
மேனிறை நிழல்செய வெண்குடைவீசிய சவரிமருங்குற
* வானவர் தலைவரு நண்பருமாளிகை நவுடுபுகுந்தனர். (உரு)

அரியணையதனின் விளங்கிடவுடன் மழவிடையென நம்பியை
வரிமலர்ஞியமர்ந் திடமலையர் கடலைவர் பணிந்துபி
னுரிமைநல் வினைகள்புரிந்தன வுரைமுடிவில வெனமுன்செய்து
பரிசனமன மகிழும்படிபல படிமணிநிதி சிந்தினர். (உசு)

வேறு.

இன்னதன்மையி லுதியர்கடலைவர்தா மிடர்கெட முனைப்பாடி
மன்னர்தம்முடன் மகிழ்ந்தினிதுறையுநாண் மலைநெடுநாட் டெங்கும்
பன்னகம்புனை பரமர்தந்திருப் பதிபலவுடன்பணிந் தேத்திப்
பொன்னெடுந்தட மூதெயின்மகோதையிற் புகுந்தனர்வன் றொண்டர்.

ஆயசெய்கையினுள் பலகழிந்தபி னரசர்கண் முதற்சோர்
தூயமஞ்சனத் தொழிலினிற்றொடங்கிடத் துணைவராம் வன்றொண்டர்
பாயகங்கைசூழ் நெடுஞ்சடைப்பரமனைப் பண்டுதாம்பிரிந் தெய்துஞ்
சேயநன்னெறி குறுகிடக்குறுகினர் திருவஞ்சைக்களந் தன்னில். (உஅ)

சுரியகண்டர்தங் கோயிலைவலங்கொண்டு காதலாற் பெருகன்பு
புரியுமுள்ளத்த ருள்ளணைந்திறைவர்தம் பூங்கழலிணை போற்றி
யரியசெய்கையில் விழுந்தெழுந்தலைப்புறு மனை வாழ்க்கை
சரியவேதலைக்குத் தலைமாலையென் றெடுத்தனர்தமிழ் மாலை. (உகூ)

---

திருஅஞ்சைக்களம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

---

தலைக்குத்தலை மாலையணிந்ததென்னே சடைமேற்கங்கைவெள்ளந் தரித்ததென்னே, யலைக்கும்புலித்தோல் கொண்டசைத்ததென்னே யதன்மேற்கதநாகக்கச் சார்த்ததென்னே, மலைக்குந்நிகரொப் பனவன்றிரைகள் வலிந்தெற்றிமுழங்கி வலம்புரிகொண், டலைக்குங்கடலங் கரைமேன்மகோதை யணியார்பொழில்சூ ழஞ்சைக்களத்தப்பனே.

எந்தமடிக ளிமையோர்பெருமா னெனக்கென்று மளிக்குமணிமிடற்றன் றண்கடலங் கரைமேன்மகோதை யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனை, மந்தமுழவுங் குழலுமியம்புவள நாவலர்கோனம்பி யூரன்சொன்ன சந்தமிகுதண் டமிழ்மாலைகள்கொண் டடிவீழவல்லார் தமொற்றிலரே.

---

* வானவர்-என்பது - ஈண்டுச்சேர தேசத்தாரைக் கூறியது.

சுவாமிபெயர்-அஞ்சைக்களத்தப்பர்-தேவியார்-உமையம்மை
இந்தத்தலம் மலைநாட்டிலிருப்பது-திருப்பதிகம்.—க.

---

எடுத்தவத்திருப் பதிகத்தினுட்குறிப் பிவ்வுலகினிற் பாசம்
அடுத்தவாழ்க்கையை யறுத்திடவேண்டுமென் றன்பரன்பினிற் பாடக்
கடுத்ததும்பிய கண்டர்தங்கயிலையிற் கணத்தவருடன் கூடத்
தடுத்தசெய்கைதான் முடிந்திடத்தங்கழற் சார்புதந்தளிக் கின்றார். (உ0)

மன்றலந்தருமிடைந்த பூங்கயிலையின் மலைவல்லியுடன் கூட
வென்றிவெள்விடைப் பாகர்தாம்வீற்றிருந் தருளியபொழு தின்க
ணொன்றுசிந்தைநம் முரனையும்பர்வெள் ளானையினுட னேற்றிச்
சென்றுகொண்டிங்கு வாருமென்றயன்முதற் றேவர்கட்கருள் செய்தார்

வானநாட்ர்க ளரியயன்முதலினோர் வணங்கிமுன்விடை கொண்டு
தூநலந்திகழ் சோதிவெள்ளானையுங் கொண்டுவன் றொண்டர்க்குத்
தேனலம்புதண் சோலைசூழ்ந்திருக்குமத் திருவஞ்சைக்களஞ் சேரக்
கானிலங்கொள வலங்கொண்டுமேவினார் கடிமதிற்றிரு வாயில். (௩உ)

தேவர்தங்குழா நெருங்கியவாய்தலிற் றிருநாவ லூரார்தங்
காவன்மன்னரும் புறப்படவெதிர்கொண்டு கயிலைவீற் றிருக்கின்ற
பூவலம்புதண்புனற் சடைமுடியவரரு ளுப்பாடென்ப் போற்றி
யேவலென்றபின் செய்வதொன்றிலாதவர் பணிந்தெழுந் தெதிரேற்றார்.

ஏற்றதொண்டரை யண்டர்வெள்ளானையி னெதிர்வலங்கொண் டேற்ற
நாற்றடங்கடன்முழக் கெனவைவகை நாதமீதெழுந் தார்ப்பப்
போற்றிவானவர் பூமழைபொழிந்திடப் போதுவா ருயிரெல்லாஞ்
சாற்றுமாற்றங்க ளுணர்பெருந்துணைவரை மனத்தினிற்கொடு சார்ந்தார்.

சேரர்தம்பிரான் றோழர்தஞ்செய லறிந்தப் போதே
சாரநின்றதோர் பரியினைமிசைக்கொண்டு திருவஞ்சைக்களஞ் சார
வீரவெண்களிறு கைத்துவிண்மேற்செலுமெய்த்தொண்டர்தமைக்கண்டு
பாரினின்றிலர் சென்றதம்மனத்தொடு பரியுமுன்செல விட்டார். (௩௫)

விட்டவெம்பரிச் செவியினிற்புவிமுதல் வேந்தர்தாம்விதி யாலே
யிட்டமாஞ்சிவ மந்திரமோதலி னிருவிசும்பெழப் பாய்ந்து
மட்டலர்ந்தபைந் தெரியல்வன்றொண்டர்மேல் கொண்டமாதங் கத்தை
முட்டவெய்திமுன் வலங்கொண்டுசென்றது மற்றதன் முன்னாக. (௩௬)

உதியர்மன்னவன் தம்பெருஞ்சேனையி னுடன்சென்றபடை வீரர்
கதிகொள்வாசியிற் செல்பவர்தம்மைத் தங்கட்புலப்படு மெல்லை
யெதிர்விசும்பினிற் கண்டுபின்கண்டில ராதலினெல் லாரு
முதிருமன்பினி லுருவியசுரிகையான் முறைமுறையுடல் வீழ்த்தார். ()

வீரயாக்கையை மேல்கொண்டுசென்றுபோய் * வில்லவர்பெரு மானைச்
சாரமுன்சென்று சேவகமேற்றனர் தனித்தொண்டர்மேல் கொண்ட
வாருமும்மதத் தருவிவெள்ளானைக்கு வயப்பரிமுன் வைத்துச்
சேரர்வீரருஞ் சென்றனர்மன்றவர் திருமலைத்திசை நோக்கி. (௩௮)

யானைமேல்கொண்டு செல்கின்றபொழுதினி லிமையவர்குழா மென்னுந்
தானைமுன்செலத் தானெனைமுன்படைத் தானெனுந்தமிழ் மாலை
மானவன்றொண்டர் பாடிமுன்னணைந்தனர் மதிநதிபொதி வேணித்
தேனலம்புதண் கொன்றையார்திருமலைத் தென்றிசைத்திரு வாயில். ()

திருநொடித்தான்மலை-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்தி
வானெனைவந் தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்
தூனுயிர் வேறுசெய்தா னொடித்தான்மலை யுத்தமனே.

ஊழிதோறூழி முற்றுமுயர்ந்த பொன்னொடித்தான் மலையைச்
சூழிசையின் கரும்பின் சுவைநாவலவ் வூரன்சொன்ன
வேழிசையின் றமிழா லிசைந்தேத்திய பத்தினையு
மாழிகட லரையஞ்சை யப்பர்க்கறி விப்பதே.

திருச்சிற்றம்பலம்.

மாசில்வெண்மைசேர் பேரொளியுலகெலா மலர்ந்திடவ்வள் மெய்ம்மை
யாசிலன்பர்தஞ் சிந்தைபோல்விளங்கிய வணிகிளர் மணிவாயிற்
றேசுதங்கிய யானையும்புரவியு மிழிந்துசேணிடைச் செல்வா
ரீசர்வெள்ளிமா மலைத்தடம்பலகடந் தெய்தினர் மணிவாயில். (௪0)

அங்கணெய்திய திருவணுக்கன் றிருவாயிலி னடற்சேரர்
தங்கள்காவலர் தடையுண்டுநின்றனர் தம்பிரானருளாலே
பொங்குமாமதம் பொழிந்தவெள்ளானையி னும்பர்போற்றிட்ப் போந்த
நங்கள்காவலர் நாவலர்காவலர் நண்ணினார்திரு முன்பு. (௪௧)

சென்றுகண்ணுத றிருமுன்புதாழ்ந்து வீழ்ந்தெழுந்துசே ணிடைவிட்ட
கன்றுகோவினைக் கண்டணைந்ததுவெனக் காதலின்விரைந் தெய்தி
நின்றுபோற்றிய தனிப்பெருந்தொண்டரை நேரிழைவலப் பாகத்
தொன்றுமேனிய ரூரனேவந்தனை யென்றனருல குய்ய. (௪௨)

* வில்லவர்-என்பது-சேரதேசத்தார்.

அடியனேன்பிழை பொறுத்தெனையாண்டுகொண்டத் தொடக்கினை நீக்கி
முடிவிலாநெறிதரும் பெருங்கருணையென் றரத்ததோவென முன்னைப்
படியுநெஞ்சொடு பன்முறைபணிந்தெழும் பரம்பரையானந்த
வடிவுநின்றதுபோன் றின்பவெள்ளத்து மலர்ந்தனர்வன் றொண்டர். ()

நின்றவன்றொண்டர் நீரணிவேணிய நின்மலர்க்கழல் சாரச்
சென்றுசேரலன் றிருமணிவாயிலின் புறத்தினனெனச் செப்பக்
குன்றவில்லியார் பெரியதேவரைச் சென்றுகொணர்கென வவரெய்தி
வென்றிவானவர்க் கருளுப்பாடெனவவர் கழல்வீழ்ந்துவிரைந் தெய்தி.()

மங்கைபாகர்தந் திருமுன்புசேய்த்தாக வந்தித்துமகிழ் வெய்திப்
பொங்குமன்பினிற் சேரலர்போற்றிடப் புதுமதியலைகின்ற
கங்கைவார்சடைக் கயிலைநாயகர் திருமுறுவலின்கதிர் காட்டி
யிங்குநாமழை யாமைநீயெய்திய தென்னெனவருள் செய்தார். (௬௫)

அரசரஞ்சலி கூப்பிநின்றடியனே னாரூரர்கழல் போற்றிப்
புரசையானைமுன் சேவித்துவந்தனன் பொழியுநின் கருணைத்தென்
டிரைசெய்வெள்ளமுன் கொடுவந்துபுகுதலிற் றிருமுன்புவரப்பெற்றேன்
விரைசெய்கொன்றைசேர் வேணியாயினியொருவிண்ணப்பமுளதென்று

பெருகுவேதமு முனிவருந்துதிப்பரும் பெருமையாயுனைப் போற்றித்
திருவுலாப்புறம் பாடினேன்றிருச்செவி சாத்திடப்பெற வேண்டு
மருவுபாசத்தை யகன்றிடவன்றொண்டர் கூட்டம்வைத்தா யென்ன
வருளுமீசருஞ் சொல்லுகவென்றன ரன்பருங்கேட் பித்தார். (௬௭)

சேரர்காவலர் பரிவுடன்கேட்பித்த திருவுலாப்புறங் கொண்டு
காரிபாகரு நலமிகுதிருவருள் நயப்புடனருள் செய்வா
ரூரனாகிய வாலாலசுந்தரனுட னமர்ந்திரு வீருஞ்
சாரநங்கண நாதராந்தலைமையிற் றங்குமென்றருள் செய்தார். (௬௮)

அன்னதன்மையி லிருவரும்பணிந்தெழுந் தருள்தலைமேற் கொண்டு
மன்னும்வன் றொண்டராலாலசுந் தரராகித்தாம் வழுவாத
முன்னைநல்வினைத் தொழிற்றலைநின்றனர் முதற்சேரர்பெரு மானு
நன்மைசேர்கண நாதராயவர்செயு நயப்புறுதொழில் பூண்டார். (௬௯)

தலத்துவந்துமுன் னுதயஞ்செய்ப ரவையார்சங்கிலியா ரென்னு
நலத்தின்மிக்கவர் வல்வினைத்தொடக்கற நாயகியரு ளாலே
யலத்தமெல்லடிக் கமலினியாருட னனிந்திதையா ராகி
மலைத்தனிப்பெருமான் மகள்கோயிலிற்றங் தொழில்வழி நின்றார். (௭௰)

வாழிமாதவரா லால்சுந்தரர்வழி யிடையருள் செய்த
வேழிசைத்திருப் பதிகமிவ்வுலகினி லேத்திடவெறி முந்நீர்
ஆழிவேந்தனும் வருணனுக்களித்திட வன்னவ ரருள்சூடி
யூழியிற்றனி யொருவர்தந்திரு வஞ்சைக்களத்திலுய்த்துணர்வித்தான்.()

சேரர்காவலர் விண்ணப்பஞ்செய்தவத் திருவுலாப்புற மன்று
சாரல்வெள்ளியங் கயிலையிற்கேட்டமா சாத்தனார்தரித் திந்தப்
பாரில்வேதியர் திருப்பிடவூர்தனில் வெளிப்படப்பகர்ந் தெங்கு
நாரவேலைசூ ழுலகினில்விளங்கிட நாட்டினர்நலத் தாலே. (௫௨)

வேறு.

என்று மின்பம் பெருகு மியல்பினா
லொன்று காதலி னுள்ளமு மோங்கிட
மன்றுளா ரடியா ரவர்வான் புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம். (௫௩)

வையநீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய வன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே. (௫௪)

வெள்ளானைச்சருக்க முற்றிற்று.

---

# இரண்டாவதுகாண்டம்

நிறைவேறிற்று.

---

திருத்தொண்டர்புராணமென்னும்

# பெரியபுராணம்

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம் - ௪௯0௬,

---